# வில்லி பாரதம்

வீட்டும—துரோண—கன்ன—சல்லிய—சௌப்திக
பருவங்கள் கொண்ட

மூன்றும் புத்தகம்

கலா நிலயம்
கே. ராஜகோபாலாச்சாரியார்

ஸ்டார் பிரசுரம்
72, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி : சென்னை - 600005
போன் : 844740

# பதிப்புரை

பாரதம் வியாசரால் எழுதப்பெற்ற பெரிய நூலாகும். அதிலேயே இந்து மதத்தின் கண்ணுடி போன்ற ஸ்ரீமத் பகவத் கீதை உள்ளது; திருமாலின் ஆயிரம் பெயர்களைப் பேசிப் புகழும் விஷ்ணு ஸஹஸ்ர நாமம் உள்ளது; காவியம் எழுதுவோருக்கு வழிகாட்டி நூலாக உள்ளது; காவிய அணிகளும், நீதியுரைகளும் நிரம்பியுள்ளது. இவற்றையெல்லாம் எண்ணியே **மகா பாரதம்** என்று அதனைப் பெருமைப்படுத்திச் சொல்கின்றனர். 'மகா' என்ற அடைமொழி வேறு எந்தப் பழம் பெரு நூலுக்கும் இல்லை.

மகாபாரதத்தின் பெரும் பிரிவு 'பர்வம்' என்று கூறப்படும். இராமாயணப் பிரிவு 'காண்டம்' எனப்படுவது போலாகும் இது.

மொத்தம் பதினெட்டுப் பர்வங்கள் உள்ளன பாரதத்தில். அவையாவன:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆதி | பர்வம் | 10. | சௌப்திக | பர்வம் |
| 2. | சபா | ,, | 11. | ஸ்த்ரீ | ,, |
| 3. | வன | ,, | 12. | சாந்தி | ,, |
| 4. | விராட | ,, | 13. | அநுசாசன | ,, |
| 5. | உத்யோக | ,, | 14. | அசுவமேத | ,, |
| 6. | பீஷ்ம | ,, | 15. | ஆச்ரம | ,, |
| 7. | துரோண | ,, | 16. | மௌஸல | ,, |
| 8. | கர்ண | ,, | 17. | மகாப்ரஸ்தான | ,, |
| 9. | சல்ய | ,, | 18. | ஸ்வர்க்காரோஷண | ,, |

இந்தப் பதினெட்டுப் பருவங்களும் பாண்டவர்களின் வரலாற்றினைக் கூறுவனவேயாகும். இவற்றுள் பத்துப் பருவங்களிலுள்ள பாண்டவர் வரலாற்றினை மட்டுமே பாடித் தரும புத்திரனின் பட்டாபிஷேகச் செய்தியொடு தம் நூலை முடித்தார் வில்லிபுத்தூரார். கண்ணன் புகழும் பெருமையும் இந்தப் பத்துப் பருவங்களிலுமே மிகுதியாக விரவி வருவதால் இவற்றைப் பாடினதாகத் தொடக்கத்தில் சொல்லித் தம் நூலைத் தொடங்குகிறார், தீவிர விஷ்ணு பக்தராகிய அவர். வடமொழியிலும் மிக வல்லுநராயிருந்த அவர் மிகச் சிறந்த முறையில் வடசொல் தமிழ்ச் சொற்கோவை அமைத்தும், படிப்போருக்கு உற்சாகத்தையும் எழுச்சி

யையும் ஊட்டும் சந்தப்பாக்கள் அமைத்தும் மிகவும் சிறப்பாக நூலைப் பாடியுள்ளார். இன்றும் கிராமப்புறத்து மக்களும் இவர் பாடல்களைப் பாடியும், தெருக்கூத்தாக ஆடியும் மகிழ்கின்றனர்.

வில்லிபாரதத்தின் முதல் ஐந்து பர்வங்கள் இரண்டு பாகங்களாக முன்னர் எங்களால் வெளியிடப் பெற்றுள்ளன. எஞ்சிய ஐந்து பர்வங்கள் இப்போது மூன்றும் புத்தகமாக வெளிவருகிறது.

முன் இரண்டு பகுதிகளுக்கு உரையெழுதிய திரு. கே. ராஜகோபாலாசாரியர் அவர்களே இதற்கும் உரை எழுதியுள்ளார். அவற்றில் போலவே செய்யுள், சந்தி பிரித்துச் சொற்களைக் காட்டுதல், கடின பதங்களுக்குப் பொருள் விளக்கம், கடைசியில் கருத்து விளக்கம் என்ற முறையிலேயே இதிலும் உரை உள்ளது. ஆகவே படிப்போருக்கு முன் இரண்டு நூல்களைப் போலவே இதுவும் எளிதில் படித்து அறியத்தக்கதாக இருக்குமென்பதில் ஐயமில்லை.

பல வேறு காரணங்களால் இந்தப் புத்தகத்தை முன் இரண்டு பாகங்களொடு தொடர்ந்து அச்சிட இயலாமற் போய்விட்டது. முன் இரண்டு பாகங்களை உரையாசிரியரே உடனிருந்து பதிப்பு வேலைகளில் துணையாயிருந்தார். விதிவசத்தால் இந்த நூல் வெளிவருமுன்பே அவர் இறைவனடி சேர்ந்தார். அன்னாரை இப்போது நினைவு கூர்ந்து போற்றி நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

**ஸ்டார் பிரசுரம்**

# பொருளடக்கம்

## 6. வீட்டும பருவம்



## 7. துரோண பருவம்



## 8. கன்ன பருவம்

# வில்லிபாரதம்

## 6. வீட்டும பருவம்

பாண்டவர் துரியோதனுதியரின் பெரிய பாட்டனுரான பீஷ்மர், துரியோதனுதியரின் படைத்தலைமை ஏற்றுப் பத்துத் தினங்கள் போரைத் தொடர்ந்து நடத்தி வீழ்ச்சியுற்ற வரலாற்றைக் கூறும் பருவம் இது.

### 1. முதற் போர்ச் சருக்கம்

குருக்ஷேத்திர பூமியில் பாண்டவருக்கும் துரியோதனுதியருக்கும் இடையே நிகழ்ந்த பதினெட்டு நாள் போரில், இச்சருக்கம் முதல் நாள் போரை விஷயமாகக் கொண்டது. இது 77 செய்யுள்களைக் கொண்டது.

**கடவுள் வாழ்த்து**

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. மேவரு ஞான னந்த வெள்ளமாய் விதித்தோ னுதி**
**மூவரு மாகி யந்த மூவர்க்குண் முதல்வ னுகி**
**யாவரு யாவு மாகி யிறைஞ்சுவா ரிறைஞ்சப் பற்பல்**
**தேவரு மாகி நின்ற செங்கண்மா லெங்கள் கோவே.**

[மேவு அரு ஞானம் ஆனந்தம் வெள்ளம் ஆய், விதித்தோன் ஆதி மூவரும் ஆகி, அந்த மூவர்க்குள் முதல்வன் ஆகி, யாவரும் யாவும் ஆகி, இறைஞ்சுவார் இறைஞ்ச பல்பல் தேவரும் ஆகி நின்ற செம்கண்மால் எங்கள் கோவே.]

**விளக்கம்:** மேவு அரு ஞானம்—அடைதற்கு அரியதான இறைஞானம். ஆனந்தம்—(அந்த இறையறிவின் பயனுன) துன்பக் கலப்பற்ற பேரின்பம். வெள்ளம்—மிகுதி. விதித்தோன்—படைத்தற் கடவுளாகிய நான்முகன். மூவர்—பிரும்மாவிஷ்ணு சிவன் என்ற திரிமூர்த்திகள். இறைஞ்சுவார் இறைஞ்ச பல்பல் தேவரும் (பல பல தேவரும்) ஆகி நின்ற செங்கண்மால்—வழிபடுவார் வழிபடும்படி அவரவர்க்குரிய தேவ வடிவினனுய் நின்ற திருமால்.

அறிதற்கரிய ஞானப் பொருளாய், இன்பத்தின் இன்பமாய நிரதிசயப் பேரின்பவெள்ளமாய், திரிமூர்த்திகளாய், அத்தேவர்

மூவர்க்கும் முதல்வனுய், சர அசரப் பொருள்களுமாய், பலவகைப் பட்ட மதத்தினரும் வணங்கும் வடிவினனுமாய் நின்ற திருமால் எங்கள் தலைவனுவான், என்பது பொருள்.

## கண்ணன் வழங்கிய உபதேசம்

**2. மாயையென் றெருத்தி தன்பான் மனமெனு மைந்தன் றேன்றித்**
**தூயநல் லறிவன் றன்னைத் தோற்றமின் ருக்கி வைத்தான்**
**தாயொடு தந்தை மக்க டாரமென் றிவர் பால் வைத்த**
**நேயமு மவன்ற ஞலே நிகழ்ந்ததோர் நினைவு கண்டாய்.**

[மாயை என்ற ஒருத்தி தன்பால் மனம் எனும் மைந்தன் தோன்றி, தூயநல் அறிவன்தன்னை தோற்றம் இன்ருக்கி வைத்தான்; தாயொடு தந்தை மக்கள் தாரம் என்று இவர்பால் வைத்த நேயமும் அவன் தனுலே நிகழ்ந்தது ஓர் நினைவு கண்டாய்.]

**விளக்கம்:** மாயை—இருப்பதை இல்லாததாகவோ, அல்லது ஒன்றை மற்றென்ருகவோ தோன்றக் காட்டும் ஒரு சக்தி. மாயை வசப்பட்டது மனம். தூய நல் அறிவன்—பரிசுத்தமான நல்ல அறிவு என்பவன். (மாயையிடம் தோன்றிய மனம் என்ற மைந்தன்) அறிவன் தன்னை இன்ருக்கி வைத்தான்--உண்மை யான அறிவு என்பானை இல்லாதவனுக்கி வைத்தான், அதாவது தோன்ருதவனுக்கி வைத்தான். தாய் தந்தை மக்கள் தாரம் (மனைவி) என்று சொல்லப்படும் இவர்களிடம் வைத்த பாசம் அந்த மாயை வசப்பட்ட மனம் என்பவனுல் உண்டானதோர் உணர்ச்சி ஆகும் என்று அறிவாய்,—என்று கண்ணன் அருச்சுனனுக்குக் கூறினுன், என்பது ஈற்றடிகளின் பொருள்.

மாயையின் வசப்பட்ட மனத்தினிடம், விஷயங்களின் உண்மை நிலையை அறிந்து கொள்வதற்கான மெய்யறிவு தோன்று வதில்லை. ஆகவே, நித்யமானதை அநித்யமானதாகவும், அநித்ய மானதை நித்யமானதாகவும் மயங்கல் நேர்கின்றது. தாய் தந்தை தாரம் என்ற பற்று அநித்யமான சரீரத்தைப் பற்றியது. பந்த மற்றது நித்ய தத்துவத்தினதான ஆன்மா, என்று கூறியபடி. என்று, என்பது எண்ணிடைச் சொல்; அல்லது, என்ற, என்பது திரிபாகவும் கொள்ளலாம். மாயா, என்ற வடமொழிச் சொல் பெண்பாலாதலின், அதைப் பெண்ணு உருவகித்தார். அறிவும் மனமும் பெண்பாற் சொற்கள் அல்லாமையின், ஆண்பாலாக் கினர்.

**3. குயின்றவெம் பொறிவாய் நின்று குறித்தவெம் பொருளுந்தானே**
**அயின்றுமுக் குணங்க ளோடு மறுவகைப் படைக ளோடும்**
**பயின்றர சாளு மந்த மனமெனும் பகைவ ஞுங்குத்**
**துயின்றபோ தொளித்து நின்ற தோன்றலுந் தோன்றுங் கண்டாய்**

[குயின்ற ஐம் பொறிவாய் நின்று குறித்த ஐம்பொருளும் தானே அயின்று, முக்குணங்களோடும் அறுவகை படைகளோடும் பயின்று அரசு ஆளும் அந்த மனம் எனும் பகைவன் ஆங்கு துயின்றபோது ஒளித்து நின்ற தோன்றலும் தோன்றும் கண்டாய்.]

**விளக்கம் :-** குயின்ற - (சரீரத்தோடு) பொருந்திய. பொறி - மெய் வாய் கண் செவி மூக்கு என்னும் இந்திரியங்கள். குறித்த ஐம்பொருள் - அந்த இந்திரியங்களுக்கு விஷயமாய் அமைக்கப் பெற்ற ஊறு ஓசை ஒளி நாற்றம் சுவை என்ற ஐந்து புலன்கள். அயின்று-நுகர்ந்து. முக்குணம் - சாத்விகம், ராஜஸம், தாமஸம் என்ற மூன்று வகைக் குணங்கள். அறு வகை படை - காமம் குரோதம் கோபம் மதம் மாற்சரியம் என்ற ஆறுவகைப்பட்ட சேனை. பயின்று - பழகி. (இந்திரியங்களின் வழி நின்று, அவற்றிற்கு விஷயமாக அமைந்த ஐம்புலன்களையும் அனுபவித்து முக்குணங்களோடும் ஆறுவகைப் படைகளோடு இணைந்து) அரசு செலுத்தும், அதாவது இயங்கும் மனம் என்னும் பகைவன் துயின்ற பொழுது, அதாவது அடங்கிய பொழுது, அங்கே கரந்து நின்ற தூய அறிவன் என்ற புருஷனும் வெளித் தோன்றுபவ னுவான்; அறிவாய், என்பது ஈற்றடிகளின் பொருள்.

இந்திரிய வசப்பட்டு அவை இழுக்கும் வழி மனத்தைப் போக விடாமல் அடக்கிய நிலையில் தத்துவ உணர்வு திரளும், என்பது கருத்து. உட்பகை எனப்படும் காமக் குரோதாதிகள், உண்மை யான அறிவைக் கிட்டுவதற்கு இடையூருய் அமைதலின், அவற் றைப் படையாக உருவகித்தார், என்க. அந்த மனம் - மெய்யறிவு தோன்றுகைக்கு ஆதாரமாகாத மாயை வாய்ப்பட்ட மனம்.

**4. அந்தநல் லறிவன் றன்னை யறிந்தவ ரறிஞ ராவார்**
**தந்தையால் வகுக்கப் பட்ட சராசரப் பொருள்க டோறும்**
**வந்தவான் றீம்பானெய்போ லுயிர்க்குயி ராகி வாழும்**
**பந்தம துணர்ந்து நேரே பார்க்குங்காற் பகையார் நண்பார்.**

[அந்த நல் அறிவன் தன்னை அறிந்தவர் அறிஞர் ஆவார்; தந்தையால் வகுக்கப்பட்ட சரஅசரம் பொருள்கள் தோறும், வந்த ஆன் தீம்பால் நெய் போல் உயிர்க்கு உயிராகி வாழும் பந்தம் அது உணர்ந்து நேரே பார்க்குங்கால், பகை ஆர், நண்பு ஆர்?]

**விளக்கம் :-** தந்தை - சர்வலோக நாயகனை பரமாத்மா. அந்த மெய்ஞானம் என்ற நல்ல புருஷனை அறிந்தவர் மெய் யறிவினுர் ஆவார்; பிரபஞ்ச நாயகனை இறைவனுல் படைக்கப் பெற்ற சரஅசரப் பொருள்கள் எல்லாவற்றிலும், பசுவினிடத்தே உண்டானதான இனிய பாலினிடத்து நெய்யே போல், சகல உயிர்

களினுள்ளும் கரந்துறையும் சம்பந்தத்தைத் தெரிந்து கொண்டு பார்க்குங்கால், பகையாவார் யார்? நண்பர் யார்? (பகை நண்புக்கு இடமில்லை, என்றபடி)—என்பது பொருள். ஆன் (பசு) வந்த பால் நெய், என்று இயைக்க. பந்தம்—சம்பந்தம், தொடர்பு.

இனிய பாலினிடத்து நெய்போல், சராசரப் பொருள் தோறும் பரம்பொருள் பொருந்தியிருத்தலை உணர்ந்து கொண்டார் மாட்டு பகைக்கோ நட்பிற்கோ, இடமில்லை, என்று கூறும் கருத்தது செய்யுள்.

**5. உம்பரு முனிவர் தாமும் யாவரு முணரா வொன்றை**
**இம்பரின் றுனக்கு நானே யிசைவுற உணர்த்தா நின்றேன்**
**ஐம்பெரும் பூதத் தானு மமைத்தன வுடலம் யார்க்கும்**
**நம்பனு மொருவ னுள்ளே ஞானியாய் நடத்து கின்றான்.**

[உம்பரும் முனிவர் தாமும் யாவரும் உணரா ஒன்றை இம்பர் இன்று உனக்கு நானே இசைவு உற உணர்த்தா நின்றேன்; ஐம்பெரும் பூதத்தானும் அமைத்தன உடலம் யார்க்கும்; நம்பனும் ஒருவன் உள்ளே ஞானியாய் (இருந்து) நடத்து கின்றான்.]

**விளக்கம் :-** உம்பர் - தேவர். யாவரும் - தேவர் முனிவர் ஒழிந்த மற்றவர்களும். இம்பர் - இந்த இடத்திலே. இன்று - இப்பொழுது. இசைவுற - பொருத்தம் உற. நம்பன் - இறைவன் தேவரும் முனிவரும் மற்றுளோர் யாவரும் தெளித்து கொள்ளாத ஒரு தத்துவப் பொருள் இங்கே, இப்பொழுது நானே பொருந்தும் படி உணர்த்துகின்றேன்; இயங்கும் பொருள் எல்லாவற்றிற்கும் சரீரங்கள் ஐம்பெரும் பூதங்களால் அமைக்கப்பட்டன; அவற்றி னுள்ளே ஞான வடிவினனாய் இறைவன் (கரந்திருந்து எல்லாத் தொழில்களையும்) நடத்துகின்றான், என்பது பொருள். இயங்கும் பொருள் இயங்காப் பொருள், எல்லாவற்றினும் இருந்து இறைவன் அவற்றைச் செயற்படச் செய்கிறான், என்பதாம். ஐம்பெரும் பூதம் - நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம். இப்பஞ்சபூதங் களின் சேர்க்கையால் பிரபஞ்சப் பொருள்கள் உண்டாகின்றன. யார்க்கும், என்று கூறினாரேனும், உபலக்ஷணமாய் அஃறிணைப் பொருளும் அடங்கும். உணர்த்தாநின்றான், என்பதிலுள்ள ஆநின்று நிகழ்கால இடைநிலை. முனிவர்தாமும், என்பதிலுள்ள தாம், அசை.

**6. என்னைநீ புகலக் கேண்மோ வெங்குமா யாவு மாகி**
**மன்னிய பொருளும் யானே மறைக்கெலா முடிவும் யானே**
**உன்னையான் பிரிவ தில்லை யொருமுறை பிரிந்து மேனாள்**
**நன்னிலா வெறிக்கும் பூணாய் நரனுநா ரணனு மானோம்.**

[என்னை நீ புகல கேண்மோ; எங்குமாய் யாவும் ஆகி, மன்னிய பொருளும் யானே, மறைக்கு எலாம் முடிவும் யானே; உன்னை யான் பிரிவது இல்லை; ஒரு முறை பிரிந்து மேல் நாள், நல் நிலா எறிக்கும் பூணுய், நரனும் நாரணனும் ஆனேம்.]

**விளக்கம் :-** நல் நிலா எறிக்கும் பூணுய், என்னை (யார் என்று நானே) புகல, கேண்மோ; எங்குமாய்.. ஒரு முறை பிரிந்து மேல் நாள் நரனும் நாரணனும் ஆனேம்,—என்பது அன்வயம்.

நல்ல நிலவொளி போன்ற பிரகாசத்தை வீசுகின்ற ஆபரணங் களை அணிந்த விசயனே, என்னை யாரென்று நானே சொல்ல நீ கேட்பாயாக! எல்லா இடங்களிலும் பொருந்தி எல்லாப் பொருள் களுமாய் அழியா நிலையுடைய பொருளும் நானே, மறைகளுக்கு எல்லாம் முடிவான பொருளும் நானே; உன்னை நான் எப்பொழுதும் பிரிவதில்லை, முன்னொரு காலத்தில் ஒரு முறை பிரிந்து நர நாராயணராய்த் தோன்றினேம்,—என்பது பொருள்.

**7. பின்னொரு பிறப்பின் யாமே யிராமலக் குமப்பேர் பெற்றேம்**
**இந்நெடும் பிறப்பி னீயும் யானுமாய் யீண்டு நின்றேம்**
**நின்னிடை யெமக்கு மிந்த நேயமு மொழிக வென்று**
**தன்னிலை யவர்க்குக் காட்டித் தத்துவந் தெளிவித் தானே.**

[பின் ஒரு பிறப்பின் யாமே இராம லக்குமர் பேர் பெற்றேம்; இ நெடும் பிறப்பில் நீயும் யானும் ஆய் ஈண்டு நின்றேம்; நின் னிடை மயக்கும் இந்த நேயமும் ஒழிக என்று தன் நிலை அவற்கு காட்டி தத்துவம் தெளிவித்தானே.]

**விளக்கம்:** பின்னர் ஒரு அவதாரத்தில் நாமே இராம லக்குமணர் என்ற பெயரைப் பெற்றேம். இந்தப் பெரிய அவ தாரத்தில் நீயும் நானுமாய் (கிருஷ்ணர்ச்சுனர்களாய்) இங்கே இருக்கின்றேம்; ஆகவே, உன்னிடத்திலுள்ள மயக்கத்தையும், சுற்றம் பக்கம் என்ற பாசத்தையும் ஒழிப்பாய், என்று கண்ணன் கூறித் தனது விச்வரூபத்தை அருச்சுனனுக்குக்காட்டி உண்மை யான அறிவின் தெளிவைத் தந்தருளினன், என்று பொருள்.

''இரண்டுமுதல் ஏழு ஈருகவுள்ள ஆறு செய்யுள்கள் கண்ணன் அருளிய பகவத் கீதையின் சாரமாகும். இவ்வாறு உபதேசித்த கண்ணன், தனது உண்மையான நிலையையும் அவனுக்குக் காட்டி யருளினன். அருச்சுனனும் மயக்கந்தீரப் பெற்று உண்மையைத் தெளிந்து கொண்டவனுனன்,'' என்பதாம். இந்த ஆறு செய்யுள் கீதா உபதேசத்தின் சாரம் ஆகும்.

**8. ஆங்கவன் றெளிந்து தேறி யறம்பொரு ளின்ப முற்றிப்**
**பாங்கினு னின்னை யெய்தும் பயனெனக் குரைத்தா யென்று**

**பூங்கடி கமல நாறும் பொன்னடி போற்றி யான்செய்**
**தீங்கெலாம் பொறுத்தி யென்று செருச்செயு மாறு பூண்டான்.**

[ஆங்கு அவன் தெளிந்து தேறி அறம் பொருள் இன்பம்முற்றி பாங்கினுல் நின்னை எய்தும் பயன் எனக்கு உரைத்தாய் என்று, பூகடி கமலம் நாறும் பொன் அடி போற்றி, யான் செய் தீங்கு எலாம் பொறுத்தி என்று செரு செயும் ஆறு பூண்டான்.]

**விளக்கம்:** அப்பொழுது விசயன் மயக்கம் தெளியப் பெற்ள் ஐயம் திரிபுக்கு இடமிலாத நிச்சய அறிவை எய்தி அறம் பொருறு இன்பம் என்ற புருஷார்த்தங்களை முற்றிலும் விட்டு, பிரபத்தி என்ற உபாயத்தால் உன்னை அடையும் பயனை எனக்கு உதவி யருளினுய், என்று கூறி, அவனது அழகிய மணம்மிக்க தாமரை மலர் போன்ற அழகிய திருவடிகளை வணங்கி, 'நான் அறியாமல் செய்த பிழைகளை எல்லாம் பொறுத்தருள்க', என்று பிரார்த்தித்து, போரைச் செய்தலை மேற்கொண்டான், - என்பது பொருள்.

இறைவனது சரணம் பற்றி, அறம் பொருள் இன்பம் என்ற புருஷார்த்தங்களை விட்ட நிலையில் கூடுவது பேரின்ப வீடாதலால், 'அறம் பொருள் இன்பம் முற்றி' என்றுர். தர்ம சாத்திரம் விதித்தன செய்தலும், விலக்கியன விடுத்தலும் அறம். அறம் கடவாத வழி ஈட்டப் பெற்றது பொருள். ஒரு காலத்து ஒரு பொருளால் ஐம்புலன்களையும் நிறைவுறச் செய்யும் அகத்திணைச் செய்தி, இன்பம். பிரபத்தி நிலையில் இவற்றிற்கு இடமில்லையாத லால், 'பரனை நினைத்து இம்மூன்றையும் விட்டதே வீடு' என்பது ஔவையாரின் வாக்காயிற்று.

### வீடுமன் தன்னை வெலற்கு உபாயங் கூறல்

9. **பூண்டவெம் பரித்தேர் மீதப் பொய்யிலா மெய்யி னுனும்**
**பாண்டவர் தாமு மாகப் பகீரதி மைந்தன் றன்பால்**
**ஈண்டினு னெய்தி நீயே யிவருடன் மலையின் மற்றுன்**
**காண்டகு போரின் வென்று களங்கொளத் தகுமோவென்றுன்.**

[பூண்ட வெம் பரிதேர் மீது அ பொய் இலா மெய்யினுனும் பாண்டவர் தாமும் ஆக பகீரதி மைந்தன் தன்பால் ஈண்டினுன் எய்தி, 'நீயே இவருடன் மலையின் மற்று உன் காண் தகு போரில் வென்று களம் கொளதகுமோ', என்றுன்.]

**விளக்கம்:** (விசயன் மயக்கம் தீர்ந்து போர் செய்ய உடன்பட் டதும்) சத்ய சொருபியாகிய கண்ணன் பாண்டவர்களோடு கங்கா புத்திரனை வீடுமனிடம் நெருங்கிச் சேர்ந்து, 'நீயே இவர்களோடு போர் செய்தால் அதிசயத்துடன் பார்க்கத் தகுந்ததாகும். உனது போரில் உன்னை இவர்கள் வென்று போர்க்களத்தைக் கைப்பற்றுதல்

முடியக் கூடியதாமோ!' என்று கண்ணன் கூறினன், என்பது பொருள்.

பாண்டவர் தாமும், என்பதில் தாம், அசை. தன்பால், என்பதிலுள்ள, தன் அசை. ஈண்டினன் எய்தி—அடைந்து. மற்று, அசை. வீடுமன் யாவராலும் வெல்ல முடியாத பராக்ரம சாலியாதலால், அவனை வெல்ல. அவனையே உபாயங் கேட்டபடி. கண்ணன் சத்ய சொரூபியாதலால், பொய்யிலா மெய்யினன் எனப் பட்டான். களம் வென்று கொள, என்று இயைக்க.

**10. மற்றவன் றரும ராசன் மைந்தனே யவனிக் கெல்லாம்**
**கொற்றவ னகு மென்னைக் கொல்லநீ யுபாயங் கேண்மோ**
**அற்றைவெஞ் சமரிற் சீறு மம்பையென் றொருத்தி தானே**
**செற்றிடத் தவமுஞ் செய்து சிகண்டியாய்ப் பிறந்து நின்ருள்.**

[மற்று, அவன் தருமராசன் மைந்தனே அவனிக்கு எல்லாம் கொற்றவன் ஆகும்; என்னை கொல்ல நீ உபாயம் கேண்மோ, அற்றை வெம்சமரில், சீறும் அம்பை என்று ஒருத்தி தானே செற்றிட தவமும் செய்து சிகண்டியாய் பிறந்து நின்ருள்,— தொடரும். இதுவும் இதைத் தொடரும் இரண்டு செய்யுள்களும், குளகம்.]

**விளக்கம்:** அவன்—வீடுமன். யமதர்ம ராசனது மகனை யுதிஷ்டிரனே பூமிக்குத் தலைவன் ஆவான்; என்னைக் கொல்ல உபாயம் கேட்பாயாக; (காசிராசனது சுயம்வர மண்டபத்தில், அவனது பெண்கள் மூவரை விசித்ர வீரியனுக்கு மணம் புரிவிக்கும் பொருட்டுக் கவர்ந்து வந்த) அந்த நாளில், (என்மேல்) சீற்றங் கொண்ட அம்பை என்ற பெண் ஒருத்தி வெம்சமரில் என்னை அழித்திடத் தவம் செய்து சிகண்டி என்ற பெயருடைய அரச குமாரனய்ப் பிறந்திருக்கின்ருள்,—(தொடரும்) என்பது பொருள். மற்று, அசை.

**11. பன்னுசீ ரியாக சேனன் குமரனைப் பத்தா நாளில்**
**என்னெதி ரமரிற் காட்டி லியான்படை யாவுந்தீண்டேன்**
**பின்னவன் வெகுண்டு செய்யும் பெருமிதங் கண்டு மீண்டு**
**கன்னனைக் கொல்ல நின்ற காளைகைக் கணையால் வீழ்வேன்.**

[பன்னுசீர் யாகசேனன் குமரனை பத்தாம் நாளில் என் எதிர் அமரில் காட்டில் யான் படை யாவும் தீண்டேன்; பின், அவன் வெகுண்டு செய்யும் பெருமிதம் கண்டு, மீண்டு, கண்ணனை கொல்ல நின்ற காளைகை கணையால் வீழ்வேன்.]

**விளக்கம்:** பன்னுசீர் யாகசேனன் குமரன்—சிறப்பித்துப் பேசப் படுகின்ற புகழையுடைய துருபதனுடைய மகனுகிய சிகண்டி. (அந்த சிகண்டியை) போரில் பத்தாவது தினத்தில் என் எதிரில் தோன்றக் காட்டினுல், நான் ஆயுதங்கள் எவற்றையும் தொடமாட்டேன்; பிறகு, அவன் வெகுண்டு செய்யும் பராக்ரமத்தைக் கண்டு, அதன் பின்னர், கர்ணனைக் கொல்ல இருக்கின்ற அருச்சுனன் கணையால் செயலழிந்து விடுவேன்,—என்பது பொருள்.

**12. நின்றனை யருளொ டாங்கே நீலமா மேனி யாய்நீ**
**வென்றிமற் றிவரே யல்லால் வேறியா ரெய்து கிற்பார்**
**என்றன னென்ற போதப் பிதாமக னிருதாள் போற்றி**
**நின்றவர் தம்மைக் கொண்டு சிலைமுனி நிலையிற் போனுன்.**

[நின்றனை அருளொடு ஆங்கே நீலம் மாமேனியாய் நீ, வென்றி மற்று இவரே அல்லால் வேறு யாவர் எய்து கிற்பார்; என்றனன் என்றபோது, அ பிதாமகன் இருதாள் போற்றி நின்றவர் தம்மை கொண்டு சிலை முனி நிலையில் போனுன்.]

**விளக்கம்:** நீலம் மாமேனியாய் நீ அருளொடு ஆங்கே நின்றனை, (ஆகையால்) இவர் அலால் வேறு யார் வென்றி எய்து கிற்பார்? (வெற்றி அடைய வல்லவர் ஆவர்?') என்று வீடுமன் கூறினுன்; இவ்வாறு அவன் கூறியபோது, பெரியபாட்டனது இரு பாதங்களையும் வணங்கி நின்ற பாண்டவரைக் கண்ணன் வில்வீரனை துரோணனது இருக்கை அழைத்துச் சென்றுன்,—என்பது பொருள். மற்று அசை. நீலம் ஆம் மேனியாய், என்றுங் கொள்ளலாம்.

## துரோணன் கூற்று

**13. போயவர் குருவின் பாதம் போற்றிமுன் நிற்பச் செங்கண்**
**மாயவ னவனை நோக்கி வாகையந் தாமஞ் சூட**
**நீயிவர்க் களித்தி யாகி லுண்டலா னின்னை வையம்**
**தாயவர் தமக்கும் வேற லரிதெனச் சாற்றி னுனே.**

[போய் அவர் குருவின் பாதம் போற்றி முன் நிற்ப, செம் கண்மாயவன் அவனை நோக்கி, "வாகை அம்தாமம் சூட நீ இவர்க்கு அளித்தி ஆகில் உண்டு; அலால் நின்னை வையம் தாயவர் தமக்கும் வேறல் அரிது," என சாற்றினுன்.]

**விளக்கம்:**– செங்கண்மாயவன் – கண்ணன். வாகை அம் தாமம் – வெற்றியின் அடையாளமான வாகை மலர்மாலை. வையம் தாயவர் – உலகளந்த நெடுமால். வேறல் – வெல்லுதல். "நீ அருள் செய்தால் அன்றி, பாண்டவர் வெற்றி பெறுவதற்

கில்லை'' என்று கண்ணன் துரோணனிடம் கூறினன் என்பதாம் தாமம் சூட....உண்டு – வெற்றிமாலை சூடும்படி நீ அருள் செய்வா யானுல் இவர்க்கு வெற்றி உனதாகும்.

**14. மன்மகன் றருமன் வென்று வையக மெய்த நிற்பான்**
**என்மக னெனக்கு முன்னே யிறந்தன னென்னு வானில்**
**வின்மக பதியை யொக்கும் வேந்தர்முன் சொல்லிற் சூரன்**
**தன்மகன் மகனே பின்னைச் சாபமென் றெடுக்கி லேனே.**

[மன் மகன் தருமன்வென்று வையகம் எய்த நிற்பான்; என் மகன் எனக்கு முன்னே இறந்தனன் என்று வானில் வில் மகபதியை ஒக்கும் வேந்தர்முன் சொல்லின், சூரன்தன் மகன் மகனே, பின்னை சாபம் என்று எடுக்கிலேன், ஏ.]

**விளக்கம்:–** மன்மகன்தருமன் - பாண்டு என்னும் அரசனது மகனுன தருமன். வானில் வில் மகபதி - வானுலகத்தில் வாழும் விளக்கமுடைய தேவேந்திரன், (வில் - ஒளி, விளக்கம்) சூரன்தன் மகன் மகன் – சூரன் என்பானது மகனுகிய வசுதேவனது குமாரனுகிய கண்ணன். கண்ணனே, தேவேந்திரனை ஒத்த அரசர் முன் என் மகன் எனக்கு முன்னே இறந்தான் என்று தக்கவர் சொன்னுல், அதன்பின் வில்லை எடுக்கமாட்டேன்; என்று துரோணன் கூறினன், என்பதாம்.

**15. என்பெருஞ் சாபங் கைவிட் டியானெதிர் நிற்ற லானும்**
**தன்பெருஞ் சாபத் தாலுஞ் சமரிடைத் திட்டத் துய்மன்**
**வன்புட னெனக்குக் கூற்ருய் மலைகுவன் மலைத்த வன்றே**
**நின்பெருங் கருத்து முற்று மேகுவீர் நீவி ரென்ருன்.**

[என் பெரு சாபம் கைவிட்டு யான் எதிர் நிற்றலானும், தன் பெரு சாபத்தாலும் சமரிடை திட்டத்துய்மன், வன்புடன் எனக்கு கூற்ருய் மலைகுவன்; மலைந்த அன்றே நின்பெரு கருத்து முற்றும்; ஏகுவீர் நீவிர் என்ருன்.]

**விளக்கம்:-** சாபம் - வில், வரம். திட்டத் துய்மன் தன் பெருஞ்சாபத்தாலும், என்று கூட்டுக. வன்புடன் - வன்மை யோடு. ''நான் வில்லை எடுத்தலை விட்டு, அதாவது நிராயுத பாணியாய் போர்க்களம் நிற்பதாலும், திட்டத்துய்மன் பெற்றுள வரத்தாலும், அவன் எனக்கு யமனுய் வன்புடன் போர் செய்கின்ற பொழுது, உங்களது கருத்து முற்றும், அதாவது நான் மடிதல் நிச்சயம்; நீங்கள் இனிப் போகலாம்,'' என்று துரோணன் கண்ணனுக்கும் பாண்டவர்க்கும் கூறி விடை கொடுத்தான், என்பதாம்.

**16. முனிவனை விடைகொண் டேகி முகுந்தனுந் தாமு முன்னம்**
**தனிவனந் திரிந்து மீண்டோம் தானையங் கானிற் புக்கார்**

**பனிவன நிறைத்த பொய்கைக் கரைநிழற் பரப்புத் தேமா**
**கனிவன மென்ன யார்க்கு முதவிகூர் கருணைக் கண்ணர்.**

[முனிவனை விடைகொண்டு ஏகி, முகுந்தனும் தாமும் முன்னம் தனி வனம் திரிந்து மீண்டோர் (ஆகிய பாண்டவர்) தானை அம் கானில் புக்கார், பனி வனம் நிறைந்த பொய்கை கரை நிழல் பரப்பும் தேமா கனிவனம் என்ன யார்க்கும் உதவி கூர் கருணை கண்ணர்.]

**விளக்கம்:-** பனிவனம்....கண்ணர் ஆகிய முகுந்தனும், முன்னர் தனி வனம் திரிந்து மீண்டோர் தாமும், தானை அம் கானில் புக்கார், என்பது அன்வயம்.

குளிர்ந்த நீர் நிறைந்த பொய்கைக் கரையில் நிழல் பரப்பும் இனிய பழங்களோடு கூடிய மாமரக்காடு போல, தம்மை நாடி வந்தோர் அனைவர்க்கும் உதவுதல் மிகுந்த கருணையுடைய கண்ணரான (நோக்கத்தினரான) கண்ணனும், முன்னே தனித்த கானில் திரிந்து மீண்டவரான பாண்டவர்தாமும், முனிவனை துரோணனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்று சிறந்த சேனை களாகிய காட்டினில் பிரவேசித்தார், என்பது பொருள். வனம்-(வநம்) நீர், காடு.

மாம்பொழில் தன்னை அடைந்தார்க்கு நிழலையும் கனிகளையும் உதவுதல்போல், தன்னை அடைந்தார் யாவராயினும் அவர்க்கு உதவும் இயல்பினர், பாண்டவரும், கண்ணனும், என்க. காடு சென்று மீண்டவர், மீண்டும் ஒரு காடு புகுந்தார், என்றது நயமுடையது.

### முன்னணிப்படை எதிர்த்தல்

**17. கொற்றவர் தம்மை யேழக் குரோணிவெஞ் சேனை யோடும்**
**பற்றுடை யசல மாகும் பான்மையால் வியூக மாக்கி**
**வெற்றிதந் தருள்கென் றேத்தி விந்தையை வணங்கி மாயோன்**
**சொற்றபின் றூசி யோடு தூசிசென் றுற்ற தன்றே.**

[கொற்றவர் தம்மை ஏழ் அக்குரோணி வெம் சேனையோடும் பற்று உடை அசலம் ஆகும் பான்மையால் வியூகம் ஆக்கி, வெற்றி தந்தருள்க என்று விந்தையை வணங்கி, மாயோன் சொற்றபின் தூசியோடு தூசி சென்று உற்றது, அன்றே.]

**விளக்கம்:-** ஏழு அக்குரோணி என்னும் தொகை உடைய சேனையோடும், சேனைத் தலைவர்களாகிய அரசர்களைத் தொடர்ச்சி உடைய மலை என்று சொல்லும் தன்மையுடைய வியூகம் ஆக்கி, விந்தையை, வெற்றி தந்தருள்க என்று துதித்து வணங்கி,

மாயோன் (போர் செய்யும்படி) கூறியபின் பாண்டவரது தூசிப்படை, துரியோதனுதியருடைய தூசிப்படையுடன் போர் செய்யச் சென்று நெருங்கிற்று, - என்பது பொருள்.

பற்று உடை அசலம் - தொடர்ச்சியுடைய மலை. வியூகம் - அணிவகுப்பு. விந்தை - துர்க்காதேவி. தூசிப்படை - முன்னணிப் படை.

வேறு

கலி விருத்தம்

**18. புரசை யானைப் பொருபரித் தேருடை**
**அரசன் மாத்துவ சத்தன வாதலால்**
**குரைசெய் வான்பணைக் குப்பைகள் யாவினும்**
**முரச சால முழங்கின சாலவே.**

[புரசை யானை பொரு பரி தேர் உடை அரசன் மாதுவசத்தன ஆதலால், குரைசெய்வான்பணை குப்பைகள் யாவினும் முரச சாலம் முழங்கின சாலவே.]

**விளக்கம்:-** புரசை - யானையின் கழுத்தில் இடும் கயிறு. யானை குதிரை தேர்ப்படைகளே உடைய அரசனுன தருமனது துவசத்தினில் இடங் கொண்டமையின், ஒலித்தலைச் செய்யும் பெரிய பறைகளின் கூட்டங்கள் எல்லாவற்றினும், முரசக் கூட்டங்கள் மிகுதியாக முழங்கின, என்பது பொருள். துவசம் - கொடி. பறை - அடிக்கும் தோல் கருவி. குரைசெய்வான் பறை - ஒலித்தலைச் செய்யும் பெரிய பறைகள். முரச சாலம் - முரசங்களின் கூட்டங்கள். சால, மிகுதிப் பொருளதான உரிச் சொல்.

**19. மலர்ந்த பற்ப வனநிகர் பைந்துழாய்**
**அலங்கல் வித்தக னேந்தின வாதலால்**
**வலம்பு ரிக்குலம் வாழ்வுபெற் றேமெனச்**
**சலஞ்ச லத்தொடுஞ் சங்கொடு மார்த்தவே.**

[மலர்ந்த பற்பவனம் நிகர் பைந்துழாய் அலங்கல் வித்தகன் ஏந்தின ஆதலால், வலம்புரி குலம் வாழ்வு பெற்ரேம் என சலஞ்சலத்தொடும் சங்கொடும் ஆர்த்த, ஏ.]

**விளக்கம்:-** பற்பவனம் - தாமரைக்காடு. வித்தகன் - ஞான வடிவினனுகிய கண்ணன். சலஞ்சலம் - சங்குகளில் ஒருவகை. சங்கம் - இடம் புரிசங்கு. மலர்ந்த தாமரைக் காட்டை ஒத்த திருமுகம், திருக்கண், திருக்கை, திருக்கால், திருநாபிகளை உடைய, துளவ மாலை அணிந்த ஞானவடிவினனுன, கண்ணன் கரம் ஏந்திய சங்கின் இனத்தைச் சேர்ந்தவாதலால், வாழ்வு

பெற்ருேம் எனக் களித்து சலஞ்சலங்களோடும், இடம்புரிச் சங்கு களோடும், வலம்புரிச் சங்குகளின் கூட்டம் ஒலித்தன, - என்பது பொருள்.

வலம்புரிச் சங்குகள் களித்ததற்குத் திருமாலின் கையிலுள்ள சங்கின் இனத்தைச் சேர்ந்ததாதலைக் காரணமாக்கியது **தற்குறிப் பேற்றம்** ஆகும்.

**20. சென்று தேர்களுந் தேர்களுஞ் சேர்ந்தன**
**வென்றி வேழமும் வேழமு மூர்ந்தன**
**நின்ற வாசியும் வாசியு நேர்ந்தன**
**வென்றி வீரரும் வீரரு மேவினர்.**

[சென்று தேர்களும் தேர்களும் சேர்ந்தன, வென்றிவேழமும் வேழமும் ஊர்ந்தன, நின்ற வாசியும் வாசியும் நேர்ந்தன, வென்றி வீரரும் (பொரலில்) மேவினர்.]

**விளக்கம்:-** வேழம் - யானை. வாசி - குதிரை. வென்றி - வெற்றி. தேர்கள் பொருதற்குச் சென்று நெருங்கின, யானைகள் எதிர்த்து நடந்தன, குதிரைகள் எதிர்த்தன, வீரர் பொரலில் பொருந்தினர், என்பது பொருள். நின்ற வாசி - பின்னிடாது நின்ற குதிரைகள். தேர், யானை முதலியன, அவற்றின்மீது இருந்த வீரரையும் குறிக்கும்.

**21. பார வாளமும் வாளமும் பாய்ந்தன**
**கூர வேல்களும் வேல்களுங் குத்தின**
**வீர சாபமுஞ் சாபமும் வீக்கின**
**தூர வாளியும் வாளியுந் தோய்ந்தவே.**

[பார வாளமும் வாளமும் பாய்ந்தன, கூர வேல்களும் வேல்களும் குத்தின, வீர சாபமும் சாபமும் வீக்கின, தூர வாளியும் வாளியும் தோய்ந்த, ஏ.]

**விளக்கம்:-** இதுவும் இதைத் தொடரும் மூன்று செய்யுள் களும் போர் வருணனை ஆகும். பார வாளம் - பெரியவாள்கள். கூரவேல் - கூரிய வேல்கள். வீர சாபம் - வலிய வில்கள். வீக்கின - ஒன்றையொன்று அழித்தன. தூர வாளி - நெடுந் தூரம் செல்லவல்ல அம்புகள். தோய்ந்த - ஒன்றின்மேல் ஒன்று பொருந்தின.

வாளம் - (வடசொல்) வாள்; அல்லது அம் என்பதைச் சாரியையாகக் கொண்டு தமிழ்ச் சொல்லாகவும் கொள்ளலாம். சாபம் - (வட சொல்) வில்.

**22. இட்ட தார்முடி மன்னவ ரோடெதிர்**
**இட்ட தார்முடி மன்னவ ரெய்தினர்**

**பட்ட வர்த்தனப் பார்த்திவர் தம்முடன்**
**பட்ட வர்த்தனப் பார்த்திவ ரெய்தினர்.**

[இட்டதார் முடி மன்னவரோடு எதிர் இட்டதார் முடி மன்னவர் எய்தினர்; பட்ட வர்த்தனப் பார்த்திவர் தம்முடன் பட்டவர்த்தனப் பார்த்திவர் எய்தினர்.]

**விளக்கம்:-** தார் மாலை இட்ட முடி மன்னவரொடு தார் இட்ட முடி மன்னவர் எதிர் எய்தினர்; பட்டவர்த்தனப் பார்த்திவர் தம்முடன் பட்டவர்த்தனப் பார்த்திவர் எதிர் எய்தினர். முடி மன்னர் - கிரீடாதிபதிகள். பட்டவர்த்தனர் - கிரீடம் இன்றி நெற்றியில் பட்டம் தரித்த அரசர். ஒத்த நிலையினரான அரசர்கள் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போர் செய்தனர், என்பதாம். இது தரும யுத்தத்தின் பாற்படும்.

**23. மந்தி ரத்தவர் தம்முடன் மாமதி**
**மந்தி ரத்தவர் வந்தெதிர்மோதினர்**
**தந்தி ரத்தவர் தம்மிசை யேசெலத்**
**தந்தி ரத்தவர் சாயக மேவினர்.**

[மந்திரத்தவர் தம்முடன் மாமதி மந்திரத்தவர் வந்து எதிர் மோதினர்; தந்திரத்தவர் தம்மிடை செல தந்திரத்தவர் சாயகம் ஏவினர்.]

**விளக்கம்:-** மாமதி மந்திரத்தவர்-அறிவாளிகளான மந்திரிகள். தந்திரத்தவர் - சேனைத் தலைவர்கள். மத்திரிகள் எதிர் சென்று மந்திரிகளைத் தாக்கினர்; சேனைத் தலைவர் சேனைத் தலைவர்மீது அம்புகளை ஏவினர், என்பதாம்.

**24. மண்ட லீகர்தம் மார்புறை யாகவே**
**மண்ட லீகர்தம் வாட்படை யோச்சினர்**
**சண்ட வார்சிலை சாமந்தர் வாங்கவே**
**சண்ட வார்சிலை சாமந்தர் வாங்கினர்.**

[மண்டலீகர் தம் மார்பு உறை ஆக (ஏ) மண்டலீகர் தம் வாள் படை ஓச்சினர்; சண்டம் வார்சிலை சாமந்தர் வாங்க (ஏ) சண்டம் வார்சிலை சாமந்தர் வாங்கினர்.]

**விளக்கம் :-** நாற்பது கிராமங்களுக்குத் தலைவர், மண்டலீகர். ஒரு பேரரசனின் கீழ் அமைந்து நாட்டின் சிறு பகுதியை ஆள் பவர், சாமந்தர். உறை - வாள் கூடு. சண்டம் வார்சிலை - உக்ர மான பெரிய வில். வாங்கல் - வளைத்தல். மண்டலீகர்கள், மண்ட லீகர்களின் மார்பை உறையாகக் கொண்டு வாட்களைச் செலுத் தினர்; சாமந்தர் வில்லை வளைக்க, அதற்கெதிர் சாமந்தர் வில்லை

வளைத்தனர், என்பதாம். மார்பு உறையாக ஓச்சினர் - வாள் முழுவதும் மறையும்படி எதிரிகளின் மார்பில்வாளை மார்பினுள் செலுத்தினர்.

வீரர் வருணனை

**25. முடியி ழந்த நிருபர் முகுந்தனல்**
**இடிப டுந்தலை ராகுவொ டேகினர்**
**அடியி ழந்தவ ராதபன் றேர்விடும்**
**தொடிநெ டுங்கை வலவனிற் றேன்றினர்.**

[முடி இழந்த நிருபர் முகுந்தனல் இடிபடும் தலை ராகுவோடு ஏகினர், அடி இழந்தவர் ஆதபன் தேர்விடும் தொடி நெடுங்கை வலவனின் தோன்றினர்.]

**விளக்கம் :-** தலை இழந்த அரசர், முகுந்தனல் துண்டிக்கப் பெற்ற தலையையுடைய இராகுவை ஒத்தனர். கால்களை இழந்தவர் ஆதபனது (சூரியனது) தேரைச் செலுத்தும் தொடி என்னும் ஆபரணம் அணிந்த பெரிய கைகளை உடைய தேர்ப் பாகனை அருணனைப் போல் தோன்றினர்,—என்பதாம். ஏயினர் - ஒத்தனர். சூர்ய சாரதி கால் இல்லாதவன்.

**26. பூபர் தங்கள் புயங்களு மார்பமும்**
**சாப வெங்கணை தைத்துகு சோரியால்**
**தீப மென்னவுஞ் செம்மலர்க் கோடுடை**
**நீப மென்னவு நின்றன ராண்மையால்.**

[பூபர் தங்கள் புயங்களும் மார்பமும் சாபம் வெம்கணை தைத்து உகுசோரியால் தீபம் என்னவும், செம்மலர் கோடு உடை நீபம் என்னவும் நின்றனர் ஆண்மையால்.

**விளக்கம் :-** பூபர் - அரசர். சோரி - இரத்தம். தீபம் - இரவில் தீபம் போன்ற ஒளியுடன் விளங்கும் சோதி விருக்ஷம். நீபம் - கடம்பமரம். அரசர்கள், தங்கள் தோள்களிலும் மார்புகளிலும் (பகைவரின்) சாபம் (வில்) உமிழ்ந்த கணைகள் ஊடுருவிப் பாய்ந்து, (அதனல்) பெருகுகின்ற இரத்தத்தால், தீப விருக்ஷம் போலவும், சிவந்த மலர்களை உடைய கிளைகளோடு கூடிய கடம்பமரம் போலவும், வீரத்தன்மையோடு (சலியாது) நின்றனர், என்பது பொருள்.

போரிலே பின்னிடாது மார்பிலும் தோளிலும் பகைப் படைகளை ஏற்று நிற்றல் ஆண்மையின் அடையாளம், ஆதலால், ஆண்மையால் நின்றர் என்றர். மரம், அரசர். அவரது அவயவங்கள், கிளைகள். தைக்க, என்றது தைத்து என்று திரிந்து நின்றது.

**27. கையில் வாளி தொலைந்தபின் காய்ந்துதம்**
**மெய்யில் வாளிகள் வாங்கி வில் வாங்கினார்**
**பொய்யி லாமொழிப் பூபதி சேனையில்**
**மையி லாண்மையி னார்சில மன்னரே.**

[கையில் வாளி தொலைந்த பின் காய்ந்து, தம் மெய்யில் வாளிகள் வாங்கி வில் வாங்கினார், பொய் இலா மொழி பூபதி சேனையில் மை யில் ஆண்மையினார் சில மன்னர், ஏ.]

**விளக்கம் :-** பொய் இலா மொழியனான தருமனது சேனையில் (உள்ள) குற்றம் இல்லாத ஆண்மையினரான சில மன்னர்கள், கையிலிருந்த அம்புகள் அற்றுப் போன பின்னர், தங்கள் உடலில் தைத்து நின்ற அம்புகளைப் பறித்து வில்லை வளைத்தனர்; அதாவது பகைவர் மேல் பறித்த அம்புகளைச் செலுத்தினர்,— என்பது பொருள்.

உடலிற் தைத்த படைகளைப் பறித்துப் பகைவர் மேல் ஏவுதல் நூழிலாட்டு என்ற புறப்பொருள் செய்தி ஆகும். இந்நூழிலாட்டு தும்பைத் திணைக்குரிய துறைகளில் ஒன்று. அம்பு செலுத்தலாகிய காரியத்தை வில்வாங்குதலால் குறித்தது உபசார வழக்கு ஆகும். பொய்யில் ஆம் மொழி பூபதி, என்றும் பிரித்துக் கொண்டு, பொய்யின் பாற்பட்ட சொற்களை உடைய துரியோதனன், என்று பொருள் கொளலும் அமையும்.

**28. வலக்கை யற்று விழவு மனத்தொரு**
**கலக்க மற்ற வெங்கார்முகத் தார்சிலர்**
**துலக்கெ யிற்றுக் கணைதொடுத் தார்தொடை**
**இலக்க மற்ற படையிலக் காகவே.**

[வலக்கை அற்று விழவும் மனத்து ஒரு கலக்கம் அற்ற வெம் கார் முகத்தார் சிலர் துலக்கு எயிறு கணை தொடுத்தார், தொடை இலக்கம் அற்ற படை இலக்கு ஆகவே.]

**விளக்கம் :-**வலக்கை துண்டிக்கப் பெற்று விழவும், மனத்திலே எவ்விதமான கலக்கமும் இல்லாத கொடிய வில்லையுடையார் சிலர், தொடர்ச்சியா எண்ணப்படும் கணக்கு இல்லாத பகைப் படையே இலக்கு ஆக, விளங்குந் தன்மையுள்ள பற்களினால் அம்புகளைத் தொடுத்துச் செலுத்தினர், என்பது பொருள். கார்முகம் - வில். துலக்கு எயிறு - விளங்கும் பற்கள். தொடை இலக்கம் அற்ற — தொடர்ச்சியாகக் கணக்கிடப்படும் எண்ணில் அடங்காத, அதாவது எண்ணில் அடங்காத. தொடை இலக்கம் அற்ற, என்பதற்கு மாலை அணிந்த எண் கடந்த, என்றும் பொருள் கொள்ளலாம். ஈற்றடியிலுள்ள, இலக்கமற்ற - இலக்காக, என்றது முரண் தொடையாகும்.

**29. தரளி ரண்டுடைச் சிங்கமன் ஞர்சிலர்**
**வாளி ரண்டொர் தொடையினில் வாங்கிஞர்**
**கோளி ரண்டு மெனக்குறு கார்தடந்**
**தோளி ரண்டுந் துணிந்தெதிர் வீழவே.**

[தாள் இரண்டு உடை சிங்கம் அன்ஞர் சிலர். வாள் இரண்டு ஓர் தொடையினில் வாங்கிஞர் கோள் இரண்டும் என குறுகார் தடம் தோள் இரண்டும் துணிந்து எதிர் வீழவே.]

**விளக்கம் :-** தாள் இரண்டுடை சிங்கம் அன்ஞர் சிலர், கோள் இரண்டு—வீழவே, வாள் இரண்டு ஓர் தொடையில் வாங்கிஞர், என்பது அன்வயம். குறுகார் - பகைவர். இரண்டு கால்களே உடைய நரசிங்கமூர்த்தியை ஒத்த வீரர் சிலர், இராகு கேது என்ற இரண்டு கிரகங்கள் என்று சொல்லும்படி பகைவரது இரண்டு தோள்களும் அற்று அவர் எதிரில் விழும்படி, ஒரே சமயத்தில் இரண்டு வாள்களே வீசிஞர், —என்பது பொருள். தொடையினில் - ஒரே சமயத்தில், முதலடியை, இரண்டு கால்களே உடைய சிங்கம், என்று பொருள் கொண்டால், **இல்பொருள் உவமை ஆகும்.**

**30. ஓடி முட்டலிற் றேர்க ளுடைந்தன**
**நாடி முட்டலி ஞகங்கள் வீழ்ந்தன**
**கூடி முட்டலிற் கொய்யுளே மாய்ந்தன**
**சாடி முட்டலி ஞள்களுஞ் சாய்ந்தனர்.**

[ஓடி முட்டலின் தேர்கள் உடைந்தன, நாடி முட்டலின் நாகங்கள் வீழ்ந்தன, கூடி முட்டலின் கொய்யுளே மாய்ந்தன, சாடி முட்டலின் ஆள்களும் சாய்ந்தனர்.]

**விளக்கம்:** (இருதிறத்துப் படையிலுமுள்ள தேர்கள்) ஓடிச் சென்று மோதலால் தேர்கள் உடைந்தன, (யானேகள்) தேடிச் சென்று மோதலால் யானேகள் விழுந்தன, (குதிரைகள்) ஒன்று பட்டுத் தாக்கலால் குதிரைகள் இறந்தன, (காலாள் வீரர்) மோதி எதிர்த்தலால் காலாள்வீரர் மடிந்தனர், என்பது பொருள். நாகம்—யானே. கொய்யுளே—குதிரை, (கொய்யப்பெற்ற பிடரிமயிர் உடைய குதிரை; வினேத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.)

**31. பற்றி நின்ருெரு வன்படை வாளெதிர்**
**உற்ற வன்றலே சிந்திட வோச்சிஞன்**
**அற்ற தன்றலே கொண்டவ னுந்தனேச்**
**செற்ற வன்றலே சிந்திட வீசிஞன்.**

[பற்றி நின்று ஒருவன் படைவாள் எதிர் உற்றவன் தலே சிந்திட ஓச்சிஞன்; அற்ற தன் தலே கொண்டவனும் தனே செற்றவன் தலே சிந்திட வீசிஞன்.]

**விளக்கம்:** இரு வீரர் செய்த தொந்த யுத்தம் கூறும் இது. ஒருவன் வாள் படை பற்றி நின்று, எதிர் வந்தவன் தலை சிந்தும்படி (வாளை) வீசினான்; அற்ற தலையைக் கொண்டவனும், தன் தலை அறுத்தவன் தலை சிதறும்படி, (தன் வாளை) வீசினான், என்பது பொருள்.

**32.** **புங்க மெய்பு தையப்புதை யச்சிலர்**
**சிங்க மென்னச் செருக்களத் தாடினார்**
**கங்க மிட்டபைங் காவண நீழலில்**
**அங்கை கொட்டி யலகைநின் றுடவே.**

[புங்கம் மெய் புதைய புதைய சிலர், சிங்கம் என்ன செரு களத்து ஆடினார், கங்கம் இட்ட பைங்காவணம் நீழலில் அம்கை கொட்டி அலகை நின்று ஆடவே]

**விளக்கம்:** கங்கம் இட்ட....அலகை நின்றுடவே, புங்கம் மெய் புதைய....செருக்களத்து ஆடினார்—என்பது அன்வயம், கங்கம்—கழுகு. காவணம்—பந்தல். உயிர் நீங்கப்பெற்ற உடல் களைத் தின்னற்கு ஆகாயத்தில் கூட்டமாய் வட்டமிட்டதால் உண்டான குளிர்ந்த பந்தலின் நிழலில் அலகை (பேய்) கை கொட்டிக் கூத்தாட, புங்கம் (அம்புகள்) தேகத்தில் பாய்ந்து தைக் கவும், (அதைப் பொருட்படுத்தாமல்) வீரர் சிலர் போர்க்களத்தில் சிங்கம்போல் ஆடினர்,—என்பது பொருள். ஆகாயத்தில் வட்டம் இட்ட கழுகுகளின் கூட்டம் பந்தல். புதையப் புதைய—அம்புகள் மேலும் மேலும் உடலில் தைத்துக் கொண்டிருக்க. இதுவும், இதைத் தொடரும் இரண்டு செய்யுள்களும், வீரர்களின் பேராண் மையைக் கூறும். பிணம் தின்னும் பேய்கள் களத்தில் தங்களுக்கு உணவு கிடைத்ததென்று மகிழ்ந்து கூத்தாடும், என்பர். புங்கம், கங்கம், வடமொழிச் சொற்கள்.

**33.** **வாளி யாயிரந் தைத்த வழியெலாம்**
**ஒளி யாக வொழுகுங் குருதியால்**
**தாளி லானடத் துந்தடந் தேருடை**
**மீளி யாமென நின்றனர் வீரரே.**

[வாளி ஆயிரம் தைத்த வழி எலாம் ஒளி ஆக ஒழுகும் குருதி யால், தாள் இலான் நடத்தும் தடந்தேர் உடை மீளி ஆம் என நின்றனர் வீரரே.]

**விளக்கம்:** ஆயிரம் ஆயிரமாக அம்புகள் தைத்த புண்கள் வழியாக ஒழுங்காகப் பெருகும் குருதியால் வீரர் சிலர், கால்கள் இல்லாத அருணனால் செலுத்தப்படும் தேரையுடைய பெருமையில்

சிறந்த சூரியன் என்று சொல்லும்படி நின்றனர், என்பது பொருள். ஆயிரம்—மிகப்பல. ஒளி—ஒழுங்கு, தொடர்ச்சி. மீளி, என்பது (இங்கே) பெருமையிற் சிறந்த சூரியன், என்ற பொருளது.

**34. வெட்டி னாரவர் மெய்யிற் படாமைநின்(று)**
**ஒட்டி னாரிமைப் போதினி லோடியே**
**தட்டி னாருட லைத்தழுவிக்கொடு**
**கட்டி னார்விழுந் தார்சில காளையர்.**

[வெட்டினார், அவர் மெய்யின் படாமை நின்று ஒட்டினார் இமை போதினில் ஓடியே, தட்டினார் உடலைத் தழுவிக்கொடு கட்டினார், விழுந்தார் சில காளையர்.]

**விளக்கம்:** ஒருவரை ஒருவர் கொல்வதாகக் கூறிக் கொண்டு வீரர் தொந்த யுத்தம் செய்தலைக் கூறும் இது. காளையர் சிலர் பகை வீரரை வெட்டினார். ஒட்டினார் தாம் கூறிய சபதச் சொல்லி னின்று தவருதவர்களாய், தன்னை வெட்டினவருடைய உடலை இமைப் பொழுதில் ஓடிச்சென்று கட்டினவராய், அவரோடு தரை யில் வீழ்ந்தார்,—என்பது பொருள். ஒட்டுதல்—சபதம் செய்தல். மெய்யிற் படாமை—சபதச் சொல்லினின்று தவருமை. வெட்டின வரும், வெட்டப்பட்டவரும் ஒரு சேர விழுந்து பட்டனர், என்ப தாம். தட்டு—வெட்டுதல்.

வேறு

## எழுசீர் ஆசிரிய விருத்தம்

**35. கொங்கர் போசலர் போசர் சிங்களர் குருத ராரியர் துளுவரும்**
**கங்கர் சோனகர் யவனர் சீனர் கலிங்கர் தத்தர் தெலுங்கரும்**
**வங்கர் கோசலர் தமிழர் குண்டல ரொட்டர் மாளவர் மகதரும்**
**இங்கு மங்கு மணிந்து நின்றவ ரெதிர்மு னைத்தன ரிகலியே.**

[கொங்கர் போசலர் போசர் சிங்களர் குருதர் ஆரியர் துளுவரும், கங்கர் சோனகர் யவனர் சீனர் கலிங்கர் தத்தர் தெலுங்கரும், வங்கர் கோசலர் தமிழர் குண்டலர் ஒட்டர் மாளவர் மகதரும், இங்கும் அங்கும் அணிந்து நின்றவர் எதிர் முனைந்தனர் இகலியே.]

**விளக்கம் :-** பாண்டவர் பக்கத்திலும், துரியோதனனுதியர் பக்கத்திலும் அணிவகுந்து நின்றவராகிய கொங்கர்முதல் மகதர் ஈருகவும் வீரர்கள் வீராவேசத்தோடு எதிர்த்துப் போர் செய் தனர், என்பதாம்,

## வீடுமனேடு விசயன் பொருதல்

**36. விசையன் வெஞ்சிலை வீடு மற்கெதி ரமர்தொ டங்கலும்**
**வெருவவெண்,**
**திசையு மொன்ற வளைந்து கொண்டனவிருவர் தம்பொரு**
**சேனையும்,**
**மிசையெ ழுந்துக ளாலி )மைத்தனர் மேலை நாகரும்**
**வெங்கழுத்(து)**
**அசைய நின்றுசு மந்தி ளைத்தனர்கீழை நாகரு மடையவே.**

[விசயன் வெம்சிலை வீடுமற்கு எதிர் அமர் தொடங்கலும் வெருவ எண் திசையும் ஒன்ற வளைந்து கொண்டன, இருவர் தம் பொரு சேனையும்; மிசை எழும் துகளால் இமைத்தனர் மேலை நாகரும், வெம் கழுத்து அசைய நின்று சுமந்து இளைத்தனர் கீழை நாகரும் அடையவே.]

**விளக்கம்:-** விசயன் வீடுமனேடு போர் செய்யத் தொடங்கலும், இருதிறத்து சேனைகளும் எட்டுத் திசையும் அஞ்சும்படி ஒன்ருகச் சூழ்ந்து கொண்டன, என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். அப்பொழுது, மேலே எழுந்த புழுதியால் மேலைநாகரும் (தேவரும்) இமையாத கண்களை இமைத்தனர். கீழைநாகரும் (பாதலத்திலுள்ள சர்ப்பசாதியாரும் அந்த பாரத்தை சுமந்து வலிய கழுத்து நிலைதடுமாற வருந்தி இளைத்தனர், என்பது ஈற்றடிகளின் பொருள். அடைய, என்பதை மேலைநாகர், கீழை நாகர் என்பவற்ருேடு கூட்டுக; எல்லோரும்; என்பது பொருள். மேலை, கீழை, என்பவற்றிலுள்ள ஐ சாரியை.

**37. உகவை தன்னெடு வீடு மற்குறு முதவி யாகம கீபனும்**
**சகுனி சல்லிய னவரை யும்பல தம்பி மாரையு மேவினன்**
**மிகுகொ டுஞ்சின வீமன் விந்தர னபிம ஞதியர் விசயனுக்(கு)**
**இகனெ டும்படை யரச னேவலி னுதவி யாம்வகை யெய்தினர்.**

[உகவை தன்னெடும் விடுமற்கு உதவி ஆக மகீபனும் சகுனி சல்லியன் அவரையும், பல தம்பிமாரையும் ஏவினன்; மிகு கொடும் சினம் வீமன் விந்தரன் அபிமன் ஆதியர் விசயனுக்கு இகல் நெடும் படை அரசன் ஏவலின் உதவி ஆம் வகை எய்தினர்.]

**விளக்கம் :-** உகவை—உற்சாகம். மகீபன்—துரியோதனன். இகல் நெடும்படை அரசன்—வலிய பெரிய படையையுடைய தருமன். வீடுமனுக்கு உதவியாகத் துரியோதனன், சகுனி சல்லியன் ஆகியவர்களையும், தம்பியரில் சிலரையும் களம் செல்லும்

படி ஏவினன்; விசயனுக்கு உதவியாகத் தருமனது ஏவலின், வீமன், விந்தரன், அபிமன் முதலியவர் களம் அடைந்தனர்,— என்பதாம்.

**38. வன்ப ணைக்கொடி மீது பன்னிரு வாளி மெய்க்கவ சத்தின்மேல்**
**ஒன்ப திப்படி யேவி வீடுமன் மெய்ந்ந டுங்கவு டற்றினன்**
**மன்ப ரப்பொடு சகுனி சல்லியன் வந்த தம்பிய ரனைவரும்**
**பின்ப டப்பல கணைதொ டுத்தனன் வருச தாகதி பிள்ளையே.**

[வன்பணைக் கொடி மீது பன்னிரு வாளி, மெய் கவசத்தின் மேல் ஒன்பது இப்படி ஏவி, வீடுமன் மெய்நடுங்க உடற்றினன்; மன் பரப்பொடு சகுனி சல்லியன் வந்த தம்பியர் அனைவரும் பின்பட பல கணை தொடுத்தனன், வரு சதாகதி பிள்ளையே.]

**விளக்கம் :-** பனைமரத்தைக் கொடியிலே கொண்டவன் வீடுமன். சதாகதிபிள்ளை—வாயுவின் குமாரனான வீமன். வரு சதாகதிபிள்ளை—விசயனுக்குத் துணைவந்த வீமன். (அவன்) வீடுமனது கொடியின்மேல் பன்னிரண்டு அம்புகளையும், அவன் மார்பிலணிந்த கவசத்தின்மேல், அவன் உடல் நடுக்கமுறும்படி ஒன்பது அம்புகளையும், இவ்விதமாக ஏவிப் போர் செய்தான்; மன் பரப்பொடு (மிகுந்த பரபரப்பொடு) வீடுமனுக்குத் துணை வந்த சகுனி, சல்லியன், துரியோதனனது தம்பியர் அனைவரும் பின்னிடும்படி பல கணைகளைப் பிரயோகித்தான்,—என்பது பொருள்.

**39. ஏசி லாதுயர் தன்பி தாவினெ ழிற்பிதா்மக னேறுதேர்**
**வாசி நாலும் விழத்தொ டுத்தனன் வாளி யாலபி மன்னுவும்**
**மாசி லாவிற லுத்த ரன்றிறன் மத்தி ராதிப னுடனுடன்(று)**
**ஆசி லாவட லப்பு மாமழை சிந்தினன்முகி லஞ்சவே.**

[ஏசு இலாது உயிர் தன் பிதாவின் எழில் பிதா மகன் ஏறுதேர் வாசிநாலும் விழ தொடுத்தனன் வாளியால் அபிமன்னுவும்; மாசு இலா விறல் உத்தரன் திறல் மத்திர அதிபனுடன் உடன்று, ஆசு இலா அடல் அப்பு (அம்பு) மாமழை சிந்தினன் முகில் அஞ்சவே.]

**விளக்கம் :-** ஏசு, மாசு, ஆசு, என்பவை குற்றம், என்ற பொருளன. பிதாவின் எழில் பிதா—(அபிமன்யுவின்) பிதாவான விசயனின் அழகிய பெரிய பாட்டனான வீடுமன். வாசி—குதிரை. வீடுமன் ஏறியுள்ள தேரின் குதிரைகள் நாலும் விழும்படி அபிமன் அம்பு செலுத்தினன்,—என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். மத்திராதிபன்—சல்லியன். உடன்று—போர் செய்து. சல்லியனோடு விராடபுத்திரனான உத்திரன் போர் செய்து மேகம்

அஞ்சும்படி அம்புகளை வருஷித்தான், என்பது ஈற்றடிகளின் பொருள். அப்பு – அம்பு. அப்புமாமழை—அம்புகளாகிய மழை.

**40. வாவி மேல்வரு புரவி வீழவும் வலவன் வீழவு மற்று ளார்**
**ஆவி வீழவு மவனெ டுத்தவி லற்று வீழவு மமர் செய்தான்**
**பாவி யோடினி வில்லெடுப் பதுபாவ மென்றொரு பாரவேல்**
**ஏவி னானெதிர் சென்று சல்லிய னிவனும் வானக மேறினான்.**

[வாவி மேல் வரு புரவி வீழவும் வலவன் வீழவும் மற்று உளார் ஆவி வீழவும் அவன் எடுத்த வில் அற்று வீழவும் அமர் செய்தான்; பாவியோடு இனி வில் எடுப்பது பாவம் என்று, ஒரு பாரம் வேல் ஏவினான், எதிர் சென்று சல்லியன். இவனும் வானகம் ஏறினான்.]

**விளக்கம்:** உத்தரனைச் சல்லியன் கொன்றதைக் கூறும் இது. தாவிக்கொண்டு தன்மேல் வரும் சல்லியனது குதிரைகள் மடியவும், தேர்ப்பாகன் விழவும், துணையாக வந்த மற்ற வீரர்கள் இறந்து படவும் அவன் எடுத்த வில் அழியவும், (உத்தரன்) போர் செய்தான்; 'இப்பாவியோடு வில் எடுத்துப் போர் செய்தல் பாவம்', என்று எண்ணிச் சல்லியன் ஒரு பெரிய வேலை எடுத்துக் கொண்டு உத்திரன் எதிரே சென்று ஏவினான்; (அதன் பயனாய்) இவனும் (உத்தரனும்) தேவருலகை அடைந்தான், அதாவது இறந்தொழிந்தான்,—என்பது பொருள். பாவம், என்றது, இங்கே, 'தக்கது அன்று', என்ற பொருளது, மாண்டான், என்பதை 'வானகம் ஏறினான்', என்று கூறியது **பிறிதின் நவிற்சி அணி,** ஆகும்.

## வீமன் துரியோதனனோடு பொரால்

**41. இன்று பட்டனன் மச்சர் கோமக னென்றுதங்களி னேரலார்**
**ஒன்று பட்டுமி கைத்தெ ழுந்தன ரூழி வாயெழு முததிபோல்**
**அன்று பட்டக லக்க மப்படி யைவர் தம்படை யமரின்மேல்**
**வென்று பட்டம ணிந்த வாரண மென்ன வந்தனன் வீமனே.**

[இன்று பட்டனன் மச்சர் கோமகன் என்று தங்களின் நேரலார் ஒன்று பட்டு மிகைத்து எழுந்தனர் ஊழிவாய் உததி போல்; அன்று பட்ட கலக்கம் அப்படி ஐவர் தம் படை, அமரின் மேல் வென்று பட்டம் அணிந்த வாரணம் என்ன வந்தனன், வீமன், ஏ.]

**விளக்கம்:** நேரலார்—பகைவர், துரியோதனனைச் சார்ந்தவர். பாண்டவர்க்குத் துணையாகிய மச்சர் கோமகனான உத்தரன் இன்று அழிந்தான் என்று, பகைவர் ஒன்றுபட்டு, ஊழிக்காலத்தே பொங்கியெழும் சமுத்திரம் போல் களிப்பு மிகுந்தவராய் கிளர்ந்தெழுந்தனர்; பாண்டவர் படையினர் அப்பொழுது அடைந்த

மனக் கலக்கமும் அத்தன்மையதே! போர்வென்று பட்டம் அணிந்த யானைபோல் (கலக்கம் வெகுளியாக மாற) வீமன் போர் செய்வதற்குக் களம் வந்தான்,—என்பதாம். ''அன்றுபட்ட கலக்கம் அப்படி ஐவர் தம் படை,'' என்றது, உத்தரன் இறந்ததற்குத் துரியோதனனைச் சேர்ந்தார், எவ்வளவு மகிழ்ந்தார்களோ, அவ்வளவு பாண்டவரைச் சேர்ந்தார், வருந்தினர், என்ற பொருளது.

**42. தாமன் மேல்வர வரவு டைந்திடு தமமெ னும்படி தண்டுடன்**
**வீமன் மேல்வர வரவு டைந்தனர் மேவலார்கள் வலம்புரித்**
**தாமன் மேல்வர வரவு கண்டுத ரிக்கி லாதெதிர் சென்றனன்**
**காமன்மேலர னென்ன நெஞ்சுக னன்று கண்கள் சிவக்கவே.**

[தாமன் மேல் வரவர, உடைந்திடும் தமம் எனும்படி தண்டுடன் மேல் வர வர உடைந்தனர் மேவலார்கள்; வலம்புரி தாமன் மேல் வர, வர கண்டு தரிக்கிலாது எதிர் சென்றனன்காமன் மேல் அரன் என்ன நெஞ்சு கனன்று கண்கள் சிவக்கவே.]

**விளக்கம்:** தாமன்—சூரியன். தமம்—இருள். சூரியன் வானிடத்தே வர அழிந்தொழியும் இருளே போல், கதையுடன் வீமன் தம் மேல் பகைத்து வர மேவலார் (பகைவர்) அழிந்தொழிந்தனர். வலம்புரி தாமன்—நந்தியாவட்டைப் பூமாலை அணிந்த துரியோதனன். அத்துரியோதனனது வரவு கண்டு, பொறுக்காமல், உள்ளம் கொதித்துக் கண்கள் சிவக்க, மன்மதன் மேல் (சினந்து சென்ற) சிவபிரான் போல் (வீமன் துரியோதனன் மேல்) எதிர்த்துச் சென்றான்,—என்பதாம்.

தாமம், என்றது, ஒளி, மாலை என்ற பொருள்களது. முதலடியில் அது ஒளி வெள்ளத்தையுடைய சூரியனைக்குறித்தது. சூரியனுக்குத் தாமநிதி, என்ற ஒரு பேர் உளது.

**43. செண்டி னல்வசு கிரிதி ரித்திடு செழிய னென்னவெ டுத்தகைத்**
**தண்டி னலெதிர் சென்று தேரணி திரிய வன்பொடு சாடினன்**
**மண்டி னர்மணி முடியும் வேழமும் வாசி யும்பல துணிபடக்**
**கெண்டி னன்முனை நின்ற பன்னக கேது வோடமர் மோதினன்.**

[செண்டினல் வசுகிரி திரித்திடு செழியன் என்ன, எடுத்த கை தண்டினல் எதிர்சென்று தேர் அணி திரிய வன்பொடு சாடினன், மண்டினர் மணி முடியும் வேழமும் வாசியும் பல துணிபட, கெண்டினன், முனை நின்ற பன்னக கேதுவோடு அமர் மோதினன்].

**விளக்கம்:-** (சிவபெருமான் உதவியருளிய) மலர்ச் செண்டினல் வசுகிரியை (மகா மேரு பர்வத்தை) சுழலச் செய்த பாண்டியனைப் போல், (பகைவரின்) தேர்வரிசை நிலைகெடும்படி எதிர் சென்று

கையேந்திய கதையினுல் வீமன் தாக்கினுன்; அவன் மேல் மண்ட வந்தாரின் மணி முடியும் யானைகளும் குதிரைகளும் பலவாகத் துண்டு படும்படி பிளந்தான்; (அப்பொழுது) எதிர் நின்ற பன்னக கேதுவோடு (துரியோதனனேடு) போர் செய்தான்,—என்பது பொருள். வசுகிரி - பொன்மலை, மகாமேரு பர்வதம், (வசு - செல்வம், பொன்.) மண்டினுர் - நெருங்கி வந்தவர். கெண்டினுன் - பிளந்தான், துண்டாடினுன்.

மலையத்துவச பாண்டியன் மகளாகிய தடாதகைப் பிராட்டியை சிவபெருமான், சுந்தரபாண்டியன் என்ற வடிவங் கொண்டு மணந்து, அவளிடம் தமக்குப் பிறந்த உக்ர பாண்டியன் என்பானுக்கு, அப்பெருமான், பகை வெல்லக் கூடிய வேல், வாள், செண்டு ஆகியவற்றைக் கொடுத்துச் சென்ருன், - என்பது கதை. தன் நாட்டில் பஞ்சம் ஏற்பட்ட பொழுது, மேரு மலையை அச் செண்டினுல் அடக்கி வேண்டிய திரவியங்களைக் கொணர்ந்தான், என்பர்.

**44. மோதி யாயிர பேத மாகமு னைந்து தங்களி லிருவரும்**
**சாதி யாதன வில்லை மீளிம டங்கலேறென தன்மையார்**
**காதி யாடமர் புரியு மேதினி காவலன்குனி கார்முகம்**
**சேதி யாவொரு கைகொ டேறிய தேரெ டுத்தெதிர் சிந்தினுன்.**

[மோதி ஆயிரம் பேதம் ஆக முனைந்து தங்களில் இருவரும் சாதியாதன இல்லை மீளி மடங்கல் ஏறு என தன்மையார்; காதி ஆடு அமர் புரியும் மேதினி காவலன் குனி கார்முகம் சேதியா, ஒரு கை கொடு ஏறிய தேர் எடுத்து எதிர் சிந்தினுன்.]

மீளி மடங்கல் ஏறு என தன்மையார் இருவரும் தங்களில், மோதி ஆயிரம் பேதம் ஆக முனைந்து சாதியாதன இல்லை; காதி ஆடு அமர் செய்யும் மேதினி காவலன் குனி கார்முகம் சேதியா, (வீமன்) ஒரு கை கொடு, (துரியோதனன்) ஏறிய தேர் எடுத்து எதிர் சிந்தினுன்,—என்பது அன்வயம்.

**விளக்கம் :-** வலிய ஆண் சிங்கம் ஒத்த தன்மையராய (வீமனும் துரியோதனனும் ஆகிய) இருவரும் தங்களுக்குள் (ஒருவரோடொருவர்) மோதி வகையால் வேறு பட்ட (அதாவது மிகப் பலவிதமாக) போர் செய்து தோன்றக் காட்டாத போர் வகைகள் இல்லை, என்பது முதலிரண்டடிகளின் பொருள். காதி ஆடு அமர் - அழித்து வெல்வதற்குரிய போர். மேதினி காவலன் - துரியோதனன். வெற்றி நினைந்து போர்செய்யும் துரியோதனனது வளைத்த வில்லை (வீமன்) சேதித்து (ஒடித்து) ஒரு கையால் அவன்

ஏறியிருந்த தேரை எடுத்து அது சிதைந்து சிதறும்படி வீசி எறிந்தான், என்பது ஈற்றடிகளின் பொருள். மேதினி (மேதிநீ) பூமி.

**45. ஆர ழிந்தன வுருள ழிந்தன வச்ச ழிந்தன வச்சிரத்**
**தேர ழிந்துகொ டிஞ்சி யும்பல சின்ன மானது மன்னனும்**
**போர ழிந்தன னென்று சேனைபு றக்கி டாவரு பொழுதினில்**
**கூர ழிந்ததெ னக்கு றித்தினி நின்ற காவலர் கூடினர்.**

[ஆர் அழிந்தன, உருள் அழிந்தன, அச்சு அழிந்தன, வச்சிரம் தேர் அழிந்து கொடிஞ்சியும் பல சின்னம் ஆனது; மன்னனும் போர் அழிந்தனர், என்று சேனை புறக்கு இடாவரு பொழுதினில், கூர் அழிந்தது என குறித்து அணி நின்ற காவலர் கூடினர்.]

**விளக்கம்:-** ஆர் - சக்கரத்தினிடத்ததான கால், அல்லது இலை. உருள் - சக்கரம். அச்சு - சக்கரங்களை இணைக்கும் உறுப்பு. வச்சிரத்தேர் - உறுதியான தேர். கொடிஞ்சி - தாமரை மலர் வடிவமானதும், தேரின் முன்னிடத்தே வைக்கப்படுவதுமான ஓர் உறுப்பு. சின்னம் ஆனது - துண்டுபட்டது. புறக்கிடாவரு பொழுதினில் - புறங்காட்டிவரும் போது. கூர் அழிந்தது - திறமை அழிந்தது.

போரில் துரியோதனனது தேர்ப்படை அழிய, மன்னனு தோற்றான், என்று, சேனை புறங் கொடுத்தபோது, துணை நின்ற அரசர் ஒன்றுபட்டுக் கூடினர், என்பதாம். புறக்கு, என்பதில் கு சாரியை.

**46. பரித்த தேரொடு பரிதியைச் செறி பரிதி போயிரு பக்கமும்**
**தரித்த வேலினர் தாரை வாளினர் தாம வில்லின ராகவே**
**விரித்த வெண்குடை மன்னர் சூழ்தர வீம னிற்பதோர்மேன்மை கண்(டு)**
**எரித்த நெஞ்சொடு விரைவின் மைத்துன ரான கொற்றவ ரெய்தினர்.**

[பரித்த தேரொடு பரிதிய்ை செறி பரிதிபோல் இரு பக்கமும் தரித்த வேலினர், தாரை வாளினர், தாமம் வில்லினர் ஆகவே, விரித்த வெண் குடை மன்னர் சூழ்தர வீமன் நிற்பது ஓர் மேன்மை கண்டு, எரித்த நெஞ்சொடு விரைவின் மைத்துனர் ஆன கொற்றவர் எய்தினர்.

**விளக்கம்:-** பரித்த தேர் - (வீமனைத்) தாங்கிய தேர். பரிதியைச் செறி பரிதி, சூரியனைச் சுற்றியிருக்கும் வட்டவடிவமான பரிவேடம். தாரை - கூர்மை. தாமம் - ஒளி. வேலும் வாளும் வில்லும் தாங்கியவர்களாய் மன்னர்கள் சூரியனைச் சில

சமயம் சூழ்ந்திருக்கும் பரிவேடம் என்ற ஒளி மண்டலம் போல் இருபுறமும் சூழ்ந்து நிற்க, வீமன், தன்னைத் தாங்கிய தேரோடு நிற்கும் ஒரு மேன்மைத் தோற்றத்தைக் கண்டு, பொறுமையினால் வேகும் நெஞ்சொடு துரியோதனனது மைத்துனரான மன்னர் விரைவில் அவனை நெருங்கினர், - என்பது பொருள்.

**47. எய்து மைத்துன ரெய்து தெவ்வரொ டெண்ணில் போர்செய விண்ணிடைச்**
**செய்து பெற்றன தேரி னின்றுமிழிந்து ளானனி சீறினன்**
**மொய்தி றற்பவ மான னன்று முருக்கு முக்குவ டென்னவே**
**கைத வப்படை மன்னர் மாமுடி சிதைய வங்கொரு கதையினால்.**

[எய்து மைத்துனர் எய்து, தெவ்வரோடு எண் இல் போர் செய, விண் இடை செய்து பெற்று அன தேரினின்றும் இழிந்துளான் நனி சீறினன், மொய்திறல் பவமானன் அன்று முருக்கு முக்குவடு என்ன, கைதவம் படை மன்னர் மாமுடி சிதைய அங்கு ஒரு கதையினால்.]

**விளக்கம்:-** (மனக்கொதிப்போடு களம்) வந்த (துரியோ தனன்) மைத்துனர், பாணப் பிரயோகம் செய்து (வீமன் முதலிய) பகைவரோடு நினைத்துச் சொல்லமுடியாத பெரிய போரைச் செய்து நிற்க, விண்ணுலகில் செய்யப்பட்டுத்தான் பெற்றது போன்ற தேரினின்று இறங்கினவனாய், மிகுந்த வலிமையுடைய பவமானன் (வாயுதேவன்) முன்னொரு காலத்தில் ஒடித்துத் தள்ளிய மேருமலையின் மூன்று சிகரங்கள்போல, வஞ்சனையுடைய (துரியோதனனது) படையைச் சார்ந்த மன்னர்களின் பெரிய தலைகள் சிதையும்படி மிகுந்த சினத்தோடு கதையினால் தாக்கினான்,—என்பது பொருள்.

## சுவேதன் சல்லியனோடு பொரல்

**48. அம்ப ரத்தவர் கண்டு நின்றவ ரதிச யித்திட வானின்மேல்**
**இம்ப ரிப்படித் தெவ்வர் வெம்படை யிரிய வன்பொடு திரியவே**
**தம்பிபட்டன னென்று கொண்டெழு சாகரத்தெழு தழலெனத்**
**தும்பை யுற்றுமி லேச்சி யீசன ளித்த வில்லொடு தோன்றினான்.**

[அம்பரத்தவர் கண்டு நின்றவர் அதிசயித்திட வானின்மேல், இம்பர் இப்படி தெவ்வர் வெம்படை இரிய வன்பொடு திரியவே, தம்பி பட்டனன் என்று கொண்டு எழு சாகரத்து எழுதழல் என, தும்பை உற்று மிலேச்சி, ஈசன் அளித்த வில்லொடு தோன்றினான்.]

**விளக்கம் :-** வானின் மேல் (இருப்பவரான மேல் உலகத் தவர் (வீமனது) போர்த்திறமையைக் கண்டு அதிசயத்திடும்படி.

இம்பரில் (போர்க்களத்தில்) கொடிய பகைப் படை போருடைந்து ஓடும்படி இவ்வாறு (அவன்) வலிமையோடு (கதைகொண்டு தாக்கித்) திரியலும், தம்பியான உத்தரன் பட்டான் என்று அறிந்து, பொங்கும் கடலினிடத்தினின்று எழும் வடவா முகாக்கினிபோல், தும்பை மாலையை மனம் பொருந்த அணிந்து, சிவபிரான் கொடுத்த வில்லோடு (சுவேதன்) களம் தோன்றினுன்,—என்பது பொருள். என்று கொண்டு—என்று அறிந்து. போர் செய்வோர் அணியும் மாலை தும்பை மாலை.

**49. சங்கி னங்கண்மு ழங்க வும்பணை முரசி னங்கட ழங்கவும்**
**துங்க வெங்களி றிவுளி தேரொடு தானை மன்னவர் சூழவும்**
**எங்கு நின்றன னெங்கு நின்றனன் மத்தி ரத்தர சென்றுபோய்**
**அங்கு நின்றம கீபர் வென்னிடவவனை முந்துற வணுகினுன்.**

[சங்கு இனங்கள் முழங்கவும் பணை முரசு இனங்கள் தழங்கவும், துங்கம் வெம்களிறு இவுளி தேரொடு தானை மன்னவர் சூழவும், 'எங்கு நின்றனன்? எங்கு நின்றனன் மத்திரத்து அரசு?' என்று போய், அங்கு நின்ற மகீபர் வென் (வெந்) இட அவனை முந்துற அணுகினுன்.]

**விளக்கம்**:- பணை முரசு - பெரிய முரசம். துங்கம் வெம்களிறு- சிறந்த கொடிய யானைகள். இவுளி - குதிரை. தானை - . காலாட் படை. மத்திரத்து அரசு - சல்லியன். வென் இட - புறங் கொடுக்க, சங்கங்கள் ஒலிக்கவும், முரசம் முழங்கவும், சதுரங்க சேனைகளை உடைய அரசர்கள் தன்னைச் சூழ்ந்து வரவும், 'சல்லியன் எங்கே இருக்கின்றுன்?' என்று சொல்லித் தேடிச் சென்று, அங்கே இடைநின்ற பகை அரசர் பின்னிடும்படி. போர் செய்து, (சுவேதன்) அவனை முற்பட நெருங்கினுன், என்பதாம். எங்கு நின்றனன், என்ற அடுக்கு, விரைவும் சினமும் பற்றியது.

வேறு

கலி விருத்தம்

**50. சல்லியனெ னப்பெயர்த ரித்துவரு கோமுன்**
**வல்லியமெ னத்தகுசி வேதனமர் வல்லான்**
**பல்லியமு ழக்கியதெ னப்பலவும் வீரம்**
**சொல்லியொரு வர்க்கொருவர் தொடுசிலை குனித்தார்.**

[சல்லியன் என பெயர் தரித்து வருகோ முன் வல்லியம் எனதகு சிவேதன் அமர் வல்லான், பல் இயம் முழக்கியது என பலவும் வீரம் சொல்லி ஒருவர்க்கு ஒருவர் தொடு சிலை குனித்தார்.]

**விளக்கம்:-** வல்லியம் - புலி, பல் இயம் - பலவகை வாத்தியங்கள் முழங்கியது என - முழங்கினாற்போல் (உரத்தகுரலில்) தொடு சிலை குனித்தார் - அம்புகள் தொடுத்தற்குரிய வில்லை வளைத்துப்போர் செய்தார்கள். போர் வல்லானான, புலி என்று சொல்லத்தக்க சிவேதன், உரத்தகுரலில் வீரவசனங்கள் பலவும் சொல்லி, (அதன்பின்) ஒருவரோடுஒருவர் வில் போர் செய்தனர், என்பதாம்.

**51. ஒருவருமி வர்க்குநிக ரில்லையென வுற்றே**
**இருவருமலைத்திட்வி ராசகுல ராசன்**
**பருவரல்கொண் மத்திரப திக்குதவி யாதென்(று)**
**அருவரையொ டொத்தபு யரறுவரை விடுத்தான்.**

[ஒருவரும் இவர்க்கு நிகர் இல்லை என உற்றே இருவரும் மலைந்திட இராச குலராசன், பருவரல் கொள் மத்திரபதிக்கு உதவி ஆகென்று, (ஆக-என்று) அரு வரையொடு ஒத்த புயர் அறுவரை விடுத்தான்.]

**விளக்கம்:-** உற்றே மலைத்திட - ஆவேசத்தோடு போர் செய்ய. இராசகுலராசன்-அரசர்களின் தலைவனான துரியோதனன். பருவரல் - வருத்தம், துன்பம், தளர்ச்சி. அருவரை - அரிய வலிமை உடைய மலை, வலிமை, உறுதிகளில் சிறந்த மலை. புயர் - (அந்த அரிய வரையை ஒத்த) தோள்களை உடையவர். சல்லியன் தளர்வது கண்ட துரியோதனன் வலியதோள்களை உடைய ஆறு வீரர்களை அவனுக்கு உதவியாக அனுப்பினான், என்பதாம்.

**52. தரணிபதி தம்பியர் கடானைகொடு வந்தே**
**இரணமுக மொன்றுமயி லோனெனவெ திர்த்தார்**
**திரணறைகொ டார்புனைசி வேதனவ ரந்தக்**
**கரணம்வ றிதாகும்வ கை கணைபலதெ டுத்தான்.**

[தரணிபதி தம்பியர்கள் தானைகொடு வந்தே இரணம்முகம் ஒன்றும் மயிலோன் என எதிர்த்தார்; (அப்பொழுது) திரள் நறை கொள் தார் புனை சிவேதன், அவர் அந்தக்கரணம் வறிது ஆகும் வகை கணைபல தொடுத்தான்.]

**விளக்கம்:** தரணிபதி—துரியோதனன். (அவன்) தம்பியர் சேனையோடு வந்து, போர்க்களம் அடைந்து (சூரபத்மாதிகளை வென்ற) மயில் வாகனனான முருகக் கடவுளைப் போல் எதிர்த்துப் போர் செய்தனர், என்பது முதலிரண்டடிகளின் பொருள். திரள் நறை - திரண்ட அல்லது மிகுதியான தேன். அவர் அந்தக் கரணம்—அவரது மனம். வறிது ஆகும் வகை—தளரும்படி,

வந்து எதிர்த்த துரியோதனனது தம்பிமார் கலங்கித் தளரும்படி சிவேதன் கணைகளைத் தூவினான், என்பதாம்.

**53. முரண்டெதிரு மன்னவர்மு ரண்கொள்சிலையோரொன்(று)**
**இரண்டுசிலை யாகவொரு வீரனிவை யெய்தான்**
**திரண்டுவரு மன்னர்முடி சிந்தியுடன் மண்மேல்**
**புரண்டுவிழ வாளி மழை தூவுபுயல் போல்வான்.**

[முரண்டு எதிரும் மன்னவர் முரண் கொள் சிலை ஓர் ஒன்று இரண்டு சிலை ஆக ஒரு வீரன் இவை எய்தான்; திரண்டு வரு மன்னர்முடி சிந்தி உடல் மண்மேல் புரண்டுவிழ வாளி மழை தூவு புயல்போல்வான்.]

**விளக்கம்:** திரண்டு வரு மன்னர்....புயல் போல்வான் (ஆன) ஒரு வீரன், முரண்டு எதிரும் மன்னவர் முரண்கொள் சிலை ஓர் ஒன்று இரண்டு சிலை ஆக, இவை எய்தான், என்று அன்வயிக்க முரண் கொள்சிலை—வலிமை கொண்ட வில், ஒரொன்று இரண்டு சிலை ஆக—ஒவ்வொரு வில்லும் இரண்டாக, அதாவது ஒடிய. புயல்—மேகம்.

சிவேதன் ஒருவனாய் நின்று, திரண்டு வந்த பகைமன்னர் தலை அறுபட்டு மண்ணில் விழ மேகம்போல் கணைகளைப் பொழிந்து பகைத்து எதிர்வந்த துரியோதனன் தம்பியரின் வில் கள் துண்டாகும்படியும் இவை (பல கணைகளை) எய்தான், என்பதாம். முன் செய்யுளில் கூறிய 'பலகணைகள்' என்பதை **இவை** என்பது அண்மைச் சுட்டாய்க் குறிக்கும்.

**54. தேரும்விசை கூறிவுளி யுஞ்செறி பணைக்கைக்**
**காருமயில் வாள்சிலை தரித்துவரு காலாள்**
**யாரும்வெ டிபூளைவன மென்னவொரு தானே**
**ஊருமொரு தேரனில மொக்குமென நின்றான்.**

[தேரும், விசைகூர் இவுளியும், செறிபணை கை காரும், அயில் வாள் சிலை தரித்து வருகாலாள் யாரும் வெடி பூளை வனம் என்ன ஒரு தானே ஊரும் ஒரு தேர் அனிலம் ஒக்கும் என நின்றான்.]

**விளக்கம்:** விசை கூர் இவுளி—நடை வேகம் மிக்க குதிரை. பணைகை கார்—பணை மரம் போன்ற துதிக்கையை உடைய கரு மேகம் போன்ற யானை. அயில்—வேல். ஒரு தானே—துணை ஒன்றும் இன்றி. பூளை—பஞ்சு. அனிலம்—(அநிலம்) காற்று. தேர், குதிரை யானை, ஆயுதங்களைத் தாங்கி வரும் காலாள் படைகளும், அப்படைகளை நடத்தி வரும் வீரர் யாவரும், வெடித்த இலவம் பஞ்சை ஒத்திருக்க, சிவேதன் துணையில் லாமல் ஒரு தேரிலே காற்று என்னும்படி (வெற்றிப் பெருமிதத்

தோடு களத்தில்) நின்றான், என்பதாம். காற்று இலவம் பஞ்சைச் சிதறச் செய்தல் போல், சிவேதன் திரண்டு வந்த பகைப் படையைச் சிதறச் செய்தான், என்பது கருத்து. சிவேதன், காற்று; பகைப்படை, இலவம் பஞ்சு.

### வீடுமன் எதிர்த்தல்

**55.** **பட்டனவொ ழிந்துபல படையுமிவ னம்பில்**
**கெட்டநிலை கண்டுரக கேதனனு ரைப்பத்**
**தொட்டவரி வில்லினொடு சூறையனி லம்போல்**
**விட்டபரி மாவிரத வீடுமனெ திர்ந்தான்.**

[பட்டன ஒழிந்து பல படையும் இவன் அம்பில் கெட்ட நிலை கண்டு, உரககேதனன் உரைப்ப, தொட்ட வரி வில்லினொடு சூறை அனிலம் போல், விட்ட பரிமா இரதம் வீடுமன் எதிர்ந்தான்.]

**விளக்கம்:** இவன் (சிவேதன்) அம்பினால் அழிந்தன போக எஞ்சிய பல படைகளும் நிலை கெட்டு ஓடிய நிலை கண்டு உரக கேதனன் (துரியோதனன்) கூற, சூறாவளிக் காற்றைப் போல், செலுத்தப்படும் குதிரைகள் பூட்டப் பெற்ற தேரை உடைய வீடுமன் பற்றிய வில்லுடனே (அவன்) எதிரில் வந்தான், என்பதாம்.

**56.** **மத்திரனை விட்டுமிசை வந்தமகி பதிமேல்**
**அத்திரமும் விட்டவன டற்சிலையி றுத்தான்**
**சித்திரமெ னும்படிதி கைத்தனன் விராடன்**
**புத்திரன்வி டுங்கணைபொ ருதுபுலி போல்வா.**

[மத்திரனை விட்டு மிசை வந்த மகிபதி மேல் அத்திரம் விட்டு அவன் அடல் சிலை அறுத்தான், சித்திரம் எனும்படி திகைத்தான் விராடன் புத்திரன் விடும் கணைபொருது புலிபோல்வான்.]

**விளக்கம்:** மத்திரன்—சல்லியன். மிசை வந்த மகிபதி—தன்மேல் எதிர்த்து வந்த வீடுமன். தன்மேல் பாணங்களைப் பிரயோகம் செய்து கொண்டு வந்த வீடுமனது வலிய வில்லை (சிவேதன்) அறுத்தான், என்பது இரண்டாவது அடியின் பொருள். விராடன் மகனை சிவேதன் விட்ட அம்புகளைப் பொறுக்கமாட்டாமல், புலி போன்றவனை வீடுமன் எழுதப் பெற்ற சித்திரம் என்று சொல்லும்படி திகைத்து நின்றான், என்பது ஈற்றடிகளின் பொருள். அதாவது, செயலற்றவனாய்க் களத்தில் நின்றான், என்பதாம்.

**57.** **வீடுமனு மீளவொரு விற்கொடுசி வேதன்**
**சூடுமுடி வீழவொரு சுடுகணைதொ டுத்தான்**

**கோடுசிலை வாளிபல கொண்டிவன வன்றேர்**
**நீடுகொடி யாடையை நிலத்துறவி ழுத்தான்.**

[வீடுமனும் மீள ஒரு வில் கொடு சிவேதன் சூடுமுடி வீழ ஒரு சுடு கணை தொடுத்தான், கோடு சிலை வாளி பல கொண்டு இவன் அவன் தேர் நீடு கொடி ஆடையை நிலத்து உற விழுத்தான்.]

**விளக்கம்:** அப்பொழுது வீடுமன் மீண்டும் ஒரு வில்லை எடுத்து சிவேதனின் கிரீடம் தரை விழும்படி ஒரு கணை தொடுத்தான்; இவனும், அவனது தேரின் கொடியைப் பல கணைகளால் அறுத்துத் தள்ளினன்,—என்பதாம்.

**58. பின்னையும வன்தனிபி டித்துவரு சாபம்**
**தன்னையுமி வன்பலச ரங்கொடுது ணித்தான்**
**மின்னையுந கும்பகழி வீடுமன்வெ குண்டாங்கு**
**என்னவமர் செய்வதினி யென்றுதளர் வுற்ருன்.**

[பின்னையும் அவன் தனி பிடித்து வரு சாபம் தன்னையும் இவன் பல சரம் கொடு துணித்தான்; மின்னவும் தகும் பகழி வீடுமன் வெகுண்டு ஆங்கு என்ன அமர் செய்வது இனி என்று தளர்வு உற்ருன்.]

**விளக்கம்:-** அவன் - வீடுமன். இவன் - சிவேதன். மின்னை நகு பகழி வீடுமன் - மின்னலைப் போன்ற பிரகாசமுடைய கணைகளை உடைய வீடுமன். ஆங்கு வெகுண்டு இனி என்ன அமர் செய்வது . அப்பொழுது வெகுண்டு இனிமேல் (இவனேடு) என்ன போரைச் செய்வது, (என்று தளர்வுற்ருன்.)

வீடுமன் கையேற்ற ஒப்பற்ற வில்லை மறுபடியும் சிவேதன் அறுக்கவே, அவன் இவனேடு இனி என்ன போரைச் செய்வது, என்று தளர்ந்தான், என்பதாம்.

**59. தளர்ந்தநிலை கண்டுதுரி யோதனன ரும்போர்**
**விளைந்ததுசி வேதனுடன் வீடுமனி ளைத்தான்**
**இளந்தலையு ருதபடி யேகுமினெ னப்போய்க்**
**கிளர்ந்தமுடி மன்னர்பலர் கிட்டினர் விரைந்தே.**

[தளர்ந்த நிலை கண்டு துரியோதனன், அரும் போர் விளைந்தது சிவேதனுடன், வீடுமன் இளைத்தான்; இளந்தலை உருதபடி ஏகுமின் என, போய் கிளர்ந்த முடி மன்னர் பலர் கிட்டினர் விரைந்தே.]

**விளக்கம்:-** இளந்தலை உருதபடி - தாழ்ச்சி அல்லது இளக்காரம் ஏற்படாதபடி. வீடுமனது தளர்ச்சியைக் கண்ட துரியோதனன், "சிவேதனுடன் கடும்போர் விளைந்தது; வீடுமன் இளைத்தான், நமக்கு இகழ்ச்சி உண்டாகாதபடி செல்லுங்கள்",

என்று சொல்ல, கிளர்ந்த முடிமன்னர் பலர் (வீடுமனுக்கு உதவியாய்) விரைந்து சென்று நெருங்கினர், என்பது பொருள்.
கிளர்ந்த முடி மன்னர் - விளங்குகின்ற கிரீடத்தையுடைய மன்னர்.

**60. அந்தமுடி மன்னவர நேகரையு முன்னம்**
**வந்தவழி மீளவும் வரும்படி துரந்தான்**
**தந்தம்வரி வில்லுமணி தாரும்விடு தேரும்**
**சிந்தவெரி கால்வனசி லீமுகம் விடுத்தே.**

[அந்த முடி மன்னர் அநேகரையும் முன்னம் வந்த வழி மீளவும் வரும்படி துரந்தான், தம் தம் வரி வில்லும் அணிதாரும் விடுதேரும் சிந்த எரிகால்வன சிலீமுகம் விடுத்தே.

**விளக்கம்:-** வீடுமனுக்குத் துணையாக வந்த மன்னர் பலரையும், அவரவர் வரிவில்லும், அணிந்த மாலையும், செலுத்திய தேரும் சிதறும்படி, நெருப்பைக் கக்குவனவான அம்புகளை விடுத்து, வந்த வழியே மீண்டு செல்லும்படி துரத்தினன். என்பது பொருள். மீளவும் வரும்படி - மீண்டு செல்லும்படி, சிலீமுகம் - அம்பு. துரந்தான் - ஓடச் செய்தான்.

**61. வெவ்வனல நேர்குகுர ராசனையும் வேறோர்**
**ஐவரையு மேவினன் முனைந்தனர்க ளவரும்**
**செவ்வரைகள் போல்பவர் சிரங்களும் வளைக்கும்**
**கைவரிவி லுந்துணிப டக்கணைதொ டுத்தான்.**

]வெவ் அனலம் நேர் குகுரராசனையும் வேறு ஓர் ஐவரையும் ஏவினன், முனைந்தனர்கள் அவரும், செவ்வரைகள் போல்பவர் சிரங்களும், வளைக்கும் கைவரிவிலும் துணிபட கணை தொடுத்தான்.]

**விளக்கம்:-** (துணை சென்ற மன்னர் தோல்வியுற்றதைக் கண்ட துரியோதனன்) வெவ்விய நெருப்பை ஒத்த ஆற்றலையுடைய குகுரதேசத்து அரசனையும், வீரர்களான வேறு ஓர் ஐந்து அரசர்களையும் (துணைசெல்லுமாறு) ஏவினன், அவர்களும் சிவேதனோடு முனைந்து போர் செய்தார்கள்; செவ்விய மலைகளை ஒத்தாரான அவர்களது தலைகளும், அவர்கள் வளைத்த விற்களும் அற்று விழும்படி (சிவேதன்) போர் செய்தான், - என்பது பொருள்.

**62. கங்கைமகன் சற்றுமொரு கார்முகம்வ ளைத்துச்**
**சிங்கமென வப்பொழுது றுக்கியெதிர் சென்றான்**
**அங்கவன கைத்தொருத னம்புகொடு மீளப்**
**பங்கமுற விற்றுணிப டுத்திபெதிர் நின்றான்.**

[கங்கை மகன் மற்றும் ஒரு கார்முகம் வளைத்து சிங்கம் என அப்பொழுது உறுக்கி எதிர் சென்ருன், அங்கு அவன் நகைத்து ஒரு தன் அம்பு கொடு மீள பங்கம் உற வில் துணி படுத்தி எதிர் நின்ருன்.

**விளக்கம்:-** உறுக்கி - சினந்து. பங்கம் உற - அவமானம் அடைய. வீடுமன் வேருெர் வில்லைக் கொண்டு சினந்து எதிர்க்க, அப்பொழுது சிவேதன் தனது ஒரு கணையால், வீடுமன் மீண்டும் அவமானம் அடையும்படி, வில்லை அறுத்து நகைத்தவனுய் நின்ருன், - என்பதாம். நகை, வீடுமனைப் பரிகசிக்குங் கருத்தது.

**63. ஆனபொழு தந்தரநெ ருங்கியமர் காணும்**
**வானவர்வி ராடபதி மைந்தனைம தித்தார்**
**வேனிலவன் மேனுதல்வி ழித்தவன ளிக்கும்**
**கூனல்வரி சாபமிது கொண்டனன்வ ரத்தால்.**

[ஆனபொழுது அந்தரம் நெருங்கி அமர் காணும் வானவர் விராடபதி மைந்தனை மதித்தார்; வேனிலவன்மேல் நுதல் விழித்த வானவன் அளிக்கும் கூன்நல்வரி சாபம் இது கொண்டனன், வரத்தால்.]

**விளக்கம்:-** ஆனபொழுது - முன்னே கூறியபடி நிகழ்ந்த பொழுது, அதாவது வீடுமனது வில் துணிக்கப்பட்ட பொழுது. அந்தரம் - ஆகாசம். வேனிலவன் - மன்மதன். நுதல் விழித்த வானவன் - (மன்மதன்மேல்) நெற்றிக் கண்ணை விழித்து அவனைச் சாம்பலாக்கிய சிவபெருமான். போரை ஆகாசத்திலிருந்து கண்ட தேவர், சிவேதனது போர்த் திறனைப் பாராட்டினர். அவன் கொண்டிருந்த வில் சிவபெருமானுல் அளிக்கப் பெற்ற சிறந்த வில். கூன் நல்வரி சாபம் - வளைந்த உறுதியுடைய நல்ல கட்டமைந்த வில்.

தேவர் கூற்று

**64. ஏறனைய வீடுமனி னைத்தபடி கண்டால்**
**வேறவனை வில்லமரில் வெல்லவுரி யார்யார்**
**மாறுபடு வெஞ்சமரில் வஞ்சனையி லன்றிக்**
**கோறலரி தென்றனர் குலப்பகை முடிப்பார்.**

[ஏறு அனைய வீடுமன் இனைத்தபடி கண்டு (ஆல்) வேறு அவனை வில் அமரில் வெல்ல உரியார் யார்? மாறுபடு வெம்சமரில் வஞ்சனையில் அன்றி கோறல் அரிது என்றனர், குலம் பகை முடிப்பார்.

**விளக்கம் :-** குலப்பகை முடிக்க நினைப்பாராகிய தேவர்கள், (தங்கள் வகுப்பினனாகிய) வீடுமன் இளைப்பதைக் கண்டு, வில் அமரில்சிவேதனை வெல்லத் தக்கவர், வேறு எவர் இருக்கின்றார்? மாறுபட்டுச் செய்யும் போரில், வஞ்சனையால் அன்றி அவனைக் கொல்லல் அரிது, என்று கூறினர்,—என்பது பொருள். ஏறு அனையான் - ஆண் சிங்கம் போன்ற வீடுமன். தேவர் வகுப்பைச் சேர்ந்த வசுக்களின் பகைவனாய், அவர்களது சாபத்தால் பூலோகத்தில் விராட புத்திரனாய்த் தோன்றினவன். வசுக்களில் ஒருவனான வீடுமனைக் கொண்டு அவனை அழிக்க எண்ணிய தேவர்கள், ''சிவபெருமான் அளித்த வில்லையுடைய அவனை வில் போரில் வெல்ல முடியாது. அவனை அழித்தற்கு வஞ்சனையே வழி,'' என்று கூறினார், என்பதாம்.

## சிவேதனது வாட் போரும் முடிவும்

**65. ஓகைநிக ழெண்வகை வசுக்களி லொருத்தன்**
**ஆகியந ராதிபதி யம்முறைய றிந்தான்**
**வாகைவரி வில்லொழிய வாளயில்க ளென்னும்**
**வேகமுறு வெம்படைகள் கற்றிலைகொல் வெய்யோய்.**

[ஓகை நிகழ் எண்வகை வசுக்களில் ஒருத்தன் ஆகிய நராதிபதி முறை அறிந்தான்; வாகை வரி வில் ஒழிய வாள் அயில்கள் என்னும் வேகம் உறு வெம் படைகள் கற்றிலை கொல், வெய்யோய்.]

**விளக்கம் :-** ஓகை நிகழ் - களிப்புடைய. எண்வகை வசுக்கள் - அஷ்டவசுக்கள். (அவர்களில் ஒருவனாகிய) நராதிபதி - வீடுமன். அ முறை அறிந்தான் - (விரகினாலன்றி வில்லால் கொல்ல முடியாது என்று தேவர்கள் கூறிய) போர் முறையை மனத்திற் கொண்டவனாய். (வீடுமன், சிவேதனை) வெய்யோய் (பராக்கிரம முடையவனே), என்று அழைத்து,— ''வெற்றி மாலை சூடிய வில் தொழிலன்றி, வாள் வேல் என்னும் உக்கிரம் உடைய கொடிய ஆயுதங்களை அறிந்திலையோ நீ,'' (என்று கூறினான்), என்பது ஈற்றடிகளின் பொருள்.

தேவர் கூற்றின்படி இவனை வஞ்சனையால் வெல்லலாம், என்ற எண்ணத்தின் பயனாய், வீடுமன் களிப்புடையவனானான், என்பது பற்றி, 'ஓகை நிகழ் நராதிபதி என்றார். சிவபெருமானால் அளிக்கப் பெற்றது பற்றியும், அவனது வெற்றிக்குக் காரணமாயிருப்பது பற்றியும் அவனது வில், **வாகை வில்**, எனப்பட்டது.

**66. என்றெதிர் சிவேதனொ டியம்புதலும் வெள்கிக்**
**குன்றுசிலை கொண்டவ னளித்தசிலை கொள்ளான்**

**வென்றிவடி வாளுருவி மேலுற நடந்தான்**
**நின்றவனும் வேறொரு நெடுஞ்சிலை குனித்தான்.**

[என்று எதிர் சிவேதனொடு இயம்புதலும், குன்று சிலை கொண்டவன் அளித்த சிலை கொள்ளான், வென்றி வாள் உருவி மேல் உற நடந்தான்; நின்றவனும் வேறு ஒரு நெடுஞ் சிலை குனித்தான்.]

**விளக்கம் :-** வெள்கி - நாணி. குன்று சிலை கொண்டவன் - மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான். நின்றவன் - வீடுமன். எதிர் சிவேதன் - எதிர்த்து நின்ற சிவேதன், (வினைத் தொகை). "வில்லன்றி வேறு படைகளைக் கற்றதில்லை போலும் நீ!" என்ற வீடுமன், கூற, நாணங் கொண்ட வீரன், வில்லை ஒழித்து வாளைக் கைக் கொண்டு எதிர்க்கவும், வீடுமன் மற்றோர் வில்லை வளைத்தான்,—என்பதாம்."

**67. வாளினெதிர் வெஞ்சிலை வளைத்து வயவீரன்**
**தோளிணையி லொன்றுதுணி யக்கணை தொடுத்தான்**
**காளையொரு கைவிழவு மற்றையொரு கையால்**
**மீளவும்வெ குண்டுசுடர் வாளினை யெடுத்தான்.**

[வாளின் எதிர் வெம்சிலை வளைத்து வயவீரன் தோள் இணையில் ஒன்று துணிய கணை தொடுத்தான், காளை ஒரு கை விழவும் மற்றை ஒரு கையால் மீளவும் வெகுண்டு சுடர் வாளினை எடுத்தான்.]

**விளக்கம் :-** வாளேந்தி எதிர்த்த சிவேதனது தோள்களில் ஒன்று அறுபடும்படி வீடுமன் ஒரு கணை செலுத்தினான்; தோள் இழந்த வீரன், மற்றொரு கையால் வாளை ஏற்றுப் பொருதான், என்பதாம்.

**68. எடுத்தவடி வாளினொடு மெண்ணில்பல பாணம்**
**தொடுத்துவரு வீடுமனை மாமுடி துணிப்பான்**
**அடுத்துவரு போதவ னழன்றொரு சரத்தால்**
**நடுத்தகை யுருமலவ னல்லுயிர் கவர்ந்தான்.**

[எடுத்த வடி வாளினொடு எண் இல் பல பாணம் தொடுத்து வரு வீடுமனை மாமுடி துணிப்பான் அடுத்து வருபோது, அவன் அழன்று ஒரு சரத்தால் நடு தகை உருமல் அவன் நல் உயிர் கவர்ந்தான்.]

**விளக்கம் :-** ஒரு கை இழந்த வீரன், மறு கையில் வாள் ஏந்தி பாணங்களை வருஷிக்கும் வீடுமன்மேல் முடுக, வீடுமன் ஒரு சரத்தால், அவன் உயிர் கவர்ந்தான்.—என்பதாம். அடுத்து வருபோது- நெருங்கிய பொழுது. நடுதகை உருமல் - இடையிலே தடைப்

படாமல், (ஒரு கணையால் கொன்ருன்). வஞ்சனை இன்றி வாட் போர் செய்கையில் பட்டமை பற்றி, நல்லுயிர் எனப்பட்டது.

வேறு

அறுசீர் ஆசிரியவிருத்தம்

**69.** **பூழிபட நிலமிசையப் பொற்சுண்ணங்**
**கமழ்மேனி புதல்வன் வீழ**
**வாழிமொழிந் துளமகிழ்ந்தா ரந்தரத்துந்**
**துபிமுழங்க வானோ ருள்ளார்**
**ஊழிபெயர்ந் துலகேழு முள்ளடக்கித்**
**திசைநான்கு முகளித் தேறி**
**ஆழிபரந் தார்ப்பதென வார்த்தனரப்**
**பெருஞ்சேனை யரச ரெல்லாம்.**

[பூழி பட நிலம் மிசை பொன் சுண்ணம் கமழ் மேனி புதல்வன் வீழ, வாழி மொழிந்து உளம் மகிழ்ந்தார் அந்தரம் துந்துபி முழங்க வானோர் உள்ளார்; ஊழி பெயர்ந்து உலகு ஏழும் உள் அடக்கி, திசை நான்கும் உகளித்து ஏறி ஆழி பரந்து ஆர்ப்பது என, ஆர்த்தனர், அ பெருஞ்சேனை அரசர் எல்லாம்.]

**விளக்கம்:** சுண்ணம் - வாசனைப்பொடி. வாழி மொழிந்து - வாழி என வாழ்த்தி. அந்தர துந்துபி முழங்க - வானில் தேவ துந்துபி முழங்க. வானோர் உள்ளார் - போர்காண வானிடத்தே வந்துள்ள தேவர். உகளித்து - ஆக்ரமித்து, கடந்து. ஏறி - பொங்கி, மேலெழுந்து.

பொன் போன்ற சுண்ணம் மணக்கும் திருமேனியில் புழுதி படியும்படி மண்வீழ்ந்து சிவேதன் மடியவும், தம் வகுப்புப் பகைவனை வீரன் இறந்தான் என்று போர் காண வந்து வானில் கூடிய தேவர்கள், தேவதுந்துபி முழங்க, அவனைக் கொன்ற வீடுமனை வாழ்த்தி மகிழ்ந்தார்கள், என்பது முதலிரண்டடிகளின் பொருள். ஊழிக் காலத்தில் சமுத்திரம் நிலை கெடப் பொங்கி ஏழு உலகத்தையும் தன்னுள் அடங்கச் செய்து திசை நான்கையும் ஆக்ரமித்து மேலெழுந்து பரவி ஆரவாரம் செய்வது போல் கௌரவ சேனையில் உள்ள வீரர் எல்லோரும் ஆரவாரம் செய்து மகிழ்ந்தனர், என்பது ஈற்றடிகளின் பொருள்.

பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், சனலோகம், தபோலோகம், சத்யலோகம், என மேலுலகம் ஏழு. அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதலம், என கீழுலகம் ஏழு.

## படுகளச் சிறப்பு

**70. உடைந்ததடந் தேருருள்க ளுகுகுருதிப் புனருேறு மும்பர் வானில்**

**அடைந்தவய வருக்குவழி யாயசுடர் மண்டலத்தின் சாயை போலும்**

**மிடைந்தகுடை காம்பற்று மிதப்பனவுங் கரியபுகர் வேற்கண் மாதர்**

**குடைந்தநறும் பரிமளச்செங் குங்குமநீ ரிடையெழுந்த குமுழி போலும்.**

[உடைந்த தடந்தேர் உருள்கள் உகுகுருதி புனல்தோறும் உம்பர் வானில் அடைந்த வயவருக்கு வழியாய சுடர் மண்டலத் தின் சாயை போலும்; மிடைந்த குடை காம்பு அற்று மிதப்பன வும், கரியபுகர் வேல் கண்மாதர் குடைந்த நறும் பரிமளம் செம் குங்குமம் நீர் இடை எழுந்த குமுழி போலும்.]

**விளக்கம்:** போர்க் களத்தில் பெருகுகின்ற இரத்த வெள்ளத் தில் உடைந்து கிடந்த தேர்களின் சக்கரங்கள், மேலுலகத்தி லுள்ள வீர சுவர்க்கத்தை அடைந்த வலிய வீரர்கள் புகும் வழி யாகிய சூர்ய மண்டலத்தின் பிரதி பிம்பங்களை ஒத்தன,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். உம்பர்வான்—வீர சுவர்க்கம். அந்தக் குருதி வெள்ளத்தில் காம்பு அற்று விழுந்து மிதப்பன வாகிய நெருங்கிய குடைகள், கரிய நிறத்தையுடைய வேல் கண் மாதர் நீராடின நறுமணமுடைய சிவந்த குங்குமக் குழம்பு கலந்த நீரினிடத்தே தோன்றிய நீர்க்குமிழிகளை ஒத்தன, என்பது ஈற்றடி களின் பொருள். குருதிப் புனல்தோறும் - இரத்த வெள்ளம் இருந்த எல்லா இடங்களிலும். இது, தற்குறிப்பேற்ற அணியின் பாற்படும்.

**71. வெங்கலங்கற் கடுங்குருதி வெள்ளத்துக் கொடியாடை மிதக்குந் தோற்றம்**

**செங்கலங்கற் புதுப்புனலில் விளையாடித் திரிகின்ற சேல்கள் போலும்**

**பொங்கலங்க னிருபர்தலை புனைமகுடத் துடன்கிடப்பப் பொறியார் வண்டு**

**தங்கலங்கல் வண்கனக சததளபங் கயமுகுள சாலம் போலும்.**

[வெம் கலங்கல் கடு குருதி வெள்ளத்து கொடி ஆடை மிதக் கும் தோற்றம் செம் கலங்கல் புது புனலில் விளையாடி திரிகின்ற சேல்கள் போலும்; பொங்கு அலங்கல் நிருபர் தலை புனை மகுடத் துடன் கிடப்ப பொறி ஆர் வண்டு தங்கு அலங்கல் வண் கனக சததள பங்கய முகுள சாலம் போலும்.]

**விளக்கம்:** பயங்கரமான கலங்கிய மிகுதியான இரத்த வெள்ளத்தில் மிதக்கும், கொடிச்சீலைகளின் தோற்றம், சிவந்த கலங்கலான புதிய நீர்ப் பெருக்கில் விளையாடித்திரியும் சேல்மீன்களைப் போன்றிருந்தன; விளங்கும் மாலை சூடிய அரசர்களின் தலைகள் அணிந்த கிரீடத்துடன், (அக்குருதி வெள்ளத்தில்) கிடந்தனவாக (அவற்றின் தோற்றம்), புள்ளிகள் நிறைந்த வண்டுகள் நெருங்கி மொய்த்தற்குரியனவும், ஒளிவிளக்கம் உடையனவுமாகிய செழிப்புடைய பொன்மயமான நூறு இதழ்களைக் கொண்ட தாமரை அரும்பின் கூட்டத்தைப் போன்றிருந்தன, என்பது பொருள். வண்டு தங்கு—வண்டுகள் தங்குவதற்கு, அல்லது மொய்த்தற்கு உரிய. நாலாவது அடியில், **அலங்கல் ஒளியுடைய அழகின் விளக்கமுடைய** என்ற பொருளது.

கிரீடம் அடியகன்றும், தலைகுறுகியும் இருத்தல் பற்றி தாமரை அரும்பு போன்றதாகக் கூறப்பட்டது. மாண்ட வீரர்களின் முகத்தின் விளக்கத்தையும், பொன்மயமான கிரீடத்தையும் நோக்கி, கனக பங்கயம் என்றார். சேல், மீன்களில் ஒருவகை. கனக சததளபங்கய முகுள சாலம், வடமொழிச் சொற்றொடர். பொன்மயமான நூறு இதழ்களைக் கொண்ட தாமரை அரும்பின் கூட்டம், என்பது பொருள்.

**72. எண்ணிழந்த குருதிநதி யிருமருங்குங் கரிபரியாள் கரைகளாகக்**
**கண்ணிழந்த பறையிடையே செருகியகால் வாய்த்தலையின் கண்கள் போலும்**
**மண்ணிழந்து படுமரசர் மணிக்கலங்கள் பலசிந்தி வயங்கு தோற்றம்**
**விண்ணிழந்து பரந்தசெழுங் கடலிடையே மீனினங்கள் வீழ்ந்த போலும்.**

[எண் இழந்த குருதி நதி இருமருங்கும் கரி பரி ஆள் கரைகள் ஆக, கண் இழந்த பறை இடையே செருகிய கால் வாய் தலையின் கண்கள் போலும்; மண் இழந்து படும் அரசர் மணிகலங்கள் பல சிந்தி வயங்கு தோற்றம், விண் இழந்து பரந்த செழுங்கடல் இடையே மீன் இனங்கள் வீழ்ந்த போலும்.]

**விளக்கம் :-** எண் இழந்த குருதி நதி – அளவு கடந்த இரத்த வெள்ளமாகிய நதி. அந்நதிக்கு, யானை குதிரை காலாட்களின் உயிர் நீங்கிய உடல்கள் இரண்டு பக்கங்களிலுமுள்ள கரைகள். கண் இழந்த பறை - அடித்தற்குரிய இடமான கரியகண் போன்ற பகுதியை இழந்த போர்ப் பறை, அதாவது நடுவிடம் கிழியப் பெற்ற பறை. செருகிய கால்வாய் - நீர் பாய்வதற்காக

அமைந்த வாய்க்கால். தலை - வாய்க்காலின் ஆரம்பமாகும் இடம், (தலையிடம்). தலையின் கண் - வாய்க்காலின் தலையிடத்தே அமைந்துள்ள நீர் பாய்வதற்கான மதகின் கண், அதாவது கண் வாய். நடுவிடம் கிழிந்த பறைகள் வாய்க்காலினிடத்ததான மதகின் கண்களாயின. அதாவது, குருதி நதியின் கரைகளாக உயிர் நீங்கிய உடல்கள் அமைய, கண் இழந்த பறைகள் இடை யிடையே அமையலான வாய்க்கால் மதகுகளின் கண்களை ஒத்தனவாயின,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். மண் இழந்து - மண்ணுலக வாழ்க்கையை இழந்து. படும் அரசர் - இறந்த அரசர்கள். அவர்களது ஆபரணங்கள், அந்தக் குருதி நதியில் சிதறிக் கிடந்த தோற்றம், விண் நீங்கி நட்சத்திரங்கள் பரந்த நீர் நிறைந்த கடலினிடம் விழுந்து கிடந்தன போன்றிருந் தது,—என்பது கடையடிகளின் பொருள். உருவகம், உவமை, தற்குறிப்பேற்ற அணிகள் கலந்து வந்திருப்பது காண்க.

**73. பட்டநுதற் களியானைப் பாண்டவர்தம் படைத்தலைவன் பட்டா ணுகத்**
**தொட்டகழற் றடமகுடச் சுடர்வடிவாண் மகிபரெலாந் துணுக்க மெய்தி**
**விட்டபடங் கியல்பாடி வீடணைந்தார் வெயிலோனு மேற்பாற் குன்றின்**
**கிட்டவவன் வடிவமுமிக் குருதியினற் சிவந்ததெனக் கிளர்ந்த தம்மா.**

[பட்டம் நுதல் களியானை பாண்டவர் தம் படைத்தலைவன் பட்டான் ஆக, தொட்ட கழல் தடமகுடம் சுடர் வடிவாள் மகிபர் எலாம் துணுக்கம் எய்தி, விட்ட படங்கு இயல் பாடிவீடு அணைந் தார்; வெயிலோனும் மேல் பால் குன்றில் கிட்ட அவன் வடிவமும் இ குருதியினல் சிவந்தது என கிளர்ந்தது, அம்மா.]

**விளக்கம் :-** சூர்யாஸ்தமன வருணனை இது. பட்டம் நுதல் களி யானை - நெற்றிப் பட்டம் அணிந்த மதக் களிப்புடைய யானை. அத்தகைய யானைகளைக் கொண்ட படையையுடைய பாண்டவரின் சேனைத்தலைவனை சிவேதன் இறந்து பட,— என்பது முதலடியின் பொருள். தொட்ட கழல் தடமகுடம் சுடர் வடிவாள் மகிபர் - அணிந்த வீரக்கழலையும், பெரிய மகுடத்தை யும், ஒளிவிடும் கூரிய வாளையும் உடைய அரசர். துணுக்கம் எய்தி - மனக் கலக்கம் எய்தி. விட்ட படங்கு இயல் பாடிவீடு அணைந்தார் - காலையில் விட்டு வந்த கூடாரத்தால் அமைந்த படைவீடு போய்ச் சேர்ந்தார்கள். வெய்யோன் - சூரியன். மேல் பால் குன்று - அத்தமனகிரி. சிவேதன் படவும் கலக்கத்துடன்

அரசர்கள் பாசறை அடைந்தார்; அப்பொழுது அத்தமன கிரியை நெருங்கிய சூரியனும், போர்க் களத்தில் வெள்ளமிட்ட இரத்தம் தெறித்து வடிவம் சிவந்தது போல் விளங்கினன், என்பதாம். அம்மா, வியப்பிடைச் சொல். இது, தற்குறிப் பேற்றம்.

யானை, தேர் பரி காலாளுக்கும், வாள், வில் கணை முதலிய ஆயுதங்களுக்கும் உபலக்ஷணம்.

விராடனது புத்திர சோகம்

**74. திருநெடுமான் முதலான தேர்வேந்தர் விராடனுழை சென்றுன் மைந்தர்**
**இருவருமின் றொருபடியே வெஞ்சமரி லெஞ்சினரென் றிரங்க லையா**
**பொருமுனையில் வீடுமனைப் புறங்கண்டு நிருபரெலாம் பொன்ற வென்று**
**விரகுடன்வா ளெடுப்பித்த பிறகன்றே தொடுசரத்தால் வீழ்ந்த தென்றார்.**

[திரு நெடுமால் முதலான தேர் வேந்தர் விராடனுழை சென்று, ''உன் மைந்தர் இருவரும் இன்று ஒரு படியே வெம் சமரில் எஞ்சினர் என்று இரங்கல் ஐயா, பொரு முனையில் வீடு மனைப் புறம் கண்டு நிருபர் எலாம் பொன்ற வென்று, விரகுடன் வாள் எடுப்பித்த பிறகு அன்றே தொடு சரத்தால் விழ்ந்தது,'' என்றார்.]

**விளக்கம்:-** புத்திர சோக முற்ற விராடனுக்குக் கண்ணனும் மற்றைய வேந்தர்களும் தேற்று மொழி கூறியதைத் தெரிவிக்கும் இது. ''ஐய, உன் மைந்தர் இருவரும் போர் முனையில் மன்னர் பலர் பொன்ற வென்றே விழுந்தனர். வீடுமனைப் புறங்கண்ட சிவேதனே, வஞ்சனையால் வீழ்த்தப்பட்டான்,'' என்று புகழ்ச்சி தோன்றக் கூறிக் கண்ணன் முதலியோர் விராடனைத் தேற்றினர் என்பதாம். எஞ்சுதல், என்று இறத்தலைக் குறித்தது மங்கல வழக்கு. விழுந்தது, என்றது வினைமுற்றின் தன்மையுடைய தொழிற்பெயர்.

**75. பேய்செய்த வரங்கனைய பெருங்கானிற் றிரிவோர்க்குப் பெற்ற காதல்**
**தாய்செய்த வுதவியினுந் தகுமுதவி பலசெய்தாய் சமரு டின்றுன்**

**சேய்செய்த வுயிருதவி தேவரெலாந் துதிக்கின்ருர் செறிந்தோர் தம்மில்**
**நீசெய்த பேருதவி யார்செய்தா ரெனவுரைத்தா னெறிசெய் கோலான்.**

[''பேய் செய்த அரங்கு அனைய பெருங் கானில் திரிவோர்க்கு பெற்ற காதல் தாய் செய்த உதவியினும் தகும் உதவி பல செய் தாய்; சமருடு இன்று உன் சேய் செய்த உயிர் உதவி தேவர் எல்லாம் துதிக்கின்ருர், செறிந்தோர் தம்மில் நீ செய்த பேருதவி யார் செய்தார்?'' என உரைத்தான் நெறி செய் கோலான்.

**விளக்கம்:-** பேய்கள் தாங்கள் ஆடுவதற்குச் செய்த அரங்கினை ஒத்த பெரிய காட்டில் அலைந்து வருந்திய எங்களுக்கு அன்புடைய பெற்ற தாய் செய்யும் உபகாரங்களினும் சிறந்த உபகாரங்களைச் செய்துள்ளாய்; இன்று போரில் உன் மக்கள் உயிர்த்தியாகமாகிய உதவியைத் தேவர் அனைவரும் கொண்டாடு கின்றனர், நீ செய்தது போன்ற இந்தப் பெரிய உதவியை வேறு யாவர் செய்தார்? என்று தருமன் உபசார மொழி கூறித் தேற்றினுன், - என்பது பொருள்.

தகும், என்பது சிறந்த அல்லது மேலான என்ற பொருளது. உயிர் உதவி - உயிரைக் கொடுத்த உதவி. செறிந்தோர் – அன்பினுல் சிறந்தோரான நண்பர். நெறி செய் கோலான் - நீதி நடத்தும் செங்கோலினனுன தருமன்.

**76. உன்னுயிர்போ னீவளர்த்த வுத்தரன்ற னுயிருமுருத் தெழுஞ்சி வேதன்**
**தன்னுயிரும் போரரசர் தாமிருந்து கொண்டாடச் சமரி லீந்தார்**
**என்னுயிரு நினதன்றி யாரதினிச் சதுர்முகத்தோ னீன்ற பாரின்**
**மன்னுயிருக் குயிரனையா யெனவுரைத்தான் வளமலிசீர் மச்சர் கோமான்.**

[''(நகரில் அஞ்ஞாத வாசம் செய்த பொழுது) 'உன் உயிர் போல் நீ வளர்த்த உத்தரன் தன் உயிரும், (அவனுக்காக) உருத்து எழுந்த சிவேதன் தன் உயிரும் போர் அரசர் தாம் இருந்து கொண்டாட சமரில் ஈந்தார்; என் உயிரும் நினது அன்றி யாரது இனி? சதுர்முகத்தோன் ஈன்ற பாரின் மன் உயிருக்கு உயிர் அனையாய்,'' என உரைத்தான் வளம்மலி சீர் மச்சர் கோமான்.]

**விளக்கம்:-** வளம்மலி சீர் மச்சர் கோமானுன விராடன், ''சதுர்முகத்தோன் (பிரும்மா) ஈன்ற பாரின் மன் உயிருக்கு உயிர் அனையாய்,'' என்று தருமனை அழைத்து, ''உத்தனும், ர

சிவேதனும் உயிர் ஈந்தார். என் உயிரும் இனி உனக்கு உரியதாயதே அல்லாமல் வேறு யாருக்கு உரியதாகும்,'' என்று கூறினுன், என்பதாம்.

அஜ்ஞாதவாசகாலத்து கங்கபட்டனுக கருக்கரந்திருந்த தருமன் உத்திரன் பால் பேரன்பு கொண்டிருந்தமை பற்றி, உன் உயிர்போல் நீ வளர்த்த உத்தரன், என்று விராடன் கூறினுன், என்க.

சூரியோதயம்

**77. முப்பொழுது முணர்கேள்வி முகுந்தனுடன் பாண்டவரு**
**முடிசாய்ந் தாங்கண்**
**எப்பொழுது விடிவதென நினைதருமெல் லையின்வல்லே யிரண்டு**
**போரும்**
**அப்பொழுது காண்டற்கு வருகின்ரு னெனத்தடந்தே ரருக்கன்**
**வந்தான்**
**மைப்பொழுதுஞ் சிவேதனெதிர் மந்திரத்தான் வருதினிபோல்**
**மாய்ந்த தம்மா.**

[முப்பொழுதும் உணர் கேள்வி முகுந்தனுடன் பாண்டவரும் முடி சாய்ந்து ஆங்கண் எப்பொழுது விடிவது என நினைதரும் எல்லையின், வல்லே இரண்டு போரும் அப்பொழுது காண்டற்கு வருகின்றான் என தடந்தேர் அருக்கன் வந்தான், மை பொழுதும் சிவேதன் எதிர் மந்திரத்தான் வரூதினிபோல் மாய்ந்தது, அம்மா.]

**விளக்கம்:** கண்ணனும் பாண்டவரும் ஆங்கண் (படை வீட்டில்) படுத்து, (சென்ற நாள் நேர்ந்ததோல்வியில் எய்திய பரிபவத்தை நீக்கிக் கொள்ள) எப்பொழுது விடியும் என்று எண்ணியிருக்கையில், இருதிறத்தார் செய்யும் போரைக் காண விரைந்து வருகின்ருன், என, சூரியன் வந்தான்; அவ்வளவில், சிவேதன் முன் சல்லியனது படை அழிந்ததுபோல் மைப்பொழுதும் (இருளும்) ஒழிந்தது என்பதாம்.

முக்காலங்களும் உணரும் முகுந்தன்; கண்ணன். அவன் எடுத்த அவதாரத்திற்கு ஏற்பச் சாந்திபினி முனிவனிடம் நூல்களைக் கற்றும்கேட்டும் ஒழுகியது பற்றிக் கேள்வி முகுந்தன், என்ருர். அதாவது அவனது பரத்வமும், சௌலப்பியமும் தோன்ற, இவ்வாறு கூறினுர் என்க, ஆங்கண்—(ஆங்கு—அண்) பாசறையினிடத்தே. அண்,இடப்பொருளதான விகுதி. வரூதினி-சேனை. சூரியன் போர் காண வந்தது போல் தோன்றினுன், என்றது தற்குறிப்பேற்றம். அம்மா: வியப்பிடைச் சொல்.

**முதற்போர்ச் சருக்கம் முற்றும்.**

# இரண்டாம் போர்ச் சருக்கம்

இரண்டாம் நாள் நடந்த போரைக் கூறும் இச் சருக்கம் 32 செய்யுள்களைக் கொண்டது.

## கடவுள் வாழ்த்து

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

**1. எந்த வெந்த யோனி பேத மெங்கு மெங்கு முள்ளன
அந்த வந்த யோனி தோறு மாவி யான தன்மையைச்
சிந்தை யின்க ணொருக ணத்தி னிகழு மாறு தேவர்கோன்
மைந்த னுய்ந்தி டப்பு கன்ற வள்ள ருள்வ ணங்குவாம்.**

[எந்த எந்த யோனி பேதம் எங்கும் எங்கும் உள்ளன, அந்த அந்த யோனி தோறும் ஆவி ஆன தன்மையை சிந்தையின் கண் ஒரு கணத்தில் நிகழும் ஆறு தேவர்கோன் மைந்தன் உய்ந்திட புகன்ற வள்ளல்தாள் வணங்குவாம்.]

**விளக்கம்:–** உலகங்கள் எங்கும் எத்தனைவிதமான பிறப்பு வகைகள் இருக்கின்றனவோ, அந்த அந்தப் பிறப்புக்களில் எல்லாம், அவற்றின் உயிருக்கு உயிராய்த் தான் கரந்துறையும் இயல்பினை, மனத்திலே ஒரு கணப் பொழுதில் நன்கு பதியும்படி, தேவர் கோன்மைந்தனுன விசயன் உய்ந்திடும்படி கீதோபதேசம் செய்தருளிய வள்ளலாகிய கண்ணனது திருவடிகளை வணங்குவோம், - என்பது பொருள். யோனி – பிறப்பு.

## திட்டத்துய்மன் தலைமை பூணல்

**2. சோனை மேக மென்ன வாளி தூவு திட்டத் துய்மனைச்
சேனை நாத ஞகி நீசெ ருச்செய் கென்று செப்பினன்
வானை யாதி யான பூத பேத மாகி மாயையாய்
ஏனை ஞான ரூபி யாகி யாவு மாய வெம்பிரான்.**

[சோனை மேகம் என்ன வாளி தூவு திட்டத்துய்மனை, சேனை நாதன் ஆகி நீ செரு செய்க என்று செப்பினன், வானை ஆதி ஆன பூதபேதம் ஆகி, மாயை ஆய், ஏனை ஞானரூபி ஆகி யாவும் ஆய எம்பிரான்.]

**விளக்கம்:-** வானை ஆதி....எம்பிரான், சோனை மேகம் என்ன....''நீ சேனைநாதன் ஆகி செரு செய்க'' என்று செப்பினன், என்பது அன்வயம். ஆகாயத்தை ஆதியாக உடைய பூத வகைகளாய், மாயை ஆய், அம்மாயையினின்றும் வேருன ஞான ரூபியாய், பிரபஞ்சப் பொருள்கள் அனைத்தும் தானேயாய் நின்ற எம்பிரானுன கண்ணன், என்பது ஈற்றடி

களின் பொருள். சோனை மேகம் - இடையருது பொழியும் பெருமழை. கண்ணன், வாளி மழை சொரியும் திட்டத்துய்மனை நோக்கி, ''நீ சேனைத் தலைமை பூண்டு போர் செய்க,'' என்று பணித்தான், என்பதாம். பூத பேதம் - பஞ்சபூதங்கள். வான், காற்று, அக்னி, நீர், நிலம், என்பது தோற்ற வரிசை.

**3. ஐவர் சேனை யிங்கெ ழுந்த தங்கெ ழுந்த தடலுடைத்**
**தெவ்வர் சேனை வெகுளி யோடெ ழுந்தி ரண்டு சேனையும்**
**பவ்வ மோரி ரண்டெ ழுந்து படர்வ தென்ன வெருவரும்**
**கவ்வை யோடு வந்து வெங்க ளத்தி டைக்க லந்தவே.**

[ஐவர் சேனை இங்கு எழுந்தது. அங்கு எழுந்தது அடல் உடை தெவ்வர் சேனை, வெகுளியோடு எழுந்து இரண்டு சேனையும் பவ்வம் ஓர் இரண்டு எழுந்து படர்வது என்ன வெருவரும் கவ்வையோடு வந்து வெம் களத்திடை கலந்த, ஏ.]

**விளக்கம்:-** இங்கு பாண்டவர் சேனை போருக்குப் புறப் பட்டது. அங்கே வலிமையுடைய பகைவர் படை போருக்குப் புறப்பட்டது; கோபத்தோடு போருக்கு எழுந்த இரு பக்கத்துச் சேனைகளும், ஒப்பற்ற கடல் இரண்டு எழுந்து ஒன்றின்மேல் ஒன்று செல்வதுபோல், அச்சம் தரத்தக்க ஆரவாரத்தோடு களம் வந்து சேர்ந்தன, என்பது பொருள். கவ்வை - பேரொலி.

**4. வெம்ப ராகம் வெளியி லுற்றெ ழுந்த போது வேழவில்**
**சம்ப ராரி தகன நாளி னன்றெ ழுந்த தன்மையென்று**
**உம்ப ரார்ந டுங்கி ஞரு ருத்து வீழு முருமென**
**இம்ப ரார்ந டுங்கி ஞரி ரங்கு பல்லி யங்களால்.**

[வெம் பராகம் வெளியில் உற்று எழுந்த போது, வேழம் வில் சம்பராரி தகனம் நாளின் அன்று எழுந்த தன்மை என்று உம்பரார் நடுங்கினர்; உருத்து வீழும் உரும் என இம்பரார் நடுங்கினர் இரங்கு பல் இயங்களால்.]

[**விளக்கம்:-** வெம் பராகம் - கொடிய அல்லது மிகுதியான புழுதி. வேழம் வில் - கரும்பு வில். சம்பராரி - மன்மதன். உருத்து வீழும் உரும் - கர்ச்சித்துக் கொண்டு விழும் இடி. பல் இயம் - பல வகைப்பட்ட வாத்தியம். போருக்கு எழுந்த சேனைக ளால் கிளப்பப்பட்ட மிகுந்த புழுதித்திரள், வெளியில் பரவி மேலே எழுந்தபோது, கரும்புவில்லையுடைய மன்மதன் எரியுண்ட தினமாகிய அந்தக் காலத்தில் எழுந்த புகையின் தன்மையை ஒக்கும் என்று தேவர் அஞ்சி நடுங்கினர்; அங்கே ஒலித்த வாத்தியங்களின் பேரொலியை, கர்ச்சித்துக் கொண்டு விழும் இடியெனக் கொண்டு இவ்வுலகத்தார் அஞ்சி நடுங்கினர், என்பதாம்.

5. **அளவின் மன்ன ரேறு தேர்க ளாறி ரண்டு பத்துநூறு**
**இளவ லோடு கசது ரங்க மங்க ளோடு மிடம்வரப்**
**பளக மன்ன வெழுப திற்றுப் பத்து நூறு தேரொடும்**
**வளவ ராதி மன்ன ரோடு நகுல ராசன் வலம்வர.**

(அளவில் மன்னர் ஏறு தேர்கள், ஆறு இரண்டு பத்து நூறு இளவலோடு கச, துரங்கமங்களோடும் இடம்வர, பளகம் அன்ன எழுபதிற்று பத்துநூறு தேரொடும் வளவர் ஆதி மன்னரோடும் நகுலராசன் வலம் வர.)

**விளக்கம் :-** இளவலோடு, என்பதிலுள்ள ஒடு என்பதைத் தேர்களோடு என்று கூட்டுக. இளவல், அளவு இல் மன்னர் ஏறு (ஏறியுள்ள), ஆறு இரண்டு பத்துநூறு தேர்களோடும், கச துரங்கமங் களோடும் இடம்வர, என்பது முதல் இரண்டு அடிகளின் அன்வயம். இளவல் - சகாதேவன். ஆறு இரண்டு பத்துநூறு - பன்னீராயிரம் (என்ற தொகை கொண்ட தேர்களோடும்'. பாளம் - மலை. எழுபதி ற்று பத்துநூறு - எழுபதினாயிரம் (தேர்களோடும்), வளவர் - சோழர், அளவில்லாத மன்னர்கள் ஏறியுள்ள பன்னீராயிரம் தேர் ளோடும், யானை குதிரைகளோடும் சகாதேவன் இடப்புறம் வரவும், மலையை ஒத்த எழுபதினாயிரம் தேர்களோடும் சோழர் முதலிய அரசர்களோடும் நகுலன், வலப்புறம் வர - அடுத்த கவியோடு தொடரும். துரங்கமம் - வேகமாகச் செல்லக்கூடிய குதிரை.

6. **மிடல்கொள் வாள மைச்சரோடு விரைவின் வீரர் பின்வர**
**முடுகு சேனை யபிமன் வீமன் விசயன் மாயன் முன்செல**
**நடுவு நால்வ கைப்ப டும்ப தாதி யோடு நாயகன்**
**கடக நாத னுடன ணிந்து நின்ற னன்க ளத்திலே.**

(மிடல் கொள்வான் அமைச்சரோடு விரைவின், வீரர் பின்வர, முடுகுசேனை, அபிமன், வீமன், விசயன், மாயன் முன்செல, நடுவு நால்வகை படும் பதாதியோடு நாயகன், கடகம் நாதனுடன் அணிந்து நின்றனன் களத்திலே.)

**விளக்கம் :-** வலிமை கொண்ட வாள் ஏந்திய மந்திரிகளோடு விரர் பலர் விரைவின் பின் வரவும், போர் ஊக்கங்கொண்ட சேனை யோடு அபிமன் வீமன் விசயன் மாயன் முன்னே செல்லவும், நடு வில் நால்வகைப் படைகளுடனே கடகநாதனுடன் நாயகன், போர்க்களத்தில் அணிவகுத்து நின்றான், - என்பதாம். மாயன் - கண்ணன். கடகநாதன் - படைத்தலைவனான திட்டத்துய்மன். நாயகன் - தருமன்.

7. **மாடி ரண்டு மெண்ணில் கோடி மன்னர் சேனை நிற்கவும்**
**பீடு கொண்ட நேக மன்னர் பேர ணிக்க ணிற்கவும்**

**சூடு தும்பை மண்ட லீகர் தூசி யாக நிற்கவும்**
**வீடு மன்ம கீபனோடு நடுவண் வந்து மேவினான்.**

(மாடு இரண்டும் எண் இல்கோடி மன்னர் சேனை நிற்கவும், பீடு கொண்டு அநேகம் மன்னர் பேர் அணிக்கண் நிற்கவும், ஆடு தும்பை மண்டலீகர் தூசி ஆக நிற்கவும், வீடுமன் மகீபனோடு நகுலன் வந்து மேவினான்.)

**விளக்கம் :-** மாடு - பக்கம். பீடு - பராக்ரமம், பேர் அணி - பெரிய அணிவகுப்பு. தூசி - முன்னணிப் படை. அணிவகுப்பின் நடுவிலே, வீடுமனும் துரியோதனனும் நின்றனர், என்பதாம்.

## இரு திறத்தாரும் பொரல்

8. **வீசு கொண்ட லுடனெ திர்ந்து கோடை யுந்தி வீசவே**
**மூசு கொண்ட லோரி ரண்டு முடுகி நின்று பொழிவபோல்**
**தூசி நின்ற வீர ரோடு தூசி வீரர் வில்வளைத்து**
**ஆசு கங்கள் வீச வீச வந்த ரம்பு தைந்தவே.**

(வீசு கொண்டலுடன் எதிர்ந்து கோடை உந்தி வீசவே, மூசு கொண்டல் ஓர் இரண்டு முடுகி நின்று பொழிவபோல், தூசி நின்ற வீரரோடு தூசி வீரர் வில்வளைத்து, ஆசுகங்கள் வீச, வீச அந்தரம் புதைந்தவே.)

**விளக்கம் :-** கொண்டல் - கீழ்க்காற்று. கோடை மேல்காற்று. ஆசுகம் - அம்பு. கீழ்க்காற்றுடன் மேல்காற்று மோதி வீசுதலால், நெருங்கிய இரண்டு மேகங்கள் பகைத்து நின்று மழைபொழிவது போல், ஒரு பக்கத்துத் தூசிப்படை வீரரோடு மறுபக்கத்துத் தூசிப் படைவீரர்கள் அம்புகளை வீசுதலால், வானவெளிப் பிரதேங்கள் மறைந்தன, என்பது பொருள்.

9. **சொற்கை யாத வாய்மை வல்ல துருப தன்கு மாரனும்**
**விற்கை யாசி ரியனு முற்றெ திர்ந்து தம்மில் வெகுளவே**
**பொற்கை வெம்ச ராச னம்பொ ழிந்த கோலி ழிந்தவான்**
**உற்கை யென்ன வொருகை மாமு கங்க ளோடொ ளித்தவே.**

(சொல் கையாத வாய்மை வல்ல துருபதன் குமாரனும், வில் கை ஆசிரியனும் உற்று எதிர்ந்து தம்மில் வெகுளவே, பொன் கை சராசனம் பொழிந்த கோல் இழிந்த வான் உற்கை என்ன, ஒருகை மா முகங்களோடு ஒளித்தவே.

**விளக்கம் :-** கையாத சொல் - இனியசொல். துருபதன் குமாரன் - திட்டத்துய்மன். வில்கை ஆசிரியன் - துரோணன். உற்று எதிர்த்து - எதிர்த்து வந்து. வெகுள - சினந்து பொர, பொன்கை - அழகியகை; அல்லது பொன்கலன்கள் அணிந்த கை

சராசனம் - வில், கோல் - அம்பு. வான்இழிந்த உற்கை - வானி லிருந்து விழுந்த கொள்ளிக் கட்டை, ஒருகை மா - ஒரு துதிக் கையை உடைய யானை, ஒளித்தவே (அம்புகள் யானைகளின் முகங்களில் தைத்து) மறைந்தன.

துரோணனும் திட்டத்துய்மனும், வெகுண்டு பொழிந்த அம்புகள், வான்நின்று வீழ்ந்த கொள்ளிக்கட்டைகள் என்று சொல்லும்படி, இருதிறத்து யானைகளின் முகங்களைத் துன்புறுத்தி மறைந்தன, என்பதாம்.

**10. வீர சாப முடனு ரைக்கும் வெய்ய சாபம் வல்லவத்
தீரன் வாளி யால ழிந்து சிலையு மேறு தேரும்விட்டு
ஈர மாம திக்கு டைந்த விருள்கொ லென்ன வேகினன்
ஆர வார முடன்ம லைந்த வைவர் சேனை யதிபனே.**

[வீர சாபமுடன் உரைக்கும் வெய்ய சாபம்வல்ல அ தீரன் வாளியால் அழிந்து சிலையும் ஏறுதேரும் விட்டு, ஈரம் மாமதிக்கு உடைந்த இருள்கொல் என்ன, ஏகினன், ஆரவாரமுடன் மலைந்த ஐவர் சேனை அதிபனே.]

**விளக்கம்:** சாபம் - வில், சாபமொழி. வீரத்திற்குரிய வில் தொழிலிலும், சினந்து சொல்லும் கொடிய சாபம் இடுவதினும் வல்லவனான தைரியம் மிக்க துரோணன். அவனது கணைகளால் ஆரவாரத்துடன் போர் செய்த பாண்டவர் படைத் தலைவனான திட்டத்துய்மன், தோல்வியுற்று, வில்லையும் தேரையும் களத் திலே விட்டுவிட்டு, சந்திரனுக்கு முன் தோற்று அகன்ற, இருளைப் போல், களம் அகன்று சென்றான்,—என்பது பொருள்.

அரசர்க்குரிய வில் தொழிலோடு, அந்தணர்க்குரிய ஒழுக்கமும் உடைய மேன்மையன், என்பது தோன்ற, வீரசாபமுடன்... சாபம் வல்ல தீரன், என்றார்.

## வீமன் களம் புகுதல்

**11. உடைந்துடைந்து சேனை மன்னன் வருதல் கண்டு ருத்துவான்
மிடைந்த கொண்ட லெனவ திர்ந்து வீம சேனன் வேலையைக்
கடைந்த குன்றொ டொத்த தேர்க டாவி வந்து முனிவனோ(டு)
அடைந்த மன்ன ருட்கி யோட வொருக ணத்தி லமர்செய்தான்.**

[உடைந்து உடைந்து சேனை மன்னன் வருதல் கண்டு உருத்து, வான்மிடைந்த கொண்டல் என அதிர்ந்து வீமசேனன், வேலையை கடைந்த குன்றொடு ஒத்து தேர் கடாவி வந்து, முனிவனோடு அடைந்த மன்னர் உட்கி ஓட ஒரு கணத்தில் அமர் செய்தான்.]

**விளக்கம்:** சேனைத் தலைவன் தோற்று வருதல் கண்டு வீமன் சினங்கொண்டு, வான்நெருங்கிய மேகம்போல் கர்ச்சனை செய்து, பாற்கடல் கடைந்த மேருமலையை ஒத்த தேர் செலுத்திக் களம் வந்து, ஒரு கணப்பொழுதில் துரோணனும், அவனுக்குத் துணை அமைந்த அரசர்களும் அஞ்சி ஓடும்படி போர் செய்தான், என்பதாம்.

**12. உக்ர மாக வீமன் வந்த வுறுதி கண்ட நேகபோர்**
**விக்ர மாம தத்த டக்கை வேழ வீரர் தம்முடன்**
**வக்ர சாப மழைபொ ழிந்து வடக லிங்க மன்னவன்**
**சக்ர தேவன் முகிலெ றிந்த வுருமெ னத்த லைப்பெய்தான்.**

[உக்ரம் ஆக வீமன் வந்த உறுதி கண்டு, விக்ரம் மா மதம் தடக்கை வேழம் வீரர் தம்முடன் வக்ர சாபம் மழை பொழிந்து வடகலிங்கம் மன்னவன் சக்ரதேவன் முகில் எறிந்த உரும் என தலைப்பெய்தான்.]

**விளக்கம்:** உக்ரம் - கடுமை. விக்ரம் - பராக்ரமம். வக்ரம் - வளைவு. சக்ரதேவன் - கலிங்க மன்னன். போர் ஆவேசத்தோடு எதிர்த்து வந்த வீமனது உறுதியுடைய மனநிலையைக் கண்டு கலிங்க மன்னனான சக்ரதரன், பராக்ரமும் மதச் செருக்கும் உடைய யானை வீரர்களுடனே வளைத்த வில்லிலிருந்து சரமழை பொழிந்து கொண்டு மேகம் போக்கிய இடியென, எதிர்த்து வந்தான், என்பதாம். தலைப்பெய்தல் - கூடல், கலத்தல், இங்கே பொருதல்.

வேறு

## கலி விருத்தம்

**13. கதிக்கடுத் தேரினின் றிழிந்து காலிங்கன்**
**மதிக்குமும் மதகரி வந்த யாவையும்**
**துதிக்கைவன் கரங்களாற் சுற்றி யெற்றினான்**
**விதிக்கொரு விதியனான் வீம சேனனே.**

[கதி கடு தேரினின்று இழிந்து காலிங்கன் மதிக்கும் மும்மத கரி வந்த யாவையும் துதிக்கை, வன்கரங்களால் சுற்றி எற்றினான், விதிக்கு ஒரு விதி அனான் வீமசேனனே.]

**விளக்கம்:** விதிக்கு ஒரு விதி அன்னான் ஆகிய வீமன், தனது கடிய வேகமுடைய தேரினின்று இரங்கி, கலிங்க மன்னனாகிய சக்ரதேவனின் மதிப்பிற்குரிய மதயானைகள் எல்லாவற்றையும், தனது வலிய கரங்களால் துதிக்கையைப் பற்றிச் சுழற்றி வீசி எறிந்தான், என்பதாம். மதிக்கும் யானை - போர்த்திறமை யுடைய வலிய யானை என்று நன்கு மதிக்கப்பட்ட யானை.

**14.** **மின்பொழி படையுடை மேவ லாருடல்**
**என்புக விடங்களை யெடுத்தெ றிந்தவா**
**தன்பெருந் துணைவனுந் தாம மாருதி**
**வன்புடன் பறித்தெறி வரைக ளென்னவே.**

[மின்பொழி படை உடை மேவலார் உடல் என்பு உக இடங்களை எடுத்து எறிந்த ஆ(று) தன் பெரும் துணைவன் ஆம் தாமம் மாருதி வன்புடன் பறித்து எறி வரைகள் என்னவே.]

**விளக்கம்:** தனது பெரிய தமையனை அறிவின் ஒளிவீசும் அனுமான் முன்யுகத்தில் இராமகாரியத்தில் வலிமையோடு பறித்து எரிந்த மலைகள் என்று சொல்லும்படி, வீமன், ஒளி விடும் ஆயுதங்களை உடைய பகைவரின் உடலிலுள்ள எலும்புகள் சிதறும்படி யானைகளை எடுத்து வீசிய விதம், ஆச்சரிய மானதே,—என்பதாம்.

**15.** **வெம்பிமேல் வருதிறல் வீமன் மும்மதம்**
**தும்பிமேல் விழவிழத் தும்பி வீசுவ**
**பம்பிமே லெறிதரு பவன னுற்கடல்**
**அம்பிமேல் விழவிழு மம்பி போன்றவே.**

[வெம்பி மேல்வரு திறல் வீமன் மும்மதம் தும்பிமேல் விழ விழ தும்பி வீசுவ, பம்பிமேல் எறிதரு பவனனால் கடல் எம்பி மேல் விழ விழும் அம்பி போன்றவே.]

**விளக்கம்:** வெம்பி - மனம் கொதித்து. தும்பி - யானை. மத யானைகளின்மேல் அடுத்து அடுத்து விழும்படி வீசப்பட்டனவான யானைகள், நெருங்கி மேலிடத்தே வீசுகின்ற பவனனால் (வாயுவால்) கடலிடம் மரக்கலங்களின் மேல் தொடர்ந்து விழும் மரக் கலங்களைப் போன்றன, என்பது பொருள். தற்குறிப்பேற்றம். கப்பல் யானைகளுக்கு உவமை.

**16.** **வருகளி றொருகையால் வாங்கி வீசலிற்**
**பொருபணை மண்ணு றப் புதைய வீழ்ந்தன**
**விரிதிரை நெடுங்கடல் விசும்பு தூர்த்தநாள்**
**இருநில மிடந்திடு மேனம் போன்றவே.**

[வருகளிறு ஒருகையால் வாங்கி வீமனின் பொருபணை மண் உற புதைய வீழ்ந்தன; விரிதிரை நெடுங்கடல் விசும்பு தூர்த்த நாள் இரு நிலம் கடந்திடும் ஏனம் போன்றவே.]

**விளக்கம்:** எதிர்த்துவரும் யானைகளை (வீமன்) ஒரு கையால் பற்றி எடுத்து வீசலால், பொருதற்குக் கருவியாகும் பருத்த தந்தங்கள் மண்ணில் பொருந்திப் புதையும்படி வீழ்ந்தனவாகிய யானை

கள், விரிந்த அலைகளை உடைய கடல் பொங்கி வானை மறைத்த காலத்தில், பெரியபூமியைக் கோட்டால் குத்தியெடுத்த வராகாவதாரங் கொண்ட திருமாலை ஒத்தன, என்பது பொருள். தூர்த்தல், என்பது மறைத்தல், என்ற பொருளது. வீமன் வீசியெறிந்த ஒவ்வொரு யானையும் தனித்தனி மகாவராகத்தை ஒத்தது, என்பதாம்.

**17. கழலணி பொலங்கழற் காளை கைகளால்**
**எழவெழ மதகரி யெடுத்து வீசலின்**
**விழுவன வன்றிமேல் விசையிற் போவன**
**பழையகற் சிறகுடன் பறப்ப போன்றவே.**

[கழல் அணி பொலம் கழல்காளை கைகளால் எழ எழ மதகரி எடுத்து வீசலின், விழுவன அன்றி மேல் விசையின் போவன, பழைய கல் சிறகுடன் பறப்ப போன்றவே.]

**விளக்கம்:** காலில் அணிந்த அழகிய வீரக்கழலை அணிந்த இரஷபம் போன்ற வீமன் மேலெழுந்து செல்லும்படி மதயானைகளை எடுத்து வீசலால், கீழே விழுவன அல்லாமல் வான்நோக்கி வேகமாகச் செல்லும் யானைகள், பண்டையில் மலைகள் சிறகுடன் பறப்பன போன்றனவாயின, என்பது பொருள்.

**18. புகலுறு கலிங்கர்கோன் போரில் வென்னிட**
**இகலுட னெடுத்தெடுத் திவனெ றிந்தபோ(து)**
**அகல்வெளி முகடுற வதிர்ந்து மேலெழும்**
**முகபட முகில்கள்வான் முகில்கள் போன்றவே.**

[புகலுறு கலிங்கர் கோன் போரில் வென் இட இகலுடன் எடுத்து எடுத்து இவன் எறிந்த போது, அகல் வெளி முகடு உற அதிர்ந்து மேல் எழும் முகபட முகில்கள் வான்முகில்கள் போன்றவே.]

**விளக்கம்:** களத்தினுள் பிரவேசித்தலைச் செய்த கலிங்க மன்னன் போரில் புறம் கொடுக்கும்படி, வலிமையோடு யானைகளை எடுத்தெடுத்து இவன் (வீமன்) எறிந்த போது அகன்ற வான வெளியில் இடித்துக்கொண்டு மேல் எழும் முகபடாம் இடப்பெற்ற மேகம் போன்ற அவ் யானைகள், வானில் சஞ்சரிக்கும் மேகங்களே ஒத்தன, என்பது பொருள்.

கலிங்கமன்னன் படல்

**19. வென்னிடு கடகரி வீரன் வீமன்முன்**
**முன்னணி கலங்குற முறித்த வாறுகண்டு**
**என்னிது வெனமொழிந் தேறு தேரொடும்**
**தன்னொரு சிலையொடுந் தானுந் தோன்றினன்.**

[வென் இடு கடகரி வீரன் வீமன்முன் முன் அணி கலங்குற முறிந்த ஆறு கண்டு, என் இது, என மொழிந்து ஏறுதேரொடும் தன்னொரு சிலையொடும் தானும் தோன்றினான்.]

**விளக்கம் :** வீரனான கலிங்க மன்னன், வீமன் முன் புறங் கொடுத்த மதயானைகள் (தனது) முன் அணியிலே கலங்கி அழிந்த விதத்தைக் கண்டு, ''இது என்ன இப்படியாயிற்றே!'' என்று சொல்லிக்கொண்டு, ஏறிய தேருடனும், தனது ஒப்பற்ற வில்லுட னும் அவனும் தோன்றினான், அதாவது பொர வந்தான், என்பது பொருள்.

'என் இது?' என்று வீமனது வீரத்தைக் கண்டு வியந்ததாக வும் கொள்ளலாம்.

**20. களத்திடை மடிந்தன கலிங்கன் வேழமென்று**
**உளத்தழல் கண்ணிணை சிவப்ப வுந்திடத்**
**தளத்தர ணிபரெனுந் தானை யானைகள்**
**வளைத்தன மருத்தின்மா மடங்க றன்னையே.**

[களத்திடை மடிந்தன கலிங்கன் வேழம் என்று, உளத்து அழல் கண் இணை சிவப்பு உந்திட தளம் தரணிபர் தானை யானை கள் வளைத்தன மருத்தின் மா மடங்கல் தன்னையே.]

**விளக்கம்:** போர்க் களத்தில் யானைகள் மடிந்தன என்று, உள்ளம் எழுந்த சினத் தீயால் கண்கள் சிவக்க. கலிங்கன் தூண்ட, (அவனது) படையிலுள்ள அரசர்கள் என்னும் படையானைகள், வாயுவின் சிறந்த ஆண் சிங்கம் போன்ற மகனாகிய வீமனை வளைத்துக்கொண்டன என்பது பொருள்.

யானைகளாக அரசர்களையும், மடங்கலாக வீமனையும் கூறியது, அவர் விரைவில், வீமனால் அழிவர், என்பதைக் குறிக்கும்.

**21. கந்தடர் களிற்றுடன் கலிங்க பூபதி**
**மைந்தருஞ் சேனையும் பொருது மாய்ந்தபின்**
**இந்திர னாற்சிற கிழந்த குன்றுபோல்**
**சிந்தைநொந் துடன்றனன் சேனை மன்னனே.**

(கந்து அடர் களிற்றுடன் கலிங்கபூபதி மைந்தரும் சேனையும் பொருது மாய்ந்தபின், இந்திரனால் சிறகு இழந்த குன்றுபோல் சிந்தை நொந்து உடன்றனன் சேனை மன்னன், ஏ.)

**விளக்கம் :-** கந்து அடர் களிறு - கட்டுத்தறியை முறிக்கும் யானை. கலிங்கபூபதியான சக்ரதேவன் யானைகளுடனும் மக் களோடும் நால்வகைச்சேனைகளோடும் போர்செய்து மாய்ந்தபின், கௌரவசேனையின் தலைவனான வீடுமன், இந்திரனால் சிறகு அறுக் கப்பட்ட மலைபோல், வீமனை எதிர்த்தான், என்பது பொருள்,

வீடுமனுக்குக் கலிங்கன் போரில் துணையானமையின், வீடுமன் குன்றும், கலிங்கன் சிறகும் ஆயினர். வீமன், சிறகரிந்த இந்திரனுகின்றுன்.

## வீடுமனுடன் வீமன் பொரல்

**22.** **வீமனுந் தனதுதேர் மேற்கொண் டாங்கொரு**
**தாமவே லவன்புயத் தடத்தி லோச்சினன்**
**மாமரு மாலையான் ருனு மற்றவ்வேல்**
**தோமர மொன்றினுற் றுணித்து வீழ்த்தினுன்.**

(வீமனும் தனது தேர் மேல் கொண்டு ஆங்கு ஒரு தாமம்வேல் அவன் புயம் தடத்தில் ஓச்சினுன்; மா மருமாலையான் தானும் (மற்று) அ வேல் தோமரம் ஒன்றினுல் துணித்து வீழ்த்தினுன்.)

**விளக்கம் :-** தாமம்வேல் - ஒளியுடைய வேல். மாமரு மாலையான் - சிறந்த மனமுடைய மாலையணிந்த வீடுமன். தோமரம் - இருப்புலக்கை. வீமன் வேலை வீடுமனது தோளிடத்தே செலுத்த, அவனும் தோமரத்தால் அதைத் துண்டு படச்செய்தான், என்பதாம்.

## வேறு

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

**23.** **ஓடுமிர தத்திவுளி நாலுமுட லற்றுவிழ வோரொர்கணை தொட்டிரதமும்**
**ஈடுகுலை யத்துவசம் வீழவனி கத்தவரு மேகவெதிர் முட்டுதலுமே**
**நீடுவரை யொப்பதொர்க தாயுதமெ டுத்தணுகி நேர்படவடித்த னனரோ**
**வீடுமன்ம னத்தனைய தேர்வலவ னைக்கடிதின் வீமனெனும் வெற்றி யுரவோன்.**

(ஓடும் இரதத்து இவுளி நாலும் உடல் அற்று விழ ஓர் ஓர் கணை தொட்டு, இரதமும் ஈடுகுலைய, துவசம்விழ, அனிகத்த வரும் ஏக எதிர்முட்டுதலும் (ஏ) நீடுவரை ஒப்பது ஓர் கதாயுதம் எடுத்து அணுகி நேர்பட அடித்தனன் (அரோ) வீடுமன் மனத்து அனைய தேர் வலவனை கடிதின் வீமன் எனும் வெற்றி உரவோன்.)

**விளக்கம் :-** எதிர் முட்டல் - எதிர்த்துப் போர் செய்தல். வீடுமன் மனத்தனைய தேர்வலவன் - வீடுமனது மனத்தை அறிந்து தேர்நடத்த வல்ல பாகன். நேர்பட - குறிதவருதபடி, தேர்க்குதிரைகள் அழியும் படியும், தேர்வலி கெடும்படியும், கொடி அறுந்து விழவும், சேனையிலுள்ள வீரர்கள் பின்னிடவும் சரம் செலுத்தி

வீடுமன் எதிர்த்துப் போர்செய்ய, வீமன் என்னும் வெற்றி உர வோன், தனது நீண்ட மலையை ஒத்த கதையை எடுத்து வீடு மனது தேர்ப்பாகனைக் குறிதவருமல் தாக்கினுன், என்பது பொருள். அரோ. அசை. உரவோன் – வலிமையுடைய வீரன்.

**24. வேகமுட னிப்படியவ் வீமனுமு டற்றியடல் வீடுமனெ டொத்த முதுபோர்**

**மோகரவி தத்தரசர் மாமகுட ரத்நமுடன் மூளைகடெ றிக்க வடியா**

**நாகமொடெ டுத்திவுளி தேர்சிதற முற்றவொரு நாழிகையி லெற்றி வரவே**

**ஆகவமு ழுக்கவுரு மேறெறிவ தொக்குமென வாரவமி குத்த தறவே.**

(வேகமுடன் இப்படி அவீமனும் உடற்றி அடல் வீடுமனெடு ஒத்த முது போர் மோகரம் விதத்து அரசர் மா மகுடரத்நமுடன் மூளைகள் தெறிக்க அடியா, நாகமொடு எடுத்து இவுளிதேர் சிதற முற்ற ஒரு நாழிகையில் எற்றிவரவே, ஆகவம் முழுக்க உரும் ஏறு எறிவது ஒக்கும் என, ஆரவம் மிகுத்தது அறவே.)

**விளக்கம் :-** இப்படி அந்த வீமன் அதிக வேகத்துடன் போர் செய்து, வலிய வீடுமனேடு (வலிமையில்) ஒத்த பழமையான பெரிய போரில் உக்கிரத்தன்மை வாய்ந்த அரசர்களின், சிறந்த கிரீடங்களில் பதிக்கப் பெற்ற இரத்தினங்களுடன் தலையிலுள்ள மூளை சிதறும்படி அடித்து, யானைகளோடு குதிரைகளையும் தேர் களையும் எடுத்து அவை முழுதும் அழியும்படி ஒரு நாழிகைப் பொழுதில் தாக்க, போர்க்களம் முழுதும் இடி விழுவதை ஒக்கும் என்று சொல்லும், சப்தம் மிகவும் அதிகமாயிற்று, என்பது பொருள். மோகரம் - உக்கிரம், கடுமை. முற்ற - முழுவதும். முழுக்க - முழு வதும். ஆகவம் - போர்க்களம். ஆரவம் - சப்தம், இரைச்சல். அறவே ஆரவம் மிகுந்தது - மிகவும் அதிகமான சப்தம் மேலும் அதிகப்பட்டது.

அபிமன் வீமனுக்குத் துணைவரல்

**25. மீளவும்வ ளைத்தசிலை வீடுமனெ திர்த்ததரல் வீமனெடு ருத்தி ருவரும்**

**காளமுகி லுக்குமுகி னேர்மலைவ தொக்கவெரி காலுநய னக்க டையினர்**

**மூளவெதிர் முட்டியெதிர் சேனையுநி லத்துதிர மோதுபொழு தத்து வெகுளா**

**வாளபிமன் வெற்றிவரி வார்சிலைகு னித்துவய வாளிகடொ டுத்து வரவே,**

[மீளவும் வளைத்த சிலை வீடுமன் அதிர்த்த குரல் வீமனெடு உருத்து இருவரும் காளம் முகிலுக்கு முகில் நேர் மலைவது ஒக்க எரிகாலும் நயனம் கடையினர், மூள எதிர் முட்டி, எதிர் சேனையும் நிலத்து உதிர மோது பொழுதத்து வெகுளா வாள் அபிமன் வெற்றி வரி வார் சிலை குனித்து வய வாளிகள் தொகுத்து வரவே.]

**விளக்கம்:–** அதிர்த்த குரல் வீமன் - உரத்த குரல் உடைய வீமன். உருத்து – கோபித்து (வீடுமன்) வர. இருவரும் காள முகிலுக்கு எதிரே மற்றோர் மேகம் மலைவதுபோல, சினம் மூள, அனல் உமிழும் கடைக் கண்ணராய் தாக்கி பகைப்படை பூமியில் பொடிபட்டு விழும்படி போர் செய்த பொழுது, வாள் அபிமன்யு சினந்து வெற்றி வரி வார்சிலை வளைத்து வலிய கணைகளைப் பிரயோகம் செய்து கொண்டு வரவும், - அடுத்த செய்யுளோடு முடியும்.

மூள - சினம் உண்டாக. எதிர் முட்டி - தாக்கி. பொழுதத்து- (அத்துசாரியை) பொழுது. வாள் அபிமன், என்பதிலுள்ள வாள், ஆயுதம் என்ற பொருளது; ஆயுதங்களின் பயிற்சியில் வல்லவனை, அபிமன்யு என்பது பொருள். இருவரும் இடையறாது சரம் பொழிதலின், மேகம், உவமையாயிற்று.

**26. வார்சிலையை வட்டவடி வாம்வகைவ ணக்கியெதிர் மாறுபட வுற்று வருவோர்**
**ஓரொருவர் நெற்றிதொறு மோரொருவ டிக்கணைக ளூடுருவ விட்டு நகுவோன்**
**மேருவைவ ளைத்துநெடு வாசுகிபி ணித்துமழை மேகநிகர் மெய்க ணைதொடா**
**வாரழலின் முப்புரமு நீறெழந கைத்தவர வாபரண னொத்த னனரோ.**

[வார் சிலையை வட்டம் வடிவு ஆம் வகை வணங்கி மாறுபட உற்று வருவோர் ஓர் ஒருவர் நெற்றி தொறும் ஓர் ஒரு வடி கணைகள் ஊடு உருவ விட்டு நகுவோன், மேருவை வளைத்து நெடு வாசுகி பிணித்து மழை மேகம் நிகர் மெய்கணை தொடா, ஆர் அழலின் முப்புரம் நீறு எழ நகைத்த அரவு ஆபரணன் ஒத்தனன், அரோ.]

**விளக்கம்:–** நீண்ட வில்லை வட்டமாக வளைத்து பகைத்து நெருங்கிவருவோர் ஒவ்வொருவர் நெற்றியிலும் ஒவ்வோர் கூரிய அம்புகளை ஊடுருவும்படி செலுத்தி நகைக்கின்றவனாகிய அபிமன், மேருமலையை வில்லாக வளைத்து வாசுகியை நாண் கயிறாகக் கட்டி மேகத்தை ஒத்த மேனியனான திருமாலாகிய அம்பைத்

தொடுத்து, ஆர் அழலால் முப்புரம் முழுதும் சாம்பலாகும்படி செய்து நகைத்த, நாகங்களை ஆபரணங்களாக உடைய சிவபெருமானை ஒத்தான், என்பது பொருள்.

**27. மேவலர்வி தப்படையும் வீடுமனு முட்டும் வகைவீமனும் விறற்பு தல்வனும்**

**பூவலய முற்றுமெழு காலவிறு திப்பரவை போலிகல் விளைத்த பொழுதில்**

**கூவலினி லைப்புனலு மீதெழுவ தொத்ததொரு கோபமொடு சர்ப்ப துவசக்**

**காவலனு ரைப்பவிரு வோரையும் வளைத்தனர்கள் காவலரெ னைப்ப லருமே.**

[மேவலர் விதம் படையும் வீடுமனும் உட்கும் வகை வீமனும் விறல் புதல்வனும் பூவலயம் முற்றும் எழு கால இறுதி பரவை போல் இகல் விளைத்த பொழுதில், கூவலின் நிலை புனலும் மீது எழுவது ஒத்தது ஒரு கோபமொடு சர்ப்பம் துவசம் காவலன் உரைப்ப இருவேரையும் வளைத்தனர்கள் காவலர் எனை பலரும்; ஏ.]

**விளக்கம்:-** மேவலர் விதம் படை - பகைவரது பலவகைப் பட்ட சேனை. வீடுமன் - அப்படையின் தலைவனான வீடுமன். உட்க – அஞ்சித் தளரும்படி. பூவலயம் முற்றும் – பூமண்டலம் முழுதும். எழும் கால இறுதி பரவை - பொங்கி எழுகின்ற கற்பாந்த காலத்து சமுத்திரம். கூவல் - கிணறு. சர்பத்துவசக் காவலன்– துரியோதனன்.

சேனையும், தலைவனான வீடுமனும் அஞ்சும்படி, பூமண்டலத்தைக் கவர்ந்து கொள்ளும் பிரளயக் கடல்போல் பொங்கி எழுந்து வீமனும், அபிமனும் போர் செய்தபோது, துரியோதனன் ஏவ, இருவரையும் அரசர் பலர் வளைத்துக் கொண்டார்கள்,-என்பதாம்.

கூவல் நிலைபுனல் மீது எழுவது ஒத்தது ஒரு கோபம் - கிணற்றில் நிலைத்துள்ள நீர் கொதிப்புற்று மேலே கிளம்புவதை ஒத்த கோபம், அல்லது மேலே கிளம்பத் தக்கதான ஒரு கோபம்.

அருச்சுனன் துணைவரல்

**28. தானவர் சமத்துமிரு தோள்வலியு மற்றுமுனை தானைபுற கிட்ட ழியவே**

**வானவர் துதிக்கவய வாகைபுனை யக்கடவுள் வாழ்வினி தளித்து வருவோன்**

**மீனவ னௌத்தகைய காளையொ டெடுத்தகதை வீமனை வளைத்தனரெனக்**

**கூனல்வரி விற்பகழி தூவியிர தத்தின்மிசை கூவி யவரைக் குறுகினுன்.**

[தானவர் சமத்தும் இரு தோள் வலியும் அற்று முனை தானை புறகு இட்டு அழியவே, வானவர் துதிக்க வயவாகை புனை அ கடவுள் வாழ்வு இனிது அளித்து வருவோன், மீனவன் என தகைய காளையொடு எடுத்த கதை வீமனை வளைத்தனர் என, கூனல் வரிவில் பகழி தூவி இரதத்தின் மிசை கூவி அவரை குறுகினன்.

**விளக்கம்:-** சமத்து - சாமர்த்தியம். வாகைபுனை - வெற்றி மாலை புனையவும். அக்கடவுள் - தேவர். மீனவன் எனத்தகைய காளை – மீனக்கொடியனுன மன்மதன் என்று சொல்லத்தக்க அழகிய வீரனை அபிமன். நிவாத கவசர் காலகேயர் என்ற தேவ சத்ருக்களை வென்று, வானவர் தன்னைத் துதிக்கவும், அவர் வெற்றிமாலை புனையவும் செய்து அவர்களுக்கு வாழ்வளித்து வந்த விசயன், தமயனையும், மகனையும் பகைவர் வளைத்துக் கொண்டதைக் கண்டு, கணைகளைத் தூவியும், அவர்களைப் போருக்குக் கூவியழைத்துக் கொண்டும், தேரின்மேல் வந்து, மகனையும் தமயனையும் நெருங்கினன், - என்பது பொருள்.

கூவி, என்பதற்கு, மகனுக்கும் தமையனுக்கும் படை வீரர் களுக்கும் தான் வந்துளதைக் கூவித் தெரிவித்துக் கொண்டு, (வந்தான்) என்றும் பொருள் கொள்ளலாம்.

**29. வீசுபகழித் துளியின் மேகமென விற்கொடிவன் மேலுற நடக்கு மளவில்**
**தேசுடைய ருக்கனெதிர் மூடுபனி யொத்தரசர் தேரணி கெடச்சி தறினர்**
**மாசுண மணிக்கொடி மகீபதி படைத்தலைவன் வார்சிலை வளைத்தி லனெடும்**
**பாசறை புகக்கடவி னர்கடக ளிற்றினணி பாய்பரி யணிப்ப டைஞரே.**

[வீசு பகழி துளியின் மேகம் என வில் கொடு இவன்மேல் உற நடக்கும் அளவில் தேசு உடை அருக்கன் எதிர் மூடு பனி ஒத்து அரசர் தேர் அணி கெட சிதறினர்; (அவ்வேளை) மாசுணம் மணி கொடி மகீபதி படை தலைவன் வார்சிலை வளைத்திலன், நெடும் பாசறை புக கடவினர் கடம் களிற்றின் அணி பாய்பரி அணி படைஞர், ஏ.]

**விளக்கம்:-** வெகுதூரம் பாய்கின்ற கணைகளாகிய மழைத் துளிகளைக் கொண்ட மேகம்போல் இவன் (விசயன்) வில்லைக் கொண்டு பகைவர்மேல் நெருங்கும் அளவில், பிரகாசமுடைய சூரியனுக்கு எதிர் மூடுபனிபோல் பகை அரசர் தேர்களின் அணி வகுப்பு அழிந்து சிதறினர்; (அப்பொழுது) வீடுமன் வில்லை

வளைக்காமல் திகைத்து நின்றான். யானை அணியிலும் குதிரை அணியிலும் இருந்த வீரர்கள் தமது பெரிய பாசறையை அடைந்தார்கள், - என்பது பொருள். மாசுணம் மணிக் கொடியோன் - பாம்புக் கொடியனான துரியோதனன்.

**30. வேலையமு துக்குவரு வானவர்க ளொத்தனர்கள் வீடுமன்**
**முதற் படைஞரால்**
**ஆலநிக ரொத்தனன னீகினிதொ லைத்தொருத னண்மைநிலை**
**யிட்டு வருவோன்**
**மேலினியி மைப்பொழுது நாம் வெளியி னிற்கிலி வன் மேலிடு**
**மெனக் கருதினான்**
**போலெழு வயப்புரவி யூருமிர தத்திரவி போயுததி யிற்சொ**
**ருகினான்.**

[வேலை அமுதுக்கு வரு வானவர்கள் ஒத்தனர்கள் வீடுமன் முதல் படைஞர், ஆலம் நிகர் ஒத்தனன் அனீகினி தொலைத்து ஒரு தன் ஆண்மை நிலை இட்டு வருவோன்; மேல் இனி (இனிமேல்) இமைப் பொழுது நாம் வெளியில் நிற்கில் இவன் மேலிடும் என கருதினான் போல் எழு வய புரவி ஊரும் இரதத்து இரவி போய் உததியில் சொருகினான்.

**விளக்கம்:-** வீடுமன் முதலிய வீரர் பாற்கடல் தோன்றிய அமிர்தம் நாடி வந்த தேவர்களை ஒத்தனர், சத்ருக்களின் சேனையைத் தொலைத்து தனது ஆண்மையை நிலை நிறுத்தி வந்த விசயன் அக்கடலில் தேவர்கள் அஞ்சும்படி தோன்றிய விஷத்தை ஒத்தான்; இந்நிலையில், இனிமேல் நாம் மறையாது நின்றிருந்தால் அவன் தன் மேலும் போரெழுவான் என்று எண்ணினான்போல் சூரியன் உததியில் (கடலில்) மறைந்தான், என்பது பொருள்.

அனீகினி - சேனை. படைஞரால், என்பதிலுள்ள ஆல், அசை. எழு குதிரைத் தேர் - ஏழு குதிரைகள் பூட்டப் பெற்ற சூரியனது தேர்.

முதலிரண்டடிகள், உவமையின் பாற்படும். ஈற்றடிகள் தற்குறிப் பேற்றம். இது, சூர்யாத்தமன வருணனை. சூர்யன் அஸ்தமித்தலை அவன் கடலில் மறைவதாகக் கூறுவது கவிமரபு. சொருகினான், என்பது தன்னைக் கடலில் ஆழ்த்திக் கொண்டு சூரியன் மறைந்தான் என்ற பொருளது.

**31. ஆதபனொ ளித்ததிசை யோவொளி சிவந்ததற வாழ்குருதி**
**மெத்து கையினான்**
**மாதிரமு மைக்கடலு மாநிலமு முட்டவொரு மாசறுசி வப்பு**
**வடிவாய்**

**ஏதிலிருள் புக்குலவ லாமிடம றக்கடையி னேறன லியொத்த திகலிப்**
**பாதகமி குந்த்கொலை வாணிருபர் தத்தமது பாடிநகர் புக்க னர்களே.**

[ஆதபன் ஒளித்த திசையோ ஒளி சிவந்தது. அற ஆழ் குருதி மெத்துகையினால் மாதிரமும் மை கடலும் மாநிலமும் முட்ட ஒரு மாசு அறு சிவப்பு வடிவு ஆய், ஏதில் இருள் புக்கு உலவல் ஆம் இடம் அற, கடையின் ஏறு அனலி ஒத்தது இகலி பாதகம் மிகுந்த கொலை வாள் நிருபர் தம் தமது பாடிநகர் புக்கனர்கள், ஏ.]

**விளக்கம்:-** ஆதபன் (சூரியன்) ஒளித்துக் கொண்ட திசையோ செந்நிறம் அடைந்தது; திசையும், கடலும், பூமியும் ஆகியவை முழுவதும் மிகவும் ஆழ்ந்து படிந்துள்ள இரத்தப் பெருக்கு மிகுதலால், களங்கம் அற்ற சிவந்த நிறமுடையதாய், பகையாகும் இருள் புகுந்து சஞ்சரிப்பதற்கு ஏற்றதான வெற்றிடம் இல்லாதபடி, யுகாந்தக் கடலினின்று எழுந்து பரவும் வடவாமுகாக்னியை ஒத்திருந்தது; பகைத்துப் பாவத்தை மிகச் செய்யும், கொலைத் தொழிலிற்கான வாள் முதலிய ஆயுதங்களை உடைய அரசர்கள் தத்தம் பாடிவீடு சென்றனர், - என்பது பொருள்.

மெத்துகை, (மெத்துதல்) மிகுதிப் பொருளது. ஏதில் இருள் - களங்கம் இல்லாத இருள். இச் செய்யுள் மாலை வர்ணனை. ஆதபன் ஒளித்த திசை சிவந்தது, என்பது செவ் வானத்தைக் குறிக்கும். இரத்த வெள்ளத்தால் பூமி முழுதும், இருளின் பிரவேசத்திற்கு இடமில்லாததாயிற்று. அந்த சிவப்பு நிறத்தை வடவாமுகாக்னி போன்றது என்றது தற்குறிப் பேற்றம். ஏது இல் – சம்பந்தம் இல்லாத, அது இங்கே பகைகையக்குறிப்ப தாயிற்று. விசாலம் பற்றிப் படைவீடு பாடிநகர், எனப்பட்டது.

சூர்யோதயம்

**32. கூளிகள்செ ருக்கிநட மாடுகளம் விட்டரசர் கோமகனை யுற்ற ளவிலே**
**வாளபிம னுக்குமொரு தேர்விசய னுக்குநம்வ ரூதினிபு றக்கி டுவதே**
**நாளைமுது கிட்டவரை யாருயிர்செ குத்திடுவ னுனெனவு ரைத்த னனரோ**
**மீளவுமு தித்தனன்வி ரோசனன்மு தற்பகலில் வீரர்வி றலைக்க ருதியே.**

[கூளிகள் செருக்கி நடம் ஆடும் களம் விட்டு அரசர் கோமகனை உற்ற அளவிலே வாள் அபிமனுக்கும் ஒரு தேர் விசயனுக்கும் நம் வரூதினி புறக்கு இடுவதே! நாளை முது கிட்டவரை ஆர் உயிர் செகுத்திடுவன் நான், என உரைத்தனன் அரோ; மீளவும் உதித்தனன் விரோசனன் முதல் பகலில் வீரர் விறலை கருதி, ஏ.

**விளக்கம்:-** கூளிகள் கூத்திடும் படுகளம் அகன்ற அரசர் துரியோதனனைச் சேர்ந்த அளவில், அவன், அரசர்களை நோக்கி, ''ஒற்றைத் தேர் விசயனுக்கும் இளம்பாலகன் அபிமனுக்கும் உடைந்து நீங்கள் பின்வாங்கியது நேர்ந்ததே! என்ன அவமானம்! நாளை யாவராவது புறம் கொடுப்பின், அவர் களைக் கொல்வேன்'' என்ருன்; முன்னைய பகலில் அபிமன், விசயன், என்ற வீரர்களின் போர்த் திறங்கண்ட சூரியன், மீண்டும் அவர் விறல் காண எண்ணினுன் போல் உதயமானுன்.

போர்க்களத்தில் பிணங்களைத் தின்று களித்துப் பேய்கள் கூத்தாடுவதாகக் கூறல் மரபு. விரோசனன் - சூரியன். ஈற்றடி தற்குறிப் பேற்றம். சூரியன் உதித்தலாகிய காரியம், வீரர் விறல் காணவேண்டும் என்ற காரணத்தால், என்றதால், இது ஏதுத்தற் குறிப்பேற்றம் ஆகும்.

**இரண்டாம் போர்ச் சருக்கம் முற்றும்.**

## மூன்ரும் போர்ச் சருக்கம்

### கடவுள் வாழ்த்து

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. தந்த முறியி லவர்வைத்த**
**தயிர்பால் வெண்ணெ யெட்டாமல்**
**குந்தி யுரலின் மிசையேறி**
**யிளங்கோ வியர்முன் கூத்தாடி**
**நந்தன் மனையி லசோதையிரு**
**நயனங் களிக்க விளையாடும்**
**மைந்த னிருதா ளொருநாளு**
**மறவா தாரே பிறவாதார்.**

[தம் தம் உறியில் அவர் வைத்த தயிர் பால் குந்தி உரலின் மிசை ஏறி இளங்கோவியர் முன் கூத்தாடி, நந்தன் மனையில் அசோதை இருநயனம் களிக்க விளையாடும் மைந்தன் இருதாள் ஒரு நாளும் மறவாதாரே பிறவாதார்.]

**விளக்கம்:-** கோவியர் மனையில் உறியில் வைத்த தயிர் வெண்ணெயை உரலின் மேலிருந்து ஏறிக் களவாடி உண்டும், இளங்கோவியர்முன் குரவை முதலிய கூத்தாடியும், நந்தன் மனையில் அசோதைப் பிராட்டி கண்களிக்க விளையாடியும் மகிழ் வித்த குழந்தைக் கண்ணனின் திருவடிகளை ஒருநாளும் மறவா தார் பிறவிக்கடலைக் கடந்தவராவர், என்பதாம். ஒருநாளும்— எப்பொழுதும், இடைவிடாது, மறவாதார்-தியானம் செய்பவர்.

பிறவி அறுக்க அவனது இருபாதங்களையும் தியானித்தலே வழி, என்று கூறியபடி.

## இருதிறத்தாரும் அணிவகுத்தல்

**2. ஏலா வமரின் மூன்றுநா**
**ளிரண்டு படையுந் திரண்டேறக்**
**காலார் திண்டேர் வீடுமனும்**
**வகுத்தான் கடுங்கா ருடயூகம்**
**மேலாம் வென்றிப் பாண்டவர்தம்**
**வெஞ்சே னையைக் கொண் டெஞ்சாமல்**
**தோலா வர்த்த சந்த்ரப்பேர்**
**வியூகம் வகுத்தான் றுளவோனே.**

[ஏலா அமரின் மூன்றும் நாள் இரண்டு படையும் திரண்டு ஏற கால்ஆர்திள் தேர் வீடுமனும் வகுத்தான் கடுங்காருடயூகம்; மேல்ஆம் வென்றி பாண்டவர்தம் வெம் சேனையை கொண்டு எஞ் சாமல் தோலா அர்த்த சந்தரம் பேர் வியூகம் வகுத்தான் துள வோன், ஏ.]

**விளக்கம்:-** ஏலா....ஏற - (போர்) ஏற்று எதிர்க்கப் போர்க்களம் செல்ல. கால் ஆர் திண்தேர் - சக்கரங்களை உடைய வலிய தேர். கடுங்காருடயூகம் - கொடிய கருடவியூகம். கருடயூகம் - கருடன் போல் படையை அணி வகுத்தல். மேல் ஆம்வென்றி பாண்டவர் - மேன்மைக் குணங்களை உடையவரான பாண்டவர். (அவர்கள் சார்பில் கண்ணன்) அர்த்த சந்திர வியூகம் வகுத்தான் - பாதி சந்திரன் போன்ற வடிவத்தில் படையை அணிவகுத்தான். எஞ்சாமல் - குறைவு இல்லாமல்; அதாவது, வீடுமனது அணி வகுப்பிற்கு வலிமையில் பின்னிடாமல். வீடுமன் கருட வியூகம் வகுக்கக் கண்ணன் அதற்கெதிர் அர்த்த சந்திர வியூகம் வகுத் தான், என்க. யூகம் - (வடசொல் திரிபு) வியூகம்.

**3. போரே தொடங்கி யிருபடையும்**
**புகுந்த பொழுதி லுகந்தொலைத்த**
**காரே தொடங்கிக் கார்கோள்வெங்**
**கடுங்கால் கலிகொண் டார்ப்பன போல்**

**வாரே தொடங்கும் பணைக்குலமும்**
**மணிக்கா களமு முடன்முழங்கப்**
**பாரே தொடங்கி யெவ்வுலகு**
**மடைவே செவிடு பட்டனவே.**

[போரே தொடங்கி இரு படையும் புகுந்த பொழுதில், உகம் தொலைத்தே காரே தொடங்கி கார் கொள் கடுங்கால் கலிகொண்டு ஆர்ப்பனபோல், வாரே தொடங்கும் பணை குலமும் மணி காகளமும் உடன் முழங்க பாரே தொடங்கி எ உலகும் அடைவே செவிடு பட்டனவே.]

**விளக்கம்:-** போர்தொடங்கி இருபக்கத்துச் சேனைகளும் களம் புகுந்த பொழுது, யுகமுடிவில் உலகத்தை அழிக்கும் மேகம் முதலாக, கடல்களும் மிகக்கொடிய காற்றும் சப்தித்தலைக் கொண்டு முழங்குவனபோல், – வாரினல் கட்டப் பெற்ற பறைகளின் கூட்டமும், அழகிய எக்காளம் என்னும் ஊது கருவியும் சேர்ந்து ஒலிக்க, பூமி முதலாகவுள்ள எல்லா உலகங்களிலுமுள்ள பிராணிகளும் எல்லாம் செவிடு ஆயின, என்பது பொருள்.

கார் - மேகம். கார்கோள் - சமுத்திரம். கால் - காற்று. கலி - பேரொலி. வாரே தொடங்கும் பணை - வாரினல் கட்டப் பெற்ற பறை. காளகம் - எக்காளம். தொடங்கி, என்பது, ஆரம்பித்து, முதலாக, கட்டப்பெற்ற, முதலாகவுள்ள, என்ற பொருள்களில் வந்துள்ளது. அடைவு - முழுமை, எல்லாம், முறை. ஏகாரங்கள் ஆறும் அசை.

இருதிறத்துப் படைகளும் களம் புகுந்து போர் தொடங்கிய பொழுது போர்ப்பறை முதலியவற்றால் உண்டான பேரொலியின் வருணனை இது.

### வீடுமன் பாண்டவரை வளைத்தல்

**4. சொல்லார் கேள்விக் கங்கைமகன்**
**துரோணன் முதலா மதிரதரும்**
**எல்லா ரிரத கயதுரங்க**
**மேலா ளுடனே காலாளும்**
**வில்லான் முன்னாட் டமைத்துரந்த**
**வீரன் தனையுஞ் சிறுவனையும்**
**மல்லால் வஞ்ச மல்லடர்த்த**
**மாயன் றனையும் வளைத்தாரே.**

[சொல் ஆர் கேள்வி கங்கை மகன் துரோணன் முதல் ஆம் அதிரதரும், எல் ஆர் இரத கய துரங்கம் ஏல் ஆளுடனே காலாளும், வில்லால் முன் நாள் தமை துரத்த வீரன் தனையும்

சிறுவனையும், வல்லால் வஞ்சம் மல் அடர்த்த மாயன் தனையும் வளைத்தார், ஏ.]

**விளக்கம்:-** சொல் ஆர் கேள்வி - அறிவின் நிறைவுடைய சொற்கள் நிறைந்த நூல் கேள்வி. வீரத்தின் ஒளி நிறைந்த தேர் யானை குதிரைகளில் பொருந்திய வீரர்களுடன் காலாள் வீரர் களும், என்பது இரண்டாவது அடியின் பொருள். எல் - பிரகாசம். முன் நாள் தமை வில்லால் துரந்த வீரன் - விசயன். துரந்த - துரத்திய. மற்போரால் (இளமைப் பருவத்தில் கம்சனுல் ஏவப் பெற்ற) வஞ்சனை உடைய மல்லர்களைக் கொன்ற மாயனுகிய கண்ணனையும் விசயனையும், அபிமனையும், வீடும துரோணர் முதலிய பெருவீரர்கள் வளைத்துக் கொண்டனர், என்பதாம்.

**5. சூரர்க் கெல்லா முதலெண்ணுந்**
**துரியோ தனனுந் தம்பியரும்**
**ஆரக் கவிகைக் காந்தாரன்**
**முதலா வுள்ள வவனிபரும்**
**சேரத் திரண்டு கரிகளொரு**
**சிங்கம் வளைத்த தெனச்சிங்க**
**வீரத் துவச னின்றுழிப்போய்**
**வளைத்தார் சமரம் விளைத்தாரே.**

[சூரர்க்கு எல்லாம் முதல் எண்ணும் துரியோதனனும் தம்பி யரும் ஆரம் கவிகை காந்தாரன் முதலா உள்ள அவனிபரும் சேர திரண்டு, கரிகள் ஒரு சிங்கம் வளைத்தது என, சிங்கம் வீரம் துவசன் நின்ற உழி போய் வளைத்தார், சமரம் விளைத்தார், ஏ.]

**விளக்கம்:-** சூரர்கணத்தில் முதலிடம் பெற்ற துரியோதனனும், அவனது தம்பியரும்,—என்பது முதலடியின் பொருள். ஆரக் கவிகை - முத்துக்களினுல் அலங்கரிக்கப் பெற்ற குடை. சிங்க வீரத்துவசன் - சிங்கவடிவத்தைத் தன்னிடத்தே கொண்ட வீரத் தன்மைக்கு அடையாளமான கொடியை உடைய வீமன். துரியோதனனும் அவனது தம்பியரும், காந்தார மன்னனும் ஒன்று பட்டு, யானைக்கூட்டம் சிங்கத்தைச் சூழ்ந்துகொண்டது போல் வீமனைச் சூழ்ந்து போர் செய்தனர், என்பதாம். வீமனது வெற்றி யையும், தொகை மிகுதியுடைய துரியோதனுதியர் தோல்வியை யும், புலவர் உவமையால் குறித்தபடி.

**6. வரத்தான் மறையாற் றும்பெற்ற**
**வரிசா பங்கள் பிடித்ததனிக்**
**கரத்தான் மறைத்த தவரவர்தங்**
**கடைக்கண் படைக்கண் விரைந்துவிடும்**

**சரத்தான் மறைந்த தகல்வானம்**
**தரணி தலமச் சரந்துணித்த**
**சிரத்தான் மறைந்த துகுகுருதிச்**
**சேற்ருன் மறைந்த திசைநான்கும்.**

[வரத்தால் மறையால் தாம்பெற்ற வரி சாபங்கள் பிடித்த தனி கரத்தால் மறைந்தது. அவர் அவர் தம் கடைக்கண், படைக்கண் விரைந்து விடும் சரத்தால் மறைந்தது. அகல் வானம், தரணி தலம் அ சரம் துணித்த சிரத்தால் மறைந்தது, உகு குருதி சேற்ருல் மறைந்த திசை நான்கும்.]

**விளக்கம்:-** தேவர்களிடமிருந்து பெற்ற வரத்தாலும் மந்திரத் தாலும் தாங்கள் பெற்ற வரிவில்களைத் தாங்கியுள்ள சிறந்த கை களினுலும், அந்த அந்த வில் வீரர்களின் (கடைக்கண், அதாவது கண்ணின் கடைப்பகுதி மறைந்தது; படைக்கண், அதாவது வில்லாகிய அந்த ஆயுதத்திலிருந்து விரைவாக விடும் அம்புகளால் அகன்ற வானவெளி மறைந்தது; அந்த அம்புகள் அறுத்த தலைக ளால் தரணிதலம் (பூமி) மறைந்தது; அத்தலைகளிலிருந்து பெருகிய இரத்தச் சேற்ருல் திசைகள் நான்கும் மறைந்தன, என்பது பொருள். இருதிறத்தோரும் செய்த கடும்போரின் வர்ணனை இது.

**7. துவசம் பிளந்து தேரூருந்**
**துரகம் பிளந்து சுடர்மணிப்பொன்**
**கவசம் பிளந்து மார்பகமும்**
**பிளந்தூ டுருவக் கடோற்கசன்ருன்**
**நவசந் திரமா முனை வாளி**
**தொடுத்தான் தொடுத்த நாழிகையின்**
**அவசம் பிறந்து தம்பியர்முன்**
**விழுந்தா னெருவர்க் கழியாதான்.**

[துவசம் பிளந்து தேர் ஊரும் துரகம் பிளந்து, சுடர் மணி பொன் கவசம் பிளந்து மார்பு அகமும் பிளந்து ஊடு உருவ கடோற்கசன் தான் நவ சந்திரன் மா முனைவாளி தொடுத்தான்; தொடுத்த நாழிகையின் அவசம் பிறந்து தம்பியர் முன் விழுந்தான் ஒருவர்க்கும் அழியாதான்.]

**விளக்கம்:-** (போரில்) துரியோதனனது துவசத்தை (கொடியை) பிளந்து, தேரை இழுக்கும் குதிரைகளை அழித்து, சுடர் மணிப் பொன் கவசம் பிளந்து, மார்பைப் பிளந்து உள்ளே ஊடுருவிச் செல்லும்படி கடோற்கசன் புதுமையான கூரிய அர்த்த சந்திரக்கணையைப் பிரயோகித்தான்; அவ்வாறு தொடுத்த அளவில், எவர்க்கும் தோலாதவனுன துரியோதனன், தம்பியர் முன் தன்வயம் இழந்து விழுந்தான், என்பது பொருள்.

தம்பியரும் பிறரும் அயலிருந்தும் துரியோதனன், கடோற்கசனுல் தோல்வியுற்று வீழ்ந்த இழிவு தோன்ற, ''தம்பியர் முன் வீழ்ந்தான்'', எனப் பட்டது.

**8. நாகம் துவச மெனவுயர்த்தோன்**
**நடுங்கா முன்னம் நண்ணலரை**
**மாகந் தனிற்சென் றமர்கடந்து**
**வருமைந் துடையோன் றிருமைந்தன்**
**வேகம் படநின் றெருசமர**
**வேலான் மீண்டு மவ்வேந்தன்**
**பாகன் தனது மருமத்திற்**
**பாய்ந்தா னவனு மாய்ந்தானே.**

[நாகம் துவசம் என உயர்த்தோன் நடுங்கா முன்னம் நண்ணலரை மாகம் தனில் சென்று அமர் கடந்து வரு மைந்து உடையோன் திருமைந்தன் வேகம் பட நின்று ஒரு சமரம் வேலால் மீண்டும் அ வேந்தன் பாகன் தனது மருமத்தில் பாய்ந்தான், அவனும் மாய்ந்தான், ஏ.]

**விளக்கம்:-** பாம்பைக் கொடியில் கொண்ட துரியோதனன், கடோற்கசனது கணையினுல் வலியழிந்து வீழ்வதன் முன், தேவலோகம் சென்று தேவர் பகைவர்களை வென்று வந்த ஆற்றலுடைய விசயனது மகனுன அபிமன், போர்க்களத்தில் உக்ரமாகப் போர் செய்து நின்று, மீண்டும், துரியோதனனது தேர்ப்பாகன் மேல் போர் வேலை ஒன்றைப் பாய்ச்சினுன், அவனும் மாய்ந்தான்,—என்பது பொருள். நண்ணலர் - பகைவர். மைந்து – வலிமை. வேகம் பட - உக்ரமாக. பாய்ந்தான் – செலுத்தினுன், பாய்ச்சினுன்.

துரியோதனனிடம் வீடுமன் வரல்.

**9. விழுந்தான் வேலாற் றேர்ப்பாகன்**
**வெஞ்சா யகத்தால் விறல்வேந்தர்**
**தொழுந்தா ளரசன் றனுமுயிர்**
**சோர்ந்தா னென்னுந் தொனிகேட்டுச்**
**செழுந்தார் வாகை விசயனையும்**
**திருமா லையும்விட் டொருமுனையா**
**எழுந்தான் மந்தா கினிமைந்தன்**
**இளைத்தோர் தமக்கோ ரெயில்போல்வான்.**

[விழுந்தான் வேலால்தேர் பாகன், வெம் சாயகத்தால் விறல் வேந்தர் தொழும் தாள் அரசன் தானும் உயிர்சோர்ந்தான் என்னும் தொனி கேட்டு, செழுந்தார் வாகை விசயனையும் திருமாலை

யும் விட்டு ஒரு முனைவாய் எழுந்தான் மந்தாகினி மைந்தன், இளைத்தோர் தமக்கு ஓர் எயில் போல்வான்.]

**விளக்கம்:-** பாகன் வேலால் வீழ்ந்தான், வலிய அரசர்கள் வணங்கும் பாதங்களை உடைய துரியோதனன், கடோற்கசனது கணையால் உயிர் சோர்ந்தான் என்று வீரர்கள் கூறிய தொனி கேட்டு, இளைத்தவர்களுக்கு மதில் போன்ற கங்கை மைந்தனுகிய வீடுமன், விசயனையும் கண்ணனையும் விட்டு விட்டு மிகவேகமாய்த் துரியோதனன் இருக்கும் இடம் வந்தான்,—என்பது பொருள். ஒரு முனையாய் - மிகவேகமாய். எயில் - மதில். இளைத்தோர்க்கு எயில் போல்வான் - இளைத்தோரை இரட்சிப்பவன்.

**10. வண்டா ரலங்கல் வலம்புரியோன்**
**மார்பந் துளைத்த வாளிவழி**
**கண்டா னெடுத்துத் தாழ்ந்ததிருக்**
**கையா லணைத்துக் காற்றேரில்**
**கொண்டா னுவி தருமருந்து**
**கொடுத்தா னவனுங் கொடுத்தமருந்து**
**உண்டா னுண்ட கணத்தினின் மீண்(டு)**
**உணர்ந்தா னுலகேழுடையானே.**

[வண்டு ஆர் அலங்கல் வலம்புரியோன் மார்பம் துளைத்த வாளி வழி கண்டான், எடுத்து தாழ்ந்த திரு கையால் அணைத்து கால் தேரில் கொண்டான், ஆவி தரும் மருந்து கொடுத்தான்; அவனும் கொடுத்த மருந்து உண்டான்; உண்ட கணத்தினில் மீண்டு உணர்ந்தான் உலகு ஏழு உடையான்.]

**விளக்கம்:-** வலம்புரி - நஞ்சாவட்டைப்பூ. வண்டு ஆர் அலங்கல் வலம் புரியோன் - வண்டுகள் மொய்க்கும் நஞ்சா வட்டைப் பூக்களினுலாகிய மாலைதரித்த துரியோதனன். தாழ்ந்த திருக்கை-நீண்ட அல்லது முழங்கால் வரை தாழ்ந்த அழகிய கை. கால்தேர் - சக்கரங்களை உடைய தேர். வந்த வீடுமன், துரியோதனனது மார்பில் அம்பு சென்ற வழியைப் பார்த்து, தனது கைகளால் அவனை எடுத்து அணைத்து, தனது தேரில் அவனை ஏற்றிக் கொண்டு, உயிர் தரவல்ல மருந்தைக் கொடுத்தான்; அவனும் உண்டான்; உண்ட அளவில் ஏழு உலகங்களையும் தன தாக உடைய துரியோதனன் மீண்டும் உணர்வு பெற்றுன்,— என்பது பொருள்.

**11. மன்னன் றனையச் சந்தனுவின்**
**மைந்தன் பெரும்பே ரணிநிறுவிப்**
**பொன்னங் குன்றே யிவன்சிலையு**
**மிவனே காணும் புராரியென**

**மின்னுங் கழற்கால் வீமனுடன்**
**வெம்போர் விளைத்து விடலையராய்**
**முன்னின் றவரும் பின்னிடத்தன்**
**முனைவா ளியினுல் வினைசெய்தான்.**

[மன்னன் தனை அ சந்தனுவின் மைந்தன் பெரும் பேர் அணி நிறுவி, பொன் அம் குன்றே இவன் சிலையும், இவனே புராரி என, மின்னும் கழல் கால் வீமனுடன் வெம்போர் விளைத்து விடலையராய் முன் நின்றவரும் பின் இட தன் முனை வாளியினுல் வினை செய்தான்.]

**விளக்கம்:-** மன்னன் - துரியோதனன். சந்தனு மைந்தன் - வீடுமன். பொன் அம் குன்று - மேருமலை. புராரி - சிவபெருமான். விடலையர் - இளைஞரான அபிமன், கடோற்கசன். வீடுமன் துரியோதனனை மிகப்பெரிய அணிவகுப்பிலே இருக்கச் செய்து, ''இவனது வில்லும் சிவபெருமான் பற்றிய மேருமலை, இவனே புராரி, காணுங்கள்,'' என்று சொல்லும்படி, வீமனேடு, (அவன் அருகிருந்து) கொடிய போரைச் செய்து முன் நின்ற இளம் வீரர் களாகிய அபிமனும் கடோற்கசனும் பின்னிடும்படி, (வீடுமன்) தனது கூரிய கணைகளால் போர் செய்தான், என்பது பொருள்.

காணும், முன்னிலை அசை; அல்லது தேற்றம். பெரும் பேர் அணி, என்பது மிகப் பெரிய அணி, என்ற பொருளது.

**12. மருமங் களினும் புயங்களினும்**
**வதனங் களினுங் கண்களினும்**
**செருமும் படிவெங் கணைமாரி**
**சிந்திச் சிந்திச் சிரந்துணித்துத்**
**தருமன் சேனைப் பரவையெலாந்**
**தானே யாகித் தலைநாளில்**
**பொருமந் தரமால் வரைபோலத்**
**திரிந்தான் வெம்போர் புரிந்தானே.**

[மருமங் களினும் புயங்களினும் வதனங்களினும் கண்களினும் செருமும்படி வெம் கணை மாரி சிந்தி சிந்தி சிரம் துணித்து, தருமன் சேனை பரவைஎலாம் தானே ஆகி, தலை நாளில் பொரு மந்தரம் மால் வரை போல திரிந்தான், வெம் போர் புரிந்தான், ஏ.]

**விளக்கம்:-** செருமும்படி - தைத்து நெருங்கும்படி. தலை நாள் - முன்னெரு காலம். பொரு மந்தர மால் வரை - பாற்கடலில் பொருந்திய பெரிய மந்தரமலை. வீடுமன்தான் ஒருவனேயாய், தருமனது சேனை சமுத்திரம் எங்கும் திரிந்து பகைவரைக் கொன்று குவித்துக் கொண்டிருந்தான், என்பதாம்.

**13. மலையொத் ததிருங் கடகளிறும்**
**வயமா வணியு மான்றேரும்**
**தொலையத் தொலைய யாவரையுஞ்**
**சுடுவெங் கணையாற் றுரந்துதுரந்(து)**
**அலையத் தரங்க மெறிகடல்வாய்**
**வடவா னலம்போ லவனின்ற**
**நிலையைக் கண்டுங் காணுன் போல்**
**நின்றுன் விசய னிகரில்லான்.**

[மலை ஒத்து அதிரும் கடகளிறும், வயமா அணியும், மான் தேரும் தொலைய தொலைய யாவரையும் சுடு வெம் கணையால் துரந்து துரந்து, அலைய தரங்கம் எறி கடல்வாய் வடவானலம் போல் அவன் நின்ற நிலையை கண்டும் காணுன்போல் நின்றுன் விசயன் நிகர் இல்லான்.]

**விளக்கம்:-** மலைபோன்றதும், முழங்குகின்றது மான மத யானைகளும் வலிய குதிரைகளும் குதிரைகள் பூட்டப்பெற்ற தேர் களும் அழியும்படி, பகைவர் அனைவரையும் சுடு சரங்களால் துரத்தி அடித்து, அலையும்படி அலைகளை வீசும் கடலினிடத்தே உள்ள வடவா முகாக்நிபோல் அவன் (வீடுமன்) நின்ற நிலையைக் கண்டும், நேரற்றவனுன விசயன், (வீடுமனது கடும்போரைக்) காணுதவன் போல் செயலற்றுத் திகைத்து நின்றுன், என்பது பொருள். அனலம் - நெருப்பு. வடவானலம் - வடவா முகாக்நி.

வேறு

## கண்ணன் சக்கரம் எடுத்தல்

**14. கானெரி துற்றென வீடும னிப்படி காதிம லைத்திடவும்**
**மானநி னைத்திலை சாபமெ டுத்திலை வாளிதொ டுத்திலைநீ**
**ஏனிது னக்கென மாயனு ரைத்தவ னேறிர தத்திழியா**
**ஆனதெ னக்கினி யாகவெ னத்தனி யாழியெ டுத்தனனே.**

[கான் எரி துற்று என வீடுமன் இப்படி காதி மலைத்திடவும், மானம் நினைத்திலை, சாபம் எடுத்திலை, வாளி தொடுத்திலை நீ, ஏன் இது உனக்கு என மாயன் உரைத்து, அவன் ஏறு இரதத்து இழியா, ஆனது எனக்கு இனி ஆக என தனி ஆழி எடுத்தனன், ஏ.]

**விளக்கம்:-** கான் எரி துற்று என—காட்டுத்தீ பற்றி நெருங்கி எரித்தது போல். காதி – தாக்கி. உனக்கு ஏன் இது என மாயன் உரைத்து - உனக்கு ஏன் செயலற்று நிற்கும் இந்தக் குணம் என்று கண்ணன் சொல்லி, ஏறு தேர் இழியா - விசயன் ஏறியுள்ள தேரி

னின்று இறங்கி, (எனக்கு இனி ஆனது ஆகட்டும் என்று சொல்லிக் கொண்டு கண்ணன் தேரினின்று இறங்கித் தனது சுதர்சனம் என்னும் சக்கரத்தை எடுத்தான், என்பதாம்.)

'போரில் படையெடேன்', என்று துரியோதனனுக்கும் கூறியிருந்தானுதலால், இப்பொழுது கண்ணன் சக்கரத்தை எடுப்பது பழி கூட்டிவைக்கும் செயலாகும். அவ்வாறிருந்தும், பாண்டவரை இரட்சிக்க வேண்டிப் படை எடுத்தல் அவசியமாகவே, ''எனக்கு ஆனது ஆகட்டும்'' என்று சொல்லிப் படை எடுத்தான், என்க. கண்ணன் படை எடுத்ததற்கு மற்றோர் காரணமும் உளது. 'போரில் படையெடேன்', என்று கண்ணன் துரியோதனனுக்குச் சொன்னதைக் கேள்வியுற்ற வீடுமன், ''கண்ணனை ஆயுதம் எடுக்கச் செய்வேன்'', என்று துரியோதனனிடம் கூறினுன் என்றும், தனது வாக்குத் தவறினும், பக்தனுன வீடுமன் வாக்குத் தவறலாதென்று கண்ணன் படை எடுத்தான், என்றும் பெரியோர் கூறுவர். கண்ணன் கர்ம பந்தம் இல்லாதவனுதலால், வாக்குத் தவறுகை அவனைப் பாதிக்காது. வீடுமன் கர்ம பந்தமுடையவனுதல் பற்றி, எம்பிரான் சக்கரத்தை எடுத்துப் பக்தனது சபதம் நிறைவேறுகையைச் செய்து வைத்தான். அடியார்களை எம்பிரான் ஆட்கொள்ளும் பேரருள் உடைமையை விளக்கும் கருத்தது கண்ணனது செயல்.

**15. ஆழியெ டுத்தனன் வீடும னைப்பொரு தாவிய ழித்திடுவான்**
**ஊழிமு கக்கனல் போலெழு மப்பொழு தோடிய ருச்சுனனும்**
**தாழித னக்குமுன் வீடுகொ டுத்தரு டாளிணை யைப்பிடியா**
**வாழியு னக்கிவ னேவெதிர் வித்தக மாயவெ னத்தொழுதான்.**

[ஆழி எடுத்தனன் வீடுமனை பொருது ஆவி அழித்திடுவான், ஊழி முகம் கனல் போல் எழும் அப்பொழுது, ஓடி அருச்சுனனும் தாழி தனக்கு முன் வீடு கொடுத்தருள்தாள் இணையை பிடியா, ''வாழி, உனக்கு இவனே எதிர் வித்தக மாய'', என தொழுதான்.]

**விளக்கம்:-** ஆழி - சக்கரம். ஊழி முகம் கனல் போல் - பிரளய காலத்து நெருப்பைப் போல். கையில் சக்கராயுதத்தை எடுத்தவனுய் வீடுமனோடு போர் செய்து அவனை அழிப்பதற்கு ஊழிக் கனல் போல் எழுந்த பொழுது, அருச்சுனன் ஓடிச் சென்று, தாழிக்கு முன் முக்தி கொடுத்த கண்ணனது திருத்தாள்களைப் பற்றிக்கொண்டு, ''வித்தகனே, மாய, வாழி; உனக்கு அவனே எதிர்!'' என்று கூறித் தொழுதான், என்பது பொருள்.

வீடுமனைத் தன்னுல் வெல்ல முடியவில்லை என்ற பழி சாருமே, என்று அஞ்சியோ, அல்லது, கண்ணனது 'போரில் படை

யெடேன்' என்ற சொல் பொய்த்ததாகுமே என்று அஞ்சியோ, விசயன் கண்ணனது திருவடிகளைப் பற்றிக்கொண்டு அவன் போர் புரியாதபடி தடுத்தான், என்க. பகவானை வாழ்த்தல் பக்தர் களின் மரபு.

கண்ணன் ஒரு நாள் தயிர்த்தாழிகளை உடைத்தது கண்டு சினங்கொண்ட எசோதைப் பிராட்டி, கையில் கோல் எடுக்கவும், அவன் ஓடிச்சென்று ததிபாண்டன் என்பவனது மனையில் புகுத லும், அவன் கண்ணனது இரு பாதங்களையும் பிடித்துக்கொண்டு, ''எனக்கும், என்னைச் சேர்ந்தாருக்கும், எனது தயிர்த்தாழிக்கும் முக்தி கொடுப்பதனால், உன் காலை விடுவேன். இல்லையேல் உன் அன்னைக்கு உன்னைக் காட்டிக் கொடுத்துவிடுவேன்'', என்னலும், கண்ணன், அவன் வேண்டுகோளை நிறைவேற்றி வைத்தான், என்பது கதை.

**16. வாசவன் முற்பெறு காளைதொ ழத்தொழ மாறுப டச்சினவும்**
**கேசவ னிப்படி மேல்வரு கிற்பது கேவல முற்றுணரா**
**நாசந மக்குறு காலந ணித்தென நாடிந டுக்கமுடன்**
**தேசணி பொற்றட மேருவெ னத்திரி தேரினை விட்டிழியா.**

[வாசவன் முன் பெறு காளை தொழ தொழ மாறுபட சினவும் கேசவன் இப்படி மேல்வரு கிற்பது கேவலம் உற்று உணரா, நாசம் நமக்கு உறுகாலம் நணித்து என நாடி நடுக்கமுடன் தேசு அணி பொன் தடமேரு என திரி தேரினை விட்டு இழியா - அடுத்த செய்யு ளோடு தொடரும்]

**விளக்கம்:-** முன் வாசவன் பெறு காளை - அருச்சுனன். மாறுபட சினவும் கேசவன் - பகைதோன்றும்படி வெகுண்ட கண்ணன். இப்படி தன்மேல் வருகிற்பது கேவலம் உற்று உணரா - இப்படித் தன்மேல் எதிர்த்து வருவதை தனது ஞானத் தால் கண்டு அறிந்து. (தனக்கு) நாசம் நேருங்காலம் சமீபத்தது என்று வீடுமன் அறிந்து, அச்சத்தோடு, - என்பது மூன்றாவது அடியின் பொருள். தேசு - ஒளி. ஒளி பொருந்திய அழகிய பெரிய மேருமலை போன்ற தேரினைவிட்டுக் கீழே (வீடுமன்) இறங்கி, - என்பது நாலாவது அடியின் பொருள். இதுவும் தொடரும் மூன்று செய்யுள்களும் குளகம். கேவலம் - ஞானம்.

**17. ஆரண கற்பித மாதவ வச்சுத வாழியி டைத்துயிலும்**
**காரண சிற்குண ரூபம லர்க்கொடி காதன்ம னத்துறையும்**
**நாரண வற்புத வானவ ருக்கொரு நாயக நிற்பணியும்**
**வாரண முத்திவி சாலத லத்திடை வாழ்வுற வைத்தவனே.**

[ஆரணம் கற்பித, மாதவ, அச்சுத, ஆழியிடை துயிலும் காரண, சித்குணரூப, மலர்க்கொடி காதல் மனத்து உறையும்

நாரண, அற்புத, வானவருக்கு ஒரு நாயக, நின் பணியும் வாரணம் முத்தி விசாலதலத்திடை வாழ்வு உற வைத்தவனே.]

**விளக்கம்:-** இதுவும், இதைத் தொடரும் இரண்டு செய்யுள் களும் வீடுமன் உள்ளன்போடு கண்ணனைத் துதித்ததைக் கூறும்.

**விளக்கம்:-** ஆரணகற்பித - வேத மார்க்கத்தில் நிற்பவனே, அல்லது வேத மந்திரங்களால் ஓரிடத்தே ஆவாகனஞ் செய்யப் படுபவனே. மாதவன் - திருமகள் கொழுநன். அச்சுதன் - அழி வில்லாதவன். ஆழியிடை துயிலும் காரண - பாற்கடலில் யோக நித்திரை கொள்ளும் பிரபஞ்ச காரணனே. சித்குணரூப - ஞானத்தைக் குணமாகவும் வடிவமாகவும் கொண்டவனே. மலர்க்கொடி - திருமகள். நாரண - நாராயணன் என்னும் பெயர் உடையவனே. அற்புத - அற்புதமான சக்தியுடையவனே. வாரணம் - கஜேந்திரன். முத்தி விசாலத் தலம் - பெரிய மோக்ஷ பூமி.

**18. ஆவிய ழித்தனை தூணிலு தித்தட லாடக னைத்தலைநாள்**
**மாவலி யைச்சிறு மாணுரு வத்துடன் வார்சிறை வைத்தனையால்**
**ஏவில ரக்கனை வீழவ டர்த்தனை யானொரி லக்கெனவோ**
**நீவலி யிற்சின மூளும னத்தொடு நேமியெ டுத்ததுவே.**

[ஆவி அழித்தனை தூணில் உதித்து அடல் ஆடகனை தலை நாள், மாவலியை சிறு மாண் உருவத்துடன் வார் சிறை வைத்தனை (ஆல்), ஏவில் அரக்கனை வீழ அடர்த்தனை, யான் ஓர் இலக்கு எனவோ நீ வலியின் சினம் மூளும் மனத்தொடு நேமி எடுத்தது, ஏ.]

**விளக்கம்:-** தலைநாள் அடல் ஆடகனை தூணில் உதித்து ஆவி அழித்தனை; மாவலியை பிரமசாரி உருவங்கொண்டு நீண்ட சிறையில் வைத்தனை; இராவண அரக்கனை ஏவில்லினால் (அம்பினால்) விழுந்து அழியும்படி போர் செய்தாய்; என்னை (உன் சக்கரத்திற்குரிய) இலக்கு என்று மதித்தோ சக்கரத்தை நீ கையில் எடுத்தது, என்று வீடுமன் கூறினன், என்பது பொருள். ஆல், ஏ, அசைகள். தலைநாள் - முன்னொரு காலத்தில். மாண்உருவம்- பிரமசாரி வேடம். வாமனனாய்த் தோன்றி மாவலியால் மூன்றடி மண் வேண்டித் திரிவிக்ரமனாய் வளர்ந்து உலகை அளந்த வரலாற்றைக் குறிக்கும். ஏவில் - அம்பு தொடுத்தற்கான வில்; எனவே, அம்பினால். இது இராமாவதாரத்தில் இராவணனைக் கொன்றதைக் குறிக்கும்.

**19. வானர கிற்புகு தாமலெ னக்குயர் வானுல கைத்தருவான்**
**நீநினை வுற்றது போனபி றப்பிலென் நீடுத வப்பயனே**

**யானுமி னிப்பிற வாமல ளித்தரு ளீசவெ னப்பரவா**
**ஞானம னத்தொடு நாகுழ றப்பல நாடியு ரைத்தனனே.**

[வான் நரகில் புகுதாமல் எனக்கு உயர் வான் உலகை தருவான் நீ நினைவு உற்றது போன பிறப்பில் என் நீடு தவம் பயனே; யானும் இனி பிறவாமல் அளித்தருள் ஈச, என பரவா, ஞானம் மனத்தொடு நா குழற பலநாடி உரைத்தனன், ஏ.]

**விளக்கம்:-** வான்நரகு-பெரிய நரகம். புகுதாமல்-செல்லாமல். நான் நரகம் சேராமல், உயர்ந்த முக்தியுலகை எனக்குக் கொடுப்பதற்கு, நீ எண்ணியது நான் போன ஜன்மத்தில் செய்த தவத்தின் பயனே ஆகும், - என்பது முதல் இரண்டடிகளின் பொருள். ஈசனே, எளியனான நானும் இனிப் பிறந்து வருந்தாமல் (இருக்க) பரமபத வீட்டைத் தந்தருள்க, என, ஞானம் உதித்த மனத்தோடு, நாக்குத் தடுமாற துதிமொழிகள் பலவற்றைத் தேடித் தேடிக் கூறலானான், என்பது ஈற்றடிகளின் பொருள்.

எம்பெருமானால் கொல்லப்பட்டவர், அவர் யாவரேயாயினும், கருமம் ஒழிந்து முத்தி பெறுவர், என்பது நூற்கொள்கை. தன் மீது சினங்கொண்டு கண்ணன் சக்கரத்தை எடுத்தானாதலின், வீடுமன், தனக்கு விரைவில் மரணமும், நல்ல பதமும் உண்டு எனக் கருதி, அவனைப் பலபடி போற்றுவானாயினான். கண்ணனால் கொல்லப் பெற்று வீடு பெறுதற்குத் தகுந்த நல்வினை இப்பிறப்பில் செய்ததில்லை, என்ற எண்ணத்தால், 'போன பிறப்பில் என் நீடுதவப் பயன்', என்றான். நீடுதவம் - பெருந்தவம், அல்லது நீண்டகாலம் செய்த தவம். யானும், என்பதிலுள்ள உம்மை, வீடுமனது தாழ்வினைக் குறிக்கும், இழிவு சிறப்பினது.

**20. ஆரிய னப்பொழு தாறின னிற்கவு மாடல ருச்சுனனும்**
**தாரவ டிக்கணை யாயிர முய்ப்பதோர் சாபம்வ ளைத்ததிரா**
**யாரெதிர் நிற்பினும் யாவர் தடுப்பினும் யானினி யிப்பகலே**
**சேரமு ருக்குவ னேறுகெ னத்தன தேர்மிசை புக்கனனே.**

[ஆரியன் அப்பொழுது ஆறினன் நிற்கவும் ஆடல் அருச்சுனனும் தார (தாரை) வடிகணை ஆயிரம் உய்ப்பது ஓர் சாபம் வளைத்து அதிரா, யார் எதிர் நிற்பினும் யாவர் தடுப்பினும் யான் இனி இ பகலே சேர முருக்குவன், ஏறுக என தன தேர்மிசை புக்கனனே.]

**விளக்கம்:-** ஆரியன் - கண்ணன். ஆடல் (அடல்) -வெற்றி. தாரா (தாரை) வடி கணை - மிகுதியான கூரிய அம்புகள். சேர முருக்குவன் - (எல்லோரையும்) ஒரு சேர அழிப்பேன். வீடுமனது துதியால் ஆறி நின்ற கண்ணன், விசயன் வேண்டத் தேரில் ஏறினான், என்பதாம்.

தாரை என்பது எதுகை நோக்கித் தாரா என நின்றது. (விசயனும்) மழைத்தாரை போல் அம்புகளைச் சொரிவதற்கான தனது காண்டீபத்தை வளைத்து நாணொலி செய்து, - என்பது இரண்டாவது அடியின் பொருள்.

விசயன் பொரல்

**21. நீறுப டுத்தினன் மாமகு டத்திர ணீணில வைப்படையச்**
**சேறுப டுத்தினன் மூளைகளிற்றிசை சேர்குரு திப்புனலால்**
**ஆறுப டுத்தின ளுேரொரு வர்க்கெதி ராயிரம் வைக்கணையால்**
**ஈறுப டுத்தினன் வீடுமன் விட்டவர் யாவர்பி ழைத்தவரே.**

[நீறு படுத்தினன் மா மகுடம் திரள், நீள் நிலம் வைப்பு அடைய சேறு படுத்தினன் மூளைகளின், திசை சேர் குருதி புனலால் ஆறு படுத்தினன், ஓர் ஒருவர்க்கு எதிர் ஆயிரம் வை கணையால் ஈறு படுத்தினன்; வீடுமன் விட்டவர் யாவர் பிழைத்தனர், ஏ.]

**விளக்கம்:-** சிறந்த கிரீடங்களின் திரளை (விசயன்) தூளாக்கினான், வீரர்களின் மூளைகளால் பெரிய பூமியின் இடம் முழுவதையும் சேறுபடச் செய்தான், திசைகள் எங்கும் பெருகிப் பாய்ந்த இரத்த வெள்ளத்தால் பல ஆறுகளை உண்டாக்கினான், பகை வீரர் ஒவ்வொருவருக்கும் எதிராக விட்ட ஆயிரக் கணக்கான கூரிய அம்புகளால், அவர்களை அழியச் செய்தான்; வீடுமன் ஒழிந்த எவர் உயிர் பிழைத்தார்? வீடுமன் ஒழிந்த மற்றவர் யாவரும் இறந்தனர், என்றபடி.

வீடுமன் விட்டவர், என்பதற்கு, வீடுமனால் ஏவப் பெற்ற வீரர், என்றும் பொருள் கொள்ளலாம்.

**22. வாயுவ டிக்கணை வாசவன் வைக்கணை வாருண**
**மெய்க்கணைசெம்**
**தீயின்வ டிக்கணை தேவர் சுடர்க்கணை சேரவி டுத்தமையால்**
**ஆயமு னைப்படு தேரணி பட்டன வாளணி பட்டனவெம்**
**காய்கரி பட்டன பாய்பரி பட்டன காவலர் பட்டனரே.**

[வாயு வடி கணை, வாசவன் வை கணை, வாருணம் மெய் கணை, செம் தீயின் வடி கணை, தேவர் சுடர்கணை சேர விடுத்தமையால் ஆயமுனை படு தேர் அணி பட்டன, ஆள் அணி பட்டன, வெம் காய்கரி பட்டன, பாய்பரி பட்டன, காவலர் பட்டனர், ஏ.]

**விளக்கம்:-** வாயு வடிகணை - வாயுவை தெய்வமாக உடைய கூரிய அம்பு. வாசவன் வைகணை - இந்திரனைத் தெய்வமாக உடைய கூரிய அம்பு. வாருண மெய்கணை - வருணனைத் தெய்வமாக உடைய சக்தி வாய்ந்த அம்பு. தீயின் வடி கணை -

அக்னி பகவானைத் தெய்வமாகக் கொண்ட கூரிய அம்பு. தேவர் சுடர் கணை - பல தேவர்களுக்கு உரிய ஒளி பொருந்திய அம்பு. இத்தகைய தெய்வத்தன்மை பொருந்திய அத்திரங்களை விசயன் பிரயோகம் செய்தமையால், போர் முனையில் எதிர்ப்பட்ட தேர் வரிசைகளும், காலாள் வரிசைகளும், அழிந்தன; யானைகளும், குதிரைகளும் அழிந்தன; சதுரங்க சேனைகளுக்கும் தலைவர்களான அரசர்களும் அழிந்தனர், - என்பது பொருள்.

ஆய - பொருந்திய. காய்கரி - சினக்கும் யானை. பாய்பரி - பாய்ந்து செல்லும் குதிரை.

**23. நாடியொ ளித்தனர் சூழ்புனன் மத்திரநாடன் முதற்பலரும்**
**கூடியொ ளித்தனர் மாரத ரிற்றிறல் கூரும்வ யப்படையோர்**
**ஓடியொ ளித்தன ராடம ரிற்றுரி யோதன னுக்கிளையோர்**
**வாடியொ ளித்தனர் மாகத ரொட்டியர் மாளவர் குச்சரரே.**

நாடி ஒளித்தனர் சூழ் புனல் மத்திர நாடன் முதல் பலரும், கூடி ஒளித்தனர் மா ரதரில் திறல் கூரும் வய படையோர், ஓடி ஒளித்தனர் ஆடு அமரில் துரியோதனனுக்கு இளையோர், வாடி ஒளித்தனர் மாகதர், ஒட்டியர், மாளவர், குச்சுரர், ஏ.]

**விளக்கம்:-** ஆடு அமரில் - (விசயன்) செய்த போரில்,- புனல் சூழ் மத்திர நாட்டு அரசனுன சல்லியன் முதலிய பல தேர் வீரரும் இடந்தேடி ஒளித்துக் கொண்டனர்; மா ரத வீரர்களில் வலிய கூரிய வெற்றிதர வல்ல ஆயுதங்களைத் தாங்கிய பலர் ஒன்று பட்டு மறைந்தனர்; துரியோதனனுக்குத் தம்பியரானோர் ஓடி ஒளித்தனர்; மகத தேசத்தாரும், ஒட்டிர நாட்டாரும், மாளவ நாட்டாரும், கூர்ச்சர தேசத்தாரும் தளர்ச்சியுற்று ஓடி மறைந்தனர், - என்பது பொருள்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**24. பார்த்த னம்பினுன் மேவ லார்படைப் பரவை சாயவே விரவு கோவியர்**
**தூர்த்த னன்புடன் கண்டு வந்துதன் றெக்க சேனையின் பக்க மெய்தினுன்**
**சேர்த்த வெம்பனைக் கொடிம கீபனும் திறல்து ரோணனுஞ் செல்வ மைந்தனும்**
**காத்து நின்றுதங் காவ லன்றனைக் கொண்டு பாசறை கடிதி னெய்தினர்.**

[பார்த்தன் அம்பினுல் மேவலார் படை பரவை சாயவே விரவு கோவியர் தூர்த்தன் அன்புடன் கண்டு வந்து தன் தொக்க சேனையின் பக்கம் எய்தினுன்; சேர்த்த வெம்பனை கொடி மகீபனும்

திறல் துரோணனும் செல்வமைந்தனும் காத்து நின்று தம் காவலன் தனை கொண்டு பாசறை கடிதின் எய்தினர்.

**விளக்கம்:-** மேவலார் - பகைவர். பார்த்தனது சரங்களால் பகைவரது சேனையாகிய கடல் அழியவும், (தன்னேடு) சேர்க்கையுடைய கோவியரிடைப் பரிவினுல் பல வஞ்சனைச் செயல்களைப் புரிந்த கண்ணன், (பகைப் படையின் அழிவு) கண்டு, உவந்து அன்புடன் கூட்டமாகச் சேர்ந்துள்ள தனது பக்கத்துச் சேனையை அடைந்தான்; கட்டிய பனை மரக் கொடியனுன வீடுமனும், ஆற்றலுடைய துரோணனும், அவன் புதல்வனுன அச்வத்தாமனும் தமது அரசனுன துரியோதனனை (விசயனது கணையினின்றும்) காத்தலை மேற் கொண்டு, அவனை அழைத்துக் கொண்டு படைவீட்டை விரைந்து அடைந்தனர், - என்பது பொருள்.

தூர்த்தன் - வஞ்சனைக் குணமுடைய காமுகன். கண்ணன், தன்பால் காதல் கொண்ட கோபஸ்திரீகளிடம் வஞ்சனையுடைய பல லீலைகளைப் பரிவினுல் செய்தான் ஆதலால், தூர்த்தன், எனப் பட்டான், என்று, வை. மு. கோ. விளக்கம் கூறுகின்ருர். பாரதத்தில் நல்ல பயிற்சியுடைய ஒருநேயர், தீர்த்தன், என்ற சொல்லே தூர்த்தனுய் விட்டது, என்றும், அது பிழையுடையது என்றும் கூறினுர். அறிஞர், ஆய்க.

படுகளச்சிறப்பு

**25. வெஞ்ச ரத்தினுல் விசயன் வென்றபோர்**
**மிகுக ளத்தின்வாய் விசையொ டற்றன**
**குஞ்ச ரத்தின்வீழ் கைக ணுகமே**
**குருதி வட்டமும் பரிதி வட்டமே**
**பஞ்ச ரத்தொடு திரியு மானையின்**
**பக்க மெங்கணும் பட்டு மூழ்கிய**
**செஞ்ச ரத்தின்மேற் சிறகர் பண்டுவச்**
**சிரம ரிந்திடுஞ் சிறகர் மானுமே.**

[வெம் சரத்தினுல் விசயன் வென்ற போர் மிகு களத்தின் வாய் விசையொடு அற்றன குஞ்சரத்தின் வீழ் கைகள் நாகமே; குருதி வட்டமும் பரிதி வட்டமே; பஞ்சரத்தொடு திரியும் ஆனையின் பக்கம் எங்கணும் பட்டு மூழ்கிய செம் சரத்தின் மேல் சிறகர் பண்டு வச்சிரம் அரிந்திடும் சிறகர் மானும்.]

**விளக்கம்:-** கொடிய கணைகளால் விசயன் வென்ற போர்த் தொழில் மிகுந்த களத்திலே விரைவின் விழுந்தனவான குஞ்சரத்தின் (யானைகளின்) அறுபட்டு விழுந்த துதிக்கைகள் பாம்புகளே போன்றன, (நாகம் - பாம்பு). வட்ட வடிவமாகத் தேங்கிய குருதி

வெள்ளமும் சூர்ய மண்டலத்தை ஒத்தது. பஞ்சரம் - அம்பாரி. அம்பாரிகளுடன் களத்தில் திரிந்த யானைகளின் பக்கத்தில் பட்டு அழுந்திய அம்புகளின் மேலுள்ள சிறகுகள் முன்னொரு காலத்தில் (இந்திரன்) வச்சிரப் படையால் அறுத்த மலைகளின் சிறகுகளை ஒக்கும். இது படுகளச் சிறப்பின் வருணனை ஆகும். மானும் - ஒக்கும். சிறகர் - சிறகு, குற்றியலுகரம் அர் பெற்று, சிறகர், என நின்றது; போலி.

**26. கொற்ற மன்னர்சென் னியின ணிந்தபொற்**
**கோளம் யாவையுந் தாள மாகவே**
**அற்றை வெஞ்சமத் தடல ருச்சுனன்**
**ஆண்மை பாடிநின் றலகை யாடுமால்**
**முற்ற வெம்பிணக் குவையுந் வேழமும்**
**முடுகு வாசியுந் தேரு மொய்ம்புறத்**
**துற்ற குன்றென வொன்று பட்டெழச்**
**சொரியு மூளையா றருவி யொக்குமே.**

[கொற்றம் மன்னர் சென்னியின் அணிந்த பொன் கோளம் யாவையும் தாளம் ஆகவே, அற்றை வெம் சமத்து அடல் அருச்சுனன் ஆண்மை பாடி நின்று அலகை ஆடும், (ஆல்), முற்ற வெம் பிணம் குவையும், வேழமும், முடுகுவாசியும், தேரும் மொய்ம்பு உற துற்ற குன்று என ஒன்றுபட்டு எழ சொரியும் மூளை ஆறு அருவி ஒக்கும், ஏ.]

**விளக்கம்:-** பொன் கோளம் - பொன் முடி, அல்லது தலையில் அணியும் வட்டவடிமான பொன் ஆபரணம். அலகை - பேய்கள். அன்று போரில் இறந்த அரசர்களின் பொன்முடிகளைத் தாளமாகக் கொண்டு பேய்கள், அருச்சுனனது போராண்மையைப் பாராட்டிப் பாடிக்கொண்டு கூத்தாடின, என்பது முதல் இரண்டடிகளின் பொருள். ஆல் : அசை. கொடிய பிணக்குவையும், யானை, குதிரை தேர் முதலியவற்றின் மிகுதியும் களம் முழுவதிலும் வலிமையின் மிகுதி கொண்ட மலைகள்போல் ஒன்று பட்டு உயர்ந்து தோன்ற, அவற்றினின்று மிகுதியாகப் பெருகுகின்ற மூளை நிணம் மலையிலிருந்து ஆறுகளாகப் பெருகும் நீர் அருவியை ஒத்திருந்தது, என்பது ஈற்றடிகளின் பொருள். துற்ற - முழுமையாக.

பேய்கள் ஆடுவதன் காரணம் பிணங்களின் மிகுதி. இவ்வளவு பிணங்கள் கிடைத்தற்குக் காரணம் விசயனது ஆற்றலாதலால், பேய்கள் அவனது ஆண்மை பாடிக் கூத்தாடின. ஈற்றடிகள் தற்குறிப் பேற்றம்.

**27.** **பமர மும்மதக் கரிவி லாவின்வேல்**
**பட்ட வாய்நிணம் பறிய நிற்பன**
**குமரன் வேலின்வா யனல மூர்தருங்**
**கோடு டைத்தடங் குன்ற மொக்குமால்**
**அமரர் கோன்மகன் செங்கை யம்பினு**
**லற்ற வீரர்தம் தலைகள் கௌவியச்**
**சமர பூமிசேர் ஞாளி மானுடத்**
**தலைவி லங்கினின் றன்மை சாலுமே.**

[பமரம் மும் மதம் கரி விலாவின் வேல் பட்ட வாய் நிணம் பறிய நிற்பன, குமரன் வேலின் வாய் அனலம் ஊர்தரும் கோடு உடை தட குன்றம் ஒக்கும் (ஆல்); அமரர்கோன் மகன் செம்கை அம்பினுல் அற்ற வீரர்தம் தலைகள் கௌவி அ சமர பூமி சேர் ஞாளி மானுடர் தலை விலங்கின் இன் தன்மை சாலும், ஏ.]

**விளக்கம்:-** வண்டுகள் மொய்க்கும் மூன்று மதங்களையுடைய யானைகள், தமது விலாப் புறத்தில் வேல்கள் தைத்த இடத்திலிருந்து நிணம் வெளிப்படும்படி வலியழிந்து நிற்றலானது,— முருகக் கடவுள் எறிந்த வேல் பாய்ந்த இடத்தில் நெருப்புப் பற்றிய சிகரங்களை உடைய கிரௌஞ்ச பர்வதம் போன்றது; விசயனது செங்கை அம்புகள் அறுத்து வீழ்த்திய வீரர்களின் தலைகளைக் கௌவிக் கொண்டு அப்போர்க்களத்தில் சஞ்சரித்த நாய்கள் மனிதத் தலையோடு கூடிய மிருகங்களின் இனிய தன்மை பொருந்திய தோற்றத்தினவாயின, என்பது பொருள்.

கிரௌஞ்சகிரி, யானைக்கும், முருகக் கடவுளது வேல், யானை மேல் பாய்ந்த வேலுக்கும், அனல், யானையின் விலாப் புறமிருந்து வெளிப்படும் குருதி தோய்ந்த நிணத்திற்கும் உவமை. பமரம் - (ப்ரமரம்) வண்டு. ஞாளி - நாய். விலா - வயிற்றுப்புறம். இதுவும் படுகளச் சிறப்பின் வருணனையே.

**28.** **அன்று வெஞ்சரத் தொடுத றிந்தவாள்**
**அரசர் சோரிமெய்ப் பட்ட தாதலின்**
**சென்று செங்கதிர்ச் செல்வன் வாருணத்**
**திசைய டைந்துவெண் டிரையின் மூழ்கினுன்**
**நின்ற ருச்சுனன் பொரம றந்ததும்**
**நெடிய செங்கண்மா னேமி தொட்டதும்**
**பின்றை வில்லெடுத் தவன்ம லைந்ததும்**
**பேசி னுன்மகீ பதிபி தாமகன்.**

[அன்று வெம்சரத்தொடு தறித்த வாள் அரசர் சோரி மெய் பட்டது ஆதலின், சென்று செம் கதிர் செல்வன் வாருணம் திசை அடைந்து வெள் திரையில் மூழ்கினுன்; நின்று அருச்சுனன் பொர

மறந்ததும், நெடிய செங்கண்மால் நேமி தொட்டதும், பின்றை வில் எடுத்து அவன் மலைந்ததும் பேசினான் மகீபதி பிதாமகன்.]

**விளக்கம்:-** அன்று (விசயனது) கொடிய அம்புகள் அறுத்து வீழ்த்திய வாள் அரசர்களின் இரத்தம், தன் மெய்யில் பட்டது ஆதலின், (அந்த இரத்தக் கறையைக் கழுவி அகற்றும் பொருட்டு) சூரியன் போய் வருணதிசையை அடைந்து வெள்ளிய அலைகளை உடைய கடலில் மூழ்கினான், அதாவது மறைந்தான்; (பிறகு) மகீபதி பிதாமகனாகிய வீடுமன், விசயன் போர்க்களத்தில் திகைத்து நின்று போர் செய்ய மறந்ததையும், கண்ணன் சக்கரம் எடுத்ததையும், அதன்பின், அவன் வில் எடுத்துப் போர் செய்ததையும் தன் படை வீரரிடம் கூறினான், என்பது பொருள்.

சோரி - இரத்தம். வாருணதிசை - மேற்குத் திசை. மகீபதி - துரியோதனன். பிதாமகன் - பெரிய பாட்டனான வீடுமன். இது சூரியாஸ்தமன வருணனை. வாள் அரசர் - ஆயுதங்களை உடைய அரசர்; ஆள் அரசர் என்றும் பிரித்துக் கொள்ளலாம். தன்மேற் பட்ட ரத்தக் கறையைக் கழுவிக்கொள்ளச் சூரியன் கடலில் மூழ்கினான், என்றது தற்குறிப்பேற்ற அணி.

**29.** **தருமன் மாபெருஞ் சேனை தன்னுளார்**
**தங்க ளாதரத் தொடுத னஞ்சயன்**
**பொருவி லாண்மையும் வீமன் மாமகன்**
**பொருத வீரமும் புகழ்ந்து பாடினார்**
**அரவ கேதனன் சேனை தன்னுளார்**
**அழிந்த மன்னருக் கழுத ரற்றினர்**
**இருவர் சேனையுங் கண்ப டாமலன்**
**றிரவு பட்டதென் னென்றி யம்புவாம்.**

[தருமன் மா பெருஞ்சேனை தன்னுளார் தங்கள் ஆதரத்தொடு தனஞ்சயன் பொருவில் ஆண்மையும், வீமன் மாமகன் பொருத வீரமும் புகழ்ந்து பாடினார்; அரவ கேதனன் சேனை தன்னுளார் அழிந்த மன்னருக்கு அழுது அரற்றினர், இருவர் சேனையும் கண் படாமல் அன்று இரவு பட்டது என் என்று இயம்புவாம்.]

**விளக்கம்:-** அன்றைய இரவை இரு திறத்தாரும் எவ்வாறு கழித்தனர் என்பதைக் கூறும் செய்யுள். தருமனது சேனையிலுள்ளார், உற்சாகத்தோடு அருச்சுனனது ஒப்பற்ற வில் தொழிலையும், வீமனது சிறந்த மகனான கடோற்கசனது போர் ஆற்றலையும் புகழ்ந்து கொண்டாடினர்; அரவ கேதனனது சேனையிலுள்ளார், இறந்த மன்னருக்காக அழுதனர்; இருதிறத்தாரும் இரவு முழுதும் தூங்காமல், அவர் அடைந்த நிலைமையை என்ன என்று சொல்

வோம்,—என்பது பொருள். பாண்டவர் மகிழ்ந்தனர், துரியோத ஞதியர் வருந்தினர், என்பதாம். அரவகேதனன்—பாம்புக் கொடி யனுன துரியோதனன். பட்டது—அடைந்த இன்பமும் துன்பமும் ஆகிய நிலை.

**30.** **நென்ன லங்கையிற் கொண்ட தென்னையே**
**நேமி யாகவந் நீல மேனியான்**
**இன்ன மும்பொரத் தேடு மாவகத்**
**தின்று மென்றுகொண் டெண்ணி யேகொலோ**
**தன்னெ டுந்தனிச் சயில மும்பொலந்**
**தமனி யத்தடஞ் சயில மாகவே**
**மின்னெ டுஞ்செழுங் கதிர்ப ரப்பினுன்**
**வெய்ய வேழ்பரித் தேர்வி பாகரன்.**

[நென்னல் அம் கையில் கொண்டது என்னையே நேமி ஆக அ நீலம் மேனியான், இன்னமும் பொர (என்னை) தேடும் ஆவகத்து இன்றும் என்று கொண்டு எண்ணியே கொலோ, தன் நெடுந் தனி சயிலமும் பொலம் தமனியம் தடஞ் சயிலமாகவே மின் நெடு செழுகதிர் பரப்பினுன் வெய்ய ஏழ் பரி தேர் விபாகரன்.]

**விளக்கம்:-** நீல மேனியானுன கண்ணன் நேற்று அழகிய தனது திருக்கையில் பற்றியது என்னையே! (ஆதலால்) இன்னமும் இன்றும் என்னைத் தேடுவான் என்று எண்ணித்தானே, வெய்ய ஏழு குதிரைகள் பூட்டப் பெற்ற தேரை உடைய சூரியன் தனது பெரிய ஒப்பற்ற உதய கிரியும், அழகிய பொன்மயமான மகாமேரு மலையாகும்படி ஒளிவிளக்கம் உடைய நீண்ட அடர்ந்த (தனது) செந்நிறக் கிரணங்களைப் பரவச் செய்தான்,—என்பது பொருள்.

நென்னல் - நேற்று. கொண்டு : அசை. சயிலம் - மலை. தன் நெடுந்தனிச் சயிலம் - உதயகிரி. பொலம் - அழகு. தமனியம் - பொன். நேற்றுப் போரில் கண்ணன் தன்னைத்தான் சக்கராயுத மாக எடுத்தான்; இன்றும் போரில் அவன் என்னைத் தேடும் என்று எண்ணி சூரியன் உதயமாஞன், என்றது தற்குறிப்பேற்ற அணி. விபாகரன் - சூரியன். சூரியன் திருமாலின் சக்கரத்தின் அம்சம், என்பர்.

மூன்ரும் போர்ச் சருக்கம் முற்றும்

# நான்காம் போர்ச் சருக்கம்

## கலிவிருத்தம்

### கடவுள் வணக்கம்

1. **தேடியவ் வகலிகை சாபந் தீர்த்ததாள்**
**நீடிய வுலகெலா மளந்து நீண்டதாள்**
**ஓடிய சகடிற வுதைத்துப் பாம்பின்மேல்**
**ஆடியுஞ் சிவந்ததா ளென்னை யாண்டதாள்.**

**விளக்கம்:-** செய்யுள் சுலபமானதே. என்னை ஆண்டதாள்; தேடி அ அகலிகை சாபம் தீர்த்த தாள்; நீடிய உலகுஎலாம் அளந்து நீண்ட தாள், ஓடிய சகடு இற உதைத்தும் பாம்பின்மேல் ஆடியும் சிவந்த தாள், – என்பது அன்வயம்.

அகலிகை சாபம் தீர்த்தது இராமாவதாரத்தில். உலகு அளந்தது திரிவிக்ரமாவதாரத்தில். தன்னைக் கொல்ல விரைந்து வந்த சகடாசுரனை உதைத்துக் கொன்றதும், காளியன் என்னும் பாம்பின் தலையில் நின்று ஆடியதும் கிருஷ்ணவதாரத்தில். அத்தகைய திருவடிகள் என்னை அடிமை கொண்ட திருவடிகள், என்று புலவர் துதித்தபடி.

### இருதிறத்துப் படைகளும் நெருங்கல்

2. **நற்பக லிடைவரு நளின நாயகன்**
**பொற்பக லுறவொளி புரியு நேமியான்**
**பிற்பக லணியையும் பிறங்கு சேனையான்**
**முற்பக வியூகமே யாக மூட்டினுன்.**

[நல் பகலிடை வரும் நளினம் நாயகன் பொற்பு அகலுற ஒளி புரியும் நேமியான் பின் பகல் அணியையும் பிறங்கு சேனையால் முன் பகல் வியூகமே ஆக மூட்டினுன்.]

**விளக்கம்:-** நற்பகல் – நடுப்பகல். நளின நாயகன் – தாமரையின் நாயகனுன சூரியன். பொற்பு – பிரகாசம், விளக்கம். நடுப்பகலில் தோன்றும் சூரியனின் ஒளி விளக்கமும் மறையச் செய்யும் பிரகாசத்தையுடைய சக்கரத்தையுடைய கண்ண பிரான், என்பது முதலிரண்டடிகளின் பொருள். பிற்பகல் – (பின்பகல்) மறுநாள். முற்பகல் – (முன்பகல்) முன்னுள், அதாவது மூன்ரும் நாள். கண்ணன் மறுநாள் விடிந்ததும், பாண்டவ சேனையின் அணிவகுப்பை முன்னுள் செய்த அர்த்த சந்திர வியூகமாக வகுத்தான், என்பது ஈற்றடிகளின் பொருள். சேனையால் – சேனையைக் கொண்டு. மூட்டினுன் – அணி வகுத்தான். நளின நாயகன், வடமொழிச் சொற்ருெடர்.

**3. கார்முகில் வண்ணனைக் கண்டு காணலார்**
**தாமுமவ் வியூகமே சமைத்து முந்தினார்**
**ஏமமோ டெதிர்முனைந் திருவர் சேனையும்**
**போர்முர செழவெழப் பொங்கி யார்த்தவே.**

[கார்முகில் வண்ணனை கண்டு காணலார் தாமும் அ வியூகமே சமைத்து முந்தினார்; ஏமமோடு எதிர் முனைந்து இருவர் சேனையும் போர் முரசு எழ பொங்கி ஆர்த்த, ஏ.]

**விளக்கம்:-** காணலார் - பகைவர். (அவர்) கண்ணன், பாண்டவ சேனையை முந்தியநாள் அமைந்த வியூகமாகவே இன்றும் அமைத்தது கண்டு, தாங்களும், சேனை முன்னைய தினம் அமைத்த கருட வீயூகமாகவே அமைத்துப் போர் செய்ய முந்தி எழுந்தனர், என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். ஏமம் - களிப்பு. களிப்புடன் எதிர் எதிராக வந்து இருசேனைகளும் போர் முரசம் சப்திக்க ஊக்கம் மிகுந்து ஆரவாரம் செய்தனர், என்பது ஈற்றடிகளின் பொருள். போர் முரசம் எழ எழ - முரசம் மிகுதியாக ஒலிக்க. போர்ப்பறை முழக்கம் வீரர்களின் உற்சாகத்தை மிகுதிப் படுத்தியது, என்க.

**4. ஏழிரு புவனமு மேந்து மேருவைச்**
**சூழ்வன கிரிக்குழாஞ் சுற்று மாறுபோல்**
**பாழியம் புயகிரி பவனன் மைந்தனை**
**வேழவெம் படையுடை வேந்தர் சூழவே.**

[ஏழ் இரு புவனமும் ஏந்து மேருவை சூழ்வன கிரி குழாம் சுற்றும் ஆறுபோல், பாழிஅம் புயகிரி பவனன் மைந்தனை வேழம் வெம் படை உடை வேந்தர் சூழவே.]

**விளக்கம்:-** பதினான்கு லோகங்களையும் தாங்கக்கூடிய மேருமலையைச் சுற்றிலும் உள்ளவான மலைக் கூட்டம் சூழ்ந்து நிற்கும் விதம் போல, வலிய அழகிய புஜங்களாகிய மலைகளை உடைய வாயுபுத்திரனான வீமனை கொடிய யானைப் படையை உடைய வேந்தர்கள், சூழ்ந்து கொள்ள, - (அடுத்த செய்யுளோடு தொடரும்) என்பது பொருள்.

பகைவரின் யானைப் படை வீமனைச் சுற்றிக் கொண்டது, என்பதாம்.

வேறு

**5. ஆலா லமெனக் கதுவா வதிரா**
**மேலாள் விழவீ மன்வெறுங் கைகளால்**
**ஏலா வுடலென் புகமோ தவெறுந்**
**தோலா யினசிற் சிலதோ லினமே.**

[ஆலாலம் என கதுவா அதிரா, மேல் ஆள் விழ, வீமன் வெறுங்கைகளால் ஏலா, உடல் என்பு உக மோத வெறுந்தோல் ஆயின சில் சில தோல் இனம், ஏ.]

**விளக்கம்:-** ஆலாலம் - கொடிய விஷம். கதுவா - சினம் கதுவப் பெற்று, அதாவது சினங்கொண்டு. அதிரா - ஆரவாரித்து. மேல் ஆள்விழ - யானை மேல் இருக்கும் வீரர்கள் விழும்படி. ஏலா- எடுத்து. தோல் இனம் - யானைக் கூட்டம்.

கொடிய விஷம்போல் சினம் எழப்பெற்று ஆரவாரம் செய்து கொண்டு வீமன், யானை வீரர் விழும்படி வெறுங்கைகளால் யானை களை எடுத்து, அவற்றின் உடலினின்று எலும்புகள் உதிரும்படி ஒன்றின்மேல் ஒன்றைத் தாக்கி யானைக் கூட்டங்கள் உயிரற்ற வெறுந்தோல் உருவங்களாயின, என்பது பொருள்.

இச் செய்யுளையும் தொடரும் பதினேழு செய்யுள்களையும் மா - கனி - காய், என்றவாய் பாட்டினவான வஞ்சி விருத்தமாகவும் அலகிடலாம்.

**6. மேல்வாய் தமகை யொடுமே லெழவும்**
**தோல்வா யவைகீழ் விழவுந் துணியா**
**மால்வா ரணம்வாய் கள்கழன் றனமுன்**
**நால்வா யெனுநா மநலம் பெறவே.**

[மேல்வாய் தம கையொடும் மேல் எழவும் தோல் வாய் அவை கீழ் விழவும் துணியாமல் வாரணம் வாய்கள் கழன்றன, முன் நால் வாய் எனும் நாமம் நலம் பெறவே.]

**விளக்கம்:-** வாய், மேல்வாய், கீழ்வாய் என்ற இரு பகுதியை உடையது. மேல்வாய் தமது துதிக்கையோடு மேலே செல்லவும், தோல் மயமான கீழ்வாய் கீழே விழவும் அறுபட்டு, - என்பது முதல் இரண்டடிகளின் பொருள். நால்வாய் - தொங்குகின்ற துதிக்கையை உடைய யானை. பெரிய யானைகள் இதன் முன் பெற்றுள்ள **நால்வாய்** என்னும் பெயர், (எண்ணிக்கையாலும் நால் வாய் என்ற பெயர்) சிறப்புற, வாய் கிழியப் பெற்றன, - என்பது ஈற்றடிகளின் பொருள்.

நால்வாய் என்ற பெயருடைய யானைகள், மேல்வாயும் கீழ்வாயும் இரண்டு இரண்டாகக் கிழியப் பெற்றமையின் எண்ணிக்கையாலும் **நால்வாய்** என்ற நலம் பெறுவதாயின, என்க.

**7. மதிவெண் குடைமா ருதிவன் புடனே**
**குதிகொண் டொருகை கொடுகுத் துதலால்**
**அதிசிந் துரவல் லுரமத் தனையும்**
**எதிர்சிந் துரமா கியிளைத் தனவே.**

[மதி வெண்குடை மாருதி வன்புடனே குதி கொண்டு ஒரு கைகொடு குத்துதலால் அதிர் சிந்துரம் வல் உரம் அத்தனையும் எதிர் சிந்துரம் ஆகி இளைத்தன, ஏ.]

**விளக்கம் :** சந்திரன் போன்ற வெண்குடையை உடைய வாயுபுதல்வனுன வீமன், வலிமையோடு பாய்ந்து தனது ஒரு கையைக் கொண்டு குத்தலும், முழங்கும் யானைகள் வலிய தமது உடல் முழுவதும், (வீமனுக்கு) எதிரே செந்நிறத் தூள்களாய் வலி அழிந்தன, என்பது பொருள். குதிகொண்டு-பாய்ந்து, குதித்து. சிந்துரம் - யானை; செந்நிறத்தூள். உரம் - (இங்கே) உடல்.

**8. உடலிற் றசையா வுமுடைந் துநெடுங்**
**குடலற் றுவிழும் படிகுத் துதலான்**
**மிடல்பற் றியவீ மன்வெறுங் கைகளால்**
**அடலத் திகளத் திகளா யினவே.**

[உடலில் தசை யாவும் உடைந்து நெடுங்குடல் அற்று விழும் படி குத்துதலால், மிடல் பற்றிய வீமன் வெறுங்கைகளால் அடல் அத்திகள் அத்திகளாயின, ஏ.]

**விளக்கம்:-** தசை - சதை. மிடல் - வலிமை. அடல் அத்தி - வலிய யானைகள். அத்திகள் ஆயின - அஸ்திகள், அதாவது எலும்புகள் ஆயின. யானைகளின் உடலிலுள்ள சதை அழியும் படியும், குடல் அற்று வெளிப்படும்படியும், மிடல் வீமன் தனது வெறுங் கைகளால் குத்தலால், அடல் அத்திகள், எலும்புக் கூடுகள் ஆயின, என்பதாம். வெறுங்கை - ஆயுதம் இல்லாத கை.

**9. கந்தா வகன்மொய்ம் புறுகா ளைபுயக்**
**கந்தா லமர்செய் துகலக் குதலின்**
**தந்தா வளசே னைதரிப் பறவே**
**தந்தா வளமுற் றனசா யுறவே.**

[கந்தாவகன் மொய்ம்பு உறு காளை புயம் கந்தால் அமர் செய்து கலக்குதலின், தந்தா வளம் சேனை தரிப்பு அறவே, தம் தாவளம் உற்றன சாய் உறவே.]

**விளக்கம்:-** கந்தாவகன் - வாயு. கந்து - தூண். தந்தாவளம் - யானை. தரிப்பு - எதிர் நிற்றல். தம் தாவளம் - தமது இருப்பிடம். வாயுகுமாரனுன வீமன், தனது தூண் போன்ற தோள்களால் பொருது கலக்குதலின், யானைப் படைகள் எதிர் நின்று பொருதல் அறும்படி, அதாவது போர் செய்ய முடியாதபடி, அழிவு உண்டாக, (அவை களத்தில் நிற்க அஞ்சி) தமது இருப்பிடம் அடைந்தன, என்பது பொருள்.

**10. வெவ்வா யுவின்மைந் தன்வெகுண் டொருதோல்**
**மொய்வா குவில்வைத் தெதிர்மோ துதலால்**
**கைவா லதிமெய் தலைகால் கள்கரந்(து)**
**அவ்வா ரணம்வா ரணமா கியதே.**

[வெம் வாயுவின் மைந்தன் வெகுண்டு ஒரு தோல் மொய் வாகுவில் வைத்து எதிர் மோதுதலால், கை வாலதி மெய் தலை கால்கள் கரந்து, அ வாரணம் வாரணம் ஆகியது.]

**விளக்கம்:-** ஒருதோல் - ஒரு யானை. மொய் வாகுவில் வைத்து - வலிய (தன்) கையில் பற்றி எடுத்து. வாலதி - வால். கரந்து - மறைந்து. வாரணம் - யானை. கோழி. வீமன் வெகுண்டு ஒரு யானையைக் கையால் எடுத்து மோத, அந்த யானை கை, வால், உடல், தலை, கால்கள் எல்லாம் மறைந்து போக, ஒரு கோழிபோல் ஆனது, என்பது பொருள். வாகு - தோள், இங்கே, கை.

**11. கம்பித் தனகா ருடல்பே ருயிரும்**
**கும்பித் தனவா யுகுமா ரனிவன்**
**அம்பொற் கரபங் கயமள் ளுதலின்**
**தும்பிக் குலமா யினதும் பிகளே.**

[கம்பித்தன கார் உடல், பேர் உயிரும் கும்பித்தன, வாயு குமாரன் இவன் அம் பொன் கரம் பங்கயம் அள்ளுதலின் தும்பி குலம் ஆயின தும்பிகள், ஏ.]

**விளக்கம்:-** கம்பித்தல் - நடுங்கல். கும்பித்தல் - ஒடுங்கல். தும்பி - வண்டு, யானை. (யானையின்) கரிய உடல் நடுங்கவும், அரிய உயிர் ஒடுங்கும்படியும் வீமன் தனது அழகிய கைகளாகிய தாமரையினுல் வாரி எடுத்ததால், யானைகள் சிறிய வண்டுகள் ஆயின, என்பது பொருள். கரிய பெரிய யானைகள் சிறிய வண்டு கள் போல் உடல் சுருங்கின, என்பதாம். யானைகளை வண்டு என்றதால், அவற்றை எடுத்த வீமனது கையைத் தாமரை என்ருர்.

**12. பொன்னு கமணிப் புயன்வெங் கதையான்**
**முன்னு கமலைத் துமுருக் குதலால்**
**எந்நா கமுநா கமெனும் படியே**
**மன்னு கவமெங் குமடிந் தனவே.**

[பொன் நாகம் மணி புயன் வெம் கதையான் முன் ஆக மலைந்து முருக்குதலால், எ நாகமும் நாகம் எனும்படியே, மன் ஆகவம் எங்கும் மடிந்தன, ஏ.]

**விளக்கம்:-** பொன் நாகம் மணி புயன் - பொன்மலை போன்ற அழகிய புயங்களை உடைய வீமன். முன் ஆக மலைந்து - எதிரே நின்று போர் செய்து. முருக்குதல் - அழித்தல். எ நாகமும் நாகம் எனும்படி - எல்லா யானைகளும் மலைகள் என்று சொல்லும்படி, மன் ஆகவம் - பெரிய போர்க்களம்.

வீமன் தனது கதையைக் கொண்டு போர் செய்து அழித்த லால், யானைகள் எல்லாம் மலைகள் என்று சொல்லும்படி போர்க் களத்தில் மடிந்து கிடந்தன, என்பதாம்.

**13. கோடுங் கரமும் பறியக் குதிகொண்(டு)**
**ஓடுங் குருதிப் புனலூ டுடலம்**
**மூடும் படியா வருமூழ் குதலால்**
**ஆடுங் கயமா யினவக் கயமே.**

[கோடும் கரமும் பறிய குதிகொண்டு ஓடும் குருதி புனலூடு உடலம் மூடும்படி யாவரும் மூழ்குதலால், ஆடும் கயம் ஆயின அ கயமே.]

**விளக்கம்:-** கோடு - தந்தம். தந்தங்களும் துதிக்கைகளும் பிளக்கப்பட்டு வெளிப்பட, (அக்கரம் தந்தங்களோடு) பாய்ந்து ஓடும் குருதி வெள்ளத்தில், உடல் மறையும்படி களத்திலுள்ளோர் யாவரும் ஆழ்தலால், அக்கயம் (யானைகள்) நீராடுதற்குரிய கயங் கள் குளங்கள் ஆயின,—என்பது பொருள். கயம் - யானை, குளம். குருதி வெள்ளத்தின் மிகுதியைக் கூறியபடி. புனலூடு என்பதி லுள்ள ஊடு, ஏழாம் வேற்றுமை உருபு.

**14. வீசுந் தமகைம் முதன்மெய்ம் முழுதும்**
**கூசும் படிசிற் சில்குழம் புகளாய்**
**மூசும் களபக் குலமொய்ம் பனுடல்**
**பூசுங் களபக் களிபோன் றனவே.**

[வீசும் தம கை முதல் மெய் முழுதும் கூசும்படி சில்சில் குழம்பு கள் ஆய், மூசும் களபம்குலம் மொய்ம்பன் உடல் பூசும் களபம் களி போன்றன,—என்பது அன்வயம்.

**விளக்கம்:-** மூசும் சில்சில் களபம் குலம், கூசும்படி வீசும் தம கை முதல் மெய் முழுதும் குழம்புகள் ஆய், மொய்ம்பன் உடல் பூசும் களபம் களி போன்றன,—என்பது அன்வயம்.

**விளக்கம்:-** நெருங்கி வரும் சிற்சில யானைகளின் கூட்டம், (பிறர்) அஞ்சும்படி வீசுகின்ற தமது துதிக்கை முதலாக உடல் முழுவதும் செந்நிறக் குழை சேருகி, மொய்ம்புடைய வீமனின் உடலில் பூசுதற்கு வைக்கப்பெற்ற கலவைச் சந்தனச் சேறு

போன்றன, - என்பது பொருள். களபம் - முப்பது வயதுடைய யானை; கலவைச் சந்தனம்.

**15. கிரியே யெனவந் தெதிர்கிட் டினபுன்**
**பொரியே யெனவா னிடைபுக் கனபோர்**
**அரியே றனையான் வலிமை கவர்தம்**
**கரியே கரியல் லதுகண் டவர்யார்.**

[கிரியே என வந்து எதிர் கிட்டின புல் பொரியே என வானிடை புக்கன், போர் அரிஏறு அனையான் வலிமைக்கு அவர் தம் கரியே கரி அல்லது கண்டவர் யார்?]

**விளக்கம்:-** மலைகளே என்று சொல்லும்படி எதிரில் வந்து நெருங்கின வாகிய யானைகள் எல்லாம், அற்பமான பொரிகளே என்று சொல்லும்படி (வீமனால் வீசி எறியப்பட்டு) வானை அடைந் தன; போரில் ஆண் சிங்கத்தை ஒத்தவனாகிய வீமனது வலிமைக்கு, அவர்தம் (பகைவர்களுடைய) யானைகளே கரி (சாட்சி) அல்லாமல், (அவனது வலிமையை உள்ளபடி) கண்டவர் வேறு யார்?, அதாவது எவரும் கண்டதில்லை, என்றபடி.

எவரும் கண்ணால் கண்டு மதிப்பிட முடியாதபடி மிக உக்ர மாக வீமன் போர் செய்தான் என்றும், அவன் அழித்த யானை களின் தொகையைக் கொண்டே அவனது வல்லமையை அளவிட வேண்டும் என்றும் கூறும் கருத்தது செய்யுள்.

**16. இவ்வா றுவெகுண் டிவனெ ற்றுதலும்**
**கைவா ரணவே லைகலக் கமுறத்**
**தெவ்வா கியமன் னவர்தேர் களொடும்**
**வெவ்வா சிகடம் மொடுவென் னிடவே.**

[இ ஆறு வெகுண்டு இவன் எற்றுதலும் கை வாரணம் வேலை கலக்கம் உற, தெவ் ஆகிய மன்னவர் தேர்களொடும், வெம் வாசி கள் தம்மொடும் வென் இடவே,—அடுத்த செய்யுளோடு தொடரும்; குளகம்.]

**விளக்கம் :-** கைவாரண வேலை - துதிக்கையையுடைய யானைப் படையாகிய சமுத்திரம். தெவ் - பகை. இவ்வாறு வீமன் வெகுண்ட யானைப் படையைத் தாக்கிக் கலக்க, பகை மன்னவர் தம் தேர்களோடும், குதிரைகளோடும் பின் வாங்கினர், என்ப தாம்.

## துரியோதனன் எதிர்த்து வரல்

**17. உடைகின் றமைகண் டுரகத் துவசன்**
**குடையுங் கொடியுங் குளிர்மா முரசும்**

**படையுஞ் சிலதம் பியரும் பலரும்**
**புடைகொண் டுவரப் போனு னவன்மேல்.**

[உடைகின்றமை கண்டு உரகம் துவசன் குடையும் கொடியும் குளிர் மா முரசும் படையும் சில தம்பியரும் பலரும் புடைகொண்டு வர போனுன் அவன் மேல்.]

**விளக்கம்:-** உடைகின்றமை - தோற்றுப் பின்னடைகின்றமை. உரகம் துவசன் - துரியோதனன். குளிர் மா முரசு - பயங்கரமாய் அதிரும் பெரிய முரசம்.

குடை, கொடி, முரசம், தம்பியர் சிலரோடு வேறு பல வீரர்களும் சூழ்ந்து வரத் துரியோதனன் வீமனை எதிர்க்க வந்தான், என்பதாம்.

**18. வீமற் கெதிர்நின் றவன்வில் லறவும்**
**சேமக் கவசஞ் சிதைவுற் றிடவும்**
**நாமக் கணையே வினனு யகனும்**
**மாமுத் தமதிக் குடைமன் னவனே.**

[வீமற்கு எதிர் நின்று, அவன் வில் அறவும், சேமம் கவசம் சிதைவுற்றிடவும் நாமம் கணை ஏவினன் நாயகன் ஆம் மா முத்தம் மதி குடை மன்னவன், ஏ.]

**விளக்கம் :-** குரு நாட்டுத் தலைவனுன துரியோதனன், வீமனுக்கு எதிரே நின்று, அவனது வில்லும், பாதுகாப்பான கவசமும் துணிபடும்படி, சிறந்த அம்பை ஏவினுன்,—என்பதாம். நாமம் - சிறந்த, அச்சம் தரவல்ல. க்ஷேமம், என்ற வடமொழிச் சொல்லின் திரிபு, சேமம்.

**19. ஆறம் பினிலற் றரவத் துவசம்**
**நூறம் பகன்மார் பினுழைந் தனபின்**
**வேறம் புதொடுத் திலன்வீ மனவன்**
**மாறம் புதொடுத் தனன்மற் றிவன்மேல்.**

[ஆறு அம்பினில் அற்று அரவம் துவசம், நூறு அம்பு அகல் மார்பின் நுழைந்தன; பின் வேறு அம்பு தொடுத்திலன் வீமன், அவன் மாறு அம்பு தொடுத்தனன் (மற்று) இவன் மேல்.]

**விளக்கம் :-** (அப்பொழுது வீமன்) ஆறு கணைகளால் (துரியோதனனது) அரவக்கொடி அற்று விழ, மேலும் நூறு கணைகள் (துரியோதனனது) அகன்ற மார்பில் நுழைந்தன, அதன்பின் வீமன் வேறு கணைகள் விடுத்திலன்; அவன் (அத்துரியோதன்) இவன் மேல் (வீமன் மேல்) எதிரான கணைகளைச் செலுத்தினுன், என்பது பொருள். மற்று; அசை, அல்லது, பின்பு என்றுமாம்.

**20. சிங்கக் கொடியற் றணிதேர் சிதைவுற்(று)**
**அங்கத் தினுழைந் தனவம் புகளும்**
**துங்கக் கடகத் திரடோள் புடையா**
**வெங்கட் கனல்வீ மன்வெகுண் டனனே.**

[சிங்கம் கொடி அற்று, அணி தேர் சிதைவுற்று, அங்கத்தின் நுழைந்தன அம்புகளும்; துங்கம் கடகம் திரள் தோள் புடையா வெம் கண் கனல் வீமன் வெகுண்டனன், ஏ.]

**விளக்கம்:-** (அப்பொழுது துரியோதனனது கணைகள் வீமனது) சிங்கக் கொடி அற்று விழவும், அழகிய தேர் சிதையவும் செய்து, அவனது உடலிலும் நுழைந்தன; (அந்நிலையில்) வெம் கண் கனல் வீமன், (தனது) சிறந்த கடகம் அணிந்த திரண்ட தோள்களைத் தட்டிக் கொண்டு சினங்கிளரப் பெற்றவனானன்,— என்பது பொருள். அற்று, உற்று,—எச்சத்திரிபுகள். அம்புகளும் என்பதிலுள்ள உம்மையை அங்கத்தினும் என்று கூட்டுக.

**21. நொந்தா னிவனென் றுநுதிக் கதிர்வேல்**
**அந்தார் முடிமன் னரநே கருடன்**
**வந்தார் பலதம் பியர்மைத் துனரும்**
**கொந்தார் தொடைவீ ரகுமா ரருமே.**

[நொந்தான் இவன் என்று நுதி கதிர்வேல் அம் தார் முடி மன்னர் அநேகருடன் வந்தனர் பல தம்பியர் மைத்துனரும், கொந்து ஆர் தொடை வீர குமாரரும், ஏ.]

**விளக்கம்:-** நுதி கதிர் வேல் - கூரிய ஒளியுடைய வேல். வீமன் தளர்ந்து வருத்தமுற்ருன் என்று முடி மன்னர் அநேகருடன், தம்பியரும் மைத்துனரும் ஆன பலரும், கொந்தார் தொடை வீரர்களான அரச குமாரர்களும் துணையாக வந்தனர், என்பதாம். பல தம்பியரும் மைத்துனரும் ஆகிய பலரும், கொந்து- பூங்கொத்து (மெலித்தல் விகாரம்), கொந்தார் தொடை, என் பதற்கு மலரின் நெருக்கம் பொருந்திய மாலை, என்றும் பொருள் கொள்ளலாம்.

**22. மலருங் குடைமன் னவர்வந் தமைகண்(டு)**
**அலருங் கொடிவா ளரவோ னருகே**
**பலருங் கரிதேர் பரியா ளுடனே**
**சிலரும் புவிபா லர்திரண் டனரே.**

[மலரும் குடை மன்னவர் வந்தமை கண்டு அலரும் கொடி வாள் அரவோன் அருகே பலரும் கரி தேர் பரி ஆளுடனே சிலரும் புவி பாலர் திரண்டினர், ஏ.]

**விளக்கம் :-** மலரும் - விரிந்த. வீமனுக்கு அரசர் பலர் உதவி யாக வந்தமை கண்டு, கரி, தேர், பரி, ஆளுடன் வீரர் பலரும்,

அரசர் சிலரும் விரிந்த படத்தையுடைய கொடிய பாம்பைக் கொடியிலே கொண்ட துரியோதனன் அருகில் (அவனுக்குத் துணையாக) வந்துகூடினர்,—என்பதாம். கரி - யானை. பரி - குதிரை. ஆள் - காலாள்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**23.** **எதிர்ந்தார் மன்ன ரிருதிறத்து**
**மொருவர்க் கொருவ யிடையிடை நின்(று)**
**அதிர்ந்தார் சிறுநாண் பேரொலியா**
**லுடையா வல்ல வகிலாண்ட**
**முதிர்ந்தார் போரிற் றெடுகணையான்**
**முரட்டோ டுணிந்து முடிதுணிந்தும்**
**உதிர்ந்தார் தத்த முடனிலத்தி**
**லுயர்ந்தா ராவி யுயர் வானில்.**

[எதிர்ந்தார் மன்னர் இரு திறத்தும் ஒருவர்க்கு ஒருவர், இடை இடைநின்று அதிர்ந்தார் சிறு நாண் பேர் ஒலியால் உடையா அல்ல அகில அண்டம், முதிர்ந்தார் போரில் தொடு கணையால், முரண் தோள் துணிந்தும் முடிதுணிந்தும் உதிர்ந்தார் தம்தம் உடல் நிலத்தில், உயர்ந்தார் ஆவி உயர் வானில்.]

**விளக்கம்:-** இருதிறத்து மன்னர்களும் ஒருவரோடு ஒருவர் எதிரெதிர் நின்றார்கள்; (அவர் களத்தில்) இடையிடையே நின்று சிறு வில்லின் நாணைத் தெரித்து ஒலி செய்தார்கள்; அந்தப் பேரொலியினால் சகல அண்டமும் (அதிர்ச்சியடைந்து) உடையாதன அல்லவாயின, அதாவது உடைந்தன,—என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். போரில் ஊக்கம் மிக்கார் தொடுத்த கணைகளால் முரண் தோள் அறுபட்டும் தலை அறுபட்டும் தங்கள் தங்கள் உடல் மண்ணில் சிதைந்து உதிரப்பட்டவரானார்கள்; ஆவி உயர்ந்த வானில் ஏறப் பெற்றார்கள்,—என்பது ஈற்றடிகளின் பொருள்; உடல் உதிர்ந்தார், ஆவி உயர்ந்தார், என்றது திணை வழுவின்பாற்படும். ''பேரொலியால் உடையா அல்ல அகிலாண்டம்'', என்றது நாணொலியைச் சிறப்பிக்கும் கருத்தது.

**24.** **தாமத் தெரியல் வலம்புரியோன்**
**தடந்தா மரைக்கைத் தனுத்தறியச்**
**சேமக் கவனப் பவனகதிப்**
**பரிமா நான்குஞ் சிரந்துணிய**
**மாமொட் டொடிந்து கொடுஞ்சியுடன்**
**மான்றேர் சிதைய மார்புருவ**
**நாமக் கணைகள் பலபடவில்**
**லுகைத்தா னின்று நகைத்தானே.**

[தாமம் தெரியல் வலம்புரியோன் தடந்தாமரை கை தனு தறிய, சேமம் கவனம் பவனம் கதி பரிமா நான்கும் சிரம் துணிய, மா மொட்டு ஒடிந்து கொடுஞ்சியுடன் மான் தேர் சிதைய, மார்பு உருவ நாமம் கணைகள் பலபட (வீமன்) வில் உகைத்தான், நின்று நகைத்தான், ஏ.]

**விளக்கம்:-** தாமம் வலம்புரி தெரியலோன்—விளக்கமுடைய நஞ்சவெட்டை மலரானான மாலை அணிந்த துரியோதனன். (அவனது) விசாலமான தாமரை போன்ற கையிடத்தே உள்ள வில் ஒடிபடவும், போரில் நன்மை தரவல்ல வேகத்தையுடைய வாயுவைப் போன்ற நடைவேக முடைய குதிரைகள் நான்கும் தலை துணிபடவும் பெரிய மொட்டு ஒடிபட்டு கொடிஞ்சி என்னும் உறுப்போடு குதிரைகள் பூட்டப்பெற்ற தேர் சிதைந்து அழியவும், மார்பு (கணைகளால்) துளைபடவும் (வீமன்) உக்ரமான அம்புகளைப் பலவாக வில்லிலிருந்து செலுத்தினான்; மேலும் துரியோதனனது தோல்வி நோக்கி நகைத்தான், என்பது பொருள்.

மொட்டு, தேர் வீரன் உட்காரும் இடம். கொடுஞ்சி - தாமரை போன்ற உருவமுடைய தேர் உறுப்பு. துரியோதனனது தோல்வி காரணமாக, வீமன் சிரித்தான், என்க. பரிமா - குதிரை.

**25. முன்னா ளமரிற் கடோற்கசன்றான்**
**முனைவெஞ் சரத்தான் மூழ்குவித்தான்**
**பின்னாண் மீளப் பிறைக்கணையாற்**
**பிளந்தா னவனைப் பெற்றெடுத்தோன்**
**என்னா விரங்கா மெய்நடுங்கா**
**வெடுத்தா ரணைத்தார் சகுனியுமப்**
**பொன்னார் தடந்தேர்ச் சல்லியனு**
**முதலா வுள்ள பூபாலர்.**

[முன்நாள் அமரில் கடோற்கசன்தான் முனை வெம் சரத்தால் மூழ்குவித்தான், பின் நாள் மீள பிறை கணையால் பிளந்தான் அவனை பெற்று எடுத்தோன்; என்னா இரங்கா, மெய் நடுங்கா, எடுத்தார், அணைத்தார் சகுனியும் அ பொன் ஆர் தடந்தேர் சல்லியனும் முதலா உள்ள பூபாலர்.]

**விளக்கம்:-** முன்னாள் போரில் (மூன்றாவதுநாள் போரில்) கடோற்கசன் (தான்) கூரிய அம்புகளால் (துரியோதனனை) மூழ்கும்படி செய்தான், அதாவது தளரச் செய்தான்; பின்னாள் (நான்காம்நாள்) அவனைப் பெற்றெடுத்தவனாகிய வீமன் அர்த்த சந்திர பாணத்தால் மறுபடியும் (அவனது மார்பைப்) பிளந்திட்டான்; என்று சகுனியும், அ பொன் ஆர்தடந்தேர் சல்லியன் முதலாக உள்ள அரசர்களும் இரங்கியும், மெய்

நடுங்கியும் அவனை எடுத்து அணைத்துக் கொண்டனர், என்பதாம்.

தம்பியர் சினந்து பொரவரல்

26. தம்முன் றளர்ந்த நிலைகண்டு
தரியா ராகித் தம்பியர்கள்
எம்முன் பொருதற் கிசைவார்க
ளிசைவீ ரென்றென் றிகல்கூறித்
தெம்முன் செவிகள் செவிடுபடச்
சிறுநா ணெறிந்து தேர்கடவி
முன்முன் கடிதிற் கணைபொழிந்தார்
முகுந்தன் தடுத்த முகில்போல்வார்

[தம்முன் தளர்ந்த நிலை தரியார் ஆகி தம்பியர்கள், எம்முன் பொருதற்கு இசைவார்கள் இசைவீர் என்று இகல் கூறி தெம்முன் செவிகள் செவிடுபட சிறு நாண் எறிந்து, தேர்கடவி முன்முன் கடிதின் கணை பொழிந்தார், முகுந்தன் தடுத்த முகில் போல்வார்.]

**விளக்கம்:-** தம்முன் - தங்கள் தமையனை துரியோதனன். தரியார் ஆகி - பொறுக்க மாட்டாதவர்களாய். எம்முன் - எங்கள் முன்னே. இசை - இணக்கம். இகல் கூறி - வலிமை தோன்ற வீரவாதம் கூறி. நாண் எறிந்து - நாணொலி எழுப்பி. முன்முன்- ஒருவரை ஒருவர் முந்தி. கடிதின் - விரைவாக. முகுந்தன் தடுத்த முகில் போல்வார் - கண்ணன் கோவர்த்தனகிரியைக் கொண்டு தடுத்த மேகம் போன்றவர்களான துரியோதனன் தளர்ந்த நிலை கண்டு பொருதவர்களாய்த் தம்பியர், எம்மோடு போர் செய்பவர் வருக, என்று கூறிக் கொண்டு நாணொலி எழுப்பித் தேரைச் செலுத்திக் கொண்டு வந்து, கண்ணன் தடுத்த மேகம் போன்றவர்களாய் (வீமன்மேல்) கணை மழை பொழிந்தார்கள், என்பதாம்.

இசைவார்கள் இசைவீர் - (முன்னிலையில் படர்க்கை வந்த வழு) இணங்குபவர்கள், இணங்கி வருக, என்று போருக்கு அழைத்தபடி, முகுந்தன் தடுத்த முகில் போல்வார், என்றது வீமன் வெல்வான், என்ற குறிப்பினது.

27. வின்மேல் விசையிற் கடும்பாண
மேன்மே நிறுத்தி வேந்தரைப் பார்த்(து)
என்மே னினைவென் றவரவர்பே
ரிரதந் துணித்துச் சிலைதுணித்துத்

**தன்மேல் வந்த தம்பியரிற்**
**றரியா துடன்ற வைவர்க்கு**
**மன்மே லெய்த வாளியெனத்**
**தொடுத்தா னைந்து வயவாளி.**

[வில்மேல் விசையின் கடும்பாணம் மேல் மேல் நிறுத்தி வேந்தரைப் பார்த்து, 'என் மேல் நினைவு?' என்று அவர் அவர் பேர் இரதம் துணித்து சிலைதுணித்து, தன்மேல் வந்த தம்பியர் தரியாது உடன்ற ஐவர்க்கும் மன்மேல் எய்த வாளி என தொடுத்தான் ஐந்து வயவாளி.]

**விளக்கம்:-** (வீமன்மேல் வந்த தம்பியர்) வில்லின் வேகமாக கொடிய அம்புகளை வைத்துத் தொடுத்து, (பாண்டவர் பக்கத்தினரான) அரசர்களைப் பார்த்து, ''இனிமேல் உங்கள் நினைவு என்ன?' என்று இகழ்ச்சி தோன்றக் கூறி, எதிர்த்து வந்த அந்த அந்த அரசர்களின் தேர்களை அழித்து, விற்களை அறுத்து, (அதன்பின்) தன்மேல் வந்த தம்பியரில், பொறுக்க முடியாதபடி கடும் போர் செய்து ஐந்து பேருக்கும் ஆளுக்கு ஒன்றாக (வீமன்) முன் துரியோதனன்மேல் எய்த அம்புகள் போன்ற ஐந்து வலிய அம்புகளைச் செலுத்தினன், என்பது பொருள்.

**28. சேனு விந்து சுதக்கணன் பொற்**
**றேர்ப்பிங்க லசன்ச லாசந்தன்**
**ஆனு வீம வாகுவெனு**
**மடல்வா ணிருப ரைவரையும்**
**வானு டாளும் படிவிடுத்தான்**
**வன்பாற் றம்மை யைவரையும்**
**கானுள் கென்ற காவலனைப்**
**போல்வான் வீரக் கழல்வீமன்.**

[சேனுவிந்து, சதக்கணன், பொன்தேர் பிங்கலசன், சலாசந்தன், ஆனு வீமவாகு எனும் அடல் வாள் நிருபர் ஐவரையும் வான் ஆளும்படி விடுத்தான், வன்பால் தம்மை ஐவரையும் கான் ஆள்க என்ற காவலனை போல்வான் வீரன் கழலோன்.]

**விளக்கம்:-** சேனுவிந்து, சதக்கணன், பிங்கலசன், சலாசந்தன், வீமவாகு, என்ற பெயருடைய துரியோதனனது தம்பியர் ஐவர், வீமனுல் கொல்லப் பட்டவர். அடல் வாள் நிருபர் ஐவர் - வலிய வாளாயுதந் தாங்கிய அரசர்களான (துரியோதனன் தம்பியர்) ஐவர். ஆனு வீமவாகு - நீங்காத, அதாவது போரில் பின்னிடாத. வன்பால் (பகை வலிமையினுல்) ஐவர் தம்மையும் 'கான் ஆளுக', என்று கூறிய துரியோதனனை

ஒப்பானுகிய வீரக்கழல் அணிந்த வீமன், கௌரவர் ஐவரையும் வான் ஆளும்படி வானுலகம் அனுப்பினுன், என்பது ஈற்றடிகளின் பொருள். துரியோதனன் பாண்டவரை வனம் அடையும்படி செய்தது போல், அவனது தம்பியர் ஐவரை வானடையும்படி செய்தானுதலால், வீமன் துரியோதனனை ஒத்தவனுகின்றுன்.

கொன்றுன், என்பதற்குப் பதிலாக, வானுள விடுத்தான், என்றது பிறிதின் நவிற்சியணி ஆகும்.

**29.** **ஒருபால் வீமன் சிலேவிசய**
**ஞெருபா லொருபா லபிமன்னு**
**ஒருபா னகுலன் சாதேவ**
**ஞெருபா லொருபா லுரகேசன்**
**ஒருபா லரக்கன் பாஞ்சால**
**ஞெருபா லடலுத் தமபானு**
**ஒருபா லுடன்று பொரப்பொரவே**
**யுடைந்த தரசன் பெருஞ்சேனே.**

[ஒருபால் வீமன், சிலேவிசயன் ஒருபால், ஒருபால் அபிமன்னு, ஒருபால் நகுலன், சகதேவன் ஒருபால், ஒருபால் உரகேசன் (உரக - ஈசன்), ஒருபால் அரக்கன், பாஞ்சாலன் ஒருபால், அடல் உத்தமபானு ஒருபால், உடன்று பொர பொரவே, உடைந்தது அரசன் பெருஞ்சேனே.]

**விளக்கம்:-** தருமன் பக்கத்தில் வீமன் முதலிய பாண்டவர் நால்வரும், அபிமன், உரகேசன் (அரவான்) கடோற்கசன் ஆகிய இளவீரர்களும், பாஞ்சாலன், உத்தமபானு ஆயவர்களும் ஒவ்வோர் பக்கத்தில் உக்ரத்துடன் தொடர்ந்து போர் செய்யத் துரியோதனன் சேனே உடைந்து பின்னிட்டது, - என்பதாம். உரகேசன்-நாகர் தலேவனுன அரவான். அரக்கன்-கடோற்கசன் உத்தமபானு-பாஞ்சாலரைச் சேர்ந்தவன். அரசன்: துரியோதனன். உடன்று பொரப்பொர - கோபாவேசத்தோடு தொடர்ந்து போர் செய்ய.

பகதத்தன் பாண்டவரை எதிர்த்தல்

**30.** **விண்ணு டருக்கா வெஞ்சமத்தி**
**லசுரா திபரை வென்கண்டோன்**
**மண்ணு ளரசர் மகுடசிகா**
**மணியே போல்வான் மாமரபால்**
**பண்ணுர் பஞ்ச கதிமான்றேர்ப்**
**பகலோ னன்ன பகதத்தன்**
**எண்ணுர் துரக்க வரும்படையை**
**யஞ்ச லென்றென் றெதிர்சென்றுன்.**

[விண் நாடருக்கு ஆ வெம் சமத்தில் அசுர அதிபரை வென்கண்டோன், மண் ஆள் அரசர் மகுட சிகாமணியே போல்வான் மா மரபால், பண் ஆர் பஞ்சகதி மான் தேர் பகலோன் அன்ன பகதத்தன், எண்ணுர் துரக்க வரும் படையை 'அஞ்சல்', என்று என்று எதிர் சென்ருன்.]

**விளக்கம்:-** (முன்னொரு காலத்தில் நடந்த) கொடிய தேவாசுரயுத்தத்தில், தேவர்களுக்குத் துணையாகச் சென்று அசுராதிபரை முதுகிடச் செய்தவனும், சிறந்த வம்சவழி முறையால் மண் ஆளும் அரசர்களின் மகுடமணி போன்றவனும் ஆகிய, பண் (அலங்காரம்) அமைந்த ஐவகை நடைவிதங்களை யுடைய குதிரை பூட்டப் பெற்ற சூரியனை ஒத்த பகதத்தன் என்ற சிறந்த வீரன், - பகைவர் துரத்த தோற்ருேடும் கௌரவ சேனையை, 'அஞ்சல்' என்று சொல்லிக் கொண்டு (பாண்டவர்) முன் சென்ருன், - என்பது பொருள்.

மகுடசிகாமணி - மகுடத்தில் உள்ள சிறந்த இரத்தினம். மாமரபு - வம்சத் தொடர்பு. எண்ணுர் - பகைவர், இங்கே, பாண்டவர். போருடைந்த கௌரவசேனைக்கு **அபயம்** அளித்த வனுய் பகதத்தன், பாண்டவரை எதிர்த்தான், என்பதாம். நரகாசுரனின் மகன் பகதத்தன்.

**31. அலைகால் வெள்ளக் கருங்கடல்போல்**
**அதிரா நின்ற வாகவத்தின்**
**மலைகால் பெற்று வருவதுபோல்**
**வருதிண் பனைக்கை மாமிசையான்**
**சிலைகால் வளைத்துத் தீவாய்வெஞ்**
**சரங்கொண் டடையார் சிரங்கொண்டான்**
**கொலைகால் செங்கட் கரியநிறக்**
**கூற்றந் தனக்குங் கூற்றன்னுன்.**

[அலைகால் வெள்ளம் கருங்கடல்போல் அதிரா நின்ற ஆகவத்தில், மலைகால் பெற்று வருவதுபோல் வரு திண் பனை கை மா மிசை யான், சிலைகால் வளைத்து தீவாய் வெம் சரம் கொண்டு அடையார் சிரங்கொண்டான், கொலை கால் செங்கண் கரிய நிறம் கூற்றம் தனக்கும் கூற்று அன்னுன்.

**விளக்கம்:-** ஈற்றடியை முதலில் வைத்துப் படிக்கவும். கொல்லுதலைச் செய்யும் சிவந்த கண்களையும் கரிய நிறத்தையும் உடைய யமனுக்கும் யமனைப் போன்றவனை பகதத்தன், - அலைவீசும் நீர் வெள்ளத்தையுடைய கருங்கடல் போல் அதிரும் போர்க்களத்தில் மலையொன்று (நான்கு) கால்களைப் பெற்று வருவதுபோல் வருகின்ற வலிய பனைமரம் போன்ற நீண்ட

துதிக்கையையுடைய யானையின்மேல் அமர்ந்தவனும், வில்லை இருகோடிகளையும் வளைத்து தீ உமிழும் நுனியை உடைய கொடிய சரங்களால் அடையார் (பகைவர்) தம் தலைகளை அறுத்துத் தள்ளினான், என்பது பொருள்.

கால், என்பது, செய்கின்ற, வீசுகின்ற, கால்கள், இருகோடி அல்லது முனை, என்ற பொருள்களில் வந்துளது. 'மலை கால் பெற்று வருவதுபோல்', என்றது இல்பொருள் உவமை.

சுப்ரதீகம், என்ற சிறந்த யானைமேல் அமர்ந்து பகதத்தன் கடும்போர் செய்தான் என்பதாம்.

**32. தாரா ரோடைத் திலகநுதற்**
**சயிலம் பதினா யிரஞ்சூழ**
**வாரா நின்ற மதகயத்தின்**
**வன்போர் வலியு மனவலியும்**
**சேரார் வணங்கும் பகதத்தன்**
**திண்டோள் வலியுஞ் சிலைவலியும்**
**பாரா நின்ற கடோற்கசன்றன்**
**படையின் றளர்வும் பார்த்தானே.**

[தார் ஆர் ஓடை திலகம் நுதல் சயிலம் பதினாயிரம் சூழ வாரா நின்ற மதம் கயத்தின் வல்போர் வலியும், மனம் வலியும், சேரார் வணங்கும் பகதத்தன் திண் தோள் வலியும், சிலை வலியும், பாரா நின்ற கடோற்கசன் தன் படையின் தளர்வும் பார்த்தான், ஏ.]

**விளக்கம்:-** தார் - மாலை. ஓடை - நெற்றிப் பட்டம். சயிலம்- மலைபோன்ற யானை. கயம் - யானை. மாலை பொருந்திய, நெற்றிப் பட்டத்தையும், சிந்தூரத் திலகத்தையும் அணிந்த யானைகள் பதினாயிரம் தன்னைச் சுற்றிவர, (அவற்றின் மத்தியில்) வருகின்ற சுப்ரதீகம் என்ற மதயானையின் போர் வலியையும், மனக் களிப்பையும், பகைவரால் வணங்கப்படும் பகதத்தனது தோள் வலியையும் வில்தொழில் வலிமையையும் கண்ட கடோற்கசன், தன்பக்கத்தார் சேனையின் தளர்ச்சியையும் பார்த்தான், - என்பது பொருள்.

கலித்துறை

**33. ஆய போதி லாயிர நூறு மதமாவும்**
**மேய தீய காலனை யொக்கு மேலாளும்**
**சாய கம்முஞ் சாபமும் யாவுந் தானேயா**
**மாய வேடங் கொண்டவ னோடு மலைவுற்றான்.**

[ஆயபோதில் ஆயிரம் நூறு மதம் மாவும் மேய தீய காலனை ஒக்கும்மேல் ஆளும் சாயகமும் யாவும்தானே ஆ(க),மாயம் வேடம் கொண்டு அவனோடு மலைவுற்றான்.]

**விளக்கம்:-** ஆயபோதில்—தன்பக்கத்துச் சேனை தளர்வுற்ற போது. ஆயிரம் நூறு—இலட்சம், மா—யானை. மேல் ஆள்—யானை மேல் ஏறியுள்ள வீரர். சாயகம்-வில், சாபங்-கணை, தன் பக்கத்துச் சேனை தளர்வதைக் கண்டபோது, கடோற்கசன் யானைகளும், வில்லும் அம்பும் ஆகிய எல்லாம் தானே ஆகிய மாய வடிவங்கொண்டு பகதத்தனோடு எதிர்த்துப்போர் செய்பவனானான், என்பதாம்.

வீமன் மகனேனும் அரக்கனுதலால் மாயவேடங்கொண்டான் என்க.

**34. சங்க மூதத் தார்முர சார்ப்ப முழவார்ப்பப்
பொங்கும் பூழி யாழிவ றக்கும் படிபோதச்
சிங்கங் குன்றிற் செல்வது போலச் சிலேயோடு
மெங்குந் தானும் வேழமு மாகி யெதிர்சென்றான்.**

[சங்கம் ஊத தார்முரசு ஆர்ப்ப, முழவுஆர்ப்ப, பொங்கும் பூழி ஆழி வறக்கும்படி போத, சிங்கம் குன்றில் செல்வதுபோல சிலை யோடு எங்கும் தானும் வேழமும் ஆகி எதிர் சென்றான்.]

**விளக்கம்:-**சங்குகள் முழங்கவும் முழவு ஒலிக்கவும், மேல் நோக்கி எழுந்த புழுதிகள் கடலும் வற்றும்படி எங்கும் பரவ, ஆண் சிங்கம் ஒன்று குன்றின் மேல் ஏறிச் செல்வதுபோல் சிலை யோடு போர்க்களம் எங்கும் தானும் யானையுமாய் மாயையினால் தோற்றமளித்துக் கொண்டு கடோற்கசன் பகதத்தன் எதிரில் சென்றான், என்பது பொருள்.

சிங்கம், கடோற்கசன், குன்றம், யானை, ''பொங்கும் பூழி ஆழி வறக்கும்படி போத'' என்றது யானைப்படையில் எழுப்பப் பெற்ற புழுதியின் மிகுதியைக் குறிக்கும்: போத என்பது, பரவ, என்ற பொருளது. ''யானையும் தானுமாகிச் சென்றான்'', என்ற உயர்திணை முடிபு திணைவழு. தார் முரசு—மாலை சூட்டப்பெற்ற முரசு.

**35. மைபோ லார்த்து மும்முறை தான மழைசிந்திக்
கைபோய் முட்டிக் கையொடு தத்தங் கால்வீசி
மெய்போல் வெம்போர் செய்த வீரன் விறல்வேழம்
பொய்போ னின்ற வருபக தத்தன் போர்வேழம்.**

[மைபோல் ஆர்த்து மும்முறை தானம் மழை சிந்தி; கை போய் முட்டி கையொடு, தம் தம் கால் வீசி மெய்போல் வெம் போர் செய்த வீரன் விறல் வேழம். பொய் போல் நின்ற வரு பகதத்தன் போர் வேதம்.]

**விளக்கம் :—**மை-மேகம். மும் முறை-மூன்று வழி, அல்லது மூன்று இடம். தானம்-(தாநம்) மதநீர். கை-துதிக்கை. வீரன் விறல் வேழம் மைபோல் —— செய்தன; வரு பகதத்தன் போர் வேழம் பொய்போல் நின்றன, என்று அன்வயிக்க, வீரனான கடோற்கசனது மாயையின் வலிமையுடைய (பொய்) யானைகள். மேகம் போல் ஆர்த்தும், மூன்று இடங்களிலிருந்து மதநீரைச் சிந்திக்கொண்டும், தமதுகைகளால் பகையானைகளின் கைகளைத் தாக்கியும், கால்களை வீசிக்கொண்டு, நடந்தும் உண்மைபோல் கொடிய போரைச் செய்தன; களம் வந்த பகதத்தனது, மெய்யான போர் யானைகள் செயலற்றுப் பொய் யானைகள் போல் நின்றன — என்பது பொருள்.

பொய் தொழிலால் மெய்யும் மெய் தொழிலின்மையால் பொய்யும் ஆயின என்றது நயம் மிக்கது.

**39. நின்றார் நின்ற படிகடி தாக நெடிதோடிச்**
**சென்றார் கண்ட சிந்துரம் யாவுந் தீயம்பிற்**
**கொன்றார் மற்றக் கொற்றவர் யாருங் கொலையுண்டார்**
**வென்றா ரன்றே வீமன் மகன்சே னையில்வீரர்.**

[நின்றார் நின்றபடி கடிது ஆக நெடிது ஓடி சென்றார் கண்ட சிந்துரம் யாவும் தீ அம்பின் கொன்றார். மற்று அ கொற்றவர்யாரும் கொலையுண்டார்; வென்றார் அன்றே வீமன் மகன் சேனையில் வீரர்]

**விளக்கம்:-** வீமன் மகன் சேனையில் நின்றார் —— யாவருங் கொலையுண்டார், வென்றார் அன்றே! என்பது அன்வயம். கடோற்கசனது யானைச் சேனையில் உள்ள (பொய்) வீரர், (பகதத்தன் சேனையை) எதிர்த்து நின்றார்கள்; எதிர்த்து நின்ற படியே வேகமாக நெடுந்தூரம் விரைந்து சென்றார்கள்; (சென்று) எதிரிலே கண்ட பகையானைகளை எல்லாம் தீயைப்போல் சுடுகின்ற மாயை அம்புகளால் கொன்றார்கள்; மற்று: அசை, அல்லது, அதன்பின். பகைப்படையினரான மெய்யான வீரர்கள் எல்லோரும் அழிந்தார்கள். கடோற்கசனது பொய்வீரர்கள் பகதத்தனது மெய்யான வீரர்களை வென்றனர். அன்றே: தேற்றம்.

**37. ஆன தான தாகவ மெங்கு மானைப்போர்**
**போன போன மைந்தர் பிழைப்பீர் போமென்றென்(று)**
**ஊன மெய்தா தவ்விறை போனா னுயிரோடும்**
**போன கண்ட காய்கதி ரோனும் புறமிட்டான்.**

[ஆனது ஆனது ஆகவம் எங்கும் ஆனை போர்; போன போன மைந்தர் பிழைப்பீர் போம் என்று என்று ஊனம் எய்தாது அ

இறை போனுன் உயிரோடும்; போன் கண்ட காய் கதிரோனும் புறம் இட்டான்.]

**விளக்கம்:-** ஆகவம் (போர்க்களம்) எங்கும் யானைப் போர் மிகுதியா நடந்து முடிந்தது; போனபோன (பயந்து ஓடிப் போன) மைந்தர், பிழைப்பீர், ஆதலால் களம் அகன்று போங்கள், என்று பலமுறை சொல்லிக் கொண்டு அந்த இறை (பகதத்தன்) அழிவு அடையாமல் உயிரோடும் திரும்பிச் சென்ருன்; அப்படி அவன் வலி அழிந்து சென்றதைக் கண்ட காயும் கதிரோனும் (சூரியனும்) புறம் இட்டான், அதாவது கடோற்கசனது மாயப் படைக்கு அஞ்சிப் புறம் கொடுப்பவன்போல் மறைந்தான், - என்பது பொருள். ஈற்றடி **தற்குறிப்பேற்றம்.** மைந்தர் பிழைப்பீர், என்ற முடிவு, இடவழு.

**38.** **பூந்தண் மாலைப் பஞ்சவ ரானைப் போர்வென்று**
**சேர்ந்த சேர்ந்த மன்னவ ரோடுந் திறலோடும்**
**தாந்தம் பாடி வீடு புகுந்தார் தரையாளும்**
**வேந்த னேடும் பாசறை புக்கான் வீடும்மன்.**

[பூந்தண் மாலை பஞ்சவர் ஆனை போர் வென்று சேர்ந்து சேர்ந்து மன்னவரோடும் திறலோடும் தாம்தம் பாடி வீடு புகுந்தார்; தரை ஆளும் வேந்தனேடும் பாசறை புக்கான் வீடுமன்.]

**விளக்கம்:-** அழகிய தண்ணிய வெற்றி மாலை சூடிய பஞ்ச பாண்டவர் ஆனைப்போர் வென்று, தம்மோடு மிகுதியாக வந்து சேர்ந்த மன்னர்களோடும், வெற்றியோடும் தாங்கள் தங்களுடைய படைவீடு சேர்ந்தார்கள்; பூமி ஆளும் அரசனுன துரியோதன னேடு வீடுமனும் படை வீட்டை அடைந்தான், - என்பது பொருள். சேர்ந்த சேர்ந்த மன்னவர் - தம்பால் வந்து சேர்ந்த தொகை மிகுதியுடைய மன்னவர்கள். திறல் - வெற்றி. சூரியன் மறையவும் இருதிறத்தாரும் பாசறை அடைந்தனர், - என்பதாம்.

காந்தாரியின் சோகம்

**39.** **பூண்பாய் மார்பிற் புத்திரர் தம்மைப் பொலிவோடும்**
**காண்பா ளைவர் கண்டிலள் பெற்ற காந்தாரி**
**சேண்பா லெய்தச் சென்றன ரோவென் றிருகண்ணீர்**
**தூண்பா லாகிச் சோர்தர வுள்ளஞ் சோர்வுற்ருள்.**

[பூண் பாய் மார்பின் புத்திரர் தம்மை பொலிவோடும் காண்பாள், ஐவர் கண்டிலள் பெற்ற காந்தாரி; சேண் பால் எய்த சென்றனரோ? என்று இரு கண் நீர் தூண்பால் ஆகி சோர்தர உள்ளம் சோர்வு உற்ருள்.]

**விளக்கம்:-** பெற்ற காந்தாரி ஆபரணங்கள் பரவிய மார்பை யுடைய பிள்ளைகளை எல்லாம் உள்ளக் களிப்போடு (தினந்தோறும்) காண்பவளாகிய காந்தாரி, (அன்று) பிள்ளைகளில் ஐவரைக் கண்டிலள்; (காணாது போகவே) 'வீரசுவர்கம் சென்றனரோ!' என்று சொல்லி, இரு கண்களினின்றும் நீர் பெருக, தூணைப்போல் சலனம் அற்று மனம் சோர்ந்தாள், - என்பது பொருள். சேண்பால் - வானிடத்தேயுள்ள வீர சுவர்க்கத்தினிடத்தே, பொலிவு, என்பது இங்கே உள்ளக்களிப்பு, என்ற பொருளது. சேண், என்பது ஆகுபெயராய் சுவர்க்கத்தைக் குறித்தது.

**40. கொன்னே குந்தி மைந்த ரிருக்கக் கொலையுண்டீர்**
**முன்னே முன்னு முன்னமு டிந்த தின்றென்ன**
**மின்னே யென்ன மெய்குலை யாமண் மிசைவீழ்ந்தாள்**
**என்னே யென்னே யென்றினை யாநின் றென்செய்தாள்.**

[கொன்னே குந்தி மைந்தர் இருக்க கொலையுண்டீர்; முன்னே முன்னும் முன்னம் முடிந்தது இன்று என்ன, மின்னே என்ன மெய் குலையா மண்மிசை வீழ்ந்தாள், என்னே என்னே என்று இனையா நின்று என் செய்தாள்?

**விளக்கம்:** - கொன்னே - அறிவில்லாமல், சிறப்பாக. முன்னே முன்னும் முன்னம் - (குந்திமைந்தர்கள்) முன்னே எண்ணிய எண்ணம். (காந்தாரி) மெய் குலையா மின்னே என்ன மண்மிசை வீழ்ந்தாள் - யாக்கை நடுங்கி மின்னல் விழுவதுபோல் மண்மேல் சோகித்து விழுந்தாள். என்ன துக்கம் இது என்று மனம் வருந்தி, என்ன பாடுபட்டாள், அதாவது, மிகமிக வருந்தினாள், - என்பது ஈற்றடியின் பொருள். இனையா - மனம் வருந்தி. குந்திமைந்தர், என்று காந்தாரி கூறியது, தாயாதிக் காய்ச்சல். முன்னே முன்னும் முன்னம் என்பது தன் மக்களைக் கொல்லவேண்டும் என்று முன்னமேயே கொண்டிருந்த பாண்டவர்களது எண்ணம், என்ற பொருளது.

**41. வீருர் கற்பின் மின்னனை யாளை விறல்மைந்தர்**
**ஏரு மன்றி லேற்றவு மாமன் றென்னுதாள்**
**ஊரு வன்பிற் கண்ணறை மன்ன னொருதேவி**
**ஆரு வெள்ளத் துன்புற வன்றே யடியிட்டாள்.**

[வீறு ஆர் கற்பின் மின் அனையாள், விறல் மைந்தர் ஏரு மன்றில் ஏற்றவும் ஆம் அன்று என்னுதாள், ஊரு அன்பின் கண்ணறை மன்னன் ஒருதேவி, ஆரு வெள்ளம் துன்பு உற அன்றே அடி இட்டாள்.

**விளக்கம்:-** வீறு ஆர் கற்பின் மின் அனையாள் - பெருமை பொருந்திய பதிபக்தி உடைய மின்னற் கொடி போன்ற காந்தாரி.

விறல் மைந்தர் - வலிமையுடைய புத்திரர்களான துரியோதன துச்சாதனர். ஏரு மன்றில் ஏற்றவும் ஆம் அன்று என்னுதாள் - திரௌபதியைப் பெண்கள் செல்லத் தகாத மன்னவை இழுத்துச் செல்லவும், ''இச் செயல் தக்கதன்று,'' என்று கூறித் தகையாத காந்தாரி. ஊரு அன்பின் கண்ணறை மன்னன் - பாண்டவர் பக்கல் இயற்கையாக உண்டாகாத அன்பை உடைய பிறவிக் குருடனை திருதராட்டிரன். (அவனது) ஒரு தேவி - அவனுக்கு ஏற்றவளான சிறந்ததேவி; காந்தாரி. வெள்ஆரு துன்புஉற வெள்ளத்தில் அடி இட்டாள் - தணியாத துன்பத்தை அடைய (துன்பமாகிய) வெள்ளத்தில் கால் இட்டாள். பாண்டவர் தேவியை மன்னவை இழுத்துச் சென்று பரிபவப் படுத்தல் தக்கதன்று என்று கூறித் தடுக்காத காந்தாரியின் தீவினை, புத்திரசோகமாகிய பயனை அளித்தது, என்பது கருத்து. துன்பம் என்பதை அறியாத காந்தாரி, மைந்தரில் ஐவர் இறந்த அன்று தான், துன்பம் என்பதை அறியத் தொடங்கினுள், என்று கவி கூறியபடி.

## சூரியோதயம்

**42. ஆளாய் மாய்ந்த வேந்தரி டந்தோ றழுமோசை**
**கேளா வெப்போ தேகுவ மென்றக் கிளர்கங்குல்**
**மீளா வோடிற் றத்திசை வானோன் மிளிர்சென்னிச்**
**சூளா மணிபோல் வந்தது காலைச் சுடரம்மா.**

[ஆள் ஆய் மாய்ந்த வேந்தர் இடம் தோறும் அழும் ஓசை கேளா எப்போது ஏகுவம், என்று அ கிளர் கங்குல் மீளா ஓடிற்று; அ திசை வானோன் மிளிர் சென்னி சூளா மணி போல் வந்தது காலை சுடர், அம்மா.]

**விளக்கம்:-** ஆள் - வீரர். கிளர் கங்குல் - இருளின் செறிவு உடைய இராப்பொழுது. மீளா ஓடிற்று - மீளா (மீண்டு), அதாவது திரும்பி ஓடிற்று. அத்திசை வானோன் - (இருள் ஓடி மறைந்த) கீழ்த்திசைக் குரியவனை இந்திரன். சூளாமணி - முடியில் அணியும் சிறந்த மணி. வீரர்களாய்க் களம் இருந்து மாண்ட அரசர்களுக்காகப் பல இடங்களிலும் உற்றுர் அழுகின்ற ஓசை எப்பொழுது கேட்காமல் அகலுவோம் என்று எண்ணி இரவுப் பொழுது வந்த வழியே ஓடி விட்டது; அது மறைந்த திசைக் குரியவனை இந்திரனது விளங்கும் முடியில் அணிந்த சூளாமணி போல் காலைக்கதிர் (சூரியன்) உதயமாயிற்று, - என்பது பொருள்.

**நான்காம் போர்ச் சருக்கம் முற்றும்.**

# ஐந்தாம் போர்ச் சருக்கம்

## கடவுள் வாழ்த்து

### கலித்துறை

**1. கருமாமு கிற்கோல நெஞ்சத்தி ருத்துங்க ருத்தெய்துமேல்**
**அருமாத வன்றானு மவன்முத்தி தருகைக்கு மவனேகுரு**
**தருமாலை மணநாறு தாளானை வண்டேறு தண்ணந்துழாய்**
**மருமாலை புனைகின்ற திருமாலை யல்லாது வல்லார்கள்யார்.**

[கரு மா முகில் கோலம் நெஞ்சத்து இருத்தும் கருத்து எய்து மேல், அரு மா தவன் தானும் அவன்; முத்தி தருகைக்கும் அவனே குரு; (ஆதலால்) தரு மாலை மணம் நாறு தாளானை வண்டு ஏறு தண் அம் துழாய் மரு மாலை புனைகின்ற திருமாலை அல்லாது வல்லார்கள் யார்?]

**விளக்கம்:-** கரிய சிறந்த மேகம் போன்ற திருமாலினது திருமேனியை மனத்தில் இருக்கச் செய்யும் எண்ணம் ஒருவனுக்கு உண்டாகுமாயின், அவனே அரிய பெரிய தவத்தைச் செய்தவன்; முக்தி தருகைக்கும் அவனே நல்லாசிரியன் ஆவான்; (ஆதலால்) கற்பக தருவின் மலர்களாலான மாலைகளின் மணம் வீசும் திருவடிகளை உடையவனும், வண்டுகள் மொய்க்கும் தண்ணிய துளசி மாலை புனைகின்றவனுமான திருமால் அல்லாமல் சிறந்த கடவுளர் யார் உளர்?—என்பது பொருள்.

திருமாலின் திருவடிவத்தை மனத்தில் இருத்தித் தியானித் திருப்பவன் அரிய பெரிய தவம் செய்தவனும், தன்னை அடைந் தார்க்கு முக்தி வழிகாட்டும் ஞானாசிரியனும் ஆவான்; ஆகவே, தாம் வழிபடுவதற்குத் திருமாலை அல்லால் வேறு சிறந்த கடவுள் இல்லை, என்று கூறியபடி. முதல் இரண்டு அடிகளால் திருமால் அடியாரது மகிமையைக் கூறிய புலவர், பின்னிரண்டடிகளால் திருமாலின் மேன்மையை எடுத்துக் கூறுகின்றார்.

## இருதிறத்துச் சேனையும் களம் அடைதல்

**2. வரி சங்க முந்தாரை யுஞ்சின்ன மும்பொன் மணிக்காளமும்**
**முரசங்க ளுந்துந்து பியுமெங்கு மெழவிம்ம முழவிம்மவே**
**கரைசிந்து திரைசிந்து நுரைசிந்து விரைசிந்து கணமென்னவே**
**அரசன்பெ ருஞ்சேனை வெள்ளம்பு றப்பட்ட தணியாகவே.**

[வரி சங்கமும், தாரையும், சின்னமும், பொன்மணி காளமும், முரசங்களும், துந்துபியும் எங்கும் எழவிம்ம முழ விம்மவே, கரைசிந்து, திரைசிந்து, நுரைசிந்து, விரைசிந்து, கணம்

என்னவே, அரசன் பெருஞ்சேனை வெள்ளம் புறப்பட்டது அணி ஆகவே.]

**விளக்கம்:-** சங்குகளும், தாரை சின்னம் காளம் என்னும் ஊது கருவிகளும், முரசங்களும் துந்துபி என்னும் தோல் வாத்ய மும் எங்கும் எழுந்து ஒலிக்கவும், முழ(வம்) (மத்தளங்கள்) முழங்க வும் கரையை மோதுகின்ற நுரை சிந்தும் அலைகளை எறிகின்ற விரைந்து பொங்கிவரும் கடல்களின் கூட்டம்போல் தருமனது பெரிய சேனைவெள்ளம் அணிகொண்டு போருக்குப் புறப்பட்டுக் களம் வந்தது,—என்பது பொருள். விரை **சிந்து** என்பதிலுள்ள **சிந்து**, சமுத்திரம் என்ற பொருளது.

**3.** **விருதாயி ரங்கோடி முரசாயி ரங்கோடி மேன்மேலெழ**
**பொருதானை யுடன்வந்த ணைந்தார் புறந்தந்த பூபாலரும்**
**கருதாவ ரக்கன்கொ டுந்தானை யிறைவன் கடுந்தானை**
**யென்(று**
**இருதானை யும்போல வெதிருற்ற விருமன்ன ரிருதானையும்.**

[விருது ஆயிரம் கோடி, முரசு ஆயிரம் கோடி மேல் மேல் எழ பொருதானையுடன் வந்து அணைந்தார் புறம் தந்த பூபாலரும்; கருதா அரக்கன் கொடுத்தானை இறைவன் கடுந்தானை என்று இரு தானையும் போல எதிர் உற்ற இரு மன்னர் இரு தானையும்.]

**விளக்கம்:-** விருது - வெற்றி வீரம் ஆயவற்றின் அடையாள மான கொடி. மிகப்பலவான விருது முன் செல்லவும், மிகப்பல வான முரசங்கள் முழங்கவும் முன்னுள் போரில் முதுகிட்ட அரசர் களும் அவரவர் போர் செய்யும் சேனைகளுடன் வந்து போர்க்களம் சேர்ந்தனர்; கருதா (எவரையும் மதிக்காத) அரக்கனை இராவணனது கொடிய சேனையும், இறைவனை இராமபிரானது கடிய வானர சேனையும் என்ற இருதிறத்துச் சேனையும் போல், தருமன் துரியோதனன் ஆகியவர்களின் இரு சேனையும் எதிர் நெருங்கின, என்பது பொருள்.

கருதா அரக்கன் என்பதற்கு நன்மை தீமைகளைக் கருதாத இராவணன் என்றோ, அல்லது, எவர்சொல்லையும் மதிக்காத இராவணன், என்றோ, பொருள் கொள்ளலாம். இராவணன் முடிவில் அதிர்ந்ததுபோல் துரியோதனன் மூலத்தோடு அழியப் போவதைக் குறிக்குங் கருத்தில் இராவண சேனை துரியோதன சேனைக்கு உவமையாயிற்று.

## வீடுமனோடு பொர விசயன் வரல்

**4.** **அரக்கர்க்கு முதல்வான ளித்தோரு மெமரின்று மவர்போலுமைத்**
**துரக்கைக்கு நின்றேனெ னத்தெவ்வர் தம்மோடு**
**சொல்லிற்றெனக்**

**குரக்குக்கொ டித்தேரின் மிசையேறி விசையோடு கூத்தாடவே**
**புரக்கைக்கு நின்றேனு டன்செங்கண் விசயன் புறப்பட்டனன்.**

[அரக்கர்க்கு முதல் வான் அளித்தோரும் எமர், இன்று அவர் போல் உமை துரக்கைக்கு நின்றேன் என தெவ்வர் தம்மொடு சொல்லிற்று என, குரக்கு கொடி தேரின் மிசை ஏறி விசையோடு கூத்தாடவே, புரக்கைக்கு நின்றேனுடன் செங்கண் விசயன் புறப் பட்டனன்.]

**விளக்கம்:-** ''முன் யுகத்திலே இராவண சேனையிலிருந்த இராக்கதர்களுக்கு வான் (வீரசுவர்க்கம்) அளித்தவர்களும் எங்கள் இனத்தார்; இன்றும், அவ்வானரவீரர்போல் உங்களை ஒழியச் செய்வதற்கு இங்கே (விசயனது கொடியில்) நின்றேன்'' என்று பகைவர்களாகிய துரியோதனுதியர்க்குச் சொல்லியதுபோல் குரங்கின் வடிவைக் கொண்ட கொடியை உடைய தேரின்மேல் (அனுமான்) ஆவேசித்து வேகத்தோடு கூத்தாட, விசயன், தங் களை இரட்சிக்கும் பொருட்டுத் துணை நின்ற கண்ணனுடன் (போர் செய்யக் களம்) வந்தான், என்பது பொருள்.

விசயனது கொடி, அனுமக் கொடி. அது காற்றினுல் ஆடுதல், அனுமான் கூத்தாடுவது போன்றிருந்தது. ''உங்களை அழிக்க இப்பொழுது விசயனது கொடியில் நின்றேன்'', என்று அனுமான் சொல்லிக் கூத்தாடியது, என்ற கற்பனை தற்குறிப்பேற்றம்.

5. **அரனின்ற னன்போல வவனின்ற தேரொத்த வணிதேர்மிசைப்**
**பொரநின்ற நதிமைந்த னெடுசென்று முனைநின்று**
**பொரவெண்ணியே**
**சரநின்ற குனிசாப விசயன்ற னைக்கொண்டு சங்கங்குறித்(து)**
**உரநின்ற வவனெஞ்சு டைப்பாகன் மான்றேரு கைத்தூரவே**

[அரன் நின்றனன் போல அவன் நின்ற தேர் ஒத்த அணி தேர்மிசை பொர நின்ற நதி மைந்தனெடு சென்று முனை நின்று பொர எண்ணியே, சரம் நின்ற குனி சாபம் விசயன்தனை கொண்டு, சங்கம் குறித்து, உரம் நின்ற அவன் நெஞ்சு உடை பாகன் மான் தேர் உகைத்து ஊரவே; அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம்:** சிவபெருமான் போருக்கு வந்து நின்றதுபோல், அப்பெருமான் திரிபுரம் அழிக்கையில் ஏறியிருந்த பூமியாகிய தேரை ஒத்த அழகிய தேரின்மேல் போர் செய்ய வந்து நின்ற வீடுமனுடன், அவன்முன் சென்று முன்நின்று போர் செய்ய எண்ணி, அம்புகள் பொருந்திய வளைந்த காண்டீபம் என்ற வில்லை யுடைய விசயனை அழைத்துக் கொண்டு, தனது பாஞ்ச சன்னியம் என்ற சங்கை ஊதிக்கொண்டு, விசயனது மனத்திற்கு ஏற்ற பாக

னை கண்ணன், மான்தேர் நடத்திச் செல்ல, - தொடரும். உரம் நின்ற அவன் நெஞ்சுடைய பாகன் - வலிமை நிலை நின்ற அந்த விசயனது மனத்தின் வழி தேர் நடத்தும் பாகனுன கண்ணன் அல்லது அவனது மனத்திற்கு உகப்பான பாகன். உரம், என் பதற்கு ஞானம், என்றும் பொருள் கொள்ளலாம். அப்பொழுது ஞானபலத்தைப் பெற்ற நெஞ்சினனுன விசயன், என்பது பொருளாகும்.

**6. ஊர்கின்ற தேரோடி யுயர்கங்கை மகனின்ற வொருதேருடன்**
**சேர்கின்ற வெல்லைக்க லிங்கேசர் முதலான தெவ்மன்னர்போய்**
**நேர்கின்ற விசயன்ற னுடன்மோதி யவனேவு நெடுவாளிபட்(டு)**
**ஈர்கின்ற புண்வாயில் வார்கின்ற செந்நீரினி டைமூழ்கினுர்.**

[ஊர்கின்ற தேர் ஓடி உயர் கங்கை மகன் நின்ற ஒரு தேருடன் சேர்கின்ற எல்லை, கலிங்க ஈசர் முதல் ஆன தெவ்மன்னர் போய், நேர்கின்ற விசயன் தனுடன் மோதி, அவன் ஏவு நெடுவாளி பட்டு, ஈர்கின்ற புண் வாயில் வார்கின்ற செம் நீரினிடை மூழ்கினுர்.]

**விளக்கம்:-** கண்ணன் நடத்துகின்ற தேர் ஓடிச் சென்று கங்கை மைந்தனுன வீடுமன் ஏறியிருந்த சிறந்த தேருடன் நெருங்குகின்ற சமயத்தில், கலிங்க நாட்டுத் தலைவர் முதலிய பகை மன்னர் எதிர்த்துச் சென்று, எதிர்ப்பட்ட விசயனுடன் எதிர்த்துப் போர்செய்து, அவன் விடுத்த நெடிய சரங்கள் பட்டு, (அதனுல் உண்டான) புண்களின் வழி பெருகிய இரத்த வெள்ளத்தில் ஆழ்ந்தனர், என்பது பொருள்.

**7. செல்லுங் கலிங்கேச ரலையுண்ட நிலைகண்டு சிவனென்றுபார்**
**சொல்லும் பெருஞ்செம்மல் பல்லங்க ளவன்மேற்**
**றெருடுத்தேவினுன்**
**கொல்லுங் கொடும்பாண மவையைந்து விசயன்**
**கொதித்தேவினுன்**
**வில்லுந்தன் வின்னுணும் விறலம்பு முடனற்று**
**விடைகொள்ளவே.**

[செல்லும் கலிங்கேசர் அலையுண்ட நிலை கண்டு, சிவன் என்று பார் சொல்லும் பெருஞ்செம்மல் பல்லங்கள் அவன் மேல் தொடுத்து ஏவினுன்; கொல்லும் கொடு பாணம் அவை ஐந்து விசயன் கொதித்து ஏவினுன்; வில்லும் தன் வில் நாணும் விறல் அம்பும் உடன் அற்று விடை கொள்ளவே.]

**விளக்கம் :-** விசயனை எதிர்த்த கலிங்கேசர் தளர்ந்ததைக் கண்டு, ஆற்றலில் சிவபெருமானே என்று உலகம் கூறும் சிறந்த வீரனுன வீடுமன் விசயன் மேல் அம்புகளைத் தொடுத்துச் செலுத்

தினன்; (உடனே) விசயன் மனம் கொதித்து, வீடுமனது வில்லும், வில்லின் நாணும், வலிய கணைகளும் ஒன்றுபட்டு அழிந்து விடை பெற்றுச் செல்லும் படி கொடிய பாணங்கள் ஐந்தை ஏவினன், என்பது பொருள். பல்லம்-அம்பு. பாணம் அவை ஐந்தும் என்பதிலுள்ள **அவை** என்பதை அசையாகக் கொள்க.

வீமனுடன் பகைவர் பொரல்

**8. இவர்கொண்ட செற்றத்தொ டிவ்வாறு போர்செய்ய விகல்வீமனைப்**
**பவர்கொண்ட நெடுவேலை போல்வந்து மொய்த்தார்கள் பலமன்னரும்**
**கவர்கொண்ட முனைவாளி யவர்மார்பு தோறுங் கழன்றோடவே**
**தவர்கொண்டு செற்றான்முன் னளகேச னமர்வென்ற தனியாண்மையான்.**

[இவர் கொண்ட செற்றத்தோடு இ ஆறு போர் செய்ய, இகல் வீமனை பவர் கொண்ட நெடு வேல் போல் வந்து மொய்த்தார்கள் பலமன்னரும்; கவர் கொண்ட முனைவாளி அவர் மார்பு தொறும் கழன்று ஓடவே தவர் கொண்டு செற்றான் முன் அளகேசன் அமர் வென்ற தனி ஆண்மையான்.]

**விளக்கம் :-** இவர் கொண்ட பகையோடு (வீடும அருச்சுனர் ஆகிய) இவர் கொண்ட பகை உணர்ச்சியோடு. பவர் கொண்ட நெடுவேலை-(பிரளய வெள்ளம் போல்) மிகுதியின் நெருக்கத்தைக் கொண்ட கடல்கள். கவர் கொண்ட முனைவாளி-(உயிரைக்) கவர் தலைக் கொண்ட கூரிய அம்பு. தவர் கொண்டு - வில்லைக் கையில் கொண்டு, வீடுமனும் விசயனும் இவ்வாறு போர் செய்கையில், வீமனை பல அரசர்கள், பிரளய கடல் போல் நெருங்கிச் சூழ்ந்து கொண்டார்கள்; முன்னர் குபேரனோடு செய்த போரில் தனியே நின்று வெற்றி கொண்ட வீமன் செலுத்திய கூரிய அம்புகள் பகை மன்னர்களின் மார்பைத் துளைத்துக் கொண்டு வெளிப்படும் படி செய்து அவர்களை அழித்தான், என்பது பொருள்.

அளகேசன் - குபேரன். குபேரனோடு தனி நின்று போர் வென்ற வரலாற்றை ஆரணிய பருவத்தின் புட்ப யாத்திரைச் சருக்கத்திற் காண்க. தனி ஆண்மையான் - துணை வேண்டா வீரன், அசகாயசூரன்.

**9. துச்சாத னன்றம்பி மார்மைந்தர் மற்றுஞ்ச குனிசல்லியன்**
**எச்சாப முடிமன்ன ரும்பின்ன ருந்துன்னி யெதிர்சீறினர்**
**அச்சாப மொன்றாலு மன்றவ்வ வர்க்கம்ப னேகந் தொடுத்து(து)**
**உச்சாச னஞ்சொல்லி நின்றானவ் வடன்மன்ன ருடனோடவே.**

[துச்சாதனன் தம்பிமார் மைந்தர், மற்றுஞ் சகுனி சல்லியன், எ சாபம் முடி மன்னரும் பின்னரும் துன்னி எதிர் சீறினர்; அ சாபம் ஒன்ருலும் அன்று அ அவர்க்கு அனேகம் அம்பு தொடுத்து, உச்சாசனம் சொல்லி நின்ருன், அ அடல் மன்னர் உடன் ஓடவே.]

**விளக்கம்:-** (மன்னர் பலர் அழிந்த), பின்னரும் துச்சாதனன்... சல்லியன், சாபம் முடி எ மன்னரும் எதிர் துன்னி சீறினர்; (அப் பொழுது வீமன்) அ சாபம் ஒன்ருலும், அன்று அவ்வவர்க்கு அனேகம் அம்பு தொடுத்து, அ அடல் மன்னர் உடன் ஓட உச்சா சனம் சொல்லி நின்ருன், - என்று அன்வயிக்க.

வீமனது வெற்றி கண்டு பொருது, துச்சாதனனும் அவன் தம்பியரும், அவர்களது மைந்தரும், மற்றும் சகுனி சல்லியர்களும், வில்லேந்திய முடிமன்னர் பலரும், எதிரில் வந்து நெருங்கிச் சீற்றத் துடன் போர் செய்தார்கள்; (வீமன்) தனது ஒரு வில்லால் அப் பொழுது எதிர்த்த அந்த அந்த அரசர்களுக்கு எல்லாம் பல அம்பு களை அதாவது ஒவ்வொருவருக்கும் பல அம்புகளைப் பிரயோகித்து அந்த அடல் மன்னர் ஒரு சேர ஓடும்படி செய்து, உச்சாசனம் சொல்லி நின்ருன், - என்பது பொருள்.

உச்சாசனம் — கொலை. உச்சாசனம் கூறல் — கொல்வேன் கொல்வேன் என்று வீர வசனம் கூறல். வீமனை எதிர்த்த துச்சா தனன் முதலிய அரசர்கள் எல்லோரும், அவன் முன் நிற்க மாட்டாமல் பின்னிட்டனர், என்க.

துரியோதனன் வீமனை நெருங்கல்

**10. செருத்துப் புடைத்தோடி வருதம்பியர்க் கண்டு செற்றத்துடன்**
**கருத்துப் புகைத்துட் கலங்கிக் கடைக்கண்கள் கனல்காலவே**
**மருத்துத் தருங்காளை நின்ருனை யின்ருவி மலைவேனென**
**உருத்துத் தடந்தேரின் மிசைவந் தடுத்தானு ரககேதனன்.**

[செருத்து புடைத்து ஓடி வரு தம்பியர் கண்டு செற்றத்துடன், கருத்து புகைந்து கலங்கி கடைக் கண்கள் கனல் காய, மருத்து தரும் காளை நின்ருனை இன்று ஆவி மலைவேன் என, உருத்து தடந்தேர்மிசை வந்து அடுத்தான் உரககேதனன்.]

**விளக்கம் :-** செருத்துப்புடைத்து — (வீமனேடு) போர் செய்து (அவனல்) புடைக்கப்பெற்று, செற்றம் — கோபம். கருத்து புகைந்து - மனம் கொதிப்புக் கொண்டு, மருத்து தரும் காளை — வாயு குமாரனன வீமன். இன்று ஆவி மலைவேன் - இப்பொழுது (வீமனது) உயிர் அழியும்படி போர் செய்வேன். உருத்து - கோபம் மிகுந்து, அல்லது வீர முழக்கம் செய்து கொண்டு; உரககேதனன் அடுத்தான் - துரியோதனன் (வீமனை) நெருங்கினன்.

தம்பியரும் மற்றவரும் வலி அழிந்து ஓடி வருவதைக் கண்டு மனம் கொதிப்புக் கொண்ட துரியோதனன், இன்று வீமனை அழிப்பேன், என்று சொல்லிக் கொண்டு அவனை நெருங்கினன், என்பதாம்.

தம்பியர்க்கண்டு, என்று வலி மிகுந்தது, அது எழுவாய்த் தொடர் அன்று, மற்று இரண்டன் தொகை என்று குறிக்கும் கருத்தது.

**11. பேராத நிலைநின்று வன்போடு சாபம்பி டித்தெங்கணும்**
**சோராத வயவாளி யீரைந்து சேரத்தொடுத் தேவினன்**
**ஆராவ முடனிட்ட கவசம்பி ளந்தோடி யாண்மைக்கெலாம்**
**வீராபி டேகஞ்செய் வயவீம னகன்மார்பின் மிகமூழ்கவே.**

பேராத நிலை நின்று வன்போடு சாபம் பிடித்து எங்கணும் சோராத வயவாளி ஈர் ஐந்து சேர தொடுத்து ஏவினன்! ஆராவ முடன், இட்ட கவசம் பிளந்து ஓடி, ஆண்மைக்கு எலாம் வீர அபி டேகம் செய்வய வீமன் அகல் மார்பில் மிக மூழ்கவே.

**விளக்கம் :-** பேராத நிலை நின்று வன்போடு சாபம் பிடித்து, ஆண்மைக்கு எலாம் வீர அபிடேகம் செய் வய வீமன் இட்ட கவசம் பிளந்து ஓடி அகல் மார்பில் மிக மூழ்க எங்கணும் சோராத வயவாளி ஈர் ஐந்து ஆராவமுடன் சேர தொடுத்து, ஏவினன், என்பது அன்வயம்.

பேராத நிலை — சலித்தல் இல்லாத நிலை, வன்பு - வலிமை. ஆண்மைக்கு ... வயவீமன் - ஆண்மையின் தலைவனாக, அவனது வீரம் காரணமாக, மகுடம் சூட்டப் பெற்ற வலிய வீரனான வீமன்; அதாவது தேரில்லா வீரன். ஆராவம் பேரொலி ஆரவாரம், எங் கணும் சோராத வாளி - எந்த இடத்தும் தாழாது பகை வெல்லும் தன்மையுடைய சிறந்த அம்பு. வெகுண்டு வீமனை நெருங்கிய துரி யோதனன், வீமனது கவசம் பிளந்து மார்பில் தைக்கும் படி வலிய பத்து அம்புகளை விடுத்தான், என்பதாம். ஆராவம்-பேரொலி, ஆர் ஆவமுடன், என்றும் பிரிக்கலாம்; அப்பொழுது அம்புகள் நிறைந்த அம்பருத் தூணியோடு கவசமும் பிளந்து வீமனது மார்பைத் துளைக்கும் படி பத்து அம்புகளைத் துரியோதனன் விடுத் தான், என்பது பொருளாகும்.

**12. ஈமந்தொ றுஞ்சென்று நடமாடு கழலைய னெதிராய்வரும்**
**காமன்ற னுடன்மேல்வி ழித்திட்ட நுதலிற்க னற்கண்ணெனத்**
**தாமம்பு னைந்தார மணநாறு மார்பந்த டந்தோயவே**
**வீமன்றெ டுத்தானெ ரெதிரம்பு பார்மன்னன் மிடல்சாயவே.**

[ஈமம் தொறும் சென்று நடம் ஆடு கழல் ஐயன் எதிராய் வரும் காமன் தன் உடல் மேல் விழித்திட்ட நுதலில் கனல் கண்

என, தாமம் புனைந்து ஆரம் மணம் நாறும் மார்பம் தடம் தோயவே, வீமன் தொடுத்தான் எதிர் அம்பு பார் மன்னன் மிடல் சாயவே.]

**விளக்கம் :-** இடுகாடுகள்தோறும் சென்று நடனம் செய்யும் திருவடிகளை உடைய தலைவனான சிவபெருமான், தன்னை எதிர்த்து வந்த மன்மதனது உடலை இலக்காகக் கொண்டு விழித்து எரித்த நெற்றியினிடத்தே பொருந்திய கனல் கண்ணை போன்ற, - என்பது முதலிரண்டடிகளின் பொருள். மாலை புனைந்து சந்தனக் குழம்பின் மணம் வீசும். பார் மன்னனாகிய துரியோதனனது மார்பினிடத்தே தைத்துப் பதியும் படியும், அவனது வலிமை கெடும்படியும் வீமன் எதிரம்பு ஒன்றைப் பிரயோகித்தான், என்பது, ஈற்றடிகளின் பொருள்.

தன்னைக் கடுமையாகத் தாக்கிய துரியோதனன் மேல், வீமன், மன்மதனை அழித்த சிவபிரானது கண்ணின் கனல் போன்ற ஓரம்பைச் செலுத்தி, அவனது வலிமையை அழித்தான், என்பதாம். வீமன், சிவபெருமான், அம்பு நெற்றிக் கண் கனல், துரியோதனன் அழிதலை அடைந்த மன்மதன், ஆர மணம், என்பதை ஆர மணம், என்று பிரித்து, மிகுந்த வாசனை என்றும் பொருள் கொள்ளலாம்.

கலிவிருத்தம்

**13. ஓரம்பினு லேங்தேழுல குடையானல மரவே**
**வீரம்புனை வீமன்குனி வில்லோடெதிர் நிற்கப்**
**போரம்பர வுலகாள்பவர் புகழ்பூரிசி வாவந்(து)**
**ஈரம்புதொ டுத்தானொரு தேர்மேலின னிவன்மேல்.**

[ஓர் அம்பின் உளைந்து ஏழ் உலகு உடையான் அலமர (ஏ), வீரம்புனை வீமன் குனி வில்லொடு எதிர் நிற்க, போர் அம்பரம் உலகு ஆள்பவர் புகழ் பூரி சிவா வந்து ஈர் அம்பு தொடுத்தான். ஒரு தேர் மேலினன் இவன் மேல்.

**விளக்கம் :-** ஓர் அம்பினால் உலகு ஏழு உடையானான துரியோதனன் வலி உடைந்து நிலை குலையும்படி செய்து, வீரம் புனைந்த வீமன் வளைந்த வில்லுடன், எதிரே நிற்க, — (அது பொழுது) அம்பரத்து உலகை (தேவலோகத்தை) ஆள்பவரான இந்திரன் முதலிய தேவர்களால் புகழப்படும் போர்த் தொழில் செய்ய வல்லவனான பூரிசிவா (பூரிசிரவசு) என்பான், ஒரு தேர் ஏறிக் களம் வந்து, இரண்டு பாணங்களை வீமன் மேல் எய்தான்,- என்பது பொருள்.

வீரம்புனை வீமன் -வீரத்தை அணிகலனாகக் கொண்ட வீமன். அலமரல் - நிலை குலைதல், மனம் சுழலல், ஒரு தேர்-மிகச் சிறந்த தேர்.

சாத்தகி களம்புகல்

**14. இவனுண்மையை மதியாதெதி ரெய்தானென வெய்தின்**
**பவனுகதி பெறுதேரின னளினுபதி யிளவல்**
**அவனுருயிர் கவர்வேனென வம்பொன்றுதொ டுத்தான்**
**தவனுன்மறை தெரிபூரிச வாவுஞ்சரம் விட்டான்.**

[இவன் ஆண்மையை மதியாது எதிர் எய்தான் என, வெய்தின் பவனுகதி பெறுதேரினன் நளினுபதி இளவல், ''அவன் ஆர் உயிர் கவர்வேன்,'' என, அம்பு ஒன்று தொடுத்தான்; தவனுல் மறை தெரி பூரிச வாவும் சரம் விட்டான்.]

**விளக்கம்:-** நளினுபதி - (நளிநா பதி) தாமரையில் வாழ்பவளான இலக்குமியின் நாயகன்; இங்கே, கண்ணன். இளவல் - கண்ணனது தம்பியான சாத்தகி. பவனுகதி - (பவநாகதி) வாயு வேகம். தவன் - சிறந்த தவத்தை உடைய முனிவன்.

வீமனது வீரத்தை மதியாது அம்பு எய்தான், என்று கொண்ட சினத்தோடு சாத்தகி வாயுவேகத்தை உடைய ஒரு தேரினனுய் வந்து, அவனது (பூரிசிரவசுவின்) 'அரிய உயிரைக் கவர்வேன்', என்று சொல்லிக்கொண்டு (அவன்மேல்) ஓர் அம்பைத் தொடுத்தான்; தவம் மிக்கானுன முனிவனிடம் இருந்து அத்திரங்களுக்குரிய மந்திரங்களை நன்கு அறிந்துள்ள பூரிசவாவும் சாத்தகியின் மேல் கணைகளை ஏவினுன், என்பதாம்.

**15. ஏணற்றுயர் வரைமார்பின ரிருவோர்களு மொருவோர்**
**காணற்றொழி லரிதாமுறை கடிதிற்கணை தொடவே**
**நாணற்றன வெஞ்சாபமு நடுவற்றன வெனினும்**
**கோணற்றன புகல்வாளுெரு குறையற்றத வர்க்கே.**

[ஏண் அற்று உயர் வரை மார்பினர் இருவோர்களும் ஒருவோர் காணல் தொழில் அரிது ஆம் முறை கடிதின் கணை தொடவே, நாண் அற்றன, வெம் சாபமும் நடுஅற்றன, எனினும், கோண் அற்றன புகல்வான் ஒரு குறை அற்றது அவர்க்கு, ஏ.]

**விளக்கம்:-** ஏண் அற்று உயர் வரை மார்பு - குற்றம் இல்லாதபடி சிறந்து உயர்ந்த மலைபோன்ற மார்பு. ஒருவோர் தொழில் காணல் அரிது ஆம்முறை - ஒருவரும் அவர்களது சரத் தொழிலின் தன்மையைக் காணமுடியாத முறையில், (அம்புகளை இருவரும் எய்துபொர) இரு வீரர்களின் நாணும் வில்லும் அறுபட்டன, என்க. குற்றமற்றனவான புகழ்உரைகளைக் கூறுவதற்கு (அவர்களது வில்தொழில்) குறை சிறிதும் இல்லை, அதாவது, இருவரும் பழிப்பிற்கு இல்லாதபடியான புகழ் பெறும் வழி சமமான திறமையுடன் போர் புரிந்தனர், என்றபடி. வில்லை வளைத்தல், சரம் தொடுத்தல் முதலிய தொழில்களைச் செய்யும்

கையின் விரைவினை எவரும் காண முடியாதபடி போர் செய்தனர், என்பது இரண்டாவது அடியின் பொருள். சாத்தகியும் பூரிசிரவசுவும், இளைக்காமல் சமப்போர் புரிந்தனர், என்பதாம்.

**16. ஒருகேடக வுரைதேறின ருளமேயென வமரில்**
**பொருகேடக நடவுங்கனம் பொற்றேர் மிசை யிழியா**
**முருகேடவிழ் தார்மார் பினர் முனைவாளமி ரண்டோ(டு)**
**இருகேடக மிருகையினு மிருவோருமெ டுத்தார்.**

[ஒரு கேள் தக உரை தேறினர் உளமே என, அமரில் பொரு கேடகம் நடவும் கனம் பொன் தேர்மிசை இழியா முருகு ஏடு அவிழ் தார் மார்பினர் முனைவாளம் இரண்டொடு, இரு கேடகம் இரு கையினும் இருவோரும் எடுத்தார்.]

**விளக்கம்:-** முருகு ஏடு அவிழ்தார் மார்பினர் இருவோரும், ஒரு கேள் தக உரைதேறினர் உளமே என, அமரில் நடவும் கேடகம் பொரு கனம் பொன் தேர்மிசை இழியா, முனை வாளம் இரண்டொடு இரு கேடகம் இரு கையினும் எடுத்தார், என்பது அன்வயம்.

மணம் பொருந்திய இதழ்கள் விரிந்த மாலை புனைந்த மார்பினரான இருவீரரும், ஒன்றிய நட்பினிற்கு ஏற்றதான (ஒருவர் பேச்சை ஒருவர்) நம்பும் நண்பர்களின் (ஒற்றுமைப்பட்ட) மனம் போல, (போர் செய்தலில் ஒற்றுமைப் பட்டு) நடத்தப்படும் கேடகம் பொரு (விமானத்தை ஒத்த) வலிய அழகிய தேரின் மேலிருந்து இறங்கி, கூரிய வாள் இரண்டொடு இரு கேடகமும் (இருவரும்) தங்கள் கையில் ஏந்தினர், அதாவது வாள் போர் செய்தனர்.

இரண்டாவது அடியில், கேடகம், என்பது விமானம், என்ற பொருளது; வடசொல்.

வில் அறுபடவும் சம ஆற்றலையுடைய இரு வீரரும், வாளையும் கேடகத்தையும் ஏக காலத்தில் எடுத்தது பற்றி ஒத்த மணமுடைய இரு நண்பரைப் புலவர் உவமையாக்கினர்.

**17. படிவாயுடு பதியுந்தின பதியும்பொரு தெனவே**
**தொடிவார்கர தலமொன்றிய துறுதோலிடை மறையா**
**வடிவாண்முனை யசையாவிசை வருசாரிகள் பயிலா**
**இடிவாய்முகி லதிராவெதி ரெதிர்சீறின ரிப்பால்.**

[படிவாய் உடுபதியும் தினபதியும் பொருதெனவே, தொடி வார் கரதலம் ஒன்றிய துறு தோலிடை மறையா, வடி வாள் முனை அசையா, விசை வரு சாரிகள் பயிலா, இடி வாய் முகில் அதிரா, எதிர் எதிர் சிறினர் இ பால்.]

**விளக்கம்:-** படிவாய்-பூமியில். உடுபதி-சந்திரன். தினபதி-சூரியன். பூமியினிடத்தே (வந்து) சந்திரனும் சூரியனும் போர் செய்தாற் போல், - என்பது முதலடியின் பொருள். தொடி என்ற ஆபரணம் அணிந்த நீண்ட கையில் பொருந்திய வலிமை நெருங்கிய கேடகத்தினிடையே மறைந்தும், வடி முனை வாள் அசைத்தும், அதாவது சுழற்றியும், வேகம் பொருந்திய சாரிகள் திரிந்தும், இடியோடுகூடிய இரு மேகங்கள்போல் வீர முழக்கம் செய்து கொண்டும், இந்த இடத்திலே, கடுஞ்சினத்துடன் போர் செய்தார்கள், - என்பது மற்ற அடிகளின் பொருள்.

தோல், என்பது தோலால் செய்யப்பட்ட கேடகம், என்ற பொருளது. சாரிபயிலல் - இடம் வலமாகத்திரிதல். முதலடி இல்பொருள் உவமை.

**18. தோலா தட லொடுசீறின துரகத்தொடு துரகம்**
**மேலாளொடு மேலாள் வரி வில்லாளொடு வில்லாள்**
**ஏலாமுடி யரசோடர சிரதத்துட னிரதம்**
**காலாளொடு காலாண்மத கரிமாவொடு கரிமா.**

[தோலாது அடலோடு சீறின, துரகத்தோடு துரகம், மேல் ஆளோடு மேல்ஆள், வரிவில் ஆளொடு வில்ஆள், ஏலாமுடி அரசொடு அரசு, இரதத்துடன் இரதம் கால் ஆளொடு காலாள், மதகரி மாவொடு கரிமா.]

**விளக்கம்:-** துரகத் தொடுதுரகம், மதகரி மாவொடு கரிமா, (அவற்றின்மேல் ஏறியுள்ள) மேல் ஆளொடு மேல் ஆள், வரிவில் ஆளொடு வில் ஆள், முடி அரசொடு அரசு, இரதத்துடன் இரதம், காலாளொடு காலாள் ஏலா, தோலாது அடலொடு சீறின,-என்பது அன்வயம்.

**விளக்கம்:-** குதிரை யானைகள், குதிரை யானைகளோடும், அவற்றின்மேல் உள்ள வீரர்கள் அவற்றின் மேலுள்ள வீரர்களோடும், வில்வீரர் வில்வீரரோடும், முடி அரசர் முடி அரசரோடும் இரதம் இரதத்தோடும்; காலாள் காலாளோடும் போர் ஏற்றுத் தோலாத வலிமையோடு சீறிப் போர் செய்தன, என்பது பொருள். ஏலா - போர் ஏற்று, அல்லது எதிர்த்து. உயர் திணையை, சாதியுணர்த்தும் பெயர்களாகக் கொண்டு, **சீறின,** என்று அஃறிணை வினையால் முடித்தபடி.

படுகளச் சிறப்பு

**19. நீடுங்கட கரியின்கர நிரையற்றன நதியா**
**ஓடுங்குரு தியின்வாளைக ளெனவோடின வொருசார்**
**கோடுஞ்சிலை யம்பிற்றலை யரியுண்டன குறைநின்(று)**
**ஆடுந்தொறு முடனாடுவ வலகைக்குல மொருசார்.**

[நீடும் கடகரியின் கரம் நிரை அற்றன நதியா ஓடும் குருதியின் வாளைகள் என ஓடின ஒரு சார்; கோடும் சிலை அம்பின் தலை அரியுண்டன குறைகள் நின்று ஆடும் தொறும் உடன் ஆடுவ அலகை குலம் ஒரு சார்.]

**விளக்கம்:-** ஒரு பக்கத்தில் வரிசையாக அறுபட்டுக் கிடந்த வான மதயானைகளின் நீண்ட துதிக்கைகள், நதியாக ஓடும் இரத்த வெள்ளத்தில், வாளை மீன்களைப் போல் ஓடின; வேறோர் பக்கத்தில், வளைந்த வில்லினின்று விடப்பட்ட அம்பினால் தலை அறுபட்டனவான உடல் குறைகள் நின்று ஆடும்போதெல்லாம் பேய்களின் கூட்டம் உடன் நின்றுகூத்தாடுவ ஆயின, - என்பது பொருள்.

உடற் குறை ஆடுகையில் பேய்கள் ஆடுதல், அவற்றைத் தின்னலாம் என்ற களிப்பின் நிகழ்வு ஆகும்.

**20. கோல்கொண்டவை சிலைகொண்டவை வாள்கொண்டவை கூர்வாய்**
**வேல்கொண்டவை யவைதம்முடன் விழுகைக்குல மொருசார்**
**கால்கொண்டுகு செந்நீர்விரி களமேகக னமதா**
**மால்கொண்டக ரிக்கோடிள மதியாவன வொருசார்.**

[கோல் கொண்டவை, சிலை கொண்டவை, வாள் கொண்டவை, கூர்வாய் வேல் கொண்டவை, அவை தம்முடன் விழு கைகுலம் ஒருசார்; கால்கொண்டு உகு செந்நீர் விரிகளமே ககனம் அது ஆ, மால் கொண்ட கரி கோடு இளமதி ஆவன ஒரு சார்.

**விளக்கம்:-** கோல் - அம்பு. கோல் கொண்டவையும், சிலை கொண்டவையும், வாள் கொண்டவையும், கூரிய வாயையுடைய வேல் கொண்டவையும் ஆக இழந்து, அவ்வில் வேல், வாள், கோல்களாகிய ஆயுதங்களுடனே அறுந்து விழுந்து கிடந்த கைகளின் கூட்டம் ஒரு புறம் இருந்தன; என்பது முதலிரண்டடிகளின் பொருள். கால் கொண்டு உகு - வாய்க்கால்களாகப் பெருகுகின்ற. செந்நீர் - குருதி. விரிகளம் - பரவிய போர்க்களம். ககனம் - வானம். வேறோர் பக்கத்தில் வாய்க்கால்களாகப் பெருகும் இரத்த வெள்ளம் எங்கும் பரவிய போர்க்களம் சிவந்த ஆகாயமாக மதங்கொண்ட யானைகளின் தந்தங்கள் (வானிடத்தன) பிறைச் சந்திரன் போன்றனவாயின, - என்பது ஈற்றடிகளின் பொருள்.

**21. முந்நீர்தரு பவளங்கொடு முன்னஞ்சமை வனபோல்**
**செந்நீரின் மிதந்தோடுவ தேராழிக ளொருசார்**

**நன்னீர்மழை பொழிசெம்புன னதிவாய்வரு நுரைபோல்**
**அந்நீரிடை புகுமூளைக ளலைபாய்வன வொருசார்.**

[முந்நீர் தரு பவளங் கொடு முன்னம் சமைவனபோல் செந்நீரில் மிதந்து ஓடுவ தேர் ஆழிகள் ஒருசார்; நல்நீர் மழை பொழி செம்புனல் நதி வாய் வரு நுரைபோல், அ நீரிடை புகு மூளைகள் அலை பாய்வன ஒருசார்.]

**-விளக்கம்:-** ஒருபுறம் முந்நீர் - கடல். சமுத்திரத்தில் உண்டாகின்ற பவளத்தைக் கொண்டு செய்யப் பட்டவைபோல் தேர்ச்சக்கரங்கள் செந்நீரில் (இரத்த வெள்ளத்தில்) மிதந்து ஓடுவனவாயின; சுத்தமான நீரை மேகம் பொழிவதனுல் பெருகும் சிவந்த புது வெள்ள நீரையுடைய ஆற்றில் வரும் நுரைபோல், அந்தக் குருதி வெள்ளத்தில் விழுந்த வெண்ணிற மூளைகள் அலை வன வாயின, என்பது பொருள்.

**22. வையாரயில் கணைதோமரம் வாள்கப்பண முதலாம்**
**கையாயுத முழுகுந்துளை வழிசெம்புனல் கால**
**மெய்யாயிர விதமாய்விழ வெம்போரிடை யிருபத்**
**தையாயிர முடிமன்னவ ரகல்வானம டைந்தார்.**

[வை ஆர் அயில், கணை, தோமரம், வாள், கப்பணம் முதல் ஆம் கை ஆயுதம் முழுகும் துளைவழி செம்புனல் கால, மெய் ஆபிரம் விதமாய் விழ, வெம் போரிடை இருபத்து ஐ ஆயிரம் முடி மன்னவர் அகல் வானம் அடைந்தார்.]

**விளக்கம்:-** வை ஆர் அயில் - கூர்மை பொருந்திய வேல். கணை - அம்பு. கப்பணம் - நெருஞ்சிமுள் படை. அயில் முதலிய கை ஆயுதங்கள் அழுத்தியதினுல் உண்டான துளைகள்வழி குருதி வெளிப்படவும், உடல்கள் ஆயிரவிதமான துண்டுகளாய்ச் சிதைந்து விழவும், அன்றைய தினம் போரிடை இருபத்தை யாயிரம் முடி மன்னர்கள் வானுலகை அடைந்தனர், என்பதாம்.

அத்தமனம்

**23. இவ்வாறுமு ணைந்தாருயி ரிருசேனையு மடிய**
**மைவானுல கிடமற்றது வயவீரர் நெருக்கால்**
**அவ்வானவர் தமதாலயம் வலம்வந்த வருக்கன்**
**செவ்வானுறு குடபால்வரை யிடமென்றது சேர்ந்தான்.**

[இ ஆறு முனைந்து ஆர் உயிர் இரு சேனையும் மடிய, மை வான் உலகு இடம் அற்றது வயவீரர் நெருக்கால்; அவானவர் தமது ஆலயம் வலம் வந்த அருக்கன், செவ் வான் உறு குட பால் வரை இடம் என்று எண்ணி அது சேர்ந்தான்.]

**விளக்கம்:-** இவ்வாறு இரு திறத்துச் சேனைகளும் ஆர் உயிர் மடிய, மடிந்த அவ்வீரர்களின் நெருக்கத்தால் (மிகுதியால் வானுலகம் வெற்றிடம் சிறிதும் இல்லாததாயிற்று; அவ்வானவரின் இருப்பிடமாகிய மேருமலையை வலம் வந்த சூரியன், செவ்வானம் பொருந்திய அத்தமனகிரியை தனக்கு இடமாகக் கொண்டு, அம்மலையை அடைந்தான், என்பது பொருள்.

வீர சுவர்க்கம் அடைந்த மன்னர்களின் மிகுதியால் வானில் இடமிலாது போகவே, சூரியன் குடதிசையிலுள்ள அத்தமன கிரியை இடமாகக் கொண்டு அங்கே சென்றான், அதாவது அஸ்தமித்தான், என்பதாம். இது தற்குறிப்பேற்றம்.

**24. எப்போது மரும்போரினி லிதயங்களி கூர்வார்**
**கைப்போதுறு படைசெம்புனல் வழியேயுயிர் காய்வார்**
**ஒப்போதுத லரியாரிரு திறமன்னரு மொருவா**
**அப்போதனி கத்தோடும கன்பாசறை புக்கார்.**

[எப்போதும் அரும் போரினில் இதயம் களி கூர்வார் கை போது உறு படை செம் புனல் வழியே உயிர் காய்வார், ஒப்பு ஓதுதல் அரியார் இரு திற மன்னரும் ஒருவா, அப்போது அனிகத் தோடும் அகல் பாசறை புக்கார்.

**விளக்கம்:-** எப்போதும் அரிய போரில் மனம் மிகுதியாகக் களிப்பவரும், போது (தாமரை) போன்ற கையில் பொருந்திய ஆயுதங்களால் (வெளிப்படும்) குருதி வழியே மாற்றார் உயிர்காயும் (கொல்லும்) வீரரும், எவரையும் தமக்கு உவமையாகச் சொல்லக் கூடாதவரும் ஆகிய இரண்டு பக்கத்து மன்னர்களும், அப்போது சேனைகளுடனே, போர்க்களம் ஒருவா (நீங்கி) அகன்ற படை வீட்டை அடைந்தார்கள், - என்பது பொருள். அனிகம் - சேனை.

சூர்யோதயம்

**25. இரவென்றிருள் கெழுநஞ்சினி ளந்திங்களெ யிற்றோர்**
**அரவுண்டது தான்மீளவு மிழ்ந்தென்ன வருக்கன்**
**உரவுங்குட திசைநீனிற வுததிக்குளொ ளித்தோன்**
**விரவுங்குண திசைவேலையின் மிசைவந்து கிளர்ந்தான்.**

[இரவு என்று இருள் கெழு நஞ்சின் இளந்திங்கள் எயிறு ஓர் அரவு உண்டு அது தான் மீளவும் உமிழ்ந்தது என்ன அருக்கன், உரவு குடதிசை நீல் நிறம் உததிக்குள் ஒளித்தோன், விரவும் குண திசை வேலையின் மிசை வந்து கிளர்ந்தான்.]

**விளக்கம்:-** இருள்கெழு நஞ்சின் இளந்திங்கள் எயிறு இரவு என்று ஓர் அரவு உண்டு, அதுதான் உமிழ்ந்தது என்ன, உரவு குடதிசை நீல் நிறம் உததிக்குள் ஒளித்தோன் (ஆகிய) அருக்கன்,

வீரவும் குணதிசை வேலையின் மிசை வந்து கிளர்ந்தான், -என்பது அன்வயம்.

இருளாகிய மிகுந்த விஷத்தையும், பிறைச் சந்திரனுகிய கோரப் பல்லையும் உடைய இரவு என்று சொல்லப்படும் ஓர் அரவு உண்டு, அது (தான்) மீளவும் உமிழ்ந்ததுபோல், வலிய குடதிசையிலுள்ள நீலநிறக் கடலிலே மறைந்தவனுகிய சூரியன், விரவும் குண திசையிலுள்ள கடலில் வந்து தோன்றி விளங்கினுன், அதாவது சூரியன் உதித்தான். குடதிசை - மேற்குத் திசை. குணதிசை – கிழக்குத் திசை.

பாம்பினுல் உண்ணப்பட்டதுபோல் அஸ்தமித்த சூரியன், அது உமிழ்ந்தது போல் உதித்தான், என்பதாம். உரவுக் குடதிசை என்பது உரவுங் குணதிசை என்று ஓசை நோக்கி மெலிந்தது. **நீலம்** என்பது கடை குறைந்து **நீல்** என நின்றது.

**ஐந்தாம் போர்ச் சருக்கம் முற்றும்.**

# ஆறும் போர்ச் சருக்கம்

## கடவுள் வாழ்த்து

### கலிவிருத்தம்

**1. கோயிலா ளுடையபைங் கொண்டலார் கண்டுயில்**
**பாயலாய் வாழநீ பாக்கியஞ் செய்ததென்**
**நீயலா துவமைவே றில்லெனத் தீயநின்**
**வாயெலா நஞ்சுகால் வாளெயிற் றுரகமே.**

கோயில் ஆள் உடைய பைங்கொண்ட.லார் கண் துயில் வாழ நீ பாக்கியம் செய்தது என்? நீ அலாது உவமை வேறு இல் என, தீய நின் வாய் எலாம் நஞ்சு கால் வாள் எயிறு உரகமே.]

**விளக்கம்:-** கோயில் - திருவரங்கம். நூற்றெட்டுத் திருப்பதிகளில் முதலிடம் பெற்ற ஸ்ரீரங்கத்தை வைணவர் கோயில், என்பர். ஈற்றடிகள் இரண்டையும் முதலிலே இட்டுப் படித்தால், செய்யுள் அன்வயமாய்விடும். தீ அல்லாது வேறு உவமை இல்லையென்று சொல்லும்படி, கொடிய உனது வாய்களிலிருந்து விஷத்தை வெளிப்படுத்துகின்ற வாள் போன்ற பற்களை உடைய நாகமே (ஆதிசேஷனே), திருவரங்கம் என்னும் திருப்பதியை ஆளுதலையுடைய பசிய மேகம் போன்ற திருமால் கண் துயிலுதற்கு படுக்கையாய் நீ வாழ்வதற்குச் செய்த பாக்கியம் யாது?, என்பது பொருள்.

"பாம்பே, நீ செய்த பாக்கியம் யாது?" என்று எளியனுன எனக்குச் சொன்னுல், நானும் அப்பெருமானது உறவு கொண்டு உய்ந்திடுதல் கூடுமே!, என்று புலவர் கேட்கும் குறிப்பினது செய்யுள். பாயல், என்பதில், அல், சாரியை. கோவில், என்பதின், போலி கோயில்.

பாண்டவர்படை களம் அடைதல்

**2. பயிலும்வெம் பாசறைப் பாண்டவ ரைவரும்**
**துயிலுணர்ந் தணிபசுந் துளபமா லடிபணிந்(து)**
**அயிலுநஞ் சனையபோ ரடுகளங் குறுகினுர்**
**சயிலவெங் கடகரித் தானையுந் தாமுமே.**

[பயிலும் வெம் பாசறை பாண்டவர் ஐவரும் துயில் உணர்ந்து அணி பசுந்துளபம் மால் அடிபணிந்து, அயிலும் நஞ்சு அனைய போர் அடும் களம் குறுகினுர், சயிலம் வெம் கடகரி தானையும் தாமும், ஏ.]

**விளக்கம்:-** பயிலும் - பழகிய, வசித்துவருகின்ற. அணி பசுந்துளபமால் - கண்ணன். அயிலும் நஞ்சு அனைய - உண்ணும் விஷத்தை ஒத்த; அதாவது மிகக் கொடிய. அடுதல் - கொல்லல். சயிலம் - மலை. பாண்டவர் உதயத்தில் தூக்கம் ஒழிந்து, கண்ணனது அடிவணங்கி, யானைப் படைகளோடும் தாமும் போர்க்களம் சென்றுர்கள், என்பதாம். யானைப்படை மற்றைப் படைகளுக்கும் உபலக்ஷணம்.

**3. பகுத்தபல் லணிகளின் பான்மையக் குரோணியால்**
**மிகுத்தவெஞ் சேனையாம் வெள்ளநீர் வேலையைத்**
**தொகுத்துவண் டிமிர்தொடைத் துருபதன் றிருமகன்**
**வகுத்தனன் புறமிடா மகரமா வியூகமே.**

[பகுத்த பல் அணிகளின் பான்மை அக்குரோணியால் மிகுத்த வெம் சேனை ஆம் வெள்ளம் நீர் வேலையை தொகுத்து, வண்டு இமிர் தொடை துருபதன் திருமகன் வகுத்தனன், புறம் இடா மகர மா வியூகம், ஏ.]

**விளக்கம்:-** பிரிக்கப்பட்ட பலவிதமான வரிசைகளைக் கொண்ட தன்மையதான அக்குரோணி என்னுந் தொகையால் மிகுந்த கொடிய சேனையாகிய கடலை ஒன்று படுத்தி, வண்டுகள் சப்திக்கின்ற மாலை அணிந்த துருபதன் மகனை திட்டத்துய்மன், புறங்கொடாத பெரிய மகர வியூகமாக அணி வகுத்தான், என்பது பொருள்.

அணி - வரிசை, அணிவகுப்பு. அக்குரோணி - பெருந் தொகை, வெள்ளம் நீர் வேலை - நீரின் மிகுதியை உடைய

சமுத்திரம். மகரம் - சுறுமீன். திட்டத்துய்மன் பாண்டவர் படையைச் சுறுமீன் வடிவத்தில் அணி அமைத்தான், என்பதாம்.

### வீடுமன் களம் வரல்

**4. போகமுந் தருமமே யானவெய்ப் புனிதனும்**
**நாகவெங் கொடியுடை நாயகக் குரிசிலும்**
**வேகவெம் படையுடை வேந்தருஞ் சேனையும்**
**ஆகவங் குறுகினு ராரவம் பெருகவே.**

[போகமும் தருமமே ஆன மெய் புனிதனும், நாகம் வெம் கொடி உடை நாயகம் குரிசிலும், வேகம் படை உடை வேந்தரும் சேனையும் ஆகவம் குறுகினர், ஆரவம் பெருகவே.]

**விளக்கம்:-** தர்மத்தையே இன்பமுமாகக் கொண்ட மெய்மை கடவாத பரிசுத்தனுன வீடுமனும், பாம்புக் கொடியை உடைய அரசர் தலைவனுன துரியோதனனும், வேகமும் வெம்மையும் உடைய ஆயுதங்களைக் கொண்ட அரசர்களோடும், சதுரங்க சேனைகளோடும் ஆரவாரம் மிகும்படி போர்க்களத்தை அடைந்தார்கள், - என்பது பொருள். ஆரவம் - பேரொலி, ஆரவாரம். ஆகவம் - போர்க்களம்.

**5. பொருஞ்சமங் கருதியாள் புரவிதேர் போதகம்**
**தெரிஞ்சு கொண் டீரிரு திசையினுஞ் செல்லவே**
**பெருஞ்சனந் தன்னையப் பீடுடை வீடுமன்**
**கரிஞ்சமென் றுள்ளபேர் வியூகமுங் கட்டினுன்.**

[பொரும் சமம் கருதி ஆள் புரவி தேர் போதகம் தெரிஞ்சு கொண்டு, ஈ இரு திசையினும் செல்ல(ஏ), பெரும் சனம் தன்னை அ பீடுஉடை வீடுமன் கரிஞ்சம் என்று உள்ள பேர் வியூகமும் கட்டினுன்.]

**விளக்கம்:-** இன்று செய்யவேண்டிய போரைக் கருதி, காலாள் குதிரை தேர் யானைப் படைகளை ஆய்ந்து பொருக்கிக் கொண்டு, நான்கு திக்கிலும் பரவும்படி பெரிய தொகையை உடைய வீரர்களை, பெருமையுடைய வீடுமன், கரிஞ்சம் என்ற பெயர் உள்ள வியூகமாக அமைத்தான், என்பது பொருள்.

தெரிஞ்சு கொண்டு, என்பதற்குப் பாண்டவர் அணிவகுப்பைத் தெரிந்து கொண்டு, என்றும் பொருள் கொள்ளலாம். பெரும் சனம் - தொகையின் மிகுதி கொண்ட வீரர். கரிஞ்சம் - கிரௌஞ்சம் என்னும் பறவை. கிரௌஞ்சம் என்பதின் திரிபு கரிஞ்சம்.

**6. இந்திரன் முதலிய விமையவர் தங்களால்**
**அந்தர மிடனற வரவுளெந் தலமர**

**வந்தவந் திருபெரும் படைஞரு மாறுபட்(டு)**
**உந்தினர் முந்தின ரொட்டினர் முட்டினர்.**

[இந்திரன் முதலிய இமையவர் தங்களால் அந்தரம் இடன் அற, அரவு உளைந்து அலமர, வந்து வந்து இரு பெரும் படைஞரும் மாறுபட்டு உந்தினர், முந்தினர், ஒட்டினர் முட்டினர்.]

**விளக்கம்:-** போர் காண வந்த இந்திரன் முதலிய தேவர் களால் ஆகாயம் இடம் அற்றதாகவும், பூமியைத் தாங்கும் ஆதிசேஷன் வருந்திக் கலங்கவும், இரு திறத்தினரும் நெருங்கி வந்து பகைத்து ஆயுதங்களைச் செலுத்தி, முற்பட்டுச் சென்று தாக்கிப் போர் செய்தார்கள், என்பது பொருள்.

அந்தரம் இடன் அற, என்றது போர் காணக் கூடிய தேவர் களின் தொகை மிகுதியைக் குறிக்கும். ஒட்டுதல் - மோதல், தாக்குதல். எனவே, ஒட்டினர் முட்டினர், என்பது தாக்கிப் போர் செய்தனர், என்ற பொருளதாகும். அல்லது வீரமுழக்கஞ் செய்து கொண்டு முட்டினர், என்றும் பொருள் செய்யலாம். முட்டல் - தாக்குதல்.

## துரோணன் வீமனை நெருங்குதல்

**7. பரவிநால் விதவயப் படைஞருஞ் சூழவாள்**
**இரவிநான் வெம்பகை யிருளினுக் கென்றுதன்**
**புரவிநான் மறையெனப் பூண்டதேர் தூண்டினன்**
**விரவினன் வீமன்மேல் விற்கையா சிரியனே.**

[பரவி நால் விதம் வய படைஞரும் சூழ, வாள் இரவி நான் வெம் பகை இருளினுக்கு என்று, தன் புரவி நால் மறை என பூண்ட தேர் தூண்டினன் விரவினன், வீமன்மேல், வில்கை ஆசிரியன், ஏ.]

**விளக்கம்:-** வில்கை ஆசிரியன், நால் விதம் வய படைஞரும் (தன்னை) பரவி சூழ, 'வெம் பகை இருளினுக்கு நான் வாள் இரவி', என்று, நால் மறை என புரவி பூண்ட தன் தேர் தூண்டினன், வீமன்மேல் விரவினன், என்பது அன்வயம்.

வில்கை ஆசிரியன் - துரோணன். நால் விதம் படை - நான்கு வகைப்பட்ட சதுரங்கசேனை. வாள் இரவி - ஒளி பொருந்திய சூரியன். நால் மறை என புரவி பூண்ட தேர் - சிவபிரானுக்கு திரிபுர சங்கார காலத்தில் குதிரைகளாய் அமைந்த நான்கு வேதங்கள் போன்ற சிறந்த குதிரைகள் பூண்டதேர். சதுரங்கசேனையும் தன்னைச் சுற்றிலும் பரவிவர, 'இருளுக்குப் பகையான இரவி நான்,' என்று சொல்லிக் கொண்டு, தன்

தேரைச் செலுத்தினவனாய், துரோணன் வீமனை நெருங்கினான், என்பதாம். துரோணன் வேதவித்தகனாதல் பற்றி, அவனது தேர்க் குதிரைகளுக்கு வேதம் உவமையாயது என்றுங் கொள்ளலாம்.

**8. சிலைவரம் பெறுதலிற் றேசிகன் சீறவும்**
**நிலைபெறும் புகழினா னெஞ்சினஞ் சலிசெயா**
**மலையினும் பெரியதேர் வலவனும் புரவியும்**
**தலையறும் படிசரந் தனுவளைத் துதையினான்.**

[சிலை வரம் பெறுதலின், தேசிகன் சீறவும், நிலைபெறும் புகழினான் நெஞ்சின் அஞ்சலி செயா, மலையினும் பெரிய தேர் வலவனும் புரவியும் தலை அறும்படி சரம் தனுவளைத்து உதையினான்.

**விளக்கம்:-** ஆசார்யனான துரோணன் தன் மேல் சீறி வரவும், நிலை பெற்ற புகழினனான வீமன், சிறந்த வில் வித்தையை (அவனிடமிருந்து) பெற்றானதலின், அவனை மனத்தினால் வணங்கி, மலைபோன்ற அவனது தேரின் குதிரைகளும் பாகனும் தலை அறுபடும்படி வில்லை வளைத்து சரங்களைச் செலுத்தினான், என்பது பொருள். வரம் - சிறந்த. வலவன் -தேர்ப்பாகன். நெஞ்சின் அஞ்சலி செயா, என்பதற்கு மனப்பூர்வமாக ஆசார்யனை வணங்கி, என்றும் பொருள் கொள்ளலாம். உதையினான் - செலுத்தினான்.

சல்லியன் பொர வரல்

**9. சூழிவெங் கசரத துரகத நிருபரை**
**வீழவெங் கணைகளான் மெய்துளைத் தளவிலே**
**தாழநின் றிலனெழிற் சல்லியன் றன்னொடே**
**தோழவின் றமர்செய்கென் றொருதிசைத் தோன்றினான்.**

[சூழி வெம் கசம் ரதம் துரகதம் நிருபரை வீழ வெம் கணை களால் மெய் துளைத்த அளவிலே, தாழ நின்றிலன் (ஆய்) எழில் சல்லியன், தன்னொடே தோழ, இன்று அமர் செய்க என்று ஒரு திசை தோன்றினான்.]

**விளக்கம்:-** (துரோணனது தேரைப் பயனற்ற தாக்கியபின்) சதுரங்க சேனைகளை உன்டய அரசர்களை அழியும்படி அவர்களது உடல்களை (வீமன்) துளைத்த அளவில், - தாமதிக்காதவனாய் எழில் சல்லியன், "தோழனே, இன்று என்னோடு அமர் செய்க," என்று சொல்லிக் கொண்டு, ஒருபுறம் வந்து தோன்றினான், என்பது பொருள்.

சூழி - முகபடாம். துரகதம் - குதிரை. தாழ நின்றிலன் – தாமதிக்காதவனாய். சல்லியன், நகுல சகாதேவர்களின் மாமன். எனவே, மற்றவர்களும், அவனுக்கு மருமக்கள் ஆகின்றனர். அவ்வுறவு பற்றி, வீமனை, அவன் **தோழா** என்று விளித்தான், ஆகலாம்.

தேர் பயனற்றுப் போகவே, கீழே நிற்க மாட்டாதவனாகிய துரோணன், சல்லியனிடம், ''தோழ, இன்று அமர் செய்க,'' என்று சொல்லி அவன் வேறோர் திசை சென்றான், என்றும் பொருள் கொள்ளலாம்.

**10. வல்லைவெஞ் சமர்செய வல்லைநீ வருகென**
**வில்லையுந் துணிசெய்து வெல்லவந் தவனையும்**
**தொல்லைவெங் கரியெனத் தேரொடுந் தோண்மடுத்(து)**
**எல்லையம் புவியின்மே லெற்றினான் வீமனே.**

[வல்லை வெம் சமர் செய, வல்லை நீ வருகென, வில்லையும் துணி, செய்து, வெல்ல வந்தவனையும் தொல்லை வெம் கரி என தேரொடும் தோள் மடுத்து, எல்லை எம் புவியின் மேல் எற்றினான், வீமனே.]

**விளக்கம்:-** வெம் சமர் செய்ய வல்லை நீ, வல்லை (சீக்கிரமாக) வருக என, வீமன் கூறி, (எதிர்த்து வந்த சல்லியனது) வில்லைத் துண்டுபடச் செய்து, தன்னை வெல்லும் எண்ணத்தில் வந்தவனாகிய சல்லியனையும், இதன்முன் யானை எடுத்து எடுத்து எறிந்ததுபோல், தேரொடு சல்லியனைத் தோளில் எடுத்து பூமியில் மோதினான், என்பது பொருள்.

அம்புவி எல்லை - அழகிய பூமியினிடம். தொல்லை என்பது நான்காம் நாள் போரில் பகதத்தனுடைய யானைப் படைகளோடு வீமன் போர் செய்ததைக் குறிக்கும்.

சல்லியன் சலிக்கத் துரியோதனன் வரல்

**11. சல்லியன் றன்பெருஞ் சலிவுகண் டங்கையின்**
**நெல்லியங் கனியினி நேரலா ருயிரெனப்**
**பல்லியங் களுமெழப் பாந்தளம் பொற்கொடி**
**அல்லியந் தெரியலா னங்குவந் தணுகினான்.**

[சல்லியன் தன் பெரும் சலிவு கண்டு, ''அம் கையின் நெல்லி அம்கனி இனி நேரலார் உயிர்,'' என, பல் இயங்களும் எழ, பாந்தள் அம் பொன் கொடி, அல்லி அம் தெரியலான் அங்கு வந்து அணுகினான்.]

**விளக்கம்:-** சல்லியனது பெரிய தளர்ச்சி கண்டு, ''இனி நேரலார் (பகைவர்) உயிர் என் அம்கையின் நெல்லி அம் கனி,''

என்று வீமன் வீரவாதம் செய்யவும், துரியோதனன் அங்கே, அதாவது வீமன் முன்னே வந்து சேர்ந்தான், என்பதாம்.

ஒருவனது உள்ளங்கை நெல்லிக் கனி, அவன் வசத்தது ஆவது போல், நேரலார், உயிர், என் வசத்தது, என்று வீமன், கூறியதாக உரை செய்தோம். இனி, ''வீமனது வலி யடக்காவிடின், அவனுக்குப் பகைவர்களான நம் படையின் அழிவு அவன் வசத்ததாகும்,'' என்று சொல்லிக்கொண்டு துரியோதனன் வீமனை நெருங்கினான், என்றும் பொருள் கொள்ளலாம். பலவித வாத்தியங்கள் முழங்க, பாம்புக் கொடியை உடையவனும், இதழ் நெருக்கமுடைய மலர்மாலை அணிந்தவனுமான துரியோதனன், வீமன் இருக்குமிடம் வந்து அணுகினான், என்பது ஈற்றடிகளின் பொருள்.

**12. வெம்புய வீமன்மேல் வில்வளைத் தாயிரம்**
**அம்புகண் மாரிபோ லார்த்தெழ வீசினர்**
**தும்பையந் தார்முடிச் சூழ்படை மன்னரும்**
**தம்பியர் யாவரு மாமனுந் தானுமே.**

[வெம் புயம் வீமன் மேல் வில் வளைத்து ஆயிரம் அம்புகள் மாரி போல் ஆர்த்துஎழ வீசினர், தும்பை அம் தார் முடி சூழ்படை மன்னரும் தம்பியர் யாவரும் மாமனும் தானுமே.

**விளக்கம்:-** தும்பை மலராலான அழகிய மாலையணிந்தவர் களும், சூழப் பெற்ற சேனையை உடையவருமான முடிமன்னர் களும், தம்பியர் அனைவரும், மாமனை சகுனியும் தானும் (துரியோதனனும் வெம்புய வீமன்மேல் வில் வளைத்து மிகப் பலவான அம்புகளை, ஒலி எங்கும் எழும்படி ஆரவாரம் செய்து கொண்டு செலுத்தினர், - என்பது பொருள். ஆயிரம், என்பது மிகப்பல, என்ற பொருளது.

**13. தோன்றரித் துவசனுஞ் சோகமில் பாகனூர்**
**வான்தடந் தேரொடும் வருகெனச் சென்றெதிர்**
**ஊன்றினன் மைந்தரு மிளைஞரு முயிரையே.**
**போன்றமைத் துனரும்வா ணிருபரும் புடைவர;**

[தோன்று அரி துவசனும், சோகம் இல் பாகன் ஊர் வான் தடந்தேரொடு 'வருக' என சென்று எதிர் ஊன்றினன், மைந்தரும் இளைஞரும் உயிரையே போன்ற மைத்துனரும் வாள் நிருபரும் புடை வர.]

**விளக்கம்:-** தோன்று அரி துவசன் - விளங்குகின்ற சிங்கக் கொடியை உடைய வீமன். "சோகம் இல் பாகன் - போரினிடத்தே தளராத சாரதி. வீமன், மைந்தரும், தம்பியரும், உயிரை ஒத்த

மைத்துனரும், தன் பக்கத்தினரான அரசர்களும் பக்கத்தில் வர, தேரோடு சென்று தன் மேல் வரும் துரியோதனன் முதலியோரை, 'வருக' என்று அழைத்து, அவர்கள்முன் நின்றான், என்பதாம்.

**14. நின்றிரு சேனையு நேர்பட வேலினும்**
**வன்றிறல் வில்லினும் வாளினு மலைவுறக்**
**குன்றன தோளினு ரிருவருங் கொக்கரித்(து)**
**ஒன்றினார் வில்வளைத் தொருவருக் கொருவரே.**

[நின்று இரு சேனையும் நேர்பட வேலினும் வல்திறல் வில்லினும், வாளினும் மலைவு உற, குன்று அன தோளினர் இருவரும் கொக்கரித்து ஒன்றினர் வில் வளைத்து ஒருவருக்கு ஒருவரே.]

**விளக்கம்:-** இரு சேனைகளும் எதிரெதிராக நின்று, வேல், வில், வாள் கொண்டு மலைவுற, குன்றை ஒத்த தோள்களை உடைய வீமனும் துரியோதனனும் கொக்கரித்து (வீர முழக்கம் செய்து கொண்டு) வில்லை வளைத்தவராய் ஒருவரோடு ஒருவர் போர் செய்தலில் ஒன்றினர், என்பதாம்.

**15. அவனுமம் பிவனுரத் தழகுற வெழுதினன்**
**இவனுமம் பவன்மணித் தோளின்மே லெழுதினன்**
**புவனமெங் கணுமிகப் பொறியெழப் போர்செய்தார்**
**பவனனுங் கனலியு நிகரெனும் பரிசினர்.**

[அவனும் அம்பு இவன் உரத்து அழகு உற எழுதினன், இவனும் அம்பு அவன் மணி தோளின் மேல் எழுதினன்; புவனம் எங்கணும் மிக பொறி எழ போர் செய்தார், பவனனும் கனலியும் நிகர் எனும் பரிசினர்.]

**விளக்கம்:-** அவன்-துரியோதனன். இவன்-வீமன். அவன் இவன் மார்பில் ஓரம்பைப் பதியச் செய்தான்; இவனும் அவன் தோளில் ஓரம்பைப் பதியச் செய்தான்; காற்றும் நெருப்பும் இவர் என்று சொல்லப்படும் தன்மையரான இருவரும் உலகம் எங்கும் சினத் தீயின் பொறி சிந்தும்படி கடும்போர் செய்தனர், என்பதாம். அழகுற - நன்றாக.

**16. வரத்தின்முன் பெறுகதை வன்மையும் வின்மையும்**
**சிரத்தினின் றெண்ணவோர் பேர்பெறுஞ் சேவகன்**
**சரத்தினுங் கடுகுதேர்ச் சர்ப்பகே தனனையன்று**
**உரத்தின்வெங் கணைகள்பட் டுருவவில் லுதையினன்.**

[வரத்தின் முன் பெறு கதை வன்மையும் வின்மையும் சிரத்தின் நின்று எண்ண, ஓர் பேர் பெறும் சேவகன், சரத்தினும்

கடுகு தேர் சர்ப்ப கேதனனை அன்று உரத்தின் வெம் கணைகள் பட்டு உருவ வில் உதையினன்.]

**விளக்கம்:-** (அசுரர்களின் சிற்பியான மயன் என்பானிட மிருந்து) முன்னே பெற்ற சிறந்த கதையின் வலிமையிலும், வில் தொழில் திறமையிலும் தலைமையாக வைத்து மதிக்கும்படி ஒப்பற்ற பேர் பெற்ற வீரனான வீமன், என்பது முதலிரண்டடி களின் பொருள். (அவன்) அன்று, அம்பினும் கடுகிச் செல்லும் தேரையுடைய துரியோதனனை, அவன் மார்பிலே கொடிய கணைகள் பட்டு உருவிச் செல்லும்படி தன் வில்லினின்று சரங்களைச் செலுத்தினன், என்பது ஈற்றடிகளின் பொருள்.

மயன் விருப்பத்தோடு கொடுக்க, அதை வீமன் பெற்றான் ஆதலின், வரத்தினால் பெறுகதை, என்றார்.

**17. தான்விடுங் கணைகளிற் றம்பியர் தம்மையும்**
**தேன்விடுந் தெரியலா னெய்துபுண் செய்தபின்**
**ஊன்விடும் படிதுளைத் துருவுபல் பகழியால்**
**வான்விடும் பேரையும் வானிலுய்த் தனனரோ.**

[தான்விடும் கணைகளின் தம்பியர் தம்மையும், தேன் விடும் தெரியலான் எய்து புண் செய்தபின், ஊன்விடும்படி துளைத்து உருவு பல் பகழியால் வான்விடும் பேரையும் வானில் உய்த்தனன், அரோ.]

**விளக்கம்:-** தேன்விடு தெரியலான் - வீமன். (துரியோதனனை கணைகளால் வருத்திய பின்பு) அவனது தம்பியரையும் வீமன், தான்விடும் சரங்களால் துளைத்துப் புண் செய்து, அதன்பின், பகைவரது ஊன் (உடல்) உயிரை விடும்படி துளைத்து, ஊடுருவிச் செல்லும் கூரிய பல கணைகளால், வானுலகம் செலுத்தத் தக்கவர் களையும், அவ்வானுலகம் செலுத்தினன், அதாவது கொன்றழித் தான், என்பது பொருள். அரோ: அசை.

வீமன், சிலரைக் காயப்படுத்திப் பின்னிடச் செய்து, சிலரைக் கொன்றான், என்பதாம்.

**18. வாவருங் கவனமாக் கடுகுதேர் வலவர்போய்**
**ஏவருங் சிலைகள்போ யிருபுய வலிமைபோய்**
**யாவரும் பண்டுதா மிடுபுற மிட்டனர்**
**தேவருங் கண்டுவந் தலர்மழை சிந்தினர்.**

[வா(வி) வரும் கவனம் மா கடுகு தேர் வலவர் போய், ஏ வரும் சிலைகள் போய், இருபுயம் வலிமை போய், யாவரும் பண்டு தாம் இடுபுறம் இட்டனர்; தேவரும் கண்டு உவந்து அலர் மழை சிந்தினர்.]

**விளக்கம்:-** (வீமன்முன் நிற்கமாட்டாமல்) பகைப் படை வீரர் யாவரும், தாவி வரும் வேகத்தையுடைய குதிரைகளும், வேகமாகச் செல்லும் தேர்களும், சாரதிகளும் ஒழியப் பெற்று, இரு தோள்களின் வலிமை கெடப் பெற்று, பழமையாக அதாவது வழக்கப்படி தாம் கொடுக்கும் புறத்தை இப்பொழுதும் கொடுத்து ஓடினர், அதாவது முதுகு தந்து பின்னிட்டார்கள்; தேவர்களும் அதனைப் பார்த்து, (வீமனது திறமையை) மகிழ்ந்து அவன்மேல் மலர்களைச் சொரிந்தனர்; - என்பது பொருள்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**19. ஏய வரிசிலை வீம னெடுபொரு**
**போரி லனைவரும் வென்னிட**
**மேய விழியிலை யாய பதிதரு**
**வீரர் பலரும்வி கன்னனும்**
**ஆய முதிர்சின மூள விரைவுடன்**
**மீள வரவபி மன்னுவும்**
**தூய வரிசிலை வாளி கொடுதன**
**தேர்கொ வடனெதிர் துன்னினன்.**

[ஏய வரிசிலை வீமனெடு பொரு போரில் அனைவரும் வென் இட, மேய விழி இலை ஆய பதி தரு வீரர் பலரும், விகன்னனும், ஆய முதிர் சினம் மூள விரைவுடன் மீள வர, அபிமன்னுவும் தூய வரி சிலை வாளி கொடு தன தேர் கொடு, அவன் எதிர் துன்னினன்.]

**விளக்கம்:-** ஏய - ஏவிய. மேய விழி இலை ஆய பதி - பொருந்திய கண்கள் இல்லையாகிய திருதராட்டிரன். தருவீரர் - அவன் பெற்ற பிள்ளைகளாகிய வீரர். விகன்னன் - திருதராட்டிர குமாரர்களில் இளையவனான விகர்ணன். ஆய முதிர் சினம் - பாண்டவர் பால் உண்டானதாகிய பழமையான முதிர்ந்த கோபம். பாண்டவரிடம் பழமையான பகையுடைய திருதராட்டிர குமாரர் களான பலரும் விகர்ணன் என்பானும், (தோற்ற பின்னும்) சினம் மிக மறுபடியும் போருக்கு வர, பழுதற்ற கட்டமைந்த வில்லையும் அம்புகளையுங் கைக் கொண்டு அபிமன் தனது தேர் ஏறி, விகர்ணன் எதிரே சென்றான்.

துரியோதனனது தம்பியரில் விகர்ணன் நற்குணம் உடைய வனும், பாண்டவர்பால் பகையில்லாதவனும் ஆவான். எனினும் அவன் பாண்டவரை எதிர்த்தது, அண்ணன் இட்ட சோற்றுக்கு உரிய கடன் கழிப்பதற்கே ஆகும். எனவே, அவன் சினங் கொண்டது, கடன் கழிக்கும் பொருட்டாதல் பற்றி, 'ஆய முதிர் சினம்' எனப்பட்டது என்றுங் கொள்ளலாம்.

**20. மான வபிமனு ஞான விகனனே**
**வாளி பலபல வேவமேல்**
**ஆன விரதமு மாவும் வலவனு**
**மாழி களுமுட னற்றபின்**
**தான விரதமு ருமல் விசையொடு**
**தத்தி யருகுறு சித்திர**
**சேன னெனுமி ளையோன தணிபெறு**
**தேரின் மிசைகடி தேறினன்.**

[மானம் அபிமனும் ஞான விகனனே வாளி பலபல ஏவ, மேல் ஆன இரதமும் மாவும் வலவனும் ஆழிகளும் உடன் அற்றபின், தான் அ இரதம் உருமல் விசையொடு தத்தி, அருகு உறு சித்திரசேனன் எனும் இளையோனது அணி பெறு தேரின் மிசை கடிது ஏறினன்.]

**விளக்கம்:-** மானம் - பெருமை. பெருமையுடைய அபிமன்யு, நல்லறிவுடையனன விகர்ணன்மேல் பல அம்புகளை ஏவ, (அவனது) மேலான (சிறந்த) தேரும், குதிரைகளும், தேர்ச் சக்கரங்களும் ஒரு சேர அழிந்த பின்பு, தான் (விகர்ணன்) அழிவுற்ற தேரில் ஏருமல், விரைந்து சென்று அருகு இருந்த சித்ரசேனன் என்ற இளவீரனது அலங்கரிக்கப் பெற்ற தேரின் மேல் விரைந்து ஏறினன், - என்பது பொருள்.

விரதம் என்பதை **விரஸம்** என்பதின் தமிழ்த் திரிபாகக் கொண்டு, தோல்விக்குரிய நிந்தை, அல்லது ஓய்வு அடையாமல், (சித்ரசேனன் தேர் ஏறிப் போரைத்தொடர்ந்தான்) என்றும் பொருள் கொள்ளலாம். விரஸம் - நிந்தை, பழிச்சொல் ஓய்வு.

**21. மற்றை யிளைஞரு மைத்து னனுமத**
**மத்த கயபக தத்தனும்**
**செற்ற விகனனு முற்று மிவனெடு**
**செற்றி யமர்பொரு கிற்றினர்**
**வெற்றி யபிமனும் விற்கை யுடனவர்**
**விட்ட கணைகள்வி லக்கிமார்**
**பெற்று கணையனே வர்க்கு மவரவ**
**ரெய்த்து விழவிழ மொத்தினன்.**

[மற்றை இளைஞரும் மைத்துனனும் மதம் மத்தம் கயம் பகதத்தனும் செற்றம் விகன்னனும் முற்றும் இவனெடு செற்றி அமர் பொருகிற்றினர்; (அப்பொழுது) வெற்றி அபிமனும் வில்கை யுடன், அவர்விட்ட கணைகள் விலக்கி, மார்பு ஏற்று, கணை அனே வர்க்கும் அவர்அவர் எய்த்து விழவிழ மொத்தினன்.]

**விளக்கம்:-** மற்றை இளைஞர் - விகர்ணன் ஒழிந்த தம்பியர். மைத்துனன் - சகோதரியின் கணவனான சயத்திரதன். மதமத்த கயம் - மதக் களிப்புடைய யானை, (மத்தம் - களிப்பு, வெறி). செற்றம் விகன்னன் - கோபமுடைய விகன்னன். முற்றும் இவனொடு செற்றி அமர் பொருகிற்றனர் - (தம்பியர் முதல் விகர்ணன் ஈருகவுள்ள) எல்லோரும் இவனோடு (அபிமனோடு) நெருங்கிப் போர் செய்தனர். மார்பு எற்று கணை - மார்பினைத் துளைக்கும் அம்பு. தன்னை எதிர்த்த விகர்ணன் ஈருகவுள்ள எல்லோரும் விட்ட கணைகளைத் தடுத்து, அவர்களது மார்பைத் துளைக்கும் பாணங்களை அபிமன்யு செலுத்தினான், என்பதாம்.

மத்த மதகஜம், வடமொழித்தொடர், செற்ற விகன்னன், என்று கொண்டால், 'அபிமனால் பரிபவப்படுத்தப்பட்ட, என்பது பொருளாகும்.

**22.** **நெடிய வரிசிலை நிமிர முறைமுறை**
**நெடிய விசையுடன் விசியுநாண்**
**இடியு முகிலென வகில வெளிமுக**
**டிடிய வதிர்பெரு நகையுடன்**
**கொடிய விகனனை மடிய வவனுடல்**
**கொடிய குடருகு குருதிநீர்**
**வடிய விருபுய மொடிய வுதையினன்**
**வடிய கணையொரு நொடியிலே.**

[நெடிய வரிசிலை நிமிர முறை முறை நெடிய விசையுடன் விசியும் நாண், இடியும் முகில் என அகிலம் வெளி முகடு இடிய, அதிர் பெரு நகையுடன், கொடிய விகனனை மடிய அவன் உடல் கொடிய குடர் உகு குருதி நீர் வடிய, இரு புயம் ஒடிய உதையினன் வடியகணை ஒரு நொடியிலே.]

**விளக்கம்:-** முறைமுறை - தொடர்ச்சியாக, ஒன்றன்பின் ஒன்றாக. இடியும் முகில் - இடிக்கும் மேகம். அகில வெளி முகடு இடிய - அண்டகோளத்தின் மேல்முகடு அதிரும்படி. அதிர் பெரு நகை - ஒலியோடு கூடிய பயங்கரமான சிரிப்பு. அவன் உடல் மடிய - அவனது தேகம் வருத்தமுற. வடியகணை உதையினன் - கூரிய அம்புகளை (அபிமன்) செலுத்தினன். விகர்ணனது உடல் வருந்தவும் கொடி போன்ற குடலிலிருந்து இரத்தம் வழியவும், தோள்கள் புண்ணுறவும், அபிமன் கூரிய கணைகளை அவன்மேல் ஏவினான், என்பதாம்.

வடிய, என்பது வழிய, கூரிய, என்ற பொருள்களில் வந்துளது. ஒன்று வினைஎச்சம், மற்றது குறிப்புப் பெயரெச்சம்.

அம்பு செலுத்தியபின் வில்லின்வளைவு சிறிது நிமிருமாதலால், **வரிசிலைநிமிர**, என்ருர்.

**23.** **மன்னர் மணிமுடி மன்னு கனைகழன்**
**மன்ன னிளவல்வி கன்னனை**
**முன்ன ருறுகணை பின்னர் விழவிழ**
**முன்ன ரமர்பொர முன்னினுன்**
**பொன்ன சலநிக ரன்ன புயவரி**
**மன்னு வொருவனு மின்னுநாம்**
**என்ன வமர்பொர வின்ன ரணுகுவ**
**தென்ன வெருவினர் துன்னலார்.**

[மன்னர் மணிமுடி மன்னு கனை கழல் மன்னன் இளவல் விகன்னனை முன்னர் உறுகணை பின்னர் விழவிழ முன்னர் அமர் பொர முன்னினுன், பொன் அசலம் நிகர் என்ன புயம் அபிமன்னு ஒருவனும், இன்னும் நாம் என்ன அமர் பொர இன்னர் அணுகுவது, என்ன வெருவினர் துன்னலார்.]

**விளக்கம்:-** மன்னர் மணிமுடி மன்னுகனை கழல் மன்னன் - துரியோதனன். முன்னர் உறுகணை பின்னர்விழ - மார்பில் பொருந்தித் துளைத்துச் சென்ற அம்புகள் முதுகின் வழியாக வெளிப்பட்டு விழ. முன்னர் - முன் நின்று. அமர் பொர முன்னினுன் - போர் செய்ய முற்பட்டான். பொன் மலையான வடமேருவை ஒத்த தோள்களை உடைய அபிமன்யு ஒருவனுய் நின்று, அதாவது துணையில்லாமல், விகர்ணன் வலி ஒடுங்கும்படி போர் செய்தலில் முற்பட்டு விட்டான்; (ஆகவே), ''இப்பொழுது, என்ன போரை இன்னும் நாம் செய்ய அவனை நெருங்குவது?'' என்று துன்னலார் (பகைவர்) அஞ்சினர், என்பதாம். இன்னர் - இப்பொழுது. ஒருவனும், என்ற உம்மை, அபிமனது இளம் பிராயத்தையும், துணையில்லாத் தனிமையையும் குறிக்கும். இன்னும் நாம் என்ன அமர் பொர அணுகுவது, என்பது, ''நம்மால் அவனேடு போர் செய்ய முடியாது,'' என்று கூறும் கருத்தது.

**24.** **அன்றை யமரினி லொன்று படவவர்**
**அரங்க மயர்வுறு பங்கமே(து)**
**என்று மொழிவது தந்த மனையுற**
**வெந்த நிருபரு முந்தினுர்.**
**வென்று பொருமுனை நின்ற வபிமனை**
**விஞ்சு முவகைகொ ணெஞ்சுடன்**
**சென்று தழுவின ரிந்து வரவெழு**
**சிந்து வெனமகிழ் தந்தைமார்.**

[அன்றை அமரினில் ஒன்று பட அவர் அங்கம் அயர்வு உறு பங்கம் ஏது என்று மொழிவது? தம்தம் மனேஉற எந்த நிருபரும் முந்தினுர்; வென்று பொருமுனே நின்ற அபிமனே விஞ்சும் உவகை கொள் நெஞ்சுடன் சென்று தழுவினர், இந்து வர எழு சிந்து என மகிழ் தந்தைமார்.

**விளக்கம்:-** அன்றைய தினம் போரினில் ஒருசேர விகர்ணன் முதலிய அரசர்களின் தேகம் தளர்ச்சியுறத் தோல்வி அடைந்த பரிபவத்தை என்ன என்று சொல்வது? எந்த அரசர்களும் (எல்லா அரசர்களும்) தங்கள்தங்கள் படைவீட்டை அடைதற்கு ஒருவரை ஒருவர் முந்துவாராயினர், என்பது முதலிரண்டடிகளின் பொருள். போர் வென்று களத்தில் நின்ற அபிமன்யுவை, சந்திரன் வரப் பொங்கும் கடல்போல் மகிழ்ச்சி பொங்கும் தந்தைமார் பாண்டவர் உவகை கொண்ட மனத்துடன் களம் சென்று அவனேத் தழுவிக் கொண்டனர், என்பது ஈற்றடிகளின் பொருள். சிந்து - கடல்.

பகைவர் தோல்வியுடன் பாசறை செல்ல வென்று நின்ற அபிமனேப் பாண்டவர் மன மகிழ்ச்சியுடன் தழுவிக் கொண்டனர், என்பதாம்.

படுகளச் சிறப்பு

**25. கோடு முதலொடு வாளி களினிற**
**வீழ்வ பலகட குஞ்சரம்**
**காடு படுதுள வோன்முன் வரவிடு**
**கஞ்சன் மழகளி றெக்குமால்**
**ஓடு குருதியி னூடு வடிவொரு**
**பாதி புதைதரு மோடைமா**
**நீடு முதலேயின் வாயின் வலிபடு**
**நீல கிரியைநி கர்க்குமால்.**

[கோடு முதலொடு வாளிகளின் இற வீழ்வ பல கட குஞ்சரம், காடு படு துளவோன் முன் வரவிடு கஞ்சன் மழ களிறு ஒக்கும், (ஆல்), ஓடு குருதியின் ஊடு வடிவு ஒரு பாதி புதை தரும் ஓடைமா, நீடு முதலேயின் வாயின் வலிபடும் நீலகிரியை நிகர்க்கும், ஆல்.]

**விளக்கம்:-** தந்தங்கள் அடியோடு பாணங்களால் அறுபட்டுக் கிடப்பனவான யானேகள், காட்டில் அடர்ந்து கிடக்கும் துளவத்தின் மாலே அணிந்த கண்ணனின் முன்னே, வரும்படி கம்சன் ஏவிவிட்ட குவலயாபீடம் என்ற யானேயை ஒத்தன; பெருகி ஓடும் இரத்த வெள்ளத்தினிடையே ஒருபாதி உடல்

புதைந்த நெற்றிப் பட்டங்களையுடைய யானைகள், உடல் நீண்ட முதலைகளின் வாயினில் (வாயில் பட்டு) நீலமலையை நிகர்த்தன, - என்பது பொருள். ஆல் இரண்டும் அசைகள்.

**26.** **மாலு மதகட சால நுதலும**
**ருப்பு மொருகையும் வதனமும்**
**தோலு மொழியவு ளான தசைபல**
**பேய்க ணுகர்தரு தும்பிமா**
**நாலு மறைகளு மோல மெனவகல்**
**வான மெனமுழு ஞானமே**
**போலு மெனவொளிர் மேனி யுடையவர்**
**போர்வை யுரியதன் போலுமே.**

[மாலும் மதம் கடம் சாலம் நுதலும் மருப்பும் ஒரு கையும் வதனமும் தோலும் ஒழிய உள் ஆன தசை, பல பேய்கள் நுகர்தரு தும்பிமா, - நாலு மறைகளும் ஓலம் என, அகல் வானம் என, முழு ஞானமே போலும் என, ஒளிர் மேனி உடையவர் போர்வை உரி அதள் போலும், ஏ.]

**விளக்கம்:-** மாலும் - மயக்கத்தைத் தரும். மத சால கடம் - மத நீரை உடைய கன்னம். ஜலம், என்பதின் விகாரம் சாலம். கன்னம், நெற்றி, தந்தம், துதிக்கை, முகம் தோல் ஆகியவை ஒழிய, உடலின்உள் புறத்த தானதும், பல பேய்களால் உண்ணப் பெற்றதுமான தோல் யானைகள், - நான்கு வேதங்களும் அபயக் குரல் எடுத்துத் துதிப்பதும், அகன்ற வானவெளி என்று சொல்லப் படுவதும், முற்றிய ஞானம் போன்றதென்று கூறப்படுவதும் ஆன விளங்குகின்ற திருமேனியை உடையவரான சிவபெருமானுக்குப் போர்வையாய் அமைந்த உரிக்கப் பெற்ற கஜாசுரனது தோலைப் போன்ற தோற்றத்தின வாயின, - என்பது பொருள். அதள் - தோல்.

பேய்கள் உண்டதால் மாமிசம் நீங்கிய தோல்யானைகள், சிவபிரானது போர்வையான தோலுரி பட்ட யானையை, ஒக்கும், என்பதாம். வேதங்களால் போற்றப் படுதலின், 'நாலு மறைகளும் ஓலம் என,' என்றார். ஆகாச மூர்த்தி என்னும், ஞான வடிவினன், என்றும் அவனை வேதங்கள் அழைக்கும்.

**27.** **சேனை யிபமுக மற்று விழுவன**
**சென்று திசைவழி கவ்விவிண்**
**போன வயவர்கள் படைகொ டெதிரெதிர்**
**பூசல் புரியிரு பூதமும்**
**சோனை மழைமுகில் வாகன் முதலசு**
**ரேசர் தொழுது துதிக்கவே**

**யானை முகவசு ரேச னுடனம**
**ராடு முதல்வனை யொக்குமே.**

[சேனை இபம் அற்று விழுவன சென்று திசைவழி கவ்வி விண் போன வயவர்கள் படைகொடு எதிர் எதிர் பூசல் புரி இரு பூதமும், சோனை மழை முகில் வாகன் முதல் சுரேசர் தொழுது துதிக்கவே, யானை முக அசுரேசனுடன் அமர் ஆடு முதல்வனை ஒக்கும், ஏ.]

**விளக்கம்:-** சேனையில் அற்று விழுந்தனவாகிய இபம் (யானை) முகங்களை, (அவை விழுந்துள்ள) திசையிடம் சென்று கௌவிக் கொண்டு, (போரில் மடிந்து) வீர சுவர்க்கம் சென்ற வலிமை உடைய வீரர்களின் ஆயுதங்களைக் கையில் கொண்டு எதிரெதிர் நின்று (விளையாட்டாகவோ, மாறுபட்டோ) போர் செய்கின்ற இரு பூதங்களும், – பெரு மழை பொழியும் மேகத்தை வாகனமாகவுடைய இந்திரன் முதலான தேவர்கள் வணங்கித் துதிக்க, யானை முகாசுரனோடு போர் செய்த தலைவனை விநாயகக் கடவுளை ஒத்தன, – என்பது பொருள்.

போர் செய்யும் பூதங்களுக்குக் கஜமுகாசுரனும், பூதவடிவங் கொண்ட விநாயகரும் உவமை. வலிமையுடையவர், வயவர். சுபகாரியங்களில் முதலிலே பூசிக்கப்படுதலின் விநாயகரை, முதல்வன், என்றார்.

மறுநாள் உதயம்

**இமைய மணுகினன் விசயன் மதலையை**
**யின்றை யமரினி யுங்களுக்கு**
**அமையு மெனமுத லனிக மடையவும்**
**அணியு மவனிபர் நால்வரும்**
**தமைய ஞெடுதம பதியி னணுகினர்**
**தங்க விரைவொ டுகங்குல்போய்ச்**
**சிமைய மணுகினன் மீள தனியிருள்**
**சிதைய வுதயதி வாகரன்.**

[இமயம் அணுகினன், விசயன் மதலையை இன்றை அமர் இனி உங்களுக்கு அமையும் என முதல், (உடனே) அனிகம் அடையவும் அணியும் அவனிபர் நால்வரும் தமையனோடு தமபதியின் அணுகினர் தங்க; விரைவொடு கங்குல் போய் சிமையம் அணுகினன் மீள நனி இருள் சிதைய உதயதிவாகரன்.]

**விளக்கம்:-** விசயன் மதலையாகிய அபிமனை நோக்கி இன்றைய தினப்போர் இனி அமையும் (போதும்) என்று சொல்வான் போல், (சூரியன்) இமயம் (அத்தமனகிரியை) அடைந்தான், அதாவது அஸ்தமித்தான்; (உடனே), தங்கி

ஒய்வு கொள்ள, சேனைகள் எல்லாவற்றினேடும், அணிகலன்கள் பூண்ட வீமன் முதலிய அரசர்கள் நால்வரும் தமையனை தருமனுடனே தங்கள் பாசறை சேர்ந்தனர்; இரவு விரைவின் கழிய மறுபடியும், மிகுந்த இருள் சிதையும்படி உதய திவாகரன் (உதய சூரியன்) சிமையம் (உதயகிரியை) அடைந்தான், அதாவது உதயமானன், - என்பது பொருள்.

இன்று போர் போதும் என்று சொல்வான்போல் சூரியன் அஸ்தமித்தான், என்றது தற்குறிப்பேற்றம். இமயம் என்பது மலே என்ற பொருளது. சிமயம், மலேயுச்சி, என்ற பொருளது. அது, ஆகு பெயராய் மலேயைக் குறித்தது.

**ஆறும் போர்ச் சருக்கம் முற்றும்.**

## ஏழாம் போர்ச் சருக்கம்

### கடவுள் வாழ்த்து

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**1. உரலும் வேதமுந் தொடர நந்தகோ**
**னுடன சோதைகண் டுருக வாழ்வுகூர்**
**தரணி மீதுசெங் கையு மாமுழந்**
**தாளும் வைத்துவைத் தாடு மாயனுர்**
**விரவி நின்றமா மருதி னூடுதா**
**மெத்தெ னத்தவழ்ந் தருளி மீளவும்**
**புரியு நீள்கடைக் கண்ணும் வண்ணமும்**
**போற்று வார்கண்மெய் புளக மேறுமே.**

[உரலும் வேதமும் தொடர் நந்தகோனுடன் யசோதை கண்டு உருக வாழ்வு கூர் தரணிமீது செங்கையும் மாமுழந்தாளும் வைத்து வைத்து ஆடும் மாயனுர், விரவி நின்ற மா மருதினூடு தாம் மெத்தென தவழ்ந்து அருளி, மீளவும் புரியும் நீள் கடைக் கண்ணும் வண்ணமும் போற்றுவார்கள் மெய் புளகம் ஏறும், ஏ.]

**விளக்கம்:-** (தன்னை எசோதைப் பிராட்டி கட்டி வைத்த) உரலும், (தன்னையே துதிக்கும்) வேதமும் உடன் வர, நந்தகோபனும் எசோதையும் கண்டு உள்ளம் உருக, நல்வாழ்ச்சி பெற்ற பூமியின்மேல், செங்கைகளையும் சிறந்த முழந்தாளையும் வைத்து விளையாடும் மாயனை கண்ணன், ஒன்ருேடொன்று இணையாய் நெருங்கி நின்ற மருத மரங்களின் இடையே மெதுவாகத் தவழ்ந்து சென்று, அவற்றிற்கு நற்கதி தந்தருளி, மீளவும் அவற்றைத் திரும்பிப் பார்க்கின்ற நீண்ட கடைக்

கண்களையும், திருமேனி அழகையும் மனதாரத் துதிப்பவர்களின் உடல் புளகிக்கும், - என்பது பொருள்.

உடல் புளகித்தல், அன்பின் நிகழ்வு. பெற்றவர் காணாத கண்ணனது இளம்பருவ விளையாடல்களைக் கண்டு அனுபவித்த அருமை தோன்ற, ''நந்தகோபனும் எசோதையும் கண்டு உருக,'' என்றார். கண்ணனது கையும் காலும் படலாகிய பாக்கியம் உடைமையின் பூமி வாழ்வு கூர்தரணி, எனப்பட்டது. குழந்தைகள் தவழும் பொழுது திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு செல்லும் இயல்பு பற்றி, ''மீளவும் புரியும் நீள் கடைக்கண்'' என்றார். புரியும் - பார்த்தலைச் செய்யும். ஏறுமே, என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப் பொருளது.

### இருதிறத்துச் சேனைகளும் களம் வரல்

**2. இருவர் சேனையுஞ் சேனை மன்னரு**
**மிகலி யேபல திசைக ளெங்கணும்**
**முரச மாதிவெம் பணைமு ழங்கவே**
**முன்னை வெங்களம் பின்னு மெய்தினர்**
**மரக தாசலம் போலு மேனிமா**
**மாய னச்சுமா சுணவி யூகமும்**
**தரணி காவலன் றன்பி தாமகன்**
**சகட வியூகமுந் தான் வகுக்கவே.**

[இருவர் சேனையும் சேனை மன்னரும் இகலியே, பல திசைகள் எங்கணும் முரசம் ஆதி வெம் பணை முழங்கவே, முன்னை வெம் களம் பின்னும் எய்தினர்; மரகத அசலம் போலும் மேனி மா மாயன் நச்சு மாசுண வியூகமும், தரணி காவலன் தன் பிதாமகன் சகட வியூகமும் தான் வகுக்கவே.]

**விளக்கம்:-** இருசேனைகளும் சேனை மன்னர்களும், பயங்கரமான போர்ப்பறைகள் எங்கும் முழங்க, முந்தின நாள்களில் அடைந்த போர்க்களத்தை மறுபடியும் அடைந்தனர்; மரகதமலை போன்ற மேனியையுடைய கண்ணன், சர்ப்ப வடிவமாக வியூகமும், துரியோதனனது பிதாமகனான வீடுமன் சகடம்(வண்டி) வடிவமாகத் தன் பக்கத்துச் சேனையை வகுக்க, - (அடுத்த கவியோடு தொடரும்) என்பதாம். தான்: அசை.

**3. மன்ற நிம்பநாண் மாலை மௌலியான்**
**மாறன் மீனவன் வழுதி பஞ்சவன்**
**அன்று பஞ்சவர்க் காக வேயுடன்**
**றந்த ணற்குடைந் தஞ்சி யோடினன்**

**துன்று மாயமால் யானை கொண்டுபோர்**
**யானை மன்னரைத் தொல்ல மர்க்கணே**
**வென்று கண்டவர் புறம வர்க்கிடான்**
**மீள வந்தனன் வீமன் மைந்தனே.**

[மன்றல் நிம்பம் நாள் மாலை மௌலியான் மாறன் மீனவன் வழுதி பஞ்சவன் அன்று பஞ்சவர்க்காகவே உடன்று அந்தணற்கு உடைந்து அஞ்சி ஓடினன்; துன்று மாய மால்யானை கொண்டு போர் யானை மன்னரை தொல்லை அமர்கணே வென்று கண்டு அவர் புறம், அவர்க்கு இடான் மீள வந்தனன் வீமன் மைந்தனே.

**விளக்கம்:-** மணக்கும் வேப்ப மலராகிய புதிய மாலையை முடியில் சூடியவனும், மாறன், மீனக்கொடியோன், வழுதி, பஞ்சவன், என்ற பெயர்களை உடையவனுமான பாண்டியன், அன்று பஞ்ச பாண்டவர்களுக்காகப் போர் செய்து, துரோணன் முன் தோற்று அஞ்சி ஓடினன்; (அப்பொழுது) மாயத்தால் ஆன மால் யானைகளைக் கொண்டு, போர் யானை மன்னரைப் பழைய போரிலே, அதாவது நான்காம் நாள் போரிலே வென்று, அவர் களது புறம் கண்டு, தான் அவர்களுக்குப் புறம் கொடாதவனாகிய வீமன் மைந்தன் கடோற்கசன், மறுபடியும் களம் வந்தான், என்பது பொருள்.

நிம்பம் - (வடசொல்) வேம்பு. பாண்டியரின் அடையாள மாலை வேம்பு. ஆத்தி, பனைகளின் பூவால் ஆன மாலைகள் சோழ சேரரின் அடையாள மாலைகள். மாறன் - மாறு கொண்டு அழிக்க வல்லவன்.

**4. முகினி றங்கொண்மா மேனி மாயனார்**
**முன்பி றக்கவே பின்பி றந்தவன்**
**புகுநி லந்தனிற் சற்று நின்றிலன்**
**பொருசு தாயுதன் போர்பொ ருமையின்**
**சகுனி யும்பெருஞ் சேனை முன்வரத்**
**தக்க சல்லியன் றானு மோடவே**
**மிகுதி றங்கொள்பைந் தாம வாகைபோர்**
**வென்று சூடினன் வீம சேனனே.**

[முகில் நிறம் கொள் மா மேனி மாயனார் முன் பிறக்கவே, பின் பிறந்தவன் புகு நிலம் தனில் சற்று நின்றிலன் பொரு சுதாயு; தன் போர் பொருமையின் சகுனியும், பெருஞ் சேனை முன் வர தக்க சல்லியனும் ஓடவே, மிகு திறம் கொள் பைந்தாமம் வாகை போர் வென்று சூடினன் வீமசேனனே.]

**விளக்கம்:-** கண்ணனின் பின் பிறந்தோனாகிய சாத்தகி களம் புகுந்த இடத்திலே, வந்து போர் செய்த சுதாயு (சாத்தகி) தன் போர் ஆற்றலைப் பொறுக்க மாட்டாமையின் களத்தில் சற்றும் நில்லாதவனாய்ப் பின்னிட்டான்; வேறோரிடத்தில் வீமனோடு போர் செய்த சகுனியும் பெருஞ்சேனை தன் முன்னே எதிர்த்து வரத்தக்க சல்லியனும் தோற்று ஓடலும், வீமன், மிகுந்த நிறங் கொண்ட பசிய வாகைத் தாமம் (மாலை) வெற்றியின் அடையாளமாக அணிந்தான்,—என்பதாம்.

விசயனும் வீடுமனும் பொரல்

**5. உயர்ந்த மேருவோ டொத்தி லங்குதேர்**
**உலக ளந்ததாள் வலவ னூரவே**
**செயந்தன் மாபெருந் துணைவன் வன்பெருஞ்**
**சேனை தன்னொடுஞ் சென்று பற்றினான்**
**வியந்த தேரின்மேன் முப்பு ரங்களும்**
**வென்ற மீளிபோ னின்ற வீடுமன்**
**இயைந்து போரினுக் கெதிர வில்வலோர்**
**இருவர் விற்களு மெதிர்வ ளைந்தவே.**

[உயர்ந்த மேருவோடு ஒத்து இலங்கு தேர் உலகு அளந்த தாள் வலவன் ஊரவே, செயந்தன் மாபெருந் துணைவன் வல் பெருஞ்சேனை தன்னொடும் சென்று பற்றினான்; வியந்த தேரின் மேல் முப்புரங்களும் வென்ற மீளி போல் நின்ற வீடுமன் இயைந்து போரினுக்கு எதிர, வில்வலோர் இருவர் வில்களும் எதிர் வளைந்தவே.]

**விளக்கம்:-** உலகு அளந்த தாள் வலவன் – திரிவிக்ரமனாய்த் தோன்றி உலகத்தை அளந்த திருவடிகளை உடைய கண்ணனாகிய சாரதி. செயந்தன் மாபெருந் துணைவன் - இந்திர குமாரனான செயந்தனது தம்பியான அருச்சுனன், கண்ணன் தேர் செலுத்த விசயன் பெருஞ்சேனையுடன் சென்று (வீடுமனைத்) தொடர்ந்தான். வியந்த தேர் - கண்டாரை வியக்கச் செய்யும் தேர். அத்தேரில் முப்புரங்களை வென்ற சிவபெருமான் போல் நின்ற வீடுமனும் போருக்கு இசைந்து எதிரில் நிற்க, வில் தொழிலில் சிறந்தாரான இருவர் வில்களும் வளைந்தன, என்பதாம். இந்திரனுக்கு இந்திராணியிடம் பிறந்தவன் செயந்தன். இந்திரனுக்குக் குந்தியிடம் பிறந்தவன் விசயன்.

**6. ஒருவ ரெய்தவம் பொருவர் மேலுரு**
**தோரொ ரம்பினுக் கோரொ ரம்புதொட்(டு)**
**இருவ ரும்புகுந் தெய்த வல்லபம்**
**இன்ன தாகுமென் றுன்ன லாகுமோ**

**வரிவில் வெங்கட கரியின் வந்ததா**
**ரகனு மாமயிற் குகனு மன்றியே**
**மருவு வெங்குரற் கொண்டல் வாகனும்**
**வலனும் ராமரா வணரு மென்னவே.**

[ஒருவர் எய்த அம்பு ஒருவர் மேல் உருது ஓர் ஓர் அம்பினுக்கு ஓர் ஓர் அம்பு தொட்டு, இருவரும் புகுந்து எய்த வல்லபம் இன்னது ஆகும் என்று உன்னல் ஆகுமோ! வரிவில் வெம் கடகரியின் வந்த தாரகனும் மாமயில் குகனும் அன்றியே, மருவு வெம் குரல் கொண்டல் வாகனும் வலனும், ராம ராவணரும் என்னவே.]

**விளக்கம்:-** கடை அடிகள் இரண்டையும் முன்னர் வைத்துப் படிக்கவும். வரிவில்லோடு கொடிய மதயானை முகங் கொண்டு வந்த தாரகனும் சிறந்த மயிலை வாகனமாகக் கொண்ட முருகனும், பொருந்திய பயங்கரமான இடியைக் கொண்ட மேகத்தை வாகன மாகக் கொண்ட இந்திரனும் பலாசுரனும், அல்லாமல், ராமராவ ணரும், என்று சொல்லும்படி, (வீடுமன், விசயன் ஆகிய) களம் புகுந்து ஒருவர் எய்த அம்பு மற்றவர் மேல் படாதபடி ஓரோர் அம்பினுக்கு ஓரோர் அம்பைப் பிரயோகம் செய்துப் போர் செய்த திறமையை இன்னது ஆகும் என்று நினைத்தலுங் கூடுமோ! எண் ணுதற்கும் அரிய முறையில் இருவரும் பொருதனர், என்பதாம். வலன் - பலாசுரன்.

பலாசுரன், என்பவன் தவம் செய்து சிவபெருமானிடமிருந்து வரம் பெற்றவன். அவன் இந்திரனைப் போருக்கு அழைத்து அவனை வென்றுனகைத் தோற்ற இந்திரன் அவனை வஞ்சனையால் கொன்றழித்தான், என்பது கதை.

**7. கரிய ணிக்குளெக் கரிகள் புண்படா**
**கடவு தேரிலெத் தேர்க லக்குரு**
**பரிநி ரைக்குளெப் பரிது ணிப்புரு**
**பாகர் தம்மிலெப் பாகர் வீழ்கலார்**
**நரனும் வெற்றிகூர் வசுவு முற்றபோர்**
**நவிலு கிற்கினு நாந டுங்குமால்**
**இருத ளத்தினு மிருவ ரம்பினு**
**மேவு ணுதபே ரெந்த மன்னரே.**

[கரி அணிக்குள் எ கரிகள் புண்படா? கடவு தேரில் எ தேர் கலக்கு உரு? பரி நிறைக்குள் எ பரி துணிப்பு உரு? பாகர் தம்மில் எ பாகர் வீழ்கலார்? நரனும் வெற்றி கூர் வசுவும் உற்ற போர் நவிலுகிற்கினும் நா நடுங்கும் ஆல், இரு தளத்தினும் இருவர் அம்பினும் ஏவுணுத பேர் எந்த மன்னர், ஏ.]

**விளக்கம்:-** யானை அணியில் எந்த யானைகள் புண்படாதவை? நடத்தப்படும் தேர் வரிசையில் எந்தத் தேர்கள் கலக்கமடையாதவை? குதிரை வரிசைகளில் எந்தக் குதிரைகள் துணிக்கப் படாதவை? சாரதிகளில் எந்த சாரதிகள் மடிந்து விழாதவர்? இரு சேனைகளிலும், இரு வீரர்களின் அம்புகளாலும் எய்யப் படாதவர் எந்த மன்னவர்கள்? நரனாகிய விசயனும், வெற்றி கூர் வசுவினது தோற்றமான வீடுமனும் பொருந்திச் செய்த போரைச் சொல்லப்புகின் நாக்கு நடுங்கும்,—என்பது பொருள். ஆல் : அசை.

வீடுமனும் விசயனும் செய்த ஏழாம் நாள் போர் சொற்கொண்டு சொல்லுதற்கு அரியது, என்பதாம்.

**8. வேறு போரினிப் பொருதல் வேண்டுமோ**
**விசயன் வீடும னென்னும் வீரர்தம்**
**சீறு போரிடைத் திசைய டங்கலும்**
**சிவந்த கோலமெய்க் கவந்த மாடுமால்**
**கூறு போர்பொரக் கருதி வெங்களங்**
**கொண்டு தங்களிற் கொல்ல லுற்றநாள்**
**ஆறு போரினும் பட்ட பேரினும்**
**அறும டங்குபே ரன்று பட்டதே.**

[வேறு போர் இனி பொருதல் வேண்டுமோ! விசயன் வீடுமன் என்னும் வீரர்தம் சீறு போரிடை திசை அடங்கலும் சிவந்த கோலம் மெய் கவந்தம் ஆடும், ஆல்; கூறு போர் பொர கருதி வெம் களம் கொண்டு தங்களில் கொல்லல் உற்ற நாள் ஆறு போரினும் பட்ட பேரினும் அறு மடங்கு பேர் அன்று பட்டது, ஏ.]

**விளக்கம்:-** இனிமேல் வேறு போரும் (இன்று) புரிய வேண்டுமோ! விசயனும் வீடுமனும் சீறிச் செய்த போரினால் திசைகள் எங்கும் குருதியால் செந்நிறமுற்ற மெய்யை உடைய கவந்தங்கள் ஆடும்; போர் செய்யக் கருதி வெங்களம் அடைந்து தங்களில் ஒருவரை ஒருவர் கொல்லத் தொடங்கிய (ஆறு நாள்) போரிலும் இறந்துபட்ட பேர்களினும் ஆறு மடங்கான தொகையினர், அன்று (ஏழாம் நாள் போரில்) இறந்தனர்,—என்பது பொருள்.

சூர்யாத்தமனம்

**9. பார வாளினுங் கூர வேலினும்**
**பகழி வாயினும் பட்ட பட்டபேர்**
**வீரர் வானின்மேல் வழிந டத்தலான்**
**மெய்த ளர்ந்துவே தனைமி குந்தபின்**

**சேர நீருநும் பாடி யெய்துவீர்**
**செருவி னொந்ததிச் சேனை யென்றுபோய்**
**ஆர வாரநீ டாழி யெய்தினன்**
**ஆழி யொன்றுடைத் தேர ருக்கனே.**

[பார வாளினும் கூர வேலினும் பகழி வாயினும் பட்ட பட்ட போர் வீரர், வானின் மேல் வழி நடத்தலால் மெய் தளர்ந்து வேதனை மிகுந்த பின், ''சேரநீரு நும் பாடி எய்துவீர், செருவின் நொந்தது இ சேனை,'' என்று, போய், ஆரவாரம் நீடு ஆழி எய்தினன் ஆழி ஒன்று உடைதேர் அருக்கன், ஏ.]

**விளக்கம்**:- பெரிய வாள்களாலும், கூரிய வேல்களினாலும், அம்புகளின் முனைகளாலும் மிகுதியாக இறந்த போர் வீரர்கள், வானத்திலே உள்ள வீரசுவர்க்கத்திற்கு, (சூரிய மன்டலத்தின்) வழியாகச் செல்லுவதால், சக்கரம் ஒன்று உடைய தேரையுடைய வனன சூரியன், மெய்த்தளர்ச்சியுற்று மிகுந்த வேதனையை அடைந்தபின், (இருதிறத்து வீரர்களையும் நோக்கி) ''நீங்களும் ஒன்று சேர்ந்து உங்களது படைவீடு செல்லுங்கள்; உங்களது சேனையும் போரில் வருத்தம் உற்றது,'' என்று (சொல்பவன் போல்) மேலைக் கடலை நோக்கிச் சென்று, ஆரவாரம் மிகுந்த கடலை அடைந்தான், அதாவது அஸ்தமித்தான், என்பது பொருள் இது, தற்குறிப்பேற்றம். நீரும், என்பது, நானும் செல்வேன், என்ற பொருள் உணர்த்தும் **எச்ச உம்மை.**

சூர்யோதயம்

**10. வெங்க ளந்தனிற் பகன்ம லைந்தபோர்**
**மெய்வி டாய்கெடக் கைவி டாதுபோய்த்**
**திங்க ளின்குலத் திருவர் தம்பெருஞ்**
**சேனை மன்னரும் பாடி யெய்தினர்**
**இங்க ளந்தவா றப்பு றத்துவான்**
**எல்லை தானளந் திந்த மன்னவர்**
**தங்கள் வெஞ்சமங் காண மாமணிச்**
**சயில மெய்தினன் தபனன் மீளவே.**

[வெம் களந்தனில் பகல் மலைந்த போர் மெய் விடாய் கெட, கைவிடாது போய் திங்களின் குலத்து இருவர் தம் பெருஞ்சேனை மன்னரும் பாடி எய்தினர்; இங்கு அளந்த ஆறு அ புறத்துவான் எல்லை தான் அளந்து, இந்த மன்னவர் தங்கள் வெம் சமம் காண மாமணி சயிலம் எய்தினன் தபனன் மீள, ஏ.]

**விளக்கம்**:- சந்திர குலம் வந்த இருதிறத்து மன்னர்களும், கொடிய போர்க்களத்தில் பகலில் செய்த போரினல் ஆய உடல்

களைப்புத் தீர, எல்லோரும் தொடர்ந்து சென்று பாசறை சேர்ந்தனர், என்பது முதலிரண்டடிகளின் பொருள். தபனன் (சூரியன்) இந்த பூமியிடத்தைப் பகலில், (தான் செல்லுதலால்) அளந்தது போல், அப்புறத்தான (ஆகாயத்தை இரவில் அளந்து, மீள (மறுபடியும்) இம்மன்னர்களின் கொடிய போரைக் காண, சிறந்த அழகிய உதயகிரியை அடைந்தான், — என்பது ஈற்றடிகளின் பொருள்.

பகலிலே பூமியை அளந்தது போல், இரவில் வானை அளந்து, குருகுலத்தவரின் போரைக் காணச் சூரியன், உதித்தான், என்றவருணனை, தற்குறிப் பேற்றம், சயிலம், இங்கே உதயகிரி. சூரியன் தினந்தோறும் மேருமலையைச் சுற்றி வருகின்ருன் என்றும் அம்மலையின் தென் திசையைச் சுற்றும் பொழுது நமக்குப் பகலும், வடதிசையைச் சுற்றும் பொழுது நமக்கு இரவும் ஏற்படுகின்றன, என்பர்.

**ஏழாம் போர்ச் சருக்கம் முற்றும்.**

# எட்டாம் போர்ச் சருக்கம்

**கடவுள் வாழ்த்து**

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. பூத்த நாபியந் தாமரைப்**
**பூவில் வந்துபல் பூதமும்**
**சேர்த்த நான்முகப் புனிதனும்**
**முனிவர் யாவருந்.தேவரும்**
**ஏத்த நாலுவே தங்களுந்**
**தேட நின்றதா ளெம்பிரான்**
**பார்த்தன் மாமணித் தேர்விடும்**
**பாக ஞனதெப் பான்மையே.**

[பூத்த நாபி அம் தாமரை பூவில் வந்து பல் பூதமும் சேர்த்த நான்முகம் புனிதனும் முனிவர் யாவரும் தேவரும் ஏத்த நாலு வேதங்களும் தேட நின்ற தாள் எம்பிரான், பார்த்தன் மாமணி தேர் விடும் பாகன் ஆனது எ பான்மையே.]

**விளக்கம்:-** நாபியாகிய அழகிய தாமரைப் பூவில் வந்து தோன்றி (அதாவது பிறந்து), பலவகைப் பட்ட உயிர் வர்க்கங்களையும் படைத்த நான்கு முகங்களை உடைய புனிதனை பிரும்ம தேவனும், முனிவர் அனைவரும், தேவர்களும் துதிக்கவும், நான்கு வேதங்களும் தேடிக் கொண்டிருக்கவும் நின்ற திருவடிகளை

உடைய எம்பிரானுன திருமால், பார்த்தனது பெரிய அழகிய தேரை நடத்தும் சாரதியானது, என்ன தன்மையதோ! அறிகிலம்,—என்பது பொருள்.

பிரும்மாதி தேவர்களும், முனிவர்களும், வேதங்களும் தேடிக் காணுத் திருவடிகளையுடைய பிரான்,மனிதரில் ஒருவனுன பார்த்தனுக்குத் தேர் நடத்த மனங்கொண்ட சௌலப்பியம், வியக்கத் தக்கது என்று கூறிப் புலவர் நம்மனோரை அவனுக்கு ஆட்படுத்தும் கருத்தது செய்யுள்.

இருதிறத்தாரும் களம் வரல்

**2. நெருந லிப்பெருஞ் சேனையோ**
**நிலைத ளர்ந்ததச் சேனையைப்**
**பொருநி லத்தினிற் புறமிடப்**
**பொருது மென்றுறக் கருதியே**
**வருநி லத்தெழுந் தூளியால்**
**வான யாறுநீர் வற்றவும்**
**தருநி லத்துளோர் காணவுந்**
**தருமன் வந்தனன் சமரிலே.**

[நெருநல் இ பெருஞ் சேனையோ நிலை தளர்ந்தது; அ சேனையை பொரு நிலத்தினில் புறம் இட பொருதும் என்று உற கருதியே, வரு நிலத்து எழுந்தூளியால் வானம் யாறு நீர் வற்றவும், தரு நிலத்து உளோர் காணவும் தருமன் வந்தனன் சமரில், ஏ.]

**விளக்கம்:-** நெருநல் - நேற்றைய தினம். இ சேனை - பாண்டவர் சேனை. அ சேனை–கௌரவ சேனை. நேற்று இச்சேனை வலிமை நிலைகெடத் தளர்ந்தது; கௌரவ சேனையை யுத்த பூமியில் புறமிட்டு ஓடுமாறு இன்று போர் செய்வோம், என்று உற எண்ணி, அதாவது மனவுறுதி கொண்டு தருமன் (படையோடு) வருகின்ற நிலத்து எழுந்த புழுதிகளால் ஆகாச கங்கை வறளவும் (கற்பக) தருநிலத்தில் உள்ளாரான தேவர்கள் வானிடத்தே நின்று போர் காணவும், போர் செய்யக் களம், வந்தான், —என்பது பொருள்.

சேனையால் மேல் நோக்கிக் கிளம்பின புழுதியின் மிகுதியையும், அதற்குக் காரணமான சேனையின் மிகுதியையும் கூறும் மூன்ருவது அடி உயர்வு நவிற்சியின்பாற் படும்.

**3. வென்று போனபோர் மேன்மையால்**
**விலோத னப்பணிக் காவலன்**
**இன்றும் வேறுமென்·றக்களத்**
**தெண்ணில் சேனையோ டெய்தினன்**

துன்று கங்கையின் றிருமகன்
தூசி யூகமுந் துளபமால்
வென்றி கூர்பெருஞ் சகடமாம்
வெய்ய யூகமுஞ் செய்யவே.

[வென்று போன போர் மேன்மையால் விலோதனம் பணி காவலன் இன்றும் வேறும் என்று அ களத்து எண் இல் சேனை யோடு எய்தினன்; துன்று கங்கையின் திருமகன் தூசி யூகமும், துளபம் மால் வென்றி கூர் பெருஞ் சகடம் ஆம் வெய்ய யூகமும் செய்ய, ஏ,—தொடரும்.]

**விளக்கம்:-** விலோதனம் - கொடி. விலோதனம் பணி காவலன் - கொடியிலே பாம்பைக் கொண்ட துரியோதனன். சென்ற நாள் போர் வென்று போன மேன்மையால் 'இன்றும் வெல்வோம்,' என்று, அக்களத்தின்கண் அளவில்லாத பெரிய சேனையோடு வந்து சேர்ந்தான்; நீரின் மிகுதியையுடைய கங்கை யின் மைந்தனன வீடுமன் தன் சேனையைத் **தூசி** வியூகமாக அமைக்கக் கண்ணன் பாண்டவ சேனையைச் சகட வீயூகமாக அமைக்கவும்,—(தொடரும்) என்பது பொருள்.

தூசி - குதிரை. சகடம் - வண்டி. வீடுமன் அச்வவியூகமும், கண்ணன் சகட வியூகமுமாகத் தம் சேனையை அணிவகுத்தனர். என்பதாம்.

கழிந்த ஆறு நாள் போரிலும் தோற்ருேடிய துரியோதனன், சமமாய் நிகழ்ந்த ஏழாம் நாள் போரை வெற்றியாகக் கொண்ட படி. மற்று தருமனே, இச்சமப் போரைத் தானுற்ற தோல்வியாகக் கருதினன், என்பதை முன் செய்யுளில் காண்க.

4. தொலைவி லங்கழற் றுணைவரே
துணைவ ராகவெஞ் சூறைபோல்
கொலைவி லங்கையன் பிறைமுகக்
கூர வாளியன் றேரினன்
மலைவி லங்குதோள் வீமனை
வளைத்து வந்தெதிர் திளைத்தனன்
தலைவி லங்கலுக் கரசெனத்
தகும்வ லம்புரித் தாரினன்.

[தொலைவு இல் அம் கழல் துணைவரே துணை வர, கொலை வில் அம் கையன், பிறை முகம் கூர வாளியன், தேரினன், மலை விலங்கு தோள் வீமனை வளைத்து வந்து எதிர் திளைத்தனன், தலை விலங்கலுக்கு அரசு என தகும் வலம்புரி தாரினன்.]

**விளக்கம்:-** தலை விலங்கலுக்கு ........தாரினன், கொலை வில் அம் கையன், பிறைமுகம் கூர வாளியன், தேரினன், தொலைவு இல் அம் கழல் துணைவரே துணைவர் ஆக, வெம் சூறைபோல் மலை விலங்கு தோள் வீமனை வளைத்து வந்து எதிர் திளைத்தான்,— என்பது அன்வயம்.

தலை விலங்கலுக்கு அரசு - மலைகளின் அரசான இமயமலைக்குத் தலைவன். வலம் புரிதார் - நஞ்சாவட்டைப் பூமாலை. தொலைவு இம் அம் கழல் துணைவர் - போரில் வலி தொலைதல் என்பது இல்லாத அழகிய கழல் அணிந்த தம்பியர். மலை விலங்குதோள் வீமன் - மலை யும் எதிராக மாட்டாமல் விலங்கும்படியான வலிய தோள்களை உடைய வீமன், திளைத்தான் – நெருங்கி வந்தான்.

எட்டாவது நாள் போரில், முந்திய நாள் வெற்றி கொண்ட தாக மதித்துக் கொண்ட துரியோதனன், தம்பியர் துணையாக சூறைபோல் வீமனைச் சூழ்ந்து கொண்டு, அவன் எதிர் பொர வந்தான், என்பதாம். சூறை - சுழலும் பெருங் காற்று.

இமயத்தின் தென்புறத்ததான பரதக் கண்டம் முழுவதையும் ஆண்டானுதல் பற்றி துரியோதனனைத் ''தலை விலங்கலுக்கு அரசு,'' என்றார்.

தம்பியர் எண்மர் மாள்தல்,

**5. தும்பி மேன்மதத் திடைவிழும்**
**தும்பி போல்விறற் றோன்றலும்**
**தம்பி மாருமுற் றெய்தவெஞ்**
**சாய கங்கண்மெய் தைக்கவே**
**வெம்பி வீமனுந் தன்சரம்**
**விண்ட லத்திலிவ் வேந்தனுக்(கு)**
**எம்பி மாரிலின் றெண்மர்போய்**
**இடம் பிடிக்கவென் றேவினன்.**

[தும்பிமேல் மதத்திடை விழும் தும்பி போல் விறல் தோன்றலும் தம்பிமாரும் உற்று எய்த வெம் சாயகங்கள் மெய் தைக்கவே, வெம்பி வீமனும் தன் சரம், ''விண் தலத்தில் வேந்தனுக்கு எம்பிமாரில் எண்மர் போய் இடம் பிடிக்க,'' என்று ஏவினன்.

**விளக்கம்:-** தும்பி - யானை, வண்டு. யானையினிடத்தே உள்ள மதநீரில் வந்துவிழும் வண்டுகள் போல், வலிமையுடைய துரியோதனனும் தம்பிமாரும் (வீமனை) நெருங்கிப் பிரயோகித்த சரங்கள் தைக்கவும், வீமனும் பெருங்கோபங் கொண்டு, ''தம்பிமாரில் எண்மர் இன்று வானுலகம் போய் (இனி வர

விருக்கும்) துரியோதனனுக்கு அங்கு இடம் பிடித்து வைப்பார்களாக,'' என்று கூறித் தனது சரங்களை அவர்கள்மேல் ஏவினன்,- என்பது பொருள்.

மதயானை, வீமன். யானையின் மதஜலத்தில் விழும் வண்டுகள், துரியோதனுதியர். துரியோதனன் தம்பியர், வீமனுக்குந் தம்பியர் ஆதல் பற்றி, எம்பியர், எனப்பட்டது.

**6. முந்த வன்றுசென் றுசுகன்**
**மைந்த ஞசுக மூழ்கவே**
**சுந்த ரன்விசா லக்கணன்**
**வீர வாசிபௌ துண்டனும்**
**அந்த மாமகோ தரனுடன்**
**மாக விந்துவு மபயனும்**
**சிந்தி ஞர்களந் தன்னிலா**
**தித்த கேதுவுஞ் சேரவே.**

[முந்த அன்று சென்று ஆசுகன் மைந்தன் ஆசுகம் மூழ்கவே, சுந்தரன், விசாலக் கண்ணன், வீரவாசி, பௌதுண்டனும், அந்த மா மகோதரனுடன் மாகவிந்துவும், அபயனும் சிந்தினர் களந்தன்னில் ஆதித்த கேதுவும் சேரவே.]

**விளக்கம்:-** ஆசுகன் மைந்தன் - வாயு குமாரனுன வீமன். ஆசுகம் - அம்பு. அன்று முந்த (விரைவாக) சென்று வீமனது அம்புகள் தைக்கவே, சுந்தரன் முதலிய தம்பியர் எண்மர் களத்தில் மாண்டனர், என்பதாம்.

சுந்தரன், விசாலக் கண்ணன், வீரவாசி, பௌதுண்டன், மகோதரன், மாகவிந்து, அபயன், ஆதித்தகேது, ஆயவர் எண்மரான தம்பியர்.

**7. அற்ற கந்தர முயிரினே**
**டந்த ரம்புகத் துள்ளவும்**
**இற்ற பேருடம் பவனிமே**
**லெடுத்த வில்லுடன் வீழவும்**
**உற்ற தம்பியர் மாய்தல்கண்**
**டுள்ளு டைந்துபோ யுரனுடைக்**
**கொற்ற வன்பெருங் குருகுலக்**
**குரிசி னின்றுழிக் குறுகினன்.**

[அற்ற கந்தரம் உயிரினேடு அந்தரம் புக, துள்ளவும், இற்ற பேர் உடம்பு அவனிமேல் எடுத்த வில்லுடன் வீழவும், உற்ற தம்பியர் மாய்தல் கண்டு உள் உடைந்து போய் உரனுடை கொற்றவன் பெருங் குருகுலம் குரிசில் நின்ற உழி குறுகினன்.]

**விளக்கம்:-** கந்தரம் - கழுத்து. அறுபட்ட கழுத்து (தலை) உயிரினோடு ஆகாயம் செல்லத் துள்ளவும், தலை இற்றுப் போன பெரிய உடல் பூமியில் கையில் பற்றிய வில்லுடனே விழவும், மனமொத்த தம்பியர் மாய்தல் கண்டு வலிமையுடைய அரசனான துரியோதனன், உள்ளம் உடைந்து குருகுலத்தின் பெரிய தலைவனான வீடுமன் நின்ற இடம் சென்றான், என்பது பொருள்.

தலையைத் தாங்குவது கந்தரம்; அது இலக்கணையாய்த் தலையைக் குறித்து நின்றது.

## துரியோதனன் வருந்தல்

**8. தன்பி தாமகன் செய்யதா**
**டனது மௌலிமேல் வைத்துநின்று**
**உன்பி தாவின்மே லன்பினால்**
**உலக மும்பியர்க் குதவுவாய்**
**என்பி தாவுநீ யாயுநீ**
**யென்றி ருந்தன னெம்பிமார்**
**முன்பி தாமருத் தென்னுமம்**
**முதல்வ னான்முடி வெய்தினர்.**

[தன் பிதாமகன் செய்ய தாள் தனது மௌலிமேல் வைத்து நின்று, உன் பிதாவின்மேல் அன்பினால் உலகமும் உம்பியர்க்கு உதவுவாய்! என்பிதாவும்நீ, யாயும்நீ, என்று இருந்தனன்; எம்பிமார், முன் பிதா மருத்து என்னும் அ முதல்வனால் முடிவு எய்தினர்.]

**விளக்கம்:-** துரியோதனன் தனது பெரிய பாட்டனாரான வீடுமன் தாள் வணங்கி, அவன் அயல் நின்று, ''உன் பிதாவின் மேல் அன்பினால், உனக்குரிய அரசை உன் தம்பியர்க்கு அளித்த பெரியோய்! என் பிதாவும் நீ, தாயும் நீ, என்று இருந்தேன். அவ்வாறாக, என் தம்பியர், முன்னே (இவனைப்) பெற்ற தந்தை வாயுதேவன், என்று கூறப்படும் அந்தப் பெரியவனால் உயிர் நீங்கப் பெற்றார்,'' என்று கூறினான், என்பது பொருள்.

வீடுமனது பிதா, சந்தனு. தம்பியர், சித்ராங்கதன், விசித்திரவீரியன். ''தம்பியர்பால் அன்புடைய நீ, அவர்களில் ஒருவனது பௌத்திரனான என்னை இரட்சிக்க வேண்டாவோ! உன் தம்பியர் உனக்கு அருமையாயது போல், என் தம்பியர் எனக்கு அருமைக்குரியர் ஆகாரோ; என்னை நீ இப்படி உபேக்ஷிக்கலாமோ!'' என்று துரியோதனன் கூறும் கருத்து இது.

**9. நீவி ளைத்தலைச் சேனையின்**
**தலைவ ளுகிமுன் நிற்கவே**
**வீவெ னக்குவே றில்லையென்**
**றெண்ணி னேனென வேந்தர்வேந்(து)**
**ஓவி யத்தின்மெய் யுணர்வழிந்**
**துள்ள ழிந்துகொண் டுரைசெய்தான்**
**வாவி நித்தில மென்னவே**
**மலர்ந்த கண்கணீர் வடிக்கவே.**

[நீ வினைத்தலை சேனையின் தலைவன் ஆகி முன் நிற்கவே, வீவு எனக்கு வேறு இல்லை என்று எண்ணினேன், என வேந்தர் வேந்து, ஓவியத்தின் மெய் உணர்வு அழிந்து, உள் அழிந்து, கொண்டு உரை செய்தான், வாவி நித்திலம் என்னவே மலர்ந்த கண்கள் நீர் மல்கவே.]

**விளக்கம்:-** வினைத்தலை - போர் செய்தலாகிய தொழிலில். வீவு - அழிவு. வேந்தர்வேந்து - துரியோதனன். கொண்டு; அசை. வாவி நித்திலம் - குளத்திலுள்ள முத்துப் போன்ற தெளிந்த நீர். வாவி நித்திலம் போல், கண்களில் நீர் நிறைந்து வழிய, என்பது ஈற்றடியின் பொருள். எய்திய தோல்வியால், துரியோதனன் உணர்வு அழிந்து, மனம் வருந்தி கண்களில் நீர் பெருக, வீடுமனை நோக்கி, நீ சேனைத் தலைவனுய் இருக்கையில் எனக்கு நன்மைக்கு வேருனதாய அழிவு ஒன்று ஏற்படாது, என்று எண்ணினேன்; இப்பொழுது தோல்வியும் துயரமும் எய்தினேன்,'' என்று கூறிப் புலம்பினுன், என்பதாம்.

வேறு

வீடுமன் கூற்று

**10. இரங்கனீ சிறிது மைய வெறிபடை யெடுப்ப தியாரும்**
**உரங்கள்போ யமரிற் சாகா துய்ந்தன ரோட 'வன்றே**
**சரங்களா லயிலால் வாளாற் றம்பகை செகுத்துத் தாமும்**
**சிரங்கள்வே றுடல்கள் வேருக் கிடப்பதே செல்வ மம்மா.**

[இரங்கல் நீ சிறிதும் ஐய, எறிபடை எடுப்பது யாரும், உரங்கள் போய் அமரில் சாகாது உய்ந்தனர் ஓட அன்றே; சரங்களால் அயிலால் வாளால் தம் பகை செகுத்து தாமும் சிரங்கள் வேறு, உடல்கள் வேறு ஆக கிடப்பதே செல்வம், அம்மா.]

**விளக்கம்:-** ஐயனே, நீ சிறிதும் வருந்தாதே. (உலகில் வீரரானேர்) எவரும் எறிபடை (ஆயுதம்) எடுப்பது, போரில் வலி அழிந்து சாகாமல் தப்பிப் பிழைத்து ஓடுதற்கு அன்று; சரங்

களாலும், வேல்களாலும், வாள்களாலும் (முடிந்த அளவு) பகைவரை அழித்து, (முடியாதவிடத்துப் பகைவரால் கொல்லப் பெற்று) தாமும் தலே வேறு உடல் வேறு ஆக விழுந்து அழிவதே செல்வம் ஆகும்,-என்பது பொருள். அம்மா: வியப்பிடைச் சொல். வீரனுயிருந்தும் இதை அறியாமல் துரியோதனன் வருந்து கின்ருனே, என்று வீடுமன், வியந்தபடி.

போரில் வெற்றியும் தோல்வியும் நம் கையது அன்று; பகை வெல்லுதல் போர், பின்னிடாது அழிதலும் வீரற்குச் சிறப்பே செய்யும், என்று கூறும் கருத்தது செய்யுள்.

**11. இருந்தனம் படைத்த மாக்க ளின்பமு மறனு மஞ்சார்**
**விருந்தெதிர் சிறிது மஞ்சார் மேம்பட வாழு மில்லோர்**
**பொருந்திய விறப்பை யஞ்சார் போதமெய் யுணர்ந்த மாந்தர்**
**அருந்தவ முனிவ ரஞ்சா ரரசரு மடுபோ ரஞ்சார்.**

[இருந்தனம் படைத்த மாக்கள் இன்பமும் அறனும் அஞ்சார்; விருந்து எதிர் சிறிதும் அஞ்சார், மேம்பட வாழும் இல்லோர்; பொருந்திய இறப்பை அஞ்சார் போதம் மெய் உணர்ந்த மாந்தர்; அருதவம் முனிவர் அஞ்சார்; அரசரும் அடு போர் அஞ்சார்.]

**விளக்கம்:-** பெரிய தனத்தைப் பெற்றவர் இன்பம் நுகர்தற்கும், தருமம் செய்வதற்கும் அஞ்சார், அதாவது பின்னிடார்; மேன்மையுடன் இல்லறம் அமர்ந்தோர் விருந்தினரை எதிர் சென்று வரவேற்க அஞ்சார்; போதம் - ஞானம். முற்றிய அறிவினுல் தத்துவப் பொருள்களே அறிந்தார் சாவை அஞ்சார்; முனிவர் அரியதவம் செய்தற்கு அஞ்சார்; அரசரும் அழிவுக்கு இடமான போரை அஞ்சார், - என்பது பொருள். நிலேயுடையதும் நிலேயற்றதுமான பொருள்களின் தன்மையை ஐயம் திரிபு அற உணர்தல் தத்துவ அறிவு. சாதலின் நிச்சயம் பற்றி, பொருந்திய இறப்பு, எனப்பட்டது. அஞ்சார், என்பது ஒரே பொருளில் பலமுறை வந்திருப்பதால், **சொல் பொருள் பின்வருநிலே அணி.**

**12. இன்னமொன் றுரைப்பக் கேண்மோ விருசெவிக் கேரு தேனும்**
**முன்னர சாண்ட வேந்தர் முறைமையிற் சிதைந்த துண்டோ**
**மன்னவை தன்னி னின்ற மாசிலா வடமீன் போல்வாள்**
**தன்னிரு கண்ணீ ரின்ன மிவைகொலோ தருவதம்மா.**

[இன்னம் ஒன்று உரைப்ப கேண்மோ இரு செவிக்கு ஏருதேனும்; முன் அரசு ஆண்ட வேந்தர் முறைமையில் சிதைந்தது உண்டோ? மன் அவை தன்னில் நின்ற மாசு இலா வடமீன் போல்வாள் தன் இரு கண் நீர் இன்னம் இவை கொலோ தருவது? அம்மா.]

**விளக்கம்:-** உன் செவி சேராவேனும் இன்னும் ஒன்று நான் சொல்லக் கேள். இக்குலத்தில் இதற்கு முன் அரசாண்ட அரசர்கள் நீதிமுறை கடந்ததுண்டோ? மன்னவையில் நின்ற அருந்ததி போன்ற திரௌபதியின் கண்ணீர், தருவது இவை தாமோ? இன்னம் என்ன விளைவைத் தருமோ, - என்பது பொருள். இன்னும் பல தீங்குகளைத் தந்து உன்னையும் அழிக்கும்,- என்பது குறிப்பு.

**13. கால்வரு கவன மான்றேர்க் கன்னனுங் கன்னபாக**
**மால்வரு கலுழி வேக மாவலான் சகுனி தானும்**
**நூல்வரு பழுதில் கேள்வி நும்பியு நீயு மிந்த**
**நால்வருங் குறித்த வெண்ண நாளையே தெரியுமையா.**

[கால் வரு கவனம் மான் தேர் கன்னனும், கன்னம் பாகம் மால் வரு கலுழி வேகம் மா வலான் சகுனிதானும், நூல்வரு பழுது இல் கேள்வி நும்பியும் நீயும் இந்த நால்வரும் குறித்த எண்ணம் நாளையே தெரியும் ஐயா.]

**விளக்கம்:-** கால் வரு கவன மான் - காற்றைப்போல் செல்லும் நடையை உடைய குதிரை. கன்னபாகம் - கன்னத் தினிடத்தே. மால் வரு கலுழி வேகம் மா - மிகுதியாக வழிகின்ற கலங்கிய மதநீரை உடைய நடை வேகத்தைக் கொண்ட யானை. யானை செலுத்துதலில் வல்லவன் சகுனி. நூல்வரு பழுது இல் கேள்வி நும்பி - நூல்கள் கூறும் பழுது அற்ற கேள்வியை உடைய உன் தம்பியாகிய துச்சாதனன். கர்ணன் சகுனி துச்சாதனன் நீயுமாகிய நால்வரும் எண்ணிய தீய எண்ணத்தின் பயன், நாளையே, அதாவது மிகவிரைவில் தெரிய வரும், என்று வீடுமன் கூறினன், என்பதாம்.

சாத்திரங்களிலுள்ள நீதிகளைப் பெரியோர் சொல்லக் கேட்டும், தர்மவழி பற்றாத தீயகுணமுடையவன் என்று குறிக்கும் கருத்தது, ''நூல் வரு பழுதில் கேள்வி நும்பியும், நீயும்'', என்றது. நால்வர், என்ற படர்க்கை, இடவழு. தர்மம் கடந்த துர்க்குண சாலிகளாகிய நீங்கள் வெகு சீக்கிரம் அழிவீர்கள், என்று வீடுமன் கூறும் கருத்தது செய்யுள்.

**14. விதுரனும் வெஞ்சொ லாற்றுன் வில்லினை யொடித்து நின்றுன்**
**அதிரத ஞறு லன்றி யங்கர்கோ னமரில் வாரான்**
**முதிர்படை விசயன் வீமன் மூண்டமர் புரியுங் காலை**
**எதிரினி நானு நீயு மல்லதிங் இலக்கு வேறுர்.**

[விதுரனும் வெம் சொல் ஆற்றுன் வில்லினை ஒடித்து நின்றுன்; அதிரதன் ஆனுல் அன்றி அங்கர்கோன் அமரில் வாரான்; முதிர்

படை விசயன் வீமன் மூண்டு அமர் புரியும் காலை எதிர் இனி நானும் நீயும் அல்லது இங்கு இலக்கு வேறு ஆர்.]

**விளக்கம்:-** விதுரனும் உன் கடுஞ் சொல்லைப் பொறுனாய் வில்லை ஒடித்து விட்டு நின்றான்; உபயோகம் இல்லாதவனாய்ப் போனான். தன்னை அதிரதனாகக் கொள்ளாத வரையும் கர்ணன் போரில் தலையிட மாட்டான். நன்கு பயின்ற ஆயுதங்களைக் கொண்ட விசயனும் வீமனும் வெகுண்டு போர் செய்யுங்கால், அவர்களை எதிர் நின்று எதிர்க்க வல்லவர்கள், நானும் நீயும் அல்லாமல், இங்கே (அவர்களது எதிர்ப்புக்கு எதிர்) இலக்காய் நின்று போர் ஏற்பவர் யார் இருக்கின்றனர்? ஒருவரும் இல்லை, - என்பது பொருள்.

**15. புரிந்தறம் வளர்க்கு நீதிப் பொய்யிலா மெய்ய னங்கே**
**செருந்தவிழ் துளப மாலைத் திருநெடு மாலு மங்கே**
**அருந்திறல் லமரிற் பொன்ரு தங்கிருந் தவரை யிங்கும்**
**இருந்தவர் காண்ப தல்லால் யார்கொலோ விறக்க லாதார்.**

[புரிந்து அறம் வளர்க்கும் நீதி பொய் இலா மெய்யன் அங்கே; செருந்து அவிழ் துளபம் மாலை திரு நெடுமாலும் அங்கே; அருந்திறல் அமரில் பொன்ருது அங்கு இருந்தவரை இங்கும் இருந் தவர் காண்பது அல்லால் யார்கொலோ இறக்கலாதார்.

**விளக்கம்:-** (புரிந்து - விரும்பி). தர்மத்தை வளரச் செய்யும் நீதியையுடைய பொய்யிலா மெய்யனான யுதிட்டிரன் அங்கே உளான்; (செருந்து - தேன் வாசனை). தேன் மணக்கும் துளசி மாலை அணிந்த கண்ணபிரானும் அங்கே உளன்; அரிய வலிமை கொண்டு செய்யும் போரில் சாகாது அங்கு இருந்தவரைக் காண் பது அல்லாமல், இங்கு உள்ளவர்களுள் சாகமாட்டாதவர் யாவர் உளர்,—என்பது பொருள். அதாவது, அங்கே தருமனது சத்திய பலமும், கண்ணனது துணையும் இருப்பதால், இறவாதவர் பலர் இருக்கின்றனர்; இங்கே, அதர்மமும் தீச்செயல்களும் விதுரன் கர்ணன் ஆயவர்களின் உதவியும் இல்லாமையால், இன்னும் பலர் இறத்தல் நேரக் கூடும், என்று வீடுமன் கூறும் கருத்தது செய்யுள்.

இங்கும், என்பதிலுள்ள, உம்மை, இசைநிறை. பொய்யிலா மெய்யன், என்றது எந்த நிலையிலும் சத்தியத்தைப் பற்றி நிற்கும் தருமனது உறுதிப்பாட்டைக் குறிக்கும்.

**16. விடுகநீ கவல வேண்டா மேலுனக் குறுதி சொன்னேன்**
**முடுகவா ளமரிற் சென்று முனைமுனைந் தாரை யின்றே**
**அடுகமற் றென்றி லொன்றி லாங்கவர் தங்கள் கையால்**
**படுகவா வென்று தேர்மேற் சென்றனன் பரிதி போல்வான்.**
வி.பா. 3-10

[விடுக; நீ கவல வேண்டா, மேல் உனக்கு உறுதி சொன்னேன்; முடுக வாள் அமரில் சென்று முனை முனைந்தாரை இன்றே அடுக, மற்று, ஒன்றில் ஒன்று; ஆங்கு அவர் தங்கள் கையால் படுக, வா, என்று தேர்மேல் சென்றனன் பரிதி போல்வான்.]

**விளக்கம்:-** விடுக நீ துயரத்தை. இனி கவலை வேண்டா, (மேல் - இனி). உனக்கு நான் நன்மையை எடுத்துச் சொன்னேன். ஒன்றில் ஒன்று, அதாவது, நாம் அவர்களை அழிப்பது, அல்லது அவர்களால் அழிக்கப்படுவது. எனவே, வாள் அமரில் விரைவாகச் சென்று போர்முனையில் போர் செய்தவர்களை இப்பொழுதே கொல்வோம்; அல்லது அங்கே அவர்கள் கையால் இறப்போம், வா, என்று சூரியனைப் போல் விளங்கும் வீடுமன் கூறித் தன் தேர்மேல் சென்றான், என்பதாம். மற்று : வினை மாற்று.

**17. காயிருங் களிற்றின் மேலான் கடோற்கசக் காளை தானோர்**
**ஆயிரம் வடிவாய் முந்தி யரசர்பே ரணியை யெல்லாம்**
**தோயிருட் பிழம்போ டுற்ற சோனையம் புயலிற் றோன்றி**
**மாயிரு விசும்பிற் றாரா கணமென மாய்த்து வந்தான்.**

[காய் இரு களிற்றின் மேலான் கடோற்கசன் காளை தான் ஓர் ஆயிரம் வடிவாய் முந்தி, அரசர் பேர் அணியை எல்லாம் தோய் இருள் பிழம்போடு உற்ற சோனை அம் புயலின் தோன்றி மா இரு விசும்பில் தாராகணம் என மாய்த்து வந்தான்.]

**விளக்கம்:-** காய் இருங்களிறு - வெகுளுந் தன்மையுள்ள பெரிய ஆண் யானை. செறிந்த இருளின் திரட்சியோடு பொருந்திய பெரு மழை பொழியும் அழகிய மேகம் போல் தோன்றி, என்பது மூன்றாவது அடியின் பொருள். கடோற்கசன் காய் இருங் களிற்றின் மேல் ஏறிக்கொண்டு, செறிந்த இருளின் மிகுதியோடு பொருந்திய சோனை அம் புயலின் தோன்றி, ஓராயிரம் மாய வடிவங் கொண்டு, முன்னே வந்து, பெரிய வானவெளியில் உள்ள நட்சத்திரக் கூட்டம் போல் (மிகுதியாகக் களத்தில் நெருங்கியுள்ள) பகை அரசர்களின் படைகளை எல்லாம் அழித்து வரலானான்— என்பது பொருள். மாயிரு, (மா - இரு) என்பது ஒரு பொருட் பன்மொழி; மிகப் பெரிய என்பது பொருள். தாராகணம் - நட்சத்திரக் கூட்டம்.

கரிய யானைமேல் கொண்ட கடோற்கசனுக்கு, செறிந்த இருளோடு கூடிய காளமேகம், உவமை. மேகம் தாராகணங்களை மறையச் செய்வதுபோல், யானையின் வந்த காளை பகைப் படையை மறையச் செய்தான், அதாவது அழித்தான், என்பதாம்.

**18. ஒருபுடை யிவன்போர் செய்ய வொருபுடை யுரக கன்னி**
**அருளுடை மைந்த னெண்ணி லாயிர முருவ மாகி**
**இருபுடை யினும்போர் வேந்த ரெலிகள்போ லேங்கி யம்பால்**
**பொருபடை யுருண்டு போகப் பொருவில்வெம் பூசல்**
**செய்தான்.**

[ஒரு புடை இவன் போர் செய்ய, ஒரு புடை உரக கன்னி அருள் உடை மைந்தன் எண் இல் ஆயிரம் உருவம் ஆகி, இரு புடையினும் போர் வேந்தர் எலிகள் போல் ஏங்கி, அம்பால் பொரு படை உருண்டு போக, பொருவு இல் வெம் பூசல் செய்தான்.]

**விளக்கம்:-** ஒரு பக்கத்தில் கடோற்கசன் போர் செய்ய, மற்றோர் புறத்தில் உரக கன்னியாகிய உலூபி என்பாள் அளித்த இராவான் என்பவன் அளவில்லாத பல ஆயிரம் மாய வடிவங் கொண்டு, பகைவர் பக்கத்துப் போர்வேந்தர்கள், (பாம்பின் எதிர்பட்ட) எலிகள் போல் ஏங்கி, பொரு படைகளோடு இரு புறமும் சிதறி ஓடும்படி சரங்களால் தேரில்லாத கொடிய போரைச் செய்தான், என்பது பொருள். ஆயிரம், என்பது மிகப்பல, என்ற பொருளது. பாம்பின் முன் எலிகள் போல், நாக கன்னியின் மகனை இராவான்முன் போர் வேந்தர்கள் வலியழிந்து ஓடினர், என்க.

## 19. இராவானை அலம்புசன் அழித்தல்

**19. இப்பகன் முடியு முன்னே யாரையு முடிப்ப னென்னுப்**
**பைப்பகன் மகுட மைந்தன் பலபெரும் படையு மாகி**
**அப்பக லடுபோர் செய்ய வன்றம ரழிந்து மாய்ந்த**
**மெய்ப்பக னிளவ லந்த வீமன்மேல் வெகுண்டு வந்தான்.**

[இ பகல் முடியும் முன்னே யாரையும் முடிப்பன் என்ன, பை பகல் மகுடம் மைந்தன், பல பெரு படையும் ஆகி, அ பகல் அடு போர் செய்ய, அன்று அமர் அழிந்து மாய்ந்த மெய் பகன் இளவல் அந்த வீமன்மேல் வெகுண்டு வந்தான்.]

**விளக்கம்:-** பை பகல் மகுட மைந்தன்—படத்தையும் பிரகாசம் பொருந்திய கிரீடத்தையும் உடைய நாக கன்னியின் மைந்தனை அராவான். அவன், இப்பகல் முடிவு முன்னே பகைவர் அனைவரையும் முடிப்பேன் என்று சொல்லிக் கொண்டு, தானே மாயையால் பல சேனைகளாக வடிவங் கொண்டு, அந்நாள் அடு போர் செய்யவும், முன்னொரு காலத்தில் (வேத்திரகீயம் என்னும் நகரில்) போரில் வீமனால் கொல்லப்பட்டு அழிந்த தேகத்தை யுடைய பகாசுரனது தம்பியான அலம்புசன் என்பவன் வீமன் மேல் சினந்து பொர வந்தான், என்பது பொருள்.

பகாசுரன் வீமனால் வதைக்கப்பட்டதை வேத்திரகீயச் சருக்கத்தில் காண்க. தமயனைக் கொன்ற வீமன்மேல், அலம்புசன் பகையுடையவன். அவன் வீமனைக் கொல்வதற்கென்று துரியோதனனோடு சேர்ந்து கொண்டான், என்க.

**20. என்னுடன் பிறந்தோன் றன்னை யுதிட்டிர னிளவல் கொன்றான்**
**தன்னுடல் பிளப்பே னென்று தானைவல் லரக்க ரோடு**
**மன்னுடன் சொல்லி நிற்பான் வந்தெதிர் மலைந்த காலை**
**மின்னுடை முகில்போற் சென்றான் வீமனுக் கிளையோன்**
**மைந்தன்.**

[என்னுடன் பிறந்தோன் தன்னை யுதிட்டிரன் இளவல் கொன்றான் தன் உடல் பிளப்பேன் என்று, தானை வல் அரக்கரோடு மன்னுடன் சொல்லி நிற்பான், வந்து எதிர்மலைந்தகாலை, மின் உடை முகில் போல் சென்றான் வீமனுக்கு இளையோன் மைந்தன்.]

**விளக்கம்:-** என்னோடு பிறந்தவனை தருமனது தம்பியான வீமன் கொன்றான், அவன்தன் உடலைப் பிளப்பேன், என்று துரியோதனனுடன் சொல்லி, அவனுக்குத் துணை அமைந்து நிற்பவனாகிய அலம்புசன் படையாகத்திரண்ட வலிய அரக்கர்களோடு (வீமன்) எதிர்வந்து போர்செய்த காலை, விசயனது மகனான இராவான் மின்னலையுடைய மேகம்போல் அவன்முன் சென்றான், என்பது பொருள்.

மின்னுடை முகில், என்றது இராவானின் தேகத்தின் காந்தியை நோக்கி, என்க.

**21. வலம்புரித் தாம வேந்துக் காகவே மலைவான் வந்த**
**அலம்புச னோடுஞ் சென்றோ ரடங்கலு மரக்கர் மாயக்**
**குலம்பழு தற்ற மைந்தன் கொண்டபல் லுருவத் தோடும்**
**புலம்புறப் பொருதா னந்த வரக்கனும் புறந்தந் தானே.**

[வலம்புரி தாமம் வேந்துக்கு ஆகவே மலைவான் வந்த அலம்புசனோடும் சென்றோர் அடங்கலும் அரக்கர் மாய, குலம் பழுது அற்ற மைந்தன் கொண்ட பல் உருவத்தோடும், புலம்பு உற பொருதான், அந்த அரக்கனும் புறம் தந்தான், ஏ.]

**விளக்கம்:-** வலம்புரி தாமம் வேந்து - துரியோதனன். அரக்கர் அடங்கலும் - அரக்கர் அனைவரும். குலம் பழுது அற்ற மைந்தன் - தாய் தந்தையரது குலங்களில் குற்றமில்லாத சிறந்த இராவான். புலம்பு உற - தனிமை அடையும்படி. துரியோதனனுக்குத் துணை வந்த அலம்புசனோடு களம் வந்த எல்லா அரக்கர்களும் மாயும்படி இராவான் பலவடிவங் கொண்டு போர் செய்ய, அலம்புசன் துணை இழந்து தனிமையுற்று ஓடினான், என்பதாம்.

புலம்பு, என்பது தனிமைப் பொருளதான உரிச்சொல்; அல்லது ''புலம்புற - வருந்த'', என்றும் பொருள் கொள்ளலாம்.

## இராவான் அழிதல்

**22. அஞ்சினன் போன பின்ன ராவினை யடர்க்கு மாய**
**வெஞ்சினக் கலுழ ளுகி யுருமென மீள வந்தான்**
**நஞ்சினை யுமிழும் வெவ்வாய் நாகங்க ளனைத்து மொன்ரு**
**எஞ்சின போல நின்ரு னிருதருக் கிறுதி செய்தான்.**

[அஞ்சினன் போன பின்னர் அராவினை அடர்க்கும் மாயம் வெம்சினம் கலுழன் ஆகி, உரும் என மீள வந்தான்; நஞ்சினை உமிழும் வெம் வாய் நாகங்கள் அனைத்தும் ஒன்ருய் எஞ்சின போல நின்ருன் நிருதருக்கு இறுதி செய்தான்.]

**விளக்கம்:-** (அலம்புசன்) பயந்து ஓடின பின்பு, பாம்புகளைக் கொன்றழிக்கும் கொடிய கோபமுடைய கருடவேடங் கொண்டு மறுபடியும் இடியெனக் களம் வந்தான்; (அப்பொழுது) நிருத ருக்குப் போரில் அழிவைச் செய்த இராவான், (மாயக் கருடனைக் கண்டு) நஞ்சினை உமிழும் கொடிய வாயையுடைய நாகங்கள் எல் லாம் ஒன்றுபட்டு வலிஒடுங்கினபோல, (வலியடங்கி) நின்ருன், என்பது பொருள்.

பாம்பு வடிவங் கொண்டு போர் செய்த இராவானை அழிக்க, அலம்புசன் கருட வடிவங் கொண்டு பாம்புகளை அழிக்கவே, இரா வான், ஒன்றும் விளங்காமல் திகைத்து நின்ருன், என்பதாம். சுருடன், என்ற வடமொழிச் சொல்லின் திரிபு கலுழன்.

**23. நின்றவன் றன்னை யந்த நிருதனும் வடிவா ளோச்சிக்**
**கொன்றனன் கொன்ரு ளுகக் குருகுலத் தரசன் சேனை**
**வென்றன னரக்க னென்று விரிகடல் போல வார்த்த(து)**
**அன்றவ னடர்ந்த மாய மார்கொலோ வடர்க்க வல்லார்.**

[நின்றவன் தன்னை அந்த நிருதனும் வடிவாள் ஓச்சி கொன் றனன்; கொன்ருன் ஆக, குருகுலத்து அரசன்சேனை வென்றனன் அரக்கன் என்று விரிகடல் போல ஆர்த்தது; அன்று அவன் அடர்ந்த மாயம் ஆர்கொலோ அடர்க்க வல்லார்?]

**விளக்கம்:-** திகைத்து நின்ற இராவானை அலம்புசன் வடி வாள் ஓச்சிக் கொன்ருன்; கொல்லவும், அரக்கன் வென்ருன் என்று துரியோதனன் சேனையும் கடல்முழக்கம் போல் ஆரவாரம் செய்தன; அன்று அரக்கன் செய்த மாயப் போரை எதிர்த்து அழிக்கவல்லார் யார் உளர்?—என்பது பொருள். ஈற்றடி கவிக் கூற்று, அவனது மாயப் போரைப் புலவர் வியந்தபடி.

## கலித்துறை

**24. பூஞ்சா யகன்கைப் பொரு சாபம்பொ சிந்து கண்ணூல்**
**தீஞ்சா றுபாயுஞ் செழுநீர்வயற் செங்நெல் வேலிப்**
**பாஞ்சா லநாடர் பலரும்படப் பாணம் விட்டார்**
**தாஞ்சா பம்வாங்கி மறைமைந்தனுந் தந்தை தானும்.**

[பூஞ்சாயகன் கை பொருசாபம் பொசிந்து கண்ணூல் தீம் சாறு பாயும் செழு நீர் வயல் செந்நெல் வேலி பாஞ்சால நாடர் பலரும் பட பாணம் விட்டார், தாம் சாபம் வாங்கி மறைமைந்தனும் தந்தை தானும்.]

**விளக்கம் -** பூஞ்சாயகன் - மலரை அம்பாக உடைய மன்மதன். பொருசாபம் - போருதற்குரிய கரும்புவில். கண் - கணு. மன்மதன் கைவில்லான கரும்புகள் கணுக்களினிடமிருந்து இனிய சாறு ஊறிப் பாயும் மிகுந்த நீர் வளத்தையுடைய வயல்களையும், செந்நெல் பயிர்களை உடைய நிலங்களையும் தன்னிடத்தே கொண்ட பாஞ்சால நாட்டு வீரர் பலரும் வலியழிந்து பின்னிடும்படி வேதவித்தகனுன அசுவத்தாமனும், அவனது தந்தையாகிய துரோணனும் வில்லை வளைத்துப் பாணப் பிரயோகம் செய்தனர், என்பதாம். கண்ணூல், என்பது கண்ணிலிருந்து, அதாவது கணுக்களிலிருந்து என்று பொருள்படும்.

**25. பட்டான் றுணைவ னெனக்கேட்டுப் பரிவு பொங்க**
**விட்டான் மணித்தேர் வளைத்தான்றனி வெய்ய சாபம்**
**தொட்டான் பகழி யபிமன்னுதொ டுத்த லோடும்**
**கெட்டா ரரசன் பெருஞ்சேனையிற் கேடில் வேந்தர்.**

[பட்டான் துணைவன் என கேட்டு பரிவு பொங்க விட்டான் மணிதேர், வளைத்தான் தனி வெய்ய சாபம், தொட்டான் பகழி அபிமன்னு; தொடுத்தலோடும், கெட்டார் அரசன் பெருஞ்சேனையில் கேடு இல்வேந்தர்.]

**விளக்கம்:-** உடன் பிறந்த இராவான் இறந்தான் என்பது கேட்டு, அபிமன்னு துயரம் மிக, தேர் ஏறிக் களம் புகுந்து வில்லை வளைத்துச் சரங்களைச் செலுத்தினன்; அவ்வளவில், துரியோதனனது சேனையிலுள்ள, இது வரையில் பங்கப்படாத அரசர்கள் தோற்று ஓடினர்,—என்பதாம்.

கேடில் அரசர்- இதுவரை தோல்வியுருத அரசர். இராவானும் அருச்சுன குமாரனுதலால், அபிமன்னு அவனைத் துணைவன் என்றுன்.

மைந்தன் மாய்ந்தது கேட்டு வீமன் சீறி எழல்

26. மைந்தன் களத்தின் மடிந்தானென வாயு மைந்தன்
தந்தம் பறியுண் டெதிர்சீறிய தந்தி யென்ன
வெந்தங் கமுற்று மனத்தீயெழ மேன டந்தான்
சிந்தந் திகழ வெழுதுந்திறற் சிங்க மன்னுன்.

[மைந்தன் களத்தில் மடிந்தான் என வாயு மைந்தன், தந்தம் பறியுண்டு எதிர் சீறிய தந்தி என்ன, வெந்து அங்கம் முற்றும், மனம் தீ எழ மேல் நடந்தான், சிந்தம் திகழ எழுதும் திறல் சிங்கம் அன்னுன்.

**விளக்கம்:-** (தன்) கொடியில் விளங்கும்படி எழுதப் பெற்ற வலிய சிங்கத்தை ஒத்தவனுன வீமன், மகனுன இராவான் களத்தில் பட்டமை கேட்டு, தந்தங்கள் பறிக்கப் பெற்று, (பறித்தார்) எதிரில் சீறிச் செல்லும் யானைபோல், (மகன் இறந்த சோகத்தால்) தேகம் முழுவதும் வெந்து, மனத்தில் சினத்தீ எழப் பகைவர் மேல் சென்ருன்,—என்பது பொருள்.

விசயன் மைந்தனை, மைந்தன், என்றது பேதபாவம் இல்லாமையைக் குறிக்கும். தந்தி - யானை. அசையக் கூடியது என்ற பொருளுடைய **சிதம்** என்பது எதுகை நோக்கிச் **சிந்தம்**, என்று விகாரப்பட்டது. சிதம் - அசையும் தன்மையதான கொடி.

துரியோதனன் சீறி வரல்

27. சினத்தோ டுதம்மேல் வருகின்றனன் செம்ம லென்னு
இனத்தோ டுசெல்லும் பிறைவாளெயிற் றேன மென்ன
மனத்தோ டியைந்த திருத்தம்பிய ரோடு மன்னர்
சனத்தோ டும்வந்தா னெதிர்சீறித் தரணிவேந்தன்.

[சினத்தோடு தம் மேல் வருகின்றனன் செம்மல் என்னு, இனத்தோடு செல்லும் பிறை வாள் எயிற்று ஏனம் என்ன, மனத்தோடு இயைந்த திரு தம்பியரோடும் மன்னர் சனத்தோடும் வந்தான் எதிர் சீறி தரணி வேந்தன்.]

**விளக்கம்:-** சினத்தொடு செம்மல் (வீமன்) நம் மேல் வருகின்ருன், என்று தரணிவேந்தன் (துரியோதனன்) தன் மனத்தோடு ஒத்த தம்பியருடனும், தன்னைச் சேர்ந்த மன்னவர்களுடனும், இனத்தோடு சேர்ந்து செல்லும் பிறைச் சந்திரன் போன்ற ஒள்ளிய கோர தந்தங்களை உடைய ஏனம் (பன்றி) போல் (போர் செய்ய) வீமன் முன் சீறி வந்தான்,—என்பது பொருள்.

முன் செய்யுளில் வீமனை யானை என்றும் சிங்கம் என்றும் கூறிய புலவர், இங்கே துரியோதனனை, அவனது தாழ்மை தோன்ற ஏனம், என்ருர், என்க.

**28. திளைத்தா ரரசர் திகிரிக்கிரி யென்ன வோடி**
**வளைத்தார் கனக வரைபோல்வரு மன்னன் றன்னை**
**உளைத்தா ரனைவோர் களுமோரொரு பாணமேவித்**
**துளைத்தார் கிளைத்தார் விளைத்தாரமர் தூண்டு தேரார்.**

[திளைத்தார் அரசர் திகிரி கிரி என்ன ஓடி வளைத்தார் கனகம் வரைபோல் வரும் மன்னன் தன்னை, உளைத்தார் அனைவோர் களும், ஓர்ஒரு பாணம் ஏவி துளைத்தார், கிளைத்தார், விளைத்தார் அமர் தூண்டு தேரார்.]

**விளக்கம்:-** அரசர் அனைவோர்களும் தூண்டு தேரார் ஓடி திளைத்தார், கனகம் மால் வரைபோல் வரும் மன்னன் தன்னை திகிரிகிரி என்ன வளைத்தார், உளைத்தார்; ஓர் ஒரு பாணம் ஏவி துளைத்தார், கிளைத்தார் அமர் விளைத்தார்,—என்பது அன்வயம்.

(துரியோதனனைச் சேர்ந்த) மன்னர் அனைவரும் செலுத்தப் படுந்தேரினராய் விரைந்து சென்று நெருங்கினர்; (நெருங்கி) மகா மேருமலைபோல் களம் வந்த மன்னனாகிய வீமனை, உலகைச் சூழ்ந்துள்ள சக்ரவாள கிரி போல் வளைத்துக் கொண்டனர்; சூழ்ந்து கொண்டு வீரமுழக்கம் செய்தவர்களாய், ஒவ்வொருவரும் ஒரு பாணத்தைச் செலுத்தி (வீமனை) துளைத்து, ஊக்கம் கிளர்ந்த வர்களாய் போர் செய்தனர், - என்பது பொருள்.

திளைத்தல் - நெருங்குதல். உளைத்தல் - ஆரவாரம் செய்தல். கிளைத்தல் - ஊக்கம் மிகுதல். துரியோதனனுதியரும் அவர்களைச் சேர்ந்தாரும், வீமனை வளைத்துக் கொண்டு உக்ரமான போரைச் செய்தார்கள், என்பதாம்.

துரியோதனன் துணைவர் மடிதல்

**29. எடுத்தா னொருதன் சிலைவீமனு மெண்ணில் பாணம்**
**தொடுத்தா னவர்மே லிமைப்போதையிற் சூழ்ந்து ளோரைக்**
**கெடுத்தா னரசற் கிளையோரெதிர் கிட்டி மீண்டும்**
**படுத்தா னெழுவ ரிவன்வாளியிற் பட்டு வீழ்ந்தார்.**

[எடுத்தான் ஒரு தன் சிலை வீமனும் எண் இல் பாணம், தொடுத்தான் அவர்மேல் இமைப் போதையின், சூழ்ந்து உளோரை கெடுத்தான், அரசற்கு இளையோர் எதிர் கிட்டி. படுத்தான்; எழுவர் இவன் வாளியின் பட்டு வீழ்ந்தார்.]

**விளக்கம்:-** அப்பொழுது வீமன் தனது ஒப்பற்ற வில்லை எடுத்து அளவற்ற பாணங்களைப் பிரயோகம் செய்து, இமைப் பொழுதில் தன்னைச் சூழ்ந்து கொண்டவரை நிலைகெட்டு ஓடச் செய்தான்; (பின்னர்) துரியோதனன் தம்பியரை நெருங்கி மீண்டும்

அவர்களை அழித்தான்; அவர்களில் எழுவர் இறந்தனர், என்பதாம். செய்யுள் சுலபமானதே. **போது**, என்பதின் ஈற்றுக் குற்றுகரம், ஐயாகத் திரிந்து **போதை** என நின்றது.

**30. அறமிக்க சொற்குண் டலபோசன ஞதி யக்கன்**
**திறமிக்க தீர்க்க நயனன்சிலைத் திம்ம வாகு**
**மறமிக்க வேற்குண் டலன்குண்டல தாரன் மன்னூல்**
**துறைமிக்க கேள்விக் கனகத்துச ஞன தோன்றல்.**

[அறம் மிக்க சொல் குண்டலபோசன், அனுதியக்கன், திறம் மிக்க தீர்க்கநயனன், சிலை திம்மவாகு, மறம்மிக்க வேல் குண்டலன், குண்டலதாரன், மன்நூல் துறைமிக்க கேள்வி கனகத்துசன் ஆன தோன்றல்.]

**விளக்கம்:-** குண்டலபோசன், அனுதியக்கன், தீர்க்கநயனன், திம்மவாகு, குண்டலன், குண்டலதாரன், கனகத்து(வ)சன், என்ற எழுவர் வீமனால் பட்ட துரியோதனனது தம்பியர் எழுவர். இவர்களில், குண்டலபோசன், அறம் மிகுந்த சொல்லையுடைய வன். தீர்க்கநயனன், வலியால் மிகுந்தவன். திம்மவாகு சிலைத் தொழிலில் வல்லவன். குண்டலன், வேல் தொழிலில் வல்லவன். கனகத்துவசன், நிலையுடைய நூல்துறைகளில் மிகுந்த கேள்வியை உடையவன். இது குளகமாய் அடுத்த கவியோடு சேர்ந்து முடியும்.

**31. இப்பே ரெழுவர் சிரமேழு மெழுந்து துள்ளி**
**மைப்பே ரெழிலி யகல்வானிடை வந்த வெல்லை**
**ஒப்பே தெனவா சவன்கேட்டலு மோங்கல் விந்தை**
**கைப்பே ரெழிற்பைங் கழங்கென் றனர் கண்ட வானோர்.**

[இ பேர் எழுவர் சிரம் ஏழும் எழுந்து துள்ளி, மை பேர் எழிலி அகல் வானிடை வந்த எல்லை, ஒப்பு ஏது என வாசவன் கேட்டலும், ஓங்கல் விந்தை கை பேர் எழில் பைங்கழங்கு என்றனர் கண்ட வானோர்.]

**விளக்கம்:-** முன் கூறிய பெயர்களை உடைய எழுவரது தலைகள் ஏழும் எழுந்து துள்ளி வானிடத்தே வந்த பொழுது, இந்திரன், இவற்றிற்கு ஒப்பாகக் கூடியது யாது என்று கேட்க, இத்தலைகளைக் கண்ட தேவர்கள், மலையில் வாழும் வீரமகள் கையில் எடுத்து ஆடும் பெரிய அழகிய அம்மனைக் காய்கள், என்றனர், என்பதாம். எழிலி - மேகம். ஓங்கல் மலை. கழங்கு - அம்மனைக்காய். விந்தியமலையில் இருத்தல் பற்றி வீரமகளான துர்க்காதேவிக்கு விந்தை, என்பது பெயராயிற்று.

32. அறந்தந்த வாழ்க்கை முடிகின்றனை யாகி நீயும்
இறந்தந்த ரத்தி லினியேகுக வென்று சீறி
மறந்தந்த சீயக் கொடியோன்கொடி மாசு ணத்தோன்
புறந்தந்த போரிற் புறந்தந்தனன் போக லுற்ருன்.

[அறம் தந்த வாழ்க்கை முடிகின்றனை ஆகி நீயும் இறந்து அந்தரத்தில் இனி ஏகுக என்று சீறி, மறம் தந்த சீயம் கொடியோன் கொடி மாசுணத்தோன் புறந் தந்த போரில் புறம் தந்தனன் போகல் உற்ருன்.]

**விளக்கம்:-** அறம் தந்த வாழ்க்கை - முன்னோர் செய்த, அல்லது முன் பிறப்பில் செய்த நல்வினையின் பயனுய அரச வாழ்க்கை. மறம் தந்த சீயக்கொடியோன் சீறி - பராக்ரமம் பொருந்திய சிங்கத்தின் வடிவு கொண்ட கொடியை உடைய வனுன வீமன் சீறித்தாக்க. மாசுணத்தோன் - பாம்புக் கொடி யோனுன துரியோதனன். புரந்தந்த போர் - சேனை உடையாமல் பாதுகாத்தலைச் செய்து வந்த போர். புறம் தந்து போகலுற்ருன் - புறங் காட்டி ஓடினுன். ''அறந்தந்த வாழ்க்கையுடைய நீயும் இன்று முடிகின்றனை,'' என்று சொல்லி வீமன் தாக்க, இதுவரை பாதுகாத்து வந்த போரை மேலும் காக்க முடியாமல் துரியோதனன் புறந்தந்து ஓடலுற்ருன், என்பதாம்.

புறந்தரல், என்பது பாதுகாத்தல், புறங் கொடுத்தல், என்ற இரு பொருள்களையும் உடையது. (அறம் பாடல்) என்ற இடத்து அறம், என்பது தீங்கு என்று பொருள் படல் போல், இங்கேயும் பொருள் கொள்ளலாம். அவ்வாறு, கொள்ளின், தீங்கையே இழைத்து வந்த வாழ்க்கையை உடைய நீயும் உன் தம்பியர் போல் முடிகின்றனை,'' என்று வீமன் கூறினுன், என்பது பொருளாகும்.

33. கந்தே யனைய புயவீமன் கணைகள் பட்டுத்
தந்தே ரழிந்து படுமன்னவன் ருனை யென்ன
மந்தே கரெல்லா மலைவுற்று மடிந்து வீழச்
செந்தே ரருக்கன் குடபாற்றிசை சென்று சேர்ந்தான்.

[கந்தே அனைய புயம் வீமன் கணைகள் பட்டு தம் தேர் ஒழிந்து படும் மன்னவன் தானை என்ன, மந்தேகர் எல்லாம் மலைவுற்று மடிந்துவீழ, செம்தேர் அருக்கன் குடபால் திசை சென்று சேர்ந்தான்.]

**விளக்கம்:-** கந்து-தூண். மந்தேகர்-சூர்ய சஞ்சாரத்திற்குத் தடை செய்யும் அசுரர். குடபால் திசை - மேற்குத் திசை. சூர்யாத்தமனத்தை வருணிக்கும் செய்யுள் இது. வீமனது கணைகளால் அழிந்துபட்ட துரியோதனனது சேனை போல், சூர்ய

சஞ்சாரத்திற்கு இடையூறு செய்யும் மந்தேகர் எல்லோரும், அந்தணர்கள் சந்தியா காலத்தில் மந்திர பூர்வமாய் அர்க்கியம் விடலால், வலிகெட, சூரியன் அத்தமித்தான், என்பதாம்.

மந்தேகர் என்னும் அரக்கர், காலையிலும் மாலையிலும் சூரியனை வளைத்துக் கொண்டு போர் செய்கின்றனர் என்றும், அந்தணர்கள் இருவேளையும் மந்திரபூர்வமாய் விடும் அர்க்கிய ஜலம், வச்ராயுதம் போல் அவ்வரக்கரைத் தாக்கிச் சூர்யசஞ்சாரத்திற்கு உதவி செய்கின்றன, என்பர்.

படுகளச் சிறப்பு

**34. தளவொத்த மூரற் றலமானைத் தருமன் மைந்தன்**
**வளமிக்க வெம்போர்க் களம்வென்று வதுவை செய்வான்**
**உள்முற் றளித்த கலன்போலு முகுக லன்கள்**
**பிளவுற்ற வேழ நுதனித்திலப் பெட்டி போலும்.**

[தளவு ஒத்த மூரல் தலம் மானை தருமன் மைந்தன் வளம் மிக்க வெம்போர் களம் வென்று வதுவை செய்வான், உளம் உற்று அளித்த கலன் போலும், உகு கலன்கள், பிளவு உற்ற வேழம் நுதல் நித்திலம் பெட்டி போலும்.]

**விளக்கம்:-** உகு கலன்கள், தருமன் மைந்தன் வளம் மிக்க போர்க் களம் வென்று, தளவு ஒத்த மூரல் தலமானை வதுவை செய்வான், உளம் உற்று அளித்த கலன் போலும்; பிளவு உற்ற வேழம் நுதல், நித்திலப் பெட்டி போலும், - என்பது அன்வயம்.

தளவு – முல்லை. மூரல் - பல். தலம் மான் - பூமிதேவி. வளம் மிக்க வெம் போர் களம் - வீரத்தின் வளமை மிகுந்த கொடிய போர்க்களம். போர்க் களத்தில் சிந்திக்கிடக்கின்ற ஆபரணங்கள், தருமன் போர்வென்று முல்லையரும்பு போன்ற பற்களை உடைய பூமிதேவியை மணந்து கொள்ளுவதற்காக, (அவளுக்குப் பரிசாக) விரும்பிக் கொடுத்த ஆபரணங்களை ஒக்கும்; பிளவுபட்ட யானைகளின் நெற்றிகள், (பூமிதேவிக்குப் பரிசாக அளிக்கப் பெற்ற) நித்திலப் பெட்டியை (முத்துக்களை உடைய பெட்டியை) ஒக்கும், என்பது பொருள்.

தலமானை மணத்தல் - பூமிக்கு அரசாதல். சிறந்த யானை யின் நெற்றியில் முத்து உண்டாகும் என்பர். எனவே, பிளவு பெற்ற யானை நெற்றி நித்திலப் பெட்டியாயிற்று. இந்த வர்ணனை, தற்குறிப்பேற்றம் ஆகும்.

**35. பூட்டற் றவில்லின் மிசைசோரிப் புன்லின் வீரர்**
**வாட்டற் றவீரல் பலசுற்றி வயங்கு தோற்றம்**

**வேட்டற் பொருட்டாற் புவிமானுக்கு வேந்து சூட்டும்**
**சூட்டற் றுமுற்றுங் குடர்வாசத் தொடைய லற்றே.**

[பூட்டு அற்ற வில்லின் மிசை சோரி புனலின் வீரர் வாட்டு அற்ற ஈரல் பல சுற்றி வயங்கு தோற்றம், வேட்டல் பொருட்டால் புவி மானுக்கு வேந்து சூட்டும் சூட்டு அற்று; முற்றும் குடர் வாசம் தொடையல் அற்று, ஏ.]

**விளக்கம்:-** சோரி புனலின் வீரர் வாட்டு (வாட்டம்) அற்ற ஈரல் பல, பூட்டு அற்ற வில்லின் மிசை சுற்றி வயங்கு தோற்றம், வேட்டல் பொருட்டு (ஆல்), புவி மானுக்கு வேந்து சூட்டும் சூட்டு அற்று; குடர் முற்றும் வாசம் தொடையல் அற்று, - என்பது அன்வயம்.

போர்க்களத்தில் வெள்ளமிடும் குருதியில் விழுந்து கிடக்கும் வீரர்களின் வாட்டம் அற்ற, அதாவது கொழுத்த ஈரல்கள்பல, நாணியின் பிணிப்பு அற்ற வில்லின்மேல் சுற்றிக் கொண்டு விளங்கும் தோற்றம், பூமிதேவிக்கு தருமன் சூட்டும் சூட்டை (நெற்றி அணியை) ஒக்கும்; குடல்கள் எல்லாம் (அவளுக்கு தருமன்) சூட்டிய வாசனையுடைய மணமாலையை ஒக்கும். அற்று - ஒக்கும், போலும், அணி தற்குறிப்பேற்றம்.

**36. குலமா நிருப ருடல்சோருங் குருதி வெள்ளம்**
**பலமா நதிபோய் திரைவேலையிற் பாய்ந்த தோற்றம்**
**நிலமான் விளிம்பு சிவப்பேறிய நீல வாடை**
**நலமா கமன்றற் குடுத்தென்ன நவில லாமே.**

குலம் மா நிருபர் உடல் சோரும் குருதி வெள்ளம் பல மா நதி போய் திரை வேலையில் பாய்ந்த தோற்றம், நிலம் மான் விளிம்பு சிவப்பு ஏறிய நீலம் ஆடை நலம் ஆக மன்றற்கு உடுத்தது என்ன, நவிலல், ஆமே.]

**விளக்கம்:-** சிறந்த குலம் வந்த பெரிய அரசர்களின் உடல் களிலிருந்து வழியும் குருதி வெள்ளம் பல பெரிய நதிகளாய்ச் சென்று கடலில் பாயும் தோற்றம், பூமிதேவி, சிவப்புநிறம் ஏறிய விளிம்பையுடைய நீல வஸ்திரத்தை மங்களமாகக் கல்யாணத் தின் பொருட்டு உடுத்துக் கொண்டது போலும், என்று கூறலாம், என்பது பொருள். விளிம்பு - ஓரம்.

பூமியைச் சூழ்ந்துள்ள கடலின் ஓரங்களில் இரத்தம் பாய்ந்து கலந்த தோற்றம், பூமி தேவி செந்நிறக் கரையுடைய நீலநிறச் சேலை கட்டிக் கொண்டது போன்றது, என்ற வருணனை, தற் குறிப்பேற்ற அணி, ஆகும்.

**37. தன்பா டிபுக்கான் புறந்தந்த தரணி வேந்தன்**
**மின்பா டிலங்குங் கணைவெஞ்சிலை வீம னேடு**
**மன்பா டிபுக்கான் பெரும்போரிடை மாய்ந்த மன்னர்**
**தென்பா டிபுக்கார் குடிபுக்கது சேர்ந்த கங்குல்.**

[தன் பாடி புக்கான் புறம் தந்த தரணி வேந்தன், மின்பாடு இலங்கும் கணை வெம்சிலை வீமனேடு மன் பாடி புக்கான்; பெரும் போரிடை மாய்ந்த மன்னர் தென் பாடி புக்கார், குடிபுக்கது சேர்ந்த கங்குல்]

**விளக்கம்:-** புறங்கொடுத்த துரியோதனன் தன் படைவீடு சேர்ந்தான்; மின்னலின் தன்மையதாய் விளங்குகின்ற கணைகளை உடைய வெஞ்சிலை வீமனேடு மன்னனை தருமன் படைவீடு சேர்ந்தான்; மாய்ந்த அரசர்கள் தென்திசையிலுள்ள யமபுரம் சேர்ந்தார், வந்து சேர்ந்த இரவும் மண்ணில் குடி புகுந்தது, என்பது பொருள்.

வீரசுவர்க்கம் செல்பவர் யமதர்மனைக் கண்டு தரிசித்தே செல்ல வேண்டியவராதலால், தென்பாடி புக்கார், எனப்பட்டது.

**38. அன்றே களத்திற் பலியூட்டிய வாண்மை வீரன்**
**இன்றே யிறந்தா னிதற்குன்னி யிரங்க லீரென்(று)**
**ஒன்றே மொழியு முரவோன்முத லைவ ருக்கும்**
**குன்றே கவித்த குடைக்கோவலன் கூறி னனே.**

[அன்றே களத்தில் (தன்னை) பலி ஊட்டிய ஆண்மை வீரன், இன்றே இறந்தான், இதற்கு உன்னி இரங்கலீர் என்று ஒன்றே மொழியும் உரவோன் முதல் ஐவருக்கும் குன்றே கவித்த குடை கோவலன் கூறினன், ஏ.]

**விளக்கம்:-** அன்றே தன்னைக் கள பலியாக அளித்தவன், இன்றைய வரை உயிர் வாழ்ந்து இருந்ததற்கு மகிழவேண்டிய நீங்கள் வருந்தல் அமையாது என்று கண்ணன் பாண்டவர்க்குக் கூறினன், என்பதாம். ஒன்றே மொழியும் உரவோன் - வாய்மை கடவா மேன்மையனான தருமன். குன்று கவித்த கோவல்ன் - கண்ணன், அதாவது சாதுக்களை இரட்சிக்கும் அருளாளன்.

சூர்யோதயம்

**39. உன்னிக் களத்தி லுயிர்வீடு முரக மைந்தன்**
**சென்னிக் கதிர்மா மணிசிந்திய சோதி யெல்லாம்**
**தன்னிற் கவர்ந்தா னெனப்பண்டையிற் ரூம மேனி**
**மின்னிப் பரிதி குணபாற்றிசை மேவி னனே.**

உன்னி களத்தில் உயிர் வீடும் உரகம் மைந்தன் சென்னி கதிர் மா மணி சிந்திய சோதி எல்லாம் தன்னில் கவர்ந்தான் என, பண்டையின் தாமம் மேனி மின்னி பரிதி குணபாலை திசை மேவினன், ஏ.]

**விளக்கம்:-** உன்னி - ஆண்மையே கருதி (களத்தில் உயிர் விடும்), உரக மைந்தன்-இராவான், சென்னிக் கதிர் மாமணி-தலை யிலுள்ள நாகரத்தினம். பண்டையின் மேனி தாமம் மின்னி- முன்னையினும் தனது மேனியின் ஒளி மிகப் பெற்று, இராவானது சென்னிமணியின் ஒளியைக் கவர்ந்து கொண்டவன் போல் சூரியன் மிகுதியான ஒளி விளக்கத்துடன் உதயமானுன், என்பதாம். இது, தற்குறிப்பேற்றம்.

எட்டாம் போர்ச் சருக்கம் முற்றும்.

# ஒன்பதாம் போர்ச் சருக்கம்

## கடவுள் வாழ்த்து

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

**1. பேராறு மூழ்கி மறைநூல் பிதற்றி**
**மிடறும் பிளந்து பிறவித்**
**தூராறு மாறு நினையாம லுங்க**
**டொழிலே புரிந்த சுமடீர்**
**ஓராறு பேத சமயங்க ளுக்கும்**
**உருவாகி நின்ற வொருவன்**
**ஈராறு நாம முரைசெய்து மண்கொ**
**டிடுவார்கள் காணு மிமையோர்.**

[பேர் ஆறு மூழ்கி, மறைநூல் பிதற்றி மிடறும் பிளந்து, பிறவி தூர் ஆறும் ஆறு நினையாமல் உங்கள் தொழிலே புரிந்த சுமடீர், ஓர் ஆறு பேத சமயங்களுக்கும் உருவாகி நின்ற ஒருவன் ஈர் ஆறு நாமம் உரை செய்து மண் கொடு இடுவார்கள் காணும் இமை யோர்.[

**விளக்கம்:-** பேர் ஆறு - பிரசித்தி பெற்ற புண்ணிய நதிகள். மறைநூல் பிதற்றி மிடறு பிளந்து - வேதாதி நூல்களை வாயளவில் ஓதி தொண்டை வருந்துமாறு செய்து. பிறவி தூர் ஆறும் ஆறு நினையாமல் - பிறவிக்கு வேராகிய கருமங்கள் ஒழியும் வழியை நினைக்காமல், உங்கள் தொழிலே புரிந்த சுமடீர் - உங்களது யாக்கைக்குரிய தொழிலேயே செய்து கொண்டிருக்கும் அறிவிலி களே. ஓர் ஆறு பேத சமயம் - ஒன்றோடொன்று மாறுபாடுடைய

ஓர் ஆறுவித மதங்கள். ஈர் ஆறு நாமம் - துவாதச நாமம் (பன்னிரண்டு திரு நாமங்கள்). மண்-திருமண். புண்ணிய நதிகளில் நீராடியும், வேதாதி நூல்களை வாயளவில் கற்று ஓதியும், பிறவி ஒழிந்து உயிர் உய்வதற்கு வழி தேடாமல், அழியும் உடலுக்கு உறுதி தேடி அலையும் மூடர்களே, ஆறு வகைப்பட்ட மதங்களுக்கும் அவற்றிற்குரிய தெய்வமாய் நிற்கும் திருமாலினது பன்னிரு திரு நாமங்களையும் ஜபித்து, நெற்றி முதலிய அவயங்களில் திரு மன் தரிப்பவர்களே தேவர், அதாவது முத்தி பெற்றவர் ஆவர்; இதை அறிவீர், — என்பது பொருள்.

திருமாலினது திருநாமங்களை ஜபித்து உயிருக்கு உறுதி தேடிக் கொள்ளுமாறு புலவர் நம்மனோரைப் பரிவுடன் அழைக்கும் கருத்தது செய்யுள். தூர்—வேர். பிறவித் தூர் பிறவிக்கு வேராகும் கருமம்.

வைணவம், சைவம், சாக்தம், சௌரம், காணபதம், கௌமாரம் என்பவை ஆறு வகை சமயங்கள். அல்லது, பௌத்தம், ஜைநம், பைரவம், காளாமுகம், லோகாயதம், சூநியவாதம், என்ற ஆறு வித புறச் சமயம் என்றும் கொள்ளலாம்.

கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதநன், திரிவிக்ரமன், வாமனன், ஸ்ரீதரன், ரிஷீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பவை திருமாலின் துவாதச நாமங்கள். காணும்—அறிவீர்; அல்லது தேற்றப் பொருளதாகவும் கொள்ளலாம்.

இரவில் மந்திராலோசனை

**2. முன்போரு டைந்து தனதில்ல டைந்த**
**முடிமன்னன் முன்னை யிரவில்**
**தன்போலு மாம னவனோடு கேடு**
**தருதம்பி யோடு கருதிப்**
**பின்போதில் வண்மை யொழிவானை யோடி**
**யழையென்று பேச வவனும்**
**மின்போலி றந்த வினையோர்கள் பாடு**
**வினவாவி ருந்த பொழுதே.**

[முன் போர் உடைந்து தனது இல் அடைந்த முடி மன்னன் முன்னை இரவில் தன் போலும் மாமனவனோடு கேடு தரு தம்பியோடு கருதி, பின் போதில் வண்மை ஒழிவானை ஓடி அழை என்று பேச, அவனும் மின் போல் இறந்த இளையோர்கள் பாடு வினவா இருந்த பொழுது, ஏ.]

**விளக்கம்:-** எட்டாவது நாள் போர் தோற்று படை வீடு அடைந்த துரியோதனன், இரவின் முற்பகுதியில் (தீமையில்)

தன்னை ஒத்த மாமனான சகுனியோடும் (எவர்க்கும்) தீங்கையே விளைக்கும் தம்பியாகிய துச்சாதனனோடும் ஆலோசனை செய்து, கர்ணனை அழைத்து வருக என்று கூறலும், (தம்பியால் அழைத்து வரப்பட்ட கர்ணனும், மின்னல் போல் இறந்து போன தம்பியரின் நிலைமைப் பற்றி விசாரிக்கையில், — (தொடரும்) என்பதாம்.

பின் போதில் வண்மை ஒழிவான்-முன் பகல் முழுவதும் தானம் செய்து பின்பகல் தானம் கொடுத்தல் ஒழிபவனான கர்ணன், பேச - சொல்ல, மின் போல்- தோன்றி மறையும் இயல் பினதான மின்னல் போல், பாடு, என்பது, முறைமை, நிலைமை, குறைவு, கேடு, என்ற பொருள்களது.

**3. மாவில்லெ டுத்தென் னிளையோர்கள் கந்த**
**வகன்மைந்தன் முன்பு சிவன்முன்**
**பூவில்லெ டுத்த மதனான வாறு**
**புகல்கிற்ப தல்ல வனிகம்**
**கோவில்லெ டுத்தென் மறைநாலும் வல்ல**
**குருவில்லெ டுத்தெ னினிமேல்**
**நீவில்லெ டுக்கி லனைவேமு முய்து**
**நினையாரும் வாகை புனையார்.**

[மாவில் எடுத்து என் இளையோர்கள் கந்தவகன் மைந்தன், முன்பு சிவன் முன் பூ வில் எடுத்த மதன் ஆன ஆறு புகல்கிற்பது அல்ல; அனிகம் கோவில் எடுத்து என்? மறை நாலும் வல்ல குரு வில் எடுத்து என்? இனி மேல் நீ வில் எடுக்கில் அனைவேமும் உய் தும், நினையாரும் வாகை புனையார்.]

**விளக்கம்:-** கந்தவகன் - வாயு. வாயு குமாரனான வீமன் முன் என் தம்பியர், சிவபிரான் முன் மலர் அம்பு எடுத்த மன்மதன் போல் அழிந்த விதம் சொல்லும் தரமுடையதன்று, அனிகம் கோ-சேனைத் தலைவனான வீடுமன், மறைநாலும் வல்ல குரு-துரோ ணன், வீடுமன் வில் எடுத்தால் என்ன பயன்? துரோணன் வில் எடுத்தாலும் என்ன பயன்? இனி மேல், நீ வில் எடுக்கில், நாங் கள் எல்லோரும் உய்வோம்; நினையார் (பகைவர்களாகிய பாண்ட வர்) வெற்றி மாலை புனையார், — என்பதாம். கர்ணனை வில் எடுத்துப் போர் செய்யுமாறு துரியோதனன் வேண்டிக் கொள்ளும் கருத்து இது.

**4. என்னுஞ்சொ லண்ணல் செவியேற நெஞ்ச**
**மெரி யேற வெய்தின் மொழிவான்**
**முன்னுந்தை தந்தை யுரைசெய்த மேன்மை**
**யறியாய்கொ லம்பொன் முடியாய்**

**தன்னுந்து தேரும் வரிவில்லு முண்டு**
**சரமுண்டு நாளை யவனே**
**உன்னுங்க ளத்தி லவர்வான மாள**
**வுலகாளு விப்ப னுனையே.**

[என்னும் சொல் அண்ணல் செவி ஏற, நெஞ்சம் எரி ஏற, வெய்தின் மொழிவான்; முன் உந்தை தந்தை உரை செய்த மேன்மை அறியாய் கொல்? அம் பொன் முடியாய், தன் உந்து தேரும், வரி வில்லும் உண்டு, சரம் உண்டு, நாளை அவனே உன்னும் களத்தில் அவர் வானம் ஆள, உலகு ஆளுவிப்பன் உன்னையே.

**விளக்கம்:-** துரியோதனன் சொன்ன சொல்லை அண்ணல் (கர்ணன்) கேட்டு, உள்ளத்தில் சினத் தீ மிக கடுமையாகக் கூறலாயினன்; உன் பாட்டனுகிய வீடுமன், முதல் நாள் அணி வகுப்புச் செய்த பொழுது என்னை (அர்த்த ரதனுகக்) கூறிய அவனது மென்மையை, அதாவது செருக்கை நீ அறியாயோ? அவன் தன் உந்து தேரும் வில்லும் உள; சரங்களும் உள. அவனே, நாளை கருதிப் போர் செய்யும் களத்திலே அவர் (பாண்டவர்) வான் அடையச் செய்து உன்னையே உலகு ஆளச் செய்வான், என்று கர்ணன் கூறினுன், என்பதாம். 'அம் பொன் முடியாய், என்று துரியோதனனைக் கர்ணன் அழைத்தபடி. ஈற்றடிகள் வீடுமனுல் உனக்கு வெற்றி கிட்டாது என்று கூறும் குறிப்பினது.

**5. விற்கவ்வு வாளி யடலைவர் மீது**
**விடவஞ்சி வீர ரெதிரே**
**புற்கவ்வு மாகில் விரைவோடு கங்குல்**
**புலராமுன் வந்து பொருவேன்**
**சொற்கவ்வை யாக நினையற்க கொன்று**
**சுரர்நாட ளிப்ப னினியுன்**
**சிற்கவ்வை தீர வவருக்கு நின்ற**
**திருமாலி னுக்கு மெனவே.**

[வில் கவ்வு வாளி அடல் ஐவர் மீது விட அஞ்சி வீரர் எதிரே புல் கவ்வும் ஆகில், விரைவொரு கங்குல் புலராமுன் வந்து பொருவேன்; சொல் கவ்வை ஆக நினையற்க கொன்று சுரர் நாடு அளிப்பன் இனி உன் சில் கவ்வை தீர அவருக்கும் நின்ற திருமாலினுக்கும் எனவே.

**விளக்கம்:-** வில் கவ்வு வாளி - வில்லைப் பற்றிக் கொள்ளும் அம்பு, அதாவது வில்லில் வைத்துத் தொடுக்கும் அம்பு. சொல் கவ்வை—சொல்லுகின்ற வீண் ஒலி, அதாவதுவீண் வார்த்தை. சில் கவ்வை - சிலவாகிய துன்பம், கவலை.

பாண்டவர் மேல் அம்புகளை விடுவதற்கு அஞ்சி வீடுமன் புல்லைக் கவ்வுவானானால், விரைந்து நான் சென்று பொழுது புலரு முன் (உன் சார்பில்) போர் செய்வேன்; எனது சொல்லை வீண் வார்த்தையாக நினைக்காதே, உனது துன்பம் நீங்கும்படி பாண்ட வர்க்கும் அவருக்குத் துணையாக நிற்கும் கண்ணனுக்கும் வீர சொர்க்கம் அளிப்பேன், — என்று கர்ணன் கூற, - அடுத்த செய்யுளோடு தொடரும்.

**6. துச்சாத னுவிம் மொழிசென்று கங்கை**
**சுதனுக்கு ரைக்க வெனவே**
**நச்சாட ராவை யனையானு மங்கொர்**
**நொடியுற்ற போழ்தி னடவா**
**எச்சாப மன்னு மணியூக மான**
**விரதந்த னக்கு நடுவோர்**
**அச்சாணி யான வவனுக்கி வன்சொ**
**லடைவேபு கன்ற னனரோ.**

[துச்சாதனு, இமொழி சென்று கங்கை சுதனுக்கு உரைக்க, எனவே, நச்சு ஆடு அராவை அனையானும் அங்கு ஓர் நொடி உற்ற போழ்தின் நடவா, எ சாபம் மன்னும் அணி யூகம் ஆன இரதம் தனக்கு நடு ஓர் அச்சு ஆணி ஆன அவனுக்கு இவன் சொல் அடைவே புகன்றனன், அரோ.]

**விளக்கம்:-** நச்சு ஆடு அரா – விஷப் பாம்பு (போன்ற துச்சா தனன்). சாபம் மன்னும் எ அணி யூகம் ஆன இரதம் - விற்படை பொருந்திய வியூகமாய் ஒழுங்கு செய்யப்பட்ட எல்லாச் சேனைகளு மாகிய தேர். அந்தத் தேருக்கு அச்சாணி வீடுமன். இவன் சொல், என்றது கர்ணன் சொல். அடைவே - முழுமையாக, முறையாக. தம்பியை நோக்கி தமையன், கர்ணன் கூறியதை வீடுமனுக்குச் சொல், என்று கூறலும், துச்சாதனன், விரைந்து சென்று, கௌரவ சேனையாகிய தேருக்கு அச்சாணி போன்றவனான வீடுமனுக்குக் கர்ணன் கூறியதை ஒழுங்காகச் சொன்னான், என்பதாம்.

வியூகமாக வகுக்கப் பெற்ற சேனையை இரதமாகவும், வீடுமனை அத்தேரின் அச்சாணியாகவும், புலவர் உருவகம் செய்துள்ளார். இரு சக்கரங்களையும் இணைத்து நிற்பது, அச்சு. சக்கரங்கள் கழலா மல் இருப்பதற்கு ஆணி உதவுகின்றது. எனவே, அச்சாணி தேரின் முக்கியமான உறுப்பாகின்றது.

**7. பேரன் புகன்ற மொழிகேள்வி செய்து**
**பெரியோன் முகிழ்த்து நகையா**
**வீரம் புகன்றெ னினிநானு மக்கு**
**லிசயற் செறுத்தன் முடியா(து)**

**ஈரந் துறந்த வொருநூறு பேரை**
**மகுடந் துணிப்ப லெனவே**
**நேரன் றமர்க்க ணுரை செய்த வாய்மை**
**நிறைவேறு நாளை யுடனே.**

[பேரன் புகன்ற மொழி கேள்வி செய்து பெரியோன் முகிழ்த்து நகையா, வீரம் புகன்று என் இனி நான் உமக்கு? விசயன் செறுத்தல் முடியாது; ஈரம் துறந்த ஒரு நூறு பேரை மகுடம் துணிப்பல் எனவே நேர் அன்று அமர்க்கண் உரை செய்த வாய்மை நிறை வேறும் நாளை உடனே.

**விளக்கம்:-** பேரன் கூறியது கேட்ட பெரியோனான வீடுமன் புன்முறுவல் செய்து, இனி நான் உங்களுக்கு வீர வார்த்தைகளைச் சொல்லி என்ன பயன்? விசயனை அழிக்க முடியாது. (அன்று மன்னவையில் இரக்கம் இன்றி துகில் உரிந்த காலை வீமன், 'துரியோதனாதியர் நூறு பேரையும் தலை துணிப்பேன்' என்று கூறிய சபத மொழி தவருமல் மிக விரைவில் நிறைவேறும், — என்று கூறியபடி . நாளை உடனே- மிக விரைவில்.

**8. ஒருநாளு நீவிர் பொறுமின்க ளும்மை**
**யுலகாளு விக்க வருவோர்**
**வருநாள் தொடங்கி யமர்செய்து தெவ்வை**
**மடிவிப்பர் சொன்ன வகையே**
**குருநாடு மற்றை வளநாடு மெய்தி**
**நுமரோ டியைந்து குழுமிப்**
**பெருநா ளிருந்து தனிவாழ்தி ரென்று**
**விடைநல்கி விட்ட பிறகே.**

[ஒரு நாளும் நீவிர் பொறுமின்கள், உம்மை உலகு ஆளுவிக்க வருவோர் வரு நாள் தொடங்கி அமர் செய்து தெவ்வை மடிவிப்பர் சொன்ன வகையே; குரு நாடும் மற்றை வள நாடும் எய்தி, நுமரோடு இயைந்து குழுமி பெருநாள் இருந்து தனி வாழ்திர் என்று விடை நல்கி விட்ட பிறகு, ஏ,— அடுத்த செய்யுளோடு தொடரும்.

**விளக்கம்:-** இது வரையில் பொறுத்த நீங்கள் இன்னும் ஒரு நாள் பொறுங்கள், நான் அழிவேன், அதன் பின் உங்களை உலகு ஆளச் செய்ய வருவோர் வருகின்ற நாள் முதல் போர் செய்து, சொன்னபடியே பகை அழிப்பர்; பிறகு குரு நாட்டையும் மற்றுள வள நாடுகளையும் பெற்றுத் தமரோடு ஒன்றுபட்டுக் கலந்து பல காலம் நன்ருக வாழ்வீர், என்று வீடுமன் சொல்லிப் பேரனுக்கு விடை கொடுத்த பிறகு, — (தொடரும்) என்பதாம்.

கர்ணனை, வருவோர், என்று பன்மையில் கூறியது, இகழ்ச்சியாகும்.

**9. கண்ணுந்து யின்று துயிலு முணர்ந்து**
**சிறுகாலை யுள்ள கடனும்**
**எண்ணுங் கருத்தின் வழியேயி யற்றி**
**யிகன்மன்னர் சூழ வரவே**
**மண்ணுங் குலுங்க வரையுங் குலுங்க**
**வெழுதூளி மாதி ரமுமால்**
**விண்ணும் புதைக்க வடலாக வத்தின்**
**மிசைசென்று புக்கு விரகால்.**

[கண்ணும் துயின்று துயிலும் உணர்ந்து சிறு காலை உள்ள கடனும் எண்ணும் கருத்தின் வழியே இயற்றி, இகல் மன்னர் சூழ வரவே, மண்ணும் குலுங்க வரையும் குலுங்க எழு தூளி மாதிரமும் மால் விண்ணும் புதைக்க அடல் ஆகவத்தின் மிசை சென்று புக்கு, விரகால், - அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம்:-** அமைதியோடு தூங்கி விடியற்காலை கண் விழித்து எழுந்து, உதய காலத்தில் செய்ய வேண்டிய கடன்களையும் மனம் பொருந்திய அமைதியோடு செய்து முடித்து, இகல் மன்னர் சூழ்ந்து வர, மண்ணும் மலையும் குலுங்கவும், திசைகளும் பெரிய வானமும் எழுந்த புழுதிகளால் மறையவும், வீடுமன் கொடிய போர்க்களம் சென்று, உற்சாகத்தோடு, அல்லது சாமர்த்திய மாய், — (அணி வகுத்தான், என்று முடியும்) என்பதாம்.

விரகு — உற்சாகம், சாமர்த்தியம் — உபாயம்.

**10. நாகங் குறித்த கொடிமன்னர் மன்னை**
**நடுவே நிறுத்தி யடைவே**
**பாகங்க டோறு மொருகோடி மன்னர்**
**பகதத்த னோடு நிறுவிப்**
**பூகம்ப மாக வினமோட லம்பு**
**சனுமுன்பு போக வொருபேர்**
**யூகஞ் சருப்ப தோபத்ர மாக**
**வணிசெய்து மான வுரவோன்.**

[நாகம் குறித்த கொடி மன்னர் மன்னை நடுவே நிறுத்தி, அடைவே பாகங்கள் தோறும் ஒரு கோடி மன்னர் நிறுவி, பூகம்பம் ஆக, இனமோடு அலம்புசனும் முன்பு போக ஒரு பேர் யூகம் சருப் பதோபத்ரம் ஆக அணி செய்து மானம் உரவோன், — தொடரும்.]

**விளக்கம் :-** துரியோதனனை நடுவில் நிறுத்தி, முறையே எல்லாப் பக்கங்களிலும் ஒரு கோடி அரசர்களைப் பகதத்தன் என்ற அரக்கனோடு இருக்கச் செய்து, பூமி கம்பிக்கும்படி, அலம்புசனும், தனது இனத்தாரோடு முன்னே செல்லும்படி ஒரு பெரிய சருப்ப

தோபத்ரம் என்ற வியூகமாக வீடுமன், அணி வகுத்து, — (தொடரும்) என்பதாம்.

சருப்பதோபத்ரம் (ஸர்வதோபத்ரம்) என்பது ஒரு வகை வியூகம்; அதாவது, எந்த பக்கத்திலிருந்து பார்த்தாலும் ஒரே விதமாகத் தோன்றும் வியூகம். பூமி கம்பித்தல், கெட்ட சகுனம். ஒன்பதாம் நாள் போர் ஆரம்பத்தில், சில உத்பாதங்கள் ஏற்பட்டதாக வியாசர் கூறியதற்கு ஏற்ப, பூகம்பமாக, என்றார் போலும்.

தருமன் அணிவகுத்தல்

**11. நின்று னமர்க்க ணவரங்கு நிற்க**
**விவரிங்கு நென்ன னிருதன்**
**கொன்று னெனத்தன் மதலைக்கொ ரெண்ம**
**ரெழுவோரை நீடு கொலைசெய்(து)**
**ஒன்றாக மன்னர் பலராவி கொண்ட**
**வுரவோனு மும்பர் பகைபோய்**
**வென்றானு மற்றை யிளையோரு மொன்றின்**
**விரகற்ற கோவு முதலோர்.**

நின்றான் அமர்க்கண்; அவர் அங்கு நிற்க, இவர் இங்கு நென்னல் நிருதன் கொன்றான் என, தன் மதலைக்கு ஓர் எண்மர் எழுவோரை நீடு கொலை செய்து, ஒன்று ஆக மன்னர் பலர் ஆவி கொண்ட உரவோனும், உம்பர் பகை போய் வென்றவனும், மற்றை இளையோரும், ஒன்றின் விரகு அற்ற கோவும் முதலோர்,— அடுத்த செய்யுளோடு முடியும்.

**விளக்கம்:-** வியூகம் வகுத்து வீடுமன் நின்றான்; துரியோதனனைச் சேர்ந்தோர் அங்கே அவ்வாறு இருக்க இங்கே (பாண்டவர் பக்கத்தில்) நேற்று அலம்புசன் தன் மகனாகிய இராவானைக் கொன்றான்என,(அதற்குஎதிராக)துரியோதனன் தம்பியருள்எண்மரோடு எழுவரையும், (அவர்களோடு அவர் பக்கத்து) மன்னர் பலரையும் ஒரு சேரக் கொன்றழித்த வீமனும். (தேவலோகம்) சென்று தேவர் பகைவரான நிவாத கவசர் காலகேயர் ஆகியவர்களை வென்ற விசயனும், நகுல சகதேவர்களும், மனம் மொழி மெய்யால் வஞ்சனை செய்தலை அறியாத தருமன் முதலியவர்களும், ஆகிய இந்தப் பக்கத்தார், — (தொடரும்) என்பதாம்.

ஒன்றின் விரகு அற்ற, என்றது மனம் மெய் மொழி ஆகிய திரிகரணங்களாலும் வஞ்சனை செய்தலை அறியாத, என்ற பொருளது.

**12. மற்றுள்ள மன்னர் புடைபோத முன்னர் மழைமேனி மாயன் வரவே**
**உற்றுள்ள வீர ரொடுசேனை நாத னணிநிற்க வொண்கொ யுளைமா**
**முற்றுள்ள வெங்கு மெழுபூழி துள்ள முரசங்க டுள்ள மிகவும்**
**செற்றுள்ள மேவு கனறுள்ள வந்து செருவெங் களத்தி னிடையே.**

[மற்றும் உள்ள மன்னர் புடை போத முன்னர் மழை மேனி மாயன் வரவே, உற்று உள்ள வீரரோடு சேனை நாதன் அணி நிற்க, ஒள் கொய் உளைமா முன் துள்ள எங்கும் எழு பூழி துள்ள, முரசங்கள், துள்ள மிகவும் செற்று உள்ளம் மேவுகனல் துள்ள, வந்து செருவெம் களத்தினிடையே, — தொடரும்.

**விளக்கம்:-** கண்ணன் களம் வந்ததைக் கூறும் இது. மன்னர் பக்கங்களில் வர முன்னே கண்ணன் செல்ல, சேனைத் தலைவனை திட்டத்துய்மன் படை வகுப்பில் நிற்கவும், குதிரைகள் முன்னே துள்ளவும், எங்கும் புழுதி எழுந்து பரவவும், முரசங்கள் அதிரவும், சினந்து வீரர் உள்ளத்தில் பொருந்திய கனல் மூண்டு எரியவும், போர்க்களம் வந்து, (தொடரும்), என்பதாம்.

கொய் உளை — கத்திரித்து அழகு செய்யப் பெற்ற பிடரி மயிர். துள்ள, என்ற சொல் பல இடங்களில் ஒரே பொருளில் வந்திருப்பது, **சொல் பொருள் பின்வரு நிலை அணி**யாகும்.

**13. செம்பற்ப ராகமுடிமா மதாணி செறிதொங்கல் வாகு வலயம்**
**பைம்பற்ப ராக மலர்வல்லி யோடு திருமேனி சோதி பயில்வான்**
**வெம்பற்ப ராக வரையூக மாக முறையா லணிந்து வெயில்கால்**
**அம்பற்ப ராக பதியென்ன நிற்க வமராட லுற்ற பொழுதே.**

[செம் பற்பராகம் முடி, மாமதாணி செறி, தொங்கல், வாகு வலயம், பைம் பற்ப ராகம் மலர் வல்லியோடு திருமேனி சோதிபயில் வான், வெம் பற்பராகவரை யூகம் ஆக முறையால் அணிந்து, வெயில் கால் அம் பற்பம் ராகம் பதி என்ன நிற்க, அமர் ஆடல் உற்ற பொழுது, ஏ,— அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும்.]

**விளக்கம்:-** செம்பற்பராகம் — சிவந்த பத்மராகம், இது, நவ ரத்தினங்களில் ஒன்று. முடி – கிரீடம், மதாணி - ஆபரண வகை களில் ஒன்று. தொங்கல்—மாலை, வாகு வலயம் — தோள் அணி. பைம் பற்பம் ராகம் மலர் வல்லி— (ராகம் பைம் பற்பம் மலர்வல்லி) சிவந்த பசிய தாமரை மலரில் வாழும் பூங்கொடி போன்ற திருமகள். (பற்பம்-பத்மம்). திருமேனி சோதி பயில்வான் - தன் திருமேனியில் ஒளியின் விளக்கம் பொருந்தப் பெற்ற கண்ணபிரான். வெம் பற்ப ராக வரை யூகம்- வெவ்விய பத்மராகக் கற்கள் உண்டாவதற்கு இடமான மலையின் வடிவமான வியூகம், அதாவது அசலவியூகம்.

அம் பற்பம் ராகம் பதி-அழகிய தாமரையினிடம் அன்புடைய நாய கனான சூரியன், கண்ணபிரான் பாண்டவ சேனையை அசல வியூக மாக முறைப்படி வகுத்து, அங்கே சூரியனைப் போல் நிற்க, இரு திறத்துச் சேனைகளும் போர் தொடங்கின பொழுது,— அலம்புசன் வந்தான், என்று அடுத்த செய்யுளோடு முடியும், என்பதாம்.

கிரீடாதி ஆபரணங்களோடும் திருமகளோடும் எம்பிரான் விளங்குந் தன்மையின் வருணனை. அவன் களம் வந்து வியூக மும் வகுக்கப் போர் தொடங்கிற்று என்றபடி. முதலடியிலும் மூன்ரு வது அடியிலும் பத்மராகம் — மாணிக்கக்கல். இரண்டாவது அடி யில், ராகம் பத்மம் — சிவந்த தாமரை. நான்காவது அடியில், பற்ப ராகம் - தாமரையினிடம் அன்புடைய (சூரியன்).

கலி விருத்தம்

**14. இந்திரனு மேனையிமை யோர்களு நடுங்க**
**அந்தரமு மெண்டிசையு நின்றதிர வதிரா**
**வெத்திறல லங்கல்புனை வீமனுடன் மலைவான்**
**வந்தனன லம்புசன்வ லம்புனைபு யத்தான்.**

[இந்திரனும் ஏனை இமையோர்களும் நடுங்க, அந்தரமும் எண் திசையும் நின்று அதிர, அதிரா வெம்திறல் அலங்கல் புனை வீமனு டன் மலைவான் வந்தனன் அலம்புசன் வலம்புனை புயத்தான்.]

**விளக்கம்:-** சுலபமான செய்யுள். வலிய தோள்களை உடைய அலம்புசன், இந்திராதி தேவர்கள் நடுங்கவும், வானமும் திசைகள் எட்டும் அதிர்ச்சி அடையவும், வீர முழக்கம் செய்து கொண்டு வீம னோடு போர் செய்வதற்கு வந்தான், என்பதாம். அதிர-அதிர்ச்சி அடைய. அதிரா - போரொலி செய்து கொண்டு.

வீமனும் அலம்புசனும் பொருதல்

**15. செருவில்வெரு வாநிருத சேகரன் வயப்போர்**
**மருவுசுடர் வாளினுடன் வந்தநிலை காண**
**இரவிவரு தேரனைய தேரின்மிசை யிழியா**
**உருமுரு மெனவிரைவி னோடியெதிர் வந்தான்.**

[செருவில் வெருவா நிருதசேகரன் வயப்போர் மருவு சுடர் வாளினுடன் வந்த நிலை காண, இரவி வரு தேர் அனைய தேரின் மிசை இழியா, உரும் உரும் என, விரைவின் ஓடி எதிர் வந்தான்.]

**விளக்கம்:-** வயப்போர் சுடர் மருவு வாள் - வலிய போருக்கு உரிய ஒளி பொருந்திய வாள். காண - கண்டு. இரவி தேர் அனைய தேர் - சூரியனது தேரைப் போன்று விரைவும் ஒளி விளக்கமும் உடைய தேர். இழியா-இறங்கி. அலம்புசன் வாளேந்தியவனைத் தன் மேல் வரல் கண்ட வீமன், தன் தேரினின்றும் இழிந்து, 'இடி

யிடி' என்று கண்டோர் சொல்லும்படி வீர முழக்கஞ் செய்து கொண்டு, அரக்கன் எதிரே ஓடினன் என்பதாம்.

**16. யாளியோ ரிரண்டிகல் புரிந்ததென விகலா
மீளிமையி னுலும்வலி யாலுவிறன் மிக்கோன்
வாளின்மிசை வாளதனை வைத்தட லரக்கன்
தோளிலொரு தோணில னுறும்படி துணித்தான்.**

[யாளி ஓர் இரண்டு இகல் புரிந்தது என இகலா, மீளிமையினு லும் வலியாலும் விறல் மிக்கோன், வாளின்மிசை வாள் அதனை வைத்து, அடல் அரக்கன் தோளில் ஒரு தோள் நிலன் உறும்படி துணித்தான்.

**விளக்கம்:-** யாளிகள் இரண்டு போர் செய்தது போல இருவரும் போர் செய்ய, பராக்ரமத்தாலும், உடல் வலியாலும், சிறந்தோனுன வீமன், அரக்கனது வாளைத் தன் வாளால் தாக்கி, அவனது இரு தோள்களில் ஒன்று அற்று விழும்படி செய்தான், — என்பதாம். செய்யுள் சுலபமானதே.

**17. அற்றதிர டோடுணிய வச்சமற வேநின்(று)
உற்றுழியும் வாளுரக மென்னவுள ளுகி
மற்றையொரு தோளின்மிசை தட்டியினி மற்போர்
பற்றுகென வீமனுடல் பற்றுபு புகுந்தான்.**

[அற்ற திரள் தோள் துணிய, அச்சம் அற நின்று, உற்றுழியும் (உற்ற உழியும்) வாள் உரகம் என்ன உளன் ஆகி, மற்றை ஒரு தோளின்மிசை தட்டி இனி மல் போர் பற்றுக என வீமன் உடல் பற்றுபு புகுந்தான்.]

**விளக்கம்:-** . அறுபட்ட திரண்ட தோள் துண்டுபட்டு விழவும், அச்சம்இல்லாது களத்தில் நின்று, தனக்குத் தோள் அறவு ஏற்பட்டவிடத்தும் (வீரம் குன்ருமல்) கொடிய பாம்பு போன்ற சீற்றத்தவனுய், (அலம்புசன்) துணிக்கப்படாத மற்ருெரு தோளின் மேல் தட்டிக் கொண்டு, 'இனி மல் போர் செய்க', என்று சொல்லி, வீமனது உடலைப் பற்றுதற்கு நெருங்கினுன், என்பது பொருள்.

**18. குத்துவர் திரிப்பரிரு குன்றனைய தோள்கொண்(டு)
ஒத்துவர் வயப்புலிக ளென்னவுட னேடித்
தத்துவ ருரத்தொடுரம் மூழ்கமுது தகர்போல்
மொத்துவர் சினத்தொடெதிர் முட்டுவர் சிரத்தால்.**

[குத்துவர் திரிப்பர், இரு குன்று அனைய தோள் கொண்டு ஒத்துவர்; வய புலிகள் என்ன உடன் ஓடி தத்துவர் உரத்தோடு உரம் மூழ்க, முது தகர் போல் மொத்துவர் சினத்தொடு முட்டுவர் சிரத்தால்]

**விளக்கம்:-** ஒருவரை ஒருவர் முஷ்டியால் குத்துவர், ஒருவரை ஒருவர் பற்றி முறுக்குவர், அல்லது சுழற்றுவர்; வலிய புலிகள் போல் விரைந்து ஓடி மார்பொடு மார்பு மூழ்க (அழுந்த) பாய்வர், வலிமை முதிர்ந்த ஆட்டுக் கடாக்கள் போல் எதிர் நின்று தலையால் முட்டுவர், சினத்தோடு கைகளால் ஒருவரை ஒருவர் அறைவர்,— என்பது பொருள். முதுதகர் போல் சிரத்தால் எதிர் முட்டுவர், சினத்தோடு மொத்துவர், என்று கூட்டுக. தகர் — ஆடு.

**19. மல்வலி யழிந்துபிறை வாளெயி றரக்கன்**
**வில்வலி யறிந்திடுது மென்றுவி லெடுத்தான்**
**கல்வலிய தோள்விடலை கன்றிவி லெடுத்தான்**
**தொல்வலியி னேடிருவ ருங்கணை தொடுத்தார்.**

[மல்வலி அழிந்து பிறை வாள் எயிறு அரக்கன் வில்வலி அறிந்திடுதும் என்று, வில் எடுத்தான்; கல் வலிய தோள் விடலை கன்றி வில் எடுத்தான், தொல் வலியினேடு இருவரும் கணை தொடுத்தார்.]

**விளக்கம்:-** பிறை வாள் எயிற்று அரக்கன் மல் போரில் வலி ஒடுங்கி, இனி வில் போரில் நமது வலிமையை அறிவோம், என்று சொல்லி, வில்லை எடுத்தான்; கல்லைப் போல் வலிய தோள்களை உடைய வீமன் மனங் கொதித்து வில்லை எடுத்தான். முதிர்ந்த வலிமையோடு இருவரும் அம்புகளைத் தொடுத்தார்கள், — என்பது பொருள். விடலை, ஆண்பால் சிறப்புப் பெயர்.

வில்லேந்திய அரக்கன், ஒரு கையில்லாமையின் பற்களால் அம்புகளைப் பிரயோகம் செய்தான், என்று குறிப்பிக்கவே, ''பிறை வாள் எயிறு அரக்கன்,'' என்ருர்.

**20. கணைகளவை யொன்றினுட னென்றெதிர் கடித்து**
**பிணைபட விழுந்தசெயல் கண்டுநனி பேதுற்(றுறு)**
**இணையில திவர்க்கினி யிரண்டனி கினிக்கும்**
**புணையுமிவ ரென்றனர் புரந்தரனெ டிமையோர்.**

[கணைகள் அவை ஒன்றினுடன் ஒன்று எதிர் கடித்து, பிணை பட விழுந்த செயல் கண்டு நனிபேதுற்று, இணை இலது இவர்க்கு இனி; இரண்டு அனிகினிக்கும் புணையும் இவர் என்றனர் புரந்தரனெடு இமையோர்.]

**விளக்கம்:-** இரு வீரர்களும் செலுத்திய கணைகள் ஒன்றை யொன்று பற்றிக் கொண்டு இரண்டும் ஒன்ருய், தளர விழுந்த செயலை, இந்திரனேடு மற்றைத் தேவர்களும் கண்டு, மதி மயங்கி, ''இவர்களுக்கு உவமையாவது வேறு இல்லை, இரு பக்கத்துச் சேனைகளுக்கும் போராகிய கடலைக் கடப்பதற்குத் தெப்பமும் இவர்

களே,'' என்று கூறினர், என்பது பொருள். கடித்து — களவி, தாக்கி, பற்றி. பேதுறல் — மதி மயங்கல். அனிகினி — சேனை. புணை — தெப்பம்.

இவ்வீரரது விற்போரை வியந்து கொண்டாடினர், என்க.

அலம்புசன் அழிதல்

**21. மலையினையும் வாசுகியை யும்பொருவு நாணும்**
**சிலையுமற மேலொரு செழுங்கணை தொடுத்தான்**
**தொலைவில்பகை யானபகன் மார்புமிரு தோளும்**
**குலைகுலையு மாறுபல குத்தினுயிர் கொண்டான்.**

[மலையினையும் வாசுகியையும் பொருவு நாணும் சிலையும் அற மேல் ஒரு செழுங்கணை தொடுத்தான், தொலைவு இல் பகையான பகன் மார்பும் இரு தோளும் குலை குலையும் ஆறு பலகுத்தின் உயிர் கொண்டான்.]

**விளக்கம்:-** தொலைவு (அழிவு) இல்லாத (பல உயிர்களுக்குப்) பகையாய் அமைந்த பகன் என்ற அசுரனது மார்பும் இரு தோள்களும் குலைந்து அழியும்படி (ஆயுதமில்லாமல்) கைக்குத்தினாலேயே (முன்பு) உயிர் கொன்ற வீமன், மேருமலையினையும் வாசுகி என்னும் பாம்பையும் ஒத்த அலம்புசனது வில்லும் நாணியும் அறும்படி ஒரு சிறந்த சரத்தைப் பிரயோகம் செய்தான், — என்பது பொருள். குலை குலைதல் — (இரட்டைக்கிளவி) நிலைகெடல், நடுங்கல்.

**22. மந்தரமு மந்தரமு மென்னவமர் மலைவான்**
**அந்தரமி தல்லவென வந்தரநெ றிப்போய்க்**
**கந்தர நெடுங்கிரி கரத்தினி லெடுத்தச்**
**சுந்தரன் வயங்குதிர டோடனிலெ றிந்தான்.**

[மந்தரமும் மந்தரமும் என்ன அமர் மலைவான், அந்தரம் இது அல்ல என, அந்தரம் நெறி போய் கந்தரம் நெடுங்கிரி கரத்தினில் எடுத்து, அ சுந்தரன் வயங்கு திரள் தோள் தனில் எறிந்தான்.]

**விளக்கம் :-** மந்தர மலைகள் இரண்டு ஒன்றோடொன்று போர் செய்வது போல் வீமனோடு போர் செய்வானான அலம்புசன், (இவனை வெல்ல) இது (இந்த பூமி) சரியான இடம் அன்று, என எண்ணி, ஆகாய மார்க்கம் சென்று மேகங்கள் படிவதற்கு இடமான ஒரு பெரிய மலையைப் பறித்தெடுத்து, அழகிய வீமனின் விளங்குகின்ற திரண்ட தோளின் மேல் எறிந்தான், — என்பது பொருள்.

அந்தரம்—இடம், ஆகாயம். கந்தரம்—மேகம். மந்தரமும் மந்தரமும் என்ன என்றது இல் பொருள் உவமை.

**23. எறியுமள விற்குரிசி லிளவறிரு மைந்தன்
குறியினெடு வெஞ்சிலை குனித்தருகு நின்றான்
பொறியிலவன் வீசிய பொருப்பொரணு வாகி
முறியும்வகை பல்பகழி முகிலென விடுத்தான்.**

[எறியும் அளவில் குரிசில் இளவல் திருமைந்தன் குறியினெடு வெம் சிலை குனித்து அருகு நின்றான், பொறியில் அவன் வீசிய பொருப்பு ஓர் அணு ஆகி முறியும் வகை, பல் பகழி முகில் என விடுத்தான்.]

**விளக்கம்:-** (அரக்கன் வீமன் மேல் மலையை) எறிந்த அளவில், வீமனைக் காக்குங் கருத்தோடு வெஞ்சிலை குனித்து (அவன்) அருகில் நின்றவனாகிய, வீமனது தம்பியான விசயனது மைந்தனான அபிமன், பொறியில் (வீமனது தோளைக் குறியாக) அவன் (அரக்கன்) வீசிய மலை தூளாய் அழியும் படி பல கணைகளை மழையெனப் பிரயோகம் செய்தான், — என்பது பொருள். குரிசில் — (ஆண்பால் சிறப்புப் பெயர்) வீமன். குறியினெடு — (வீமனுக்கு உதவும்) கருத்தோடு, பொறி — தோள், பொறி இலவன், என்று கொண்டு, ஒரு தோளை இழந்த அரக்கன், என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது, வாழ்வதற்கு விதியில்லாத அரக்கன், என்று கொள்ளலும் அமையும்.

**24. வில்லபிமன் வெங்கணைகள் விசையொடவ னெறியும்
கல்லசல நீறுபடு வித்ததிறல் கண்டே
கொல்லவினி வேண்டுமென வெய்யதொரு கூர்வேல்
வல்லடல ரக்கனகன் மார்பின்மிசை விட்டான்.**

[வில் அபிமன் வெம் கணைகள் விசையொடு அவன் எறியும் கல் அசலம் நீறு படுவித்த திறல் கண்டு (ஏ), கொல்ல இனி வேண்டும் என, வெய்யது ஒரு கூர் வேல் வல் அடல் அரக்கன் அகல் மார்பின் மிசை விட்டான்.]

**விளக்கம்:-** அரக்கன் எறிந்த கல் அசலம் (மலை) தூள் படும்படி செய்த தன் மகனான அபிமன்யுவின் திறமை கண்டு, இனி அரக்கனை கொன்றழிக்க வேண்டும் என எண்ணி (வீமன்) கொடியதான கூரிய வேல் ஒன்றை அரக்கனது அகன்ற மார்பே குறியாகச் செலுத்தினன், என்பதாம்.

கல் அசலம் — உறுதியுடைய மலை வல் அடல், ஒரு பொருட் பன்மொழி; வலி மிகுந்த, என்பது பொருள்.

**25. விட்டவடி வேலுருவ வேலுருவு முன்னே
பட்டவனும் வீழவிரு பாலும்வரு சேனை
முட்டவு மிவன்கணை முனைக்கெதிரி லக்காய்க்
கெட்டனர் நிசாசரர்கள் கிரிகளென வீழ்ந்தார்.**

[விட்ட வடிவேல் உருவ, வேல் உருவும் முன்னே பட்டு அவனும் வீழ, இரு பாலும் வரு சேனை முட்டவும் இவன் கணை முனைக்கு எதிரில் இலக்காய் கெட்டனர் நிசாசரர்கள், கிரிகள் என வீழ்ந்தார்.]

**விளக்கம்:-** வீமன் செலுத்திய வடிவேல் அரக்கன் மார்பைத் துளைக்க, அவ்வேல் துளைத்து அழிக்கும் முன்னேமே அவனும் பட்டு விழ, அதாவது, உயிரழிந்து விழ, அவனது இரு புறத்திலும் துணையாக அவனோடு வந்த சேனை முட்டவும் (முழுவதும்) வீமனது அம்பு முனைக்கு இலக்காய் நிசாசரர் (அரக்கர்கள்) வலி அழிந்து, சிறகு இழந்த மலைகள் போல் விழுந்தனர், என்பதாம்.

வேலுருவ வேல் உருவு முன்னே என்றது வேல் மார்பில் பட்டவுடன், என்ற பொருளது. இவ்வாறு கூறல் மிகையுயர்வு நவிற்சியின் பாற்படும். முட்ட — முற்ற, அல்லது (சினத்தோடு) வீமனைத் தாக்கவும், என்றும் பொருள் கொள்ளலாம்.

**26. ஆறுபடி நூறுபடி யாயிர மரக்கர்**
**மாறுபடு பாடைவட மன்னனொரு கோடி**
**ஊறுபட வெங்கதைகொ டன்றவ னுடைக்கச்**
**சேறுபடு மூளைக டெறித்தன சிரத்தால்.**

[ஆறுபடி நூறுபடி ஆயிரம் அரக்கர், மாறுபடு பாடை வட மன்னர் ஒரு கோடி ஊறுபட, வெம் கதைகொடு அன்று அவன் உடைக்க, சேறுபடு மூளைகள் தெறித்தன சிரத்தால்]

**விளக்கம்:-** படி — அளவு. ஆறுபடி நூறு — ஆறு மடங்கான நூறு. நூறுபடி ஆயிரம் — நூறு மடங்கான ஆயிரம். ஆகவே, அறுநூறு ஆயிரம் அரக்கர், என்பது முதலடியின் பொருள். பேதப்பட்ட பாஷைகளை உடைய வட தேசத்து அரசர்கள் ஒரு கோடி,— என்பது இரண்டாவது அடியின் பொருள். ஊறுபட — காயம் உற. பிளந்த தலைகளிலிருந்து வெளிப்பட்ட சேறுபட்ட மூளைகள் எங்கும் தெறித்தன, என்பது ஈற்றடியின் பொருள்.

வீமன் கதைக் கொண்டு ஆறு லட்சம் அரக்கர்களையும், ஒரு கோடி வடநாட்டு மன்னர்களையும் தாக்கி அழித்தான் என்பதாம்.

**27. முற்பகலின் மைந்தனை முருக்கிய வரக்கன்**
**பிற்பகலில் வீழவடி வேல்கொடு பிளந்தான்**
**சொற்பகலி லானிளவ லென்றனர் துதித்தார்**
**அற்பகலி லாவுலகில் வாழமர ரெல்லாம்.**

[முன் பகலில் மைந்தனை முருக்கிய அரக்கன் பின் பகலில் வீழ, வடிவேல் கொடு பிளந்தான், சொல்பகல் இலான் இளவல் என்றனர் துதித்தார், அல் பகல் இலா உலகில் வாழ் அமரர் எல்லாம்.

**விளக்கம் :-** முன் பகல் — முந்திய நாள், மைந்தன் — இராவான், முருக்கிய அரக்கன் — அழித்த அலம்புசன் ; பின்பகல் — மறுநாள். சொல் பகல் இலான் இளவல்—சொல் பகுதல் அதாவது மாறு படல் இலான் ஆகிய தருமனது அதாவது வாய்மையறம் பிழையாத தருமனது தம்பியான வீமன். அல் பகல் இலா உலகு - இரவு பகல் என்ற வேறுபாடு இல்லாத தேவலோகம்.

தேவர்கள் எல்லோரும், முன் பகலில் இராவாணைக் கொன்ற அலம்புசன் அடுத்த நாள் அழியும்படி வேல் கொண்டு பிளந்த வீமனைப் போற்றினர் என்பதாம்.

**28. காசியர்கள் சேதியர்கண் மாளவர் கலிங்கர்**
**பூசலிடை யேழுபதி னுயிரவர் பொங்கிக்**
**கேசவ னடாவுகிளர் தேர்கெழு சுவேத**
**வாசியுடை யான்விசயன் வாளியின் மடிந்தார்.**

[காசியர்கள் சேதியர்கள் மாளவர் கலிங்கர் பூசலிடை ஏழுபதினுயிரவர் பொங்கி, கேசவன் நடவு கிளர்தேர் கெழு சுவேத வாசி உடையான் விசயன் வாளியின் மடிந்தார்.]

**விளக்கம்:-** காசி நாட்டார், சேதி நாட்டார், மாளவ நாட்டார், கலிங்கத்தார் ஆகிய எழுபதினுயிரவர், போரில் பொங்கி எழுந்து (கடும் போர் செய்து) கண்ணன் நடத்தும் விளக்கமுடைய தேரில் பூட்டப் பெற்ற வெள்ளைக் குதிரைகளை உடையனை விசயன் கணைகளால் மாண்டனர், என்பது பொருள்.

வீடுமன் களம் புகுந்து பொரல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**29. துரகத் தடந்தேர்த் தனஞ்சயன்கை**
**வரிவெஞ் சாபஞ் சொரிகணையால்**
**உரகத் துவசன் பெருஞ்சேனை**
**யொருசா ருடைய வொருசாரில்**
**சருகொத் தனில குமரன்கைத்**
**தண்டா லுடையக் கண்சிவந்து**
**கருகித் திருகி மேனடந்தான்**
**கங்கா நதியா டிருமைந்தன்.**

[துரகம் தடந்தேர் தனஞ்சயன் வரிவெஞ்சிலையால் உரகம் துவசன் பெருஞ்சேனை ஒரு சார் உடைய, ஒரு சாரில் சருகு ஒத்து அனிலகுமாரன் கை தண்டால் உடைய, கண் சிவந்து, கருகி, திருகி மேல் நடந்தான் கங்கா நதியாள் திரு மைந்தன்.]

**விளக்கம்:-** விசயனது அம்புகளால் துரியோதனனது படை ஒரு புறம் அழியவும், ஒருபுறம் வாயுகுமாரனுன வீமனது கதையால் பெருங் காற்றில் பட்ட சருகென வலிகெட்டு அழியவும், வீடுமன் சினத்தால் கண் சிவந்து, முகம் கருகி, மனம் மாறுபட்டு பகைவர்மேல் சென்ருன், என்பதாம். அனிலன் - வாயு.

**30. பட்டக் களிற்றுப் பாய்புரவிப்**
**பைம்பொற் றடந்தேர்ப் பாஞ்சாலர்**
**திட்டத் துய்மன் முதலானோர்**
**சிகண்டி யுடனே யெதிர்தோன்ற**
**வட்டக் கவிகை வீடுமனும்**
**மன்னற் கிளைய காளையரும்**
**எட்டுத் திக்கிற் காவலரும்**
**அவரோ டெய்தி யிகல்செய்தார்.**

[பட்டம் களிறு பாய் புரவி பைம் பொன் தடதேர் பாஞ்சாலர், திட்டத் துய்மன் முதலானோர் சிகண்டியுடனே எதிர் தோன்ற, வட்டம் கவிகை வீடுமனும் மன்னற்கு இளைய காளையரும் எட்டு திக்கின் காவலரும் அவரோடு எய்தி இகல் செய்தார்.]

**விளக்கம்:-** பட்டக் களிறு - நெற்றிப்பட்டத்தை உடைய சிறந்த யானை. நால்வகைச் சேனைகளையும் உடைய பாஞ்சால மன்னர்களாகிய திட்டத் துய்மன் முதலானவர் சிகண்டி என்பானோடு எதிர்வர, வீடுமனும், துரியோதனன் தம்பியரும், எட்டுத் திக்குக் களிலிருந்தும் வந்துள்ள மன்னவர்களும் ஒன்று சேர்ந்து எதிர்த்துப் போர் செய்தார்கள், என்பதாம்.

**31. வரிவெஞ் சிலைக்கைக் கௌரவர்க்கு**
**முதலா முதல்வன் வடிக்கணைகள்**
**தெரியுங் கணத்திற் றெரியாமற்**
**றேருந் தாமுஞ் சிலர்பட்டார்**
**கரியுந் தாமுஞ் சிலர்பட்டார்**
**கலுழ்வாய் மதுகைக் கால்வேகப்**
**பரியுந் தாமுஞ் சிலர்பட்டார்**
**படாதா ருண்டோ பாஞ்சாலர்.**

[வரி வெம் சிலை கை கௌரவர்க்கு முதல் ஆம் முதலோன் வடிகணை தெரியும் கணத்தில் தெரியாமல் தேரும் தாமும் சிலர் பட்டார், கரியும் தாமும் சிலர் பட்டார், கலுழ்வாய் மதுகை கால் வேகம் பரியும் தாமும் சிலர் பட்டார், படாதார் உண்டோ பாஞ்சாலர்.]

**விளக்கம்:-** குரு குலத்தாருள் வயதில் மூத்தவனுன சிறந்த வீடுமன், வடிக்கணை தெரிந்து விட்ட அளவிலே, தாம் அழிகின்

ரேம் என்பது தெரியாமல் தேரும் தாமுமாகச் சிலர் பட்டார், யானையும் தாமுமாகச் சிலர் பட்டார், குதிரையும் தாமுமாகச் சிலர் பட்டார்; பாஞ்சாலரில் வீடுமன் முன் படாதவர் (அழியாதவர்) உண்டோ! (பலர் அழிந்தனர்) என்பதாம்.

கலுழ்வாய் மதுகை கால் வேகப் பரி - நுரையையுடைய வாயும், வலிய காற்றுப் போன்ற கதியும் உடைய சிறந்த குதிரை

**32. நீயுங் ககனங் குடியேற**
**நின்பே ருடல நீணிலத்தில்**
**தோயும் படிநிற் பொரநின்றே**
**னென்றே சொல்லா யிரஞ்சொல்லிச்**
**சேயுந் தனக்கு நிகரில்லாச்**
**சிகண்டி கடுங்காற் சிலைவாங்கிக்**
**காயுங் கணைகட் கிலக்கானன்**
**காமன் கணைக்குங் கலங்காதான்.**

[நீயும் ககனம் குடிஏற, நின்பேர் உடலம் நீள் நிலத்தில் தோயும்படி நின்பொர நின்றேன் என்றே சொல்ஆயிரம் சொல்லி, சேயும் தனக்கு நிகர் இல்லா சிகண்டி கடுங்கால் சிலை வாங்கி, காயும் கணைகட்கு இலக்கு ஆனன் காமன் கணைக்கும் கலங்காதான்.

**விளக்கம் :** சேய் - முருகக் கடவுள். சேயும் நேரில்லாத வனை சிகண்டி, (வீடுமனை நோக்கி) "நீயும் வான் அடையவும், நின் உடல் மண்ணில் விழும்படியும், உன்னோடு போர் செய்ய வந்து நின்றேன்", என்று பலபடி வீரவாதம் செய்துகொண்டு கடிய கால்களையுடைய வில்லை வளைத்து, காயும் கணைகளுக்கு, மன்மதனது கணைகளுக்கும் கலங்காதவனை வீடுமனை இலக்கு ஆக்கினன்,—என்பதாம்.

காமன் கணைக்கும் கலங்காதான், என்றது அவனது உறுதி யுள்ள பிரும்மசர்ய விரதத்தைக் குறிக்கும்.

**33. வில்லோன் சரங்கள் படநகைசெய்**
**தவன்மேற் றனதுவில் வளையாத்**
**தொல்லோ னின்ற நிலைகண்டு**
**துச்சா தனன்றன் சுடுசரத்தால்**
**பல்லோர் வியப்பத் தங்கள்குலப்**
**பகைவன் சேனை பதியிளவல்**
**செல்லோ டணவு நெடுங்கொடியுந்**
**தேருஞ் சிலையுஞ் சிதைவித்தான்.**

[வில்லோன் சரங்கள் பட நகைசெய்து அவன்மேல் தனது வில் வளையா தொல்லோன் நின்ற நிலை கண்டு துச்சாதனன் தன்

சுடுசரத்தால், பல்லோர் வியப்ப தங்கள் குலம் பகைவன் சேனுபதி இளவல், செல்லோடு அணவு நெடுங்கொடியும் தேரும் சிலேயும் சிதைத்தான்.

**விளக்கம் :** வில்லோன் - சிகண்டி. தொல்லோன் - வீடுமன். தங்கள் பகைவன் சேனுபதி - திட்டத்துய்மன். இளவல் - அவனது தம்பியான சிகண்டி. செல் - மேகம். செல் அளவு நெடுங்கொடி - மேகத்தை எட்டுகின்ற (சிகண்டியின்) நீண்ட கொடி. சிகண்டி சரங்கள் தொட பெரியவனுன வீடுமன் நகைத்து வில்லே வளேக்காது இருக்கும் நிலே கண்டு, துச்சாதனன், பலரும் வியக்கும்படி சிகண்டியின் கொடி, தேர், வில் ஆகியவற்றைக் கணேகளால் சிதையச் செய்தான், என்பதாம்.

பெண்ணின்மேல் சரம் செலுத்தா விரதத்தினன் வீடுமன்; சிகண்டி பெண்ணுயிருந்து ஓர் யக்ஷன் அருளால் ஆணுகமாறியவன். எனவே வீடுமன் வில்லெடுத்தலே ஒழித்தான், என்க.

**34. இவனே விலக்கா மென்பகழிக்**
**கென்பான் போல வெங்குலத்தி**
**லவனே செங்கைச் சிலேவீழ்த்தான்**
**அரசன் தம்பிக் கழிந்தவனும்**
**தவனே தயத்தி லிருளென்னச்**
**சாய்ந்தா னென்று தனஞ்சயன் றன்**
**பவனே தயத்தேர் நடுவிட்டான்**
**பணியார் தாமும் புறமிட்டார்.**

[இவனே விலக்கு ஆம் என் பகழிக்கு என்பான் போல எம் குலத்திலவனே செம்கை சிலே வீழ்த்தான்; அரசன் தம்பிக்கு அழிந்து அவனும் தவனேதயத்தில் (தவனன் உதயத்தில்) இருள் என்ன சாய்ந்தான், என்று தனஞ்சயன் தன் பவனேதயம் (பவனம் உதயம்) தேர் நடுவிட்டான்; பணியார் தாமும் புறம் இட்டார்.]

**விளக்கம்:-** எம் குலத்திலவனே - எம் குலப் பெரியோனுன வீடுமன். வீழ்த்தான் - வில்லேக் கீழே போட்டுவிட்டான். அரசன் தம்பி - துச்சாதனன். தவனேதயம் - சூர்யோதயம். பவனேதயத் தேர் - காற்றைப் போன்ற வேகத்தையுடைய தேர். வீடுமனே, 'பிறப்பால் பெண்ணுன சிகண்டியோ என் கணேக்கு ஏற்ற குறி யாவான்', என்று வில்லேப் போட்டுவிட்டான்; அச்சிகண்டியோ துச்சாதனன்முன் தோற்று உதயத்தில் இருள் அகல்வதுபோல் நிலே கெட்டு அகன்ருன், என்று எண்ணித் தனஞ்சயன், தன் தேரை எதிரிகளின் நடுவே செலுத்தினுன்; பணியாதாரும் (எதிரிகளும்) புறங்கொடுத்து ஓடினர், என்பதாம். **தபநன், பவநம்,** வடமொழிச் சொற்கள். தபனன் தவனனென வந்தது.

35. பார்த்தன் கணையாற் பட்டவரைப்
பங்கே ருகத்தோன் பலகோடி
நாத்தந் திலனே யெண்ணுதற்கு
நாமார் புகலத் தேமாலை
மாத்தந் திகளும் புரவிகளுந்
துணியத் துணிய வழிசோரி
நீத்தந் தன்னால் வடவைமுக
நெருப்பொத் ததுகார் நெடுவேலை.

[பார்த்தன் கணையால் பட்டவரை பங்கேருகத்தோன் பல கோடி நா தந்திலனே! எண்ணுதற்கு நாம் ஆர்? தேன் மாலை மா தந்திகளும் புரவிகளும் துணிய துணிய வழிசோரி நீத்தம் தன்னால் வடவை முகம் நெருப்பு ஒத்தது கார் நெடு வேலை.]

**விளக்கம்**:- விசயன் கணைகளால் அழிந்தவரைக் கணக்கிட்டுச் சொல்லுவதற்கு பிரமன் பல நாக்குக்களை நமக்குத் தந்தான் இல்லையே! (ஒரு நாக்கையே உடைய) நாம் யார், விசயனால் அழிந்தாரைக் கணக்கிட்டுச் சொல்லுதற்கு? (விசயன் கணைகளால்) அறுபட்டு அழிந்த யானை குதிரைகளினிடமிருந்து பெருகும் இரத்த வெள்ளம் பாய்தலால் வடவை என்னும் (குதிரையின் முகத்து) நெருப்பைப்போல், கரிய பெரிய கடல் செந்நிறம் அடைந்தது, என்பதாம்.

பங்கேருகம் - தாமரை. பங்கேருகன் - தாமரையில் வாழும் பிரும்மா. விசயனது வெற்றிச் சிறப்பைப் பேசப் பல நாக்குக்கள் வேண்டும், என்பது முதலிரண்டடிகளின், கருத்து. கருங்கடல் குருதிப் பெருக்கால் சிவந்தது என்ற பொருளுடைய ஈற்றடிகள், பிறிதின் குணம் பெறல் அணியின் பாற்படும். இது, கவிக்கூற்று.

சதாநீகன் உயிரொழிதல்

36. மன்னுஞ் சேனை படக்கண்ட
வாட்சந் தனுவின் றிருமைந்தன்
பின்னுந் தனது சிலையேந்திப்
பேணா ரெவரும் பின்காட்டத்
துன்னும் பகழி மழைபொழிந்து
துரக்கும் பொழுது விராடபதி
என்னுங் குரிசி றனக்கிளையோன்
இராமற் கிளையோ னெனத்தக்கோன்.

[மன்னும் சேனை பட கண்ட வாள் சந்தனுவின் திரு மைந்தன், பின்னும் தனது சிலை ஏந்தி பேணார் எவரும் பின் காட்ட துன்னும் பகழி மழை பொழிந்து துரக்கும்பொழுது, விராடபதி

என்னும் குரிசில் தனக்கு இளையோன், இராமற்கு இளையோன் என தக்கோன். அடுத்த செய்யுளோடு தொடரும்]

**விளக்கம்:-** சந்தனுமகன் - வீடுமன். தன் பக்கத்துச் சேனை அழிதல் கண்டு வீடுமன், மறுபடியும் வில்லையெடுத்துச் சரமழை பொழிந்து பேணுரை (பகைவர்களை) விரட்டிய சமயம், விராடபதியின் தம்பியும், இலக்குவன் போன்றவனுமான தன்மையுடையவனும், (தொடரும்), இதுவும் அடுத்த செய்யுளும் குளகம் என்பதாம்.

சிகண்டி களம் அகன்றபின், மீண்டும் எறிந்த வில்லை எடுத்தானுதலால், 'பின்னும் சிலை ஏந்தி', எனப்பட்டது. விராடபதியின் இளவல் வீரத்திலும், தமையனுக்கு அடங்கி நடத்தலிலும், சதாநீகனுக்கு இலக்குவன் உவமையாகின்ருன்.

**37. பண்ணும் பரிமான் றேருடையான்**
**படைத்தேர் மன்னர் பலர்சூழ**
**எண்ணுஞ் சிலைக்கைச் சதாநிகன்வந்**
**தெதிரூன் றுதலு மெண்டிசையும்**
**மண்ணுந் திகைக்கும் படிமலைந்தான்**
**மன்பே ருயிருக் காருயிரும்**
**கண்ணும் போல்வான் கருதலர்க்குக்**
**கடுங்கா லெழுப்புங் கனல்போல்வான்.**

[பண்ணும் பரிமான் தேர் உடையான் படை தேர் மன்னர் பலர் சூழ, எண்ணும் சிலை கை சதாநிகன் வந்து எதிர் ஊன்றுதலும், எண்திசையும் திகைக்கும்படி மலைந்தான், மன்பேர் உயிருக்கு ஆர் உயிரும் கண்ணும் போல்வான், கருதலர்க்கு கடுங்கால் எழுப்பும் கனல் போல்வான்.]

**விளக்கம்:-** பண்ணும் பரிமான் - அலங்கரிக்கப் பெற்ற குதிரை. என்னும் சிலை கை சதாநிகன் - யாவராலும் போற்றப்படும் வில்லைக் கையேந்திய சதாநீகன். சதாநீகன் மன்னர் புடை சூழ எண்ணும் வில்லுடன் (வீடுமன்) முன்வந்து நின்ற அளவில், மன்பேர் உயிர்களுக்கு உயிர்போன்றவனும், கண்போல் எல்லோராலும் போற்றப்படுபவனும், கருதலர்க்கு (பகைவர்க்கு) கடுங்காற்றினல் எழுப்பப்படும் கனல் போன்றவனுமான வீடுமன், எண்திசைகளும், மண்ணுலகமும் வியக்கும்படி போர் செய்தான், என்பதாம்.

திசை, மண், - (ஆகுபெயர்) திசையிலுள்ளோரையும், மண்ணுலகத்தாரையும் குறிக்கும்.

**38. உற்றுச் சமரில் வில்லெடுத்த**
**வுரவோன் றன்னை யுடலோடும்**
**அற்றுச் சென்னி வேருகி**
**வீழத் துணித்தே யம்பொன்ருல்**
**செற்றுக் கங்கை மகனிற்பச்**
**சேரா ரோடத் தேரோனும்**
**இற்றுத் தெரித்த மகுடமென**
**வீழ்ந்தான் புணரிக் கிடையந்தோ!**

[உற்று சமரில் வில் எடுத்த உரவோன் தன்னை, உடலோடும் அற்று சென்னி வேறு ஆகி விழ துணித்தே அம்பு ஒன்ருல் செற்று கங்கை மகன் நிற்ப, சேரார் ஓட தேரோனும் இற்று தெரித்த மகுடம் என வீழ்ந்தான் புணரிக்கு இடை, அந்தோ!]

**விளக்கம்:-** போரில் எதிர்வந்து வில் எடுத்த வலிமையை யுடைய சதாநீகனை, வீடுமன் உடலோடு தலையும் அறுபட்டு வேறு வேருய் விழும்படி அம்பு ஒன்ருல் துணித்து அழித்து நிற்க, சேரார் (எதிரிகள்) ஓட, தேரோனும் (சூரியனும்) தலையிலிருந்து கழன்று விழுந்த (சதாநீகனது), கிரீடம் போல் கடலிடையே விழுந்தான், அதாவது அத்தமித்தான். அந்தோ: இரக்கப் பொருளது.

எப்பொழுதும் சூரியன் தேரில் வருதல் பற்றியும், அவனது தேர் ஒற்றைச் சக்கரம் உடையதாயிருத்தல் பற்றியும், **தேரோன்** என்று குறிக்கப்பட்டான்.

**39. திலத்திற் சின்னம் படமுன்னஞ்**
**சிவேத னுடல்கொண் டுயிர்செகுத்தான்**
**தலத்திற் கனக முடிசிந்தச்**
**சரத்தா லழித்தான் சதாநிகனை**
**வலத்திற் றிகிரி தனையுருட்டு**
**மான்றேர் மச்சத் தவனிபர்தம்**
**குலத்திற் கிவனே கூற்றென்ருர்**
**கூற்றுங் குலையுங் கொலைவேலார்.**

[திலத்தின் சின்னம் பட முன்னம் சிவேதன் உடல் கொண்டு உயிர் செகுத்தான் தலத்தில் கனகம் முடிசிந்த சரத்தால் அழித்தான் சதாநிகனை; வலத்தின் திகிரிதனை உருட்டும் மான் தேர் மச்சத்து அவனிபர்தம் குலத்திற்கு இவனே கூற்று என்ருர், கூற்றும் குலையும் கொலை வேலார்.]

**விளக்கம்:-** திலம் - எள். திலத்தின் சின்னம் - எள்ளின் காய். எள்ளின் காயைப் பிளப்பதுபோல் (வீடுமன்) சிவேதனது உடலைப் பிளந்து அவனது உயிரை அழித்தான் இதன் முன்;

இப்பொழுது, சதாநீகனது கனகமுடி தரை விழும்படி அவனைக் கொன்றான்; ஆதலால், வலிமையால் ஆணைசெல்ல ஆட்சி புரிகின்ற மச்சநாட்டு அரசர்களின் குலத்துக்கு இவன் (வீடுமன்) யமன், என்று யமனும் அஞ்சி நடுங்கும்படி கொலைத் தொழில் புரிய வல்ல வேல் ஏந்திய அரசர்கள் கூறி வருந்தினர், என்பதாம். திகிரி, என்பதற்குத் தேர்ச் சக்கரம், என்று பொருள் கொள்ளலும் அமையும்.

**40. சேந்த நெடுங்கண் முரிபுருவத்**
**திட்டத் துய்மன் சேனையொடும்**
**சார்ந்த நிருப ரைவரொடுந்**
**தானுந் தன்பா சறையடைந்தான்**
**பாந்த ளுயர்த்த துவசனுடன்**
**பைம்பொற் கவரி மதிக்கவிகை**
**வேந்த ருடனும் போய்ப்புகுந்தான்**
**தன்பா சறையில் வீடுமனும்.**

[சேந்த நெடுங்கண் முரி புருவம் திட்டத் துய்மன் சேனையொடும், சார்ந்த நிருபர் ஐவரொடும் தானும் தன் பாசறை அடைந்தான்; பாந்தள் உயர்த்த துவசனுடன் பைம்பொன் கவரி மதி கவிகை வேந்தருடனும் போய் புகுந்தான் தன் பாசறையில் வீடுமனும்.]

**விளக்கம்:-** சிவந்த பெரிய கண்களையும், சினத்தால் நெறிப்புக் கொண்ட புருவங்களையுமுடைய திட்டத்துய்மன், தன்னைச் சேர்ந்த சேனையோடும் பாண்டவர் ஐவரொடும் தன் படை வீடு போய்ச் சேர்ந்தான்; பாம்புக் கொடியோனான துரியோதனனுடனும் அழகிய சாமரங்களையும், மதி போன்ற குடைகளையும் உடைய மன்னர்களுடனும் வீடுமனும் தன் படை வீடு போய்ச் சேர்ந்தான், - என்பது பொருள். சிவந்த, என்பதின் மரூஉ சேந்த.

சூர்யோதயம்

**41. சென்ற பரிதி யாயிரம்பொற்**
**சிகரப் பொருப்புக் கப்புறத்து**
**நின்ற விருளை யிப்புறத்து**
**நீங்கா வண்ணங் குடியேற்றி**
**ஒன்ற வுலக முற்றதுயி**
**லுணர்ந்து வான்போ லுதயமெனும்**
**குன்ற மிசைநின் றனைவரையுங்**
**கரத்தா லெழுப்பக் குணக்கெழுந்தான்.**

[சென்ற பரிதி ஆயிரம் பொன் சிகரம் பொருப்புக்கு அ புறத்து நின்ற இருளை இ புறத்து நீங்கா வண்ணம் குடி ஏற்றி, ஒன்ற உலகம் உற்ற துயில் உணர்த்துவான்போல் உதயம் எனும் குன்றம் மிசை நின்று அனைவரையும் கரத்தால் எழுப்ப குணக்கு எழுந்தான்.]

**விளக்கம்:-** சென்ற பரிதி - சென்ற நாள் அஸ்தமித்த சூரியன். ஆயிரம் பொன் சிகரம் பொருப்பு - பொன் மயமான ஆயிரம் ஆயிரமான சிகரங்களை உடைய மேருமலை. குடியேற்றி - தங்கச் செய்து. கரம் - கிரணம். குணக்கு எழுந்தான் - கிழக்குத் திசையில் தோன்றினன். பூமியின் மத்தியில் இருக்கும் மலை மேருமலை. அதன் தென் புறம் இருள் இருக்கும் பொழுது அதன் வடபுறம் பகல் பொழுதாகும். மேருவின் வடபுறம் இருந்த இருளைச் சூரியன் மாலையில், தென் புறத்தில் நீங்காதபடி தங்கச் செய்து, அதன்பின் அதாவது, இரவு கழிந்தபின், துயின்ற உலகத்தை விழிக்கச் செய்வான் போல், உதயம் என்னும் குன்றில் நின்று கொண்டு தனது கிரணங்களால் எழுப்புதற்குக் கிழக்கே தோன்றினன், - என்பதாம்.

பொழுது விடிய எல்லோரும் கண் விழித்தலைச் சூரியன் தனது கிரணங்களாகிய கைகளால் தொட்டுத் துயிலுணர்த்தியதாகக் கூறியது தற்குறிப்பேற்ற அணி.

**ஒன்பதாம் போர்ச் சருக்கம் முற்றும்.**

# பத்தாம் போர்ச் சருக்கம்

## கடவுள் வாழ்த்து

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

**1. வலியி னன்று தந்தை செற்ற மைந்தனுக்கு வந்தபேர்**
**நலிவெ லாம கற்று நாம நாலி ரண்டெ ழுத்துடன்**
**பொலியு நாம மறைகள் சொன்ன பொருள் விளக்கு நாமமுன்**
**கலிய னெங்கண் மங்கை யாதி கண்டு கொண்ட நாமமே.**

[வலியின் அன்று தந்தை செற்ற மைந்தனுக்கு வந்த பேர் நலிவு எலாம் அகற்றும் நாமம், நால் இரண்டு எழுத்துடன் பொலியும் நாமம், மறைகள் சொன்ன பொருள் விளக்கும் நாமம், - முன் கலியன் எங்கள் மங்கை ஆதி கண்டு கொண்ட நாமமே.]

**விளக்கம்:-** முன்னொரு காலத்தில் வலிமையினால் தந்தையாகிய இரணியன் வருத்திய மைந்தனை பிரகலாதனுக்கு உண்டான துன்பங்களை எல்லாம் தீர்த்தருளிய நாமம், - (அது)

எட்டு அட்சரங்களுடன் பொலியும் திவ்யநாமம், - வேதங்கள் சொன்ன தத்துவப் பொருள்களை எல்லாம் விளக்கி வைக்கும் நாமம், - முன் கலியன் என்ற பெயருடையவனும், மங்கை நகரின் தலைவனுமான, எங்கள் திருமங்கை ஆழ்வார் கண்டு கொண்ட **"ஓம் நமோ நாராயணாய,"** என்ற திரு நாமம், - என்பது பொருள்.

இதனால், பாரதம் பாடிய வில்லிபுத்தூரர் தீர்ந்த வைணவர் என்பதும், திருமங்கை யாழ்வாரின் அருளிச் செயலில் ஈடுபாடு உடையவர் என்பதும் பெறப்படும்.

**2. தரும ராசன் மதலை பஞ்ச சயன நின்றெ ழுந்தபின்
கரும மான காலையிற் கடன்க ழித்து நேமியம்
பெரும னோடு சென்று தக்க பெற்றி பேசி வெற்றியின்
பொரும கீபர் சூழ நின்ற விளைஞ ரோடு போதவே.**

[தருமராசன் மதலை பஞ்சசயனம் நின்று எழுந்தபின், கருமம் ஆன காலையில் கடன் கழித்து நேமி அம் பெருமனோடு சென்று தக்க பெற்றி பேசி, வெற்றியின் பொரு மகீபர் சூழ நின்ற இளைஞரோடு போத, ஏ.]

**விளக்கம்:-** பஞ்சசயனம் - படுக்கை, அதாவது, அழகு, குளிர்ப்பு, மார்த்தவம் (மிருதுத் தன்மை) பரிமளம், தாவள்யம் ஆகிய தன்மையுடைய படுக்கை. காலையில் கடன் ஆன கருமம், என்று இயைக்க. பெற்றி - வினைமுறை. தருமன் கண் விழித்து எழுந்த பின் காலைக் கடன்களைச் செய்து முடித்து, அழகிய சக்ராயுதத்தையுடைய பெருமானை கண்ணபிரானிடம் சென்று, அன்று செய்யத்தக்க காரியமுறைகளைப் பற்றிப் பேசி, வெற்றி யோடு போர் செய்யவல்ல மன்னர் சூழ்ந்துவரத் தம்பியரோடு புறப்பட்டுச் செல்ல, - (அடுத்த செய்யுளோடு தொடரும்), என்பதாம். பெருமன் என்பது, பெருமான் என்பதின் குறுக்கல் விகாரம்.

**3. திரண்டு பல்லி யங்க டேவர் செவிபு தைக்க வானிடைப்
புரண்டெ ழுந்த தூளி கண்பு தைக்க மெய்ப தைக்கவே
முரண்டொ டங்கு சேனை வந்து முன்னர் நாளை யூகமே
அரண்டொ டங்கு யூக மாக வாக வத்து ளணியவே.**

[திரண்டு பல் இயங்கள் தேவர் செவி புதைக்க, வானிடை புரண்டு எழுந்த தூளி கண் புதைக்க (ஏ), முரண் தொடங்கு சேனை வந்து முன்னர் நாளை யூகமே, அரண் தொடங்கு யூகம் ஆக ஆகவத்துள், அணிய, ஏ]

**விளக்கம்:-** பலவகைப் பட்ட வாத்தியங்களின் ஒலி தேவர் தம் செவிகளை அடைக்கவும், (சேனையின் எழுச்சியால்) வான் எழுந்த தூளி அவர்தம் இமையாக் கண்களை மறைக்கவும், போர் தொடங்க இருக்கும் பாண்டவசேனை (போர் செய்ய) உடல் துடிக்கவும் வந்து, சென்ற நாள் வியூகமே அரண்தரவல்ல வியூகம் ஆகும்படி ஆகவத்துள் (போர்க் களத்தில்) அணி வகுத்து நிற்க, (அடுத்த செய்யுளோடு தொடரும்) - என்பதாம். ஒலியால் செவியும், புழுதியால் கண்ணும் புதைக்கப் பட்டதால், தேவர் உடல் பதைத்தனர், என்றலும், அமையும்.

வீடுமன் களம் வரல்

**4. வீடு மன்னெ னுந்த டக்கை வீர மன்னும் வெஞ்சுடர்க்**
**காடு மன்னு பரிதி யைக்க ரங்கு வித்தி ருந்தபின்**
**தோடு மன்வ லம்பு ரித்து லங்கு தாம நிருபனும்**
**நீடு மன்னர் பலரும் வாயி லிருபு றத்து நிற்கவே.**

[வீடுமன் எனும் தடக்கை வீரம் மன்னும், வெம் சுடர் காடு மன்னும் பரிதியை கரம் குவித்து இருந்தபின், தோடு மன் வலம்புரி துலங்கு தாமம் நிருபனும் நீடு மன்னர் பலரும் வாயில் இரு புறத்தும் நிற்க, ஏ.]

**விளக்கம்:-** வெம் சுடர்க்காடு மன்னு பரிதி - வெப்பமான ஒளியின் அடர்த்தி பொருந்திய சூரியன். தோடுமன் வலம்புரி - இதழ்கள் நிறைந்த நஞ்சவெட்டைப் பூ. வீடுமன் என்னும் மன்னனும், காலைக் கடன்களை முடித்து, அதாவது சூரிய நமஸ்காரம் செய்து முடித்த பிறகு, நஞ்சாவட்டை மாலை அணிந்த துரியோதனனும், மற்றும் பல பெரிய அரசர்கள், தனது பாசறை யின் வாயிலின் இரு புறத்திலும் நிற்க, - (தேர் ஏறினன், என்று அடுத்த செய்யுளோடு தொடரும்), என்பதாம். **திரிபு** என்னும் சொல்லணி செய்யுளில் அமைந்துளது.

**5. வனைந்தி லங்கு கழலு முத்து வடமும் வாகு வலயமும்**
**புனைந்த செம்பொன் மவுலி யோடு பொற்பின் மீது பொற்பெழ**
**முனைந்த டங்க வின்று நாமு டித்தும் வெய்ய போரெனு**
**நினைந்து தன்பனைப் பதாகை நீடு தேரி லேறினன்.**

[வனைந்து இலங்கு கழலும், முத்து வடமும், வாகுவலயமும், புனைந்த செம் பொன் மவுலியோடு பொற்பின்மீது பொற்பு எழ, முனைந்து அடங்க இன்று நாம் முடித்தும் வெய்ய போர் எனு, நினைந்து, தன் பனை பதாகை நீடு தேரில் ஏறினன்.]

**விளக்கம்:-** வனைந்து இலங்கு கழல் - அணியப்பட்டு விளங்கு கின்ற வீரக் கழல். மவுலி - கிரீடம். பொற்பின்மீது பொற்பு எழ -

தனது இயற்கை அழகின்மீது செயற்கை அழகு பொருந்த. இன்று நாம் வெய்ய போர் அடங்க முனைந்து முடித்தும், என்று மூன்ருவது அடியை இயைக்க. வீடுமன் ஆடை ஆபரணங்கள் அணிந்து, ''இன்றுடன் கொடிய போரை (பகை) அடங்கும்படி போர் செய்து முடித்து விடுவோம்,'' என்று எண்ணிப் பனைமரக் கொடியுடைய தனது தேரில் (வீடுமன்) ஏறினன், என்பதாம். முனைந்து - போர் செய்து.

**6. சுற்ற ருத வில்லி னன்றொ டைமி டைந்த தூணியன்**
**கொற்ற வாகை வாளி னேடு கூர வீர வேலினன்**
**மற்று மாயு தங்க ளோடு மன்ன ரோடும் வார்முர(சு)**
**எற்று மார வத்தி னேடு மடுக ளத்தி னெய்தினன்.**

[சுற்று அருத வில்லினன், தொடை மிடைந்த தூணியன், கொற்றம் வாகை வாளினேடு கூர வீர வேலினன், மற்றும் ஆயுதங்களோடும் மன்னரோடும் வார் முரசு எற்றும் ஆரவத்தினேடும் அடுகளத்தின் எய்தினன்.]

**விளக்கம்:-** சுற்று அருத - கட்டு நீங்காத. தொடை - அம்பு. ஆரவம் - பேரொலி. வில் வாள் வேல் முதலிய ஆயுதங்களோடும் வேறு பல ஆயுதங்களோடும், (தன்னைச் சூழ்ந்து வரும்) மன்னர்களோடும் முரசங்களின் முழக்கத்தோடும் (வீடுமன்) அடுகளம் அடைந்தான், என்பதாம். செய்யுள் சுலபமானதே.

**7. தானு முன்ன ணிந்த வாறு தானை தன்னை நிறுத்தியச்**
**சேனை மன்னன் வந்து நின்ற நிலைமை கண்டு செங்கண்மால்**
**வானி னின்றி ழிந்த கங்கை மைந்த னுக்கு வானுலாம்**
**யான மின்ற ளித்தி யென்று விசைய னேடி சைக்கவே.**

[தானும் முன் அணிந்த ஆறு தானை தன்னை நிறுத்தி அ சேனை மன்னன் வந்து நின்ற நிலைமை கண்டு செங்கண்மால், ''வானினின்று இழிந்த கங்கை மைந்தனுக்கு வான் உலாம் யானம் இன்று அளித்தி,'' என்று விசயனேடு இசைக்கவே.]

**விளக்கம்:-** சேனை மன்னனை வீடுமன் தானும் சென்ற நாள் வகுத்தபடி சேனையை அணி வகுத்து நிறுத்தி, களத்தின் முன்னிடத்தில் நின்ற நிலைமை கண்டு கண்ணபிரான், விசயனை நோக்கி, ''வானிலிருந்து இழிந்த கங்கையின் மைந்தனுக்கு இன்று வானுலகம் செல்லும் யானம் (விமானம்) அளிப்பாயாக,'' என்று சொல்ல, - (தொடரும். இதுவும் தொடரும் ஐந்து செய்யுள்களும் குளகம்) என்பது பொருள்.

யானம் அளித்தல் - தேவ விமானத்தில் ஏறி சுவர்க்கம் செல்லச் செய்தல். வானினின்று இழிந்த, என்ற அடையை கங்கையோடும், மைந்தனேடும் சேர்க்கலாம். கங்கைக்கு

அடையாகக் கொண்டால், பூமிக்குக் கொணரப் பகீரதன் செய்த முயற்சியைக் குறிக்கும். மைந்தனுக்கு அடையாகக் கொண்டால், வசிட்டரது சாபத்தால் பீஷ்மனாய்ப் பிறந்த வசுவின் சரித்திரத்தைக் குறிக்கும்.

**8. போரி னண்டர் பகையை முன்பு பொருது வென்ற வின்மையான்**
**மூரி வெங்கொ டிக்கு ரங்கு முன்ன டக்கு மேன்மையான்**
**வாரி தங்கொண் மேனி யான்வ னம்பு குந்து வருதலான்**
**யாரு மின்றி ராம னென்ன விசைய நின்ற விசயனே.**

[போரின் அண்டர் பகையை முன்பு பொருது வென்ற வின்மையான், மூரி வெம் கொடி குரங்கு முன் நடக்கும் மேன்மையான், வாரிதம் கொள் மேனியான் வனம் புகுந்து வருதலான், யாரும் இன்று இராமன் என்ன இசைய நின்ற விசயனே.]

**விளக்கம்:-** முன்பு அண்டர் பகைவரை போரில் தாக்கி வென்ற வில்தொழிலாலும், தேர் முன் உள்ள வலிய பயங்கரமான கொடியில் அனுமான் பொருந்தியுள்ள மேன்மையாலும், மேகம் போன்ற திருமேனியினாலும், காட்டில் பன்னிரண்டு வருஷங்கள் சஞ்சாரம் செய்து வந்ததனாலும், இக்காலத்து இராமன் என்று எல்லோரும் சொல்லுதற்கு ஏற்றவாறு நின்ற விசயன், (தொடரும்) என்பது பொருள். வாரிதம் - மேகம்.

திருமாலின் அவதாரமான தசரதராமனுக்கும் அருச்சுனனுக்கும் உள்ள ஒற்றுமை சிலவற்றால், இவனுக்கு இராமன் உவமையாகின்றான். அண்டர் பகையான இராவணாதியரை இராமன் வென்றது போல் இவனும் நிவாதகவசர் காலகேயர்களை வென்றுள்ளான். இராமனுக்குப் படையில் அனுமான், இவனுக்குக் கொடியில் அனுமான். இருவரும் மேகம் போன்ற நீலமேனியர். இருவரும் வனவாசம் செய்தவர்கள். எனவே, இந்தக் காலத்து இராமன் என்று விசயன் சொல்லத்தக்கவனாகின்றான்.

விசயன் கண்ணனுக்குக் கூறல்

**9. சிலைப தாகை யிவுளி தேர் செழுங் கனல ளித்தன**
**வலவன் யாரெ னிற்கு றிப்பொ டென்னை யாள வந்தநீ**
**தலம கீப ரல்ல தேவர் தான வரெ திர்ப்பினும்**
**கொலைப டாம லேவர் போவர் குன்றெ டுத்த கோவலா.**

[சிலை பதாகை இவுளி தேர் செழுங்கனல் அளித்தன, வலவன் யார் எனில் குறிப்பொடு என்னை ஆளவந்த நீ, தலம் மகீபர் அல்ல தேவர் தானவர் எதிர்ப்பினும் கொலை படாமல் ஏவர் போவர் குன்று எடுத்த கோவலா.]

**விளக்கம்:-** குன்று எடுத்த கோவலா, என்று கண்ணனை அழைத்து விசயன் கூறுவான். காண்டீவம் என்னும் வில்லும், குரங்குக் கொடியும், வெள்ளைக் குதிரைகளும், சிறந்த தேரும் அக்னிதேவன் தந்தவை. தேர்ப்பாகன் யாரெனில், திருவுளக் கருத்தோடு என்னை ஆளவந்த நீ; அவ்வாருக, மண்ணுலக வேந்தர் அல்லாமல் தேவர்களும் தானவர்களும் ஒன்று பட்டு வந்தாலும் கொல்லப் படாமல் எவர் தப்பிப் போவர்?, என்று விசயன் கூறும் பொருளது.

பதாகை - கொடி. மகீபர் அல்ல, என்றது திணைவழு. அல்லது, இல்லை, உண்டு என்பன போல் இருதிணை ஐம்பால், மூவிடத்திற்கும் பொதுவாகக் கொள்ளலும் அமையும்.

**10. எந்தை யாக துணைவ ராக தனய ராக வெந்தைதன்**
**தந்தை யாக நீயு ரைக்கில் யாரை யுந்த றிப்பன்யான்**
**முந்தை யார ணங்க ளுக்கு முடிவி னின்ற பொருளையென்**
**சிந்தை யார முற்று வித்து வினைய றுத்த செம்மலே.**

[எந்தை ஆக, துணைவர் ஆக, தனயர் ஆக, எந்தை தன் தந்தை ஆக, நீ உரைக்கில் யாரையும் தறிப்பன் யான், - முந்தை ஆரணங்களுக்கு முடிவின் நின்ற பொருளை என் சிந்தை ஆர முற்றுவித்து வினை அறுத்த செம்மலே.]

**விளக்கம்:-** ஈற்றடிகளை முதலில் வைத்துப் படிக்கவும். பழமையான வேதங்களின் அந்தம் என்று சொல்லப்படும் உபநிடதங்களில் புதைந்து நின்ற தத்துவப் பொருள்களை என் மனம் நிறையும்படி (எனக்கு) உபதேசித்து எனது கருமங்களை ஒழித்த பெரியோனே, நீ சொன்னுல்,-தந்தையாகட்டும்; சகோதரர்கள் ஆகட்டும், மக்கள் ஆகட்டும், பாட்டன் ஆகட்டும், எதிர்ப்பவர் அனைவரையும் அழிப்பேன்,—என்று விசயன் கூறியபடி.

'சுற்றம் என்பந்தத்தால் மலையேன்' என்று கூறிய விசயன், கீதோபசத்தால் தெளிவு கொண்டு, இறைவனது திருவுளத்தை நிறைவேற்றுவதே தனக்குரிய தர்மம் என்ற எண்ணத்தால் இவ்வாறு கூறினன், என்க.

## வீடுமன் பொரல்

**11. என்ற போது வந்து தேவ விரத னின்ற வெல்லையில்**
**குன்ற மன்ன தேர்க டாவி யருக ணைந்த கொற்றவர்**
**ஒன்று பட்ட சேனையோடி யாவ ரும்மு டன்றுபோய்**
**நின்ற சேனை நிருபன் மேனி ரைத்து வாளி தூவவே.**

[என்ற போது வந்து தேவவிரதன் நின்ற எல்லையில், குன்றம் அன்ன தேர் கடாவி அருகு அணைந்த கொற்றவர் ஒன்று பட்ட சேனையோடு யாவரும் உடன்று போய் நின்ற சேனை நிருபன்மேல் நிரைத்து வாளி தூவ, ஏ.]

**விளக்கம்:-** (இவ்வாறு விசயன் கண்ணனிடம்) கூறியபோது, குன்றை ஒத்த தேரைச் செலுத்திக் கொண்டு (விசயன்) அருகு அணைந்த அரசர்கள் யாவரும், ஒன்றுபட்ட சேனையோடு, தேவ விரதன் (வீடுமன்) களம் வந்து நின்ற அளவில், பகைத்துச் சென்று, எதிரில் நின்ற சேனையின் தலைவனான வீடுமன் மேல் கணைகளைத் தொடர்ந்து வரிசையாக ஏவ, (தொடரும்)—என்பது பொருள்.

**12. பலரு மெய்த வாளி மெய்ப டப்ப டப்ப னித்துநாப்**
**புலர நொந்து கங்கை மைந்த னிதய மும்பு ழுங்கினன்**
**மலரு கின்ற வார்ப னிக்கு டைந்து சால மாழ்கிநீ(டு)**
**அலரு மந்த நிறம ழிந்த வம்பு சாத மென்னவே.**

[பலரும் எய்த வாளி மெய் படப்பட பனித்து நா புலர நொந்து கங்கை மைந்தன் இதயமும் புழுங்கினன், மலருகின்ற வார் பனிக்கு உடைந்து சால மாழ்கி நீடு அலரும் அந்த நிறம் அழிந்த அம்புசாதம் என்ன, ஏ.]

**விளக்கம்:-** (விசயன் பக்கத்து அரசர்) பலரும் ஏவிய அம்புகள் மிகுதியாகத் தைக்க வீடுமன் வருந்தி, நாக்கு வறள, மிக நொந்து, எங்கும் மிகுதியாகப் பரவுகின்ற மூடுபனிக்கு வருந்தி மிகவும் வாடி நீண்டு மலர்ந்து விளங்கும் அந்த நிறத்தின் நலம் கெட்ட தாமரைபோல் மனமும் புழுங்கினன்,—என்பது பொருள்.

பனித்து - வருந்தி. மலருகின்ற வார்பனி - எங்கும் பரவுகின்ற மூடுபனி. உடைந்து - வருந்தி. மாழ்கி - வாடி. நிறம் - தாமரைக்கு உரியதான நிறம். அம்பு சாதம் - தாமரை.

பனிக்குத் தாமரை வாடுவது போல் எந்நிலையிலும் தளராத் தன்மையினனான வீடுமன் தளர்ந்தான், என்றது, அவனது இறுதிக் காலமாகிய மூடுபனி வந்து பற்றியது, என்ற குறிப்பினது.

**13. துன்னி மித்த மும்ப லதொ டர்ந்து செய்ய வெய்யவாம்**
**அந்நி மித்த நன்னி மித்த மாகு மென்ற கந்தெளிந்து**
**உன்னி மித்தி ரர்க்கு நாளு முதவி செய்யு முறுதியோன்**
**வின்னி மித்த வாளி யாலவ் வாளி கள்வி லக்கினன்.**

[துன்னிமித்தமும் பல தொடர்ந்து செய்ய வெய்யவாம் அநிமித்தம், நல் நிமித்தம் ஆகும் என்று அகம் தெளிந்து உன்னி

மித்திரர்க்கு நாளும் உதவி செய்யும் உறுதியோன் வில் நிமித்தம் வாளியால் அ வாளிகள் விலக்கினன்.]

**விளக்கம்:-** களம் வந்ததும் துர்நிமித்தங்கள் பல தொடர்ந்து உண்டாக, கொடியனவாகிய அந்நிமித்தங்களை நல்ல நிமித்தங்கள் ஆகும் என்று, நண்பர்களுக்கு எந்நாளும் உதவும் உறுதியான குணமுடைய வீடுமன் கருதி, மனம் தெளிந்து, வில்லைக் கருவியாக உடைய அம்புகளைக் கொண்டு, பகைவர் (தன்மேல் ஏவிய) அந்த அம்புகளைத் தடுத்தான், என்பது பொருள்.

வரவிருப்பதைத் தெரிவிக்கும் அறிகுறி, நிமித்தம்: அது, துர் நிமித்தம் என்றும், நல்நிமித்தம் (நல்ல நிமித்தம்) என்றும் இரு வகைப்படும். ஆடவர்க்கு இடக்கண்ணும் இடத்தோளும் துடிப் பது, துர்நிமித்தம். இப்பொழுது உண்டான நிமித்தங்களை, வீடுமன் நன்னிமித்தங்களாகக் கருதியது, உலக வாழ்க்கை தனக்கு அறுதல் பற்றியும், தர்மத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டு வாழும் பாண்டவர் வெற்றி பெறுவர் என்ற எண்ணத்தினலும், ஆகும். அம்பு தொடுக்க வில் கருவியாதல் பற்றி, ''வில் நிமித்த வாளி'', எனப்பட்டது.

**14. துருப தேயர் மகத நாடர் வெங்கு லிங்கர் சோனகர்**
**கருந டேசர் சிங்க ளர்க டார பூபர் கௌசலர்**
**தரும ராசன் மதலை சேனை முதுகி டச்ச ரங்கள்போய்**
**ஒருவர் போல வனைவர் மேலு முருவ வெய்து றுக்கினன்.**

[துருபதேயர், மகத நாடர், வெம் குலிங்கர், சோனகர் கருநட ஈசர் சிங்களர், கடாரபூபர், கௌசலர் ஆகிய தருமராசன் மதலை சேனை முதுகு இட, சரங்கள் போய் ஒருவர் போல அனைவர் மேலும் உருவ எய்து உறுக்கினன்.]

**விளக்கம்:-** தருமனது சேனையிலுள்ள துருபதேயர் முதல் கௌசலர் ஈருகவுள்ள நாட்டு அரசர்களும் பின்னிடும்படி ஒருவர் போல் அனைவர் மேலும் சரங்கள் பாய்ந்து துளக்கும்படி (வீடுமன்) பாணங்களை ஏவிச் சினந்தான்; அதாவது, சினந்து அம்புகளைத் தொடுத்தான், என்பதாம். கருநட ஈசர் - கருநாடகத்தரசர் (கர்நாடக தேச அரசர்.)

**15. முடிது ணிந்து பின்பு வீழ முன்ன டந்து டற்றுவார்**
**அடிது ணிந்து விழவி ருந்த லங்கல் வில்வ ணக்குவார்**
**கொடிது ணிந்து விற்று ணிந்து கோரெடு டுத்த கையுடன்**
**தொடி துணிந்து சோரி வெள்ள நதியி னூடு சோருவார்.**

[முடி துணிந்து பின்பு வீழ முன் நடந்து உடற்றுவார், அடி துணிந்து விழ இருந்து அலங்கல் வில் வணக்குவார் கொடி

துணிந்து, வில் துணிந்து, கோல் தொடுத்த கையுடன் தொடி துணிந்து, சோரி வெள்ளம் நதியினூடு சோருவார்.]

**விளக்கம்:-** (தருமன் சேனையிலுள்ள வீரர்) தலை அறுபட்டுப் பின் விழுந்த பின்னும், முன்னே சென்று போர் செய்பவர்களும், கால்கள் அறுபட்டு விழுந்த பின்னும் கீழேயிருந்து கொண்டே மாலை சூடிய வில்லை வளைப்பவர்களும், கொடி, வில் அம்புகளைத் தொடுத்த தொடி அணிந்த கை ஆயவை அறுபட்டு, இரத்தப் பெருக்காகிய நதியிலே தளர்ந்து விழுபவர்களும் ஆயினர், என்பதாம்.

கால்களும் தலைகளும் அறுபட்ட பின்னும் உடல் குறைகள் உடன்றன என்றது, வீரர்களின் வீராவேசத்தைக் குறிக்கும்.

**16. மருத்தெ றிந்த பூழி யென்ன வந்த வாம டங்குவார்**
**உருத்தெ றிந்த வுருமி னொந்த வுரக மென்ன வுட்குவார்**
**ஒருத்த ரோட வென்னி தென்ற நேக ரஞ்சி யோடுவார்**
**விருத்தன் வில்வ ளைத்த வாண்மை விசய னுக்கு மிசையுமோ.**

[மருத்து எறிந்த பூழி என்ன வந்த ஆமடங்குவார், உருத்து எறிந்த உருமின் நொந்த உரகம் என்ன உட்குவார், ஒருத்தர் ஓட என் இது என்று அநேகர் அஞ்சி ஓடுவார்; விருத்தன் வில் வளைத்த ஆண்மை விசனுக்கும் இசையுமோ!]

**விளக்கம்:-** காற்றினால் எழுப்பப் பெற்ற புழுதி மீண்டும், பூமியில் விழுந்து அடங்குவது போல், (தருமனது சேனாவீரர்) வந்த வழியே திரும்புவார்; பயங்கரமாய் இடித்த இடியினால் வருந்தி ஒடுங்கும் நாகம் போல் அஞ்சி வலி ஒடுங்குவார்; ஒருவர் (முன் நிற்க மாட்டாமல்) ஓட, மற்றவர், 'என் இது?' என்று சொல்லிக் கொண்டு அஞ்சி ஓடுவர்; வயது முதிர்ந்தவனான வீடுமன் வில் வளைத்துச் செய்த வில்லாண்மை விசயனுக்கும் பொருந்துமோ! - என்பது பொருள்.

வில் தொழிலில் பேர் பெற்ற விசயனாலும் செய்ய முடியாத வழி இன்று வீடுமன் போர் செய்தான், என்றபடி.

வேறு

**17. வெம்புயவி சாலவட மேருவொரி ரண்டுடைய**
**வீடுமனை நீடு முனைவாய்**
**அம்புதமெ ழுந்துபொழி கின்றவழி யோடிவரு**
**மனிலமென வந்த ணுகினார்**

**செம்பியனு மாகிருப னுஞ்செறிது ரோணனெடு**
**சேயொடுசெ யத்தி ரதனும்**
**தம்பியரு மாமனுஞ்ச யிந்தரொடு வெய்யபக**
**தத்தனெடு சல்லி யனுமே.**

[வெம் புயம் விசாலம் வடமேரு ஓர் இரண்டு உடைய வீடுமனை நீடு முனைவாய், அம்புதம் எழுந்து பொழிகின்ற வழி ஓடிவரும் அனிலம் என வந்து அணுகினர், செம்பியனும், மா கிருபனும், செறி துரோணனெடு சேயொடு செயத்திரதனும், தம்பியரும் மாமனும், சயிந்தரொடு வெய்ய பகதத்தனெடு சல்லியனும், ஏ.]

**விளக்கம்:-** பெரிய போர்க் களத்திலே, வலிய புஜங்களாகிய பெரிய வடக்கிலுள்ள மேருமலைகள் இரண்டையுடைய வீடுமனை, அம்புதம் (மேகம்) வான் எழுந்து மழை பொழியும் இடத்தே, அதற்குத் துணையாக ஓடிவரும் அனிலம் (காற்று) போல், செம்பியன், கிருபன், துரோணன், அவன் மகன், செயத்ரதன், துரியோதனன் தம்பியர், சகுனி, சயிந்தர், சல்லியன் ஆயவர் துணையாக வந்து சேர்ந்தனர், என்பது பொருள்.

சயிந்தர் - சிந்து நாட்டார். மழையொடு காற்றும் சேர்ந்து உலகத்தை துன்புறச் செய்தல் போல், வீடுமனேடு அரசர் பலர் சேர்ந்து கொண்டு பாண்டவசேனையை வருத்தினர், என்பதாம். நீரைக் கொடுப்பது அம்புதம், எனவே மேகம்.

**18. மனஞ்செய்வலி கூர்கசது ரங்கம பதாதியி**
**ரதத்துடன் வளைந்து பலரும்**
**தனஞ்சய மடங்கலெதிர் சாபமும் வளைத்தெதிர்**
**சரங்களு முகைத்தமர் செய்தார்**
**கனஞ்சலதி மொண்டுகொ டெழுந்தனைய வண்ணனெரு**
**காரமுகம் வணக்கி யொருநூ(று)**
**இனஞ்சரமொ ரோர்தொடையி லேவியவ ரேவுசரம்**
**யாவுமெதி ரேவி லகினன்.**

[மனம் செய் வலி கூர் கச துரங்கம பதாதி இரதத்துடன் வளைந்து பலரும் தனஞ்சயன் மடங்கல் எதிர் சாபமும் வளைத்து எதிர் சரங்களும் உகைத்து அமர் செய்தார்; கனம் சலதி மொண்டு கொடு எழுந்த(து) அனைய வண்ணன் ஒரு கார்முகம் வணக்கி ஒரு நூறு இனம் சரம் ஓர் ஓர் தொடையில் ஏவி அவர் ஏவு சரம் யாவும் எதிர் விலகினன்.]

**விளக்கம்:-** (அரசர்கள்) பலரும் தைரியம் மிகுந்த யானை குதிரை காலாள் படையுடனும் தேர்களுடனும் சுற்றிக்கொண்டு தனஞ்சயனுகிய சிங்கத்தின் எதிரில் வில் வளைத்து, அவன்மேல்

சரங்களைச் செலுத்திப் போர் செய்தார்கள்;—என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். (அப்பொழுது) மேகம் போல் கரிய மேனியனை விசயன் தனது சிறந்த காண்டீவம் என்னும் கார் முகத்தை (வில்லை) வளைத்துக் கூட்டமான ஒரு நூறு சரங்களை (எதிரிகள் தொடுக்கும் சரத்திலும் எதிராக ஏவி, அவர் ஏவிய சரங்களை எல்லாம் விலக்கினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

மனம் செய்வலி - தைரியம். கனம் - மேகம். சலதி - நீர் தங்குமிடம், எனவே கடல். இனம் - கூட்டம். விலகினன் - விலக்கினன்; பிறவினை; சந்தம் நோக்கி விலகினன், என நின்றது.

**19. தேருதய பானுவென நின்றவிச யன்றனெதிர்**
**தெவ்வர்பனி யென்ன வகலத்**
**தாருதய மாநிருபர் வேலைசுவ றத்தனது**
**தண்டுதனி கொண்டு குதியா**
**ஒருதவி யின்றிமுடி யோடவர் சிரங்களுமு**
**டைந்துமுது கிட்டுடையவே**
**மாருதச காயனென மாருதனெ னக்கடவுண்**
**மாருத சுதன்க டுகினன்.**

[தேர் உதயபானு என நின்ற விசயன் தன் எதிர் தெவ்வர் பனி என்ன அகல, (மற்றோர் புறம்) தார் உதயம் மா நிருபர் வேலை சுவற, தனது தண்டு தனி கொண்டு (தேரினின்று) குதியா, ஓர் உதவி இன்றி முடியோடு அவர் சிரங்களும் உடைந்து முதுகு இட்டு உடையவே, மாருத சகாயன் என, மாருதன் என கடவுள் மாருத சுதன் கடுகினன்.]

**விளக்கம்:-** பானு - (பாநு) சூரியன். தார் உதய மா நிருபர் - போர்மாலை தோன்றி விளங்கும்படி அணிந்த சிறந்த அரசர்) வேலை - (அரசர்களாகிய) சமுத்திரம். சுவற - வற்ற. குதியா - தேரினின்று குதித்து இறங்கி. மாருதசகாயன் - காற்றின் துணைவனான அக்னி. கடவுள் மாருதசுதன் - தெய்வத்தன்மையுடைய வாயுவின் குமாரனான வீமன். சூரியனின் முன் பனிபோல், விசயன்முன் பகைவர் ஓடி அகல, மற்றோர் புறத்தில் வீமன், போர் விளங்கும்படி அணிந்த சிறந்த அரசர்களாகிய சமுத்திரம் வற்றும்படியும், தனது கதையைக் கையில் கொண்டு தான் தனியே தேரினின்று குதித்து இறங்கி, அப்பகைவர் தமக்குத் துணையாவார் எவருமின்றிக் கிரீடங்களோடு சிரங்கள் உடைபட்டுப் பின்னிட்டு அழியும்படியும் செய்ய வாயுவின் துணைவனான அக்னி போலவும், காற்றுப் போலவும் விரைந்து களம் வந்தான், - என்பதாம்.

கடல் வற்றுதலுக்கு அக்னியும், கடுகி வருதலுக்குக் காற்றும் உவமை ஆயின. தார் உதயம் ஆம் நிருபர், என்றும் பிரிக்க

லாம். தார் - முன்னணிப் படை. முன்னணிப் படையில் தோன்ற நிற்போராகிய நிருபர் (வேலை), என்பது பொருளாகும்.

**20.** **ஏறிவரு தேருடனெ டுத்தெறித ருஞ்சிலரை**
**யிருபணைகள் பற்றி யிறுகச்**
**சீறிவரும் யானையொடெ டுத்தெறித ருஞ்சிலரை**
**யைந்துகதி யுஞ்சி வணவே**
**மாறிவரு வாசியொடெ டுத்தெறித ருஞ்சிலரை**
**வஞ்சினமு வெஞ்சி னமுடன்**
**கூறிவரும் வாளரச ரேறியணி நின்றரத**
**குஞ்சரது ரங்கம் விழவே.**

[ஏறி வரு தேருடன் எடுத்து எறிதரும் சிலரை, இரு பணைகள் பற்றி இறுக சீறி வரும் யானையொடு எடுத்து எறிதரும் சிலரை, ஐந்து கதியும் சிவண மாறி வரு வாசியொடு எடுத்து எறிதரும் சிலரை, வஞ்சினமும் வெம்சினமுடன் கூறிவரும் வாள்அரசர் ஏறி அணி நின்ற ரதகுஞ்சர துரங்கம் விழவே.]

**விளக்கம்:-** வெஞ்சினமுடன் வஞ்சினமும் கூறிவரும் வாள் அரசர் ஏறி அணிநின்ற ரதகுஞ்சரதுரங்கம் விழ, ஏறிவரு தேருடன் எடுத்து....எறிதரும் சிலரை, என்று அன்வயிக்க. கோபத்தோடு வஞ்சினமும் கூறிவரும் கொடிய பகை அரசர் ஏறினர்களாய் அணி வகுத்துநின்ற ரதகஜதுரங்கங்கள் மாண்டுவிழும்படி (வீமன்) சிலரை அவர் ஏறிவரும் தேருடன் தூக்கி எறிவான்; இரு பணைகளை (தந்தங்களை) இறுகப் பற்றிச் சீறி வரும் யானையோடு சிலரைத் தூக்கி எறிவான்; ஐந்து விதமான நடை தலம் பொருந்த மாறுபட்டு வரும் குதிரையோடு சிலரைத் தூக்கி எறிவான்,—என்பது பொருள். வஞ்சினம் - சபதமொழி, வீர வாதம்.

**21.** **முந்துபடை வீரர்மிக நொந்துகதை வீமனெதிர்**
**முதுகிடுதல் கண்டு முனியா**
**ஐந்துறமு நூறுபடி யாயிரவர் வின்மையில**
**ருச்சுனனை யொத்த வடலோர்**
**உந்துரக கேதனனு ரைப்பமுகி லேழுமுட**
**னூழியிறு திப்பொ ழிவபோல்**
**வந்துவடி வாளிமழை சிந்தினர் பராக்கிரம**
**வாசியிப மாவி ரதரே.**

[முந்து படை வீரர் மிக நொந்து கதை வீமன் எதிர் முதுகு இடுதல் கண்டு, ஐந்து உறமும் நூறுபடி ஆயிரவர் வின்மையில் அருச்சுனனை ஒத்த அடலோர், உந்து உரககேதனன் உரைப்ப முகில் ஏழும் உடன் ஊழி இறுதி பொழிவபோல் வந்து வடி வாளி மழை சிந்தினர் பராக்கிரமம் வாசி இபம் மா இரதர், ஏ.]

**விளக்கம்:-** ஐந்து நூறுபடி ஐந்தொடு பெருக்கப் பெற்ற நூறு என்ற அளவையை உடைய ஆயிரம், அதாவது ஐந்து லட்சம். பராக்ரமம் வாசி இபம் மா இரதர்-ஆற்றல் மிகுந்த குதிரைகளையும் யானைகளையும் பெரிய தேர்களையும் உடைய வீரர். தனது முன்னணிப் படை உடைந்து பின்னிடுவது கண்ட உரககேதனன் (துரியோதனன்) கூற, வில் தொழிலில் விசயனை ஒத்த ஐந்து லட்சம் பேர், வீமனை வளைத்துக் கொண்டு, யுகாந்த காலத்தில் சப்த மேகங்களும் ஒன்றுபட்டு மழை பொழிவதுபோல் அம்பு மழை யைச் சொரிந்தனர், என்பதாம்.

உறழ்தல் - பெருக்கல். படி - அளவை. உந்துதல் - உயர்தல், தூக்கல். பொழிவபோல் - பொழிவதுபோல்.

**22. வெவ்வன மெரிக்கடவு ளுண்டிட வணக்குமொரு**
**வில்லியுமவ் வில்லொ டெதிர்போய்**
**அவ்வவர் தொடுத்துவிடு மம்புகளனைப் பலவும்**
**மவ்வகை தொடுத்து விலகிக்**
**கைவரிவி லற்றுநடு நாணினடு வற்றுவளர்**
**கைத்தலமு மற்று விழவே**
**வைவரி வடிக்கணைக ளேவினன் மணித்திகிரி**
**வலவன்விடு தேரில் வருவோன்.**

[வெம் வனம் எரி கடவுள் உண்டிட வணக்கும் ஒரு வில்லியும் அ வில்லொடு எதிர்போய் அ அவர் தொடுத்து விடும் அம்புகள் எனை பலவும், அ வகை தொடுத்து விலகி (விலக்கி), கை வரி வில் அற்று நடு நாணி நடு அற்று, வளர்கை தலமும் அற்று விழவே, வை வரி வடிகணைகள் ஏவினன், மணி திகிரி வலவன் விடு தேரில் வருவோன்.]

**விளக்கம்:-** மணித்திகிரி வலவன் (கண்ணபிரான்) விடும் தேரில் வருவோனும், வெவ்வனம் அக்னிதேவன் உண்ணும்படி வளைத்த ஒரு சிறந்த வில்லையுடையவனுமான விசயன், அந்த வில் லோடு (வீமனுக்கு உதவியாக) எதிரே சென்று அந்த அந்தப் பகை அரசர் தொடுத்துவிடும் அம்புகள் அனைத்தையும், அவர் எம்முறை யில் தொடுத்தார்களோ அம்முறையில் எதிரம்பு தொடுத்து விலக்கி, அவர் கையில் பற்றிய வரிவில் நடு அறுபட்டும், நாணி நடு அறுபட்டும், நீண்ட கைகள் அறுபட்டும் விழ, கூரிய நீண்ட கணைகளை ஏவினன், என்பதாம்.

விசயன், பகைவர் பொழியும் அம்புகளை விலக்கியதோடு, அவர்களை அறுத்துத் தள்ளினன், என்றபடி.

**23.** **தருமன்முத லைவரையும் வென்றிடுது மென்றுதுச்**
**சாதனனெ டைவ ரிளையோர்**
**பொருமுனையின் வீடுமன்மு னின்றவர்க ளல்லது**
**புகன்றநர பால ரெவரும்**
**பருமமத மாபுரவி தேர்கொடு பறந்தனர்ப**
**டாதவர்கெ டாத கதையும்**
**செருமுனைச ராசனமு முடையவிரு வோருநனி**
**சீறியமர் செய்த பொழுதே.**

[தருமன் முதல் ஐவரையும் வென்றிடுதும் என்று துச்சாதனனொடு ஐவர் இளையோர் பொருமுனையின் வீடுமன் முன் நின்றவர்கள் அல்லது புகன்ற நரபாலர் எவரும், பருமம் மதம் மா புரவி தேர்கொடு பறந்தனர் படாதவர், கெடாத கதையும் செரு முனை சராசனமும் உடைய இருவோரும் நனிசீறி அமர் செய்த பொழுதே.]

**விளக்கம்:-** கெடாத கதையும் செருமுனை ...அமர் செய்த பொழுது,—தருமன் முதல் ஐவரையும் வென்றிடுதும் என்று பொருமுனையின் வீடுமன் முன் துச்சாதனனொடு நின்றவர்கள் (ஆகிய) இளையோர் ஐவர் அல்லது, புகன்ற நரபாலர் எவரும் படாதவர் பருமம் மதம் மாபுரவி தேர் கொடு பறந்தனர், என்பது அன்வயம்.

கெடாத கதையும், போர்முனையில் கெடாத சராசனமும் (வில்லும்) உடைய வீமஅருச்சுனராகிய இருவரும் நனி சீறிப் போர் செய்த பொழுது, — தருமன் முதல் பாண்டவர் ஐவரையும் வென்றிடுவோம் என்று வீரவாதம் கூறி, போர்க்களத்தில் வீடுமனுக்கு முன் துச்சாதனனோடு நின்றவர்களாகிய அவன் தம்பிமார் ஐவர் அல்லாமல், (அவர்களைப்போல்) வீரவாதம் புகன்ற மற்ற அரசர்களும் அழியாது உயிர் பிழைத்தவர்களாய், அலங்கரிக்கப்பெற்ற மதயானைகளும் குதிரைகளும் தேர்களுமாகிய வாகனங்களோடு முன் நிற்க மாட்டாமல் பயந்து ஓடினர் என்பதாம்.

வீடுமன் கடுமையாகப் பொரல்

**24.** **விண்ணவரி லுற்றெழுவர் கண்டுகளி கூரவிறல்**
**வீடுமன் விருப்பி னுடனே**
**கண்ணினை நெருப்பெழ வுடன்றினி நமக்குமிது**
**காலமென மாலை புனையும்**
**வண்ணவரி விற்றலைவ ணக்கிவித மானபல**
**வாளிகடெ ரிந்து தருமற்(கு)**
**எண்ணுமிர தத்தலைவ ரனைவரையும் விட்டிலனி**
**மைப்பொழுதி னெய்த னனரோ.**

[விண்ணவரில் உற்று எழுவர் கண்டு களிகூர விறல் வீடுமன் விருப்பினுடனே கண் இணை நெருப்பு எழ உடன்று, இனி நமக்கும் இது காலம் என, மாலை புனையும் வண்ணம் வரிவில் தலை வணக்கி, விதம் ஆன பல வாளிகள் தெரிந்து, தருமற்கு எண்ணும் இரதம் தலைவர் அனைவரையும் விட்டிலன் இமைப் பொழுதின் எய்தனன், அரோ.]

**விளக்கம்:-** விறல் வீடுமன், விண்ணவரில் வசுக்கள் எழுவர் (தங்களில் ஒருவனான வீடுமனது வின்மையைக்) கண்டு மகிழும் படி, போர் விருப்பத்துடனே கண்கள் இரண்டினின்றும் நெருப்பு எழ உடன்று (சினந்து), இனி நமக்கு மண் வாழ்க்கை நீங்கும் காலம் இதுவே என எண்ணி, வெற்றிமாலை சூடிய அழகிய வில்லின் இருமுனைகளையும் வளைத்து, பலவகைப்பட்ட பல அம்புகளைத் தெரிந்து எடுத்து, தருமனுக்குத் துணையாக மதிக்கப் படும் தேர் வீரர்கள் அனைவரையும் விடாதவனாய் ஒரு கணப் பொழுதில் அம்புகளை விடுத்தான், என்பது பொருள்.

அஷ்ட வசுக்களில் ஒருவனான வீடுமன், தனது முடிவு காலம் நெருங்கி விட்டது என்று எண்ணி, அதன்முன் தனது வில் தொழில் திறமை முழுவதையும் காட்ட எண்ணினான், என்பதாம்.

**25. எத்தனை முடித்தலைக ளெத்தனை புயக்கிரிகள்**
**எத்தனை கரக்க மலம் வே(று)**
**எத்தனை யுடற்சுமைக ளெத்தனை யுறுப்பினிணம்**
**எத்தனை கொடிக்கு டர்களும்**
**எத்தனை நிணத்தடிக ளெத்தனை நரப்புவகை**
**எத்தனை யெலுப்பு நிரைமேல்**
**எத்தனை மணித்தொடைக ளெத்தனைமலர்க்கழல்கள்**
**இற்றன களத்தி னிடையே.**

[எத்தனை முடிதலைகள், எத்தனை புயம் கிரிகள், எத்தனை கரம் கமலம், வேறு எத்தனை உடல் சுமைகள், எத்தனை உறுப்பின் நிணம், எத்தனை கொடி குடர்களும்; எத்தனை நிணம் தடிகள், எத்தனை நரப்பு (நரம்பு) வகை, எத்தனை எலுப்பு (எலும்பு) நிரை, மேல் எத்தனை மணி தொடைகள், எத்தனை மலர் கழல்கள் இற்றன களத்தின் இடையே.]

**விளக்கம்:-** உடல் சுமை - பருத்த உடல்கள். நிணம் - கொழுப்பு. கொடி குடர் - கொடி போன்ற குடல். தடி - தசை. மணி தொடை - அழகிய தொடைகள். மலர்க்கழல் - அழகிய கால்கள். மிகப் பலவான அரசர்கள் வீடுமன் செய்த கடும் போரினால் உறுப்புக்கள் அறுபட்டு மாண்டனர், என்பதாம்.

**26.** **விரிந்தன வுரங்களும் வெகுண்டன மனங்களும்**
**விழுந்தன பசுங்கு ருதிநீர்**
**நெரிந்தன வெலும்புக ளழிந்தன கொழுந்தசை**
**நிமிர்ந்தன நரம்பின் விசியும்**
**சரிந்தன பெருங்குடர் துணிந்தன சிரங்கடை**
**தவழ்ந்தன நெடும்பு ருவமும்**
**எரிந்தன முகங்களு மெழுந்தன சிரங்களும்**
**இறந்தனர் கடுங்க ணிளையோர்.**

[விரிந்தன உரங்களும், வெகுண்டன மனங்களும், விழுந்தன பசுங் குருதி நீர், நெரிந்தன எலும்புகள், அழிந்தன கொழு தசை, நிமிர்ந்தன நரம்பின் விசியும், சரிந்தன பெருங்குடர், துணிந்தன சிரம், கடை தவழ்ந்தன நெடும் புருவமும், எரிந்தன முகங்களும், எழுந்தன சிரங்களும், இறந்தனர் கடுங்கண் இளையோர்.]

**விளக்கம்:-** உரம் - மார்பு. தசை - சதை. நரம்பின்விசி - நரம்பின்கட்டு, அதாவது பிணிப்பு. நெடும் புருவம் கடை தவழ்ந்தன - நீண்ட புருவக்கடை (கோபத்தால்) நெற்றி ஏறின. கடுங்கண் இளையோர் - கடுங்கனல் வீசும் கண்களையுடைய இளைய வீரர். புருவக்கடை தவழ்தல், கோபத்தின் மெய்ப்பாடு. வீடுமன் கணைகளால் பாண்டவர் பக்கத்து வீரர் உற்ற அழிவினைக் கூறியபடி.

**27.** **சோமகரின் மச்சரிற் றென்னரிற் றுளுவரிற்**
**துருபதே யரில்வ ளவரில்**
**தேமருவ லங்கற் குலிங்கரிற் சேரரிற்**
**சிஞ்சியரில் வெஞ்ச மர்விடா**
**மாமுகுட வர்த்தனரின் மண்டலிக ரிற்பட்ட**
**வர்த்தனரின் மற்றிவ் வுரவோன்**
**ஏமருக ணைக்கிலக் காகாத மன்னவர்கள்**
**எம்மன்ன ரென்று மொழிவாம்.**

[சோமகரில், மச்சரில், தென்னரில், துளுவரில், துருபதேயரில் வளவரில், தேன் மருவு அலங்கல் குலிங்கரில், சேரரில், சிஞ்சியரில், வெம் சமர் விடா மா மகுடவர்த்தனரில், மண்டலிகரில் பட்டவர்த்தனரில் மற்று இ உரவோன் ஏ மரு கணைக்கு இலக்கு ஆகாத மன்னவர் எ மன்னர் என்று, மொழிவாம்.]

**விளக்கம்:-** சோமகர் - துருபதர் ஒழிந்த மற்ற சோம குலத்தவர். தென்னர் - பாண்டியர். துளுவர் - துளுவ நாட்டார். வளவர் - சோழர். சிஞ்சியர் - சிஞ்சி நாட்டார். உரவோன் -

(இங்கே) வலியனான வீடுமன். ஏ மரு கணை - எய்தலை மருவுகின்ற அம்புகள். எதிர்த்து வந்தோர் அனைவரும் வீடுமனது கணைகளுக்கு இலக்கு ஆனார், என்பதாம்.

விசயன் வீடுமனை நெருங்கல்

வேறு

**28. மேலெழுந்து தம்படையை நீடுகங்கை மைந்தனடு**
**மேன்மைகண் டிரங்கி வெகுளா**
**ஞாலமுண்ட செம்பவள வாய்மலர்ந்து கொண்டிவனை**
**நாமுரண் டொடங்க விதுவே**
**காலமென்று மன்றல்கமழ் கார்முகுந்தன் வெம்புரவி**
**கால்கொள்சந் தனங்க டவவே**
**கோலவெஞ் சரங்களடை வேதெரிந்து கொண்டுசிலை**
**கோலினன் றனஞ்ச யனுமே.**

[மேல் எழுந்து தம் படையை நீடு கங்கை மைந்தன் அடு மேன்மை கண்டு இரங்கி, வெகுளா, ஞாலம் உண்ட செம் பவளம் வாய் மலர்ந்து, கொண்டு இவனை நாம் முரண் தொடங்க இதுவே காலம் என்று மன்றல் கமழ் கார் முகுந்தன் வெம் புரவி கால் கொள் சந்தனம் கடவவே, கோலம் வெம் சரங்கள் அடைவே தெரிந்து கொண்டு சிலை கோலினன் தனஞ்சயனும், ஏ.]

**விளக்கம்:-** தம் படை - பாண்டவர் பக்கத்துப் படை. அடு மேன்மை - பகை அழிக்கும் வீடுமனின் திறலின் சிறப்பு. (வீடுமன் அடு மேன்மை கண்டு) மன்றல் கமழ் கார் முகுந்தன், (மனம்) இரங்கி, வெகுண்டு, ஞாலம் உண்ட செம்பவளம் வாய் மலர்ந்து, இவனை (சிகண்டியை) கொண்டு, நாம் முரண் தொடங்க இதுவே காலம் என்று (விசயனுக்குச் சொல்லி) வெம் புரவி கால் கொள் சந்தனம் கடவவே,......தனஞ்சயனும், என்று அன்வயிக்க.

வெம் புரவி கால் கொள் சந்தனம் - நடை வேகமுடைய குதிரைகளையும், சக்கரங்களையும் உடைய தேர். அடைவே தெரிந்து கொண்டு – முறையே (அம்புகளை) ஆய்ந்து கையிற் கொண்டு. பாண்டவர் சேனை அழிவதைக் கண்ட கண்ணன், சிகண்டியை உடன் வைத்துக் கொண்டு முரண் (போர்) தொடங்க இதுவே சமயம் என்று சொல்லித் தேரை நடத்த, விசயனும் கணை தெரிந்து வில்லை வளைத்தான். சந்தனம்-(ஸ்யந்தநம்) தேர்.

**29. ஓதம்வந் தெழுந்ததென மேகநின் றதிர்ந்ததென**
**வூழியும் பெயர்ந்த தெனவே**
**மாதிரங் களுஞ்செவிடு போயகண் டமும்பொதுளி**
**வாய்பிளந் ததண்ட முகடும்**

**சீதரன் செழுந்துளப மாதவன் றயங்கருண**
**சீதபங் கயங்கொ டிருவின்**
**நாதன்வெஞ் சமங்கருதி யூதுகின் றசங்கின்முழு**
**நாதம்வந் தெழுந்த பொழுதே.**

[ஓதம் வந்து எழுந்தது என, மேகம் நின்று அதிர்ந்தது என, ஊழியும் பெயர்ந்தது எனவே, மாதிரங்களும் செவிடு போய், அகண்டமும் பொதுளி வாய் பிளந்தது அண்டம் முகடும், சீதரன் செழுந்துளபம் மாதவன், தயங்கு அருணம் சீதம் பங்கயம் கொள் திருவின் நாதன் வெம் சமம் கருதி ஊதுகின்ற சங்கின் முழு நாதம் வந்து எழுந்த பொழுதே.]

**விளக்கம்:-** சீதரன் .....நாதம் வந்து எழுந்த பொழுதே, ஓதம் வந்து.... பொதுளி அண்டம் முகடும் வாய் பிளந்தது என்பது அன்வயம்.

ஓதம் - கடல். மாதிரம் - திசை. பொதுளி - தாக்கி, மோதி. சீதரன் (ஸ்ரீதரன்) மாதவன் என்பவை, திருமாலின் திரு நாமங்கள். திருவின் நாதன், என்று வந்திருப்பதால், இப் பெயர்களை இடுகுறியாகக் கொள்க. அருண சீத பங்கயம் - (வடமொழித் தொடர்) சிவந்த குளிர்ச்சி பொருந்திய தாமரை. கொள் திரு - இடமாகக் கொண்ட திருமகள். போர் கருதிக் கண்ணபிரான் ஊதுகின்ற பாஞ்சசன்னியம் என்ற சங்கின் முழு ஒலியும் எழுந்து பரவிய பொழுது, கடல்கள் பொங்கி எழுந்தன எனவும், சப்த மேகங்கள் நிலைநின்று இடித்தன எனவும், ஊழிக் காலம் மாறிற்று எனவும் சொல்லும்படி, எட்டுத் திசைகளிலுள்ளார் செவிடுபட, எல்லா உலகங்களும் ஒலியால் தாக்கப் பெற்று, அண்டகோளத்தின் முகடு அதிர்ச்சியால் பிளவு பட்டது, என்பதாம்.

**30. தூரியங் கறங்கநர பாலர்சங் கினங்களணி**
**தோறுநின் றுநின்று குமுறத்**
**தேர்களுந் துரங்கமொடு வேழமுங் கலந்துவரு**
**சேனைமண் டலங்க ளுடனே**
**பேர்பெறுஞ் சிகண்டிதலை யாகமுன் புகொண்டுலகு**
**பேருமன் றுமின்று கொலெனப்**
**போர்தொடங் கிவென்றிபுனை வீடுமன் றடங்கண்ணெதிர்**
**போயினன் றனஞ்ச யனுமே.**

[தூரியம் கறங்க நரபாலர் சங்கு இனங்கள் அணிதோறும் நின்று நின்று குமுற, தேர்களும் துரங்கமொடு வேழமும் கலந்து

வரு சேனை மண்டலங்களுடனே பேர் பெறும் சிகண்டி தலையாக முன்பு கொண்டு உலகு பேரும் அன்றும் இன்று கொல் என, போர் தொடங்கி வென்றி புனை வீடுமன் தடங்கண் எதிர் போயினன் தனஞ்சயனும், ஏ.]

**விளக்கம்:-** தூரியம் - வாத்தியம். சேனை மண்டலம் - சேனைகளின் கூட்டம். பேர் பெறும் சிகண்டி - வீடுமனைக் கொல்லப் பிறந்தவன் என்று பேர் பெற்ற சிகண்டி. தலையாக - தலைமையாக. உலகுபேரும் அன்று இன்றுகொல் - உலகம் அழியும் அந்த ஊழிக் காலமும் இன்றுதானோ? வாத்தியங்களும் சங்குகளும் படைகளின் அணிவகுப்பை உடைய இடங்களிலிருந்து முழங்க, நால்வகைப் படைகளும் கலந்து வரும் சேனை மண்டலங்களோடு தனஞ்சயன், சிகண்டியைத் தலைமையாகக் கொண்டு, உலகை அழிக்கும் பிரளயம் என்ற அந்தக் காலம் இன்றுதானோ, என்று எல்லோரும் அஞ்சும்படி போர் தொடங்கினனாய், வென்றிபுனை வீடுமன் கண்ணெதிர் சென்றான், என்பதாம்.

**31. காதிவெங் கொடும்பகழி யேவுதிண் சிகண்டிதலை**
**காணலுங் குனிந்து நகையா**
**ஆதியம் பையின்றுபகை மூளவங் ததென்றுதன**
**தாயுதந் துறந்து விரைதேர்**
**மீதுகங் கைமைந்தனொரு தான்வெறுங் கைநின்றளவின்**
**மேனடந் துசென்று பொருதுச்**
**சாதனன் சரங்கள்பல தூவினன் பறித்தெதிரி**
**சாபமுந் துணிந்து விழவே.**

[காதி வெம் கொடு பகழி ஏவு திண் சிகண்டி தலை காணலும் குனிந்து நகையா, ஆதிஅம்பை இன்று மூள வந்தது என்று, தனது ஆயுதம் துறந்து விரைதேர்மீது கங்கை மைந்தன் ஒரு தான் வெறும் கை நின்ற அளவில், மேல் நடந்து சென்று பொருதுச்சாதனன் சரங்கள் பல தூவினன், பரிந்து எதிரி சாபமும் துணிந்து விழவே.]

**விளக்கம்:-** காதி - எதிர்த்து. காதி மிகக் கொடிய சரங்களை ஏவும் திண் சிகண்டியின் முகத்தைக் கண்ட அளவில், வீடுமன் முன்பு அம்பையினால் உண்டான பகைமை இப்பொழுது பலிக்க வந்தது என்று எண்ணித் தனது ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டுத் தனது விரை தேரினிடத்தே, தான்தனியாய் வெறுங்கையுடன் நின்றபோது,—பொருதுச்சாதனன் (வீடுமனுக்குப்) பரிந்து, சிகண்டிமேல் எதிர்த்துச் சென்று, அவனது (தேரோடு) வில்லும் அறுந்துவிழப் பலகணைகளை ஏவினான், என்பதாம். மூள, என்பது பலிக்க, என்ற பொருளது. ஒருதான் - தான் ஒருவனேயாய், அல்லது நேரற்ற தான்.

**32. சாகநின் றிலன்றுருப தேயனெஞ் சமின்றி வரி**
**சாபமின் றிவண்கொடி கொடேர்**
**வாகமின் றிவந்தவழி மீளநின்ற சந்தனுகு**
**மாரனுஞ் சரங்கள் விடவே**
**யூகமும் பிளந்துசுர ராசன்மைந் தன்முந்திரத**
**மூருகின் றசெங்க ணெடுமால்**
**மேகமுங் கருங்கடலு நீலமுங் கலந்ததிரு**
**மேனியுஞ் சிவந்த தறவே.**

[சாக நின்றிலன் துருபதேயன் நெஞ்சம் இன்றி, வரிசாபம் இன்றி, வண் கொடி கொள் தேர் வாகம் (வாகனம்) இன்றி, வந்த வழி மீள, நின்ற சந்தனுகுமாரனும் சரங்கள் விடவே, யூகமும் பிளந்து சுரராசன் மைந்தன் முந்தி ரதம் ஊருகின்ற செங்கண் நெடு மால், மேகமும் கருங்கடல் நீலமும் கலந்த திருமேனியும் சிவந்தது அறவே.]

**விளக்கம்:-** துருபதன் மகனுன சிகண்டி மனம் அழிந்து, வில் அறுபட்டு, சிறந்த கொடியைக் கொண்ட தேராகிய வாகனம் இல்லாமல் சாதற்கு நிற்காதவனுய் வந்த வழியே செல்ல, (அதன்பின்) சந்தனுகுமாரனுன வீடுமன் சரங்கள் விடவே, (பாண்டவரது) வியூகம் பிளவுபட்டு, விசயன் முன்னே இருந்து தேர் நடத்தும் கண்ணனின் மேகமும் கருங்கடலின் நீலநிறமும் கலந்து விளங்கிய திருமேனியும் முற்றிலும் (புண்பட்டதால்) சிவந்து போயிற்று, என்பதாம். சுரராசன் மைந்தன் - இந்திரகுமாரனுன விசயன். செங்கண்மால் - கண்ணன். வீடுமனது சரங்களால் கண்ணனது திருமேனியும் புண்பட்டது, என்க. வாகம், என்பதற்குக் குதிரை என்றும் பொருள் கொள்ளலாம்.

**33. போனதிண் சிகண்டிதனை மீளவுங் கொணர்ந்துபொரு**
**பூசலுங் கடந்தி ரதமேல்**
**நீநிலஞ் சனின்கணையு மேவுகென் றுவெஞ்சமரி**
**னேர்நடந் துசென்று விசயன்**
**கூனலங் கிதந்தசிலை கோலியம் பொடம்பு பல**
**கூடநெஞ் சழன்று தையினுன்**
**வேனிலம் புமுன்புதையாதிலங் குமம்பொன்வரை**
**மேனியெங் கணும்பு தையவே.**

[போன திண் சிகண்டி தனை மீளவும் கொணர்ந்து, ''பொரு பூசலும் கடந்து இரதம் மேல் நீ நில்; அஞ்சல் நின்கணையும் ஏவுக என்று வெம் தேர் நடந்து சென்று விசயன், கூன் நல் அங்கி தந்த சிலை கோலி, அம்பொடு அம்பு பல கூட நெஞ்சு அழன்று உதையினுன், வேனில் அம்பு முன் புதையாது இலங்கும் பொன் வரை மேனி எங்கணும் புதையவே.]

**விளக்கம்:-** பயந்து பின்னடைந்த சிகண்டியை விசயன் மறுபடியும் அழைத்து வந்து, ''நீ அஞ்சவேண்டா. பொருபூசல் கடக்க, அதாவது வெற்றியுடன் பொரக் கருதி, தேரின்மேல் தைரியத்துடன் நில்; உனது அம்புகளையும் செலுத்து,'' என்று கூறி, (அவனை தேரின் முன்னே நிற்கச் செய்து) வெம்சமரில் (வீடுமனுக்கு) முன்சென்று, அக்னிதேவன் தந்த வளைந்த நல்ல வில்லை வளைத்து, சிகண்டியின் சரங்களோடு தனது சரங்கள் பல சேர,—முன்பு ஒரு பொழுதும் வசந்த காலத்திற்குரிய மன்மதனது அம்பு பாயப் பெருது விளங்கும் பொன்மலை போன்ற அழகிய வீடு மனது திருமேனி முழுவதும் புதையும்படி மனக் கொதிப்புடன் ஏவினுன், என்பதாம்.

வீடுமன் என்றும் காமவசப்படாத மேன்மையன், என்று கூறும் கருத்தது, ஈற்றடி. விசயன், நெஞ்சு அழலுதற்குக் காரணம், துரியோதனன் மேலுள்ள கோபம் ஆகும்.

**34. தோளுநெஞ் சமுஞ்சிரமு மார்பமுந் தொடங்கிநிலை**
**தோறும்வந் துவந்து ருவவே**
**சாளரங் கொளங்கவழி யோடுகின் றவிந்துமுக**
**சாயகங் கைகொண்டு பிடியா**
**நாளறிந் தெதிர்ந்துபொரு வோனுமைந் தனன்றுமுத**
**ஞமமுஞ் சிகண்டி யிவனெய்**
**வாளியொன் றுமிங்கெமையு ருதனஞ் சயன்செய்பெரு**
**வாழ்விதென் றறிந்துமகிழா.**

[தோளும் நெஞ்சமும் சிரமும் மார்பமும் தொடங்கி நிலை தோறும் வந்து வந்து உருவவே, சாளரம் கொள் அங்கம் வழி ஓடு கின்ற இந்துமுகம் சாயகம் கை கொண்டு பிடியா, நாள் அறிந்து, எதிர்ந்து பொருவோனும் மைந்தன், நன்று; முதல் நாமும் சிகண்டி; இவன் எய் வாளி ஒன்றும் இங்கு எமை உரு, தனஞ் சயன் செய் பெரு வாழ்வு இது, என்று அறிந்து மகிழா,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம்:-** தோள், நெஞ்சு, மார்பு முதலாகவுள்ள உயிர் நிலை எங்கும் (கணைகள்) தைத்துப் பிளக்க, யாக்கை முழுதும் துளைக்கப்பட்டுச் சாளரங்களின் தன்மை அடைய, உடல் வழி ஊடுருவி அப்பாற் செல்லும் அர்த்த சந்திர பாணங்களைக் கைக ளால் பற்றி, அவற்றில் அருச்சுனன் பெயரைப் பார்த்து, தனது இறுதி நாள் இது என்று அறிந்து, ''தன்னை எதிர்த்துப் பொரு வோனும் குருகுல மைந்தன், இவனது சரத்தால் அழிவது நல்லதே; பேர் அளவிலேதான் சிகண்டி, தலைமைப் பேர் பெற்றுத் தேரில் நிற்கின்றுன், இச்சிகண்டியின் கணைகள் என்னைச் சேரா, என்

யாக்கையைப் பிளக்கும்படி அம்பு தொடுத்த அவன் எனக்குச் செய்யும் பெருஞ்சிறப்பேயாகும்'', என்று எண்ணி மகிழ்ந்து,— (தொடரும்) என்பது பொருள்.

''சிகண்டி பேரளவில் தேரின்முன் நிற்கின்றான்; மற்று, என்னைப் பிளப்பது விசயன் வாளியே; என்னை நலியும் ஆற்றல் சிகண்டியின் கணைக்கு இலது'', என்று எண்ணி வீடுமன் மகிழ்ந்தான், என்பதாம். **வாழ்வு** என்றது **சிறப்பு**, என்ற பொருளது.

**35.** **நாமவெங் கொடுங்கணையின் நாமுநொந்தனஞ்சமர**
**நாளுமின் றுமுந்த வினி நீர்**
**போமடங் கநுந்தமைய னீண்பதம் பொருந்தியுறு**
**போரறிந் துகொண்டு பொருவீர்**
**ஆமதன் றியென்செயினு மாவதொன் றுமின்றுதனி**
**யாண்மைபொன் றலென் றருகுசேர்**
**கோமடங்க ரம்பியர்க ளாகிநின்ற மைந்தரொடு**
**கூறினன் பனங்கொ டியனே.**

''நாமம் வெம் கொடுங்கணையின் நாமும் நொந்தனம், சமரம் நாளும் இன்று, முந்த இனி நீர் போம் அடங்க; நும் தமையன் நீள் பதம் பொருந்தி உறு போர் அறிந்துகொண்டு பொருவீர், ஆம் அது அன்றி என் செயினும் ஆவது ஒன்று இன்று, தனி ஆண்மை பொன்றல்'', என்று, அருகுசேர் கோமடங்கல் தம்பியர்களாகி நின்ற மைந்தரொடு கூறினன், பனங்கொடியன், ஏ.]

**விளக்கம்:-** பனங்கொடியன் (தன்) அருகுசேர் கோமடங்கல் தம்பியர்களாய் நின்ற மைந்தரொடு, ''நாமம் வெம் கொடுங்கணையின் நாமும் நொந்தனம், (எனது இறுதி) சமரம் நாளும் இன்று இனி நீர் அடங்க முந்திபோம்; நும் தமையன் (இருக்கும்) நீள் பதம் (இடம்) பொருந்தி உறுபோர் அறிந்துகொண்டு பொருவீர்; அது ஆம் அன்றி, என் செயினும் ஆவது ஒன்றும் இன்று; தனி ஆண்மை பொன்றல்'', என்று கூறினான், என்பது அன்வயம்.

நாமவெங்கணை - அச்சம் விளைக்கும் கொடிய அம்புகள். சமர நாளும் இன்று-எனது இறுதிப் போர் நாளும் இன்றே. நீர் அடங்க - நீங்கள் எல்லோரும். அது ஆம் - அதுவே இப்பொழுது செய்யத் தக்கது. அன்றி என் செயினும் ஆவது ஒன்றும் இன்று - (நீங்கள் படைவீடு போவது) அல்லாமல் (என்னைக் காக்க) எது செய்யினும் அது பயன் படாது. ஆண்மை பொன்றல் - (மேலும் போர்செய்து) ஆண்மை அழியப்பெறல் வேண்டா.

''எனது இறுதிநாள் இது. உங்களால் ஒன்றும் செய்ய முடியாது. தமையனை அடைந்து மேலே செய்ய வேண்டியதை ஆலோசித்துச் செய்க. மேலும் போரைத் தொடர்ந்து ஆண்மை

அழியாதீர். பாசறை செல்க'', என்று வீடுமன் துரியோதனன் தம்பியருக்குக் கூறினுன், என்க.

வீடுமன் சாய்தல்

**36. கோடுகொண்ட செம்பவள நாதம்வந்து வந்துசெவி**
**கூடமுன்பு நின்ற நிலேயே**
**நாடிநெஞ் சழிந்துதிரு நாமமன் புடன்றனது**
**நாகுழன்று கொண்டு நவிலா**
**ஓடுகின்ற வம்பொழிய நீடுடம்ப டங்கமுனே**
**யூரநின்ற வம்பொ ரணேயா**
**வீடுமன்கி டந்தகிடை தேவர்கண்டு வந்தனர்கண்**
**மேல்விழுந்த தம்பொன் மலரே.**

[கோடுகொண்ட செம்பவளம் நாதம் வந்து வந்து செவி கூட, முன்பு நின்ற நிலேயே நாடி, நெஞ்சு அழிந்து திருநாமம் அன்புடன் தனது நாகுழன்றுகொண்டு நவிலா, ஓடுகின்ற அம்பு ஒழிய நீடு உடம்பு அடங்க முனே ஊர நின்ற அம்பு ஓர் அணேயா வீடுமன் கிடந்த கிடை தேவர்கண்டு வந்தனர்கள்; மேல் விழுந்தது அம் பொன் மலரே.]

**விளக்கம்:-** கோடு - சங்கு. கண்ணன் தனது செம்பவள வாயில் கொண்டு (வைத்து ஊதிய) சங்கின் ஒலி மிகுதியாக வந்து தன்செவி சேரவும், (வீடுமன்) தேரின் முன்னிடத்தே (வலவனுகக் கண்ணன்) நின்ற சௌலப்பிய நிலேயைத் தன் நெஞ்சிலே பதிய வைத்து, நெஞ்சு உருகி அவனது திருநாமங்களே அன்போடு நாக்குத் தழுதழுக்க ஜபித்துக்கொண்டு, (மார்பைப் பிளந்து முதுகு வழி அப்பால்) ஓடுகின்ற அம்புகள் ஒழிய, உடல் முழுதும் அம்பின் ஒரு பதிய நின்ற அம்புகளேப் படுக்கையாகக் கொண்டு விழுந்து கிடந்த கிடக்கையைத் தேவர்கள் கண்டு மகிழ்ந்தனர்; அழகிய பொன்மயமான கற்பகமலர்கள் அவன்மேல் விழுந்தன,—என்பது பொருள்.

தர்மவீரனுன வீடுமன் சரப்படுக்கையில் சாய்ந்து கிடப்பதைக் கண்டு தேவர்கள் மலர் மாரி சொரிந்தனர், என்பதாம். முதுகின் வழி நீங்காது வெளிப்பட்டு நின்ற அம்புகளின் மேல் விழுந்துகிடந் தான், என்பது மூன்ருவது அடியின், கருத்து. தளர்ச்சியும், பக்தி யின் மிகுதியும் நாக்குழறலுக்குக் காரணம். கிடக்கும் நிலே, கிடக்கை.

**37. போரிலெஞ்சி னன்குருகு லேசனென்று கண்டபுரு**
**கூதன்மைந் தனும் புனேதுழாய்**
**வீரனுந்து ஊேந்துவரு தேரினின்றி ழிந்திருகண்**
**வீழுமம்பி னின்மு ழுகினர்**

**சேரவந்தி ரண்டுவகை யாகிவெங் களங்குறுகு**
**சேனையுந்தி ரண்ட லறவே**
**யாருநெஞ் சழிந்தனர்கள் யாருநொந்து நைந்தனர்கள்**
**யாருநின் றிரங்கி னர்களே.**

[போரில் எஞ்சினன் குருகுல ஈசன் என்று கண்ட புருகூதன் மைந்தனும் புனை துழாய் வீரனும் துனைந்து வரு தேரினின்று இழிந்து இருகண் வீழும் அம்பினின் முழுகினர்; சேர வந்து இரண்டு வகை ஆகி வெம் களம் குறுகு சேனையும் திரண்டு அலறவே, யாரும் நெஞ்சு அழிந்தனர்கள், யாரும் நொந்தனர்கள், யாரும் நின்று இரங்கினர்கள், ஏ.]

**விளக்கம்:** குருகுலேசன் – வீடுமன், எஞ்சினன்-அழிந்தான். புருகூதன் மைந்தன் - இந்திர குமாரனுன விசயன். புனை துழாய் வீரன் - கண்ணன். கண் வீழும் அம்பு (அப்பு) - கண்ணிலிருந்து பெருகும் நீர். இருவகைப் பட்டுப் பிரிந்துள்ள சேனைகளும் ஒன்ருய்த் திரண்டு வெங்களம் வந்து அழுது கதற, என்பது மூன்ருவது அடியின் பொருள். இருதிறத்தாரும் மனம் அழிந் தனர், வருந்தி மெலிந்தனர், திகைத்து நின்று புலம்பினர், என்பது ஈற்றடியின் பொருள்.

வீடுமன் விசயன் கணையால் அழிந்து விழ, பாண்டவர்களும், துரியோதனுதியரும், இவ் வழிவினைச் செய்த கிருஷ்ணர்ச்சுனர் களும், இரு திறத்துப் படையினரும் அழுது புலம்பினர், என்பதாம்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**38. ஆக மெங்குந் தங்கு மம்பி னணைமேல் வீழ்வான்**
**யோகங் கொண்டே யுயிரை யோடா வண்ண நிறுவி**
**மாகஞ் சூழும் பரிதி வடபா லெய்து மளவும்**
**நாகங் காணே னென்ன ஞானத் தோடே வைக.**

[ஆகம் எங்கும் தங்கும் அம்பின் அணைமேல் வீழ்வான் யோகம் கொண்டே உயிரை ஓடா வண்ணம் நிறுவி, மாகம் சூழும் பரிதி வடபால் எய்தும் அளவும் நாகம் காணேன், என்ன ஞானத்தோடே வைக, - தொடரும், குளகம்.]

**விளக்கம்:-** தேகம் முழுவதும் தைத்து நின்ற கணைகளின் படுக்கையில் விழுந்து கிடந்த வீடுமன், யோக பலத்தினுல் உயிரை அகலாதபடி நிறுத்த மாகம் (வானம்) வலம் வரும் சூரியன் வடபுறம் செல்லும் வரையில், அதாவது உத்தராயணம் வரும்வரை நாகம் (தேவலோகம்) காணேன், அதாவது அடைய

மாட்டேன், என்று எண்ணி, ஞானத்தோடு இருக்க, - (அடுத்த கவியோடு சேர்ந்து முடியும்) என்பதாம்.

ஆடி மாதம் முதல் மார்கழி முடிய உள்ள காலம் தக்ஷிணாயனம். தைமுதல் ஆனி முடிய உள்ள காலம் உத்தராயணம். தக்ஷிணாயனத்தில் இறந்தவர் நல்லகதி அடையார் என்பது நூல் கொள்கை. எனவே, வீடுமன், உத்தராயணத்தை எதிர் நோக்கி உயிரை யோக பலத்தால் வைத்திருந்தான், என்றபடி. விரும்பிய பொழுது உயிர்விடும்படி, தந்தையான சந்தனு மகராஜன் கொடுத்த வரமும் அவனுக்கு உளது.

**39. இங்குத் தருமன் முதலா வுள்ள மன்ன ரெவரும்**
**அங்குத் துரியோ தனனை யாதி யான வரசர்**
**பொங்குங் கடலா லுலகம் பொன்று மன்று போலச்**
**சிங்க மன்னான் பாதம் சென்னி மேற்கொண் டழுதார்.**

[இங்கு தருமன் முதலா உள்ள மன்னர் எவரும், அங்கு துரியோதனனை ஆதி ஆன அரசர், பொங்கும் கடலால் உலகம் பொன்றும் அன்று போல, சிங்கம் அன்னான் பாதம் சென்னிமேல் கொண்டு அழுதார்.]

**விளக்கம்:-** இந்தப் பக்கத்தில் தருமன் முதலான மன்னர்களும், அந்தப் பக்கத்தில் துரியோதனன் முதலான மன்னர்களும், பொங்கும் கடலால் உலகங்கள் அழியும் யுகாந்த காலத்தில் உயிர்ப் பிராணிகள் வருந்துவதுபோல், சிங்கம் போன்றவனை வீடுமனது பாதங்களைச் சிரத்தில் வைத்துக் கொண்டு அழுதனர்,- என்பது பொருள். பாதம் சென்னி மேற்கொண்டு - சாஷ்டாங்கமாகப் பாதங்களில் விழுந்து வணங்கி.

**40. மறமும் வாகு வலியும் வல்வின் முதலெப் படையின்**
**திறமுந் தேசும் வாழ்வுஞ் சீருங் கேள்விச் செலவும்**
**நிறமு முண்மை யறிவு நெறியும் புகழுந் திகழ்பேர்**
**அறமும் பொன்று நின்னோ டையா வந்தோ வந்தோ!**

[மறமும், வாகுவலியும் வல்வில் முதல் எ படையின் திறமும், தேசும், வாழ்வும், சீரும் கேள்வி செலவும், நிறமும், உண்மை அறிவும், நெறியும் புகழும் திகழ் பேர் அறமும் பொன்றும் நின்னோடு, ஐயா, அந்தோ, அந்தோ!]

**விளக்கம்:-** மறம் - பராக்ரமம். தேசு - க்ஷத்திரிய தேஜஸ். வாழ்வு - நல்வாழ்வு. சீர் - சிறப்பு. கேள்வி செலவு - நூலோர் சொன்ன வழி கடவாமல் ஒழுகல். நிறம் - பெருமை. நெறி - நீதியாகிய வழி. வீரம் முதலிய பண்புகளும், தருமமும் உன்னோடு அழியுமே, என்று சொல்லி இரு திறத்துத் தலைவர்களும்

புலம்பினர், என்பதாம். ஐயா என்றது எங்கள் குலத்தலைவனே, என்ற பொருளது, அந்தோ, இரக்கப் பொருளது.

**41. தந்தை யின்ப மெய்தத் தவமே யின்ப மாகச்**
**சிந்தை தெளியு ஞானச் செல்வா செஞ்சே வகனே**
**முந்தை மரபுக் கெல்லா முதல்வா ஞால முழுதும்**
**எந்தை யாள வைப்பா ரினியார் கோவே யென்றார்.**

[தந்தை இன்பம் எய்த தவமே இன்பம் ஆக சிந்தை தெளியும் ஞானம் செல்வா, செம் சேவகனே, முந்தை மரபுக்கு எல்லாம் முதல்வா, ஞாலம் முழுதும், எந்தை, (எங்களை) ஆளவைப்பார் இனி யார்? கோவே, என்றார்.]

**விளக்கம்:-** தந்தை இன்பம் அடையும் பொருட்டு, தவத் துறை படிந்து வாழ்தலையே இன்பமாகக் கொண்டு சிந்தைத் தெளிவு கொண்ட ஞானச் செல்வனே, நீதிவழி நிற்கும் வீரனே, பழமையான எங்கள் குலத்தின் முதல்வனே, எங்கள் வம்ச பிதாவே, எம் தலைவனே, இனி, இப்பூமி முழுவதையும் நாங்கள் அரசு ஆளும்படி செய்துவைக்க இருக்கின்றவர் யார்? என்று எல்லோரும் புலம்பினர், - என்பதாம்.

வீடுமன் மைந்தர்க்குக் கூறல்

**42. அழுத மைந்தர் தம்மை யஞ்ச லென்றென் றாற்றி**
**எழுது தொல்லை வினையை யாரே விலக்கு கிற்பார்**
**உழுது வாளி யுருவ வுங்கண் முன்னர் வீழ்ந்தேன்**
**பழுதொன் றில்லை யிதுவே பயனென் பவத்தா லென்றான்.**

[அழுத மைந்தர் தம்மை அஞ்சல் என்று என்று ஆற்றி, எழுது தொல்லை வினையை யாரே விலக்குகிற்பார்? உழுது வாளி உருவ உங்கள் முன்னர் வீழ்ந்தேன், பழுது ஒன்று இல்லை, இதுவே பயன் என் பவத்தால் என்றான்.]

**விளக்கம்:-** எழுதுதொல்லை வினை - நியமிக்கப் பெற்ற பழமையான கருமத்தின் பயன். "அம்புகள் தைத்து உருவ, பந்துக்களாகிய உங்கள் முன் வலி அழிந்து விழுந்தேன், இது எனக்குச் சிறப்பே! ஆகவே, எனக்கு ஒரு பழுதும் இல்லை; இது எனது பவத்தால் (பிறப்பால்) நான் எய்திய பலன்," என்று வீடுமன் கூறும் பொருளன ஈற்றடிகள்.

**43. சரத்தின் சயனம் பஞ்ச சயனங் களினு மினிதென்**
**சிரத்தின் றாழ்வு தீர்ப்பாய் திண்டோள் விசயா வென்ன**
**வரத்தின் பயனு முயிரை நிறுத்து மன்னன் மகிழ**
**உரத்தி னம்பான் முடியை யுயரும் வண்ண முயர்த்தான்.**

[சரத்தின் சயனம் பஞ்ச சயனங்களினும் இனிது, எனது சிரத்தின் தாழ்வு தீர்ப்பாய் திண் தோள் விசயா, என்ன, வரத்தின் பயனுல் உயிரை நிறுத்தும் மன்னன் மகிழ உரத்தின் அம்பால் முடியை உயரும் வண்ணம் உயர்த்தான்.]

**விளக்கம்:-** (மைந்தர்களை 'அஞ்சல்' என்று கூறித் தேற்றிய பின் விசயனை நோக்கி) தந்தை தந்த வரத்தின் பலத்தால் உயிர் அகலாதபடி நிறுத்தியுள்ள வீடுமன், ''திண்தோள் விசயா, உனது சரங்களால் ஆன படுக்கை பஞ்ச சயனத்தினும் இனியதாக உளது, அணையில்லாமல் என் தலை தாழ்ந்திருத்தலை நீக்குவாய்,'' என்னலும், (அவன்) மகிழ வலிய சரங்களால் தலையை உயரும்படி செய்தான், - என்பது பொருள்.

இன்ப துன்பம் என்ற நினைவு கடந்த பக்குவத்தினன் ஆதலால், வீடுமன், சரப்படுக்கையைப் பஞ்ச சயனத்தினும் இனியதாகக் கொண்டான், என்க.

**44. சொரியுங் கண்ணீர் துடைத்துத் துரியோ தனனை நோக்கி**
**வரியுஞ் சாபக் கன்னன் மன்னர்க் குருமே றன்னுன்**
**தெரியுங் காலத் தவனைச் சேனைத் தலைவ னுக்கிப்**
**புரியும் போரு நாளைப் புரிமி னென்று புகன்றுன்.**

[சொரியும் கண்ணீர் துடைத்து, துரியோதனனை நோக்கி, ''வரியும் சாபம் கன்னன் மன்னர்க்கு உரும் ஏறு அன்னுன், தெரியும் காலத்தவனை சேனை தலைவன் ஆக்கி புரியும் போரும் புரிமின்,'' என்று புகன்றுன்.]

**விளக்கம்:-** மன்னர்க்கு உரும் ஏறு அன்னுன், தெரியுங் காலத்தவன், (ஆகிய) வரிசாபம் கன்னனை தலைவனுக்கி, - என்று இரண்டு மூன்ருவது அடிகளை அன்வயிக்க. காலத்தவனை, என்பதிலுள்ள ஐகாரத்தைக் கன்னனேடு கூட்டுக. வீடுமன், துரியோதனனது கண்ணீர் துடைத்து, அதாவது சமாதானப் படுத்தி, ''பகையரசர்க்குப் பேரிடி போன்றவனும், வெற்றிக்குரிய காலத்தைத் தெரியவல்லவனும் ஆகிய கட்டமைந்த வில்லை யுடைய கன்னனைப் படைத் தலைவனுக்கி நாளை புரிய வேண்டிய போரைச் செய்யுங்கள்,'' என்று கூறினுன் என்பதாம்.

தெரியுங் காலத்தவன், என்பது தனது நண்பனுன துரியோதனனுக்காகப் போர் செய்யும் பொருட்டு, வீடுமனது அழிவை எதிர் நோக்கியிருப்பவன், என்ற பொருளையும் உடையதாகும்.

**45. கோயி றருமன் செய்யக் கூர்வெஞ் சரமே யணையர்**
**நோயி லயர்வு மெய்யி னுழையக் கால நோக்கி**

**வீயின் முத்தி யில்லை யென்ன விருந்தான் விருந்தாய்ச்**
**சேயின் முதிய கேள்வித் தெள்ளா ரமுத நுகர்வான்.**

[கோயில் தருமன் செய்ய கூர் வெம் சரமே அணையா, நோய் இல் அயர்வும் மெய்யின் நுழைய காலம் நோக்கி, வீயின் முத்தி இல்லை என்ன இருந்தான், விருந்தாய் சேயின் முதிய கேள்வி தெள் ஆர் அமுதம் நுகர்வான்.]

**விளக்கம்:-** சேயின் முதிய கேள்வி தெள் ஆர் அமுதம் விருந் தாய் நுகர்வான், (ஆகிய வீடுமன்), கோயில் தருமன் செய்ய .. என்ன இருந்தான், என்பது அன்வயம்.

சேய் - முருகக்கடவுள். முருகனைப்போல், பழமையான நூல் கேள்விகளாகிய தெளிந்த அரிய அமுதினைப் புதிது புதிதாக அனுபவிப்பவனாகிய வீடுமன், தருமன் இருக்கை அமைக்கக் கூரிய சரங்களைப் படுக்கையாகக் கொண்டு (உடலில் தைத்து நிற் கும் அம்புகளால் உண்டாகும்) நோய் (துன்பம்) ஒன்றும் இன்றி, உடலில் தளர்ச்சி தோன்ற, இப்பொழுது இறந்தால் முத்தி கிட் டாது என்று எண்ணி, உத்தராயண காலத்தை நோக்கி, உயிர் வைத்திருந்தான்,—என்பதாம்.

கல்வி கேள்விகளில் சிறந்தவன் முருகன்; எனவே, 'சேயைப் போல்', என்றார். நோயில், என்பதிலுள்ள, இல், இன்றி என் பதின் விகாரம்.

**46. இன்றுன் மைந்தன் பட்டா னென்று தந்தைக் கிசைப்பான்**
**சென்று பரிதி மேலைத் திக்கி னெல்லை சேர்ந்தான்**
**அன்று வருண னன்பா லழுத செந்நீ ராருய்**
**மன்ற வெங்கும் பரந்த தொக்குஞ் செக்கர் வானம்.**

[இன்று உன் மைந்தன் பட்டான் என்று தந்தைக்கு இசைப் பான் சென்று பரிதி மேலை திக்கின் எல்லை சேர்ந்தான்; அன்று வருணன் அன்பால் அழுத செந்நீர் ஆருய் மன்ற எங்கும் பரந்தது ஒக்கும் செக்கர் வானம்].

**விளக்கம்:-** இன்று உன் மைந்தன் இறந்தான் என்று வீடும னின் தந்தையாகிய வருணனுக்குச் சொல்வதற்குச் சூரியன் மேலைத்திக்கை அடைந்தான், அதாவது அஸ்தமித்தான்; அப் பொழுது தோன்றிய செவ்வானம், வருணன் அன்பால் மகனுக் காக அழுத சிவந்த கண்ணீர் எங்கும் பரவியதை ஒக்கும், என்பது பொருள். இந்த சூர்யாத்தமன வருணனை, தற்குறிப்பேற்றம் ஆகும்.

வருணனே பிரும்மசாபத்தால் சந்தனுவாய்ப் பிறந்தானாத லால், வீடுமன் வருணன் மைந்தனாகின்றான். புத்திரசோகத்தால்

இரத்தமே கண்ணீராய்ப் பெருகியது என்று கூறும் கருத்தில், செந்நீர், என்றார் போலும். மன்ற, என்பது தெளிவை உணர்த்தும் ஓர் இடைச்சொல். கம்பரும் கும்பகர்ணன் வதைப் படலத்தில், ''தன் கண் உள்ள நீரெல்லாம் மாறி உதிரநீர் ஒழுக நின்றான்'', என்றார்.

**47. பாண்டு மன்னன் புதல்வர் படையும் பாடி புக்க(து)**
**ஆண்டு பாடி புக்க தரவத் துவசன் படையும்**
**ஈண்டு முதல்வன் பட்ட தெந்தைக் குரைமி னென்று**
**தாண்டு மான்றேர் மைந்தன் சஞ்ச யனைவி டுத்தான்.**

[பாண்டு மைந்தன் புதல்வர் படையும் பாடி புக்கது, ஆண்டு பாடி புக்கது அரவத் துவசன் படையும்; ஈண்டு முதல்வன் பட்டது எந்தைக்கு உரைமின் என்று தாண்டு மான் தேர் மைந்தன் சஞ்சயனை விடுத்தான்.]

**விளக்கம்:-** செய்யுள் சுலபமானது. தாண்டு மான் தேர் மைந்தன் - தாவும் குதிரைகள் பூட்டப்பெற்ற தேரையுடைய துரியோதனன். பாண்டவர் படைவீடு சேர, துரியோதனனது படையும் பாசறை அடைந்தது; இப்பொழுது குல முதல்வனை வீடுமன் பட்டதைத் தந்தைக்குச் சொல்லும், என்று, துரியோதனன் சஞ்சயமுனிவனை அனுப்பினான், என்பதாம்.

திருதராட்டிரன் துயருறல்

**48. முனியு நகரிற் சென்று முகுரா னனனுக் குரைப்பக்**
**கனியு மன்பின் வெள்ளங் கண்ணீ ராகிச் சொரிய**
**இனியென் மைந்தர்க் குறுதி யில்லை யென்றென் றேங்கிப்**
**பனிவெண் மதியங் கண்ட பங்க யம்போ லானான்.**

முனியும் நகரில் சென்று முகுரானனனுக்கு உரைப்ப, கனியும் அன்பின் வெள்ளம் கண்ணீர் ஆகி சொரிய,—இனி என் மைந்தர்க்கு உறுதி இல்லை என்று ஏங்கி, பனி வெண் மதி கண்ட பங்கயம்போல் ஆனான்.]

**விளக்கம்:-** சஞ்சய முனிவன் அத்தினபுரி நகரம் சென்று முகுரானனனுக்கு (கண்ணாடி போன்ற முகத்தையுடைய திருதராட்டிரனுக்கு)ச் சொல்லவும், வீடுமன் பாலுள்ள கனிந்த அன்பினால் கண்நீராகக் கரைந்து வழிய, இனி என் மைந்தர்களுக்கு நன்மை, அல்லது பலம் இல்லை என்று பலமுறை சொல்லி, ஏங்கி, குளிர்ந்த வெள்ளிய சந்திரனைக் கண்ட தாமரைபோல் நலம் குலையலானான், என்பது பொருள். முகுராநநம், (முகுரம் - ஆநநம்) கண்ணாடி போன்ற முகம்; அதை உடையவன் முகுராநநன்; குருடன்.

**49. மண்மேல் விழுந்தா னெழுந்தான் மானம் போன தென்றான்**
**கண்மே லெற்றி யின்றே கண்ணு மிழந்தே னென்றான்**
**விண்மே லுள்ளோர் செல்வம் வீறு பெற்ற தென்றான்**
**புண்மே லனலுற் றென்னப் புலர்ந்தான் முதல்வன் புதல்வன்.**

[மண்மேல் விழுந்தான், எழுந்தான், மானம் போனது என்றான்; கண் மேல் எற்றி இன்றே கண்ணும் இழந்தேன், என்றான்; விண்மேல் உள்ளோர் செல்வம் வீறு பெற்றது என்றான்; புண்மேல் அனல் உற்று என்ன புலர்ந்தான் முதல்வன் புதல்வன்.]

**விளக்கம்:-**''மானம் - பெருமை. விண் உள்ளோரது செல்வம் வீடுமனால் நுகரப்படப் போவதால், அது புதுச் சிறப்புப் பெற்றதாகின்றது, என்ற பொருளது, மூன்றாவது அடி. புண்மேல் அனல் உறல் - துன்பத்தின் மேல் துன்பம் வரல்; அதாவது முன்னமே மக்கள் சிலரை இழந்து வருந்திய திருதராட்டிரன், குல முதல்வனான வீடுமன் பட்டது கேட்டு மேலும் வருந்துபவனானான், என்பது கருத்து. குலமுதல்வன், என்பதற்கு, வியாசமுனிவனுக்கு மகனான திருதராட்டிரன், என்றும் பொருள் கொள்ளலாம். செய்யுள் சுலபமானதே.

**50. செங்க ணரவக் கொடியோன் சேனா பதியாய் நாளை**
**இங்கு முனையி னிற்பார் யாரென் றெண்ணு மெல்லை**
**அங்கர் பூபன் யானே யமரார் வானத் தமரக்**
**கங்கை மைந்தன் சொன்ன பரிசே காப்ப னென்றான்.**

[செம் கண் அரவம் கொடியோன் சேனாபதி ஆய் நாளை இங்கு முனையின் நிற்பார் யார் என்று எண்ணும் எல்லை, அங்கர் பூபன் ''யானே அமரார் வானத்து அமர, கங்கை மைந்தன் சொன்ன பரிசே காப்பன்'', என்றான்.]

**விளக்கம்:-** ''நாளைப் போரில் படைத்தலைமை வகிக்க யாரை நியமிப்பது?'' என்று துரியோதனன் ஆலோசிக்கையில், கர்ணன், ''தானே தலைமை பூண்டு படைகாப்பேன்'', என்றான், என்பதாம். அமரார் வானத்து அமர - பகைவர் வானம் சென்று சேர. அமரார் - தம்மைச் சேராதவர், பகைவர்.

துரோணன் படைத்தலைமை ஏற்றல்

**51. தானா திகனே நீவெஞ் சமரிற் சேனைத் தலைவன்**
**ஆனா லரசாய் நிற்பார் யாரென் றவனை விலக்கி**
**மீனார் கொடியோன் றன்னை வென்ற வேதக் கொடியோய்**
**சேனா பதியா கென்றான் தீவாய் நாகக் கொடியோன்.**

[தான அதிகனே, ''நீ வெம் சமரில் சேனே தலைவன் ஆனல் அரசு ஆய் நிற்பார் யார்?'' என்று அவனை விலக்கி, ''மீன் ஆர் கொடியோன் தன்னை வென்ற வேதக் கொடியோய், சேனாபதி ஆகுக'', என்ருன், தீவாய் நாகம் கொடியோன்.]

**விளக்கம்:-** தானஅதிகன் - கர்ணன். தன்னைப் படைத் தலைவனுக்குமாறு கூறிய கர்ணனை நோக்கி, ''நீ தலைவனுயின், எனக்குற்ற துணையாய் நிற்கவல்ல அரசர் யார்?'' என்று சொல்லி, அவனை விலக்கித் துரோணனைத் தலைமை பூணுமாறு துரியோதனன் கூறினுன், என்பதாம்.

மீன் ஆர் கொடியோன் - மீனக் கொடியனுன மன்மதன். (அவனை) வென்ற வேதக் கொடியன் துரோணன்; காமக்குரோதாதிகளை வென்ற பெரியன், என்பது கருத்து.

**52. சிலையா சிரியன் வேந்தர் வேந்தன் சேனை தனக்குத்**
**தலையாய் மன்னர் யாருந் தன்னை வந்து சூழக்**
**கொலையார் பகழி வெள்ள மார்பந் தோறுங் கோத்துத்**
**தொலையா வெம்போர் தொலைக்கத் துணிந்தா னெவருந்**
**துயின்ருர்.**

[சிலை ஆசிரியன், வேந்தர் வேந்தன் சேனை தனக்கு தலையாய் மன்னர் யாரும் தன்னை வந்து சூழ, கொலை ஆர் பகழி வெள்ளம் மார்பம் தோறும் கோத்து தொலையா வெம் போர் தொலைக்க துணிந்தான்; எவரும் துயின்ருர்.]

**விளக்கம்:-** துரோணன், வேந்தர் வேந்தனுன துரியோதனனது படைத்தலைமை பூண்டு, மன்னர் எல்லோரும் தன்னைச் சூழ்ந்து நிற்க, பகைவர் மார்புதோறும் பாண வர்ஷம் பொழிந்து, நீங்காத போரைச் செய்து முடிக்க நிச்சயித்தான், அதாவது படைத்தலைமை வகிக்கச் சம்மதித்தான்; அதன்பின், எல்லோரும் துயின்றனர்,—என்பதாம்.

சூர்யோதயம்

**53. வருணன் மைந்தன் பாடு வருணற் குரைத்து மீளத்**
**தருண மைந்தன் விசயஞ் சதம கத்தோன் கேட்ப**
**இருணி றைந்த கங்கு லேங்கி முன்னே யோட**
**அருணன் பொற்றேர் தூண்ட வருக்கன் குணபா லடைந்தான்.**

[வருணன் மைந்தன் பாடு வருணற்கு உரைத்து மீள, தருண மைந்தன் விசயம் சதமகத்தோன் கேட்ப, இருள் நிறைந்த கங்குல் ஏங்கி முன்னை ஓட, அருணன் பொன்தேர் தூண்ட அருக்கன் குணபால் அடைந்தான்.]

**விளக்கம்:-** வருணன் மைந்தன் அழிந்ததை வருணனுக்குத் தெரிவித்து, பின்பு, இந்திரன் மைந்தனது வெற்றியை இந்திரன் கேட்கும்படி, அதாவது அறிவிக்க, இருள் ஏங்கி முன்னே ஓட, அருக்கன் (சூரியன்) குணபால் (கிழக்குத் திசை) அடைந்தான், என்பதாம்.

தருணமைந்தன் - இளமையுடைய மைந்தனுன விசயன். இந்திரன் திசை கிழக்கு. அத்திசை தோன்றிய உதயசூரியன், இந்திரனுக்கு மைந்தனது வெற்றியைக் கூற வந்ததாகக் கூறினுர். இந்த சூர்யோதய வர்ணனை தற்குறிப்பேற்ற அணி ஆகும்.

பத்தாம் போர்ச் சருக்கம் முற்றும்

வீட்டுமபருவம் முற்றும்

# 7. துரோண பருவம்

துரியோதனனது படையின் தலைவனுய் நின்று ஐந்து நாள் போர் செய்து இறுதியில் திட்டத்துய்மனுல் அழிக்கப் பெற்றதை விஷயமாகக் கொண்டது இப்பருவம். இது, 667 செய்யுள்களைக் கொண்டது.

## 1. பதினேராம் போர்ச்சருக்கம்

### கடவுள் வாழ்த்து

அறுசீர் ஆசிரிய விருத்தம்

1. **காயமும் புலனு மந்தக் கரணமு மாகி யெல்லாத்**
**தேயமும் பரந்து நின்று மீளவுஞ் சிதைத்துச் சுத்த**
**மாயமு மாகி நீங்கி வருபெரு ஞான னந்தம்**
**ஆயவெம் பெருமா னென்னை யாண்டரு ளாழி யானே.**

[காயமும் புலனும் அந்தக் கரணமும் ஆகி, எல்லாத் தேயமும் பரந்து நின்று, மீளவும் சிதைத்து சுத்தமாயமும் ஆகி நீங்கி, வரு பெரு ஞான ஆனந்தம் ஆய எம் பெருமான் என்னை ஆண்டு அருள் ஆழியானே.]

**விளக்கம்:** காயம் - தேகம். புலன் - இந்திரிய அறிவு. அந்தக் கரணம் - அவ்வறிவுக்கு இடமான மனம். தேயம் - இடம். சுத்த மாயம் - பரிசுத்தமான மூலப்பிரகிருதி. பெருஞானனந்தம் - பேரறிவோடு கூடிய பேரின்பம். காயமும் புலனும், அப்புலனுணர்விற்கு இடமான அந்தக் கரணமுமாகி, இடமெங்கும் பரந்து நின்று, மது படியும், அழித்து, மூலப் பிரகிருதியுமாய், அவற்றினின்றும் பிரிந்து

கற்பந்தோறும் மாறிமாறி வருகின்ற பேரானந்த வடிவினனுன கடவுள், என்னை ஆண்டருளிய சக்ரதாரியான திருமாலே, என்ப தாம்.

கற்பம்-பிரும்மன் ஆயுள் காலம். சிருஷ்டிதோறும் எல்லா மாய் எங்குமாய்க் காணப்பட்டு, பிரளயத்தில் அவற்றைச் சிதைத்து, அதாவது தன் திருவயிற்றில் ஒடுங்கச் செய்து பேரற வும் பேரின்பமுமாய் நிற்கின்ற முழுமுதற்கடவுள் திருமாலே, என்ற படி.

**2. பகிரதி மைந்தன் சேனு பதியெனப் பத்து நாளும்
இகல்புரி யியற்கை யெல்லா மியம்பின மினிமே லந்தத்
துகளறு கேள்வி வேள்வித் துரோணவா சிரியன் செய்த
புகலரு மைந்து நாளைப் பூசலும் புகல லுற்ரும்.**

[பகிரதி மைந்தன் சேனுபதி என பத்து நாளும் இகல்புரி இயற்கை எல்லாம் இயம்பினம், இனி மேல் அந்த துகள் அறு கேள்வி வேள்வி துரோண ஆசிரியன் செய்த புகல் அரும் ஐந்து நாளை பூசலும் புகலல் உற்ரும்.]

**விளக்கம்:-** இதுவரை வீடுமன் செய்த பத்துநாள் போரின் தன்மைகள் எல்லாவற்றையும் கூறினேம்; இனி துரோணன் செய்த அரிய ஐந்து நாள் போரைக் கூறுவோம், என்று கவி கூறிய படி.

இருதிறத்தாரும் களம் சேர்தல்

**3. சென்றனன் கங்கை மைந்தன் றினகரன் மைந்தன் செல்வான்
நின்றனன் றுரோணன் மைந்த னீடமர் முனைந்து செய்வான்
வென்றன மினிநா மென்று மெய்ம்முகில் வண்ணன் சொல்லக்
குன்றன குவவுத் தோளார் வெங்களங் குறுகினுரே.**

[சென்றனன் கங்கை மைந்தன், தினகரன் மைந்தன் செல் வான் நின்றனன், துரோணன் மைந்தன் நீடு அமர் முனைந்து செய்வான்; (எனவே) ''வென்றனம் இனி நாம்'', என்று மெய் முகில் வண்ணன் சொல்ல, குன்று அன குவவு தோளார் வெம் களம் குறுகினுர், ஏ.]

**விளக்கம்:-** செய்யுள் மிக சுலபமானது. வீடுமன் இறந்தான், கர்ணன் இறப்பதற்கு இருக்கின்ருன், அசுவத்தாமன் முனைந்து போர் செய்யான்; ஆகவே நாம் வென்ருேம், என்று கண்ணன் கூற, குன்றெனத் திரண்ட தோளினரான பாண்டவர் போர்க் களம் சென்ருர், என்பதாம்.

தக்க சமயத்தில் உன் சரக்கல்வி உதவாமல் போகக்கடவது, என்ற பரசுராம சாபத்தையும், போரில் தேர் பூமியில் அழுந்தக் கடவது என்ற முனிவன் ஒருவனது சாபத்தையும் உடைமை யாலும், கவசகுண்டலங்களை இழந்தமையாலும், நாகக் கணையை இரண்டாம் முறையாக விசயன்மேல் ஏவுவதில்லை என்றும், மற்ற நால்வரையும் கொல்வதில்லை என்றும் குந்தியியிடம் கூறியுள்ளமை யாலும், ''தினகரன் மைந்தன் செல்வான் நின்றான்,'' எனப் பட்டது. கண்ணன் தூது சென்ற காலை, ''கண்ணனால் அசுவத் தாமன் பேதிக்கப்பட்டான்'', என்று துரியோதனனுதியர் எண்ணு மாறு, கண்ணன் செய்த சூழ்ச்சியின் விபரம் உத்தியோக பருவத் தில் காண்க. வென்றனம், என்ற இறந்த காலம் நிச்சயம் பற்றியது.

**4- மாதனத் தளகை யாளு மன்னென வானிற் பாக**
**சாதனக் கடவு ளென்னத் தகும்பெருந் தரணி வேந்தன்**
**சேதனப் படைஞ ரோடுஞ் சேனையின் காவ லான**
**வேதநற் குருவி னோடும் வெங்களம் வந்து சேர்ந்தான்.**

[மா தனத்து அளகை ஆளும் மன் என, வானில் பாக சாதனன் கடவுள் என்ன, தகும் பெருந் தரணிவேந்தன், சேதனம் படைஞரோடும் சேனையின் காவல் ஆன வேதம் நல் குருவினோடும், வெம்களம் வந்து சேர்ந்தான்.]

**விளக்கம்:-** மா தனத்து அளகை ஆளும் மன் - குபேரன். பாக சாதனன் - பாகன் என்ற அசுரனைக் கொன்றவனான இந்திரன். கடவுள் - (இந்திரனாகிய) தேவன். சேதனப்படைஞர் - பகைவர் களைச் சேதிக்கும் தன்மையுள்ள ஆயுதங்களை உடைய வீரர். குபேரனையும் இந்திரனையும் ஒத்தவனாகச் சொல்லத்தக்க பெருஞ் சிறப்பினனான துரியோதனன், சேதனப் படைஞரோடும், சேனைத் தலைவனான துரோணனோடும் களம் வந்து சேர்ந்தான், என்பதாம்.

**5. மதியிலா விசும்புஞ் செவ்வி மணமிலா மலருந் தெண்ணீர்**
**நதியிலா நாடுஞ் செம்பொ னரம்பிலா நாத யாழும்**
**நிதியிலா வாழ்வுந் தக்க நினைவிலா நெஞ்சும் வேத**
**விதியிலா மகமும் போன்ற வீடும னிலாத சேனை.**

[மதி இலா விசும்பும், செவ்வி மணம் இலா மலரும், தெள் நீர் நதி இலா நாடும், செம்பொன் நரம்பு இலா நாதம் யாழும், நிதி இலா வாழ்வும், தக்க நினைவு இலா நெஞ்சும், வேதம் விதி இலா மகமும் போன்ற வீடுமன் இலாத சேனை.]

**விளக்கம் :-** வீடுமன் இல்லாத துரியோதனன் சேனை, சந்திரன் இல்லாத வானையும், நல்ல மணம் இல்லாத மலரையும்,

தெளிந்த நீரையுடைய நதி இல்லாத நாட்டையும், சிவந்த அழகிய நரம்பின் அமைதி இல்லாத நாத யாழையும் (வீணையையும்), செல்வம் இல்லாத குடிவாழ்க்கையையும், நல்ல எண்ணம் இல்லாத மனத்தையும், வேத விதியோடு பொருந்தாத யாகத்தையும் போன்றது, என்பது பொருள். போன்றது, என்பதின் விகாரம் போன்ற, என்க. அணி, உவமை.

**6. பகடுதேர் புரவி காலாள் பலவகைப் பட்ட சேனை**
**சகடமா வியூக மாக வகுத்தனன் றனுநூல் வல்லான்**
**திகடரு கவுஞ்ச யூக மாகவே திட்டத் துய்மன்**
**துகடரு சாது ரங்கம் யாவையுந் தொகுத்து நின்றான்.**

[பகடு தேர் புரவி காலாள் பல வகை பட்ட சேனை சகடமா வியூகம் ஆக வகுத்தனன் தனு நூல் வல்லான்; திகழ்தரு கவுஞ்ச யூகம் ஆக(ஏ) திட்டத்துய்மன் துகள்தரு சாதுரங்கம் யாவையும் தொகுத்து நின்றான்.]

**விளக்கம் :-** பகடு - யானை. தனுநூல் வல்லவனான துரோணன், தனது சதுரங்க சேனையை சகடவியூகமாக வகுத்தான்; திட்டத்துய்மன் புழுதிகிளப்பும் (தனது) விளங்குகின்ற சதுரங்க சேனையை கிரௌஞ்ச வியூகமாக அமைத்து, நின்றான், என்பதாம். திகழ் என்பது போலியால் திகள், என நிற்க, தரு என்பதின் தகரம் டகரமான பின், ளகரம் கெட்டு, திகடரு, எனப் புணர்ந்தது, என்க.

**7. படையுடை யிருவர் சேனா பதிகளும் பனிவெண் டிங்கள்**
**குடையுடை நிருபர் சூழ வரூதினிக் குழாங்கள் சூழ**
**நடையுடைத் தடந்தே ருந்தி நாகரும் பனிக்கும் வண்ணம்**
**தொடையுடை வாளி மாரி சோனையம் புயலிற் பெய்தார்.**

படை உடை இருவர் சேனாபதிகளும் பனி வெண் திங்கள் குடை உடை நிருபர் சூழ, வரூதினி குழாங்கள் சூழ, நடை உடை தேர் உந்தி நாகரும் பனிக்கும் வண்ணம் தொடை உடை வாளி மாரி சோனை அம் புயலின் பெய்தார்.]

**விளக்கம்:-** ஆயுதங்களை உடைய இரு திறத்து சேனை நாயகர்களும், குளிர்ச்சி பொருந்திய வெள்ளிய சந்திரன் போன்ற குடையுடைய (தம்தம் பக்கத்து) அரசர்களும் சுற்றிலும் வரவும், சேனைகளின் கூட்டங்கள் சூழ்ந்து வரவும், விரைந்து செல்லுதலை உடைய பெரிய தேரை, தேவர்களும் அஞ்சி நடுங்கும்படி செலுத்தி வந்து, தொடுக்கும் தன்மையுடைய சர மழையை, பெருமழை பொழியும் அழகிய மேகம்போல் (விடாமல்) சொரிந்தார்கள், என்பது பொருள்.

வருதினி—சேனை, நாகர் - தேவர், பனிக்கும் வண்ணம் - பயந்து நடுங்கும்படி. சோனைபுயல் - விடாது பொழியும் மேகம்.

சகாதேவனும் சகுனியும் பொரல்

**8. மருத்துவர் மைந்தர் தம்மி லிளவலும் வலிய சூது**
**கருத்துடன் பொருது வென்ற மாமனுங் கலந்து தம்மில்**
**ஒருத்தரை யொருத்தர் வேற லரிதென வுடன்று வேகம்**
**சரத்தொடு சரங்கள் பாயச் சராசனம் வாங்கி னூரே.**

மருத்துவர் மைந்தர் தம்மில் இளவலும் வலிய சூது கருத்துடன் பொருது வென்ற மாமனும் கலந்து தம்மில் ஒருத்தரை ஒருத்தர் வேறல் அரிது என உடன்று வேகம் சரத்தொடு சரங்கள் பாய சராசனம் வாங்கினூர், ஏ.]

**விளக்கம்:.** மருத்துவர் - தேவ வைத்தியரான அசுவிநி தேவர், இளவல் – அவர்களது புதல்வர்களில் இளையவனுன சகாதேவன். கருத்துடன் - வஞ்சனை நினைவுடன், வேறல் - வெல்லுதல், உடன்று - ஆவேசங்கொண்டு. அல்லது உக்ரமாக, சராசனம் வாங்கினூர் – (இருவரும்) வில்லை வளைத்துப் போர் செய்தனர். சகுனியும் சகாதேவனும் வெற்றி தோல்வியின்றிச் சமப் போர் புரிந்தனர், என்பதாம்.

**9. ஒருகணை தொடுத்துப் பாக னுயிர்கவர்ந் துயர்த்தகேது**
**இருகணை தொடுத்து வீழ்த்தி யிரதமாத் தொலைய நான்கு**
**பொருகணை தொடுத்து வஞ்சன் பொருவரு மார்பி லாறு**
**வருகணை தொடுத்து வாகை மலைந்தனன் வஞ்ச மில்லான்.**

[ஒருகணை தொடுத்து பாகன் உயிர் கவர்ந்து, உயர்த்த கேது இருகணை தொடுத்து வீழ்த்தி, இரதம் மா தொலைய நான்கு பொரு கணை தொடுத்து, வஞ்சன் பொரு அரு மார்பில் ஆறு வருகணை தொடுத்து வாகை மலைந்தனன் வஞ்சம் இல்லான்.]

**விளக்கம்:-** கேது - கொடி. பொரு அரு - ஒப்பற்ற. வருகணை- ஒன்றன்பின் ஒன்ருய்த் தொடர்ந்து வரும் கணைகள். ஒரு கணையால் (சகாதேவன்) தேர்ப்பாகனது உயிர் கவர்ந்தும், இருகணை தொடுத்துக் கொடியை அறுத்து வீழ்த்தியும், நான்கு கணைகளால் தேர்க் குதிரைகளை அழித்தும், வஞ்சகனை சகுனியின் மார்பில் ஆறுகணைகள் தொடுத்தும், வஞ்சனை அறியாதவனுன சகாதேவன் வாகை மாலை மலைந்தான் (சூடினுன்), என்பதாம்.

முதலில் சமமாகத் நிகழ்ந்த போர் இறுதியில் சகாதேவனது வெற்றியில் முடிந்தது, என்க. மலைதல், மிலைதல், வேய்தல், என்பவை, சூடுதல் என்ற பொருளன.

**10. உகுநிணச் சேற்றி லூன்றி யோடுதற் குன்னு வான்போல்**
**சகுனியுந் தேரி னின்று மிழிந்துகைத் தண்ட மேந்த**
**நகுலனுக் கிளையோன் ருனு நகுமணி வலயத் தோண்மேல்**
**மிகுதிறற் றண்டு கொண்டே வென்னிடப் பொருது மீண்டான்.**

[உகு நிணம் சேற்றில் ஊன்றி ஓடுதற்கு உன்னுவான் போல், சகுனி தேரினின்றும் இழிந்து கை தண்டம் ஏந்த, நகுலனுக்கு இளையோன் தானும் நகு மணி வலயம் தோள் மேல் மிகு திறல் தண்டு கொண்டே வென் இட பொருது மீண்டான்.

**விளக்கம்:-** உகு நிணம் – வெளிப்பட்டுச் சிந்திக் கிடக்கும் கொழுப்பு. நகு மணி வலயத்தோள் - பிரகாசிக்கின்ற மணிகள் பதிக்கப் பெற்ற வாகுவலயம் அணிந்த கை. களத்தில் வெளிப் பட்டுக் கிடக்கும் கொழுப்புச் சேற்றில் (தண்டை) ஆதாரமாக ஊன்றிக் கொண்டு ஓடுவதற்கு நினைப்பான் போல் சகுனி தேரி லிருந்து இறங்கிக் கையில் தண்டை (கதையை) பற்ற, சகாதேவ னும் தன் தண்டு கொண்டு, அவனைப் பின்னிடச் செய்தான், என்பதாம்.

தண்டைக் கையேந்திய சகுனி சிறிது நேரத்தில் பின்னிட்டா னுதலால், அத்தண்டு, நிணச்சேற்றைக் கடப்பதற்கு ஊன்று கோலாயிற்று, என்று கூறியபடி. இது தற்குறிப்பேற்றம் ஆகும்.

துரியோதனன் வீமனை எதிர்த்தல்

**1. மதாசல மகுட மான்றேர் வாம்பரி வயவர் வெள்ளப்**
**பதாதியெம் மருங்கும் போதப் பார்த்திவர் நிழலிற் போத**
**பிதாமக னிறந்தா னென்று பேதுறு நிருபன் போந்து**
**சதாகதி மைந்த னேடுந் தாக்கினன் றபனன் போல்வான்.**

[மத அசலம் மகுடம் மான் தேர் வாம் பரி வயவர் வெள்ளம் பதாதி எ மருங்கும் போத, பார்த்திவர் நிழலின்போத, பிதாமகன் இறந்தான் என்று பேது உறு நிருபன் போந்து சதாகதி மைந்தனேடும் தாக்கினன் தபனன் போல்வான்.]

**விளக்கம்:-** மதாசலம் - மதயானைகள். மகுடம் மான் தேர் – சிகரத்தையுடைய குதிரைகள் பூட்டப் பெற்ற தேர். வாம் பரி வயவர் - தாவும் குதிரை வீரர். வெள்ளப்பதாதி - கூட்டமாகிய காலாள். சதாகதி - வாயு. தபனன் - சூர்யன். நால்வகைச் சேனைகளும் எல்லாப் பக்கங்களிலும் தன்னைச் சூழ்த்து வரவும், அரசர்கள் தனது நிழல் போல தன்னைத் தொடர்ந்து வரவும், சூர்யனைப் போன்ற விளக்கமுடைய பிதாமகன் (வீடுமன்) இறந்தான் என்று மனக்கலக்கங் கொண்ட துரியோதனன்,

வீமனைத் தாக்கினன், என்பதாம். பேதுறல்-மதிமயங்கல். தபனன் போல்வான், என்பதை வீமனுக்கும் அடையாக்கலாம்.

**12. அரிக்கொடி யரியே றன்ன னரவவெங் கொடியு மற்று**
**வெருக்கொள்பே ரரவ மன்னன் வில்லுமு னற்று வீழ**
**எரிக்கணை யேவிச் சூழ்ந்த தரணிப ரெதிர்ந்த வேந்தர்**
**கரிக்குல மிவுளி திண்டேர் மடியவெங் கணைக டொட்டான்.**

[அரி கொடி அரி ஏறு அன்னன் அரவம் வெம் கொடியும் அற்று, வெரு கொள் பேர் அரவம் அன்னன் வில்லும் முன் அற்று வீழ, எரிக்கணை ஏவி, சூழ்ந்த தரணிபர், எதிர்ந்த வேந்தர், கரிக்குலம் இவுளி திண்தேர் மடிய வெம் கணைகள் தொட்டான்.]

**விளக்கம்:-** அரி கொடி அரி ஏறு அன்னன், வெருக் கொள் அரவம் அன்னன் அரவம் வெங் கொடியும் அற்று, வில்லும் முன் அற்று வீழ எரிகணை ஏவி, (அதன் பின் துரியோதனனை) சூழ்ந்த தரணிபர். (தன்னை) எதிர்த்து வந்த வேந்தர் கரிக்குலம் ..... தொட்டான், என்பது அன்வயம்.

சிங்கங்கொடியனை ஆண்சிங்கம் போன்ற வீமன், கண்டவ, அஞ்சும் பெரிய பாம்பை ஒத்த துரியோதனனது பாம்புக் கொடியும், வில்லும் முன்னே அற்று விழும்படி நெருப்பை ஒத்த கொடிய கணைகளை ஏவி, (அதன்பின், அவனை) சூழ்ந்து வந்த மன்னர்களும், (தன்னை) எதிர்த்து வந்த மன்னர்களின் யானை குதிரை தேர் ஆயவை அழியவும் கணைகளைப் பிரயோகம் செய்தனர் என்பதாம்.

**13. பல்லிய முழங்க மன்னர் படப்படப் பரித்தே ரோடும்**
**வில்லிய ருனை வேந்தன் வென்னிடும் விரைவு காணுச்**
**சொல்லிய விற்கை வாயு சுதனுட னுருமே றென்னச்**
**சல்லியன் முனைந்து வீர சாயக மேவி னனே.**

[பல் இயம் முழங்க மன்னர் படபட பரிதேரோடும் வில் இயல் தானை வேந்தன் வென் இடும் விரைவு காணு, சொல்லிய வில் கை வாயு சுதனுடன் உரும் ஏறு என்ன சல்லியன் முனைந்து வீரசாயகம் ஏவினன், ஏ.]

**விளக்கம்:-** பலவகை வாத்தியங்கள் முழங்க, (எதிரிகளான) அரசர்கள் மிகுதியாக அழியத் துரியோதனன் பின்னிட்டு ஓடும் விரைவைக் கண்டு, வீமனைச் சல்லியன் முனைந்து எதிர்த்து அம்புகளைத் தொடுத்தான், என்பதாம்.

வில் இயல்தானை வேந்தன் - வில்கள் பொருந்திய சேனைகளை உடைய துரியோதனன். சொல்லி...வாயு சுதன் - முன்னே

கூறப்பட்ட வில் ஏந்திய வாயுகுமாரனான வீமன். உரும் ஏறு என்ன சல்லியன் - பேரிடி என்று சொல்லத்தக்க சல்லியன். முனைந்து - உக்ரங் கொண்டு. சாயகம் - அம்பு.

சல்லியனை நகுலன் எதிர்த்தல்

**14. தம்முனோ டுடன்று வந்த சல்லிய குமாரன் றன்னை**
**எம்முட னெதிர்ப்பை யாகி லிமைப்பொழு திகல்செய் கென்னு**
**வெம்முனை கடந்த பொற்றேர் வெஞ்சிலை நகுலன் றோன்றி**
**அம்முனை கவந்த மாட வவனொடும் போர்செய் தானே.**

[தம் முனோடு உடன்று வந்த சல்லியகுமாரன் தன்னை, எம்முடன் எதிர்ப்பை ஆகில் இமை பொழுது இகல் செய்க எனு, வெம் முனை கடந்த பொன் தேர் வெம் சிலை நகுலன் தோன்றி, அ முனை கவந்தம் ஆட அவனொடும் போர் செய்தான், ஏ.]

**விளக்கம்:-** தன் தமையனோடு எதிர்த்து வந்த சல்லியனை நோக்கி, ''எம்மோடு எதிர்த்துப் போர் செய்ய வல்லையாயின், சிறிது நேரம் போர் செய்க,'' என்று சொல்லிக் கொண்டு, கொடிய போர் முனை பல வெற்றியுடன் கடந்த பொன் தேர் வெம் சிலை நகுலன், எதிர்வந்து, அப்போர்க் களத்தில் கவந்தங்கள் கூத்தாட அவனோடு போர் செய்தான், என்பதாம். குமாரன் - ஆண்மை வீரன்.

வீமனோடு போர் செய்ய வந்த சல்லியனை நகுலன் தடுத்து அவனோடு போர் செய்தான், என்க.

**15. மோகரித் தொன்றி ரண்டு மூன்றுநா லைந்தம் பேவிப்**
**பாகனைச் சிலையைப் பொற்றேர் பதாகையைப் பரியை வீழ்த்தி**
**ஆகமுற் றுருவ வெய்தா னருச்சுன னிளவன் மாறுப்**
**போகமத் திரத்தார் கோவும் புறந்தந்து போக லுற்றான்.**

[மோகரித்து ஒன்று இரண்டு மூன்று நால் ஐந்து அம்பு ஏவி, பாகனை சிலையை பொன்தேர் பதாகையை பரியை வீழ்த்தி, ஆகம் உற்று உருவ எய்தான் அருச்சுனன் இளவல்; மாறு போகம் மத்திரத்தார் கோவும் புறம் தந்து போகல் உற்றான்.]

**விளக்கம்:-** மோகரித்து - ஆவேசங் கொண்டு. அருச்சுனன் தம்பியான நகுலன், ஒன்று இரண்டு மூன்று நான்கு அம்புகளை தனித்தனி ஏவி, முறையே பாகன், வில், பொன்தேரின் கொடி ஆயவற்றை வீழ்த்தி, (அதன்பின்) ஐந்து அம்புகளைச் (சல்லியனது) மார்பில் பொருத்திப் பிளந்து செல்லும்படி எய்தான்; மத்திர நாட்டார் அரசனான சல்லியனும் பின்னிட்டு ஓடலுற்றான், - என்பதாம்.

மாருத போகம் மத்திரத்தார் - நீங்காத போகானுபவத்தை யுடைய மத்திர தேசத்தார். ஒரு அம்பை ஏவிப் பாகனையும், இரண்டு அம்புகளை ஏவி வில்லையும், மூன்று அம்புகளை ஏவித் தேர்க் கொடியையும், நாலு அம்புகளை ஏவிக் குதிரைகளையும், அழித்து, ஐந்து அம்புகளை (சல்லியனது) மார்பில் ஊடுருவிச் செல்லுமாறு ஏவினன், என்று, முறை நிரனிறைப் பொருள் கொள்க. போகம், என்பது செல்வ மிகுதியையும் அதன் பயனாய போகானுபவத்தையும் குறிக்கும்.

கர்ணனோடு விராடன் பொரல்

**16. சையமோ ரிரண்டு தம்மிற் பொருதெனத் தடந்தே ருந்தி**
**வெய்யவன் மகனும் வீர விராடனு மெதிர்ந்த வேலை**
**வையகங் கம்ப முற்று மாசுண நடுங்க மேன்மேல்**
**எய்யும்வெங் கணையால் வானத் தெல்லையு மறைந்த தன்றே.**

[சையம் ஓர் இரண்டு தம்மில் பொருது என தடந்தேர் உந்தி வெய்யவன் மகனும் வீர விராடனும் எதிர்ந்த வேலை, வையகம் கம்பம் உற்று மாசுணம் நடுங்க மேல் மேல் எய்யும் வெம் கணையால் வானத்து எல்லையும் மறைந்தது, அன்றே.]

**விளக்கம்:**—சையம்- (சைலம் என்பதின் விகாரம்) மலை, பொருதென - பொருதது என (தொழிற்பெயர் விகாரம்). இரண்டு மலைகள் தமக்குள் போர் செய்தாற்போல், பெரிய தேர்களைச் செலுத்தி, கர்ணனும் வீர விராடனும் போர் செய்த பொழுது, பூமி கம்பிக்க, ஆதிசேஷன் நடுங்க (இருவீரரும்) இடையறாது ஏவுகின்ற கணைகளால் வானத்தினிடமும் மறைதலுற்றது, என்பதாம். அன்றே; ஈற்றசை, வெய்யவன்—சூரியன்.

துருபதனும் பகதத்தனும் பொரல்

**17. துருபத யாக சேன நிருபனுந் தும்பை சூடி**
**வருபக தத்த னென்னு மடங்கலே றனைய கோவும்**
**ஒருபகன் முழுதுந் தங்க ளூக்கமு முரனுந் தேசும்**
**பொருபடை வலியுங் காட்டிப் போதகப் பூசல் செய்தார்.**

[துருபதயாகசேன நிருபனும் தும்பை சூடிவரு பகதத்தன் என்னும் மடங்கல் ஏறு அனைய கோவும், ஒரு பகல் முழுவதும் தங்கள் ஊக்கமும், உரனும், தேசும், பொருபடை வலியும் காட்டி போதகம் பூசல் செய்தார்.]

**விளக்கம்:**—துருபதன் என்றும் யாக சேனன் என்றும் அழைக்கப்படும் பாஞ்சால நாட்டு மன்னனும் (போருக்குரிய) தும்பை

மாலை சூடி வருகின்ற பகதத்தன் என்னும் ஆண்சிங்கம் அனைய மன்னனும், ஒரு நாள் முழுதும் தங்கள் போர் உற்சாகத்தையும், உடல் வலியையும், பராக்ரமத்தையும் போர் ஆயுத வலிமையை யும் காட்டி யானைப்போர் செய்தார், என்பது பொருள். பொதகப் பூசல் - யானைப்போர்.

சிகண்டியின் போராற்றல்

**18. துன்றுவெங் கழற்காற் சோம தத்தனுஞ் சூழ்ந்து நின்ற**
**வன்றிறல் வேந்தர் தாமும் வாளமர் புறந்தந் தோட**
**அன்றுவீ டுமனை வென்ற வாண்டகை சிகண்டி யென்பான்**
**இன்றுபோர் செய்த வீர மெம்மனோர்க் கியம்ப லாமோ?**

[துன்று வெம் கழல்கால் சோமதத்தனும், சூழ்ந்து நின்ற வல்திறல் வேந்தர்தாமும் வாள் அமர் புறம் தந்து ஓட, அன்று வீடுமனை வென்ற ஆண் தகை சிகண்டி என்பான் இன்று போர் செய்த வீரம் எம்மனோர்க்கு இயம்பல் ஆமோ.]

**விளக்கம்:**—கலிங்கநாட்டரசனான சோமதத்தனையும் அவனைச் சேர்ந்தாரையும் வாள் போரில் பின்னடைந்து ஓடச்செய்த சிகண்டி யின் வீரப்பெருமை எம்மைப் போன்றவர்களுக்குச் சொல்லுந் தன்மையதாமோ! (எம்மால் சொல்ல முடியாது, என்றபடி. என்ப தாம், செய்யுள் மிகமிக சுலபமானதே.

அபிமன் லட்சணகுமாரனோடு பொரல்

கலிவிருத்தம்

**19. தேர்த்திரள் பரித்திரள் கரித்திரள் சேனையின்**
**கோத்திரள் புடைவரக் குடைவரக் கொடிவரப்**
**பார்த்திவன் மதலையும் பார்த்தன்மா மதலையும்**
**தூர்த்தனர் விசும்பையுந் தொடுத்தன தொடைகளால்.**

**விளக்கம்:**—பதம் பிரிவு வேண்டாச் சுலபத்தினது செய்யுள். துரியோதனன் குமாரனான லட்சண குமாரனும் அபிமன்யுவும் கடும் போர் புரிந்து வான வெளியைப் பிரயோகித்த அம்புகளால் மறைத்தனர், என்பதாம். பூமியை இப்பொழுது துரியோதனன் ஆளுதலால், பார்த்திவன், எனப்பட்டான். சேனையின் கோத் திரள்—சேனையைச் சேர்ந்த அரசர்களின் கூட்டம்.

**20. மொய்கணை பிற்பட முந்துதேருந்தவும்**
**பெய்கணை கணையுடன் பின்னிமுன் வீழவும்**
**எய்கணை யபிமனு மிலக்கண குமரனும்**
**கைகணை தரநெடுங் கார்முகம் வாங்கினார்.**

[மொய்கணை பின்பட முந்து தேர் உந்தவும், பெய்கணை கணையுடன் பின்னி முன் விழவும், எய்கணை அபிமனும் இலக்கண குமரனும் கை கணைதர நெடுங் கார்முகம் வாங்கினர்.]

**விளக்கம்:-**(விடப்படும்) கூட்டமான அம்புகள் (வேகத்தில்) பின்படும்படி தேர் செலுத்தப்படவும், (மழைபோல்) இருவராலும் பொழியப்பெற்ற அம்புகள் ஒன்ரோடொன்று பின்னிக்கொண்டுகீழே விழவும்; அம்புகளை, எய்யவும் அபிமனும் இலட்சண குமாரனும் கைகள் அம்புகளை எடுத்துத்தர, பெரிய வில்களை வளைத்து விற்போர் செய்தனர், என்பதாம்.

கணை என்பது ஒரே பொருளில் பல முறை வந்திருப்பதால், **சொற்பொருள் பின் வருநிலை அணி** ஆகும்.

**21. இன்சிலை மதனவே ளெனவருங் குமரனவ்**
**வன்சிலை லில்லிதான் மகிழ்வுறுங் குமரனை**
**நன்சிலை நடுவுற நாணொடுந் துணியவே**
**தன்சிலை கொண்டுவெஞ் சாயக மேவினன்.**

[இன்சிலை மதனன் வேள் என வரும் குமரனும், வன்சிலை வில்லிதான் மகிழ்வுஉறும் குமரனை நல்சிலை நடுஉற நாணொடும் துணியவே. தன் சிலை கொண்டு வெம் சாயகம் ஏவினன்.]

**விளக்கம்:-**வன்சிலை வில்லிதான் மகிழ்வுஉறும் குமரன் - வலிய மேரு மலையை வில்லாகக்கொண்ட சிவபிரான் மகிழும் விசயனது குமாரனான அபிமன், இனிய கரும்பு வில்லையுடைய மன்மதன் போல் களம் வந்த இலட்சண குமாரன், அபிமனது சிறந்த வில் நாணொடும் நடுவிடம் அறுபடும்படி தனது வில்லைக் கொண்டு சரங்களைத் தொடுத்துப் போர் செய்தான், என்பதாம். குமரனை (உருபு மயக்கம்) விசயனின் குமாரனான அபிமனது.

**22. அற்றவிற் றுணிகளா லரியையும் பாகையும்**
**செற்றனன் சென்றனன் தேரொடுந் தேருகக்**
**கொற்றவர் நூற்றுவர்க் குரியவக் குமரனைப்**
**பற்றின னுயிரொடும் பாண்டவர் குமரனே.**

[அற்ற வில் துணிகளால் அரியையும் பாகையும் செற்றனன். சென்றனன் தேரொடும் தேர்உக, கொற்றவர் நூற்றுவர்க்கு உரிய குமரனை பற்றினன் உயிரொடும் பாண்டவர் குமரனே.]

**விளக்கம் :-**அறுபட்ட வில் துண்டுகளால் குதிரைகளையும், தேர்ப்பாகனையும் தாக்கி அழித்து, தேரொடுதேர் மோதி உகும்படி அபிமன் தன் தேரைச் செலுத்திச் சென்று லட்சணனை உயிரொடும் பற்றினன், என்பதாம்.

இலக்கணனிடம் துரியோதனாதியர்க்கும், அபிமனிடம் பாண்டவர்க்கும் உள்ள அபேதமான அன்பு தோன்ற, நூற்றுவர்க்குரிய குமரன் என்றும், 'பாண்டவர் குமரன்' என்றும் குறித்தார் என்க.

**23. வீயினால் வென்றபோர் வில்லியைக் கண்ணுதல்**
**தீயினால் வென்றவன் றிகழ்தருஞ் சிந்தையோன்**
**காயினான் வார்குழல் கைப்படுத் தெதிரறப்**
**போயினா னவனெடும் பொன்னெடுந் தேரின்மேல்.**

[வீயினால் வென்ற போர் வில்லியை கண்ணுதல் தீயினால் வென்றவன் (இடங்கொண்டு) விளங்கும் சிந்தையோன், காயினான் வார் குழல் கை படுத்து. எதிர் அற போயினான் அவனெடும் பொன் நெடுந் தேரின் மேல்.]

**விளக்கம் :-**வீ-மலர், மலர்க்கணையினால் உலகத்தை வென்ற மன்மதனை நுதல்கண் தீயினால் வென்றவனான சிவபெருமான் (இடங்கொண்டு) விளங்கும் உள்ளத்தை உடையவனான அபிமன், தன்னைச் சினந்து எதிர்த்த இலக்கணனை, அவனது நீண்ட தலைமயிரைப் பற்றியிழுத்துக் கொண்டு, அவனோடு தன் தேர்மேல் எதிர்ப்பார் இன்றிச் செல்வானாயினான், என்பதாம். பக்தர் உள்ளத்தில் இருப்பவன் சிவபிரானாதலால், சிவபக்தனான அபிமனை, ''அப்பிரான் திகழ்தரும் சிந்தையோன்,'' என்றார்.

சயத்திரதன் அபிமனைத் தடுத்தல்

**24. முந்துவா ளபிமனம் மூரிவிற் குமரனை**
**உந்துதேர் மீதுகொண் டோடலு மொருபுடைச்**
**சிந்துபூ பதிசெயத் திரதன்வெஞ் சினமுற**
**வந்துவெங் குனிசிலை வாளியிற் றகையவே.**

[முந்து வாள் அபிமன் அ மூரி வில் குமரனை உந்து தேர் மீது கொண்டு ஓடலும், ஒரு புடை சிந்து பூபதி சயத்திரதன் வெம் சினம் உற, வந்து வெம் குனி சிலை வாளியின் தகையவே-]

**விளக்கம் :-**இலக்கணனை அபிமன் தேரில் கொண்டு செல்ல, (அதைக்கண்ட) சயத்திரதன், ஒருபுறமிருந்து, கோபம் மிகுந்து எழ, தனது கணைகளால் தடுத்தான், என்பதாம்.

முந்து - சிறந்த. அபிமனின் வில்லை அறுத்தானாதலால், இலக்கணனை 'மூரிவில் குமரன்' என்றார். சிந்து நாட்டரசன் சயத்திரதன்; அவன், துரியோதனாதியர் தங்கையான துச்சலையின் கணவன்.

**25. மடங்கலை வளைவதோர் சிலம்பிநூல் வலையெனத்**
**தொடங்கிய மன்னவன் தோளுரந் தொலைந்தபின்**
**திடங்கொடோ ளங்கர்கோன் முதலிய தேர்மனர்**
**அடங்கவந் தபிமனு மொருவனோ டமர்செய்தார்.**

[மடங்கலை வளைவது ஓர் சிலம்பி நூல்வலை என தொடங்கிய மன்னவன் தோள் உரம் தொலைந்தபின், திடம் கொள் தோள் அங்கர்கோன் முதலிய தேர் ம(ன்)னர் அடங்க வந்து அபிமன் ஆம் ஒருவனோடு அமர் செய்தார்.]

**விளக்கம்:-** ஆண் சிங்கத்தைச் சுற்றிக்கொண்டு அகப்படுத்துவதான ஒரு சிலந்திப் பூச்சியின் நூலினாலான வலைபோல், (அபிமனை அகப்படுத்தத்) தொடங்கின, மன்னனான சயத்திரதனின் தோள்வலி அழியலுற்றபின், வலிய தோள்களை உடைய அங்கர் கோனான கர்ணன் முதலிய தேர்மன்னர் அனைவரும் எதிர்த்து வந்து அபிமனை ஒருவனோடு போர் செய்தனர், என்பதாம். முதலடி, இல்பொருள் உவமை.

**26. வந்தவர் வந்தவர் வாணுத னிலைதொறும்**
**சிந்துரத் தூளியாற் றிலகமிட் டனனெனக்**
**கொந்துறு கணைமுனைக் குருதிநீர் மல்கவே**
**வெந்திறல் வில்லின்வென் கண்டனன் வீரனே.**

[வந்தவர் வந்தவர் வாள் நுதல்நிலை தொறும் சிந்துரம் தூளியால் திலகம் இட்டனன், என, கொந்து உறுகணை முனை குருதிநீர் மல்கவே, வெந்திறல் வில்லின் வென் கண்டனன் வீரனே.]

**விளக்கம்:-** மேலும் மேலும் எதிர்த்து வந்த அரசர்களின் வாள் நுதலினிடந்தோறும் சிந்துரத்தூளால் திலகம் இட்டனன் போல், திரட்சி பொருந்திய அம்புமுனையால் இரத்தம் பெருகி நிறையும் படி வீரனான அபிமன் அவர்களைத் தனது வெம்திறல் வில்லினால் பின்னிடச் செய்தான், என்பதாம். வாள் - பிரகாசம், கொந்து உறுகணை - திரட்சி பொருந்திய அல்லது குத்துதலைச் செய்யும் கூரிய கணை. மல்க - நிறைய. வந்தவர், வந்தவர், என்ற அடுக்கு மிகுதியைக் குறிக்கும்.

சல்லியன் இடையிடல்

**27. சென்றதேர் யாவையுந் தன்னொரு தேரினால்**
**வென்றுமா மன்னவன் மகனையும் மீதுகொண்(டு)**
**அன்றுபோம் வெஞ்சிலை யாண்மைகண் டபிமனை**
**வன்றிறற் சல்லியன் வந்துமுன் வளையவே.**

[சென்ற தேர் யாவையும் தன் ஒரு தேரினால் வென்று, மா மன்னவன் மகனையும் மீது கொண்டு அன்று போம் வெம்சிலை

ஆண்மை கண்டு, அபிமனை வல்திறல் சல்லியன் வந்து முன் வளை யவே.]

**விளக்கம்:-** தன்னை எதிர்த்து வந்த தேர்கள் எல்லாவற்றை யும் தனது ஒரு தேரினுல் வென்று, துரியோதனன் மகனையும் தேர் மீது கொண்டு, சென்ற வெஞ்சிலை ஆண்மை கண்டு, அப் பொழுது அபிமனை வெம்திறல் சல்லியன் சூழ்ந்து கொள்ள (அடுத்த கவி யோடு தொடரும். இதுவும் அடுத்த கவியும் குளகம்.] என்பதாம். மா மன்னன் - துரியோதனன்.

**28. சித்திர பானுவிற் சீறிமுற் செல்லுமம்**
**மத்திர ராசனை வருகநீ வருகவென்(று)**
**அத்திர நாலிரண் டவன்முகத் தடைசினுன்**
**மித்திரர் செல்வமாம் விசயன்மா மதலையே.**

[சித்திர பானுவின் சீறி முன் செல்லும் அ மத்திரராசனை வருக நீ வருக என்று, அத்திரம் நால் இரண்டு அவன் முகத்து அடைசி னுன், மித்திரர் செல்வம் ஆம் விசயன் மா மதலையே.]

**விளக்கம்: -** சித்திரபானு - (சித்திரபாநு) சூரியன். மத்திர ராசன் - சல்லியன். மித்திரர் செல்வம் ஆம் விசயன் - நண்பர் களுக்குச் செல்வம் போன்று அதாவது உற்றவிடத்து உதவுகின்ற விசயன். அடைசினுன் - (சரத்தை) ஏவினுன், இருளை அழிக்கும் சூரியனைப் போல் பகைவிலக்கச் சீறி வரும் அந்த சல்லியனை, (நோக்கி) அபிமன்யு, ''வருக நீ,வருக,'' என்று அழைத்து, அவன் முகத்தில் எட்டு அம்புகளைச் செலுத்தினுன், என்பதாம்.

**29. தோளிரண் டினுநடுத் துளைபடப் பாகன்மேல்**
**மீளவுங் கொடியதோர் வீரவே லேவினுன்**
**நீளவெங் கதையுட னீள்வரை யிழிதரும்**
**யாளிபோற் சல்லிய னிரதம்விட் டிழியவே.**

[தோள் இரண்டினும் நடு துளை பட, பாகன் மேல் மீளவும் கொடியது ஓர் வீரம் வேல் ஏவினுன்; நீளம் வெம் கதையுடன், நீள்வரை இழிதரும் யாளிபோல் சல்லியன் இரதம் விட்டு இழியவே.]

**விளக்கம்:** சல்லியன் நீள வெம் கதையுடன், நீள்வரை இழிதரும் யாளி போல் இரதம் விட்டு இழியவே, (அபிமன்) தோள் இரண்டினும் நடு துளைபட பாகன்மேல் மீளவும் கொடியது ஓர் வீரம் வேல் ஏவினுன், என்று அன்வயிக்க.

சல்லியன் முகத்தில் கணைகளைச் செலுத்திய அபிமன், அவனைத் தேரினின்று இறங்குமாறு செய்ய மறுபடியும் இரண்டு தோள்களிலும் துளை உண்டாகும்படி வீரவேலைச் செலுத்தினுன்,

என்பதாம். நீள் வரையினின்று இறங்கும் யாளி போல் சல்லியன் தேரினின்று இறங்கினான், என்றது, அவனது ஆற்றலையும், சீற்றத்தையும் குறிக்கும்.

**30. வன்புட னபிமன்மேன் மற்றவன் வருதலும்**
**அன்புடன் கண்டுபே ரனிலன்மா மதலைபோய்**
**என்புடன் புயநெரித் தினமணி மகுடமும்**
**முன்புடன் சாயவே தண்டினான் மொத்தினான்.**

[வன்புடன் அபிமன்மேல் (மற்று) அவன் வருதலும், அன்புடன் கண்டு பேர் அனிலன் மாமதலைபோய் என்புடன் புயம் நெரித்து இனம் மணிமகுடமும் முன்பு உடன் மடியவே தண்டினால் மொத்தினான்.

**விளக்கம்:** சல்லியன் கதையுடன் கொடுமையுடன் அபிமனை எதிர்த்து வரலும், வாயுகுமாரனான வீமன் அதைக் கண்டு, (மகனிடத்துள்ள) அன்போடு, (சல்லியனிடம்) போய், எலும்புகளுடன் தோளும் நொறுங்கி, சிறந்த மணிகள் பதிக்கப்பெற்ற கிரீடமும் சாயும்படி, (அபிமன் வருவதற்கு) முன்பே, விரைந்து தனது கதையால் மோதினான் என்பதாம்.

முன்புடன் என்று கொண்டால், வலிமையோடு, என்பது பொருளாகும். மற்று, அசை. மற்றவன், என்று கொண்டால், எதிரியான சல்லியன், என்பது பொருளாகும்.

**31. தலக்கணே சல்லியன் வீழ்தலுந் தந்தையோடு**
**அலக்கணுற் றடியனே னாண்மையென் னாமெனக்**
**குலக்கணி யானவிற் குமரனின் றயர்தலும்**
**இலக்கண குமரனுந் தனதுதே ரேறினான்.**

[தலக்கண் (ஏ) சல்லியன் வீழ்தலும் தந்தையோடு அலக்கண் உற்று, ''அடியனேன் ஆண்மை என் ஆம்'', என, குலக்கு அணி ஆன வில் குமரன் நின்று அயர்தலும், இலக்கண குமரனும் தனது தேர் ஏறினான்.]

**விளக்கம்:-** தலக்கண் — தரையில், அலக்கண் உற்று — வருத்தம் அடைந்து, குலக்கு அணி — குலத்துக்கு அணி (ஆபரணம்), (குலத்துக்கு, என்பது அத்துச் சாரியை பெருமல் குலக்கு என நின்றது) சல்லியன் வீமன் கதையால் அடிபட்டுத் தரையில் கிடத்தலும், சுத்த வீரனான அபிமன் வருத்தம் அடைந்து, தனது பெரிய தந்தையினிடம் (தேவரீர் இவ்வாறு என் பகையை வீழ்த்தினால்) ''என் ஆண்மை என்னாம்? அதாவது பழுதுபடுமே!'' என்று கூறி அயர்ந்து நிற்கையில், இலக்கணனும், தப்பி வந்து தனது தேரில் ஏறிக் கொண்டான், என்பதாம்.

32. தரையில்வீழ் சல்லியன் றன்னையுந் தனதுபேர்
இரதமே லேற்றியவ் விலக்கண குமரனும்
குரிசிலை யன்றுயக் கொண்டுபோ யினனரோ
கிருதவன் மாவெனுங் கிளர்முடி நிருபனே.

**விளக்கம்:-** செய்யுள் மிக சுலபமானது. எனவே பதப்பிரிவு தரவில்லை. கிருதவன்மா என்ற அரசன், தரையில் வீழ்ந்து கிடந்த சல்லியனையும் தன் தேரில் ஏற்றிக் கொண்டு, (அபிமன் கையினின்று தப்பித் தன் தேரின் மேல் ஏறிக் கொண்ட) இலக்கணனையும் அப்பொழுது உய்யக் கொண்டு போனுன், என்பதாம். அரோ; ஈற்றசை.

உயக் கொண்டு போனுன் - தப்பிப்பிழைக்கும்படி அழைத்துப் போனுன். கிருதவன்மா என்பவன், கண்ணனுல் துரியோதன னுக்குப் போர்த் துணையாகக் கொடுக்கப்பட்ட யாதவசேனைத் தலைவன்.

33. பொரும்பொரு முனைதொறும் புண்ணியன் சேனையில்
பெரும்பெருந் தரணிபர் பேறுடன் வேறலால்
அரும்பெருங் கொடியின்மே லரவவே றெழுதினுன்
திரும்பினன் பல்வகைச் சேனையுந் தானுமே.

[பொரும் பொரும் முனைதொறும் புண்ணியன் சேனையில் பெரும் பெரும் தரணிபர் பேறுடன் வேறலால், அரும் பெருங் கொடியின் மேல் அரவம் ஏறு எழுதினுன் திரும்பினன் பல்வகை சேனையும் தானுமே.]

**விளக்கம்:-** போர் செய்யும் இடங்கள் தோறும் புண்ணிய புருஷனுன தருமனது சேனையிலுள்ள பெரிய அரசர்கள் தங்கள் பாக்கியத்தால் பகை வெல்லலும், அரிய பெரிய கொடியில் பாம்பின் வடிவம் எழுதப் பெற்ற துரியோதனன் தனது பலவகைப் பட்ட சேனையும் தானும் படை வீடு திரும்பினுன், என்பது பொருள்.

அத்தமன வருணனை

அறுசீர் ஆசிரிய விருத்தம்

34. தண்டே கொண்டு வீமனெனுஞ் சண்ட பவனந் தாக்குதலால்
திண்டே ரென்னப் பட்டதெல்லாஞ் சிதைகின் றதுகண் டிதயம்வெரீஇப்
பண்டே யுள்ள வோராழித் தேரோ டொளித்துப் பரிகளுடன்
கொண்டே யருக்க னவ்வளவிற் குடபான் முந்நீர் குளித்திட்டான்

[தண்டே கொண்டு வீமன் எனும் சண்ட பவனம் தாக்கு தலால், திண் தேர் என்ன பட்டது எல்லாம் சிதைகின்றது கண்டு, இதயம் வெரீஇ பண்டே உள்ள ஓர் ஆழி தேரோடு ஒளித்து பரிகளுடன் கொண்டே அருக்கன் அ அளவில் குடபால் முந்நீர் குளித்திட்டான்.]

**விளக்கம்:-** வீமன் என்னும் பெருங் காற்று கதையே கொண்டு தாக்குதலினுல், வலிய தேர் என்று சொல்லப் பட்டவை எல்லாம் சிதைகின்றதைக் கண்டு, சூரியன் மனத்தில் அச்சங் கொண்டு, அதாவது தனது தேருக்கும் தீங்கு நேருமோ என்று பயந்து, பழமையாக உள்ள ஒற்றைச் சக்கரத் தேருடன் குதிரைகளையும் தன்னேடு கொண்டு, (ஒருவர் கண்ணிலும் படாமல்) மறைந்து, அவ்வளவில் மேலைக் கடலில் மறைந்தான், அதாவது அஸ்தமித்தான், என்பது பொருள். இவ்வத்தமன வருணனை, தற்குறிப்பேற்ற அணியாகும். முந்நீர் - கடல்.

**35. சென்ற நிருபர் புறநாணத் திண்டோ ளபிமன் முதலான**
**வென்றி நிருபர் குழூஉக்கொண்டு விறலார் சேனை வேந்தருடன்**
**மன்றல் கமழுந் துழாய்மவுலி மாலுந் தாமும் பாடிமனை**
**ஒன்றி யினிதிற் கண்டுயின்ரு ருரனுந் திறலு முடையோரே.**

[சென்ற நிருபர் புறம் நாண திண் தோள் அபிமன் முதலான வென்றி நிருபர் குழூஉக் கொண்டு விறல் ஆர் சேனை வேந்தருடன், மன்றல் கமழும் துழாய் மவுலி மாலும் தாமும் பாடிமனை ஒன்றி இனிதின் கண் துயின்ருர் உரனும் திறலும் உடையோரே.]

**விளக்கம்:-** (துரியோதனனுடன் பாசறை) சென்ற நிருபர் மற்ருேர் புறத்தில் (உற்ற தோல்வியால்) நாணம் அடைய, திண் தோள் அபிமன் முதலிய வெற்றி அடைந்த நிருபர்கள், ஒன்று கூடி வெற்றி பொருந்திய சேனையோடும் மற்றை அரசர்களோடும், மணம் கமழும் துளபமாலை சூடிய திருமுடியை உடைய கண்ணனும் தாமும் படைவீடு அடைந்து இனிதே துயின்றனர், என்பது பொருள். மௌலியின் போலி மவுலி.

## துரியோதனன் துயிலாது வருந்தல்

**36. பானு ளளவுந் துயிலாமற் பாந்தட் டுவசன் தனக்குயிர்நண்(பு)**
**ஆனுர் பலரும் வாள்வேந்த ரமைச்சர் பலரு மினையோரும்**
**சேனு பதியுஞ் சூழவிருந் தபிமன் கையிற் றிருமைந்தன்**
**தானு டமரி லகப்பட்ட தாழ்வுக் கிரங்கி யுளநொந்தார்.**

[பால் நாள் அளவும் துயிலாமல் பாந்தள் துவசன் தனக்கு உயிர் நண்பு ஆனுர் பலரும், வாள் வேந்தர் அமைச்சர் பலரும்,

இளையோரும், சேனாபதியும் சூழ இருந்து, அபிமன் கையில் திரு மைந்தன், தான் ஆடு அமரில் அகப்பட்ட தாழ்வுக்கு இரங்கி உளம் நொந்தார்.]

**விளக்கம்:-** பால் நாள் - பாதி ராத்திரி. துரியோதனன், தனக்கு உயிரை ஒத்த நண்பர்களோடும், அரசர், அமைச்சர், தம்பியர், சேனாதிபதியான துரோணன் ஆயவர் ஒன்று கூடி, இரவின் ஒருபாதி அளவும் தூங்காமல், அபிமன் கையில் இலக்கணன் அகப்பட்ட தாழ்மைக்கு இரங்கி மனம் வருந்தினார்கள், என்பதாம்.

**37. தனுவே தத்தின் கேள்விக்கும் சதுர்வே தத்தின் கேள்விக்கும்
சேனுவே யுன்னை யல்லதினிச் செய்து முடிக்க வல்லவர்யார்
மனுவே யனைய யுதிட்டிரனை நாளைச் சமரில் மற்றிதற்கோர்
அனுவே யென்ன வகப்படுத்தி னல்லாற் செற்ற மருதென்றான்.**

[தனு வேதத்தின் கேள்விக்கும் சதுர் வேதத்தின் வேள்விக்கும் சேனுவே, உன்னை அல்லது இனி செய்து முடிக்க வல்லவர் யார்? மனுவே அனைய யுதிட்டிரனை நாளை சமரில், மற்று இதற்கு ஓர் அனுவே என்ன அகப்படுத்தின் அல்லால் செற்றம் அருது என்றான்.

**விளக்கம்:-** தனுர் வேத உபதேசத்திற்கும் சதுர் வேதங்களின் விதி கடவாது யாகம் செய்வதற்கும் இடமாய் அமைந்த பெரியோனே, (இப்பொழுது நான் உனக்குச் சொல்லப்போவதை) உன்னையல்லால் இனிச் செய்து முடிக்க வல்லார் யாவர் இருக்கின்றனர், என்பது முதலிரண்டடிகளின் பொருள். ஜனுஷ் என்ற வடசொல்லின் திரிபான **சனு** என்பது மோனை நோக்கி முதல் அகரம், எகரமானது என்றும் வை. மு. கோ. கூறுகின்றார்; இடம் என்பது பொருள். சனுவே, என்பதிலுள்ள ஏகாரம், விளி உருபு. மனுவே அனைய யுதிட்டிரன் - தர்மங்கடவாத ஒழுக்கங்களால் தர்ம சாத்திரம் வகுத்த மனுச்சக்ரவர்த்தியை ஒத்தவனான தருமன். இதற்கு ஓர் அனுவே என்ன - இலக்கணன் அபிமனால் பிடிக்கப் பெற்றதற்கு எதிர்வினையாக. பின்பு என்ற பொருளை உடைய **அநு** என்ற வடசொல், இங்கே, **பதிலுக்குப்பதில்** என்ற பொருளில் வந்துளது. செற்றம் - தீராப்பகை. மற்று: அசை, வினைமாற்றும் ஆம். பதிலுக்குப் பதில் தருமனைப் பற்றினால் அன்றி எனது பகைமை தீராது, என்று துரோணனைத் துரியோதனன் வேண்டும் கருத்தின ஈற்றடிகள்.

**38. பெற்றேன் றனினுஞ் சதமடங்கு வலியோன் வீமன் பின்னிற்கப்
பொற்றேள் விசயன் முன்னிற்கப் பொரும்போர் முனையிற்
போருதவி**

**அற்ருேர் போல வில்வலியா லறத்தோன் றன்னை யகப்படுத்தல்
மற்ருேர் பிறப்பிற் றெரியாதிப் பிறப்பின் முடிக்க
மாட்டேமால்.**

[பெற்ருேன் தனினும் சதம் மடங்கு வலியோன் பின் நிற்க, பொன் தோள் விசயன் முன் நிற்க, பொரும் போர் முனையில் போர் உதவி அற்ருேர் போல, வில் வலியால் அறத்தோன் தன்னை அகப் படுத்தல் மற்று ஓர் பிறப்பில் (செய்ய முடியுமோ முடியாதோ என்பது எனக்கு) தெரியாது; இப்பிறப்பில் முடிக்க மாட்டேம், ஆல்.]

**விளக்கம்:-** ''தந்தையினும் நூறு மடங்கு வலிமையுடைய வனுன வீமன் பின்னே காத்து நிற்கவும், விசயன் முன்னே காத்து நிற்கவும், போர்த்துணை இல்லாதவரை அகப்படுத்துதல் போல், தருமனை வில்வலியால் அகப்படுத்தல் என்பது மற்ருேர் ஜன்மத்தில் முடியுமோ முடியாதோ, அறியேன்; இந்த ஜன்மத்தில் அதைச் செய்து முடிக்கும் வல்லமை எனக்கு இலது,'' என்று துரோணர் கூறினுர், என்பதாம்.

**39. செவ்வாய் வைக்கும் வலம்புரிக்கைத் திருமால் செம்பொற்
றேரூர
வெவ்வாய் வாளி வில்விசயன் மெய்ம்மைத் தரும னணிநின்ற
அவ்வா யிமைப்போ தணுகாமற் காப்பார் சிலருண் டாமாகில்
இவ்வாய் நாளை யகப்படுத்தித் தரலா மென்ருு னெழின்
மறையோன்.**

[செவ்வாய் வைக்கும் வலம்புரி கை திருமால் செம் பொன் தேர் ஊர, வெவ்வாய் வாளி விசயன் மெய்ம்மை தருமன் அணி நின்ற அவ்வாய் இமைப்போது அணுகாமல் காப்பார் சிலர் உண்டு (ஆம்) ஆகில், இ வாய் நாளை அகப்படுத்தி தரல் ஆம் என்ருன் எழில் மறையோன்.]

**விளக்கம்:-** கண்ணன் தேர் செலுத்த வில் விசயன், தருமன் அணிவகுப்பில் நின்ற அவ்வாய் (அவ்விடத்தில்) சிறிது பொழுதேனும் நெருங்கவொட்டாதபடி தடுப்பார் உள ராகில், அவ்வாய் (அப்போர்க்களத்தில்) நாளை அகப்படுத்தித் தரல் இமல்வதாகலாம், என்று துரியோதனனுக்குத் துரோணன் கூறினுன், என்பதாம். அதாவது, ''முயன்று பார்ப்பேன், நிச்சயமாய் ஒன்றும் கூற முடியாது'', என்றபடி.

கண்ணன் தேர் நடத்தலோடு, பகைவரை அஞ்சி வலி யொடுங்கச் செய்யும் சங்கநாதமும், விசயனது வெற்றிக்குக் காரணம், என்று கூறும் கருத்தது, முதலடி.

**40. திகத்த ராசன் முதலாகச் சஞ்சத் தகரிற் சில மன்னர்**
**உகத்திற் கடையிற் கனல்போல்வா ரொருவர்க் கொருவ**
**ருரைமுந்திச்**
**சகத்துக் கொருவ னெனும்விசயன் றம்முற் குதவி**
**செய்யாமல்**
**மகத்திற் சனிபோல் வளைக்குவம்யா மெனவஞ் சினமும் பல**
**சொன்னார்.**

[திகத்த ராசன் முதலாக சஞ்சத்தகரில் சில மன்னர், உகத்தின் கடையில் கனல் போல்வார் ஒருவர்க்கு ஒருவர் உரை முந்தி, சகத்துக்கு ஒருவன் எனும் விசயன் தம் முற்கு உதவி செய்யாமல் மகத்தில் சனிபோல் வளைக்குவம் யாம் என, வஞ்சினமும் பல சொன்னார்.]

**விளக்கம்:-** திகத்தராசன்-திரிகர்த்த தேசத்து அரசன். சஞ்சத்தகர்-சம்சப்தகர்; (போர் தொடங்கு முன்னரே சபதம் பல கூறி, அவ்வாறே நடத்திக் காட்டும் ஆற்றலுடையவர்.) உகத்தின் கடை - யுக முடிவு, கல்பாந்த காலம். மகத்தில் சனி - மக நட்சத்திரத்தில் சனி; (அதாவது மக நட்சத்திரத்தில் சனியின் சஞ்சாரம் தீங்கு விளைக்கும், என்பர்). வஞ்சினம் - சபதமொழி. திரிகர்த்த நாட்டு அரசன் முதலாக, சம்சப்தகரைச் சேர்ந்தவர்களில் பிரளயகாலத்து அக்னி போன்ற சில மன்னர், ஒருவரை ஒருவர் முந்தி, விசயன் தம் முன்னவனை தருமனுக்கு உதவியாகாதபடி, நாங்கள் மகத்தில் சனிபோல் அவனைச் சூழ்ந்துகொள்வோம், என்று சொல்லிச் சபதமொழிகள் பலவும் சொன்னார்கள், என்பதாம்.

திரிகர்த்தம், என்பது பஞ்சாப் பிரதேசத்திலுள்ள **ஜலந்தர்** என்று சிலர் கூறுகின்றனர். உகம் - யுகம்; காலத்தின் பேரெல்லை. பல யுகங்கள் சேர்ந்தது ஒரு கற்பம். உகக்கனல், என்பது பிரளயக்கனல் ஆகின்றது. மகச்சனி தேசப்பிரஷ்டம், தனச்சேதம், மரணம் முதலிய தீங்குகளை விளைவிக்கும், என்று கூறும் சோதிட நூல்.

**41. அருளே வடிவு கொண்டனையோ னருகங் கமரி லணுகாமல்**
**உருளேரிரதத் தருச்சுனனை யொருநாண் முழுதுந் தகைந்திலமேல்**
**மருளே கொண்டு குடிவருந்த மனுநூல் குன்றி வழக்கழியப்**
**பொருளே வெஃகு மரசரைப்போற் புகுவேம் யாமு நரகென்றார்.**

[அருளே வடிவு கொண்டு அனையோனை அருகு அங்கு அமரில் அணுகாமல், உருள் ஏர் இரதத்து அருச்சுனனை ஒரு நாள் முழுதும் தகைந்திலமேல், மருளே கொண்டு குடி வருந்த,

மனுநூல் குன்றி வழக்கு அழிய, பொருளே வெஃகும் அரசரைப் போல் புகுவேம் யாமும் நரகு என்றார்.]

**விளக்கம்:-** திரிகர்த்தர், சம்சப்தகர் முதலானோர் வஞ்சின மொழிகளைக் கூறும் இது. போர்க்களத்தில் அருளின் வடிவின னான தருமன் அருகில், அணுக முடியாதபடி விசயனை ஒரு நாள் முழுவதும் தடுத்திலோமாயின்,—குடிமக்கள் செய்வது தெரியாமல் திகைத்து வருந்தவும், மனுநீதி வழக்கு ஒழிய வும், குடிமக்களின் பொருளையே நச்சிக் கவரும் கொடுங் கோல் மன்னர்களைப் போல், நாங்களும் நரகம் அடைவோம், என்று திரிகர்த்தராசன் முதலானோர் சபதம் மொழிந்தார்கள், என்பதாம்.

உருள் ஏர் இரதம் - சக்கரங்களை உடைய அழகிய தேர். மருளை - மயக்கம், திகைப்பு. வெஃகல் - விரும்பல், இச்சித்தல்.

**42.** **மறனிற் சிறந்த புயவலியால் வரைபோன் றனிலன் மைந்தனெனப்**
**புறனிற் பானைத் தம்முனிடைப் போகா வண்ண தனகந்திலமேல்**
**அறனிற் கொண்ட தன்மனைமா ளமளித் தலத்தி னழுதிரங்கப்**
**பிறனிற் றேடும் பெரும்பாவி பெறும்பே றெமக்கும் பேறென்றார்.**

[மறனில் சிறந்த புயம் வலியால் வரைபோன்று அனிலன் மைந்தன் என புறன் நிற்பானை தம்முனிடை போகா வண்ணம் தகைந்திலமேல், அறனின் கொண்ட தம் மனையாள் அமளி தலத் தின் அழுது இரங்க, பிறன் இல் தேடும் பெரும்பாவி பெறும் பேறு எமக்கும் பேறு என்றார்.

**விளக்கம்:-** அனிலன் (வாயு) குமாரன் என்று சொல்லப் பட்டு (எப்பொழுதும் பாதுகாப்பாய் தருமனுக்குப்) பக்கத்தில் நிற்ப வனான வீமனை, ஆற்றலிற் சிறந்த புயவலியால் மலை போல் எதிர்ப் பட்டு, தன் தமையனிடம் செல்ல முடியாதபடி தடுத்திலமேல்,— அறவழி மணந்து கொண்ட தனது மனைவி படுக்கையில் அழுது வருந்தும்படி பிறன் மனைவியைத் தேடிச் செல்லும் பெரும்பாவி பெறும் நரகம், எமக்கும் பெறுங்கதியாகட்டும், என்று சபதம் செய் தனர், என்பதாம்.

**43.** **கன்றால் விளவின் கனியுதிர்த்தோன் கடவுந் திண்டே ரவனுக**
**வன்றாட் டடக்கை மாருதியே யாக வமரின் மறித்திலமே**
**என்று னை முனிபோரி னெங்நன் றியினுஞ் செய்ந்நன்றி**
**கொன்றார் தமக்குக் குருகுலத்தார் கோவேயாமுங் கூட்டென்றார்.**

[கன்றால் விளவின் கனி உதிர்த்தோன் கடவும் திண் தேர் அவனுக, வல்தாள் தடக்கை மா ருதியே ஆக, அமரின் மறித்

திலமே என்றால், நாளை முனிபோரின் எந் நன்றியினும் செய்நன்றி கொன்றார் தமக்கு, குருகுலத்தார் கோவே, யாமும் கூட்டு என்றார்.]

**விளக்கம்:-** குருகுலத்தார் கோவே, என்று துரியோதனனை விளித்து,—கன்றால் விளவின் கனி உதிர்த்த கண்ணன் நடத்தும் தேரை உடையவனான விசயன் ஆகட்டும், வலிய கால்களையும் பெரிய கைகளையுமுடைய மாருதி (வீமன்) ஆகட்டும், அவர் எதிர் அமரின், அதாவது எதிரே வந்தால், நாளைய தினத்தில் முனி வோடு செய்யும் போரில், தருமனுக்குத் துணையாகாதபடி தடுத் திலம் என்றால், எல்லாத் தருமங்களினும், ஒருவர் தமக்குச் செய்த உபகாரத்தை மறந்த, பாவிகளுக்கு நாங்களும் கூட்டாளி கள் ஆவோம், என்று சபதம் செய்தார்கள், என்பதாம்.

பெண்வதை, சிசுவதை, கோவதை முதலிய பாவங்களுக்கும் பரிகாரம் உண்டு; செய்நன்றி கொன்ற பாவத்திற்குப் பரிகாரம் எது வும் இல்லை, என்பது நூல் கொள்கை. ''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டு, உய்வு இல்லை செய்நன்றி கொன்றார்க்கு'', என்றார், திருவள்ளுவரும். விசயனையும் வீடுமனையும் தமையனுக்குத் துணை யாகாதபடி நாளைப் போரில் தடுக்காவிட்டால், நாங்கள் செய்நன்றி கொன்ற பாவிகளைச் சேர்ந்தவர்களாவோம், என்று வஞ்சினம் மொழிந்தபடி.

**44. இவ்வா றுரைத்த வேந்தர்தமக் கெய்துஞ் சிறப்புச்
செய்தகற்றிக்
கைவார் சாப முனிவரன்றன் கழற்கால் வணங்கி யேகுமெனச்
செவ்வாய் மலர்ந்து மானத்தாற் றிறலால் வாழ்வார் செகத்
தொருவர்
ஒவ்வா வரசன் றன்கோயி லடைந்தான் விபுதர்க் கொப்பானே.**

[இ ஆறு உரைத்த வேந்தர் தமக்கு எய்தும் சிறப்பு செய்து அகற்றி, கை வார் சாபம் முனிவரன் தன் கழல் கால் வணங்கி ஏகுக என செவ்வாய் மலர்ந்து, மானத்தால், திறலால் வாழ்வால் செகத்து ஒருவர் ஒவ்வா அரசன் தன் கோயில் அடைந்தான், விபுதர்க்கு ஒப்பான், ஏ.]

**விளக்கம்:-** மானம் - பெருமை. மானத்தால், வலிமையால், வாழ்க்கைச் சிறப்பால் உலகில் எவரும் ஒப்பாக மாட்டாத அரச னும், போகவாழ்க்கையில் தேவர்களுக்கு ஒப்பானவனுமான துரியோதனன், இவ்வாறு சபதமொழி கூறின வேந்தர்களுக்குப் பொருத்தமுடைய சிறப்புக்களை தனித்தனி செய்து அவர்களை அனுப்பிய பின், கையில் நீண்ட வில்லையுடைய அந்தணச்

சிரேஷ்டனுன துரோணனது கழல் அணிந்த திருவடி வணங்கி, 'செல்க' என்று தன் செவ்வாய் திறந்து கூறி, பிறகு தனது சிறந்த பாசறை அடைந்தான், என்பது பொருள்.

'வெவ்வேறுரைத்த வேந்தர்க்கு வேண்டுஞ் சிறப்பு', என்றும் பாடமுளது. சிறப்பு செய்தல் – சன்மானம் கொடுத்தல்.

சூர்யோதயம்

**கங்குல் சிலேநூன் முனிவனுடன் கழற்கா லரசன் பணித்தமை கேட்டு**
**அங்குத் தரியா திவன்கரத்தே யருள்கூர் நெஞ்ச னகப்படு மென்று**
**இங்குத் துயில்வார் யாவரையு மிருபா ளேயத்தி னிடங்தோறும்**
**சங்கக் குரலாற் றுயிலெழுப்பித் தபனன் குணபாற் றுன்சேர்ந் தான்.**

[கங்குல் சிலே நூல் முனிவனுடன் கழல் கால் அரசன் பணித்தமை கேட்டு, அங்கு தரியாது இவன் கரத்தே அருள் கூர் நெஞ்சன் அகப்படும் என்று, இங்கு துயில்வார் யாவரையும் இரு பாளேயத்தின் இடம் தோறும், சங்கம் குரலால் துயில் எழுப்பி தபனன் குணபால் தான் சேர்ந்தான்.]

**விளக்கம்:-** அருள் மிகுந்த நெஞ்சினன் துரோணனுல் அகப்படுத்தப் படுவான், என்பது கேட்டு, அங்கே நிலேத்திருக்க விரும்பாமல் இரவு நீங்கியது, என்று பொழுதின் விடிவையும், இரு திறத்துப் பாசறையின் உள்ளாரைக் காலேயில் முழக்கப் பெறும் சங்க ஒலியால் துயில் எழுப்பினுய்ச் சூரியன் குணபால் அடைந் தான் என்று உதயத்தையும் வருணித்தது **தற்குறிப்பேற்ற** அணி ஆகும்.

பதினேராம் போர்ச் சருக்கம் முற்றும்

## 12. பன்னிரண்டாம் போர்ச் சருக்கம்

### கடவுள் வாழ்த்து

### கலிவிருத்தம்

1. **பொய்யாத தவமுனிபின் போயருளித் தாடகைதன்**
**மெய்யாவ நிகரென்ன வெஞ்சரத்தா லழுத்தியபின்**
**மையாழி முகில்வண்ணன் வாங்கியன பூங்கமலக்**
**கையாலு மொருசாபங் காலாலு மொருசாபம்.**

[பொய்யாத தவம் முனி பின் போய் அருளி தாடகைதன் மெய், ஆவம் நிகர் என்ன, வெம்சரத்தால் அழுத்தியபின், மை

முகில் வண்ணன் வாங்கியன பூங்கமலம் கையாலும் ஒரு சாபம், காலாலும் ஒரு சாபம்.]

**விளக்கம்:** பொய்யாத தவமுனிவன்-விச்வாமித்திரன். ஆவம்-அம்பருத் தூணி. மை ஆழிமுகில் வண்ணன்-இராமபிரான். சாபம்-வில், சாபமொழி. விசுவாமித்ர முனிவனோடு கானகம் சென்றருளி, தாடகையின் மெய்யில், அம்பருத் தூணியில் சரங்களைச் செருகுதல் போல, அம்புகளை அழுத்திக்கொன்று, அதன்பின் ஜனகன் மாமகளை மணப்பதற்கு அப்பிரானது கையால் ஒரு சாபமும் (வில்லும்) அகலிகையின் பொருட்டுக் காலால் ஒரு சாபமும் (கௌதம சாபமும்), வாங்கப்பட்டன, அதாவது, வளைக்கவும் நீக்கவும் பட்டன,—என்பதாம்.

**2. அற்றரா பதிகருதி யாசானோ டுரைத்தவெலாம்**
**ஒற்றரா லக்கணத்தே யுணர்ந்தமுர சக்கொடியோன்**
**மற்றரா வணைதுறந்த மாயனுக்கும் விசயனுக்கும்**
**சொற்றரா பதநெருங்கத் தொடைத்தும்பை புனைந்தானே.**

[அல் தராபதி கருதி ஆசானோடு உரைத்த எலாம் ஒற்றரால் அ கணத்தே உணர்ந்த முரசம் கொடியோன், மற்று, அரா அணை துறந்த மாயனுக்கும் விசயனுக்கும் சொற்று, அராபதம் நெருங்க தொடை தும்பை புனைந்தான், ஏ.]

**விளக்கம்:**— அல் - இரவு. தராபதி - துரியோதனன். துரியோதனனது பாசறையில் நிகழ்ந்ததை ஒற்றரால் அக்கணமே அறிந்த முரசக் கொடியனான தருமன், கண்ணனுக்கும் விசயனுக்கும் சொல்லி, வண்டுகள் நெருங்கிய போருக்குரிய தும்பை மாலையை அணிந்து கொண்டான், என்பதாம். அதாவது, தருமன், அன்று கடுமையாகப் போர் புரியத் துணிந்தான், என்பது. கருத்து அராபதம் - வண்டு, (அறுபதம், என்பதின் விகாரமாகலாம்).

## இருதிறத்தாரும் வியூகம் வகுத்தல்

**3. கருங்களவின் கனிவண்ணன் கனைகழற்கால் வேந்தரொடும்**
**பெருங்களஞ்சென் றெய்தியபின் பேணார்கள் வெருக்கொள்ள**
**இருங்களிறு தேர்பரியா ளிருமருங்கும் புடைசூழ**
**வருங்களிகொள் வருதினியை மண்டலமா வகுத்தானே.**

[கருங்களவின் கனி வண்ணன் கனை கழல் கால் வேந்தரொடும் பெருங்களம் சென்று எய்தியபின் பேணார்கள் வெரு கொள்ள, இருங்களிறு தேர் பரி ஆள் இருமருங்கும் புடைசூழ, வரும் களி கொள் வருதினியை மண்டலம் ஆக வகுத்தான், ஏ.]

**விளக்கம்:** கருங்களவின் கனிவண்ணன்-கரிய களாப்பழம் போன்ற நிறத்தினனான கண்ணன். பேணார்-பகைவர். இருங்

களிறு-பெரிய யானை. வரும் களிகொள் வரூதினி-களம் வந்து போரில் உற்சாகம் மிகுந்த சேனை. பாண்டவ சேனுபதி, களம் வந்த சேனையை மண்டல வியூகமாக வகுத்தான், என்பதாம். புடை, என்பது இங்கே திரண்டு, என்ற பொருளது.

**4. பின்னிறுத்தி மாருதியைப் பேரணியிற் பலவகையாம்**
**மன்னிறுத்தி யிருபாலு மருத்துவர்மைந் தரைநிறுத்தி**
**மின்னிறுத்து நெடுவாளி விசயனையுங் குமரனையும்**
**முன்னிறுத்தி நடுநின்ருன் முரசநிறுத் தியகொடியோன்.**

[பின் நிறுத்தி மாருதியை பேர் அணியில் பலவகை ஆம் மன் நிறுத்தி, இரு பாலும் மருத்துவர் மைந்தரை நிறுத்தி, மின் நிறுத்தும் நெடு வாளி விசயனையும் குமரனையும் முன் நிறுத்தி நடு நின்ருன், முரசம் நிறுத்திய கொடியோன்.]

**விளக்கம்:-** மண்டல வியூகத்தின் பின் புறத்தில் வீமனையும், அணி வகுப்பின் முக்கியமான இடங்களில் பலவகைப்பட்ட மன்னர்களையும், இரு புறத்திலும் நகுல சகாதேவர்களையும், முன் புறம் விசயனையும் அபிமனையும் நிற்கச் செய்து தருமன் நடு விடத்தே இருந்தான், என்பதாம். மருத்துவர் - தேவவயித்திய ரான அச்விநீ தேவர். மின் நிறுத்தும் வாளி – ஒளியைத் தன்னிடத்தே கொண்ட, அதாவது பிரகாசம் பொருந்திய அம்பு.

**5. இப்பான்மற் றிவர்நிற்ப விரவுரைத்த மொழிப்படியே**
**தப்பாமற் றிகத்தகுலத் தலைவனுஞ்சஞ் சத்தகரும்**
**துப்பார்வெஞ் சிலைத்தடக்கைத் துரோணன்முத லனைவோரும்**
**அப்பால்வந் தணிகருட வியூகம்வகுத் தணிந்தாரே.**

[இ பால் (மற்று) இவர் நிற்ப இரவு உரைத்த மொழி படியே தப்பாமல் திருகத்த குலம் தலைவனும் சஞ்சத்தகரும், துப்பு ஆர் வெம் சிலை தடக்கை துரோணன் முதல் அனைவோரும், அ பால் வந்து அணி கருடவியூகம் வகுத்து அணிந்தார், ஏ.]

**விளக்கம்:-** இப்பால்-இவ்விடத்தே, அதாவது பாண்டவர் பக்கத்தில், (இவர்கள்) மண்டல வியூகம் வகுத்து நிற்க, அப்பால்-எதிரிகள் பக்கத்தில். இரவில் கூறியபடியே, தவருமல் திரிகர்த் தர் தலைவனும், சம்சப்தகரும், துரோணன் முதலிய எல்லோரும் வந்து, சேனையை அழகிய கருட வியூகமாக வகுத்து அணி யமைத்து நின்ருர், என்பதாம். துப்பு-வலிமை.

திரிகத்தபதி விசயனைப் போருக்கு அழைத்தல்

**6. காரணிபோற் பொருப்பணிபோற் காற்றணிபோற் களிற்றணியும்**
**தேரணியும் பரியணியுந் திரிகத்த குலபதியும்**

**நாரணகோ பாலரெனு நராதிபரும் வாள்விசயன்**
**காரணமா வறைகூவிக் கடுங்கொடுங்கார் முகம்வளைத்தார்.**

கார் அணிபோல், பொருப்பு அணிபோல், காற்று அணி போல் களிறு அணியும், தேர் அணியும், பரி அணியும், திரிகத்த குலபதியும், நாரண கோபாலர் எனும் நராதிபரும் (நர-அதிபரும்), வாள்விசயன் காரணமா அறை கூவி கடுங்கொடுங் கார்முகம் வளைத்தார்.]

**விளக்கம்:-** மேகங்களின் வரிசை போல் யானைகளின் வரிசையும், மலைகளின் வரிசைபோல் தேர்களின் வரிசையும், காற்றின் வரிசைபோல் குதிரைகளின் வரிசையும், திரிகத்தரது அரசனும், (கண்ணனால் துரியோதனனுக்குப் போர்த் துணையாய் அளிக்கப்பட்ட) நாரண கோபாலர்களும், விசயன் காரணமாக, (அதாவது தங்கள் போர் முயற்சிக்குக் காரணமாகக் கொண்டு), அவனைப் போருக்கு அழைத்து மிகக் கொடிய விற்களை வளைத்தார்கள், என்பதாம். நாரணகோபாலர் என்பவர் கண்ணனுக்கும் பதினாறுயிரம் கோபஸ்திரீகளுக்கும் பிறந்தவர்.

7. **ஆர்த்துவரு மவர்நிலைகண் டரசனைநீ ரிமைப்போது**
**காத்திடுமி னெனநின்ற காவலரோ டுரைசெய்து**
**கோத்தருமன் பணித்ததற்பின் கோதண்ட முறவாங்கிப்**
**பார்த்தனுமன் றவரெதிர்போய்ப் பலவாளி மழைபொழிந்தான்.**

[ஆர்த்து வரும் அவர் நிலை கண்டு அரசனை நீர் இமைப்போது காத்திடுமின் என நின்ற காவலரோடு உரை செய்து, கோ தருமன் பணித்ததன் பின் கோதண்டம் உற வாங்கி, பார்த்தனும் அன்று அவர் எதிர்போய் பல வாளி மழை பொழிந்தான்.]

**விளக்கம்:-** வீமன் முதலிய அரசர்களைத் தருமனுக்குக் காப்பாக அமர்த்தி, தருமனது அனுமதியோடு விசயன் தன்னைப் போருக்கு அழைத்தவர் மேல் சென்று, வில்லை வளைத்துச் சர மழை பொழிந்தான், என்பதாம்.

கோதண்டம், இராமனது வில்; அது சிறப்பினால் அருச்சுனன் வில்லைக் குறித்தது. அல்லது, **வில்** என்ற பொருளதாகவும் கொள்ளலாம்.

8. **தூளியே யண்டமுறத் தூர்த்துமுத லகல்விசும்பை**
**வாளியே தூர்க்கும்வகை மலைவாங்கு சிலைவாங்கி**
**யாளியே றனையானு மவனிபருங் கவந்தமுடன்**
**கூளியே நடமாடக் கொடுஞ்சமரம் விளைக்குங்கால்,**

[தூளியே அண்டம் உற தூர்த்து முதல் அகல் விசும்பை வாளியே தூர்க்கும் வகை மலை வாங்கு சிலை வாங்கி, யாளி ஏறு அனையானும் அவனிபரும் கவந்தமுடன் கூளியே நடம் ஆட கொடுஞ் சமரம் விளைக்குங்கால், இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம்:** ஆண்சிங்கம் போன்ற விசயனும், திரிகத்தன் முதலிய அரசர்களும், அவர்களது படைகளால் எழுப்பப் பெற்ற புழுதி முதலில் அண்டத்தை நிறைக்க, அதன்பின், அகல் விசும்பைத் தம் கணைகளே நிறைக்கும்படி, மலை போன்ற வில் வளைத்து, கவந்தங்களுடன் பேய்களும் கூத்தாடும்படி மிகக் கொடிய போரைச் செய்கையில்,-(அடுத்த கவியோடு தொடரும்), என்பதாம்.

கூளி - பிணம் தின்னும் பேய்; அல்லது கழுகு. கூளிகளின் கூத்திற்குக் காரணம் இரை மிகுதியாகக் கிடைத்தல்.

துரோணன் களம் வரல்

9. **கொடித்தலைவேற் சயத்திரதன் சவுபலன்குண் டலன்முதலா**
**முடித்தலைவா ளடனிருபர் முப்பதினு யிரர்சூழ**
**இடித்தலைமா முரசியம்ப விபதுரங்கப் படைசூழக்**
**கொடித்தலைமான் றடந்தேரான் குனிசிலையின் குருவந்தான்.**

கொடி அலை வேல் சயத்திரதன் சவுபலன் குண்டலன் முதல் ஆக முடி தலை வாள் அடல் நிருபர் முப்பதினுயிரர் சூழ, இடி தலை மாமுரசு இயம்ப, இபதுரகம் படைசூழ, கொடி தலை மான் தட தேரான், குனிசிலையின் குரு வந்தான்.

**விளக்கம்:-** கொடி தலை வேல் சயத்திரதன்-கொடியினிடத்தே வேலின் வடிவம் கொண்ட சயத்திரதன். அல்லது, கொடி (காக்கைகள்) சுற்றி வட்டமிடும் நுனியை உடைய வேல், என்றும் பொருள் கொள்ளலாம்; அதாவது, வேல் நுனியில் ஒட்டியுள்ள மாமிசம் விரும்பிக் காக்கைகள் வட்டமிடும் வேல். சவுபலன்-சுபலன் மகனான சகுனி. குண்டலன்-ஓர் அரசன். இடி தலை மாமுரசு - இடிபோன்ற ஒலியைத் தன்னிடத்தே கொண்ட பெரிய முரசம். இபம் - யானை. கொடி தலை மான் தேரோன் - கொடியை மேல் பாகத்தில் உடையதும் குதிரைகள் பூட்டப் பெற்றதுமான தேரை உடையவன் (துரோணன்). வேல்வீரனான சயத்திரதன் முதலான வேந்தர் சுற்றி வரவும், முரசங்கள் இடிபோல் முழங்கவும், யானைப்படையும் குதிரைப்படையும் சூழ்ந்துவரவும், குனி

சிலையின் குருவான துரோணன் தேரேறிக் களம் வந்தான், என்பதாம்.

**10. வந்தகுரு குருகுலமா மன்னுடன்போர் புரிவதன்முன்**
**பந்தமுறப் பாஞ்சாலர் பற்பதினு யிரர்சூழ**
**முந்தவயப் பணைமுழங்க முழங்கொலிநீர் கொதிப்பதுபோல்**
**அந்தமுனிக் கெதிர் நடந்தா னைவர்சே னுபதியே.**

[வந்த குரு குருகுலம் மா மன்னுடன் போர் புரிவதன்முன், பந்தம் உற பாஞ்சாலர் பல் பதினுயிரர் சூழ, முந்த வயம் பணை முழங்க 'முழங்கு ஒலி நீர் கொதிப்பதுபோல், அந்த முனிக்கு எதிர் நடந்தான் ஐவர் சேனுபதி, ஏ.]

**விளக்கம்:-** குருகுல மன்னன் - தருமன். பந்தம் - நெருக்கம்; வயம் பணை முந்த முழங்க - வெற்றி முரசம் முன்னே ஒலிக்க, முழங்கு ஒலி நீர் - ஒலித்தலையுடைய நீரைக்கொண்ட சமுத்திரம். கொதிப்பது - பொங்கி எழுவது. வந்த துரோணன் தருமனேடு போர் புரியுமுன், கூட்டமான பாஞ்சாலர் பல் பதினுயிரவர் சூழ, வெற்றி முரசம் முன்னே முழங்க, பொங்குங்கடல் போல் பொங்கிய சினத்துடன் பாண்டவர்சேனைத் தலைவனுன திட்டத்துய்மன் துரோணனுக்கு எதிரே வந்தான், என்பதாம்.

**11. இருவர்பெருஞ் சேனையுமுற் றெதிரெதிரா யுதமேந்தி**
**ஒருவரொரு வரைவேறற் கொண்ணுத வமருடற்றச்**
**செருவிலரி யேறனையான் றிட்டத்துய் மனும்வெகுண்டு**
**பொருசிலைவெங் கணைபொழிந்தான் போர்வேந்தர் பலர் மடிந்தார்.**

[இருவர் பெருஞ்சேனையும் உற்று எதிர் எதிர் ஆயுதம் ஏந்தி, ஒருவரை ஒருவர் வேறற்கு ஒண்ணுத அமர் உடற்ற, செருவில் அரி ஏறு அனையான் திட்டத்துய்மனும் வெகுண்டு பொரு சிலை வெம் கணை பொழிந்தான்; போர் வேந்தர் பலர் மடிந்தார்.]

**விளக்கம்:-** இருதிறத்து சேனைகளும் வெற்றி தோல்வி யின்றிப் போர் செய்ய, (அதைக் கண்டு) போரில் ஆண் சிங்கம் போன்றவனுன திட்டத்துய்மன் வெகுண்டு சரமாரி பொழிந்தான்; பகைவேந்தர் பலர் மடிந்தார், என்பதாம்.

**12. துன்முகனைப் புறங்கண்டு துன்மருடன் முனைசாய்ந்து**
**கன்முகமாங் காந்தாரர் கலிங்கர்கவு சலர்நிடதர்**
**புன்முகரா யிளைத்தோடப் பொருதழித்தான் பொருதழிந்த**
**முன்முகவெம் பெருஞ்சேனை மறையவன்பா லடைந்தனவே.**

[துன்முகனை புறம் கண்டு துன்மருடன் முனை சாய்த்து, கல் முகம் ஆம் காந்தாரர், கலிங்கர், கவுசலர், நிடதர் புல் முகர் ஆய் இளைத்து ஓட, பொருது அழித்தான்; பொருது அழிந்த மன்முகம் பெருஞ்சேனை மறையவன்பால் அடைந்தனவே ]

**விளக்கம்:** துன்முகன் - துர்முகன் என்ற அரசன். துன்மர் - துர்மர்ஷன் என்பவனைச் சேர்ந்தவர். முனை சாய்த்து - போர் அழித்து. புல்முகர் ஆய் - முகம் வாடியவர்களாய். மன்முகம் வெம் பெருஞ்சேனை - வலிமிகுதி தன்னிடம் நிலைத்த கொடிய பெரிய சேனை. திட்டத் துய்மன் துர்முகனைப் புறம் கண்டு, துர்மர்ஷன் என்பவனைச் சேர்ந்தாரது போர் தொலைத்து, கலிங்கர் முதலியோர் வாடிய முகத்துடன் தளர்ந்து ஓடப் போர் செய்து வென்றான்; போர் அழிந்த பெருஞ்சேனை துரோணனிடம் சென்று சேர்ந்தன, என்பதாம்.

துர்முகன், துர்மர்ஷன், என்போர் துரியோதனன் தம்பியர். கல்முகம் ஆம் காந்தாரர் - கல்லின் தன்மையரான வலிய காந்தாரர்.

**13. மறைவாய்வெஞ் சிலைமுனிவன் வரூதினிதன் நிலையழிந்து**
**குறைவாவந் தமைகண்டு கோதண்ட மெதிர்வாங்கித்**
**துறைவாய்வெங் கனல்போலுந் துருபதன்கைச் சிலைதுணியப்**
**பிறைவாய்வெங் கணைதொடுத்துப் பிறைமுடியோ னெனச்**
**சென்றான்.**

[மறை வாய் வெம் சிலை முனிவன் வரூதினி தன் நிலை அழிந்து குறைவு ஆ(க) வந்தமை கண்டு, கோதண்டம் எதிர் வாங்கி, துறைவாய் வெம் கனல் போலும் துருபதன் கை சிலை துணிய, பிறைவாய் வெம் கணை தொடுத்து பிறை முடியோன் என சென்றான்.]

**விளக்கம்:-** வேதம் ஓதும் வாயையும், கையில் கொடிய வில்லையுமுடைய துரோணன், தன் பக்கத்துச் சேனை தன் நிலை குலைந்து, தொகை குறைவாகத் தன்னிடம் வந்தது கண்டு, தனது கோதண்டத்தை எதிராக வளைத்து, வேள்வியிடத்தே பொருந்திய வெவ்விய கனல் போன்ற துருபதன் குமாரனான திட்டத்துய்மனது கையில் பொருந்திய வில் துண்டாகும்படி அர்த்த சந்திர பாணம் தொடுத்து, முடியிலே பிறைச் சந்திரனைக் கொண்ட சிவபிரானைப் போல் எதிர்த்துச் சென்றான், என்பது பொருள்.

தரும புத்திரனைத் தருமன், என்பது போல் துருபத குமாரனான திட்டத்துய்மன் துருபதன், எனப் பட்டான், என்க.

**14. சத்தியகே துவின் சாபஞ் சரமொன்ரு லிரண்டாகிச்**
**சித்திரவெஞ் சிலையாண்மைச் சிகண்டியையுஞ்**
**சிலையறுத்திட்(டு)**
**உத்தமோ சாமுதலா வுள்ளகொடுந் திறல்வேந்தர்**
**தத்தமுயி ருடன்போகத் தானையெலா மடிவித்தான்.**

[சத்தியகேதுவின் சாபம் சரம் ஒன்ருல் இரண்டு ஆக்கி, சித்திரம் வெம் சிலை ஆண்மை சிகண்டியையும் சிலை அறுத்திட்டு, உத்தமோசா முதல் ஆ உள்ள கொடுந் திறல் வேந்தர் தம் தம் உயிருடன் போக, தானை எலாம் மடிவித்தான்.]

**விளக்கம்:-** துரோணன், சத்தியகேது என்பானின் வில்லைச் சரம் ஒன்ருல் இரண்டாக்கி, சிலை ஆற்றல் மிக்க ஆண்மை வீரஞன சிகண்டியையும், - அவன் வில்லை அறுத்து, உத்தமோசா முதலாக உள்ள வில் வேந்தர்கள் தங்கள் தங்கள் உயிருடன் திரும்பிச் செல்லும்படி செய்து, பாண்டவ சேனையை அழியச் செய்தான், என்பதாம்.

சித்திரம் வில் – அழகிய வில். உத்தமோசா - துரியோதனன் பக்கத்தைச் சேர்ந்த அரசன். சத்யகேது, என்பான் காசிராஜ வம்சத்தினன்.

**15. தாண்டியவெம் பரிநகுல சாதேவர் வென்னிட்டார்**
**பாண்டியனு முதுகிட்டான் பாஞ்சாலர் புறமிட்டார்**
**ஈண்டியவெங் களத்தவிந்தா ரெத்தனையா யிரம்வேந்தர்**
**தூண்டியவெம் பரிநெடுந்தேர்த் துரோணன்கைத் தொடை**
**யாலே.**

[தாண்டிய வெம் பரி நகுல சாதேவர் வென் இட்டார், பாண்டியனும் முதுகு இட்டான், பாஞ்சாலர் புறம் இட்டார்; ஈண்டிய வெம் களத்து அவிந்தார் எத்தனை ஆ'யிரம் வேந்தர், தூண்டிய வெம் பரி நெடுந்தேர் துரோணன் கை தொடையால், ஏ.]

**விளக்கம்:-** துரோணன் கை அம்பால், நகுல சகாதேவர் முதுகு தந்தார்கள், பாண்டியனும் முதுகு தந்தான், பாஞ்சாலர் முதுகு தந்தார்; நெருங்கிக் கூடிய போர்க் களத்தில் இறந்தவர் எத்தனை ஆயிரம் வேந்தர்? (மிகப் பல ஆயிரம் அரசர் இறந்தார் கள், என்றபடி), என்பதாம். தாண்டிய-தாவிச் செல்லுகின்ற. தூண்டிய-செலுத்தப்படுகின்ற.

நகுலன் குதிரைத் தொழிலில் வல்லவனுதல் பற்றி, தாண்டிய வெம் பரி நகுலன், எனப் பட்டான். பின்னிட்டார், என்பதை

அதே பொருளுடைய வெவ்வேறு சொற்களால் கூறுவதால், இது பொருள் பின்வருநிலை அணி ஆகும்.

துரோணன் தருமனை நெருங்கல்

**16. வடுத்தருவெஞ் சிலீமுகமும் வணக்குகொடுஞ் சராசனமும்**
**எடுத்துமனங் கதுவுசின மெழுப்பவெழுந் தோர்நொடியில்**
**நடுத்தகைவில் வானவரும் நடுக்குறுவெம் போர்முனையில்**
**அடுத்தனர்வன் தபோதனனு மடற்தருமன் குமரனுமே.**

[வடு தரு வெம் சிலீமுகமும் வணக்கு கொடு சராசனமும் எடுத்து மனம் கதுவு சினம் எழுப்ப, எழுந்து ஓர் நொடியில், நடு தகைவின் வானவரும் தடுக்கு உறும் வெம் போர் முனையில் அடுத்தனர் வல் தபோதனனும் அடல் தருமன் குமரனும், ஏ.]

**விளக்கம்:-** நடுதகைவு இல் வானவரும் நடுக்கு உறும் வெம் போர் முனையில் வல் தபோதனனும் அடல் தருமன் குமரனும் மனம் கதுவு சினம் எழுப்ப, வடு தரு வெம் சிலீமுகமும் வணக்கு கொடுஞ் சராசனமும் எடுத்து எழுந்து ஓர் நொடியில் அடுத்தனர், என்பது அன்வயம்.

நடுதகைவு இல் வானவர் - நடுவு நிற்றலில் தளர்ச்சியில்லாத, அதாவது பட்சபாத மற்ற வானவர். (அவர்கள்) நடுங்கும்படி போர் முனையில் வலிய துரோணனும், தருமராஜனின் குமாரனை யுதிட்டிரனும் மனம் பொருந்திய கோபம் உந்த, தழும்பை உண்டாக்கும் கொடிய சிலீமுகமும் (அம்பும்) வளைத்தற்குரிய கொடிய சராசனமும் (வில்லும்) எடுத்து, போரெழுந்து ஒரு நொடியில் ஒருவரை ஒருவர் நெருங்கினர், என்பதாம்.

அறுசீர் ஆசிரியவிருத்தம்

**17. அதிர்த்தன சங்க சாலமுத லனைத்துவிதங்கொள் காகளமும்**
**உதிர்த்தன வண்ட கோளமுற வொலித்துடு வின்கு ழாமுழுதும்**
**விதிர்த்தன செங்கை வாளொடயில் விழித்தன கண்க டீயுமிழ**
**எதிர்த்தன தங்கள் சேனைகளு மெதிர்ப்படு மைந்தர் போர்**
**பொரவே**

[அதிர்த்தன சங்க சாலம் முதல் அனைத்து விதம் கொள் காகளமும், உதிர்த்தன அண்டகோளம் உற ஒலித்து உடுவின் குழாம் முழுதும்; விதிர்த்தன, செம்கை வாளொடு அயில்; விழித்தன கண்கள் தீ உமிழ; எதிர்த்தன தங்கள் சேனைகளும் எதிர்படு மைந்தர் போர் பொரவே.]

**விளக்கம்:-** சங்குகளின் கூட்டம் முதலாக எல்லா விதங்களைக் கொண்ட வாத்தியங்களும் (அதிர்ச்சியுண்டாகும்படி) ஒலித்தன

வாய், அண்டகோளம் முழுவதும் ஒலித்து, நட்சத்திரக்கூட்டங்களை எல்லாம் உதிரச் செய்தன; வீரர்களின் செங்கைகள் வாளையும் வேலையும் வேகமாக அசையச் செய்தன; கண்கள் தீ வெளிப்படப் பார்த்தன; (இரு திறத்து வீரர்களும்) எதிரில் பட்ட வீரர்களோடு போர் செய்யச் சேனைகளும் எதிர்த்துப் போர் செய்தன, என்பது பொருள்.

காகளம் - ஊதுவதற்கான ஓர் வாத்திய விசேஷம்; இங்கே, வாத்தியங்களைப் பொதுவாய்க் குறித்து நின்றது.

### சதுரங்கசேனை வருணனை

**18. மதித்தும தங்க ளேழினுமெய் வனப்புறு கொண்டன் மானுவன**
**கதித்துநெ டுங்கை வீசியுடு கணந்தை முகந்து வாருவன**
**மிதித்துர கன்ப ணுமுடிகள் விழித்துவெ குண்டு லாவுவன**
**கொதித்திரு கண்க ளாலுமெரி கொளுத்தின கும்ப வாரணமே.**

[மதித்து மதங்கள் ஏழினும் மெய் வனப்பு உறு கொண்டல் மானுவன; கதித்து நெடுங்கை வீசி உடு கணத்தை முகந்து வாருவன; மிதித்து உரகன் பணமுடிகள் விழித்து வெகுண்டு உலாவுவன; கொதித்து இரு கண்களாலும் எரி கொளுத்தின கும்பம் வாரணம் ஏ.]

**விளக்கம்:-** இது யானைப் படையின் வருணனை. மத்தகத்தை உடைய யானைகள், - ஏழுவகை மதங்களாலும் பூரித்துத் தம் கரிய உடம்பினால் அழகு எய்திய காளமேகத்தை ஒத்தனவாயின; கோபங் கொண்டு நெடிய துதிக்கையைத் தூக்கி நட்சத்திரக் கூட்டங்களை முகந்து வாருவனவாயின; பூமியைத் தாங்கும் ஆதிசேஷனது படங்களிலுள்ள நாகரத்தினங்களைக் காலால் மிதித்து, வெகுண்டு, அவ்வெகுளி தோன்ற விழித்து உலாவுவன வாயின; மனம் கொதித்து இரு கண்களாலும் தீயைச் சொரிவன வாயின, என்பது பொருள். கும்பம் - மத்தகம். அணி, உயர்வு நவிற்சி.

**19. வரைக்குல மென்று கூறிடினவ் வரைக்குவ யங்கு நேமியில**
**நிரைக்குநெ டும்ப தாகையில நிறத்தகொ டிஞ்சி யாதியில**
**உரைப்பட வுந்து பாகரில ருகைத்த துரங்க ராசியில**
**விரைந்துவி ரைந்து லாவலில வெனச்செரு மண்டு தேர்பலவே,**

[வரை குலம் என்று கூறின் அ வரைக்கு வயங்கு நேமி இல, நிரைத்த நெடும் பதாகை இல, நிறத்த கொடிஞ்சி, ஆதி இல, உரைபட உந்து பாகர் இலர், உகைத்த துரங்க ராசி இல.

விரைந்து விரைந்து உலாவல் இல, என செரு மண்டு தேர் பல, ஏ.]

**விளக்கம்:-** இது தேர்ப்படை வருணனை. படையிலுள்ள தேர்களை, மலைக்கூட்டம் என்னலாம் எனின், அம்மலைகளுக்கு விளங்கும் சக்கரங்கள் இல்லை, வரிசையான நீண்ட கொடிகள் இல்லை, அழகிய நிறத்தோடு விளங்கும் கொடிஞ்சி முதலிய உறுப்புக்கள் இல்லை. புகழ் உண்டாகும்படி செலுத்துகின்ற சாரதிகள் இலர், செலுத்தப்படும் குதிரைகளின் கூட்டம் இல்லை, விரைந்து செல்லும் தொழில்கள் இல்லை, என்று சொல்லும்படி, அப்போரில் நெருங்கிய தேர்கள் மிகப்பல, என்பது பொருள்.

தோற்றம் வலிமை ஆயவற்றால் மலைகள் தேரை ஒத்தன வாயினும், தேருக்குரிய உறுப்புக்களும், ஓட்டும் பாகனும் செல்லும் தொழிலும் இல்லாமையின், தேரோடு ஒப்பாகாமை அவற்றிற்கு ஏற்படுகின்றது. ஒப்புடைய இரண்டிற்கும் உள்ள வேறு பாட்டைக் கூறி, உபமானத்தினும் உபமேயம் சிறந்தது, என்று கூறும் இவ்வருணனை வேற்றுமை அணியின் பாற்படும்.

**20. உகத்தின் முடிந்த நாளலையோ டொலித்தெழு சங்க வேலையென**
**மிகப்புகை கொண்டு வானுலகும் வெடித்திட மண்டு தேயுவென**
**நகச்சிக ரங்கள் சாயவெதிர் நடப்பன சண்ட வாயுவென**
**இகற்செய்து செம்ப ராகமிசை யெழுப்பின துங்க வாசிகளே.**

[உகத்தின் முடிந்த நாள் அலையொடு ஒலித்து எழு சங்கம் வேலை என, (அப்பொழுது) மிக புகை கொண்டு வான் உலகும் வெடித்திட மண்டு தேயு என, நகம் சிரங்கள் சாய எதிர் நடப்பன (ஆன) சண்டம் வாயு என, இகல் செய்து செம் பராகம் மிசை எழுப்பின துங்க வாசிகள், ஏ.]

**விளக்கம்:-** இது குதிரைகளின் வருணனை. யுகம் முடிந்த காலத்தில், அதாவது கற்பாந்த காலத்தில் ஒலித்து எழும் அலைகளோடு பொங்கும், சங்குகளை உடைய கடல் போலவும், (அப்பொழுது) புகையை மிகுதியாகக் கொண்டு, வானுலகமும் வெடித்திடும்படி மூண்டு எரியும் அக்னி போலவும், (அப்பொழுது) மலைகளின் சிகரங்கள் சரிந்துவிழும்படி எதிர்த்து அடிக்கும் பெருங் காற்றுக்கள் போலவும், சிறந்த குதிரைகள் போர் செய்து எங்கும் சிவந்த புழுதிகளை மேல் எழச் செய்தன,—என்பது பொருள். சப்த மருத்துக்கள் என்று, காற்று ஏழு வகையாதல் பற்றி, எதிர் நடப்பன, என்று பன்மை முடிவு கொடுக்கப்பட்டது.

**21. விளைத்தனர் தொந்த மாகவமர் மிகைத்தனர் தத்தம் வீரமுடன்**
**உளைத்தனர் சிங்க சாபமென வுறுக்கினர் சென்று மேன்முடுகி**

**வளைத்தனர் கொண்ட வார்சிலைகள் வடித்த சரங்க ளாலுழுது**
**திளைத்தனர் வென்றி கூரும்வகை செருக்கள மெங்கு மாடவரே.**

[விளைத்தனர் தொந்தம் ஆக அமர், மிகைத்தனர் தம்தம் வீரமுடன், உளைத்தனர் சிங்க சாபம் என, உறுக்கினர் சென்று மேல் முடுகி, வளைத்தனர் கொண்ட வார்சிலைகள், வடித்த சரங்களால் உழுது திளைத்தனர் வென்ற கூரும் வகை செரு களம் எங்கும் ஆடவர், ஏ.]

**விளக்கம்:-** போர்க்களம் எங்கும் ஆடவர் (காலாள் வீரர்கள்) இரண்டு இரண்டு பேராகத் தனித்தனி போர் செய்தார்கள், தங்கள் தங்கள் ஆற்றலோடு செருக்கினுர்கள், அதாவது வீரச் செருக்கோடு மலைந்தார்கள்; சிங்கக்குட்டி போல் கர்ச்சனை செய்தார்கள், எதிரே சென்று நெருங்கிப் பாய்ந்தார்கள்; கையில் பற்றிய நீண்ட விற்களை வளைத்தார்கள், கூரிய அம்புகளால் வெற்றி மிகும் வகை, எதிரிகளின் உடலைக் கிளறி விளையாடினுர்கள், அதாவது மகிழ்ந்தார்கள், என்பது பொருள்.

தொந்தம் - (த்வந்த்வம்) இருவர் ஒருவரோடொருவர் (தனிப் போர் புரிதல்), சாபம் - குட்டி. திளைத்தல் - அனுபவித்தல்; தோய்ந் திருத்தல், விளையாடல்.

## துரோணனேடு தருமன் பொரல்

**22. மிகைத்தனர் தும்பை மாலைமுடி மிலைச்சின ரின்று சாலுமென**
**நகைத்தனர் தங்க டேருமெதிர் நடத்தினர் சண்ட வேகமொடு**
**பகைத்தன ரங்கம் யாவுமிசை படப்பட நஞ்சு கால்பகழி**
**உகைத்தன ரன்றை யாடமரி லுதிட்டிர னுந்து ரோணனுமே.**

[மிகைத்தனர் தும்பை மாலை முடி மிலைச்சினர், இன்று சாலும் என நகைத்தனர், தங்கள் தேரும் எதிர் நடத்தினர், சண்ட வேகமொடு பகைத்தனர், அங்கம் யாவும் மிசை பட பட நஞ்சுகால் பகழி உகைத்தனர், அன்றை ஆடு அமரில் உதிட்டிரனும் துரோணனும், ஏ.]

**விளக்கம்:-** அன்று செய்த போரில் தருமனும் துரோணனும், வீரச் செருக்குத் தோன்ற பொருதனர், முடியில் தும்மை மாலை சூடினர்; இன்றேடு போர் முடியும் என்று நகைத்தனர், சண்ட வேகமொடு தேரை எதிரில் செலுத்தினர்; பகை வெல்லும் எண்ணத்தோடு உக்ரமாகப் போர் செய்தனர். உடல் உறுப்புக்கள் எல்லாவற்றின் மேலும் அம்புகள் மிகுதியாய் அழுந்தும்படி விஷம் போல் தவருமல் கொல்லும் அம்புகளை ஏவினர்,—என்பது பொருள். படப்பட, என்ற அடுக்கு மிகுதி பற்றியது.

**23. சினத்துமு னைந்த போரில்வரு சிலைக்குரு வின்ப தாகையற
மனத்தினு முந்து மாதுணிய வயத்துட னுந்து பாகன்விழ
அனைத்து ருளுஞ்ச தாவியிட வடுக்குற நின்ற தேரழிய
இனத்தொடை யைந்து பூபதியு மிமைப்பொழு தின்க
ணேவினனே.**

[சினத்து முனைந்த போரில் வரு சிலை குருவின் பதாகை அற மனத்தினும் முந்து மா துணிய வயத்துடன் உந்து பாகன் விழ, அனைத்து உருளும் சதாவியிட, அடுக்கு உற நின்ற தேர் அழிய இனம் தொடை ஐந்து பூபதியும் இமைப் பொழுதின் கண் ஏவினன், ஏ.]

**விளக்கம்:-** சினத்துடன் முனைந்து செய்த போரில், எதிர்த்து வந்த சிலைக் குருவின் வேதக் கொடி அறுபடவும், மனத்தினும் முந்திச் செல்லும் குதிரைகள் துணிபடவும், வலிமையோடு தேர் நடத்தும் பாகன் மடிந்து விழவும், சக்கரங்கள் எல்லாம் சிதையவும், அடுக்குகளை உடைய தேர் அழியவும், ஒரு வகையின தான ஐந்து அம்புகளைப் பூபதி (தருமன்) செலுத்தினன், என்பது பொருள். சதாவுதல் - அழிதல், கெடல், பழுதுறல்.

**24. தனித்தும லைந்த போரிலெழு தலத்தர சன்கை வாளிகளில்
அனத்தம் விளைந்து நாணொடுவி லறத்துணி யுண்ட தாகவமுன்
முனிக்குல மென்று மாதிமறை முதற்குரு வென்று மேன்மையுற
இனிக்கணை யொன்று மேவுகில மிளைப்பற வஞ்ச லேகெனவே.**

[தனித்து மலைந்த போரில் எழுதலத்து அரசன் கை வாளி களில் அனத்தம் விளைந்து நாணொடு வில் அற துணியுண்டது, ஆகவம் முன் முனிகுலம் என்னும் ஆதி மறை குரு என்றும் மேன்மை உற, ''இனி கணை ஒன்றும் ஏவுகிலம், இளைப்பு அற, அஞ்சல், ஏகு,'' எனவே, அடுத்த கவியோடு தொடரும்]

**விளக்கம்:-** துரோணனுக்கும் தருமனுக்கும் நடந்த தொந்த யுத்தத்தில், தருமன் கை அம்புகளால் (துரோணனுக்கு) அநர்த்தம் உண்டாகி, நாணோடு வில்லும் அறுக்கப்பட்டது; (அந்நிலையில்) களத்தில் (தருமன் குருவை நோக்கி) ''நீ அந்தணனுதலாலும், ஆதியான வேதம் வல்ல ஆசிரியனுதலாலும், (உன்பால் எமக்கு உள்ள) மதிப்பு இருத்தலால், இனி கணை ஒன்றும் செலுத்தேன், அஞ்ச வேண்டா, இளைப்புத் தணிய களம் நீங்குக,'' என்று சொல்ல, - (தொடரும்) என்பதாம். எழுதலத்து அரசன்-தருமன். அனத்தம் - அநர்த்தம், கேடு. ஆகவம் - யுத்தபூமி. மேன்மை- மேன்மை பொருந்திய மதிப்பு.

தோற்றுரை ஏகுமாறு விடுத்தல், **தழிஞ்சி** என்ற புறப்பொருள் துறையின்பாற் படும்.

**25. அறத்தின் மகன்ற ஞண்மையினை யழித்துயி ரெஞ்சி**
**டாவகைதன்**
**மறத்தொடு கொண்டு போவலென மதித்தெதிர் வந்த சாபமுனி**
**திறத்தினி வன்கை யேவுகணை செயித்தது கண்டு**
**நாணிமெலி(வு)**
**உறத்தளர் சிந்தை யோடுதன துடற்சுமை கொண்டு**
**போயினனே.**

[அறத்தின் மகன் தன் ஆண்மையினை அழித்து உயிர் எஞ்சிடாவகை தன் மறத்தொடு, கொண்டு போவல் என, மதித்து வந்த சாபம் முனி, திறத்தின் இவன் கை ஏவுகணை செயித்தது கண்டு நாணி மெலிவு உற தளர் சிந்தையோடு தனது உடல் சுமை கொண்டு போயினன், ஏ.

**விளக்கம்:-** ''தருமனை வலி அழித்து, அவனது உயிர் நீங்காதபடி தன் வலிமையால் பற்றிக் கொண்டு போவேன்,'' என்று எண்ணி, அவன் எதிர்வந்த சாபமுனி (துரோணன்), வல்லமையால் இவன் (தருமன்) ஏவுகணை தன்னை வென்றது கண்டு நாணம் அடைந்து, யாக்கை தளர்ந்து, சோர்வுற்ற மனத்தோடு, தன் உடலின் சுமையைத் தாங்கிக் கொண்டு திரும்பிச் சென்றுன், என்பது பொருள்.

தனது சீடனுன தருமனுல் வெல்லப் பட்டதாலும், போரில் உற்ற தளர்ச்சியாலும் துரோணனுக்கு, உடல் ஒரு சுமையாயிற்று.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**26. தருமன் மைந்த னுடன்ம லைந்து சமரி லஞ்சி யோடியும்**
**கரும நன்று படநி னைந்த கலச யோனி பின்னையும்**
**முரண்மி குந்து டற்ற வேகொன் முந்த வோட வேகொலாம்**
**விரைவு டன்சி னங்க டாவ வேறெர் தேரி லேறினுன்.**

[தருமன் மைந்தனுடன் மலைந்து சமரில் அஞ்சி ஓடியும், கருமம் நன்றுபட நினைந்த கலச யோனி பின்னையும் முரண் மிகுந்து உடற்றவே கொல்? முந்த ஓடவே கொல் ஆம்? விரைவுடன் சினம் கடாவ வேறு ஓர் தேரில் ஏறினுன்.]

**விளக்கம்:-** தருமனேடு மலைந்து அஞ்சி ஓடிய பின்னும், தான் ஏற்ற கருமத்தை நன்ருகச் செய்து முடிக்க எண்ணிய கலச யோனி (துரோணன்) மறுபடியும் மிக்க வலிமையோடு போர் செய்யவோ, அல்லது விரைவாக ஓடிச் செல்லவோ விரைவுடன் கோபம் தூண்ட வேருேர் தேரில் ஏறினுன்? - என்பது பொருள்.

கலசத்தில் தோன்றினமையின், துரோணன் கலசயோனி, எனப்பட்டான். ''தோற்றேடிய ஆசிரியன், வெல்வதற்கோ? அல்லது மீண்டும் புறங்கொடுத்து ஓடவோ? வேறோர் தேர் ஏறினன்,'' என்றது, இரண்டாவது தடவையும் அவன் தோற்று ஓடலைக் குறிக்கும்.

**27. தங்கண் மன்ன னம்மு னைத்த னித்து வென்ற வின்மையும்**
**துங்க வென்றி யின்றி யேது ரோண ஞர ழிந்ததும்**
**அங்கு ளங்க னன்று மீள வணிகொ டேரி ஞனதும்**
**சிங்க மென்ன வருகு நின்ற சிறுவர் கண்டு சீறியே.**

[தங்கள் மன்னன் அ முனை தனித்து வென்ற வின்மையும், துங்கம் வென்றி இன்றியே துரோணஞர் அழிந்ததும், அங்கு உளம் கனன்று மீள அணிகொள் தேரின் ஆனதும், சிங்கம் என்ன அருகு நின்ற சிறுவர் கண்டு சீறியே,—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்:-** தனியே நின்று வென்ற தருமனது வில் வல்லமையையும், தோற்றேடிய துரோணன் உளங்கனன்றவனாய் வேறோர் தேரில் ஏறியதையும் கண்ட ஆண்சிங்கம் போன்ற சிறுவர்கள் சீறி, (முனிவனை வளைத்துக் கொண்டனர்) என்பதாம்.

**28. முந்தி முந்தி மச்ச ராச னேடு சேனை முதல்வனும்**
**குந்தி போச ஞதி யான குலம கீபர் யாவரும்**
**வந்து சூழ வேழ மீது வயம டங்கல் செல்வபோல்**
**அந்த வேத முனியை யோடி யக்க ணத்தில் வளையவே.**

[முந்தி முந்தி மச்சராசனேடு சேனை முதல்வனும், குந்திபோசன் ஆதி ஆன குலம் மகீபர் யாவரும் வந்து சூழ வேழம்மீது வயமடங்கல் செல்வபோல், அந்த வேத முனியை ஓடி அ கணத்தில் வளையவே,—தொடரும்.]

**விளக்கம்:-** மச்சராசன்-விராடன். சேனை முதல்வன்-திட்டத்துய்மன்; விராடன் முதலிய உயர்குலம் வந்த அரசர்கள், யானையின் மேல் வலிய சிங்கம் செல்வது போல், சுற்றிவந்து வேத முனியை (துரோணனை) வளைத்துக்கொள்ள,—தொடரும் என்பதாம்.

**29. கன்ன ஞதி சகுனி யாதி கலிங்க தேச ஞதியா**
**மன்ன ஞதி யாக வங்கு மறைய வன்பெ ரும்படை**
**தென்ன ஞதி நகுல ஞதி திட்டத் துய்ம னேடபி**
**மன்ன ஞதி யாக விங்கு திட்டி ரன்வ ருதினி.**

[கன்னன் ஆதி சகுனி ஆதி கலிங்கதேசன் ஆதி ஆ(க), மன்னன் ஆதி ஆக அங்கு மறையவன் பெரும்படை; தென்னன் ஆதி நகுலன் ஆதி திட்டத்துய்மனேடு அபிமன்னன் ஆதியாக இங்கு உதிட்டிரன் வரூதினி, - தொடரும்.]

**விளக்கம்:-** கர்ணன், சகுனி, துரியோதனன் முதலியவர் அங்கே துரோணன் சேனையிலும், இங்கே பாண்டியன், நகுலன், திட்டத்துய்மன், அபிமன் முதலியவர்களும் தருமன் சேனையிலும், - (அடுத்த கவியோடு தொடரும்) என்பதாம். வரூதினி - சேனை. செய்யுள் சுலபமானதே.

**30. நின்ற சேனை மன்னர் தாமு நின்ற வந்நி லத்திடைச்**
**சென்ற சேனை மன்னர் தாமு மெங்க ணுஞ்செ ருச்செய்தார்**
**என்று கூறி யெதி ருரைத்தல் யாவ ருக்கு முடிவுருது**
**ஒன்று நூறு சின்ன மாவு டைந்த தோரொ ருடலமே.**

[நின்ற சேனை மன்னர் தாமும் நின்ற அ நிலத்திடை சென்ற சேனை மன்னர் தாமும் எங்கணும் செரு செய்தார், என்று கூறி எதிர் உரைத்தல் யாவருக்கும் முடிவு உருது; ஒன்று நூறு சின்னம் ஆ(க) உடைந்தது ஓர் ஓர் உடலம், ஏ.]

**விளக்கம்:-** (துரியோதனன் பக்கம்) நின்ற சேனை மன்னர்கள் நின்ற குருக்ஷேத்திர பூமியிலே (போர்க்களத்திலே), சென்ற (தருமன் பக்கத்துச்) சேனை மன்னர்கள், எல்லா இடத்திலும் போர் செய்தார்கள் என்று கூறி (அதாவது இன்னுரோடு இன்னுர். மலைந்தனர் என்று பகுத்துச் சரியாகச் சொல்லுதல் எவருக்கும் முடியக் கூடியதாகாது; (அந்தப் போரில்) ஒவ்வோர் வீரர்களின் உடலும் நூறு துண்டுகளாக உடைந்தது, என்பதாம்.

குருக்ஷேத்திரபூமி துரியோதனனிடம் இருந்ததால், அவன் சேனை நின்றசேனை எனப்பட்டது.

**31. வேல்வி தத்தும் வாள்வி தத்தும் வில்வி தத்து விடுநெடுங்**
**கோல்வி தத்து முடிது ணிந்த கொற்ற மன்னர் சற்றலார்**
**நூல்வி தத்து மிக்க கேள்வி நோன்சி லைக்கைம் முனிபடைக்**
**கால்வி தத்து ரதது ரங்க கயவி தத்து வயவரே.**

[வேல்விதத்தும் வாள்விதத்தும் வில் விதத்து விடு நெடுங் கோல் விதத்தும் முடி துணிந்த கொற்றம் மன்னர் சற்று அலார், நூல்விதத்து மிக்க கேள்வி நோன் சிலைகை முனிபடை கால் விதத்து, ரதம் துரங்கம் கயம் விதத்து வயவர், ஏ.]

**விளக்கம்:-**சாத்திரவகைகளில் எல்லாம் மிகுதியான கேள்வியை உடைய வலிய வில் ஏந்திய வகையினனுன துரோணனது படையிலுள்ள காலாட்படை வகைகளையும், தேர் குதிரை யானைப்

படைகளின் வகைகளையும் உடைய வீரர்களில் பாண்டவரைச் சேர்ந்தவர்களது வேல் வகைகளாலும் வாள் வகைகளாலும், வில் வகைகளாலும் பாணங்களின் வகைகளாலும் முடி துண்டிக்கப் பட்ட கொற்ற மன்னர் கொஞ்சமானவர் அல்லர், அதாவது மிகப் பலர்,—என்பது பொருள்.

வேல்வகை: எறிவேல், கைவேல் போன்றவை. வாள் வகை: பெருவாள், உடைவாள், சுருள்வாள் போன்றவை. கோல்: பலவகைப்பட்ட அம்புகள். போரில் பின்னிடாது உயிர் துறந்தமை பற்றிக் **கொற்ற மன்னர்** எனப்பட்டார்.

**32. குத்து வார்ப டைக்க லங்கள் கொண்டு மற்கு றிப்பினுன்**
**மொத்து வாரி ரண்டு தேரு முட்ட விட்டு மொய்ம்பினுல்**
**ஒத்து வார்க ளிற்றி னின்று மொருக ளிற்றின் முதுகுறத்**
**தத்து வார்து ரங்க மங்க டாரை யாக வேறுவார்.**

[குத்துவார் படை கரங்கள் கொண்டு, மல்குறிப்பினுல் மொத்துவார்; இரண்டு தேரும் முட்டவிட்டு மொய்ம்பினுல் ஒத்து வார், களிற்றினின்றுமே ஒரு களிற்றின் முதுகு உற தத்துவார்; துரங்கமங்கள் தாரை ஆக ஏறுவார் ]

**விளக்கம்:-** (பாண்டவர் பக்கத்து வீரர்கள்,) ஆயுதங்களைக் கொண்டு (பகைவரை) குத்துவார், அவர்களது மற்போர் குறிப் பைக் கண்டு (அவர்களை) தாக்குவார்; பகைவர் தேரோடு தம் தேரையும் முட்டவிட்டுப் பின்னர், தங்கள் வலிமையால் ஒதுங்கு வார்; யானையினின்று மற்ருேர் யானைமீது பொருந்தப் பாய்வார், துரங்கமங்களை (குதிரைகளை) வரிசையாக ஏறிச் செலுத்துவார், என்பது பொருள். ஒத்துதல் - ஒதுங்கல், விலகல். தாரை—ஒழுங்கு, வரிசை.

**33. கொற்ற வாளின் முடியி ழந்த குறையு டம்பு வாளுடன்**
**கற்ற சாரி யோடு மக்க ணக்க றிந்து புகழுவார்**
**அற்ற கால்க ளற்ற கைக ளாயு தங்க ளாகவே**
**எற்று வார்ப டைக்க லனி ழந்து நின்ற வீரரே.**

[கொற்றம் வாளின் முடி இழந்து குறை உடம்பு வாளுடன் கற்ற சாரி ஓடும் அ கணக்கு அறிந்து புகழுவார்; அற்ற கால்கள் அற்ற கைகள் ஆயுதங்கள் ஆகவே எற்றுவார், படைகலன் இழந்து நின்ற வீரர், ஏ]

**விளக்கம்:-** வெற்றியுடைய வாளினுல் முடியிழந்த (பகைவர் களின்) கவந்தங்கள் தாங்கள் பயின்றுள்ள சாரி திரியும் அந்த நிலையைக் கண்டு கொண்டாடுவார்கள்; ஆயுதங்களை இழந்து நின்ற வீரர்கள், களத்தில் விழுந்து கிடக்கும் அறுபட்ட கைகளை

யும் கால்களையும் ஆயுதங்களாகக் கொண்டு எதிரிகளைத் தாக்கு வார்கள், - என்பது பொருள்.

**34. சொன்ன வாறு குறியு முள்ள துரக தந்து ணிந்தன**
**கன்ன வாறு சொரி மதக்க ளிற்றி னங்கள் வீழ்ந்தன**
**பின்ன வாறு பட்ட னபிறங் குதேர் பதாதிகள்**
**இன்ன வாறு பட்ட னவெ னக்கு றித்தி யம்பொணா.**

[சொன்ன ஆறு குறியும் உள துரகதம் துணிந்தன, கன்னம் ஆறு சொரி மதம் களிறு இனங்கள் வீழ்ந்தன; பின்னம் ஆறு பட்டன பிறங்குதேர், பதாதிகள் இன்ன ஆறுபட்டன. என குறித்து இயம்பு ஒணா.]

**விளக்கம்:-** (துரியோதனனைச் சேர்ந்த சேனையில்) அசுவ நூல்களில் கூறப்பெற்றுள்ள நல் இலக்கணங்கள் எல்லாவற்றை யும் பெற்றுள்ள குதிரைகள் அறுபட்டன, கன்னங்களிலிருந்து ஆருகப்பெருகும் மதநீரையுடைய யானைக்கூட்டங்கள் இறந்து விழுந்தன; விளங்கும் தேர்கள் பின்னப்பட்ட தன்மையை அடைந்தன; இன்னவிதம் (சேனைகள்) அழிந்தன என்று குறிப் பிட்டுச் சொல்லமுடியாதவை ஆயின, என்பது பொருள்.

பிறப்பு, நிறம், சுழி, குரல், அவயவ அமைதி, நடை முதலி யவை, சொன்ன குறிகளாகும். பதாதிகள், என்பது அஃறிணை யானமையின், **பட்டன,** என்றும் **இயம்பொணா** என்றும் அஃறிணை முடிவைப் பெற்றன, என்க.

**35. உங்கள் சேனை கெட்ட தென்று திட்டி றன்த ளத்துளார்**
**திங்க ளன்ன கும்ப யோனி சேனை தன்னை யிகழுவார்**
**எங்கள் சேனை கெட்ட துங்க ளிறைவன் வின்மை யாலெனத்**
**தங்கள் சேனை யந்த ணன்ற ளர்ந்த தற்கி ரங்குவார்.**

[உங்கள் சேனை கெட்டது என்று உதிட்டிரன் தளத்து உளார், திங்கள் அன்ன கும்பயோனி சேனைதன்னை இகழுவார்; (அதற்கு பகைத்தளத்தார்) எங்கள் சேனை கெட்டது உங்கள் இறைவன் வின்மையால் என, தங்கள் சேனை (தலைவனான)அந்தணன்தளர்ந் தற்கு இரங்குவார்.]

**விளக்கம்:—**தளம்-பக்கம், திங்கள் அன்ன கும்பயோனி - சந்திரனைப் போன்ற ஒளிவிளக்கமுடைய துரோணன், தருமன் பக்கத்தினர் தோல்வியுற்ற துரோணனது சேனையை இகழ, அவர்கள், தருமனது வின்மையால் தங்கள் சேனை கெட்டதை ஒப்புக்கொண்டு, துரோணனது தளர்ச்சிக்கு இரங்கினர் என்பதாம்.

**36. இருத ளத்து நின்ற மன்ன ரிருவ ராக விகலியே**
**ஒருத ளத்து மன்ன ரென்ன வொத்து நின்று டற்றினர்**

**பொருத ளத்தி லிங்ங னின்று போர்பு ரிந்த பொழுதிலே**
**வருத ளத்தொ டுதவி ஞன்ம ருத்து வீமன் மைந்தனே.**

[இரு தளத்தும் நின்ற மன்னர் இருவர் ஆக இகலியே ஒரு தளத்து மன்னர் என்ன ஒத்து நின்று உடற்றினர்; பொரு தளத்தில் இங்ஙன் நின்று போர் புரிந்தபொழுதிலே வருதளத் தொடு உதவினன், மருத்து வீமன் மைந்தனே.]

**விளக்கம்:-** இரு பக்கத்திலும் நின்ற மன்னர் இரண்டு இரண்டு பேராக நின்று மாறுபட்டு, ஒரு பக்கத்தைச் சேர்ந்த மன்னர்போல் போர் செய்தனர், அதாவது சமமாகப் போர் செய்தனர்; இவ்வாறு போர்த்தளத்தில் நின்று போர் செய்த பொழுது வாயு குமாரனுன வீமனது புத்திரன் (கடோற்கசன்) தன்னேடு வருகின்ற தளத்துடன் (சேனையுடன்) துணையாக வந்தான், என்பது பொருள்.

**37. நிருத கன்னி மகனு நேமி நீல வண்ணன் மருகனும்**
**கருகி நெஞ்ச ழன்று வந்த காவன் மன்னர் யாவரும்**
**சுருதி யன்ன தூமொ ழித்து ரோணன் மேன டக்கவே**
**பரிதி கண்ட பனியெ னப் ப கைத்த ளம்ப றந்ததே.**

[நிருத கன்னி மகனும் நேமி நீல வண்ணன் மருகனும், கருகி நெஞ்சு அழன்று வந்த காவல் மன்னர் யாவரும், சுருதி அன்ன தூமொழி துரோணன்மேல் நடக்கவே, பரிதி கண்ட பனி என பகை தளம் பறந்ததே.]

**விளக்கம்:-** கடோற்கசனும், கண்ணனது மருகனுன அபிமனும், (மற்றும்) கோபத்தால் உள்ளம் கருகி, சீறிக்கொண்டு வந்த அரசர்களும், சுருதி வாக்கியத்தை ஒத்த தூய்மையான சொற்களை உடைய துரோணனை எதிர்த்துச் செல்ல. சூரியனைக் கண்ட பனி எனப் பகைப்படை பறந்தது, என்பதாம். உடன் பிறந்தாள் மகன் அபிமன், மருகன் எனப்பட்டான்.

**38. பறந்து போய்நெ டும்ப ணிப்ப தாகை யாஞெ டெய்தினர்**
**பிறந்து போய்வ ளர்ந்த பின்பி றப்பு ணர்ந்த பெருமனும்**
**துறந்து போய விதுரன் மூன்று ணித்த வில்லெ னத்துணிந்(து)**
**இறந்து போன மன்ன ரன்றி நின்ற மன்ன ரெவருமே.**

[பறந்துபோய் நெடும்பணி பதாகையாஞெடு எய்தினர், பிறந்துபோய் வளர்ந்தபின் பிறப்பு உணர்ந்த பெருமனும், துறந்து போய விதுரன் முன் துணித்த வில் என துணிந்து இறந்துபோன மன்னர் அன்றி நின்ற மன்னர் (எவருமே]

**விளக்கம்:**—துறந்துபோய விதுரன்....மன்னர் எவருமேபிறந்து போய் வளர்ந்த பின் பிறப்பு உணர்ந்த பெருமனும் பறந்துபோய்... எய்தினர், என்பது அன்வயம்.

[வன்சொல் வழங்கிய துரியோதனனையும் அவனைச் சேர்ந்தாரையும்) துறந்து தீர்த்தயாத்திரையை மேற் கொண்டு சென்ற விதுரன், முன்னே (துரியோதனன் சபையில்) ஒடித்த வில்லைப் போல், துண்டுபட்டு இறந்த மன்னர்கள் அல்லாமல் இறவாது இருந்த எல்லா அரசர்களும், ஒருத்தி மகனாய்ப் பிறந்து, பிறந்தவுடன் அவ்விடம் நீங்கி (வேறொருத்தி மகனாய்) வளர்ந்த பின் பிறப்பு உணர்ந்த கர்ணனும் பறந்து சென்று, பாம்புக் கொடியனான துரியோதனனை அடைந்தனர், என்பதாம். பெருமன், என்பது பெருமான் என்பதின் விகாரம்.

துரியோதனன் களம் வரல்

**39. வதிட்ட னுந்து திக்கும் வாய்மை வரிசி லைக்கை முனிவனோடு**
**உதிட்டி ரன்பு ரிந்த போரு ரைக்க வேயு ணர்ந்துளான்**
**பதிட்டி தம்பி றந்த தின்று பாண்ட வர்க்கு ஞாலமென்(று)**
**அதிட்ட மொன்று முணர்க லானு மனில வேக மாயினான்.**

[வதிட்டனும் துதிக்கும் வாய்மை வரி சிலை கை முனிவனோடு உதிட்டிரன் புரிந்த போர் உரைக்கவே உணர்ந்துளான், பதிட்டிதம் பிறந்தது இன்று பாண்டவர்க்கு ஞாலம் என்று அதிட்டம் ஒன்றும் உணர்கலானும் அனிலம் வேகம் ஆயினான்.]

**விளக்கம்:-** வசிஷ்ட முனிவனும் போற்றத்தக்க வாய்மையனான வரி சிலைக்கை முனிவனோடு (துரோணனோடு) தருமன் செய்த போரைக் (கண்டவர்) சொல்ல அறிந்தவனாய், அதிட்டம் அதாவது வினைப் பயனைச் சிறிதும் சிந்தியாதவனான துரியோதனன், இன்று பாண்டவர்க்குப் பூலோகம் நிலைப்பதாயிற்று, என்று எண்ணி வாயு வேகம் உடையவனாய்க் களம் வந்தான், என்பது பொருள்.

ப்ரதிஷ்டிதம், என்ற வடசொல்லின் சிதைவு **பதிட்டிதம்;** நிலையுடையது. எனவே, பதிட்டிதம் பிறந்தது, என்பது நிலையுடையது ஆயிற்று என்ற பொருளதாகும். அதிட்டம் - **வினைப்** பயனான விளைவு, அத்ருஷ்டம்.

**40. விட்ட விட்ட ரதது ரங்க வேழ வாக னத்தொடும்**
**தொட்ட தொட்ட சிலையொ டுந்து ணிந்து வெங்க ளத்திடைப்**
**பட்ட பட்ட நிருபர் தங்கள் பாடு காண வெண்ணியோ**
**முட்ட முட்ட வேகு கென்று தன்ப டைக்கு முந்தினான்.**

[விட்ட விட்ட ரதம் துரங்கம் வேழம் வாகனத்தொடும், தொட்ட தொட்ட சிலையொடும் துணிந்து வெம் களத்திடை பட்ட பட்ட நிருபர் தங்கள் பாடு காண எண்ணியோ, முட்டமுட்ட ஏகுக என்று தன் படைக்குமுந்தினான்.]

**விளக்கம்:-** இடையருது தொடர்ந்து செலுத்திய தேர், குதிரை, யானை ஆகிய வாகனங்களோடும், மிகுதியாகப் பற்றிய வில்களோடும் துண்டு பட்டுக் கொடிய போர்க் களத்தில் மிகுதி யாக அழிந்த அரசர்களின் நிலையைக் காண எண்ணியோ, நெருக்கமாகச் செல்லுங்கள் என்று படைவீரர்களுக்குச் சொல்லி, அச் சேனைக்கு முன், அதாவது சேனை செல்வதற்கு முன் (துரியோதனன்) களம் வந்தான், என்பது பொருள்.

துரியோதனன் விரைந்து களம் வந்தது வெல்லுதற்கு அன்று, மற்று களத்தில் பட்டு அழிந்த அரசர்களின் பரிதாப நிலையைப் பார்ப்பதற்கு என்று பரிகசித்தபடி.

**41. முந்த வந்த மன்ன னுமு ரண் கொள் வாகை யரசரும்**
**வந்த வந்த சேனை யும்வ குத்த ணிந்து முனையவே**
**அந்த வந்த முனைக டோறு மந்த வந்த வீரர்மெய்**
**சிந்த வந்து டற்றி னன்சி லைத்த டக்கை யபிமனே.**

[முந்த வந்த மன்னனும் முரண்கொள் வாகை அரசரும், வந்த வந்த சேனையும் வகுத்து அணிந்து முனையவே, அந்த அந்த முனைகள் தோறும் அந்த அந்த வீரர்மெய் சிந்த வந்து உடற்றினன் சிலை தடக்கை அபிமனே.]

**விளக்கம்**—(சேனை செல்வதின் முன் களம் வந்தது துரியோ தனனும், வலிமை கொண்ட வாகை சூடற்குரிய தகுதி வாய்ந்த மன்னர்களும், மிகுதியாகத் தொடர்ந்து வந்த சேனையும், ஒழுங் காக அணி அமைந்து, முனைந்து போர் செய்யவே, அவ் வந்த முனைகள் தோறும் அவ்வந்த வீரர்களின் உடல் சிதையும்படி, சிலை தடக்கை அபிமன் எதிர்வந்து போர் செய்தான், என்பது பொருள்.

**42. சிந்தி வாளி மழைக ளோடு சிலைவ ளைத்துமுடுகுதேர்**
**உந்தி வாரி மேக மென்ன அமர்செய் தானு மொருவனே**
**அந்தி வான மொத்த தக்கு ருதி நீர்கொ ளடுகளம்**
**தந்தி வாசி தேர்க ளோடு டைந்த தெண்ணி ருனையே.**

[சிந்தி வாளி மழைகளோடு சிலை வளைத்து முடுகு தேர் உந்தி வாரிமேகம் என்ன அமர் செய்தானும் ஒருவனே; அந்தி வானம் ஒத்தது அ குருதி நீர் கொள் அடுகளம், தந்தி வாசி தேர்களோடு உடைந்தது, எண் இல் தானை, ஏ.]

**விளக்கம்:-** முடுகு தேர் சந்தி சிலை வளைத்து வாளி மழை களோடு சிந்தி வாரி மேகம் என்ன அமர் செய்தானும் ஒருவனே; எண் இல்தானை, தந்தி வாசி தேர்களோடு உடைந்தது, அ குருதி

நீர் கொள் அடுகளம் அந்தி வானம் ஒத்தது, என்பது அன்வயம்.

வாளி மழைகளோடு – அம்பு மழைகளே, (உருபு மயக்கம்). வாரி மேகம் - நீர் கொண்ட மேகம். தந்தி - யானை. நீர்கொண்ட மேகம்போல் அம்பு மழைகளைப் பொழிந்து போர் செய்தவனும் அபிமன் ஒருவனே; எண்ணிறந்த சேனை யானை குதிரை தேர் களோடு அழிந்தது. அதனல் பெருகிய குருதி நீரைக் கொண்ட போர்க்களம், அந்தியில் காணப்படும் செவ்வானத்தை ஒத்தது, என்பதாம்.

**43. ஏறு தேர ழிந்து சாப மிற்று முற்று மின்றியே**
**வேறு தேரு மின்றி நின்று வில்லெ டுத்த வேதியன்**
**கூறு தேரு திட்டி ரன்கு னித்த விற்கு டைந்துபல்**
**நூறு தேர்த னைப்பு ரக்க நொய்தி னிற்க ழற்றினன்.**

[ஏறுதேர் அழிந்து, சாபம் இற்று, முற்றும் இன்றி, வேறு தேரும் இன்றி. நின்று வில் எடுத்த வேதியன். கூறுதேர் உதிட்டி ரன் குனித்த விற்கு உடைந்து, பல் நூறு தேர் தனைபுரக்க நொய் தினில் கழற்றினன்]

**விளக்கம்**—(களம்) நின்று வில் எடுத்த துரோணன், (தருமனது கணைகளால்) ஏறும் தேர் ஒழிந்து, வில் சிதைந்து மற்றை ஆயுதங்கள் எதுவும் இல்லாமல், ஏறிக்கொள்வதற்கு வேறு தேரும் இல்லாமல், புகழ்ந்து பேசப்படுகின்ற தேர் வீரனன தரு மனது வில்லுக்குத் தோற்று, பலநூறு தேர்வீரர்கள் தன்னை காத்து வர விரைவாகக் களத்தினின்று நீங்கினன், என்பது பொருள்.

களம் நீங்கி இருக்கை செல்வதற்கே வேதியன் சிரமப்பட வேண்டியதாயிற்று என்று பொருள் தோன்றுமாறு, கழற்றினன், என்று பிறவினையால் கூறினர், என்க. அல்லது. தன்வினைப் பொருளைப் பிறவினையால் குறித்ததாகவும் கொள்ளலாம்.

பகதத்தன் களம் புகல்

**44. முனியு மேனை யானை தேரின் முடுகி வந்த நிருபரும்**
**குனிசி லைக்கை யபிமன் வெங்க ணைக்கு வென்கொ டுக்கவே**
**இனிந மக்கு நல்ல கால மென்று சீறி யெய்தினன்**
**தனித மிக்க சலத மன்ன சதம கன்ச காயனே.**

முனியும் ஏனை யானை தேரின் முடுகி வந்த நிருபரும் குனி சிலை கை அபிமன் வெம் கணைக்கு வென் கொடுக்கவே, இனி நமக்கு நல்ல காலம் என்று சீறி எய்தினன், தனிதம் மிக்க சலதம் அன்ன சதமகன் சகாயனே.]

**விளக்கம்:-** கோபிக்கின்ற யானைகளிலும் தேர்களிலும் விரைந்து வந்த ஏனை நிருபர்களும், குனிசிலைக்கை அபிமனது வெங்கணைக்கு முதுகு கொடுக்கவே, இடி மிகுந்த மேகத்தை ஒத்த இந்திரன் நண்பனான பகதத்தன் என்பான், இனி நமக்குப் (போர் வலிமை காட்டற்கு) நல்ல காலம் என்று சீறிக் கொண்டு (களம்) வந்தான்.

தனிதம் - இடி. சலதம் - மேகம். சதமகன் சகாயன் - இந்திரனுக்கு நண்பனான பகதத்தன். துரோணனும், ஏனை மன்னர்களும் பின்னிடவே, இதுவே, தனது போராண்மை காட்டற்குரிய நல்ல சமயம், என்று சுத்தவீரனான பகதத்தன், எண்ணிக் களம் புகுந்தான், என்பதாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**45. அதிதவள மத்த வார ணமுமுத**
**லமுதமத னத்தி லாழி மிசைவரும்**
**மதகளிறு சுத்த மாக விவனும**
**மகபதியெ டுத்த கார்மு கமுமவன்**
**எதிர்தரவெ டுத்த சாப மிவனுட**
**னிகல்செயநி னைக்க யாவ ருளரென**
**விதமுறவ குத்த யானை யணியுடன்**
**விருதுபக தத்த ராச னுதவவே.**

[அதிதவளம் மத்த வாரணமும், முதல் அமுத மதனத்தில் ஆழிமிசை வரு(ம்) மதம் களிறு சுத்தம் ஆக; இவனும் அம்மகபதி; எடுத்த கார்முகமும் அவன் எதிர்தர எடுத்த சாபம்; இவனுடன் இகல் செய நினைக்க யாவர் உளர்? என, விதம் உற வகுத்த யானை அணியுடன் விருது பகதத்தராசன் உதவவே,—அடுத்த கவியோடு தொடரும்.)

**விளக்கம்:-** அதிதவளம் மத்தவாரணம் - வெண்ணிறம் மிகுந்த மதங்கொண்ட யானை. முதல்-பூர்வத்தில். அமுத மதனத்தில் அமிர்தம் கடைகையில். ஆழி-திருப்பாற்கடல். சுத்தம்-வெண்மை. விருது-வெற்றி வசனம், "பூர்வத்தில் அமுதம் கடைகையில் பாற்கடலினிடம், வெண்ணிறத்துடன் தோன்றிய ஐராவதம் என்னும் மதயானையை ஒக்கும் பகதத்தனது யானை; இவனும் (பகதத்தனும்) அந்த இந்திரன் ஒப்பான்; இவன் கையில் பிடித்த வில்லும், அவன் (இந்திரன்) பகைவரை எதிர்த்த பொழுது கையில் கொண்ட சாபம் (வில்லை) ஒக்கும்; (அவ்வாறாக) இவனுடன் போர் செய்ய நினைக்கவும் யார் உளர்?" என, (துதி பாடகர்கள்) பிரதாபவசனங்களைக் கூற, பல வகையினவாக

வகுக்கப்பட்ட யானைப் படையுடன் பகதத்தன்,—(தொடரும்) என்பது பொருள். விருது உதவவே, விதம் உற வகுத்த யானை அணியுடன் பகதத்தராசன், என்று இயைக்க.

**46.** **இருபதுப திற்று நூறு களிறுள**
**விவனினு மிகுத்த வீரர் கடவுவர்**
**ஒருபதுப திற்று நூறு மழகளி**
**றுவமை யெனமிக்க வாகு வலியினன்**
**முருகனென வெற்றி நேமி முகிலென**
**முரண வுணருக்கு வாழ்வு கெடவுயர்**
**சுரபதிக ளக்கு வாழ்வு வரும்வகை**
**சுரர்நில களித்த தோழ னிவனரோ.**

[இருபது பதிற்று நூறு களிறு உள, இவனினும் மிகுந்த வீரர் கடவுவர்; ஒருபது பதிற்று நூறு மழ களிறு உவமை என மிக்க வாகு வலியினன்; முருகன் என, வெற்றி நேமிமுகில் என முரண் அவுணருக்கு வாழ்வு கெட உயர் சுரபதிக்கு வாழ்வுவரும் வகை சுரர் உலகு அளித்த தோழன் இவன் அரோ.]

**விளக்கம்**—இரு பதிற்று நூறு—இருபதினாயிரம். இருபதினா யிரம் யானைகள் இவனுக்கு உள; (அவற்றை) இவனினும் சிறப் பாக நடத்தும் வீரர் செலுத்துவர்; இவன், பதினாயிரம் மழ(இளைய) யானைகள் உவமை என்னும்படி மிகுத்த தோள் வலி உடையவன்; முருகக்கடவுள் எனவும், சக்கரம் ஏந்திய முகில் அனைய திருமால் எனவும் வலிய அசுரர்களுக்கு வாழ்வு கெடச்செய்து சிறந்த இந்திர னுக்கு நல்வாழ்வு உண்டாகும்படி தேவர் உலகை அளித்த நண்பன் (தொடரும்) என்பதாம்.

இச் செய்யுளால் பகதத்தனது சிறப்புக்கூறப்பபட்டது. முகில்-(உவமை ஆகுபெயர்) திருமால்.

**47.** **எழிலணித டக்கை மேரு கிரிநிக**
**ரிபசிரம தைக்க மோதி யுருமென**
**மொழியுறவ திர்த்து நீடு புயகிரி**
**முறைமுறைத டிக்க வேக மொடுபுகை**
**பொழிசினம னத்தின் மூள வவிரொளி**
**புனைநுதல்வெ யர்க்க வாயு கதியென**
**விழிவழிநெ ருப்பு வீழ விரைவுடன்**
**விறன்மிகுக ளத்தி லான பொழுதிலே.**

[எழில் அணி தடக்கை மேரு கிரி நிகர் சிரம் அதைக்க மோதி, உரும் என மொழி உற அதிர்த்து, நீடு புயகிரி முறை முறை தடிக்க, வேகமொடு புகை பொழி சினம் மனத்தின்மூள,

அவிர் ஒளி புனை நுதல் வெயர்க்க, வாயு கதி என விழி வழி நெருப்பு வீழ விரைவுடன் விறல் மிகு களத்தில் ஆன பொழுதிலே, - தொடரும்.

**விளக்கம்:-** அழகு அணிந்த பெரிய துதிக்கையை உடைய, மேருமலையை ஒத்த (தான் ஏறிவந்த யானையின்) தலையை, அழுந்தும்படி அடித்து, இடியைப்போல, சொற்கள் ஒலி பொருந்தி வெளிப்படும்படி வீர முழக்கம் செய்து, நீண்ட மலைகள் போன்ற தோள்கள் பூரிக்க, புகையை வெளிப்படுத்தும் சினத்தீ கடுமையாக மனத்தில் எழ, (அதனால்) விளங்கும் ஒளியைக் கொண்ட நெற்றி வேர்வை விட, கண்களின் வழி நெருப்பு வெளிப்பட, வாயுவின் வேகம்போல் விரைவாக, வெற்றி மிக்க போர்க்களம் புகுந்த பொழுதில், - (அடுத்த செய்யுளோடு முடியும்,), என்பது பொருள். அதைக்க - பதியும்படி அடிக்க.

**48. பொருதுபுற கிட்ட சேனை யிவன்வரு**
**பொலிவொடு புறக்கி டாது திருகின**
**அரவினையு யர்த்த கோவு மிளைஞரு**
**மவனிபரு மொத்து மீள முடுகினர்**
**முரசெழுது பொற்ப தாகை நிருபனும்**
**முதலமர்செ குத்த வாகை யபிமனும்**
**இருகைமலர் கொட்டி யாடி யெதிர்கொள**
**விருபடையு முற்ற பூசல் விளையவே.**

[பொருது புறகு இட்டசேனை இவன் வருபொலிவொடு புறக்கு இடாது திருகின, அரவினை உயர்த்த கோவும் இளைஞரும் அவனி பரும் ஒத்து மீள முடுகினர்; முரசுஎழுது பொன் பதாகை நிருப னும் முதல் அமர் செகுத்த அபிமனும் இருகை மலர் கொட்டி ஆடி எதிர் கொள இருபடையும் உற்ற பூசல் விளையவே.]

**விளக்கம்:-** போர்செய்து முதுகிட்ட துரியோதனன் சேனை கள் இவன் (பகதத்தன்) துணைவருகின்ற உற்சாகப் பொலிவால், பின்னிடாமல் போர்க்களம் திரும்பின; பாம்பைக் கொடியிலே கொண்ட கோவும் தம்பியரும், அவனைச் சேர்ந்த அரசர்களும் ஒத்த மனத்துடன் மறுபடியும் களம் விரைந்து சென்றனர்; முரசக் கொடியனான தருமனும், இன்று இதற்கு முன் நடந்த போரில் பகை அழித்த வெற்றி அபிமனும் மலர்க்கை கொட்டியும் கூத்தாடியும் எதிர்கொள்ள, இருதிறத்துப் படைகளிலும் போர் மிகுதியாக விளை யவே—(அடுத்த செய்யுளோடு தொடரும்), என்பது பொருள்.

பின், என்ற பொருளது புறகு என்ற இடைச்சொல். அது புறக்கிடாது, என்று புணர்ந்துளது. சிறு பான்மை ககரம்

இவ்வாறு இரட்டல் உண்டு. முதல் அமர், என்ற தொடர் பதிஞேராம் நாள் போரையும் குறிக்கும்.

**49. நிசிசரனெ டுத்த வாதி கயிலேயும்**
**நிகரல விதற்கெ ஞமுன் வருகரி**
**விசையுடன டத்தி வீம னெவணவன்**
**விறன்முடிது ணித்து மீள்வ னினியென**
**வசைபலபி தற்றி வேக முடன்வரும்**
**வலியபக தத்தன் வாகு கிரிகளை**
**ஒசிதரவ ளைத்து மார்பு சுழிதர**
**வொருகை கொடுகுத்தி வாயு குமரனே.**

[நிசிசரன் எடுத்த கயிலேயும் நிகர் அல இதற்கு என, முன் வரு கரி விசையுடன் நடத்தி, ''வீமன் எவண்? அவன் விறல் முடி துணித்து மீள்வன் இனி,'' என, வசை பல பிதற்றி வேகமுடன் வரும் வலிய பகதத்தன் வாகு கிரிகளை ஒசிதர வளைத்து மார்பு சுழிதர ஒரு கை கொடு குத்தி வாயு குமரனே, - அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்:-** இராக்கதனை இராவணன் எடுத்த கைலாச மலேயும் இதற்கு நிகர் அன்று என்று சொல்லத்தக்க, முன்னே வருகின்ற (தனது வெள்ளை) யானையை வேகமாக நடத்திக் கொண்டு, ''வீமன் எங்கே? அவனது வலிய சிரசைத் துணித்து அதன் பிறகே திரும்புவேன்,'' என்று பிதற்றிக் கொண்டு விரைவாக வரும் வலிய பகதத்தனது தோள்களாகிய மலேகளை ஒடியும்படி வாயுகுமாரனை வீமன் வளைத்து, மார்பு குழியிடும்படி ஒரு கையினுல் குத்தி,—(அடுத்த செய்யுளோடு தொடரும்) என்பது பொருள்.

**50. கதைகொடுப ணைக்கை வீசி யெதிர்வரு**
**கடகரியி னெற்றி யோடை யணியொடு**
**புதைபடவ டித்து மீள விசையொடு**
**புரவியிர தத்தின் மீது குதிகொள**
**இதயமலர் செற்ற மூள விவனவ**
**னெதிர்சிலேவ ளைத்து வாளி நிரைபட**
**உதையவுதை பட்ட வாளி தனதுகை**
**யுயர்கதைபு டைத்து வீழ முனியவே.**

[கதை கொடு பணை கை வீசி எதிர் வரு கடகரியின் நெற்றி ஓடை அணியொடு புதைபட அடித்து மீள விசையொடு புரவி இரதத்தின் மீது குதிகொள, இதயம் மலர் செற்றம் மூள இவன், அவன் எதிர் சிலே வளைத்து வாளி நிரைபட உதைய, உதைபட்ட வாளி தனது கை உயர் கதை புடைத்து வீழ, முனியவே,— அடுத்த செய்யுளோடு குளகமாய் முடியும்.]

**விளக்கம்:-** பனைமரம் போன்ற துதிக்கை வீசிக்கொண்டு எதிரே வந்த (பகதத்தனது) மதயானையின் நெற்றி;- முகபடாமாகிய அலங்காரத்துடன் குழியிடும்படி (வீமன் தன்) கதை கொண்டு அடித்து, அதன் பின் விசையோடு குதிரைகள் பூட்டப் பெற்ற இரதத்தின்மீது பாய்ந்து ஏறிக்கொள்ள, (அதனால்) இவன் பகதத்தன்) இதயத்தில் பகைமிக, அவன் (வீமன்) எதிர் சிலை வளைத்துக் கணைகளைச் செலுத்த, செலுத்தப் பட்ட கணைகள், தனது (வீமனது) சிறந்த கதையில் மோதிவிழ, அதனால் வீமன் வெகுண்டு, - (அடுத்த செய்யுளோடு முடியும்) என்பது பொருள். தாமரை போன்ற வடிவினதாதல், பற்றி இதய மலர், எனப்பட்டது.

**51. ஒருவரையொ ருத்தர் வேற லரிதென**
**வொருபடிசெ ருச்செய் தாலு மினியென**
**இருவருமெ டுத்த சாப மொலிபட**
**வெதிரெதிர் தொடுத்த வாளி நெடுமழை**
**ஒருவருட லத்தின் மூழ்கி முனையுற**
**வுருவுதொழி லற்று நூலின் முறைமையின்**
**இருவரும்வி லக்க வோடி விலகின**
**வெதிரெதிர்க டித்து வான மறையவே.**

[ஒருவரை ஒருத்தர் வேறல் அரிது, ஒரு படி செரு செய்தாலும் இனி என, இருவரும் எடுத்த சாபம் ஒலி பட எதிர் எதிர் தொடுத்த வாளி நெடு மழை ஒருவர் உடலத்தின் மூழ்கி முனை உற உருவு தொழில் அற்று, நூலின் முறைமையின் இருவரும் விலக்க ஓடி விலகின, எதிர் எதிர் கடித்து வானம் மறையவே.]

**விளக்கம்:-** ஒரே விதமாக இருவரும் போர் செய்தாலும், ஒருவரை ஒருத்தர் வெல்லுதல் அரிது என, இருவரும் எடுத்த வில் ஒலியெழ எதிரெதிர் தொடுத்த வாளி மழை, ஒருவரது உடலில் முனைபதியப் புதைந்து ஊடுருவிச் செல்லுதல் இன்றி, தனுர்சாத்திர முறைப்படி அம்புகளை விலக்கவும், அவை ஒன்றையொன்று கௌவிக் கொண்டு வானம் மறையும்படி விரைந்து அகன்றன, - என்பது பொருள்.

வீமனும் பகதத்தனும், அம்புகள் தங்களைத் தாக்காதபடி எதிரம்புகளால் விலக்கினராய் வெற்றி தோல்வி இல்லாமல் நெடு நேரம், போர் செய்தனர், என்க.

**52. மகரிகைம ருப்பு நாலு முளவெனில்**
**வலியகுண திக்கில் வார ணமுமெதிர்**
**நிகரலவி தற்கு நாம முரைசெயின்**
**நிலையுடைய சுப்ர தீக மிதன்வலி**

பகரிலிப மெட்டு நாணு மெதிரெறி
படைகளுணர் வுற்ற போரி லெரிவரு
புகர்முகக ரக்க போல மதகரி
பொருதொழிலு ரைக்க லாகு மளவதோ.

[மகரிகை மருப்பு நாலும் உள எனில், வலிய குணதிக்கில் வாரணமும் எதிர் நிகர் அல இதற்கு; நாமம் உரைசெயின் நிலை உடைய சுப்ரதீகம்; இதன் வலி பகரில் இபம் எட்டும் நாணும்; எதிர்எறி படைகள் உணர்வு உற்ற போரில் எரிவரு புகர் முகம் கரம் கபோலம் மதம் கரி பொரு தொழில் உரைக்கல் ஆகும் அளவதோ (அளவது ஓ)]

**விளக்கம்:--** மகரிகை-சுருமீன் வடிவமா யமைந்த பூண். கட்டப்பெற்ற நான்கு தந்தங்கள் உள எனில், வலிய கிழக்குத் திக்கின் யானையான ஐராவதமும் (பகதத்தனது) இந்த யானைக்கு நிகர் ஆகாது; இதன் பேர் இன்னதென்று சொன்னால் எந்நிலையிலும் உறுதிகெடாது நிலை நிற்கும் சுப்ரதீகம், என்பதாம். இதன் வலிமையைக் கூறின் அஷ்டதிக் கஜங்களும் (இதன் வலிமை கண்டு) நாணும்; பகைவரின் எதிரில் விடுதற்குரிய ஆயுதங்களை அறிந்து தொடுக்கும் போரில், தீ வெளிப்படும் புள்ளிகளை உடைய முகத்தையும், (நீண்ட) துதிக்கையையும், கன்னங்களிடத்தே மதநீரையும், உடைய இந்த யானையின் பொரு தொழில் சொல்லத்தக்க அளவினது ஆமோ,—என்பது பொருள்.

நான்கு கொம்புகளைப் பெற்றிருப்பின், ஐராவதத்தை ஒத்ததாகக் கூடிய இந்த யானை, தோற்றம், வலிமை அறிவு முதலியவற்றால் அதனினும் சிறந்ததாகும், என்றது **வேற்றுமை அணியின்** பாற்படும்.

**53.** கரிகளையெ டுத்து வானி னிடையிடை
கரநுதிகொ டெற்று நீடு பிறைநிகர்
இருபணைம ருப்பி னுலு மவரவ
ரெதிரெதிரு டைக்கு நேமி யிரதமும்
உரனுடைய சித்ர வால்கொ டொருபடி
யொலியொடுபு டைக்கும் வாசி விழவிழ
அரவபய மிட்டு வீழ நடைபயி
லடிகொடுது கைக்கும் வீர ரணியும்.

[கரிகளை எடுத்து வானின் இடை இடை கரம் நுதி கொடு எற்றும்; நீடு பிறை நிகர் இரு பணை மருப்பினாலும் அவர் அவர் எதிர் எதிர் உடைக்கும் நேமி இரதமும்; உரன் உடை சித்ர வால்கொடு ஒரு படி ஒலியொடு புடைக்கும் வாசி விழ விழ; அரவு அபயம் இட்டு வீழ நடையில் அடிகொடு துகைக்கும் வீரர் அணியும்.]

**விளக்கம்** ...(பகதத்தன் யானை) துதிக்கையின் நுனியினால், யானைகளைத் தூக்கி வானிடம் எங்கும் வீசியெறியும்; பிறைச் சந்திரனை ஒத்த தந்தங்கள் இரண்டாலும் அந்த அந்த பகை வீரர்களின் எதிரிலே சக்கரங்களை உடைய தேர்களை உடைக்கும்; வலிய அழகிய வாலினால் குதிரைகள் மேலும் விழும்படி ஒலியோடு ஒரு விதமாய்த் தாக்கும்; பூமியைத் தாங்கும் ஆதிசேஷன் அபயம் இட்டு விழும்படி நடத்தலைச் செய்யவும் கால்களால் காலாள் அணியையும் மிதித்துத் துகைக்கும்...என்பது பொருள்.

பகதத்தனது சிறந்த யானை, தனது உறுப்புக்களால், சேனையை அழித்ததைக் கூறும் இச் செய்யுள். அபயமிடல்—ரட்சிக்க வேண்டுமென்று வேண்டல்.

தருமன் கண்ணனைப் பரவல்

**54.** **அமர்செய்பக தத்த னாலு மவன்விடும்**
**அருவிமத வெற்பி னாலு மணிகெழு**
**தமபடையி ளைத்த தாக விரகொடு**
**தருமனுணர் வுற்று வேறோர் திசையினில்**
**இமிழ்முரச ரற்று பூசல் புரிதரு**
**மிளையவன டத்து தேரின் வலவனை**
**நிமலனைய னைத்து மான வொருவனை**
**நினையினன் மனத்தி னோடு பரவியே.**

[அமர் செய் பகதத்தனாலும் அவன் விடும் அருவி மதம் வெற்பினாலும், அணிகெழு தம படை இளைத்தது ஆக, விரகொடு தருமன் உணர்வு உற்று, வேறு ஓர் திசையினில் இமிழ் முரசு அரற்று பூசல் புரிதரும் இளையவன் நடத்து தேரின் வலவனை, நிமலனை அனைத்துமான ஒருவனை நினையினன் மனத்தினோடு பரவியே.]

**விளக்கம்:-** போர் செய்த பகதத்தனாலும், அவன் ஏவிய அருவியிடும் மதநீரையுடைய மலை போன்ற யானையாலும் அணி தமது சேனை தளர்ச்சியுற, (அந்நிலையில்) தருமன் (கண்ணனே) உபாயமாக உணர்ந்து, வேறோர் திசையில் ஒலித்தலையுடைய முரசுகள் முழங்குகின்ற பெரிய போரை (சஞ்சத்தகரோடு) புரியும் இளையவனான விசயன் ஏறிச் செல்லும் தேரின் சாரதியும், குற்றமற்றவனும், சராசரப் பொருள்களின் வடிவினனுமான ஒப்பற்ற கண்ணனை மனத்தொடு பொருந்தத் துதித்து நினைத்தான்,—என்பது பொருள்.

விமலன் - கருமசம்பந்தம் இல்லாததோடு தனக்குச் சரீரமான சராசரப் பொருள்களின் வினைகளால் பாதிக்கப்படாதவன்.

விசயனுக்குக் கண்ணன் தருமன் நிலை கூறல்

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**55.** **நினைவுற்ற பொழுதெழுது முரசுற்ற கொடிநிருபன்**
**நியமித்த படித ரியலார்**
**முனைமட்க வமர்பொருது செயமுற்றி யுவகைபெறு**
**முகிலொத்த வடிவி னெடுமால்**
**புனைவிற்கை யடுபகழி திசைசுற்று மறையநனி**
**பொழிகொற்ற விசய னுடனே**
**வினைமுற்றி யுயர்தரும னுடனிற்றை யரியவமர்**
**விளைவுற்ற தெனவு ரைசெய்தான்.**

[நினைவு உற்ற பொழுது முரசு உற்ற கொடி நிருபன் நியமித்த படி தரியலார் முனை மட்க அமர் பொருது செயம் முற்றி உவகை பெறு முகில் ஒத்த வடிவின் நெடுமால், புனை விற்கை அடு பகழி திசை சுற்றும் மறைய நனி பொழி கொற்றம் விசயனுடனே, வினை முற்றி உயர் தருமனுடன் இற்றை அரிய அமர் விளைவு உற்றது, என உரை செய்தான்.]

**விளக்கம்:-** (தளர்ச்சியுற்ற தருமன்) நினைத்த அளவில், முரசக் கொடியனுன தருமன், ஆணையிட்டபடி பகைவர் அமரில் அழியும்படி போர்செய்து பரிபூர்ணமான வெற்றிபெற்று மகிழ்ச்சி கொண்ட கண்ணன், கையேற்ற வில்லினின்று அழிக்கும் அம்பு களைத் திசைகள் முழுதும் மறையும்படி மிகுதியாகப் பொழிந்த வெற்றி விசயனுடன், ''போர்த்தொழில் பயிற்சிமுற்றிய சிறந்த தருமனோடு இப்பொழுது செய்தற்கு அரிய போர் நேர்ந்துளது'', என்று கூறினன்,—என்பது பொருள்.

கண்ணன் அடியார்க்கு எளியன் என்பது தோன்ற, 'நிய மித்தபடி பொருது', என்ருர். விசயன், கண்ணனது கருவியே ஆதலால், 'அமர் பொருது செயம் முற்றி', எனப்பட்டது.

**56.** **ஒருபத்தொ டுறழொருப துறழ்பத் தொடுறழொருப**
**துடையெட் டுவிருத ருயிர்நீ**
**தெரிவித்த பகழிகொடு மடிவித்து வலிமையொடு**
**சிலைவெற்றி யுறவ மர்செய்தாய்**
**முரணற்ற திவணினியுன் னுயிரொத்த தமையனெடு**
**முனைபுக்கு விரைவி னணுகா**
**வரையொத்த களிறுடைய பகதத்த னுயிர்கவர**
**வருகிற்றி நொடியி லெனவே.**

[ஒருபத்தொடு உறழ் ஒருபது உறழ்பத்தொடு உறழ் ஒருபது உடை எட்டு விருதர், உயிர் நீ, தெரிவித்த பகழி கொடு மடிவித்து

வலிமையொடு சிலை வெற்றி உற அமர் செய்தாய்; முரண் அற்றது இவண்; இனி உன் உயிர் ஒத்த தமையனெடு முனைபுக்கு விரைவின் அணுகா, வரை ஒத்த களிறு உடைய பகதத்தன் உயிர் கவர வருகிற்றி நொடியில், எனவே,—அடுத்த கவியோடு தொடரும்].

**விளக்கம்:**—''எண்பதினுயிரம் வீரர்களின் உயிரை நீ,'' என்ற பொருளது முதலடி. உறழ்தல், என்ருல் பெருக்கல். எனவே, ''ஒருபத்தொடு உறழ்பத்து,''என்பது நூறு என்ற பொருளதாகின்றது. அதனெடு உறழ் பத்து (100×10) ஆயிரம் ஆகின்றது. அதனேடு உறழ் ஒருபது, (1000×10) பதினுயிரம் ஆகின்றது. அடுத்த பதினுயிரத்தை உடைய எட்டு (10000×8) எண்பதினுயிரம். எனவே, ''80000 வீரர்களின் உயிரை நீ'' என்பது பொருளாகின்றது. விசயன் கொன்ற சஞ்சத்தகர் எண்பதினுயிரவர். தெரிவித்த பகழி—பெரியோர்கள் உபதேசித்த அம்புகள். ''அத்தகைய கணைகளால் பகைவர்களை அழியச் செய்து, வலிமையோடு சிலைத்தொழிலில் வெற்றி உண்டாகும்படி போர் செய்தாய்; இவண் பகை ஒழிந்தது; இனி, விரைவின் (உன் தமையன் போர் செய்யும்) களம் புகுந்து, உனது உயிரை ஒத்த தமையனேடு சேர்ந்து, மலை போன்றயானையை உடைய பகதத்தனது உயிர் பறிக்க உடனே வருவாய்'', என்று கண்ணன் கூறி—(தொடரும்) என்பதாம்.

விசயன் பகதத்தனை அணுகல்

**57. அரியொத்த பரிகடவி மனமொத்த விரதமிசை**
**யமரர்க்கு முதல்வன் மகனேடு**
**எரிபற்றி வருமனில மெனவெற்றி வரிவளையும்**
**இதழ்வைத்தவ் வொருநொ டியிலே**
**கிரிமுற்று மரிவதொரு கிளர்வச்ர னெனவுதைய**
**கிரியுற்ற பரிதி யெனவே**
**கரிசுற்றும் வரவிகட கரடக்கைம் மலையில்வரு**
**கணைவிக்ர மனைய ணுகினுன்.**

[அரி ஒத்த பரி கடவி மனம் ஒத்த இரத மிசை அமரர்க்கு முதல்வன் மகனேடு, எரி பற்றி வரும் அனிலம் என, வெற்றி வரி வளையும் இதழ் வைத்து, அ ஒரு நொடியிலே கிரி முற்றும் அரிவது ஒரு கிளர்வச்ரன் என, உதய கிரி உற்ற பரிதி என (ஏ), கரி சுற்றும் வரவிகடம் கரடம் கை மலையில் வரு கணை விக்ரமனை அணுகினுன்.]

**விளக்கம்**—காற்றை ஒத்த விரைவினை உடைய குதிரைகளைச் செலுத்திக் கொண்டு மனம் ஒத்த தேரின்மீது, தேவர் தலை

வனுன இந்திரன் மகனோடு (விசயனோடு) தீயைத் தொடர்ந்து வரும் காற்றைப்போல், வெற்றிக்கு அடையாளமாக வரிசங்கை வாயில் வைத்து ஊதிக்கொண்டு, ஒரு நொடிப்பொழுதில் (கண்ணன்) மலைகள் எல்லாவற்றையும் சிறகு அறுப்பதான ஒரு விளக்கமுடைய வச்சிரப் படையை உடைய இந்திரன் போலவும், உதயகிரி அடைந்த சூரியன் போலவும், யானைகள் தன்னைச் சுற்றி வர, களி மயக்கத்தையும் மதத்தையும் துதிக்கையையும் உடைய மலைபோன்ற யானையின் மேல் வரும் சரத்தொழிலில் பேரா ஆற்றலுடைய பகதத்தனை நெருங்கினுன் – என்பது பொருள்

மனம் ஒத்த இரதம்—மனோவேகத்தில் செல்லும் தேர். வச்ரன்—வச்சிராயுதத்தை உடைய இந்திரன். விக்ரமம் - பேராற்றல். இந்திரன், செல்வ வாழ்க்கைக்கும், பரிதி பகையாகிய இருளை ஒழிக்கும் தன்மைக்கும் உவமை.

**58.** **அனிலத்தின் மதலையொடு வயிரித்து மலையுமுனை**
**யமர்விட்டு முகிழ்நகைசெயா**
**இனியிற்றை யமரிலரி தெளிதொட்டி யெதிர்பொருத**
**லெனமத்த கரியின் மிசையான்**
**மனமுற்று மழல்கதுவ மொழிமுற்று மிடிநிகர**
**வலிபட்ட சிலையை வளையா**
**மினலொத்த கணைபலவும் வசையற்ற புகழுடைய**
**விசையற்கு மிசையு தவினுன்.**

[அனிலத்தின் மதலையொடு வயிரித்து மலையும் முனை அமர் விட்டு முகிழ் நகை செயா, இனி இற்றை அமரில் அரிது எளிது ஒட்டி எதிர் பொருதல் என, மத்த கரியின் மிசையான், மனம் முற்றும் அனல் கதுவ மொழி முற்றும் இடி நிகர வலிபட்ட சிலையை வளையா, மினல் ஒத்த கணை பலவும் வசை அற்ற புகழ் உடைய விசயற்குமிசை உதவினுன்.]

**விளக்கம்:-** மத்த கரியின்மேல் உள்ளவனுன பகதத்தன்,- வாயு குமாரனுன வீமனோடு முற்றிய பகையோடு போர் செய்கின்ற சிறந்த போரை விட்டுவிட்டு, அரும்பும் இளநகை செய்து, இனி இன்றைய போரில் சுலபமாய் நெருங்கிப் போர் செய்தல் அரிது என்று எண்ணி, மனம் முழுதிலும் சினத்தீ பற்றி எரியவும், வீர வசனங்கள் எல்லாம் இடியை ஒத்திருக்கவும், வலிமை பொருந்திய வில்லை வளைத்து மின்னல் போன்ற கணைகள் பலவற்றை வசை இல்லாத புகழுடைய விசயன்மேல் செலுத்தினுன், என்பது பொருள். விசயற்குமிசை-விசயன்மேல் (உருபு மயக்கம். தேவர்கள் இரு திணையாலும் அழைக்கப்படல் பற்றி, அனிலம், என்ருர்.

**59. அவன்விட்ட சுடுகணைகள் கொடிமற்க டமுநடுவண்**
**அறவெட்டி யதித வளமா**
**கவனத்தின் முடுகியடு பரிகொத்தி யுடலிலிடு**
**கவசத்தை மறைய நுழையூச்**
**சிவனுக்கு மலரிலுறை பிரமற்கு முணர்வரிய**
**திகிரிக்கை வலவ ணையுமிச்**
**சவனத்தின் மிகுதுயர முறுவிக்க வவசமிகு**
**தளர்வுற்ற தனுவி சயனே.**

[அவன் விட்ட சுடு கணைகள் கொடி மற்கடமும் நடுவண் அற வெட்டி அதி தவளம் மா கவனத்தின் முடுகி அடு பரி கொத்தி, உடலில் இடு கவசத்தை மறைய நுழையூ, சிவனுக்கும் மலரில் உறை பிரமற்கும் உணர்வு அரிய திகிரி கை வலவணையும் இ சவனத்தில் மிகு துயரம் உறுவிக்க, அவசம் மிகு தளர்வு உற்ற தனு விசயன், ஏ,-அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம்**:- பகதத்தன் தொடுத்த சுடு கணைகள் விசயனது குரங்குக் கொடியையும் நடுவிலே அறும்படி வெட்டி, அதி வெண்மையான நடைவேகம் மிகப் பொருந்திய குதிரைகளைப் புண் படுத்தி, உடலில் இட்ட கவசத்தை, அது மறையும்படி கணைகளை நுழைத்து, சிவனுக்கும் பிரும்மனுக்கும் அறியமுடியாத சாரதியான கண்ணனையும் இந்தப் போரில் துன்பம் மிக அடையச் செய்ய, தன்வசம் இழத்தல் மிகும்படியான தளர்ச்சியை வில் விசயன்,—(தொடரும்) என்பதாம்.

சவனம்—(ஸவநம்) போர். ''பற்றுடை அடியவர்க்கு எளியன், மற்றவர்க்கு அரிய வித்தகன்'', என்ற தன்மையை இரண்டாவது கூறியபடி. மற்கடம்-குரங்கு.

**60. உரமிக்க தனதுசிலை குனிவித்து மதியின்வகி**
**ருவமிக்கு மடுப கழியால்**
**வரமிக்க தவளநிற மதவெற்பையெதிர் கடவி**
**வரு வெற்றி யவனி பதிதன்**
**கரமுற்ற சிலைகவச மறவெட்டி விடுகணைகள்**
**கணைவிட்டு விலக வவனும்**
**சரம்விட்டொ ரயில்விசய னிரதத்தின் வலவன்மிசை**
**தமரத்தி னுடனெ றியவே.**

[உரம்மிக்க தனது சிலை குனிவித்து மதியின் வகிர் உவமிக்கும் அடு பகழியால் வரம் மிக்க தவளம் நிறம் மதம் வெற்பை எதிர் கடவி வரு வெற்றி அவனிபதி தன் கரம் உற்ற சிலை, கவசம் அற வெட்டி, விடுகணைகள் (எதிரான) கணைவிட்டு விலக அவனும்,

சரம்விட்டு ஓர் அயில் விசயன் இரதத்தின் வலவன் மிசை தமரத்தினுடன் எறியவே, அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்**—(கண்ணனைத் துன்புறுத்தித் தன்னையும் தளரச் செய்த பகதத்தன் பால் சினங்கொண்டு விசயன்) வலிமிகுந்த தனது வில்லை வளைத்து சந்திரனின் பிளவோடு உவமிக்கக் கூடிய தான அழிக்க வல்ல கணைகளால், மேன்மையின் மிகுந்த, வெண்ணிறத்தை உடைய மதத்தையுடைய மலைபோன்ற யானையை எதிரில் செலுத்தி வரும் வெற்றியுடைய அரசனான பகதத்தனது கையில் பொருந்திய வில்லையும், கவசத்தையும் வெட்டி, அவன் தன் மேல் விடும் கணைகளை, அவற்றிற்கு எதிரான கணைகளால் விலக்க, (அப்பொழுது) அவனும் பாணம்தொடுப்பதை விட்டுவிட்டு ஒரு வேலைக் கண்ணன்மேல் வீரமுழக்கம் செய்துகொண்டு, எறியவும், (அடுத்த கவியோடு தொடரும்), என்பதாம்.

விலக, என்பது விலக்க, என்ற பிறவினைப் பொருளது. அவனிபதி—(அவநீபதி) அரசன்.

**60. எறிகுற்ற வயிலசுர ருயிர்செற்ற வயிலதனை**
**யெதிர்முட்ட விடுப கழியால்**
**தறிவித்து மகபதிதன் மகன்முக்க ணிறைவனொடு**
**சரியொத்து முறுவல் புரியா**
**வெறிமத்த கரடமுக படமொத்த புகர்கொண்முக**
**விகடக்கைம் மலையணி யெலாம்**
**முறியத்தன் வரிவிலுமிழ் முனைபட்ட பகழிமழை**
**முகில்வற்க மெனமு டுகினன்.**

எறிகுற்ற அயில் அசுரர் உயிர் செற்ற அயில் அதனை எதிர் முட்ட விடு பகழியால் தறிவித்து மகபதி தன் மகன் முக்கண் இறைவனொடு சரி ஒத்து முறுவல் புரியா, வெறி மத்த கரடம் முகபடம் ஒத்த புகர் கொள் முகம் விகடம் கைமலை அணி எலாம் முறிய தன் வரிவில் உமிழ் முனை பட்ட பகழி மழை முகில் வற்கம் என முடுகினன்.]

**விளக்கம்:-** (பகதத்தன் கண்ணன்மேல்) எறிந்த வேல், ஒருகாலத்தில் அசுரர்களின் உயிரை அழித்த வேல்; அதனை, இந்திர குமாரனான விசயன், எதிர்த்துத் தாக்கும்படி விட்ட பாணங்களால் அறுத்து, முக்கண்ணனான சிவபெருமானை நேர் ஒத்துச் சிரித்து, வெறியையும் மத நீர்ப் பெருக்கையும், முகபடாம் போன்ற புள்ளிகளை உடைய முகத்தையும், மதக் களிப்பையும், துதிக்கையையும் உடைய மலையை ஒத்த (பகதத்தனது) யானைகளின் வரிசை முழுதும் கெடும்படி தனது வரிவில் வெளிப்படுத்தி கூரிய அம்புகளின் மழையை வேகமாகச் செலுத்தினன், என்பதாம்.

சிரித்தே திரிபுரம் அழித்த சிவபிரான்போல், விசயன் சிரித்தான், என்றபடி. சரிஒத்த-நேர்ஒத்த, முழுவதும் ஒத்த. முகபடாம்-யானையின் முகத்தில் அலங்காரமாகப் போடப்படும் துணி. பகதத்தனின் யானையின் முகத்தில் இயற்கையாய் அமைந்த புள்ளிகள், முகபடாத்தை ஒத்திருந்தது, என்றது யானையின் உத்தம லக்ஷணத்தைக் குறிக்கும். வற்கம்-வர்க்கம்; இனம்; கூட்டம்.

**62.** **அணிகெட்டு மதகரிகள் கரமற்று விழமுதிய**
**சிரமற்று விழவ ருகுதாழ்**
**மணியற்று விழநெடிய குடரற்று விழமுறைகொள்**
**வயிறற்று விழவுட லெலாம்**
**துணிபட்டு விழவிசிறு செவியற்று விழவலிய**
**தொடையற்று விழம கரிகைப்**
**பணிபெற்ற பணைகளொடு மதமற்று விழவுழுது**
**படுவித்த பலப கழியே.**

[அணிகெட்டு மத கரிகள் கரம் அற்று விழ, முதிய சிரம் அற்று விழ, அருகுதாழ் மணி அற்று விழ, நெடியகுடர் அற்று விழ, முறைகொள் வயிறு அற்றுவிழ, உடல் எலாம் துணிபட்டு விழ, விசிறு செவி அற்று விழ, வலிய தொடை அற்று விழ, மகரிகை பணி பெற்ற பணைகளொடு பதம் அற்றுவிழ, உழுது படுவித்த பல பகழி, ஏ.[

**விளக்கம்.:.** செய்யுள் சுலபமானதே. பகதத்தனது யானைப் படையின் அணி குலையவும், யானைகள் அவயவங்களை இழந்து மடியவும் பல கணைகளை விசயன், ஏவினான், என்பதாம்.

**63.** **பெயர்பெற்ற கரிவயவர் பிணமிக்க வமரினிடை**
**பிறகிட்டு முறியு மளவே**
**சயசக்ர தரனையிவன் வழிபட்ட பொழுதுதரு**
**தழலுக்ர முடைய தொருவேல்**
**வயமுற்ற சிலைவிசய னுடலத்தி னெறிவதுதன்**
**வடிவத்தி லுறவு தவினான்**
**அயர்வுற்ற வுணர்வினல மெனமுத்தி முதல்வனென**
**வருகுற்ற ரதவ லவனே.**

[பெயர் பெற்ற கரி வயவர் பிணம் மிக்க அமரினிடை பிறகு இட்டு முறியும் அளவே, சயசக்ரதரனை இவன் வழிபட்ட பொழுது தரு தழல் உக்ரம் உடையது ஒரு வேல் வயம் உற்ற சிலை விசயன் உடலத்தின் எறிவது, தன் வடிவத்தில் உற, உதவினான், அயர்வு உற்ற உணர்வின் நலம் என, முத்தி முதல்வன் என அருகு உற்ற ரத வலவனே.]

**விளக்கம்**—பிறகு இடல் - புறங்கொடுத்தல், சயசக்ரன் - திருமால். எறிவது - எறியப்பட்டதான அந்த வேல். நல்லறிவின் பயன்.

அயர்வு உற்ற உணர்வின் நலம்-தளர்ச்சியுற்றபொழுது உதவும் அறிவின் நற்பயன். பகதத்தன் திருமால் தனக்கு அளித்த வேலை விசயன்மேல் எறிந்தபொழுது, (விசயனருகே இருந்த) சாரதியான கண்ணன், முத்திமுதல்வன் என்றும், தளர்ச்சியுற்ற பொழுது உதவும் அறிவின் நற்பயன் என்றும் சொல்லும்படி, அவ்வேலைத் தன் மார்பில் ஏற்ருன், என்பதாம்.

**64. பருமித்த களிறுவிடு பகதத்த னெறியுமுது**
**பகைசெற்று வருகொ டியவேல்**
**மருமத்தி னிடைமுழுகு பொழுதத்தி லதுபுதிய**
**மணிவற்க மிகுதொ டையலாய்**
**நிருமித்த படிதனது புயவெற்பின் மிசையொளிர**
**நிகரற்ற கருணை வடிவைக்**
**கருமத்தின் முதலையிமை யவர்சித்த மொடுதொழுது**
**கரையற்ற புகழு ரைசெய்தார்.**

[பருமித்த களிறு விடு பகதத்தன் எறியும் முதுபகை செற்று வரு கொடிய வேல் மருமத்தின் இடை முழுகு பொழுதில், அது,—புதிய மணிவற்கம் மிகு தொடையல் ஆய் நிருமித்தபடி தனது புயம் வெற்பின்மிசை ஒளிர, நிகர் அற்ற கருணை வடிவை கருமத்தின் முதலை இமையவர் சித்தமொடு தொழுது கரை அற்ற புகழ் உரை செய்தார்.]

**விளக்கம்:-** பருமித்த-பருத்த. முதுபகை செற்றுவரு கொடிய வேல்-பழமையான பகை எல்லாவற்றையும் அழித்து வரும் கொடிய வேல். நிருமித்தபடி-நியமித்தபடி. மணிவற்கம் மிகு தொடையல்-புதிய சிறந்த ரத்தினங்களாலான ஒரு மாலை. கருமத்தின் முதலை - வினைகளுக்கு எல்லாம் காரணனுன கண்ணனை. பகதத்தன் விசயன் மேல் எறிந்த வேல் திருமாலினது வேல் ஆதலால், அது அப்பெருமானின் விருப்பப்படி, அவனது தோள்களில் இரத்தின மயமான மாலையாய் விழுந்து விளங்க, கருணை வடிவினனும், வினைமுதல்வனுமான கண்ணனை வணங்கி, அவனது புகழ் பாடினுர்கள், என்பதாம்.

விசயன் மேல் எறிந்த வேலைத் தான் ஏற்றதனுல், கண்ணன், கருணை மூர்த்தி ஆகின்ருன். இது வரையில், அந்த வேல் இலக்கினை அழிக்கும் தொழிலில் தவறியதில்லை, என்பது தோன்ற "முதுபகை செற்று வரு கொடிய வேல்" என்ருர். திருமால்,

சராசரப் பொருள்களின் உள்ளும் புறமும் இருந்து அவற்றை இயக்குவதால், கருமத்தின் முதல்வன் ஆகின்றான். ஊழின் முதற்காரணன் என்றும், கருமத்திற்கு ஏற்ற பயன் அணிப்பவன் என்றும், கூறலாம்.

**65.** இதுநிற்க யமனைநிகர் பகதத்த னுயிர்கவர
இதுபக்வ மெனவி சயனோ(டு)
உதரத்தின் முழுதுலகு குடிவைத்த புயலுரைசெய்
துறுதிக்கண் விடுப கழிதான்
இதயத்தி னுடனருள வுயர்வச்ரன் மதலைதொழு
திருபொற்கைம் மலர்கொ டுகொளா
அதிரத்த னெதிர்களிறு பொரவிட்ட நொடியிலவ
னகலத்தி னுருவ விடவே.

[இது நிற்க யமனை நிகர் பகதத்தன் உயிர் கவர இது பக்வம் என விசயனொடு, உதரத்தின் முழுது உலகு குடிவைத்த புயல் உரை செய்து, உறுதிக்கண் விடு பகழிதான் இதயத்தினுடன் அருள உயர் வச்ரன் மதலை தொழுது இரு பொன் கை மலர்கொடு கொளா, அதிரதன் எதிர் களிறு பொரவிட்ட நொடியில் அவன் அகலத்தின் உருவ விட, ஏ,...அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்** —தனது திரு வயிற்றிலே உலகம் முழுதையும் இருக்க வைத்த மேகம் போன்ற கண்ணபிரான், பகதத்தனது உயிர் கவர இது தக்க சமயம் என்று விசயனுக்கு உரைத்து, தவறாது அழித்தலைச் செய்யும் தன்மையதாய தொடுத்தற்குரிய அஸ்திரத்தை உள்ளன்போடு கொடுத்தருள, உயர்ந்த இந்திரன் மகனான விசயன், (கண்ணனை) வணங்கி இருகைகளாலும் வாங்கிக் கொண்டு, அதிர்ச்சி யுண்டாகும்படி தன் எதிர் யானையைப் போர் செய்யவிட்ட அளவில், அவன் மார்பில் ஊடுருவிச் செல்லும் படி, அவ் வத்திரத்தை விடலும் . (தொடரும்) என்பது பொருள்.

**66.** பரிதத்த வருமிரத மிசைதத்த வெதிர்முடுகு
பகதத்த னுடன் முழுதுநீ(டு)
எரிதத்தி யுகுவதென வுகுவித்த குருதிநதி
யிடைதத்த வலிகெ ழுவுதோள்
கிரிதத்த மகுடமொடு தலைதத்த வொருரசத
கிரிதத்தி விழுவ தெனவே
கரிதத்த மறியலகை கடைதத்தி யுவகையொடு
களமுற்று நடந விலவே.

[பரிதத்தவரும் இரதம் மிசை தத்த எதிர் முடுகு பகதத்தன் உடல் முழுவதும் நீடு எரி தத்தி உகுவது என உகுவித்த குருதி நதி இடை தத்த, வலிகெழுவு தோள் கிரி தத்த, மகுடமொடு

தலை தத்த ஒரு ரசத கிரி தத்தி விழுவது எனவே, கரிதத்த, மறி அலகை கடைதத்தி உவகையொடு களம் உற்று நடம் நவிலவே]

**விளக்கம்:-** குதிரைகள் பாய்ந்து வரும் (விசயனது) தேரின் மேல் பாயும்படி(யானையின்மேல்) எதிரில் விரைந்துவரும் பகதத்தனது உடல் முழுவதும் பெரிய நெருப்புப் பற்றி நீராய் வழிவது போல் சொரியச் செய்த குருதி நதி அந்த இடத்திலே பெருகவும், வலி மிகுந்த தோள்களாகிய மலைகள் ஒடியவும், கிரீடத்தோடு தலை சிதையவும், ஒரு வெள்ளிமலை ஒடிந்து விழுவது போல (அவனது) யானை மடிந்து விழவும், எதிர்ப்பட்டாரை மறித்துத் துன்புறுத்தும் பேய்கள், அங்கே நெருங்கி வந்து மகிழ்ச்சியோடு களம் எங்கும் கூத்தாடவும், (அடுத்த செய்யுளோடு தொடரும்), என்பது பொருள்.

தத்த, என்ற வினைப்பகுதிக்குச் சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, பாய, விழ, முறிய, சிதைய, நெருங்க, என்று பொருள் செய்யப்பட்டது. தத்த, என்ற ஒரு சொல் பலவிடம் வந்திருப்பது, **சொல் பின் வரு நிலை அணி** ஆகும். ரசதகிரி - வெள்ளிமலை. நடம் நவில - கூத்தாட.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**67. பகதத் தனும்பட் டவனூர்ந்த பகடும் பட்டுப் புடைசூழச்**
**சிகரக் கிரிபோ லணிநின்ற சேனைக் களிறும் புட்டமைகண்(டு)**
**இகலிற் பொழிகார் வெஞ்சிலைக்கை இமையோர் தலைவன் குமரனையும்**
**புகழ்தற் கரிய பாகனையும் புகழா ரில்லை பூபாலர்.**

[பகதத்தனும் பட்டு, அவன் ஊர்ந்த பகடும் பட்டு, புடை சூழ சிகரம் கிரிபோல் அணி நின்ற சேனை களிறும் பட்டமை கண்டு, இகலில் பொழிகார் வெம் சிலை கை இமையோர் தலைவன் குமரனையும் புகழ்தற்கு அரிய பாகனையும் புகழார் இல்லை பூ பாலர்.]

**விளக்கம்:-** மிகுதி கொண்டு பொழியும் கார்மேகம் போன்ற, கையில் கொடிய வில்லை ஏந்திய தேவர் தலைவனான இந்திரனின் மகன் (விசயன்) என்பது மூன்றுவது அடியின் பொருள். பகதத்தனும், அவனது வெள்ளை யானையும், அணி வகுத்து நின்ற யானைப் படையும் (விசயனால்) அழிந்தமை கண்டு விசயனையும், அவனது சாரதியான கண்ணனையும் எல்லோரும் புகழ்ந்தார்கள், என்பதாம். அதாவது, இருதிறத்து வீரர்களும் புகழ்ந்தார்கள், என்றபடி. மனத்திற்கு எட்டாதவனுதலால், கண்ணனைப் '**புகழ்தற்கு அரிய பாகன்**', என்றார்.

காந்தாரநாட்டார் விசயனை வளைத்தல்

**68. விருதுஞ் சங்கும் பல்லியமு மேன்மே லதிர விற்போரில்**
**பொருதின் றிவனைக் கொன் றன்றிப் போகோ மென்னப்**
**புடைசூழ்ந்தார்**
**மருதுஞ் சகடும் விழவுதைத்த வலவன் கடவ வாயுவெனக்**
**கருதும் புரவித் தேரூருங் கழற்கா வலன்மேற் காந்தாரர்.**

[விருதும் சங்கும் பல் இயமும் மேல் மேல் அதிர வில் போரில் பொருமி இன்று இவனைக் கொன்று அன்றி போகோம் என்ன புடை சூழ்ந்தார், மருதும் சகடும் விழ உதைத்த வயவன் கடவ வாயு என கருதும் புரவி தேர் ஊரும் கழல் காவலன் மேல் காந்தாரர்.]

**விளக்கம்**—காந்தார நாட்டார், பிருதாவளிகளும் சங்கும் பல வாத்தியங்களும் முழங்க, வில்போரில் இவனை (விசயனைக் கொல்லாமல் திரும்புவதில்லை, என்று சொல்லிக்கொண்டு, கண்ணன் நடத்தும் தேரில் வருகின்ற விசயனைச் சூழ்ந்து கொண்டார்கள், என்பதாம். பிருதாவளி-புகழுரை.

**69. காந்துந் தறுகட் காந்தாரர் கடுவெங் கனல்போற்**
**கண்சிவந்தங்கு**
**ஏந்துஞ் சிலையாற் கணைமழைபெய் தெழிலிக் கணம்போ**
**லெதிரூன்றிச்**
**சாந்தும் புழுகுங் கமழ்வாகுச் சகுனி தனயர் தலைப்போரில்**
**சேர்ந்தன் றிறந்தார் விடசெயனுஞ் செயனு மெனும்போர்ச்**
**செயவீரர்.**

[காந்தும் தறுகண் காந்தாரர் கடுவெம் கனல்போல் கண் சிவந்து, அங்கு ஏந்தும் சிலையால் கணை மழை பெய்து எழிலி கணம் போல் எதிர் ஊன்றி, சாந்தும் புழுகும் கமழ் வாகு சகுனி தனயர் தலை போரில் சேர்ந்து அன்று இறந்தார் விடசெயனும், செயனும் எனும் போர் செயவீரர்.

**விளக்கம்:-** மனம் கொதித்து வந்த அஞ்சாமையுடைய காந்தார நாட்டு அரசருள், சந்தனமும், கஸ்தூரிச் சாந்தும் மணக்கும் தோள்களை உடைய சகுனியின் குமாரர்களான விடசெயன் செயன், என்னும் பேருடைய போரில் வெற்றியுடைய வீரர், அன்று கனல்போல் கண்கள் சிவக்கப் பெற்று, போர்த் தலையில் (போர்க் களத்தின் முன்னிடத்தில்) போய்ச் சேர்ந்து, அங்கு ஏந்திய வில்லினுல் மேகக் கூட்டம்போல் கணை மழை சொரிந்து, விசயன் எதிரில் நின்று, (அவனது பாணங்களால்) இறந்தார்கள், என்பதாம்.

**70. சஞ்சத் தகர்விண் குடியேறத் தானே யடர்த்தான் பகதத்தன்**
**விஞ்சைக் கடவுள் சிகரநிகர் வேழத் துடனே விழப்பொருதான்**
**வஞ்சச் சகுனி மைந்தரையு மலைந்தான் விசயன் வடிக்கணையால்**
**எஞ்சப் பொருத நரபாலர்க் கிலக்கே தென்றங் கெண்ணுதற்கே.**

[சஞ்சத்தர் விண் குடி ஏற தானே அடர்த்தான், பகதத்தன் விஞ்சை கடவுள் சிகரம் நிகர் வேழத்துடனே விழ பொருதான், வஞ்சம் சகுனி மைந்தரையும் மலைந்தான் விசயன் வடி கணையால், எஞ்ச பொருத நரபாலர்க்கு இலக்கு ஏது என்று அங்கு எண்ணுதற்கு, ஏ.]

**விளக்கம்:**- அன்று விசயன் தான் ஒருவனாகவே, சஞ்சத்தகன் அனைவரும் வானுலகம் சென்று வாழும்படி கூரிய சரங்களால் அழித்தான்; விஞ்சையரின் கடவுளான (தலைவனான) குபேரனது மலையாகிய கயிலை மலையை நிகர்த்த யானையுடன், அது இறந்துபடும்படி போர் செய்தான்; (மேலும்) வஞ்சச் சகுனியின் புதல்வர்களையும் அழித்தான்; ஆகவே, பகை அழியும்படி போர் செய்த தருமன் முதலிய அரசர்களுக்கு அங்கே ஒரு பொருளா எண்ணுதற்கும் எதிரிகளாகிய இலக்கு ஏது?—என்பது பொருள்.

சகுனி தருமனுக்கு முன் பின்னிடுதல்

**71. இங்கிப் படிபோ ருடன்றெழுந்த சகுனி யிவன்கை யெரிகணையால்**
**பங்கப் பட்ட வரசொழியப் படாத வரசர் பலரோடும்**
**சிங்கத் தனியே றெனச்செம்பொற் றேர்மே னின்ற தருமனுடன்**
**புங்கப் படையா லமர்புரியப் புகுந்தான் மதுகைப் புலிபோல்வான்.**

[இங்கு இப்படி; போர் உடன்று எழுந்த சகுனி, இவன் கை எரிகணையால் பங்கப் பட்ட அரசு ஒழிய, படாத அரசர் பலரோடும், சிங்கம் தனி ஏறு என செம்பொன் தேர்மேல் நின்ற தருமனுடன், புங்கம் படையால் அமர்புரிய புகுந்தான் மதுகை புலி போல்வான்.]

**விளக்கம்**—இங்கு அதாவது விசயன் போர் செய்த இடத்தில் நடந்தது இது வாக, (மற்றோரிடத்தில்) போர் செய்தற்கு உடன்று எழுந்த வலிய புலியைப் போன்றவனான சகுனி, இவன் (விசயன்) கை எரிகணையால் அழிந்த அவர் போக, அழியாது எஞ்சியிருந்த அரசர்களோடு சேர்ந்து, ஒப்பற்ற ஆண் சிங்கம் போல் செம்பொன் தேர் மேல் நின்ற தருமனுடன் போர் செய்யச் சென்றான், என்பது பொருள்.

எரிகணை—அழிக்கும் அம்பு. பங்கப்பட்டவர் - அழிவடைந்தவர். புங்கம் படை - அம்புகளாகிய ஆயுதம். மதுகை - வலிமை.

**72. சோரத் துடனீ பொருதடர்த்த சூதன் றிவைமெய்**
**துளைத்துருவும்**
**வீரப் பகழி யுனையிவற்றுல் வெல்வே னெனப்போர் வில்வாங்கி**
**ஈரக் கருணை முகத்தண்ண லெய்தா னவற்றுக் கெட்டாமல்**
**பேரப்பேரத் தேர்கடவி பின்னிட் டவர்க்கு முன்னிட்டான்.**

[சோரத்துடன் நீ பொருது அடர்த்த சூது அன்று இவை மெய் துளைத்து உருவும் வீரம் பகழி; உனை இவற்றுல் வெல்வேன் என, போர் வில் வாங்கி ஈரம் கருணை முகத்து அண்ணல் எய்தான், அவற்றுக்கு எட்டாமல் பேர பேர தேர்கடவி பின் இட்டவர்க்கு முன் இட்டான்.]

**விளக்கம்:-** குளிர்ந்த அருள் வெளித் தோன்றும் முகத்தை உடைய தருமன், (சகுனியை நோக்கி) ''வஞ்சனையுடன் நீ சூதாடி வென்ற சூதாட்டம் அன்று இது, இவை உடலைத் துளைத்துச் செல்லும் வலிய அம்புகள்; (சூதால் என்னை வென்ற) உன்னை இவ்வம்புகளால் வெல்வேன்,'' என்று சொல்லிப் பாணங்களைப் பிரயோகித்தான்; சகுனியும், அவற்றிற்கு இலக்கு ஆகாதபடி பின்னே பெயர்ந்து தேரை வேகமாகச் செலுத்திக் கொண்டு, பின்னிட்டவர்களுக்கு முன்னே சென்றுன்.—என்பதாம். சோரம் - மோசம், வஞ்சனை.

''இது சூதுப் போர் அன்று, நேர் நின்று மோதும் போர்; என்னிடம் இருப்பவை பாசிகைகள் அல்ல, அழிக்கும் கணைகள்,'' என்றது விலக்கணியின் பாற்படும்.

**73. உடனே வந்து பொருநிருப ரொருவர்க் கொருவ ருதிட்டிரன்கை**
**விடநேர் கணையா லேவுண்டு விளிந்தா ரொழிந்தார்**
**வெஞ்சமத்தில்**
**கடனே தமக்கென் றூர்புகுந்தார் காலைச் செந்தா மரைமலர்ந்த**
**தடநே ரென்ன நிறம்பெற்ற தப்போ தந்தச் சமபூமி.**

[உடனே வந்து பொரு நிருபர் ஒருவர்க்கு ஒருவர் உதிட்டிரன் கை விடநேர் கணையால் ஏவுண்டு விளிந்தார் ஒழிந்தார் வெம் சமத்தில், கடனே தமக்கு என்று ஊர் புகுந்தார்; காலை செம் தாமரை மலர்ந்த தடம்நேர் என்ன நிறம் பெற்றது அப்போது அந்த சமபூமி.]

**விளக்கம்:-** சகுனியுடன் வந்து போர் புரிந்த அரசர்களுள், ஒருவரினும் ஒருவர் தருமன் கை விஷத்தை ஒத்த அம்புகளால் எய்யப்பெற்று இறந்தவர்கள் போக எஞ்சியவர்கள் போரில் பின்னிட்டுச் செல்லலே தமக்குச் செய்யக்கூடியதாகும் என்று எண்ணி ஊர் புகுந்தார்கள்; அப்பொழுது, அந்தப் போர்க்களம் காலையில் செந்தாமரை மலரப் பெற்ற நீர் நிலை ஒப்பாகும் என்னும்படி செந்நிறம் பெற்று விளங்கியது, என்பதாம். இறந்துபட்ட வீரர்களின் இரத்தந் தோய்ந்த தலைகளும் செந்தாமரை ஆகலாம்,

### வீமன் காட்டிய வீரம்

**74. ஆசா ரியனுந் திருமகனு மடல்வே லங்கர் பெருமானும்**
**தூசா ருரகக் கொடிநெடுந்தேர்த் துரியோ தனனுந் தம்பியரும்**
**வீசா நின்ற மாருதம்போல் மேல்வந் தடுத்த வீமனுடன்**
**கூசா தெதிர்த்து வெம்பகழி கோத்தார் விசும்பைத்**
**தூர்த்தாரே**

[ஆசாரியனும் திருமகனும், அடல் வெல் அங்கர்பெருமானும், தூசு ஆர் உரகம் கொடி நெடுந்தேர் துரியோதனனும் தம்பியரும், வீசா நின்ற மாருதம் போல் மேல் வந்து அடுத்த வீமனுடன் கூசாது எதிர்த்து வெம் பகழி கோத்தார் விசும்பை தூர்த்தாரே.]

**விளக்கம்**—தூசு-துணி. தூசு ஆர் உரகம் கொடி—துணியில் பொருந்திய பாம்பின் வடிவங் கொண்ட கொடி. வீசா நின்ற மாருதம் - வீசுகின்ற பெருங்காற்று. துரோணனும், அசுவத்தாமனும் கர்ணனும் துரியோதனனும், அவன் தம்பியரும், பெருங் காற்றைப்போல் தம்மை நெருங்கிய வீமன் மீது கொடிய பாணங்களைப் பிரயோகம் செய்து வானிடத்தை நிறைத்தார்கள்... என்பதாம்.

வீமனை எதிர்க்கும் ஆற்றல் இவர்களுக்கு இலது என்று கூறும் கருத்தில், கூசாது என்றார். பகை அழிக்கவல்ல வேல் ஒன்றை இந்திரனிடமிருந்து பெற்றுளான் ஆதலால், அடல்வேல் அங்கர் பெருமான் எனப்பட்டான்.

**75. கெடுமோ கெருட னுரகர்க்குக் கிரிவெஞ் சரபம் தனைக்கரிகள்**
**அடுமோ சக்ர பாணியுட னமருந் துவரோ வசுரேசர்**
**நெடுமே ருவின்முக் குவடொடித்தா னேயப் புதல்வன்**
**பேருடலில்**
**படுமோ தொடுத்த பகழிபருப் பதஞ்சேர் மழைபோற் பாரினவே.**

[கெடுமோ கெருடன் உரகர்க்கு, கிரிவெம் சரபம்தனை கரிகள் அடுமோ, சக்ரபாணியுடன் அமர் உந்துவரோ அசுர ஈசர், நெடு

மேருவின் முக்குவடு ஒடித்தான் நேயம் புதல்வன் பேர் உடலில், படுமோ தொடுத்த பகழி, பருப்பதம் சேர் மழைபோல் பாறின, ஏ.]

**விளக்கம்:-** பாம்புக்குக் கெருடன் அழியுமோ! சரபத்தை யானைகள் அழிக்குமோ! சக்ரபாணியான திருமாலோடு அசுரத் தலைவர்கள் போர் செய்ய முடியுமோ! பெரிய மேருவின் மூன்று சிகரங்களை ஒடித்த வாயுவின் நேயப் புதல்வனான வீமன் உடலில் (பகைவர் ஏவிய) அம்புகள் தைக்குமோ! (ஆகவே, அவன்மேல் ஏவப்பெற்ற அம்புகள்) மலையின்மேல் விழுந்த மழைபோல் வெளியே சிதறின, என்பது பொருள்.

சரபந்தனை அரிகள், என்றோர் பாடமும் உளது. அதுவும் பொருத்தமுடைய பாடமே. வீமனைப் பகைவர் வெல்ல வல்லர் அல்லர், என்பதற்கு உதாரணங்கள் காட்டினமையின், இது **எடுத்துக் காட்டுவமை அணி.** சரபம் சிங்கத்தையும் வெல்லவல்ல ஒரு மிருக விசேஷம்; பறவை என்றும் கூறுவர்.

**76. பொல்லா வவுணர் வைகியமுப் புரநீ றெழவன் றரண்வளைத்த**
**வில்லா மென்ன வலியவிறல் வில்லொன் றெடுத்து விறல்வீமன்**
**எல்லா மன்ன வருமூர்ந்த வெல்லா விரதங் களுமிமைப்பின்**
**வல்லா னெறிந்த பம்பரம்போற் சுழலும் படிகால் வளைத்தானே.**

[பொல்லா அவுணர் வைகிய முப்புரம் நீறு எழ அன்று அரண் வளைத்த வில் ஆம் என்ன வலிய விறல் வில் ஒன்று எடுத்து விறல் வீமன் எல்லா மன்னவரும் ஊர்ந்த எல்லா இரதங் களும் இமைப்பின், வல்லான் எறிந்த பம்பரம் போல் சுழலும்படி கால் வளைத்தான், ஏ.]

**விளக்கம்:-** பொல்லாத அசுரர்கள் தங்கி வாழ்ந்த முப்புரம் நீறாகும்படி அன்று சிவபெருமான் வளைத்த வில் என்று சொல்லும் படியான வலிய வெற்றிதரவல்ல வில் ஒன்றை எடுத்து, விறல் வீமன், அரசர்கள் எல்லோரும் ஏறி வந்த எல்லாத் தேர்களும் இமைப்பொழுதில், வல்லவன் சுழற்றிய பம்பரம்போல் சுழலும்படி, வில்லின் இரு கோடியையும் வளைத்தான்; (அதாவது சரங்கள் தொடுத்தான்), என்பது பொருள்.

**77. ஒன்று முதலாப் பலபகழி யோரோர் தொடையிற் றெடுத்தேவி**
**அன்று முதன்மை யுறமலைந்த வரச ருடலந் தொறுமூட்டி**
**இன்று முதலா யோதனத்தி லேறே மென்னும் படியாகக்**
**கொன்று முதற்பின் வருமுரகக் கொடியோன் மனமுங்**
**கொதிப்பித்தான்.**

[ஒன்று முதல் ஆ பல பகழி ஓர் ஓர் தொடையில் தொடுத்து ஏவி, அன்று முதன்மை உற மலைந்த அரசர் உடலம் தோறும் ஊட்டி இன்று முதல் ஆயோதனத்தில் ஏரேும் என்னும்படி ஆக, தொன்று முதல், பின்வரும் உரகம் கொடியோன் மனமும் கொதிப்பித்தான்.]

**விளக்கம்:-** முதலில் (வீமன்) ஒன்று முதல் ஆகப் பல பாணங்களைத் தொடுக்கும் ஒவ்வோர் தடவையிலும் தொடுத்து ''இன்றைய தினம் முதல் இனி ஆயோதனத்தில் (போரில்) எதிர்த்து வாரோம்'', என்று எண்ணும்படி, அன்று போரில் முதன்மை தோன்ற மலைந்த அரசர் உடலம் எலாம் செலுத்தி அவர்களைக் கொன்று, பின்னர், உரகக் கொடியனான துரியோதனனது மனத்தையும் கொதிக்கச் செய்தான்,—என்பது பொருள் ஆயோதனம்-போர், படை.

**78. கொதித்தா னரச னெனவரிவிற் குனித்தா ரிளைஞர் குனித்ததுகண்(டு)**
**அதிர்த்தான் வீமன் றன்கணையா லறுத்தான் வில்லு மணிநாணும்**
**விதித்தான் வரினும் வீமனுடன் விற்போர் புரித லரிதென்று**
**மதித்தார் தம்மு னினைத்தவெலா முடிக்குஞ் சமர வரிவில்லார்.**

[கொதித்தான் அரசன் என வரி வில் குனித்தார் இளைஞர், குனித்தது கண்டு அதிர்ந்தான் வீமன் தன் கணையால் அறுத்தான் வில்லும் அணிநாணும்; விதித்தான் (விதி தான்) வரினும் வீமனுடன் வில் போர் புரிதல் அரிது என்று மதித்தார், தம் முன் நினைத்த எலாம் முடிக்கும் சமரம் வரி வில்லார்.

**விளக்கம்:-** (உற்ற தோல்வியால்) மனக் கொதிப்புக் கொண்டான் என்று கண்டு தம்பியர் வரிவில் வளைத்தார்; அவர் வளைத்தது கண்டு வீமன் வீரமுழக்கம் செய்து, தன் கணைகளால் வில்லையும், வில்லில் பொருந்திய நாணியையும் அறுத்தான்; தம் முன்னவன் நினைத்தவைகளைச் செய்து முடிக்கும் சமரவரிவில்லாரான துரியோதனன் தம்பிமார், விதி (பிரமன்) தானேவரினும் வீமனுடன் விற்போர் செய்தல் முடியாத காரியமாகும், என்று எண்ணினர், என்பதாம். **விதிதான்,** என்பது எதுகை நோக்கி **விதித்தான்,** என நின்றது.

**79. நின்றார் நின்ற படிகொடித்தேர் நிருபன் றனையு மிளைஞரையும்**
**வன்றாள் வரிவிற் குருவினையு மைந்தன் றனையுங் கன்னனையும்**

**பொன்றாழ் மார்பிற் பலப்படைக்கை பூபா லரையுங் கொல்லாமற்**
**கொன்றான் வாயு குமரன் றன் கோலா கலவெங்**
**கொடுங்கணையால்.**

[நின்றார் நின்றபடி, கொடி தேர் நிருபன் தனையும் இளைஞரையும், வல் தாள் வரிவில் குருவினையும் மைந்தன் தனையும், கன்னனையும், பொன் தாழ் மார்பின் பல படை கை பூபாலரையும் கொல்லாமல் கொன்றான் வாயுகுமரன் கோலாகலம் வெம் கொடுங் கணையால்.]

**விளக்கம்:-** (விதியே வரினும் விற்போரில்வீமனை வெல்லல் அரிது என்று மதித்த தம்பியர்) நின்றபடியே திகைத்து நிற்க, வாயுகுமரன் கோலாகல வெங்கொடுங் கணையால், துரியோதனனையும் இளைஞரையும், துரோணனையும், அவன் மைந்தனையும், கர்ணனையும், பொன்மாலை தொங்குகின்ற மார்பையும், பல ஆயுதங்களையும் ஏந்திய மற்றை அரசர்களையும் கொல்லாமல் கொன்றான். மரணவேதனை அடையுமாறு செய்தான், என்பதாம்.

சொடித்தேர் நிருபன்-துரியோதனன். கோலாகலம்-பேரொலி. வெங் கொடுங்கணை-மிகக் கொடிய கணை. தாள், என்பது முயற்சி என்ற பொருளது.

**80. இளைத்த தடையப் பெருஞ்சேனை யினிநா மொன்றுக் கீடாகோம்**
**வளைத்த சிலையோ டிவனிற்க மாயன் றன்னோ டவனிற்கத்**
**துளைத்த கணையாற் துரோணன்வலி தொலைத்தோ னிற்க**
**மலைத்திவரைத்**
**திளைத்த லரிதென் றக்களத்திற் பொன்று வரசர் சென்றாரே.**

[இளைத்தது அடைய பெருஞ்சேனை, இனி நாம் ஒன்றுக்கு ஈடு ஆகோம்; வளைத்த சிலையோடு இவன் நிற்க, மாயன் தன்னோடு அவன் நிற்க, துளைத்த கணையால் துரோணன் வலி தொலைத்தோன் நிற்க, மலைத்து இவரை திளைத்தல் அரிதென்று அ களத்தில் பொன்று அரசர் சென்றார், ஏ.]

**விளக்கம்:-** பெருஞ்சேனை அடைய (முழுவதும்) இளைத்தது. இனி, எதைச் செய்வதற்கும் வலிமை உடையோம் அல்லம்; வளைத்த சிலையோடு இவன் (வீமன்) நிற்க, மாயன் தன்னோடு அவன் (விசயன்) நிற்க, தைத்துத் துளைத்த கணைகளால் துரோணனது வலி அழித்தோனாகிய தருமன் நிற்க, இவர்களை எதிர்த்து நெருங்குதல் முடியாத காரியம் ஆகும், என்று களத்தில் அழியாது நின்ற அரசர் புறப்பட்டுச் சென்றார்,—என்பதாம்.

ஒன்றுக்கு ஈடாகோம் — எய்யும் ஒரு கணைக்கும் நாம் எதிராக நிற்க மாட்டோம். மாயன் தன்னோடு என்றது, ஆயுதம் போல் கண்ணன் விசயனுக்கு உதவுதலை குறிக்கும்.

அத்தமனம்

81. பெரும்பே ரறத்தின் திருமகவைப் பிடிப்பா னெண்ணி
முடிப்பான்போல்
பொரும்போ ரரச ருடன்வந்த பொற்றேர் முனியும்
புறம்போனன்
பரும்பே ருரகக் கொடிவேந்தன் பட்டான் மிகவும்
பரிபவமென்(று)
அரும்போ ரரசர் களித்தாட வவருந் தம்பா சறையடைந்தார்.

[பெரும்பேர் அறத்தின் திருமகவை பிடிப்பான் எண்ணி முடிப்பான் போல் பெரும் போர் அரசருடன் வந்த பொன் தேர் முனியும் புறம் போனன்; பரும் பேர் உரகம் கொடி வேந்தன் பட்டான் மிகவும் பரிபவம் என்று, அரும் போர் அரசர் களித்து ஆட அவரும் தம் பாசறை அடைந்தார்.]

**விளக்கம்:-** தருமனை உயிரோடு பிடிப்பதற்கு எண்ணி அதை முடிப்பவன் போல் போர்வல்ல அரசர்களுடன் (களம்) வந்த துரோணனும் புறங் கொடுத்தான்; துரியோதனன் மிகவும் பரிபவப் பட்டான் என்று போர் வல்லவரான (பாண்டவர் பக்கத்து) அரசர்கள் மகிழ்ந்து ஆட, அவரும் (பாண்டவரும்) பாசறை சேர்ந்தார். என்பதாம்.

82. காரிற் குளிர்ந்து குழைந்தசெழுங் கானம் பூத்த தெனக்கவினிப்
பாரிற் பிறந்து சிறந்தவிதப் பன்மா நிறத்த பரியனைத்தும்
போரிற் புகுந்து மடிதற்குப் புறந்தந் தஞ்சிப் போவான்போல்
தேரிற் றுரகங் கொண்டோடிக் குடபா லடைந்தான்
றினகரனும்.

[காரின் குளிர்ந்து குழைந்த செழுங்கானம் பூத்தது எனகவினி பாரில் பிறந்து சிறந்த விதம் பல மா நிறத்த பரி அனைத்தும் போரில் புகுந்து மடிதற்கு புறம் தந்து அஞ்சி போவான் போல், தேரில் துரகம் கொண்டு ஓடி குட பால் அடைந்தான் தினகரனும்]

**விளக்கம்**—மேகத்தால் (மழையால்) குளிர்ந்து தளிர்த்த செழுமை கொண்ட காடு பூத்ததுபோல அழகு பெற்று, பூமியில் தோன்றி சிறந்த சாதியைச் சேர்ந்த பல வித நிறங்களை உடைய குதிரைகள் எல்லாம் போரில் புகுந்து இறந்ததுகண்டு, பயந்து

புறங்கொடுத்துத் தன் தேரில் பூட்டப் பெற்ற குதிரைகளை அழி யாது தன்னுடன் கொண்டுபோவான் போல், சூரியன் மேலைத் திசை அடைந்தான், என்பதாம்.

பல தேசங்களிற் பிறந்து பலவிதப்பட்ட வகுப்பினவும் பல நிறத்தினவுமான குதிரைகள் எல்லாம், என்பது இரண்டாவது அடியின் பொருள். போரில் புகுந்து மடிதற்கு-போரில் புகுந்து மடிந்ததற்கு. சூரியன் அஞ்சியது, தனது குதிரைகளுக்கும் தீங்கு நேருமோ, என்ற எண்ணத்தால். போரில் பல குதிரைகள் அழிந் தன கண்டு சூரியன் தனது குதிரைகளுக்கும் அழிவுண்டாகுமோ என்று அஞ்சிக் குடபால் சென்றுன், என்றது தற்குறிப்பேற்றம். அவயவ அமைதியையும் நல்ல சுழிகளையும் நோக்கிக் **கவினி,** என்றார்.

கலித்துறை

**83. அறந்தந்த மைந்தற்கும் வீமற்கும் விசயற்கு மபிமற்குமே**
**புறந்தந்த வயவீர ரெல்லாரு மரசன்பு றஞ்சார்பிருந்(து)**
**இறந்தந்த யூகத்து வாராத மன்னர்க் கிரங்காவழா**
**மறந்தந்த வேழத்து டன்பட்ட பகதத்தன் வலிகூறினுர்.**

[அறம் தந்த மைந்தற்கும் வீமற்கும் விசயற்கும் அபிமற்குமே புறம் தந்த வய வீரர் எல்லாரும் அரசன் புறம் சார்பு இருந்து, இறந்து அந்த யூகத்து வாராத மன்னர்க்கு இரங்கா அழா, மறம் தந்த வேழத்துடன் பட்ட பகதத்தன் வலி கூறினுர்.]

**விளக்கம்:-** அரசன் புறம் சார்பு இருந்து — துரியோதனனுக் குப் பின்னே அவனைச் சார்ந்து இருந்து. அந்த யூகத்து இறந்து வாராத மன்னர்-அன்றைய தினம் அமைந்த அந்த அணி வகுப் பில் இறந்து திரும்பி வாராத மன்னர். இரங்கா அழா-இரங்கி அழுது. புறஞ்சார்பு இருந்து, என்பதற்குத் துரியோதனனைச் சுற்றியிருந்து என்றும் பொருள் கொள்ளலாம்.

**84. மன்னர்க்கு மன்னன்றன் முன்வைகு முனிதன்னை மதியாமனீ**
**நென்னற்க லங்காம லுரைசெய்த வுரையின்று நிலையானதே**
**கன்னப்பெ யர்க்காளை மறையந்த ணர்க்கென்ன**
**கட்டாண்மையுண்(டு)**
**என்னச்சி ரித்தான்வ ணங்காத வர்க்கென்று மிடியேறனுன்.**

[மன்னர்க்கு மன்னன் தன் முன்வைகும் முனிதன்னை, ''மதியாமல் நீ நென்னல் கலங்காமல் உரை செய்த உரை இன்று நிலை ஆனதே!'' கன்னன் பெயர் காளை, ''மறை அந்தணர்க்கு

என்ன கட்டு ஆண்மை உண்டு,'' என்ன சிரித்தான், வணங்காத வர்க்கு என்றும் இடி ஏறு அனுன்.]

**விளக்கம்:-** மன்னர்க்கு மன்னன்-துரியோதனன். மதியாமல்-ஆலோசிக்காமல். கட்டு ஆண்மை - உறுதியான வீரம். துரோணனை நோக்கிக் கர்ணன், ''நேற்று நீ ஆலோசியாமல் கலக்கம் இன்றி உறுதியாக (அறன் மகனைப் பற்றித் தருவேன்) என்று சொன்ன சொல் நிறைவேறி விட்டது! வேதம் ஓதும் பார்ப்பனர்க்கு என்ன உறுதியுடைய வீரம் உளது?'' என்று பரிகசித்தான், என்பதாம். வணங்காதவர் - பகைவர்.

**85. தெருமந்த சிந்தைச் சிலைக்கைக் குருகண் சிவப்பேறவே**
**உருமுந் திகைக்கக் கொதித்தங்கர் பதியோ டுறக்கூறுவான்**
**கருமந்த வாவித் திறற்கன்ன னேயல்ல கழன்மன்னரில்**
**தருமன்றன் முன்னிற்க வல்லார்கள் யாரித்த ளந்தன்னிலே.**

[தெருமந்த சிந்தை சிலை கை குரு கண் சிவப்பு ஏற, உருமும் திகைக்க கொதித்து அங்கர் பதியோடு உற கூறுவான்; கருமம் தவா இ திறல் கன்னனே அல்ல, கழல் மன்னரில் தருமன் தன் முன் நிற்க வல்லார்கள் யார் இ தளந்தன்னில், ஏ.

**விளக்கம்:-** தெருமந்த சிந்தை - கலங்கிய மனம். உருமும் திகைக்க கொதித்து - இடியும் அஞ்சித் திகைக்கும்படி மனக் கொதிப்புக் கொண்டு. கருமம் தவாதிறல் கன்னன் - தான் சொன்ன காரியத்தைத் தவருது செய்து முடிக்கும் திறனுடைய கர்ணன். கர்ணன் கூறிய பரிகாச மொழியால் மனக் கொதிப்புக் கொண்ட துரோணன், சொன்னதைச் சொன்னபடி தவருது முடிக்கும் வில்லாண்மையுடைய இக்கர்ணன் மாத்திரம் அல்லன், இந்தப் பக்கத்திலுள்ள எந்த வீரர் தருமன் முன் நிற்கவல்லவர்? ஒருவரும் இல்லை, என்றபடி, - என்பதாம்.

கருமம் தவா விறல் கன்னன், என்றது இகழ்ச்சியின்பாற்படும். தருமன் முன் நிற்க வல்லார் யார்? என்றது, தருமனேடு பொருதல் கிடக்க, அவன் முன் நிற்கவும் வல்லமையுடையவர் இத்தளத்தில் யார் உளர், என்று கூறும் பொருளது. ''கர்ணனும் அவன்முன் நிற்க முடியாது'' என்பது கருத்து.

**86. இன்றல்ல நாளைக்கு மாநின் னவைக்கண் ணிருந்தோர்களில்**
**சென்றல்ல லுறமோதி யறன்மைந்த னைத்தங்கள் சிலையாண்மையால்**
**வென்றல்ல தணுகாத வீரர்க்கு விடைநல்கு விறன்மன்னநீ**
**நன்றல்ல வீரத்தி லோரஞ்சொ லுவதென்று நனிசீறினன்.**

[''இன்று அல்ல, நாளைக்கு மா நின் அவைக்கண் இருந்தோர்களில் சென்று அல்லல் உற மோதி அறன்மைந்தனை தங்கள் சிலை ஆண்மையால் வென்று அல்லது அணுகாத வீரர்க்கு விடை நல்கு விறல் மன்ன, நீ; நன்று அல்ல வீரத்தில் ஓரம் சொலுவது,'' என்று நனி சீறினான்.

**விளக்கம்:-** ''இன்று அல்ல, நாளைக்கு நின் மா அவைக்கண் இருந்தோர்களில் (களம்) சென்று, அல்லல் உற மோதி....அணுகாத வீரர்க்கு, விறல் மன்ன, நீ விடை நல்கு; வீரத்தில் ஓரம் சொலுவது நன்று அன்று'', என்று துரோணன் நனி சீறினான், என்பது அன்வயம்.

''இன்று என்னால் தருமனைப் பிடிக்க முடியாவிட்டாலும், நாளைக்கு உன் பெரிய அவையிலே இருப்போர்களில் (களம்) சென்று, துன்பம் உண்டாகும்படி தருமனைத் தாக்கிச் சிலை வலிமையால் வென்று (அதாவது தருமனைப் பற்றி) அல்லாது திரும்பி வாராத வீரர்க்கு மன்னனே, நீ அனுமதி கொடு; வீரத்தின் விஷயத்தில் பட்சபாதமாய் ஒருவரை நிந்தித்துப் பேசல் நல்லது அன்று'' என்று துரோணன் சினந்து கூறினான், என்பதாம்.

**87. வில்லாண்மை யாவர்க்குமின் றென்றெனைப்போல்**
**மிகுவஞ்சினம்**
**சொல்லாம லறன்மைந்தனைப் போர் மலைந்துங்க—**
**டோளாண்மையால்**
**வல்லாரி னிக்கொண்டு வம்மின்கள் வந்தாலிம்**
**மண்ணொன்றுமோ**
**அல்லாத வுலகிற்கு மிருநாலு திக்கிற்கு மவர்வீரரே.**

[வில் ஆண்மை யாவர்க்கும் இன்று, என்று எனை போல மிகு வஞ்சினம் சொல்லாமல், அறன் மைந்தனை போர் மலைந்து உங்கள் தோள் ஆண்மையால் வல்லார், இனி கொண்டு வம்மின்கள்; வந்தால், இ மண் ஒன்றுமோ, அல்லாத உலகிற்கும் இரு நாலு திக்கிற்கும் அவர் வீரர், ஏ.]

**விளக்கம்:-** என்னைப்போல், ''எவருக்கும் இல்லை'', என்று மிக்க சபத மொழிகளைக் கூறாமல், வல்லவர்களே, உங்களது தோள் வலியால் போர்செய்து அறன்மகனை (தருமனை) இனி அகப்படுத்திக் கொண்டு வாருங்கள்; (அவ்வாறு யாராவது) செய்து கொண்டு வந்தால், இந்த மண் உலகம் மாத்திரம் அன்று, மற்றை உலகங்களுக்கும், எட்டுத் திக்குக்களுக்கும் (அவர்களே சிறந்த) வீரர் ஆவார், என்பதாம்.

சொன்ன சொல் தவறினேன், என்று என்னை இகழ வேண்டா; நாளைக்கோ அல்லது மறுநாளோ வல்லவர் உளரேல், தருமனைப் பற்றி வாருங்கள்; வரின் அவன் நேரில்லா வீரனே ஆவான், என்று கர்ணனை இடித்துக் கூறியபடி. வல்லார் - (விளி) வல்லவர்களே.

**88. எம்போல வரிவில்லெ டுத்தெய்ய யார்வல்லா ரெனும்வீரரும்**
**வெம்போரில் வந்தாலொ ரணுவுக்கு நில்லாது விளிகிற்பரால்**
**வம்போதி யென்பேறு வல்லாண்மை புனையந்த வில்லாளிகூர்**
**அம்போடி ராமன்கை யடலம்பு முவமிக்கி லதிபாவமே.**

['எம் போல வரி வில் எடுத்து எய்ய யார் வல்லார்', எனும் வீரரும் வெம்போரில் வந்தால் ஓர் அணுவுக்கும் நில்லாது விளிகிற்பர், (ஆல்), வம்பு ஓதி என் பேறு? வல் ஆண்மை புனை அந்த வில்லாளி கூர் அம்போடு இராமன் கை அடல் அம்பு உவமிக்கில் அதிபாவமே.]

**விளக்கம்:-** ''எம்மைப்போல் வில்லெடுத்து எய்யவல்லவர் யார் உளர்?'' என்று பெருமிதம் பேசும் வீரர் போர்க்களம் வந்தால் ஓர் அணுவைப் போல வேனும் முன் நிற்க மாட்டாமல் அழிவர்; வீண் வார்த்தை பேசி என்ன பயன்? அந்த வில் வீரனை தருமனது கூர் அம்பை இராமபிரானது வலிய அம்போடு உவமிக்கில், அது அதிக பாவமானதாகும், என்பதாம்.

வெற்றி தோல்விகள் நம் கையதன்று என்று கூறும் கருத்தின் முதலிரண்டடிகள். இராமனது அம்போடு தருமன் அம்பை உவமித்துப் பேசுவது பிழையாகும்; இராமன் ஒழிந்த வேறு எவரும் தருமனுக்கு நேராக மாட்டார்கள், என்று, துரோணன், கூறியபடி.

**89. கொத்தொத்த தொடையொத்த வளவொத்த சிறகொத்த**
**குதையொத்தவொன்(று)**
**ஒத்தொர்த்து முனையோடு முனைதத்தி விழுமாறு டன்றேவினன்**
**தத்தொத்த புரவித்த டந்தேர்ம னென்னோடு சாதித்ததும்**
**வித்தொத்த தென்வாளி யவன்விட்ட வடிவாளி**
**வினைவொத்ததே.**

[கொத்து ஒத்த தொடை ஒத்த அளவு ஒத்த சிறகு ஒத்த குதை ஒத்த ஒன்று ஒத்து ஒத்து முனையோடு முனை தத்தி விழுமாறு உடன்று ஏவினன்; தத்து ஒத்த புரவி தடந்தேர் மன் என்னொடு சாதித்ததும், (கூறின்) வித்து ஒத்தது என் வாளி, அவன் விட்ட வடிவாளி விளைவு ஒத்தது, ஏ.]

**விளக்கம்:-** தொடை - அம்பு. திரட்சியில் ஒத்தனவும், தனுர் நூல் விதியோடு ஒத்த (மாறுபடாத) அளவினில் ஒத்தனவும், (கட்டப்பெற்ற) சிறகில் ஒத்தனவும், அடிப்பாகத்தில் ஒத்தனவும் ஆன தொடைகளை (அம்புகளை), நான் எய்த ஒவ்வொரு அம்போடும் பொருந்தி, முனையோடு முனை மோதி விழும்படி சினந்து (தருமன்) ஏவினன்; தாவிச் செல்லும் குதிரைகள் பூட்டப் பெற்ற தேரையுடைய மன்னன் (தருமன்), என்னோடு எதிர்த்துப் போர் செய்ததைக் கூறின், என் வாளி வித்தை ஒத்தது, அவனது வடிவாளி வித்திலிருந்து உண்டான விளைச்சலை ஒத்தது, - என்பது பொருள்.

ஒரு விதை, பல விதைகள் உண்டாகும்படி விளைதல் போல், எனது ஒரு அம்புக்கு அவன் பல அம்புகளை எதிராக ஏவி, விலக்கினன், என்பது கருத்து.

**90. வன்மைக்கு வயவீமன் வின்மைக்கு முகிலூர்தி**
**மகனன்றிவே(று)**
**இன்மைக்கு மாவிந்தை கிரிகன்னி கரியென்ப ரெம்மன்னரும்**
**வின்மைக்கும் வன்மைக்கு மிளையோரை யனையாரை**
**மிகவெண்ணலாம்**
**தன்மைக்கு நிலையான தருமர்க்கு நிகர்யார் தனித்தெண்ணவே.**

[வன்மைக்கு வய வீமன், வின்மைக்கு முகில் ஊர்தி மகன் அன்றி வேறு இன்மைக்கு மாவிந்தை கிரி கன்னி கரி என்பர் எ மன்னரும்; வன்மைக்கும் வின்மைக்கும் இளையோரை அனையாரை மிக எண்ணலாம் தன்மைக்கு, நிலையான தருமற்கு நிகர் யார் தனித்து எண்ணவே.]

**விளக்கம்:-** வலிமைக்கு வீமனும், வின்மைக்கு விசயனும் அன்றி வேறு (வீரர்) இல்லாமைக்குப் மலைமகளின் அமிசமான மாவிந்தை (துர்க்கை) சான்று என்று எல்லா அரசர்களும் கூறுவர்; வன்மைக்கும் வின்மைக்கும் தம்பியர்களான வீமார்ச்சுனர்களை ஒத்திருக்கும் வீரரை மிகுதியாகக் கணக்கிடல் கூடும்; இவ்விரு தன்மைகளோடு மேம்படு குணத்திற்கும் இடமான தருமனோடு தனித்துக் கணக்கிட ஒப்பாகக் கூடியவர் யாவர்? ஒருவரும் இல்லை, என்றபடி - என்பதாம்.

முகிலூர்தி - இந்திரன். விந்தை - போருக்கு உரிய தேவதை, துர்க்கை. வீமார்ச்சுனர்க்கு ஒப்பாவார் உலகில் கிடைத்தல் எளிது; தருமனுக்கு ஒப்பாவார் கிடைத்தல் அரிது, என்று துரோணன், கூறும் கருத்தது செய்யுள்.

**91. அதிர்வார்க ளதிர்மின்க ளதிரப்பொ ரும்போரி**
**லறன்மைந்தனோ(டு)**
**எதிர்வார்க ளுண்டாகி லிக்கங்குல் சென்றுலி னிக்காணலாம்**
**முதிர்வாய்மை யாலென்ன பயனென்று வெஞ்சாப முனியேகினான்**
**கதிர்வார்மு டிக்கோவு மரசர்க்கு விடைதந்து கண்துஞ்சினான்.**

[அதிர்வார்கள் அதிர்மின்கள்; அதிரப்பொரும் அறன் மைந்தனோடு எதிர்வார்கள் உண்டு ஆகில், இ கங்குல் சென்றால் இனி காணலாம்; முதிர் வாய்மையால் என்ன பயன்? என்று வெம் சாபம் முனி ஏகினான், கதிர் வார் முடி கோவும் அரசர்க்கு விடை தந்து கண் துஞ்சினான்.]

**விளக்கம்**–''வீண் வார்த்தை முழங்குபவர்கள் முழங்குங்கள். பகைவர்க்கு அதிர்ச்சி உண்டாகும்படிசெய்யும் போரில் தருமனோடு எதிர்த்துப் போர் செய்ய வல்லவர்கள் இருப்பாரேல் இனிஇரவு கழிந்து பொழுது விடிந்தபின், அவர்களைக் காணலாம், மிகுதி கொண்ட வாய்ப்பேச்சால் என்ன பயன் என்று சொல்லித் துரோணன் தன் படைவீடு சென்றான். ஒளி விளக்கமுடைய நீண்ட கிரீடமுடைய துரியோதனனும், கர்ணன் முதலிய அரசர்களுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டுத் தூங்கலானான்....என்பதாம்.

**92. மகதத்த ரிற்சூர சஞ்சத்த கரிலுள்ள மகிபாலரும்**
**பகதத்த னுந்துள்ளி யெதிர்வந்த காந்தார பதிமைந்தரும்**
**தகதத்த வெனவெங்க ளத்தூடு விழவென்ற தனுவேதியும்**
**சுகதத்த முறவோட வென்றோர்க ளுங்கண்டு யின்றார்களே.**

[மகதத்தரில், சூரசஞ்சத்தகரில் உள்ள மகிபாலரும், பகதத்தனும், துள்ளி எதிர் வந்த காந்தாரபதி மைந்தரும் தகதத்த என வெம் களத்தூடு விழ, வென்ற தனு வேதியும் சுகதத்தம் உற ஓட, வென்றோர்களும் கண் துயின்றார்கள், ஏ.]

**விளக்கம்:-** மகத தேசத்தாரும், சூரம் உடைய சஞ்சத்தகரிலும் உள்ள அரசர்களும், பகதத்தனும், ..துள்ளிக்கொண்டு எதிர் வந்த காந்தார பதியான சகுனியின் பிள்ளைகளும், தகதத்த என ஆடிக்கொண்டு கொடிய யுத்த பூமியில் மடிந்து விழவும், பகை வெல்லுந் தன்மையுடைய வில் கலை வல்ல துரோணனும், சுகத்தை தத்தம் செய்தல், அதாவது இழத்தல் பொருந்த பின்னிட்டு ஓடவும் வென்றவர்களான பாண்டவர்களும் தூங்கினார்கள்,—என்பது பொருள்.

தகதத்த, என்பது உறுதி நிலை தடுமாற, என்ற பொருளது; ஒலிக் குறிப்புமாம் தத்தம் செய்தல்-அளித்தல், இழத்தல் எனவே சுகதத்தம், என்பது சுகம் இழத்தல், என்ற பொருளதாகின்றது

## சூரியோதயம்

**93. நிலையான வயவீர ருந்தேவ ராய்நின்ற நிலைகண்டுவெண்
கலையானி ரம்புஞ்செ ழுந்திங்க ளேகக்க டைக்கங்குல்வாய்
அலையாழி முழுநீல வுறைநின்று மாணிக்க மணியாழிபோல்
உலையாத வொளிகொண்ட கதிராயி ரத்தோனு
முதயஞ்செய்தான்.**

[நிலை ஆன வய வீரரும் தேவராய் நின்ற நிலைகண்டு வெண் கலையால் நிரம்பும் செழுங் திங்கள் ஏக,... கடை கங்குல் வாய் அலை ஆழி முழு நீலம் உறை நின்று மாணிக்கம் மணி ஆழிபோல் உலையாத ஒளி கொண்ட கதிர் ஆயிரத்தோனும் உதயம் செய்தான்.]

**விளக்கம்**-(போரில் பின்னிடாமல்) நிலையாக நிற்கக் கூடிய வலிமையுடைய வீரர்களில் பலர் தேவர்களாய் நின்ற நிலை கண்டு, வெள்ளிய இனிய கிரணங்களால் நிறைந்து செழிப்புற்ற சந்திரன் அகல, (அதாவது அஸ்தமிக்க), இரவின் கடையில் (விடியற் காலையில்) அழியாத ஒளியைக் கொண்ட ஆயிரங் கிரணங்களை உடைய சூரியனும், அலைகளை உடைய கடலாகிய நீல நிறங் கொண்ட பெட்டியினின்று (வெளிப்பட்ட) மாணிக்கமயமான மோதிரம் போல் உதயமானன். கடலாகிய உறைவிடத்தினின்று மாணிக்க மயமான சக்கரம்போல், உதயமானன், என்றும் பொருள் கொள்ளலாம்.

தேவர்களுக்குச் சந்திரன், தனது கலைகளாகிய அமுதை அளிக்கும் தன்மையனுதலால் ''வீர சுவர்க்கம் அடைந்த வீரர் களுக்கு அமுதம் உதவ அவன் அகன்றுன்,'' என்ற வருணனை பயன்தற்குறிப் பேற்றம் ஆகும். ஈற்றடிகள், உவமை அணி.

பன்னிரண்டாம் போர்ச் சருக்கம் முற்றும்

# பதின்மூன்றும் போர்ச் சருக்கம்

## கடவுள் வணக்கம்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. சங்கையி லாவகை யமபட ராலுயிர்**
**தளர் பொழு தத்தருகே**
**மங்கையர் சூழவி ருந்தழு துள்ளம்**
**மயக்கினும் யான்மறவேன்**
**கங்கையு நான்மறை யுந்துள வுங்கமழ்**
**கழலிணை யுந்திருமால்**
**அங்கையின் மீதொளிர் சங்கமு நேமியு**
**மஞ்சன மேனியுமே.**

[சங்கை இலா வகை யமபடரால் உயிர் தளர் பொழுதத்து அருகே மங்கையர் சூழ இருந்து அழுது உள்ளம் மயக்கினும், யான் மறவேன் கங்கையும் நான்மறையும் துளவும் கமழ் கழல் இணையும் திருமால் அம்கையின் மீது ஒளிர் சங்கமும் நேமியும் அஞ்சன மேனியும்.]

**விளக்கம்:-**சாகுந் தருவாயில் மரணவேதனையோடு அழும் மாதர்களின் அன்புக்கு ஆளாகுங் காலத்திலும், கங்கையும் வேதமும் துளசியும் மணக்கும் திருமாலின் திருவடியையும், அவன் கை சங்கு சக்ரங்களையும், அஞ்சன மேனியையும் மறக்கமாட்டேன், அதாவது தியானித்திருப்பேன், என்றபடி. .தளர் பொழுதத்து— வருந்தும் பொழுது. மயக்கினும் - மயக்கமடையச் செய்தாலும், அதாவது சிந்தனையைக் கலைத்தாலும்.

### துரோணன் களம் வந்து வியூகம் வகுத்தல்

**2. நஞ்சவி யாளமு யர்த்த பதாகை**
**நராதிப னேவலினல்**
**விஞ்சவ ரூதினி மன்னர்தி ரண்டனர்**
**விசயனை மேலிடுவான்**
**நெஞ்சவ ராலழி வுண்டத போதன**
**னெருநலி னுங்கடுகிப்**
**பஞ்சவர் கோமுதல் வன்றனை வன்பொடு**
**படைபொர வெண்ணினனே.**

[நஞ்சம் வியாளம் உயர்த்த பதாகை நர அதிபன் ஏவலினல் விஞ்ச வரூதினி மன்னர் திரண்டனர் விசயனை மேலிடுவான்,

நெஞ்சு அவரால் அழிவுண்ட தபோதனன் நெருநலினும் கடுகி பஞ்சவர் கோ முதல்வன் தன்னை வன்பொடு படை பொர எண்ணி னன், ஏ]

**விளக்கம்:-** வியாளம்-பாம்பு. வருதினி மன்னர் விஞ்ச (மிகுதி யாக) திரண்டனர். மேலிடுவான் - வெல்வதற்காக. அவரால் நெஞ்சு அழிவுண்ட தபோதனன்-கர்ணன் முதலியோரால் மனம் வருந்துமாறு செய்யப் பெற்ற துரோணன். பாண்டவர் கோ முதல்வன் - பாண்டவரில் மூத்தவனான தருமன். படை - ஆயுத தம். துரியோதனன் ஏவலினால் மன்னர்கள் விசயன்மேல் திரண் டது, அவன் தருமனுக்கு உதவியாகாமைக்காக, என்க.

நேற்றைய தினத்தைக் காட்டிலும் இன்று தருமனோடு கடுமை யாகப் பொர, துரோணன், எண்ணினன் என்பதாம்.

**3. இலக்கண மைந்தனு மைந்துடை மன்னவன்**
**இளைஞரு மெம்முனையும்**
**கலக்குற வென்றக லிங்கரு முட்படு**
**காவலர் பற்பலரும்**
**சிலைக்கை வயம்பெறு சிந்துந ராதி**
**செயத்திர தன்சிரமா**
**நிலக்க ணெழுந்துகள் வானிடை சென்றிட**
**நின்றனர் பேரணியே.**

[இலக்கண மைந்தனும், மைந்து உடை மன்னவன் இளைஞ ரும், எ முனையும் கலக்கு உற வென்ற கலிங்கரும் உள் படு காவலர் பல் பலரும், சிலை கை வயம் பெறு சிந்து நராதி செயத் திரதன் சிரம் ஆ நிலக்கண் எழும் துகள் வானிடை சென்றிட நின்றனர் பேர் அணி, ஏ.]

**விளக்கம்:-**இலட்சண குமாரனும் வலிமை உடைய துரியோ தனன் தம்பியரும் எல்லாப் போர் முனையிலும் (பகைவர்) கலக்கம் உறும்படி முன்பு வென்றுள்ள கலிங்கரும் (என்ற இவர்கள்) உள் ளிட்ட பற்பல மன்னர்களும், சிலை ஏந்திய வலிமையுடைய சிந்து நாட்டாருக்குத் தலைவனான சயத்ரதனைத் தலைமையாகக் கொண்டு நிலத்தினிடமிருந்து சேனையின் செலவால் எழும் புழுதி வான் அடையும்படி பெரிய அணி வகுப்பில் ஒன்று கூடி நின்றார்கள்,— என்பது பொருள்.

**4. அக்கரம் யாவுமு ணர்ந்த சிலைக்குரு**
**வாசுரர் சேனை நடுச்**
**சுக்கிர ஞர்நிக ரென்ன வகைப்படு**
**தூசியின் மாமுறையே**
**எக்கர மும்படை கொண்டெழு சேனையை**
**எயில்கள் வளைப்பனபோல்**
**சக்கர யூகம்வ குத்திர தத்திடைச்**
**சயமுற நின்றனனே.**

[அக்கரம் யாவும் உணர்ந்த சிலை குரு ஆசுரர் சேனை நடு சுக்கிரனுர் நிகர் என்ன வகைபடு தூசியின் மா முறையே, எ கரமும் படை கொண்டு எழு சேனையை எயில்கள் வளைப்பனபோல் சக்கர யூகம் வகுத்து இரதத்திடை சயம் உற நின்றனன், ஏ.]

**விளக்கம்:-** அக்கரம்...அக்ஷரம் (எழுத்து) எழுத்துக்களா லாகிய சொல்லும் அடங்கும்; சொல் ஆகு பெயரால் நூலை உணர்த் திற்று. எனவே, சகல சாத்திரங்களையும் உணர்ந்த துரோணன், அசுரர் சேனையின் நடுவே நின்ற சுக்கிராசாரியன் என்று சொல் லும்படி. பிரிக்கப்படும் படை வகுப்பிற்குரிய சிறந்த முறைப்படியே கைகளில் எல்லாம் ஆயுதங்களை ஏந்திக்கொண்டு எழுந்த சேனை களை மதில்கள் வளைப்பனபோல், சக்கர வியூகம்—வியூகமாகப் பிரித்து, தேரின்மேல் வெற்றியுண்டாக நின்றான், என்பது பொருள். தூசி—சேனை. சுக்கிரன் - அசுர குரு.

சக்ரவியூகம், என்பது எட்டுச் சுற்றையும் ஒரு வழியையும் உடையது என்பர். பதின்மூன்றாம்நாள் பத்மவியூகம் வகுக்கப் பட்டது, என்று வியாசபாரதம் கூறும்.

**5. ஒப்பறு போரினில் வாகை புனைந்த**
**உதிட்டிர னன்றடையார்**
**தப்பற வெண்ணிய வெண்ணமு ணர்ந்து**
**தனஞ்சய னுக்குமுரைத்(து)**
**அப்பறு கோடையில் வெங்கதி ரோனென**
**வாகவ நீடளவித்**
**துப்புறு சிந்தை மகீபர் வரூதினி**
**சூழந டந்தனனே.**

[ஒப்பு அறு போரினில் வாகை புனைந்த உதிட்டிரன் என்று அடையார், தப்பு அற எண்ணிய எண்ணம் உணர்ந்து தனஞ்சய னுக்கும் உரைத்து, அப்பு அறு கோடையில் வெம் கதிரோன் என ஆகவம் நீடு அளவி துப்பு உறு சிந்தை மகீபர் வரூதினி சூழ நடந்தனன், ஏ.]

வி. பா. 3—19.

**விளக்கம்** –(கடந்த நாள் நிகழ்ந்த) ஒப்பு அற்றபோரில் வெற்றி மாலை சூடிய தருமன் அன்று அடையார் (பகைவர்) தவறுதல் இல்லாதபடி எண்ணிய எண்ணத்தை ஒற்றால் உணர்ந்து தனஞ் சயனுக்கும் அதை உரைத்து, நீர் அற்ற கோடை காலத்தில் உக்கிரமாக எரிக்கும் சூரியன் போல், நீண்ட போர்க்களம் அடைந்து, துப்பு உறு (வலிமை மிகுந்த) மனத்தை உடைய அரசர்களும் சேனைகளும் சூழ (களம்) வந்தான், என்பது பொருள். எண்ணம் – தருமனோடு இன்று துரோணன் கடுமையாகப் பொர எண்ணியது.

பாண்டவர் படைவியூகம் வகுத்தல்

**6. ஈரிரு தேரினர் மூவகை யானையர்**
**எண்ணறு மாமிசையோர்**
**ஓரிரு நாலுடை யையிரு பூமியில்**
**உள்ளப தாதருடன்**
**பாரிரு நாலுதி சாமுக மும்படை**
**யோடுப ரந்துவரும்**
**பேரிரு மானவ ரூதினி யின்றிரள்**
**பேசுற லாமளவோ !**

[ஈர் இருதேரினர், மூவகை யானையர், எண் அறு மா மிசை யோர், ஓர் இரு நால் உடை ஐ இரு பூமியில் உள்ள பதாதருடன் பார் இரு நாலு திசாமுகமும் படையொடு பரந்து வரும் பேர் இரு மானம் வரூதினியின் திறன் பேசுறல் ஆம் அளவோ.]

**விளக்கம்:-** நால்வகைப்பட்ட தேர் வீரர்களும், மூன்று வகைப்பட்ட யானை வீரர்களும், எண்ணிக்கை அற்ற குதிரை வீரர்களும், பதினெட்டு தேசங்களிலுமுள்ள காலாள் வீரர்களும் ஆகிய இவர்களுடன், பூமியின் எட்டுத் திசைகளிலும் ஆயுதங் களோடு பரவி வரும் பேர்பெற்ற பெரிய மானமுடைய (பாண்டவர் (பக்கத்துச்) சேனையின் கூட்டம் சொல்லுதற்கு ஆகும் அளவின தாகுமோ! அளவிறந்தது, என்றபடி,—என்பது பொருள்.

ஈர் இருதேரினர் = அதிரதர், மகா ரதர், சமரதர், அர்த்தரதர். மூவகை யானை—கிரிசரம், நதிசரம், வனசரம்; அல்லது பத்ரம், மந்த்ரம், மிருகம். ஓர் இரு நால் உடை ஐயிருபூமி—எட்டு என்ற எண்ணைக் கடையிலுடைய பத்தாகிய தேசங்கள்; அதாவது பதினெட்டு விதமான பாஷைகளை உடைய தேசங்கள்.

**7. வருபடை தன்னை நிறுத்தி விதம்பட**
**மகரவி யூகம்வகுத்(து)**
**ஒருபகல் யூகமு மிப்பக லுக்கினி**
**ஒப்பல வென்றிடவே**

**குருபதி யுந்திரு மாலும திக்கவ
ணிந்தடு கோளரிபோல்
துருபதன் மைந்தனு நின்றன னந்தர
துந்துபி மீதெழவே.**

[வருபடை தன்னை நிறுத்தி விதம் பட மகர வியூகம் வகுத்து, ஒரு பகல் யூகமும் இ பகலுக்கு இனி ஒப்பு அல என்றிடவே, குரு பதியும் திருமாலும் மதிக்க அணிந்து அடு கோளரிபோல், துருபதன் மைந்தனும் நின்றனன், அந்தர துந்துபி மீது எழ, ஏ.]

**விளக்கம்:-** விதம்பட நிறுத்தி-போர் நூல் முறைப்படி நிறுத்தி இன்று வகுத்த வியூகத்திற்கு எந்த நாள் வியூகமும் ஒப்பாக மாட்டாது, என்று சொல்லும்படி,—என்று இரண்டாவது அடியின் பொருள். குருபதி—குரு குலத்தலைவனான தருமன் அணிந்து-அணிவகுத்து. துருபதன் மைந்தனான திட்டத் துய்மன் பாண்டவர் படையை மகர வியூகமாக வகுத்து, எல்லா மிருகங்களையும் அழிக்கவல்ல சிங்கம் போல், அந்தர துந்துபி முழங்கக் களத்தில் நின்றான், என்பதாம்.

சஞ்சத்தகரோடு விசயன் பொரல்

**8. இத்தக வாகவ ணிந்திரு சேனையும்
எதிர்முனை யும்பொழுதின்
முத்தக வெண்குடை மன்னவ னேவலின்
முற்பக லின்படியே
மத்தக மாமுத லாகிய நான்மை
வருதினி தன்னொடுசஞ்
சத்தகர் வந்தறை கூவவெ குண்டு
தனஞ்சய னேகினனே.**

[இ தகவு ஆக அணிந்து இரு சேனையும் எதிர் முனையும் பொழுதில், முத்து அகம் வெண் குடை மன்னவன் ஏவலின் முன் பகலின்படியே, மத்தகம் மா முதலாகிய நான்மை வருதினி தன்னொடு, சஞ்சத்தகர் வந்து அறை கூவ, வெகுண்டு தனஞ் சயன் ஏகினன், ஏ.]

**விளக்கம்:-** முத்து அகம் வெண் குடை மன்னவன்-முத்துக் களைத் தன்னிடத்தே கொண்ட வெண் குடையுடைய துரியோதனன். மத்தகம் மா-யானை. இவ்விதமாக இரு சேனையும் அணி கொண்டு போர் செய்கையில், துரியோதனன் ஏவலின்படி யானை முதலாகிய நால் வகைப் படையோடு வந்து சஞ்சத்தகர் போருக்கு அழைக்க விசயன் வெகுண்டு அவர்மேல் சென்றான், என்பதாம்.

**9. மால்விடு தேர்மிசை யான்வரி சாபம்**
**வளைத்தது மல்லிகல்வெம்**
**கோல்விடு பூசலும் வில்லுட னேபொழி**
**கொண்டல் வியப்பெனலாம்**
**மேல்விடு தேர்களும் யானையும் வாசியும்**
**வீரரு மெய்யுருவக்**
**கால்விடு தாரையெ ழுஞ்சரு கென்ன**
**உடைந்தனர் கையறவே.**

[மால் விடு தேர் மிசையான் வரி சாபம் வளைத்து மல் இகல் வெம் கோல் விடு பூசலும், வில்லுடனே பொழி கொண்டல் வியப்பு எனல் ஆம்; மேல் விடு தேர்களும் யானையும் வாசியும் வீரரும் மெய் உருவ, கால் விடு தாரை எழும் சருகு என்ன உடைந்தனர் கை அற, ஏ.]

**விளக்கம்:-** மல் இகல் — (ஒரு பொருட் பன் மொழி) மிகுந்த வலிமை (வான வில்லோடு) பொழி கொண்டல் வியப்பு எனல் ஆம்—பொழிகின்ற காளமேகத்தின் வியக்கத்தக்க தன்மை என்று சொல்லலாம். கால் — காற்று. தாரை-ஒழுங்கு, வரிசை, விசயன் செய்த வலிய போரில், அவனது அம்பு மழைக்கு முன் நிற்க மாட்டாமல் பகைவரின் யானை குதிரைகளும், காலாள் வீரரும் காற்றில் பட்ட சருகு எனப் போர் உடைந்து கையற்று அதாவது தொழில் ஒன்றும் இல்லாமல், தோற்று அழிந்தனர், என்பதாம்.

**10. பட்டவ ரெத்தனை யாயிரர் நின்று**
**படாம லுயிர்ப்புடன் வென்**
**இட்டவ ரெத்தனை யாயிர ரஞ்சலின்**
**ஏகுக வென்றமர்வாய்**
**விட்டவ ரெத்தனை யாயிரர் தங்குல**
**மேன்மையும் வெந்திறலும்**
**கெட்டவ ரெத்தனை யாயிர ரன்று**
**கிரீடிதொ டுங்கணையால்.**

[பட்டவர் எத்தனை ஆயிரர், நின்று படாமல் உயிர்ப்புடன் வென் இட்டவர் எத்தனை ஆயிரர்; அஞ்சலின் ஏகுக, என்று அமர் வாய் விட்டவர் எத்தனை ஆயிரர், தம் குலம் மேன்மையும் வெம் திறலும் கெட்டவர் எத்தனை ஆயிரர் அன்று கிரீடி தொடுங் கணையால்.]

**விளக்கம்:-** கிரீடி (விசயன்) தொடுத்த கணைகளால் மடிந் தவர் பலர். பின்னிட்டு உயிரோடு ஓடினவர் பலர், போருக்கு

அஞ்சினமை கண்டு, 'ஏகுக' என்று அவனால் அனுப்பப் பெற்று அமர்க்களம் நீங்கினவர் பலர், குலப் பெருமையும், வீரமும் கெட்டவர் பலர், என்பதாம். செய்யுள் சுலபமானதே.

**11. ஒரொரு டம்பினி லாயிர**
**மாயிர முற்பல வாளிபடத்**
**தாரைப டும்படி பொழிமுகி**
**லொத்தனர் சமர்முனை யிற்றரியார்**
**மாரனை யங்கமெ ரித்தருள்**
**கண்ணுதல் வடிவமெ னும்படியே**
**பாரொரு பாதி சிவந்தது**
**மேனி பரந்தெழு சோரியினால்.**

[ஓர்ஓர் உடம்பினில் ஆயிரம் உற்பலம் வாளிபட, தாரைபடும்படி பொழி முகில் ஒத்தனர் சமர் முனையில் தரியார்; மாரனை அங்கம் எரித்தருள் கண்நுதல் வடிவம் எனும்படியே பார் ஒரு பாதி சிவந்தது மேனி பரந்து எழுசோரியினால்.]

**விளக்கம்:-**இது, படுகளச் சிறப்புக் கூறும் செய்யுள். சமர் முனையில், பகைவர் ஒவ்வொருத்தர் உடம்பிலும் (விசயனது) ஆயிரக்கணக்கான உற்பலம் (கருங்குவளை) மலர் போன்ற கொல்லுந் தன்மையுடைய அம்புகள் தைத்தலால், (புண்பட்ட உடம்பிலிருந்து) குருதி சொரியும் தரியார் (பகைவர்) தாரை தாரையாகச் சொரியும் மேகத்தை ஒத்தனர்; (அந்த) பாரோ (போர்க்களமோ) மன்மதனது அங்கம் எரித்தருளிய நெற்றிக் கண்ணனை சிவபெருமானின் திருமேனி போல், (பகைவர்) மேனியிலிருந்து (உடலிலிருந்து) வெளிப்பட்டுப் பரவிய இரத்தத்தால் யுத்த பூமியின் ஒரு பாதியிடம் சிவந்தது, அதாவது துரியோதனாதியர் இருந்த ஒரு பாதிப்பகுதி சிவந்து போயிற்று.

உற்பலம்—(உத்பலம்) கருங்குவளை, மன்மதனது பாணங்களில் கருங்குவளை கொல்லும் தன்மையது, சிவபெருமானது அர்த்தநாரீச்வர வடிவத்தில் ஒரு பாதி (வலப்பக்கம்) சிவந்தும், உமைக் குரிய பகுதி (இடப்புறம்) கருத்தும் இருக்கும். எனவே, கண்ணுதல் வடிவென, பார் ஒரு பாதி சிவந்தது. என்றார்.

## துரோணன் செய்த கடும்போர்

**12. இந்திரன் மாமக னிங்கிவர்**
**தம்முட னிம்முறை போர் புரியச்**
**சந்திர சூரிய மண்டல**
**மொத்தணி தானையி ரண்டு முனைந்(து)**

**உந்திய வேலையி னுந்திக**
**ளுலுடை யுந்திர தத்திடைபோய்**
**அந்தணன் மேல்வரி சாபம்வ**
**ளைத்தன னைவர்ப டைத்தலைவன்.**

[இந்திரன் மாமகன் இங்கு இவர் தம்முடன் இ முறை போர் புரிய சந்திர சூரிய மண்டலம் ஒத்து அணி தானை இரண்டும் முனைந்து உந்திய வேலையின், உந்திகள் நாலுடை உந்து இரதத் திடைபோய் அந்தணன் மேல் வரி சாபம் வளைத்தனன் ஐவர் படைத்தலைவன்.]

**விளக்கம்:-** உந்தி - தேர்ச்சக்ரம். உந்திகள் நாலுடை உந்து இரதம் - நான்கு சக்கரங்களைக் கொண்டு செலுத்தப்படும் தேர். விசயன் களத்தில்பாதி குருதியால் சிவக்கும்படி போர் செய்யவும், மற்றோர் புறத்தில், சந்திர சூரிய மண்டலங்களைப் போல் அணி வகுத்து நின்ற இருதிறத்துச் சேனைகளும் போரில் பொருந்தித் தாக்கிய வேளையில், பாண்டவர் படைத் தலைவனை திட்டத்துய்மன், தேரில் சென்று துரோணனை எதிர்த்துப் போர் செய்தான், என்பதாம்.

**13. நூலொடு சாபம் வளைத்தவன்**
**மற்றிவனொய்தினு கைத்தவடிக்**
**கோலொடு கோன்முனை**
**யற்றுவி ழத்தொடு குனிசிலை நாணழியச்**
**சேலொடு சேல்பொரு**
**சீலமெனும்படிதேர்களி ரண்டுமணிக்**
**காலொடு கால்பொர வன்றுவ சத்தொடு**
**கவசம ழித்தனனே.**

[நூலொடு சாபம் வளைத்து அவன், (மற்ற), இவன், நொய்தின் உகைத்த வடி கோலொடு கோல் முனை அற்று விழ, தொடு குனிசிலை நாண் அழிய, சேலொடு சேல்பொரு சீலம் எனும்படி தேர்கள் இரண்டும் அணிகாலொடு கால் பொர வல் துவசத்தொடு கவசம் அழித்தனன், ஏ.]

**விளக்கம்:-** அவன் (துரோணன்) நூலொடு சாபம் வளைத்து நொய்தின் உகைத்த வடிகோலொடு இவன் (திட்டத் துய்மன்) கோல் முனை அற்று விழ, தொடு குனிசிலை நாண் அழிய, சேலொடு சேல் பொரு சீலம் எனும்படி தேர்கள் இரண்டும்......... அழித்தனன் என்பது அன்வயம். மற்று: அசை.

துரோணன் சிலைநூல் முறையோடு பொருந்த வில் வளைத்து நொய்தின் (வேகமாக) விடுத்த கூரிய அம்புகளால், திட்டத்

துய்மனது அம்புகள் முனை அறுபட்டு விழவும், கையேந்திய அவனது குனிசிலையின் நாண் அறுபடவும் (செய்து) சேல் மீனோடு சேல் மீன் பொருகின்ற ஒழுங்கு போலும் என்று சொல்லும்படி இருவர் தேரின் அழகிய கால்களும் ஒன்றோடொன்று மோதி, திட்டத்துய்மனது கொடியையும், கவசத்தையும் அழித்தான், என்பது பொருள்.

நொய்தின், என்பதற்கு அலட்சியமாக, எளிதாக, என்றும் பொருள் கொள்ளலாம். கால் - தேர்ச் சக்கரம், அல்லது தேரின் ஏர்க்கால். சீலம் - (வடசொல்) ஒழுக்கம்.

**14. அருமுனி யாதிவ திட்டனு மன்குல**
**வாதியு மந்தணனும்**
**பெருமுனி தானுமு டற்றிய போர்சிலர்**
**பின்பொரு தாருளரோ**
**ஒருமுனி யேழ்கட லுங்கர மொன்றிலொ**
**டுக்கினன் மன்னனைமேல்**
**வருமுனி வென்றனன் முனிவரு டன்பொர**
**வல்லவர் யார்புவிமேல்.**

[அருமுனி ஆதி வதிட்டனும் மன்குலம் ஆதியும், அந்தணன் ஆம் பெரு முனி தானும் உடற்றிய போர், சிலர் பின் பொருதார் உளரோ! ஒரு முனி ஏழ்கடலும் கரம் ஒன்றில் ஒடுக்கினன்; (இப்பொழுது) மன்னனை 'மேல் வரு' முனி வென்றனன்; முனிவருடன் பொர வல்லார் யார் புவிமேல்!]

**விளக்கம்:-** அரிய தவத்தை உடைய முனிவர்களுக்கு முதல்வனான வசிட்ட முனிவனும், அரசர்குலம் வந்த விசுவாமித்ர முனிவனும், அந்தண குலத்தினனான பெரிய பரசுராமனும் கனன்று செய்த யுத்தம் போன்ற யுத்தம் செய்தவர் சிலராவது இருக்கின்றார்களோ! இல்லை என்றபடி; ஒப்பற்ற அகத்திய முனிவன் ஏழு சமுத்திர நீரையும் ஒரு கையில் ஒடுங்கச் செய்தான்; மன்னனான திட்டத்துய்மன் மேல் போரெழுந்த முனிவனான துரோணன் போர் வென்றான். எனவே, முனிவர்களோடு போர் செய்ய வல்லவர், யாரே உலகில் உள்ளார்?— என்பது பொருள்.

முனிவனான துரோணன் வென்றான் என்ற சிறப்புப் பொருளை, முனிவரை வெல்வார்இலர், என்ற பொதுப் பொருளால் சாதிக்கும் இது **வேற்றுப் பொருள் வைப்பு** அணி ஆகும். பிரும்ம புத்திரனான வசிட்டன் சிருஷ்டியின் தொடக்கத்தில் முதல் முனிவனாகத்

தோன்றியவன் ஆதலால் **ஆதி முனி** எனப் பட்டான். விச்வாமித்திரன் காமதேனுவின் பொருட்டு வசிட்டரோடு போர் செய்து தோற்று, பிரும்மபலமே பலம் என்று கண்டு துறவு பூண்டு பிரும்மரிஷிப் பட்டம் பெற்றவன். பரசுராமன் என்ற அந்தண முனிவன் க்ஷத்திரிய குலத்தை அழித்தவன். அகத்தியன் கடல் நீரைத் தன் கையில் அடக்கியவன்.

**15.** **வந்தெதிர் முட்டுத லுந்தன தேரினை**
**மாறுப டத்திருகிச்**
**சிந்தையு மானமும் வீரமும் விட்டொரு**
**செயலற வென்னிடலும்**
**தந்திர நாதனுடைந்தன னென்றிரு**
**தானையின் மன்னவரும்**
**அந்தண னாண்மையும் வன்மையும் வின்மையு**
**மன்றுது தித்தனரே.**

[வந்து எதிர் முட்டுதலும் தன தேரினை மாறுபட திருகி, சிந்தையும் மானமும் வீரமும் விட்டு ஒரு செயல் அற வென் இடலும், தந்திரநாதன் உடைந்தனன் என்று இரு தானையின் மன்னவரும், அந்தணன் ஆண்மையும், வன்மையும் வின்மையும் அன்று துதித்தனர், ஏ.]

**விளக்கம்:-** துரோணன் எதிர் வந்து தாக்கிய அளவில், (திட்டத்துய்மன்) தன் தேரைப் பின்னாகத் திருப்பி, எண்ணுந் தன்மையையும், மானத்தையும் வீரத்தையும் இழந்து, செயல் கெடப் பின்னிடலும், பாண்டவர் படைத்தலைவன் தோற்றனன் என்று அறிந்து, இரு திறத்துச் சேனையைச் சேர்ந்த அரசர்களும், அன்று அந்தணனது ஆண்மையையும் வன்மையையும், வின்மை யையும் புகழ்ந்தனர், என்பது பொருள். தனது தேர், என்பது தனதேர் என்று நின்றது.

**16.** **வேதியன் விட்டச ரங்களி னொந்து**
**வெரீஇவரு மன்னவனைத்**
**தாதவிழ் பொற்றொடை மார்பிலணைத்துயர்**
**தரும னுரைத்தருள்வான்**
**நீதவ றிற்பினை யார்நிலை நிற்பவர்**
**நிருபர்சி காமணியே**
**மோதியி ளைத்தனையாறுகெ னப்பல**
**முகமன்மொ ழிந்தனனே.**

[வேதியன்விட்ட சரங்களின் நொந்து வெரீஇ வரும் மன்னவனை, தாது அவிழ் பொன் தொடை மார்பில் அணைத்து

உயர் தருமன் உரைத்தருள்வான், "நீ தவறின் பின்னை யார் நிலை நிற்பவர் நிருபர் சிகாமணியே, மோதி இளைத்தனை, ஆறுக," என பல முகமன் மொழிந்தனன், ஏ.]

**விளக்கம்:-** துரோணனது சரங்களால் வருந்தி, அஞ்சிப் பின்னிட்ட திட்டத்துய்மனைத் தருமன் மார்போடு அணைத்துக் கொண்டு, தைரியங் கூறுவானாய், "நிருபர் சிகாமணியே, நீ முன் நிற்க மாட்டாமல் பின்னிட்டால், வேறு யார் நிலை நிற்க வல்லவராவர்? போர் செய்து நீ களைத்தாய்; ஆற்றிக் கொள்க," என்று பல உபசார வார்த்தைகளைக் கூறினான், என்பதாம். பின்னை, என்பது வேறு என்ற பொருளது.

அபிமன் வியூகம் புகல்

**17. தன்னெதிர் மாமயி லோனென நின்ற**
**தனஞ்செயன் மாமகவைப்**
**பொன்னெதிர் பேரொளி யருள்வடி**
**வாகிய பூபதி வருதியென**
**நின்னெதிர் போரினி னிற்பவர் வேறிலர்**
**நேமிவி யூகமு நீ**
**முன்னெதி ராவமர் புரிபொழு தன்றி**
**முரண்குலை யாதினியே.**

[தன் எதிர் மா மயிலோன் என நின்ற தனஞ்செயன் மா மகவை, பொன் எதிர் பேர் ஒளி அருள் வடிவு ஆகிய பூபதி, 'வருதி', என, "நின் எதிர் போரினில் நிற்பவர் வேறு இலர், நேமி வியூகமும் நீ முன் எதிரா அமர் புரி பொழுது அன்றி முரண் குலையாது இனி, ஏ.]

**விளக்கம்:-** பொன்னை ஒத்த சிறந்த ஒளியோடு அருள் பொலியும் வடிவினனாகிய தருமன், தன் எதிரே முருகக் கடவுள் என நின்ற விசயனது சிறந்த மகனாகிய அபிமனை 'வருக' என அழைத்து, "போரில் உன் எதிர் நிற்பவர் எவரும் இலர். இனி நீ முன்னே எதிர்த்துச் சென்று போர் செய்தால் அல்லாமல் இச்சக்கர வியூகம் வலி அழியாது," - (தொடரும்) என்பது பொருள்.

அழகு, இளமை, வன்மையாகியவற்றில் முருகன் அபிமனுக்கு உவமை.

**18. என்னையழைத்துட னென்னலு டன்றுவென்**
**னிட்டவி லாசிரியன்**
**மன்னை வளைத்தொரு சக்கர வியூகம்**
**வகுத்தெதிர் நின்றனனால்**

**நின்னைய ளித்தத ராபதி தன்னையு**
**நின்னையு மேயொழியப்**
**பின்னையெடுத்தவி லோடெதிர் சென்றும்**
**பிளந்திட வல்லவர் யார்?.**

[என்னை அழைத்து உடன் நென்னல் உடன்று வென் இட்ட வில் ஆசிரியன், மன்னை வளைத்து ஒரு சக்கரவியூகம் வகுத்து எதிர் நின்றனன், (ஆல்), நின்னை அளித்த தராபதி தன்னையும் நின்னையும் ஒழிய பின்னை, எடுத்த விலோடு எதிர் சென்று பிளந்திட வல்லவர் யார்?]

**விளக்கம்:-** நேற்று என்னை அழைத்து என்னுடன் உடன்று வென் இட்ட வில் ஆசிரியனுன துரோணன், தன் பக்கத்து மன்னர்களைச் சுற்றிலும் நிறுத்தி சக்கரவியூகம் வகுத்து எதிரே போர் செய்ய நிற்கின்றான்; ''உன்னைப் பெற்ற விசயனையும் உன்னையும் தவிர, கையிலே பற்றிய வில்லோடு எதிரே சென்று வியூகத்தைப் பிளக்க வல்லார் வேறு எவர் இருக்கின்றார்?''— (தொடரும்) என்பது பொருள். உடன் - என்னுடன்.

**19. புல்லுக வென்றனன் மார்புற வன்பொடு**
**புல்லியி மைப்பொழுதில்**
**செல்லுக வென்றனன் வன்சம ரத்திடை**
**சென்றுமி கப்பகையைக்**
**கொல்லுக வென்றனனின்புய மேவரு**
**கொற்றவை தன்னருளால்**
**வெல்லுக வென்றன னன்றுது ரோணனை**
**வென்ற பெருந்தகையே.**

[புல்லுக என்றனன்; மார்பு உற அன்பொடு புல்லி, இமைப் பொழுதில் செல்லுக என்றனன்; வன் சமரத்திடை சென்று மிக பகையை கொல்லுக என்றனன்; நின் புயம் மேவரு கொற்றவை அருளால், வெல்லுக என்றனன், அன்று துரோணனை வென்ற பெருந்தகை, ஏ.]

**விளக்கம்:-** துரோணனை அன்று வென்ற பெருந்தகை - தருமன். அவன், அபிமனைத் தழுவிக் கொண்டு, ''வியூகம் பிளந்து சென்று கொற்றவை அருளால் வென்று வருக,'' என்று அவனுக்குச் சொன்னான், என்பதாம்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**20.** **மூத்த தாதைதன் னேவ லிற்கழன்**
**முளரி கைதொழு துரனுறச்**
**சேர்த்த நாணுடை வில்லன் வெய்யதெ**
**ரிந்த வாளியன் முதுகுற**
**கோத்த தூணியன் வாண்மு தற்பல**
**கொற்ற முற்றிய படையினன்**
**பார்த்தன் மாமக னிரத மீதுயர்**
**பரிதி யாமென வேறினன்.**

[மூத்த தாதை தன் ஏவலின் கழல் முளரிகை தொழுது உரன் உற சேர்த்த நாண் உடை வில்லன், வெய்ய தெரிந்த வாளியன், முதுகு உற கோத்த தூணியன், வாள் முதல் பல கொற்றம் முற்றிய படையினன், பார்த்தன் மா மகன் இரதம் மீது உயர் பரிதி ஆம் என ஏறினன்.]

**விளக்கம்:-** கழல் முளரி - முளரி போன்ற கழல் (தாமரை போன்ற பாதம்). உரன் உற சேர்த்த நாண் - வலிமை பொருந்தக் கட்டிய நாண். தெரிந்த வாளியன் - ஆராய்ந்து எடுத்த அம்புகளை உடையவன். படை - ஆயுதம். பார்த்தன் மகனை அபிமன் பெரிய தந்தையாகிய தருமனை வணங்கி, யுத்த சன்னத்தனாய் உயர்ந்த சூரியன்போல் தன் தேரில் ஏறிக் கொண்டான், என்பதாம்.

விளக்கத்திற்கும், பகையாகிய இருள் ஒழித்தற்கும் சூரியன் உவமை.

**21.** **வீர வார்கழல் கழலின் மீதுவி**
**ளங்க மார்பினில் வெண்ணிலா**
**ஆர மாலைது லங்க மாசுண**
**வலயம் வாகுவி லழகெழச்**
**சேர வானம திருள கற்றுமி**
**ரண்டு செஞ்சுட ரென்னவே**
**சார மாமணி குண்ட லங்கள்வ**
**யங்க மௌலித யங்கவே.**

[வீரம் வார் கழல் கழலின் மீது விளங்க, மார்பினில் வெள் நிலா ஆரம்மாலை துலங்க, மாசுணம் வலயம் வாகுவில் அழகு எழ, சேர வானம் அது இருள் அகற்றும் இரண்டு செம் சுடர் என்ன சாரம் மாமணி குண்டலங்கள் வயங்க மௌலி தயங்கவே, இதுவும் அடுத்த கவியும் குளகம்.]

**விளக்கம்:-** கழல் - வீரக் கழல், பாதம். ஆரம்-முத்துமாலை. மாசுணம் வலயம் - பாம்பின் வடிவம் அமைந்த தோள் அணி. வாகு - தோள். சாரம் மாமணி குண்டலம் - சிறந்த பெரிய மணிகள் இழைக்கப்பட்ட காதணி. வயங்க - விளங்க. தயங்க - பிரகாசிக்க. வீரக்கழல், ஆரம், வாகுவலயம் ஆகிய ஆபரணங்கள் அணிந்து, இருள் அகற்றும் சந்திர சூர்யர்கள் போன்ற குண்டலங்கள் விளங்கவும், கிரீடம் பிரகாசிக்கவும்,—(அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்) என்பதாம்.

வானமது, என்பதிலுள்ள அது பகுதிப் பொருள் விகுதி. விளங்க, துலங்க, எழ, வயங்க, தயங்க, என்ற ஒரு பொருளைக் குறிக்கும் சொற்கள். அவை பல விடங்களில் ஒரே பொருளில் வந்திருப்பதால், **பொருட் பின்வருநிலை அணி** ஆகும்.

**22. இனஞ்செய் கேண்மைகொ டுருப தேயனு**
**மெண்ணில் கோடிம கீபரும்**
**கனஞ்செய் தூரிய மெழவெ குண்டெறி**
**காலெனும்படி கைவரத்**
**தினஞ்செய் நாதன்க டாவு தேர்நிகர்**
**தேர்வி ரைந்துசெ லுத்தினன்**
**தனஞ்ச யன்றலை நாண்மு யன்ற**
**தவம்ப லித்தன தன்மையான்.**

[இனம் செய் கேண்மை கொள் துருபதேயனும் எண் இல் கோடி மகீபரும் கனம் செய் தூரியம் எழ வெகுண்டு எறிகால் எனும்படி கைவர தினம் செய் நாதன் கடாவு தேர் நிகர் தேர் விரைந்து செலுத்தினன், தனஞ்சயன் தலை நாள் முயன்ற தவம் பலித்து அன தன்மையான்.

**விளக்கம்:-**இனம் செய்கேண்மை — உறவின் முறையினல் இன மானவர்க்குச் செய்யும் மனம் பொருந்திய நட்பு. கனம் செய் தூரியம் — மேகம் போல் ஒலித்தலைச் செய்யும் வாத்தியங்கள். கை வர — இரு புறத்திலும் துணையாய் வர, (கை—பக்கம்). தினம் செய் நாதன் — சூரியன். விசயன் முன்னைய பிறவியில் முயன்ற தவம் பலித்தது (பயன் தந்தது)போன்ற சிறந்த தன்மையனான அபிமன். உறவின் உரிமையினல் செய்யும் நட்பைக் கொண்ட துருபத குமாரனுகிய திட்டத்துய்மனும், அளவில் அடங்காத தொகையினரான மன்னர்களும், மேகம் போல் வாத்தியங்கள் முழங்க, வெகுண்டு வீசும் பெருங்காற்று என்று சொல்லும்படி, இருபுறமும் துணையாய் வர, சூரியன் செலுத்தும் தேரை (வேகத்தில்) ஒத்த தனது தேரை (வியூகத்தை நோக்கிச்) செலுத்தினன், என்பது பொருள்.

## வியூகத்தை அபிமன் தாக்குதல்

**23. ஓதை கொண்டணி நின்ற சக்கர
யூகமன்னரு ரந்தொறும்
கோதை தங்குக ரத்தில் வில்லுதை
கூர வாளிகு ளிக்கவே
சீதை கொண்கனு மேவ லாருயிர்
தென்பு லத்திடு தன்பெரும்
தாதை யுந்தர மெனவி மைப்பிடை
தாவு தேரின னேவினன்.**

[ஓதை கொண்டு அணி நின்ற சக்கர யூகம் மன்னர் உரம் தொறும் கோதை தங்கு கரத்தில் வில் உதை கூர வாளி குளிக் கவே, சீதை கொண்கனும், மேவலார் உயிர் தென்புலத்து இடு தன் பெரும் தாதையும் தரம் என இமைப்பிடை தாவு தேரினன் ஏவினன்.]

**விளக்கம்:-** விரைந்து செல்லும் தேரை உடையவனை அபிமன் வீர முழக்கஞ் செய்துகொண்டு சக்கர வியூகத்தில் அணிபடநின்ற மன்னர் மார்பிடம் எல்லாம் கைக் கவசம் பொருந்திய கையி னிடத்து வில் தள்ளிய (செலுத்திய) கூரிய அம்புகள் புதையவும்,— சீதையின் கணவனை இராமபிரானும், பகைவரை யமனுலகம் செலுத்தும் தன் பெரும் தந்தையும் ஒப்பு எனும்படி இமைப் பொழு தில் சரப்பிரயோகம் செய்தான், —என்பது பொருள்.

கோதை—முன்கையில் அணியும் தோல் கவசம். தாதை— அபிமனின் தந்தையாகிய விசயன்.

**24. அச்சு தப்பெயர் மாது லன்புக
லரிய மந்திர மன்பினோடு
உச்ச ரித்தொரு நொடி யினிற்பல
கோடி பாணமு டற்றினன்
எச்சிரத்தையு மெப்பு யத்தையு
மிடைது ணித்தலி னடையமுன்
வச்சி ரத்தவ னுரைசெய் சக்கர
மாறி லாவணி பாறவே.**

[அச்சுதன் பெயர் மாதுலன் புகல் அரிய மந்திரம் அன்பினோடு உச்சரித்து ஒரு நொடியினில் பல கோடி பாணம் உடற்றினன்; எ சிரத்தையும் எ புயத்தையும் இடை துணித்தலின், வச்சிரத்தவன் உரை செய் சக்கரம் மாறு இலா அணி பாறவே, அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்**—அச்சுதன் என்ற ஒரு பெயரை உடைய தனது மாமனுன கண்ணபிரான் உபதேசித்த அரிய மந்திரத்தை பக்தியோடு உச்சரித்து ஒரு நொடிப்பொழுதில் பலகோடி பாணங்களை கோபத்தோடு தொடுத்தான்; (அவை) பகைவரது எல்லாத் தலைகளையும் தோள்களையும் நடுவில் துண்டித்தலால், இந்திரன் கற்றுக் கொடுத்த சக்கர வியூகத்தின் ஒப்பொன்று இல்லா அணி வகுப்பு அடைய (முழுவதும்) சிதைய, –(அடுத்த செய்யுளில் முடியும்), என்பது பொருள்.

கண்ணன் உபதேசித்தது, வைணவாத்திரம். சக்கரவியூகம் இந்திரனுல் கற்பிக்கப் பட்ட சிறந்த வியூகம், என்று தெரிகின்றது. வச்சிரத்தவன்—இந்திரன்.

**25.** **மல்ல லம்புய வபிமன் வெஞ்சர**
**மழைய னைத்தையு மாலெனப்**
**பல்ல வெங்கணை கொடுவி லக்கிமு**
**னைந்து வந்தெதிர் பற்றினுன்**
**வெல்ல வந்தது ரோண மாமுனி**
**விறல ழிந்தது குருவெனும்**
**சொல்ல ழிந்தது வில்ல ழிந்தது**
**தேர ழிந்தது தொடைகளால்.**

[மல்லல் அம் புயம் அபிமன் வெம்சரம் மழை அனைத்தையும், மால் என, பல்ல வெம் கணை கொடு விலக்கி, முனைந்து வந்து எதிர் பற்றினுன்; வெல்ல வந்த துரோண மாமுனி விறல் அழிந்தது, குரு எனும் சொல் அழிந்தது, வில் அழிந்தது, தேர் அழிந்தது தொடைகளால்.]

**விளக்கம்**:-மல்லல்—வலிமை, மால்—கண்ணன், பல்ல-பல, முனைந்து வந்து எதிர் பற்றினுன் – உக்கிரமாக எதிர் வந்து கணைகளைத் தடுத்தான். இந்திரன் ஏவிய அம்பு (அம்பு-நீர்) மழையை மலைகொண்டு விலக்கியது போல்,(துரோணன்) அபிமன் பொழிந்த சரங்களை விலக்கினுன்; (அப்பொழுது) இளவலது கணைகளால், வெல்ல வந்த துரோணனின் வலி அழிந்தது,வில்லாசிரியன் என்ற சொல் அழிந்தது, வில் அழிந்தது, தேர் அழிந்தது,—என்பதாம்.

**26.** **தந்தை வென்னிடு முன்னர் முப்புர**
**தகன னேநிகர் மகன் மிகச்**
**சிந்தை கன்றிவெ குண்டு தேரொடு**
**சென்று கால்வளை சிலையினால்**

**உந்துகின் றசி லீமு கம்பல**
**பகைமு கங்கட லுருவவே**
**முந்தி ஞனவ னப்பு மாரியின்**
**முழுகி ஞனுடன் முற்றுமே.**

[தந்தை வென் இடு முன்னர் முப்புரம் தகனனே நிகர் மகன், மிக சிந்தை கன்றி வெகுண்டு தேரொடு சென்று கால் வளை சிலை யினுல் உந்துகின்ற சிலீமுகம் பல பகை முகங்களில் உருவவே முந்தினுன், அவன் அப்பு மாரியின் முழுகினுன் உடல் முற்றுமே.]

**விளக்கம்:-** முப்புரதகனனே நிகர் மகன்—முப்புரம் எரித்த சிவ பெருமானை ஒத்த அசுவத்தாமன். தந்தை பின்னிடுமுன்னே மகன், மனம் வெதும்பி கோபத்துடன் (களம்) சென்று வில்லினுல் செலுத்தப்படுகின்ற பல பாணங்களைப் பகைவர் முகங்களில் உருவிச் செல்லும்படி போரில் முற்பட்டு முனைய உடனே, அவன் (அபிமன்) பொழிந்த சரமழையினுல் உடல் முழுகப் பெற்ருன், அதாவது பாணங்களால் துளைக்கப் பெற்ருன், என்பதாம். கால்வளை சிலை—கழுத்து வளைந்த வில். அப்பு-அம்பு.

கர்ணன் முதலியோர் தளர்தல்

**27. கன்ன னென்றுல கெண்ணும் வீரனு**
**மொய்ம்பு டன்பல கணைகள்வான்**
**மின்னெ ழுங்கொரு கோடி யென்னநி**
**றுத்தி மெய்யுற வீசினுன்**
**அன்ன வன்பக ழிக்கு லங்கள**
**நேக மோகர மாயையால்**
**என்ன வெஞ்சம ரினிந மக்கென**
**வேறு தேருட னேகினுன்.**

[கன்னன் என்று உலகு எண்ணும் வீரனும் மொய்ம்புடன் பல கணைகள் வான் மின் ஒழுங்கு ஒரு கோடி என்ன நிறுத்தி மெய் உற வீசினுன்; (எனினும் அன்னவன் பகழி குலங்கள் அநேகம் மோகரம் ஆகையால், என்ன வெம் சமர் இனி நமக்கு என ஏறு தேருடன் ஏகினுன்.]

**விளக்கம்:-** மின்னல் கூட்டங்களின் வரிசை போல பல அம்புகளை மெய்யில் துளைத்துச் செல்லும்படி (கர்ணன்) தொடுத் தான், - என்பது இரண்டாவது அடியின் பொருள். அன்னவன்- அந்த அபிமன். மோகரம் - கடுமை, உக்கிரம். இனி நமக்கு இவனோடு என் போர் செய்வதற்கு இருக்கின்றது, அதாவது,

இவனோடு இனிப் போர் செய்ய முடியாது, என்று எண்ணி ஏறிய தேரோடு திரும்பினன், என்பது ஈற்றடியின் பொருள்.

ஏறுதேருடன், என்றதனல், வில் முதலிய ஆயுதங்கள் அழியப் பெற்ருன், என்க. வேறு தேருடன், என்று கொண்டால் மோனை, கெடும்.

**28. கிருப மாமுனி தானு மேதகு**
**கிருத வன்மனு மோர்புறத்(து)**
**இருவ ராண்மையு நிலைபெ றும்படி**
**சென்று தூவின ரேவினல்**
**ஒருவ னேயிவ னிவனெ டுத்தது**
**மொருச ராசன மம்பிலே**
**வெருவி யோடினர் தங்க ளோரிரு**
**வில்லு மற்றுவெ றுங்கையே.**

[கிருபன் மா முனி தானும் மேதகு கிருதவன்மனும் ஓர் புறத்து, இருவர் ஆண்மையும் நிலை பெறும்படி சென்று தூவினர் ஏவினல்; ஒருவனே இவன், இவன் எடுத்ததும் ஒரு சராசனம், அம்பிலே வெருவி ஓடினர் தங்கள் ஓர் இரு வில்லும் அற்று வெறுங் கையே.]

**விளக்கம்:-** கிருபனும், கிருதவர்மனும் மற்ருேர் புறத்தில் தங்கள் ஆண்மையை நிலை நிற்கச் செய்யும் எண்ணத்தில், அம்பு களைச் சொரிந்தார்கள்; (அப்பொழுது களம் இருந்தவன்) இவன் (அபிமன்) ஒருவனே, இவன் எடுத்ததும் ஒரு வில்லே; (அவ்வாறு இருந்தும்) அவனது கணைகளால் இருவர் வில்களும் அறுபட்டு வெறுங்கையோடு அஞ்சி ஓடினர், - என்பதாம்.

**29. சகுனி யுந்திரு மகனு மற்றுள**
**தமரு மேலிடு தானையோடு**
**இகனெ டுங்களம் வென்று கொள்குவ**
**மென்று வந்தெதி ரணுகினர்**
**மகன்வி ழுந்தனன் மார்பின் மூழ்கிய**
**வாளி யொன்றினின் மற்றுளார்**
**மிகந டுங்கியொ டுங்கி யோடினர்**
**வீழு மன்னர்கள் வீழவே.**

[சகுனியும் திருமகனும் மற்று உள தமரும் மேல் இடு தானை யோடு இகல் நெடுங்களம் வென்று கொள்குவம் என்று வந்து எதிர் அணுகினர்; மகன் விழுந்தனன், மார்பின் மூழ்கிய வாளி ஒன்றி னின், மற்று உளார் மிக நடுங்கி ஒடுங்கி ஓடினர் வீழும் மன்னர் கள் வீழவே.]

**விளக்கம் :**-சகுனியும் அவன் மகனும் மற்றுள சுற்றமும் மேல் எழுந்து வரும் சேனையோடு, கொடிய பெரிய போர்க் களத்திலே பகை வென்று அபிமனை அகப்படுத்துவோம், என்று அவன் எதிர் வந்து நெருங்கினர்; மார்பில் புதைந்த அம்பு ஒன்றினால் மகன் விழுந்தான்; போர் வெல்ல விரும்பி மன்னர்கள் அழியவே, மற்றவர் நடுங்கி, ஒலி ஒடுங்கி பின்னிட்டு ஓடினர்,—என்பது பொருள். வீழ் மன்னர் - (போர் வெல்ல) விரும்பி வந்த அரசர். வீழ்தல் என்பதற்கு விரும்புதல் என்ற பொருளும் உள்ளது.

**30.** **வின்மு கந்தெழு வாளி வாளிவி**
**லக்க வந்தவி கன்னனும்**
**துன்மு கந்தலை யாக மற்றுள**
**துணைவ ருஞ்சமர் துன்னினர்**
**நன்மு கம்பெறு விசயன் மைந்தனும்**
**நானு மக்கெதி ரன்றுநீர்**
**பின்மு கம்பட வோடி யின்றுயிர்**
**பிழையு மென்றுரை பேசினன்.**

[வில் முகந்து எழு வாளி வாளி விலக்க வந்த விகன்னனும், துன்முகன் தலை ஆக, மற்று உள துணைவரும் சமர் துன்னினர்; நல் முகம் பெறு விசயன் மைந்தனும் நான் உமக்கு எதிர் அன்று; நீர் பின் முகம் பட ஓடி இன்று உயிர் பிழையும், என்று உரை பேசினன்.]

**விளக்கம்:**-வில் முகந்து எழு வாளி—வில் தன்னிடம் கொண்டு வெளிப்படுத்தும் தங்கள் அம்புகள். (அபிமனது) அம்புகளை விலக்க அம்புகளை எய்து கொண்டு வந்த விகர்ணனும், துன்முகன் முதலான மற்றத் தம்பியரும் போர் செய்ய நெருங்கினர்; (அப்பொழுது) அழகிய முகத்தையுடைய அருச்சுன குமாரனும் (அவர்களை நோக்கி), "நான் உங்களுக்கு எதிரானவன் அல்லன், (உங்களைவிட ஆற்றலால் மேம்பட்டவன்) நீங்கள் முதுகிட்டு ஓடி உயிர் பிழைத்துப் போங்கள்" என்று சில வாசகம் விளம்பினன், என்பது பொருள்.

**31.** **மற்று மற்றுமு னைந்து வந்தும**
**லைந்த வெஞ்சின மன்னர்மெய்**
**முற்று முற்றுமி வன்கை வாளிகண்**
**முனைபு தைந்திட மூழ்கலால்**

இற்ற விற்றப டைக்க லங்களு
மெய்த்த மெய்த்தப தாதியும்
அற்ற வற்றவி தங்கொள் வாகமு
மாகி யேகின ரடையவே.

[மற்றும் மற்றும் முனைந்து வந்து மலைந்த வெம் சினம் மன்னர் மெய் முற்றும் முற்றும் இவன் கை வாளிகள் முனை புதைந்து மூழ்க லால், இற்ற இற்ற படைக்கலங்களும், எய்த்த எய்த்த பதாதியும், அற்ற அற்ற விதம் கொள் வாகமும் ஆகி ஏகினர் அடையவே.]

**விளக்கம் :-**மேலும் மேலும் உக்கிரமாக வந்து மலைந்த வெம் சின மன்னர் உடல் முழுதும் இவன் (அபிமன்) கை அம்புகள்முனை தைத்துப் புதைதலால், அறுபட்ட ஆயுதங்களும், மிகவும் தளர்ந்த காலாட்களும், துண்டிக்கப் பட்ட யானை குதிரை தேர் ஆகிய பல விதப்பட்ட வாகனங்களும் உடையவர்களாய் எல்லோரும் திரும்பி ஓடினர்,-என்பது பொருள். அடைய ஓடினர்—மிச்சம் இல்லாமல் எல்லோரும் ஓடினர். வாகம்—வாகனம்.

வீமன் துணையாதல்

**32.** இளைய வன்றனி மதலை தெவ்வரி
ளைக்க விப்படி யிகல்செயத்
தளைய விழ்ந்தவ லங்கன் மீளி
சமீரணன்றிரு மதலைபோய்
வளைய வன்சிலை மன்ன வன்கழன்
மலர்வ ணங்கிவ ணங்கலார்
உளைய வந்தமர் முடுகி நின்றமை
கண்டு சோகமொ டுரைசெய்தான்.

[இளையவன் தனி மதலை தெவ்வர் இளைக்க இப்படி இகல் செய, தளை அவிழ்ந்த அலங்கல் மீளி சமீரணன் திருமதலை போய், வளையவன்சிலை மன்னவன் கழல் மலர் வணங்கி, வணங்கலார் உளைய வந்து அமர் முடுகி நின்றமை கண்டு சோகமொடு உரை செய்தான்.]

**விளக்கம்** —இளையவன் — விசயன். தனி மதலை-ஒப்பற்ற அபிமன். போருக்குரிய மலர்ந்த மலர்மாலை அணிந்த சிறந்த வீரனுடைய வாயுவின் புதல்வன் (வீமன்) – என்பது இரண்டாவது அடியின் பொருள். (அவன்), வணங்கலார் (பகைவர்) வளைத்துக் கொள்ள, அவர் வருந்தும்படி எதிர் சென்று துணையின்றிப் போரைக் கடுமையாகச் செய்து நின்ற அபிமனது நிலைகண்டு, (தருமனிடம்) போய், அவன் கழல் வணங்கி துன்பத்தோடு சில

வார்த்தை கூறலானுன், என்பதாம், வன்சிலை மன்னவன் — தருமன்.)

33. தோல நேகம நேக நேமிது
ரங்க மங்கள நேகநீள்
வேல நேகம நேகம் வாள்வரி
வில்ல நேகவி தம்படக்
கால நேகமெ ழுந்த தொத்தம
ராடு கின்றக ளத்திடைப்
பால னேகடி தேகி வெம்முனை
பயிலு வானெரு பாவமே.

[தோல் அநேகம், அநேகம் நேமி, துரங்கமங்கள் அநேகம், நீள் வேல் அநேகம், அநேகம் வாள், வரிவில் அநேகம் விதம்பட, கால் அநேகம் எழுந்தது ஒத்து அமர் ஆடுகின்ற களத்திடை பாலனே கடிது ஏகி வெம்முனை பயிலுவான்; ஒரு பாவமே.]

**விளக்கம்** — தோல்-யானை, நேமி - (சினை ஆகுபெயர்] தேர். யானை, தேர், குதிரை, வேல், வாள், வில் ஆகிய அறு வகைப் படைகளும் முதல் இரண்டு அடிகளால் குறிக்கப் பட்டன. துரங்கமம்—குதிரை. வில் அநேக விதம்—பலவகைப் பட்ட வில்கள், கால்—காற்று, கால் அநேகம்—பல திசைகளிலிருந்தும் அடிக்கும் காற்று; சப்த மருத்துக்கள். பகைவர் அறுவகைப் படைகளுங் கொண்டு, ஊழிக்காற்றுப் போல் எழுந்து போர் செய்கின்ற களத்தில், பாலகனுகிய அபிமன் தனியே விரைந்து சென்று கொடிய போர் செய்து பொருந்துவான்; (இப்படி அவனைத் தனியே விட்டு விட்டுப் பார்த்துக்கொண்டிருப்பது) பெரிய பாவமே ஆகும்,— என்று வீமன் கூறினுன், என்பதாம்.

34. எனக்கு நீவிடை நல்கு கென்றவ
னிருப தந்தொழுதி யாரினும்
தனக்கு நேர்தனை யல்ல தில்லென
வெல்ல வல்லதோர் தண்டினுன்
மனக்கு நேர்வரு தேரி னன்பல
மண்டலீகரு மன்னரும்
சினக்கு ழாமுறு சேனை யும்புடை
சூழ வன்றெதிர் செல்லவே.

[எனக்கு நீ விடை நல்குக என்று அவன் இரு பதம் தொழுது, யாரினும் தனக்கு நேர் தனை அல்லது இல் என, வெல்ல வல்லது ஓர் தண்டினுன், மனக்கு நேர் வரு தேரினன், பல மண்டலீகரும்

மன்னரும், சினம் குழாம் உறுசேனையும் புடைசூழ, அன்று எதிர் செல்லவே.]

**விளக்கம்:-** (பூலோகத்தில் உள்ள யாவரினும்) தனக்கு ஒப்பானவர் தன்னை அன்றி வேறு இலாத கதையை உடைய வீமன். மனக்கு நேர் வரு தேர் - தன் மனத்தோடு ஒத்த விரைவினதான தேர். தருமனை வணங்கி, அவனது விடை பெற்று, மண்டலாதிபதிகளும், அரசர்களும் சூழ்ந்துவர, (அபிமனுக்குத் துணை அமைய) பகைவரை எதிர்த்துச் செல்ல, (அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்), என்பதாம். சினக் குழாம் உறுசேனை - கோபத்தையுடைய கூட்டம் பொருந்திய பெரிய சேனை.

**35.** **சாயை யொத்தெழு சேனை யோடெதிர்**
**தடவி மன்குல வடவியில்**
**தீயை யொத்து விளங்கு மாருதி**
**சென்று மண்டிய திசையெலாம்**
**மாயை யொத்தொரு வடிவு மின்றிவ**
**குத்த சக்கர மண்டலம்**
**ஈயை யொத்தது கலுழ னொத்தன**
**னீறி லாவரி யேறனுன்.**

[சாயை ஒத்து எழு சேனையோடு எதிர் தடவி மன் குலம் அடவியில் தீயை ஒத்து விளங்கும் மாருதி சென்று, மண்டிய திசை எலாம் மாயை ஒத்து ஒரு வடிவும் இன்றி வகுத்த சக்கர மண்டலம் ஈயை ஒத்தது, கலுழன் ஒத்தனன் ஈறு இலா அரி ஏறு அனுன்.]

**விளக்கம்:-** சாயை ஒத்து எழு சேனை - நிழலைப்போல் தொடர்ந்து வரும் சேனை. அடவி - (பகை அரசர்களின் கூட்ட மாகிய) காடு. மண்டலம் - வட்டமாக வகுக்கப் பட்ட சேனை. மன் குல அடவியில், தீயைப்போல் விளங்குகின்ற வீமன் சென்று சேர்ந்த திசை எலாம், வியூகம் மாயை ஒத்து ஒரு வடிவமும் இல்லாமல், ஈக்கூட்டம் போல் சிதறலாயிற்று; அழிவற்ற ஆண் சிங்கத்தைப் போன்ற வீமன், கருடன்போல் களத்தில் எதிர் அற்று விளங்கினுன், என்பதாம்.

பறவைகளில் எளியது ஈ; அவற்றுள் சிறந்ததும் வலியதும் கருடன். சிதறிய பகைவர் கூட்டத்திற்கு ஈயும், சிதறச் செய்த வீமனுக்குக் கலுழனும் உவமையாயின. மாயை - பொய்த் தோற்றம்; அதாவது இருப்பதை இல்லாததாகவும், இல்லாததை இருப்பதாகவும் காட்டி மயக்கும் ஒரு சக்தி.

36. கலிங்கர் சோனகர் மகதர் கன்னடர்
கங்கர் கொங்கணர் கௌசலர்
தெலுங்க ராரியர் துளுவர் பப்பரர்
சீனர் சாவகர் சிங்களர்
குலிங்கர் மாளவர் களம ரொட்டியர்
குகுரர் கொப்பளர் கூபகர்
புலிங்க சாலமெ னச்ச தாகதி
புதல்வ னோடுறு போர் செய்தார்.

**விளக்கம்:-** செய்யுள் சுலபமானது. பதப் பிரிவு தரவில்லை. களமரொட்டியர் - களமர், ஒட்டியர் (இரு நாட்டார்). புலிங்க சாலம் - தீப் பொறிகள் கூட்டம். சதாகதி - வாயு பகவான். கலிங்கம் முதல் கூபகம் ஈருகவுள்ள நாட்டார் தீயைப்போல் வீமனோடு பெரும் போர் செய்தார், என்பதாம். முதல் மூன்று அடிகளில் அடைமொழிகள் இல்லாமை ஒரு நயம்.

37. பொருத பற்பல பாடை மன்னவர்
பொன்னி லங்குடி புகுதவே
விருத வித்தக னுடன்வ ரும்பல
பாடை மன்னவர் வெட்டினர்
ஒருதி றத்தவ லீமு கங்களு
றுக்கி யோடியு டன்றநாள்
நிருதர் பட்டது பட்டி றந்தனர்
நேமி யுட்படு நிருபரே.

[பொருத பல்பல பாடை மன்னவர் பொன் நிலம் குடி புகுதவே, விருதன் வித்தகனுடன் வரும் பல பாடை மன்னவர் வெட்டினர்; ஒரு திறத்த வலீமுகங்கள் உறுக்கி ஓடி உடன்ற நாள், நிருதர் பட்டது பட்டு இறந்தனர் நேமியுள்படும் நிருபர், ஏ.]

**விளக்கம்:-** விருத வித்தகன் - வீரமும் அறிவும் உடைய வீமன். வலீமுகங்கள்-(இராம சேனையான) குரங்குகள். உறுக்கி- வெகுண்டு. போர் செய்த (துரியோதனன் பக்கத்தினரான) பற்பல பாஷை பேசும் அரசர்கள், பொன் நிலம் (வானுலகம்) புகும்படி, வீமனுடன் வந்த பல பாஷை மன்னவர்கள் (பகைவரை) வெட்டி அழித்தார்கள்; (அப்பொழுது) சக்கர வியூகத்தில் இருந்த பகைவரான அரசர்கள், ஒரு திறத்தனவான வானரங்கள் வெகுண்டு ஓடிச் சென்று தாக்கிய நாள் அரக்கர்கள் பட்ட துன்பத்தை அடைந்து இறந்தனர்,—என்பதாம்.

38. மண்டு கொண்டலின் மிகவ திர்ந்தும
ருத்தின் மைந்தனு ருத்தெழுந்து
தண்டு கொண்டுவி யூக மாகிய
சக்க ரத்தையு டைத்தலால்
விண்டு கொண்டுமு ருக்கு மாருதி
மீள வந்தன னுமெனக்
கண்டு கொண்டனன் வெஞ்சி னக்கன
னின்று காய்தரு கண்ணினன்.

[மண்டு கொண்டலின் மிக அதிர்ந்து மருத்தின் மைந்தன் உருத்து எழுந்து, தண்டு கொண்டு வியூகம் ஆகிய சக்கரத்தை உடைத்தலால், (முன் யுகத்தில்) விண்டு கொண்டு முருக்கும் மாருதி மீள வந்தனன் ஆம் என, கண்டு கொண்டனன் வெம் சினம் கனல் நின்று காய்தரு கண்ணினன்.]

**விளக்கம்:-** வாயுகுமாரனுன வீமன், அடர்ந்த கார்மேகம் போல் ஆரவாரித்து, சினம் பொங்கப் பெற்று, எழும் (உயர்ந்த) கதையைக் கையில் கொண்டு, சக்கர வியூகத்தை உடைத்த லால், கொடிய கோபக்கனல் நின்று மூண்டு எரிகின்ற கண்களை உடையவனுன துரியோதனன், (மலைகளை முன்னைய யுகத்தில்) பறித்து எடுத்துக் கொண்டு பகை அழிக்கும் மாருதி (அனுமான்) மறுபடியும் போருக்கு வந்தனன் போலும், என்று நினைக்க லானுன், - என்பது பொருள். கண்டு கொண்டான், என்பது நினைக்கலானுன், என்ற பொருளது. முருக்கும் - அழிக்கும், (அழித்த).

எண்சீர் ஆசிரிய விருத்தம்

39. நபமுகின்மு ழங்கி யேறி யிடிவிட
நடுநடுந டுங்கி மாயு மரவென
உபரியெழு கின்ற சீயம் வரவர
வுடையுமிப சங்க மோடு வனவென
அபிமனொரு வன்கை யேவி னமபடை
யடையநெளி கின்ற தாய பொழுதினில்
விபினமிசை மண்டு தீயொ டனிலமும்
விரவுமியல் பந்தவீம னணுகிலே.

[நபம்.முகில் முழங்கி ஏறி இடிவிட நடுநடு நடுங்கி மாயும் அரவு என, உபரி எழுகின்ற சீயம் வரவர உடையும் இப சங்கம் ஓடுவன என, அபிமன் ஒருவன் கை ஏவின் நம படை அடைய நெளிகின்றது ஆய பொழுதினில், விபினம் மிசை மண்டு தீயொடு அனிலமும் விரவும் இயல்பு அந்த வீமன் அணுகில், ஏ.]

**விளக்கம்:-** நபம் முகில் - வானில் சஞ்சரிக்கும் மேகம், அல்லது கார்காலத்து மேகம். நடுநடு நடுங்கி - மிகமிக நடுங்கி. உபரி எழும் - மேலேபாயும். சீயம்—சிங்கம். இபசங்கம் – யானைக் கூட்டம். விபினம் - காடு. அனிலம் - காற்று. "இடிக்கு அஞ்சி மடியும் சர்ப்பங்கள் போலவும், சிங்கம் நெருங்கி வர வலி ஒடுங்கி ஓடும் யானைக் கூட்டங்கள் போலவும், அபிமன் ஒருவனது அம்பு களால் நமது சேனை முழுவதும் வருந்தும் இந்த சமயத்தில், வீமனும் துணையாக வந்து சேர்ந்து கொண்டால் காட்டில் பற்றிய தீயோடு காற்றும் கலந்து கொண்ட தன்மையதாகும்," என்று துரியோதனன் தன் பக்கத்து அரசர்களுக்குக் கூறினன், என்பதாம், ஏவின், ஏ - அம்பு; இன் ஐந்தன் உருபு. இது முதல் நான்கு செய்யுள்கள் குளகம்.

**40. சகுனியுடன் விந்து பூரி முதலிய**
**தரணிப ரடங்க வேகி மகபதி**
**மகன்மகனொ டிங்கு ருத படியெதிர்**
**வளைமின்வ ருகந்த வாகன் மதலையை**
**விகனனும டங்கல் போலு மிளைஞரும்**
**விருதர்ப லருந் துரோணன் மதலையும்**
**இகல்மலையி லிந்த நாழி கையிலிவ**
**ரிருவரையும் வென்று கோற லெளிதரோ.**

[சகுனியுடன் விந்துபூரி முதலிய தரணிபர் அடங்க ஏகி, மகபதி மகன் மகனொடு இங்கு உருதபடி எதிர் வளைமின் வரு கந்த வாகன் மதலையை; விகனனும் மடங்கல் போலும் இளைஞரும், விருதர் பலரும், துரோணன் மதலையும் இகல்மலையின், இந்த நாழி கையில் இவர் இருவரையும் வென்று கோறல் எளிது, அரோ.]

**விளக்கம்:-** விந்துபூரி - ஓர் அரசன். மகபதி மகன் மகன் - இந்திரகுமாரனது மகனான அபிமன். கந்தவாகன் - வாயு. விகனன் - விகர்ணன். விபுதர் - வீரர்களான அரசர்கள்.

சகுனியோடு விந்துபூரி முதலிய அரசர் எல்லோரும், இவ்விடத்தில் அபிமனோடு, எதிர்த்துவரும் வாயுகுமாரனான வீமன் சேராதபடி அவனை வளைத்துக் கொள்ளுங்கள்; விகர்ணனும், மடங்கல் போன்ற மற்றைத் தம்பியரும், மற்றும் உள்ள அரசர் பலரும், அசுவத்தாமனும் போர் செய்தால் இந்த ஒரு நாழிகைப் பொழுதில் இருவரையும் வென்று அழித்தல் எளியதாகும், (அரோ: ஈற்றசை) – என்பதாம். தரணிபர் அடங்க எதிர் வளைமின் என்றது, இடவழு.

41. எனவுயர்பு யங்க கேது வுரைசெய
விவனைவிடை கொண்டு வீர ரனைவரும்
முனைபடவ ணிந்து கால முகிலென
முரசினமு ழங்க வோடி யெதிரெதிர்
கனலெனவெ குண்டு சேனை பலபல
கசரதது ரங்க ராசி யுடன்வர
அனிலகுல மைந்த னுன பதியொடு
மபிமனெடும் வந்து போரின் முடுகவே.

[என உயர் புயங்ககேது உரை செய, இவனை விடை கொண்டு வீரர் அனைவரும், முனைபட அணிந்து காலமுகில் என, முரசு இனம் முழங்க, ஓடி எதிர் எதிர் கனல் என வெகுண்டு சேனை பல பல கச ரத துரங்க ராசியுடன் வர, அனில குலம் மைந்தனுன பதியொடும் அபிமனெடும் வந்து போரின் முடுகவே.]

**விளக்கம்:-** புயங்க கேது - துரியோதனன். இவனை விடை கொண்டு - இவனிடம் விடை பெற்று. முனைபட அணிந்து - களத்தில் ஒழுங்குபட அணி அமைத்து. கச ரத துரங்க ராசி-யானை தேர் குதிரைப் படைகளின் கூட்டம். அனில குல மைந்தன்-வாயுகுமாரனுன வீமன். பதி - (வீரர்) தலைவன். துரியோதனன் கூறியபடி அவனிடம் விடை கொண்டு, வீரர்கள், நால்வகைச் சேனைகளும் உடன்வரக் கோபத்தோடு வீமனுக்கும் அபிமனுக்கும் எதிரே வந்து போரின் நெருங்கினர், என்பதாம்.

42. விழிமலர்சி வந்து கோல மதிநுதல்
வெயர்வரவி ரண்டு தோளு முறைமுறை
அழகுறவி ளங்க மூர னிலவெழ
வணிமகர குண்ட லாதி வெயிலெழ
முழவினெடு சிங்க நாத மெழவெழ
முடுகியெதிர் சென்று மோதி யவரவர்
எழில்வடிவ மெங்கும் வாளி யுதையின
னிரதமிசை நின்ற வாயு மதலையே.

[விழி மலர் சிவந்து, கோலம் மதி நுதல் வெயர் வர, இரண்டு தோளும் முறை முறை அழகு உற விளங்க, மூரல் நிலவு எழ, அணி மகர குண்டலம் ஆதி வெயில் எழ, முடுகி எதிர் சென்று மோதி அவர் அவர் எழில் வடிவம் எங்கும் வாளி உதையினன் இரதம் மிசை நின்ற வாயு மதலை, ஏ.]

**விளக்கம்:-** தேரின்மேல் நின்ற வீமன், கண் மலர் சிவக்கப் பெற்று, அழகிய மதி போன்ற நெற்றியில் வேர்வை உண்டாகவும்,

இரண்டு தோள்களும் மாறி மாறிப் பூரித்து அழகுமிக விளங்கவும், இளநகை நிலவு போன்ற ஒளியை வீசவும், அணிந்துள்ள மகர குண்டலம் முதலிய ஆபரணங்கள் பிரகாசத்தை வெளிப்படுத்தவும், வாத்திய கோஷங்களோடு சிங்கம் போல் வீர கர்ச்சனை செய்து கொண்டு, விரைந்து (பகைவர்) எதிர் சென்று தாக்கி, அந்த அந்தப் பகைவரது எழில் உடல் முழுதிலும் பாணங்களைப் பதித்தான், என்பது பொருள்.

**43.** மணிமுடிசி ரங்க ளோடு தறிபட
வலயமொட ணிந்த தோள்க டறிபட
அணிகழலொ டுந்து தாள்க டறிபட
வயிலொடுக ரங்க ளான தறிபட
நணியவிர தங்கள் சாய விவுளிக
ணடுவறவ ளைந்த சாப முதலிய
துணிபடவ ழிந்து மீள நடவினர்
துவசபுய கன்ப தாதி நிருபரே.

[மணிமுடி சிரங்களோடு தறிபட, வலயமொடு அணிந்த தோள்கள் தறிபட, அணி கழலொடு உந்து தாள்கள் தறிபட, அயிலொடு கரங்களான தறிபட, நணிய இரதங்கள் சாய, இவுளிகள் நடு அற, வளைந்த சாபம் முதலிய துணிபட அழிந்து மீளநடவினர் துவச புயகன் பதாதி நிருபர்; ஏ.]

**விளக்கம்:** சிரங்கள் மணிமுடியோடு (கிரீடங்களோடு) தறிபட, தோள்கள் அணிந்த வலயமொடு தறிபட. உந்துதாள் - செலுத்தும் கால்கள், அல்லது உயர்ந்த கால்கள். அயில் - வேல். நணிய இரதம் - நெருங்கிய இரதம். மீள நடவினர் - பின்னிட்டுச் சென்றனர். துவச புயகன் - கொடியில் பாம்பைக் கொண்ட துரியோதனன். மாண்டவர் போக மிஞ்சிய துரியோதனனது சேனை அரசர்கள் புறங் கொடுத்து ஓடினர், என்பதாம்.

**44.** விசயன்மக னுந்தன் மீது வரும்வரும்
விருதருட லங்கள் யாவு நிரைநிரை
தசைகுருதி யென்பு மூளை யிவையிவை
தரணிமிசை சிந்தி வேறு படவீழ
அசையவி ரதங்க டாவி வளைதரு
மணிசிலையு மம்பு மாகி முனைமுனை
திசைதொறுந டந்து சீற ரவியெதிர்
திமிரபட லங்க ளான வடையவே.

விசயன் மகனும், தன்மீது வரும் வரும் விருதர் உடலங்கள் யாவும் நிரை நிரை தசை குருதி என்பு மூளை இவை இவை தரணி

மிசை சிந்தி, வேறுபட விழ, அசைய இரதம் கடாவி வளை தரும் அணி சிலையும் அம்பும் ஆகி முனைமுனை திசை தொறும் நடந்து சீற, ரவி எதிர் திமிர படலங்கள் (திமிரம் படலங்கள்) ஆன அடையவே.]

**விளக்கம்:-** அபிமனும், தன் மேல் வந்து கொண்டிருக்கும் விருதர் (வீரர்) உடல்கள் முழுதும் வரிசை வரிசையாய், சதை, ரத்தம், எலும்பு மூளை ஆகியவற்றைத் தரையில் சிந்தி உயிர் வேறு பட்டு நீங்க, இறந்து விழும்படி, ஆடிக் கொண்டு செல்லும்படி தேரைச் செலுத்தி, வளைந்த அழகிய வில்லும் அம்பும் கையில் கொண்டவனாய், களத்தில் பகைவர் எதிர்க்கும் இடங்கள் எங்கும் சென்று சீறிப் போர் செய்ய பகைவரின் கூட்டம் முழுதும் சூரியனின் முன் இருளின் கூட்டம்போல் ஆயின; அதாவது, பகைவர் கூட்டங்கள் அபிமனின்முன், இருந்த விடந்தெரியாமல் மடிந்து அழிந்தன, என்பதாம். ஆன - வினைமுற்று, அடைய - முழுவதும். திமிரம் - இருள். படலம் - கூட்டம்,

துரியோதனன் கூற்று

**45.** இருவரெதி ரும்பொ ருமன் முடுகிய
விருபடையு நொந்து மீள வவனிபன்
வெருவொடுத ளர்ந்து போன நிருபரை
மிகவசை மொழிந்து போத நகைசெய்து
கருகிமுக நெஞ்சு கோப வனல்கொடு
கதுவிநய னங்கள் சேய நிறமுற
அருகுவரு சிந்து ராச திலகனெ
டபரிமித மின்சொ லாக வுரைசெய்தான்.

[இருவர் எதிரும் பொருமல் முடுகிய இரு படையும் நொந்து மீள, அவனிபன் வெருவொடு தளர்ந்து போன நிருபரை மிக வசை மொழிந்து, போத நகை செய்து, கருகி முகம், நெஞ்சு கோபம் அனல் கொடு கதுவி, நயனங்கள் சேய நிறம் உற, அருகு வரு சிந்துராச திலகனொடு அபரிமிதம் இன் சொல் ஆக உரை செய்தான்.]

**விளக்கம்:-**(வேகமாகச் சென்ற துரியோதனனது)இரண்டாகப் பிரிந்த சேனைகளும் (வீமன் அபிமன் என்னும்) இருவர் எதிரிலும் (அவர்களது பாணங்களின் கடுமையை) பொறுக்க மாட்டாமல் அஞ்சித் தளர்ந்து பின்னிட்ட நிருபரை நிந்தித்து, மிகவும் இகழ்ச்சி தோன்ற நகைத்து, உள்ளம் கோபக்கனலால் பற்றப் பட்டு, முகம் கருகிக் கண்கள் சிவக்க,—தன் அருகுவந்த சிந்து நாட்டு ராஜதிலகனை சயத்திரதனுடன் இனிய உபசார மொழி

யாகப் பல வார்த்தைகளைத் துரியோதனன் சொல்லலானான், என்பது பொருள். அபரிமிதம்—அளவற்ற, மிகப் பல வார்த்தைகள்.)

**46.** மறனுடையை செம்பொன் மேரு கிரிநிகர்
வலியுடையை வென்றி கூரு மரசியல்
அறனுடையை பஞ்ச பாண னெனவடி
வழகுடையை நின்ற சேனை யரசரின்
திறனுடையை திங்கள் சூடி வியனதி
நிறைபுனல்ப ரந்து லாவு மவுலியர்
திறனுடைய மன்ற னாறு மலரடி
தெளிவொடுப ணிந்த ஞான முடியினை.

[மறன் உடையை; செம்பொன் மேரு நிகர் வலி உடையை, வென்றி கூரும் அரசியல் அறன் உடையை, பஞ்சபாணன் வடிவு அழகு உடையை, நின்ற சேனை அரசரின் திறன் உடையை. திங்கள் சூடி வியன் நதி நிறை புனல் பரந்து உலாவும் மவுலியர் திறன் உடைய மன்றல் நாறும் மலர் அடி தெளிவொடு பணிந்த ஞானமுடியினை,—தொடரும்.]

**விளக்கம்:**-போராற்றல் உடையவனே; செம்பொன் மேரு மலையை ஒத்த வலிமை உடையவனே, வெற்றி மிகுந்த அரசாட்சியையும் தருமத்தையும் உடையவனே, மன்மதன் போன்ற வடிவழகு உடையவனே, இங்கே உள்ள சேனை அரசர்களுள் சிறந்தவனே, சந்திரனைத் தரித்து, ஆகாச கங்கையின் நிறைந்த நீர் பரந்து அலையிடும் திரு முடியின் மகிமை உடைய மணம் கமழும் தாமரை மலர் போன்ற திருவடிகளை (பக்தியோடு) வணங்கிய தலையை உடையவனே, (என்று துரியோதனன் புகழ்ந்து கூறுவான்) என்பது பொருள்.

**47.** வயவிசய னின்ற தேர்க டவிவரும்
வலவன்ம ருகன்ற னெடு வரைபுரை
புயமுடைய தண்ட வீம னுறிலிரு
பொருநரையு மின்று பூசல் பொரவரிது
அயலிவர கன்று போகி லமர்பொர
வறவுமெளி துண்டு பாய நுதலெரி
நயனனருள் கொன்றை மாலை தனையிவர்
நடுவிடிலி ரண்டு பாலு மகல்வரே.

[வயம் விசயன் நின்ற தேர் கடவி வரும் வலவன் மருகன் தனெடு வரை புரை புயம் உடைய தண்டம் வீமன் உறில். இரு

பொருநரையும் இன்று பூசல் பொர அரிது; அயல் இவர் அகன்று போகில் அமர் பொர அறவும் எளிது, உண்டு உபாயம்; நுதல் எரி நயனன் அருள் கொன்றை மாலைதனை இவர் நடுவில் இடில் இரண்டு பாலும் அகல்வர், ஏ.]

**விளக்கம் :** அபிமனோடு வீமனும் கூடி விட்டால் இரு வீரர்களை யும் இன்று எதிர்த்துப் போர் செய்ய முடியாது; இவர் வேறு வேறு இடம் அகல்வாரேல் போர் செய்ய மிகவும் சுலபமாகும்; இவர்களை, ஒன்று சேராமல் செய்ய உபாயம் உளது; சிவபெருமான் அருளிய கொன்றை மாலையை இவர்களுக்கு இடையில் போட்டால், ஒன்று சேராமல் இரு பக்கங்களிலும் பிரிந்து அகல்வர், (என்றான்), என்ப தாம்.

வீமன்பால் பகை கொண்ட சயத்திரதன், சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்ய, அப்பிரான் அவன் முன் தோன்றி, ''என்ன செய்ய வேண்டும்'' என்று கேட்க, அவன், பாண்ட வரை வெல்ல வரந்தர வேண்டும் என்றான். ''கண்ணனது துணை பெற்ற பாண்டவரை வெல்லல் அரிது'' என்று சிவபிரான் கூறி, ''விசயன் ஒழிந்த மற்றவரை ஒரு நாள் தகைவதற்கு உத வும்'' என்று கூறிக் கொன்றை மாலையையும், கதை ஒன்றையும் கொடுத்தருளினான், என்பது வரலாறு.

**48. அரன்முடிய ணிந்த தாம மிதுவென**
**வடிகொடுக டந்து போக வெருவுவர்**
**பரவைநிகர் நம்ப தாதி யவனிபர்**
**பலருடன்வ ளைந்து கோலி யமரிடை**
**வரமுறவ ணங்கு நாளி லருள்செய்து**
**மனமகிழ மங்கை பாக னுதவிய**
**உரனுடைய தண்டி னுலிவ் வபிமனை**
**யுயிர்கவர்த லின்று சால வுறுதியே,**

[அரன் முடி அணிந்த தாமம் இது என அடி கொடு கடந்து போக வெருவுவர், பரவை நிகர் நம் பதாதி அவனிபர் பலருடன் வளைந்து கோலி அமரிடை, வரம் உற வணங்கு நாளில் அருள் செய்து மனம் மகிழ மங்கை பாகன் உதவிய தண்டினால் அபிமனை உயிர் கவர்தல் இன்று சால உறுதியே.]

**விளக்கம்** —(மாலையை எறிந்தால்) ''அரன் முடிமாலை இது'' என்று அதனைத் தாண்டிச் செல்ல இருவரும் அஞ்சுவர்; (அப் பொழுது கடல் போன்ற நமது சேனையின் அரசர்கள் பலருடன் சூழ்ந்து போரில் வரம் பெற நீ வணங்கிய காலத்தில் மங்கை

பாகன் மனம் மகிழ்ந்து உனக்கு அளித்தருளிய மலையை ஒத்த கதையினால் அபிமனது உயிர் கவர்தல் (நமக்கு) நன்மையைத் தரும் உபாயமாகும் (என்றான்) என்பதாம்.

சயத்திரதன் உடன் படல்

**49. எனவிவன்மொ ழிந்த போதி லவனிவ**
**னிணையடி வணங்கி யாது நினைவினி**
**உனதுநினை வெஞ்சி டாம லபிமனை**
**யுயிர்கவர்வ னென்று தேற வுரைசெய்து**
**கனகதரு மன்றன் மாலை யெனவொளிர்**
**கடியிதழி யந்தண் மாலை பரமனை**
**மனனுறவு ணர்ந்து நாவி னிகழ்தரு**
**மறையொடுவ ளைந்து வீழ வெறியவே.**

]என இவன் மொழிந்தபோது அவன் இவன் இணை அடி வணங்கி, ''யாது நினைவு இனி; உனது நினைவு எஞ்சிடாமல் அபிமனை உயிர்கவர்வன்,'' என்று தேற உரை செய்து, கனகதரு மன்றல் மாலை என ஒளிர் கடி இதழி அம்தண் மாலை பரமனை மனன் உற உணர்ந்து நாவின் நிகழ்தரு மறையொடு வளைந்து வீழ எறியவே.]

**விளக்கம்**—இவன் : துரியோதனன். அவன்—சயத்திரதன். உனது நினைவு யாது (அந்த) நினைவு எஞ்சிடாமல் — உனது எண்ணம் யாதோ, அந்த எண்ணம் இனி பழுதடையாமல். கனக தரு—கற்பக தரு. மனன் உற உணர்ந்து—தியானித்து. நாவின் நிகழ்தரு மறை—நாவினால் உச்சரிக்கப்படும் மந்திரம். துரியோதனன் கூறியதும், சயத்திரதன் இவனை வணங்கி, நீ சொல்லிய வாறே செய்து அபிமன் உயிர் கவர்வேன் என்று தெளிவு உண்டாகும் படி சொல்லி, கற்பக தருவின் மலர்போல் விளங்கும் அழகிய குளிர்ச்சி பொருந்திய கொன்றை மலர்மாலையை, மந்திரத்தோடு, அபிமனது தேரைச் சூழ்ந்து கொள்ளும்படி வீச, (தொடரும்) என்பதாம். கடி : மணம் என்ற பொருளுடைய உரிச்சொல். இதழி—நெருக்கமான இதழ்களையுடைய (கொன்றைமலர் மாலை)

**50. எறிதொடையல் சங்க பாணி மருமக**
**னிகலுமமர் வென்று மீளுமளவையின்**
**நெறியிடைவி ளங்கி வாள கிரியென**
**நிமிர்வுறவ ளைந்து சூழ வருதலும்**
**அறிவுடனி றைஞ்சி யாதி பகவன**
**தணிமுடிய லங்க லாகு மடையுலர்**

**முறியவினி மண்டு போரி லமர்செய்து**
**முடிதுமென வந்து மீள முடுகவே.**

[எறி தொடையல் சங்கபாணி மருகன் இகலும் அமர் வென்று மீளும் அளவையில், நெறியிடை விளங்கி வாள கிரி என நிமிர்வு உற வளைந்து சூழ வருதலும், அறிவுடன் இறைஞ்சி, ஆதிபகவனது அணி முடி அலங்கல் ஆகும்; அடையலர்முறிய இனி மண்டு போரில் அமர் செய்து முடிதும் என வந்து மீள முடுகவே, தொடரும்.

**விளக்கம்**—சங்கபாணி—கண்ணன். வாளகிரி—சக்ரவாளமலை. நிவுமிர் உற-தோன்ற. அறிவுடன் இறைஞ்சி-(இறைவனது மாலை என்ற) உணர்வோடு வணங்கி, அடையலார்—பகைவர். முறிய-அழிய. எறியப்பட்ட மாலை, அபிமன் எதிர்த்துச் செய்த போரில் வென்று திரும்புகையில், வழியில் பிரகாசித்துக்கொண்டு சக்கர வாள கிரி போன்ற தோற்றத்துடன் சூழ்ந்து கொள்ள, அதை வணங்கி, ஆதிபகவனது முடிமாலையாகும்; (கடந்து) செல்லல் முறையன்று, ஆதலால் ''நெருங்கிய போரில் பகைவர் அழியப் போர் செய்து மடிவோம்,'' என்று எண்ணி மறுபடியும் திரும்பி வந்து போர் செய்யலும்,-(தொடரும்,) என்பதாம்.

சக்கர வியூகத்தில் அகப்பட்டுக் கொண்ட தனக்குத் துணையில்லாமல் போனமையாலும், வியூகத்தினின்று வெளிப்பட வழி தெரியாமையாலும், முடிந்தவரையில் பகைவரை அழித்துச் சாவோம், எள்று துணிந்தான், என்க. உலகைச் சுற்றியுள்ளதான ஒரு மலை சக்கரவாளகிரி. ஆதிபகவன்-அனாதியான இறைவன்; சிவபெருமான்.

வஞ்சித்துறை

**51. பரிசனகு மாரன்விடு, மெரிகணைக ளான்முடுகு**
**தரியலர்ப தாதிபடை, நெரியவரு காலையிலே.**

[பரிசன குமாரன் விடும் எரி கணைகளால் முடுகுதரியலர் பதாதி படை நெரிய வருகாலையிலே.]

**விளக்கம்**.—பரிசன குமாரன்-வாயு குமாரன் (வீமன்). எரி கணை—அழிக்கும் அம்புகள். முடுகு தரியலர்—போர் செய்த பகைவர். பதாதி படை—சேனையின் கூட்டம். வீமனது கணைகளால் பகைவர் சிதைய, (அவன் அபிமன் இருக்குமிடம்) வரும் பொழுதில்,—(தொடரும்) என்பதாம்.

**52. விறலபிம னின்றகள, முறுதுமினி யென்றுநனி**
**குறுகலும்வி லங்கியது, நறையிதழி யந்தொடையே.**

[விறல் அபிமன் நின்ற களம், உறுதும் இனி, என்று நனி குறுகலும். விலங்கியது நறை இதழி அம் தொடை, ஏ.]

**விளக்கம்:-** வெற்றியுடைய அபிமன் நின்ற இடம் இப்பொழுது சேருவோம் என்று, எண்ணி (வீமன்) மிக நெருங்கிய அளவில் மணமுடைய அழகிய கொன்றை மாலை குறுக்கிட்டது.

**53. இன்றமரின் யாருமுயிர், பொன்றிடினு மீசனணி**
**கொன்றைகட வேனெனமுன், நின்றனன ராதிபனே.**

[இன்று அமரின் யாரும் உயிர் பொன்றிடினும் ஈசன் அணி கொன்றை கடவேன், என முன் நின்றனன் நராதிபன், ஏ.]

**விளக்கம்:-** நராதிபன்-வீமன். ''இன்று யார் மடியினும், (நான்) சிவபெருமான் அணியும் கொன்றை மாலையைத் தாண்டிச் செல்லமாட்டேன்,'' என்று எண்ணி, வீமன் அம்மாலையின் முன் நின்றான், என்பதாம்.

**54. முந்துவடி வாளமரின், வந்தணுகு வான்மதலை**
**நிந்தனைகொ லாமிதென, நொந்துசில கூறினனே.**

[முந்து வடிவான் அமரின் வந்து அணுகுவான் மதலை, நிந்தனை (கொல்) ஆம் இது என, நொந்து சில கூறினன், ஏ.]

**விளக்கம்:-** வாள்-ஆயுதங்கள். சிறந்த கூரிய ஆயுதங்களைக் கொண்டு போரில் நெருங்கியுள்ளவனோ, மகனான அபிமன்; இது, அதாவது, நான் உதவ முடியாமையாகிய இது பழிப்புக்கு இடமாகும், என்று எண்ணி, வீமன் மனம் வருந்திச் சில கூறுவானாயினான், என்பதாம். கொல்: அசை.

**55. இந்தமது மாலையிடை, தந்தபிம னுருயிரை**
**உந்தியிட வோவெளிது, சிந்துபதி சேவகமே.**

[இந்த மது மாலை இடைதந்து அபிமன் ஆர் உயிரை உந்தியிடவோ எளிது, சிந்துபதி சேவகம், ஏ.]

**விளக்கம்:-** சிந்துபதியான சயத்திரதனது வீரம், இந்த மது மாலையை வழியிலே போட்டு அபிமனது உயிரைப் போக்குவதற்கோ, வல்லதாயிற்று; அவனது இவ்வீரச் செயல் தாழ்மையுடையதே! அதாவது, வீரதர்மம் கடந்து, இறைவனது மாலை

யைக் குறுக்கே இட்டுக் கொல்லச் சூழும் இச்செயல் இகழ்ச்சிக் குரியதே, என்று வீமன் கூறி வருந்தியபடி.

**56. விரகுபட வெப்பொழுதும், முரணமர் தொடக்கும்வலி**
**உரகதுவ சற்கொழிய, வரசரிலெ வர்க்குளதோ.**

[விரகு பட எப்பொழுதும் முரண் அமர் தொடக்கும் வலி உரக துவசற்கு ஒழிய அரசரில் எவர்க்கு உளது, ஓ.]

**விளக்கம்:-** எப்பொழுதும் வஞ்சனையாகவே மாறுபடு போர் ஆரம்பித்துச் செய்கின்ற வீரச்செயல் உரகத்துவசனுன துரியோதனனுக்கு அன்றி அரசர்களில் எவர்க்கும் உளதாமோ! வேறு எவரும் இவ்வழி செய்யார், என்றபடி.

**57. தன்மகனை யுஞ்சமரில், வன்மையொடு கொன்றழிய**
**மன்முனைதி ரண்டிடினும், என்மகனி றந்திடுமோ.**

**விளக்கம்:-** மன் முனை திரண்டிடினும், என் மகன், தன்மகனை (துரியோதனனது மகனையும்) சமரில் வலிமையால் கொன்றுல் அன்றி, இறந்திடான், என்பதாம். மன் - அரசர்கள் (சாதிப் பெயராய் அரச சமுகத்தைக் குறித்து நின்றது.)

**58. என்றிதழி மாலேதனை, நின்றுதொழு தன்பினெடு**
**சென்றனனி டிம்பனைமுன், வென்றதிறல் வீமனுமே.**

[என்று இதழி மாலேதனை நின்று தொழுது அன்பினெடு சென்றனன் இடிம்பனை முன் வென்ற திறல் வீமனும், ஏ.]

**விளக்கம்:-** வீமன், (முன் கூறியபடி) சொல்லி, கொன்றைப் பூமாலையை நின்று தொழுது அப்பால் சென்றனன், என்பதாம்.

**59. மாலேகட வாமல்வரு, பாலனர சர்க்குநடு**
**வேலேவட வைக்கனலி, போலொளிர நின்றனனே.**

[மாலே கடவாமல் பாலன் அரசர்க்கு நடு, வேலே வடவை கனலி போல் ஒளிர நின்ருன், ஏ.]

**விளக்கம்:-** வடவைக் கனலி-கடலின் மத்தியில் உள்ள படவாமுகாக்னி. பகைவர் கூட்டத்திடை பாலனுன அபிமன் வேலேக்கனல்போல் விளங்கி நின்ருன், என்பதாம்.

**60. யாளியென நின்றவய, மீளியை வளைந்துபல**
**வாளிகள்பொ ழிந்தனர்கள், கூளிக ணடஞ்செயவே.**

[யாளி என நின்ற வயமீளியை வளைந்து பல வாளிகள் பொழிந்தனர்கள், கூளிகள் நடம் செயவே.]

**விளக்கம்:-** கூளி-பேய்கள். யாளி என நின்ற வயமீளியைச் (அபிமனை) சூழ்ந்து கொண்டு (பகைவர்) பேய்கள் நல்ல உணவு கிடைக்கும் என்று கூத்தாட, பல பாணங்களைப் பொழிந்தார்கள், என்பதாம்.

**61. பற்பலரு மர்த்தரதர், விற்பல வணக்கியெதிர்**
**சொற்பொலி வயப்பகழி, சிற்சில தொடுத்தனரே.**

[பல்பலரும் அர்த்தரதர் வில்பலவணக்கி எதிர் சொல் பொலி வய பகழி சில் சில தொடுத்தனர், ஏ.]

**விளக்கம்:-** சொல் பொலி வயப் பகழி-புகழின் விளக்க முடைய வலிய அம்புகள். அர்த்தரதர் பலர் அபிமன்மேல் சிற்சில வலிய அம்புகளைத் தொடுத்தார்கள், என்பதாம்.

**62. பெய்கணை யடங்கவிவன், எய்கணை விலக்கியிட**
**மொய்கணை யனந்தமவர், மெய்கணைய வுந்தினனே.**

[பெய்கணை அடங்க இவன் எய் கணை விலக்கியிட, மொய் கணை அனந்தம் அவர் மெய்கள் நைய (அபிமன்) உந்தினன், ஏ.]

**விளக்கம்:-** அனந்தம்-அளவுகடந்த, மிகப்பல. மெய்கள் நைய-(பகைவர்) உடல்கள் வருந்த. பகைவர் கணைகளை விலக்கி, அவர் உடல்கள் வருந்த அபிமன் பல கணைகளைச் செலுத்தினன், என்பதாம்.

கன்னன் பின்னிடல்

**63. கன்னனு மடங்கலபி, மன்னுவு முடன்றுமுனை**
**முன்னிரத முங்கடவி, மன்னமர் தொடங்கினரே.**

[கன்னனும் மடங்கல் அபிமனுவும் உடன்று முனைமுன் இரதமும் கடவி, மன் அமர் தொடங்கினர், ஏ.]

**விளக்கம்:-** உடன்று முனைமுன்-வெகுண்டு போர்க்களத்தின் முன்னே. மன் அமர்-கடுமையான போர். கர்ணனும் அபிமனும் கடும் போர் தொடங்கினர், என்பதாம்.

**64. அங்கர்பதி தேரிலிவன், வெங்கணைக ணாலுவிட
மங்குலென நாலுதுர, கங்களும் விழுந்தனவே.**

[அங்கர்பதி தேரில் இவன் வெம் கணைகள் நாலு விட, மங்குல் என நாலு துரகங்களும் விழுந்தன, ஏ.]

**விளக்கம்:-** அங்கர்பதி-கர்ணன். இவன்-அபிமன். மங்குல் - மேகம். அபிமன் நாலு கணைகள் விட, கர்ணனது தேர்க்குதிரைகள் நாலும் மேகம்போல் இறந்து விழுந்தன,—என்பதாம்.

**65. தொடுத்தசிலை கோலியிவன், எடுத்தசிலை யுங்கொடியும்
நடுத்தறிய வெட்டிமுனை, கெடுத்தன னனந்தரமே.**

[தொடுத்த சிலை கோலி இவன் எடுத்த சிலையும் கொடியும், நடு தறிய வெட்டி முனை கெடுத்தனன், அனந்தரம், ஏ.]

**விளக்கம்:** தொடுத்த சிலை கோலி-பற்றிய வில்லை வளைத்து. முனை கெடுத்தனன்-போரைக் கெடுத்தான். அனந்தரம்-பின்பு. அபிமன், கர்ணனது வில்லையும் கொடியையும் அறுத்து, அவன் மேலும் தொடர்ந்து போர் செய்ய முடியாமற் செய்தான் என்பதாம்.

**66. இரவிமக னேகுதலும், அரவதுவ சன்றுணைவர்
விரவினர் விளைந்துதம, புரவியணி தேர்படவே.**

[இரவிமகன் ஏகுதலும் அரவதுவசன் துணைவர் விரவினர் விளைந்து, தம புரவி அணி தேர் படவே-தொடரும்.]

**விளக்கம்:-** விளைந்து விரவினர்-மிகுதியாக வந்து சூழ்ந்தனர். கன்னன் பின்னிட, துரியோதனன் தம்பியர் மிகுதியாக வந்து அபிமனைச் சூழ்ந்து கொள்ள, அவர்களது குதிரைகள் பூட்டப்பெற்ற தேர்கள் அழியவே, (அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்)—என்பதாம்.

**67. விட்டவிர தத்திநெடு, வட்டவரி விற்குரிசில்
தொட்டகணை தைக்கவவர், கெட்டுமுது கிட்டனரே.**

[விட்ட இரதத்திநெடு, வட்டம் வரி வில் குரிசில் தொட்ட கணை தைக்க அவர்கெட்டு முதுகு இட்டனர், ஏ.]

**விளக்கம்:-** வட்டம்-வளைந்த. குரிசில்-அபிமன். அபிமன் தொடுத்த கணைகள் தைக்க, அவர் போர் உடைந்து தேரைவிட்டு நீங்கினவர்களாய் முதுகிட்டு ஓடினர்,—என்பதாம்.

விட்ட தேரினெடு, என்பதற்குச் செலுத்தி வந்த தேரோடு, என்றும் பொருள் கொள்ளலாம். விட்ட விரதத்தினேடு, என்று பிரித்துக்கொண்டால், 'வெல்வோம்' என்று கொண்ட விரதத்தை விட்டவர்களாய், என்பது பொருளாகும்.

அசுவத்தாமன் தளர்தல்

**68. சுகநிகர்து ரோணனெடு, மகன்விசயன் மைந்தனெதிர்**
**முகனமரில் வந்துபுர, தகனனென நின்றனரே.**

[சுகன் நிகர் துரோணரோடு மகன், விசயன் மைந்தன் எதிர் முகன் அமரில் வந்து புரதகனன் என நின்றனர், ஏ.]

**விளக்கம்** :- சுகன் - வியாசபுத்திரன், பிரும்ம வித்தையில் வியாசனினும் மேம்பட்டவன். எதிர்முகன்—எதிரில். புரதகனன் —முப்புரம் எரித்த சிவபெருமான். துரோணனும், அசுவத்தாம னும் போரில் அபிமன் முன்னே வந்து சிவபிரான் என நின்றனர், என்பதாம். அறிவாலும் ஒழுக்கத்தாலும் சிறந்த துரோணனுக்குச் சுகன் உவமை. ஆற்றலுக்குச் சிவபிரான் உவமை.

**69. நிற்கும்நிலை நின்றுவரி, விற்களும் வளைத்தார்**
**உற்கைகளி னூறுபல, பொற்கணை தொடுத்தார்.**

[நிற்கும் நிலை நின்று வரிவில்களும் வளைத்தார், உற்கைகளின் நூறு பல பொற்கணை தொடுத்தார்.]

**விளக்கம்**:-நிற்கும் நிலை-விற்போர் செய்வதற்கு நிற்க வேண் டிய நிலை, உற்கை கொள்ளிக்கட்டை. நூறு பல கணைகள் - அழிக்க வல்ல பல அம்புகள்; அல்லது நூற்றுக் கணக்கில் பல அம்புகள். ஊறு, என்று பிரித்துக் கொண்டால். புண் செய்து வருத்த வல்ல கணைகள், என்பது பொருளாகும். நூறு கணைகள்—(வினைத் தொகை) அழிக்கும் அம்புகள். தந்தையும் மைந்தனும் அபிமன் மேல் கொள்ளிக்கட்டைகள் போன்ற கொடிய அம்புகளைத் தொடுத் தனர், என்பதாம்.

**70. வருகணை விலக்கியெதிர், பொருகணைக ளாலே**
**ஒருவனெரி மைப்பொழுதில், இருவரையும் வென்ருன்.**

[வருகணை விலக்கி, எதிர் பொருகணைகளால் (ஏ) ஒருவன் ஓர் இமைப் பொழுதில் இருவரையும் வென்ருன்.]

**விளக்கம்**:-துரோண அசுவத்தாமர்களை அபிமன் தனியே (துணையில்லாமல்) நின்று ஓர் இமைப் பொழுதில் வென்ருன், என்பதாம்.

**71. தேர்முக மிழந்துமிரு, கார்முக மிழந்தும்
போர்முக மிழந்துமவர், நேர்முக மிழந்தார்.**

[தேர்முகம் இழந்தும், இரு கார் முகம் இழந்தும், போர்முகம் இழந்தும் அவர் நேர் முகம் இழந்தார்.]

**விளக்கம்:**-தேர்முகம்-தேராகிய இருக்கை (வாகனம்). போர் முகம்-போர் செய்தலாகிய தன்மை, நேர்முகம்—அபிமனுக்கு நேராக நிற்கும் நிலை, தந்தையும் மைந்தனும் தேர் முதலிய வற்றை இழந்து புறங்கொடுத்து அகன்றுர், — என்பதாம்.

**72. துன்முகனு மன்றமரின், முன்முனமர்செய்தே
வன்முக மறிந்ததென, நன்முடி தறிந்தான்.**

[துன்முகன் அன்று அமரில் முன் முன் அமர் செய்து (ஏ) வன் முகம் மறிந்தது என் நன் முடி தறிந்தான்.]

**விளக்கம்:** - துன்முகன்-துரியோதனனது தம்பிகளில் ஒருவன், வன்முகம் - வல்மீகம்) கரையான் புற்று. முடி கிரீடம். அன்று முன்னே முன்னே வந்து போர் செய்த துன்முகன் என்பான், புற்றுச் சரிந்தது போல், (அபிமனது கணைகளால்) தனது சிறந்த கிரீடம் சாயப் பெற்றுன், என்பதாம். இனி அவன் வீமனுல் கொல்லப்படப் போகின்றுனுதலால், முடி சரியப் பெற்றுன், என்று பொருள் கொள்ளப்பட்டது.

சல்லியன் தோற்றேடுதல்

**73. சித்திரவில் வீரனெனும், மத்திரர் பிரானும்
புத்திரரி லாதியுரு, மித்திரனும் வந்தார்.**

[சித்திரம் வில் வீரன் எனும் மத்திரர் பிரானும், புத்திரரில் ஆதி உருமித்திரனும் வந்தார்.]

**விளக்கம்:**-சல்லியனும், அவனது புதல்வர்களில் முதல்வனுன உருமித்திரன் என்பானும், (அபிமனை) எதிர்த்து வந்தார்கள்.— என்பதாம்.

**74. வந்தபிம னேடமரின், முந்தியிரு வோரும்
சிந்துகணை மாரிகளி, னந்தர மடைத்தார்.**

[வந்து அபிமனேடு அமரில் முந்தி இருவரும் சிந்து கணை மாரி களின் அந்தரம் அடைத்தார்.]

**விளக்கம்:**-இருவரும் களம் வந்து அபிமனேடு போரில் முற்பட்டுச் சொரிந்த பாண மழையால், வானை மறைத்தனர், என்பதாம்.

**75. அவரவ ரெடுத்தவிரு, தவருநடு வெட்டா**
**இவர்கணை விலக்குவன, கவர்கணை தொடுத்தான்.**

[அவர் அவர் எடுத்த இரு தவரும் நடு வெட்டா, இவர்கணை விலக்குவன கவர்கணை தொடுத்தான்.]

**விளக்கம்:**-தவர் - வில், கவர் கணை - இரண்டாகப் பிரிந்த முனையுடைய கணை, அபிமன் அவர் அவர் (அவ்விருவரும்), கையேந்திய இருவில்களையும் நடுவிடம் துணித்து, இவ்விருவரது அம்புகளையும் விலக்கவல்ல கவர் கணைகளைப் பிரயோகித்தான், என்பதாம்.

**76. மைந்தனொரு வாளியினில், அந்தர மடைந்தான்**
**நொந்துபல வாளியொடு, தந்தைபுற கிட்டான்.**

[மைந்தன் ஒரு வாளியினில் அந்தரம் அடைந்தான், நொந்து பல வாளியொடு தந்தை புறகு இட்டான்.]

**விளக்கம்**—சல்லிய புத்திரன், அபிமனது ஒரு அம்பினுல் வான் அடைந்தான். தந்தையும் மனம் நொந்து, உடலில் தைத்த பல அம்புகளோடு பின்னிட்டு ஓடினுன்,—என்பதாம்.

**77. வென்றபிமன் வாளமரில், நின்றநிலை கண்டே**
**ஒன்றுபட மாவிரதர், சென்றன ருடைந்தே.**

[வென்ற அபிமன் வாள் அமரின் நின்ற நிலை கண்டே, ஒன்று பட மா இரதர் சென்றனர் உடைந்தே.]

விளக்கம்:-கொடிய போரில் அபிமன் (சல்லியனை) வென்று நின்ற உறுதி நிலையைக் கண்டு, மகா ரதர் பலர் ஒரு சேரப் போர் உடைந்து ஓடினர்,—என்பதாம். கண்டே, என்பது கண்ட அளவிலேயே (அஞ்சி ஓடினுர்) என்ற பொருளது.

**78. கெட்டவர்க ளின்னரென, முட்டவுரைக் கொண்ணு**
**பட்டவர நேகரிவன், விட்டகணை யாலே.**

[கெட்டவர்கள் இன்னர் என முட்ட உரைக்க ஒண்ணு. பட்டவர் அநேகர் இவன் விட்ட கணையால், ஏ.]

**விளக்கம்:**-இவன் (அபிமன்) விட்ட கணைகளால் அழிந்தவர் மிகப் பலர்; தோற்று ஓடியவர் இவ்வளவினர் என்று உரைக்க ஒண்ணுது (முடியாது),—என்பதாம், முட்ட - முழுமையாக. இது, கவிக் கூற்று.

கலித்துறை

**79.** **முற்சக் ரயூகம் பிளப்புண்டபின் முன்பி னேடும்**
**பொற்சக்ர மென்ன வெறித்தாமம் பொலிந்து சூழ**
**விற்சக்ர மாக மணித்தேரினின் மீது நிற்பான்**
**கற்சக்ர வாகம் நடுவூர்செங் கதிரொ டொத்தான்.**

[முன் சக்ர யூகம் பிளப்புண்ட பின் முன்பினேடும் பொன் சக்ரம் என்ன வெறி தாமம் பொலிந்து சூழ, வில் சக்ரம் ஆக மணி தேரினின் மீது நிற்பான், கல் சக்ர வாகம் நடு ஊர் செம்கதிரோடு ஒத்தான்.]

**விளக்கம்.**-துரியோதனனது சக்கரவியூகம் முன்னிடம் (அபிமனுல்) பிளக்கப்பட்ட பின் ,(அவன்) வலிமையோடு, வட்டவடிவமான பொன் மாலைபோல் வாசனையுடைய கொன்றைமாலை தன்னைச் சுற்றிலும் விளங்க, தனது வில் வட்டமாக வளைந்திருக்கத் தேரின் மேல் நின்றவனை அபிமன் உறுதியுடைய சக்ரவாள கிரியின் நடுவில் செல்லும் சூரியனை ஒத்தான்.-என்பது பொருள். முன்பு - வலிமை, பொன் சக்ரம் - வட்டவடிவ மாலை, பொன் மாலை. வெறித்தாமம் - சயத்ரதனுல் எறியப்பட்ட மணம் மிக்க கொன்றை மாலை. கல்சக்ரவாகம் - சக்ரவாள கிரி. பகைவரது சக்ரவியூகத்தைப் பிளந்து, அதன் நடுவில் நின்ற அபிமனது வீரநிலையின் வருணனை இது.

**80.** **வடாதுந் தெனுதும் பரராசர் வகுத்த நேமிக்**
**குடாதுங் குணுது மவற்றுட்படு கோண நான்கும்**
**விடாதுந் தேரின் மிசையெங்கும் விராய போது**
**சடாதுங் கமௌலிப் புரசூதனன் றன்னை யொத்தான்.**

[வடாதும் தெனுதும் பர ராசர் வகுத்த நேமி குடாதும் அவற்றுள் படு கோணம் நான்கும் விடாது வந்து தேரின் மிசை எங்கும் விராயபோது, கடா துங்க மௌலி புர சூதனன் தன்னை ஒத்தான்.]

**விளக்கம்.**-பகைவர் வகுத்த சக்ரவியூகத்தில் வடக்கிலும், தெற்கிலும், மேற்கிலும், கிழக்கிலும், அந் நான்கு திசைகளின் இடையவான தென் கிழக்கு தென் மேற்கு, வடமேற்கு வட

கிழக்கு என்னும் நான்கு மூலைத் திசைகளிலும், எங்கும், விடாமல் செலுத்தப்படும் தேரின்மேல், போரில் பொருந்தியபோது, (அபிமன்) சடையோடு கூடிய சிறந்த முடியை உடைய திரபுர தகனனுன சிவபெருமானை ஒத்தான்,—என்பது பொருள்.

வியூகத்தின் நடு நின்ற இளவலுக்கு சூரியனை உவமை யாக்கிய புலவர், இச் செய்யுளில் சிவபிரானை உவமையாக்குகின் ருர். பகைவரின் கூட்டத்தின் மத்தியில் துணையின்றித் தான் தனியே நின்று பொருதுவென்றமைக்குச் சிவபிரான் உவமை. திரிபுரசூதனன்-திரிபுரம் எரித்தவன்.

**81. வின்மைந் துகொண்டு தகுவோர்தமை வென்றவீரன்**
**நன்மைந் தனுக்கு முதுகிட்டன ரென்று நாணி**
**மன்மைந் தரெண்ணில் பதினுயிரர் வந்து சூழத்**
**தன்மைந் தனையு முடனேவினன் சர்ப்ப கேது.**

[வில்மைந்து கொண்டு தகுவோர்தமை வென்ற வீரன் நல் மைந்தனுக்கு முதுகு இட்டனர் என்று நாணி, மன்மைந்தர் எண் ணில் பதினுயிரர் வந்து சூழ, தன் மைந்தனையும் உடன்ஏவினன் சர்ப்பகேது.]

**விளக்கம் :-** வில்லின் வலிமை கொண்டு (நிவாத கவசர் கால கேயர் என்ற) அசுரர்களை வென்ற வீரனுன விசயன், — என்பது முதலடியின் பொருள். அவன் நல்மைந்தன்—அபிமன். அவனுக்குப் பின்னிட்டனர் என்று சர்ப்பகேது (துரியோதனன்) நாணி, அளவி றந்த அரசர்கள் பதினுயிரக்கணக்கில் சூழ்ந்து வரத் தன் மைந்த னுன இலக்கண குமாரனை விரைவாகக் களம் அனுப்பினுன், — என்பதாம். தகுவர் - அசுரர், அரக்கர்.

**82. மேல்வந்த வேந்தன் மகனும்பல வேந்து மூழிக்**
**கால்வந்து வேலைக் கட றன்னைக் கலக்கு மாபோல்**
**நூல்வந்த கொற்றச் சிலையாசுக நொய்தி னேவி**
**மால்வந்த கைக்குன் றனையானைமுன் வந்து சூழ்ந்தார்.**

[மேல் வந்த வேந்தன் மகனும் பல வேந்தும், ஊழி கால் வந்து வேலை கடல் தன்னை கலக்கும் ஆ போல், நூல் வந்த கொற்றம் சிலை ஆசுகம் நொய்தின் ஏவி மால் வந்த கை குன்று அனையானை முன்வந்து சூழ்ந்தார்.]

**விளக்கம்:-** மேல் வந்த வேந்தன் மகன்-எதிர்த்து வந்த துரியோதனனது மகன். ஊழிக்கால்-பிரளயக்காற்று. வேலைக்'கடல்-கரையுடைய கடல். நூல்வந்த-தனுர் சாத்திர முறை பொருந்திய.

ஆசுகம்-அம்பு. நொய்தின்-விரைவாக. மால் கை வந்த குன்று-திருமாலின் அவதாரமான கண்ணன் கையில் குடையாய் அமைந்த கோவர்த்தனகிரி. ஊழிக்காற்று கடலைக் கலக்கும் விதம் போல், நூல் முறை கடவாது பாணப் பிரயோகம் செய்து, (பகைவரின் சேனைக் கடலைக் கலக்கிக்கொண்டு களம் நின்ற கோவர்த்தன மலை போன்ற அபிமனை எதிர்த்துத் துரியோதனனின் மகனும், பலவேந்தரும் முன்னே வந்தனர்,—என்பதாம்.

ஊழிக்காற்று, அபிமன். கடல், துரியோதனனது சேனை. இந்திரன் ஏவிய சப்த மேகங்களாலும் கண்ணன் ஏந்திய மலையை ஒன்றும் செய்ய முடியவில்லை; அதேபோல், பகைவர்களும் அபிமனை ஒன்றும் செய்ய முடியாதவர் ஆயினர், என்பது தோன்ற, "மால் வந்த கை குன்று அனையான்", என்றார்.

83. முன்முன்பு முந்திப் பலரேவிய மூரி வாளி
தன்முன்பு தூவு மலர்போலிரு தாளில் வீழ
வின்முன் புடையோ னொருவில்லின் விசித்த வம்பால்
பின்முன்பு பட்ட பலகோடி பிறங்கு சேனை.

[முன் முன்பு முந்தி பலர் ஏவிய மூரி வாளி தன் முன்பு தூவும் மலர் போல் இரு தாளில் வீழ, வில் முன்பு உடையோன் ஒரு வில்லின் விசித்த அம்பால் பின் முன்பு பட்ட பல கோடி பிறங்கு சேனை.]

**விளக்கம்:-** முன் முன்பு-ஒருவரை ஒருவர் முந்தினராய் விரைந்து. வில் முன்பு உடையோன்-வில் வலிமை உடைய அபிமன். விசித்த-இழுத்துவிட்ட. பின் முன்பு பட்ட-பின்புறம் முன்புறமாக, அதாவது முதுகு கொடுத்து ஓடின. ஒருவர் முன் ஒருவராக வந்து பகைவர் ஏவிய அம்புகள் மாலை போல் அபிமன் தாளில் விழ, அவன் ஒரு வில்லைக் கொண்டு செலுத்திய கணைகளால் பகைவரைப் பின்னிட்டு ஓடச் செய்தான், என்பதாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

84. அரவு யர்த்தவன் மதலையொ டடலுடை
யரசர் புத்திர ரனைவரு மெழுபரி
இரவி பொற்கதிர் தெறுதலி னிரிதரும்
இருளெ னத்திசை திசைதொறு முதுகிட
உரனு டைப்பனை முழவுறழ் திணிபுய
னொருச மர்த்தனு மொருதனி யிரதமும்
விரவி முற்பொரு களமழ குறும்வகை
விறல்வ யப்புலி யெனவெதிர் முடுகவே.

[அரவு உயர்த்தவன் மதலையொடு அடல் உடைய அரசர் புத்திரர் அனைவரும், எழுபரி இரவி பொன்கதிர் தெறுதலின் இரி தரும் இருள் என, திசை திசைதொறும் முதுகு இட, உரன் உடை பணை முழவு உறழ்திணி புயன் ஒரு சமர்த்தனும் ஒரு தனி இரதமும் விரவி, முன் பொருகளம் அழகு உறும் வகை விறல் வயம் புலி என எதிர் முடுக, ஏ.]

**விளக்கம்:-** "துரியோதன குமாரனை இலக்கணனோடு ஆற்றலுடைய அரசகுமாரர்கள் எல்லோரும், ஏழு குதிரைகளையுடைய சூரியனது பொன்கதிர் அழித்தலால் சிதறி மறையும் இருள் போல், திசைகள் எங்கும் முதுகிட்டு ஓடும்படி,-வலிமை உடைய பருத்த மத்தளம் போன்ற வலிய தோள்களை உடைய சாமர்த்திய சாலியான அபிமன் ஒருவனே, ஒரு ஒப்பற்ற தேரின் அமைந்து, முன்னின்று போர் செய்யும் களம் அழகு உறும்படி வலிமையையும் வெற்றியையும் உடைய புலி போல் எதிர்த்துச் செல்ல, (அடுத்த கவியோடு தொடரும்),—என்பது பொருள்.

திசை நான்கு, மூலைத் திசை நான்கு, ஆகவே, திசை திசை தொறும், எனப்பட்டது.

## இலக்கணன் மடிதல்

**85.** **வளைய முத்துதிர் விழியுடை வரிசிலை**
**மதனன் மைத்துன னவனிபர் பலரையும்**
**இளையெ னப்புற மிடவமர் பொருதபின்**
**இளைய வித்தக னெதிருற வருதலும்**
**முளையெ யிற்றிள நிலவெழ வகல்வெளி**
**முகடு டைப்பதொர் நகைசெய்து கடவினன்**
**உளைவ யப்பரி யிரதமு மிரதமும்**
**முரனொ டொத்தின வுருள்களு மொடியவே.**

[வளைய முத்து உதிர் விழி உடை வரிசிலை மதனன் மைத்துனன் அவனிபர் பலரையும் இளை என புறம் இட அமர் பொருத பின், இளைய வித்தகன் எதிர் உற வருதலும், முளை எயிறு இள நிலவு எழ, அகல் வெளி முகடு உடைப்பது ஓர் நகை செய்து கடவினன்; உளை வய பரி இரதமும் இரதமும் உரனொடு ஒத்தின உருள்களும் ஒடியவே.]

**விளக்கம்:-** வளைய முத்து உதிர் விழி உடை வரி வில்-வளைதலுறுங்கால் முத்துக்கள் உதிரும் கணுக்களையுடைய கட்டமைந்த கரும்பு வில், (விழி-கணு). மதனன் மைத்துனன்-மன்மதனது அமிசமான பிரத்யும்நன் என்பானின், அத்தை மகனான அபிமன்.

இளை-மேகம், அம்புமாம். இளைய வித்தகன்-(வித்தக இளையன்) விற்கலைவித்தகனுன இலக்கணன். அகல் வெளி முகடு-அண்ட கோளத்தின் மேல் முகடு. உளை வய பரி-பிடரிமயிருடைய வலிய குதிரை. உரன்-வலிமை. அபிமன், கார்காலத்து மேகக் கூட்டம் போல் வந்து கூடின அரசர் பலரையும் பொருது புறம் ஓடச் செய்தபின், இலக்கணன் எதிருற வரலும், முளை போன்ற பற்களின் நிலவொளி தோன்ற (அபிமன்) அதிர்ச்சியால் அண்ட கோளத்தின் முகடு உடையச் செய்வதான சிரிப்பொன்று போக்கித் தன் தேரை (அவன் மேல்) செலுத்தினுன்; அப்பொழுது இருவர் தேர்களும், சக்கரங்களும் உடையும்படி ஒன்றையொன்று தாக்கின,—என்பதாம்.

உயர்ந்த சாதிக் கரும்பில் முத்து உண்டாகும், என்பர். அத்தை மகனை, மைத்துனன், என்பது பண்டைய வழக்கம் போலும். சிவனுல் எரிக்கப்பட்ட மன்மதன், கண்ணனுக்கு ருக்மிணியிடம், பிரத்யும்நன், என்ற பெயரினனுய்த் தோன்றி ஞன், என்பர். இளை, என்பதற்கு அம்பு என்று பொருள் கொண் டால், அம்பு பாய்வது போன்ற வேகத்தில் அரசர் பின்னிட்டு ஓட அபிமன் போர் செய்தபின், என்பது பொருளாகும். கரும்பு வில்லை, வளைய முத்து உதிர் **வரிசிலை** என்றும், அபிமனை, **மதனன் மைத்துனன்,** என்றும் கூறியது **பிறிதின் நவிற்சி**யின் பாற்படும். ஒன்றைநேராகக் கூருமல், வேருேர் விதத்தால் குறிக்கும் திறமை யில் அமையும் நலத்தது இவ்வணி.

**86.** ரகுகு லத்தவ னிளவலு நிசிசர
ரிறைய ளித்தரு ளிளவலு மிருவரும்
நிகரெ னத்துணை விழிகடை நிமிர்தர
நெறிக டைப்புரு வமுமிக முரிதர
முகிலி டித்தென வெழுகடல் களுமிக
மொகுமொ குத்தென வனிலமு மனலமும்
உகமு டித்தென முறைமுறை பலபல
வுரையெ டுத்தன ரொருவ டொருவரே.

[ரகு குலத்தவன் இளவலும் நிசிசரர் இறை அளித்து அருள் இளவலும், இருவரும் நிகர் என, துணை விழி கடை நிமிர்தர நெறி கடை புருவமும் மிக முரிதர, முகில் இடித்து என, எழு கடல் களும் மிக மொகுமொகுத்து என அனிலமும் அனலமும் உகம் முடித்து என, முறைமுறை பலபல உரை எடுத்தனர் ஒருவரொடு ஒருவர்.

**விளக்கம்:-** ரகுகுலத்தவன்-இராமன். இளவல்-இலக்குவன். நிசிசரர் இறை - இராவணன். இளவல்-இந்திரசித். நிகர் என இருவரும்-தமக்கு நிகரானவர் என்று (அபிமன் இலக்கணன்) ஆகிய இருவரும். மொகுமொகுத்தல்-ஒலித்தல். அனிலம்-காற்று. அனலம்-அக்னி. இலக்குவனும் இந்திரசித்தும் நிகர் என்று சொல்லும்படி (அபிமன், இலக்கணன் ஆகிய) இருவரும், இருகண்களும் கோபத்தால் கடை ஓடி நோக்கவும், நெறிப்புடைய கடையை உடைய புருவமும் கோபத்தால் வளையவும், மேகம் இடித்தாற்போன்றும், ஏழு கடல்களும் ஒன்றுபட்டு ஒலித்தாற் போன்றும், காற்றும் நெருப்பும் யுகமுடிவில் (உலகை) அழிக்க எழுந்தாற்போன்றும் ஒருவரோடு ஒருவர் மாறிமாறி வீர வாசகங்கள் பல பேசலாயினர், என்பதாம். விழி கடை நிமிர்தல்-கோபத்தோடு கடைக் கண்ணால் பார்த்தல். மொகுமொகு, ஒலிக்குறிப்பு.

**87.** நெலிம ரத்தினு மனனெரி யெழவெழ
நிருபர் விட்டன கசரத துரகமும்
மெலிவெ ழப்பிற கிடவுநின் னொருதனி
விறல்கு றித்திர தமுமெதிர் கடவினை
ஒலிப டுத்தெதிர் வரின்விரி சுடரெதி
ருலவு விட்டிலி னுயிரழி குவையென
வலியு றுத்தின னவனிபன் மதலையை
வலிய வச்சிரன் மதலைதன் மதலையே.

நெலி மரத்தினும் மனன் எரிஎழ எழ நிருபர் விட்டன கசரத துரகமும் மெலிவு எழ, பிறகு இடவும் நின் ஒரு தனி விறல் குறித்து இரதமும் எதிர் கடவினை; ஒலி படுத்து எதிர் வரின் விரி சுடர் எதிர் உலவு விட்டிலின் உயிர் அழிகுவை, என, வலி உறுத்தினன் அவனிபன் மதலையை வலிய வச்சிரன் மதலைதன் மதலையே.]

**விளக்கம்:-** நெலிமரம்-நெருப்புக்கடையும் ஒருவகை மரம்; "அரணிக்கட்டை அரணியில் உண்டாகும் தீயினும், மனத்தில் சினத்தீ அதிகமாக எழ, அரசர்கள் செலுத்திவந்த யானை, தேர் குதிரை ஆய படைகள் எல்லாம் மெலிவுற (வந்த அரசர்கள்) பின்னிட்டு ஓட, (நீ) உனது தனிப்பட்ட வலிமையை மதித்து உனது தேரையும் என் எதிர் செலுத்தினாய்; வீர முழக்கம் செய்து கொண்டு என் எதிர் வந்தால், பரவி எரியும் விளக்கின் எதிரில் வந்த விட்டில் பூச்சி போல் அழிந்து போவாய் என்று துரியோதனன் மகனாகிய இலக்கணனுக்கு, இந்திரன் மகனுக்கு மகனான அபிமன், வலியுறுத்திச் சொன்னான் என்பது பொருள்.

விட்டில் - விளக்கில் பட்டு மாயும் ஒரு பூச்சி. சுடர் - விளக்கு. வலிய வச்சிரன் மகன் - வலிய வச்சிராயுதத்தையுடைய இந்திரன் மகனுன விசயன். அவன் மகன், அபிமன். தீயைத் தருகோலே நெலிகோல் என்பது நிகண்டு.

88. இவனு மப்பொழு தெதிரொலி யெனநனி
இகல ருச்சுனன் மதலையை யுனதுயிர்
அவனி பர்க்கெதிர் கவருவ னொருநொடி
யளவை யிற்பொரு தெனமுனே யணுகினன்
சிவன் வளைத்தபொன் மலையினும் வலியின
சிலைவ ளைத்தன ரிருவரு மெறிதரு
பவனன் மைக்கடல் வடவையை முனிதரு
பவன மொத்தது படுகள முழுதுமே.

இவனும் அப்பொழுது எதிர் ஒலி என நனி இகல் அருச்சுனன் மதலையை (நோக்கி) "உனது உயிர் அவனிபர்க்கு எதிர் கவருவன் ஒரு நொடி அளவையில் பொருது, என முன் அணுகினன்; (பின்னர்) சிவன் வளைத்த பொன் மலையினும் வலியின சிலை வளைத்தனர் இருவரும். எறிதரு பவனன் மை கடல் வடவையை முனிதரு பவனம் ஒத்தது படுகளம் முழுதும், ஏ.]

**விளக்கம்:**—இவனும் எதிரொலிபோல் அபிமனை நோக்கி, "அரசர்களுக்கு எதிரில் (உன்னோடு) போர் செய்து ஒரு நொடிப் பொழுதில் உன் உயிரைக் கவர்வேன்," என்று சொல்லிக் கொண்டு, முன்னே நெருங்கி வந்தான்; இருவரும், சிவன் வளைத்த மேருமலையினும் வலிய வில்களை வளைத்துப் போர் செய்தனர்; (அப்பொழுது), போர்க்களம் முழுவதும் வீசுகின்ற காற்று கருங் கடலின் அடியிலுள்ள வடவைக்கனலை வெகுண்டு எழுப்பும் (மிகுவிக்கும்) காற்றை ஒத்தது, அல்லது இடத்தை ஒத்தது என்பதாம். பவனம்—(பவநம்) இடம். அதாவது, போர்க்களம் ஒரு பெருங் குழப்பத்திற்கு இடமாயது என்பது பொருள்.

89. துரக தத்துடல் கெழுமின சிலகணை
துவச மற்றிட விரவின சிலகணை
இருவர் நெற்றியு மெழுதின சிலகணை
யிருபு யத்திடை செருகின சிலகணை
அரணி யொத்தெரி கதுவின சிலகணை
யகன்மு கட்டையு முருவின சிலகணை
முரணி லக்கண குமரனு மபிமனும்
முடுகி யிப்படி முரணமர் புரியவே.

[துரகதத்து உடல் கெழுமின சிலகணை, துவசம் அற்றிட விரவின சிலகணை; இருவர் நெற்றியும் எழுதின சிலகணை, இரு புயத்திடை செருகின சிலகணை; அரணி ஒத்து எரி கதுவின சிலகணை, அகல் முகட்டையும் உருவின சிலகணை; முரண் இலக்கண குமரனும் அபிமனும் முடுகி இப்படி முரண் அமர் புரியவே.]

**விளக்கம்:**—இன்னபடி வீரவசனம் கூறிக்கொண்டு வலிமையுடைய இலக்கண குமாரனும் அபிமனும் முனைந்து கடிய போரைச் செய்ய, (அவர்கள் தொடுத்த கணைகளில்) சில கணைகள், தேர்க் குதிரைகளின் மேல் நிறைந்தன; சில கொடி அறும்படி கலந்தன; சில இருவர் நெற்றியிலும் புதைந்தன; சில, தோள்களில் தைத்துப் பதிந்தன; சில அரணிக் கட்டையைப் போல் தீயை எழுப்பின; சில வான் முகட்டையும் உருவிக் கொண்டு சென்றன,—என்பதாம்.

**90. மழைமு கிற்குல நிகர்திரு வடிவினன்**
**மருகன் முட்டியு நிலையுமெய் வலிமையும்**
**அழகு றத்தொடு கணைகுரு பதிமக**
**னவய வத்தினி லடைவுற முழுகின**
**கழல்க ளற்றன விருதொடை தழுவின**
**கவச மற்றது கரமலர் புயமுடன்**
**முழுது மற்றன வொளிவிடு நவமணி**
**முகுட மற்றது முகிழ்நகை முகனொடே.**

[மழை முகில் குலம் நிகர் திருவடிவினன் மருகன் முட்டியும் நிலையும் மெய் வலிமையும், அழகு உற தொடுகணை, குருபதி மகன் அவயவத்தினில் அடைவு உற முழுகின, கழல்கள் அற்றன, இரு தொடை தழுவின, கவசம் அற்றது, கரம் மலர் புயமுடன் முழுதும் அற்றன, ஒளிவிடு நவமணி முகுடம் அற்றது முகிழ்நகை முகனொடே.]

**விளக்கம்:**—மழை முகில் குலம் நிகர் வடிவினன் - கண்ணன். (அவன்) மருகன் - அபிமன். முட்டி - முஷ்டி, அதாவது வில்லைப் பற்றும் கைப்பிடி. நிலை - நிற்கும் நிலை. குருபதி மகன் - குருகுலத் தலைவனான துரியோதனன் மகன் (இலக்கணன்). கழல் - கால். முகுடம் - கிரீடம். முகன் மகுடத்தோடு அற்றது. என்று கூட்டுக. அபிமன் தொடுத்த கணைகள் இலக்கணனது அவயவங்களில் பதியும்படி தைத்தன; (அதன் பயனாய்) கால்களும், தொடைகளும், கவசமும், தோள்களும் அற்று விழுந்தன; இளநகை ஓடிய முகமும் கிரீடத்தோடு அறுபட்டு விழுந்தது, என்பதாம்.

## துரியோதனன் துயரம்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**91. இலக்கண குமரன் வெங்கா னெரித்தவன் குமர னேவால்**
**அலக்கணுற் ருவி மாய்ந்தா னமரிடை யென்று கேட்டுக்**
**கலக்கணீர் சொரிய நின்று கண்ணிலி குமரன் வெம்பி**
**வலக்கணேர் முனிவ ரோடு மன்னவ ரோடுஞ் சொல்வான்,**

இலக்கண குமரன், வெம் கான் எரித்தவன் குமரன் ஏவால் அலக்கண் உற்று ஆவி மாய்ந்தான் அமரிடை என்று கேட்டு, கலம் கண்நீர் சொரிய நின்று கண் இலி குமரன் வெம்பி, வலக்கண் நேர் முனிவரோடும் மன்னவரோடும் சொல்வான்.]

**விளக்கம்:—** கான் - காண்டவவனம், அலக்கண் - துன்பம். கலம் -ஒரு முகத்தல் அளவை, இங்கே மிகுதிப் பொருள் உணர்த்தி நின்றது. கண்ணிலி - திருதராட்டிரன். வலக்கண் ஆடவர்க்குச் சிறந்ததாகும். வலக்கண் நேர்முனிவர் - துரோணன், கிருபன் முதலிய மேலோர். அபிமனது ஏவால் (கணைகளால்) இலக்கணன் இறந்தது கேட்டுத் துரியோதனன் கண்ணீர் வடித்து, வலக் கண்ணை ஒத்த முனிவருடனும், தன்னைச் சேர்ந்த அரசர்களுட னும் (சில) கூறுவானுனன், என்பதாம்.

**92. மன்னவர் மைந்த ரோடென் மைந்தனைக் கொன்ற மைந்தன்**
**தன்னையு மிமைப்பிற் சென்று சயமுறச் செகுத்தி லீரேல்**
**பின்னையிவ் வரசும் வேண்டேன் பெருமித வாழ்வும் வேண்டேன்**
**என்னுயிர் தானும் வேண்டே னென்றன னிராச ராசன்.**

[மன்னவர் மைந்தரோடு என் மைந்தனை கொன்ற மைந்தன் தன்னையும் இமைப்பில் சென்று சயம்உற செகுத்திலீரேல், பின்னை இவ்வரசும் வேண்டேன், பெருமிதம் வாழ்வும் வேண்டேன், என் உயிர் தானும் வேண்டேன், என்றனன் இராசராசன்.]

**விளக்கம்:—** சயம் - வெற்றி. செகுத்தல் - அழித்தல். "அரசகுமாரர் பலரோடு என் மைந்தனையும் கொன்ற அபிமனை விரைவின் சென்று கொன்றிடீராயின், பின்னர் (நான்) இவ்வரசை யும், இன்ப வாழ்வையும், என் உயிரையும் விரும்பமாட்டேன்," என்று இராசராசனுன துரியோதனன் தன்னைச் சேர்ந்தாரை நோக்கிக் கூறினன், என்பதாம்,

**93. தனித்தனி யரச ரெல்லாந் தாளிணை பணிந்து போற்றிப்**
**பனித்துயிர் பொன்றி வீழப் பார்த்தன்மா மாமகனை யின்னே**
**குனித்தவின் னிமிரா வண்ணங் கொடுஞ்சமர்க் கொன்றி லேமேல்**
**இனித்தனு வென்று போரி லெடுக்கிலே மிறைவ வென்றார்.**

[தனி தனி அரசர் எல்லாம் தாள் இணை பணிந்து போற்றி, பனித்து உயிர் பொன்றி வீழ, பார்த்தன் மாமகனை இன்னே குனித்த வில் நிமிரா வண்ணம் கொடுஞ்சமர் கொன்றிலேமேல், இனி தனு என்று போரில் எடுக்கிலேம் இறைவ என்றார்.]

**விளக்கம்:**— பனித்தல் - நடுங்கல். (துரியோதனன் கூறியது கேட்டு) அரசர் எல்லோரும், அவனை வணங்கித் துதித்து, "இறைவ, உடல் நடுங்கி ஆவி ஒழிந்து விழும்படி அபிமனை இப்பொழுதே வில்வளைத்துக் கொடிய போரில் கொன்றிடோமாயின் இனி, வில் என்ற ஒன்றை போரில் எடுக்க மாட்டோம்," என்று சபத மொழி கூறினர், என்பதாம். குனித்த வில் நிமிரா வண்ணம், என்பது, "வளைவுற்ற வில் அபிமனைக் கொல்லாமல் நிமிராது," என்ற கருத்தது.

பகைவர் அபிமனை எதிர்த்தல்

**94. குன்றவில் லவனை யொக்குங் குமரனும் பகைக ளாறும்**
**வென்றவின் முனியு மற்றும் வேந்தரா யருகு தொக்கு**
**நின்றவில் விருதர் யாரு நிருபன்மா மதலை யாவி**
**பொன்றவில் வளைத்தோன் றன்னைப் புலிவளைந் தென்னச் சூழ்ந்தார்.**

[குன்றம் வில்லவனை ஒக்கும் குமரனும், பகைகள் ஆறும் வென்ற வில் முனியும், மற்றும் வேந்தர் ஆய் அருகு தொக்கு நின்ற வில் விருதர் யாரும், நிருபன் மாமதலை ஆவி பொன்ற வில் வளைத்தோன் தன்னை புலி வளைந்து என்ன சூழ்ந்தார்.]

**விளக்கம்:**—குன்றம் வில்லவன் - வடமேருவை வில்லாகக் கொண்ட சிவபிரான். குமரன் - அசுவத்தாமன். பகை ஆறு வென்ற முனி - காமம் கோபம் லோபம் மதம் மோகம் மாற்சரியம், என்று சொல்லப்படும் உட்பகை ஆறையும் வென்ற தபோதனன். நிருபன் மாமதலை - துரியோதனன் குமாரனை இலக்கணன். துரோண அசுவத்தாமர்களும், மற்றும் துரியோதனன் அருகே கூடி நின்ற வீரர்களும், அபிமனைப் புலிகள் சூழ்ந்து கொண்டாற் போல் சுற்றிக் கொண்டனர், என்பதாம். விருதர் - வீரர். ஒரு

புலியைப் பலர் சூழ்ந்து கொண்டது போல், அபிமனைச் சுற்றிக் கொண்டனர், என்றும் பொருள் கொள்ளலாம்.

**95. போரொரு முகத்தா லன்றிப் பொருப்பொன்றிற் புணரி யேழும்**
**காரொரு முகமாய் மொண்டு கணக்கறப் பொழியு மாபோல்**
**தேரொரு வளைய மாகச் சென்றுதிண் சிலைகள் கோலி**
**ஓரொரு வீரர் கோடி யாசுக முடற்றி ஞரே.**

[போர் ஒரு முகத்தால் அன்றி பொருப்பு ஒன்றில் புணரிஏழும், கார் ஒரு முகமாய் மொண்டு கணக்கு அற பொழியும் ஆ போல் தேர் ஒரு வளையம் ஆக சென்று திண் சிலைகள் கோலி ஓர் ஒரு வீரர் கோடி ஆசுகம் உடற்றினர், ஏ.]

**விளக்கம்:—** கார், புணரி ஏழும் மொண்டு பொருப்பு ஒன்றில் ஒரு முகமாய் கணக்கு அற பொழியுமாபோல், போர் ஒரு முகத் தால் அன்றி தேர் ஒரு வளையம் ஆக ....உடற்றினர், என்பது அன்வயம்.

மேகம் ஏழு கடலில் உள்ள நீரையெல்லாம் மொண்டு கொண்டு ஒரு குன்றின் மேல், ஒரே தன்மையதாய் அளவற்ற நீரைப் பொழியும் விதம்போல் போரில் ஒரு முகமாய் அல்லாமல் தேரைச் சுற்றி ஒரு வளையம் போல் சென்று, சூழ்ந்து கொண்டு வலிய வில்களை வளைத்து ஒவ்வொரு வீரரும் கோடிக் கணக்கில் சரங்களைச் சினத்துடன் செலுத்தினர்கள்.—என்பது பொருள்.

எவ்வளவு பெரிய மழையிலும் நிலைநிற்கும் குன்று போல், அபிமன் நின்று போர் செய்தான், என்றபடி.

**96. தரணிப ரெய்த வெய்த சரங்களைச் சரங்க ளாலே**
**முரணற விலக்கிப் பாதமு டியள வாகவந்தக்**
**கரணமும் புலனு மெய்யுங் கலங்கியக் கணத்தில் யாரும்**
**மரணமென் றுன்ன வல்வில் வளைத்தனன் வளைவி லாதான்.**

[தரணிபர் எய்த எய்த சரங்களை சரங்களாலே முரண் அற விலக்கி, பாதம் முடி அளவு ஆக அந்தக் கரணமும் புலனும் மெய் யும் கலங்கி அகணத்தில் யாரும் மரணம் என்று உன்ன வல் வில் வளைத்தனன், வளைவு இலாதான்]

**விளக்கம் :—** (பகைவர்க்கு) வணங்காதவனான அபிமன், அரசர்கள் எய்த சரங்கள், வலிகெடத் தன் சரங்களால் விலக்கி, பாதம் முதல் தலை ஈருக, மனமும் புலனும், உடலும் கலங்கி எல்லாப் பகை அரசர்களும், அப்பொழுது தமக்கு மரணம் என்று நினைக்கும்படி. தனது வலிய வில்லை வளைத்துப் போர் செய் தான்,—என்று பொருள். அந்தக்கரணம்—மனம்.

**97. ஆகவந் தன்னின் முந்த மனுக்குலத் தரசன் பட்டான்**
**கேகயன் குமரன் மாய்ந்தான் கிருபன்வில் லொடிந்து மீண்டான்**
**மாகதக் குரிசி லோடு மகுடவர்த் தனர நேகர்**
**நாகமுற் றனர்கள் கோடி நரபதி குமரர் வீழ்ந்தார்.**

[ஆகவம்தன்னில் முந்த மனு குலத்து அரசன் பட்டான், கேகயன் குமரன் மாய்ந்தான், கிருபன் வில் ஒடிந்து மீண்டான், மாகதம் குரிசிலொடு மகுடவர்த்தனர் அநேகர் நாகம் உற்றனர்கள், கோடி நரபதி குமரர் வீழ்ந்தார்.]

**விளக்கம் :—** ஆகவம்—போர். மாகதம்—ம க த தே ச ம். நாகம்—தேவருலகம், வீரசுவர்க்கம், அபிமனது அம்புகளால் அரசர் பலர் இறந்தனர்; கிருபன் பின்னிட்டான், என்பதாம்.

இறந்தார், என்ற பொருளுடைய பல சொற்கள் வந்திருப்ப தால், இது பொருட் பின்வருநிலை அணி ஆகும்.

**98. சிலை யழிந் தவர நேகர் தேரழிந் தவர நேகர்**
**தலையழிந் தவர நேகர் தாளழிந் தவர நேகர்**
**நிலையழிந் தவர நேகர் நெஞ்சழிந் தவர நேகர்**
**துலையழிந் தவர நேகர் தோளழிந் தவர நேகர்.**

சிலை அழிந்தவர் அநேகர், தேர் அழிந்தவர் அநேகர், தலை அழிந்தவர் அநேகர், தாள் (கால்) அழிந்தவர் அநேகர், நிலை அழிந்தவர் அநேகர், நெஞ்சு அழிந்தவர் அநேகர், துலை (வலிமை) அழிந்தவர் அநேகர், தோள் அழிந்தவர் அநேகர். நிலை—உறுதி நிலை, துலவுக்கோலின் பெயர் துலை, அது பாரம் என்று ஆகி வலிமையை உணர்த்திற்று, என்க.

**99. இனைவருஞ் சகுனி மைந்த ரெழுவருந் துணைவ ருள்ளார்**
**அனைவரு மாவி மாள வமரழிந் தவனும் போனன்**
**துனைவரும் புரவித் தேர்த்துச் சாதனன் றுணைவ ரோடு**
**முனைவரு மளவிற் பாலன் முனைவெரீஇ முதுகு தந்தான்.**

[இனைவு அரு சகுனி மைந்தர் எழுவரும் துணைவர் உள்ளார் அனைவரும் ஆவி மாள அமர் அழிந்து அவனும் போனன், துனைவரும் புரவி தேர் துச்சாதனன் துணைவரோடு முனைவரும் அளவில், பாலன் முனைவெரீஇ முதுகு தந்தான்.]

**விளக்கம் :—** இனைவு அரு—வருந்துதல் அகன்ற. துனை வரும்—விரைந்து வருகின்ற. முனைவரும் அளவில்-(போர்செய்ய) முன்னே வந்த அளவில், பாலன் முனைவெரீஇ—பாலனை

அபிமனது போருக்குப் பயந்து. மைந்தர் எழுவர் போரில் மாள, சகுனி தோற்று ஓடினன்; விரைந்து செல்லும் தேரில் வந்த துச்சாதனனும், அவனது தம்பியரும் அபிமனது போருக்கு அஞ்சி புறங்கொடுத்து ஓடினர், என்பதாம்.

### கர்ணன் முனைவரல்

**100. காவல ருடைதல் கண்டு கன்னனை யரசன் பார்த்துக்**
**கேவல மல்ல விப்போர் கிரீடிவந் திவனைக் கூடில்**
**நீவலை யாகிற் சென்று தேர்மலைந் தடர்த்தி யென்னக்**
**கோவலன் மருகன் றன்னைக் குறுகினன் கொடையான்**
**மிக்கோன்.**

[காவலர் உடைதல் கண்டு கன்னனை அரசன் பார்த்து, ''கேவலம் அல்ல இ போர், கிரீடி வந்து இவனை கூடில்; நீ வலை ஆகின் சென்று தேர்மலைந்து அடர்த்தி'' என்ன, கோவலன் மருகன் தன்னை குறுகினன், கொடையால் மிக்கோன்.]

**விளக்கம் :—** கேவலம் அல்ல—எளியது அன்று. கிரீடி—விசயன். நேர் சென்று மலைந்து அடர்த்தி—எதிரே சென்று போர் செய்து அழிப்பாய். கோவலன் மருகன் கண்ணனது மருமகனுன அபிமன். கொடையால் மிக்கோன்—கர்ணன். அரசர்கள் பின்னிடுவதைக் கண்ட துரியோதனன் ஏவக் கர்ணன் அபிமனை நெருங்கினன்,—என்பதாம்.

**101. மன்முரி குவவுத் திண்டோள் வாசவன் பேரன்றன் னேடு(டு)**
**அன்முரி யிரவி மைந்த னருஞ்சமர் விளைத்த காலைச்**
**சென்முரிந் தென்ன வேறு தேர்முரிந் தெடுத்த வாகை**
**வின்முரிந் துள்ளந் தானு மிகமுரிந் துடைந்து மீண்டான்.**

[மன்முரி குவவு திண்தோள் வாசவன் பேரன் தன்னேடு, அல்முரி இரவி மைந்தன் அருஞ் சமர் விளைத்தகாலை, செல் முரிந்து என்ன ஏறு தேர் முரிந்து, எடுத்த வாகை வில்முரிந்து உள்ளம் தானும் மிக முரிந்து உடைந்து மீண்டான்.]

**விளக்கம் :—** மல் - வலிமை. மல்முரி – பகைவரது வலியை அழிக்கவல்ல. வாசவன் பேரன் - அபிமன். அல் - இருட்டு, இரவு. அல்முரி இரவி மைந்தன் - கர்ணன். செல் – மேகம். செல் முரிந்தென்ன - மேகம் சிதைவுற்றதுபோல. வாகைவில் – வெற்றி வில். இங்கே, மேகம், கர்ணன் ஏறி வந்த தேருக்கு உவமை. அபிமனின் முன் நிற்க மாட்டாமல், தேரும், வில்லும் ஒடிய மனக்கலக்கத்துடன் கர்ணன் பின்னிட்டான்,—என்பதாம்.

**102. தேறினன் றேறித் துச்சா தனன்றருஞ் செம்பொற் றேரின்
ஏறினன் மீள வில்லு மெரிகணை பலவுங் கொண்டு
தூறினு னபிமன் செங்கைத் தொடைகளா லெதிர்த்த லஞ்சி
மாறினன் முகமுந் தேரும் வரிவிலு மழிந்து மன்னோ.**

[தேறினன், தேறி துச்சாதனன் தரும் செம்பொன் தேரின் ஏறினன், மீள வில்லும் எரிகணை பலவும் கொண்டு, தூறினன் அபிமன் செம்கை தொடைகளால் எதிர்த்தல் அஞ்சி மாறினன் முகமும், தேரும் வரிவிலும் அழிந்து, மன்னோ.]

**விளக்கம் :—** தேறினன்....மீள வில்லும் கொண்டு எரிகணை பலவும் தூறினன்; அபிமன் செங்கைத் தொடைகளால் தேரும் வரிவிலும் அழிந்து எதிர்த்தல் அஞ்சி முகமும் மாறினன், என்பது அன்வயம், மன்னோ, ஈற்றசை.

தேறினன் - மனந்தேறினன், அல்லது தைரியங்கொண்டான். தூறினன் - மழை போல் பொழிந்தான். முகம் மாறல்-பின்னிடல். மீண்டும் அபிமனை எதிர்த்த கர்ணன் தோற்று ஓடினன்,—என்பதாம்.

**103. தூண்டினன் மேலா ளாகித் துனைபரித் தடந்தேர் தூண்டி
மீண்டனன் காலா ளாகி விழுந்தனன் றெளிந்து மீளத்
தாண்டின பரித்தேர் தேடிச் சாபமுந் தேடி நெஞ்சால்
பூண்டனன் பொருவான் றன்கைப் பொருகணைப் புயங்கம் போல்வான்.**

[தூண்டினன் மேல் ஆள் ஆகி, துனை பரிதடந்தேர் தூண்டி மீண்டனன் கால் ஆள் ஆகி விழுந்தனன், தெளிந்து மீள தாண்டின பரிதேர் தேடி, சாபமும் தேடி, நெஞ்சால் பூண்டனன் பொருவான் தன் கை பொருகணை புயங்கம் போல்வான்.]

**விளக்கம் :—** தன் கை பொருகணை புயங்கம் போல்வான், தூண்டினன், துனை பரிதேர் தூண்டி (களம் வந்து) கால் ஆள் ஆய் மீண்டனன்; விழுந்தவன் தெளிந்து மீள...பொருவான் நெஞ்சால் பூண்டனன்,—என்பது அன்வயம்.

தன்கை பொருகணை புயங்கம் போல்வான். தன்கையிலுள்ள கொடிய நாகாத்திரம் போன்றவனான கர்ணன். தூண்டினன் - துரியோதனனால் தூண்டப் பெற்றவனாய். மேலான் - தேரின்மேல் ஏறிய வீரன். காலாள் – தேரை இழந்த வீரன். தாண்டின பரி தேர் – தாவிச் செல்லும் இயல்பினவான குதிரைகள் பூட்டப் பெற்ற விரைவினையுடைய தேர். பொருவான் நெஞ்சால் பூண்டனன் - போர் செய்யத் துணிந்தான்.

துரியோதனனால் தூண்டப் பெற்று தேரில் வந்த கர்ணன் (அபிமனது) அம்புகளால் தேர் அழிந்து, காலாள் ஆய் திரும்பினான்; விழுந்தவன் (தோற்றவனான கர்ணன்) மறுபடியும் தேரும் வில்லும் தேடிக் கொண்டு (அபிமனோடு) போர் செய்யத் துணிந்து களம் புகுந்தான், —என்பதாம்.

காண்டவவனம் எரிந்தபொழுது, அத்தீயினின்று தப்பிச் சென்ற தட்சக குமாரனான நாக இளவல், விசயனைப் பகைத்து, அவனைக் கொல்லும் பொருட்டு, அவனது பகைவனான கர்ணனை அத்திர வடிவத்தில் அடைந்தான் என்பது வரலாறு.

**104. விற்குனித் திரவி மைந்தன் விடும்விடுங் கணைகள் பட்டுப்
பற்குனன் மைந்தன் றிண்டேர் பரிகளும் பாகும் பட்டு
முற்குனித் தெய்த வில்லு முரிந்தது மூரித் தேரும்
நிற்குநன் னிலைமை குன்றி நேமியு தெரிந்த தன்றே.**

[வில்குனித்து இரவி மைந்தன் விடும் விடும் கணைகள் பட்டு, பற்குனன் மைந்தன் திண் தேர் பரிகளும் பாகும் பட்டு முன் குனித்து எய்த வில்லும் முரிந்தது; மூரி தேரும் நிற்கும் நல் நிலைமை குன்றி நேமியும் தெரிந்தது அன்றே.]

**விளக்கம் :**—விடும் விடும்-மிகுதியாக விடுகின்ற. பற்குனன் - விசயன். பாகு - சாரதி. மூரித்தேர் – வலிய தேர். நேமி - தேர்ச் சக்கரம். அன்று, ஏ : அசைகள். கர்ணனது கணைகளால், அபிமன் தேரும் வில்லும் அழியப் பெற்றான் என்பதாம். பட, என்ற எச்சவினை, பட்டு என்று திரிந்து நின்றது.

**105. தன்னையத் தனயன் செய்த தாழ்வெலாந் தனயன் றன்னைப்
பின்னையத் தந்தை செய்து பின்னிடா தசைந்து நிற்ப
முன்னைய புரவித் தேரு மொய்த்தவெஞ் சிலையு மின்றி
மின்னையொத் திலங்கும் வாளோ டவனிமேல் விரைந்து
பாய்ந்தான்.**

[தன்னை அ தனயன் செய்த தாழ்வு எலாம் தனயன் தன்னை, பின்னை அ தந்தை செய்து பின் இடாது அசைந்து நிற்ப, முன்னைய புரவி தேரும் மொய்த்த வெம்சிலையும் இன்றி, மின்னை ஒத்து இலங்கும் வாளோடு அவனிமேல் விரைந்து பாய்ந்தான்.]

**விளக்கம் :**— கர்ணன், தமனுக்கு முன் சூரியனது அருளால் குந்தியினிடம் பிறந்தவனாதலால், அபிமனுக்குத் தந்தை ஆகின்றான். அசைந்து பின்னிடாது - தோற்றுப் புறங்கொடாமல். மொய்த்தசிலை - உறுதியுடைய வலிய வில். முன்னை, தனக்குத்

தனயனுன அபிமன் செய்த தோல்வியாகிய தாழ்மையைப் பின்னே தந்தை தனயன்தன்னை அடையச் செய்து, போரில் அசையாது நிற்க, அபியன் தேரும் சிலையும் இல்லாமல் போக, வாளை உருவிக் கொண்டு விரைந்து தேரினின்று குதித்தான், என்பதாம். தன்னை; உருபுமயக்கம்.

**106. வாளொடு பரிசை யேந்தி மண்டலம் பயிற்றி யிற்றை**
**நாளொடு துறக்க மெய்த நயந்தன னின்ற வீரன்**
**தோளொடு புரையுஞ் செம்பொன் மேருவைச் சுடரோ**
**னுகக்**
**கோளொடு சூழ்வ தென்னச் சுழற்றினுன் குமர ரேறே.**

[வாளொடு பரிசை ஏந்தி மண்டலம் பயிற்றி, இற்றை நாளொடு துறக்கம் எய்த நயந்தனன் நின்று வீரன், தோளொடு புரையும் செம்பொன் மேருவை சுடரோன் நாகம் கோளொடு சூழ்வது என்ன சுழற்றினுன் குமரர் ஏறு, ஏ.]

**விளக்கம் :—** பரிசை-கேடகம். மண்டலம் பயிற்றல்-வட்டமாகச் சுற்றல். இற்றை நாளொடு துறக்கம் எய்த நயந்தனன் நின்ற வீரன் – இன்றோடு இறந்து வீர சுவர்க்கம் அடைய விரும்பிக் களம் நின்ற வீரனுன அபிமன். நாகம் கோள் - இராகு என்னும் கிரகம். குமரர் ஏறு – அரச குமாரர்களுக்குள் சிறந்தவன் (ஆண் சிங்கம் போன்றவன்.) இன்றோடு இறந்து வானுலகம் அடைய் விரும்பி நின்ற வீரனுன ஆண் சிங்கம் போன்ற அபிமன், வாளோடு கேடகம் ஏந்தி, மண்டலகதியில் சுழன்று பகைவரைத் தாக்கி, தனது தோளை ஒத்த மேருமலையைச் சூரியன், இராகுகேது என்னும் பாம்போடு சுற்றுவதுபோல் சுற்றலானுன்,—என்பதாம்.

தோளை மேருவுக்கு உவமையாக்கியது, எதிர்நிலை அணி. சலியாது போர் செய்யும் அபிமன், மேருமலை; அவன் ஏந்திய பரிசை சூரியமண்டலம்; அவன் கை அமைந்த வாள், நாகக் கோள். குமரர் ஏறு, என்பதற்குப் பகை அரசர்களின் குமாரரான யானைகளுக்கு அபிமன் ஆண் சிங்கம் போன்றவன், என்றும் பொருள் கொள்ளலாம்.

பகைவர் மீண்டுவந்து பொரல்

கலிவிருத்தம்

**107. தேர்போனது பரிபோனது சிலைபோனது சிறுவன்**
**போர்போனதி னிச்சென்றமர் புரிவோமென நினையாக்**
**கார்போனனி யதிராவிதழ் மடியாவெறி கடல்வாய்**
**நீர்போலுடன் மொய்த்தார்வெரு வுற்றேடிய நிருபர்.**

**விளக்கம் :—** கார் போல் நனி அதிரா (முழங்கிக் கொண்டு). கடல்வாம் நீர் போல் - கடலிலே வந்து விழும் ஆற்று நீர் போல. பயந்து ஓடிய அரசர்கள் ''சிறுவனுன அபிமனது தேர், பரி, சிலே, போர்த்தொழில், ஆகியவை அழிந்தன; இனி அவன்பாற் சென்று போர் புரிவோம்'' என்று முழங்கிக் கொண்டும், கோபத்தால் உதட்டை மடித்துக் கொண்டும், எல்லோரும் ஒன்றுபட்டு, அபிமன் மேல் நெருங்கினுர்கள்,—என்பதாம். சுலபமான செய்யுள், பதப்பிரிவு தரவில்லே. எறிகடல் - அலே எறியும்கடல்.

**108. துச்சாதனன் மகன்மன்னர்தொ ழுந்துச்சனி யென்னும்**
**நச்சாடர வணேயானினி நானேபழிகொ ள்வேன்**
**இச்சாயக மொன்ருலென வெய்தானவன் முடியோ(டு)**
**அச்சாயகம் வடிவாள்கொட றுத்தானட லபிமன்.**

[துச்சாதனன் மகன் மன்னர் தொழும் துச்சனி என்னும் நச்சு ஆடு அரவு அணேயான் இனி நானே பழி கொள்வேன், இ சாயகம் ஒன்ருல் என, எய்தான்; அவன் முடியோடு அ சாயகம் வடி வாள் கொடு அறுத்தான் அடல் அபிமன்.]

**விளக்கம் :—**துச்சனி என்பது துச்சாதனன் மகனின் பெயர். நச்சு ஆடு அரவு அணேயான் - விடப்பாம்பு போன்றவன், (கொடியவன்). பழிகொள்வேன்-இலக்கணணேக் கொன்ற பழிக்குப் பழிவாங்குவேன்; அல்லது தேர் வில் ஒன்றும் இல்லாதவணேக் கொல்லுதல் பழிப்புடையதாயினும், அவணேக் கொன்று பழியை ஏற்றுக் கொள்வேன், என்றும் பொருள் கொள்ளலாம். சாயகம் - பாணம். துச்சனி தொடுத்த கணேயை வாளால் தகைந்து, அவனது முடியை அடல் அபிமன் அறுத்தான்,—என்பதாம்.

துரோணன் மீண்டும் களம்வரல்

**109. துரியோதனன் மகனும்பொரு துச்சாதனன் மகனும்**
**புரியோதன முனேவென்றமை புரிவின்முனி கருதா**
**அரியோமெனு மறையாலட லம்பாயிர மெய்தான்**
**வரியோலிடு கழலானவை வாள்கொண்டுது ணித்தான்.**

[துரியோதனன் மகனும், துச்சாதனன் மகனும் புரியோதனம் முனே (அபிமன்) வென்றமை புரி வில் முனி கருதா அரி ஓம் எனும் மறையால் அடல் அம்பு ஆயிரம் எய்தான்; வரி ஒல் இடு கழலான் வாள் கொண்டு துணித்தான்.]

**விளக்கம் :-** புரியோதன முனே - யுத்தம் செய்யும் களம். புரிவில் முனி - துரோணன். அரிஓம் எனும் மறையால் - அரிஓம்

என்று ஆரம்பித்து ஓதப்படும் வேதமந்திரத்தால், அதாவது வேத மந்திரத்தைத் துணையாகக் கொண்டு. வரிஓல் இடும் கழலான் - அழகிய ஒலித்தலைச் செய்கின்ற வீரக்கழல் அணிந்த அபிமன். இலக்கணனையும், துச்சனியையும் (அபிமன்) வென்று அழித்தமை எண்ணித் துரோணன், வேதமந்திரத்தைக் கொண்டு பாண மழை பொழிந்தான்; அவற்றை அபிமன் வாளால் தகைத்தான்,— என்பதாம்.

**110. சொரியுங்கணை மழையேவுது ரோணரியன் வில்லும்**
**பரியுங்கட விரதத்தொடு பாகும்பல பலவாய்**
**முரியும்படி வடிவாள்கொடு மோதாவமர் காதா**
**விரியுஞ்சுட ரெனநின்றனன் விசயன்றிரு மகனே.**

[சொரியும் கணை மழை ஏவு துரோண ஆரியன் வில்லும், பரியும் கடவு இரதத்தொடு பாகும் பலபல ஆய் முரியும்படி வடி வாள்கொடு மோதா அமர் காதா, விரியும் சுடர் என நின்றனன் விசயன் திருமகன், ஏ.]

**விளக்கம் :-** சொரியும் கணை மழை ஏவு துரோணரியன் - கொட்டுகின்ற அம்பு மழை ஏவுகின்ற துரோணன். மோதா-தாக்கி. அமர் காதா - உக்கிரமாகப் போரைச் செய்து, விரியும் சுடர் - சூரியன். சரமழை பொழிந்த துரோணனது வில்லும், குதிரையும், தேரும், சாரதியும் துண்டுபட்டு அழியும்படி வாளைக் கொண்டு அபிமன் உக்ரமாகப் போரைச் செய்து, சூரியனைப்போல் விளக்க முற்றுக் களம் நின்றான், — என்பதாம்.

**111. ஒருக்காலழி தேரன்றியு முருளாழிகொ டேர்மேல்**
**இருக்கால்வர முக்கால்வர வெக்காலும ழித்தே**
**பெருக்காறணை செய்தொத்தவிர் பிள்ளைப்பிறை யனையான்**
**செருக்கானகை செய்தான்வரி சிலையாசிரி யனையே.**

[ஒரு கால் அழி தேர் அன்றியும் உருள் ஆழி கொள் தேர் மேல் இரு கால்வர, முக்கால்வர, எக்காலும் அழித்தே, பெருக்கு ஆறு அணை செய்து ஒத்து செருக்கால் நகை செய்தான் வரிசிலை ஆசிரியனே, ஏ]

**விளக்கம் :-** ஒரு கால் - ஒரு தடவை. உருள் ஆழி கொள் தேர் - உருளுகின்ற சக்கரங்களை உடைய வேறு தேர். இரு கால் வர, முக்கால்வர - இரண்டாந்தடவையும் மூன்றாந்தடவையும் மறு படியும் மறுபடியும் வர, எக்காலும் - எல்லாத் தடவையிலும், பெருகு ஆறு அணை செய்தொத்து - பெருகுகின்ற ஆற்று

வெள்ளத்துக்கு அணை செய்தாற்போன்று. அவிர் பிள்ளை பிறை அனையான் - விளங்குகின்ற பிறைச் சந்திரனை ஒத்த அபிமன். செருக்கால் நகை செய்தான் - வெற்றிக்களிப்பால், துரோணனை நோக்கிச் சிரித்தான். தேரழிந்த துரோணன் மீண்டும் மீண்டும் வேறு வேறு தேர்களில்வர, வந்தபோதெல்லாம், அவன் தேரை அழித்து வெற்றிக்களிப்பால், அபிமன் சிரித்தான் என்பதாம். ஒரு கால், இருகால், என்பன சந்தவின்பம் நோக்கி, ''ஒருக்கால், இருக்கால்'', என்று வலி மிகுந்து நின்றன.

அபிமன் வலக்கை இழத்தல்

**112. முன்னுஞ்சுரு தியினுலுயர் முனிவீரனை முனியாப்**
**பின்னும்பனி வரைபோலொரு பெருந்தேர்மிசை கொள்ளா**
**மன்னுஞ்சிலை குனியாமுனை வடிவாளொடு கையும்**
**மின்னும்பிறை முகவாளியின் வீழும்படி விட்டான்.**

[முன்னும் சுருதியினுல் உயர்முனி, வீரனை முனியா பின்னும் பனி வரை போல் ஒரு பெருந்தேர் மிசை கொள்ளா, மன்னும் சிலை குனியா, முனை வாளொடு கையும் மின்னும் பிறை முகம் வாளியின் வீழும்படி விட்டான்.]

**விளக்கம் :-** (மேன் மக்களால் சிறந்ததாகக்) கருதப்படுகின்ற வேத வித்தையால் உயர்ந்தவனுன துரோணன், வீரனுன அபிமன்பால் முனிவு கொண்டு, மறுபடியும் இமயம் போன்ற ஒரு தேரின் மேல் ஏறி வந்து, உறுதிமிக்க தனது வில்லை வளைத்து, கூரிய முனையை உடைய வடிவாளுடன் வலக்கையும், அர்த்த சந் திரக்கணை ஒன்றுல் அறுபட்டு விழும்படி (அக்கணையை) ஏவினுன், —என்பதாம்.

**113. பேணுருயிர் பருகும்பசி பெட்பப்பகு வாய்வெம்**
**கோணுகமு லாவந்தெதிர் கொடுநாவெறி வதுபோல்**
**பூணுர்கட கக்கையொடு புகர்வாளமு மண்மேல்**
**நீணுகர் வியக்கும்படி விழமீளியு நின்றுன்.**

[பேணுர் உயிர் பருகும் பசி பெட்ப, பகு வாய் வெம்கோள் நாகம் உலாவந்து எதிர்கொடு நா எறிவதுபோல், பூண் ஆர் கடகம் கையொடு புகர் வாளமும் மண் மேல் நீள் நாகர் வியக்கும்படி விழ, மீளியும் நின்றுன்.]

**விளக்கம் :-** பேணூர் – பகைவர். பெட்ப - மிக. பகுவாய் வெம்கோள் நாகம் - பிளவுபட்ட வாயும் கொடிய வலிமையும் உடைய நாகம். உலாவந்து - வெளிப்பட்டு வந்து. நாஎறிதல் - நாக்கை நீட்டுதல். புகர் வாளம் - ஒளி பொருந்திய வாள். நீள் நாகர் - உயர்ந்த தேவர். மீளி - அபிமன். பகைவரது உயிரைக் குடிக்க வேண்டும் என்ற பசி மிக, திறந்த வாயை உடைய நாகம் வெளிவந்து எதிரிலே நின்று நாக்கை நீட்டுவது போல், கடகப் பூண் ஆர் கையோடு பிரகாசம் பொருந்திய வாள் மண்மேல் தேவர்கள் வியக்கும்படி விழ, அபிமன் (தளர்ச்சி சிறிதும் இன்றிக் களம்) நின்றுன்,—என்பதாம். அபிமனது நீண்டகை, நாகம்; வாள், அந்நாகத்தின் நாக்கு.

**114. இருதோள்களி ளொருதோண்முனி யிகல்வாளியின் விழவும்**
**ஒருதோள்கொடு பொரநிற்பதொர் மதவாரண மொத்தான்**
**கருதோகையொ டளகாபதி தனயோர்கதி .பெறமுன்**
**மருதோரடி யிணைசாடிய மாயன்றிரு மருகன்.**

[இரு தோள்களுள் ஒரு தோள் முனி இகல் வாளியின் விழவும், ஒரு தோள்கொடு பொர நிற்பது ஓர் மதம் வாரணம் ஒத்தான்; கருது ஓகையொடு அளகாபதி தனயோர் கதிபெற, முன் மருது ஓர் அடி இணை சாடிய மாயன் திருமருகன்.]

**விளக்கம் :-** கருது ஓகையொடு - உள்ளத்தே கொண்ட மகிழ்ச்சியோடு. அளகாபதி தனயோர் - நளகூபரன் மணிக்ரீவன் என்ற குபேரபுத்திரர்கள். கதிபெற - சாபம் நீங்கப் பெற்று நற்கதி அடையும்படி. ஓர் அடி இணை - (ஓர் இணை அடி) ஒப்பற்ற இணையான (கண்ணனது) திருவடிகள். இளமையில் உள்ளத்து உவகையோடு குபேரபுத்திரர்கள் நற்கதி அடையும்படி தனது உபய பாதங்களால் மருதமரங்களை முறித்து வீழ்த்திய கண்ணனது மருகனுன அபிமன், (தனது) [இரு தோள்களில் ஒரு தோள் துரோணனது சரத்தால் அறுபட்டு விழவும், (சிறிதும் தளராமல்) ஒரு கையைக் கொண்டு, போர் செய்ய நிற்கும் ஒரு மத யானையை ஒத்தான்,— என்பதாம்.

**115. தன்மாதுலன் முதனளுரை திருமந்திர மொன்ருல்**
**என்மாமணி யுருளொன்றினை யெறிசக்கர மாக்கிக்**
**கன்மாரிவி லக்குங்கிரி யெனமேல்வரு கருதா**
**வின்மாரிவி லக்காவது கொடியாரையும் வீழ்த்தான்.**

[தன் மாதுலன் முதல் நாள் உரை மந்திரம் ஒன்ருல் எல் மா மணி உருள் ஒன்றினை எறி சக்கரம் ஆக்கி, கல் மாரி விலக்கும் கிரி

என, மேல் வருகருதார் வில் மாரி விலக்கா அது கொடு, யாரையும் வீழ்த்தான்.]

**விளக்கம் :-** தனது மாமனான கண்ணன் முன்னே ஒரு தினத்தில் உபதேசித்தருளிய மந்திரம் ஒன்றால், எல் (ஒளி) பொருந்திய சிறந்த மணிகள் பதிக்கப் பெற்ற தேர்ச் சக்கரம் ஒன்றைப் பகை அழிக்கும் சக்கராயுதமாகச் செய்து, அதைக் கொண்டு, இந்திரன் ஏவிய கல் மழையைத் தடுத்த கோவர்த்தன கிரிபோல், தன்மேல்|போரெழுந்துவரும் பகைவரின் வில் மழையை விலக்கி, எல்லோரையும் அழித்தான்,—என்பது பொருள். கொடு - யாரையும் என்பதின் உகரம், இகரமாய்த் திரிந்து, 'கொடியாரையும்' என நின்றது.

**116. ஒருகையினி லுருணேமிகொ டோடித்திசை தோறும்**
**வருகையற வெறிவானுயர் வனமாலியை யொத்தான்**
**இருகையொரு வரைமண்ணிலி றைஞ்சாமுடி யிறைவன்**
**பொருகையற வபிமன்பொரு போர்கண்டுபு ழுங்கா.**

[ஒரு கையினில் உருள் நேமி கொடு ஓடி திசைதோறும் வருகை அற எறிவான் உயர் வனமாலியை ஒத்தான்; இருகை ஒருவரை மண்ணில் இறைஞ்சா முடி இறைவன், பொருகை அற அபிமன் பொரு போர் கண்டு புழுங்கா,—தொடரும்.]

**விளக்கம் :-** உருள்நேமி - சக்கரப் படையாகிய தேர்ச்சக்கரம், வனமாலி - திருமாலாகிய கண்ணன். இரண்டாவது அடியிலுள்ள கை, என்பது படைவகுப்பு, என்ற பொருளது. இரண்டு கைகளையுங் கொண்டு இந்த பூமியில் யாரையும் வணங்காத தலையை உடைய அரசனான துரியோதனன், என்பது மூன்றாமடியின் பொருள். பொருகை - போர் செய்தல். ஒரு கையில் சக்கரத்தைக் கொண்டு திசை எங்கும் சுழன்று (பகைவரின்) அமைந்த படை வகுப்பை அழிப்பவனாகிய அபிமன், திருமாலை ஒத்தான்; இரு கையாலும் எவரையும் வணங்காத முடியினனான துரியோதனன், போர் செய்தல் இல்லாதபடி எதிர்த்துப் போர் செய்யும் அபிமனது திறமை கண்டு மனம் புழுங்கி, (அடுத்த செய்யுளோடு தொடரும்) என்பதாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**117. ஒழிவ னம்படைத் தலைவர்க ளெவரையு**
**மொருகை கொண்டடற் றிகிரியின் விழவெதிர்**
**பொருவ தென்கொலிச் சிறுவனொ டொருபடி**
**பொழுது சென்றதெப் பொழுதமர் முடிவது**

**வெருவ ருந்திறற் றரணிபர் களிலிவன்**
**விளிய வென்றிடத் தகுமவ ரிலரினி**
**அருளு டன்சயத் திரதனை யழையென**
**வவனும் வந்துபுக் கனனொரு நொடியிலே.**

[ஒருவன் நம் படை தலைவர்கள் எவரையும் ஒரு கை கொண்டு அடல் திகிரியின் விழ எதிர்பொருவது என் கொல்? இச்சிறுவனொடு ஒரு படி பொழுது சென்றது; எப்பொழுது அமர் முடிவது? "வெருவரும் திறல் தரணிபர்களில் இவன் விளிய வென்றிட தகுமவர் இலர்; இனி அருளுடன் சயத்திரதனை அழை" என, அவனும் வந்து புக்கனன் ஒரு நொடியில், ஏ]

**விளக்கம் :-** "ஒருவன், நம் படைத்தலைவர்கள் எல்லோரையும் ஒரு கை கொண்டே அடல்திகிரியினால் அழிந்து விழும்படி எதிர்த்துப் போர் செய்வது என்ன விந்தையோ? இச்சிறுவனோடு இன்றைய பொழுதும் கழிந்தது. இனி எப்பொழுது இப்போரை நாம் முடியச் செய்வது? அஞ்சத்தக்க ஆற்றலையுடைய அரசர்களில் இவன் மடியும்படி வெல்லும் தகுதியுடையவர் எவரும் இலர்; (ஆகவே) அன்போடு சயத்திரதனை அழையுங்கள்," என்று ஒருவனை நோக்கித் துரியோதனன் கூற, (அவ்வாறே அழைக்கப் பட்டு) சயத்திரதனும் வந்தான், என்பது பொருள்.

சேனை முழுவதற்கும் துரோணன் தலைவன். சேனையின் ஒவ்வோர் பகுப்புக்கும் கிருபன், கர்ணன், சகுனி முதலியோர் தலைவர்கள். எனவே வெருவரும் திறல் தரணிபர், எனப்பட்டார்.

**118. அருகு நின்றகொற் றவர்களு மவரவ**
**ரரிய திண்டிறற் குமரரு மமரிலுன்**
**மருக னும்படப பொருதனன் மகபதி**
**மகன்ம கன்றனைப் பசுபதி யருளிய**
**உருகெ ழுங்கதைப் படைகொடு கவருதி**
**யுயிரை யென்றெடுத் துரைசெய வரசனை**
**இருகையெங்குவித் தருளுடன் விடைகொளு**
**மெழில்கொள் சிந்துவுக் கொருதனி முதல்வனே.**

["அருகு நின்ற கொற்றவர்களும் அவர்அவர் அரிய திண் திறல் குமரரும் அமரில் உன் மருமகனும்பட பொருதனன் மகபதி மகன்மகன் தனை பசுபதி அருளிய உரு கெழும் கதை படை கொடு கவருதி உயிரை," என்று எடுத்து உரைசெய, அரசனை இரு கையும் குவித்து அருளுடன் விடைகொளும் எழில் கொள் சிந்துவுக்கு ஒரு தனி முதல்வன், ஏ.]

**விளக்கம்:**-பசுபதி—சிவபெருமான், உரு கெழும் கதை—(அப் பெருமான் அருளிய) அச்சம் தரவல்ல கதைப் படை. சிந்துவுக்கு ஒரு தனி முதல்வன்-சிந்து நாட்டின் நேரில்லா அரசனான சயத் திரதன். (அழைத்தலும் தன் அருகுவந்து நின்ற) சிந்து நாட்டுத் தலைவனான சயத்திரதனை (நோக்கித் துரியோதனன்) ''அருகே சென்று எதிர்த்து நின்ற அரசர்களும், அவர்களது திண்திறல் குமரரும், உனது மருமகனான இலக்கணனும் போரில் மடிந்து அழியும்படி போர் செய்த இந்திரனது பேரனான அபிமனை, சிவ பெருமான் அருளிய கதையால் உயிர் கவருக,'' என்று கூற, அவனும், அரசனை வணங்கி அவனது அருளுடன் விடை கொண்டு சென்று, (அடுத்த செய்யுளோடு தொடரும்)—என்பதாம்.

சயத்திரதன் களம் புகல்

**119. உரக வெங்கொடித் தரணிப னலமரு**
**முளம கிழ்ந்திடக் கதிபல படவரு**
**துரக தம்பிணித் தணிகொளி ரதமிசை**
**துவச முந்தொடுத் தடலுடை வலவனை**
**விரைவு டன்செலுத் துகவென வுரைசெய்து**
**விழிசி வந்துசிற் றிளமதி புனைதரு**
**கரக வண்புனற் சடைமுடி யவனடி**
**கருதி நின்றெடுத் தனனொரு கதையுமே.**

[உரகம் வெம் கொடி தரணிபன் அலமரும் உளம் மகிழ்ந்திட, கதிபல பட வரு துரகதம் பிணித்து அணி கொள் இரதம் மிசை துவசமும் தொடுத்து, அடல் உடை வலவனை விரைவுடன் செலுத் துக,' என உரை செய்து, விழி சிவந்து, சிறு இள மதி புனை தரு கரகம் வண் புனல் சடை முடி அவன் அடி கருதி நின்று, எடுத் தனன் ஒரு கதையும், ஏ.]

**விளக்கம்:-** அலமரல் - மனம் கலங்கல். கதி பலபடவரு துரகதம் - பலவகைப் பட்ட கதிகள் அமைய வருகின்ற குதிரை. துவசம் தொடுத்து-கொடியைத் (தேரில்) கட்டி, இளமதி புனைதரு கரக வண்புனல் சடை முடியவன் - பிறைச் சந்திரனைத் தரித்த பிரமன்கைக் கமண்டலத்தினின்று பிறந்த சிறந்த கங்கையைத் தன்னிடத்தே கொண்ட சடைமுடியை உடைய சிவபிரான். மனங்கலங்கி நின்ற பாம்புக்கொடியோன் மகிழும் படி, சயத் திரதன் தேர் ஏறி, சிவபிரான் அருளிய கதையைக் கையிற் கொண்டான், என்பதாம்.

தன்னிடத்தே நீராடினோர் பாபத்தைப் போக்குதலால் கங்கை, வண்புனல் எனப்பட்டது. கரகம் - பிரமனது கையிலுள்ள கமண்டலம்.

**120.** மறலி தண்டெனக் கொலைபுரி தொழின்மிக
வலிய தண்டுகைக் கொளுமள வினிலிவன்
விறல் புனைந்தகைத் திகிரியை யொழிய முன்
வினைய ழிந்துபற் றலர்முது கிடவிழு
திறல்வி ளங்குபொற் கதைகொடு விரைவொடு
திருகி நின்கதைக் கிதுகதை யெனவுரை
உறவி ளம்பியப் பொருகள முழுவதும்
உருமெ றிந்தொத் துவகையொ டதிரவே.

[மறலி தண்டு என கொலை புரி தொழில் மிக வலிய தண்டு கை கொளும் அளவினில், இவன் விறல் புனைந்த கை திகிரியை ஒழிய, முன் வினை அழிந்து பற்றலர் முதுகு இட விழு திறல் விளங்கு பொன் கதை கொடு விரைவொடு திருகி, 'நின் கதைக்கு இது கதை,' என, உரை விளம்பி அ பொருகளம் முழுவதும் உரும் எறிந்தது ஒத்து உவகையொடு அதிரவே-குளகமாய்த் தொடரும்.]

**விளக்கம் :-**யமதண்டம் போல் கொலை செய்யும் தொழிலில் வலிமை மிகக் கொண்ட கதையைச் (சயத்திரதன்) கைக் கொள்ளும் அளவில், இவன் (அபிமன்), வெற்றி புனைந்த தன் கையில் பற்றிய திகிரியை ஒழித்து, முன்னே போர்க்களத்தில் பகைவர் போர் செய்தலை விட்டுப் புறம் இடும்படி விழுந்து தாக்கிய வலிமை மிகுந்த அழகிய கதையைக் கையில் பற்றி வேகமாகச் சுழற்றி, (சயத்திரதனை நோக்கி), "உன் கதைக்கு ஏற்ற கதை இது," என்று அவன் மனத்தில் பதியும்படி சொல்லி, அந்த யுத்த பூமி முழுவதும் இடியிடித்தது போல் உற்சாகத்தோடு வீர முழக்கம் செய்ய, —(அடுத்த கவியோடு தொடரும்.)— என்பது பொருள்.

**121.** சினவு சிங்கமொத் திருவரு முறைமுறை
திருகி வெஞ்செரு புரிதலி னெழுமொலி
கனல்வ ளைந்துசுட் டனிலமு மெறிதரு
கடல திர்ந்தெனக் கனமதிர் வனவென
மினல்ப ரந்தெழத் திசைகளின் முடிவுற
வெடிகொ ளண்டபித் தியுடை தரவெழ
மனம ழன்று பொற் கிரிநிகர் தமபுய
வலிமை கொண்டுடற் றினர்வய மலியவே.

[சினவு சிங்கம் ஒத்து இருவரும் முறை முறை திருகி வெம் செரு புரிதலின் எழும் ஒலி, கனல் வளைந்து சுட்டு அனிலமும் எறிதரு கடல் அதிர்ந்து என, கனம் அதிர்வன என, மினல் பரந்து எழ, திசைகளின் முடிவு உற வெடி கொடு அண்டபித்தி யும் உடை தர, எழ,—மனம் அழன்று பொன் கிரி நிகர் தம புயம் வலிமை கொண்டு, உடற்றினர் வயம் மலியவே.]

**விளக்கம் :-**சினவு சிங்கம் - சினங் கொண்ட சிங்கம். முறை முறை - மாறி மாறி. திருகி—கதையைச் சுழற்றி. கனல் வளைத்து சுட்டு - கனலால் சூழ்ந்து எரிக்கப்பெற்று. அனிலம் - காற்று. திசைகளின் முடிவு - திசைகளின் எல்லை. வெடி கொடு - வெடித் தலைக்கொண்டு. அண்டபித்தி - அண்டச்சுவர். வயம் மலிய - வெற்றிமிகும்படி. சினங்கொண்ட சிங்கங்கள்போல் இருவரும் மாறி மாறிக் கதையைச் சுழற்றிக் கொண்டு போர் செய்தலால் எழுந்த ஒலி....சூழ்ந்து கொண்ட கனலால் எரிக்கப் பெற்றுக் காற்றும் வீசப் பெற்ற கடல் அதிர்ந்தது போலவும், கனம் (மேகக் கூட்டம்) முழங்குவன போலவும், மின்னல் எங்கும் பரவித் தோன்ற, திசைகளின் எல்லையை அளாவ வெடித்தலைக் கொண்டு அண்டச் சுவர்களும் உடையும்படி சப்தம் உண்டாக, மனங் கொதித்து, மேருமலையை ஒத்த தங்கள் தோள் வலிமை கொண்டு, வெற்றி மிகும்படி போர் செய்தனர்,—என்பது பொருள்.

**122.** **உரிய சிந்துவுக் கரசன திருபுய**
**மொடிய வென்புநெக் குடன்முரி தரவுடல்**
**நெரிய வெங்குடர்க் கொடிநெடு வளையமு**
**நிமிர வன்றொடைப் புடைமிடை நடையுற**
**அரிய கண்கனற் பொரியெழ மணிமுடி**
**யழக ழிந்துபொற் பிதிர்பட வுதிர்பட**
**எரியெ ழுஞ்சினத் தொடுதன தொருகையி**
**னிலகு தண்டமிட் டிகலுட னெறியவே.**

[உரிய சிந்துவுக்கு அரசனது இரு புயம் ஒடிய, என்புநெக்கு உடன் முரிதர, உடல் நெரிய, வெம்குடர் கொடி நெடு வளையமும் நிமிர, வல் தொடை புடை மிடை நடை உற, அரிய கண் கனல் பொரி எழ, மணிமுடி அழகு அழிந்து, பொன் பிதிர்பட உதிர் பட, எரி எழும் சினத்தொடு தனது ஒரு கையின் இலகு தண்டம் இட்டு இகலுடன் எறியவே, —தொடரும்.]

**விளக்கம்:-**சிந்து நாட்டிற்கு உரிய அரசனை சயத்திரதனது இரு தோள்களும் ஒடியவும், எலும்பு நொறுங்கிச் சிதையவும், உடம்பு நசுங்கவும், வெவ்விய குடலாகிய நீண்ட கொடியின் வளையமும் நீளுதல் உறும்படி நிமிரவும், வலிய தொடைகளி

னிடம் ஒன்ருேடொன்று நெருங்கி நடை தடுமாறவும், அரிய கண்களிலிருந்து கனல் வெளிப்படவும், இரத்தின கிரீடம் நலம்கெட்டுப் பொன் பொடிகள் சிந்தவும், பற்றி எரியும் கோபத்தோடு (அபிமன்) தனது ஒரு கையில் விளங்கும் கதையை வீசி ஆவேசத்தோடு தாக்கவே, – (அடுத்த கவியோடு தொடரும்) என்பது பொருள்.

**123.** **வசைய றும்புகழ்க் குருகுல திலகனை**
**மருதி ரண்டொடித் தவர்திரு மருகனை**
**விசையன் மைந்தனைப் பணைமுகின் மிசைவரு**
**விபுதர் தங்குலத் ததிபதி பெயரனை**
**அசைவில் வன்றிறற் பகைமுனை நிருபரை**
**யடைய வென்றகட் டழகுடை யபிமனை**
**இசைகொள் சிந்துவுக் கரசனு மொருகதை**
**யிருகை கொண்டெடுத் திகலுட னெறியவே.**

– [வசை அறும் புகழ் குரு குல திலகனை, மருது இரண்டு ஒடித்தவர் திருமருகனை, விசயன் மைந்தனை, பணைமுகில் மிசைவரு விபுதர் தம் குலத்து அதிபதி பெயரனை, அசைவு இல் வல்திறல் பகை முனை நிருபரை அடைய வென்ற கட்டழகு உடை அபிமனை இசைகொள் சிந்துவுக்கு அரசனும் ஒரு கதை இரு கைகொண்டு எடுத்து இகலுடன் எறியவே, – அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்:-** குற்றம் இல்லாத குருகுலத்தின் திலகம் போன்றவனும், மருத மரங்கள் இரண்டை ஒடித்த கண்ணனது மருகனும், விசயன் மகனும், பணைத்த மேகத்தின் மேல்வரும் தேவர் தலைவனை இந்திரனது பேரனும், தளர்ச்சியில்லாத வலிய போராற்றலுடைய போர் முனையில் பகை அரசர்கள் எல்லோரையும் வென்ற கட்டழகனுமான அபிமனைப் புகழ் கொண்ட சிந்துவின் அரசனை சயத்திரதனும், சிறந்த ஒரு கதையை இருகைகளாலும் எடுத்து, வலிமையுடன் தாக்க, —(அடுத்த கவியோடு தொடரும்), என்பது பொருள்.

**124.** **கரமி ழந்துமற் ருெருகர மிசையொரு**
**கதைகொள் வெஞ்சினக் களிறனை யவனிபன்**
**இரத முந்தகர்த் துறுகதி யுடன்வரு**
**மிவுளியுந்துணித் தெதிர்முனை வலவனை**
**முரணு டன்புடைத் தணிதுவ சமும்விழ**
**முதுகு கண்டபிற் சரபம முதனும்வகை**
**அரன்வ ழங்குபொற் கதையுட னவனியி**
**லுவனு முன்குதித் தடலுடன் முனையவே,**

[கரம் இழந்து மற்று ஒரு கரம் மிசை ஒரு கதை கொள் வெம் சினம் களிறு அனையவன், இவன் இரதமும் தகர்த்து, உறுகதி யுடன் வரும் இவுளியும் துணித்து, எதிர்முனை வலவனை முரணு டன் புடைத்து, அணிதுவசமும் விழ முதுகு கண்டபின், சரபம் அது எனும் வகை அரன் வழங்கு பொன் கதையுடன் அவனியில் அவனும் முன் குதித்து அடலுடன் முனையவே—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்:**—ஒரு கை இழந்து மற்றொரு கையில் ஒரு கதை யைக் கொண்ட கொடிய சினங்கொண்ட யானைபோன்றவனை அபிமன்,-இவன் (சயத்திரதன்) தேரையும் உடைத்து, வேகத் தோடு வரும் குதிரைகளையும் துணித்து, எதிரில் தேர் நடத்தும் தொழில் செய்கின்ற சாரதியையும் வலிமையோடு புடைத்து, அழகிய கொடியையும் விழச் செய்து, முதுகு கொடுக்கும்படி செய்தபின், இவனும் (சயத்திரதனும்) சிங்கத்தைக் கொல்ல வல்ல சரபம் என்று சொல்லும்படி, சிவபெருமான் அருளிய அழகிய கதையுடன் பூமியில் விரைவாகக் குதித்து வலிமையுடன் போர் செய்ய, (அடுத்தகவியோடு முடியும்)—என்பது பொருல்.

**125.** **பதயு கங்களொத் தியவலி பலகண**
**பணபு யங்கர்பற் பலமுடி சிதறின**
**எதிர்கொ டண்டமொத் தியவொலி திசைகளி**
**லிபமு நின்றுமெய்ம் பிடியொடு சிதறின**
**கதியில் வந்தசித் திரமென முறைமுறை**
**கதுவி மண்டலித் தொருபகன் முழுவதும்**
**அதிச யப்படப் பொருதன ரெதிரெதி**
**ரபிம னுஞ்சயத் திரதனு மமரிலே.**

[பதயுகங்கள் ஒத்திய வலி பல கணம் பணம் புயங்கர் பல்பல முடி சிதறின; எதிர் கொள் தண்டம் ஒத்திய ஒலி திசைகளில் நின்று மெய் பிடியொடு சிதறின; கதியில்வந்த சித்திரம் என முறை முறை கதுவி மண்டலித்து ஒரு பகல் முழுவதும் அதிசயப் பட பொருதனர் எதிர் எதிர் அபிமனும் சயத்திரதனும் அமரில், ஏ.]

**விளக்கம்:**- பதயுகங்கள் - இரண்டு கால்கள். பணம் கணம் பல புயங்கர் பல்பல முடி - படத்தையுடைய கூட்டமான பல நாகங்களின் பற்பல தலைகள். மெய் பிடி - உண்மையான நேச முடைய பெண் யானை. கதியில் வந்த சித்திரம் - வேகமாகப் பாய்ந்து வந்த புலிகள். (சித்திரகாயம் - பல அழகிய வரிகளை உடலில் உடைய புலி. அது, சித்திரம், என நின்றது),

மண்டலித்து - வட்டமாகச் சுழன்று. அமரில் - போர்க் களத்தில், அபிமன், சயத்திரதன் என்ற இருவரும் தங்கள் பாதங்களை பூமியில் ஊன்றிய வலிமையினால், பூமியைத் தாங்கும் நாகங்களின் தலைகள் நொருங்கலுற்றன, எதிரெதிர் கொண்ட கதையின் தாக்குதலினால் எழுந்த ஒலியால் திசை யானைகளும் பிடிகளோடு நிலைகுலைந்தன (இபம் - யானை); போர்க் களத்தில் விரைந்து வந்த புலிகள் போல மாறி மாறி ஒருவரையொருவர் பற்றி மண்டலித்து ஒரு பகல் முழுவதும் எதிர் எதிராக நின்று (கண்டவர்) அதிசயப் படும்படி போர் செய்தனர், என்பதாம்.

**126.** **உலைவி றண்டினிற் பரிசனன் மதலையும்**
**உவமை யின்றெனப் பகழியின் மழைபொழி**
**சிலையின் வன்றொழிற் றிறலுடை மகபதி**
**சிறுவ னுந்தனக் கெதிரில னினியென**
**மலையும் வெஞ்சமத் தொருதனி முதுபுய**
**வலிமை கண்டுபொற் புறுகழ லபிமனை**
**அலைநெ டுங்கடற் றரணிப ரனைவரும்**
**அமர ருந்துதித் தனர்முக டதிரவே.**

[உலைவு இல் தண்டினில் பரிசனன் மதலையும் உவமை இன்று என, பகழியின் மழை பொழி சிலையின் வல் தொழில் திறலுடை மகபதி சிறுவனும் தனக்கு எதிர் இலன் இனி என, மலையும் வெம் சமத்து ஒரு தனியே புயம் வலிமை கண்டு பொற்பு உறு கழல் அபிமனை அலை நெடு கடல் தரணிபர் அனைவரும் அமரரும் துதித்தனர் முகடு அதிரவே.]

**விளக்கம்:-** உலைவு இல் தண்டு - அழிவில்லாத கதை. பரிசனன் - வாயு. மகபதி சிறுவன் - விசயன். முதுபுயம் - வலிமை முதிர்ந்த தோள்கள். தண்டில் வீமனும், வில்லில் விசயனும் அபிமனுக்கு நேராகார் என்று தேவர்களும் அரசர்களும், அண்டமுகடு அதிரும்படி, (அவனை) துதித்தார்கள், என்பதாம்.

**127.** **கழுகு பந்தரிட் டனமிசை விசையொடு**
**கழுதி னங்களிட் டனபல கரணமும்**
**எழுக வந்தமிட் டனபல பவுரிகள்**
**இருபு றங்களிட் டனவெதி ரழிபடை**
**ஒழுகு செம்புனற் குருதியின் வருநதி**
**உததி யுஞ்சிவப் புறும்வகை பெருகலின்**
**முழுகி யஞ்சியிட் டனசுழி யிடையிடை**
**முகிலின் வெங்குரற் கசரத துரகமே.**

[கழுகு பந்தர் இட்டன மிசை விசையொடு, கழுது இனங்கள் இட்டன பல கரணமும், எழு கவந்தம் இட்டன பல பவுரிகள், இரு புறங்கள் இட்டன எதிர் அழிபடை, ஒழுகு செம் புனல் குருதியின் வருநதி உததியும் சிவப்பு உறும் வகை பெருகலின் முழுகி எஞ்சியிட்டன சுழி இடை இடை முகிலின் வெம் குரல் கசரத துரகம் ஏ.]

**விளக்கம்:-** கழுகுகள் (பிணந்தின்னும் பொருட்டு) மேலே விரைந்து பந்தல்போல் எங்கும் பரவின. கழுது (பேய்கள்) இனங்கள் (இரை கிட்டிய களிப்பினுல்) பல விதமான கரணங்கள் போட்டன. எழுந்த கவந்தங்கள் பவுரி என்ற கூத்து ஆடின; எதிரில் அழிவுற்ற சேனைகள் இரு புறமும் விழுந்து கிடந்தன. (அவற்றிலிருந்து பெருகிய) குருதி நீரினுல் உண்டான நதிகள் கடலும் சிவப்புறும்படி பெருகியதால், மேகம்போல் முழங்கும் யானை தேர் குதிரைகள், அவ்வெள்ளப் பெருக்கில் அமிழ்ந்து, அதனிடை உண்டாகும் நீர்ச் சுழிகளினிடத்தே மறைந்து அழிந்தன, என்பது பொருள். கரணம் - ஒருவகைக் கூத்து. பவுரி - சுழன்று ஆடும் கூத்து. இது படுகளச் சிறப்பின் வருணனை.

## அபிமன் தளர்தல்

**128.** **முறைமை யின்றியெத் தரணிபர் களுமெதிர்**
**முடுக வந்துமுற் றெறுதலி னவரவர்**
**பொறைய ழிந்துகெட் டனைவரும் வெருவொடு**
**புறமி டும்படிக் கொருதனி பொருதபின்**
**நிறைவ லம்புரித் தொடைகமழ் புயகிரி**
**நிருப துங்கன்மைத் துனனுளம் வெருவர**
**அறைபெ ருங்கதைப் படைகொடு வலியுற**
**வமர்பு ரிந்திளைத் தனனட லபிமனே.**

[முறைமை இன்றி எ தரணிபர்களும் எதிர் முடுக வந்து முன் தெறுதலின் அவர் அவர் பொறை அழிந்து கெட்டு அனைவரும் வெருவொடு புறம் இடும்படிக்கு ஒரு தனி பொருதபின், நிறை வலம்புரி தொடை கமழ் புயம் கிரி நிருபதுங்கன் மைத்துனன் உளம் வெருவர அறை பெருங்கதை படை கொடு வலிஉற அமர் புரிந்து இளைத்தனன் அடல் அபிமன், ஏ.]

**விளக்கம் :-** ஒருவர்பின் ஒருவர் வருதல் என்ற ஒழுங்கு இல்லாமல் (தன்) எதிர் வந்து எல்லா அரசர்களும் முன்னே பொருதலால், அடல் அபிமன், (முன்னேவந்த) அவ்வவர் போரிடும்

தன்மை இழந்து தோல்வியுற்றுப் புறந்தந்து ஓடும்படி, தன்னந் தனியனாய் (நின்று) போர் செய்தபின், துரியோதனனின் மைத்துனனான சயத்திரதன் அஞ்சும்படி தாக்குகின்ற பெரிய கதையைக் கொண்டு அடல் அபிமன் கடுமையாகப் போர் புரிந்து தளரலானான், — என்பது பொருள். இதழ்கள் நிறைந்த நஞ்சா வட்டை மலரராலான மாலை மணக்கும் தரித்த மலையையொத்த தோள்களை உடைய அரசர்களில் சிறந்தவனான் துரியோதன னுடைய மைத்துனனான சயத்திரதன் அஞ்சும்படி—என்பது மூன்றாவது அடியின் பொருள். அழிந்து கெட்டு - ஒருபொருட் பன்மொழி. முன்னரே தன்னந்தனியாய்ப் பலருடன் போர் செய்து களைத்துப்போன அபிமன் சயத்திரதனோடு போர் செய்து பின்னும் இளைத்தானாயினான், என்பதாம்.

அபிமன் வீழ்ச்சி

**129. இவன் மயங்கிமெய்த் தளர்வுடன் மெலிவுறும்**
**இறுதி கண்டினித் தெறுவது கடனென**
**அவனி கொண்டபற் குனன்மத லையையவன்**
**அருகு வந்தடுத் தணிபுய வலிகொடு**
**சிவனை யஞ்செழுத் துரைசெய்து தொழுதொரு**
**சிகர தண்டம்விட் டெறிதலி னெறிதரு**
**பவன னன்றுகுத் தினகிரி யெனவிசை**
**படவி ழுந்ததப் பருமணி மகுடமே.**

[இவன் மயங்கி மெய் தளர்வுடன் மெலிவு உறும் இறுதி கண்டு, இனி தெறுவது கடன் என, அவனி கொண்ட பற்குனன் மதலையை அவன் அருகு வந்து அடுத்து அணி புயம் வலிகொடு, சிவனை அஞ்சு எழுத்து உரை செய்து தொழுது, ஒரு சிகர தண்டம் விட்டு எறிதலின், எறிதரு பவனன் அன்று குத்தின கிரி என விசைபட விழுந்தது அ பருமணி மகுடம், ஏ.]

**விளக்கம்:-** இவன் (அபிமன்) மயங்கி யாக்கைத் தளர்ச்சி யோடு மெலிவுறுகின்ற முடிவை, அதாவது அந்திம தசையைக் கண்டு, (சயத்திரதன்) இனி அவனை அழிப்பதே செய்தற்குரியது என்று எண்ணி, அவனியைத் (தனது ஆற்றலால் தனதாகக் கொள்ளவல்ல) விசயனது மகனான அபிமன் அருகுவந்து நெருங்கி, சிவபிரானுக்குரிய ஐந்தெழுத்தை உச்சரித்து, வணங்கி, அழகிய தோளின் முழுவலிமை கொண்டு ஒப்பற்ற முனைப்பகுதியை உடைய கதையை வீசி எறிதலினால், - வீசுதலையுடைய வாயு முன்னொரு காலத்தில் குத்தித் தாக்கின மேருமலையின் சிகரம்

போல் (அபிமனது) பருத்த மணிகள் பதிக்கப் பெற்ற கிரீடம் வேகமாகத் தரையில் விழுந்தது, என்பது பொருள்.

**130. தலைது ணிந்துதத் திடவிழ விவனொரு**
**தனது திண்கையிற் கதைகொடு தரியலன்**
**நிலைய றிந்துபுக் குரனுற வெறிதலின்**
**நெரிநெ ரிந்ததத் தரணிப னுடலமும்**
**மலைம றிந்ததொத் தபிமன துடலமும்**
**மகித லந்தனிற் றரியற விழுதலின்**
**அலையெ றிந்துமைக் கடல்புர ளுவதென**
**அரவம் விஞ்சியிட் டதுகள மடையவே.**

[தலை துணிந்து தத்திடவிழ இவன் ஒரு தனது திண் கையில் கதைகொடு தரியலன் நிலை அறிந்து புக்கு உரன் உற எறிதலின் நெரி நெரிந்தது, அ தரணிபன் உடலமும்; மலை மறிந்ததுஒத்த அபிமனது உடலமும் மகிதலந்தனில் தரி அற விழுதலின், அலை எறிந்து மை கடல் புரளுவது என அரவம் விஞ்சியிட்டது களம் அடையவே.]

இவன் (அபிமன்) ஒரு தனது திண் கையில்கதை கொடு தரியலன் நிலை அறிந்துபுக்கு உரன்உற எறிதலின் அ தரணிபன் உடலமும் நெரி நெரிந்தது; அபிமனது உடலமும் (சயத்திரதன் கதையால்) தலை துணிந்து தத்திடவிழ, மலைமறிந்தது ஒத்த அபிமனது உடலமும் மகிதலந்தனில் தரிஅற விழுதலின், அலை எறிந்து மைக்கடல் புரளுவது என களம் அடையவே, அரவம் விஞ்சியிட்டது,—என்பது அன்வயம்.

**விளக்கம் :-** இவன் (அபிமன்) தனது திண்ணிய கையில் கதை கொண்டு, பகைவனை சயத்திரதனது உயிர்நிலை அறிந்து நெருங்கிச் சென்று பலமாகத் தாக்கலும், சிந்துவின் அரசனை சயத்திரதன் உடலும் நெரிவுற்றது; அபிமனது உடலும் (சயத்திரதனது கதையால்) தலை அறுபட்டுச் சரிந்துவிழ, மலை சாய்ந்தது போல் பூமியில் நிலைநிற்றல் இல்லாமல் விழலின், கருங் கடல் அலை எறிந்து புரள்வதுபோல், களம் முழுதும் ஒலிமிக்க தாயிற்று, என்பது பொருள். நெரிநெரிதல்—(இரட்டைக்கிளவி) மிக நெரிவுறல், தரி—தரிப்பு, அதாவது நிலைநிற்றல்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**131. மாயனுந் திருமாமன் றனஞ்சயனுந்**
**திருத்தாதை வானோர்க் கெல்லாம்**

நாயனும் பிதாமகன்மற் றொருகோடி
நராதிபரா நண்பாய் வந்தோர்
சேயனு மபிமனுவாஞ் செயத்திரதன்
கைப்படுவான் செயற்கை வெவ்வே(று)
ஆயநா ளவனிதலத் தவ்விதியை
வெல்லும்வகை யார்வல் லாரே ?

[மாயன் ஆம் திருமாமன், தனஞ்சயனும் திரு தாதை வானோர்க்கு எல்லாம் நாயனும் பிதாமகன், மற்று ஒருகோடி நராதிபர் ஆம் நண்பாய் வந்தோர், சேயன் ஆம் அபிமனு ஆம் சயத்திரதன் கை படுவான்; செயற்கை வெவ்வேறு ஆய நாள் அவனிதலத்து, அ விதியை வெல்லும் வகை யார் வல்லாரே ?

**விளக்கம் :-** சிறந்த மாமனோ கண்ணனும், சிறந்த தந்தையோ தனஞ்சயனும்; பாட்டனோ, தேவர்களுக்கு எல்லாம் தலைவனான இந்திரனும்; நட்புரிமை கொண்டு வந்தவர்களோ ஒரு கோடி அரசர்கள்; (அவ்வாறாக) இளங்குமரனாகிய அபிமன் சயத்திரதன் கையால் அழிவானும்; ஊழ்வினையின் செய்கை, வேறு வேறு விதமாக நிகழும் காலத்து, அதை வெல்லும்வழி புரிய வல்லவர் யாரே உளர் ?—என்பது பொருள்.

அபிமனுவாம், என்பதிலுள்ள ஆம் என்பதைக் கை படுவானும் என்று கூட்டுக. செயற்கை, என்பது ஊழ் என்ற பொருளது. குடிப்பிறப்பு, ஆற்றல், நண்பர்துணை எல்லாம் இருந்தும் அபிமன் அழிந்தான் என்பதை, விதியை யாரே வெல்வார்? என்ற பொதுப் பொருளால் தெரிவித்தலால், இது வேற்றுப்பொருள்வைப் பணியாகும். நாயகன், என்ற சொல் நாயன் என்று விகாரப்பட்டு நின்றது.

**132.** சேடன்முடி நெளியவரு செம்பொற்றேர்
அழிவதோ வந்தோ வந்தோ !
கேடகவா ளணிவலயக் கிளர்புயத்தோள்
அறுவதோ வந்தோ வந்தோ !
கூடகவெங் கதையொன்றாற் சிந்துபதி
கொல்வதோ வந்தோ வந்தோ !
ஆடமரி லருகொருவர் வாராமல்
இருப்பதோ வந்தோ வந்தோ !

[சேடன் முடி நெளிய வரு செம் பொன் தேர் அழிவதோ, அந்தோ, அந்தோ! கேடகம் வாள் அணி வலயம் கிளர்புயம் தோள் அறுவதோ, அந்தோ, அந்தோ! கூடகம் வெம் கதை

ஒன்றால் சிந்து பதி கொல்வதோ, அந்தோ, அந்தோ! ஆடு அமரில் அருகு ஒருவர் வாராமல் இருப்பதோ, அந்தோ, அந்தோ!]

**விளக்கம்:–** மாய்ந்தழிந்த அபிமனுக்காக நூலாசிரியர் இரங்கிய படி. அந்தோ, என்பது இரக்கப் பொருளது. கூடகம் - மாயம், வஞ்சனை, நுனி. சிவபிரான் கொடுத்த கதையாதலின் கூடக வெங்கதை, எனப்பட்டது. ஆதிசேஷன் முடி நெளியும்படியான பாரமும் உறுதியும் உடைய தேர் அழிவதோ, தோள் அறுவதோ, ஆற்றலில் எளியவனான சிந்து நாட்டானால் கொல்லப் படுவதோ, எவரும் துணை வாராமல் இருப்பதோ! என்று புலவர் இரங்கினார், என்பதாம்.

**133.** **கன்னனையுந் தேரழித்தான் கந்தனிலும்**
**வலியனே வந்தோ வந்தோ !**
**மன்னவரை வருமிருக்க மைந்தனுயிர்**
**அழிவதே யந்தோ வந்தோ !**
**பொன்னுலகோர் வியந்துருகிப் புந்தியினான்**
**மலர்பொழிந்தா ரந்தோ வந்தோ !**
**அன்னநெடுந் துவசனிவற் காயுமிகக்**
**கொடுத்திலனே யந்தோ வந்தோ !**

[கன்னனையும் தேர் அழித்தான், கந்தனிலும் வலியனே, அந்தோ, அந்தோ! மன்னவர் ஐவரும் இருக்க மைந்தன் உயிர் அழிவதே, அந்தோ, அந்தோ! பொன் உலகோர் வியந்து உருகி புந்தியினால் மலர் பொழிந்தார், அந்தோ, அந்தோ! அன்னம் நெடுந் துவசன் இவற்கு ஆயு மிக கொடுத்திலனே, அந்தோ, அந்தோ!]

**விளக்கம்:-** இதுவும் கவி தமது இரக்கத்தைத் தெரிவிக்கும் கருத்ததே. அன்ன நெடுந் துவசன் - பிரும்மன். அபிமனது மேன்மை உணர்ந்து தேவர், மலர் பொழிந்தாராதலினால், புந்தியினால் மலர் பொழிந்தார், என்றார். புந்தி - புத்தி, அறிவு.

**134.** **சரமறுத்தான் வில்லறுத்தான் றேரறுத்தான்**
**கொடியறுத்தான் சமர பூமி**
**உரமறுத்தான் முதற்பொருத வுதயதின**
**கரன்மைந்த னுடன்று சீறிக்**
**கரமறுத்தா னடுப்பொருத கார்முகத்தின்**
**குருவிசயன் காளைதன்னைச்**
**சிரமறுத்தான் பின்பொருத சயத்திரதன்**
**இவன்வீரஞ் செப்ப லாமோ ?**

**விளக்கம்:-** செய்யுள் சுலபமானது; எனவே பதப்பிரிவு தரவில்லை. சமர பூமி முதல் பொருத உதய தினகரன் மைந்தன் உடன்று சீறி சரம் அறுத்தான், வில் அறுத்தான், தேர் அறுத்தான், உரம் அறுத்தான்; (அதன்பின்) நடு பொருத கார் முகத்தின் குரு கரம் அறுத்தான்; பின் பொருத சயத்திரதன் விசயன் காளை தன்னைச் சிரம் அறுத்தான்; (ஆகவே) இவன் வீரம் செப்பலாமோ, - என்பது அன்வயம். உதய தினகரன் மைந்தன்- கர்ணன். கார்முகத்தின் குரு - துரோணன். ஒருவரால் அபிமனை அழிக்க முடியாமல், பலர் ஒன்று கூடி அழித்தாராதலால், அவனது வீரம் சொற் கொண்டு பேச முடியாத தன்மையதாகின்றது, என்று புலவர் பாராட்டும் கருத்தது செய்யுள்.

**135. எட்டானைத் தம்பமுடன் சயத்தம்ப**
**நாட்டியபே ரிறைவன் மைந்தன்**
**பட்டானென் பதுகேட்டுத் திருகினர்**
**முதுகிட்டுப் பறந்த வீரர்**
**ஒட்டாமற் செயிரமரி லுயிரிழந்த**
**தன்புதல்வற் குருகுஞ் சோகம்**
**விட்டான்வெஞ் சமரமினி வென்றேமென்**
**றுட்கொண்டான் வேந்தர் வேந்தன்.**

[எட்டு ஆனை தம்பமுடன் சயத்தம்பம் நாட்டிய பேர் இறைவன் மைந்தன் பட்டான், என்பது கேட்டு திருகினர் முதுகு இட்டு பறந்த வீரர்; ஒட்டாமல் செயிர் அமரில் உயிர் இழந்த தன் புதல்வற்கு உருகும் சோகம் விட்டான், வெம் சமரில் இனி வென்றேம் என்று உள் கொண்டான், வேந்தர் வேந்தன்.]

**விளக்கம்:-** எட்டுத் திக்குகளிலும் உள்ள திசை யானைகள் கட்டப்படும் தூண்களோடு செய ஸ்தம்பம் நாட்டிய சிறந்த அர்சுனன விசயனுக்கு மகனான அபிமன்,—என்பது முதலடியின் பொருள். (அவன்) இறந்தான் என்பது கேட்டு முதுகிட்டு ஓடிய வீரர் களம் திரும்பினர், என்பது இரண்டாவது அடியின் பொருள். வேந்தர் வேந்தனான துரியோதனன், செயிர் அமரில் நிலை நிற்க மாட்டாமல் உயிரழிந்த தன் மகனான இலக்கணன் பொருட்டு உருகிக் கரையும் துன்பம் நீங்கினவனாய், 'இனிப் போர் வென்றேம்', என்று எண்ணினன், என்பது ஈற்றடிகளின் பொருள்.

## அபிமனுக்கு எல்லோரும் இரங்கல்

**136. ஓரிரண்டு வயவர்முனைந் துடன்பொருதல்
உலகியற்கை யொருவன் றன்மேல்
போரிரண்டு புறமுவளைந் தொருகோடி
முடிவேந்தர் பொருது கொன்றார்
தேரிரண்டு கிடையாத குறையன்றோ
களத்தவிந்தான் சிறுவ னென்றென்(று)
ஈரிரண்டு பெயரொழிய மற்றுள்ளார்
அழுதிரங்கி யென்பட் டாரே.**

[ஓர் இரண்டு வயவர் முனைந்து உடன் பொருதல் உலகு இயற்கை, ஒருவன் தன் மேல் போர் இரண்டு புறமும் வளைந்து ஒரு கோடி முடி வேந்தர் பொருது கொன்றார்; தேர் இரண்டு கிடையாத குறை அன்றோ, களத்து அவிந்தான் சிறுவன், என்று என்று ஈர் இரண்டு பெயர் ஒழிய மற்று உள்ளார் அழுது இரங்கி என் பட்டார்!]

**விளக்கம்:-** ஓர் இரு வீரர் ஒருவரோடொருவர் முனைந்து பொருதல் உலகத்து இயற்கையாகும்; ஒருத்தன்மேல் ஒரு கோடி வேந்தர் இரு புறமும் சூழ்ந்து கொண்டு போர் செய்து (அபிமனை) அழித்தார்; இரண்டாவது தேர் கிடைக்காத குறையினால் அல்லவா இளங்குமரன் களத்திலே இறந்தான், என்று பலவாறு எண்ணி, நால்வர் ஒழிய மற்றுள்ளார் அனைவரும் மனங்கசிந்து பெருந்துன்பம் அடைந்தார்கள்,-என்பது பொருள். என் பட்டார்- என்ன பாடுபட்டார்கள்; அதாவது மிகமிக வருந்தினார்கள், என்பதாம்.

இரங்காத நால்வர்;—துரியோதனன், துச்சாதனன், சகுனி, சயத்திரதன். கர்ணன், தன் உடன் பிறந்தான் மகன் அபிமன் என்பதை அறிவானாதலால், நால்வரில் ஒருத்தனாக அவனைக் கொள்ளல் அமையாது. கர்ணனால் தேர் அழிந்து நின்ற அபிமனுக்கு வேறோர் தேர் கிடைத்திருப்பின், அவனை யாராலும் கொல்ல முடியாது, என்பது மூன்றாவது அடியின் கருத்தாகும்.

## அபிமனுக்காகத் தருமன் இரங்கல்

**137. தாள்விசயம் பெறமுனைந்து சக்கரயூ
கம்பிளந்து தானே நின்று
வாள்விசயன் திருமதலை வானோரும்
வியந்துரைக்க மாய்ந்தா னென்று**

**வேள்வியினு லுண்மையினற் றிண்மையினற்**
**றண்ணளியால் விறலாற் பன்னூல்**
**கேள்வியினுன் மிகுந்தெவர்க்குங் கேளான**
**வுதிட்டரனுங் கேட்டா னன்றே.**

[தாள் விசயம் பெற முனைந்து சக்கரயூகம் பிளந்து தானே நின்று, வாள் விசயன் திருமதலை வானோரும் வியந்து உரைக்க மாய்ந்தான் என்று, வேள்வியினால், உண்மையினால், திண்மையினால், தண் அளியால், விறலால் பல்நூல் கேள்வியினால் மிகுந்து எவர்க்கும் கேளான உதிட்டிரனும் கேட்டான், அன்றே.]

**விளக்கம்:-** தாள் - முயற்சி. தாள் விசயம் பெற - தனது முயற்சியால் வெற்றி பெற. கேள் - நண்பன். அபிமன் தனியே நின்று போர் செய்து மாண்டான், என்பதைத் தருமன் கேட்டான், - என்பதாம். வியூகத்திற்கு வெளிப் புறத்தில் தருமன் இருந்தானுதலால், கேட்டான், எனப்பட்டது.

**138. பிறந்ததின முதலாகப் பெற்றெடுத்த**
**விடலையினும் பீடுந் தேசும்**
**சிறந்தனையென் றுனைக்கொண்டே தெவ்வரைவென்**
**றுலகாளச் சிந்தித் தேனே**
**மறந்தனையோ வெங்களையு மாலையினுல்**
**வளைப்புண்டு மருவார் போரில்**
**இறந்தனையோ வென்கண்ணே யென்னுயிரே**
**யபிமாவின் றென்செய் தாயே!**

[பிறந்த தினம் முதல் ஆக பெற்று எடுத்த விடலையினும் பீடும் தேசும் சிறந்தனை என்று, உனை கொண்டே தெவ்வரை வென்று உலகு ஆள சிந்தித்தேனே; மறந்தனையோ எங்களையும், மாலையினால் வளைப்புண்டு மருவார் போரில் இறந்தனையோ, என் கண்ணே, என் உயிரே, அபிமா இன்று என் செய்தாயே.]

**விளக்கம்:-** விடலை - வீரனை விசயன். பீடு - பெருமை. தேசு—பிரகாசம், வீரப்புகழாகிய பிரகாசம். மாலை-சிவபெருமானது கொன்றை மாலை. அபிமனுக்காகத் தருமன் புலம்பியதை இதுவும் இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும் கூறும்.

**139. தேனிருக்கு நறுமலர்த்தார்ச் சிலைவிசய**
**னிருக்கவரைத் திண்டோள் வீமன்**
**தானிருக்க மாநகுல சாதேவர்**
**தாமிருக்கத் தமராய் வந்து**

வானிருக்கின் முடிவான மரகதமா
மலையிருக்க வாழ்வா னெண்ணி
யானிருக்க வினையறியா விளஞ்சிங்கம்
இறப்பதே யென்னே யென்னே!

[தேன் இருக்கும் நறு மலர் தார் சிலை விசயன் இருக்க, வரை திண் தோள் வீமன் தான் இருக்க, மாநகுல சாதேவர் தாம் இருக்க, தமராய் வந்து வான் இருக்கின் முடிவு ஆன மரகதம் மாமலை இருக்க, வாழ்வான் எண்ணி யான் இருக்க வினை அறியா இளஞ் சிங்கம் இறப்பதே, என்னே, என்னே!]

**விளக்கம்:-** வான் இருக்கு - சிறந்த வேதங்கள். (வேதங்களின் முடிவான பொருளான) மரகதமாமலை - கண்ணன். மரகதம் - பச்சைக்கல். வாழ்வான் - பகைவென்று அரசனுய் வாழ்வதற்கு. வினை-பிளந்து சென்ற சக்கர வியூகத்தினின்று வெளி வரும் செயல். வியூகத்தைப் பிளந்து உட் செல்வதை அறிந்த அபிமன் அதிலிருந்து திரும்பி வருதலை அறியாதவன், என்று முதல் நூல் கூறும்; எனவே, ''வினை அறியா இளஞ்சிங்கம்,'' என்றுர்.

**140.** **நின்றனையே எனைக்காத்து நீயேகென்று**
**யானுரைப்ப நெடுந்தே ரூர்ந்து**
**சென்றனையே யிமைப்பொழுதிற் றிகிரியையும்**
**உடைத்தனையே தெவ்வ ரோட**
**வென்றனையே சுயோதனன்றன் மகனுடனே**
**மகவனைத்தும் விடங்கா லம்பின்**
**கொன்றனையே நின்னுண்மை மீண்டுரைக்கக்**
**கூசினையோ குமர ரேறே!**

[நின்றனையே எனை காத்து, நீ ஏகு என்று யான் உரைப்ப நெடுந்தேர் ஊர்ந்து சென்றனையே இமைப் பொழுதில், திகிரியையும் உடைத்தனையே, தெவ்வர் ஓட வென்றனையே, சுயோதனன் தன் மகனுடனே (மற்ற அரசர்களின்) மகவு அனைத்தும் விடம் கால் அம்பின் கொன்றனையே; நின் ஆண்மை மீண்டும் (வந்து எனக்கு) உரைக்க கூசினையோ குமரர் ஏறே.]

**விளக்கம்:-** திகிரி-சக்கரவியூகம், விடம்கால் அம்பு – விஷத்தை வெளிவிடும் அம்பு, அதாவது விஷம்போல் கொடிய அம்பு. குமரர் ஏறு—அரச குமரர்களில் சிங்கம்போன்றவன். தான் செய்த ஆண்மைச்செயலைத் தானே எடுத்துக்கூறல் வீரர்மரபு அன்று; ஆகவே, மீண்டுவரக் கூசினையோ, என்ருன், என்க.

**141.** **உனக்குதவி யொருவரற வொருதனிநின்**
**றமருடற்றி யொழிந்த மாற்றம்**
**தனக்குநிகர் தானான தனஞ்சயனும்**
**கேட்கினுயிர் தரிக்கு மோதான்**
**எனக்கவனி தரவிருந்த தித்தனையோ**
**மகனேயென் றென்று மாழ்கி**
**மனக்கவலை யுடனழிந்து மணித்தேரின்**
**மிசைவீழ்ந்தான் மன்னர் கோவே.**

விளக்கம்:–செய்யுள் சுலபமானது, பதப்பிரிவு தரவில்லை. "உனக்கு உதவியாக ஒருவரும் இல்லாமல், தன்னந்தனியனாய்ப் போர் செய்து இறந்த செய்தியைத் தனக்கு நிகர் தானேயான விசயன் கேட்டால், அவன் உயிரை வைத்துக் கொண்டிருப்பானோ! எனக்குப் பூமியைத் தர இருந்தது இவ்வளவு தானோ!" என்று பலவாறு புலம்பி மன்னர் மன்னனான தருமன் மனக் கவலை யுடன் உணர்வு அழிந்து தேரினில் விழுந்தான், – என்பது பொருள்.

## வீமன் முதலியோர் புலம்பல்

**142.** **சங்கலா ரிடைவளைத்த சக்கரத்தை**
**யுடைப்பதற்குத் தமியே னெய்தி**
**அங்குலா வருமிரதத் தரசரையும்**
**தொலைத்துன்னை யடுப்பான் வந்தேன்**
**பங்கெலா மரகதமாம் பவளநிறப்**
**பொருப்புதவு பைம்பொற் கொன்றைத்**
**தொங்கலாற் கோறுவித்த சூழ்ச்சியையின்**
**றறிந்திலனே தோன்ற லேநான்.**

[சங்கலார் இடை வளைத்த சக்கரத்தை உடைப்பதற்கு தமியேன் எய்தி, அங்கு உலா வரும் இரதத்து அரசரையும் தொலைத்து உன்னை அடுப்பான் வந்தேன்; பங்கு எலாம் மரகதம் ஆம் பவளம் நிறம் பொருப்பு உதவு பைம்பொன் கொன்றை தொங்கலால் கோறுவித்த சூழ்ச்சியை இன்று அறிந்திலனே தோன்றலே நான்.]

**விளக்கம் :–** சங்கலர்—பகைவர்; தோன்றலே நீ நடுவில் இருக்க உன்னைச் சுற்றிக் கொண்ட பகைவரின் வட்டத்தை உடைப்பதற்கு தமியேன் (யான்) அடைந்து அங்கே சஞ்சரித்துக் கொண்டிருந்த தேர் மன்னர்களை அழித்து உன்னை நெருங்க வந்தேன்; இடப்பாகம் முழுதும் பச்சை மணி போன்ற திற

முடைய பவளநிறம் உடைய மலைபோன்ற சிவபெருமான் உதவிய கொன்றையின் துணைகொண்டு உன்னை அவர் கொல்வித்த சூழ்ச்சியை நான் அறியாமல் போனேனே என்று வீமன் புலம்பினான் என்பது பொருள். பார்வதி பங்குகொண்ட இடப்பாகம் பச்சை மணி போலவும், வலப்பாகம் பவளம் போலவும் இருக்கும். மலை போன்ற சிவபெருமான் தந்த பொன்னிறமான கொன்றை மாலை என்பது மூன்றாவது அடியின் பொருள்.

143. மின்னுமை விடித்ததென வீழ்த்தபொலந்
தொடையாலும் விடையோ னீந்த
பொன்னார்வெங் கதையாலு மல்லதபி
மனையமரிற் பொரவல் லார்யார்
தன்னாண்மை நிலைநிறுத்திச் சங்கமுழக்
கியவீர சிங்க சாபம்
என்னானை யிறந்துபட வின்னமுநான்
இவ்வுயிர்கொண் டிருக்கின் றேனே!.

[மின்னுமல் இடித்தது என வீழ்த்த பொலம் தொடையாலும் விடையோன் ஈந்த பொன் ஆர் வெம் கதையாலும் அல்லது அபிமனை அமரில் பொரவல்லார் யார்? தன் ஆண்மை நிலை நிறுத்தி சங்கம் முழங்கிய வீர சிங்கசாபம், என் ஆனை இறந்து பட இன்னமும் நான் உயிர்கொண்டு இருக்கின்றேனே.]

**விளக்கம்:** - மின்னுமல் இடித்தது போல். அதாவது எதிர் பாராத விதமாக இடையிலே போடப்பட்ட பொன்னிறமான கொன்றை மாலையாலும், விடையான் (சிவபெருமான்) ஈந்த அழகிய கொடிய கதையாலும் அல்லாமல், அபிமனைப் போரில் அழிக்கவல்லார் யார் உளர்? தனது ஆண்மையை நிலைநாட்டி வெற்றிச் சங்கு முழங்கிய வீரமுடைய சிங்கக்குட்டி போன்ற எனது யானை மாய்ந்தொழிய, இன்னமும் நான் இவ்வுயிரைச் சுமந்து கொண்டு இருக்கின்றேனே, — என்று புலம்பியபடி இதை, நகுலனது புலம்பலாகக் கொள்ளலாம். சாபம்-குட்டி

144. எடுத்தபடை யனைத்தினுக்கு மெதிரில்லை
யெனக்கலைக ளெல்லா முன்னே
அடுத்ததுகண் டையாநின் னுருயிர்க்குக்
கரைந்துகரைந் தையுற்றேன் யான்
விடுத்தபெருந் திருத்தாதை விழிகளிப்பப்
பகைவென்று மீளா தென்னைக்
கெடுத்தனையே பிழைத்தனையென் றினியொருவர்
வந்துரைக்கக் கேளேன் கொல்லோ,

[எடுத்த படை அனைத்தினுக்கும் எதிர் இல்லை என கலைகள் எல்லாம் உன்னை அடுத்தது கண்டு, ஐயா யான் நின் ஆர் உயிருக்கு கரைந்து கரைந்து ஐயுற்றேன்; விடுத்த பெருந்திரு தாதை விழிகளிப்ப பகை வென்று மீளாது, என்னை கெடுத் தனையே, பிழைத்தனை என்று இனி ஒருவர் வந்து உரைக்க கேளேன் கொல்லோ.]

**விளக்கம் :—**கையில் எடுத்த ஆயுதங்கள் அனைத்திற்கும் உனக்கு ஒப்பு இல்லை என்று சொல்லும்படி அத்திர சஸ்திரக் கலை கள் எல்லாம் உன்னை வந்து அடைந்ததைக் கண்டு, ஐயனே, உனது அரிய உயிருக்காக, ஐயுற்றேன்; அதாவது உனது உயிர் தீங்குறுமோ, என்று மனங்கலங்கி ஐயுற்றவனாய் இருந்தேன்; (உன்னைப் போர்வென்று வருமாறு களம் அனுப்பிய பெரிய தந்தையான தருமன் கண்களிக்கப் பகைவென்று மீளாமல், என்னைக் கெடுத்தாயே, அதாவது துன்பம் அடையச் செய் தனையே; இனி, நீ பிழைத்தனை என்று வந்து ஒருவர் சொல்லக் கேட்க மாட்டேனே; — என்பது பொருள். இதைச் சகாதேவன் புலம்பலாகக் கொள்ளலாம். அழகு, குணம், கல்வி, ஆற்றல் ஆய நலமுடைய மைந்தனுக்குத் தீங்கு நேருமோ என்று அன்புடைய தந்தை சங்கை கொள்ளல், இயற்கையாதலால், ஆடவர்க்குரிய நலமெல்லாம் முற்றப் பெற்ற அபிமனுக்குத் தீங்குநேருமோ,' என்று சகாதேவன் அஞ்சினான், என்க.

**145. என்றென்று வீமனுந்தன் னிளையோரும்**
**அழுதரற்ற விறந்தோன் வீரம்**
**நன்றென்று'தளமிரண்டி னரபாலர்**
**பலர்திரண்டு நவிலா நிற்ப**
**அன்றென்று மனமருளுற் றபிமனடு**
**தலைக்குன்றை யடுத்து மேலைக்**
**குன்றென்று தடுமாறிப் பின்னையும்போய்த்**
**தனதுதடங் குன்று சேர்ந்தான்.**

[என்று என்று வீமனும் இளையோரும் அழுது அரற்ற. இறந் தோன் வீரம் நன்று என்று தளம் இரண்டில் நரபாலர் பலர் திரண்டு நவிலா நிற்ப, அன்று என்று மனம் மருள் உற்று அபிமன் அடுதலை குன்றை அடுத்து, பின்னையும் போய் தனது தடங்குன்று சேர்ந்தான்.]

**விளக்கம் :-**என்று பல படி வீமனும் அவன் தம்பியரும் அழுது புலம்ப, 'இறந்தோன் வீரம் நன்று'. என்று இருதிறத்து அரசர் கள் ஒன்றுகூடிப் பாராட்டிக்கூற அன்று (அப்பொழுது) என்று

(சூரியன்) மனம் மயங்கி. அபிமன் கொன்று வீழ்த்திய தலைகளாகிய மலையை நெருங்கி (அது அந்தமனகிரி அல்லாமைகண்டு பின்பு அப்பால் சென்று தனது பெரிய அத்தமன கிரியை அடைந்தான். என்பது பொருள். என்று....சூரியன்: பகைவரது தலைக்குவியலை மலை என்று சூரியன் மயங்கினுன், என்றது மயக்க அணியின் பாற் படும்.

வேறு

**146. இந்நிலத் தவனி பால ரிவ்வகை யிரங்கி ஏங்கத்
தென்னிலத் தெதிர்ந்து ளாரைத் தென்னிலந் தன்னி லேற்றி
எந்நிலத் தினுந்தன் னுண்மைக் கெதிரிலா விசயன் றானும்
அந்நிலத் தகன்று மீண்டா னுற்றவா றறிவு றுதான்.**

[இ நிலத்து அவனி பாலர் இ வகை இரங்கி ஏங்க, தென் நிலத்து எதிர்ந்துளாரை தென் நிலம் தன்னில் ஏற்றி, எ நிலத்திலும் தன் ஆண்மைக்கு எதிர் இலா விசயன் தானும் அ நிலத்து அகன்று மீண்டான் உற்ற ஆறு அறிவுருதான்.]

**விளக்கம்:-** இந்த இடத்திலே அரசர்கள் இவ்வாறு இரங்கி வருந்த, எந்த இடத்திலும் தனது ஆண்மைக்கு எதிர் இல்லாத விசயன் தானும் தெற்குப் புறத்தில் எதிர்த்து வந்த சஞ்சப் தகர்களை யமன் உலகம் ஏற்றி, (அதன்பின்) சக்கர விழுகத்தி னிடை நிகழ்ந்ததை அறியாதவனுய், அத் தென் திசையினின்று திரும்பினுன்,—என்பது பொருள். தென் திசையில் சஞ்சப்தகரோடு பொருது வென்ற விசயன் அபிமனது மரணத்தை அறியாதவனுய்த் திரும்பினுன், என்பதாம்.

கண்ணன் இந்திரனை அழைத்தல்

**147. போனது வருவ தெல்லாம் புரையற வுணரு கிற்கும்
மானதிர் கனகத் திண்டேர் வலவனு மதுரை மன்னன்
தேனதிர் கடுக்கை மாலை யிடுசெயத் திரதன் றன்னுல்
ஆனதுங் குறித்து வானே ரரசையுங் குறிக்க லுற்றுன்.**

[போனது வருவது எல்லாம் புரை அற உணருகிற்கும் மான் அதிர் கனகம் திண்தேர் வலவன் ஆம் மதுரை மன்னன், தேன் (வண்டுகள்) அதிர் கடுக்கை மாலை இடு செயத்திரதன் தன்னுல் ஆனது குறித்து வானேர் அரசையும் குறிக்கல் உற்றுன்.]

**விளக்கம்:-** நிகழ்ந்தது நிகழப்போவது ஆயவற்றை எல்லாம் பிழையில்லாமல் அறியவல்ல, குதிரைகள் ஆரவாரிக்கும் அழகிய வலியதேரின் பாகனுன வடமதுரைக்குத் தலைவனுன, கண்ணன்,- என்பது முதல் இரண்டடிகளின் பொருள். (அவன்) வண்டுகள் ஒலிக்கும் கொன்றை மலர் மாலையை இடையிலே இட்ட சயத்திரதனுல் நேர்ந்த செய்கையையும், அதாவது அபிமனது மரணத்தையும் எண்ணி, வானவர் தலைவனுன இந்திரனையும் நினைத்தான்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

**148. மதித்தலு மனத்திற் றேன்றும் வலாரியைக் குறிப்பி னுலுன்**
**கதித்தடந் திண்டேர் மைந்த னுயிரைநீ காத்தி யென்னத்**
**துதித்தவன் றெழுது மாயச் சூழ்ச்சியான் முனியு மாகி**
**விதித்தலைப் பட்ட காதற் சுதனுடன் விழுவ னென்றுன்.**

மதித்தலும் மனத்தில் தோன்றும் வலாரியை குறிப்பினுல் "உன் கதி தடந்திண் தேர் மைந்தன் உயிரை நீ காத்தி," என்ன, துதித்து அவன் தொழுது மாயம் சூழ்ச்சியால் முனியும் ஆகி, விதித்தலை பட்ட காதல் சுதனுடன் விழுவன் என்றுன்.]

**விளக்கம்:-** கண்ணன் நினைத்த அளவில் அவனது மனத்தினிடம் தோன்றிய இந்திரனை (நோக்கி) இங்கிதத்தால் "உன் மகனது உயிரைக் காப்பாயாக," என்னலும், அவன் கண்ணனைத் துதித்து வணங்கி மாயையின் வல்லமையால் ஓர் அந்தணனுய் மாறி, "தலைவிதியால் இறந்துபட்ட காதல் மைந்தனுடன் தீயில் விழுந்து இறப்பேன், என்று கூறினுன், என்பது பொருள். வலாரி - இந்திரன். கதி தடம்திண் தேர் மைந்தன் - வேகமான கதியை உடைய பெரிய வலிய தேரை உடைய விசயன்.

இந்திரன் வந்ததும், கண்ணன் அவனை ஏவியதும் ஆய வற்றை விசயன் அறியான், என்பது தோன்ற, "**மனத்தில் தோன்றும்**", என்றும், "**குறிப்பினுல்....காத்தி**" என்றும், கூறினுர்.

விசயன் தடுத்தல்

**149. நெறியிடை யிவர்கள் காண நெருப்பினை வளர்த்துத் தானும்**
**பொறியுற வீழுங் காலை புவனங்க ளனைத்து மீன்றேன்**
**அறிவுடை விசயற் கிந்த வந்தணன் றழலில் வீழாது**
**எறிகணை வரிவில் வீர விலக்குநீ யீண்டை யென்றுன்.**

[நெறியிடை இவர்கள் காண நெருப்பினை வளர்த்து தானும் பொறி உற வீழுங்காலை புவனங்கள் அனைத்தும் ஈன்றோன், அறிவு உடை விசயற்கு, இந்த அந்தணன் தழலில் வீழாது, எறி கணை வரிவில் வீர விலக்கு நீ ஈண்டை,'' என்றான்.]

**விளக்கம்:-** பொறி உற - தீயில் பொருந்த. வீழுங்காலை - விழுவதற்கு இருந்த சமயம். புவனம் ஈன்றோன் - கண்ணன். ''முனிவன் வேடங் கொண்டு விதியினால் மாய்ந்த மைந்தனோடு இறப்பேன், என்று தீவளர்த்து, நின்றவனைக் கார்த்தி,'' என்று கண்ணன் விசயனுக்கு உரைத்தான், என்பதாம்.

**150. என்றலும் விசய னெய்தி யெந்தைநீ யெரியில் வாளா**
**பொன்றலுய்ந் திருந்தா லின்னம் புதல்வரைப் பெறலு மாகும்**
**நன்றல தவத்தின் மிக்கோய் நல்லுயிர் செகுத்த லென்னக்**
**குன்றினும் வலிய தோளான் முனிவனைத் தழுவிக் கொண்**
**டான்.**

[என்றலும், விசயன் எய்தி, ''எந்தை, நீ எரியில் வாளா பொன்றல்; உய்ந்து இருந்தால் இன்னம் புதல்வரை பெறலும் ஆகும், நன்று அல, தவத்தின் மிக்கோய், நல்உயிர் செகுத்தல்,'' என்ன, குன்றினும் வலிய தோளான், முனிவனை தழுவிக் கொண்டான்.]

**விளக்கம்:-** வாளா பொன்றல் - வீணே உயிரை மாய்த்துக் கொள்ளாதே. நல்லுயிர் செகுத்தல் நன்று அல - தற்கொலை செய்து கொள்ளல் நல்லது அன்று. ''மாளாமல் இருந்தால் இன்னும் மக்களைப் பெற்றுக் கொள்ளலாம்; தற்கொலை செய்து கொள்ளல் முறையன்று,'' என்று விசயன் கூறித் தடுத்தான், என்பதாம். எந்தை, என்றது உயர்வு பற்றி வந்த வழு.

**151. வீதலும் பிழைத்த றானும் விதிவழி யன்றி நம்மால்**
**ஆதலு மழிவு முண்டோ நின்னில்வே றறிஞ ருண்டோ**
**பூதலந் தன்னில் யாவர் புதல்வரோ டிறந்தா ரையா**
**சாதலிங் கியற்கை யன்றென் றருளுடன் றடுத்த காலை.**

''வீதலும் பிழைத்தல் தானும் விதி வழி அன்றி நம்மால் ஆதலும் அழிவும் உண்டோ? நின்னில் வேறு அறிஞர் உண்டோ! பூதலந் தன்னில் யாவர் புதல்வரோடு இறந்தார், ஐயா; சாதல் இங்கு இயற்கை அன்று,'' என்று அருளுடன் தடுத்த காலை,— தொடரும்.]

**விளக்கம்:-** ''சாதலும் பிழைத்தலும் விதி வழியன, நம்மால் செய்யக் கூடிய அல்ல; நீயோ சிறந்த அறிஞன், உலகில் புதல்வ ரோடு இறந்தார் இலர்; ஆகவே, இங்கு (இப்போது) நீ சாதல் இயற்கையோடு ஒத்தது ஆகாது,'' என்று விசயன் கூறி விலக்கிய அளவில், —(அடுத்த கவியோடு முடியும்),—என்பதாம்.

**152. தன்மக னுடன்றீ மூழ்கத் தவிர்ந்தநற் றவனு மீள**
**வின்மக னாகி நின்ற விசயனை வெகுண்டு நோக்கி**
**என்மக னிறக்க வென்னை யிருத்தினை யாயி னம்ம**
**நின்மக னிறந்தா லென்சொன் மருதொழி நீயு மென்றான்.**

[தன் மகனுடன் தீ மூழ்க தவிர்ந்த நல் தவனும் மீள, வில் மகன் ஆகி நின்ற விசயனை வெகுண்டு நோக்கி, ''அம்ம, என் மகன் இறக்க என்னை இருத்தினை ஆயின், நின் மகன் இறந்தால் என் சொல் மருது ஒழி நீயும்,'' என்றான்.]

**விளக்கம் :-** தன் மகனுடன் தீயில் முழ்குதலை ஒழித்த அந்தணனும், பின்னர் விசயனை வெகுண்டு நோக்கி, ''என் மகன் மாய என்னைச் சாகாது இருக்கச் செய்தாய், உன் மகன் இறந்தால் நீயும் என் சொல்லை மறுக்காமல் இருப்பாயாக,'' என்று கூறினான், என்பது பொருள். மூழ்க—மூழ்குதல், வீழ்தல். நல்தவன்-நல்ல தவத்தினனான முனிவன். தான் தீயில் வீழ்தலைத் தடுத்தான் ஆதலால், முனிவன் வெகுளி கொண்டான். அம்ம: முன்னிலை இடைச் சொல்; நான் சொல்வதைக் கேட்பாயாக என்ற பொருளது. ஆயின், என்பது, ஆதலால், என்ற பொருளது.

**153. ஐயெனத் தொழுது வீர னந்தண னுயிரை மீட்டு**
**மையெனக் கரிய மேனி வலவனுந் தானுந் திண்டேர்**
**ஒய்யெனச் செலுத்து காலை வேலையி னோதை தானும்**
**பொய்யெனப் பரந்தோ ரோதை செவிகளைப் புதைத்த**
**தன்றே.**

[ஐ என தொழுது வீரன் அந்தணன் உயிரை மீட்டு மை என கரிய மேனி வலவனும் தானும் திண் தேர் ஒய் என செலுத்து காலை வேலையின் ஓதை தானும் பொய் என பரந்து ஓர் ஓதை செவிகளை புதைத்தது அன்றே.]

**விளக்கம் :-** ஐ என -(உடன் பாட்டுக் குறிப்பு.) அந்தணன் சொல்லியதற்குச் சம்மதித்து, மை - மேகம். ஒய் என - விரை வாக. (கடலின் ஓதையும்) பொய் என - அற்பம் என்று சொல் லும்படி, அதாவது கடல் ஓசையினும் மிக்கதான. ஓர் ஓதை

பரந்து செவிகளை புதைத்தது - ஒரு பேரொலி வியாபித்துச் செவிகளை அடைந்தது. அந்தணனைத் தடுத்து அனுப்பி விட்டுத் தேரேறிக் கண்ணனுடன் செல்கையில், தனக்கு முன் கடல் ஒலியும் சிறியது என்னும்படி ஒரு பேரொலி, அவர்கள் செவி சேர்ந்தது, என்பதாம்.

**154. பாசறை யணுகு முன்னம் பாசடைப் பதுமம் போல**
**மாசற விளங்கு மேனி வண்டுழா யலங்கன் மூர்த்தி**
**ஆசறு வரிவிற் காளை யங்கையு மருகு நீங்காத்**
**தேசுறு படைகள் யாவு மொழித்தனன் றீமை தீர்ப்பான்.**

[பாசறை அணுகும் முன்னம் பாசு அடை பதுமம் போல மாசற விளங்கும் மேனி வண் துழாய் அலங்கல் மூர்த்தி, ஆசு அறு வரி வில் காளை அம்கையும், அருகு நீங்கா தேசு உறு படைகள் யாவும் ஒழித்தனன் தீமை தீர்ப்பான்.]

**விளக்கம்:-** பாசு அடை - (பசுமை அடை) பசிய தாமரை இலை. பதுமம் - செந்தாமரை. மாசு அற விளங்கும் மேனி - குற்றம் இல்லாது விளங்கும் திருமேனி. ஆசு அறு வரிவில் காளை - குற்றமில்லாத வரிவில்லையுடைய விசயன். அருகு நீங்கா – விட்டு நீங்காது அருகே இருக்கின்ற. படை - ஆயுதம். தீமை தீர்ப்பான் - (ஆயுதங்களால் வரும்) தீங்கை ஒழிக்கும் பொருட்டு. கண்ணபிரான், பாசறை சேரு முன், விசயன் கை ஆயுதங்களை, அவற்றால் அவன் தீங்குறாமல் காப்பதற்கு, அகற்றி விட்டான், என்பதாம்.

அபிமனது அழிவைக் கேட்டுப் புத்திர சோகத்தால் விசயன் தன்னை அழித்துக் கொள்ளாது காத்தற் பொருட்டுக் கண்ணன், ஆயுதங்களை அவனிடமிருந்து அகற்றினான், என்க. கண்ணனது கரிய திருமேனி தாமரை இலை; கண், வாய், கை, கால், உந்தி ஆயவை தாமரை; ஆகவே, பாசடைப் பதுமம், என்றார். தீமை தீர்ப்பான், என்பதற்கு அடியார்களின் துன்பங்களைத் தீர்ப்பவன், என்று பொருள் கொண்டு, கண்ணனுக்கு அடையாகவும் கொள்ளலாம்.

**155. அங்கையார்த் தனைத்து ளோரு மரற்றுபே ரரவங் கேட்டுக்**
**கங்கையம் பழன நாடன் கண்ணனை வணங்கி நோக்கி**
**இங்கய லெழுந்த கோடம் யாதென யாதுஞ் சொல்லான்**
**பங்கய நெடுங்கண் சேப்ப நித்திலம் பரப்பி னானே.**

[அம்கை ஆர்த்து அனைத்து உளோரும் அரற்று பேர் அரவம் கேட்டு, கங்கை அம் பழனம் நாடன் கண்ணனை வணங்கி நோக்கி, இங்கு அயல் எழுந்த கோடம் யாது ? என, யாதும் சொல்லான், பங்கயம் நெடுங்கண் சேப்ப நித்திலம் பரப்பினுனே.]

**விளக்கம் :** (படை வீட்டில்) உள்ளார் அனைவரும், அம்கையால் ஒலி எழும்படி அடித்துக்கொண்டு கதறும் பெரிய ஒலி கேட்டு, கங்கை பாயும் அழகிய கழனிகளைக் கொண்ட குருநாடனுன விசயன் கண்ணனை வணங்கி நோக்கி, ''இப்போது இங்கு அருகில் எழுந்த கோஷம் யாது ?'' என்று கேட்க, (அதற்குக் கண்ணன்) யாதொரு பதிலும் சொல்லாதவனுய், தாமரை போன்ற (தனது) நெடுங்கண் சிவக்கக் கண்ணீர்த் துளிகளைப் பெருக்கினுன், — என்பது பொருள். நித்திலம்—முத்தைப் போன்ற கண்ணீர்த் துளிகள்.

**156. வன்கண னிளகிச் செங்கண் மாலடி வீழ்ந்து, மேன்மேல்**
**என்கணுந் தோளு மார்பு மிடனுறத் துடிக்கை மாரு**
**நின்கணு மருவி சோர நின்றனை யின்று போரில்**
**புன்கணுற் றவர்கண் மற்றென் றுணைவரோ புதல்வர்**
**தாமோ?**

[வன்கணன் இளகி, செம்கண்மால் அடி வீழ்ந்து, மேல் மேல் என் கணும் தோளும் மார்பும் இடம் துடிக்கை மாரு ; நின் கணும் அருவி சோர நின்றன, இன்று போரில் புன்கண் உற்றவர்கள் மற்று என் துணைவரோ, புதல்வர் தாமோ ?]

**விளக்கம் :** வன்கணன் – வலியவனுன விசயன். புன்கண்–துன்பம், மரணம். விசயன் கண்ணனை வணங்கி, ''என் கண்ணும் தோளும் மார்பும் இடம் துடித்தல் நீங்காதிருக்கின்றன. நீயும் கண்ணீர் வடித்து நிற்கின்ருய்; இன்று மாண்டவர் என் தம்பியரோ, புதல்வரோ ?'' – (தொடரும்) என்று கேட்டான் என்பதாம்.

**157. திருவுளத் துணரா தில்லை செப்புகென் றயர்வான் றன்னை**
**மருவுறத் தழுவித் திங்கள் மரபினுக் குரிய செல்வா!**
**வெருவுறப் பகையை வென்ற வீரனே! மருகனென் றன்(று)**
**அருவரைத் தோளினுனுக் குற்றவா றனைத்துஞ் சொன்னுன்.**

[''திருஉளத்து உணராது இல்லை, செப்புக,'' என்று அயர்வான் தன்னை, மருவுற தழுவி, ''திங்கள் மரபினுக்கு உரிய செல்வா, வெருவுற பகையை வென்ற வீரனே, மருகன்,'' என்று அன்று அருவரை தோளினுனுக்கு உற்ற ஆறு அனைத்தும் சொன்னுன்.]

**விளக்கம் :** திங்கள் மரபு—சந்திர குலம். அருவரைத்தோளினுன்-அழித்தற்கு அரிய மலைபோன்ற தோள்களை உடைய அபிமன். "நீ அறியாதது ஒன்று இல்லை; கூறுக," என்று சொல்லித் தளர் பவனுகிய விசயனைக் கண்ணன் கட்டித் தழுவிக் கொண்டு, தன் மருகனுன அபிமனுக்கு நேர்ந்ததை விபரமாய்க் கூறினுன், என்பதாம்.

விசயன் மூர்ச்சித்து விழல்

**158. மைத்துன னுரைத்த மாற்ற மைத்துனன் செவிக்குத் தீக்கோல்**
**ஒத்திரு புறனும் வேவ வுள்ளுறச் சுட்ட போது**
**புத்திர சோக மென்னு நஞ்சினுற் பொன்றி னுன்போல்**
**அத்தடந் தேரி னின்று மவனிமே லயர்ந்து வீழ்ந்தான்.**

[மைத்துனன் உரைத்த மாற்றம் மைத்துனன் செவிக்கு தீ கோல் ஒத்து இரு புறனும் வேவ உள் உற சுட்டபோது, புத்திர சோகம் என்னும் நஞ்சினுல் பொன்றினுன் போல், அத்தடந் தேரினின்றும் அவனிமேல் அயர்ந்து வீழ்ந்தான்.[

**விளக்கம் :—** மைத்துனன் — மஃனவியின் சகோதரனுன கண்ணன். மைத்துனன் - அத்தை மகனுன விசயன். தீக்கோல் கொள்ளிக் கட்டை. பொன்றல் — இறத்தல். கண்ணன் சொன்னவை, அருச்சுனன் செவிகளுக்குக் கொள்ளிக் கட்டை போல் இரு புறமும் வேகும்படி உள்ளத்தை நன்ருகச் சுடவும், புத்திர சோகம் என்ற விஷத்தால் இறந்தவன் போல், தேரினின்றும் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்தான், என்பதாம். செவி இரண்டாதலின் இருபுறம், எனப்பட்டது.

**159, அயர்ந்தனன் விழுந்த கோவை யச்சுதன் பரிவோ டேந்திப்**
**புயந்தழீஇ யெடுத்து வாசப் பூசுநீர் தெளித்து மாற்றப்**
**பயந்தரு கோடிக் கூட பாகலந் தணிந்து மெல்லக்**
**கயந்தெளி வுற்ற தென்னக் கண்மலர்ந் தழுத லுற்ருன்.**

[அயர்ந்தனன் விழுந்த கோவை அச்சுதன் பரிவோடு ஏந்தி ப்யம் தழீஇ எடுத்து, வாசம் பூசு நீர் தெளித்து மாற்ற, பயம் தரு கோடி கூட பாகலம் தணிந்து மெல்ல கயம் தெளிவு உற்றது என்ன கண் மலர்ந்து அழுதல் உற்ருன்.]

**விளக்கம் :—** கூடபாகலம்—மருந்தினுல் தீராத ஒரு பெரிய யானை நோய். இந்நோய் பற்றிய அளவில் கை, கால், கண், வாய் முதலிய உறுப்புக்கள் செயல் அற, யானை திடீரென்று

விழுந்து மடியுமாம். எனவே, பயம் தரு கூடபாகலம், எனப் பட்டது. அயர்ந்து விழுந்த விசயனுக்குக் கண்ணன் சைத்தியோ பசாரம் செய்து, அவனது மூர்ச்சையைப் போக்க, (விசயன்) கூட பாகலம் என்னும் தீராத கொடிய நோய் தணியப் பெற்று, மெல்லத் தெளிவு கொண்ட கயம் (யானை) போல் கண் விழித்து மகனுக்காக அழுது புலம்பலுற்றான், என்பதாம். தணிந்து, என்பது தணிய என்ற பொருளது. கோடி கூடபாகலம், என்பதிலுள்ள கோடி, என்பது, கொடிய, அல்லது புதிய என்ற பொருளது.

விசயன் புலம்பல்

**160. போரினிற் றுணைவ ரோடும் புயங்ககே தனனை வென்று**
**பாரெனக் களித்தி நீயே யென்றுளம் பரிவு கூர்ந்தேன்**
**நேருனக் கொருவ ரில்லாய் நீகளம் பட்டா யாகில்**
**ஆரினிச் செகுக்க வல்லா ரைவருக் குரிய கோவே!**

[போரினில் துணைவரோடும் புயங்க கேதனனை வென்று, பார் எனக்கு அளித்தி நீயே, என்று, உளம் பரிவுகூர்ந்தேன்; நேர் உனக்கு ஒருவர் இல்லாய், நீ களம் பட்டாய் ஆகில், ஆர் இனி செகுக்க வல்லார், ஐவருக்கு உரிய கோவே.]

**விளக்கம் :**—எங்கள் ஐவருக்கும் உரியவனான அரசனே, உனக்கு ஒப்பாவார் ஒருவர் இல்லாதவனே, போரில் உன் சகோதரர்களுடன் சேர்ந்து நீயே எனக்குப் பூமியை அளிப்பாய் என்று உள்ளத்தில் ஆசை மிகக் கொண்டிருந்தேன்; நீ போர்க் களத்தில் இறந்தாயானால், இனிப் பகை அழிக்கவல்லவர் யாவர் உளர்?—என்பது பொருள்.

**161. சக்கரம் பிளந்த வாறுந் தரியல ருடைந்த வாறும்**
**துக்கர மான கொன்றைத் தொடையலால் வளைத்த வாறும்**
**மெய்க்கரந் துணிந்த வாறு மீண்டுருத் தடர்த்த வாறும்**
**உக்கர முடனென் முன்னே யோடிவந் துரைசெய் யாயோ?**

[சக்கரம் பிளந்த ஆறும், தரியலர் உடைந்த ஆறும், துக்கரம் ஆன கொன்றை தொடையலால் வளைத்த ஆறும், மெய்கரம் துணிந்த ஆறும், மீண்டு உருத்து அடர்த்த ஆறும், உக்கரமுடன் என் முன்னே ஓடி வந்து உரை செய்யாயோ.]

**விளக்கம் :**—தரியலர் - பகைவர். துக்கரம் - (துஷ்கரம்) செய்யக் கூடாத. உக்கரம் - (உக்கரம்) வீரம். சக்கரவியூகம் பிளந்தது முதல், கரம் போன பின்பும் கடும்போர் செய்தது ஈருகவுள்ள

செய்தியை வீரத்தோடு என் முன் ஓடி வந்து கூற மாட்டாயோ]—
என்று விசயன் புலம்பினான், என்பதாம்.

**162.** **பன்னக வரசன் பெற்ற பாவைமா மதலை தன்னை**
**முன்னுற முனையிற் றோற்றேன் மூர்க்கனேன் முடியா**
**துண்டோ ?**
**உன்னையு மின்று தோற்றே னுன்னுடன் றொடர்ந்து**
**வாரா(து)**
**இன்னமு மிருந்த தையா வென்னுயிர்க் கிறுதி யுண்டோ ?**

[பன்னக அரசன் பெற்ற பாவை மாமதலை தன்னை முன் உற முனையில் தோற்றேன், மூர்க்கனேன் முடியாது உண்டோ? உன்னையும் இன்று தோற்றேன், உன்னுடன் தொடர்ந்து வாராது இன்னமும் இருந்தது ஐயா, என் உயிர்க்கு இறுதி உண்டோ.]

**விளக்கம்** :—பன்னக அரசன் பாவை....முனையில் தோற்றேன், உன்னையும் இன்று தோற்றேன்; ஐயா, இன்னமும் உன்னுடன் தொடர்ந்து வாராது (என் உயிர்) இருந்தது; (எனவே) என் உயிர்க்கு இறுதி உண்டோ! மூர்க்கனேன் முடியாது உன்டோ!—என்பது அன்வயம்.

பன்னக அரசன்...மதலை - நாகராசனின் மகளான உலூபி என்பாள் பெற்ற சிறந்த மகனான இராவான். முன்உற - முன்னே, இதன் முன். முனை – போர். (நீ இறந்த பின்னும் உன்னுடன் வாராமல் என் உயிர் உடலோடு உறவு கொண்டு இருந்தது, எனவே என் உயிர்க்கு இறுதி உண்டோ - எனது உயிருக்கு முடிவு என்பது ஒன்று உண்டோ. (இல்லை, என்றபடி). ஒன்றை விடாது பற்றி யிருத்தல் மூர்க்கம்; மகன் இறந்த பின்னும் உயிரை விடாமல் வைத்திருந்தானதலால் தன்னை, விசயன், மூர்க்கன் என்றான். முடியாது உண்டோ=பொறுக்க முடியாத புத்திர சோகத்தைப் பொறுத்துக் கொண்டு உயிரோடு இருந்தமையின், என்றால் பொறுக்க முடியாதது ஒன்று உண்டோ, (அதாவது, எதையும் பொறுப்பேன், என்று தன்னை இகழ்ந்து கொண்டபடி).

**163.** **கதிரவ னுதிக்கு முன்னே கண்டுயி லுணர்த்தி யென்னை**
**அதிரமர்க் கோலங் கொள்வா னறிவுறுத் துரைக்க**
**வல்லாய்**
**முதிரமர் முருக்கி மீண்டே னித்தனை போது முன்போல்**
**எதிர்வரக் காண்கி லேனிங் கில்லையோ வென்செய் தாயே.**

[கதிரவன் உதிக்கும் முன்னே கண் துயில் உணர்த்தி என்னை அதிர் அமர் கோலம் கொள்வான் அறிவுறுத்தி உரைக்க வல்லாய்,

முதிர் அமர் முருக்கி மீண்டேன் இத்தனை போதும்; முன்போல் எதிர் வர காண்கிலேன், இங்கு (நீ) இல்லையோ! என் செய் தாயோ!

**விளக்கம்** :- செய்யுள் மிக சுலபமானது. "போர் செய்து மீண்ட என்னை வழக்கம் போல் எதிர்வாராதிருந்ததேன், நீ இங்கு இல்லையோ ஐயா? என்ன செய்து கொண்டிருந்தாய்," என்று துக்கமிகுதியால் புலம்பியபடி.

**164. தந்திர மியாவு மின்றித் தனித்துநீ தானே போர்செய்(து)
அந்தர மமையு மென்றிவ் வகலிடந் துறந்த வையா!
மைந்துட னம்மைக் காண மகன்மகன் வருகின்
றுனென்(று)
இந்திர னேவ வுன்னை யிமையவ ரெதிர் கொண் டாரோ ?**

[தந்திரம் யாவும் இன்றி தனித்து நீ தானே போர் செய்து, அந்தரம் அமையும் என்று இ அகல் இடம் துறந்த ஐயா, மைந்துடன் நம்மை காண மகன் மகன் வருகின்றுன் என்று, இந்திரன் ஏவ உன்னை இமையவர் எதிர் கொண்டாரோ!]

**விளக்கம் :-** செய்யுள், சுலபமானதே. தந்திரம் - சேனை. அந்தரம் - தேவர் உலகம். மகன் மகன் - இந்திரகுமாரனின் மகனுன அபிமன். தேவலோகமே உன் சிறப்புக்குத் தகுந்த இடம் என்று அகலிடம் துறந்த ஐயா, என்றது **தற்குறிப்பேற்றம்.** மைந்து—களிப்பு.

**165. தேரழிந் தெடுத்த வில்லுஞ் செங்கதிர் வாளு மின்றி
ஓருத வியும்பெ ரும லொழிந்துயி ரழிந்த மைந்தா!
போரம ருடற்றி நீயப் பொன்னக ரடைந்த போதுன்
பேரம ராண்மை கேட்டுப் பிதாமக னென்சொன் னுனே ?**

[தேர் அழிந்து, எடுத்த வில்லும் செம் கதிர் வாளும் இன்றி ஓர் உதவியும் பெருமல் ஒழிந்து உயிர் அழிந்த மைந்தா, போர் அமர் உடற்றி நீ அ பொன் நகர் அடைந்தபோது, உன் பேர் அமர் ஆண்மை கேட்டு பிதாமகன் என் சொன்னுனே!)

**விளக்கம்**—செய்யுள் மிக சுலபமானதே, போர் அமர் - கடும் போர். பிதாமகன் – பாட்டனுன இந்திரன். அமராண்மை-புகழ் அமைந்த பராக்கிரமம்; அல்லது போர் வல்லமை.

**166. மற்புயக் குன்றி லொன்று வாளுடன் வீழப் பின்னும்
பொற்புறப் பொருத நீயப் பொன்னுல கடைந்த காலை**

**அற்புதப் படைகள் வல்லா யபிமனே யமர ரூரும்**
**கற்பகக் காவும் வானிற் கங்கையுங் காட்டி னரோ ?**

[மல்புயம் குன்றில் ஒன்று வாளுடன் வீழ, பின்னும் பொற்பு உற பொருத நீ அ பொன் உலகு அடைந்த காலை, அற்புத படைகள் வல்லாய், அபிமனே, அமரர் ஊரும், கற்பகம் காவும், வானில் கங்கையும் காட்டினரோ!]

**விளக்கம் :**— ஊருக்குப் புதியவரை, அந்த ஊரிலுள்ள சிறந்த இடங்களையும், பொருள்களையும் காட்டும் இயல்புபற்றி, தேவர் உனக்கு அவர் பதியும், கற்பகச் சோலையும், ஆகாச கங்கையும் காட்டினரோ! என்று விசயன் புலம்பினன், என்பதாம்.

**167. வளைத்தவின் னிமிரா வண்ணம் வாளியான் மாவுந் தேரும்**
**துளைத்துமுன் காலா ளாகத் துரோணனைத் துரந்த வீர !**
**திளைத்தவெஞ் சமரி னொந்து தனஞ்சயன் சிறுவன் மேனி**
**இளைத்ததென் றிந்தி ராணி யின்னமு தூட்டி னளோ ?**

[வளைத்த வில் நிமிரா வண்ணம் வாளியால் மாவும் தேரும் துளைத்து முன் காலாள் ஆக, துரோணனை துரந்த வீரா, திளைத்த வெம் சமரின் நொந்து தனஞ்சயன் சிறுவன் மேனி இளைத்தது என்று இந்திராணி இன் அமுது ஊட்டினளோ !]

**விளக்கம் :-** வளைத்த வில் நிமிராதபடி தூவிய அம்புகளால் குதிரைகளும் தேரும் பிளந்து, முதலில் துரோணனைக் காலாளாய் நடந்து செல்லும்படி துரத்திய வீரனே, விடாது தொடர்ந்து செய்த கொடிய போரில் நொந்து தனஞ்சயன் சிறுவன் மெலிவுற்ருன், என்று தேவர் உலகில் இந்திராணி உனக்கு அமுது ஊட்டினளோ —என்று விசயன் புலம்பினன், என்பதாம்.

கலி விருத்தம்

**168. என்னமக வான்மகனி ரங்கினன ரற்ற**
**முன்னவர்கள் பின்னவர்கண் முறைமுறைபு லம்பச்**
**சென்னிகரம் வைத்தனைவ ருங்கலுழி செய்ய**
**அன்னபொழு தாரணம ளித்தமுனி வந்தான்.**

[என்ன மகவான் மகன் இரங்கினன் அரற்ற, முன்னவர்கள் பின்னவர்கள் முறைமுறை புலம்ப, சென்னி கரம் வைத்து அனைவரும் கலுழி செய்ய, அன்னபொழுது ஆரணம் அளித்த முனி வந்தான்.]

**விளக்கம் :** முன்னவர் - தமையன்மார். பின்னவர்-தம்பியர். விசயனும், பாண்டவர் நால்வரும் தலையில் கை வைத்து அழுது புலம்புகையில் வேதங்களை வகை செய்த வியாசமுனிவன் வந்தான், என்பதாம். கலுழி செய்ய-கண்ணீர் வடித்தலைச் செய்ய

**169.** **வந்தமுனி மற்றுமுடன் வருமுனிவ ரோடும்**
**அந்தநர பாலர்கண் ணரும்புனறு டைத்துக்**
**கந்தநிகர் மைந்தனொடு கையறநி னைக்கும்**
**பந்தனைய றுக்குமொழி பற்பலப கர்ந்தான்.**

[வந்த முனி மற்றும் உடன்வரும் முனிவரோடும், அந்த நரபாலர் கண் அரும்(பு) புனல் துடைத்து, கந்தன் நிகர் மைந்தனொடு கைஅற நினைக்கும் பந்தனை அறுக்கும் மொழி பல்பல பகர்ந்தான்.]

**விளக்கம் :-** நரபாலர்-பாண்டவர். கண் அரும்பு புனல் - கண்களில் தோன்றி நிற்கும் நீர், கண்ணீர். கை அற நினைக்கும்- செயல அற்று இருக்க எண்ணும், அதாவது மகனோடு உயிர்விட நினைக்கும். பந்தனை - பாசபந்தம், அன்பினால் உண்டாகும் பற்று. முனிவர் பலரோடு அவண் வந்த வியாசமுனிவன் பாண்டவரது கண்ணீரைத் துடைத்து உறவாகிய பந்தம் அறுக்கும் உபதேச மொழிகள் பல கூறினான், என்பதாம். அரும்பு புனல், என்பது, அரும்புனல் என்று விகாரப்பட்டு நின்றது.

**170.** **தாயரொடு தந்தையர்க டாரமொடு தனயோர்**
**தூயதுணை வோர்களொடு சுற்றமென நின்றோர்**
**மாயையெனும் வல்லபம யக்குறும யக்கால்**
**ஆயவுற வல்லதவ ரார்முடிவில் யாமார் ?**

[தாயரொடு தந்தையர்கள், தாரமொடு தனயோர், தூய துணைவோர்களொடு சுற்றம் என நின்றோர், மாயை எனும் வல்லபம் மயக்குறும் மயக்கால் ஆய உறவு அல்லது அவர் ஆர் முடிவில் ? யாம் ஆர் ?

**விளக்கம் :-** தாய்மார்களோடு தந்தையரும், மனைவிமார்களோடு மக்களும், தூய சகோதரர்களோடு மற்றுமுள உறவினரும் என நின்றவர்கள் மாயை என்று சொல்லப்படும் சக்தி மனத்தை மயங்கச் செய்தலால் உண்டாகின்ற திரிபுணர்ச்சியால் ஏற்படும் சம்பந்தமே அல்லாமல், (உண்மையில்) அவர்கள் யார் ? யாம் ஆர் ? அவர்களுக்கும் நமக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை, என்றபடி.

''மனம் மாயை என்னும் சக்தியின் வயப்பட்டு நிற்கையில் பொருள்களின் உண்மையான நிலையைத் தெளிந்து கொள்வதற்கான மெய்யறிவு தோன்றுவதில்லை. நித்யமான ஆன்மாவோ பந்தமற்றது. மற்று, அழியும் தேகத்தோடு சம்பந்தங் கொண்ட சுற்றமும் பக்கமும், மயக்கம் நீங்கிய நிலையில் மாயையின் விளைவு என்ற உண்மை புலப்படும். எனவே, துயரம் நீங்குக'', என்று வியாசர் கூறினர், என்க.

**171. வந்துபிற வாதமனை யில்லைமுலை மாறித்**
**தந்துபரி யாமலொழி தாயர்களு மில்லை**
**புந்தியுணர் வற்றவர்பு லம்புறுவ தல்லால்**
**இந்தவுல கத்தறிஞர் யாதினும யங்கார்.**

[வந்து பிறவாத மனை இல்லை, முலை மாறி தந்து பரியாமல் ஒழி தாயர்களும் இல்லை; புந்தி உணர்வு அற்றவர் புலம்புறுவது அல்லால் இந்த உலகத்து அறிஞர் யாதினும் மயங்கார்.]

**விளக்கம் :-** கர்மத்தின் பயனாய் உயிர் உடல் எடுத்து வந்து பிறக்காத வீடு இல்லை; பிறந்த அவ்வுயிர்க்கு மாறி மாறி முலை கொடுத்துக் காப்பாற்றாமல் ஒழிகின்ற தாயரும் இல்லை; மனத்தில் மெய்யறிவு இல்லாதவர்களே அழுது புலம்புவது அல்லால், இவ்வுலகில் மெய்யறிவினரானோர், எந்தவிதமான துன்பநிலையிலும் மனக்கலக்கங் கொள்ளார்,—என்பது பொருள்.

''அநாதியான கர்ம வசத்தால் பற்பல மனைகளிலும், பற்பலர் கருப்பத்திலும் வந்து பிறக்கும் உயிர்களைத் தனது என்று கொண்டாடுவதும், விதி வசத்தால் அது நீங்கிய காலத்தில் வருந்துவதும் அறிவுடைமை ஆகாது,'' என்று வியாசர் கூறினர், என்பதாம் மனம், புத்தி, சித்தம், என்ற அந்தக்கரணங்களை அபேதமாய்க் கூறல் கவிமரபு.

**172. உம்மையினும் யாருறவு ணர்ந்திலமி னிப்போம்**
**அம்மையினும் யாவருற வாவரென வறியேம்**
**இம்மையினி கழ்ந்தவுற வித்தனையி ரங்கல்**
**மும்மையுமு ணர்ந்துவரு மூதறவி னீரே !**

[உம்மையினும் யார் உறவு உணர்ந்திலம், இனிபோம் அம்மையினும் யாவர் உறவு ஆவர் என அறியோம்; இம்மையில் நிகழ்ந்த உறவு இத்தனை இரங்கல், மும்மையும் உணர்ந்துவரும் முது அறிவின் நீரே.]

**விளக்கம் :-** உம்மை - முந்திய பிறப்பு. இனிபோம் அம்மை - இனி வரப்போகும் மறுபிறப்பு. இம்மை - எய்தியுள்ள இப்பிறப்பு. மூதறிவு - முதிர்ந்த நல்லறிவு. நீரே - நீர்மையாகுமோ, அதாவது தன்மையாகுமோ. நீர்மை, என்றது ஈறுபோய், நீர், என நின்றது. முந்திய பிறப்பில் யார் உறவாய் இருந்தவர் என்பதை அறியோம்; இனி வரப்போகும் பிறப்பில் எவர் சுற்றம் ஆவர், என்பதை அறியோம். இப்பிறவியில் உண்டான சுற்றத்திற்கு இவ்வளவு வருந்தல் மூன்று காலத்தையும் அறியவல்ல முதிர்ந்த மெய்யறிவிற்கு ஏற்ற தன்மையதாகுமோ ! என்று வியாசர் கூறினர் என்பதாம்.

''கருமத்தின் தொடக்கத்தால் உயிர்கள் எடுக்கும் பிறவிகளோ பல. ஒவ்வோர் பிறப்பிலும் உறவாவார் பலர். இப்பிறப்பில் உறவாயினர் முந்திய பிறவியில், உறவானவர் என்றோ, இனி எடுக்கவிருக்கும் பிறவியில் உறவாவார் என்றோ சொல்லுதற்கில்லை. ஆகவே, நிலையில்லாத சரீரத்தைப் பற்றியதே உறவு; நிலையுடைய உயிரைப் பற்றியது அன்று அது. ஆகவே இப்பிறவியில் உறவான ஒன்றின் அழிவை நினைத்து வருந்தல் அறிவின்பாற் படாது,'' என்று வியாசர் உபதேசித்தார், என்க.

**173.** **ஆற்றிநும தாண்மையழி யாமலிரு மென்றென்(று)**
**ஏற்றியடை வேசுருதி யாவையுமெ டுத்துத்**
**தேற்றியுரை செய்துதன சேவடியி றைஞ்சிப்**
**போற்றியம கீபரைநி றுத்திமுனி போனன்.**

[ஆற்றி நுமது ஆண்மை அழியாமல் இரும் என்று என்று, ஏற்றி அடைவே, சுருதி யாவையும் எடுத்து தேற்றி உரை செய்து, தன சேவடி இறைஞ்சி போற்றிய மகீபரை நிறுத்தி முனிபோனன்.]

**விளக்கம் :-** புத்திர சோகத்தைப் பொறுத்து உங்களது ஆண்மை அழியாமல் இருங்கள், என்று அடைவே ஏற்றி (மனத்தில் முறையே பதியச் செய்து) வேத வாக்கியங்கள் பலவற்றையும் எடுத்துக் கூறி (அவர்களைத்) தேற்றி, தன்னை வணங்கிப் போற்றிய அப்பாண்டவர்களை, அங்கேயே இருக்கச் செய்து முனிவன் அவ்விடம் பெயர்ந்து அகன்றான், என்பது பொருள்.

**174.** **தேற்றினும கப்பரிவு தேறலரி தன்றே**
**ஆற்றவரி தாதலின ருச்சுனன ரற்ற**
**மாற்றரிய பேரழல்வ ளர்த்தியென வல்லே**
**ஏற்றதுண ராதுதன திளவலொடு ரைத்தான்.**

[தேற்றினும் மக பரிவு தேறல் அரிது அன்றே ! ஆற்ற அரிது ஆதலின் அருச்சுனன் அரற்ரு, மாற்று அரிய பேர் அழல் வளர்த்தி என வல்லே, ஏற்றது உணராது தனது இளவலொடு உரைத்தான்.]

**விளக்கம் :-** ஆற்றல் அரிது ஆதலின் அருச்சுனன் அரற்ரு, தனது இளவலொடு மாற்று அரிய பேர் அழல் வளர்த்தி என, ஏற்றது உணராது வல்லே உரைத்தான்; தேற்றினும் மகப்பரிவு தேறல் அரிது அன்றே,—என்பது, அன்வயம்.

அரற்ரு - அரற்றி, புலம்பியழுது. மாற்று அரிய - அவிக்க முடியாத ஏற்றது உணராது - செய்வதற்கு ஏற்றது இன்ன தென்று தெளிந்து கொள்ளாமல். ''தேற்றினுலும் புத்திரசோகம் பொறுக்க முடியாதது அன்ரே,'' என்ற பொதுப்பொருள், மற்ற அடிகளிலுள்ள சிறப்புப் பொருளேச் சாதித்தலின், இது வேற்றுப் பொருள் வைப்பு, ஆகும்.

**175.** **மத்திரைம கன்கனல்வ ளர்க்கவ தனூடே**
**மித்திரரும் யாவரும்வி லக்கவும்வி லங்கான்**
**சித்திரவில் லூடுயிர்செ குப்பனென நின்ருன்**
**புத்திரரி லாவிடர்பொ றுத்திடலு மாமோ.**

[மத்திரை மகன் கனல் வளர்க்க அதனூடே, மித்திரரும் யாவரும் விலக்கவும் விலங்கான், சித்திரம் வில்லூடு உயிர் செகுப்பன் என நின்ருன் புத்திரர் இலா இடர் பொறுத்திடலும் ஆமோ.]

**விளக்கம் :-** மத்திரை மகன் - மாத்திரியின் மகனுன நகுலன். மித்திரர் - நண்பர். யாவரும் - மற்றுமுள உறவினர். வில் - ஒளி. சித்திரம்வில் - பலவகைப்பட்ட ஒளியை உடைய அக்னி (அன்மொழித் தொகை). புதல்வரை இழந்தமையாலான சோகம் பொறுத்திடற்குரியது ஆமோ, என்பது ஈற்றடியின் பொருள். இவ்வடியின் பொதுப் பொருளால் விசயன் தீக்குளிப்பதாகிய செய்கையாகிய சிறப்புப் பொருள் வற்புறுத்தப்படலின், இது வேற்றுப்பொருள் வைப்பு ஆகும். மத்திரை - மத்திரநாட்டு அரசனது மகளாகிய மாத்திரி.

**176.** **அன்பொடுது ழாய்முதல்வ னப்பொழுத ழைக்கு**
**முன்புதழன் மூழ்கலொழி முனிவிரைவின் வாரா**
**நின்புதல்வ ஞேடெரியில் நீபுகுத னெறியோ**
**என்புதல்வ ஞேடெனேயி றப்பதுத விர்த்தோய்!**

[அன்பொடு துழாய் முதல்வன் அப்பொழுது அழைக்க, முன்பு தழல் மூழ்கல் ஒழி முனி விரைவின் வாரா, நின் புதல்வனோடு எரியில் நீ புகுதல் நெறியோ, என் புதல்வனோடு எனை இறப்பது தவிர்த்தோய்.]

**விளக்கம்:-** துழாய் முதல்வன் - கண்ணபிரான். (விசயன் சொல்லுக்கு இணங்கி) தழல் மூழ்கல் ஒழி முனி - அக்னிப்பிரவேசம் நீங்கிய அந்தணன். விரைவின் வாரா - விரைந்து வந்து. (அவன் விசயனை நோக்கி) என் புதல்வனோடு எரி வீழ்ந்து இறப்பதைத் தடுத்த நீ, இப்பொழுது உன் புதல்வனோடு எரி வீழ்ந்து அழிதல் நியாயமாகுமோ? என்று கேட்டான், என்பதாம். ''என்னை இறப்பது தவிர்த்தோய்,'' என்பதை, ''யான் இறப்பதைத் தவிர்த்தோய்,'' என உருபு பிரித்துக் கூட்டுக.

**177. வழிப்படவ ழக்கின்வழி வருகவென முனிவன்
மொழிப்படிபொ றுத்தழலின் மூழ்குதொழின் மாறி
விழிப்புனலின் மூழ்கிமனம் வெந்துதளர் வுறுவோன்
பழிப்படுசு ரத்தின்மு ளிபாதவம தானுன்.**

[வழி பட வழக்கின் வழி வருக என், முனிவன் மொழி படி பொறுத்து அழலின் மூழ்கு தொழில் மாறி, விழி புனலில், மூழ்கி, மனம் வெந்து தளர்வுறுவோன், பழிபடு சுரத்தில் முளி பாதவம் அது ஆனான்.]

**விளக்கம்:-** பழிபடு சுரம் - குற்றமுடைய, அல்லது இகழப் படுகின்ற பாலைவனம். முளி பாதவம் - பட்டுப் போய் உலர்ந்து போன மரம். அந்தணன் சொல்லால் விசயன் எரி வீழ்தலை ஒழித்துப் பட்டுப் போன மரம்போல் உணர்வு அழிந்து நின்றான், என்பதாம். வழிப்பட வழக்கின் வழி வருக, என்றது, ''முறையே நீதியின் வழி நடப்பாயாக,'' என்று அந்தணன் கூறும் பொருளது. அதாவது, என் மகனோடு நான் இறத்தலைத் தடுத்த நீ, உன் மகனோடு நீ எரி வீழ்ந்து இறத்தலைத் தவிர்த்தலே நீதியாகும், என்று கூறியபடி.

''அனலின் மூழ்கு தொழில் மாறி விழிப்புனலில் மூழ்கி மனம் வெந்து என்றது நயமுடையது. அதாவது அனலில் மூழ்கி யிருந்தால், மனவெப்பம் ஆறியிருக்கும்; மற்று விழிப் புனலில் மூழ்கியது, மன வெப்பத்தை மிகுவிப்பதாயிற்று, என்ற கருத்தின் தொனியது.

178. காமர்பி றையன்னசிறு காளைதனை வாளா
ஏமமுறு வெஞ்சமரி லேவினர்க ளென்று
மாமுரச ணிந்தகொடி மன்னனையும் வண்டார்
வீமனையு நின்றவிளை யோரையும்வெ குண்டான்.

[காமர் பிறை அன்ன சிறு காளை தனை வாளா ஏமம் உறு வெம் சமரில் ஏவினர்கள் என்று, மாமுரசு அணிந்த கொடி மன்னனையும் வண்தார் வீமனையும் நின்ற இளையோரையும் வெகுண்டான்.]

**விளக்கம்:-** காமர் பிறை அன்ன சிறு காளை - அழகிய இளஞ் சந்திரனைப் போன்ற இளஞ்சிறுவனான அபிமன். வாளா - வீணே, தனியே. ஏமம் உறு வெம் சமர் - வெறிக்களிப்பு மிக்கதான கொடிய போர். அபிமனைப் போர்க்களம் ஏவிய தமையன்மார் மீதும், தம்பியர் மீதும் விசயன் கோபங் கொண்டான், என்பதாம்.

விசயனது சபத மொழி

179. சிந்துபதி யாகியசெ யத்திரத னைத்தேர்
உந்தமரி னாளையுரு மேறெனவு டற்று
அந்திபடு மவ்வளவி னாவிகவ ரேனேல்
வெந்தழலின் வீழ்வனிது வேதமொழி யென்றான்.

[சிந்துபதி ஆகிய செயத்திரதனை தேர் உந்து அமரில் நாளை உரும் ஏறு என உடற்று அந்திபடும் அ அளவின் ஆவி கவரேனேல் வெம் தழலின் வீழ்வன் இது வேதம் மொழி, என்றான்.]

**விளக்கம்:-** உரும் ஏறு என உடற்று - பேரிடி போல் கடும் போர் செய்து. வேத மொழி - வேத வாக்கியம் போன்ற உறுதி மொழி. "நாளை சூரியன் வீழுமுன் சயத்திரதனைக் கொல்லேனாயின், தீயில் விழுந்து மாள்வேன்", என்று விசயன் பிரதிஜ்ஞை செய்தான், என்பதாம்.

180. இன்றபிமன் வாளமரி லின்னுயிரி ழக்கக்
கொன்றவனை நாளையுயிர் கோறல்பு ரியேனேல்
மன்றிலொரு சார்புறவ ழக்கறவு ரைக்கும்
புன்றொழிலர் வீழ்நரகு புக்குழலு வேனே.

[இன்று அபிமன் வாள் அமரில் இன்உயிர் இழக்க கொன்றவனை நாளை உயிர் கோறல் புரியேனேல், மன்றில் ஒரு சார்பு உற வழக்கு அற உரைக்கும் புன்தொழிலர் வீழ் நரகு புக்கு உழலுவேன், ஏ.]

**விளக்கம்:-** வாள் அமர் - கொடிய போர். மன்றில் - நியாயத் தலம். வழக்கு அற - நீதி கெடும்படி. சயத்திரதனை நாளை சூரியாஸ்தமனத்திற்குள் கொல்லேனேல், மன்றேரஞ் சொன்ன கீழ் மக்கள் விழும் நரகில் வீழ்ந்து நான் வருந்துவேன், என்பதாம்.

**181.** **மோதமரி னென்மகன் முடித்தலை துணித்த**
**பாதகனை நானெதிர் படப்பொருதி லேனேல்**
**தாதையுட னேமொழித காதனபி தற்றும்**
**பேதைமக னெய்துநெறி பெற்றுடைய னாவேன்.**

[மோது அமரின் என் மகன் முடி தலை துணித்த பாதகனை நான் எதிர்பட பொருதிலேனேல், தாதையுடனே மொழி தகாதன பிதற்றும் பேதை மகன் எய்தும் நெறி பெற்றுடையன் ஆவேன்.]

**விளக்கம்:-** எதிர்பட - அவன் செய்தற்கு எதிராக, அதாவது, பழிக்குப் பழிவாங்க. போரில் வஞ்சனையில் என் மகன் தலை துணித்த பாதகனான சயத்திரதனைக் கொல்லேனேல், தந்தையோடு தகாதன பேசும் மூடமகன் அடையும் கதியை நான் பெற்றவன் ஆவேன், என்று விசயன் கூறினான், என்பதாம்.

**182.** **சேயனைய வென்மதலை பொன்றவமர் செய்தோன்**
**மாயமுன டர்த்துவய வாகைபுனை யேனேல்**
**தாயர்ப்சி கண்டுநனி தன்பசித ணிக்கும்**
**நாயனைய புல்லருறு நரகிலுறு வேனே.**

[சேய் அனைய என் மதலை பொன்ற அமர் செய்தோன் மாய, முன் அடர்த்து வயம் வாகை புனையேனேல், தாய் பசி கண்டு நனி தன் பசி தணிக்கும் நாய் அனைய புல்லர் உறு நரகில் உறுவேன், ஏ.]

**விளக்கம்:-** சேய் - முருகக்கடவுள். முன் அடர்த்து - விரைவில் போர் செய்து. என் மகனைக் கொன்றவனைக் கொன்று வெற்றி மாலை புனையேனேல், தாய் பசித்திருக்கத் தன் பசி தீர்த்துக் கொள்ளும் அற்பர் சேரும் நரகை நான் அடைவேன், - என்றான், என்பதாம்.

**183.** **வஞ்சனையி லென்மகனை யெஞ்சமுன் மலைத்தோன்**
**நெஞ்சமெரி யுண்ணவமர் நேர்பொருதி லேனேல்**
**தஞ்செனவ டைந்தவர் தமக்கிடர் நினைக்கும்**
**நஞ்சனைய பாதகர்ந டக்குநெறி சேர்வேன்.**

[வஞ்சனையில் என் மகனை எஞ்ச முன் மலைந்தோன் நெஞ்சம் எரி உண்ண அமர் நேர் பொருதிலேனேல், தஞ்சு என அடைந் தவர் தமக்கு இடர் நினைக்கும் நஞ்சு அனைய பாதகர் நடக்கும் நெறி சேர்வேன்.]

**விளக்கம்:-** நெஞ்சம் எரி உண்ண - மனம் மிக வருந்த. நேரில் - அவனுக்கு எதிரில் நின்று. நடக்கும் நெறி - மறுமையில் போய்ச் சேரும் நரகத்தின் வழி. தஞ்சம், என்பது தஞ்சு, என நின்றது; பற்றுக்கோடு, என்பது பொருள். வஞ்சனை இல் என் மகனை, என்பதற்கு வஞ்சனை இல்லாத என் மகனை, என்று பொருள் கொள்ளலும் அமையும். என் மகனைக் கொன்றவனை எதிர்த்துப் போர் செய்து கொல்லேனேல், தஞ்சம் அடைந்தவர்க்குத் தீங்கு செய்யும் பாவிகள் அடையும் நரகத்தை நான் அடையட்டும், என்று கூறினான், என்பதாம்.

**184.** **வினையிலென் மகன்றனுடல் வேறுசெய்வித் தோனைக்**
**குனிசிலையி னாளையுயிர் கோறல்புரி யேனேல்**
**மனைவியுயிர் வீயநன்ம கன்மனைவி கையால்**
**தினையளவு மோர்பொழுது சீவித்தவ னாவேன்.**

[வினையில் என் மகன் தன் உடல் வேறு செய்வித் தோனை, குனி சிலையின் நாளை உயிர் கோறல் புரியேனேல், மனைவி உயிர் வீய, நல் மகன் மனைவி கையால் தினை அளவும் ஓர் பொழுது சீவித்தவன் ஆவேன்.]

**விளக்கம்:-** வஞ்சனைத் தொழிலால் என் மகனது உடலை உயிரினின்று பிரியச் செய்தவனது உயிரைக் கொள்ளேனேல், மனைவி இறந்தபின், தன் மகன் மனைவி கையால் ஒரு சிறு பொழுதேனும் உண்டு உயிர் வாழ்ந்த பாவி ஆவேன் - என்று விசயன் வஞ்சினங் கூறி முடித்தான், என்பதாம்.

இச் செய்யுள் ஏட்டுப் பிரதிகளில் இல்லையென்றும், செறுகல் செய்யுளாகலாம், என்றும் அறிஞர் கருதுகின்றனர்.

### தருமன் கலக்கம்

**185.** **இன்னணமி ருந்தவர்கள் யாவரும்ந டுங்க**
**மன்னவையி லன்றுபல வஞ்சினமு ரைக்கச்**
**சொன்னவுரை யானகனல் சுட்டசெவி யோடும்**
**பின்னையறன் மைந்தனெடு மாலினொடு பேசும்.**

[இன்னணம் இருந்தவர்கள் யாவரும் நடுங்க மன் அவையில் அன்று பல வஞ்சினம் உரைக்க, சொன்ன உரை ஆன கனல் சுட்ட செவியோடும், பின்னை அறன் மைந்தன் நெடுமாலினொடு பேசும்.]

**விளக்கம் :-** இவ்வாறு, மன் அவையில் இருந்தவர்கள் நடுங்கும்படி, அன்று (விசயன்) சபதமொழி பல உரைக்க, (அவன்) சொன்ன வஞ்சின உரைகளாகிய கனல் சுட்டு வருத்திய செவிகளோடு, தருமன் கண்ணனோடு பேசுவானாயினன்,-என்பது பொருள். பின்னை - அசை; அல்லது பிறகு. நெடுமால் - திரிவிக்ரமனாய் நீண்டு உலகளந்த திருமாலாகிய கண்ணன்.

வேறு

**186. வடிசுடர் வாளியான் மொழிந்த வஞ்சினப்**
**படிசயத் திரதனைப் படுத்தல் கூடுமோ**
**பொடியன லிவன்புகிற் புகுந்து நால்வரும்**
**இடிபொரு மரவென விறத்த றிண்ணமே.**

(வடி சுடர் வாளியான் மொழிந்த வஞ்சினப்படி சயத்திரதனை படுத்தல் கூடுமோ ! பொடி அனல் இவன் புகின், புகுந்து நால் வரும் இடி பொரும் அரவு என இறத்தல் திண்ணம், ஏ)

**விளக்கம் :-** பொடி அனல் - எதிர்த்துச் சாம்பலாக்கும் தீ. இடிபொரும் அரவு - இடியினால் அழியும் பாம்பு. சபதமொழிப்படி, சயத்திரதனை அழித்தல் இயல்வதாமோ? விசயன் தீயில் புகுவானேல், நாங்கள் நால்வரும் தீயில் வீழ்ந்து இறத்தல் உறுதி,—என்பதாம்.

**187. முப்பது கடிகையின் முரண்கொண் மொய்ம்பனைத்**
**தப்பறக் கொல்லுவே னென்று சாற்றுமால்**
**அப்பெருஞ் சேனையி லவனை யுள்ளுறத்**
**துப்புற வணிந்திடிற் றுன்ன லாகுமோ ?**

[முப்பது கடிகையின் முரண் கொள் மொய்ம்பனை தப்பு அற கொல்லுவேன், என்று சாற்றும், (ஆல்), அ பெருஞ்சேனையில் அவனை உள்உற துப்பு உற அணிந்திடில் துன்னல் ஆகுமோ ?]

**விளக்கம் :-** கடிகை - நாழிகை. முரண் - மாறுபாடு. மொய்ம்பன் - வலியனாகிய சயத்திரதன். தப்பு அற - தவறாமல். துப்பு - வலிமை, காவல். அணிந்திடில் - (காவல் பொருந்திய) அணி வகுப்பில் (அவனை) நிறுத்திடில். துன்னல் - நெருங்கல். முப்பது

நாழிப் பொழுதில் சயத்திரதனைக் கொல்வேன், என்று விசயன் கூறியுள்ளான்; பகைவர் அவரது பெருஞ்சேனையின் நடுவிடத்தே வலிய அணிவகுப்பில் அவனை நிறுத்திவிடின், அவனை விசயனால் நெருங்கல் முடியுமோ, — என்று தருமன் கூறினான், என்பதாம்.

கண்ணன் அபயம் அளித்தல்

**188. எஞ்சின்மற் றென்செய்வே னென்னு மேல்வையின்**
**அஞ்சலென் றறன்மக னவல மாற்றினான்**
**கஞ்சவான் பொய்கையிற் கராவின் வாய்ப்படு**
**குஞ்சரந் தனக்கருள் கொண்டன் மேனியான்.**

[எஞ்சின் மற்று என் செய்வேன் என்னும் ஏல்வையின், அஞ்சல் என்று அறன் மகன் அவலம் மாற்றினான், கஞ்சம் வான் பொய்கையில் கராவின் வாய் படுகுஞ்சரம் தனக்கு அருள் கொண்டல் மேனியான்.]

**விளக்கம் :-** எஞ்சின் - (விசயன்) அழிந்தால், ஏல்வை - சமயம். அவலம் - கவலை. கரா - முதலை. குஞ்சரம் - கஜேந்திரன் என்னும் யானை. விசயன் மாய்ந்தால், என்ன செய்வது என்று அஞ்சிக் கவன்ற தருமனுக்கு முதலைவாய்ப்பட்ட கஜேந்திரனைக் காப்பாற்றியருளிய காளமேகம் போன்ற திருமேனியனான கண்ணன், 'அஞ்சற்க', என்று கூறி அபயமளித்தான், என்பதாம்.

அடியார்க்கு உற்றவிடத்து உதவும் தன்மையான், என்ற குறிப்பினது நாலாவது அடி. அவலம் ஆற்றினான் என்று பிரித்தால், கவலை தணியச் செய்தான், என்பது பொருளாகும்; இவ்வாறு பிரித்தலில் முற்றுமோனை கெடாமை ஏற்படும்.

**189. இந்திரன் காக்கினு மீசன் காக்கினும்**
**சிந்துவின் தலைவனைத் தேவர் காக்கினும்**
**கந்தனிற் சிறந்தநின் கனிட்ட னாளையே**
**மைந்துறப் பொருதவன் மகுடங் கொள்ளுமே.**

[இந்திரன் காக்கினும் ஈசன் காக்கினும், சிந்துவின் தலைவனை தேவர் காக்கினும், கந்தனின், சிறந்த நின் கனிட்டன் நாளையே மைந்து உற பொருது, அவன் மகுடம், கொள்ளும், ஏ.]

**விளக்கம் :-** சிந்துவின் தலைவன் - சிந்து தேசாதிபதியான சயத்திரதன். கந்தனின் சிறந்த கனிட்டன் - கந்தனினும் ஆற்றலில் சிறந்த உன் தம்பியான விசயன். மைந்து உற - வலிமையோடு நாளையே விசயன் சைந்தவனைக் கொல்வான், என்று கண்ணன் கூறினான், என்பதாம்.

## கண்ணனோடு விசயன் கயிலை செல்லல்

190. வெயிலெழு வதன்முனிவ் விசயன் றன்னொடும்
கயிலையம் பொருப்பனைக் கண்டு மீளவும்
துயிலுணர்த் திடும்படி தோன்று வோமெனு
அயிலணி யாழியா னவனொ டேகினன்.

[வெயில் எழுவதன் முன் இ விசயன் தன்னொடும் கயிலை அம் பொருப்பனை கண்டு, மீளவும் துயில் உணர்த்திடும்படி தோன்றுவோம் எனு, அயில் அணி ஆழியான் அவனொடு ஏகினன்.]

**விளக்கம் :-** ''சூரியன் உதிக்குமுன் விசயனோடு கயிலையில் சிவபெருமானைக் கண்டு, உன்னைத் துயிலினின்று எழுப்பும்படி, அஃதாவது விடியுமுன், மீளவும் தோன்றுவோம் (வந்திடுவோம்)'' என்று கண்ணன் தருமனுக்குச் செப்பி விசயனோடு கண்ணன் சென்றான், என்பதாம்.

191. ஏகிய நெறியிடை யிளைத்து வாசவற்(கு)
ஆகிய குமரன்மெய் யயர்ந்து வீழ்தலும்
போகியி னறிதுயில் புரியு நான்மறை
யோகியங் கையினணைத் துயக்க மாற்றியே.

[ஏகிய நெறியிடை இளைத்து வாசவற்கு ஆகிய குமரன் மெய் அயர்ந்து வீழ்தலும், போகியின் அறிதுயில் புரியும் நான்மறை யோகி அம்கையின் அணைத்து உயக்கம் மாற்றியே,—இதுவும், தொடரும் மூன்று செய்யுள்களும் குளகம்.)

**விளக்கம் :-** வாசவற்கு ஆகிய குமரன் - இந்திரனுக்குப் பிறந்தவனாகிய விசயன். போகி- பாம்பு, ஆதிசேஷன். அறிதுயில்- யோக நித்திரை. நான்மறை யோகி-நான்கு வேதங்களும் புகழும் யோகியான கண்ணன். உயக்கம் - தளர்ச்சி. வழியிலே விசயன் இளைத்து விழலும், கண்ணன் அவனைத் தனது திருக்கைகளால் அணைத்து, அவனது தளர்ச்சி போக்கியே - தொடரும். ஆற்றி, என்றும் பிரித்துக் கொள்ளலாம்.

போகி, என்பது திருமாலினது ஆயிரந்திருநாமங்களில் ஒன்று. யோகிகளுக்கெல்லாம் ஈச்வரன் ஆதலால், யோகி, என்றார்.

192. உண்டிலை யடிசிலு முண்ணுந் தீம்புனல்
கொண்டிலை பசிக்கனல் கொளுந்த வீழ்ந்தனை

மண்டிலை வேலினய் மகவி னன்பினல்
கண்டிலை யுலகியல் காட்டக் காட்டவே.

[உண்டிலை அடிசிலும் உண்ணும் தீம்புனல் கொண்டிலை, பசி கனல் கொளுந்த வீழ்ந்தனை; மண்டு இலை வேலினய் மகவின் அன்பினல் கண்டிலை உலகு இயல் காட்ட காட்டவே.]

**விளக்கம் :-** மண்டு இலை வேலினய் மகவின் அன்பினல், உண்டிலை.. வீழ்ந்தனை; உலகு இயல் (முனிவர்) காட்ட காட்ட, கண்டிலை,—என்பது அன்வயம். மண்டு இலைவேல் - வலிமை மிகுந்த அரசிலை போன்ற வடிவத்தை உடைய வேல். உலகு இயல் காட்டக் காட்ட - யாக்கை நிலையாமையாகிய உலக இயல்பை முனிவர்கள் எடுத்துக் காட்டியும் (மகன் மேல் கொண்ட அன்பினல் அறிந்து கொண்டாயில்லை). என்று கண்ணன் கூறினன், என்பதாம். காட்டுதல் - தெரிவித்தல். காணல் - அறிதல். பசிக்கனல் - வயிற்றினுள்ளே உள்ள ஜாடராக்னி என்ற தீ. பசி உண்டானவிடத்து, அது, மிக வருத்தலால், பசிக்கனல் எனப் பட்டது.

**193.** மாங்கனி வாழையின் கனிவ ருக்கையின்
தீங்கனி கன்னலிற் செய்ய நீருள
வேங்கனற் பசியுநின் விடாயு மாறவே
ஈங்கினி தருந்துதி யேந்த லென்னவே.

[மாங்கனி, வாழையின் கனி, வருக்கையின் தீம்கனி, கன்னலின் செய்ய நீர், உள, வேம்கனல் பசியும் நின்விடாயும் ஆறவே, ஈங்கு இனிது அருந்துதி, ஏந்தல், என்னவே.]

**விளக்கம் :** வருக்கையின் கனி - பலாப்பழம். கன்னலின் செய்ய நீர் – கரும்புச் சாற்றினும் செம்மையதான நல்ல நீர். வேம் கனல் பசி - எறியும் தீயை ஒத்த பசி. விடாய் - இளைப்பு. பசியும் இளைப்பும் தீருமாறு, கனிகளைத் தின்று, நீர் குடிக்குமாறு கண்ணன் விசயனுக்குச் சொன்னன், என்பதாம். மா - கனி - மாங்கனி, மரப்பெயர் முன் இனமான மெல்லெழுத்து வந்தது. ஏந்தல், ஆண்பால் சிறப்புப் பெயர்.

கண்ணனை விசயன் சிவனகப் பூசித்தல்

**194.** சரிந்தவர் சரிவறத் தாங்கு நாயகன்
பரிந்திவை யுரைத்தலும் பாவை பங்கன்மேல்
புரிந்தில னின்னமும் பூசை யென்றனன்
வரிந்தவெஞ் சிலைக்குமண் மதித்த வீரனே.

[சரிந்தவர் சரிவு அற தாங்கும் நாயகன் பரிந்து இவை உரைத்தலும், பாவை பங்கன் மேல் புரிந்திலன் இன்னமும் பூசை என்றனன், வரிந்தவெம் சிலைக்கு மண் மதித்த வீரன், ஏ]

**விளக்கம்** :– துன்புற்றவர் துன்பம் நீங்க அவர்களைப் பாதுகாத்தருளும் தலைவனான கண்ணன், என்பது முதலடியின் பொருள். பாவை பங்கன் - சிவபெருமான். சிலைக்கு மண்மதித்த வீரன் - வில்வித்தையில் ஒப்பில்லாதவன் என்று இவ்வுலகத்தார் மதிக்கும் வீரனான விசயன்.,

கண்ணன் அன்போடு இவை உரைத்தலும், அதாவது கனிகளையும் நீரையும் உட்கொள்ளுமாறு கூறலும், விசயன், "இன்னும் சிவபூசை செய்யவில்லை," என்று கூறினான், என்பதாம்.

**195.** மருவரு கானக மலரி னாலெமைப்
பொருவரு பூசனை புரிதி யையநீ
இருவரு மொருவரே யென்ப தின்றுபோய்
அருவரை யவனடி யடைந்து காண்டியே.

[மருவருகானகம் மலரினால் எமை பொருவு அருபூசனை புரிதி, ஐய நீ; இருவரும் ஒருவரே என்பது இன்றுபோய் அருவரை அவன் அடி அடைந்து காண்டி, ஏ.]

**விளக்கம்** :- மருவரு - வாசனை உடைய. இன்று அருவரை போய் அவன் அடி அடைந்து காண்டி - இன்று கிட்டுதற்கு அரிய தான கைலாசம் சென்று அப்பிரானது திருவடிகளை அடைந்து, (இருவரும் ஒருவரே என்பது) காண்பாய். "என்னை மலரால் பூசை செய்; பிறகு கைலாசம் அடைந்து இருவரும் ஒருவரே, என்பதைக் காண்பாய்", என்று கண்ணன் கூறினான், என்பதாம்.

**196.** என்றரி யியம்பலு மிரும ருங்கினும்
நின்றநன் மலர்கொடு நிகரில் கேள்வியான்
மன்றலந் துழாய்முடி மாயன் மேன்மனம்
ஒன்றியே சிவாகம வுரையிற் சாத்தினான்.

[என்று அரி, இயம்பலும் இரு மருங்கினும் நின்ற நல்மலர் கொடு நிகரில் கேள்வியான், மன்றல் அம் துழாய் முடிமாயன் மேல் மனம் ஒன்றியே, சிவ ஆகம உரையின் சாத்தினான்.]

**விளக்கம்** :- நிகரில் கேள்வியான் - விசயன். கண்ணன் கூறலும், விசயன் இருபுறங்களிலுமிருந்த நல்ல மலர்களைக் கொண்டு மன்றல் அம் துழாய் முடியோனான கண்ணன் மேல்

மனம் ஒன்ற வைத்து, சிவாகமம் கூறும் மந்திரச் சொற்களால் அருச்சித்தான் என்பதாம்.

**197. சாத்தினன் றெழுதுபின் றலைவன் ருள்மலர்த்**
**தீர்த்தமுங் கனிகளுங் தெவிட்ட வுண்டுதன்**
**காத்திரந் தேறினன் கருத்துந் தேறினன்**
**பார்த்தன்முற் றவப்பயன் பலித்த வாறரோ.**

[சாத்தினன் தொழுது பின் தலைவன் தாள் மலர் தீர்த்தமும் கனிகளும் தெவிட்ட உண்டு தன் காத்திரம் தேறினன், கருத்தும் தேறினன்; பார்த்தன் முன் தவம் பயன் பலித்த ஆறு, அரோ.]

**விளக்கம் :-** கண்ணன் மேல் மலர்களைச் சாத்தி, வணங்கி, பின்னர் சர்வலோக நாயகனை அவனது ஸ்ரீபாத தீர்த்தமும், கனிகளும் தெவிட்டும்படி உண்டு, சரீரக் களைப்புத் தீர்ந்து, மனத் தெளிவும் கொண்டான்; பார்த்தன், முன்னைய பிறவியில் செய்த தவம் பலித்த விதம், (இதுவாகும்) என்பதாம். அரோ; ஈற்றசை; வியப்பிடைச் சொல்லாகவும் கொள்ளலாம். காத்திரம் - உடல்.

இருவரும் கயிலை செல்லுதல்

**198. போயரு நெறியிடைப் புள்ளின் வேந்தனைத்**
**தூயவன் நினைத்தலு மவனுந் தோன்றினன்**
**மாயனைத் தோளினும் வலாரி மைந்தனைச்**
**சேயதன் கரத்தினுஞ் சேர வேந்தினன்.**

[போய் அரு நெறியிடை புள்ளின் வேந்தனை தூயவன் நினைத்தலும், அவனும் தோன்றினன், மாயனை தோளினும் வலாரி மைந்தனை சேய தன் கரத்தினும் சேர ஏந்தினன்.]

**விளக்கம் :-** புள்ளின் வேந்தன் - கருடன். செல்லுதற்கு அரிய வழியின் இடையிலே, தூயனை கண்ணன் நினைக்க, கருடன் தோன்றிக் கண்ணனைத் தோளிலும், விசயனைக் கையிலும் தாங்கிக்கொண்டு (கயிலை நோக்கிச் சென்றான்) என்பதாம்.

**199. நீலமுற் றியமலை யிரண்டொ டொன்றுபொன்**
**சீலமுற் றியமலை செல்வ தென்னவே**
**ஆலமுற் றியகளத் தையன் வெள்ளியம்**
**கோலமுற் றியமலை குறுகி னனரோ.**

[நீலம் முற்றிய மலை இரண்டொடு ஒன்று பொன் சீலம் முற்றிய மலை செல்வது என்னவே ஆலம் முற்றிய களத்து ஐயன் வெள்ளி அம் கோலம் முற்றிய மலை குறுகினன், அரோ.]

**விளக்கம் :-** சீலம் முற்றிய பொன்மலை ஒன்று, நீலம் முற்றிய மலை இரண்டொடு செல்வது என்ன (ஏ), ஆலம் முற்றிய களத்து ஐயன் கோலம் முற்றிய வெள்ளி அம் மலை குறுகினான்,—என்பது அன்வயம். அரோ : ஈற்றசை.

சீலம் - அழகு. அழகு மிகுந்த பொன் மலை ஒன்று, நீல நிறம் மிகுந்த இரண்டு மலைகளைச் சுமந்து செல்வதுபோல், (கருடன் கிருஷ்ணார்ச்சுனர்களை ஏந்திக் கொண்டு) விஷம் மிகுந்த கண்டத்தையுடைய சிவபிரானது, அலங்காரம் மிக்கதான, அழகிய கைலாச மலையை நெருங்கினான்,—என்பதாம். முதலிரண்டடிகள் இல்பொருள் உவமை.

**200. மாற்றினால் விளங்குபொன் வடிவன் வெஞ்சிறைக்**
**காற்றினால் விசைபெறக் கழன்று போயின**
**ஆற்றினா லறம்புரி யம்மை யோடொரு**
**கூற்றினான் வரைபடி கொண்ட லேழுமே.**

[மாற்றினால் விளங்கு பொன் வடிவன் வெம்சிறை காற்றினால் விசைபெற கழன்று போயின, ஆற்றினால் அறம்புரி அம்மையோடு ஒரு கூற்றினான் வரைபடி கொண்டல் ஏழுமே.]

**விளக்கம் :-** ஆறு - வழி, நெறி. நல்ல வழியினால் தவம் செய்த தலைவியான அம்பிகையோடு ஒரு பாகத்தை உடைய சிவபெருமானது மலையான கயிலையில் படிந்துள்ள சப்த மேகங்களும், மாற்றினால் உயர்ந்து விளங்குகின்ற பொன்னிறமான வடிவத்தை உடைய கருடனது கொடிய சிறகுகளின் காற்றினால், வேகமாக இடம் பெயர்ந்து விலகிச் சென்றன, என்பது பொருள்.

அறம் - தவம், இல்லறம். "ஆற்றினால் அறம் புரி அம்மை," என்றது, நல்ல முறையான வழியே நின்று சிவபெருமானை மணக்கும் பொருட்டு உமாதேவி தவம் புரிந்த கதையை உட்கொண்டது.

**201. பறிந்தன கொடுமுடி பலவும் வேரொடு**
**மறிந்தன சாரலின் மரங்கள் யாவையும்**
**அறிந்தன மயின்முத லான புள்ளினம்**
**செறிந்தன பணிந்தன செய்ய தாள்களே.**

**விளக்கம் :-** செய்யுள் சுலபமானது. எனவே பதப்பிரிவு தரவில்லை. (கருடன் வருகையினால்) வளைந்த மலைச்சிகரங்கள் பல அடியோடு பறியுண்டன, மலைச்சாரலில் உள்ள மரங்கள் எல்லாம் தலைசாய்ந்து விழுந்தன; மயில் முதலிய பறவை இனம் எல்லாம் (கருடனது வரவை) அறிந்தனவாய், திரண்டு கூடி, அவனது சிவந்த பாதங்களை வணங்கின,—என்பது பொருள்.

**202.** **பாண்டவ சகாயனூர் பறவை யின்குலத்(து)**
**ஆண்டகை யிருசிற கசையு மோதையால்**
**காண்டகு சடைமுடிக் கால காலன்மெய்ப்**
**பூண்டன பணிகளும் புரண்டு வீழ்ந்தவே.**

**விளக்கம் :-** பாண்டவ சகாயன் - கண்ணன். பறவையின் குலத்து ஆண்டகை - புள்குலத்தை ஆளும் ஆண்மைக் குணம் உடைய கருடன். ஓதை - ஓசை. காண்டகு - (காண்தகு) காணத் தக்க. அழகிய காலகாலன் - யமனுக்கு யமனான சிவபெருமான். பணிகள் - பாம்புகள். கருடனின் சிறகுகளின் அசைவினால் எழுந்த ஓசையால் சிவபெருமான் ஆபரணமாகப் பூண்டனவான பாம்புகள் (அஞ்சி) புரண்டு விழுந்தன, என்பதாம்.

**203.** **வரிந்தபைங் கனைகழல் வயின தேயனை**
**விரிந்தவெண் கிரியர மாதர் மீதுகண்(டு)**
**எரிந்திடு வச்சிர னிந்த மால்வரைக்(கு)**
**அரிந்திலன் சிறகென வைய மெய்தினர்.**

[வரிந்த பை கனைகழல் வயினதேயனை விரிந்த வெள்கிரி அரமாதர் மீது கண்டு எரிந்திடு வச்சிரன் இந்த மால் வரைக்கு அரிந்திலன் சிறகு என ஐயம் எய்தினர்.]

**விளக்கம் :-** வரிந்த - கட்டிய, அணிந்த வயின தேயன் - கருடன். விரிந்த வெள்கிரி அரமாதர் - பிரகாசம் விரிந்து விளங்குகின்ற கயிலை மலையில் வாழும் தேவமாதர். அரமாதர் - அமரமாதர், அல்லது அரம்பை மாதர், என்பதின் விகாரம். எரிந்திடு வச்சிரன்- பிரகாசமுடைய வச்சிரப்படையையுடைய இந்திரன். கருடனது பெரிய உருவம், மால்வரை எனப்பட்டது. இந்த மலையின் சிறகை, இந்திரன், அறுத்திலன் போலும், என்று அரமாதர் ஐயுற்றூர், என்பதாம். இது, ஐய அணியை உட்கொண்டது.

கயிலை வருணனை

**204.** **நிறைமதி நிகரென நிறத்த வெள்ளியம்**
**பொறைமலை திசைதொறும் பொழியும் வாணிலா**
**நறைமல ரிதழிசேர் நாதன் வார்சடைப்**
**பிறைமதி நிலவினும் பிறங்க வீசுமால்.**

**விளக்கம் :-** கலைகள் நிறைந்த பூரண சந்திரனை ஒத்த நிறத்தையுடைய வெள்ளி மயமான அழகிய பூமியைத் தாங்கும் கயிலை மலை திசை எங்கும் பொழியும் வெள்ளிய ஒளி, தேனை உடைய கொன்றை மாலை பொருந்தின சிவபெருமானது நீண்ட

சடைமுடியிலுள்ள பிறைச் சந்திரனது பிரகாசத்தினும் சிறந்து விளங்கும்படி வீசும், அல்லது பிரகாசிக்கும், என்பது பொருள். பிறைமதியின் ஒளியினும், கயிலையின் ஒளி மிக்கது, என்றபடி. ஆல் : அசை.

**205.** **நீரறு தருக்களுந் தழைக்க நின்றுமுன்**
**நாரதன் முதலியோர் நவிற்று நாதயாழ்**
**பாரத வமர்புரி பச்சை மாமுகில்**
**ஆரதர் விடாயைவந் தாற்று கின்றதால்.**

[நீர் அறுதருக்களும் தழைக்க நின்று முன் நாரதன் முதலியோர் நவிற்று நாதம் யாழ், பாரதம் அமர் புரி பச்சை மாமுகில், ஆர் அதர் விடாயை வந்து ஆற்றுகின்றது. ஆல்.]

**விளக்கம்:-** நீர் அறு தருக்கள் - நீர்ப்பசை அற்று உலர்ந்த மரங்கள். யாழ்நாதம் - (நாரதன் முதலிய இசை வித்தகர்) வாசிப்பதால் எழுந்த யாழின் நாதம். பாரதப் போரை நடத்தி வைக்கின்ற பசிய பெரிய மேகம் போன்ற கண்ணன், என்பது மூன்ரு வது அடியின் பொருள். ஆர் அதர் விடாய் - கடத்தற்கு அரிய புழுதிபடிந்த நெடு வழியில் வந்ததால் உண்டான இளைப்பு.

காய்ந்து உலர்ந்த மரத்தையும் தழைக்கச் செய்யும் தன்மைய தான, யாழொலி, நெடுவழி வந்த கண்ணனது களைப்பைத் தணித்தது, என்பதாம்.

**206.** **சங்கரன் மணிவரைச் சாரன் மாருதம்**
**திங்களி னிலவுமிழ் செக்கர் வேணிமேல்**
**கொங்கவிழ் செழுமலர்க் கொன்றை வாசமும்**
**கங்கைநுண் டுவலையுங் கலந்து வீசுமால்.**

[சங்கரன் மணிவரை சாரல் மாருதம் திங்களின் நிலவு உமிழ் செக்கர் வேணி மேல், கொங்கு அவிழ் செழுமலர் கொன்றை வாசமும், கங்கை நுண் துவலையும் கலந்து வீசும், ஆல்.]

**விளக்கம்: -** சிவபிரானின் அழகிய மலையின் சாரலில் (பக்கங்களில்) வீசும் காற்று, பிறைச் சந்திரனது ஒளி பொழியும் சிவந்த சடைமுடியின் மேல் உள்ள தேன் சொரியும் வளம் மிக்க கொன்றை மலரின் வாசனையோடு கங்கையின் நீர்த்துளிகளையும் ஒருங்கே, வீசும்,—என்பது பொருள். வேணி - சடை. துவலை - நீர்த்துளி, மழைத்தூவல். கலந்து - ஒன்றுபட்டு.

**207. அங்குள விடரகத் தநேக மாயிரம்**
**பொங்கழ லுமிழ்விழிப் புயங்க மாமணி**
**எங்கணு மிருளற விலங்கு சோதியால்**
**கங்குலும் பகலவன் கரங்கள் காட்டுமால்.**

[அங்கு உள விடர் அகத்து அநேகம் ஆயிரம் பொங்கு அழல் உமிழ் விழி புயங்கம் மாமணி எங்கணும் இருள் அற இலங்கு சோதியால் கங்குலும் பகலவன் கரங்கள் காட்டும், ஆல்.]

**விளக்கம் :-** விடர் - மலையிடத்தவான வெடிப்புக்கள். அகம் - உள்ளிடம். மிகுதியான தீயை வெளிப்படுத்துகின்ற கண்களை உடைய நாகங்களின் தலையிலுள்ள நாகரத்தினம்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். பகலவன் கரங்கள் - சூரியனது கிரணங்கள்.

கயிலை மலையினிடத்தே உள்ள வெடிப்புக்களின் உள்ளிடத்திலே இருக்கும் அநேக ஆயிரம் பாம்புகளினிடத்தே உள்ள நாகரத்தினங்கள், எங்கும் இருள் அகலும்படி விளங்கும் ஒளியால், இரவிலும், சூரியனது கிரணங்களைப் போல் தோன்றிப் பிரகாசிக்கும், என்பதாம்.

கண்ணனைச் சிவபிரான் வரவேற்றல்

**208. செந்திரு மடமயிற் கேள்வன் சென்றமை**
**அந்திவா னிறத்தவ னறிந்து முன்னமே**
**நந்தியு முரைசெயக் கேட்டு நன்றெனப்**
**புந்தியான் மகிழ்ந்தெதிர் போந்து புல்லினான்.**

**விளக்கம்:-** செந்திரு மடமயில் கேள்வன்-இலக்குமி நாராயண கண்ணன். சென்றமை-வந்துள்ளதை. அந்திவான் நிறத்தினன்-செவ்வானம் போன்ற சிவந்த திருமேனியையுடைய சிவபிரான். புந்தியால் மகிழ்ந்து-மனம் மகிழ்ந்து. கண்ணனது வருகையை முன்னமேயே அறிந்த சிவபிரானுக்கு, நந்திதேவன், அவனது வரவைத் தெரிவிக்கக் கேட்டு, 'நன்று' என்று மனம் மகிழ்ந்து, எதிர் சென்று, கண்ணனைந் தழுவிக் கொண்டான், என்பதாம்.

அந்தி வண்ணன் என்பது, சிவபெருமானின் திருநாமங்களில் ஒன்று. சிவபிரானைச் சூழ்ந்துள்ள அடியார் கணத்தில் முதன்மையானவன், நந்திதேவன். திருவாயில் காப்பதும், வாகனமாய் அமைவதும் அத்தேவனது தொழில்.

**209. ஆங்கொரா சனத்திடை யிருத்தி யையனைப்**
**பாங்கினுல் வினவினுன் பவள மேனியான்**
**ஈங்கிவன் பிறந்தது மிளைத்த பார்மகள்**
**தீங்கறப் புரிதருஞ் செயலு மியாவுமே.**

[ஆங்கு ஓர் ஆசனத்து இடை இருத்தி ஐயனை பாங்கினுல் வினவினுன், பவளம் மேனியான்; ஈங்கு இவன் பிறந்ததும், இளைத்த பார்மகள் தீங்கு அற புரிதரும் செயலும் யாவுமே.]

**விளக்கம்.-** ஆங்கு, ஐயனை பவளம் மேனியான் ஓர் ஆசனத்திடை இருத்தி, ஈங்கு இவன் பிறந்ததும், இளைத்த பார்மகள் தீங்கு அற புரிதரும் செயலும் யாவுமே பாங்கினுல் வினவினுன், என்பது அன்வயம்.

ஐயன்-கண்ணன். பவளமேனியான்-சிவபெருமான். பாங்கு-முறை, உரிமை. கண்ணனைச் சிவபெருமான் ஒராசனத்து இருத்தி இம்மண்ணுலகில் இவன் கண்ணனுக அவதரித்ததும், துஷ்டர்களைத் தாங்குவதால் இளைப்புற்ற பூதேவியின் சுமை நீங்குமாறு செய்துவரும் காரியமும் பற்றி முறையே அல்லது உரிமையோடு கேட்டான் என்பதாம்.

சிவபெருமானை விசயன் பணிதல்

**210. கேசவன் புரிவெலாங் கிரீச னென்னுமத்**
**தேசவன் தெளிவுறச் செப்பி விட்டபின்**
**வாசவன் புதல்வனை வருக வென்றலும்**
**பாசவன் புடனவன் பணிந்து போற்றினுன்.**

[கேசவன் புரிவு எல்லாம் கிரி ஈசன் என்னும் அ தேசவன் தெளிவு உற செப்பி விட்டபின், வாசவன் புதல்வனை, வருக, என்றலும், பாசம் அன்புடன் அவன் பணிந்து போற்றினுன்.]

**விளக்கம் :-** கேசவன் - கண்ணன். கிரீசன்-சிவபெருமான். தேசவன்-ஒளிவடிவனுகிய சிவபெருமான். பாசம் அன்பு-பற்றுதலை உடைய அன்பு; அதாவது மனப்பூர்வமான அன்பு. கண்ணன் தனது செயல்களை எல்லாம், கிரீசன் என்ற பெயருடைய ஒளி வடிவினனுன சிவபெருமானுக்கு விளக்கமாகக் கூறி முடித்த பின்பு, இந்திரன் மதலையான விசயனை (அப்பிரான்) வருக என்று கூறலும் அவன் உள்ளத்தோடு இயைந்த பக்தியோடு, (சிவபெருமானை) வணங்கித் துதித்தான்,—என்பதாம்.

**211. கண்ணன்மே லணிமல ரனைத்துங் காய்கனல்**
**வண்ணன்மேற் காண்டலு மனங்க ளிப்புற**
**எண்ணின்மே லிரண்டென விலதென் றவ்விறல்**
**அண்ணன்மே னியும்புள கரும்பி னானரேர.**

[கண்ணன் மேல் அணிமலர் அனைத்தும் காய்கனல் வண்ணன் மேல் காண்டலும் மனம் களிப்பு உற, எண்ணில் மேல் இரண்டு என இலது என்று விறல் அண்ணல் மேனியும் புளகு அரும்பினான், அரோ.]

**விளக்கம் :-** காய்கனல் வண்ணன் - அக்னி போன்ற நிற முடைய சிவபெருமான். விறல் அண்ணல் - விசயன். கண்ணன் மேல் சாத்திய மலர்களைச் சிவபெருமான் மேல் காணலும் விசயன், மனங்களித்து, ''ஆழ்ந்து கருதுமிடத்து, இரண்டு என்ற பொருள் இலது,'' என்று தெளிந்து, (தான் தெளிந்து கொண்ட களிப்பினால்) உடலும் மயிர்க்கூச்செறியப் பெற்றான், என்பதாம். அதாவது, பரம்பொருள் ஒன்றே பலநாம ரூபங்களோடு தோன்று கின்றது, என்ற உண்மையை, விசயன், அறிந்து மகிழ்ந்தான், என்பது கருத்து.

**212. பொங்கரா வெயின்மணிப் பூணும் பேணுநீற்(று)**
**அங்கரா கமுமுவந் தணியு மேனியாய்**
**சங்கரா மேருவெஞ் சாபம் வாங்கிய**
**செங்கரா சிவசிவ தேவ தேவனே!**

**விளக்கம் :-** வெயில் மணி பொங்கு அராபூணும், பேணும் நீறு அங்கராகமும் உவந்து அணியும் மேனியாய் - பிரகாசம் பொருந்திய நாகரத்தினங்களை உடைய நாகங்களாகிய ஆபரணங் களையும், விரும்பப்படும் விபூதியாகிய உடல் பூச்சையும் தரித்த திருமேனியுடையவனே, என்று விசயன் சிவபெருமானை விளிக் கும் பொருளன முதலிரண்டடிகள். மேருவெம் சாபம் வாங்கிய செங்கரம் - திரிபுரம் அழிக்கும் பொருட்டு மேரு மலையாகிய கொடிய வில்லை வளைத்த சிவந்த திருக்கரம். இதுவும் இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும், விசயன் செய்த சிவஸ்தோத்திரங் களாகும்.

**213. விண்ணிடைத் திரிபுரம் வெந்து நீறெழப்**
**பண்ணுடைச் செந்தழல் பரப்பு மூரலாய்!**
**எண்ணுடைக் காமனை யெரித்த பேரழல்**
**கண்ணுடைக் கடவுளே! கால காலனே!**

**விளக்கம் :-** திரிபுரம் வெந்து சாம்பலாய் ஆகாயத்தில் எழும்படி செய்யும் தன்மையுடைய செந்தழலைப் பரப்பிய புன்சிரிப்பு உடையவனே, எல்லோருடைய மனத்தையும் இட மாகக் கொண்ட மன்மதனை எரித்த பெரிய நெருப்பினைக் கொண்ட நெற்றிக்கண்ணை உடைய இறைவா, யமதர்மராசனுக்கு யமனான ஆற்றலுடையவனே, என்று துதித்தபடி.

**214.** **கையுறு சிலையுடன் கான வேடனென்(று)**
**ஐயுற வந்துட னணுகி யென்னுடன்**
**மெய்யுற வமர்புரி விநோத நாடொறும்**
**மையுறு கண்டனே மறப்ப தில்லையே.**

**விளக்கம் :-** கையில் பொருந்திய வில்லுடன் கான வேடன் உருவம் கொண்டு வந்து, என்னை நெருங்கி, (உனது ஆற்றலைக் கண்டு நான்) சந்தேகம் கொள்ளும்படி என்னோடு உண்மையான போர் புரிந்த ஆச்சரியமான செயலை உடையவனே, நஞ்சு உண்டதனால் கருமையுற்ற கண்டத்தை உடையவனே, நான் உன்னை ஒருநாளும் மறப்பதில்லை,—என்று விசயன் துதித்தான், என்பதாம்.

**215.** **உமையவள் கணவனே யுகாந்த காலனே**
**இமயவில் வீரனே யென்று கொண்டிவன்**
**அமையுறத் துதித்தலி னவனு மற்றிவன்**
**சமைவுகண் டையனோ டுவகை சாற்றினான்.**

**விளக்கம் :-** இமயம் - மேருமலை; மந்தரம், இமயம், மேரு மலைகளைச் சிவன் வில்லெனக் கூறுதல் மரபு. அமை - மன அமைதி பொருந்த, அதாவது மன ஒருமைப்பாட்டோடு, சமைவு - மனத்தின் பக்குவம். உமையவள் வீரனே, என்று (ஜபித்துக்) கொண்டு இவன் (விசயன்) மனவொருமைப் பாட்டோடு போற்றலும், அவனும் (சிவபெருமானும்) இவனது (விசயனது) பக்குவம் கண்டு, ஐயனான கண்ணனிடம் மனமகிழ்ச்சியோடு பேசலானான், என்பது பொருள்.

**216.** **ஆற்றினை துயர்மய லனைத்து மெய்யுறத்**
**தேற்றினை சிந்தையைத் தெளிந்த வாய்மையால்**
**மாற்றினை மும்முறை பிறப்பும் வந்துநின்**
**கூற்றினை யடைதலாற் பிறவி கொள்ளுமே?**

[ஆற்றினை துயர்மயல் அனைத்தும், மெய்உற தேற்றினை சிந்தையை தெளிந்த வாய்மையால் மாற்றினை மும்முறை பிறப்பும் வந்து நின் கூற்றினை அடைதலால் பிறவி கொள்ளும் ஏ.]

**விளக்கம் :-** துயர்மயல் அனைத்தும் ஆற்றினை தெளிந்த வாய்மையால் சிந்தையை மெய் உறத் தேற்றினை, மும்முறை பிறப்பும் வந்து நின் கூற்றினை அடைதலால் பிறவி கொள்ளுமோ? (பிறவி எடுத்தல்) மாற்றினை,—என்பது. அன்வயம்.

புத்திரசோகத்தின் விளைவான மயக்கத்தைத் தணியச் செய்தாய், தெளிந்த உன்னுடைய கீதை உபதேசத்தால் இவன் மனத்தை, உண்மை விளங்கத் தெளிய வைத்தாய், மூன்று பிறவியிலும் (உன்னுடன் பிறந்து) வந்து, அமிசத்தையும் (அவன்) கொண்டிருத்தலால், பிறத்தலே அடையுமோ! மாற்றினை - பிறவி ஏற்படாமல் மாற்றினை; அதாவது பிறவிக் கடல் கடக்கச் செய்து விட்டாய், —என்று சிவபெருமான், கண்ணனிடம் மகிழ்ந்து கூறினன், என்பதாம். கொள்ளுமே, என்பதிலுள்ள ஏகாரம் எதிர்மறைப் பொருளது. திருமாலின் அம்சத்தினன் ஆதல் பற்றிச் சிவபிரான், விசயனுக்குப் பிறப்பில்லை, என்ருன், என்க.

### விசயன் படை வேண்டுதல்

**217.** **வேண்டுவ தென்கொல்மற் றென்ன வீரனும்**
**பூண்டதோர் பகையறுத் தன்றிப் போகலேன்**
**ஆண்டருள் படைகளா லவுணர் காய்ந்தனன்**
**ஈண்டுநல் குதிவிற லெய்தும் வண்ணமே.**

[வேண்டுவது என் கொல் மற்று? என்ன, வீரனும், "பூண்டது ஓர் பகை அறுத்து அன்றி போகலேன்; ஆண்டு, அருள் படைகளால் அவுணர் காய்ந்தனன்; ஈண்டு நல்குதி, விறல் எய்தும் வண்ணம்.]

**விளக்கம் :-** மற்று (இனி) வேண்டுவது யாது? என்று சிவபெருமான் வினவ, வீரனும் (விசயனும்) மேற்கொண்டதாகிய வலிய பகையை அழித்து வெற்றியோடு அல்லாமல், இந்தப் போரினின்று விலகேன்; நான் தவம் செய்த பொழுது நீ அருளிய படைகளால் அவுணர்களை அழித்தேன்; இப்பொழுது, நான் வெற்றி பெறும்படி (படைகள்) அளித்தருளுவாயாக,—என்று விசயன், வேண்டினன், என்பது பொருள்.

**218.** **தானவர்ப் பொரும்படை கொண்டு தாரணி**
**மானவர்ப் பொருவது வழக்கு மல்லவால்**
**கூனல்விற் கணைகளுங் குறைவு றுதவோர்**
**தூநிழற் பொய்கையுங் கொடுத்தி தோன்றலே!**

[தானவர் பொரும் படை கொண்டு தாரணி மானவர் பொருவது வழக்கு (உம்) அல்ல, ஆல், கூனல் வில் கணைகளும் குறைவுறாத ஓர் தூநிழல் பொய்கையும் கொடுத்தி தோன்றலே.]

**விளக்கம் :-** அசுரர்களோடு பொருவதற்குரிய ஆயுதங்களைக் கொண்டு மனிதரோடு போர் செய்வது வழக்கு அன்று ஆதலால், வில்லிற்குரிய அம்புகளும், எடுக்கக் குறையாத ஒரு பரிசுத்தமான சாயை பொருந்தும்படி தெளிவு கொண்ட பொய்கையையும், அதாவது, முன்னொரு காலத்தில் தேவர் பகைவரை அழித்து, வில்லையும் அம்புகளையும் தூணீரத்தோடு அமிருதசரஸ், என்ற பொய்கையில் விட்ட வில்லையும் கணைகளோடு புட்டிலையும் கொடுத்தருள்வாய்,—என்று விசயன், கேட்டான், என்பதாம். இதைக் கண்ணன் கூற்றுகக் கூறுவதும் உண்டு. தெளிவுடைய நீரில் நிழல் விழுமாதலால், தூநிழல் பொய்கை, எனப்பட்டது. பொய்கை, என்பதற்கு தூணீரம் என்று கொள்வதற்கு இடையூறுவது, 'தூநிழல்' என்ற அடை.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**219. என்றலு மீசன கைத்துரை செய்தனன் யானென நீயெனவே(று)**
**அன்றிவை யாவும ளித்திடு தற்குனை அல்லது வல்லவர்யார்**
**நின்றதோர் தூணிடை வந்தனை யானைமு னின்றனை கஞ்சனையும்**
**கொன்றனை மன்னவை யூடிரி பப்பல கூறைகொ டுத்தனையே.**

[என்றலும் ஈசன் நகைத்து உரை செய்தனன், யான் என, நீ என, வேறு அன்று; இவை யாவும் அளித்திடுதற்கு உனை அல்லது வல்லவர் யார்? நின்றது ஓர் தூணிடை வந்தனை, யானைமுன் நின்றனை, கஞ்சனையும் கொன்றனை, மன் அவையூடு இரிய பல கூறை கொடுத்தனை, ஏ.]

**விளக்கம் :-** என்று கூறலும், சிவபிரான் நகை செய்து, கூறினுன்: ''நான் என்றும் நீ என்றும், வேறு இல்லை; ஆயுதங்கள் எல்லாவற்றையும் கொடுத்தற்கு உன்னையல்லாமல் யார் வேறு இருக்கின்றனர்; இரணிய சங்காரம் செய்ய ஒரு தூணில் நரசிங்க மூர்த்தியாய்த் தோன்றினை, (உன்னை அழைத்த) யானை முன் வந்து தோன்றி இரட்சித்தாய், (தீயனுன) கம்சனை, (இளமையிலேயே) கொன்ருய், மன்னர் அவையிலே (திரௌபதியின் துயரம்) நீங்கப் பலவஸ்திரங்களை உதவினுய்,—என்பதாம்.

**220.** **முன்னுரு வாயினே நின்றிரு நாபியின் முளரியின் வாழ்முனிவன்**
**தன்னுரு வாகியி ருந்துப டைத்தனை பலசக தண்டமுநீ**
**நின்னுரு வாகிய ளித்திடு கின்றனை நித்தவி பூதியினுல்**
**என்னுரு வாகிய ழிக்கவு நின்றனை யெம்பெரு மானெனவே.**

[முன்உரு ஆயினை, நின் திரு நாபியின் முளரியின் வாழ் முனிவன் தன் உருஆகி கருத்து படைத்தனை பலசகத் அண்டமும் நீ, நின் உரு ஆகி அளித்திடுகின்றனை நித்த விபூதியினுல், என் உரு ஆகி அழிக்கவும் நின்றனை, எம்பெருமான், எனவே.]

**விளக்கம் :-** முன் உரு ஆயினை - ஆரம்பத்தில் உலகைப் படைக்கத் திருவுளங் கொண்டு நிற்குண நிலையினனுன நீ சகுண நிலையினன் ஆயினை, அதாவது, வடிவங்கொண்டாய். நாபியின் முளரியின் வாழ் முனிவன் - பிரும்மா. நின் உரு ஆகி - விஷ்ணு ஸ்வரூபியாய். என் உருஆகி - ருத்ர ரூபியாய். நித்யவிபூதி - திருவைகுண்டம். எம்பெருமானே! படைக்கும் பொருட்டு உருவங் கொண்ட நீ, பிரும்மனுய்ப் படைத்தலையும், விஷ்ணுவாய்க் காத்தலையும், ருத்திரனுய் நின்று அழித்தலையும் செய்கின்றுய்,— என்று சிவபெருமான் கண்ணனைப் புகழ்ந்தான், என்பதாம்.

விசயன் படை பெறல்

**221.** **ஆயிடை நின்றகி ரீடியை முக்கண னங்கொரு பொய்கையிலே**
**போயிடை மூழ்கென வப்புன லூடொர் புயங்கமெ ழுந்ததன்**
**வாயிடை வந்தனன் மாணுரு வாயொரு மாமுனி யம்முனியச்**
**சேயிடை நீரிலெ டுத்தனன் மற்றொரு சிலையுடன் வாளியுமே.**

[ஆயிடை நின்ற கிரீடியை முக்கணன் அங்கு ஒரு பொய்கை யிலே போய் இடை மூழ்கு என, அ புனலூடு ஓர் புயங்கம் எழுந் தது, அதன் வாயிடை வந்தனன் மாண் உரு ஆய் ஒரு மாமுனி, அ முனி அ சேய் இடை நீரில் எடுத்தனன் மற்று ஒரு சிலையுடன், வாளியும் ஏ.]

**விளக்கம் :-** ஆயிடை - அங்கே. கிரீடி - விசயன். முக் கணன் - சிவபெருமான். புயங்கம் - பாம்பு. மாண் உரு ஆய் ஒரு முனி - பிரும்மசாரியின் வடிவில் ஒரு முனிவன். அ சேய் இடை நீரில் - அந்த நீண்டு பரவிய இட விசாலத்தையுடைய நீரிலிருந்து.

அங்கே இருந்த பொய்கை ஒன்றில் சிவபெருமான் விசயனை மூழ்கு மாறு சொல்ல, (அவ்வாறு அவன் முழுகிய அளவில்) அந்த நீரி னின்று ஒரு பாம்பு எழ, அதன் வாயினின்று வெளிப்பட்ட ஒரு முனிவன், அந்தப் பெரிய பொய்கை நீரிலிருந்து வேறொரு வில்லை யும் அம்பையும் எடுத்தான், என்பதாம். பொய்கை - இயற்கை யாய் அமைந்த நீர் நிலை.

தவநிலைச் சருக்கத்தில், சிவபெருமான், வில்லும் பாசுபதமும் கொடுத்துளார் ஆதலின் இப்பொழுது அளிக்கும் வில்லும், கணையும் வேறுனதாகின்றன, எனவே, ''மற்றொரு சிலையுடன் வாளியும்,'' எனப் பட்டது.

**222.** **முப்புர நீறெழு நாளினி யற்றிய முட்டியு நன்னிலையும்**
**அப்புர சூதன னேவலி னந்தண னமரர் பிரான்மதலைக்(கு)**
**ஒப்புர வோடுப யிற்றியி தங்கொடு ருத்திர மாமறையும்**
**செப்பின னுலவை பெற்றனன் வென்று செயத்திர**
**தற்றெறுவான்.**

[மு புரம் நீறு எழும் நாளின் இயற்றிய முட்டியும் நல்நிலையும், அ புரசூதனன் ஏவலின் அந்தணன் அமரர் பிரான் மதலைக்கு ஒப்புரவோடு பயிற்றி, இதம் கொடு உருத்திர மா மறையும் செப்பினன்; அவை பெற்றனன் வென்று செயத்திரதன் தெறு வான்.]

**விளக்கம் :-** முப்புரம் - திரிபுரம். முட்டி - முஷ்டி, வில்லைப் பற்றுகை. நல் நிலை - கணை செலுத்துகையில் நிற்கவேண்டிய நிலை. ஒப்புரவு - தகுதி. இதம் கொடு நன்மை பயக்கவல்ல. வென்று தெறுவான், என்பதை, தெற்று வெல்வான், என்று விகுதி பிரித்துக் கூட்டுக; அழித்து வெல்லும் பொருட்டு, என்பது பொருள். திரிபுரம் எரித்த பொழுது சிவபெருமான் (வில்லைப்) பற்றியருளிய முஷ்டியையும் (கைப்பிடியையும்), நிற்க வேண்டிய நல்ல நிலையையும், பொய்கை நின்று வந்த முனிவன், அப் பிரானது ஏவலின் படி இந்திரன் மதலையான விசயனுக்குத் தக்க விதமாய்க் கற்பித்து, நன்மை பயக்க வல்ல ருத்திரம், என்ற மந்திரத்தையும் உபதேசிக்க, அவற்றை, சயத்திரதனை அழிக்கும் பொருட்டு (விசயன்) பெற்றுக் கொண்டான், என்பதாம்.

புரசூதனன், என்பது சிவபெருமான் திருநாமங்களில் ஒன்று; திரிபுரம் அழித்தவன், என்பது பொருள்.

**223.** **யாதொரு போதுநி னைத்தனை யவ்வழி யெய்துமு**
**னக்கிவையென்(று)**
**ஓதிய நேகவ ரங்கள்கொ டுத்தபி னுமையொரு**
**கூறுடையோன்**
**பூதல மாதிடர் தீர வருஞ்சமர் புரிதொழின் முற்றியபின்**
**சீதர நீவரு கென்றுத ழீஇயுரை செய்தனன் மீளவுமே.**

[யாது ஒரு போது நினைத்தனை அ வழி எய்தும் உனக்கு இவை என்று ஓதி, அநேக வரங்கள் கொடுத்தபின், உமை ஒரு கூறு உடையோன், பூதலம் மாது இடர் தீர அரு சமர் புரி தொழில் முற்றியபின், சீதர, நீ வருக என்று தழீஇ உரை செய்தனன் மீளவும், ஏ.]

**விளக்கம் :-** சீதரன் - ஸ்ரீதரன், என்ற ஒரு பெயருடைய கண்ணன். ''நீ நினைத்த பொழுது, இவ்வில்லும் கணையும் உன்பால் எய்தும்'' என்று கூறி, அநேக வரங்களையும் விசயனுக்குக் கொடுத்து அதன்பின், சிவபெருமான், கண்ணனை நோக்கி, ''பூபாரம் தீர்க்கும் தொழில் முற்றியபின், நீ உனது இடத்தை அடைக'', என்று, மறுபடியும் கண்ணனைத் தழுவிக் கொண்டு கூறினான், என்பதாம்.

''சீதர நின்பத மேவுக வென்றருள் செய்து விடுத்தனனே'', என்று ஒரு பாடம் அச்சுப் பிரதிகளில் காணப்படுகின்றன; இப்பாடமும் அமைவதொன்றே. யாம் கொண்ட பாடம் ஏட்டுப் பாடம்.

**224.** **எண்ணிய காரிய மெய்தியி றைஞ்சிய விந்திரன் மாமகனும்**
**திண்ணிய நேமிவ லம்புரி வாள்கதை சிலையுடை நாயகனும்**
**புண்ணியன் மால்வரை நின்றுர காரிபு யங்களும்**
**வன்கரமும்**
**நண்ணிய காலையில் வெள்ளியெ ழுந்தது ஞாயிறெ**
**ழுந்திசையே.**

(எண்ணிய காரியம் எய்தி இறைஞ்சிய இந்திரன் மாமகனும், திண்ணிய நேமி வலம்புரி வாள் கதை சிலை உடை நாயகனும், புண்ணியன் மால்வரை நின்று உரகாரி (உரக-அரி) புயங்களும் வன்கரமும் நண்ணிய காலையில் வெள்ளி எழுந்தது, ஞாயிறு எழும் திசையே.)

**விளக்கம் :-** நேமி (சுதர்சனம், என்னும் சக்கரம்) வலம்புரி (பாஞ்சசந்யம் என்னும் சங்கம்), வாள் (நந்தகம் என்னும் வாள்), கதை, (கௌமோதகீ என்னும் கதை) சிலை (சார்ங்கம் என்னும்

வில்), ஆயவை, திருமாலின் பஞ்சாயுதங்கள். புண்ணியன்-பரிசுத்தனுன சிவபிரான். வெள்ளி - சுக்கிரன். உரகாரி - கருடன். நினைத்து வந்த காரியம் முடிய விசயன் சிவபெருமானை வணங்கலும், கண்ணன் சர்ப்பங்களின் பகைவனுன கருடனது தோளையும், விசயன் கரத்தையும் சேர்ந்த அளவில் சுக்கிரன், சூரியன் உதிக்கும் கீழ்த்திசையில் தோன்றினுன் என்பதாம்.

இரவின் இறுதிப் பகுதியில் தோன்றும் சுக்கிரோதயம் பொழுது விரைவில் விடியும் என்பதைக் காட்டும். வெள்ளை நிறத்தினனுதலால், சுக்கிரனை, வெள்ளி, என்று அழைத்தனர்.

## கடோற்கசன் தூது

**225.** **இங்கிவர் மூவரு மேகினர் மீளுமு னெறிமுர**
**சக்கொடியோன்**
**அங்குரை யாடிய துரைசெயின் மண்மிசை யார்விய**
**வாதொழிவார்!**
**பங்குன ஞேதிய வஞ்சின மும்பசு பதியிடை யேகியதும்**
**கங்குலி னேவின னுரைசெய்க வென்றுக டோற்கச**
**மீளியையே.**

[இங்கு இவர் மூவரும் ஏகினர் மீளும் முன் எறி முரசம் கொடியோன், அங்கு உரை ஆடியது உரை செயின், மண்மிசை யார் வியவாது ஒழிவார்? பங்குனன் ஓதிய வஞ்சினமும், பசுபதியிடை ஏகியதும் கங்குலின் ஏவினன் உரை செய்க என்று கடோற்கசன் மீளியை, ஏ.]

**விளக்கம் :-** மூவர் - கிருஷ்ணர்ச்சுனரும் கருடனும். ஏகினர் மீளுமுன் - கயிலை சென்றவர் திரும்பி வருமுன். அங்கு – படை வீட்டில். பங்குனன் - அருச்சுனன். ஓதிய வஞ்சினம், - (நாளை சூரியன் மறையு முன் சயத்திரதனைக் கொல்லாவிட்டால் தீயில் விழுந்து மாள்வேன் என்று) கூறிய சபதமொழி. பசுபதி - சிவபெருமான். கங்குலின் - அன்றைய இரவிலேயே. கடோற்கச மீளி – கடோற்கசன் என்ற வீரன். கண்ணனும் விசயனும் திரும்பு முன் அன்றைய இரவே, விசயன் உரைத்த வஞ்சினமும், அவன் கயிலை போயிருப்பதுமாகிய விஷயத்தைத் துரியோதனனுக்குத் தெரிவிக்குமாறு தருமன், கடோற்கசனை, அனுப்பினுன் என்பதாம். தருமன் செய்ததைக் கூறின், உலகம் வியக்கும், என்பது இரண்டாவது அடியின் கருத்து.

**226.** **மற்றவன் முந்துறு தந்தையை வந்துவ ணங்கிமுன்
வஞ்சனையில்
செற்றவர் தம்முட னுற்றது சொல்வது சேவக
மோவறிவோ
கொற்றவர் மாமுடி கமழ்கழ லாய்வலி கூர்திற:
லுஞ்செயலும்
அற்றவர் போலவு ரைப்பதென் னென்றுள ழன்றுபு
கன்றனனே.**

[மற்று அவன் முந்து உறு தந்தையை வந்து வணங்கி, முன் வஞ்சனையில் செற்றவர் தம்முடன் உற்றது சொல்வது சேவகமோ, அறிவோ; கொற்றவர் மா முடி கமழ் கழலாய் வலிகூர் திறலும் செயலும் அற்றவர் போல உரைப்பது என்? என்று உள் அழன்று புகன்றனன், ஏ.]

**விளக்கம்:-** மற்று - தருமன் சொல்லியது கேட்டவுடன். வஞ்சனையில் செற்றவர் - அபிமனை வஞ்சனையினால் அழித்த பகைவர். சேவகம்-போர் ஆற்றல், பராக்ரமம். வலிகூர் திறல் - வலிமை மிகுந்த திறமை. செயல் - ஏற்றதான வினைத்திறன். வஞ்சனையால் நமது சிறுவனை அழித்தவரிடம் இங்கே நிகழ்ந்த விஷயத்தை, அவரிடம் தெரிவிப்பது, வீரத்தின் காரியமோ, அறிவோ ஆகாது; அவ்வாறாக, வீரமும், அதற்கு ஏற்ற செய்கையும் அற்றவர் போல் என்னை அவர் பால் செலுத்துவது என்ன காரணம்? என்று கடோற்கசன் உள்ளம் அழலக் கூறினான், என்பதாம்.

"திறலும் செயலும் அற்றவர்போல் இவ்வாறு உரைப்பது ஏன்?" என்றதின் கருத்து யாதெனத் தெரியவில்லை.

**227.** **திறனறி யாமலு ரைத்தனை மாருதி சிறுவனெ னும்படிநீ
மறநெறி யேன்றுவ யிர்த்தவர் கொல்வது வஞ்சனை
யோவிரகோ
அறிநெறி யோபொரு தல்லது வெல்லுத லாண்மைகொ
லோவழகோ
விறனெறி யாவது பொய்யில தென்றனன் மெய்மையு
ணர்ந்திடுவான்.**

[திறன் அறியாமல் உரைத்தனை மாருதி சிறுவன் எனும்படி நீ, மறம் நெறி ஏன்று வயிர்த்தவர் கொல்வது வஞ்சனையோ, விரகோ? அறம் நெறியே பொருது அல்லது வெல்லுதல் ஆண்மை கொலோ, அழகோ? விறல் நெறி ஆவது பொய் இலது, என்றனன், மெய்மை உணர்ந்திடுவான்.]

**விளக்கம்:-** திறன் - தகுதி. மாருதி - வீமன். மறம்நெறி ஏன்று - தர்மத்திற்கு எதிரான மறத்தின் மார்க்கத்தை ஏற்று. வயிர்த்தவர் கொல்வது வஞ்சனையோ, விரகோ - வயிரங் கொண்ட பகைவரை அழிப்பது வஞ்சகமோ, அல்லது வஞ்சனை அற்ற உபாயமோ, (அதாவது, வஞ்சனையே, என்றபடி). தர்ம வழியில் பொருது அல்லாமல் வெல்லுதல் நமக்கு அழகும் ஆண்மையும் ஆகுமோ? விறல் (வெற்றி) நெறி என்பது பொய்மை இல்லாததே ஆகும், என்று மெய்ம்மையுணர்வு கைவந்தவனான, தருமன் கூறினான், என்பது ஈற்றடிகளின் பொருள். பொய்யில்லாத வழியில் வெல்வதே, வெற்றி, என்று தருமன், கடோற்கசனுக்குக் கூறினான், என்பது கருத்து.

### கடோற்கசன் பகைவர்பால் செல்லுதல்

**228. நிருதன நகைத்துவ ணங்கிநி ணங்கமழ் நீளிலை**
**வேலினெடும்**
**கருதலர் துற்றிய பாசறை யன்றோர்க ணப்பொழு**
**திற்புகுதா**
**ஒருதனி லக்கண மைந்தனி றந்தன னென்றழு துள்ளழியும்**
**விருதுடை வித்தகன் வாயிலி னின்றுவி ளித்தன**
**னோருரையே.**

[நிருதன் நகைத்து வணங்கி நிணம் கமழ்நீள் இலை வேலின்நெடும், கருதலர் துற்றிய பாசறை அன்று ஓர் கணம் பொழுதில் புகுதா, ஒரு தன் இலக்கண மைந்தன் இறந்தனன், என்று அழுது உள் அழியும் விருது உடை வித்தகன் வாயிலின் நின்று விளித்தனன் ஓர் உரை, ஏ.]

**விளக்கம்:-** (தருமன் கூறியது கேட்டு) மகன் நகைத்து, வணங்கி மாமிசத்தின் நாற்றம் வீசும் தனது நீண்ட இலை போன்ற வேலுடன், அன்று இரவில் ஒரு கணப் பொழுதில் பகைவர் நிறைந்துள்ள பாசறை அடைந்து, தனது ஒப்பற்ற மகனான இலக்கணன் மடிந்ததற்கு அழுது வருந்திய, வெற்றியுடைய சாமர்த்தியசாலி யாகிய துரியோதனன் இருக்கும் மனையின் வாயிலில் நின்று, ஒரு வார்த்தை சொல்லிக் கூப்பிட்டான்,— என்பது பொருள்.

தருமன் கூறியது போர் முறையுமன்று, மதியுடைமையும் ஆகாது என்ற தன் எண்ணம் தோன்ற நிருதன் நகைத்தான், என்க. விருதுடைவித்தகன் - (அன்றைய போரில் அபிமனைக்

கொல்வித்தலால் எய்திய) வெற்றியை உடைய சதுரனுன துரியோதனன்.

**229.** **எதிரெதிர் கொற்றவன் வாயிலி னின்றவர் யாரென**
**வெய்துதலும்**
**அதிர்முர சக்கொடி யோனர வக்கொடி யரசனி**
**டைப்பகர்வான்**
**முதிரவு ரைத்ததொர் மொழியுள தம்மொழி மொழிதர**
**வந்தனன்யான்**
**எதிரறு வெற்றிய ரிக்கொடி யோன்மக னென்றனன்**
**விக்ரமனே.**

[எதிர் எதிர் கொற்றவன் வாயிலின் நின்றவர் யார், என எய்துதலும், "அதிர் முரசம் கொடியோன் அரவம் கொடி அரசனிடை பகர்வான் முதிர உரைத்தது ஓர் மொழி உளது, அ மொழி மொழி தர வந்தனன் யான், எதிர் அறு வெற்றி அரி கொடியோன் மகன்," என்றனன் விக்ரமனே.]

**விளக்கம்:-** அப்பொழுது, துரியோதனனது படை வீட்டின் வாயில் காப்போர், எதிரில் வந்து, 'நீயார்?' என்று கேட்டுக் கொண்டு வரலும், விக்ரமன் (பராக்ரமசாலி) ஆன கடோற்கசன், "தருமன் துரியோதனனுக்குச் சொல்லும்படி தெளியக் கூறிய தான ஒரு வார்த்தை உளது; அதைச் சொல்லுதற்கு சிம்மக் கொடியனுன வீமனது மகனுன நான் வந்துளேன்," என்று கூறினுன், என்பதாம். எதிர் அறு அரி - ஒப்பில்லாத ஆற்றலுடைய சிம்மம்.

**230.** **அம்மொழி தீயுரு மேறென நீடவை யரசர் செவிப்படவோர்**
**செம்மொழி யற்றவன் மொழிவழி சென்றெரு சிறிதும**
**தித்தருளான்**
**நும்மொழி விட்டொரு மெய்ம்மொழி கேளென நோதகு**
**நெஞ்சினனும்**
**வெம்மொழி வித்தக வெம்மொழி நுந்தைதன் மெய்ம்மொழி**
**யென்றனனே**

[அ மொழி தீ உரும் ஏறு என நீடு அவை அரசர் செவி பட, ஓர் செம்மொழி அற்றவன் மொழிவழி சென்று, ஒரு சிறிதும் மதித்தருளான், நும் மொழி விட்டு ஒரு மெய் மொழி கேள், என, நோதகு நெஞ்சினனும், "வெம் மொழி வித்தக, எ . மொழி. நுந்தை தன் மெய் மொழி?" என்றனன், ஏ.]

**விளக்கம் :**—கடோற்கசனது அந்த வார்த்தை, தீங்கு இழைக்கவல்ல பேரிடி போல் அவையிருந்த அரசர்கள் செவி சேர்தலும், நல்ல வார்த்தை ஒன்றும் அறியாதவனான துரியோதனன் அனுமதியின்படி உள்ளே சென்று, ஆங்கு இருந்த எவரையும் மதியாதவனாய், ''உங்களுடைய பேச்சைவிட்டு விட்டு, நான் சொல்லப்போகும் மெய் மொழியை கேளுங்கள்.'' என; புத்திர சோகத்தால் மனவருத்தங்கொண்ட துரியோதனனும், வெம்மொழி வித்தக, என்று கடோற்கசனை விளித்து, ''உன் தந்தையின் மெய்யுடைய வார்த்தை யாது?'' என்று கேட்டான், என்பது பொருள். வெம்மொழி வித்தக - கொடிய சொல்லையுடைய தூதனே. செம் மொழி—நீதியுடைய சொல்.

தருமன் சொல்லை மெய்ம் மொழி, என்றதனால், நும்மொழி, என்றது பொய்மையுடைய உங்கள் வார்த்தை, என்பது பொருளாகும். வித்தகன், என்பதற்கு அறிவுடைய தூதன், என்ற பொருளும் உண்டு.

தூதன் கூறல்

**231. தன்றிரு மைந்தனை மௌலிது ணித்தச யத்திர**
**தன்தனைவாள்**
**வென்றிகொள் காவலர் காவன் மிகுப்பினும் வெயிலவன்**
**வீழ்வதன்முன்**
**கொன்றிடு வேனது தப்பின ருங்கன லூடுகு தித்திடுவேன்**
**என்றுமொ ழிந்தரன் வாழ்கயி லாயமு மெய்தினன்**
**வில்விசயன்.**

[''தன் திரு மைந்தனை மௌலி துணித்த சயத்திரதன் தனை, வாள் வென்றி கொள் காவலர் காவல் மிகுப்பினும் வெயிலவன் வீழ்வதன் முன் கொன்றிடுவேன், அது தப்பின் அருங்கனலூடு குதித்திடுவேன்,'' என்று மொழிந்து, அரன் வாழ் கயிலாயமும் எய்தினன் வில்விசயன்.]

**விளக்கம் :**—''தன் மைந்தனைக் கொன்ற சயத்திரதனை, சூரியன் சாயுமுன் கொல்வேன்; அது செய்யத் தப்பினால் அக்னிப் பிரவேசம் செய்வேன்.'' என்று விசயன் சபதமொழி கூறி, (பிறகு, அச்சபதம் நிறைவேறுவதற்காக) அரன் வாழும் கயிலைமலை சென்றுள்ளான்,—என்பதாம்.

**232. வஞ்சனை யாலம ரிற்பகை தன்னைம லைப்பது பாதகமென்(று)**
**அஞ்சின ளுதலி னீயறி யும்படி யையன்வி டுத்தனனால்**

**எஞ்சின ஞானையுன் மைத்துன னென்றுகொ ளென்றனன் வன்றிறல்கூர்**
**நெஞ்சினில் வேறொரு சஞ்சல மற்றநி சாசரன் மாமருகன்.**

[வஞ்சனையால் அமரில் பகை தன்னை மலைப்பது பாதகம், என்று அஞ்சினன் ஆதலின் நீ அறியும்படி ஐயன் விடுத்தனன், (ஆல்); எஞ்சினன் நானை உன் மைத்துனன், என்று கொள், என்றனன், வல்திறல் கூர் நெஞ்சினில் வேறு ஒரு சஞ்சலம் அற்ற நிசாசரன் மாமருகன்.

**விளக்கம் :-** ''வஞ்சனையால் போரில் பகை அழித்தல் பாதகம் என்று அஞ்சிய படியால், நீ விஷயம் அறியும்படி செய்ய என் தந்தையான தருமன், என்னை அனுப்பி வைத்தான்; உன் மைத்துனன் (சயத்திரதன்) நானை அழிந்தான், என்று கொள்க,'' என்று, வலிய ஆற்றலையுடைய நெஞ்சினில் வேறு எந்தவிதமான சஞ்சலமும் இல்லாத இடிம்பனது சிறந்த மருமகனுன கடோற்கசன், கூறினுன்—என்பது பொருள்.

வேறு

துரியோதனன் எதிர் மொழி

**233. மன்மைந்தர் பலரொடும்போய் மறித்தொருவர்**
**மீளாமன் மலைந்து வீழ**
**என்மைந்த னிறந்திடவும் யாதொன்றும்**
**புகலாம லிருக்கின் றேன்யான்**
**தன்மைந்த னிறந்தனனுந் தான்றழலின்**
**மூழ்குவனுஞ் சபதங் கூறி**
**வின்மைந்தின் மிகுந்தவருக் கழுதிரங்கி**
**யரற்றுவது வீரந் தானே !**

[மன் மைந்தர் பலரொடும் போய் மறித்து ஒருவர் மீளாமல் மலைந்து வீழ, என் மைந்தன் இறந்திடவும் யாது ஒன்றும் புகலாமல் இருக்கின்றேன் யான்; தன் மைந்தன் இறந்தனன் ஆம், தான் தழலில் மூழ்குவன் ஆம், சபதம் கூறி வில் மைந்தில் மிகுந்தவருக்கு அழுது இரங்கி அரற்றுவது வீரம் தானே !]

**விளக்கம் :-** மன் மைந்தர் – அரச குமாரர்கள். அரசகுமாரர் பலரோடும் (அபிமனை) எதிர்த்துச் சென்று, சென்றவர் ஒருவர் கூடத் திரும்பாமல் இறந்துபட என் மகனுன இலக்கணனும் (அபிமனுல்) மாய்ந்திடவும், (மன்னர் மகனுன) நான் யாதொன்

றும் கூறுமல் இருக்கின்றேன்; அவ்வாறுக, தன் மகன் இறந்து போனுனும், அதற்காக அவன் தீயில் விழுந்து சாவானும்; வில் தொழில் வலிமையில் சிறந்தவரான அரசர்களுக்காக, (அதாவது இறந்ததற்காக), அழுது புலம்பிச் சபதம் கூறி அரற்றுவது வீர மாகுமோ ! — என்று துரியோதனன், கூறினுன், என்பதாம்.

**234.** **பயத்திரவி னடுங்கியரன் பருப்பதம்புக்**
**கவன்கொடுத்த படையும் வாங்கி**
**வயத்திரத மால்கடவ வந்தெதிர்தோன்**
**றுவனுகின் மகர மோதும்**
**கயத்திரவி விழுவதன்முன் கையறுதன்**
**புதல்வனைப்போற் களத்தின் மாளச்**
**சயத்திரதன் கொடுங்கணையாற் ருன்படுதல்**
**உறுதியெனச் சாற்று வாயே.**

[பயத்து இரவில் நடுங்கி அரன் பருப்பதம்புக்கு அவன் கொடுத்த படையும் வாங்கி, வயத்து இரதம் மால் கடவ வந்து எதிர்தோன்றுவன் ஆகில், மகரம் மோதும் கயத்து இரவி வீழ் வதன் முன் கை அறு தன் புதல்வனை போல், களத்தில் மாள சயத்திர தன் கொடுங்கணையால் தான் படுதல் உறுதி,என சாற்று வாய், ஏ.]

**விளக்கம் :-** மகரம் மோதும் கயம் - சுருமீன்கள் பாய்ந்து அலையும் கடல். (தன் சபதம் நிறைவேருமற் போயின் என் செய்வது ?) என்ற பயத்தோடு நடுங்கி இரவில் அரன் மனை சென்று, அப்பிரானிடமிருந்து ஆயுதம் பெற்றுக் கொண்டு, கண்ணன் தேர் நடத்த அவன் (யுத்த பூமி) வந்து தோன்றுவானு யின், சூரியன் கடல் வீழ்ந்து மறையுமுன், செயலற்று அழிந்த அவனது மகனே போல், சயத்திரதனது கொடிய கணையால் அவன் மாள்வது நிச்சயம், என்று உன் தந்தையிடம் கூறுவாய் ! இச் செய்யுளில் **திரிபு** என்னும் சொல்லணி உள்ளது. காண்க.

**235.** **என்னினும்பார் தனக்குரியன் சிலைத்தொழிலிற்**
**சிலைக்குருவா யெவரும் போற்றும்**
**மன்னினுந்தான் மிகவலியன் றண்டெடுத்தால்**
**உந்தையினும் வலியன் சால**
**உன்னினுந்தோ ளுரனுடையன் மதியாமல்**
**இப்படிநீ யுரைக்க லாமோ**
**தன்னினும்போர்க் கெளியானே சயத்திரதன்**
**ருனென்று சாற்று வாயே.**

[என்னினும் பார் தனக்கு உரியன், சிலை தொழிலில் சிலை குருவாயெவரும் போற்றும் மன்னினும் தான் மிக வலியன், தண்டு எடுத்தால் உந்தையினும் வலியன் சால, உன்னிலும் தோள் உரன் உடையன்; மதியாமல் இப்படி உரைக்கல் ஆமோ! தன்னினும் போர்க்கு எளியனே சயத்திரதன் தான் என்று சாற்றுவாய், ஏ.]

**விளக்கம் :-** பூமி ஆளுகைக்குச் (சயத்திரதன்) என்னைக் காட்டிலும் உரிமை உடையவன், வில் தொழிலில், சிலைக்குரு என்று போற்றப்படும் தலைவனான அந்தணனைக் காட்டிலும் வலிமை மிக உடையவன், கதை எடுத்து வந்தால், உன் தந்தையாகிய வீமனைக் காட்டிலும் வலிமை மிக உடையவன், உன்னைக் காட்டிலும் தோள்வலி உடையவன்; (அவ்வாறாக,) நீ அவனை மதிக்காமல் இப்படிப் பேசுதல் தக்கதாமோ! (விசயன்) தன்னினும் போர் செய்தலில் வலி குறைந்தவனே!, (இதை உன் தந்தைக்குச்) சொல்வாய்,-என்று தொடர்ந்து கூறினான், என்பதாம்.

**236.** **ஆளையா ணிலையறிவ தல்லதுமற்**
**றறிபவர்யா ரணிந்த போரில்**
**நாளையார் வெல்வரெனத் தெரியுமோ**
**எனநவின்று நகைத்தான் மன்னே**
**பாளைவாய் நெடுங்கமுகின் மிடறொடியக்**
**குலைத்தெங்கின் பழங்கள் வீழ**
**வாளைபாய் குருநாடு மெந்நாடும்**
**முழுதாளு மன்னர் கோமான்.**

[ஆளை ஆள் நிலை அறிவது அல்லது மற்று அறிபவர் யார்? அணிந்த போரில் நாளை யார் வெல்வர் என தெரியுமோ! என நவின்று நகைத்தான் (மன்னே); பாளை வாய் நெடுங்கமுகின் மிடறு ஒடிய, குலை தெங்கின் பழங்கள் வீழ வாளை பாய் குருநாடும் எ நாடும் முழுது ஆளும் மன்னர் கோமான்.]

**விளக்கம் :-** ''(தன் எதிரே நிற்கும்) ஆளை (மனிதனை), (மற்றோர்) ஆள் மனிதன், அவனது உருவத்தின் நிலையை அறிவது அல்லாமல், மற்றையவான திறமை வலிமை முதலிய குணங்களை அறிய வல்லவர் யார் உளர்? அணி வகுத்து வீரர்கள் நிற்கும் போரில் நாளை வெல்பவர் யார், என்று, இன்று அறிய முடியுமோ!'' என்று பாளைக்கள் அமையப்பெற்ற பெரிய கமுகின் கழுத்து (மேலிடம்) ஒடியும்படியும், குலைகளையுடைய தென்னையின்

முதிர்ந்த காய்கள் கீழே விழும்படியும் வாளை மீன்கள் தாவி விளையாடும் குருநாட்டோடு, மற்றெல்லா நாடுகள் முழுவதையும் ஆள்கின்ற மன்னர் மன்னனான துரியோதனன், கூறிச் சிரித்தான், என்பதாம். தெங்கின் பழம் - முற்றிய தேங்காய். ஈற்றடிகள், நீர்வளச் சிறப்பாகும். இவ்வாறு, நாட்டுவளத்திற்கு ஆதார மான நீர்வளத்தைக் கூறுவது கவி மரபு. மன், ஓ : ஈற்றசைகள்.

கர்ணன் கூற்று

**237.** **தாரரசன் மகன்துச்சா தனன்மகன்சல்**
**லியன்மகன்வேற் சகுனி யென்னும்**
**பேரரசன் மகன்முதலா வெத்தனைபேர்**
**பட்டாலும் பெரிய தன்றே**
**பாரரசா ளுதற்கிருந்த பார்த்தன்மா**
**மகனொருவன் பட்டா னாகில்**
**ஆரரசுக் கினியுரியா ரந்தோவென்**
**றுரைத்தான்மற் றங்கர் கோமான்.**

[தார் அரசன் மகன், துச்சாதனன் மகன், சல்லியன் மகன், வேல் சகுனி என்னும் பேர் அரசன் மகன் முதல் ஆ எத்தனை பேர் பட்டாலும் பெரிது அன்றே ! பார் அரசு ஆளுதற்கு இருந்த பார்த்தன் மாமகன் ஒருவன் பட்டான் ஆகில் ஆர் அரசுக்கு இனி உரியார், அந்தோ ! என்று உரைத்தான் மற்று அங்கர்கோமான்.]

**விளக்கம் :-** அரசாளுதற்கு உரியனான துரியோதனன் துச்சாதனன், சகுனி முதலியோர்களது புதல்வர்கள் போரில், பட்டதற்கு, அவர்கள் பெரிதும் அழுது புலம்பாமல் இருக்க, அரசு இன்றிக் கானில் அலைவதற்கே பிறந்த அபிமன் இறந்ததற்கு விசயன் அரற்றுவதும், சபதம் கூறுவதும், வியக்கத் தக்கதே,— என்று, கர்ணன் கூறியபடி; அதாவது பரிகசித்தான். என்பதாம்.

**238.** **அங்கிருந்து சயத்திரத னவிகவர்ந்**
**திடுவலென வாண்மை கூறிப்**
**பங்கிருந்த வுமாபதிபாற் பணிந்துவரம்**
**பெறச்சென்றான் பார்த்த னாகில்**
**கொங்கிருந்த தாராய்நின் குடைநிழற்கீழ்**
**இதுகாலங் கூட்டங் கூடி**
**இங்கிருந்த வேழையரே மென்செயமற்**
**றிருக்கின்றே மென்றுஞ் சொன்னான்.**

[அங்கு இருந்து சயத்திரதன் ஆவி கவர்ந்திடுவல் என, ஆண்மை கூறி பங்கு இருந்த உமாபதிபால் பணிந்து வரம் பெற சென்றுன், பார்த்தன் ஆகில், கொங்கு இருந்த மலர் தாராய், நின் குடை நிழல் கீழ் இது காலம் கூட்டம் கூடி இங்கு இருந்த ஏழ்மைய ரேம் என் செய மற்று இருக்கின்றேம், என்றும் சொன்னுன்.]

**விளக்கம்:-** மணம் அமைந்த மாலை தரித்த துரியோதனனே, அந்தப் பக்கத்திலிருந்து சயத்திரதன் ஆவி கவர்ந்திடுவேன், என்று கூறி, தன்னெரு பக்கத்தில் இடங் கொண்ட உமையின் கணவனுன சிவபிரானை வணங்கி வரம் பெற (விசயன்) சென்று ஞகில், உனது குடை நிழலின் கீழ் ஒன்று கூடி இங்கே இவ்வளவு காலமாய் இருந்த எளியவர்களான நாங்கள், வேறு என்ன செய்ய இருக்கின்றோம், எனறு கர்ணன் தொடர்ந்து கூறினுன், என்பதாம். ஏழையரேம், என்றது, ''நாங்கள் இளைத்தவர் அல்லோம்,'' என்று கூறும் கருத்தது; கர்ணனது செருக்கின் விளைவு, ஆகும்.

### கடோற்கசன் பதில்

**239.** **இவன்மொழிந்த விகழுரைகேட் டிடிம்பிமகன்**
**மிகவெகுளுற் றென்சொன் னுலும்**
**அவனிதல முழுதுமினி யரசாள**
**நினைத்திருந்தீ ரறிவி லீர்காள்!**
**சிவனெரிசெய் புரம்போலும் பாடிவீ**
**டழலூட்டிச் சேனை யாவும்**
**பவனன்மகன் மகனென்னும் பரிசறியத்**
**தொலைத்தீடு படுத்து வேனே.**

[இவன் மொழிந்த இகழ் உரை கேட்டு இடிம்பி மகன் மிக வெகுளுற்று, என் சொன்னுலும் அவனி தலம் முழுதும் இனி அரசு ஆள நினைத்து இருந்தீர் அறிவு இலீர்காள்; சிவன் எரி செய் புரம் போல் உம் பாடி வீடு அழல் ஊட்டி சேனை யாவும் பவனன் மகன் மகன் என்னும் பரிசு அறிய தொலைத்து ஈடுபடுத்துவேன், ஏ.]

**விளக்கம் :-** ஈடு - பெருமை. ஈடுபடுத்துவன் - பெருமையை அழிப்பேன். கர்ணன் கூறிய நிந்தனையான உரையைக் கேட்டு, இடிம்பி மகனுன கடோற்கசன் கோபம் மிகக் கொண்டு, பூமி முழுவதையும் இனி அரசு ஆள எண்ணியிருந்த அறிவு இல்லாத

வர்களே, நீங்கள் என்ன சொன்னாலும் (அதைப் பொருட்படுத்தாமல் நான்) சிவபெருமான் திரிபுரம் எரித்ததைப் போல், உங்கள் பாசறையைத் தீக்கு இரையாக்கி, உங்கள் சேனைகள் எல்லாவற்றையும் அழித்து, வாயு புதல்வனான வீமனது மகன் என்ற தன்மையை எல்லோரும் அறியும்படி உங்கள் பெருமையை அழிப்பேன், என்று கடோற்கசன், எதிர் மொழிந்தான், என்பதாம்.

''வாயு, தீயை வளர்க்கும் தன்மையது. அவன், மகனே வீமன், அரக்கு மாளிகைக்குத் தீ வைத்து அழித்தவன். நானும் இப்பொழுது உங்கள் படை வீட்டையும் உங்களையும் அழித்து, வாயுவின் மகன், மகன் என்பதை உலகு அறியச் செய்வேன்'', என்று கூறும் கருத்தது, ''பவனன் மகன் மகன் என்னும் பரிசறிய, என்றது.

**240.** **தசைகுருதி மிசையொழுகத் தனித்தனியே**
**யெதிர்த்தவரைத் தலைகள் சிந்த**
**விசயன்வர வேண்டுமோமற் றுள்ளார்தி**
**ரண்டுவர வேண்டுமோ தான்**
**நிசைபுலரு முன்முனைந்து நீருக்கி**
**விடுகுவனெம் நிருபன் சொன்ன**
**அசைவின்மொழி மறுத்துடற்ற லாகாதென்**
**றிருக்கின்றே னறிகி லீரே!**

[தசை குருதி மிசை ஒழுக தனி தனியே எதிர்த்தவரை தலைகள் சிந்த விசயன் வரவேண்டுமோ! மற்று உள்ளார் திரண்டு வர வேண்டுமோ தான்! நிசை புலருமுன் முனைந்து நீருக்கி விடுகுவன், எம் நிருபன் சொன்ன அசைவு இல்மொழி மறுத்து உடற்றல் ஆகாது என்று இருக்கின்றேன், அறிகிலீரே.]

**விளக்கம் :-** எதிர்த்து வந்தவரைச் சதையோடு இரத்தமும் மேலே வழியும்படி தனித்தனியே தலைகள் சிந்துமாறு செய்ய விசயன் வரவேண்டுமோ! வீமன் முதலிய மற்றுமுள்ள வீரர்கள் ஒன்று கூடி வருதல் தான் அவசியமோ! இந்த இரவு புலருமுன் போர் செய்து உங்களை எல்லாம் சாம்பலாக்கி விடுவேன்; எம் அரசனான தருமனது அசைவு இல் வார்த்தையை, அதாவது மாறுகச் செய்யக் கூடாத வார்த்தையைக் கடந்து போர் செய்தல் முறையாகாது என்று சும்மா இருக்கின்றேன், என்று கடோற்கசன் எதிர் மொழிந்தான், என்பதாம்.

241. ருவரெதி ரெதிர்தம்மி லிகல்பொருதல்
உலகியற்கை யாருங் கூடிப்
பருவமுருத் தனிக்குதலைப் பாலகனுக்
காற்ருமற் பறந்து போனீர்
ஒருவனெடுந் தேரொழிக்க வொருவன் மலர்க்
கைதுணிக்க வொருவன் பின்னைப்
பொருவனென வறைகூவிப் பொன்றுவித்தான்
இதுகொண்டோ புகல்கின் றீரே!

[இருவர் எதிர் எதிர் தம்மில் இகல் பொருதல் உலகு இயற்கை, யாரும் கூடி, பருவம் உரு தனி குதலை பாலகனுக்கு ஆற்ருமல் பறந்து போனீர்; ஒருவன் தேர் ஒழிக்க, ஒருவன் மலர் கை துணிக்க, ஒருவன் பின்னை பொருவன் என அறை கூவி பொன்றுவித்தான்;இது கொண்டோ புகல்கின்றீர், ஏ.

**விளக்கம் :-** இருவர் எதிர் எதிர் நின்று தங்களுக்குள் போர் செய்தல் உலக இயற்கை; (அவ்வாருக) நீங்கள் எல்லோரும் ஒன்று பட்டு வந்து, பிராயம் முதிராத ஒப்பற்ற மழலை மொழியும் இளம் பிள்ளையான அபிமனுக்கு முன் நிற்க மாட்டாமல், ஓடினீர்கள்; (அப்படிப் பட்டவர்களான உங்களில்) ஒருவன் தேரை அழிக்க, மற்ருெருவன் கை துணிக்க, ஒருவன் (சயத்திர தன்) அதன்பின், போர் செய்ய அழைத்து, உயிர் அழித்தான்: இந்த உங்களது வீரங்கொண்டோ செருக்குடன் பேசுகின்றீர் !—என்று மீண்டும் கூறினுன், என்பதாம்.

துரியோதனன் இகழ்ந்து கூறல்

242. வரைக்குவமை பெறுந்தடந்தோள் வீமன்மகன்
இப்படியே மதியானுகி
உரைக்குமொழி கேட்டிருந்த வுரகமணி
கொடிவேந்த னுருத்து நோக்கி
இருக்குமெழி லவைக்கேற்ப வியம்பாமல்
தன்மதத்தா லியம்புகின்ற
அரக்கிமக னுடனென்றுங் கழருதீர்
என்றுரைத்தா னரசர் யார்க்கும்.

[வரைக்கு உவமை பெறும் தடந்தோள் வீமன் மகன் இப்படியே மதியான் ஆகி உரைக்கும் மொழி கேட்டு இருந்த உரகம் அணி கொடி வேந்தன் உருத்து நோக்கி, இருக்கும் எழில் அவைக்கு ஏற்ப இயம்பாமல் தன் மதத்தால் இயம்புகின்ற அரக்கி மகனுடன் ஒன்றும் கழருதீர் என்று உரைத்தான் அரசர் யார்க்கும்.]

**விளக்கம்:-** வரைக்கு உவமை பெறும் தோள் - மலைக்கு உவமையாகத் தக்க தோள், அதாவது, மலையினும் சிறந்த வலிய தோள். உரகம் அணி கொடி வேந்தன் - துரியோதனன். உருத்து - சினந்து. சபையை மதியாமல் கடோற்கசன் கூறியன கேட்ட துரியோதனன், சினங் கொண்டவனாய், "அவைமுறை அறியாமல் தனது மதத்தால் வாய்வந்தன பேசுகின்ற அரக்கி மகனோடு எதிரொன்றும் கூறுதீர்," என்று ஆண்டு இருந்த அரசர்களுக்குச் சொன்னான், என்பதாம்.

கடோற்கசனது எதிர் உரை

**243.** **அந்தவுரை மீண்டிவன்கேட் டாங்கவனை**
**நகைத்துரைப்பா னரக்க ரேனும்**
**சிந்தனையில் விரகெண்ணார் செருமுகத்தில்**
**வஞ்சகமுஞ் செய்யா ரையா !**
**வெந்திறல்கூர் துணைவருக்கு விடமருத்தார்**
**நிரைக்கழுவில் வீழச்செய்யார்**
**உந்துபுன லிடைப்புதையா ரோரூரில்**
**இருப்பகற்று ருரையுந் தப்பார்.**

[அந்த உரை மீண்டு இவன் கேட்டு ஆங்கு அவனை நகைத்து உரைப்பான்; அரக்கர் ஏனும், சிந்தனையில் விரகு எண்ணார், செரு முகத்தில் வஞ்சகமும் செய்யார் ஐயா, வெம்திறல் கூர் துணை வருக்கு விடம் அருத்தார், நிரை கழுவில் வீழ செய்யார், உந்து புனலிடை புதையார், ஓர் ஊரில் இருப்பு அகற்றார், உரையும் தப்பார், —தொடரும்.]

**விளக்கம்:-** துரியோதனன் கூறிய உரை கேட்டு இவன் (கடோற்கசன்) அவனைப் பரிகசித்துக் கூறுவான். "ஐயா, நாங்கள் அரக்கரேனும் எனது இனத்தார், உங்களைப் போல் சகோதரர்களுக்கு வஞ்சனையை நினைக்க மாட்டார், போர்க் களத்தில் மோசம் செய்யார், விஷத்தை உண்ணுமாறு செய்ய மாட்டார், வரிசையாய் நாட்டிய கழுவினில் விழச் செய்யார், நீரில் தள்ள மாட்டார், ஓர் ஊரில் இருப்பதை விலக்கார், சொன்ன சொல்லையும் தவறார்,—" (தொடரும்), என்பதாம்.

**243.** **செழுந்தழல்வாழ் மனைக்கொளுவார் செய்நன்றி**
**கொன்றறியார் தீங்கு பூணார்**
**அழுந்துமனத் தழுக்குறா ரச்சமுமற்**
**றருளின்றிப் பொய்ச்சூ தாடார்**

கொழுந்தியரைத் துகிலுரியார் கொடுங்கான
மடைவித்துக் கொல்ல வெண்ணூர்
எழுந்தமரின் முதுகிடா ரிவையெல்லாம்
அடிகளுக்கே யேற்ப வென்றுன்.

[செழுந்தழல் வாழ் மனை கொளுவார், செய் நன்றி கொன்று அறியார், தீங்கு பூணார், அழுந்து மனத்து அழுக்குறுர், அச்சமும் அற்று அருள் இன்றி பொய் சூது ஆடார், கொழுந்தியரை துகில் உரியார், கொடுங்கானம் அடைவித்து கொல்ல எண்ணூர், எழுந்து அமரில் முதுகு இடார், இவை எல்லாம் அடிகளுக்கே ஏற்ப, என்றுன்.]

**விளக்கம்:-** (அரக்கரேயாயினும் என் வகுப்பார்) உடன் பிறந்தார் வாழும் மனையில் நெருப்பை வைக்க மாட்டார்கள்; செய்த நன்றியை மறத்தலை அறியார்; தங்கள் தாழ்மையுடைய மனத்திலே பொருமை கொள்ள மாட்டார்; அச்சமும் அருளும் இன்றிப் பொய்யான சூதாடி வெல்ல மாட்டார்; கொழுந்தியரின் சேலையை (மன்னவையிலே) அவிழ்க்க மாட்டார்; கொடிய காட்டை அடையச் செய்து, அங்கே (சகோதரர்களை) அழிக்க நினைக்க மாட்டார்; போரெழுந்து வந்து போர் செய்ய மாட்டாமல் புறங் கொடார்; இந்தப் பெருமைக் குணங்கள் எல்லாம் மானிட அடிகளாகிய உங்களுக்கே ஏற்றனவாகும்,—என்று கூறினுன், என்பதாம்.

**246.** தேனிடறிப் பாண்முரலுஞ் செழுந்தாம
விசயனுடன் செருவில் வந்தால்
மானிடரிற் பொரவல்லார் சிலருண்டோ
தெரியாது வானு ளோரில்
கோனிடையுற் றருகிருந்த திறல்வேந்தர்
காத்திடினுங் குறித்த வீரன்
தானிடருற் றுயிரழிகை தப்பாதென்
பதுமுரைத்துத் தனயன் மீண்டான்.

[தேன் இடறி பாண் முரலும் செழுந்தாமம் விசயனுடன் செருவில் வந்தால், மானிடரில் பொர வல்லார் சிலர் உண்டோ ! தெரியாது, வான் உளோரில்; கோன் இடை உற்று அருகு இருந்த திறல் வேந்தர் காத்திடினும், (விசயன் கொல்வதாகக்) குறித்த வீரன் தான் இடர்உற்று உயிர் அழிகை தப்பாது என்பதும் உரைத்து தனயன்) கடோற்கசன் [மீண்டான்.]

**விளக்கம் :-** தேன் - வண்டுகள். இடறி-நெருங்கி மொய்த்து. பாண் முரலும் - இசை எழுப்பும். விசயனோடு போர் செய்ய வல்லவர் மனிதரில் எவரும் இலர். தேவர்களுள் இருக்கின்றனரோ, என்பது தெரியாது; ஆகவே, சயத்திரதனை வலிமையுள்ள அரசர்கள் சூழ்ந்து நின்று காப்பினும், அவன் அழிதல் தவறாது, என்று கூறிக் கடோற்கசன், மீண்டான், என்பதாம்.

## கலி விருத்தம்

**246.** **அரக்கனப் பேரவை யகன்ற பின்பகை**
**துரக்கும்வெங் குனிசிலைத் துரோணன் தன்னொடும்**
**பரக்கும்வெண் டிரைக்கடற் பாரெ லாமுடன்**
**புரக்கநின் றவன்சில புகழ்ந்து கூறுவான்.**

[அரக்கன் அ பேர் அவை அகன்றபின், பகை துரக்கும் வெம் குனிசிலை துரோணன் தன்னொடும் பரக்கும் வெள் திரை கடல் பார் எலாம் உடன் புரக்க நின்றவன் சில புகழ்ந்து கூறுவான்.]

**விளக்கம் :-** பகை துரக்கும் சிலை - பகைவரை ஓடச்செய்யும் வில். பரக்கும் - பரந்து வியாபித்துள்ள. புரக்க நின்றவன் - (உலகம் முழுதையும்) ஆள எண்ணியிருக்கும் துரியோதனன். புகழ்ந்து கூறுவான் - புகழ்ச்சியாகச் சில கூறலுற்றான்.

## துரியோதனன் கூற்று

**247.** **கொடிநெடுஞ் சேனையைக் கூறு செய்துநீ**
**கடிகைமுப் பதுமுடன் காக்க வல்லையேல்**
**வடிவுடைச் சிந்துமா மகனு முய்குவன்**
**வெடியனற் குளிக்குவன் விசயன் றானுமே.**

**விளக்கம் :-** செய்யுள் சுலபமானது. பதப்பிரிவு தரவில்லை. கொடி நெடுஞ்சேனை - கொடிகளை உடைய பெரிய சேனை. கடிகை முப்பதும் உடன் – நாளை முப்பது நாழிகைப் பொழுது முழுவதும். வடிவுடை சிந்து மாமகன் - அழகிய சிந்து நாட்டின் சிறந்த அரசனான சயத்திரதன். நாளை ஒரு பகல் சயிந்தனை நீ காப்பாற்றினால், அவனும் உயிர் வாழ்வான், விசயனும் தீயில் விழுந்து மடிவான், என்று துரியோதனன், துரோணனிடம் கூறினான்; என்பதாம்.

248. நாளையோர் பகலுமே நமக்கு வெய்யபோர்
காளைய ரனைவருங் காமின் காமினென்(று)
ஆளையு மடுகளிற் ருழி மன்னவன்
வேளைபுக் கவரினும் வீழ்ந்து வேண்டினன்.

விளக்கம்:- ஆளையும் அடு களிறு - பாகனையும் சினந்து கொல்லும் யானை. ஆழி மன்னவன் - துரியோதனன். ஆபத்து வேளையில் சரணம் புகுந்தவர்களினும் அதிகமாக, எல்லோரையும் வணங்கி, (நாளை ஒரு பகல் சயிந்தனைக் காப்பாற்றி விட்டால் நமக்குப் பகை விலகும்) என்று வேண்டிக் கொண்டான், என்பது, ஈற்றடியின் பொருள். காமின் - காப்பாற்றுங்கள்.

துரோணன் கூற்று

249. மணிமதி லரணென மன்னு சேனையை
அணிபட நிறுத்தியா மளவுங் காப்பன்யான்
பணியுறு புண்ணிய பாவ முற்றுவ
துணிவுறத் தெரியுமோ தும்பை மாலையாய் !

[மணிமதில் அரண் என மன்னு சேனையை அணி பட நிறுத்தி ஆம் அளவும் காப்பன் யான்; பணி உறு புண்ணியம் பாவம் முற்றுவ, துணிவு உற தெரியுமோ, தும்பை மாலையாய்.]

விளக்கம்:- போருக்கு உரிய தும்பை மாலை அணிந்தவனே, என்று துரோணன் துரியோதனனை விளித்து, ''நிலையுடைய நமது படையை, அழகிய மதில் அரண்போல் அணி வகுத்து நிறுத்தி, என்னால் முடியும் அளவு யான் காப்பேன்; தம்மைச் செய்தல் உற்ற, பாவ புண்ணியங்கள் நிறைவுறும் விதம் நிச்சய மாக முன் கூட்டியே அறியப் படுமோ? அதாவது அவற்றின் முடிவை நாம் அறியோம், என்றபடி,—என்பது பொருள்.

பணி—பண்ணி. பணி உறு - செய்தல் பொருந்திய. 'என்னால் கூடிய அளவு சயிந்தனைக் காப்பேன்; விதியின் காரியம், எப்படி நிகழுமோ; அறியேன்,'' என் துரோணன் கூறினன், என்க.

250. முப்பது கடிகையின் மொழிந்த வஞ்சினம்
தப்பது படாதெனிற் றனஞ்ச யன்சிலைக்(கு)
ஒப்பதொன் றில்லைமற் றுரைத்த வாசெயல்
அப்பது மாசனன் றனக்கு மாகுமோ ?

[முப்பது கடிகையின் மொழிந்த வஞ்சினம் தப்பு அது படாது எனின், தனஞ்சயன் சிலைக்கு ஒப்பது ஒன்று இல்லை; மற்று, உரைத்த ஆ செயல் அ பதும ஆசனன் தனக்கும் ஆகுமோ ?]

**விளக்கம் :-** கடிகை - நாழிகை. தப்பு அது படாது எனில்- (விசயனது வஞ்சினம்) தவறுமல் நிறைவேறுமாயின். பதும ஆசனன் - பிரும்மா. ''சொல்லுதல் எளிது, சொன்னவாறு செய்தல் பிரும்மனுக்கும் முடியாது; நாளை விசயனது வஞ்சினம் நிறைவேறுமாயின், அவனுக்கு வில் தொழிலில் ஒப்பானவர் யாரும் இல்லை,'' என்று துரோணன் கூறினுன், என்பதாம்.

**251. மல்லினுன் மல்லரை மலைந்த மாலவன்**
**புல்லினு னென்னினுஞ் சிந்து பூபனை**
**வில்லினுல் வெல்லரி தென்று மீளவும்**
**சொல்லினுன் மறைமொழித் துரோணன் ருனுமே.**

[மல்லினுல் மல்லரை மலைந்த மால் அவன் புல்லினுன் என்னினும் சிந்து பூபனை, வில்லினுல் வெல் அரிது என்று மீளவும் சொல்லினுன் மறைமொழி துரோணன் தானுமே.]

**விளக்கம் :-** மல் - மல்யுத்தம். மல்லரை மலைந்த மால் - கம்சன் ஏவிய மற்போர் வீரரை அழித்த கண்ணன். புல்லினுன் எனினும் - எதிர்ப்பக்கத்தில் சேர்ந்துள்ளான் என்ருலும். வில்லினுல் வெல் அரிது - வில்தொழில் கொண்டு சயிந்தனை வெல்லுதல் அதாவது அழித்தல் முடியாததேயாகும். மறை மொழி துரோணன் - வேத வாக்கியங்களில் வல்லவனுன துரோணன். தான், உம், ஏ அசைகள். விதியின் முடிவை நான் அறியேன்; கண்ணனே எதிர்ப்புறம் இருந்தாலும், வில்லின் துணை கொண்டு சயிந்தனை அழித்தல் அரியதேயாகும், என்று அந்தணன் தைரியம் கூறினுன், என்க.

கர்ணன் கூற்று

**252. கோப்பல ருடன்பல கூற மற்றவர்**
**நாப்பல நவிலினு நாளை வான்பகல்**
**தாப்புலி நிகர்சயத் திரதன் தன்னுயிர்**
**காப்பல்யா னென்றனன் கதிரின் மைந்தனே.**

[கோ பலருடன் பல கூற, (மற்று) அவர் நா பல நவிலினும் நாளை வான் பகல், தா புலி நிகர் சயத்திரதன் தன் உயிர் காப்பல் யான், என்றனன் கதிரின் மைந்தன், ஏ.]

**விளக்கம் :-** கோ - துரியோதனன். பலருடன் கூற - பல அரசர்களுடன் சயத்திரதனைக் காக்கும்படி பல வார்த்தைகளைச் சொல்ல. தாபுலி - தாவுகின்ற புலி; அல்லது வலிய புலி. சயத்

திரதனை நாளை ஒரு பகல் காக்குமாறு துரியோதனன் பல அரசர்களிடம் பல கூற, அவர்கள் எதிர் உத்தரமாகப் பல கூறினும், கர்ணன், நாளைச் சயிந்தனைக் காப்பேன், என்றான், என்பதாம்.

### துன்மருடணன் கூறல்

**253.** **அன்மரு டிமிரமெய் தளவு நாளையின்**
**தென்மரு டெரியல்வேற் சிந்து மைந்தனைக்**
**கன்மரு டிகிரியிற் காப்பன் யானென்றான்**
**துன்மரு டணனெனுந் துணைவன் தானுமே.**

[அல் மருள் திமிரம் எய்து அளவு நாளையின், தென் மருள் தெரியல் வேல் சிந்து மைந்தனை, கல் மருள் திகிரியின் காப்பன் யான் என்றான், துன்மருடணன் எனும் துணைவன் தானும், ஏ.]

**விளக்கம் :-** அல் மருள் திமிரம் – இரவுக்குரிய மருட்சி தரக் கூடிய இருள். தென் - (தேன்) வண்டு. சிந்து மைந்தன் - சயத்திரதன். மருள் கல் திகிரியின் - (மருள் திகிரி கல்லின்) அஞ்சுதற்குரியதான சக்கரவாளகிரி. உலகத்தைச் சூழ்ந்து நிற்கும் சக்கரவாள கிரி போல், சயிந்தவனைச் சூழ்ந்து நின்று இருள் வரும் வரையில் நாளை நான் காப்பேன், என்று, துரியோதனனது தம்பியரில் ஒருவனான துன்மருடணன் (துர்மர்ஷணன்) என்பான், கூறினான், என்பதாம். தென் மருள் தெரியல் - வண்டு தேனைக் குடித்து மயங்குவதற்குக் காரணமான மாலை.

### அசுவத்தாமன் கூறல்

**254.** **விரற்புனை கோதைவல் வில்லின் வல்லவர்**
**குரற்படச் சேவகங் கூறு கிற்பரோ**
**உரற்புரை நீட்டடி யோடை யானையாய்**
**சரற்புய லானது தனிதஞ் செய்யுமோ.**

[விரல் புனை கோதை வல் வல்லின் வல்லவர் குரல்பட சேவகம் கூறுகிற்பரோ ! உரல்புரை நீடு அடி ஓடை யானையாய், சரத் புயல் ஆனது தனிதம் செய்யுமோ !]

**விளக்கம் :-** விரல் புனை கோதை வில் - விரலினால் தெறிக்கப் படுகின்ற நாண் கயிற்றை உடைய வில். குரல்பட-ஒலியுண்டாக, உரத்த குரலில். சேவகம் - ஆற்றல், வீரம். உரலை ஒத்த நீண்ட கால்களையும், நெற்றிப் பட்டத்தையும் உடைய யானை போன்ற துரியோதன என்பது மூன்றாவது அடியின் பொருள். சரத் புயல்- கூதிர்காலத்து மேகம். தனிதம் - (ஸ்தநிதம்) இடி. வில்வீரர்கள் தமது பராக்ரமத்தை வாயால் சொல்லிக் கொண்டு இருப்பரோ ?

துரியோதனனே, சரத்காலத்து மேகம் இடித்தலைச் செய்யுமோ? என்று அச்வத்தாமன், கூறினான், என்பதாம். ஐப்பசியும் கார்த்திகையும், கூதிர்காலம்.

இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணியின் பாற்படும். இதன் இலக்கணத்தை முன்னர் பலவிடங்களில் கூறியுள்ளோம்.

**255.** **பொருதொழில் விதம்படப் புரிந்த காலையில்**
**விருதர்க ளிருவரும் வேறல் கூடுமோ**
**ஒருதலை நின்றவ னுடற்றும் வின்மையும்**
**கருதலன் வின்மையுங் காண்டி காவலா!**

[பொருதொழில் விதம்பட புரிந்த காலையில், விருதர்கள் இருவரும் வேறல் கூடுமோ! ஒருதலை நின்றவன் உடற்றும் வின்மையும் கருதலன் வின்மையும் காண்டி (நாளை) காவலா.]

**விளக்கம் :-** காவலா, என்று துரியோதனனை விளித்து, போரை ஒழுங்காகச் செய்யுங்கால், வீரர் இருவரும் வெல்லுதல் கூடுமோ? ஒரு பக்கத்தில் நின்ற சயத்திரதன் போர் செய்யும் வில் தொழில் திறமையையும், அவனுக்குப் பகைவனான விசயன் வில் தொழில் திறமையையும், (நாளை நீ) காண்பாய்,-என்று தொடர்ந்து அச்வத்தாமன் கூறினான், என்பதாம்.

''போர் செய்வோருள் இருவர் வெல்வதற்கில்லை. (ஒருவர் வெல்லுதலும் மற்றவர் மடிதலுமே நேரக்கூடியது.) அதை, நாளைக் காணலாம்'' என்று அசுவத்தாமன் கூறினான், என்க. விதம்பட- ஒழுங்காக, முறையே. வேறல் - வெல்லுதல். உடற்றல் - போர் செய்தல். கருதலன் - பகைவன்.

**256.** **என்றுசே னாபதி மகனி யம்பினான்**
**நின்றகா வலர்களு நிசைபு லர்ந்துழிச்**
**சென்றுபோர் புரிந்துநின் றெவ்வர் யாரையும்**
**வென்றுமீ ளுதுமென விடைகொண் டாரரோ.**

**விளக்கம்:**—சேனாபதி மகன்—துரோண புத்திரன், நிசை புலர்ந்துழி—இரவு கடந்ததும். அசுவத்தாமன் இவ்வாறு கூற, அங்கே அயல் நின்ற அரசர்கள், நாளை உதயம் (களம் சென்று) பகைவென்று திரும்புவோம், என்று கூறித் துரியோதனனிடம் விடைகொண்டு தத்தம் இருக்கை சேர்ந்தனர்,—என்பதாம்.

## சூர்யோதயம்

**257.** **பூதனை முலைநுகர் பூந்து ழாய்முடி**
**நாதனும் விசயனு நலத்தொ டேவிய**
**தூதனு மருக்கனுந் துயிலு ணர்த்தினர்**
**சேதனர் புகழ்மொழித் திகிரி வேந்தையே.**

**விளக்கம்:**—பூதனை ... நாதன் — கண்ணன், நலத்தோடு ஏவிய தூதன் - நல்ல எண்ணத்தோடு தருமன் செலுத்திய தூதனை கடோற்கசன், அருக்கன்—சூரியன், சேதனர்....வேந்து - அறிவுடையோர் புகழும் சொற்களையுடைய ஆஜ்ஞா சக்கரத்தையுடைய தருமன். கயிலை சென்ற கிருஷ்ணார்ச்சுனர்களும், துரியோதனனிடம் தூது சென்ற கடோற்கசனும் வர, சூரியன்உதித்தான்; தருமனும் கண் விழித்தான், என்பதாம்.

**258.** **கயிலைபுக் கதுமரன் கணையுஞ் சாபமும்**
**வியன்மலர்ப் பொய்கையும் விசயற் கீந்ததும்**
**புயலெனக் கரியமெய்ப் பூந்து ழாயவன்**
**துயிலுணர் குரிசிலுக் கடைவிற் சொன்னபின்.**

**விளக்கம்:**-புயல் என கரிய பூந்துழாயவன் — கண்ணன், துயில் உணர் குரிசில்—தருமன். கயிலை சேர்ந்ததையும், சிவபெருமான் வில்லையும் அம்புகளையும், (அவற்றைத் தன்னிடத்தே கொண்ட பெரியமலர்களை உடைய பொய்கையையும் விசயனுக்கு ஈந்ததையும் கண்ணன் முறையே தருமனுக்குச் சொன்னபின்,— (அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்), என்பதாம்.

**259.** **பைதிகழ் மணிப்பணி பதாகை யானிடை**
**எய்தியங் குரைத்தது மிகுந்த மன்னவர்**
**வெய்துறப் புகன்றது மீண்டு வந்ததும்**
**கொய்தொடை கடோற்கசன் ருனுங் கூறினன்.**

**விளக்கம்:**- பை திகழ்மணி பணி - படத்தில் விளங்குகின்ற மாணிக்கத்தை உடைய பாம்பு, அதைக் கொடியிலே கொண்ட துரியோதனனிடம் சென்று தான் கூறியதையும், அங்கே இருந்த மன்னர் கொடுமையோடு பதில் மொழிந்ததையும், தூது சென்ற கடோற்கசன், மீண்டுவந்து தருமனிடம் கூறினன், என்பதாம். பதாகை—பெரிய துவசம்.

பதின்மூன்றும் போர்ச்சருக்கம் முற்றும்

# பதினான்காம் போர்ச் சருக்கம்

## கடவுள் வணக்கம்

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

1. அரியதண் கலைவாண் மதியமுங் கொதிகொ
ளாலமுந் தனதிடத் தடக்கி
உரியவொண் கங்கா நதிக்கொரு பதியாய்
உரைபெறு முயர்மகோ ததியில்
பரியதிண் சிலையோ டம்பெலா முகந்து
பற்குனப் பொருப்பிடைப் பொழியும்
கரியபைம் புயலைக் கைதொழு மவரே
கருவிலே திருவுடை யவரே.

[அரிய தண் கலை வாள் மதியமும் கொதி கொள் ஆலமும் தனது இடத்து அடக்கி, உரிய ஒள் கங்கா நதிக்கு ஒரு பதிஆய் உரை பெறும் உயர் மகோததியில் பரிய திண் சிலையொடு அம்பு எலாம் முகந்து பற்குனன் பொருப்பிடை பொழியும் கரிய பைம் புயலை கைதொழு மவரே கருவிலே திரு உடையவர், ஏ.]

**விளக்கம்:-** (எவர்க்கும்) அரிய தண்ணிய கலை நிறைந்த ஒளியுடைய சந்திரனையும், கொடிய தன்மையதான விஷத்தையும் தன்னிடத்தே வைத்துக் கொண்டு, தனக்கு உரியதான கங்கைக்கு ஒரு இடமாய், புகழ் பெற்ற சிறந்த (சிவபெருமானாகிய) பெரிய கடலில் இருந்து, பெரிய வலிய சிலையோடு அம்பு எலாம் முகந்து, பற்குனன் என்ற மலையினிடத்தே பொழிந்த கரிய தண்ணிய புயல் போன்ற கண்ணனைக் கை கூப்பி வணங்கும் மேலோரே, கருவில் பல திருவுடையவர் ஆவர், - என்று புலவர் கூறினர், என்பதாம்.

விசயனது சபதம் நிறைவேற வேண்டிக் கண்ணபிரான், அவனைக் கயிலைக்கு அழைத்துச் சென்று வில்லும் அம்பும் சிவபிரானிடமிருந்து பெறச் செய்தான்; அந்தக் கண்ணனது கல்யாண குணத்தில் ஈடுபட்ட புலவர், அச்செய்தியைக் கடவுள் வாழ்த்தாகக் கூறினர், என்க.

கருப்பத்தில் இருக்கும் போதே இறைவனது திருவருள் பெற்றுப் பிறந்தபின் பரமனடியாராய் வாழும் மேன்மக்கள் கருவிலே திருவுடையவர் ஆவர்.

## தருமன் முதலியோர் களம் செல்லல்

**2. காலையா தபனைத் தருமன்மா மதலை**
**கைதொழு கடன்முடித் தருளிச்**
**சாலையார் தழல்செய் வேள்வியந் தணர்க்குத்**
**தானமுந் தகுவன வழங்கி**
**மாலையா மளவிற் றனஞ்சயன் மொழிந்த**
**வஞ்சினம் வழுவற முடிப்பான்**
**வேலையா ரரவப் பலபணை முழங்க**
**வெம்முரட் சேனையோ டெழுந்தான்.**

[காலை ஆதபனை தருமன் மாமதலை கைதொழு கடன் முடித்தருளி, சாலை ஆர்தழல் செய்வேள்வி அந்தணர்க்கு தானமும் தகுவன வழங்கி, மாலை ஆம் அளவில் தனஞ்சயன் மொழிந்த வஞ்சினம் வழு அற முடிப்பான், வேலை ஆர் அரவம் பல பணை முழங்க, வெம் முரண் சேனையோடு எழுந்தான்.]

**விளக்கம் :-** காலை ஆதபன் - உதயகால சூரியன். சாலை - யாகசாலை. தகுவன தானம் - தக்கனவான தானப்பொருள்கள். மாலை ஆம் அளவில் - மாலைப்பொழுது வருதற்குள். வழு அற - தவறாமல். கடல் ஓசையை ஒத்த ஒலியை உடைய பல வாத்தியங்கள் மிக முழங்கக் கொடிய வலிய சேனையோடு (தருமன்) போர்க்களம் செல்லப் புறப்பட்டான்,—என்பது நாலாவது அடியின் பொருள். அரவம் - ஒலி.

தருமன் காலைக் கடன்களை முடித்து, அந்தணர்களுக்குத் தானம் செய்துவிட்டு, விசயனது சபதத்தை நிறைவேற்றி வைக்கும் பொருட்டுப் போர்க்களம் புறப்பட்டான், என்பதாம்.

**3. அடைந்தவ ரிடுக்க ணகற்றுதற் கெண்ணி**
**யாடகப் பொருப்பினாற் கடலைக்**
**கடைந்தமு தளித்த கருணையங் கடலே**
**கடும்பரி சந்தனங் கடவ**
**மிடைந்தொளி யுமிழும் வேற்படை தடக்கை**
**வீமனு மிளைஞரும் பலரும்**
**குடைந்திரு புறனுங் கைவர மகவான்**
**குமரனு மமர்க்களங் குறுக.**

[அடைந்தவர் இடுக்கண் அகற்றுதற்கு எண்ணி ஆடகம் பொருப்பினால் கடலை கடைந்து அமுது அளித்த கருணை அம் கடலே, பரி சந்தனம் (தேர்) கடவ, மிடைந்து ஒளி உமிழும்

வேல் படை தட கை வீமனும் இளைஞரும் பலரும் குடைந்து இரு புறனும் கைவர மகவான் குமரனும் அமர்க்களம் குறுக,-தொடரும்.]

**விளக்கம் :-** அடைந்தவர்-தன்னைச் சரணமடைந்த தேவர். ஆடகம் பொருப்பு - பொன்மயமான மந்தரமலை. கருணை அம்கடல் கண்ணன். சந்தனம் - தேர். மிடைந்து - அடர்ந்து, மிகுதியாக. குடைந்து இரு புறனும் கைவர - நெருங்கு இரு புறமும் ஒழுங்காக வர. கண்ணன் தேர் நடத்த, வீமனும், நகுலசகதேவரும் மற்றுள பல அரசர்களும் இரு புறத்திலும் நெருங்கிவர விசயன் போர்க் களம் குறுக —, (அடுத்த கவியோடு முடியும்)—என்பதாம்.

**4. சோனையம் புயலிற் கணைதொடும் பதாதி**
**துரகதந் துரகதத் தடந்தேர்**
**யானையென் றுரைக்கு நால்வகை யுறுப்பும்**
**இராசமண் டலமுக மாகத்**
**தானையங் கடலை மிடலுற வகுத்துத்**
**தான்முதற் பேரணி யாகச்**
**சேனையின் பதியா மைத்துன னின்றான்**
**தேவரும் யாவரும் வியப்ப.**

[சோனை அம்புயலின் கணை தொடும் பதாதி, துரகதம், துரகதம் தடந்தேர், யானை என்று உரைக்கும் நால்வகை உறுப்பும் இராச மண்டலம் முகம் ஆக; தானை அம் கடலை மிடல் உற வகுத்து, தான் முதல் பேர் அணி ஆக சேனையின் பதி ஆம் மைத்துனன் நின்றான். தேவரும் யாவரும வியப்ப.]

**விளக்கம்** – பாண்டவ சேனையின் தலைவனான மைத்துனன் (திட்டத்துய்மன்), பெருமழை பொழியும் மேகம்போல் அம்புகளைப் பொழிய வல்ல காலாள்களும், குதிரை, தேர், யானைகளும் ஆகிய நால்வகைப் படைகளும் அவயவங்களாகவும், இராச மண்டலம் (அரசர் கூட்டம்) முகமாகவும் அமையும்படி, தனது சேனைக் கடலை, தேவரும் மற்றுமுள்ள யாவரும் வியக்கும்படி அணி வகுத்து, அவ்வணி வகுப்பின் முன்னிடத்தில் ஒரு பெரிய அலங்காரமாக, நின்றான், என்பதாம். மனைவியின் சகோதரன், மைத்துனன்.

துரோணன் அணி வகுத்தல்

**5. பாப்புவெம் பதாகைப் பார்த்திவன் பணியாற்**
**பத்திரண் டியோசனைப் பரப்பில்**
**தீப்புறஞ் சூழ நடுவணிற் பதுபோற்**
**செயத்திர தனையிடை நிறுவிக்**

**கோப்புறப் பரிதேர் குஞ்சரம் பதாதி**
**கூறுநூன் முறையணி நிறுத்திக்**
**காப்புறத் திசைக ளெட்டினு நெருங்கக்**
**காவலர் யாரையு நிறுத்தி.**

[பாப்பு வெம் பதாகை பார்த்திவன் பணியால் பத்து இரண்டு யோசனை பரப்பில் தீ புறம் சூழ நடுவண் நிற்பது போல், செயத்திரதனை இடை நிறுவி, கோப்பு உற பரி, தேர், குஞ்சரம், பதாதி, கூறும் நூல் முறை அணி நிறுத்தி, காப்பு உற திசைகள் எட்டினும் நெருங்க காவலர் யாரையும் நிறுத்தி, — குளகமாய்த் தொடரும்.]

**விளக்கம்:**—பாப்பு—பாம்பு. பதாகை—கொடி. கோப்பு உற—இடைவெளியிலாது அமையும்படி. துரியோதனன் ஏவலின்படி, இருபது யோசனை வித்தாரம் உள்ள இடத்திலே, நாற்புறமும் தீ சூழ்ந்திருக்க அதன் நடுவிலே நிற்பது போல், செயத்திரதனை சேனையின் மத்தியில் நிற்கச் செய்து, இடைவெளி யில்லாமல் அமையும்படி நால்வகைச் சேனைகளையும் போர் நூல் முறையின் படி அணி வகுத்து நிற்கச் செய்து, காவலாக அமையும்படி எட்டுத்திக்குகளிலும் அரசர்கள் பலரையும் நெருக்கமாக (துரோணன்) நிறுத்தி, —(அடுத்த செய்யுளோடு தொடரும்) - என்பதாம்.

6. **தூசியின் முதனுள் வஞ்சின மொழிந்த**
**துன்மரு டணன்றனை நிறுத்தி**
**ஊசியு நுழையா வண்ணம்விற் பதாதி**
**வயவரை யுரனுற நிறுத்தி**
**வாசியி லிபத்திற் றேரிலேண் பட்ட**
**மன்னரை யிருகையு நிறுத்திப்**
**பேசிய கன்னன் சகுனிசல் லியரைப்**
**பேரணி யாகவே நிறுத்தி.**

[தூசியில் முதல் நாள் வஞ்சினம் மொழிந்த துன்மருடணன் தனை நிறுத்தி, ஊசியும் நுழையா வண்ணம் வில், பதாதி வயவரை உரன் உற நிறுத்தி, வாசியில் இபத்தில் தேரில் (அமர்ந்துள்ள) ஏண் பட்ட (வலிமை பொருந்திய) அரசர்களை இரண்டு பக்கத்திலும் நிறுத்தி, பேசிய கன்னன், சகுனி சல்லியரை பேர் அணி ஆகவே நிறுத்தி, - தொடரும்.]

**விளக்கம்:**- தூசி - முன்னணிப் படை. துன்மருடணன் - துர்மர்ஷணன் என்ற துரியோதனன் தம்பி. வில் பதாதி வயவர் - வின்மையில் வல்லவர்களான காலாள் வீரர். வாசி - குதிரை.

இபம்-யானை. ஏண்-வலிமை. பேசிய கன்னன்-சயத்திரதனைக் காப்பேன் என்று வீரம் பேசிய கர்ணன். பேர் அணி - பெரிய காப்புச் சேனை.

முந்திய தினம் (சயத்திரதனைக் காப்பதாக) வீரம் பேசிய துன்மருடணனைத் தூசியில் நிறுத்தி, ஊசியும்நுழைய முடியாதபடி காலாள் வீரரை வலிமை பொருந்திய காப்பாக நிறுத்தி, குதிரை, யானை, தேர் வீரர்களை இரு புறமும் நிறுத்தி, கர்ணன் சகுனி முதலியோரை பெரிய காப்பு அணியாக நிறுத்தி, (தொடரும்) - என்பதாம்.

**7. அணிகளைந் தைந்தா லைவகை வியூக**
**மாகிய சேனையின் சிரத்து**
**மணிமுடி புனைந்து வைத்தென வலங்கல்**
**வலம்புரி மார்பனை நிறுத்திப்**
**பணிவுறு மவுணர் பதாகினி வகுத்த**
**பார்க்கவ னிவனெனப் பயில்போர்த்**
**துணிவுடன் பஃறேர் சூழ்வரச் சகட**
**துண்டத்து நின்றனன் றுரோணன்.**

[அணிகள் ஐந்து ஐந்தால் ஐவகை வியூகம் ஆகிய சேனையின் சிரத்து, மணிமுடி புனைந்து வைத்து என அலங்கல் வலம்புரி மார்பனை நிறுத்தி, பணிவு உறும் அவுணர் பதாகினி வகுத்த பார்க்கவன் இவன் என, பயில் போர் துணிவுடன் பல் தேர் சூழ் வர சகடதுண்டத்து நின்றனன் துரோணன்.]

**விளக்கம்:-** ஐந்து ஐந்தாய்த் தனித்தனி வகுக்கப்பட்ட சேனையின் தலைப்புறத்தில் மணிமுடியை அலங்கரித்து வைத்தாற் போல், நஞ்சாவட்டை மாலை தரித்த துரியோதனனை நிறுத்தி, தன்னை வணங்குதலைச் செய்யும் அசுர சேனையை அணி வகுத்த பார்க்கவன் (சுக்கிரன்) இவன் என்று சொல்லும்படி, இடையறாது போர் செய்யும் உறுதி கொண்டு, பல தேர்கள் தன்னைச் சூழ்ந்து வர, சகட துண்டத்தின் முன் புறத்தில் துரோணன் நின்றான், என்பதாம்.

சகட துண்டம்—சகட வியூகம். பார்க்கவன்-அசுர குருவான சுக்கிரன். நால்வகையான சேனைகளையும் வண்டி போன்ற தோற்றம் அமையும்படி வகுத்தல், சகட வியூகம்.

**8. மந்தண மிருந்து கங்குலின் முதனாள்**
**மன்னனோ டியம்பிய வகையே**
**அந்தண னணிந்த விரகினை விமானத்**
**தமரரு மதிசயித் துரைத்தார்**

**சந்தணி கடக வாகுநீள் சிகரச்**
**செயத்திர தனையொரு பகலிற்**
**கொந்தழ லுரோடத் தனஞ்சயன் பொருது**
**கோறலோ வரிதெனக் குறித்தே.**

[மந்தணம் இருந்து கங்குலின் முதல் நாள் மன்னனேடு இயம்பிய வகையே, அந்தணன் அணிந்த விரகினை விமானத்து அமரரும் அதிசயித்து உரைத்தார்; சந்து அணி கடகம் வாகு நீள் சிகரம் செயத்திரதனை ஒரு பகலில் கொந்தழல் உரோடம் தனஞ்சயன் பொருது கோறலோ அரிது என குறித்தே.]

**விளக்கம் :-** மந்தணம் - மந்திராலோசனை; அது இலக்கணையாய், ஆலோசனை செய்யும் சபையைக் குறித்தது. விரகு - வியூகம் வகுத்த சாமர்த்தியம், அல்லது திறமை. சந்தணி கடகம் நீள்சிகரம் வாகு சயத்திரதன் - சந்தனம் பூசி, கடகம் அணிந்து, நீண்ட மலையின் சிகரம் போன்ற தோள்களை உடைய சயத்திரதன். கொந்தழல் - தீத்திரள்; முறுகிய பெருந்தீ. உரோடம் - கடுஞ்சினம். அந்தணன் அணிவகுத்த திறமையைக் கண்டு தேவர்களும், சயத்திரதனை விசயன் ஒரு பகலில் அழித்தல் அரியதே என்று அதிசயித்துத் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள், என்பதாம்.

## விசயன் போர் தொடங்கல்

**9. செய்த்தலைக் கயலும் வாளையும் பிணங்குஞ்**
**செழும்புனற் சிந்துநாட் டரசைக்**
**கைத்தலத் தடங்கும் பொருளெனக் காத்துக்**
**காவலர் நின்றபே ரணிகண்(டு)**
**உத்தமோ சாவு முதாமனு முதலோ**
**ரோரிரு புறத்தினுஞ் சூழ**
**வித்தக வலவன் முன்செலத் தடந்தேர்**
**விசயனவ் வினைஞர்மே னடந்தான்.**

[செய்த்தலை கயலும் வாளையும் பிணங்கும் செழும் புனல் சிந்து நாடு அரசை கை தலத்து அடங்கும் பொருள் என காத்து, காவலர் நின்ற பேர் அணி கண்டு, உத்தமோசாவும் உதாமனும் முதலோர் ஓர் இரு புறத்தினும் சூழ, வித்தகம் வலவன் முன் செல, தடந்தேர் விசயன் வினைஞர் மேல் நடந்தான்.]

**விளக்கம் :-** செய்த்தலை - கழனிகளில். முதலடி, சிந்து நாட்டு நீர்வளச் சிறப்பின் வருணனை. சிறிய கயல் மீன்கள் தங்குதற்குரிய

வயல்களில், நீரின் மிகுதி காரணமாகப் பெரிய வாளை மீன்கள் வந்து, கயல் மீன்களோடு இகலும் சிந்து நாடு புரக்கும் சயத்திரதன், என்பது முதலடியின் பொருள். கைத்தலம் அடங்கிய சிறு பொருளை எவ்வளவு பத்திரமாகக் காக்கக் கூடுமோ அவ்வளவு பத்திரமாக அரசர்கள் சைந்தவனைக் காத்து நின்ற அணி வகுப்பைக் கண்டு, விசயன், உத்தமோசா, உதாமன் முதலியோர் இரு புறமும் வர, கண்ணன் முன்னே செல்ல எதிரிகளின் மேல் போர் செய்யச் சென்றான்,—என்பதாம். கண்ணனுக்குப் பரதந்திரனாக அமைந்து விசயன் போர் செய்தலின், ''வித்தகவலவன் முன் செல'' என்றார். அதாவது, யார் மீது கண்ணன் தேரைச் செலுத்துகின்றானோ, அவர் மீது விசயன் போர் செல்தான், என்றபடி.

**10. போர்முகத் தடங்கா மடங்கலே றனையான்**
**விதம்படப் பொழிசிலீ முகங்கள்**
**கார்முகத் தெழுந்த தாரைபோல் வழங்கக்**
**கார்முகத் தொலியினுற் கலங்கித்**
**தார்முகத் தரசன் றம்பியோ டணிந்த**
**சாதுரங் கமுமுட னுடைந்து**
**நீர்முகத் துடைந்த குரம்பெனத் துரோணன்**
**நின்றுழிச் சென்றடைந் தனவே.**

[போர் முகத்து அடங்கா மடங்கல் ஏறு அனையான் விதம் பட பொழி சிலீமுகங்கள் கார் முகத்து எழுந்த தாரைபோல் வழங்க, கார் முகத்து ஒலியினுல் கலங்கி, தார்முகத்து அரசன் தம்பியோடு அணிந்த சாதுரங்கமும் உடன் உடைந்து நீர் முகத்து உடைந்த குரம்பு என, துரோணன் நின்றுழி சென்று அடைந்தன, ஏ.]

**விளக்கம்:**—போர்முகத்து...அனையான் - விசயன், விதம்பட- பலவிதமாக. கார்முகம் - (தொடர் மொழி) மேகத்தினிடம்; (தனி மொழி) வில். தார்முகம் — முன்னணிச் சேனையினிடம். அரசன் தம்பி - துச்சாதனன். சதுரங்கம் - ரத கஜ துரக பதாதி என்ற சதுரங்கசேனை. குரம்பு - கரை. விசயன் மழைபோல் சிலீமுகங்களை (அம்புகளை) வர்ஷிக்க, துச்சாதனனோடு அணிவகுத்து நின்ற முன்னணிப்படை விசயனது வில்லின் ஒலிக்கே கலங்கி, நீர்ப் பெருக்கின் முன் உடையும் கழனியின் கரைபோல் உடைந்து, துரோணனிடம் போய்ச் சேர்ந்தன, என்பதாம்.

**11. புரவிமுப் பதின யிரங்கொடு முனைந்து**
**பொருதிறற் கிருதவன் மாவும்**
**கரவிறற் கரிநூ றுயிரங் கொண்டு**
**காதுதுச் சாதனன் றனும்**

**இரவியைக் கண்ட மின்மினிக் குலம்போ**
**லீடழிந் திடவுடன் றெங்கும்**
**சரவிதப் படையால் விண்டலந் தூர்த்துத்**
**தானைகா வலன்முனை சார்ந்தான்.**

[புரவி முப்பதினுயிரம் கொடு முனைந்து பொருதிறல் கிருதவன்மாவும், கரம் விறல் கரி நூறு ஆயிரம் கொண்டு காது துச்சாதனன தானும், இரவியை கண்ட மின் மினி குலம்போல் ஈடு அழிந்திட உடன்று எங்கும் சரம் விதம் படையால் விண் தலம் தூர்த்து, தானை காவலன் முனை சார்ந்தான்.]

**விளக்கம்** :—முப்பதினுயிரம் குதிரைகளைக் கொண்டு போர் செய்த திறல் உடைய கிருதவன்மாவும், துதிக்கையின் வலிமையுடைய ஒரு லட்சம் யானைகளைக் கொண்டு எதிர்த்துப் போர் செய்த துச்சாதனனும், சூரியனைக் கண்ட மின்மினிப் பூச்சிகளின் கூட்டம்போல் வலிமை அழியும்படி விசயன் எல்லாவிடத்திலும் போர் செய்து, பலவிதப்பட்ட அம்புகளால் ஆகாயத்தை நிறைத்துக் கொண்டு, சேனை காவலனுன துரோணன் இருக்குமிடம் சேர்ந்தான், என்பது பொருள். ஈடு—வலிமை, விதம் சரம் படை-பலவிதமான அம்புகளாகிய ஆயுதங்கள்.

வேறு

துரோணனும் விசயனும் பொரல்

**12. சென்ற விற்ற னஞ்ச யற்கு முனைகு லைந்த சேனைவாய்**
**நின்ற வத்து ரோண னுக்கு நீடு போர்வி ளைந்ததால்**
**ஒன்றொ டொன்று துரக தங்க ளுருமின் விஞ்சி யதிர்வுறக்**
**குன்று குன்றொ டுற்றெ னக்கொ டிக்கொ டேர்கு லுங்கவே.**

[சென்ற வில் தனஞ்சயற்கும் முனை குலைந்த சேனைவாய் நின்ற துரோணனுக்கும் நீடு போர் விளைந்தது (ஆல்), ஒன்றொடு ஒன்று துரகதங்கள் உருமின் விஞ்சி அதிர்வுற, குன்று குன்றொடு உற்று என கொடி கொள் தேர் குலுங்க, ஏ.]

**விளக்கம்:-** (பகைவர் வலி ஒடுங்குமாறு செய்து கொண்டு) சென்ற வில் விசயனுக்கும், சேனையின் முன்புறம் கலகலத்த சேனையினிடத்தே நின்ற அந்த துரோணனுக்கும், குதிரைகள் இடியோசை போல் ஒன்றைக் காட்டிலும் ஒன்று மிகுதியாகக் கனைக்கவும், குன்று ஒன்ருேடொன்று நெருங்கினுற்போல் கொடிகளைக் கொண்டு இருவர் தேர்களும் அமைவுறவும், நீண்ட போர்

விளைந்தது, என்பது பொருள். சிலைக் குருவும் சீடனும் சலியாது நீண்ட நேரம் கடும்போர் புரிந்தனர், என்க.

**13. முட்டி யாலு நிலையி னாலு மொய்ம்பி னாலு முரணுறத்**
**தொட்ட வில்லு நிமிர்வ றத்தொ டுத்த வின்மை யாலுமுன்**
**கிட்டி யாசி ரீய னுங்கி ரீடியும் பொரப் பொரப்**
**பட்ட வில்லை யிருவர் மேலும் விட்ட விட்ட பகழியே.**

[முட்டியாலும் நிலையினாலும் மொய்ம்பினாலும் முரண் உற தொட்ட வில்லும் நிமிர்வு அற தொடுத்த வின்மையாலும், முன் கிட்டி ஆசிரீயனும் கிரீடியும் பொர பொர, பட்ட இல்லை இருவர் மேலும் விட்ட விட்ட பகழியே.]

**விளக்கம்:-** ஆசிரியனும் கிரீடியும் முன் கிட்டி, முட்டி யாலும்....வின்மையாலும், பொர பொர, விட்ட விட்ட பகழி (ஏ) இருவர் மேலும் பட்ட இல்லை, என்பது அன்வயம். முட்டி - வில்லைக் கையினால் பற்றும் முறை. நிலை - வில் தொழில் செய்கையில் நிற்பதற்குரிய நிலை. கிரீடி - விசயன். பொரப்பொர - தொடர்ந்து போர் செய்ய. விட்ட விட்ட பகழி - (ஒருவர்மேல் ஒருவர்) மிகுதி யாகச் செலுத்திய கணைகள்.

துரோணனும் விசயனும் செய்த கடும் போரில், இருவரும் பொழிந்த அம்புகள் இருவர் மேலும் படவில்லை; அதாவது இடையிலே கணைகள் ஒன்றோடொன்று மோதித் தரையில் வீழ்ந்தன, என்பதாம்.

**14. தேரி ரண்டு மிடம்வ லந்தி ரிந்து சூழ வரமுனைந்(து)**
**ஓரி ரண்டு தனுவும் வாளி யோரோர் கோடி உதையவே**
**காரி ரண் டெதிர்ந்து தம்மின் மலைவு றுங்க ணக்கெனப்**
**போரி ரண்டு வீர ருக்கு மொத்து நின்ற பொழுதிலே.**

[தேர் இரண்டும் இடம் வலம் திரிந்து சூழவர, முனைந்து ஓர் இரண்டு தனுவும் வாளி ஓர் ஓர் கோடி உதையவே, கார் இரண்டு எதிர்ந்து தம்மில் மலைவுறும் கணக்கு என, போர் இரண்டு வீரருக்கும் ஒத்து நின்ற பொழுதிலே, - குளகமாய்த் தொடரும்.]

**விளக்கம்:-** (இருவரது) தேர்கள் இரண்டும் இடம் வலமாகச் சாரி திரிந்து சுற்றிவர, (இருவரது) ஒப்பற்ற இரண்டு விற்களும் கோடிக் கணக்கில் அம்புகளைச் செலுத்தவும், இரண்டு மேகங்கள் தம்மில் போர் செய்யும் விதம் போல, இரண்டு வீரருக்கும் போர் ஏற்றத்தாழ்வு இல்லாமல் ஒத்து நின்ற பொழுதில்,—(அடுத்த கவி யோடு முடியும்) என்பது பொருள். இரண்டாவது அடி **இல்பொருள் உவமை.**

## கண்ணன் வியூகத்தினுள் புகல்

**15. இகல்செய் வெஞ்சி லைக்கை வீர விந்நி லந்த னக்குநின்**
**பகைவ னின்ற வந்நி லம்ப திற்றி ரண்டி யோசனை**
**புகலு கின்ற பொழுது சென்ற தென்ற வட்பொ ருமன்மால்**
**உகளு கின்ற பரிகொ டேரை யுள்ளு றச்செ லுத்தினன்.**

[இகல் செய் வெம் சிலை கை வீர, இ நிலம் தனக்கு நின் பகைவன் நின்ற அ நிலம் பதிற்றிரண்டு யோசனை; புகலுகின்ற பொழுது சென்றது, என்று அவண் பொருமல், மால் உகளுகின்ற பரி கொள் தேரை உள் உற செலுத்தினன்.)

**விளக்கம் :-** கண்ணன், விசயனை நோக்கி, ''உன் பகைவனை சயத்திரதன் இருக்கின்ற இடம், நாம் நிற்கும் இந்த இடத்திற்கு இருபது யோசனை தூரத்தில் உள்ளது; பொழுதோ கழிந்து விட்டது'', என்று சொல்லி, அங்கே துரோணனோடு போர் செய்து காலதாமதம் செய்தலைப் பொருமல், தேரை வியூகத்தினுள்ளே செலுத்தினன், என்பதாம்.

இகல் செய் வெஞ்சிலை வீரன் - துரோணனோடு கொடிய போரைச் செய்யும் விசயன். புகலுகின்ற பொழுது - கணக்கிட்டுச் சொல்லும்பொழுது. உகளுகின்ற பரி கொள் தேர் - உருளுகின்ற குதிரைகள் பூட்டப் பெற்ற தேர். துரோணனோடு போர் செய்தலினின்று விலகி, மால் (கண்ணன்) தேரை வியூகத்தினுள்ளே செலுத்தினன், என்க.

**16. எதிர்த்த தேர்வி ழித்தி மைக்கு மளவின் மாய மிதுவெனக்**
**கதித்து ரங்க விசையி னேடு கண்க ரந்து கழிதலும்**
**அதிர்த்த டர்ந்து பின்தொ டர்ந்த டுத்த போத ருச்சுனன்**
**கொதித்து வந்த குருவொ டம்ம திருகி நின்று கூறுவான்.**

[எதிர்த்த தேர் விழித்து இமைக்கும் அளவில் மாயம் இது என, கதி துரங்கம் விசையினேடு கண் கரந்து கழிதலும், அதிர்த்து அடர்ந்து பின் தொடர்ந்து அடுத்தபோது, அருச்சுனன் கொதித்து வந்த குருவொடு) அம்ம, திருகி நின்று கூறுவான்.]

**விளக்கம்:-** எதிர்த்த தேர் - எதிரிலே இருந்த விசயனது தேர். கதி துரங்கம் விசையினேடு - நடைவேகமுடைய குதிரைகளின் வேகமுடைய கதியால். கண் கரந்து கழிதல் - கண்ணுக்கு எட்டாத தூரம் செல்லல். அதிர்ந்து அடர்ந்து - வீர முழக்கம் செய்து கொண்டு நெருங்கி. அடுத்த போது - சமீபித்த அளவில். திருகி நின்று - திரும்பி நின்று, அதாவது, தன்னைத் தொடர்ந்து

வரும் துரோணனை நோக்கி நின்று. எதிரே நின்ற தேர் கண்ணுக்கு எட்டாத தூரம் ''மாயம் இது'', என்று சொல்லும்படி இமைப் பொழுதில் சென்று மறையவும், மனக் கொதிப்புக் கொண்ட துரோணன், விசயனை விடாது பின் தொடர்ந்து நெருங்கவும், அவன், தனது வில்லாசிரியனை நோக்கிச் சில கூறுவானாயினான், என்பதாம்.

தன்னைத் தொடர்ந்து வரும் குருவினிடம் விசயன் பணிவுடைய சொற்களைக் கூறுகின்றானாதலால், **திருகி**, என்பதற்குச் **சினந்து**, என்று பொருள் கொள்ளல் அமையாது.

**17. ஐய நின்னொ டமரி ழைத்த லமர ருக்கு மரிது நின்**
**செய்ய பங்க யப்ப தங்கள் சென்னி வைத்த சிறுவன்யான்**
**வெய்ய வென்சொல் வழுவு ருமை வேண்டு மென்ன முறுவலித்(து)**
**எய்ய வந்த முனிவு மாறி யேகு கென்றி யம்பினான்.**

[ஐய, நின்னொடு அமர் இழைத்தல் அமரருக்கும் அரிது, நின் செய்ய பங்கயம் பதங்கள் சென்னி வைத்த சிறுவன் யான்; வெய்ய என் சொல் வழுவுருமை வேண்டும் என்ன, (துரோணனும்) முறுவலித்து, எய்ய வந்த முனிவு மாறி 'ஏகுக', என்று இயம்பினான்.]

**விளக்கம்:-** செய்யுள் சுலபமானதே. ''ஐயனே, உன் திருவடி போற்றி வாழும் சிறுவன் நான்; எனது வஞ்சினம் தவருமல் நிறைவேற வேண்டும்,'' என்று விசயன், விநயமொழி கூற, முனிவனும் சீற்றந் தணிந்து, முறுவலித்தவனாய், அவனைப் போக விட்டான், - என்பதாம்.

**18. ஈச னல்வ ரங்கள் பெற்ற விந்தி ரன்ம தலை காம்**
**போச னாதி யெண்ணின் மன்னர் பொருத ழிந்து வெருவியுள்**
**கூச நாலு பாலு நின்ற நின்ற சேனை கொன்று போய்ப்**
**பாச நாம வணியி னின்ற வீரரோடு பற்றினான்.**

[ஈசனால் வரங்கள் பெற்ற இந்திரன் மதலை, காம்போசன் ஆதி எண் இல் மன்னர் பொருது, அழிந்து வெருவி, உள் கூச, நாலு பாலும் நின்ற நின்ற சேனை கொன்று போய், பாசம் நாமம் அணியின் நின்ற வீரரோடு பற்றினான்.

**விளக்கம்:-** சிவபெருமானால் வரங்கள் அருளப் பெற்ற விசயன், காம்போச நாட்டு மன்னன் முதலான எண்ணிக்கை

அற்ற அரசர்களோடு போர் செய்து அவர் வலி ஒடுங்கி, அஞ்சி உள்ளம் நடுங்கச் செய்து, நாலு பக்கங்களிலும் மிகுதியாக நின்ற சேனைகளை அழித்துக் கொண்டே, பாசம், என்ற பெயருடைய உள் அணியைக் காத்து நின்ற வீரர்களோடு போர் செய்தான்,— என்பதாம்.

பாசம்—ஊசியின் துவாரம், கயிறு. ஊசியின் துவாரம், என்றது இலக்கணையால் ஊசியைக் குறித்து நின்றது. ஊசி போன்ற உருவத்தில் அமைக்கும் உள்ளணி, பாசவியூகம் ஆகின்றது. கர்ணன், துரியோதனன், கிருதவர்மன் என்பவர் இந்த வியூகத்தைக் காத்து நின்றனர்.

கர்ணனோடு விசயன் பொரல்

**19.** **முன்னர் முன்னர் வந்து வந்து முனைக டோறு முந்துறும்**
**மன்னர் தந்தம் வில்லும் வேலும் வாளும் வென்றி**
**வாளியில்**
**சின்ன பின்ன மாக வெய்து செல்லு மத்த னஞ்சயன்**
**கன்ன னின்ற வுறுதி கண்டு கண்ண னோடு முரை**
**செய்தான்.**

[முன்னர் முன்னர் வந்து வந்து முனைகள் தோறும் மன்னர் தம் தம் வில்லும் வேலும் வாளும், வென்றி வாளியில் சின்ன பின்னம் ஆக எய்து, செல்லும் அ தனஞ்சயன், கன்னன் நின்ற உறுதி கண்டு கண்ணனோடும் உரை செய்தான்.]

**விளக்கம் :**—போர் முனைகள் தோறும் ஒருவர்முன் ஒருவராக முற்பட்டு வந்து போர் செய்யும் மன்னர்களின் வில்லும் வேலும் வாளும் துண்டுபடும்படி தனது வெற்றிக் கணைகளைச் செலுத்திக் கொண்டு செல்லும் விசயன், (அங்கே) கர்ணன் பெருமிதத்தோடு நிற்கின்ற வலிய நிலைகண்டு, (அது பொருமல்) கண்ணனிடம் கூறுவானாயினன்.— என்பதாம். அவன் கூறியதை அடுத்த செய்யுள் கூறும்.

**20.** **விலங்கி நம்மை யமர்தி ளைக்க விடதன் விற்சு தக்கணன்**
**அலங்கல் வேல வந்தி மன்ன னவன்பு தல்வ னுதிமா**
**வலங்கொள் வாகை வீரர் சேனை வளைய நின்ற**
**கன்னனைக்**
**கலங்கு மாறு பொருது போக வேண்டு மென்று கருதியே.**

[விலங்கி நம்மை அமர்திளைக்க விடதன், வில் சுதக்கணன், அலங்கல் வேல் அவந்தி மன்னன், அவன் புதல்வன் ஆதி மா

வலம் கொள் வாகை வீரர் சேனை வளைய நின்ற கன்னனை கலங்கும் ஆறு பொருது போக வேண்டும் என்று கருதியே,—விசயன் கருத்தைக் கண்ணனிடம் தெரிவித்தான்]

**விளக்கம் :-** விலங்கி - குறுக்கிட்டு, தடுத்து. அமர் திளைக்க- கடும்போர் செய்ய. விடதன் - ஓர் அரசன். வில் சுதக்கணன் - வில்போரில் வல்லவனான சுதட்சிணன் என்ற அரசன். வலம் கொள் வாகைவீரர்-வலிமை கொண்ட வெற்றியை உடைய வீரர். (அவர்கள் தங்கள் சேனைகளோடு) வளைய நின்ற கன்னன் - தன்னைச் சூழ (அங்கே போர் செய்யுங் கருத்தில்) நின்ற கர்ணன். மேலே செல்லாமல் தடுத்து நிறுத்திப் போர் செய்யும் எண்ணத்தில் வீரர்களான அரசர்களின் துணையோடு நிற்கும் கர்ணனை நிலை குலையச் செய்து, அப்பாற் செல்ல வேண்டும் என்ற தனது எண்ணத்தைக் கண்ணனிடம் கூறினான், என்பதாம். முந்திய செய்யுளிலுள்ள, "கண்ணனோடும் உரை செய்தான், என்பதை இதனுடன் கொண்டு கூட்டுக.

**21. ஒக்கு மென்று செங்கண் மாலு முளவு**
**கோல்கொ டிவுளியைப்**
**பக்க நின்ற பானு மைந்தன் முனையு றப்ப யிற்றலும்**
**மிக்க வெம்ப தாதி யோடு சூழ நின்ற விருதரும்**
**தொக்கு வந்து விசயன் மீது சுடுச ரந்தொ டுக்கவே.**

[ஒக்கும் என்று செங்கண்மாலும் உளவுகோல் கொடு இவுளியை பக்கம் நின்ற பானு மைந்தன் முனை உற பயிற்றலும், மிக்க வெம்பதாதியோடு சூழ நின்ற விருதரும் தொக்கு வந்து விசயன் மீது சுடுசரம் தொடுக்கவே,—குளகமாய்த் தொடரும்.]

**விளக்கம் :-** ஒக்கும் - (அங்கீகாரச் செயல்) அமையும். உளவுகோல்—குதிரையைத் தூண்டும் கோல். இவுளி-குதிரை, அருகிலே நின்ற சூர்ய புத்திரனான கர்ணன் முன் நெருங்கும்படி குதிரைகளைச் செலுத்திய அளவில், என்பது இரண்டாவது அடியின் பொருள். கண்ணன் அருகில் நெருங்கியதும், காலாள் படையோடு கர்ணனைச் சுற்றி நின்ற விருதர்கள் (வீரர்கள்) ஒன்றுபட்டு வந்து விசயன் மேல் சரங்களைச் செலுத்தவே, (அடுத்த கவியோடு குளகமாய்த் தொடர்ந்து முடியும்)—என்பதாம்.

இது முதல் பதின்மூன்று செய்யுள்களில் அந்தாதித் தொடை, அமைந்திருத்தல் காண்க.

**22. சரந்தொ டுத்த வயவ ரைச்ச ரத்தி னிற்ற னித்தனி**
**உரங்கு ளிக்க வாகு வீழ வுதர மூழ்க வொளிமுடிச்**

**சிரங்க ளற்று மறிய வென்பு சிந்த வாய்க டுளேபடக்
கரந்து டிக்க விருப தங்க டறிய வேக லக்கினுன்.**

[சரம் தொடுத்த வயவரை சரத்தினில் தனிதனி உரம் குளிக்க, வாகு வீழ, உதரம் மூழ்க, ஒளி முடி சிரங்கள் அற்று மறிய, என்பு சிந்த, வாய்கள் துளேபட, கரம் துடிக்க, இரு பதங்கள் தறியவே கலக்கினுன்.]

**விளக்கம்:** தன்மேல் சரங்களேச் செலுத்திய வீரர்களே,—(அவர்களது) உரத்தில் (மார்பில்) அம்புகள் பதியவும், தோள்கள் அறுபட்டு விழவும், உதரத்தில் (வயிற்றில்) அம்புகள் அழுந்தவும், ஒளி விளக்கமுடைய கிரீடத்தோடு கூடிய தலேகள் அறுபட்டு விழவும், எலும்புகள் தூள்பட்டுச் சிதறவும், வாய்கள் துளே படவும், (விசயன்) தனது கணேகளால் தனித்தனி கலங்கச் செய்தான்,—என்பது பொருள்.

**சரந்தொடுக்க,** என்ற முந்திய செய்யுளின் ஈற்றுத்தொடர், இந்தச் செய்யுளின் ஆதியாய் நிற்றல், காண்க.

23. **கலக்க முற்று வில்லி ழந்து கவன மாவி ழந்துமேல்
இலக்க மற்ற களிறி ழந்து கொடிகொ டேரி ழந்துபோய்
உலக்க விட்ட ளக்கர் வாயு லம்ப வோடு கலமெனத்
துலக்க மிக்கு வருதல் கண்டு சுரரு நின்று துதிசெய்தார்.**

[கலக்கம் உற்று, வில் இழந்து, கவனம் மா இழந்து, மேல் இலக்கம் அற்ற களிறு இழந்து, கொடி கொள் தேர் இழந்து, (தோற்றுப்) போய், உலக்க விட்டு, அளக்கர் வாய் உலம்ப, ஓடு கலம் என, துலக்கம் மிக்கு வருதல் கண்டு சுரரும் நின்று துதி செய்தார்.]

**விளக்கம்:-** கவனம் மா - கதிவேகமுடைய குதிரை. உலக்க விட்டு - அழியும்படி செய்துவிட்டு. அளக்கர் - கடல். உலம்ப ஓடு கலம் - ஒலியோடு விரைந்து செல்லும் கப்பல். துலக்கம் - விளக்கம். தனது பகைவர்களே அழியும்படி செய்துவிட்டு மிகுந்த விளக்கத்தோடு விசயன் தேரில் விரைந்து வருதலேக் கண்டு, தேவர்களும் அவனேப் போற்றினுர்கள், என்பதாம்.

தேவரும் துதித்தனர், என்றதால், தேவர் அல்லாத பிறரும் துதித்தனர், என்க. பரந்த கடலினிடத்தே தடையின்றிக் கப்பல் செல்வது போல், வியூகத்தினிடத்தே இருந்த சேனுசமுத்திரத்தினிடையே, வெற்றியின் விளக்கத்தோடு, விசயன் சென்றுன், என்க. மரக்கலத்துக்கு, 'உலம்ப ஓடு' என்ற அடை, விசயன்

வெற்றி முழக்கம் செய்து கொண்டு சென்றான், என்பதைக் குறிக்கும்.

**24.** **துதியி னாலு யர்ந்த வண்மை யுடைய பானு சூனுவும்**
**கதியி னாலு யர்ந்த மாவொ டொத்த தேர்க டாவினான்**
**மதியி னாலு யர்ந்த கொற்ற வலவ னுந்து தேருடன்**
**விதியி னாலு யர்ந்த சாப வெஞ்ச மந்தொ டங்கினார்.**

[துதியினால் உயர்ந்த வண்மை உடைய பானு சூனுவும், கதியினால் உயர்ந்த மா வொடு ஒத்த தேர்கடாவினான், மதியினால் உயர்ந்த கொற்றம் வலவன் உந்து தேருடன் விதியினால் உயர்ந்த சாபம் வெம் சமம் தொடங்கினார்.]

**விளக்கம் :—** புகழினால் பெருமையுற்ற ஈகைக் குணத்தை யுடைய சூர்ய புத்திரனான கர்ணன், கதிவேகத்தால் சிறந்த குதிரைகளோடு கூடிய தனது தேரை, மெய்யறிவினால் சிறந்த வெற்றியை உடைய சாரதியான கண்ணன் நடத்துகின்ற தேருடன் நெருங்கும்படி செலுத்தினான்; (அதன்பின் இருவரும்) தநுர் நூலின் விதிகளின்படி சிறந்த வில்லைக் கோண்டு கொடிய போர் செய்ய ஆரம்பித்தனர், —என்பது பொருள். பானு சூனு—சூர்ய குமாரன் ; கர்ணன்.

**25.** **தொடங்கு போரில் வலியி னாலு மதனி னுந்து லங்குமெய்**
**விடங்கி னாலும் வின்மை யாலு முவமை தம்மில் வேறிலார்**
**விடங்கொள் வாளி மின்ப ரப்பி வெய்ய நாணி டிக்கவே**
**மடங்கல் போலி ரண்டு வில்லு மண்ட லம்ப டுத்தினார்.**

[தொடங்கு போரில் வலியினாலும், அதனினும் துலங்கு மெய் விடங்கினாலும், வன்மையாலும் உவமை தம்மில் வேறு இலார், விடம் கொள் வாளி மின் பரப்பி வெய்ய நாண் இடிக்கவே, மடங்கல் போல் இரண்டு வில்லும் மண்டலம் படுத்தினர்].

**விளக்கம் :-**மடங்கல்-யுகாந்த காலம், அது கால ஆகு பெயராய், அந்த யுகாந்த காலத்து மேகத்தை உணர்த்தி நின்றது. மண்டலம் படுத்தல் - (வில்லை) வட்டமாக நன்றாக வளைத்தல். தேக பலத்தினாலும் அதனைக் காட்டிலும் சிறந்து விளங்குகின்ற யாக்கை அழகினாலும், வில் தொழிலில் வல்லமையாலும், தங்களுக்கு நேர் வேறு இல்லாதவரான கர்ணனும் விசயனும், செய்யத் தொடங்கிய போரிலே, விஷத்தை ஒத்த கொடிய அம்புகள் மின்னலைப் பரப்பி, வில்லின் நாண் இடியோசை உண்டாக்க, யுகாந்த காலத்து மேகங்களைப்போல (இருவரும்) இரண்டு

விற்களையும் நன்றாக வளைத்தனர், என்பது பொருள். விடங்கம் - அழகு, இளமை, ஆண்மை.

மேகம் மின்னலைப் பரப்பியும், இடித்தும், வானவில் இட்டு நிற்பது போல், வீரர் இருவரும் வில்லை வளைத்து, நாணொலி எழுப்பி, அம்புகளை எங்கும் பரவச் செய்தனர், என்பதாம். மூன்றாவது அடியின் உருவகம், நான்காவது அடியின் உவமைக்கு அங்கமாதல் காண்க.

26. மண்ட லம்ப டுத்த வில்லின் வலிகொள் கூர வாளியால்
விண்ட லம்பு தைந்து தங்கண் மெய்ப டாமல் விலகினார்
குண்ட லங்கள் வெயிலு மூரல் குளிர்நி லாவும் வீசவே
மண்ட லம்பு காம னேர்வ யங்கு வாண்மு கத்தினர்.

[மண்டலம் படுத்த வில்லின் வலி கொள் கூர வாளியால், விண்தலம் புதைந்து தங்கள் மெய் படாமல் விலகினார், குண்டலங்கள் வெயிலும், மூரல் குளிர் நிலாவும், வீசவே, மண்டல் அம்பு காமன் நேர் வயங்குவாள் முகத்தினர்.]

**விளக்கம்** :-கடை அடிகளை முதலிலே வைத்துப் படித்தால், செய்யுளின் அன்வயம். குண்டலங்கள் வெயிலையும், பற்கள், அல்லது இளமுறுவல் குளிர்ந்த நிலவுபோன்ற ஒளியையும் வெளிப்படுத்த, மிகுதியாகத் தைத்து வருத்தும் மலர்க்கணைகளை உடைய மன்மதனுக்கு ஒப்பாக விளங்கும் ஒளி விசேஷமுடைய முகங்களையுடைய கர்ண அர்ச்சுனர்கள், நன்றாக வளைத்த விற்களைக் கொண்டு செலுத்திய வலிய அம்புகளினால் விண்ணை மறையும்படி செய்து, தம் மேல் படாமல் அம்புகளைத் தடுத்தனர்,—என்பதாம். குண்டலம்=காதணி, இருவரும் பகை அம்புக்கு இலக்காகாதபடி நின்று கடும்போர் செய்தனர், என்க. மூன்றாவது அடி 'வெயில், நிலா,' முரண் தொடை. புதைந்து—புதைத்து) எச்சத்திரிபு.

27. முகத்தி னின்ற கன்ன னேடு முடிம கீப ரோடு நின்(று)
இகற்செய் கின்ற கடிகை யோரி ரண்டு சென்ற
தென்றுளம்
மிகக்க னன்று தேரும் வில்லு மெய்ய ணிந்த கவசமும்
தகர்த்து மார்பின் மூழ்க வாளி யேவி னன்ற னஞ்சயன்.

[முகத்தில் நின்ற கன்னனோடும் முடி மகீபரோடும் நின்று இகல் செய்கின்ற கடிகை ஓர் இரண்டு சென்றது என்று உளம் மிக கனன்று, தேரும் வில்லும் மெய் அணிந்த கவசமும் தகர்த்து மார்பில் மூழ்க வாளி ஏவினன் தனஞ்சயன்.]

**விளக்கம்:-** பகைப் படையின் முன்னணியில் கர்ணனோடும், அவனுக்குத் துணை நின்ற அரசர்களோடும் எதிர்த்துப் போர் செய்கின்றதால் நாழிகை இரண்டு கழிந்தன என்று, மனம் அழன்று, விசயன், தேரும் வில்லும், மெய்யணிந்த கவசமும் அழியும்படியும், மார்பில் புதையும்படியும் அம்புகளைச் செலுத்தினன், என்பதாம்.

''சூரியன் விழுமுன் சபதம் நிறைவேறுகை நிகழவேண்டுமே என்ற கவலையால், கர்ணனோடு செய்யும் போரில் நாழிகழிவதைக் கண்டு மனக் கொதிப்புக் கொண்டவனாய் அம்புகளை உக்ரமாய்ப் பிரயோகித்து, பகைவருக்குப் பலவகையான அழிவு உண்டாகும்படி செய்தான்,'' என்க.

## கர்ணன் தோற்க சுதாயு முன்வரல்

**28\. தனஞ்ச யன்கை யம்பி னொந்து தபனன் மைந்தன் மோகியா**
**மனந்த ளர்ந்தி ளைத்த பின்னர் வருண ராசன் மாமகன்**
**கனன்றெ ழுந்து சேனை யோடு வந்து கார்மு கங்குனித்(து)**
**இனங்கொள் வாளி யேவி னனெதிர்ந் தபோரி லீறிலான்.**

[தனஞ்சயன் கை அம்பின் நொந்து தபனன் மைந்தன் மோகியா, மனம் தளர்ந்து இளைத்த பின்னர், வருண ராசன் மா மகன் கனன்று எழுந்து சேனையோடு வந்து, கார்முகம் குனித்து இனங்கொள் வாளி ஏவினன், எதிர்ந்த போரில் ஈறு இலான்.]

**விளக்கம்:-** தபனன் மைந்தன் - கர்ணன். மோகியா - மோகித்து, மயங்கி. வருணராசன் மா மகன் - வருணனது மகனான சிறந்த சுதாயு., எதிர்ந்த போரில் ஈறு இலான் - எதிர்ப்பட்டுச் செய்யும் போரில் சாகாமையாகிய வரம் பெற்ற சுதாயு என்பவன். கர்ணன் போரில் தளர்ச்சியுற்ற பொழுது, போரில் சாகா வரம் பெற்ற வருண குமாரன் விசயன் முன் வந்து அம்புகளைத் தொடுத்தான்,—என்பதாம்.

வருணராசன்-ஜலத்தின் அரசனான வருணன். வருணனுக்கு பன்னவாதை என்பாளிடம் தோன்றியவன், சுதாயு, என்று முதல் நூல் கூறும்.

**29\. ஈறி லாத வீரன் வந்தெ திர்த்த காலை வீரரின்**
**மாறி லாத விசயன் விட்ட மறைகொள் வாளி யாவையும்**
**சேறி லாத செறுவில் வித்து செந்நெ லென்ன வவனுடல்**
**பேறி லாமன் முனையு றப்பி ளந்து கீழ்வி ழுந்தவே.**

ஈறு இலாத வீரன் வந்து எதிர்த்த காலை வீரரில் மாறு இலாத விசயன் விட்ட மறை கொள் வாளி யாவையும், சேறு இலாத செறுவில் வித்து செந்நெல் என்ன, அவன் உடல் பேறு இலாமல் முனை உற பிளந்து கீழ் விழுந்த, ஏ.]

**விளக்கம்:-** ஈறு இலாத வீரன் - யுதாயு. வீரரில் மாறு இலாத விசயன் - வீரரில் தன்னை ஒப்பார் வேறு இலாத விசயன். மறை கொள் வாளி - மந்திர பலத்தைக் கொண்ட சிறந்த அம்புகள். சேறு இலாத செருவில் செந்நெல்வித்து என்ன - சேறு இலாத வயலில் விதைத்த செந்நெல் விதைகள் போல, அதாவது, பயன்படாது போவதுபோல். அவன் உடல் பேறு இலாமல் - சுதாயுவின் உடலில் பாய்ந்து தைக்கும் பாக்யம் இல்லாமல். முனை உற பிளந்து - அம்பின் முனை (அவன் உடலிற் பட்டதும்) முற்றிலும் ஒடிபட்டு. விசயன் ஏவிய அம்புகள் எல்லாம் சுதாயுவின் மேல் படவும் முனை ஒடிந்து கீழே விழுந்தன,— என்பதாம்.

செந்நெல், என்பது ஒருவகை நெல். நீர் வளமுடைய இடத்தில் செழித்து வளரும் தன்மையது. வளமில்லாத பூமியில் அந்நெல்லின் விதை வீணுதல் விசயனது அம்புகள் சுதாயுவின் உடலினுள் புகுதாமல், வீண் பட்டதற்கு உவமை ஆகின்றது.

**30. விழுந்த வாளி கண்டு பின்னும் விசயன் மூரிவிற்குனித்(து)**
**அழுந்த வாளி யொன்று பத்து நூறு வன்பொ டடைசினுன்**
**எழுந்த வாளி வாளி யால்வி லக்க வேவி யாசுகம்**
**கழுந்த தாக வவனெ டுத்த கார்முகங் கலக்கினுன்.**

[விழுந்த வாளி கண்டு பின்னும் விசயன் மூரி வில் குனித்து அழுந்த வாளி ஒன்று பத்து நூறு வன்பொடு அடைசினுன்; எழுந்த வாளி வாளியால் விலக்க ஏவி, ஆசுகம் கழுந்து அது ஆக அவன் எடுத்த கார்முகம் கலக்கினுன்.]

**விளக்கம்:**—தனது அம்புகள் பயனற்று வீழ்தலைக்கண்ட விசயன் ஆயிரக்கணக்கான அம்புகளை விசயன் அவன்மேல் வலிமையோடு பிரயோகித்தான்; அவற்றைச் சுதாயு எதிரான அம்புகளால் விலக்கவே, (சினங்கொண்ட விசயன்) சில அம்புகளை ஏவி, வயிரம் பாய்ந்ததாகவுள்ள சுதாயு பற்றிய அந்த வலிய வில்லை அறுத்தான், என்பதாம். அடைசினுன் — பிரயோகித்தான். கழுந்தது ஆக—வயிரம் பாய்ந்ததாகவுள்ள. கலக்கினுன் - அழித்தான், பயனற்றதாகச் செய்தான்.

## சுதாயு மாய்தல்

31. முகங்க லங்க மெய்க லங்க முடிக லங்க மூரிமார்(பு)
அகங்க லங்க மற்றொர் தண்ட ருச்சு னன்றன் மேல்விட
நகங்க லங்க வுருமின் வந்த வதனை யும்பர் நாயகன்
சகங்க லங்க வேற்ற னன்ற னுது மெய்யி னுகவே.

[முகம் கலங்க, மெய் கலங்க, முடிகலங்க, மூரி மார்பு அகம் கலங்க, (மற்று) ஒர் தண்டு அருச்சுனன் தன்மேல் விட, நகம் கலங்க உருமின் வந்த அதனையும் உம்பர் நாயகன் நகம் கலங்க ஏற்றனன் தனுது மெய்யின் ஆக, ஏ.]

**விளக்கம் :-**(தனது வில் அழிந்தபின் சுதாயு) விசயனது முகம் உடல், தலை, வலிய மார்பகம் கலங்கும்படி, ஓர் ஒப்பற்ற கதையை விசயன்மேல் விட, மலை கலங்கும்படி, (சிதையும்படி) இடியென வந்த அந்த கதையை, உம்பர் நாயகனுன கண்ணன், உலகம் கலங்கி நடுங்க தனது உடம்பில் ஏற்றுக்கொண்டான், என்பதாம், நகம்—மலை. மார்பகம் — மார்பின் இடம்.

இறைவனுன கண்ணனுக்கு என்ன தீங்கு நேருமோ! என்று உலகம் கலங்கியது, என்க. பிரேமை நிலையில் பெரியாழ்வார் போல், இறைவனுக்குத் தீங்கு நேருமோ, என்று அஞ்சல் அமை யும்.

32. ஆக வத்தில் விசய னுய்ய வையன் மெய்யி லறையுமுன்
மோக ரித்தெ றிந்த தெவ்வன் முடிது ளங்கி மண்மிசைச்
சோக மிக்கு விழுதல் கண்டு தூர காரி யாதலான்
மாக முற்ற வமரர் செம்பொன் மழைபொ ழிந்து
வாழ்த்தினர்.

[ஆகவத்தில் விசயன் உய்ய, ஐயன் மெய்யில் அறையுமுன், மோகரித்து எறிந்த தெவ்வன் முடி துளங்கி மண் மிசை சோகம் மிக்கு விழுதல் கண்டு, தூரகாரி ஆதலால், மாகம் உற்ற, அமரர் செம்பொன் மழைபொழிந்து வாழ்த்தினர்.]

**விளக்கம் : —**ஐயன் தூரகாரி ஆதலால், ஆகவத்தில் விசயன் ... ... விழுதல் கண்டு, மாகம் உற்ற அமரர் — பொழிந்து வாழ்த்தினர், என்பது அன்வயம். ஐயன்—கண்ணன். தூரகாரி - தீர்க்கதரிசி ; வருவது அறிந்து தொழில் செய்பவன். மெய் அறையு முன் - உடலில் தாக்குமுன், அதாவது (பகைவனது தண்டு) தனது உடலில் தாக்குமாறு செய்து கொண்டவுடன். முடி துளங்கி - தலை சாய்ந்து, சதாயு ஏவிய தண்டைக் கண்ணன்

தன் மார்பில் ஏற்றுக் கொண்டதும், அவன் உயிர் நீங்கத் தரையில் விழுந்தான் என்பதாம்.

தவருது தொழில் செய்யும் தண்டைப் பெற்ற காலத்தில் அது நிராயுதன் மேல் பட்டால், அதை ஏவியவன் அழிதலுறுவான், என்பது, அவன் பெற்ற வரம். நிராயுதனுன கண்ணன் அதை ஏற்றுக்கொள்ளவே, சுதாயு இறக்கலானுன். அடியவனுன விசயனைக் காக்கும் பொருட்டு அக் கதையைத் தன் மார்பில் ஏற்ற கண்ணனின் கருணைத் திறத்தைக் கொண்டாடித் தேவர்கள் பொன்மயமான கற்பக மலர்களைப் பொழிந்தனர், என்க.

ஐயன் மெய்யில் அறையுமுன் சுதாயு அழிந்தான், என்று, காரணத்தின் முன் காரியம் நிகழ்ந்ததாகக் கூறியது, மிகையுயர்வு நவிற்சியின் பாற்படும்.

**33.** **வாழி வாழி குந்தி மைந்தன் வலவன் வாழி வாழியே**
**வாழி வாழி யவனி யுய்ய வந்த நாதன் வாழியே**
**வாழி வாழி காள மேக வண்ணன் வாழி வாழியே**
**வாழி வாழி வாசு தேவன் வாழி வாழி வாழியே.**

**விளக்கம்:-** விசயன் உய்யுமாறு சுதையைத் தன் மெய் ஏற்றுதவிய கண்ணன் மேல் செம் பொன் மலர் மாரி பொழிந்த தேவர்கள், அவனுக்கு வரம்பு கடந்த மகிழ்ச்சியால் வாழ்த்தொலி, எடுத்தனர், என்பதாம்.

கண்ணன் சுதாயு வரலாறு கூறல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**35.** **பன்ன வாதையென் றெருத்திதாய் தந்தையும்**
**படுதிரைப் பரவைக்கு**
**மன்ன வன்றரப் பெற்றனன் பலபடை**
**மறையொடும் வலிகூரத்**
**துன்னு நாமமுஞ் சுதாயுமற் றெருவரால்**
**தோற்றுயி ரழிவில்லான்**
**முன்னி ராயுதன் மிசையிவன் படையுறின்**
**முடிவுறும் வரம்பெற்றுன்.**

[பன்னவாதை என்று ஒருத்தி தாய்; தந்தையும் படுதிரைப் பரவைக்கு மன்; அவன்தர பெற்றனன் பல படை மறையோடும், வலி கூர; துன்னு நாமமும் சுதாயு, மற்று ஒருவரால் தோற்று உயிர் அழிவு இல்லான், முன் நிராயுதன் மிசை இவன் படை உறின் முடிவு உறும் வரம் பெற்றுன்.]

**விளக்கம்:-** பன்னவாதை, அல்லது பர்ணாசி, என்னும் மகாநதி அவன் தாய். படுதிரை பரவை - மிகுதியான அலைகளை உடைய கடல். (அதற்கு) மன் - மன்னனான வருணன். தந்தை யான வருணன், சுதாயுவுக்கு மந்திரங்களோடு பல ஆயுதங் களையும், உடல் வலியின் மிகுதியையும் அளித்துள்ளான். மற்று ஒருவராலும் தோற்றலும் இறத்தலும் இல்லாதவன். ஆனால், நிராயுதன் மேல் ஆயுதம் பிரயோகிக்கப்படின், அவ்வாயுதமே அவனுக்கு எமனாகும், என்ற வரத்தினன்.

**36. எறிந்த வெங்கதை கொன்றிடும் படைக்கல**
**னெடுத்தவ ருடற்பட்டால்**
**அறிந்து நானிடை யேற்றலி னவனுயிர்**
**அழிந்ததென் றருள்செய்தான்**
**பிறிந்த யோனிக ளனைத்துமாய் முதலுமாய்ப்**
**பெருமித மனத்தோடு**
**செறிந்த வர்க்கொரு சகாயனா யருந்துயர்**
**தீர்த்திடுந் தேர்ப்பாகன்.**

[எறிந்த வெம் கதை கொன்றிடும் படைக்கலன் எடுத்தவர் உடல் பட்டால், அறிந்து நான் இடை ஏற்றலின் அவன் உயிர் அழிந்தது, என்று அருள் செய்தான்; பிறிந்த யோனிகள் அனைத்தும் ஆய், முதலும் ஆய் பெருமிதம் மனத்தோடு செறிந்த வர்க்கு ஒரு சகாயன் ஆய் அருந்துயர் தீர்த்திடும் தேர் பாகன்.]

**விளக்கம்:-** பலவிதப் பிரிவுகளை உடைய பிறப்பின் வகை களைக் கொண்ட சராசரங்கள் எல்லாவற்றின் வடிவாய், அவற்றின் மூலகாரணமுமாய், பெருந்தன்மை உடைய மனத்துடனே தன்னைச் செறிந்தவர்க்கு (சரணமாக அடைந்தவர்க்கு) ஒரு சிறந்த துணைவனாய் (அமைந்து) அவரது அரிய துயரை ஒழித்தருளும் சாரதியான கண்ணன்,-- "(சுதாயு) ஏவிய கதை, படை யேந்தியவர்மேல் பட்டால், அவரை அழித்துவிடும்; அதை அறிந்து நான் அதை இடை ஏற்றுக் கொண்டதால், அவன் அழிந்தான்," என்று கூறியருளினான், என்பதாம்.

சராசரப் பொருள்களும், அவற்றின் மூல காரணமுமான அரிய வித்தகன், பாண்டவ சகாயனாய், பார்த்தனது சாரதியாய், அமைந்த சௌலப்பியம் என்ற பண்பினைப் புலவர் வியக்கும் கருத்தினில் **தேர்ப்பாகன்,** என்றார், என்க.

சுதாயுவின் மகன் சதாயு அழிதல்

**37. கதாயு தந்தனக் குரியநா யகன்மிசை**
**கதைபடச் சிதைவுற்றுச்**
**சுதாயு வென்பவன் பலபெரும் படையுடன்**
**றுறக்கமெய் தியபின்னர்ச்**
**சதாயு வென்றவ னிளவன்மற் றவனினுஞ்**
**சமர்புரிந் தவன்றானும்**
**கெதாயு வாயினன் கிரீடியோ டெதிர்த்தவர்**
**யாவரே கெடாதுய்வார்?**

[கதாயுதந்தனக்கு உரிய நாயகன் மிசை கதை சிதைவு உற்று, சுதாயு என்பவன் பல பெரும் படையுடன் துறக்கம் எய்திய பின்னர், சதாயு என்ற அவன் இளவல் அவனினும் சமர் புரிந்து, அவன் தானும் கெத ஆயு ஆயினன்; கிரீடியோடு எதிர்த்தவர் யாவரே கெடாது உய்வார் ?]

**விளக்கம்:-** கதை எனும் ஆயுதத்திற்கு நாயகனை கண்ணன் மேல் கதை படலும் அழிதலை அடைந்து, பல சேனை வீரர்களுடன் வீர சுவர்க்கம் சென்ற சுதாயுவின் தம்பியான சதாயு என்பவன், விசயனோடு, தமையனினும் அதிகமாகக் கடும்போர் செய்து (இறுதியில்) அவனும், கெத ஆயு ஆயினன், அதாவது கழிந்தகன்ற ஆயுளை உடையவனானான் (இறந்தான்); விசயனோடு எதிர்த்துப் போர் செய்தவருள் எவர்தாம் அழியாது உயிரோடு இருப்பர்?, என்பதாம்.

சதாயு - தீர்க்கமான ஆயுளை உடையவன். கெதாயு – அற்ப மான ஆயுளை உடையவன். சதாயுவானவன், கெதாயு வாயினான், என்று முரண்படக் கூறியது நயமுடையது.

**38. ஆயி ரம்பதின் மடங்குதே ரிபமதன்**
**மும்மடங் கடல்வாசி**
**ஆயிரஞ்சத மதனின்மும் மடங்குகா**
**லாளுட னணியாக்கி**
**ஆயி ரம்புயத் தருச்சன நிகரென**
**வாழியாற் றுணிப்புண்ட**
**ஆயி ரம்புயத் தவனென வெதிர்த்தன**
**னுடலா யிரவாகு.**

[ஆயிரம் பதின் மடங்குதேர், இபம் அதன் மும்மடங்கு, அடல் வாசி ஆயிரம் சதம், அதனின் மும்மடங்கு காலாளுடன் அணி ஆக்கி, ஆயிரம் புயத்து அருச்சுனன் நிகர் என, ஆழியால் துணிப்

புண்ட ஆயிரம் புயத்தவன் என எதிர்ந்தனன், ஆடல் ஆயிர வாகு.]

**விளக்கம் :**—ஆயிரம் பதின் மடங்கு தேர்—பதினாயிரம் தேர்கள். அதின் மும்மடங்கு இபம்—முப்பதினாயிரம் யானைகள். ஆயிரம் சதம் அடல்வாசி - லட்சம் வலிய குதிரைகள், அதனின் மும்மடங்கு காலாள்-முப்பது லட்சம் காலாள்கள். இவ்வளவு பெரிய தொகையுடைய சதுரங்க சேனைகளை, அணிவகுத்துக் கொண்டு, ஆற்றலுடைய சஹஸ்ரபாகு (ஆயிரம் வாகு) என்பவன் 'ஆயிரந்தோள்களை உடைய கார்த்த வீர்யார்ச்சுனன் ஒப்பென்னும் படியும், ஆயிரந்தோள்களை உடைய வாணாசுரன் என்று சொல்லும் படியும் (விசயனை நெருங்கி) எதிர்த்தான்'— என்பதாம். **சகஸ்வரவாகு,** என்ற பெயரின் தமிழ்மொழி பெயர்ப்பு **ஆயிரவாகு,** (ஆயிரங்கைகளை உடையவன்).

**39. உரங்க ளாயிரம் பொலங்கிரி யனையன**
**வோரொரு குனிவிற்கள்**
**கரங்க ளாயிரங் கொடுவளைத் தாயிரங்**
**கண்ணன்மைந் தனைநோக்கி**
**வரங்க ளாயிர மறையொடும் பெற்றவன்**
**மதிவகிர் முகமான**
**சரங்க ளாயிர மாயிர மொருதொடை**
**தனிலெழும் படியெய்தான்.**

[உரங்கள் ஆயிரம் பொலம்கிரி அனையன ஓர் ஒரு குனி விற்கள் கரங்கள் ஆயிரம் கொடுவளைத்து ஆயிரம் கண்ணன் மைந்தனை நோக்கி, வரங்கள் ஆயிரம் மறையொடும் பெற்றவன், மதி வகிர் முகம் என, சரங்கள் ஆயிரம் ஆயிரம் ஒரு தொடைதனில் எழும் படி செய்தான்.]

**விளக்கம்:-** மிகப் பல வரங்களையும், மந்திரத்தோடு அஸ்திரங்களையும் பெற்றவனான ஆயிரவாகு (சகஸ்ரவாகு) என்பவன், மிகப் பல வலிமைகளைக் கொண்ட பொன் மயமான மேருமலை போன்றனவான வளைந்த வில்கள் ஒவ்வொன்றையும் தனது ஆயிரங்கைகளால் வளைத்து, ஆயிரங்கண்களை உடைய இந்திரன் மகனாகிய விசயனை இலக்காகக் கொண்டு, அர்த்த சந்திர பாணங்களை ஒரு தொடுப்பினில் ஆயிரமாயிரமாகப் புறப்பட்டுச் செல்லும்படி பாணப் பிரயோகம் செய்தான்,—என்பதாம்.

மதிவகிர்முகமான சரம் - சந்திரனது பிளவு போன்ற முனையை உடைய பாணம். அதாவது அர்த்த சந்திரபாணம். பக்கத்திற்கு ஐந்நூறு கைகளை உடையவன் ஆயிரவாகு. ஆயிரம் - மிகப்பல,

**40. எடுத்த போதிலொன் றருங்குதை நாணிடை
யிசைத்தபோ தொருபத்துத்
தொடுத்த போதினூ றுகைத்தபோ தாயிர
மெனவருஞ் சுடர்வாளி
அடுத்த போர்முடி மன்னவன் விடுவிடும்
அநேகமா யிரமம்பும்
தடுத்த போதொரு தனுவுமைந் நூறடற்
றனுவுட னெதிர்நின்ற.**

[எடுத்த போதில் ஒன்று அருங்குதை நாணிடை இசைத்த போது ஒரு பத்து, தொடுத்தபோதில் நூறு, உகைத்தபோது ஆயிரம் என அருஞ்சுடர் வாளி, அடுத்த போர் முடி மன்னவன் விடும் விடும் அநேகம் ஆயிரம் அம்பும் தடுத்த போது ஒரு தனுவும் ஐந்நூறு அடல் தனுவுடன் எதிர் நின்ற.]

**விளக்கம்** :-(கையில் வில்லை) எடுத்தபோது ஒன்றும், அரிய வில்லின் நாணியில் (அம்பை)வைத்த போது நூறும், (பகைவன் மேல்) செலுத்தியபோது ஆயிரமாகவும் இருக்கும்படி, அரிய விளக்க முடைய அம்புகளை (விசயன்) போரில் நெருங்கிய முடி மன்னனை ஆயிரவாகு தொடர்ந்துவிடும் அநேக ஆயிரம் அம்பு களைத் தடுத்தபோது, (விசயனது) ஒரு வில்லும் (ஆயிரவாகுவின்) ஐந்நூறு வலிய வில்களும் எதிர் எதிர் நின்று பொருதன, என்ப தாம்.

**41. அலிமு கந்தொழு மிளவல்வா ணனைப்புய
மழித்தமா மறையொன்று
வலிமு கங்கொடி யுயர்த்தவன் செவியினி
லுரைக்கமற் றதுபெற்றங்
குலிமு கஞ்செறி வரிசிலை கால்பொரக்
குனித்துவன் பொடுதொட்ட
சிலிமு கங்களிற் றுணித்தன னாயிரஞ்
சிகரவா குவுஞ்சோர.**

[அலி முகம் தொழும் இளவல், வாணனை புயம் அழித்த மா மறை ஒன்று வலிமுகம் கொடி உயர்த்தவன் செவியினில் உரைக்க மற்று, அது பெற்று, அங்குலி முகம் செறி வரிசிலை கால் பொர குனித்து வன்பொடு தொட்ட சிலிமுகங்களின் துணித்தனன் ஆயிரம் சிகரம் வாகுவும் சோர.]

**விளக்கம்** :-அலி - (ஹலி) பலராமன்; ஹலம் (கலப்பையை ஆயுதமாக உடையவன். முகம் தொழும் - (பலராமனை அவன் முன்னே நின்று வணங்கும். இளவல் - கண்ண வலிமுகன்.

கொடி உயர்த்தவன் - குரங்கின் வடிவத்தைக் கொடியிலே கொண்ட விசயன். அங்குலி முகம் சொரி வரி சிலை - விரல்களிடத்தே உறுதியாகப் பற்றிய கட்டமைந்த வில். கால் பொர குனித்து - முனை பொருந்தும்படி நன்றாக வளைத்து. சிலிமுகம் - அம்பு. கண்ணன் வாணாசுரனை அவனது ஆயிரந்தோள்களையும் அறுத்ததற்கு உபயோகித்த மந்திரத்தை விசயனுக்கு உபதேசிக்க அதைப் பெற்று, தனது வில்லை நன்றாக வளைத்து வலிமையோடு செலுத்திய அம்புகளினால், மலைச்சிகரம்போன்ற சகஸ்ரவாகுவின் ஆயிரம் தோள்களையும் அறுத்துத் தள்ளினான், என்பதாம். வலி முகம்-குரங்கு. அங்குலி - விரல்.

**42. மீத லந்தனக் கிறைவன்வச் சிரத்தினால்**
**வெற்பினஞ் சிறகற்றுப்**
**பூத லந்தனில் விழுவபோல் விழுந்தன**
**புயங்களா யிரமும்போய்க்**
**காத லங்கனை தடம்படிந் தேகுதல்**
**கண்டுகா முகனாகிப்**
**பாத லம்புகுந் தின்பமெய் தியவிறற்**
**பார்த்தன்வெங் கணையாலே.**

[மீதலம் தனக்கு இறைவன் வச்சிரத்தினால் வெற்பின் அம் சிறகு அற்று பூதலந்தனில் விழுவபோல், விழுந்தன, புயங்கள் ஆயிரமும் போய், காதல் அங்கனை தடம் படிந்து ஏகுதல்கண்டு காமுகன் ஆகி, பாதலம் புகுந்து இன்பம் எய்திய விறல் பார்த்தன் வெம் கணையாலே.]

**விளக்கம் :**-மீதலம் - தேவலோகம், காதல் அங்கனை -விரும்புதற்குரிய அழகியவளான உலூபி என்னும் நாக கன்னிகை. பார்த்தனது வெவ்விய கணைகளால், (சகஸ்ரபாகுவின்) ஆயிரம் தோள்களும், இந்திரனது வச்சிரப்படையால் மலைகளின் அழகிய சிறகுகள் அற்று பூமியில் விழுந்த போல், துணிக்கப்பட்டு விழுந்தன, என்பதாம். அணி. உவமை. அங்கனை - (அங்கநா) அழகிய அங்கம் உடையவள்.

**43. அன்ற ருச்சுன னாயிரம் புயங்களு**
**மரிந்தனன் மழுவீரன்**
**இன்ற ருச்சுன னிவன்புய மரிந்தனன்**
**என்றிமை யவரேத்தத்**
**துன்ற ருச்சுன நான்மறை யுரலுடன்**
**றொடரமுன் றவழ்ந்தோடிச்**
**சென்ற ருச்சுன மிரண்டுதைத் தருளினோன்**
**செலுத்துதே ரவன்சென்றான்.**

[அன்று அருச்சுனன் ஆயிரம் புயங்களும் அரிந்தனன் மழு வீரன், இன்று அருச்சுனன் இவன் புயம் அரிந்தனன், என்று இமையவர் ஏத்த, - துன்று அருச்சுனன் நால் மறை உரலுடன் தொடர, முன் தவழ்ந்து ஓடி சென்று அருச்சுனம் இரண்டு உதைத்து அருளினோன் செலுத்து தேரவன் சென்றான்]

**விளக்கம்**:-மழுப்படையைக் கொண்ட பரசுராமன், முன்னொரு காலத்தில் கார்த்த வீரியார்ச்சுனனது ஆயிரம் புயங்களை அழித் தான், இன்று, அருச்சுனன் ஆயிரவாகுவின் புயங்களை அழித் தான், என்று தேவர்கள் போற்ற,...என்பது முதலிரண்டடிகளின் பொருள். அருச்சுனம் - (அருச்சுநம்) வெண்மை, இங்கே, பரிசுத்தமான, அல்லது பூசிக்கத்தக்க (நால்மறை). அருச்சுனம் - (ஈற்றடி) மருதமரம். அருச்சுனம் இரண்டு உதைத்தருளினோன், கண்ணன். தேரவன்—(கண்ணன் செலுத்தும்) தேரையுடைய விசயன்.

முதல் இரண்டடிகள், எடுத்துக்காட்டுவமை. உபமான உப மேயங்களை இது, இது, எனக் காட்டாது கூறல், இதற்குரிய இலக் கணம். ஆயிரவாகுவின் கரங்களைத் துணித்த விசயனைத் தேவர் துதிக்க, அவன் கண்ணன் நடத்திய தேரில் அப்பால் சென்றான், என்பதாம். இறைவனது அருள் உண்டேல் அசேத நங்களும் சேதநங்களிடையே இடம் பெறும், என்பது தோன்ற 'நால் மறை உரலுடன் தொடர' என்றார், என்க.

பகைவர் இரிந்து ஓடல்

**44. கடிகை முப்பதுஞ் சிந்துவுக் கரசனைக்**
**காக்குமா றறைகூவி**
**இடியி டித்தெனப் பல்லிய மார்த்தெழ**
**எழுகடற் படையோடும்**
**படிந டுக்குறப் பணிக்குல நெளிந்திடப்**
**பட்டவர்த் தனருள்ளார்**
**முடித ரித்தவ ரனைவருந் திரண்டொரு**
**முனைபட வெதிர்சென்றார்.**

[கடிகை முப்பதும் சிந்துவுக்கு அரசனை காக்கும் ஆறு அறை கூவி, இடி இடித்து என பல் இயம் ஆர்த்து எழ, எழு கடல் படையோடும் படி நடுக்கு உற, பணி குலம் நெளிந்திட பட்ட வர்த்தனர் உள்ளார், முடி தரித்தவர் அனைவரும் திரண்டு ஒரு முனைபட எதிர் சென்றார்.]

**விளக்கம்:-**பதினுன்காம் நாள் பகல் முழுதும், சயத்திரதனை காக்கும்படி (முடிவு செய்து கொண்ட) பட்டவர்த்தனர்களாய் உள்ளவர்களும், மகுடவர்த்தனர்களாய் உள்ளவர்களும் ஒன்று பட்டுத் திரண்டு அறைகூவி அதாவது வலிய விசயனைப் போருக்கு அழைத்துக் கொண்டு, இடியிடித்தாற் போல் பலவித வாத்தியங்கள் முழங்க, ஏழு கடல் போன்ற பெரிய சேனைகளுடன் (பாரம் தாங்கமாட்டாமல்) பூமி நடுங்கவும், பாம்புகள் தலைநெளிக்கவும், ஒரு முனை பட, (அதாவது ஒரே நோக்கத்தோடு), விசயன், எதிரே வந்தனர், என்பது பொருள்.

பட்டவர்த்தனர் -கிரீடம் இல்லாமல் பட்டம் அணிந்து ஆளும் அரசர். மகுட வர்த்தனர்—முடியணிந்தவர்களான அரசர்கள், சயிந்தனைக் காக்குங் கருத்தில் அரசர்கள் சேனு சமுத்திரத்துடன், விசயனை எதிர்க்கச் சென்றனர், என்க.

**45. பரிதி யால்வளைப் புண்டசெம் பரிதியிற்**
**பற்குனன் றனுவாங்கித்**
**தெரிச ரங்களோ ரொருவருக் காயிரஞ்**
**சிரமுத லடியீரு**
**நெரித ரும்படி தொடுத்துவெங் கொடிபரி**
**நேமிதேர் பலகோடி**
**கரிக ளுந்துணி படப்பட மலைந்தனன்**
**கடிகையொன் றினின்மாதோ.**

[பரிதியால் வளைப்புண்ட செம் பரிதியின் பற்குனன் தனு வாங்கி, தெரி சரங்கள் ஓர் ஒருவருக்கு ஆயிரம் சிரம் முதல் அடி ஈறு ஆ (க), நெரிதரும்படி தொடுத்து வெம் கொடி, பரி, நேமி தேர், பலகோடி கரிகளும் துணி பட பட மலைந்தனன் கடிகை ஒன்றினில் மாதோ.]

**விளக்கம் :-**பரிதியால் வளைப்புண்ட செம் பரிதி - வட்டவடிவமான மண்டலத்தால் சூழப்பட்ட சிவந்த கிரணங்களை உடைய இளஞ் சூரியன். மண்டலம், அல்லது பரிவேடத்தால் சூழப் பட்ட சூரியன்போல் அரசர் பலரால் சூழப்பட்ட விசயன், (களத்திலே நின்று) அவ்வரசர்களுடைய தலை முதல் கால் ஈருக நெரிந்து சிதையும்படி ஆயிரக் கணக்கில் கணைகளை ஏவி, அவர்களது தேர், குதிரை, யானை, கொடி முதலாயவற்றையும் ஒரு நாழிகைப் போதில் அழியும்படி போர் செய்தான், என்பதாம். நேமி தேர்— சக்கரங்களை உடைய தேர்.

**46. போரில் வெவ்விடாய் தணிவுறக் களத்தினிற்**
**புறங்கொடுத் தவர்சோரி**
**நீரின் மூழ்கியுங் கழுகிடு காவண**
**நீழலா றியுஞ்சென்றுர்**
**தேரில் வாசியிற் களிற்றில்வந் தவர்களிற்**
**சேவடி சிவப்பேற**
**யாரி யார்குதித் தோடுத லொழிந்தவர்**
**எறிபடை வீழ்த்திட்டே?**

[போரில் வெவ் விடாய் தணிவுற களத்தினில் புறங்கொடுத்தவர் சோரி நீரில் மூழ்கியும், கழுகு இடு காவணம் நீழல் ஆறியும் சென்றுர், தேரில் வாசியில் களிற்றில் வந்தவர்களில், சே அடி சிவப்பு ஏற யார் யார் குதித்து ஓடுதல் ஒழிந்தவர் எறி படை வீழ்த்திட்டு, ஏ.]

**விளக்கம்:** — களத்தில் புறங் கொடுத்தவர், போரில் (உண்டான) வெவ் விடாய் தணிவுற, சோரி நீரில் மூழ்கியும், கழுகு இடும் காவண நீழலில் ஆறியும், சென்றுர்; தேரில் வாசியில் களிற்றில் வந்தவர்களில், எறி படை வீழ்த்திட்டு, சே அடி சிவப்பு ஏற குதித்து ஓடுதல் ஒழிந்தவர் யார், யார்?—என்பது அன்வயம். சோரி—இரத்தம். கழுகு இடு காவண நீழல் - பிணம் தின்ன வந்த கழுகுகள் நெருங்கி மேலே பறப்பதால் உண்டான பந்தலின் நிழல். குதித்து ஓடுதல் ஒழிந்தவர் - குதித்து ஓடாமல் களத்தில் நின்றவர்.

விசயனை எதிர்த்தவர்களில் இறந்தவர் போக எஞ்சியவர் வலி அழிந்து புறங் கொடுத்து ஓடிப் பிழைத்தனர், என்பதாம். அவ்வாறு ஓடியவர் வாகனங்களிலிருந்து இறங்கியதும், ஆயுதங்களை நிலத்திலே போட்டதும், விசயன் தங்களை எதிர்த்து அழிக்கக் கூடும் என்ற பயத்தினுல், என்க. நிராயுதரைத் தாக்காமை, சுத்த வீரர்களின் இலக்கணம்.

காலில் குருதி படியவும், கழுகு இடு காவணம் ஒதுங்கியும் வீரர்கள் சென்றது, விடாய் தீரும் பொருட்டு என்ற கற்பனை **தற்குறிப்பேற்றம்** ஆகும்.

**47. நின்று பட்டனர் தனித்தனி யமர்புரி**
**நிருபர்முந் துறவோடிச்**
**சென்று பட்டனர் சேனைமண் டலிகர்வெஞ்**
**சினம்பொழி சிறுசெங்கண்**

**குன்று பட்டன பட்டன நவகதிக்**
**குரகதக் குலம்யாவும்**
**அன்று பட்டவர்க் குறையிடப் போதுமோ**
**வநேகநா ளினும் பட்டார்?**

[நின்று பட்டனர் தனி தனி அமர் புரி நிருபர், முந்துற ஓடி சென்று பட்டனர் சேனை மண்டலிகர், வெம்சினம் பொழி சிறுசெம் கண் குன்று பட்டன, பட்டன நவகதி குரகதம் குலம் யாவும்; அன்று பட்டவர்க்கு உறை இட போதுமோ அநேக நாளினும் பட்டார்.]

**விளக்கம் :-**போர் செய்த நிருபர் தனித்தனியே எதிர்த்து நின்று, நின்ற நிலையிலேயே மாண்டனர்; சேனைகளோடு மண்டலிகர் என்னும் சிற்றரசர்கள் பின்னிட்டு ஓடித் தோல்வியுற்றனர்; கோபத்தை வெளிப்படுத்துகின்ற சிறிய சிவந்த கண்களை உடைய குன்றை ஒத்த யானைகள் அழிந்தன ; ஒன்பது விதமான கதியை யுடைய குதிரைகளின் கூட்டம் முழுவதும் அழிந்தன; இதற்கு முன் நடந்த பதின்மூன்று நாள் போர்களில் அழிந்தவரின் எண்ணிக்கை அன்று, அதாவது பதினாலாம் நாள் போரில் அழிந்தவர்க்கு உறையிடுவதற்கும் போதுமோ,—என்பதாம்.

ஒன்றைக் கணக்கிடும்போது, ஒவ்வொரு பெருந்தொகைக்கும் ஒன்று என்று, ஞாபகத்தின் பொருட்டு இடும் இலக்க அடையாளம், உறையிடுதல் ஆகும். அதாவது, ஆயிரம் முறை இறை நாமம் ஜபிக்க வேண்டியவர்கள், நூறுமுறை ஜபித்தபின், ஞாபகத்தின் பொருட்டு, ஒரு மலரையோ, அல்லது ஒரு காயையோ அடையாளமாக வைத்து ஜபிப்பது வழக்கம். ஆயிரத்திற்கு ஒரு பத்துக் காய் உறையிடுவதற்கு ஆகின்றது. அவ்வாறு இதற்குமுன் நடந்த போர்களில் மாண்டவரின் தொகை, இன்று மாண்டவர்களின் தொகைக்கு உறையிடுதற்கும் போதாது, என்று இன்று இறந்தவர்களின் மிகுதியைக் கூறியபடி.

போதுமோ, என்று செய்யுள் முடிதலின், பட்டார், என்பதற்குப் பட்டவர்களின் தொகை, என்று பொருள் கொள்க.

**48. அநேக மாயிரம் பேர்படக் கவந்தமொன்**
**றுடுமக் கவந்தங்கள்**
**அநேக மாயிர மாடவெஞ் சிலைமணி**
**யசைந்தொரு குரலார்க்கும்**
**அநேக நாழிகை யருச்சுனன் சிலைமணி**
**யார்த்ததக் களம்பட்ட**
**அநேக மாயிரம் விருதரை யளவறிந்**
**தார்கொலோ வுரைக்கிற்பார்?**

[அநேகம் ஆயிரம் பேர் பட கவந்தம் ஒன்று ஆடும், அ கவந்தங்கள் அநேகம் ஆயிரம் ஆட வெம் சிலை மணி அசைந்து ஒரு குரல் ஆர்க்கும்; அநேக நாழிகை அருச்சுனன் சிலை மணி ஆர்த்தது; அ களம் பட்ட அநேகம் ஆயிரம் விருதரை அளவு அறிந்து ஆர்கொலோ உரைக்கிற்பார்?

**விளக்கம் :-** கவந்தம் - உடற்குறை, பல ஆயிரம் பேர் இறக்க, ஒரு கவந்தம் ஆடும்; அநேக ஆயிரம் கவந்தங்கள் ஆட, வில்லின் மணி ஒரு முறை ஒலிக்கும்; விசயனது வில் மணியோ, அன்று அநேக நாழிகை ஒலித்துக் கொண்டே இருந்தது. எனின், போர்க்களத்தில் ஆயிரக்கணக்கில் பட்ட வீரர்களின் தொகையை யார் கணக்கிட்டுச் சொல்ல வல்லவர் ஆவர்?—என்பதாம். மணியில் ஒலி செய்யும் உறுப்பை **நாக்கு** என்பர்; ஆகவே, ஒலி, குரல் எனப்பட்டது. அநேகம், என்பது ஒரே பொருளில் பலமுறை வந்துளதால், இது, **சொற்பொருட் பின்வருநிலை அணி** ஆகும்.

கலி விருத்தம்

**49. வெவ்வாசிநெ டுந்தேர்மிசை நிமிராவரி விற்கொண்(டு)**
**இவ்வா றமர் புரிவேலையி லெழுசெங்குரு தியினல்**
**அவ்வாடர வுடையானழி யாயோதன மந்திச்**
**செவ்வானக மெனவந்துசி வப்பேறிய தெங்கும்.**

[வெவ் வாசி நெடுந்தேர்மிசை நிமிரா வரிவில் கொண்டு இ ஆறு அமர் புரி வேலையில் எழு செம் குருதியினல், - அ ஆடு அரவு உடையான் அழி ஆயோதனம், அந்தி செவ் வான் அகம் என வந்து சிவப்பு ஏறியது எங்கும்.]

**விளக்கம் :-** வாசி - குதிரை. ஆடு அரவு உடையான் - கொடியிலே படம் எடுத்து ஆடும் தன்மையுள்ள பாம்பின் வடிவைக் கொண்ட துரியோதனன். ஆயோதனம் - போர்க்களம். வளைந்த வில் நிமிராமல் விசயன் தேரிலிருந்து போர் செய்த பொழுது, வெளிப்பட்டுக் பெருகிய குருதியினல், துரியோதனனது பக்கத்து அழிவுண்ட போர்க்களம் முழுதும் அந்தி வானம்போல் சிவப்பு நிறம் ஏறப் பெற்றதாயிற்று,—என்பதாம். இது, படுகளச் சிறப்பின் வருணனை.

நடுப்பகல்

**50. முருகாரிரு சிறைவண்டின முளரிப்புது மலர்விட்(டு)**
**அருகார்பொழி னிழலூடணி யலர்நாண்மல ருறவே**
**இருகாலமு முக்கால்விடு கைம்மாரியி ருக்கால்**
**ஒருகாலமு மறையோர்விடு பதநண்ணின னுதயன்.**

[முருகு ஆர் இரு சிறை வண்டு இனம் முளரி புது மலர் விட்டு, அருகு ஆர் பொழில் நிழலோடு அணி அலர் நாள் மலர் உறவே, இரு காலமும் முக்கால் விடு கை மாரி இருக்கால் ஒரு கால் அரு ம்றையோர் விடு பதம் நண்ணினன் உதயன்.]

**விளக்கம் :-** முருகு - தேன். முளரி - தாமரை. நாள்மலர் - புது மலர். இருக்கு - வேத மந்திரம், அல்லது காயத்திரி. பதம் - இடம். தேனை உண்ணுந்தன்மையினவான வண்டுகள் அன்று அயர்ந்த தாமரை மலரை விட்டு நீங்கி, அருகே உள்ள சோலை யின் கண் உள்ள அழகிய அலர்ந்த புதிய மலர்களை அடையும்படி, அந்தணர் வேதமந்திரத்தோடு காலை மாலையாகிய இரு காலமும் மூன்று முறை கைகளால் அர்க்கிய நீர் விடுகையை, ஒரு முறையே விடுகிற இடத்தை (அதாவது நடுப்பகலை) சூரியன் சேர்ந்தான்,—என்பது பொருள்.

காலையிலும் மாலையிலும் சந்தியா வந்தனம் செய்கையில், மூன்று முறையும், மத்தியான காலத்தில் (நடுப்பகலில்) ஒருமுறை யும் அந்தணர்கள் அர்க்கியம் விடுதல் மரபு. எனவே ஒருமுறை அர்க்கியம் விடுங்காலம் மத்தியானம் ஆகின்றது. சூரியன் உச்சி வானம் அடைந்தான், என்னுமல், ஒருமுறை அர்க்கியம் விடும் பதம் நண்ணினன், என்று கூறும் இவ்வருணனை, **பிறிதினவிற்சி அணி,** ஆகும்.

''சூரியோதயத்தில் தாமரையின் இனிய தேனை உண்டு களித்த வண்டுகள், சூரியன் உச்சியை அடைந்ததும் வெயிலைப் பொருமல் அயலிலுள்ள சோலைகளினிடத்தே இருக்கும் மரங்களின் நிழலில் உள்ள மலர்ந்த வேற்று மலர்களை அடைந்தன'', என்றது வெயிலின் மிகுதியை உணர்த்தும்.

**51.** **விரவார்முனை யடுதேர்நுக வெவ்வாசிகள் புனலுண்(டு)**
**உரவாவிடி லோடாவினி யென்றையனு ரைப்ப**
**அரவாபர ணன்றந்தரு ளருமாமறை வருணச்**
**சரவாய்வர வெய்தானவ ணெழலுற்றதோர் தடமே.**

[விரவார்முனை அடுதேர் நுகம் வெவ் வாசிகள் புனல் உண்டு உரவாவிடில் ஓடா இனி என்று ஐயன் உரைப்ப, அரவு ஆபரணன் தந்தருள் அரு மாமறை வருணன் சரம் வாய்வர, எய்தான், அவண் எழல் உற்றது ஓர் தடமே.]

**விளக்கம் :-** விரவார் - பகைவர். அடு - அழிக்க வல்ல. நுகம் - நுகத்தடி. புனல் உண்டு உரவாவிடில் - நீர் பருகி வலிமை பெருவிட்டால். ஐயன் - கண்ணன். அரவு ஆபரணன் - சிவ

பெருமான். மறை - மந்திரம். தடம் - குளம். தேர்க்குதிரைகள் நீர் பருகி வலிமைபெறுவிட்டால், ''இனி அவை தொழில்படா'', என்று கண்ணன் கூற, விசயன் சிவபெருமான் உபதேசித்தருளிய மறையைத் தனது வருணாஸ்திரத்தில் பொருந்தச் செய்து பாணப் பிரயோகம் செய்ததும், அங்கே, ஒரு குளம் தோன்றிற்று, என்ப தாம். வருணச்சரம் – வருணனைத் தேவதையாக உடைய அத்திரம்.

**52. ஆழம்புண ரியினும்பெரி ததினும்பெரி தகலம்**
**சூழெங்கணும் வண்டாமரை துறையெங்கணு நீலம்**
**கீழெங்கணு நெடுவாளைவ ரால்பைங்கயல் கெண்டை**
**வாழுங்கரை யருகெங்கணும் வளர்கின்னர மிதுனம்.**

ஆழம் புணரியினும் பெரிது, அதினும் பெரிது அகலம், சூழ் எங்கணும் வள் தாமரை, துறை எங்கணும் நீலம், கீழ் எங்கணும் நெடுவாளை வரால் பைங்கயல் கெண்டை, வாழும் கரை அருகு எங்கணும் வளர் கின்னர மிதுனம்.]

**விளக்கம் :-** புணரி-சமுத்திரம். சூழ் எங்கணும்-அத்தடாகத்தினைச் சுற்றியுள்ள எல்லாவிடத்திலும். துறை – இறங்குதுறை. நீலம் - நீலோற்பல மலர். கீழ் எங்கணும் - (தடாகத்தின்) அடிப்புறம், அதாவது உள்ளிடம் எங்கும். கரை அருகு எங்கணும் வளர்கின்னர மிதுனம் வாழும். மந்திரத்தின் மகிமையால் விசயன் உண்டாக்கிய தடாகத்தின் சிறப்பைக் கூறும் இது. கின்னர மிதுனம் என்பது நீர்வாழ் பறவை என்றும் அவை, ஆணும் பெண்ணுமாய்ச் சேர்ந்து வாழும் இயல்பின என்றும், நீர்வளமுடைய இடத்தே அவை தங்கி வாழும், என்றும் கூறுவர். குதிரையின் முகமும், மனித உடலும் உடையதாய், ஆணும் பெண்ணும் சேர்ந்து இரட்டையாய் வாழும் இயல்பினதாய்க் கின்னரம் என்னும் வாத்தியத்துடன் பாடித் திரிகின்ற தேவ சாதிக்கும் இப்பெயர் உளது.

**53. ஒருபால்வளர் போதாநிரை கருநாரைக ளொருபால்**
**ஒருபாலுள மகிழ்நேமிக ளன்றிற்குல மொருபால்**
**ஒருபான்மட வன்னம்புன லரமங்கைய ரொருபால்**
**ஒருபாலிரு பாலுந்தவ ழொளிநந்துறை புளினம்.**

ஒரு பால் வளர் போதா நிரை, கருநாரைகள் ஒருபால், ஒருபால் உள மகிழ் நேமிகள், அன்றில் குலம் ஒருபால், ஒருபால் மட அன்னம், புனல் அர மங்கையர் ஒருபால், ஒருபால் இரு பாலும் தவழ் ஒளி நந்து உறை புளினம்.]

**விளக்கம்** :- செய்யுள் மிக மிக சுலபமானது. வளர்போதா நிரை - நன்ருக வளர்ந்துள்ள நாரைகளின் கூட்டம். கருநாரை - நாரைகளில் ஒருவகை, கருநிறமுடையது. உளம் மகிழ் நேமி - பகலில் பெடையோடு கூடி மகிழும் சக்கரவாகப்புள். அன்றில் - கிரௌஞ்சம்; ஆணும் பெண்ணும் இணை பிரியாது வாழும் இயல்பினது. புனல் அர மங்கையர்-நீரில் வாழும் தேவமாதர். இரு பாலும் தவழ் ஒளிநந்து - இருபுறத்திலும் பரவுகின்ற ஒளியை உடைய சங்குப் பூச்சிகள். புளினம் - மணல் மேடு. இச்செய்யுளும் விசயன் உண்டாக்கிய தடாகத்தின் வர்ணனை ஆகும்.

ஒரு பால் என்பது ஒரே பொருளில் பலவிடங்களில் வந்திருப்பதால், இது, சொல் பொருட்பின் வரு நிலை அணி.

களைத்த குதிரைகள் நீர் பருகுதல்

**54. தலமாமக ளுந்தித்தட நிகரானத டங்கண்(டு)**
**உலமாறுகொ ளிருதோள்வலி யுடைவள்ளலு ரைப்பக்**
**குலமாமணி யனையான்விரை தேர்நின்றெதிர் குதியா**
**வலமானது ரங்கங்களை வள்வார்விசி நெகிழா.**

[தலம் ஆம் மகள் உந்தி தடம் நிகர் ஆன தடம் கண்டு, உலம் மாறு கொள் இரு தோள் வலி உடை வள்ளல் உரைப்ப, குலம் மாமணி அனையான் விரை தேர் நின்று எதிர் குதியா, வலம் ஆன துரங்கங்களை வள் வார் விசி நெகிழா, அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம்**:- தலம் ஆம் மகள் - பூமாதேவி. உந்தி - நாபி. தடம் - தடாகம். உலம் - திரண்ட கல்; இங்கே, தூண். கல் தூணோடு மாறு கொள்ளும் இரண்டு புயங்களின் வலிமை பெற்ற, வரையாது வழங்கும் தன்மையனான விசயன் (கண்ணனிடம்) சொல்ல, - என்பது இரண்டாவது அடியின் பொருள். குலம் மா மணி அனையான் - உயர்ந்த சாதியைச் சேர்ந்த சிறத்த நீல மணி போன்ற கண்ணன். வள்வார் விசி நெகிழா - தோல் கயிற்றால் ஆன பிணிப்புக்களை அவிழ்த்து விட்டு. தனது மந்திர பலத்தால் தோன்றிய தடாகத்தைக் கண்டு, விசயன், கண்ணனிடம் கூறவும், அவன் தேரினின்று குதித்து வலம் ஆன (வலிமையுடைய) குதிரைகளுக்கு நீர் ஊட்டும் பொருட்டு, அவற்றின் தளைகளை அவிழ்த்து, (அடுத்த செய்யுளோடு தொடரும்) - என்பதாம்.

நாபிக்கு உபமானமாகும் தடாகத்திற்கு நாபியை உபமானமாக்கி முறை மாற்றிக் கூறிய இது, எதிர்நிலை அணியின் பாற்படும். இதனால், தடாகத்தினும் நாபி சிறப்பு எய்துகின்றது.

**55. குவளைப்பரி மளமேவரு குளிர்வாரிப ருக்கிப்**
**பவளத்துவர் வாயானிரு பாதங்கைவி ளக்கித்**
**தவளக்கிரி யொருநாலென மேன்மேலொளிர் தருபேர்**
**இவுளிக்குமி ளைப்பாறவி ளைப்பாறின னிப்பால்.**

[குவளை பரிமளம் மேவரு குளிர் வாரி பருக்கி, பவளம் துவர் வாயான் இரு பாதம் கை விளக்கி, தவளம் கிரி ஒரு நால் என மேல் மேல் ஒளிதரு பேர் இவுளிக்கும் இளைப்பு ஆற, இளைப்பு ஆறினன் இப்பால்.]

**விளக்கம் :-** கருங்குவளை மலரின் வாசனை பொருந்திய (அத்தடாகத்தின்) குளிர்ந்த நீரை (குதிரைகளைக்) குடிக்கச் செய்து, பவளம் போன்ற சிவந்த வாயையுடைய கண்ணன், இரு பாதங்களையும் கைகளையும் கழுவிக் கொண்டு, வெள்ளிய மலைகள் நான்கு போல் மிகுதியாக விளங்குதல் பொருந்திய (விசயனது தேர்க்) குதிரைகளுக்கும் இளைப்புத் தணிய, (தானும்) இப்பால் இளைப்பு ஆறினன்,—என்பது பொருள்.

**கண்ணன்,** குதிரைகளை நீர் பருகச் செய்து, தானும் கால் கைகளை கழுவிக் கொண்டு இளைப்பாறினான், என்க. இதுவரை பாண்டவர் பக்கம் நிகழ்ந்தவற்றைக் கூறிய புலவர், இனி கௌரவர் பக்கத்துச் செய்திகளைப் பேசப் போகின்றார். ஆதலால், செய்யுளின் இறுதியில், **இப்பால்** என்றார். அடுத்த செய்யுளில் கௌரவர் பக்கத்துச் செய்தியைக் கூறப் போகிறார் ஆதலால், **அப்பால்** என்று செய்யுளை ஆரம்பிக்கின்றார்.

**56. அப்பாலிவ னுடனேபொரு தனிலத்தெதிர் சருகோ(டு)**
**ஒப்பாயுளம் வெருவெய்தியு டைந்தோடிய வீரர்**
**தப்பாரொரு வருமின்றடு சமரந்தனில் விசயன்**
**கைப்பாய்கணை பொரநொந்தவர் கழன்மன்னவ வென்றார்!**

[அப்பால் இவனுடனே பொருது அனிலத்து எதிர் சருகோடு ஒப்பு ஆய், உளம் வெருவு எய்தி உடைந்து ஓடிய வீரர், தப்பார் ஒருவரும் இன்று அடு சமரந்தனில் விசயன் கை பாய் கணை பொர நொந்தவர், கழல் மன்னவ, என்றார்.]

**விளக்கம் :-** அப்பால் - கௌரவர் பக்கத்தில். இந்த விசயனுடன் போர் செய்து, காற்றின் முன் சருகுபோல், மனத்தில் பீதி கொண்டு நிலைகுலைந்து ஓடிய வீரர், அப்பால் (பாண்டவரின் எதிர் பக்கத்தினை துரியோதனனிடம் சென்று) "கழல் மன்னவ, இன்று அடு போரில் விசயன் கை கணைகளின் தாக்குதலினால்

நொந்தவர் எவரும் உயிர் பிழையார்'' என்று கூறினார்கள், என்பதாம். அனிலம் - காற்று. சமரம் - போர். தோற்ற வீரர்கள் துரியோதனனை அடைந்து முறையிட்டனர், என்க.

துரியோதனன் துரோணனிடம் கூறல்

**57. துரியோதன னவர்சொல்லிய சொற்றன்செவி சுடவே**
**அரியோடெதிர் பொரவஞ்சிய வடல்வாரண மனையான்**
**எரியோடிய புரியென்னவி ளைத்தாரண வேள்விப்**
**பெரியோனடி யெய்திச்சிறு மையினாலிவை பேசும்.**

[துரியோதனன் அவர் சொல்லிய சொல் தன் செவி சுடவே, அரியோடு பொர அஞ்சிய அடல் வாரணம் அனையான், எரி ஓடிய புரி என்ன இளைத்து ஆரணம் வேள்வி பெரியோன் அடி எய்தி சிறுமையினால் இவை பேசும்.]

**விளக்கம் :-** தோற்று ஓடிய வீரர்கள் சொல்லிய வார்த்தை தன் செவி சுடவே, துரியோதனன், தீப்பற்றிய நகரம் போல் நலம் கெட்டுத் தளர்ச்சியுற்று, துரோணனது திருவடிகளை அடைந்து, தனது சேனையுற்ற எளிமை காரணமாக இவ்வார்த்தைகளைச் சொல்லலானான், என்பதாம். இரண்டாவது அடி, துரியோதனன், என்ற பொருளது. எரி ஓடிய புரி—திரிபுர அல்லது இலங்கை; உள்ளீடு இல்லா வைக்கோல் புரி, என்றும் கொள்ளலாம்.

**58. அதிரேகவி றற்பற்குன னம்போடெதி ரம்பிட்(டு)**
**எதிரேறிய வயமன்னரி லெம்மன்னர்பி ழைத்தார்?**
**கதிரேகிடு முன்றுச்சளை கணவன்றலை கடிதின்**
**பிதிரேறுவ தல்லாதது பிழைப்பிப்பவ ரிலரால்.**

[அதிரேகம் விறல் பல்குனன் அம்போடு எதிர் அம்பு இட்டு, எதிர் ஏறிய வய மன்னரில் எ மன்னவர் பிழைத்தார்? கதிர் ஏகிடும் முன் துச்சளை கணவன் தலை கடிதின் பிதிர் ஏறுவது அல்லது, அது பிழைப்பிப்பவர் இலர், ஆல்.]

**விளக்கம் :-** அதிரேகம் - மேம்பாடு மிக உடைய. கதிர் - சூரியன். துச்சளை கணவன் - சயத்திரதன். பிதிர்ஏறல் - சிதறித் தூளாதல். இதுவரை, விசயனை எதிர்த்தவர் எவரும் உயிர் பிழைத்திலாமையின், ''பிழைப்பிப்பவர் இலர்'' என்றும், எனது சகோதரி மங்கல நாண் இழவாமைக்குச் சயத்திரதன் காக்கப்

பட வேண்டும், என்பது தோன்ற, ''துச்சளை கணவன்', என்றும் துரியோதனன், கூறினான், என்க.

**59. காணுதவி டத்தாண்மையு றக்கூறுவர் கண்டால்**
**ஏணுடமர் முனைதன்னிலி மைப்போதெதிர் நில்லார்**
**நாணுதுமுன் வென்னிட்டிடு நஞ்சேனைய டங்கச்**
**சேணுடுறு மின்றேயொரு செயல்கண்டில மையா !**

[காணாத இடத்து ஆண்மை உற கூறுவர். கண்டால் ஏண் ஆடு அமர்முனை தன்னில் இமைப்போது எதிர் நில்லார்; நாணாது முன்வென் இட்டிடும் நம் சேனை அடங்க சேண் நாடு உறும் இன்றே; ஒரு செயல் கண்டிலம், ஐயா !]

**விளக்கம் :-** (நமது வீரர் விசயனை) காணாதவிடத்து (அவனை வெல்வதாக) ஆண்மை மிகுதியாகக் கூறுவர்; அவனைக் கண்டக் கால் வலிமை கொண்டு செய்வதற்குரிய போர்க்களத்திலே சிறிது பொழுதேனும் எதிரில் நிற்க மாட்டார்கள். நமது சேனை முழுதும் நாணம் இல்லாமல் அவனுக்கு முன் முதுகிட்டு ஓடுகின்றன; ஆகவே, இன்று சயத்திரதன் தேவருலகம் சேர்வான்; ஐயனே, அது நிகழாமல் தடுக்க, செய்யும் வழி தெரிந்தோம் இல்லை, என்று துரியோதனன், கூறினான், என்பதாம். சேண்நாடு-வீரசுவர்க்கம்.

**60. குனிநாணுடை வரிவிற்படை விசயற்கெதிர் குறுகித்**
**தனிநானவ னுயிர்கொள்ளுத றவிர்கிற்குத லல்லால்**
**முனிநாயக வேறோர்விர கில்லைத்திரு முன்னே**
**இனிநாடிய டும்போர்விரை வொடுகாணுதி யென்றான்.**

[குனி நாண் உடை வரி வில் படை விசயற்கு எதிர் குறுகி, தனி நான் அவன் உயிர் கொள்ளுதல், தவிர்கிற்குதல் அல்லால், முனி நாயக, வேறு ஓர் விரகு இல்லை; திரு முன்னே இனி நாடி அடும் போர் விரைவொடு காணுதி, என்றான்.)

**விளக்கம் :-** முனிவர் தலைவனே, விசயனுக்கு எதிர் சென்று, நானே தனியாக அவன் உயிர் கொள்ளுதல், அல்லது சாதல், அல்லாமல் செய்யத் தக்கதான வேறு உபாயம் இல்லை; உனக்கு முன்னே, நான் சென்று பகை அழிக்கும் போரை விரைவில் காண்க,—என்றான், என்பதாம்.

விசயனை எதிர்த்துச் சயிந்தவனைக் காக்க வல்லவர் இல்லையாத லால், நானே சென்று, அவனை அழிப்பதோ, அல்லது அவனால் அழிக்கப்படுவதோ காரியமாகப் போர் செய்யப் போகின்றேன் என்று துரோணனிடம் கூறியபடி; அதாவது, படைத்தலைவனாகிய

நீ, அரசனாகிய நானே சென்று போர் செய்யும்படி விட்டு, எம் பகை அழித்தலில் ஊக்கம் இல்லாதவனாய் இருக்கின்றாய், என்று நிஷ்டூரமாகக் கூறும் கருத்தது. தவிர்கிற்குதல் - இறந்து படல்.

துரோணன் கவசம் அளித்தல்

**61. முனியுந்தர ணிபனோடுசின் மொழிநன்கினு ரைக்கும்**
**துனிகொண்டுள மழியாதொழி துணிவுற்றனை முதலே**
**இனியஞ்சியி னைத்தெண்ணிடு மெண்ணந்தக வன்றால்**
**அனிகங்கள ழிந்தாலுநின் னாண்மைக்கழி வுண்டோ!**

[முனியும் தரணிபனோடு சில்மொழி நன்கின் உரைக்கும்,— துனி கொண்டு உளம் அழியாது ஒழி துணிவு உற்றனை முதலே; இனி அஞ்சி இனைத்து எண்ணிடும் எண்ணம் தகவு அன்று; ஆல், அனிகங்கள் அழிந்தாலும் நின் ஆண்மைக்கு அழிவு உண்டோ!]

**விளக்கம்:-** சில்மொழி - சில வார்த்தைகள். நன்கின் உரைக்கும் - நன்றாக (மனத்தில் படும்படி) சொல்வானானான். முதலில் (பாண்டவரிடம்) பகை கொண்டு உள்ளம் பயத்தால் சோர்தல் இல்லாமல், நெறிக்கு மாறான முடிவைத் துணிந்து செய்தாய், என்பது இரண்டாவது அடியின் பொருள். துனி - கோபம், பகை. ஒழிவு துணிவு உற்றனை - நெறி ஒழிந்ததான துணிவு கொண்டாய். இனி, அஞ்சி மெலிவு கொண்டு சிந்தித்தல் தகுதியுடையதன்று, சேனைகள் எல்லாம் அழிந்த நிலையிலும், உனது ஆண்மை அழியலாமோ, - என்பது ஈற்றடிகளின் பொருள். ''நன்கு ஆலோசிக்காது கருமந்துணிந்தாய், துணிந்த பின் அஞ்சியும் தளர்ந்தும் ஆலோசித்தலில் பயனில்லை. படை அழிந்த போதும், உன் தைரியம் குறையலாகாது, எனவே, தளராதே, என்று துரோணன், கூறினான், என்க.

**62. உரனால்வரு தேரொன்றினி லுற்றோரிரு வரையும்**
**நரநாரண ரிவரென்பர்கண் ஞானத்தினு யர்ந்தோர்**
**அரனார்திரு வருளான்முனை யடல்வாளிகள் பலவும்**
**வரனாலுயர் மறையும்பிறர் மற்றார்நனி பெற்றார்?**

[உரனால் வரு தேர் ஒன்றினில் உற்றோர் இருவரையும் 'நர நாரணர் இவர்', என்பர்கள் ஞானத்தின் உயர்ந்தோர்; அரனார் திரு அருளால் முனை அடல் வாளிகள் பலவும், வரனால் உயர் மறையும் பிறர் மற்று ஆர் நனி பெற்றார் ?]

**விளக்கம்:-** வலிய தேரில் பொருந்தியிருப்பவர் இருவரும் 'நரநாரணர்', என்று மெய்யறிவு கைவந்த மேன் மக்கள் கூறுவர்;

சிவபெருமானது திருவருளால் போரில் பகைவெல்லுதற்குரிய பல ஆயுதங்களையும், மந்திரங்களையும், வேறு யார் பெற்றுள்ளார்;— என்று தொடர்ந்து கூறினன், என்பதாம். வரனுல் உயர் மறை - வரமாகச் சிறந்த மறை, அதாவது, பெருந்தவத்தால் வரப்பெறும் உயர்ந்த மறை.

**63. தவரோடவ னின்ருல்விதி தானுந்தர மல்லன்**
**எவரோமலை யோடும்பொரு திருதோள்வலி பெற்ருர்?**
**உவரோதநி றத்தோனவன் விரைதேர்நனி யூர்வான்**
**அவரோடினி யமர்வெல்லுத லாராயினு மரிதால்.**

[தவரோடு அவன் நின்ருல் விதி தானும் தரம் அல்லன், எவரோ மலையோடும் பொருது இரு தோள் வலி பெற்ருர் ? உவர் ஓதம் நிறத்தோன், அவன் விரை தேர் நனி ஊர்வான்; அவரோடு இனி அமர் வெல்லுதல் ஆர் ஆயினும் அரிது ஆல்.]

**விளக்கம்:-** தவர் - வில் (காண்டீபம்). விதி - பிரும்மா. மலையுடன் போர் செய்து யாரோ தமது தோள்வலி நிலையுறப் பெற்ருர், என்பது இரண்டாவது அடியின் பொருள். அவன் (விசயன்) விரை தேரை நன்ருக நடத்துபவனே, உப்புக் கடல் போலும் நிறத்தினனுன திருமால், அவ்வாருக, அவர்களோடு அமர் செய்து வெல்லல் எவர்க்கும் முடியாததே,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

விசயனேடு எதிர்த்துப் பொரல் பிரும்மனுக்கும் முடியாததே; மலையோடு பொருது வெல்ல வல்லவர் யாரே உளர் ? விசயனது தேரை நடத்துபவனே திருமால்; எனின் அவரை வெல்லல் யாருக்கு இயலும் என்று துரோணன், கூறினன், என்க.

**64. அதிகம்பகை தமரோடுற லாகாதென வரசர்க்(கு)**
**எதிரன்றவை யிடையேவசை யேதேது புகன்ருய்**
**விதுரன்தன துளநொந்தடல் வில்லுந்துணி செய்தான்**
**மதியின்றிற னறிவோர்மொழி வழிவந்திலை மன்னே.**

[அதிகம் பகை தமரோடு உறல் ஆகாது என, (விதுரன் கூற) அரசர்க்கு எதிர் அன்று அவையிடையே வசை ஏது ஏது புகன்ருய்! (அதனுல்) விதுரன் தனது உளம் நொந்து அடல் வில்லும் துணி செய்தான்; மதியின் திறன் அறிவோர் மொழி வழி வந்திலை, மன்னே.]

**விளக்கம்:-** நெருங்கிய சுற்றத்தோடு பகைமை அதிகமாகக் கொள்ளல் ஆகாது என்று விதுரன் கூற, அவையிலே அரசர் புலர்

முன்னிலையில் ஏதேதோ சொல்லி அவனை நிந்தித்தாய், அவனும் மனம் நொந்து வில்லை ஒடித்தான்; நல்லறிவின் திறம்அறிந்தோர் மொழிவழி நீ ஒழுகினுய் இல்லை. (மன் ஓ: ஈற்றசை) என்று துரோணன் கூறும் பொருளது.

வீடுமன், துரோணன், கிருபன், உலூக மாமுனிவன், கண்ணன், விதுரன் ஆகியோர் மதியின் திறமறிந்த மேலோர், ஆவர்.

**65. மன்னுகவ மதியாவிறல் வயவன்றனை விசயன்**
**தன்னுலொரு பகலேயுயிர் தபுவித்திட லாமோ?**
**மின்னுர்வடி வேலாயிவை விதியின் செயலன்ருே!**
**என்னுவொரு கவசந்தனை யிவன்மெய்யினி லிட்டான்.**

[மன் ஆகவம் மதியா விறல் வயவன் தனை விசயன் தன்னுல் ஒரு பகலே உயிர் தபுவித்திடல் ஆமோ! மின் ஆர் வடி வேலாய், இவை விதியின் செயல் அன்ருே? என்னு, ஒரு கவசம் தனை இவன் மெய்யினில் இட்டான்.]

**விளக்கம்:-** ஆகவம் - போர். விறல் வயவன் - சயத்திரதன். மின் ஆர் வடி வேலான் - துரியோதனன். போரை ஒரு பொருளாக மதியாத சயத்திரதனை விசயன் இன்றைய ஒரு பகலில் அழித்தல் செய்யக் கூடியதாமோ? அவன் அழிவு உறலும் அழிவு படாமையும் விதியின் காரியம் அல்லவோ? எனவே, தளராதே, - என்று துரோணன் கூறி, ஒரு சிறந்த கவசத்தைத் துரியோதனனுக்கு அளித்தான்,—என்பதாம்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**66. பங்க யாசனன் வாசவற் களித்தது**
**வாசவன் பயில்போரில்**
**அங்க ராவினுக் குதவிய தங்கரா**
**வெனக்கரு ளியதிந்தத்**
**தொங்கன் மாமணிக் கவசமெவ் வீரருந்**
**தொழத்தகு கழற்காலாய்**
**புங்க வாளியிற் படைகளி லொன்றினும்**
**பொன்றிடா திதுவென்ருன்.**

[பங்கய ஆசனன் வாசவற்கு அளித்தது, வாசவன் பயில் போரில் அங்கராவினுக்கு உதவியது; அங்கரா எனக்கு அருளியது

இந்த தொங்கல் மா மணி கவசம், எ வீரரும் தொழ தகு கழல் காலாய், புங்கம் வாளியில் படைகளில் ஒன்றினும் பொன்றிடாது இது, என்ருன்.]

**விளக்கம்:-** பங்கயாசனன் - பிரும்மா. வாசவன் - இந்திரன். அங்கரா - அங்கிரசு; இவன் தேவகுருவான பிரகஸ்பதியின் தந்தை. தொங்கல் மாமணி கவசம் - வெற்றிமாலை பூணுதற்குரிய சிறந்த அழகிய கவசம். புங்கம் வாளி - கூரிய அம்பு. படை - வேல், வாள் முதலிய ஆயுதங்கள்.

''முன்பு தேவாசுர யுத்தத்தில், விருத்திராசுரன் என்பவனை அழிக்கப் பிரும்ம தேவன் இந்திரனுக்கு அளித்ததும், போர் முடிந்ததும், அவன் அதை அங்கிரசு என்பவனுக்கு அளித்ததும், அவ்வங்கிரசு எனக்கு உதவியதுமான இக்கவசம், எந்த ஆயுதங்களாலும் அழிவுருத் தன்மையது,'' என்று துரோணன் கவசத்தின் சிறப்பைக் கூறி, அதைத் துரியோதனனுக்கு அளித்தான், என்பதாம்.

## துரியோதனன் விசயனை எதிர்த்தல்

**67. இட்ட பொற்பெருங் கவசமோ டெழுந்தனன்**
**இராசரா சனுமுள்ள**
**பட்ட வர்த்தனர் மகுடவர்த் தனர்களும்**
**பலபடை ஞருங்கூடி**
**எட்டி பத்தின்வெஞ் செவிகளுஞ் செவிடுறப்**
**பல்லிய மெழுந்தார்ப்ப**
**முட்ட விட்டனர் தனஞ்சய னின்றமா**
**முனையில்வேன் முனையொப்பார்.**

[இட்ட பொன் பெருங் கவசமோடு எழுந்தனன் இராசராசனும், உள்ள பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர்களும் பல படைஞரும் கூடி, எட்டு இபத்தின் வெம் செவிகளும் செவிடு உற பல் இயம் எழுந்து ஆர்ப்ப, முட்ட விட்டனர் தனஞ்சயன் நின்ற மாமுனையில் வேல் முனை ஒப்பார்.]

**விளக்கம்:-** (துரோணன்) இட்ட பொன் கவசமொடு துரியோதனன் எழுந்தான்; வேலின் முனைபோல் கொடியவர்களாய், தன் பக்கம் உள்ள பட்டவர்த்தனரும், மகுடவர்த்தனரும், மற்றும் பல திறப்பட்ட வீரர்களும் ஒன்றுபட்டு, அஷ்ட திக் கஜங்களின் காதுகளும் செவிடு படும்படி பலவித வாத்தியங்கள் முழங்க, விசயன் நின்ற போர்க் களத்திலே,

தம் வாகனங்களை நெருங்கச் செய்தனர், என்பது பொருள். எட்டு இபம் - திசை யானைகள் எட்டு. முட்ட விடல் - போர் செய்யும் பொருட்டு நெருங்கல். திக்கஜங்கள் செவிடு பட, என்றது உயர்வு நவிற்சியின் பாற்படும்.

**68. சென்ற சென்றவெஞ் சேனைக ளிளைப்பறத்**
**தெய்விகத் தினில்வந்த**
**மன்ற லம்பெரும் பொய்கைநீர் பருகியப்**
**பொய்கையின் வளநோக்கி**
**என்று மென்றுநா நுகர்புன லன்றுநல்**
**லின்னமு திதுவென்பார்**
**தென்ற லந்தடஞ் சோலையிற் கரைதொறுஞ்**
**சேர்ந்துதம் விடாய்தீர்வார்.**

[சென்ற சென்ற வெம் சேனைகள் இளைப்பு அற தெய்விகத் தினில் வந்த, மன்றல் அம் பெரும் பொய்கை நீர் பருகி, அ பொய்கையின் வளம் நோக்கி, ''என்றும் என்றும் நாம் நுகர் புனல் அன்று; நல் இன் அமுது இது என்பார்'', தென்றல் அம் தடம் சோலையில் கரை தொறும் சேர்ந்து தம் விடாய் தீர்வார்.]

**விளக்கம்:-** வந்த சேனைகள் இளைப்புத் தணியும்படி, தெய்வத் தன்மையால் உண்டான தடாகத்தின் மணம் பொருந்திய நல்ல நீரைப் பருகி, அந்த நீரின் வளம் நோக்கி, ''நாம் நாள் தோறும் குடித்த நீரன்று இது. இனிய அமுதமே,'' என்று வியந்து கூறி, அதன் கரையிலுள்ள சோலையில் தங்கித் தங்கள் விடாய் தணியப் பெற்றனர், என்பதாம். சேனைகள், என்பது, சேனையிலுள்ள வீரர்களைக் குறிப்பதால், தீர்வர், என்ற உயர்திணைப் பன்மை முடிவு கொடுக்கப் பட்டது. சென்று, சென்று, என்ற அடுக்கு மிகுதிப் பொருளது.

**69. மத்த வாரணங் கொண்டுசெந் தாமரை**
**வனங்கலக் குறுவிப்பார்**
**தத்து பாய்பரி நறும்புன லருத்துவார்**
**தாமுநீர் படிகிற்பார்**
**கைத்த லங்களி லளியின மெழுப்பிமென்**
**காவிநாண் மலர்கொய்வார்**
**இத்த லந்தனி லிம்மலர்ப் பரிமள**
**மில்லையென் றணிகிற்பார்.**

[மத்தம் வாரணம் கொண்டு செம் தாமரை வனம் கலக் குறுவிப்பார், தத்து பாய்பரி நறும் புனல் அருத்துவார், தாமும் நீர்

படிகிற்பார்; கைத் தலங்களில் அளி இனம் எழுப்பி, மெல் காவி நாள் மலர் கொய்வார், இ தலந்தனில் இ மலர் பரிமளம் இல்லை என்று அணிகிற்பார்.]

**விளக்கம்:-** கௌரவர் சேனையில் உள்ளார் மத யானைகளைக் கொண்டு அப்பொய்கையிலுள்ள செந்தாமரைக் காட்டைக் கலக்கச் செய்வார், குதிரைகளுக்கு நீர் ஊட்டுவார், தாங்களும் நீராடுவார், கைகளினால் மொய்த்துக் கொண்டிருக்கும் வண்டின் கூட்டங்களை ஓட்டி, அந்தப் புதிய காவி மலர்களைக் கொய்வார், இந்த மண்ணுலகில், இந்த மலர்களுக்குள்ள பரிமளம் வேறு எதற்கும் இல்லை, என்று சொல்லி, அதைத் தலையில் சூட்டிக் கொள்வார்,—என்பது பொருள். தத்துபாய் பரி - தாவிப்பாயும் தன்மையுள்ள குதிரைகள்.

**70. இன்ன வாறுதம் மசைவொழிந் தியாவரு**
**மிபரத துரகத்தோ(டு)**
**அன்ன வாவியை வளைத்தனர் கடல்வளை**
**யாழிமால் வரையென்னத்**
**துன்னு மாமணித் தேரினின் றிழிந்துதன்**
**சுவேதமா நீரூட்டு**
**மன்னு வார்கழன் மகபதி மதலையவ்**
**வரூதினிக் கடல்கண்டான்.**

[இன்ன ஆறு தம் அசைவு ஒழிந்து யாவரும் இபரத துரகத் தோடு அன்ன வாவியை வளைத்தனர், கடல்வளை ஆழிமால்வரை என்ன, துன்னு மாமணி தேரினின்று இழிந்து தன் சுவேதம் மா நீர் ஊட்டு மன்னு வார்கழல் மகபதி மதலை, அ வரூதினி கடல் கண்டான்.]

**விளக்கம்:-** துரியோதனனைச் சேர்ந்தார் சதுரங்க சேனை களுடன், கடலைச் சக்ரவாள கிரி சூழ்வது போல் தன்னைச் சூழ் தலைக் குதிரைகளுக்கு நீர் ஊட்டும் விசயன் கண்டான், என்பதாம். வரூதினி - சேனை. சுவேதம் - வெண்மை. செய்யுள் சுலப மானதே.

விசயன் அவர்களோடு பொரல்

**71. கண்ட போதுமுன் காண்டவ மழித்தவன்**
**கடவுள்வா வியினன்னீர்**
**உண்ட வாசியைத் தேருடன் பிணித்துவில்**
**லோரிமைப் பினில்வாங்கி**

**வண்டு ழாய்மது மாலையாய் ! வளைந்துமேல்**
**வருவரு தினிதன்னை**
**அண்ட ரூர்புக விடுத்தபின் றேரின்மேல்**
**ஆகுமா றருளென்ருன்.**

கண்டபோது முன் காண்டவம் அழித்தவன் கடவுள் வாவி யின் நல்நீர் உண்ட வாசியை தேருடன் பிணித்து, வில் ஓர் இமைப்பினில் வாங்கி, வள்துழாய் மது மாலையாய், வளைந்து மேல்வரு வருதினி தன்னை அண்டர் ஊர் புக விடுத்தபின் தேரின் மேல் ஆகும் ஆறு அருள் என்ருன் ]

விளக்கம் :- கண்டபோது - பகைப்படை வளை வதைக் கண்ட அளவில். காண்டவம் அழித்தவன் - விசயன். கடவுள் வாவி - மந்திரபலத்தால் விசயன் உண்டாக்கிய தடாகம். பகை வர் தன்னைச் சூழ்வது கண்ட விசயன் தான் உண்டாக்கிய தடாகத்தின் நல்ல நீரைப் பருகிய குதிரைகளைத் தேரில் பிணித்து வில்லையும் வளைத்துக்கொண்டு கண்ணனை நோக்கி, ''பகைவரை வானுலகம் அனுப்பிய பின் தேரில் ஏறிக் கொள்ள அனுமதிப் பாயாக'', என்று கண்ணனிடம் கூறினுன், என்பதாம்.

பகைவர் வலி அழிதல்

**72. கன்று சிந்தையன் கோபவெங் கனல்பொழி**
**கண்ணினன் காலாளாய்**
**நின்று தேரினுங் களிற்றினும் பரியினும்**
**நிரைநிரை தரங்கம்போல்**
**சென்ற வீரரைத் தனித்தனி சரத்தினுற்**
**சிதையுடற் குன்ருகக்**
**கொன்று கொன்றுசூழ் வரக்குவித் தனன்மணிக்**
**குன்றுதா னெனநின்ருன்.**

[கன்று சிந்தையன் கோபம் வெம் கனல் பொழி கண்ணினன், காலாள் ஆய் நின்று, தேரினும் களிற்றினும் பரியினும் நிரை நிரை தரங்கம் போல் சென்ற வீரரை தனி தனி சரத்தினுல் சிதை உடல் குன்று ஆக கொன்று கொன்று, சூழ்வர குவித்தனன், மணி குன்று தான் என நின்ருன்.]

**விளக்கம் :-** கன்று சிந்தையன்–கொதிக்கும் மனத்தினனுன விசயன். காலாள் ஆய் - வாகனம் இன்றி பதாதியாய். நின்று கொண்டு, வரிசை வரிசையாகக் கடல் அலைபோல் தேர், யானை,

குதிரை ஆகிய வாகனங்களில் ஏறினராய் தன் மேல் எழுந்து வந்த வீரர்களைக் கொன்று குவித்து, (அவன்) தான் ஒரு நீல மணி மலை போல் சலியாது நின்றான், என்பதாம்.

**73.** **தலைவ னாமுனி கிருபனுங் கிருதனும்**
**துரகதத் தாமாவும்**
**அலைவு ருமனத் தரசருஞ் சேனையும்**
**முனைந்தணி யணியாகச்**
**சிலைவ லானெதிர் மிசைபடத் தேர்மிசை**
**விசையுறச் சிலைவாங்கி**
**வலைய வாகுவின் வலியெலாங் காட்டினார்**
**வரங்கொள்வா ளிகள்வல்லார்.**

[தலைவன் ஆம் முனி கிருபனும், கிருதனும், துரகதத்தாமாவும், அலைவு உரு மனத்து அரசரும் சேனையும் முனைந்து அணி அணி ஆக சிலைவலான் எதிர் மிசைபட தேர்மிசை விசை உற சிலை வாங்கி வலையம் வாகுவின் வலி எலாம் காட்டினர், வரம் கொள் வாளிகள் வல்லார்.]

**விளக்கம் :-** முனி சிரேஷ்டனாகிய கிருபனும், கிருதவர்மனும் அசுவத்தாமாவும், மனக் கலக்கமில்லாத மற்ற அரசர்களும், அவர்களது சேனையும் ஊக்கத்தோடு வரிசை வரிசையாகத் தேரில் விசயன் எதிரில் வந்து, அவன் மிசைபட, (அதாவது அவன் மேல் அம்புகள் படும்படி) வேகமாக வில்லை வளைத்து வாகு வளையம் அணிந்த தம் தோள் வலி முழுதையும், காட்டினார்கள், என்பது பொருள்.

வரம் கொள் வாளிகள் – தேவர்களிடமிருந்து வரமாகப் பெற்ற அத்திரங்களும், வேல் வாள் முதலிய ஆயுதங்களும்.

**74.** **கைத வன்குலக் கன்னிகேள் வனுமொரு**
**கணைக்கொரு கணையாக**
**எய்து வெங்கணை யாவையும் விலக்கிமே**
**லிரண்டுநா லெட்டம்பால்**
**வெய்தி னேமியந் தேரொடு கொடிகளும்**
**வில்லும்வா சியும்வீழக்**
**கொய்து கொய்துபல் பவுரிவந் தனன்விறற்**
**குன்றவில் லியொடொப்பான்.**

[கைதவன் குலம் கன்னி கேள்வனும் ஒரு கணைக்கு ஒரு கணை ஆக எய்து, வெம் கணை யாவையும் விலக்கி, மேல் இரண்டு நால் எட்டு அம்பால் வெய்தின், நேமி அம் தேரொடு கொடிகளும்,

வில்லும் வாசியும் வீழ கொய்து கொய்து பல் பவுரி வந்தனன், விறல் குன்றம் வில்லியொடு ஒப்பான்.]

**விளக்கம் :-** குன்றம் வில்லியோடு ஒப்பான், கைதவன் குலம் கன்னி...கொய்து கொய்து பல் பவுரி வந்தனன்,—என்பது அன்வயம்.

கைதவன் - பாண்டியன். நேமி அம் தேர் – சக்கரங்களோடு கூடிய அழகிய தேர். குன்ற வில்லி - சிவபெருமான். பவுரிவரல் - சுழலல், மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானைப் போராற்றலில், ஒத்தவனுனவனும், பாண்டியர் குலம் வந்த சித்ராங்கதை என்னும் கன்னியின் கணவனுமான விசயன், பகைவர் கணைகளைத் தன் கணைகளால் விலக்கி, அதன்பின், இரண்டு நால் எட்டு (மிகப்பல) கணைகளால், அவர்களது தேர், வில் குதிரைகள் ஆகியவற்றை அழித்துப் பலமுறை (பம்பரம் போல்) சுழன்று சுழன்று தாக்கலானுன், – என்பதாம்.

இரண்டு நாலெட்டு : $4+4+8=16$; அல்லது $2\times4+8=16$; அல்லது, $2+4\times8=48$; அல்லது, $2\times4\times8=64$, என்று பலவாறு பொருள் படலாம். எனவே, மிகப்பல, என்று பொருள் கொள் வோம்.

**75. தேரி னின்றவர் பாரினின் றவன்மிசை**
**விடுகணை திரண்மின்னைக்**
**காரி னின்றுபா தலமுற வுரகமேற்**
**கனன்றுவீழ் வனபோன்ற**
**பாரி னின்றவன் றேரினின் றவர்மிசை**
**விடுகணை பாதாலத்(து)**
**ஊரி னின்றுரு மையும்விழுங் குவமென**
**உரகமே றுவபோன்ற.**

[தேரின் நின்றவர் பாரின் நின்றவன் மிசை விடுகணை திரள், மின்னை காரினின்று பாதலம் உற உரகம் மேல் கனன்று வீழ்வன போன்ற; பாரில் நின்றவன் தேரின் நின்றவர் மிசை விடுகணை பாதாலத்து ஊரினின்று உருமையும் விழுங்குவம் என உரகம் ஏறுவ போன்ற.]

**விளக்கம் :- தேரின் நின்ற பகை வீரர், பார்மேல் நின்ற பார்த்தன் மேல் விட்ட கணைகளின் கூட்டம், நாகங்களின் மேல் கோபங் கொண்டு, மேகத்தினின்று பாதலம் பொருந்த வீழ்வன வாகிய மின்னை (இடிகளை) ஒத்தன; பூமியிலிருந்து பார்த்தன், தேர் மேல் இருந்தவர் மேல் செலுத்திய கணைகள், இடியையும் விழுங்கி**

விடுவோம் என்று சீறிக் கொண்டு, நாகங்கள் மேல் நோக்கி எழுவதை ஒத்தன,—என்பது பொருள். அணி, தற்குறிப்பேற்றம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

76. **சேணி லத்தின்மிசை நின்றமர்தொ டங்கினவர்**
**தேர்க ளிற்றனத றிந்தனநெ டுந்துவசம்**
**நாணி யற்றனவொ டிந்தனத டஞ்சிலையும்**
**நாக முற்றவரொ ழிந்தவ ரிரிந்தவர்கள்**
**நீணி லத்தினிடை நின்றுசமர் வென்றவனும்**
**நேமி வச்ரமகு டம்புனைகொ டிஞ்சியுடை**
**ஏணி லத்திவுளி முந்தமுனை யுந்திரத**
**மேறி யிட்டனன்மு குந்தனுட னின்புறவே.**

[சேண் நிலத்தின் மிசை நின்று அமர் தொடங்கினவர் தேர்கள் இற்றன, தறிந்தன நெடுந்துவசம், நாணி அற்றன, ஒடிந்தன தடஞ்சிலையும்; நாமம் உற்றவர் ஒழிந்தனர் இரிந்தவர்கள்; நீள் நிலத்திடை நின்ற சமர் வென்றவனும் நேமி வச்ர மகுடம் புனை கொடிஞ்சி உடை, ஏண் நிலத்து இவுளி முந்த முனை உந்து இரதம் ஏறியிட்டனன் முகுந்தனுடன் இன்பு உறவே.[

**விளக்கம் :** சேண் நிலம்-உயர்ந்த இடமான தேர். இரிதல்-தோற்று ஓடல். நீள் நிலம்-பூமி. நேமி வச்ர மகுடம் புனை கொடிஞ்சி -சக்கரங்களோடு வச்ர மணிகளால் இழைக்கப்பெற்ற கலசங்களைக்கொண்ட கொடிஞ்சி. கொடிஞ்சி-சிகரம் போன்ற தேரின் உறுப்பு; அதாவது தாமரை மலர் வடிவுகொண்ட உறுப்பு; தேர் மொட்டு, என்றும் கூறுவர். ஏண் நிலம்-வலிய போர் செய்வதற்குரிய யுத்த பூமி. தேரின்மேல் இருந்து போர் செய்த பகையரசர் தேரும், கொடியும், வில்லும் அழிக்கப்பெற்று, மடிந்தவர் போக எஞ்சியவர் புறங்கொடுத்து ஓடினர்; பூமியில் நின்று போர் செய்த பார்த்தன், கொடிஞ்சி என்னும் உறுப்பையுடையதும், யுத்த பூமியில் குதிரைகள் முற்பட்டு இழுத்துச் செல்கின்றதுமான தனது தேரில், கண்ணபிரானுடனே ஏறிக்கொண்டான்-என்பதாம். அதாவது, பகைவரை அழித்தபின், விசயன் கண்ணபிரான் குதிரைகளைப் பூட்டிச் சித்தமாய் வைத்திருந்த தேரில் ஏறிக்கொண்டான், என்றபடி.

இதுவும் இதைத் தொடரும் பதினைந்து செய்யுள்களும் சந்த நயம் மிகுந்தவையாகும்.

77. ஏறி விட்டவன்வி ரைந்திரத முங்கடவி
ஏக லுற்றபினி யம்பலத ழங்கியெழ
வேறு பட்டமரு டைந்தவர்க ளுந்திருகி
மேலி டச்சகுனி யுந்தினக ரன்சுதனும்
ஆறி யிட்டரத குஞ்சரது ரங்கமமும்
ஆக விப்படிபொ ரும்படையொ டன்றுநனி
சூறி யிட்டனன்வ லம்புரிய லங்கல்புனை
தோளி லெப்புவன முந்தனிசு மந்தவனே.

[ஏறியிட்டவன் விரைந்து இரதமும் கடவி ஏகல் உற்றபின், இயம் பல தழங்கி எழ, வேறுபட்டு அமர் உடைந்தவர்களும் திருகி மேல்இட, சகுனியும் தினகரன் சுதனும் ஆறிஇட்ட ரத குஞ்சர துரங்கமமும் ஆக இப்படி பொரும் படையொடு அன்று நனி சூறியிட்டனன் வலம்புரி அலங்கல் புனை தோளில் எ புவனமும் தனி சுமந்தவன், ஏ.]

**விளக்கம்:** ஏறியிட்டவன்..... ஏகல் உற்றபின், வலம்புரி அலங்கல் புனை தோளில் எ புவனமும் தனி சுமந்தவன், பல் இயம் தழங்கி எழ,......நனி சூறியிட்டனன், என்பது அன்வயம்.

வேறுபட்டு அமர் உடைந்தவர்-தோற்று நிலைகுலைந்து ஓடிய அரசர். திருகிமேல் இட—திரும்பி முன்னிட்டு வருதலைச் செய்ய. ஆறியிட்ட குஞ்சரம் ரதம் துரங்கமும்-விசயன் உண்டாக்கிய தெய்வப்பொய்கையில் நீர் பருகி இளைப்பாறின யானைகளும் தேர்க் குதிரைகளும். வலம்புரி அலங்கல் புனைதோளில் எப்புவனமும் சுமந்தவன்-நஞ்சாவட்டை மாலை தரித்த தோள்களில் பூமி முழுதையும் தாங்கும் துரியோதனன். சூரியிட்டனன்—கோபாவேசத்தோடு(விசயனை) வளைத்துக் கொண்டான். பகை அழித்து கண்ணனோடு விசயன் மேலேறிச் செல்கையில், துரோணனிடமிருந்து கவசம்பெற்ற துரியோதனன் சகுனி கர்ணனையும், தோற்றோடிய வீரர்களையும் மீண்டும் போருக்கு அழைத்துக் கொண்டுவந்து விசயனை வளைத்துக்கொண்டான், என்பதாம்.

சூறை, என்பது சுழல் காற்று என்ற பொருளது; எனவே, சூறியிட்டனன், என்பதற்குச் சுழன்று வீசுங் காற்றைப்போல் துரியோதனன் விசயனை வளைத்துக்கொண்டான், என்பது பொருளாகும்.

78. யோத னத்திலிவ னென்கணெதி ரின்றளவும்
யோச னைக்குமிடை நின்றிலன்மு னைந்துசமர்
மோது கைக்குநினை வுண்டுகொலெ திர்ந்துமிக
மோத ரித்துவரு கின்றதுதெ ரிந்தநிலை

**யாது பெற்றனனெ டுஞ்சிலைகொல் வெங்கணைகொல்**
**ஏத மற்றகவ சங்கொலிர தங்கொலென**
**மாத வற்கிடைவ ணங்கியிது வென்கொலென**
**வாச வக்கடவுண் மைந்தனுரை தந்தனனே.**

[யோதனத்தில் இவன் என் கண் எதிர் இன்று அளவும் யோசனைக்கும் இடை நின்றிலன், முனைந்து சமர் மோதுகைக்கு நினைவு உண்டு கொல்? எதிர்ந்து மிக மோதரித்து வருகின்றது தெரிந்தது இலை; யாது பெற்றனன், நெடுஞ்சிலை கொல்? வெம்கணை கொல்? ஏதம் அற்ற கவசம் கொல்? இரதம் கொல்? என, மாதவற்கு இடை வணங்கி, ''இது என் கொல்?'' என வாசவ கடவுள் மைந்தன் உரை தந்தனன், ஏ]

**விளக்கம்:** யோதனம் - யுத்தம். முனைந்து - முனைப்புக் கொண்டு. உக்கிரத்தோடு மோகரித்து வருகின்றது- வீராவேசங்கொண்டு (எதிர்த்து) வருகின்ற இச்செயல். நினைவு- எண்ணம். வாசவக் கடவுள் மைந்தன்-இந்திரனது தெய்வத் தன்மை பொருந்திய மகனான விசயன். இன்றளவும் இவன் (துரியோதனன்) போரில் என் கண் எதிரே ஒரு யோசனை தூர அளவில் நின்றதில்லை; (இப்பொழுது) வீராவேசங்கொண்டு எதிர்த்து வருதல், முனைந்து பொர எண்ணங்கொண்டதினாலோ? தெரியவில்லை; நெடிய சிலையோ, வெங்கணையோ, ஏதம் (அழிவு) அற்ற கவசமோ, தேரோ, ஆகிய எதை (அவன் இன்று) பெற்றனன், என்று விசயன் எண்ணி, கண்ணனைத் தொழுது, ''இதன் காரணம் யாது?'' என்று கேட்டான்,-என்பதாம்.

**79. ஈச னப்பொழுது ணர்ந்தருளி வென்றி வரி**
**யேறு விற்குரிய பற்குனனு டன்பழைய**
**வாச வற்கயன்வ ழங்குகவ சந்துவச**
**மாசு ணற்கருளி னன்கலச சம்பவனும்**
**ஆசு கத்தினிலொ ழிந்தபல துங்கமுனை**
**யாயு தத்தினில ழிந்திடுவ தன்றதனை**
**நீசெ குத்திடுதி யென்றுதுர கங்களையும்**
**நேர்ப டக்கடவி னன்கதிவி தம்படவே.**

[ஈசன் அப்பொழுது உணர்ந்தருளி வென்றி வரி ஏறுவிற்கு உரிய பற்குனனுடன் பழைய வாசவற்கு அயன் வழங்கு கவசம், துவசம் மாசுணற்கு அருளினன் கலச சம்பவனும்; ஆசுகத்தினில், ஒழிந்த பல துங்கம் முனை ஆயுதத்தினில் அழிந்திடுவது அன்று; அதனை நீ செகுத்திடுதி, என்று, துரகங்களையும் நேர்பட, கடவினன், கதி விதம் படவே.]

**விளக்கம்:** ஈசன்-கண்ணன். வென்றி வரி ஏறு விற்கு உரிய பற்குனன்-வெற்றி தருகின்ற கட்டமைந்த சிறந்த வில்லுக்கு உரியனான விசயன். வாசவற்கு அயன் (பிரும்மா) வழங்கு (முன்பு கொடுத்த) பழைய கவசம், என்று கூட்டுக. கலச சம்பவன்-துரோண கும்பத்திலிருந்து உண்டான துரோணன். துவசம் மாசுணற்கு-(மாசுணம் துவசற்கு) பாம்புக் கொடியை உடையவனான துரியோதனன். ஆசுகம்-அம்பு. ஒழிந்த பல துங்கம் முனை ஆயுதம் - கணை ஒழிந்த பலவகைப்பட்ட சிறந்த ஆயுதங்கள். செகுத்திடுதி-(நீ அதை) அழிப்பாயாக. நேர்பட-(துரியோதனனுக்கு) எதிரே செல்லும்படி. கதிவிதம்பட-பலவிதமான நடைவிகற்பம் பொருந்த, (ஈசன் செலுத்தினன்).

"அயன் வாசவனுக்கு அளித்த அம்புகளாலும், மற்ற ஆயுதங்களாலும் அழிதல் இல்லாத சிறந்த கவசத்தை, வில்லாசிரியன் துரியோதனனுக்குக் கொடுத்துள்ளான். அதை நீ அழிப்பாயாக," என்று சொல்லிக் கண்ணன் தேரைத் துரியோதனனுக்குமுன் செலுத்தினன்,-என்பதாம்.

விசயன் கணைகளால் பகைவர் படல்

80. **கான கத்தினிடை மண்டியெரி யங்கிதரு**
**கார்மு கத்தின்வலி கொண்டுமுனை வெஞ்சமரில்**
**மேன டக்குமவர் தங்கண்ம குடங்களினும்**
**மேரு வொத்துயர்பு யங்களினு முந்தியினும்**
**ஆன னத்தினுநு ழைந்துருவ வெம்பரிதி**
**ஆயி ரங்கிரண மும்புடைப ரந்ததென**
**வான கத்துவெளி யின்றியணி பந்தரிட**
**வாளி விட்டனன் மனஞ்செய்து தனஞ்சயனே.**

[கானகத்தினிடை மண்டி எரி அங்கி தரு கார்முகத்தின் வலி கொண்டு முனை வெம்சமரில், மேல் நடக்குமவர் தங்கள் மகுடங்களினும், மேரு ஒத்து உயர் புயங்களினும், உந்தியினும், ஆனனத்தினும் நுழைந்து உருவ, வெம்பரிதி ஆயிரம் கிரணமும் புடை பரந்தது என, வானகத்து வெளி இன்றி அணி பந்தர் இட வாளி விட்டனன், மனம் செய்து தனஞ்சயன், ஏ]

**விளக்கம் :-** கானகத்திடை மண்டி எரி -அங்கி - காண்டவ வனத்தை விசயன் துணை கொண்டு சுட்டெரித்த அக்னிபகவான். முனை வெஞ்சமர் - ஊக்கத்தோடு செய்யும் கொடிய போர். மேல் நடக்குமவர் – (விசயன்) மேல் போரெழுந்து வந்த பகைவர். மகுடம் - கிரீடம். ஆனனம் - முகம். அக்னி பகவான் கொடுத்த

காண்டீவம் என்னும் வில்லின் வலிமை கொண்டு, ஊக்கத்தோடு செய்யும் கொடிய போரில் தன் மேல் எதிர்த்து வந்த பகைவர்களின் மகுடங்களிலும், மேருமலையை ஒத்த தோள்களிலும், நாபிகளிலும், முகங்களிலும் நுழைந்து உருவும்படி, வெம் பரிதியின் கிரணங்கள் எங்கும் பரவுவது போல் வானத்தில் வெற்றிடம் இல்லாதபடி அழகிய பந்தல் இடும்படி(விசயன்) பாணப்பிரயோகம் செய்தான், என்பதாம்.

81. நாதெ றித்தனது ரங்கமநெ டுஞ்சிலைகள்
நாணி யற்றனவு டைந்தனத டந்திகிரி
பால மற்றனம தங்கயவி தங்கள்பொரு
பாகர் பட்டனர்ம றிந்தனநெ டுந்துவசம்
மோது தற்கெதிர்மு னைந்தவர்சி ரங்கள்பொழி
மூளை யிற்களம டங்கலுநெ கிழ்ந்தரசர்
ஆத பத்திரம ழிந்தனவி வன்றனுடன்
ஆர்த ரத்தொடுச ரந்தொடவி யைந்தவரே ?

[நா தெறித்தன துரங்கமம், நெடுஞ்சிலைகள் நாணி அற்றன, உடைந்தன தடந்திகிரி, பாதம் அற்றன மதங்கயம் விதங்கள், பொரு பாகர் பட்டனர்; மறிந்தன நெடுந்துவசம்; மோதுதற்கு எதிர் முனைந்தவர் சிரங்கள் பொழி மூளையின் களம் அடங்கலும் நெகிழ்ந்து, அரசர் ஆதபத்திரம் அழிந்தன;—இவன் தனுடன் ஆர் தரத்தொடு சரம் தொட இயைந்தவர் ? ஏ.]

**விளக்கம் :-** (விசயன் விடுத்த கணைகளால்) குதிரைகளின் நாக்கு தெறித்து விழுந்தன, நீண்ட வில்கள் நாண் அறுபட்டன, பெரிய தேர்ச் சக்கரங்கள் உடைந்து போயின, யானை வகைகள் கால்கள் அறுபட்டனவாயின, போர் செய்யும் யானை குதிரைகளை நடத்தும் பாகர் இறந்து பட்டனர், நீண்ட கொடிகள் முறிந்து விழுந்தன; தாக்கிப் போர் செய்வதற்கு முனைந்து வந்தவரின் சிரங்கள் (பிளவுபட்டு) வெளிப்படுத்திய மூளைகளினால் களம் முழுதும் நெகிழ்ச்சிபட, அதாவது சேருக, அரசர்களின் கொற்றக் குடைகள் அழிந்தன; இவனுடன் வலிமையோடு சரந்தொடுக்க மனங்கொண்டவர் யாவர் ? (ஒருவரும் இல்லை),-என்பதாம்.

மதங்கயம் - (மதங்கஜம்) யானை; ஆதியில் மதங்கமுனிவனிடமிருந்து தோன்றியது என்ற பொருளது.

82. ஆர மர்க்கண்மிக நொந்திரவி மைந்தனெடி
தாகு லத்தொடுமி ரிந்தனன்வி ரிந்தமணி
வார்க ழற்சகுனி யுந்துணைவ ருந்தமுக
மாறி யிட்டனர்ம றிந்தனர்க லிங்கர்பலர்

சீரு டைக்கிருத னுங்கிருப னும்பழைய
சேதி வித்தகனு மஞ்சினரொ டுங்கினர்கள்
பூரி பட்டிலனெ ருங்கியணி நின்றுபொரு
பூபர் பட்டனரொ ழிந்தவர்பு றந்தரவே.

[ஆர் அமர்க்கண் மிக நொந்து இரவி மைந்தன் நெடிது ஆகுலத்தோடு இரிந்தனன், விரிந்த மணி வார்கழல் சகுனியும் துணைவரும் தம் முகம் மாறியிட்டனர், மறிந்தனர் கலிங்கர் பலர், சீர் உடைகிருதனும் கிருபனும் பழைய சேதி வித்தகனும் அஞ்சினர் ஒடுங்கினர்கள்; பூரி பட்டிலன், நெருங்கி அணி நின்று பொரு பூபர் பட்டனர், ஒழிந்தனர் புறம் தரவே.]

**விளக்கம் :-** அரிய போரில் இரவி மைந்தனை கர்ணன் மிகுந்த கலக்கத்தோடு தோற்று அகன்ருன், ஒளி வீசும் அழகிய நீண்ட வீரக்கழல் அணிந்த சகுனியும் (துரியோதனனது) தம்பியரும் முகம் மாறியிட்டனர் (அதாவது புறங் கொடுத்தனர்;), கலிங்க நாட்டு வீரர் பலர் தோல்வியுற்றுப் பின்னிட்டனர்; சீருடைய கிருதவர்மனும், கிருபனும், பழமையான சேதி நாட்டுத் தலைவனும் பயந்து வலியிழந்து அகன்றனர்; பூரி என்பவன் மாண்டான் அல்லன், (அதாவது தோற்று உயிர் 'இழக்காமல் ஓடினன்); அணியில் நெருங்கி நின்று போர் செய்தவர்களில் இறந்தவர் போக, எஞ்சியவர் முதுகு கொடுத்த ஓடவே, (தொடரும்) என்பது பொருள். இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.

தோற்ருர், என்ற பொருளுடைய, ''இரிந்தார், முகம் மாறியிட்டார், மறிந்தார், ஒடுங்கினர்'' என்ற பல சொற்கள் வந்திருப்பதால், இது **பொருட்பின்வருநிலை அணி,** ஆகும்.

துரியோதனன் விசயனை எதிர்த்தல்

**83.** தேவ ருக்கரச னுந்துகன பந்திநிகர்
தேரி டைப்பணிநெ டுங்கொடிநு டங்கியெழ
மாவு கைத்துவல வன்றிறலு டன்கடவ
மாமு டிக்கண்மகு டந்திகழ வன்றுபெறு
காவன் மெய்க்கவச முந்தனிபு னைந்துசிலை
கால்வ ளைத்தவிர் பெரும்பிறைமு கஞ்செய்கணை
தூவி யுற்றெதிர்மு னைந்தன னனந்த வொளி
தோய்க ழற்றரணி மண்டலது ரந்தரனே.

(தேவருக்கு அரசன் உந்து கன பந்தி நிகர் தேரிடை பணி நெடுங்கொடி நுடங்கி எழ, மா உகைத்து வலவன் திறலுடன் கடவ, மாமுடிக்கண் மகுடம் திகழ அன்று பெறு காவல் மெய் கவசமும் தனி புனைந்து, சிலை கால் வளைத்து, அவிர் பெரும்பிறை முகம் செய் கணை தூவி உற்று எதிர் முனைந்தனன் அனந்தம் ஒளி தோய் கழல் தரணி மண்டல துரந்தரன், ஏ.]

**விளக்கம்** :- தேவருக்கு அரசன் - இந்திரன். கன பந்தி - மேகக் கூட்டம். அன்று பெறு காவல் மெய் கவசம் - அன்று ஆசிரியனிடம் இருந்து பெற்ற உடலுக்குப் பாதுகாப்பைத்தரும் கவசம். பிறை முகம் செய்கணை - அர்த்த சந்திரனைப் போன்ற வடிவமுடைய கணைகள். அனந்தம் ஒளி தோய்கழல் தரணி மண்டலதுரகன் - மிகுதியான ஒளியைத் தன்னிடத்தே கொண்ட வீரக்கழல் அணிந்த பூ மண்டலம் முழுதையும் தாங்குபவனான துரியோதனன். இந்திரனது வாகனமான மேகராசியை ஒத்த தேரில், ஆசிரியனிடம் அழிவில்லாத கவசம் பெற்ற துரியோதனன், விசயன் எதிரே வந்து கடும் போரைச் செய்தான், என்பதாம்.

**84. கோம கக்குரிசின் முந்தவிடு வம்புபல**
**கோறெ டுத்தெதிர் விலங்கிவி சயன்றனது**
**தீமு கக்கணைய னந்தநிலை யொன்றின்முனை**
**சேர விட்டனன் விடும்பொழுதி னந்தவிறல்**
**மாம ணிக்கவச மெங்குமுட னொன்றியொரு**
**மால்வ ரைப்புயலி னுண்டுளி விழுந்தபரி**
**சாமெ னத்தலை மழுங்கியவை யொன்றுமவன்**
**ஆக முற்றில வசைந்திலன சஞ்சலனே.**

[கோமகன் குரிசில் முந்த விடும் அம்பு பல கோல் தொடுத்து எதிர் விலங்கி விசயன் தனது தீ முகக் கணை அனந்தம் நிலை ஒன்றில் முனை சேர விட்டனன்; விடும் பொழுதின் அந்த விறல் மா மணி கவசம் எங்கும் உடன் ஒன்றி, ஒரு மால் வரை புயலின் நுண் துளி விழுந்த பரிசு ஆம், என தலை மழுங்கி அவை ஒன்றும் அவன் ஆகம் உற்றில, அசைந்திலன் அசஞ்சலன் ஏ.]

**விளக்கம் :-** கோமகன் குரிசில் - ராசராசனான துரியோதனன். நிலை ஒன்றில் - ஒரே சமயத்தில். முனைசேர - எதிரே சென்று தைக்கும்படி. அசஞ்சலன் அசைந்திலன் – எந்த நிலையிலும் சலியாதவனான துரியோதனன் சிறிதும் சலிக்கவில்லை. நீர் கொண்ட மேகத்தின் பெரு மழைக்கு சிறிதும் சலியாத மலைபோல், அழிவற்ற சிறந்த கவசம் அணிந்த துரியோதனன், விசயனது

சர மழைக்குச் சிறிதும் சலித்திலன், என்பதாம். விலங்கி - விலக்கி, தன்வினை பிறவினைப் பொருளில் வந்துளது, அல்லது, சந்தம் கருதிய விகாரம் என்றுங் கொள்ளலாம்.

**85. வீரன் விட்டன சரங்களவ ஞெண்கவச**
**மேலு றப்படுத லின்றிவிழு கின்றநிலே**
**ஓரி மைப்பினி லறிந்துகும ரன்கையயி**
**லோடு ரைக்கவு வமம்பெறு விடங்கொளயில்**
**தேரி னிற்பொலிய நின்றிருகை கொண்டுநனி**
**சீறி மெய்ப்பட வெறிந்தனனெ றிந்தளவில்**
**வார்சி லேக்குருவின் மைந்தனது கண்டதனே**
**வாளி யிற்றுணி படும்படிம லேந்தனனே.**

[வீரன் விட்டன சரங்கள் அவன் ஒள் கவசம் மேல் உற படுதல் இன்றி விழுகின்ற நிலே ஓர் இமைப்பினில் அறிந்து, குமரன் கை அயிலோடு உரைக்க உவமம் பெறு விடம் கொள் அயில் தேரினில் பொலிய நின்று இரு கை கொண்டு நனி சீறி மெய்பட எறிந்தனன்; எறிந்த அளவில் வார் சிலே குருவின் மைந்தன் அது கண்டு, அதனே வாளியின் துணிபடும்படி மலேந் தனன், ஏ.]

**விளக்கம் :-** வீரன் - விசயன். முருகன் கை அயிலொடு உவமம் உரைக்கப்பெறு விடங்கொள் அயில்-முருகப்பெருமானின் கையில் உள்ள வேலோடு உவமை கூறப்படும் தன்மையதான விஷம்போல் கொடிய வேல். வார் சிலே குருவின் மைந்தன் - துரோண குமாரனுன அசுவத்தாமன். விசயன் தான்விடுத்த சரங் களால் துரியோதனனது சிறந்த கவசம் துளேக்க முடியாது போகவே, அவன்மீது சிறந்த வேலே எறிய, அதை அசுவத்தாமன் துணியச் செய்தான் என்பதாம்.

விசயன்தளரக் கண்ணன் சங்கநாதம் செய்தல்

**86. வாகை நெட்டயிறு ணிந்திடலும் வன்பினுடன்**
**மானி ரைத்திரத முங்கடவி வந்துமுதல்**
**ஆக வத்தினிலு டைந்தவர டங்கமுனே**
**யாயெ திர்த்தொருமு கம்படநெ ருங்கிமிக**
**மோக ரித்துவரு கின்றசெயல் கண்டமரர்**
**மூவ ருக்கரிய வன்கழல்ப ணிந்துபரி**
**தாக முற்றமர்தொ டங்கவும றந்துகமழ்**
**தார ருச்சுனனு யங்கினன நந்தரமே.**

[வாகை நெடு அயில் துணிந்திடலும், வன்பினுடன் மான் நிரைத்து இரதமும் கடவி வந்து, முதல் ஆகவத்தினில் உடைந் தவர் அடங்க முனை ஆய் எதிர்த்து ஒருமுகம்பட நெருங்கி, மிக மோகரித்து வருகின்ற செயல் கண்டு, அமரர் மூவருக்கு அரியவன் கழல் பணிந்து பரிதாகம் உற்று, அமர் தொடங்கவும் மறந்து கமழ் தார் அருச்சுனன் உயங்கினான், அநந்தரம், ஏ—தொடரும்.]

**விளக்கம் :-** வாகை நெடு அயில் - வெற்றி தரவல்ல நீண்ட வேல். மான் நிரைத்து - குதிரை வரிசைப்படுத்தி. ஆகவத்தில் முதல் உடைந்தவர் அடங்க - போரில் இதன்முன் விசயனுக்குத் தோற்றோடியவர் அனைவரும். முனையாய் எதிர்த்து - துணிவு கொண்டு எதிர்த்து வந்து. ஒரு முகம் பட நெருங்கி - (தன்மேல்) ஒன்று பட்டுத் திரண்டு நெருங்கி. மோகரித்து - வீராவேசங் கொண்டு. மூவருக்கு அரியவன் - மும்மூர்த்திகளுள்ளும் சிறந்த வனான கண்ணன். பரிதாகம் - (பரிதாபம்) வருத்தம், பயம், துயரம், தாகம். உயங்கல் - வாடுதல், தளர்தல், மெலிதல். அநந்தரம் - பின்பு. பிழையாத வேல் துண்டுபடலும், தோற்றோடி யவர் எல்லோரும் தேரேறி வந்து வீராவேசத்தோடு தன்னை நெருங்கிவரலைக் கண்ட விசயன், தளர்வுற்றுப் போர் செய்தலை மறந்து, கண்ணனை வணங்கிச் சோர்ந்தவனாய் மயங்கி நின்றான், என்பதாம்.

விசயனது மெலிவுக்குக் காரணம் அவனது ஆயுதங்கள் பயன் படாமையாகும்; எனவே, தளர்ந்து போர் செய்தலையும் மறந்து மயங்கி நின்றான், என்க. அமர் தொடங்கவும் என்பதிலுள்ள உம்மை, அமர் செய்தலின் அவசியத்தைக் குறிக்கும்.

**87.** **கோம ணிக்குரலு கந்துபுற வின்கணுயர்**
**கோவ லர்க்குநடு நின்றுமுன்வ ளர்ந்தமுகில்**
**காம னுக்கினிய தந்தைசம ரம்பொருது**
**காதன் மைத்துனன யர்ந்தநிலை கண்டுபல**
**தாம ரைக்குளொரு திங்களென வங்குலிகொள்**
**தாழ்த டக்கைகளி ரண்டொருமு கம்பயில**
**மாம ணிக்குழன்ம ணங்கமழ் செழும்பவள**
**வாயில் வைத்தனன லந்திகழ்வ லம்புரியே.**

[கோமணி குரல் உகந்து புறவின்கண் உயர் கோவலர்க்கு நடு நின்று முன் வளர்ந்த முகில், காமனுக்கு இனிய தந்தை, சமரம் பொருது காதன் மைத்துனன் அயர்ந்த நிலைகண்டு, பல தாமரைக்குள் ஒரு திங்கள் என அங்குலி கொள் தாழ் தடக்கை கள் இரண்டு ஒரு முகம் பயில, மா மணி குழல் மணம் கமழ் செம் பவளம் வாயில் வைத்தனன் நலம் திகழ் வலம்புரி, ஏ.]

**விளக்கம் :-** கோ மணி - பசுக்களின் கழுத்தில் கட்டப் பட்ட மணிகள். புறவு - முல்லைநிலம். கோவலர் - இடையர். முகில் - காளமேகம் போன்ற கண்ணன். காமன் - பிரத்யும்நனுய் மறுபிறவி எடுத்த மன்மதன். அங்குலி - விரல். ஒரு முகம் பயில - ஒப்பற்ற தனது திருமுகத்தில் பொருந்தும்படி. மாமணி குழல் - உயர்ந்த அழகிய புல்லாங்குழல். நலம் திகழ் வலம்புரி - சிறப்பின் ஓங்கிய பாஞ்சசன்னியம் என்னும் வலம்புரி சங்கம். பசுக்களின் மணி ஓசையை மகிழ்ந்து கொண்டு இடையர் நடு விலே வளர்ந்த கருமுகில் அனையவனும், காமனின் தந்தையு மான கண்ணன், தனது அன்பிற்குரிய மைத்துனனுன விசயன் போர் செய்து தளர்ச்சியுற்ற நிலை கண்டு, விரல்களின் எழிலைக் கொண்ட நீண்ட பெரிய தனது திருக்கரங்கள் இரண்டும் தனது நிகரற்ற திருமுகத்திலே பொருந்த நலம் திகழ் வலம்புரிச் சங்கை, புல்லாங்குழல் மணக்கும் செழும் பவளவாயில் வைத்து ஊதினுன் என்பதாம்.

பகைவரின் வலி ஒடுங்கச் செய்யவும், விசயனது தளர்ச்சி தீரச் செய்யவும் கண்ணன் சங்கநாதம் செய்தான், என்க. தாமரை போன்ற கைகளினுல் வெள்ளிய சங்கத்தை எடுத்து தாமரை போன்ற திருவாயில் வைத்து ஊதியது, தாமரை களினிடையே திங்கள் தோன்றியது போன்றிருந்தது, என்றது நயமுடையது. சந்திரனைக் கண்டு தாமரை குவியும், சந்திரன் போன்ற சங்கத்தை ஊதுகையில் கைகளும் வாயும் குவிதல் இயல்பு. எனவே, "தாமரைக்குள் திங்கள் என" என்றுர். குழல் மணக்கும் வாய், என்றது, இனிய குழல் ஒலியை வெளிப் படுத்தும் திருவாய் என்ற பொருளது.

சங்கநாதத்தால் பகைவர் மோகித்தல்

88 நாகர் பொற்றருவை யம்புவியி லன்றுதரு
நாதன் வச்சிரவ லம்புரிமு ழங்குகுரல்
மேக மொக்குமென வெண்டிரையெ றிந்துபொரு
வேலை யொக்குமென வெங்கணு மெழுந்தபொழு(து)
ஆக முற்றுறநெ கிழ்த்துபுள கம்புரிய
ஆக வத்தெழுக டுஞ்சினம டிந்தவிய
மோக முற்றனரெ திர்ந்துபொரு மண்டலிகர்
மோழை பட்டதுகொ லண்டமுக டுஞ்சிறிதே.

[நாகர் பொன் தருவை அம்புவியில் அன்றுதரு நாதன் வச்சிரம் வலம்புரி முழங்கு குரல் மேகம் ஒக்கும் என, வெண்திரை

எறிந்து பொரு வேலை ஒக்கும் என, எங்கணும் எழுந்தபொழுது, ஆகம் முற்றுற நெகிழ்ந்து புளகம் புரிய; ஆகவத்து எழு கடுஞ்சினம் மடிந்து அவிய மோகம் உற்றனர் எதிர்ந்து பொரு மண்டலிகர், மோழை பட்டது கொல் அண்டம் முகடும் சிறிதே.]

**விளக்கம்:** நாகர்-தேவர். பொன் தரு-பாரிசாதவிருட்சம். சத்யபாமையின் விருப்பத்திற்கு இணங்கி, அதை பூலோகம் கொண்டு வந்தவன் கண்ணன். கண்ணன் எழுப்பிய சங்கத்தின் ஒலி மேகத்தின் இடியையும், கடல் ஒலியையும் ஒக்கும் என்று சொல்லும்படி எங்கும் சென்று பரவினபொழுது, எதிர்த்துப் போர் செய்த மண்டலாதிபதிகளான அரசர்கள் அனைவரும் உடல் தளர்ந்து, மயிர்சிலிர்க்கப்பெற்று, போர் புரிதலில் உண்டான வேகம் மடிந்து அவிய, மோகித்தவராய்ச் செயல் ஒழிந்தனர்; அவ்வேளை, அண்டத்தின் மேல்முகடும் சிறிது பிளப்புண்டது போலும்,-என்பது பொருள். ''அண்டம் மோழைபட்டது கொல்'', என்பது சங்கின் ஒலி மிகுதியையும், அதனால் உண்டான அதிர்ச்சியையும் குறிக்கும். மோழை-வெடிப்பு.

**89.** **பானி றப்புரவி யுந்தியிர தங்கடவு**
**பாகன் மற்றவர்ம யங்கியது ணர்ந்தருளி**
**மேனி லத்துநர கன்றனுயிர் கொண்டதொரு**
**வேல்கொ டுத்திதனில் வென்றிடுதி யென்றளவில்**
**வான வச்சிரன்ம கன்கடிது வந்தபெரு**
**வாழ்வு பெற்றனனெ னும்பரிவி னன்றனது**
**ஞான பத்தியொடெ ழுந்துவலம் வந்துதிரு**
**நாண்ம லர்ப்பதம்வ ணங்கியது கொண்டனனே.**

[பால் நிறம் புரவி உந்தி இரதம் கடவு பாகன், (மற்று) அவர் மயங்கியது உணர்ந்தருளி மேல் நிலத்து நரகன் தன் உயிர் கொண்டது ஒரு வேல் கொடுத்து இதனில் வென்றிடுதி, என்ற அளவில், வானம் வச்சிரன் மகன் கடிது உவந்த பெருவாழ்வு பெற்றனன், எனும் பரிவினன், தனது ஞான பத்தியொடு எழுந்து வலம் வந்து திருநாள் மலர் பதம் வணங்கி அது கொண்டனன், ஏ.]

**விளக்கம் :-** பகைவர் மயங்கியது அறிந்த கண்ணன் முன்னொரு காலத்தில், தேவர்களுக்குத் துன்பம் விளைத்து வந்த நரகாசுரன் உயிர் கவர்ந்த வேலை விசயனிடம் கொடுத்து, 'இதனால் வெல்க' என்ற அளவில் அவன் விரைந்து உவகையோடு 'பெருவாழ்வு பெற்றனன்', என்று (கண்ணனிடம்) அன்பு கொண்டவனாய், ஞானத்தோடு கூடிய பக்தியோடு (கண்ணனை) வலம் வந்து வணங்கி அந்த வேலைப் பெற்றுக் கொண்டான் என்பதாம்.

பால்நிறப்புரவி-விசயனது வெண்ணிறமுடைய தேர்க் குதிரைகள். வானவச்சிரன் மகன்-இந்திர குமாரனுன விசயன் பரிவு-அன்பு. நாள்மலர்-புதிய மலர்.

**90.** மாறு பட்டிவனை யின்றுயிர்க வர்ந்துவிடின்
மாம ருத்தின்மகன் வஞ்சின மழிந்துவிடும்
ஊறு பட்டுவெரு வும்படியெ றிந்தமரின்
ஓடு விப்பதுபெ ருந்தகைமை யென்றுகொடு
நூறு பட்டமக வின்றலைவ னெஞ்சமிக
நோத கக்கடிதெ றிந்தனனெ றிந்தளவில்
நீறு பட்டதுபெ ருங்கவசம் வந்தவழி
நேர்ப டத்திருகி னன்சமரி னின்றிலனே.

[மாறுபட்டு இவனை இன்று உயிர் கவர்ந்துவிடின் மா மருத்தின் மகன் வஞ்சினம் அழிந்துவிடும்; (ஆகவே) ஊறுபட்டு வெருவும்படி எறிந்து அமரின் ஓடுவிப்பது பெருந்தகைமை, என்று கொடு, நூறுபட்ட மகவின் தலைவன் நெஞ்சம் மிக நோதக கடிது எறிந்தனன், எறிந்த அளவில், நீறுபட்டது பெருங்கவசம், வந்த வழி நேர்பட திருகினன், சமரில் நின்றிலன், ஏ.]

**விளக்கம்:** மாறுபட்டு-எதிர்த்து. மருத்தின் மகன்-பீமன். ஊறுபட்டு-காயம் உண்டாகப்பட்டு. பெருந்தகைமை-செய்யத் தகுந்த சிறந்த காரியம் ஆகும். ''துரியோதனனை இப்பொழுது கொன்றுல் வீமனது வஞ்சினம் வீணுகும். ஆகவே, அவன் இரணத்தோடு அஞ்சி ஓடும்படி செய்தலே தக்கது'', என்று எண்ணி, வேலை ஏவினுன்; கவசமும் பொடிபட்டு அழிந்தது, வந்தவழியே அவனும் களம் அகன்று சென்றுன், என்பதாம். நூறுபட்ட மகவின் தலைவன் நூறு என்ற எண்ணுடைய திருத ராட்டிர புதல்வர்களுள் தலைவனுன துரியோதனன். நோதக— வருந்த.

**91.** ஆறு பத்திருப தைம்பதுபெ ரும்பகழி
யாக விட்டுவரி வன்சிலையும் வெம்பரியும்
ஏறு பைந்தலைநெ டுந்துவச மும்புதிய
வேழு தட்டிரத முந்துணிசெய் தங்கருகு
சீறு தற்குவரு திண்குருவின் மைந்தனெடு
தேர ருக்கன்மக னுஞ்சகுனி யும்பலரும்
வீறு கெட்டிருப தங்கொடுவி ரைந்துசெல
மீள விட்டனன்மு னெண்டிசையும் வென்றவனே.

[ஆறுபத்து இருபது ஐம்பது பெரும் பகழி ஆக விட்டு வரி வன் சிலையும் வெம் பரியும், ஏறு பைந்தலை நெடுந்துவசமும் புதிய ஏழு தட்டு இரதமும் துணி செய்து, அங்கு அருகு சீறுதற்கு வரு திண் குருவின் மைந்தனொடு தேர் அருக்கன் மகனும் சகுனியும் பலரும் வீறு கெட்டு இரு பதம் கொடு விரைந்து செல மீள விட்டனன், முன் எண் திசையும் வென்றவன், ஏ.]

**விளக்கம் :-** எட்டுத் திசைகளில் உள்ளாரை எல்லாம் முன்பு வென்றவனான விசயன் தனது சிறந்த கணைகளை, ஆறுபத்தும் (அறுபதும்) இருபதும், ஐம்பதுமாக விட்டு, துரியோதனனது வில்லையும் பரியையும் (குதிரைகளையும்) படத்தையுடைய தலையின தான பாம்பின் வடிவம் ஏறியிருக்கப் பெற்ற கொடியையும் ஏழு தட்டுக்களை உடைய புதுமையான தேரையும் அழித்து, (அதன் பின்) அங்கு அவன் அருகில் நின்று சீறித்தன்னோடு பொருதற்கு வந்த அசுவத்தாமன், கர்ணன், சகுனி ஆகியவரும், (அவர் களுக்குத் துணை அமைந்த) மற்றும் பலரும் ஆற்றல் அழிந்து கால் கொண்டு ஓடும்படி மறுபடியும் பல கணைகளைச் செலுத்தினான், என்பதாம்.

விசயன், துரியோதனனது கவசத்தைப் பிளந்ததை முன் செய்யுளில் கூறிய புலவர், அவன் தேர் முதலியவற்றை இழந்த தையும் இக்கவியில் விரித்துக் கூறினார். துரியோதனன் தேர் முதலியவற்றை அழித்ததும், துணை வந்தவர் ஆற்றல் அழித்ததும், அவன் பின்னிட்டு ஓடு முன் நிகழ்ந்தவையாகும். அவ்வாறாக, நிகழ்ச்சியை முறை மாற்றிக் கூறியது **முறையில் உயர்வு நவிற்சி** யின் பாற்படும். சீறுதல் - பொருதல்; சீறுதல், காரணம்; பொருதல் காரியம். காரியத்தைக் காரணத்தின் மேல் ஏற்றிக் கூறியது உபசார வழக்கின்பாற்படும்.

### கலி விருத்தம்

**92. வேர்த்தெதிர் விசயன் வென்றக ளத்தில்**
**ஆர்த்தெதிர் வந்தா ரார்கொல்பி ழைத்தார்?**
**ஏத்திய பதினெண் பூமியி னெண்ணும்**
**பார்த்திவர் பற்பல் லாயிரர் பட்டார்.**

[வேர்த்து எதிர் விசயன் வென்ற களத்தில் ஆர்த்து எதிர் வந்தார் ஆர் கொல் பிழைத்தார்? ஏத்திய பதினெண் பூமியின் எண்ணும் பார்த்திவர் பல் பல் ஆயிரர் பட்டார்.]

**விளக்கம் :-** கோபத்தினால் வியர்த்து விசயன் (பகைவர்) எதிர் சென்று வென்ற போர்க் களத்தில், வீர முழக்கம் செய்து

கொண்டு (விசயன்) எதிர் வந்தவர்களில் பிழைத்தவர் யார்? ஏத்திய (சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற) பதினெட்டுத் தேசங் களிலுமுள்ள வீரர் என்று மதிக்கப்படும் அரசர்கள் பல்லாயிரர் அழிந்து போயினர்,—என்பது பொருள்.

**93. தம்பிய ருந்துச் சாதனன் முதலோர்**
**அம்பில ழிந்து தமாருயி ருய்ந்தார்**
**எம்பெரு மானன் றெரிகணை யேவ**
**அம்பர முற்ற தனைவரு முற்றார்.**

[தம்பியரும் துச்சாதனன் முதலோர் அம்பில் அழிந்து தம் ஆர் உயிர் உய்ந்தார்; எம்பெருமான் அன்று எரி கணை ஏவ அம்பரம் உற்றது அனைவரும் உற்றார்.]

**விளக்கம் :-** துச்சாதனன் முதலியவர்களான தம்பியரும், விசயன் கணைகளால் வலி ஒடுங்கி முதுகிட்டுத் தமது அரிய உயிர் பிழைத்தாராயினர்; எம்பெருமான் (இராமபிரான்) முன்யுகத்தில் ஆக்நேயாத்திரத்தைப் பிரயோகிக்க, அதனால் சமுத்திரம் பட்ட பாட்டைப் (பகைவர்) பட்டனர்,—என்பது பொருள். அம்பரம் - கடல்.

**94. மாரதர் வீழ்ந்தா ரதிரதர் மாய்ந்தார்**
**சாரதி களும்வன் தலைகளி ழந்தார்**
**நாரதன் முதலோர் நாகர நேகர்**
**பாரத மின்றே பற்றறு மென்றார்.**

[மாரதர் வீழ்ந்தார், அதிரதர் மாய்ந்தார், சாரதிகளும் வல் தலைகள் இழந்தார்; நாரதன் முதலோர் நாகர் அநேகர் பாரதம் இன்றே பற்று அறும் என்றார்.]

**விளக்கம் :-** மாரதர்களும் அதிரதர்களும் பட்டனர்; சாரதி களும் தலைகளை இழந்தனர்; (வானிலிருந்து போர் கண்டிருந்த) நாரதர் முதலிய பல தேவர் பாரதப் போர் இன்றோடு முற்ற முடிந்திடும்; என்றார், என்பது பொருள்.

உயிரழிந்தார் என்ற பொருளுடைய, வீழ்ந்தார், மாய்ந்தார், தலைகள் இழந்தார், என்ற பல சொற்கள் வந்திருத்தல், **பொருள் பின்வருநிலை அணி** ஆகும்.

**95.** இந்தவ யப்போ ரிம்முறை வென்று
பைந்துள வோனும் பார்த்தனு மாகச்
சிந்தும கீபற் றேடிம ணித்தேர்
உந்துறு மெல்லை யுற்றது ரைப்பாம்.

**விளக்கம் :-** செய்யுள் சுலபமானது. பதப்பிரிவு தரவில்லை. இந்த வய போர் - இந்த வலிய போர். சிந்து மகீபன் - சயத்திரதன் இவ்விதமாகப் போர் வென்று கண்ணனும், பார்த்தனும் சயத்திரதனைத் தேடித் தேரைச் செலுத்துகையில், நிகழ்ந்ததை இனிக் கூறுவோம், என்று புலவர் கூறினர், என்பதாம்.

சங்கொலி கேட்டுத் தருமன் தளர்தல்

**96.** வள்ளல்கு றித்த வலம்புரி நாதத்
தெள்ளமு தந்தன் செவியுறு போழ்தின்
உள்ளணி நின்ற முரசமு யர்த்தோன்
தள்ளுறு நெஞ்சிற் சங்கைய ுனுன்.

**விளக்கம் :-** அடியார்க்கு அருளும் வள்ளலான கண்ணன் ஊதி எழுப்பிய ஓசையாகிய தெளிந்த அமுதம் தனது செவி சேர்ந்த அளவில், வியூகத்தின் உட்புறம் இருந்த தருமன் சஞ்சலத்தால் அலைக்கப்படும் தனது மனத்தில் சந்தேகம் கொண்டான், என்பதாம். சங்கொலி கேட்டதும், விசயனுக்கு என்ன நேர்ந்ததோ, என்று தருமன் எண்ணிக் கலங்கினான்,—என்பது கருத்து.

**97.** தன்றுணை நின்ற சாத்தகி யைக்கூய்
வென்றிடு போரில் விசய னிளைத்தால்
அன்றிமு ழங்கா னதிர்வளை யையன்
சென்றறி குதிநீ யென்றுரை செய்தான்.

**விளக்கம் :-** சங்கநாதம் கேட்டுக் கலங்கிய தருமன், தனக்குத் துணை நின்ற சாத்தகியை அழைத்து, ''வெற்றி பெறுவதற்கு உரிய போரில் விசயன் இளைத்தாலன்றி ஐயன் (கண்ணன்) சங்கொலி செய்யான்; ஆகவே, நீ அங்கே சென்று நிகழ்ந்ததை அறிக'' என்று கூறினான், என்பதாம்.

கண்ணன் செய்த சங்கொலி, வெற்றியைக் குறிக்கும் ஒலி அல்லாமையின், தருமன் சங்கிக்கலானான், என்க.

வேறு

**98. வன்கட் டிண்டோள் மன்பலர் நிற்க**
**என்கட் டந்தா னின்னுரை யென்னு**
**மன்கட் டாரோன் மலரடி வீழ்ந்தான்**
**தன்கட் டாண்மைத் தன்முனொ டொப்பான்.**

[வன் கண் திண் தோள் மன் பலர் நிற்க, என் கண் தந்தான் இன் உரை என்னு, மன்கள் தாரோன் மலர்அடி வீழ்ந்தான், தன் கட்டு ஆண்மை தன் முனொடு ஒப்பான்.]

**விளக்கம் :-** வன்கண் - வலிய தன்மை, அஞ்சாமை. மன்- மன்னர். என் கண் - என்னிடம். மன் கள் தாரோன் - மிகுதி கொண்ட தேனை உடைய மாலை அணிந்த தருமன். தனது வலிய ஆற்றலில் தன் முன்னவனான கண்ணனை ஒத்தவனான சாத்தகி, என்பது ஈற்றடியின் பொருள். எத்தனையோ பலர் தன் அயலிருக்க என்னை இக்கருமத்தில் ஏவுதலாகிய இனிய வார்த்தையைத் தருமன் கூறினான், என்று சாத்தகி மகிழ்ந்து, அவனை வணங்கினான், என்பதாம்.

வேறு

**99. கண்ணுற நில்லார் கடவுளர் முதலாம்**
**விண்ணவ ரேனும் விசயன் வெகுண்டால்**
**மண்ணிலெ திர்க்கு மன்னவர் யாரோ**
**தண்ணளி நெஞ்சுந் தருமமு மிக்கோய்.**

**விளக்கம் :-** விசயன் வெகுண்டால், கருணையுடைய மனமும் தர்மச் செய்கையும் மிகுத்த தருமனே, தேவர் முதலியோரும் அவன் கண்முன் நிற்கமாட்டார்களே! அவ்வாறாக, மண்ணில் அவனை எதிர்க்க வல்லவர் யாருளர்'—என்று சாத்தகி கூறினான், என்பதாம். கடவுளர் - தேவர். விண்ணவர் - தேவ இனத்தைச் சேர்ந்த கந்தருவர், வித்தியாதரர் முதலியவர்.

**100. என்றறன் மைந்த னேவற லைக்கொண்(டு)**
**அன்றொரு தேர்மே லதிரத ரோடும்**
**சென்றனன் வெய்திற் றேவகி மைந்தன்**
**துன்றிய செருவிற் றூசிபி ளந்தே.**

[என்று அறன் மைந்தன் ஏவல் தலைக் கொண்டு, அன்று ஒரு தேர்மேல் அதிரதரோடும் சென்றனன் வெய்தின் தேவகி மைந்தன், துன்றிய செருவில் தூசி பிளந்தே.]

**விளக்கம் :-** (சாத்தகி) தருமனது ஏவலை ஏற்று (பகைவர்) நெருங்கிச் செய்கின்ற போரில் (அவரது) முன்னணிப் படையைப் பிளந்து கொண்டு, அதிரதர்களோடு (அவன்) ஒரு தேரில் விரைவாகத் தேவகி மைந்தனுன கண்ணனை நாடிச் சென்றுன், என்பதாம்.

சாத்தகி பொரல்

**101.** **விருதொடு முந்த விளங்கிய கொற்றக்**
**கிருதனை யாதிக் கேழலொ டொப்பான்**
**ஒருதனு வுங்கொண் டூர்பரி மாவும்**
**இரதமும் வில்லு மிமைப்பில ழித்தான்.**

[விருதொடு முந்த விளங்கிய கொற்றம் கிருதனை, ஆதி கேழலொடு ஒப்பான், ஒரு தனுவும் கொண்டு ஊர் பரிமாவும் இரதமும் வில்லும் இமைப்பில் அழிந்தான்.]

**விளக்கம் :-** விருது - விருதாவளி, மேன்மையின் அடையாளமாகும் பட்டவரிசை. ஆதிகேழல் - வராகமூர்த்தி. பரிமா - குதிரை. ஆற்றலில் ஆதி வராகத்தை ஒத்தவனுன சாத்தகி, விருதோடு முன் தோன்றிய கிருதவர்மாவை, ஒரு வில்லைக் கொண்டே இமைப்பொழுதில் தேரும் வில்லும் தேர்க் குதிரைகளும் ஆகியவற்றை இழக்கச் செய்தான்,—என்பது பொருள்.

**102.** **பன்மக நூரு யிரவர் பரித்தே**
**ரன்மிக நூரு யிரவர ழிந்தார்**
**மன்மத வெங்கை மலைமிசை வீரன்**
**தன்முன்ம லைந்தான் ரூர்ச்சல சந்தன்.**

[பல்மக நூறு ஆயிரவர், பரிதேரன் மிக நூருயிரவர் அழிந்தார்; மன் மதம் வெம் கை மலை மிசை வீரன் தன் முன் மலைந்தான் தார் சலசந்தன்.]

**விளக்கம் :-** பரிதேரன் மிக, நூறு மக பல் ஆயிரவர், நூருயிரவர் அழிந்தார்; (இந்த நிலையில்) தார் சலசந்தன் மன் மதம் வெம்கைமலை மிசை வீரன் தன் முன் மலைந்தான்,—என்பது அன்வயம்.

குதிரைகள் பூட்டிய தேரையுடையனுன சாத்தகி, போராவேசம் மிகுந்து வரலால், நூறும் (அழிக்கும்) தன்மையுள்ள பல ஆயிரக்கணக்கான கண்ணனது மக்களான வீரர்களும், லட்சக் கணக்கான பிற வீரர்களும், அழிந்தார்கள்; (இந்த நிலையில்)

வெற்றி மாலை தரித்த சலசந்தன் என்ற அரசன், மிகுதியான மதத்தையும் கொடிய துதிக்கையையும் உடைய மலைபோன்ற யானையின் மீது வந்து, வீரனான சாத்தகியின் முன்னே போர் செய்யலானான், — என்பது பொருள். நூறல் - அழித்தல். மக—மகவு. கை மலை—யானை.

**103. தார்ச்சல சந்தன் சாத்தகி யென்னும்**
**கார்ச்செல வாய கணைமழை யாலே**
**போர்ச்சல மில்லாப் புகர்மலை யோடு**
**மேற்சல மெய்தி வெங்கன லானான்.**

[தார் சலசந்தன், சாத்தகி என்னும் கார் செலவு ஆய கணை மழையாலே, போர் சலம் இல்லா புகர் மலையோடு மேல் சலம் எய்தி வெம் கனல் ஆனான்.]

**விளக்கம் :-** போர் மாலை பூண்ட சலசந்தன் என்பான், சாத்தகி என்னும் மேகத்தினின்று வெளிப்படும் அம்பு மழையால் போரில் கலங்குதல் இல்லாத செம்புள்ளிகளைக் கொண்ட முகத்தோடு கூடிய மலை போன்ற யானையோடு, மிகுந்த கலக்கம் எய்தி வெவ்விய கனல் ஆனான், என்பது பொருள். பெரு மழையின் முன் நெருப்பு அவிதல் போல், சாத்தகிமுன், சலசந்தன், வலியழிந்தான், என்பதாம்.

வேறு

**104. நாட்ட மில்லா நரபதி மைந்தர்**
**ஈட்ட மாக வீரிரு வோர்கள்**
**கூட்டம் பெய்யக் கொடுமுனை வென்றான்**
**வேட்டம் போன வெங்களி றொப்பான்.**

[நாட்டம் இல்லா நரபதி மைந்தர், ஈட்டம் ஆக ஈர் இருவோர்கள் கூட்டு அம்பு எய்ய, கொடுமுனை வென்றான், வேட்டம் போன வெம்களிறு ஒப்பான்.]

**விளக்கம் :-** நாட்டம் இல்லாநரபதி-கண் இலாத அரசனான திருதராட்டிரன். ஈர் இருவோர்கள் ஈட்டம் ஆக - நாலு பேர் ஒரு கூட்டமாக (வந்து). கூட்டு அம்பு எய்ய-மிகுதியான அம்புகளைப் பிரயோகிக்க. வேட்டம் - வேட்டை. கண்ணிலான் மைந்தர் நால்வர் ஒன்றுபட்டு வந்து சரமழை பொழிய, வேட்டையாடச் சென்ற யானை போன்ற சாத்தகி, கொடிய போரை வென்றான் என்பதாம்.

**105.** **யாரும் போரி லழிதர வீரம்**
**சாரும் சாபந் தன்னெடு நேமித்**
**தேருந் தானுஞ் சென்றிடு வோனைக்**
**கூரும் சாபக் குருவெதிர் கண்டான்.**

[யாரும் போரில் அழிதர வீரம் சாரும் சாபம் தன்னெடு நேமி தேரும் தானும் சென்றிடுவோனை, கூரும் சாபம் குரு எதிர் கண்டான்.

**விளக்கம் :-** எதிர்த்தோர் அனைவரும் போரில் அழியும்படி வலி பொருந்திய வில்லோடும், சக்கர வலிமை கொண்ட தேரும் தானுமாகச் செல்லும் சாத்தகியை, வில்வித்தையில் தேர்ச்சி மிகக் கொண்ட துரோணன், எதிரில் கண்டான், என்பது பொருள்.

கலித்துறை

**106.** **ஏக லேகலென் னுடனினி யமர்புரிந் தேகென்(று)**
**ஆகு லம்படத் தகைந்தன னடற்சிலை யாசான்**
**மேக வண்ணனுக் கிளவலும் வேதிய ருடன்போர்**
**மோக ரிப்பது தகுதியன் றெனக்கென மொழிந்தான்.**

[ஏகல் ஏகல் என்னுடன் இனி அமர் புரிந்து ஏகு என்று, ஆகுலம்பட தகைந்தனன் அடல் சிலை ஆசான்; மேகவண்ண னுக்கு இளவலும் வேதியருடன் போர் மோகரிப்பது தகுதி அன்று எனக்கு என மொழிந்தான்.]

**விளக்கம் :-** ''ஏகல், ஏகல், என்னுடன் போர் செய்து, அதன்பின் செல்க,'' என்று ஆரவாரத்தோடு துரோணன் சாத்த கியைத் தடுத்தான்; கண்ணனது இளவலான சாத்தகியும், அந்தணரோடு போரை உக்கிரத்தோடு செய்வது எனக்குத் தக்க தன்று, என்று எதிர் மொழிந்தான், என்பதாம்.

போர்த் தொழிலை மேற்கொள்ளும் உரிமையில்லாத வேதிய னாகிய நான் பொரல் அமையாது, என்ற சாத்தகியின் கூற்று, துரோணனை இகழும் குறிப்பினது.

**107.** **இருவ ருந்தம திருசிலை யெதிரெதிர் குனித்தார்**
**இருவ ருங்கொடும் பகழியு முறைமுறை யெய்தார்**
**இருவ ருந்தம தேர்சிலை யாவையு மிழந்தார்**
**இருவ ரும்பெரும் பொழுதமர் விளைத்தன ரிளைத்தார்.**

[இருவரும் தமது இரு சிலை எதிர் எதிர் குனித்தார், இருவரும் கொடும் பகழியும் முறை முறை எய்தார். இருவரும் தம் தேர் சிலை

யாவையும் இழந்தார், இருவரும் பெரும் பொழுது அமர் இளைத்தனர், இளைத்தார்.]

**விளக்கம் :-** துரோணனும் சாத்தகியும் நெடும் பொழுது விடாது போர் செய்து இளைத்தனர், என்பதாம். துரோணன் போர் செய்ததினல், சாத்தகியும், எதிரம்பு தொடுக்க வேண்டியவனுனன்; இருவரும் தேர், வில் ஆகியவற்றை இழந்து இளைத்தனர், என்க.

**108. இளைத்து வேதிய னிற்பமன் னவனிளைப் பாறி**
**உளைத்த டம்பரித் தேருமற் றென்றுமேற் கொண்டு**
**வளைத்த வில்லொடு மன்னணி கலக்கிமேல் வருவோன்**
**கிளைத்த பல்பெருங் கிரணனில் வயங்கொளி கிளர்ந்தான்.**

[உளைத்து வேதியன் நிற்ப, மன்னவன் இளைப்பு ஆறி, உளை தட பரி தேரும் மற்று ஒன்று மேல் கொண்டு, வளைத்த வில்லொடும் மன் அணி கலக்கி மேல் வருவோன், கிளைத்த பல் பெருங் கிரணனில் வயங்கு ஒளி கிளர்ந்தான்.]

**விளக்கம் :-** வேதியன் - துரோணன். மன்னவன் - சாத்தகி. உளை - பிடரிமயிர். மன் அணி - (பகைவரின்) பெரிய படை அணி வகுப்பு. கிளைத்த பல் பெருங் கிரணன் - நிறைந்து நெருங்கிய பல ஒளிக்கிரணங்களை உடைய சூரியன். (அச்சூரியனைப் போல்) வயங்கு ஒளி கிளர்ந்தான் - விளங்கும் தேககாந்தி சிறக்கத் தோன்றினன்.

இராகுவினல் பிடிக்கப்பட்ட சூரியன், அதனின்று மீண்டதும், மிகுந்த ஒளியோடு பிரகாசிப்பதுபோல், இளைப்புற்ற சாத்தகி, சோர்வு தீர்ந்து பகைப் படையைக் கலக்கிக் கொண்டு விசேஷமான ஒளி விளக்கத்துடன் மேலே சென்றுன், என்பது கருத்து.

**109. யானை தேர்பரி வீரரீ ரொன்பது நிலத்துத்**
**தானை யோடுதுச் சாதன னடுத்தெதிர் தடுத்தான்**
**சோனை மேகமொத் திவன்பொழி தொடைகளாற் கலங்கிப்**
**பூனை போலழிந் திருபதஞ் சிவந்திடப் போனுன்.**

[யானை தேர் பரி வீரர், ஈர் ஒன்பது நிலத்து தானையோடு துச்சாதனன் அடுத்து எதிர் தடுத்தான்; சோனை மேகம் ஒத்து இவன் பொழி தொடைகளால் கலங்கி, பூனைபோல் அழிந்து இரு பதம் சிவந்திட போனுன்.]

**விளக்கம் :-** ஈர் ஒன்பது நிலம் - பதினெட்டுத் தேசம். சோனை மேகம் - விடாது பெய்யும் மழை. மேலேறிச் சென்ற

சாத்தகியை, பதினெட்டுத் தேசங்களினின்றும் துணையாக வந்த சதுரங்க சேனையுடன் துச்சாதனன், எதிரே நெருங்கித் தடுத்தான்; ஆனால், சாத்தகியின் சரமழையால் வலியழிந்து கலங்கிப் பூனைபோல் ஓடினான், என்பதாம். தேரில் வந்தவன், காலால் நடந்து சென்றானதலால், ''பதம் சிவந்திட'', எனப்பட்டது. அடங்கி ஒடுங்கி அவன் ஓடினமையின், ''பூனை போல்'', என்றார்.

**110. இடையில் வந்துவந் தெதிர்ந்தவர் யாரையுங் கடந்து**
**புடைவ ருந்தன தனீகினி நிழலெனப் போதத்**
**தடைய றும்படி தருக்குடன் சார்பெரும் பருவ**
**விடைந டந்தென நடந்தனன் விசயனின் றுழியே.**

[இடையில் வந்து வந்து எதிர்த்தவர் யாரையும் கடந்து புடைவரும் தனது அனீகினி நிழல் என போத, தடை அறும்படி தருக்குடன் சார் பெரும் பருவ விடை நடந்து என நடந்தனன், விசயன் நின்ற உழி, ஏ.]

**விளக்கம் :-** அனீகம் – (அநீகம்) குதிரை முதலியவற்றின் கூட்டம்; அதை உடையது அனீகினி (அநீகிநி). தன்னைக் குறுக்கிட்டுத் தடுத்த பகைவரை வென்று கடந்து, தனது படை நிழலெனத் தன்னைத் தொடரத் தடையின்றிக் களிப்புடன் செல்லும் இளங்காளைபோல் சென்று விசயன் இருக்கும் இடம் சேர்ந்தான், என்பதாம்.

தருமன் வீமனையும் அனுப்புதல்

**111. பின்ன ருங்கொடி முரசுடைப் பெருந்தகை வருந்தி**
**முன்ன நின்றவா யுவின்மகன் முகனுற நோக்கி**
**மன்ன ரெண்படு வரூதினி வாரியி னுப்பண்**
**என்ன ராயின ரும்பியு மெம்பெரு மானும்?**

[பின்னரும் கொடி முரசு உடை பெருந்தகை வருந்தி, முன்னம் நின்ற வாயுவின் மகன் முகன் உற நோக்கி, மன்னர் எண் படு வரூதினி வாரியின் நாப்பண் என்னர் ஆயினர் உம்பியும் எம்பெருமானும்? குளகமாய்த் தொடர்ந்து முடியும்.]

**விளக்கம் :-** பகை அரசர்களுடைய பெரிய எண்ணிக்கை கொண்ட சேனைக் கடலின் மத்தியில், – என்பது மூன்றாவது அடியின் பொருள். சாத்தகியை அனுப்பிய பின்னரும், விசயன் விஷயமாகச் சங்கை கொண்ட தருமன், தம்பியும், எம்பிரானும் (கண்ணனும்) சேனாசமுத்திரத்தின் இடையில் என் ஆயினரோ?—

(என்று அறிய வீமனை அனுப்பினன்), என்பதாம். இது அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்.

**112. தகல ருந்திறற் சாத்தகி தன்னையும் விடுத்தேம்**
**பகலு மேற்றிசைப் பட்டது பாஞ்சசன் னியமும்**
**புகலு கின்றது போர்முகத் ததிர்குரல் பொம்ம**
**இகல்வ லம்பட நீயுமங் கேகுதி யென்றான்.**

[தகல் அருந்திறல் சாத்தகி தன்னையும் விடுத்தேம், பகலும் மேல் திசை பட்டது, பாஞ்ச சன்யமும் புகலுகின்றது, போர் முகத்து அதிர்குரல் பொம்ம; இகல் வலம்பட நீயும் அங்கு ஏகுதி என்றான்.]

**விளக்கம் :-** தகல் அருந்திறல் சாத்தகி - தகுதியுள்ளவனை அரிய வலியுடைய சாத்தகி. பாஞ்சன்னியமும் போர் முகத்து எதிர் குரல் பொம்ம புகலுகின்றது - கண்ணனது சங்கமான பாஞ்சசன்னியமும் போர்க் களத்தில் அதிர்ச்சி தர வல்ல முழக்கத்தை மிகுதியாகச் செய்கின்றது. இகல் வலம்பட - போரில் வெற்றிக்குரிய வலிமை ஏற்பட. சாத்தகியை அனுப்பிய பின்னும், அமைதி கொள்ளாத தருமன், வீமனை அழைத்து, "பொழுதும் சாயலுற்றது. கண்ணனது சங்கமும் முழங்குகின்றது. நமது பக்கம் வலியுற நீயும் செல்", என்று கூறி, அவனை அனுப்புவித்தான், என்பதாம்.

**113. சொன்ன வார்த்தையும் பிற்பட முற்படத் தொழுது**
**தன்னெ டொத்ததோள் வலியுடைத் தரணிபரநேகர்**
**மன்னு நால்வகைப் படையொடுந் திரண்டிரு மருங்கும்**
**பின்னு முன்னுமொய்த் துடன்வரப் போயினன் பெரியோன்.**

[சொன்ன வார்த்தையும் பின்பட முற்பட தொழுது தன்னெடு ஒத்த தோள்வலி உடை தரணிபர் அநேகர் மன்னு நால்வகை படையொடும் திரண்டு இரு மருங்கும், பின்னும் முன்னும் மொய்த்து உடன்வர போயினன் பெரியோன்.]

**விளக்கம் :-** தருமனது வார்த்தை பின்னாகும்படி விரைந்து, ஒத்த வலியுடைய அரசர்கள், நால்வகைப் படையுடன் முன்னும் பின்னும் நெருங்கிவர, ஆற்றலில் பெரியனான வீமன் தமையனைத் தொழுது விடை கொண்டு சென்றான், என்பதாம். வீமன் மிக விரைவாகச் சென்றான், என்பதை, சொன்ன வார்த்தை பிற்பட முற்படத் தொழுது சென்றான், என்று கூறியது **முறையில் உயர்வு நவிற்சி அணி,** ஆகும்.

## வீமன் பகை அழித்துச் செல்லல்

**114. கலிங்கர் மாகதர் மாளவர் கவுசலர் கடாரர்
தெலுங்கர் கன்னடர் யவனர்சோ னகரொடுசீனர்
குலிங்க ராரியர் பப்பரர் கொப்பளர் முதலோர்
விலங்கி ஞர்களை விண்ணுற விலக்கிமேல் விரைந்தான்.**

**விளக்கம் :-** கலிங்கர் முதல் கொப்பளர் ஈருகவுள்ள அரசர்களில் தன்னை விலங்கினர்களை (குறுக்கிட்டுப் பொருதவர்களை) விண்ணுலகம் ஏறும்படி அகற்றிக் கொண்டு விரைந்து வியூகத்தினுள் சென்றான்,—என்பதாம்.

**115. உரங்க வெங்கொடி யுயர்த்தகா வலன்றனக் கிளையோர்
துரங்க மாதிகொள் பலபெருஞ் சேனையிற் சூழ்ந்தோர்
இரங்கு மாழ்கடல் பேருக விறுதியி லெறியும்
தரங்க நேரென விடையிடை தனித்தனி தகைந்தார்.**

[உரங்கம் வெம் கொடி உயர்த்த காவலன் தனக்கு இளையோர், துரங்கம் ஆதி கொள் பல பெருஞ் சேனையின் சூழ்ந்தோர், இரங்கும் ஆழ்கடல் பேருகம் இறுதியில் எறியும் தரங்கம் நேர் என இடை இடை தனி தனி தகைந்தார்.]

**விளக்கம் :-** துரங்கம் ஆதி கொள் பல பெருஞ் சேனையின் சூழ்ந்தோர் (ஆகிய) உரங்கம்.......இளையோர், இரங்கும் ஆழ் கடல்.......தகைந்தார், என்பது அன்வயம்.

குதிரை முதலியற்றைக் கொண்ட பல பெரிய சேனைகளால் சூழப்பட்டவர்களாகிய துரியோதனனது தம்பியர், மகா கற்பத்தின் முடிவு காலத்தில் ஒலிக்கின்ற ஆழ்கடல் வீசும் அலைகள் ஒப்பென்னும்படி, படையின் மிகுதி கொண்டு வீமனை இடையிடையே தனித்தனி தடுத்தார்கள், என்பதாம். உரங்கம், உரகம், என்பதின் விகாரம்.

**116. முல்லை மல்லிகை யுற்பலங் குமுதமா முளரி
பல்லம் வாளயில் சூலமென் பனமுதற் பகழி
எல்லை யில்லன விடையரு வகைதொடுத் தெதிர்ந்தார்
வில்வி தங்களில் யாவையும் பயின்றகை விறலோர்.**

**விளக்கம் :-** செய்யுள் மிக சுலபமானது. வில் தொழில் வகைகளில் எல்லாவற்றையும் பயின்ற கைத்திறன் உடையவர்களான துரியோதனனது தம்பியர், முல்லை மல்லிகை நீலோற்பலம் குமுதம் மாமுளரி (தாமரை) முதலியவற்றின் அரும்பு

போன்ற முனையை உடைய கணைகளும், பல்லம் என்னும் அம்பு விசேஷங்களும், வாள் வேல் சூலம் என்பனவாகிய ஆயுதங்களும், ஆகியவற்றை அளவிலாதபடி இடையருது பிரயோகித்துக் கொண்டு வீமனை எதிர்ந்து தடுத்தார்கள், என்பதாம்.

## துரியோதனன் தம்பியர் படல்

**117. விந்தன் விந்தர னிருவரு மேலிடு முனையில்
தந்தம் வாசியும் தேர்விடு பாகருந் தாமும்
அந்த ரந்தனிற் றலைகள் போய் முகில்களை யலைப்ப
சிந்து சோரியம் பெருங்கட லலைத்திடச் சிதைந்தார்.**

[விந்தன் விந்தரன் இருவரும் மேலிடு முனையில் தம் தம் வாசியும் தேர்விடு பாகரும் தாமும் அந்தரந்தனில் (வானில்) தலைகள் போய் முகில்களை அலைப்ப, சிந்து சோரி அம்பெருங்கடல் அலைத்திட சிதைந்தார்.]

**விளக்கம் :-** துரியோதனன் தம்பியரான விந்தன், விந்தரன் என்ற இருவரும், மிகுந்து செய்த போரில் தமது குதிரைகளும், தேர்ப்பாகரும், தாமும் ஆக,—தலைகள் வான் போய் மேகங்களை அலைக்கவும், சிந்திய குருதிப் பெருக்கு அழகிய கடலில் கலக்கவும் அழிந்தனர்,—என்பது பொருள்.

**118. போர்க்கு முந்துறு தேரினன் குண்டல போசி
தீர்க்க லோசனன் றிண்டிறற் சித்திர சேனன்
மார்க்க நேர்பட விலங்கிமா மறலிநேர் வரினும்
தோற்க லாதவர் மூவருந் தம்முயிர் தோற்றார்.**

[போர்க்கு முந்துறு தேரினன் குண்டல போசி, தீர்க்க லோசனன், திண் திறல் சித்திரசேனன், மார்க்கம் நேர்பட விலங்கி, மாமறலி நேர் படினும் தோற்கலாதவர் மூவரும் தம் உயிர் தோற்றார்.

**விளக்கம் :-** குண்டலபோசி, தீர்க்கலோசனன், சித்திர சேனன் என்பவர் துரியோதனனது தம்பியர். இம்மூவரும், எமன் வரினும் தோல்வியுறாத ஆற்றலர். அவர்கள், வீமன் (செல்லும்) மார்க்கத்தில் எதிர் சென்று தடுத்து, (அவனால் உயிர் இழந் தார்கள், என்பதாம்.

**119. சேர முப்பது குமாரர்கள் சென்றமர் மலேந்தோர்**
**ஓரொ ருத்தருக் கோரொரு சாயக முடற்றிச்**
**சூரன் மெய்த்துணை நோதகும் படியுடன் றெலேத்தான்**
**மாரு தச்சுதன் வல்லவில் லாண்மையார் வல்லார்?**

[சேர முப்பது குமாரர்கள் சென்று அமர் மலேந்தோர்; ஓர் ஒருத்தருக்கு ஓர் ஒரு சாயகம் உடற்றி, சூரன் மெய்த்துணை நோதகும்படி உடன் தொலேத்தான்; மாருதன் சுதன் வல்ல வில் ஆண்மை யார் வல்லார் ?]

**விளக்கம்:-** (குண்டல போசி முதலிய மூவர் இறந்தபின்) ஒன்று சேர்ந்து சென்று (வீமனேடு) போர் செய்த திருதராட்டிர குமாரர் முப்பதின்மருள், ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வோர் சாயகத்தை (அம்பை) வலிமையோடு செலுத்தி, சூரனுன துரியோதனனது மெய்க்காவல் அமைந்த அத்தம்பியார் அனே வரும் வருத்தமுறும்படி செய்து அவர்களே ஒரு சேர அழித்தான்; வாயுபுத்திரனுன வீமன் வல்லமை பெற்ற வில் தொழில் திறமை யோடு ஒத்த தேர்ச்சியுடையவர் யாவர் வேறு உளர் ?

**120. ஆயு வற்றவர் சுயோதன னிளேஞரே ழைவர்**
**வாயு புத்திரன் வாளியா லாருயிர் மடியச்**
**சாய்த லுற்றது சடக்கெனத் தரணிபன் வியூகம்:**
**தேயு வொத்திவன் சேறலுந் திமிரநே ரெனவே.**

[ஆயு அற்றவர் சுயோதனன் இளேஞர் ஏழ் ஐவர் வாயு புத்திரன் வாளியால் உயிர் மடிய, சாய்தல் உற்றது சடக்கென தரணிபன் வியூகம், தேயு ஒத்து, இவன் சேறலும் திமிரம் நேர் எனவே.]

**விளக்கம்-:** ஆயு - ஆயுள். சடக்கென - விரைவாக. தேயு - அக்னி. திமிரம் - இருள். துரியோதனன் துணேவர் முப்பத்தை வர் பீமன் வாளிகளால் மடியவே, இவன் (வீமன்) அக்னியைப் போல் செல்லவும், தீயின் ஒளியின்முன் இருள் அகல்வது போல், துரியோதனனது வியூகம் விரைவாக அழிதலுற்றது.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**121. ஏகு கின்றது கண்டுபெ ருங்கட**
**லேழு கொண்டுவி ழுங்கிய திர்ந்தெழு**
**மேக மம்புபொ ழிந்தென வெங்கணும்**
**வீசு மம்புவி ரைந்துவி ரைந்திட**

**யூக மின்றுபி ளந்துத னஞ்சய**
**னுேடி வன்புகு தந்திடி னம்படை**
**ஆகு லம்படு மென்றுத டஞ்சிலை**
**யாரி யன்சம ரந்தனின் முந்தவே.**

[ஏகுகின்றது கண்டு பெருங்கடல் ஏழும் கொண்டு விழுங்கி அதிர்ந்து எழு மேகம், அம்பு பொழிந்து என, எங்கணும் வீசும் அம்பு விரைந்து விரைந்திட, யூகம் இன்று பிளந்து தனஞ் சயனுேடு இவன் புகுதந்திடின் நம் படை ஆகுலம் படும் என்று தடஞ் சிலை ஆரியன் சமரந்தனில் முந்தவே.]

**விளக்கம்:-** (வீமன்) ஏகுகின்றது கண்டு தடஞ்சிலை ஆரியன் பெருங் கடல் ஏழும் கொண்டு விழுங்கி அதிர்ந்து எழு மேகம், அம்பு (அப்பு) பொழிந்து என, எங்கணும் வீசும் அம்பு விரைந்து விரைந்திட இவன் இன்று யூகம் பிளந்து தனஞ்சயனுேடு புகுந்திடின், நம் படை ஆகுலம் படும் என்று, சமரந்தனில், முந்த (ஏ), என்பது அன்வயம்.

வீமன் வியூகத்தினுள் செல்லுகின்றது கண்டு, வில் ஆசிரி யனுன துரோணன், சப்த சமுத்திரங்களின் நீரையும் முகந்து கொண்டு, ஆரவாரத்தோடு வான் எழும் மேகம், அம்பு (நீர்) பொழிந்தாற்போல், எங்கும் (வீமன்) வீசும் அம்புகள் மிகவேக மாகச் சென்று தாக்க, இவ்வீமன் வியூகத்தைப் பிளந்து விசய னுேடு சேர்ந்திடுவானுயின், நம் படை கலக்கமடையும் என்று எண்ணி, (அவனைத் தடுக்கும் கருத்தில்) போரில் முன்வர, - (அடுத்த செய்யுளோடு தொடரும்), என்பது பொருள்.

எதிர்ப்போரை அழித்துக் கொண்டு உட்புகும் வீமன், விசயனுேடு சேர்ந்துவிடின், பின்னர் அவர்களை வெல்லல் அரிய தாகும், என்று எண்ணித் துரோணன், அவனைத் தடுக்கும் பொருட்டு, முன் வந்தான், என்பதாம்.

**122. ஆதி யந்தணன் வந்தது கண்டிகல்**
**ஆனி லன்சின மின்றிந லம்பெறு**
**நீதி யன்றுனு டன்சம ருந்திடல்**
**நீபெ ருங்குரு நின்கழ லென்றலை**
**மீது கொண்டன னென்றுவ ணங்கவும்**
**வேதி யன்கைமி குந்துபு குந்தெதிர்**
**மோதி யம்புதெ ரிந்தனன் வன்றிறல்**
**மூரி வெஞ்சிலை யுங்குனி கொண்டதே.**

[ஆதி அந்தணன் வந்தது கண்டு இகல் ஆனிலன் சினம் இன்றி, நலம் பெறு நீதி அன்று உனுடன் சமர் உந்திடல், நீ பெருங்குரு, நின்கழல் என் தலை மீது கொண்டனன் என்று வணங்கவும், வேதியன் கை மிகுந்து புகுந்து எதிர் மோதி அம்பு தெரிந்தனன், வல் திறல் மூரி வெம் சிலையும் குனி கொண்டது, ஏ.]

**விளக்கம் :-** இகல் ஆனிலன் (அநிலன் - வாயு) வலிய வாயு குமாரனான வீமன். வீமன் பணிவுமொழி கூறிக் குருவை வணங்கவும், வேதியன், அம்புகளை ஆய்ந்தெடுத்து வில்லையும் வளைத்தான்' - என்பதாம். கைமிகல் - அளவு கடத்தல். மோது, என்பது தடுத்து, என்ற பொருளது.

**123.** **வீர னொன்றுமொ ழிந்திலன் வந்துமுன்**
**வீழ்ச ரங்கள்வி லங்கி வயம்புனை**
**தேரி னின்றுமி ழிந்துந டந்தெதிர்**
**சேர வந்துசெ ழுஞ்சிலை யின்குரு**
**ஊரு கின்றவ யங்கிர தந்தனை**
**யோரி ரண்டுக ரங்கொடு வன்புடன்**
**வாரி யுந்தவெ றிந்தனன் வண்புயல்**
**வானி னின்றவ ரஞ்சியொ துங்கவே.**

[வீரன் ஒன்றும் மொழிந்திலன், வந்து முன் வீழ் சரங்கள் விலங்கி வயம்புனை தேரினின்றும் இழிந்து நடந்து எதிர் சேர வந்து, செழும் சிலையின் குரு ஊருகின்ற வயங்கு இரதம் தனை ஓர் இரண்டுகரங்கொடு வன்புடன் வாரி உந்த எறிந்தனன், வண் புயல் வானின் நின்றவர் அஞ்சி ஒதுங்கவே.]

**விளக்கம் :-** வீரன் - வீமன். தனது விநய மொழியை ஆசிரியன் ஏற்காமல் வில்லை வளைக்கவே, வீமன், கணைகள் தன் மேல் விழாமல் காத்துக் கொண்டு தேரினின்றும் இழிந்து ஆசிரியனது தேரைப் பற்றி, வானுளோர் அஞ்சும்படி மேல் நோக்கி வீசினான், என்பதாம். உந்த வீசினான் - மேலெழும்படி எறிந்தான்.

**124.** **நாக விந்தம்வ ளர்ந்துகி ளர்ந்தது**
**நாக மொன்றிய தென்றுந டுங்கிட**
**மேக பந்திக லங்கவெ ழுந்தது**
**மீள வும்புவி யின்கண்வி ழுந்தது**

பாக னங்கநெ ரிந்தது நொந்தது
பார்மு கந்துளை விண்டன மண்டுருள்
வேக வெம்பரி யுந்தலை சிந்தின
வேதி யன்றன தென்புமொ டிந்ததே.

[நாகம் விந்தம் வளர்ந்து கிளர்ந்தது, நாகம் ஒன்றியது என்று நடுங்கிட, மேகம் பந்தி கலங்க எழுந்தது, அது மீளவும் புவியின் கண் விழுந்தது; பாகன் அங்கம் நெரிந்தது நொந்தது பார்முகம், துளை விண்டன மண்டு உருள்; வேகம் வெம்பரியும் தலை சிந்தின, வேதியன் தனது எலும்பும் ஒடிந்தது. ஏ.]

**விளக்கம் :-** விந்தம் நாகம் - விந்திய மலை, நாகம் - மலை, மேகம் பந்தி - மேகத்தின் வரிசை, பார் முகம் நொந்தது- தேரின் பார் நலங்குலைந்தது. மண்டு உருள் துளைவிண்டன - வலிய தேர்ச் சக்கரங்கள் பிளவுபட்டன. வீமன், தேரை உந்த வீசவே, தேர் உருக்குலைந்தது, பாகனது உடல் நெரிபட்டது, வேதியனது எலும்புகளும் ஒடிந்தன, என்பதாம்.

வீமன் வீசிய தேரைக் கண்டு தேவர்கள், முன்னொரு காலத்தில் அகத்தியனால் அடக்கப் பெற்ற விந்தியமலை, மீண்டும் வளர்தலுற்று மேல் நோக்கி வருகின்றதோ ? என்று அஞ்சினர், என்ற இவ்வருணனை, **மயக்க அணி.**

**125.** வீழ விங்கும வன்றனை வென்றிவன்
மேன டந்துழி யெண்டிசை யும்படை
சூழ வந்துவ ளைந்தன ரந்தக
தூதர் தங்களி னும்பெரு வஞ்சகர்
ஏழு மண்டல மும்புதை யும்பரி
சேறு கின்றத ரங்கநெ டுங்கடல்
ஊழி யும்பெயர் கின்றதெ னும்படி
யோதை விஞ்சவு டன்றுசி னங்கொடே.

[வீழ இங்கும் அவன்தனை வென்று இவன்மேல் நடந்துழி, எண் திசையும் படை சூழ வந்து வளைந்தனர் அந்தக தூதர் தங்களினும் பெரு வஞ்சகர், ஏழு மண்டலமும் புதையும், பரிசு ஏறுகின்ற தரங்கமும் நெடுங்கடல், ஊழியும் பெயர்கின்றது எனும்படி ஓதை விஞ்ச உடன்று சினம் கொடு, ஏ.]

**விளக்கம் :-** இங்கும், என்பதிலுள்ள உம்மையைப் பிரித்து, **அவன்தனையும்,** என்று கூட்டுக. இங்கு வீழ அவன்தனையும் வென்று, இவன் மேல் நடந்துழி அந்தக தூதர் தங்களினும் பெரு

வஞ்சகர், ஏழு மண்டலமும்....சினங்கொடு, எண் திசையும் படை சூழ வந்து வளையுந்தனர், என்பது அன்வயம்.

துரோணன் எலும்பு ஒடிந்து விழும்படி அவனை வென்று, இவன் (வீமன்) மேலேறிச் சென்ற பொழுது, யமதூதர்களினும் வலியவர்களான வஞ்சகர் அநேகர், ஏழுதீவுகளாகவுள்ள இவ் வுலகம் புதையும்படி பொங்கி எழும் அலைகளை உடைய பெரிய பிரளயக்கடலினுல் கற்பம் மாறுகின்றது என்று சொல்லும்படி ஒலி மிக, பகைத்து, கோபத்தோடு எட்டுத்திசைகளிலும் படை சூழ வந்து (வீமனை) வளைத்துக் கொண்டனர், என்பதாம். ஊழிபெயர்தல் - கற்பம் மாறுதல்.

**126.** **காரி லைந்தும டங்குபு லம்பின**
**காக ளஞ்சுரி சங்குமு ழங்கின**
**பேரி பம்பின கொம்புத ழங்கின**
**பேரி யங்கள்பெ யர்ந்துக றங்கின**
**பூரி யும்பொரு தஞ்சிய வந்தியர்**
**பூப னும்புற மன்றிட வெங்கணை**
**மாரி சிந்திம லைந்தனன் வெஞ்சினம்**
**மாற முன்பவ னன்றிரு மைந்தனே.**

[காரில் ஐந்து மடங்கு புலம்பின காகளம், சுரிசங்கும் முழங்கின, பேரி பம்பின, கொம்பு தழங்கின, பேர் இயங்கள் பெயர்ந்து கறங்கின, பூரியும் பொருது அஞ்சி அவந்தியர் பூபனும் புறம் அன்று இட வெம் கணை மாரி சிந்தி மலைந்தனன் வெம் சினம் மாற, முன்பவனன் திருமைந்தன், ஏ.]

**விளக்கம்:-** கேமத்தினும் ஐந்து மடங்கு அதிகமாக, காகளம், சங்கு, பேரிகை, கொம்பு, பெரிய இயங்கள் (பலவித வாத்தியங்கள்) ஒலித்தன, என்று முதலிரண்டு அடிகளின் பொருள். காகளமும், கொம்பும் ஊது கருவி, மற்றவை அடிக்கும் வாத்தியங்கள். பெயர்ந்து கறங்கின - எழுச்சியோடு ஒலித்தன. பூரி என்பவனும். அவந்தி நாட்டு அரசனும் (தன்னேடு) பொருது அஞ்சி, அன்று (அப்பொழுது) பின்னிடும் படி வாயுகுமாரனுன வீமன், கொடியகணை மழை பொழிந்து, (தனது) சினம் மாற, முன்னின்று போர் செய்தான், என்பது ஈற்றடிகளின் பொருள்.

ஒலித்தல், என்ற பொருளில் பல சொற்கள் வருந்திருப் பதால், இது பொருட் பின்வருநிலை அணி ஆகும்.

127. மாசு ணந்தலை நொந்துசு ழன்றன
மாதி ரங்கண்ம ருண்டுக லங்கின
வீசு தெண்டிரை யம்புவெ தும்பின
மேலை யண்டமும் விண்டுப கிர்ந்தன
பூச லின்கணு டன்றுக ழன்றவர்
போர்தொ டங்கநி னைந்துபு குந்தனர்
ஆசு கன்றிரு மைந்தனு டன்சுட
ராத பன்கும ரன்சமர் முந்தவே.

[மாசுணம் தலை நொந்து சுழன்றன, மாதிரங்கள் மருண்டு கலங்கின, வீசு தெள் திரை அம்பு வெதும்பின, மேலை அண்டமும் விண்டு பகிர்ந்தன; பூசலின்கண் உடன்று கழன்றவர் போர் (மீண்டும்) தொடங்க நினைந்து புகுந்தனர், ஆசுகன் திரு மைந்தனுடன் சுடர் ஆதபன் குமரன் சமர் முந்தவே.]

விளக்கம்:- ஆசுகன் திருமைந்தனுடன் சுடர்.........சமர் முந்தவே, பூசலின் கண்.......புகுந்தனர்; (வந்துகளம் புகுந்தவர் பாரத்தால்), மாசுணம்...அண்டமும் விண்டு பகிர்ந்தன, -என்பது அன்வயம். ஆசுகன் - வாயு. சுடர் ஆதபன் - சூரியன். வீமனோடு கர்ணன் போர் தொடங்கவே, இதன் முன் போர் செய்து தோற்று ஓடியவர், மீண்டும் போர் செய்ய நினைந்து களம் புகுந்தனர்; (அவர்களது பாரத்தால்) மாசுணம் (ஆதிசேஷன் முதலிய நாகங்கள்) தலைவருந்திச் சுழன்றன, திசைகள் திகைத்துப் போய்க் கலங்கின. வீசு தெள் திரை கடல்கள் வெம்மையுற்றன, அண்டத்தின் மேலிடங்களும் வெடிப்புக்கொண்டு பிளவுபட்டன, - என்பதாம். அம்பு - அப்பு; கடல்.

முதலடிகள் இரண்டு உயர்வு நவிற்சியின் பாற்படும், வீரர்கள் களம் வந்து செய்த ஆரவாரத்தின், அதிர்ச்சியால், அண்டம் விண்டு பகிர்ந்தன, என்க.

128. கோபம் விஞ்சினர் விஞ்சைவ ரம்பெறு
கூர்ச ரங்கடெ ரிந்தனர் கொண்டனர்
சாப முங்குனி தந்தெதி ருந்தினர்
தாரை வெம்பரி தங்கிர தங்களும்
நீப மெங்கும லர்ந்தென மண்டுசெந்
நீர்ப ரந்திட நின்றுமு னைந்தெழு
பூபர் தங்களு டம்புசி வந்தனர்
பூர மெங்கும லைந்துபு ரண்டவே,

[கோபம் விஞ்சினர், விஞ்சை வரம் பெறு கூர் சரங்கள் தெரிந்தனர் கொண்டனர், சாபமும் குனிந்தது, எதிர் உந்தினர், தாரை வெம் பரிதங்கு இரதங்களும், நீபம் எங்கும் மலர்ந்து என மண்டு செம் நீர் பரந்திட நின்று முனைந்து எழு பூபர் தங்கள் உடம்பு சிவந்தனர். பூரம் எங்கும் அலைந்து புரண்டவே.

**விளக்கம்:-** விஞ்சை வரம் பெறு கூர் சரம் - மந்திரத்தோடு வரமாய் பெற்ற கூரிய அத்திரம். தாரை வெம் பரி தாங்கு இரதம்-நடைவேகம் உடைய கொடிய குதிரைகள் பூட்டப் பெற்ற தேர். நீபம் - (சிவந்த பூக்களையுடைய) செங்கடம்பை மரம். மண்டு செந்நீர் - மிகுதியான குருதி. பூரம் - இரத்தம், இரத்தப் பெருக்கு. (கர்ணனும் வீமனும்) கோபம் மிகுந்தவர்களாய் அத்திரங்களை ஆய்ந்து எடுத்துக் கொண்டு, விற்களையும் வளைத்து, கதிவேகம் உடைய குதிரைகளைக் கொண்ட தங்கள் தேர்களை ஒருவருக்கு ஒருவர் எதிரில் செலுத்தினுர்கள், - என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். செங்கடம்பை மரம் எங்கும் பூத்தது போல் இரத்த மிகுதி எங்கும் பரவ, நிலை நின்று போர் செய்து விளங்கும் அரசர் இருவரும் தம் உடல் சிவக்கப் பெற்றுர்கள்; அவர்கள் உடம்பினின்று இழிந்த இரத்தப் பெருக்கு, எங்கும் அலைவீசிக் கொண்டு புரண்டோடின, என்பது ஈற்றடிகளின் பொருள்.

**129.** **மாரு தன்புதல் வன்றொடு மம்பினின்**
**மாவி ரண்டுமி ரண்டும்வி ழுந்தன**
**சோரும் வன்றுவ சந்தறி யுண்டது**
**சூத னுந்தலை சிந்தினன் முந்திய**
**தேரு முந்துரு ளுந்துகள் கொண்டன**
**சேம வெங்கவ சந்துளை விஞ்சிய(து)**
**ஆர வெண்குடை யம்புலி யும்பிறை**
**யான தஞ்சலி னெஞ்சும ழிந்ததே.**

[மாருதன் புதல்வன் தொடும் அம்பினில் மா இரண்டும் இரண்டும் விழுந்தன, சோரும் வல் துவசம் தறியுண்டது. சூதனும் தலை சிந்தினன், முந்திய தேரும் உந்து உருளும் துகள் கொண்டன, சேமம் வெம் கவசம் துளை விஞ்சியது, ஆரம் வெண் குடை அம்புலியும் பிறையானது, அஞ்சல் இல் நெஞ்சும் அழிந்தது, ஏ.]

**விளக்கம் :-** மாருதன் புதல்வன் - வீமன். சோரும் வல் துவசம் - அசைந்தாடும் வலிய கொடி. சூதன் - தேர்ப்பாகன். சேமம் வெம்கவசம் - உடலைக் காக்கும் வலிய கவசம். ஆரம் வெண்குடை அம்புலி - முத்துக்கள் இழைக்கப் பெற்ற வெண் கொற்றக் குடையாகிய சந்திர மண்டலம். பிறை ஆனது - பிறைச்

சந்திரன் போல் பிளவு பட்டது. வீமனது கணைகளால் கர்ணனது தேர்க் குதிரைகளும், கொடியும், பாகன் தலையும் முன்னே வந்து எதிர்த்த தேரும், தேர்ச் சக்கரங்களும் பொடி பட்டன; கவசமும் துளைக்கப் பட்டது, குடையும் உருக்குலைந்தது, அஞ்சுதல் இல்லாத மனமும் உறுதி கெட்டது,—என்பதாம்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**130. அழிந்து கன்னனுங் கால்விசை யினிலிவன்**
**அம்பினுக் கெட்டாமல்**
**வழிந்து போதல்கண் டடல்விட சேனனவ்**
**வள்ளலுக் கெதிரோடி**
**இழிந்து தன்பெருந் தடமணித் தேரின்மேல்**
**ஏற்றலு மிவனேறிக்**
**கழிந்த நீர்க்கணை கோலுவான் போலவன்**
**கண்ணெதி ருறச்சென்ருன்.**

[அழிந்து கன்னனும் கால் விசையினில் இவன் அம்பினுக்கு எட்டாமல் வழிந்து போதல் கண்டு, அடல் விடசேனன், அ வள்ளலுக்கு எதிர் ஓடி, இழிந்து தன் பெருந்தட மணி தேரின் மேல் ஏற்றலும், இவன் ஏறி, கழிந்த நீர்க்கு அணை கோலுவான் போல் அவன் கண் எதிர் உற சென்ருன்.]

**விளக்கம்:-** தேர் முதலியன அழியப் பெற்ற கர்ணனும் காலின் வேகத்தினுல் இவனது (வீமனது) கணைகளுக்கு எட்டாமல் நழுவிச் செல்லல் கண்டு, அவனது மகனுன அடல் விடசேனன் (விருஷசேனன்) என்பான், அந்த வள்ளலான கர்ணனுக்கு முன் ஓடிச் சென்று, தனது பெரிய அழகிய தேரின் மேல் அவனை ஏற்றிக் கொள்ளலும், கர்ணன், கரை கடந்து ஓடும் நீர்ப் பெருக்கிற்கு அணை போடுவது போல், வீமனது கண்ணெதிர் சென்ருன், என்பதாம்.

கரை கடந்து ஓடும் வெள்ளத்திற்கு அணை கோலுதல் பயன் படாமை போல், அவ்வெள்ளம் போன்ற வீமனைக் கர்ணன் எதிர்த்தல் பயன்படாது, என்று கூறும் கருத்தது, ஈற்றடி.

துரியோதனன் தம்பியர் மடிதல்

**131. சென்று மீளவும் வீமனெ டெதிர்ந்துவெஞ்**
**சிலையமர் புரிந்தந்தக்**
**குன்று போனெடுந் தேருநுண் டுகள்படக்**
**குலைந்துவென் கொடுத்தோடக்**

**கன்றி நாகவெங் கொடியவன் கண்டுதன்**
**கண்ணிக ரிளையோரை**
**ஒன்றி நீர்விரைந் துதவுமென் றிருவரை**
**யொருகணத் தினிலேவ.**

[சென்று மீளவும் வீமனோடு எதிர்ந்து வெம்சிலை அமர் புரிந்து, அந்த குன்று போல் நெடுந்தேரும் நுண்துகள் பட குலைந்து வென் கொடுத்து ஓட, கன்றி நாகம் வெம் கொடியவன் கண்டு, தன் கண் நிகர் இளையோரை, ''ஒன்றி நீர் விரைந்து உதவும்'' என்று இருவரை ஒரு கணத்தினில் ஏவ;—குளகமாய்த் தொடரும்.]

**விளக்கம் :-** மறுபடியும் நிகழ்ந்த சிலைப்போரில் கர்ணன் தோற்றுப் பின்னிடலும், துரியோதனன், தனது தம்பியர் இருவரைக் கர்ணனுக்கு உதவுமாறு செலுத்தினான், என்பதாம்.

**132. கன்ன னைக்கடி துற்றிரு வருமது**
**கயிடவ ரெனத்தக்கோர்**
**முன்ன ருக்கரி யனையவீ மனுக்கெதிர்**
**வரிசிலை யுறவாங்கி**
**அந்நி லத்தினி லவனுட னெடும்பொழு**
**தமர்புரிந் தவன்கையின்**
**செந்நி றக்கொடும் பகழியாற் றம்முடல்**
**சிதைந்துவா னிடைச்சென்றார்.**

[கன்னனை கடிது உற்று இருவரும் மதுகயிடவர் என தக்கோர், மன்னருக்கு அரி அனைய வீமனுக்கு எதிர் வரிசிலை உற வாங்கி, அ நிலத்தினில் அவனுடன் நெடும் பொழுது அமர்புரிந்து, அவன் கையின் செம் நிறம் கொடும் பகழியால் தம் உடல் சிதைந்து வானிடை சென்றார்.]

**விளக்கம்:-** மதுகைடபர் - (மது, கைடபன் என்ற பேராற்றலுடைய அசுரர். அவர்கள் திருமாலால் கொல்லப் பட்டார்கள். அவர்களது கொழுப்புப் பூமியில் பட்டமையால், அதற்கு மேதினி, என்பது ஒரு பெயராயிற்று. வீமன் பால் செலுத்தப்பட்ட தம்பியர், அம்மதுகைடபர் என்ற அசுரர்களைப் போன்ற ஆற்றலர். அவர்கள் நெடுநேரம் போர் செய்து, வீமன் கைக் கணையால், அழிந்தனர், என்பதாம்,

கர்ணன் மீண்டும் பொரல்

**133.** **தனது கண்ணெதி ரிருவரு மழிந்தபின்**
**தபனன்மைந் தனுநொந்து**
**கனது ரங்கம முடுகுதேர் வயப்படைக்**
**காவலன் முகநோக்கி**
**உனது தம்பிய ரிருவரைச் செற்றவன்**
**முடித்தலே யொடியேனேல்**
**எனது புன்றலே யவன்கையிற் கொடுப்பனென்**
**றேறினு னொருதேர்மேல்.**

[தனது கண் எதிர் இருவரும் அழிந்தபின் தபனன் மைந்தனும் நொந்து, கன துரங்கமம் முடுகு தேர் வய படை காவலன் முகம் நோக்கி, "உனது தம்பியர் இருவரை செற்றவன் முடி தலே ஒடியேனேல், எனது புன்தலே அவன் கையில் கொடுப்பன்," என்று ஏறினுன் ஒரு தேர் மேல்.]

**விளக்கம் :-** தபனன் - சூரியன். கன துரங்கமம் - சிறந்த குதிரை. தன் கண் எதிரே துரியோதனன் தம்பியர் இருவர் பட்டது கண்டு வருந்திய கர்ணன், துரியோதனனே நோக்கி, "உன் தம்பியரைக் கொன்றவனது முடித்தலே தடியேனேல், என் புன் தலேயை அவனிடம் இழப்பேன்", என்று கூறித் தேர் ஏறினுன், என்பதாம்.

**134.** **குனித்த சாபமுந் தொடுத்தசா யகங்களுங்**
**குலவுமால் வரைத்தோளும்**
**துனித்த நெஞ்சமு முரிந்தன புருவமும்**
**எரிந்தகண் களுந்தோன்றப்**
**பனித்த தேரொடும் போருடன் றெழுதரும்**
**பரிதியின் விரைந்தெய்தி**
**இனித்த ராதல முரககே தனற்கென**
**விளவலோ டிகல்செய்தான்.**

[குனித்த சாபமும் தொடுத்த சாயகங்களும் குலவு மால் வரை தோளும், துனித்த நெஞ்சமும், முரிந்தன புருவமும், எரிந்தன கண்களும் தோன்ற, பனித்த தேரொடும் போர் உடன்று எழுதரும் பரிதியின் விரைந்து எய்தி, இனி தராதலம் உரககேதனன் தனக்கு என, இளவலோடு இகல் செய்தான்.]

**விளக்கம்:-** துனித்த நெஞ்சம் - சினங் கொண்ட நெஞ்சம். பனித்த தேர் - அசைந்து செல்லும் தேர். தராதலம் - நிலவுலகம். உரக கேதனன் - துரியோதனன். இந்தப் பூமி துரியோதன

னுக்கே, என்று எல்லோரும் சொல்லும்படி, கர்ணன், தனது செற்றம் தோன்ற, இருளை அழிக்க வெம்மை கொண்டு வெளிப் படும் சூரியனைப் போல், தனது தம்பியான வீமனுடன் கர்ணன் போர் செய்தான், என்பதாம். ''துரியோதனனாதியரை அழிப்பேன், என்று சபதம் செய்த வீமனைக் கொன்றால், துரியோதனனாதி யருக்குப் பூமி உரியதாய் விடும்'', என்ற எண்ணத்தில் கர்ணன் கடும் போர் செய்தான், என்க.

**135. ஆற்றை யொத்தன கால்வழி யளைபுகு**
**மாமைதொட் டடன்மள்ளர்**
**சேற்றை யொத்தன நித்தில மெடுத்தெறி**
**செல்வநீள் குருநாடன்**
**காற்றை யொத்தனன் வலியினாற் சினத்தினாற்**
**கதிரவன் றிருமைந்தன்**
**கூற்றை யொத்தனன் பிறப்பிலே துவக்குளோர்**
**குணங்களுங் கொள்ளாரோ.**

[ஆற்றை ஒத்தன கால்வழி அளை புகும் ஆமை தொட்டு அடல் மள்ளர், சேற்றை ஒத்தன நித்திலம் எடுத்து எறி செல்வம் நீள் குருநாடன் காற்றை ஒத்தனன் வலியினால் கதிரவன் திரு மைந்தன் கூற்றை ஒத்தனன்; பிறப்பில் துவக்கு உளோர் குணங் களும் கொள்ளாரோ.]

**விளக்கம்**:- கால் - வாய்க்கால். அளை - சேறு. மள்ளர் - உழவர். சேற்றை ஒத்தன நித்திலம்-சேற்றை இடமாகக் கொண்டு அதனோடு பொருந்தியுள்ளனவான முத்துக்கள். பிறப்பிலே துவக்கு உளோர் - பிறப்பில் தொடர்பு (சம்பந்தம்) உள்ளவர். நதியைப் போன்ற பெரிய வாய்க்கால்களின் வழியாகக் குழை சேற்றையுடைய வயல்களில் புகும் ஆமைகளைக் குறியாகக் கொண்டு, மள்ளர்கள் சேற்றிடையே பொருந்திக் கிடக்கும் முத்துக்களை எடுத்து எறிந்து விரட்டும் தன்மையதான குருநாட் டிற்கு உரியனான வீமன், தேக பலத்தினால் வாயுவையும், கோபத்தால் சூர்ய புதல்வனான கர்ணன் யமனையும் ஒத்தனர். பிறப்பிலே சம்பந்தம் உடையவர், பெற்றோரின் குணத்தைக் கொள்ளமாட்டார்களோ!—என்பது பொருள்.

யமன், சூர்யபுத்திரன்; எனவே கர்ணன் அவனுக்குத் தம்பி. வீமன் காற்றின் வலிமையையும், கர்ணன் யமனது கோபத்தை யும் பிறப்புரிமையாகக் கொண்டார், என்பதாம். ''இருவரும் காற்றையும் யமனையும் ஒத்தார்'', என்ற சிறப்புப் பொருள், ''பிறப்பிலே துவக்கு உள்ளோர் குணங்கள் கொள்ளாரோ!''

என்ற பொதுப் பொருளால் நிறுவிக் காட்டும் இது, **வேற்றுப் பொருள் வைப்பு** ஆகும். ''முத்துக்களினால் மள்ளர் ஆமைகளை ஓட்டுவார்'', என்றது **வீறு கோள் அணியின்** பாற்பாடும்.

''ஆமைகளை மள்ளர் முத்துக்களால் ஓட்டினார்'', என்பது நீர் வளத்தோடு, ஆமைகளை உழுபடையில் அகப்பட்டு மாளாது காக்கும் மள்ளர்களது ஜீவகாருண்யமுடைய மனத்தையும், குறிக்கும், அல்லது, இடையூறாய் அமைவோரைக் கையில் அகப்பட்ட கருவிகளைக் கொண்டு விலக்கும் ஆற்றலர், அந்நாட்டு மள்ளர், என்ற குறிப்பினதுமாகும்.

**136. தேறல் வண்டிமிர் தெரியலான் றினபதி**
**சிறுவனை முகநோக்கி**
**ஆறல் வெஞ்சமத் தென்னுடன் முனைந்தனை**
**முனைந்தனை யானாலும்**
**வேற லென்கட னின்னைமன் னவையின்முன்**
**விளம்பிய வசனத்தால்**
**கோற லெம்பிதன் கடனென வரிசிலை**
**குனித்தனன் கொடித்தேரோன்.**

[தேறல் வண்டு இமிர் தெரியலான் தினபதி சிறுவனை முகம் நோக்கி, ஆறு அல் வெம் சமத்து என்னுடன் முனைந்தனை முனைந்தனை; ஆனாலும், வேறல் என்கடன்; நின்னை மன் அவையின் முன் விளம்பிய வசனத்தால் கோறல் எம்பிதன் கடன், என, வரி சிலை குனித்தனன் கொடி தேரோன்.]

**விளக்கம் :-** தேறல் - தேன். ஆறு அல் வெம் சமம் - நியாய வழி கடந்த கொடிய போர். வேறல் - வெல்லுதல். கோறல் - கொல்லுதல். வீமன் தினபதி (சூரியன்) சிறுவனான கர்ணனை நோக்கி, ''நெறி கடந்த போரில் முனைப்புக் கொண்டாய்; அவ்வாறு நீ போர் செய்தாலும், உன்னை வெல்லுதல் ஒன்றே என் கடமை, மன்னவையில் சபதம் கூறிய என் தம்பியின் கடன் உன்னைக் கொல்லுதல்'' என்று கூறி வீமன் வில்லை வளைத்தான், என்பதாம்.

கடவநாள் கழித்து வந்ததும் நாடு தருவதாகக் கூறியபடி செய்யாமல், கௌரவர் அக்கிரமமான போரைச் செய்வதால், 'ஆறு அல் சமம்', என்றான், என்க.

**137.** **இலக்க மற்றவெங் கணைகளா லிருவரும்**
**எதிரெதி ரமராடிக்**
**கலக்க முற்றபின் றினகரன் மதலையக்**
**காற்றின்மைந் தனைச்சீறி**
**அலக்க ணுற்றிடப் பலபெருங் கணைதொடுத்**
**தவன்விடுங் கணையாவும்**
**விலக்கி வச்சிரத் தேரும்வெம் புரவியும்**
**விறற்றுவ சமும்வீழ்த்தான்.**

[இலக்கம் அற்ற வெம் கணைகளால் இருவரும் எதிர் எதிர் அமர் ஆடி, கலக்கம் உற்றபின் தினகரன் மதலை அ காற்றின் மைந்தனை சீறி, அலக்கண் உற்றிட பல பெருங்கணை தொடுத்து அவன் விடும் கணை யாவும் விலக்கி, வச்சிரம் தேரும், வெம் புரவியும், விறல் துவசமும் வீழ்த்தான்.]

**விளக்கம்:-** இருவரும் கணக்கற்ற அம்புகளினுல் எதிரெதிர் போர் செய்து இளைத்த பின், கர்ணன், சீறியெழுந்து வீமனைத் துன்பம் அடையும்படி பல சிறந்த கணைகளையும் பிரயோகித்து, அவன் (வீமன்) விடுத்த கணைகள் எல்லாவற்றையும் விலக்கி, (வீமனது) தேரும் தேர்க்குதிரைகளும் கொடியும் அழியச் செய் தான் என்பதாம்.

அலக்கண் - (அலம் - கண்) சஞ்சலங்கொண்ட கண். துன்பத்தின் காரியம் சஞ்சலம் உடைமை; அதற்குக் காரணமான துன்பத்தின்மேல், ஏற்றி, அலக்கண், என்ருர், என்க.

**138.** **காலி ணுல்வருங் காலின்மைந் தனைக்கடுங்**
**கதிரவன் றிருமைந்தன்**
**வேலி ணுலடர்த் தெறிதலு மெறிந்தசெவ்**
**வேலிரு துணியாகக்**
**கோலி ணுலவன் றுணித்துமீ ளவுமழல்**
**கொளுத்திய தொருதண்டு**
**நாலி ணுன்முழ முடையது கன்னன்மே**
**லெறிந்தன னகைசெய்தான்.**

[காலினுல் வரும் காலின் மைந்தனை கடுங்கதிரவன் திரு மைந்தன், வேலினுல் அடர்த்து எறிதலும், எறிந்த செவ்வேல் இரு துணி ஆக, கோலினுல் அவன் துணித்து, மீளவும் அழல் கொளுத்தியது ஒரு தண்டு நாலின் நால் முழம் உடையது கன்னன் மேல் எறிந்து நகை செய்தான்.].

**விளக்கம்:-** காலின் (காற்று) மைந்தன் - வீமன், வீமனைக் கர்ணன் வேலைக் கொண்டு வன்மையுடன் தாக்கவும், (தன்

மேல் கர்ணன்) எறிந்த அந்த செவ்விய வேலை இரண்டுபடும்படி தனது அம்பினால் (வீமன்) துண்டித்து, மறுபடியும் பதினாறு முழம் நீளமுள்ளதும் தீப்பற்றினாற்போல் அழிக்கவல்லதுமான ஒரு தண்டை கன்னன்மேல் வீசி நகைத்தான் என்பதாம்.

தேரிழந்தானுதலால், வீமனைக் காலினால் வரும் காலின் மைந்தன், என்றார். கோல் - அம்பு.

**139. தேர வன்றிரு மைந்தனே றியதடந்**
**தேரும்வா சியுஞ்சிந்தி**
**ஊர வந்தவெம் பாகனுந் தலைபிளந்**
**தோடலுற் றனன்பின்னும்**
**வீர னும்பெரு வலியுடன் வருகென**
**வேறோர்தேர் மேற்கொள்ளத்**
**தூர நின்றவ ரிருவரு முடன்றமை**
**சுயோதனன் கண்ணுற்றான்.**

[தேரவன் திருமைந்தன் ஏறிய தடந்தேரும் வாசியும் சிந்தி, ஊர வந்த வெம்பாகனும் தலை பிளந்து ஓடல் உற்றனன் பின்னும்; வீரனும் பெரு வலியுடன், வருக என, வேறு ஓர் தேர்மேல் கொள்ள, தூரம் நின்றவர் இருவரும் உடன்றமை சுயோதனன் கண்ணுற்றான்.]

**விளக்கம்:** தேரவன் திருமைந்தன் - சிறந்த ஒற்றைச் சக்கரத் தேரைக் கொண்ட சூரியனது குமாரனான கர்ணன். கர்ணன் தான் ஏறிய தேரும் குதிரைகளும் அழியப் பெற்று, சாரதியும் தலை பிளக்கப்பெற்றுப் பின்னும் (மறுபடியும்) பின்னிட்டான்; வீரனும் (வீமனும்) ஒரு தேரை வருக என அழைத்து அதன்மேல் ஏறிக்கொள்ள, தூரத்திலேயே நின்று போர் செய்தவர்களான வீமகர்ணர் போர்செய்து எய்திய நிலைமையைத் துரியோதனன், கண்டான், என்பதாம்.

**140. கண்டு துன்முக னெனுந்தனி யிளவலைக்**
**கடிதினே வலுங்கங்குல்**
**வண்டு செஞ்சுடர் வளையவந் திறந்தென**
**வலியவார் சிலைவாங்கிக்**
**கொண்டு திண்டிறல் வாளியான் மலைமிசைக்**
**கொண்டல்பெய் வதுபோல**
**மண்டு போர்புரிந் தண்ணல்கைப் பகழியால்**
**வானிமைப் பினிலுற்றான்.**

[கண்டு துன்முகன் எனும் தனி இளவலை கடிதின் ஏவலும், கங்குல் வண்டு செம் சுடர் வளையவந்து இறந்து என, வலிய வார் சிலை வாங்கி கொண்டு, திண் திறல் வாளியால் மலைமிசை கொண்டல் பெய்வது போல, மண்டு போர் புரிந்து, அண்ணல் கை பகழியால் வான் இமைப்பினில் உற்றுன்.]

**விளக்கம் :-** (கர்ணனது நிலைமை) கண்டு, துன்முகன் என்ற தனது சிறந்த தம்பியைத் (துரியோதனன் கர்ணனுக்கு உதவி செய்ய) அனுப்பிய அளவில், இரவில் பறப்பதான ஒரு வகைப் பூச்சி (விட்டில்) சிவந்த விளக்கொளியைச் சூழ்ந்து, அதில் பட்டு இறத்தலைப்போல், (தம்பியும்) வலிய நீண்ட வில்லை வளைத்துக்கொண்டு மலைமேல் காளமேகம் பொழிவதுபோல், செறிய வலிய அம்புகளால் (வீமனை) எதிர்த்துப் போர் செய்து, (இறுதியில்) அண்ணல் (வீமன்) கை அம்பினுல் இமைப் பொழு தில் வான் சேர்ந்தான்,—என்பதாம்.

**141. தாளி னேடிய கன்னன்மன் னவன்விடு**
**தம்பிவீழ் தலும்வீமன்**
**தோளி னேடிமண் மிசைபுதை தரவொரு**
**தோமரந் தனையேவ**
**வேளி னேடிசை வீமன்மே லதுசெலும்**
**வேலையின் விடவெவ்வாய்க்**
**கோளி னேடிய குரிசில்கைக் கணையினுற்**
**கோளழிந் ததுமன்னே.**

[தாளின் ஓடிய கன்னன் மன்னவன் விடு தம்பி வீழ்தலும், வீமன் தோளின் ஓடி மண்மிசை புதைதர ஒரு தோமரம் தனை ஏவி வேளினேடு இசை வீமன் மேல் அது செலும் வேலையின், விடம் வெவ் வாய் கோளின் ஓடிய குரிசில் கை கணையினுல் கோள் அழிந்தது மன்னே.]

**விளக்கம்:-** தேரிழந்தமையின் காலினுல் தப்பி ஓடிய கர்ணன், துரியோதனன் தம்பி இறந்து பட்ட அளவில் வீமனது தோளின்மேல் பாய்ந்து (அதன்பின்), தரையில் புதையும்படி ஒரு தோமரம் என்னும் ஆயுதத்தை வீச, அது (தோமரம்) முருகக் கடவுளோடு சேர்த்துப் பேசப்படும் ஆற்றலையுடைய வீமன்மேல் செல்லுகையில், விஷத்தை உடைய கொடிய வாயைக் கொண்ட இராகு என்னும் கோள்போல் விரைந்து எதிர் வந்த வீமன் கை அம்பினுல் கோள் (வலிமை) அழிந்தது, - என்பதாம். தோமரம்- இருப்புலக்கை, அல்லது வேல் போன்ற ஒரு படை.

142. மன்னர் மன்னவன் றம்பிய ரிருவரை
மாருதி மிசையேவ
முன்னர் வந்தவ ரிருவரும் படப்பட
முனைந்துபோர் மதியாமல்
மின்னி ருங்கணை விகருணன் முதலியோர்
வீமன்மே லோரைவர்
பின்ன ருஞ்செல நால்வரைப் பிறைமுகக்
கணையினுற் பிளந்திட்டான்.

[மன்னர் மன்னவன் தம்பியர் இருவரை மாருதி மிசை ஏவ, முன்னர் வந்தவர் இருவரும் படபட முனைந்து போர் மதியாமல் மின் இருங்கணை விகருணன் முதலியோர் வீமன் மேல் ஓர் ஐவர் பின்னரும் செல, நால்வரை பிறைமுகம் கணையினுல் பிளந்திட்டான்.]

**விளக்கம்:-** துரியோதனன் மறுபடியும், தம்பியர் இருவரை வீமன் மேல் ஏவ, ஒருவர் முன் ஒருவராக வந்தவர் இருவரும் இறந்தாலும், முனைந்து ஆவேசங்கொண்டு, (வீமனேடு) போர் செய்தலை (அரிதென்று) கருதாமல் மின்னல் போல் விளங்கும் பெரிய அம்புகளை உடைய விகர்ணன் முதலியோர் ஐந்து பேர் வீமன்மேல் மறுபடியும் (ஏவப்பெற்று) பொருதற்கு வர, (உடனே வீமன்) அவர்களில் நால்வரை அர்த்தசந்திர பாணங்களால் அழித்தான், என்பதாம்.

கலி விருத்தம்

வீமனும் விகர்ணனும்

143. பகரு நால்வரும் பட்டபின் பைங்கழல்
விகரு ணன்பொர வெஞ்சிலை வாங்கலும்
புகலும் வஞ்சினம் பொய்க்கினு நின்னுடன்
இகல்செய் யேனெம்பி யேகுகென் ருனரோ.

[பகரும் நால்வரும் பட்டபின் பைங்கழல் விகருணன் பொர வெம்சிலை வாங்கலும், ''புகலும் வஞ்சினம் பொய்க்கினும் நின்னுடன் இகல் செய்யேன், எம்பி, ஏகுக, என்ருன், அரோ.]

**விளக்கம்:-** முன்னே சொல்லப்பட்ட நால்வரும் இறந்தபின் பைங்கழல் விகர்ணன் போர் செய்யும் பொருட்டு வில்லை வளைத்த அளவில், (வீமன் அவனை நோக்கி) ''எனது தம்பி! நான் மேற்கொண்ட சபதம் பொய்ப்பதாயினும், உன்னுடன் போர் செய்யேன்; செல்க,'' என்ருன், என்பதாம். அரோ: ஈற்றசை.

திரௌபதியைத் துகிலுரிய முற்பட்ட பொழுது, தமையன்மாரின் செயலைக் கண்டித்தும், நியாயம் கூறுமாறு சபையோரை வற்புறுத்தியதும் பற்றி, வீமன், அவனோடு பொர விரும்பவில்லை, என்க.

**144. சுடுவு ரைக்கன லன்னதுச் சாதனன்**
**வடுவு ரைக்கவு மன்னுறை மன்றிடை**
**நடுவு ரைக்குநன் ஞவுடை யாயுனைக்**
**கொடுவு ரைக்கணை யேவினுங் கொல்லுமோ?**

[சுடு உரை கனல் அன்ன துச்சாதனன் வடு உரைக்கவும், மன் உறை மன்று இடை நடு உரைக்கும் நல் நா உடையாய், உனை கொடு உரைகணை ஏவினும் கொல்லுமோ.]

**விளக்கம்:-** கனல் அன்ன சுடு சொல் துச்சாதனன் மன்(னர்) உறை மன்று இடை வடு (நிந்தனையான சொற்களை) உரைக்கவும், நடு உரைத்த நல்ல நாவை உடையவனே, உன்னை (முனிவரது) கொடிய சாபமொழி போன்ற தவறாது அழிக்கவல்ல அத்திரத்தை நான் ஏவினாலும், அது உன்னை அழிக்குமோ, (அழிக்காது என்றபடி) - என்று வீமன் கூறினான், என்பதாம். அதாவது, "உன்னைக் கொல்ல நான் மனங்கொள்ளேன்", என்று வீமன் கூறும் கருத்தது.

**145. பார றிந்த பழிக்குட் படாதநின்**
**நேர றிந்தும் பொரநெஞ் சியையுமோ ?**
**போர றிந்து பொருகவென் றுனெடுஞ்**
**சீர றிந்தவர் செய்ந்நன்றி கொல்வரோ ?**

[பார் அறிந்த பழிக்கு உள் படாத நின் நேர் அறிந்தும் பொர நெஞ்சு இயையுமோ! போர் அறிந்து பொருக, என்றான், நெடுஞ் சீர் அறிந்தவர் செய் நன்றி கொல்வரோ?]

**விளக்கம்:-** "உலகம் அறிந்த பழிக்கு உள்ளாகாத உனது நேர்மையை அறிந்த பின்னும் என் மனம் (உன்னோடு) போர் செய்ய உடன்படுமோ? (ஆகவே) தக்கவரான வேறு பகைவரைத் தெரிந்து அவருடன் போர் செய்க," என்று வீமன் கூறினான்; சிறந்த ஒழுக்கம் என்பதை அறிந்தவர், பிறர் தமக்குச் செய்த நன்றியை மறந்து அவருக்குத் தீங்கு இழைப்பாரோ?—என்று வீமன் கூறினான் என்பது பொருள்.

மன்னவையில் நீதியை எடுத்துரைத்த விகர்ணனோடு போர் செய்ய வீமன் மறுத்தான், என்ற சிறப்புப் பொருளை, நல்ல ஒழுக்கம் என்பதை அறிந்தோர், செய்நன்றி மறப்பாரோ என்ற

பொதுப் பொருளால் சாதித்தலின், இது வேற்றுப் பொருள் வைப்பு அணி ஆகும்.

விகர்ணன் வீமனை போருக்கிழுத்தல்

**146. வீம னிப்படிச் சொல்லவும் வேரியம்**
**தாம முற்ற தடவரைத் தோளினன்**
**மாம ணிச்சிலை வாங்கியவ் வீமன்மேல்**
**தீமு கக்கணை யுஞ்சில சிந்தினன்.**

**விளக்கம் :—** செய்யுள் சுலபமானது. தன்னோடு போர் செய்ய மறுத்த வீமனைப் போருக்கு இழுக்குங் கருத்தில் விகர்ணன் தீமுகக்கணை சில வீமன் மேல், செலுத்தினன், என்பதாம். வேரி அம் தாமம்—வாசனையுடைய அழகிய மாலை.

**147. எம்மு னோர்க ளனைவரு முங்கையில்**
**வெம்மு னைக்கணை யால்விளிந் தேகவும்**
**உம்முன் யானொரு வேனுமுய் வேன்கொலோ**
**வம்மின் வார்சிலை வாங்குகென் றோதினன்.**

[எம் முனோர்கள் எனைவரும் உம் கையில் வெம் முனை கணை யால் விளிந்து ஏகவும், உம் முன் யான் ஒருவேனும் உய்வேன் கொலோ! வம்மின், வார்சிலை வாங்குக என்று ஓதினன்.]

**விளக்கம்:-** முனோர் - தமையன்மார். விளிதல் - இறத்தல். ''எம் தமையன்மார் பலர் உம் கைக் கணைகளால் இறந்தனர், நான் ஒருவன் மாத்திரம் பிழைத்திருத்தல் அமையுமோ? எனவே, வில்லை வளைத்திடுக,'' என்று வீமனை விகர்ணன் போருக்கு அழைத்தான், என்பதாம்.

**148. மிகந கைத்தும் வெறுத்துந் திரிபுர**
**தகன னொத்த சமீரணன் மாமகன்**
**முகனு றச்சென்று மூரிவில் வாங்கிமேல்**
**இகல்நி றக்கணை யேவின னென்பவே.**

[மிக நகைத்தும் வெறுத்தும் திரிபுரதகனன் ஒத்த சமீரணன் மாமகன் முகன் உற சென்று மூரிவில் வாங்கி, மேல் இகல் நிறம் கணை ஏவினன், என்ப, ஏ]

**விளக்கம்:-** திரிபுரதகனன் - சிவபெருமான். சமீரணன் - வாயு. முகன் உற சென்று - முன்னே சென்று. மேல் - விகர்ணன் மேல். இகல் நிறம் கணை - வலிமையும் பிரகாசமும்

உடைய அம்பு. என்ப : அசை. வீமன் விகர்ணனோடு போர் தொடங்கினுன், என்பதாம்.

**149.** ஏவி ஞலிவ் விருவரும் வெஞ்சமம்
மேவி ஞர்மெய்ப் படாமல் விலக்கினூர்
கூவி ஞரறை கூவிப் பொருதிளைத்(து)
ஓவி ஞர்தமை யேநிக ரொத்துளார்.

**விளக்கம் ;-** சுலபமான செய்யுள். ஏ - அம்பு. கூவல் - ஆரவாரித்தல். அறை கூவல் - வீரவாதம் கூறல். ஓவினுர்— (போர் செய்து இளைக்கவும்) இருவரும் சிறிது போரொழிந்து நின்றூர்கள்.

**150.** விகனன் விட்டக ணைகளின் வீமன்மெய்
இகன் மணிக்க வசம்பிளந் தேறுதேர்
அகல ரிக்கொடி யற்றுக் கொடிஞ்சியும்
சகல முற்றுத் தனுவுமு ரிந்ததே.

**விளக்கம் :-** விகனன் - விகர்ணன். அரிக்கொடி - சிங்கக் கொடி. கொடிஞ்சி - (தேரின் உறுப்பு) தேர் மொட்டு. சகலம் உற்று - துண்டுபட்டு. விகர்ணன் வீமனை, கவசம் முதலியன பிளந்து வலியழியச் செய்தான், என்பதாம்.

**151.** மின்னை யொத்த விறற்படை மாருதி
பின்னை விட்ட பிறைமுக வார்கணை
அன்னை சித்த மலமரப் பின்னவன்
தன்னை வெற்றி மகுடந் தடிந்ததே,

**விளக்கம்:-** மாருதி—வீமன். அன்னை - காந்தாரி. வீமன், ஒரு பிறை முகக்கணையால், காந்தாரி சோகமுறும்படி விகர்ணனது தலை கொய்தான், என்பதாம்.

**152.** கோவி கன்னன் கொலைபடப் பற்பலர்
ஆவி கன்ன மறைகணை யாலறப்
பாவி கன்னன் பதைக்கவென் றேகினுன்
மேவி கன்னகம் போற்புய வீமனே.

**விளக்கம் :-** கோ விகன்னன் - அரசனுன விகர்ணன். கன்னம் அறைகணை - காதளவு நாணியை இழுத்து விடப்படும் அம்பு. மேவு இகல் நகம்போல் புயம் வீமன், என்று ஈற்றடி பிரியும். நகம் - மலை. எதிரிட்ட கர்ணன் முதலியோரை வென்று வீமன், முன்னேறிச் சென்ருன், என்பதாம். விகன்னன், நீதி

மான் ஆதலின், 'கோ விகன்னன்' எனப்பட்டான். துரியோதன னது பாவச் செயல்களுக்குத் துணை நிற்பதால், கன்னன், 'பாவி கன்னன்', எனப்பட்டான்.

**153. அன்று சாதத் தலகைக ளாடவே**
**சென்று சாத்தகி தன்னுடன் சேர்ந்தனன்**
**துன்று சாத்தி ரத்தின்படி சூழ்முனை**
**வென்று சாத்திய வாகைகொள் வேலினன்.**

**விளக்கம் :-** ஈற்றடிகளை முன்னே வைத்தல், அன்வயம். நலம் பொருந்திய சாத்திர முறைப்படி, பகைவர் தன்னைச் சூழ்ந்து செய்த போர் வென்று, சூட்டிய வெற்றி மாலையுடைய வீமன், அன்று (களத்தில்) கூட்டமான பேய்கள் கூத்தாட முன்னேறிச் சென்று சாத்தகியோடு சேர்ந்தான், என்பது பொருள். சாதம் - கூட்டம்.

**154. அங்கி தன்னொ டனிலமுஞ் சேர்ந்தெனச்**
**சங்க பாணிதன் றம்பியும் வீமனும்**
**செங்க லங்கலஞ் சேற்றிடை மூழ்கிய**
**வெங்க ளத்து விசயனைக் கூடினர்.**

**விளக்கம் :-** அங்கி - நெருப்பு. அனிலம் - காற்று. செம் கலங்கல் அம்சேறு - இரத்த மிகுதியினால் சிவந்து கலங்கலாகவுள்ள சேறு. நெருப்போடு காற்றும் சேர்ந்தது போல் சாத்தகியும் வீமனும், சிவந்து கலங்கிய சேற்றில் புதைந்துள்ள போர்க் களத்தே, விசயனோடு சேர்த்து கொண்டனர், என்பதாம்.

ஒன்று சேர்ந்த மூவரையும் பகைவர் எதிர்த்தல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**155. தேவரும் பரவு பாகன் செலுத்துதேர் விடலை யோடு**
**மூவருஞ் சுடர்கண் மூன்று மூண்டெனத் திரண்ட காலை**
**மேவருஞ் சமரின் முன்னம் வென்கொடுத் துடைந்த வேந்தர்**
**யாவருந் திருகி வந்தாங் கெதிரெதி ராகிச் சூழ்ந்தார்.**

**விளக்கம் :-** தேவரும் பரவு பாகன் - கண்ணன். விடலை - விசயன். மூவர் - சாத்தகி, வீமன், விசயன். முச்சுடர் - சூரியன், சந்திரன், அக்னி. முச்சுடர் என்னும் படி மூவரும் ஒன்று சேர்ந்த பொழுது, மேவு அருஞ்சமரின் முன்னே பின்னிட்ட வேந்தர்

எல்லோரும் திரும்பி வந்து, எதிரெதிர் (மூவரையும்) வளைத்துக் கொண்டனர், என்பதாம். மேவு அருஞ்சமம் - நெருங்குதற்கு அரிய கொடிய போர்.

## பூரிசிரவன் மடிதல்

**156.** **சாத்தகி தானும் பூரி சவாவும்வெஞ் சாபம் வாங்கிக்**
**கோத்தனர் பகழி சென்று குறுகின தேருந் தேரும்**
**சேர்த்தனர் மலைந்த காலை சிலைதுணி வுண்டு தேர்விட்(டு)**
**ஏத்தருந் தடக்கை கொட்டி யிருவருமல்லி னின்றூர்.**

**விளக்கம்:-** சாத்தகியும் பூரிசவாவும் கொடிய வில்லை வளைத்து அம்புகளைச் செலுத்தினர்; (அப்பொழுது) அவர்களது தேர்களும் நெருங்கின : இவ்வாறு தேர்களை நெருங்கச் செய்தன ராய் மலைந்த பொழுது, இருவரும் வில் அறுபட்டு, தேர்களினின்று இறங்கி, ஏ தரும் தடக்கை கொட்டிக் கொண்டு மல்யுத்தத்தில் முனைந்து முயன்றனர்,—என்பது பொருள். ஏ தருகை - அம்பு களைச் செலுத்திய கை (ஏ. அம்பு.)

**157.** **மல்லினின் வென்று வீழ்த்தி மாயவன்றம்பி தன்னைக்**
**கொல்லுவான் முனைந்து மற்றைக் கோமக னடர்த்த னேக்கிக்**
**கல்லினின் மாரி காத்தோன் கண்டுவில் விசய னேடும்**
**சொல்லினன் பகைவன் றன்னைச் சுடர்முடி துணித்தி யென்றே.**

**விளக்கம் :-** மாயவன் தம்பி - சாத்தகி. மற்றை கோமகன் - மற்றவனான பூரிசிரவன். அடர்த்தல் - வருத்தல். க்ல்லின் மாரி காத்தோன் - கோவர்த்தனகிரி கொண்டு மழை காத்தவனான கண்ணன். சாத்தகியை பூரிசிரவன் மல் போரில் வென்று, அவனைக் கொல்ல முயன்று வருத்துதலைக் கண்ட கண்ணன், விசயனிடம், அவனது சுடர் முடி துணிக்குமாறு கூறினான்,— என்பதாம்.

**158.** **இருவரு முனைந்த போரி லிளைத்தவற் குதவியாகப்**
**பொருவது கடனன் றென்று போற்றிய விசயன் றன்னை**
**வெருவர முனைந்து சீறி மீளவும் விளம்ப மாயன்**
**திருவுள மறிந்து தெவ்வன் றிண்புயந் துணிய வெய்தான்.**

**விளக்கம் :-** ''இருவரும் தொந்த யுத்தமாகச் செய்யும் போரில் இளைத்தவனுக்கு உதவியாக வேறொருவன் பொருதல்

முறைமை அன்றே,'' என்று விசயன் கூறிக் கண்ணனை வணங்க அப்பெருமானும், விசயன் அஞ்சும்படி சீறி மறுபடியும் கட்டளை யிட, அவன் கண்ணனது திருவுளம் அறிந்து, பகைவனது வலிய தோளை ஒரு கணையால் அறுத்தான், என்பது பொருள்.

கௌரவன் இகழக் கண்ணன் கூறல்

**159. புயந்துணி வுண்ட பூரி சவாவினைப் புரிந்து தள்ளிச்**
**சயம்புனை வாளிற் றும்பைத் தார்புனை தலையும் கொய்து**
**வயம்புனைந் திளவ னிற்ப மன்னற மன்றிப் போரென்(று)**
**இயம்பிய விராச ராசற் கெதிர்மொழி யியம்ப லுற்றான்.**

**விளக்கம் :-** தோள் அறுபட்ட பூரிசிரவாவைப் புரிந்து (மகிழ்ச்சியோடு) சாத்தகி தள்ளி, தனது வெற்றி புனைந்த வாளி னால் தும்பை மாலை அணிந்த அவனது தலையை அறுத்த வெற்றி கொண்டு இளவல் (சாத்தகி) நிற்க, இராசராசனான துரியோதனன் ''இது தர்மப் போர் அன்று,'' என்று கூறலும் கண்ணன் பதில் மொழிவானாயினான், என்பது பொருள்.

**160. நென்னனீ ரபிமன் றன்னை நேரற வென்ற போரும்**
**முன்னமே சுவேதன் றன்னை வீடுமன் முடித்த போரும்**
**மன்னற முறைத வாமன் மலைந்தனி ரென்று நக்கான்**
**தன்னைவந் தடைந்தோர்க் குற்ற தளர்வெலா மொழிக்குந்**
**தாளான்.**

**விளக்கம் :-** தன்னை வந்து அடைந்தார் உற்ற துயரெல்லாம் நீக்கியருளும் திருவடியை உடைய கண்ணன், (இராசராசனை நோக்கி) ''நேற்று அபிமனை நேர்மையற்ற முறையில் செய்து வென்ற போரும், முதல் நாள் போரில் சுவேதனை வீடுமன் அழித்த போரும் ராசதர்மம் கடவாமற் செய்த போர் போலும்'' என்று கூறிச் சிரித்தான், என்பது பொருள்.

விசயன் சயிந்தனைத் தேடி முன்னேறல்

**161. பின்னரும் விசய னிற்பப் பேணலார் பின்னிட் டோட**
**மன்னரின் மலைந்தோர் தம்மை வாளியால் வானி லேற்றி**
**முன்னவ னோடு மந்த முகில்வண்ண னிளவ லோடும்**
**தன்னுரை வழுவா வண்ணந் தரியலர் படையைச்**
**சார்ந்தான்.**

[பின்னரும் விசயன் (களத்தே நிலை) நிற்ப, பேணலார் பின் இட்டு ஓட, மன்னரில் (ஓடாது நின்று) மலைந்தோர் தம்மை வாளி

யால் வானில் ஏற்றி, முன்னவனோடும், அந்த முகில் வண்ணன் இளவலோடும் தன் (சபத) உரை வழுவா வண்ணம் தரியலர் (உள்புறப்) படையைச் சார்ந்தான்.]

**விளக்கம்:-** பின்னிட்டு ஓடாது எதிர்த்த மன்னரை அழித்து வான் ஏற்றி, தன் உரை காக்கும் எண்ணத்தில் வியூகத்தின் உட்புறம் அணிகொண்டு நின்ற தரியலார் (பகைவரை) விசயன் நெருங்கினான், என்பதாம்.

**162. அருக்கனோர் கணத்தி லத்த மடையுமவ் வளவுங் காக்கின்**
**செருக்கிளர் விசய னின்றே தீயிடை வீழ்த றிண்ணம்**
**நெருக்குபு நின்மி னென்று நிலவறை யதனி லந்த**
**மருக்கமழ் தொடைய லானை வைத்தனர் மருவ லாரே.**

[அருக்கன் ஓர்கணத்தில் அத்தம் அடையும், அ அளவும் காக்கின் செரு கிளர் விசயன் இன்றே தீ இடை வீழ்தல் திண்ணம் ''நெருக்குபு நில் மின்'', என்று, நிலவறை அதனில் அந்த மரு கமழ் தொடையலானை வைத்தனர் மருவலார், ஏ.]

**விளக்கம் :-** இன்று அத்தமனம் வரை சயிந்தனைக் காத்தால் விசயன் தீயில் வீழ்ந்து அழிவது நிச்சயம். நெருங்கி நின்று காமின்'' என்று மருவலார் (பகைவர்) சொல்லிக் கொண்டு, சயிந்தனை நிலவறையில் மறைத்து வைத்துக் காத்தார், என்பதாம். மருக்கமழ் தொடையலான் - மணம் கமழும் மாலை அணிந்த சயத்திரதன்.

**163. நச்சனை யரவ மென்ன நடுங்கின னின்ற காலைத்**
**துச்சனை கணவன் றன்னைத் தோற்றமொன் றுனுங் காணான்**
**பச்சளை முடைகொண் மேனிப் பாடிமா மகளிர் பைம்பொன்**
**கச்சளை புளக பாரக் கனதனங் கலந்த தோளான்.**

[நச்சு அளை அரவம் என்ன நடுங்கினன் நின்ற காலை, துச்சனை கணவன் தன்னை தோற்றம் ஒன்றுனும் காணான், பசு அளைமுடைகொள் மேனி பாடி மாமகளிர் பைம் பொன் கச்சு அளை புளகம் பாரம் கனதனம் கலந்த தோளான்.]

**விளக்கம் :-** ஈற்றடிகளை முன்னே வைத்துப் படித்தல், அன்வயம். பசு அளை - புதிய வெண்ணெய். புதிய வெண்ணெயின் முடை கொண்ட மேனியை உடைய திருவாய்ப் பாடியிலுள்ள அழகிய இடைப் பெண்களின் பசும்பொன் ஆபரணங்களும்; கச்சும் பொருந்தியவையும், மயிர்ச்சிலிர்ப்பு உடையவையுமான பருத்த வலிய முலைகளில் தோய்ந்த தோளையுடையவனை

கண்ணன்,—அளேயில் (வளேயில்) பதுங்கிய விஷப்பாம்பு போல் (நிலவறையில் சயத்திரதன்) நடுங்கினனுய் இருந்த பொழுது துச்சளே என்பாளின் கணவனுன அவனே, ஒரு வகையாலும் தோன்றக் காணுதவனுயினுன்,—என்பது பொருள்.

வெண்ணெய்க்குப் பசுமை, புதுமையும் குளிர்ச்சியும் ஆகும்.

வேறு

164. **பாராழி யவலமற பாண்டவர்தம்**
**இடர்தீரப் பார்த்தன் வாழப்**
**பேராழி யணேதுயிலும் பெருமிதமும்**
**உடன்மறந்து பிறந்த மாயோன்**
**ஓராழி யெழுபரித்தே ருடையானே**
**மாயையினு லொழிக்கத் தன்கைக்**
**கூராழி பணித்தலுமக் களம்போலச்**
**சிவந்தனவக் குடபா லெங்கும்.**

கண்ணன் கதிரவனே மறைத்தல்

[பார் ஆழி அவலம் அற, பாண்டவர் தம் இடர்தீர, பார்த்தன் வாழ, பேரர் ஆழி அணேதுயிலும் பெருமிதமும் உடன் மறந்து பிறந்த மாயோன், ஓர் ஆழி எழு பரி தேர் உடையான் மாயையினுல் ஒழிக்க, தன் கை கூர் ஆழி பணித்தலும், அ களம் போல சிவந்தன அ குடபால் எங்கும்.]

**விளக்கம்:-** ஆழி பார் அவலம் அற - கடலால் சூழப்பெற்ற பூமிதேவியின் துன்பம் அகல. பெரிய பாற்கடலில் சேஷ சயனத்தில் துயிலாமல் துயில்கின்ற மேன்மையை முழுமையாக மறந்து மண்ணில் பிறவி கொண்ட மாயனுன கண்ணன். ஓர் ஆழி எழுபரித்தேர் உடையோன் - சூரியன். கூர் ஆழி - கூரிய (தனது) சக்ராயுதம். பெருமிதம் - பரத்துவம்.

பூபாரம் நீங்கவும், பாண்டவர் துயர் அகலவும், விசயன் வாழவும் ஆபத்சகாயனுன கண்ணன். தனது சக்கரத்தால் சூரியனே மறைக்க, வானம் செங்களம் போல் சிவப்புற்றது, என்பதாம்.

சயத்திரதன் வெளிப்படல்

165. **அயத்திரத மிடப்பசும்பொ னுவதுபோ**
**லருச்சுனனு ரறிஞு னுக**
**நயத்திரத மொழிக்கீதை நவின்றபிரான்**
**மயக்கறியார் நாள்செய் வான்றன்**

**வயத்திரத மறைந்ததென வலம்புரித்தா**
**ரவன்சேனை மன்னர் யாரும்**
**செயத்திரதன் றனைக்கொண்டு செருமுனையில்**
**விசயனெதிர் சென்று சேர்ந்தார்.**

[அயத்து இரதம் இட பசும்பொன் ஆவது போல் அருச்சுனன் ஆர் அறிஞன் ஆக, நயத்து இரதம் மொழி கீதை நவின்றபிரான் மயக்கு அறியார்;—நாள் செய்வான் தன் இரதம் வயத்து மறைந்தது என, வலம்புரிதாரவன் சேனை மன்னர் யாரும் செயத்திரதன் தனை கொண்டு செரு முனையில் விசயன் எதிர் சென்று சேர்ந்தார்.]

**விளக்கம்:-** அயம் - இரும்பு. இரதம் - ரஸம்; ரஸவாதத்திற் குரிய மூலிகையின் சாறு. நயத்து இரத மொழி கீதை - நயமுடைய இரஸம் போல் இனிய சொற்களைக் கொண்ட கீதை. நாள் செய் வான் - சூரியன். வயத்து இரதம் மறைந்தது என - இயல்பாகவே (சூரியனது) இரதம் மறைந்தது என்று எண்ணி. வலம்புரித் தார வன் - துரியோதனன். செருமுனை - போர்க்களம். இரும்பில் மூலிகைச் சாற்றைப் பிழிய அது பசும்பொன் ஆவது போல், சாமான்ய ஞானத்தோடு கூடிய விசயன் எளிதே தத்துவ வுணர் வினன் ஆகும்படி, இனிய கீதையை (அவனுக்கு) உபதேசித் தருளிய கண்ணனது மாயச் செயல்களை ஆர் அறிவார்? சூரியனது தேர் இயல்பாகக் குடதிசை அடைந்தது என்று எண்ணித் துரியோதனனைச் சேர்ந்த அரசர் எல்லோரும், சயத்தி ரதனை அழைத்துக் கொண்டு செருக்களத்தில் விசயன் எதிர் போய்ச் சேர்ந்தார், என்பது பொருள்.

விசயன் சயத்திரதனை அழித்தல்

166. **எண்சிறந்த மகன்றலையை நிலத்திட்டான்**
**தலைதுகளா கென்று நாடித்**
**தண்சமந்த பஞ்சகமென் றொருமடுவி**
**லிவன்றாதை தருப்பிக் கின்றான்**
**ஒண்சரங்கொ டிவன்றலைமற் றவன்கரத்தில்**
**போய்விழநீ யுடற்று கென்று**
**திண்செயங்கொள் விசயனுக்குச் சிந்துபதி**
**தனைக்காட்டித் திருமால் சொன்னான்.**

[எண் சிறந்த மகன் தலையை நிலத்து இட்டான் தலை துகள் ஆக, என்று நாடி, தண் சமந்த பஞ்சகம் என்றொரு மடுவில் இவன் தாதை தருப்பிக்கின்றான்; ஒள்சரம் கொடு இவன் தலை, மற்று அவன் கரத்தில் போய் விழ நீ உடற்றுக, என்று திண்

செயம் கொள் விசயனுக்கு சிந்துபதிதனை காட்டி திருமால் சொன்னான்.]

**விளக்கம்:-** எண் - வலிமை (ஏண், என்பது எண் என்று நின்றது), நாடி - (வரம்) வேண்டிப் பெற்று. சமந்த பஞ்சகம், என்பது ஒரு நீர் நிலை. தருப்பித்தல் - அருக்கியமாக ஜலத்தை மந்திரத்தோடு விடல். தன் மகன் தலையைத் தரையில் தள்ளினவன் தலை பொடிபட்டு அழிய வேண்டும், என்று ஒரு வரம் வேண்டிப்பெற்று, இவன் (சயத்திரதன்) தந்தை, இப்பொழுது சமந்த பஞ்சகம் என்ற மடுவில் சந்தி செய்து அருக்யம் விடுகின்றான்; அவனது கையில் மைந்தனது தலைபோய் விழும்படி பாணப் பிரயோகம் செய்க, என்று அவனைக் காட்டித் திருமாலான கண்ணன் விசயனுக்குச் சொன்னான், என்பதாம்.

**167.** **வரத்தினின்முன் பெறுசாபம் வாங்கியருச்**
**சுனன்சிந்து மகீபன்மௌலிச்**
**சிரத்தினிலெய் தலுந்துணிந்த தொருசரத்தால்**
**துணிதலுமச் சிரம்வீ ழாமல்**
**சரத்தினைமேன் மேலேவித் தடத்திருந்து**
**தருப்பித்த தாதை தன்பொன்**
**கரத்திடையே வீழ்வித்தா னவனதனை**
**நிலத்திட்டக் கணத்தின் மாய்ந்தான்.**

வரத்தினில் முன்பெறு சாபம் வாங்கிய அருச்சனன் சிந்து மகிபன் மௌலி சிரத்தினில் எய்தலும், துணிந்தது ஒரு சரத்தால் துணிதலும் அ சிரம் வீழாமல் சரத்தினை மேல் மேல் ஏவி தடத்து இருந்து தருப்பித்த தாதை தன் பொன் கரத்திடையே வீழ்வித்தான், அவன் அதனை நிலத்து இட்ட கணத்தில் மாய்ந்தான்.]

**விளக்கம்:-** வரத்தினில் முன் பெறு சாபம் - வரமாகச் சிவபிரானிடமிருந்து முந்தின நாள் பெற்ற வில். வரத்தின் பெற்ற வில்லை வளைத்து ஒரு அம்பினால் சயந்திரதனது முடி அணிந்த தலை அறுபட்டது; அறுபட்டதும், அந்தத் தலை கீழே விழாமல் அம்புகளை இடைவிடாமல் 'ஏவி, தடாகத்தில் தருப்பித்துக் கொண்டிருந்த தந்தையான விருத்த க்ஷத்திரன் என்பவனது கையில், அது விழும்படி செய்தான்; அவன் அத் தலையை நிலத்தில் இடவும் மாய்ந்து போனான், என்பது பொருள்.

**168.** **முன்பட்டா னருக்கனென வெளிப்பட்டான்**
**வெளிப்பட்டு முடிவிற் சிந்து**
**மன்பட்டான் மாமாயன் மாயமிதென்**
**றறியாமன் மகன்போய்ப் பட்ட**

**பின்பட்டா னவன்றந்தை யினிப்பட்டா**
**ரெவருமெனப் பிழைபட் டான்போல்**
**என்பட்டா னரவுயர்த்தோ னெரிபட்டான்**
**விசயனென வெண்ணி நின்றுன்.**

[முன் பட்டான் அருக்கன் என வெளிப்பட்டான், வெளிப் பட்டு முடிவில் சிந்து மன் பட்டான்; மா மாயன் மாயம் இது என்று அறியாமல் மகன் போய் பட்ட பின், பட்டான் அவன் தந்தை; இனி பட்டார் எவரும். என பிழைபட்டான் போல் என் பட்டான் அரவு உயர்ந்தோன், எரி பட்டான் விசயன் என எண்ணி நின்றுன்.]

**விளக்கம் :-** முன்னே சூரியன் அத்தமித்தான் என்று சிந்து பதியான சயத்திரதன் வெளிப்பட்டான்; வெளிப்பட்டு இறுதி யில் (விசயன் கைக்கணையால்) இறந்தான்; இது மாமாயனை கண்ணனது மாயச் செயல் என்று அறியாது, மகன் இறந்தபின் அவன் தந்தையும் இறந்தான்; இனி, அதாவது இவர்கள் இறந்தபின், (நம்மைச் சேர்ந்தார்) அனைவரும் இறந்தவர்களே ஆவர்; என்று (துரியோதனன்) எண்ணி, விசயன் தீக்குளித்து இறந்தான்என எண்ணி மகிழ்ந்திருந்த அவன், குறிதப்பினவன் போல மனம் வருந்தினுன்,—என்பது பொருள்.

பகல்முழுதும் மறைந்திருந்து அத்தமன சமயம் இறந்தானுத லால், முடிவில் எனப்பட்டது, மகன் தலை தந்தையின் கையில் விழச் செய்ததை இது குறிக்கும். மாமாயன் மாயம் இது என்று அறியாமல், அவன் தந்தை பட்டான், என்று இயைக்க. விசயன் அக்னிப் பிரவேசம் செய்து இறப்பான், என்ற எண்ணம் பிழைத்த படியால், **பிழைபட்டவன் போல்**, எனப்பட்டது; அதா வது கையில் பெற்ற ஒன்றை இழந்தவன் போல், என்க.

திருவாழி அகல சூரியன் விளங்கல்

**169. கன்னசவு பலர்முதலாங் காவலருஞ்**
**சுயோதனனுங் கரந்தான் வெய்யோன்**
**சொன்னமொழி பிழைத்தான்வெஞ் சுவேததுரங்**
**கமனென்று துள்ளி யார்த்தார்**
**அன்னபொழு தெம்பெருமான் பணிகொண்ட**
**சுடராழி யகற்ற நோக்கின்**
**இன்னமொரு பனைத்தனைப்போழ் துண்டெனநின்**
**றனனெழுபே ரிவுளித் தேரோன்.**

[கன்ன சவுபலர் முதலாம் காவலரும் சுயோதனனும் கரந் தான், வெய்யோன், சொன்ன மொழி பிழைத்தான் வெம்

சுவேத துரங்கமன் என்று துள்ளி ஆர்த்தார்; அன்னபொழுது எம்பெருமான் பணி கொண்ட சுடர் ஆழி அகற்ற, நோக்கின் இன்னம் ஒரு பனை தனை போழ்து உண்டு என நின்றனன், எழு பேர் இவுளித்தேரோன்.]

**விளக்கம்:-** (இறந்து பட்ட சயத்திரதனுக்கு வருந்தியபின்) கர்ணன், சகுனி முதலியவர்களும் துரியோதனனும், சூரியன் அத்தமித்தான்; அதன்பின் வெள்ளைக்குதிரைகளை உடைய மன்னனான விசயன் சிந்துபதியைக் கொன்றானதலால், அவன் சபத மொழி பிழைத்தான் என்று கூறி, ஆரவாரம் செய்தனர்; அந்த வேளை எம்பெருமான் சக்கரத்தை விலகச் செய்ய, பார்க்குங்கால், சூரியன், அத்தமிக்க இன்னும் ஒரு பனை மரத்தின் தூரம் கடக்க வேண்டும், என்பது 'பனைமரத்தனை போழ்து' என்பதால் குறிக்கப்பட்டது.

**170. விரியோத நெடுங்கடலுள் வீழ்வதன்முன்**
**விரைந்துரகன் விழுங்கி னானோ**
**எரியோடி மகனிறக்கு மெனமகவான்**
**மறைக்கமுகி லேவினானோ**
**கரியோன்கைத் திகிரியினான் மறைத்தனனோ**
**இருள்பரந்த கணக்கீ தென்னோ**
**பெரியோர்க ளிருவுள்ளம் பேதித்தா**
**லெப்பொருளும் பேதி யாதோ.**

[விரிஓதம் நெடுங்கடலில் வீழ்வதன் முன், விரைந்து உரகன் விழுங்கினானோ! எரி ஓடி மகன் இறக்கும் என மகவான் மறைக்க முகில் ஏவினானோ! கரியோன், தன் கை திகிரியினால் மறைத்தனனோ! இருள் பரந்த கணக்கு ஈது என்னோ! பெரியோர்கள் திரு உள்ளம் பேதித்தால் எ பொருளும் பேதியாதோ!]

**விளக்கம் :-** உரகன் - ராகு என்னுங் கோள்; விரிந்து பரவும் அலைகளை உடைய பெரிய கடலில் (சூரியன்) விழுவதன் முன் இராகு வந்து விரைவாக விழுங்கினானோ! அல்லது, மகன் அக்னிப் பிரவேசம் செய்து அழியும் என்று இந்திரன் மேகங்களை ஏவி மறைந்தானோ! அல்லது கண்ணன் தனது சக்கரத்தால் மறைத்தானோ! சூர்யாத்தமன காலத்திற்கு முன் இருள் பரந்தது என்ன காரணத்தாலோ! பெரியோர்களின் மனம் மாறினால், எதுதான் மாறுபடாதிருக்கும்?— என்று களம் இருந்தோர் கூறிக்கொண்டனர் என்பதாம்.

முதல் மூன்றடிகள் **ஐயவணி. ஈற்றடி** பொதுப் பொருள். பெரியோர்தம் மனம் மாறுபடின், எதுதான் மாறுபடாது, என்ற

பொதுப் பொருளால், துரியோதனனது தீச் செயல்களால் பெரியோரது மனம் மாறுபட, பகலும் அத்தமனமாயது, என்ற சிறப்புப் பொருள் சாதிக்கப்படலால், இது **வேற்றுப் பொருள் வைப்பு** ஆகும்.

**171. உந்திரதத் தனிவலவ னுபாயத்தால்**
**வருணன்மக னுயிரை மாய்த்தான்**
**மந்திரமொன் றறிவித்து வயப்புயமா**
**யிரத்தோளே மடிவித் திட்டான்**
**தந்திரமெய்ம் மயங்கிவிழத் தன்சங்க**
**முழக்கினுன் றபனன்மாய**
**இந்திரசா லமுஞ்செய்தா னிந்திரன்சேய்**
**வெல்லாமல் யார்வெல் வாரே!**

[உந்து இரதம் தனி வலவன் உபாயத்தால் வருணன் மகன் உயிரை மாய்த்தான், மந்திரம் ஒன்று அறிவித்து வய புயம் ஆயிரத்தோளே மடிவித்திட்டான், தந்திரம் மெய் மயங்கி விழ தன் சங்கம் முழக்கினுன், தபனன் மாய இந்திர சாலமும் செய்தான்; (ஆகவே) இந்திரன் சேய் வெல்லாமல் யார் வெல்வார், ஏ.]

**விளக்கம்:-** இரதம் உந்து தனி வலவன் - கண்ணன். வருணன் மகன் - சுதாயு. வயப்புயம் ஆயிரத்தோன் - ஆயிரம் வாகு. தந்திரம் - சேனே. இந்திரசாலம் - பெரு மாயம். கண்ணன் ஓர் உபாயத்தால் வருணன் மகனை சுதாயுவைக் கொல்வித்தான், விசயனுக்கு ஒரு மந்திரத்தை உபதேசித்து ஆயிரம் வாகுவை அழிவித்தான், சேனே மயங்கி விழும்படி தனது சங்கை முழக்கினுன், சூரியன் மறையும்படி இந்திரசாலம் செய்தான்; எனவே, விசயன் அல்லால் வேறு யாவர் வெற்றி கொள்வார்?—என்று சேனேயில் உள்ள வீரர் பேசிக் கொண்டனர், என்பதாம்.

துரியோதனுதியர் மீண்டும் போர் தொடரல்

**172. முடையெடுத்த நவநீதந் தொட்டுண்டுங்**
**கட்டுண்டு முதனு ளுகச்**
**குடையெடுத்து மழைதடுத்தும் வஞ்சனேக்கோர்**
**கொள்கலமாங் கொடிய பாவி**
**படையெடுத்து வினேசெய்யே னெனப்புகன்ற**
**மொழிதப்பிப் பகைத்த போரின்**
**இடையெடுத்த நேமியினல் வெயின் மறைத்தான்**
**இன்னமிவ னென்செய் யானே.**

[முடை எடுத்த நவநீதம் தொட்டு உண்டும், கட்டுண்டும், முதல் நாள் நாகம் குடை எடுத்தும் மழைதடுத்தும் வஞ்சனைக்கு ஓர் கொள்கலம் ஆம் கொடிய பாவி, படை எடுத்து வினை செய்யேன் என புகன்ற மொழி தப்பி பகைத்த போரின் இடை எடுத்த நேமியினால் வெயில் மறைத்தான்; இன்னம் இவன் என் செய்யான், ஏ.]

**விளக்கம்:-** நவநீதம் - வெண்ணெய். கொள்கலம்-பாத்திரம். இளம் பிராயத்திலிருந்தே வெண்ணெய் திருடி உண்டும், அதற்காக எசோதைப் பிராட்டியால் கட்டப் பட்டும், மலையைக் குடையாகக் கொண்டு மழைதடுத்தும் வஞ்சனைச் செயல்களுக்கு இருப்பிடமான கொடிய பாவியான கண்ணன்,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். ஆயுதம் எடுத்துப் போர் புரியேன் என்று (என்னிடம்) கூறியவன், அச்சொல் பிழைத்துச் சக்கராயுதத்தினால், வெயிலை மறைத்தான்; அவன் இன்னம் என்ன அநீதியைச் செய்யாது ஒழிவன்? — என்பது ஈற்றடிகளின் பொருள். இது துரியோதனன் கூற்று.

**173. ஒற்றைநெடுந் திகிரியினன் மறைவதன்முன்**
**ஐவரையு முடனே மோதிச்**
**செற்றிடுதல் யான்படுத றிண்ணமெனச்**
**சேனையொடுஞ் சென்று சூழ்ந்தான்**
**கொற்றவன துரைகேட்டுக் கொடிநெடுந்தேர்**
**நரபாலர் சபதங் கூறி**
**மற்றவரோ டொருகணத்தில் வம்மினெனத்**
**தனித்தனிபோய் மலைத் லுற்றார்.**

[ஒற்றை நெடுந்திகிரியினன் மறைவதன் முன் ஐவரையும் உடனே மோதி செற்றிடுதல், யான் படுதல் திண்ணம், என, சேனையொடும் சென்று சூழ்ந்தான்; கொற்றவனது உரை கேட்டு கொடி நெடுந்தேர் நரபாலர் சபதம் கூறி மற்றவரோடு ஒரு கணத்தில் வம்மின் என, தனி தனி போய் மலைதல் உற்றார்.]

**விளக்கம்:-** ஒற்றை நெடுந் திகிரியினன் - ஒரு பெரிய தேர்ச் சக்கரத்தையுடையவனான சூரியன். சூரியன் மறைவதன் முன், ஐவரையும் உடனே தாக்கி அழித்தல், அல்லது நான் சாதல், உறுதி, என்று சொல்லிக் கொண்டு துரியோதனன் தனது சேனையோடு சென்று, பாண்டவரை வளைத்துக் கொண்டான்,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். கொற்றவன் (துரியோதனன்) உரை கேட்டு, (அவனைச் சார்ந்த) அரசர்கள் சபதம் கூறிக் கொண்டு "ஒரு கணத்தில் போர் செய்ய வாருங்கள்" என்று, மற்றவரோடு

(எதிர்ப் பக்கத்து வீரர்களோடு) தனித்தனி சென்று போர் செய்தலில் பொருந்தினர், — என்பது ஈற்றடிகளின் பொருள்.

**174.** **துருபதனுஞ் சாத்தகியுந் துரௌபதிமைந்**
**தருமுடுகித் தொட்ட சாபக்**
**குருவுடனே போர்செய்தார் தம்பியரும்**
**சுயோதனனுங் கொற்ற வேந்தர்**
**ஒருபதினு யிரவரும்போய் வீமனுட**
**னுடற்றியவ னூர்ந்த தேரும்**
**வரிசிலையு மழித்தனர்பி னவனும்வெறுங்**
**கரதலத்தால் வன்போர் செய்தான்.**

[துருபதனும் சாத்தகியும் துரௌபதி மைந்தரும் முடுகி தொட்ட சாபம் குருவுடனே போர் செய்தார்; தம்பியரும் சுயோதனனும் கொற்றம் வேந்தர் ஒரு பதினுயிரவரும் போய் வீமனுடன் உடற்றி அவன் ஊர்ந்த தேரும் வரிசிலையும் அழித்தனர்; பின் அவனும் வெறுங்கர தலத்தால் வல் போர் செய்தான்.]

**விளக்கம்:-** துருபதனும் சாத்தகியும், திரௌபதியின் மைந்தர்களான உப பாண்டவர்களும் விரைந்து, பற்றிய வில்லை யுடைய குருவோடு போர் செய்தார்கள், துரியோதனனும் அவன் தம்பியரும் ஒரு பதினுயிரம் அரசர்களைத் துணையாகக் கொண்டு வீமனோடு போர் செய்து, அவனது தேரையும் வில்லையும் அழித்தனர்; அதன்பின், அவன் ஆயுதமும் தேரும் இல்லாது வெறுங் கையால் கொடும் போர் செய்தான், என்பதாம். தொட்ட சாபக் குரு - துரோணன்.

**175.** **பரியெடுத்துப் பரியெற்றிப் பரித்தேராற்**
**றேரெற்றிப் பனைக்கை வேகக்**
**கரியெடுத்துக் கரியெற்றிக் காலனிகர்**
**காலாளாற் காலா ளெற்றித்**
**கிரியெடுத்து விரியாழி கடைந்ததடந்**
**தோளிருடி கேச னென்ன**
**அரியெடுத்த கொடிவிடலை தோள்வலியா**
**லுழக்கியரி நாதம் செய்தான்.**

[பரி எடுத்து பரி எற்றி, பரி தேரால் தேர் எற்றி, பனை கை வேகம் கரி எடுத்து கரி எற்றி, காலன் நிகர் காலாளால் காலாள் எற்றி, கிரி எடுத்து விரி ஆழி கடைந்த தடந்தோள் இருடிகேசன் என்ன, அரி எடுத்த கொடி விடலை தோள் வலியால் உழக்கி அரிநாதம் செய்தான்.]

**விளக்கம்:-** அரி எடுத்த கொடி விடலை - சிங்கத்தை கொடியில் கொண்ட வீமன். வாகனமும் ஆயுதமும் இல்லாமல், வீமன், தேரைத் தேராலும், குதிரைகளைக் குதிரைகளாலும், காலாளைக் காலாளாலும் எற்றி, பாற்கடல் கடைந்த கேசவனைப் போல பகைவரது சேனைக் கடலைக் கலக்கினான், என்பதாம்.

**176. நிருபர்தொழுங் கனைகழற்கா னிலவேந்தன்**
**தம்பியரி னெடும்போ தாக**
**இருவர்புறங் கொடாமலதிர்ந் தெதிர்ந்திருதோள்**
**வலிகாட்ட விருவ ரோடும்**
**ஒருவரொரு வரையறியா வண்ணமிவ**
**னொருவனுமே யுடன்று சீறிப்**
**பொருதுபிரு கனையும்விறற் சூசிதனை**
**யும்வானிற் போக்கினானே.**

நிருபர் தொழும் கனை கழல் கால் நிலம் வேந்தன் தம்பியரில் நெடும் போது ஆக, இருவர் புறம் கொடாமல் அதிர்ந்து எதிர்ந்து இருதோள் வலி காட்ட, இருவரோடும் ஒருவர் ஒருவரை அறியா வண்ணம் இவன் ஒருவனுமே உடன்று சீறி பொருது பிருகனையும், விறல் சூசிதனையும் வானில் போக்கினான், ஏ.]

**விளக்கம்:-** நிருபர்...நிலவேந்தன் - அரசர்கள் தொழும் சப்திக்கின்ற கழல் அணிந்த பாதங்களையுடைய பூமிக்கு அரசனான துரியோதனன். பிருகன், சூசி என்பவர் துரியோதனன் தம்பியர். இவ்விருவரும் நெடுநேரம் தமது பெரிய தோள்களின் வலிமை காட்டி, ஆரவாரித்தும், எதிர்த்தும் போர் செய்ய, வீமன் ஒருவனே அவரோடு சினந்து சீறிப் போர் செய்து, ஒருவரை ஒருவர் அறியா வண்ணம் அவர்களை வானகம் செலுத்தினான், என்பதாம். உறவு முதலிய தொடர்பு தேக சம்பந்தம் பற்றியது; உடல் அகன்ற ஆவி எவ்வித பந்தமும் இல்லாதது, எனவே, ''ஒருவர் ஒருவர் அறியாமல்,'' எனப்பட்டது.

கடோற்கசனை அசுவத்தாமன் எதிர்த்தல்

**177. இகலிடிம்பன் மருமகனுந் திருமகனுங்**
**குருமகனோ டெதிர்ந்து பல்கால்**
**அகலிடஞ்செஞ் சேருக வமரருட**
**னசுரரைப்போ லமர்செய் காலைப்**
**பகலுடன்கா ரிருள்பகைத்தாற் பலிக்குமோ**
**அஞ்சனபன் மனையப் போதில்**
**புகலிடம்பொன் னுலகாக்கிப் போக்கினா**
**னொருகனையாற் புரவித் தாமா.**

[இகல் இடிம்பன் மருமகனும், திருமகனும் குரு மகனேடு எதிர்ந்து பல்கால் அகல் இடம் செம் சேறு ஆக, அமரருடன் அசுரரைப் போல் அமர் செய் காலை, பகலுடன் கார் இருள் பகைத்தால் பலிக்குமோ! அஞ்சனபன்மனை அ போதில் புகல் இடம் பொன் உலகு ஆக்கி போக்கினன் ஒரு கணையால் புரவித்தாமா.]

**விளக்கம்:-** இடிம்பன் மருமகன் – கடோற்கசன். திருமகன் - கடோற்கசனது அஞ்சனபன்மன், என்ற பெயருடைய மகன். தன்னை எதிர்த்த, கடோற்கசன், அஞ்சனபன்மன், என்ற இருவரில், பின்னவனை அசுவத்தாமா ஒரு கணையால் வானகம் செலுத்தினன், என்பதாம். ஈற்றடிகள், எடுத்துக் காட்டுவமை, ''மருமகனும் திருமகனும் குருமகனேடு,'' என்பதில் பிராசம் காண்க.

**178. மகன்பட்ட சினங்கதுவ வரையுறழ்தோட்**
**கடோற்கசன்மா மலைகள் வீசி**
**அகன்பட்ட நுதல்வேழ மன்னனன்மே**
**லெறிந்தெறிந்திட் டார்த்த காலைக்**
**குகன்பட்டந் தனக்குரிய கோமுனிவன்**
**மாமைந்தன் வீமன் கையில்**
**பகன்பட்ட பாடெல்லாம் படுத்தியொரு**
**கதாயுதத்தாற் படியில் வீழ்த்தான்.**

[மகன் பட்ட சினம் கதுவ வரை உறழ்தோள் கடோற்கசன் மா மலைகள் வீசி அகல் பட்டம் நுதல் வேழம் அன்னன் மேல் எறிந்து எறிந்திட்டு ஆர்த்த காலை, குகன் பட்டம் தனக்கு உரிய கோ முனிவன் மாமைந்தன், வீமன் கையில் பகன் பட்ட பாடெல்லாம் படுத்தி ஒரு கதாயுதத்தால் படியில் வீழ்ந்தான்.]

**விளக்கம்:-** அகல்பட்ட....அன்னன் - அகன்ற வெற்றிப் பட்டம் அணிந்த நெற்றியையுடைய யானை போன்றவனை அசுவத்தாமன். குகன் பட்டம் தனக்குரிய முனிவன் - முருகக் கடவுளது பெருமைக்கு உரியவனும் சிறந்த அந்தணனுமான துரோணன். மகன் பட்டதால் எழுந்த சினம் பற்ற மலை போன்ற தோள்களை உடைய கடோற்கசன், யானை போன்ற வலிமை யுடைய அசுவத்தாமன் மேல் மலைகளைப் பறித்து எறியவும், பகாசுரன் வீமன் கையில் பட்ட பாடெல்லாம் அரக்கன் படும்படி முனிவன் மைந்தன் செய்து, தனது கதையால் அடித்து அவனை மோகித்து விழச் செய்தான், என்பதாம்.

**179. மோகித்து விழுமரக்கன் மீண்டெழுந்து
மோகரிக்க முடிம கீபன்
வேகித்துக் கன்னனைப்பார்த் திவனுயிரை
வீட்டுகென வேகத் தண்டால்
சோகித்துத் தளர்ந்தான்மேற் றொடேன்விசய
னுயிருணவென் றொடையோ சாலத்
தாகித்த திப்பொழுதே கொன்றுனக்குக்
கடன்ஞாலந் தருவே னென்றான்.**

[மோகித்து விழும் அரக்கன் மீண்டு எழுந்து மோகரிக்க, முடி மகீபன், வேகித்து கன்னனை பார்த்து இவன் உயிரை வீட்டுக என வேகம் தண்டால், சோகித்து தளர்ந்தான்மேல் தொடேன்; விசயன் உயிர் உண்ண என் தொடையோ சால தாகித்தது, இப்பொழுதே கொன்று உனக்கு கடல் ஞாலம் தருவேன், என்றான்.]

**விளக்கம்:-** மோகித்து விழுந்த கடோற்கசன் மீண்டு எழுந்து யோகரித்தலும், துரியோதனன் கர்ணனைப் பார்த்து, ''இவன் உயிரைப் போக்குக,'' என்னலும், ''வேகமுடைய அசுவத்தாமன் தண்டால் தளர்ச்சியுற்றவன்மேல் படைதொடேன்; எனது அம்புகள் விசயனது உயிர் குடிக்கும் தாகத்தினதாய் இருக்கின்றது, எனவே, இப்பொழுதே அவனைக் கொன்று உனக்கு இக் கடல் ஞாலம் தருகின்றேன்,'' என்று கர்ணன் பதில் மொழிந்தான். முடிமகீபன் - துரியோதனன்.

**180. நிருபனுட னிரவிமகன் புகன்றவுரை
கேட்டருகே நின்ற விற்கைக்
கிருபன்மிக நகைத்தெதிரே கிட்டினான்
முதுகிடுவை கிரீடி தன்னைப்
பொருபகழிக் கிரையாகப் போக்குகின்றே
னெனமொழிவை போர்வல் லோர்கள்
உருவழியத் தம்வலிமை யுரைப்பரோ
எனவுரைத்தா னுரையான் மிக்கோன்**

[நிருபனுடன் இரவி மகன் புகன்ற உரை கேட்டு அருகே நின்ற வில் கை கிருபன் மிக நகைத்து, எதிரே கிட்டினால் முதுகு இடுவை, கிரீடி தன்னை பொரு பகழிக்கு இரையாக போக்கு கின்றேன், என மொழிவை; போர் வல்லோர்கள் உரு அழிய தம் வலிமை உரைப்பரோ, என உரைத்தான், உரையான் மிக்கோன்.]

**விளக்கம்:-** துரியோதனனிடம் கர்ணன் கூறியது கேட்டு, அருகே நின்ற உரையால் (புகழால்) மிக்கோன் (சிறந்தவன்)

ஆன, வில் கை கிருபன், (கர்ணனை நோக்கி), மிகுதியாக நகைத்து, "விசயன் எதிரில் நெருங்கினால் புறங் கொடுப்பாய்; (அவன் இல்லாத பொழுது) கிரீடிதன்னைப் பொரு பகழிக்கு இரையாக்குவேன், என்கின்றாய்! போர் வல்லோர் தம் உரு (பெருமை) அழிய தமது ஆற்றலைத் தாமே எடுத்துச் சொல்லிக் கொண்டிருப்பார்களோ!,"—என்று கூறினான், என்பது பொருள்.

**181. அம்மொழிதன் செவிசுடப்போ யக்கணத்தே**
**விசயனுட னங்க ராசன்**
**வெம்முனைசெய் போரழிந்து தேரழிந்து**
**வென்னிட்டான் மீண்டும் மீண்டும்**
**அம்முறையிற் பற்குனனா லாவியொழிந்**
**தவரரச ரனேக கோடி**
**எம்மொழிகொண் டுரைப்பரிதா லுரைக்கவெமக்**
**காயிரநா வில்லை மாதோ.**

[அ மொழி தன் செவி சுட, போய் அ கணத்தே விசயனுடன் அங்கராசன் வெம் முனை செய் போர் அழிந்து தேர் அழிந்து வென் இட்டான் மீண்டும் மீண்டும்; அ முறையில் பற்குனனால் ஆவி ஒழிந்த அரசர் அனேக கோடி, (ஆவர்), எம்மொழி கொண்டு (விசயனது போர்த் திறமையை) உரைப்பது அரிது, (ஆல்); உரைக்க எமக்கு ஆயிரம் நா இல்லை, மாதோ!]

**விளக்கம்:-** கிருபன் கூறியது தன்னைச் சுடவே, கர்ணன் விசயனை எதிர்த்து, தேரும் தன் வலியும் அழிந்து பலமுறை பின்னிட்டான்; அவ்வாறே, அவனால் ஆவி அழிந்தவர் பலகோடி வீரர்களாவர்; விசயனது போர்த் திறமையை என் ஒரு நாவின் சொற் கொண்டு புகழ்வது அரிது; ஏனென்றால், எடுத்துரைக்க எமக்கு ஆயிரம் நா இல்லை; அதாவது, ஆயிரம் நாக்கு இருந்தாலன்றி விசயனது பேராற்றலைப் பேச முடியாது, என்பதாம்.

**182. அந்தமுனை தனின்மீண்டு மந்தணன்தன்**
**திருமதலை குந்தி போசன்**
**மைந்தரிரு வரையிரண்டு வடிக்கணையான்**
**மடிவித்தான் மாயோன் வன்கைச்**
**செந்திகிரி தனிலடங்கி முடங்கியதன்**
**கிரணத்தின் சிறுமை நாணி**
**உந்துதிரைச் சிந்துவினி லோராழித்**
**தேரோனு மொளித்திட் டானே.**

[அந்த முனை தனில் மீண்டும் அந்தணன் தன் திருமதலை குந்தி போசன் மைந்தர் இருவரை இரண்டு வடி கணையால் மடிவித்தான்; மாயோன் வல் கை செம் திகிரி தனில் அடங்கி முடங்கிய தன் கிரணத்தின் சிறுமை நாணி உந்து திரை சிந்துவினில் ஓர் ஆழி தேரோனும் ஒளித்திட்டான், ஏ.]

**விளக்கம்:-** அந்தப் போர் முனையில், மீண்டும் அசுவத்தாமன், குந்திபோசன் புதல்வர் இருவரை இரு கூரிய அம்புகளால் இறக்கச் செய்தான்; (அவ்வேளை) ஓராழித் தேரனான சூரியனும், கண்ணனது சக்கரத்தில் அடங்கி மறைந்த தனது கிரணங்களின் எளிமைக்கு நாணி உந்து திரை சிந்துவில் (கடலில்) மறைந்தான்,—என்பதாம். இந்த, அத்தமன வருணனை **ஏதுத் தற்குறிப் பேற்றம்,** ஆகும்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

இரவுப் போர்

183. **இசையி னும்பெருக நன்றெ னத்தன**
**தியற்கை யான்மிகவ ளர்ந்திடும்**
**வசையி னுங்கரிய விருள்ப ரந்துழி**
**வயங்கு தீபநெடு வாளினால்**
**நிசையி னும்பொருது மென்று தெவ்வர்முனை**
**நேர்ந டந்தனனெ ருங்குகுன்(று)**
**அசையி னும்புடவி யசையி னுஞ்சமரில்**
**அசைவி லாததனி யாண்மையான்.**

[இசையினும் பெருக நன்று என தனது இயற்கையால் மிக வளர்ந்திடும் வசையினும் கரிய இருள் பரந்துழி வயங்கு தீபம் நெடு வாளினால் நிசையினும் பொருதும் என்று, தெவ்வர் முனை நேர் நடந்தனன், நெருங்கு குன்று அசையினும், புடவி அசையினும் சமரில் அசைவு இலாத தனி ஆண்மையான்.]

**விளக்கம்:-** நெருங்கு குன்று அசையினும்..... ஆண்மையான் (துரியோதனன்),—இசையினும் பெருக நன்று......தெவ்வர்முனை நேர் நடந்தனன்,—என்பது அன்வயம். நெருங்கிநிற்கும் மலைகள் அசைந்தாலும் பூமி சலித்தாலும் போரில் சலித்தல் இல்லாத ஒப்பற்ற ஆண்மையனான துரியோதனன், "புகழினும் மிகவும் நல்லது என்று மதித்து, தனது கொடிய இயற்கையினால் மிக வளர்ந்து வரும் பழியைக் காட்டிலும் கரிய இருள் பரவிய பொழுது, விளங்கும் விளக்குகளின் பெரிய ஒளியின் உதவி கொண்டு இரவிலும் போர் செய்வோம்," என்று முடிவு செய்து பகைவர்

முன் நேராகச் சென்றான், என்பது பொருள். புகழை வெண்ணிற முடையதாகவும், பழியைக் கரு நிறமுடையதாகவும் கூறல் கவி சமயம். இரவில் போர் செய்தலைத் தருமமாகக் கொள்ளாத இப்பாரத பூமியில், முதல் முதல் இரவில் பொரலை ஆரம்பித்தவன், இத்துரியோதனன்.

**184. பகலி ராவரவ ழைத்த னன்பகைவர்**
**பாக னென்றுபடு பகலையவ்**
**அகலி ராவினில ழைத்த னன்கொலென**
**வண்ட கூடமுற விருளறுத்(து)**
**இகலி ராகவொளி யுமிழ்வி ளக்கினம்**
**எடுக்க வென்றுகடி தேவினன்**
**தகலி ராததொர்ம னத்தி ஞன்வலிய**
**தனத னேர்தருத னத்திஞன்.**

[பகல் இரா வர அழைத்தனன் பகைவர் பாகன் என்று, படு பகலை அ அகல் இராவினில் அழைத்தனன் கொல் என, அண்ட கூடம் உற இருள் அறுத்து, இகல் இராகம் ஒளி உமிழ் விளக்கு இனம் எடுக்க என்று கடிது ஏவினன், தகல் இராதது ஓர் மனத்தினன், வலிய தனதன் நேர்தரு தனத்தினன்.]

**விளக்கம்:-** அண்ட கூடம் - அண்ட கோளம். இகல் - பொருவதற்காக. இராகம் ஒளி - சிவந்த ஒளி. தகல் - தகுதி. தகுதியுடைய நல்ல குணம் இல்லாதவனும், வலிய குபேரனை ஒத்த செல்வனுமான துரியோதனன், என்பது ஈற்றடியின் பொருள். ''சயிந்தனைக் கொல்லப் பகைவர் பாகனை கண்ணன் பகலில் இரவை அழைத்தானாதலின், அதற்கு எதிர் இரவில் பகலைக் கொணர்ந்தான் என்று கண்டவர் வியந்து கூறும்படி சுடர் விளக்கு எடுங்கள்,'' என்று துரியோதனன், ஏவினன், என்பதாம். இது **தற்குறிப்பேற்ற அணி** ஆகும்.

**185. பொங்கி யாடரவெ ழுந்த நேகவித**
**மா னதென்றமரர் புகலு மா(று)**
**அங்கு வாளரவு யர்த்த கோனினை**
**வறிந்த ளப்பரிய வாகவம்**
**எங்கு மானபரி தேர்க டோறுமொளிர்**
**தீப காகளமெ டுக்கவே**
**சங்கு தாரையெழ நின்ற னன்றருமன்**
**மதலை தம்பியர்க டம்மொடும்.**

[பொங்கு ஆடு அரவு எழுந்து அநேக விதம் ஆனது என்று அமரர் புகலும் ஆறு, அங்கு வாள் அரவு உயர்த்த கோன் நினைவு

அறிந்து, அளப்பு அரிய ஆகவம் எங்கும் ஆனே பரி தேர்கள் தோறும் ஒளிர் தீப காளகம் எடுக்க, (ஏ), சங்கு தாரை எழ நின்றனன் தருமன் மதலே தம்பியர்கள் தம்மொடும்.]

**விளக்கம் :-** அங்கு, தருமன் மதலே, வாள் அரவு உயர்த்தோன் நினைவு அறிந்து, ஆடு அரவு பொங்கி எழுந்து அநேக விதம் ஆனது என்று அமரர் புகலுமாறு, அளப்பு அரிய ஆகவம் எங்கும் ஆனே பரி தேர்கள் தோறும் ஒளிர் தீபகாளகம் எடுக்கச் (சொல்லி), —சங்கு தாரை எழ, தம்பியர்கள் தம்மொடும் நின்றனன்,—என்பது அன்வயம்.

செய்யுள் சுலபமானதே, தருமன் மா மதலே - யமதர்மனது சிறந்த மகனுன உதிட்டிரன். ஆகவம்-போர்க்களம், தீப காகளம்-விளக்குகள். களத்தின் எல்லா விடத்திலும், விளக்குகள் விளங்குவது, படங்களில் நாக மணிகளைக் கொண்ட ஆதிசேஷன் சினந்து மேலெழுந்தது போன்றிருந்தது, என்க. இவ்வருணனை, **தற்குறிப்பேற்றம்** ஆகும். சங்கு தாரை ஒலித்தல், போர் ஆரம்பித்தலின் அறிகுறி.

## இருதிறத்தாரும் பொரல்

**186. கருதி வாகைபுனே விசயன் மேல்விசய**
**கன்னன் முந்தியமர் கடுகினுன்**
**கிருத வன்மனெனும் விருதன் மாமுரச**
**கேத னன்றனெதிர் கிட்டினுன்**
**சுருதி மாமுனிது ரோண னும்பழைய**
**திட்டத் துய்மனெடு துன்னினுன்**
**பொருது மாய்வனென வீம னேடுயர்பு**
**யங்க கேதுமிகு போர்செய்தான்.**

[கருதி வாகை புனே விசயன் மேல் விசய கன்னன் முந்தி அமர் கடுகினுன், கிருதவன்மன் எனும் விருதன் மா முரச கேதனன் தன் எதிர் கிட்டினுன், சுருதி மாமுனி துரோணனும் பழைய திட்டத்துய்மனெடு துன்னினுன், பொருது மாய்வன் என வீமனெடு உயர் புயங்க கேது மிகு போர் செய்தான்.]

**விளக்கம்:**-விசயனேடு கர்ணனும், கிருதவன்மன் தருமனேடும், துரோணன் திட்டத்துய்மனெடும், வீமனேடு துரியோதனனும் நெருங்கிப் போர் தொடங்கினர், என்பதாம். பழைய திட்டத்துய்மன்—துரோணனுக்குப் பழம் பகையாகத் தோன்றியுள்ள திட்டத் துய்மன்.

நெருங்கினுன், என்ற பொருளுடைய பல சொற்கள் வந்திருத்தலால், இது **பொருட்பின் வருநிலை அணி,** ஆகும்.

**187. சல்லி யன்பெருகு சல்லி யத்தொடுச**
**தானி கன்றனெடு போர்செய்தான்**
**வல்லி யம்புனைக டோற்க சன்றனெடு**
**போர்செய் தான்முனிவன் மைந்தனும்**
**எல்லி யங்குசுட ரினும்ம ணிச்சுடர்கள்**
**எழும டங்கொளியெ றிக்கவும்**
**பல்லி யம்பலமு ழங்க வுந்தரணி**
**பால ரிப்படிப கைக்கவே.**

[சல்லியன் பெருகு சல்லியத்தொடு சதானிகன் தனெடு போர் செய்தான், வல்லியம் புனை கடோற்கசன் தனெடு போர் செய்தான், முனிவன் மைந்தனும்; எல் இயங்கு சுடரினும் மணி சுடர்கள் எழு மடங்கு ஒளி எறிக்கவும், பல் இயம் பல முழங்கவும் தரணிபாலர் இப்படி பகைக்கவே, குளகமாய்த் தொடரும்]

**விளக்கம் :**—சல்லியன் = சல்லியன் என்ற அரசன், பெருகு சல்லியத்தோடு-மிகுதியான பாணங்களைக் கொண்டு, சதானிகன்-பாண்டவரைச் சேர்ந்த அரசன், வல்லியம் புனை கடோற்கசன் - புலியைப்போன்ற கடோற்கசன், முனிவன் மைந்தன் - அசுவத்தாமன். எல் இயங்கு சுடர்- சூரியன், சூரிய வெளிச்சத்தினும் ஏழு மடங்கு அதிகமான பிரகாசத்தை விளக்குகள் தரவும்;— என்பது மூன்ருவது அடியின் பொருள், பலவித வாத்தியங்கள் கொழிக்க, இவ்விதம் அரசர் மாறுபட்டுப் போர் செய்யவும்— அடுத்த செய்யுளோடு தொடரும்.

கர்ணன் பின்னிடல்

**188. எற்ற ருந்தபன னேகி ஞனினியெ**
**னக்கு வாசிகொடி நீடுதேர்**
**முற்ற ருங்கனலி னெளியெ ழுந்ததென**
**முரண ழிந்திடமொ ழிந்துபோர்**
**விற்ற ருங்கணைக ளால்வி ழப்பொருது**
**வெயில வன்சுதனை மீளவும்**
**பிற்ற ரும்படிபி ளந்த னன்றனுசர்**
**பின்னி டப்பொருத பெற்றியான்;**

[எல்தரும் தபனன் ஏகினுன், இனி எனக்கு வாசி கொடி நீடுதேர் முன் தரும் கனலின் ஒளி எழுந்தது என, முரண்

அழிந்திட மொழிந்து போர் வில் தரும் கணைகளால் விழ பொருது வெயிலவன் சுதனை மீளவும் பின் தரும்படி பிளந்தனன் தனுசர் பின் இட பொருத வெற்றியான்.]

**விளக்கம்:-** தனுசர் பின் இட பொருத வெற்றியான் (கர்ணனை நோக்கி), எல்தரும்......பொழிந்து ......பின்தரும்படி பிளந்தனன்—, என்பது அன்வயம். தனுசர் — நிவாதகவசர் காலகேயர் என்ற அசுரர். எல்தருதபனன் — சூரியன். கனல்— அக்னிபகவான். வெயிலவன் சுதன் - கர்ணன். தனுசரை முன் வென்ற பெருமையினன் விசயன், (கர்ணனைப்பார்த்து), உனது தந்தையான சூரியன் அகன்ருன்; இனி, எனக்குக் குதிரை கொடி தேர் ஆயவற்றை உதவிய அக்னியின் ஒளி எழுந்தது; (ஆகவே வெற்றி எனது தான் என்று) முரண் அழியுமாறு வீர வசனங்கள் பொழிந்து, தனது கணைகளால், (கர்ணனது தேர் முதலியவை) அழியப் பொருது, மீளவும், அவன் பின்னிடும்படி உடலைப் பிளந்தான் என்பதாம்.

## கிருதவன்மன் தோற்றல்

**189. ஒருதன் வாகுவலி யாலும் வார்சிலையு
தைந்த வாளிவலி யாலுமொள்
குருதி பொங்கவடு தரும ராசன்ரகு
குலவி ராமநிக ராயினுன்
கிருத வன்மனென வருந ராதிபதி
கெட்டு மாவிரதம் விட்டுவாள்
நிருதர் சேகரனெ டுவமை யாயவனெ
டுங்க ளத்திலெதிர் நின்றிலன்.**

[ஒருதன் வாகு வலியாலும் வார்சிலை உதைந்த வாளிவலி யாலும் ஒள் குருதி பொங்க அடு தருமராசன் ரகு குல இராமன் நிகர் ஆயினுன்; கிருதவன்மன் என வருநராதிபதி கெட்டு மா இரதம் விட்டு வாள் நிருதர் சேகரனெடு உவமை ஆய், அவன் நெடுங்களத்தில் எதிர் நின்றிலன்.]

**விளக்கம்:** 'வாகுவலி - புயவலி. வாள் நிருதர் சேகரன் – அரக்கர்தலைவனுன இராவணன். தனது ஒப்பற்ற தோள்வலி யாலும், சரவலிமையாலும், பகைவன் குருதி சொரியும்படி போர் செய்த தருமன், இரகுவம்சத்தில் தோன்றிய இராமனைஒத்த வனுனுன்; அவனேடு போர் செய்த கிருதவன்மன், முதல்நாள் போரில் தேர், படை, புகழ் எல்லாவற்றையும் இழந்து நின்ற இராவணனை ஒத்தவனுனுன்,—என்பதாம்.

### மீண்டும் கர்ணனை ஓடச்செய்தல்

190. வாள மாகவில்வ ணக்கி யும்பர்பதி
மைந்தன் வாளிரவி மைந்தனைக்
கோள மானகுடை யிரதம் வாசிசிலை
கொடிமு ருக்கியமர் கொள்ளவே
மீள மீளவும ழிந்த ழிந்தவனொர்
வேலி னாலெறிய வேலையும்
தூள மாகவடி வாளி யாலெதிர்து
ணித்து வன்பொடுது ரக்கவே.

[வாளம் ஆக வில் வணக்கி உம்பர் பதி மைந்தன் வாள் இரவிமைந்தனை கோளம் ஆன குடை இரதம் வாசி சிலை கொடி முருக்கி அமர் கொள்ளவே மீள மீளவும் அழிந்து அழிந்து அவன் ஓர் வேலினால் எறிய, வேலையும் தூளம் ஆக வடிவாளியால் எதிர் துணித்து வன்பொடு துரக்க,—அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.]

**விளக்கம்:**-வாளம் - வட்டம். உம்பர்பதிமைந்தன் - விசயன். வாள் இரவி மைந்தன் - கர்ணன். கோளம் - வட்டம். அமர் கொள்ள - போரில் வெற்றிகொள்ள. தூளம் - தூள். துரக்க - ஓட்ட. கர்ணனை விசயன் மறுபடியும் குடை தேர், முதலியவற்றை அழித்து வெற்றி கொள்ள, அவன் ஒரு வேலை எறிய, அதையும் விசயன் தூள்படச் செய்து, ஓடச் செய்தான்.

### சல்லியனும் முனிமைந்தனும் தோற்றல்

191. முன்ச தாகதிமு ருக்க மேருகிரி
முடிமு ரிந்தெனமு ரண்கொள்போர்
வன்ச தானிகன்வ ளைத்த விற்கணையின்
மத்தி ரத்தலைவன் மனமுரிந்(து)
என்செய் தான்முடிவி லோடி னான்விறலி
டிம்பி மைந்தன்முனி மைந்தன்மேல்
மின்செய் தாரையயி லேவி னனவன்வி
ரைந்து தேரின்மிசை வீழவே.

[முன் சதாகதி முருக்க மேரு கிரி முடி முரிந்து என, முரண் கொள் போர் வல் சதானிகன் வளைத்த வில் கணையின் மத்திரம் தலைவன் மனம் முரிந்து என் செய்தான்? முடிவில் ஓடினான்; விறல் இடிம்பி மைந்தன் முனிமைந்தன் மேல் மின் செய் தாரை அயில் ஏவினான், அவன் விரைந்து தேரின் மிசை வீழவே]

விளக்கம்:-மத்திரத்தலைவன்-சல்லியன். இடிம்பி மைந்தன் - கடோற்கசன். முனிமைந்தன் - அசுவத்தாமன். தாரைஅயில் - கூரிய வேல். சதானிகன் சல்லியனையும், கடோற்கசன் அசுவத்தாமனையும் வென்றனர், என்பதாம்].

## துரோணன் வலி அழிதல்

192. தானை காவலனு முந்து றப்பொருது
தரணி மன்னன்விடு சமர்முகச்
சேனை காவலனை யோட யோடவொரு
தெய்வ வாளிகொடு சீறினன்
ஆனை தேர்புரவி யாளொ டுற்றெதி
ரணிந்த மன்னவர்க ளனைவரும்
ஏனை மன்னவர்த மக்கு டைந்துமுது
கிட்டு மன்னனரு கெய்தினர்.

[தானை காவலனும் முந்துற பொருது, தரணி மன்னன் விடு சமர் முகம் சேனை காவலனை ஓட ஓட ஒரு தெய்வ வாளி கொடு சீறினன்; ஆனை தேர் புரவி ஆளொடு உற்று, எதிர் அணிந்த மன்னவர்கள் அனைவரும் ஏனை மன்னவர் தமக்கு உடைந்து முதுகிட்டு மன்னன் அருகு எய்தினர்.]

**விளக்கம்:-** தானைகாவலன் - பாண்டவரது படைத்தலைவன் திட்டத்துய்மன். தரணி மன்னன் - துரியோதனன். சமர் முகம் நின்ற சேனை காவலன் - போர்முனையில் முன்னே நின்ற (துரியோதனனது) சேனையின் தலைவனான, துரோணன். ஏனை மன்னர் - பாண்டவர் பக்கத்தினரான மற்ற மன்னர்கள். திட்டத்துய்மன் ஓர் அஸ்திரங் கொண்டு குருவை ஓடச் செய்தான்; சதுரங்க சேனைகளோடு அணிகொண்டு நின்ற மன்னவர்கள் அனைவரும், பாண்டவர் பக்கத்து அரசர்களுக்கு முன் நிற்க மாட்டாமல்முதுகிட்டுத் துரியோதனனை அடைந்தனர், என்பதாம்

## அலாயுதன் வீமனை எதிர்த்தல்

193. அன்ன போதினில நேக நூறுபதி
னாயி ரத்திறல ரக்கரோ(டு)
இன்ன வாறெனவு ரைக்க வேநிகரி
லாத திண்டிறல லாயுதன்
கன்ன சௌபலர்த மக்கு நண்பனிருள்
கங்கு லோர்வடிவு கொண்டனன்
மன்னர் யாவரும்வெருக்கொ ளச்சமரின்
மன்னர் மன்னனடி மன்னினன்.

[அன்னபோதினில் அநேக நூறு பதினுயிரம் திறல் அரக்க ரோடு, இன்ன ஆறு என உரைக்கவே நிகர் இலாத திண் திறல் அலாயுதன், கன்ன சௌபலர் தமக்கு நண்பன், இருள்கங்குல் ஓர் வடிவு கொண்டு அனுன், மன்னர் யாவரும் வெருக் கொள சமரில் மன்னர் மன்னன் அடி மன்னினுன்.[

**விளக்கம் :-** அன்னபோதினில், கன்ன சௌபலர் தமக்கு நண்பன், இருள் கங்குல் ஓர் வடிவு கொண்டனுன், இன்ன ஆறு என உரைக்க (ஏ) நிகர் இலாத திண் திறல் அலாயுதன். அநேகம் நூறு பதினுயிரம் திறல் அரக்கரோடு மன்னர் யாவரும் வெருக் கொள சமரில் மன்னர் மன்னன் அருகு மன்னினுன், - என்பது அன்வயம். பத்து நூருயிரம் திறல் அரக்கர் - பத்து லட்சம் என்ற தொகையுடைய வலிய அரக்கர். இருள் கங்குல் - இருண்ட இரவுப்பொழுது. வடிவுகொண்டனுன் - உருவம் கொண் டாற்போல. அலாயுதன், என்ற அரக்கன் பத்துலட்சம் அரக்கர் களோடு துரியோதனன் சார்பில் போர் ஏற்ருன், என்பதாம்.

**194. இன்றி ராமுடியு முன்னர் வெஞ்சமமெ**
**திர்ந்த பஞ்சவர்க ளெஞ்சிடக்**
**கொன்று பார்முழுது நின்ன தாகவுயர்**
**வானு ளோர்பதிகொ டுப்பன்யான்**
**என்று கோடிசப தம்பு கன்றெதிரெ**
**டுத்த தீபமு மிருண்டிடச்**
**சென்று வீமனெடு கிட்டி னுன்விசைகொ**
**டேரி ரண்டுமுடன் முட்டவே.**

[இன்று இரா முடியும் முன்னர் வெம் சமம் எதிர்ந்த பஞ்சவர்கள் எஞ்சிட கொன்று, பார் முழுதும் நின்னது ஆக, உயர் வான் உளோர் பதி கொடுப்பன் யான் என்று, கோடி சபதம் புகன்று, எதிர் எடுத்த தீபமும் இருண்டிட சென்று, வீமனெடு கிட்டினுன், விசை கொள் தேர் இரண்டும் உடன் முட்டவே.

**விளக்கம்:-** இன்றைய இரவு கழியுமுன், கொடிய போரில் எதிர்க்கும் பாண்டவர்களை அழியும்படி கொன்று, பூமி முழுவதும் உன்னதாகவும், தேவலோகத்தை (வீர சுவர்க்கத்தை) அவர் களுக்குக் கொடுப்பேன் நான், என்று பலபடி சபதம் கூறி, எதிரிலே எடுக்கப்பட்ட தீபங்களின் ஒளி (தனது கருமையால்) இருண்டு விடும்படி செய்து கொண்டு போய், விசை கொண்ட தனது தேரும் (வீமனது) தேரும் ஆகிய இரண்டும் ஒன்ருே டொன்று மோதும்படி வீமனை (நெருங்கினுன்), என்பதாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**195.** **பணைத்திரு புயக்கிரி வளர மாற்றலர்**
**பயப்பட வயப்படு பயமி னூற்றுவர்**
**துணைப்பெற மனச்சின முடுக நாக்கொடு**
**சுழற்றுக ணெருப்பெழ நிருதர் பார்த்திவன்**
**இணைப்பிறை யெயிற்றிள நிலவி னுற்செறி**
**இருட்கிழி தரப்பகை முனையி லேற்குமுன்**
**அணைத்திரு புறத்தினும் வருமி ராக்கதர்**
**அதிர்த்தன ரெதிர்த்தன ரமரை நோக்கியே.**

[பணைத்து இரு புயம் கிரி வளர, மாற்றலர் பயப்பட, வய படு பயம் இல் நூற்றுவர் துணை பெற, மனம் சினம் முடுக, நா கொடு சுழற்று கண் நெருப்பு எழ, நிருதர் பார்த்திவன், இணை பிறை எயிற்று இள நிலவினுல் செறி இருள் கிழிதர பகை முனையில் ஏற்கும் முன், - அணைத்து இரு புறத்தினும் வரும் இராக்கதர் அதிர்த்தனர், எதிர்த்தனர் அமரை நோக்கி, ஏ.]

**விளக்கம்:-** நிருதர் பார்த்திவன் இரு புயம் கிரி பணைத்து ....அதிர்த்தனர், அமரை நோக்கி எதிர்த்தனர், என்பது அன்வயம்.

நிருதர் பார்த்திவன் - அரக்கர் தலைவனான அலாயுதன். மாற்றலர் - பகைவர். வய படு பயம் இல் நூற்றுவர் - வலியவர் களும் நல்வினையின் நற்பயன் இல்லாதவர்களுமான துரியோ தனாதியர். நூற்றுவர் என்ற தொகைக் குறிப்பு, மாண்டவர் போக மிஞ்சியவர்களைக் குறித்து நின்றது. துணைபெற - தனது துணையைப் பெற. நாக்கொடு சுழற்று கண் நெருப்பு எழ - சொல் லோடு சுழலும் கண்களிலும் நெருப்பு எழ, அதாவது தீப்பொறி வெளிப்பட. இணைப்பிறை - இணையான கோரைப் பற்கள். அலாயுதனைச் சார்ந்து வரும், நெருங்கி வரும் அரக்க வீரர்கள் வீர முழக்கஞ் செய்து கொண்டு போர் செய்தலை நோக்கி எதிர்த்துச் சென்றனர், என்பது ஈற்றடியின் பொருள். அலாயுதன் கௌரவர் சார்பில், தனது அரக்கப் படையோடு களம் புகுந்தான், என்பதாம்.

**196.** **இருட்கிரி யெனத்தகு கரிய தோற்றமும்**
**எயிற்றினி னிணப்பிண முடைகொ ணாற்றமும்**
**முருக்கலர் வெளுத்திடு மருண நாட்டமும்**
**முகிற்குர லிளைத்திட முதிரும் வார்த்தையும்**

**மருட்படு கருத்திடை கதுவு சீற்றமும்**
**மதக்கட களிற்றதி மதமு மாய்ப்புடை**
**நெருக்கினர் தருக்கினர் விறனி சாசரர்**
**நிமிர்த்தனர் வடிக்கணை சிலைகள் கோட்டியே.**

[இருள் கிரி என தகு கரிய தோற்றமும் எயிற்றினில் நிணம் பிணம் முடைகொள் நாற்றமும், முருக்கு அலர் வெளுத்திடும் அருணம் நாட்டமும், முகில் குரல் இளைத்திட முதிரும் வார்த்தையும், மருள் படு கருத்திடை கதுவு சீற்றமும், மதம் கடம் களிறு அதி மதமும் ஆய், புடை நெருக்கினர் (ஆய்), தருக்கினர் (ஆய்), விறல் நிசாசரர் நிமிர்த்தனர் வடி கணை சிலைகள் கோட்டியே.]

**விளக்கம்:-** எயிறு - பற்கள். எயிற்றினில் கொள் பிணம் நிணம் முடை நாற்றம், என்று இயைக்க. முருக்கு அலர்-சிவந்த முருக்கம் பூ. அருணம் நாட்டம் - சிவந்த கண்கள். முருக்கலர் வெளுத்திடும் அருண நாட்டம், என்றது நயமுடையது. மருள் படு கருத்து - மயக்கத்தின் பாற்பட்ட மனம். கதுவு சீற்றம் - பற்றி எரியும் கடுங்கோபம். தருக்கு - போரின் பால் உற்ற உற்சாகம். அலாயுதனும், அவனைச் சார்ந்த அரக்கர்களும் தருக்கொடு களம் நெருங்கிப் பாணப் பிரயோகம் செய்தார்கள், என்க.

**197. அருக்கனை மறைத்தவர் கடவு தேர்த்தலை**
**யருச்சுனன் முதற்பல துணைவர் சாத்தகி**
**செருக்குடை யமைத்துனர் குமரர் காத்திடு**
**செருக்களம் வெருக்கொள வளையு மாத்திரை**
**மருச்சுதன் வளைத்ததொர் தனுவி னுற்சில**
**வடிக்கணை தொடுத்தலு மிரவு லாத்திரி**
**துருத்தனும் வளைத்தன னெடிய காற்சிலை**
**தொடுத்தன னிலக்கறு தொடைகள் வாய்க்கவே.**

[அருக்கனை மறைத்தவர் கடவு தேர்த்தலை அருச்சுனன் முதல் பல துணைவர் சாத்தகி, செருக்கு உடைய மைத்துனர், குமரர், காத்திடு செரு களம் வெரு கொள (அலாயுதன்) வளையும் மாத்திரை, மருத்சுதன் வளைத்தது ஓர் தனுவினால் சில வடிகணை தொடுத்தலும், இரவு உலாதிரி துருத்தனும் வளைத்தனன் நெடிய கால்சிலை, தொடுத்தனன் இலக்கு அறு தொடைகள் வாய்க்கவே.]

**விளக்கம்:-** அருக்கனை மறைத்தவர் - கண்ணபிரான். மைத்துனர் - திட்டத்துய்மன் முதலியோர். குமரர்-உபபாண்டவர், கடோற்கசன் முதலியோர். இன்னவர் காத்து நிற்கும் களம்,

அங்கே இருப்போர் அச்சங் கொள்ளும்படி அலாயுதன் சுற்றிக் கொண்ட அளவில், மருத்சுதன் (வீமன்) ஒரு கணை தொடுத்தான்; இரவில் உல்லாசமாய்த் திரியும் இயல்பினனான அலாயுதன் வில் கழுத்தை நன்றாக வளைத்து, எண்ணிக்கை அற்ற, அதாவது மிகப் பலவான கணைகளைப் பயன் வாய்க்கும் முறையில் செலுத்தினான், என்பதாம். வாய்க்க - பலிக்க; அதாவது குறிபிழையாத பயன் உண்டாகும்படி, என்க.

**198. மருச்சுதன் வடிக்கணை யமரர் மாற்றலன்**
**வடிக்கணை தடுத்தும்வல் லிரத மாற்றியும்**
**விருப்புடன் விரித்தணி துவசம் வீழ்த்தியும்**
**விறற்பரி களைத்துணி துணிக ளாக்கியும்**
**உரத்தொடு செலுத்திய வலவன் மாத்தலை**
**யுருட்டியு மணிச்சிலை யொடிய நூக்கியும்**
**இருட்டொளி யுடற்பல துளைக ளாக்கியும்**
**இமைப்பொழு தினிற்றிறன் மடிய மாய்த்தவே.**

[மருச்சுதன் வடி கணை அமரர் மாற்றலன் வடி கணை தடுத்தும் வல் இரதம் மாற்றியும், விருப்புடன் விரித்து அணி துவசம் வீழ்த்தியும், விறல் பரிகளை துணி துணிகள் ஆக்கியும், உரத்தொடு செலுத்திய வலவன் மா தலை உருட்டியும், மணி சிலை ஒடிய நூக்கியும், இருட்டு ஒளி உடல் பல துளைகள் ஆக்கியும் இமைப் பொழுதினில் திறன் மடிய மாய்ந்த, ஏ.]

**விளக்கம்:-** அமரர் மாற்றலன் - அலாயுதன். வீமன், தன் கணைகளால் அரக்கனது கணைகளைத் தடுத்தும், தேர், பாகன், கொடி அழித்தும், இருட்டை ஒத்த ஒளியுடைய பல அரக்கர்களது உடல் துளைத்தும், பகைவர் வலி அழித்தான், என்பதாம்.

**199. நிலத்திடை குதித்தனன் வடவை போற்பெரு**
**நெருப்பெழ விழித்தன னெடிய மூச்சுடன்**
**வலத்துய ரலப்படை நிசிச ரோத்தமன்**
**வரைத்திர ளெடுத்தெதிர் முடுகி யோச்சலும்**
**உலப்புய நிமிர்த்தொரு கதையி னுற்றன**
**துரத்துட னடித்தவை பொடிக ளாக்கினன்**
**இலக்கமில் சுரர்க்கிட முதவு கோத்திர**
**வெழிற்குவ டொடித்தவ னுதவு கூற்றமே.**

[நிலத்திடை குதித்தனன் வடவை போல் பெரு நெருப்பு எழ விழித்தனன் நெடிய மூச்சுடன் வலத்து உயர் அலம் படை நிசிசர

உத்தமன், வரை திரள் எடுத்து எதிர் முடுகி ஒச்சலும், உலம்புயம் நிமிர்த்து ஒரு கதையினுல் தனது உரத்துடன் அடித்து அவை பொடிகள் ஆக்கினுன், இலக்கம் இல் சுரர்க்கு இடம் உதவு கோத்திரம் எழில் குவடு ஒடித்தவன் உதவிய கூற்றம், ஏ.]

**விளக்கம்:-** எண்ணிக்கை இல்லாத தேவர்களுக்கு வாழுமிடம் அளித்த கோத்திரத்தின் (மேருமலையின்) அழகிய சிகரத்தை ஒரு சமயம் முறித்த வாயு பகவான் அளித்துதவிய எமனைப் போன்ற **வீமன்,**—என்பது ஈற்றடியின் பொருள். வலிய கலப்பைப் படையை உடைய அசுர சிரேஷ்டனுன அலாயுதன், பெரு மூச்சுடன் பூமியில் குதித்து, வடவைக் கனல் போல் நெருப்பு வெளிப்படும்படி விழித்து, மலைக் கணங்களைப் பறித்து (வீமன்) எதிரே விரைவுடன் வீசலும், எமனையொத்த வீமன் திரண்ட தூண் போன்ற வலிய கையினுல் தூக்கி எடுத்த ஒரு கதையினுல், முழுவலிமையோடு தாக்கி (அம்மலைகளைத்) தூள்படச் செய்தான், என்பதாம். உலம் தோள் - திரண்ட கல் அல்லது தூண் போன்ற **கைகள்.** கோத்திரம் - வடமேரு. நிசிசரோத்தமன்—(வடமொழிப் புணர்ச்சி) நிசிசர உத்தமன்.

கடோற்கசன் போர் ஏற்றல்

**200. பரத்துவ சனக்குற வுரிய கோத்திரி**
**பரிச்சுட ருடைப்பெயர் முனிகு லோத்தமன்**
**மரித்தன னெனத்தனி யயில் கொடோச்சிய**
**மணிச்சிறு பொருப்பினை நிகர்க டோற்கசன்**
**எரித்தலை யரக்கனெ டெதிரி யாய்ச்சம**
**ரெனைத்தரு மருச்சுதன் முனைதல் கீழ்த்தொழில்**
**உரத்துடன் மலைத்திவ னுயிரை மாட்டுவன்**
**உருத்தென வுடற்றின னுறுதி தோற்றவே.**

[பரத்துவசனுக்கு உறவு உரிய கோத்திரி பரிசுடர் உடை பெயர் முனி குல உத்தமன் மரித்தனன் என, தனி அயில் கொடு ஓச்சிய மணி சிறு பொருப்பினை நிகர் கடோற்கசன், எரிதலை அரக்கனேடு எதிரி ஆய் சமர், எனை தரு மருத்சுதன் முனைதல் கீழ் தொழில்; உரத்துடன் மலைத்து இவன் உயிரை மாட்டுவன் உருத்து என உடற்றினன் உறுதி தோற்றவே.]

**விளக்கம்:**—பரத்துவாச முனிவனுக்கு மிகவும் உரியதான குலத்தில் பிறந்தவனுகிய அசுவத்தாமா என்ற பெயரை உடைய முனிவர் கணச் சிரேஷ்டன் இறந்தான் என்று சொல்லும்படி தனது ஒப்பற்ற வேலைச் செலுத்தி அவனை வலியழியச் செய்த,

நீல மணிக்குன்றை ஒத்த கரிய கடோற்கசன், ''என்னைப் பெற்ற வாயுகுமாரனான வீமன், செம்பட்ட மயிரையுடைய இந்த அரக்கனோடு எதிரே சமமாய் நின்று எதிர்த்துப் பொருதல் தாழ்வுடைய செயலாகும்; (எனவே) வலிமையோடு போர் செய்து அவனது உயிரை அழிப்பேன்,'' என்று சொல்லி, போராவேசங் கொண்டு, தனது உறுதி தோன்றும்படி போர் செய்பவனானன்,— என்பது பொருள்.

அசுவத்தாமன் பரத்துவாச முனிவனது பேரன். எனவே, கோத்திரி, என்றான்; (கோத்திரி - வம்சத்தினன்), அசுவம் தாம என்ற சொல், குதிரை, ஒளி என்ற பொருளின; அதைப் புலவர் ''பரிச்சுடர் உடைப் பெயர்,'' என்று மொழி பெயர்த்துக் கொண்டார். எரித்தலை - நெருப்புப் போல் தோன்றும் தலை மயிர். உருத்து - சினந்து, போர் ஆவேசங் கொண்டு. உறுதி - மனவுறுதி, போர் ஊக்கம்.

அரக்கர் இருவரும் பொரல்

**201. இடிக்குர லெனத்தலை யுரகர் சாய்த்தனர்**
**எதிர்க்குர லெழுப்பின குலசி லோச்சயம்**
**வெடித்தது முகட்டுயர் கடக மேற்றலை**
**விபத்தென விபத்திரள் வெருவு தாக்கின**
**துடித்தன ரியக்கரொ டமரர் தைத்தியர்**
**துணுக்கென விமைத்தனர் திசைகள் காப்பவர்**
**அடிக்கடி படித்துகள் பரவை தூர்த்தன**
**அரக்கனு மரக்கனு மமரி லார்க்கவே.**

[இடி குரல் என தலை உரகர் சாய்த்தனர், எதிர் குரல் எழுப்பின குல சிலோச்சயம், வெடித்தது முகடு உயர் கடகம்மேல் தலை, விபத்து என இபம் திரள் வெருவு தாக்கின; துடித்தனர் இயக்கரோடு அமரர் தைத்தியர் துணுக்கென, இமைத்தனர் திசைகள் காப்பவர்; அடிக்கடி படி துகள் பரவை தூர்த்தன, அரக்கனும் அரக்கனும் அமரில் ஆர்க்கவே.]

**விளக்கம்:-** குல சிலோச்சயம் - குல பர்வதங்கள். முகடு உயர் கடகம் மேல் தலை - சிகரம் உயர்ந்த அண்ட கடாகத்தின் மேலிடம். இபம் வெருவு தாக்கின - திக்கு யானைகள் அச்சத்தால் தாக்கப் பெற்றன. தைத்தியர் - அசுரர். துணுக்கென - திடுக்கீடு கொண்டு. திசை காப்பவர் - திக்பாலகர். பரவை - கடல். அரக்கர் இருவரும் போரினிடத்தே செய்த ஆரவாரத்தினால், பாதலத்திலுள்ள நாகங்கள் இடி என்று எண்ணிப் பயந்து தலை

சாய்தல் உற்றன, குல பர்வதங்கள் எதிரொலி எழுப்பின, அண்ட கடாகத்தின் மேலிடம் வெடிப்புற்றது, திக்கஜங்கள் ஆபத்து வந்ததென அச்சங் கொண்டன; இயக்கரோடு தேவரும் அசுரரும் திடுக்கிட்டு துடிப்பவராயினர், திக்பாலகர்கள் கண் இமைத்தனர், புழுதிகள் அடிக்கடி அதிர்ச்சியால் மேலெழுந்து சென்று கடலைத் தூர்த்தன, என்பதாம்.

இமயம், ஏம கூடம், கயிலை, நிடதம், நீலம், மந்தரம், விந்தியம் என்பவை குல மலைகள். இந்திரன், அக்னி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசாநன், என்பவர் திக் பாலகர்கள். இமையாத கண்களை உடைய இவர், இமைத்தது, அச்சத்தால், என்க.

**202. சிரித்தன ருருத்தன ரணுவின் மோட்டுடல்**
**சிறுத்தனர் பெருத்தனர் மதனி னோக்கினர்**
**எரித்தன ரிரித்தனர் ககன மேற்பட**
**எடுத்தனர் படுத்தனர் புடவி கீழ்ப்பட**
**முரித்தன கிரிக்கொடு முடிக ளாற்சினை**
**முரித்தன மரத்தன துணிக ளாற்கடி**
**துரித்தனர் துவக்குர நெரிய மேற்பழு**
**ஒடித்தன ரிளைத்தன ருருவம் வேர்க்கவே.**

[சிரித்தனர், உருத்தனர், அணுவின் மோடு உடல் சிறுத்தனர், பெருத்தனர், மதனின் நோக்கினர், எரித்தனர், இரித்தனர், ககனம் மேல் பட எடுத்தனர், படுத்தனர் புடவி கீழ் பட; முரித்தன கிரிகொடு முடிகளால், சினைமுரித்தன மரத்தன துணிகளால் கடிது உரித்தனர் துவக்கு, உரம் நெரிய மேல் பழு ஒடித்தனர், இளைத்தனர், உருவம் வேர்க்கவே.]

**விளக்கம்:-** மதன் - மதம், செருக்கு. ககனம் – ஆகாயம். துவக்கு - தோல். இருவரும், சிரித்தனர், வெகுண்டனர், அணுவைப்போல் உடல்களைச் சிறுக்கச் செய்தார்கள், உடனே, பெரிய உருவங் கொண்டனர், மதத்தோடு ஒருவரை ஒருவர் விழித்துப் பார்த்தார்கள், (கண்களிலிருந்து) தீயை வெளிப் படுத்தினர், ஒருவரை ஒருவர் அச்சமுறச்செய்தனர்; ஆகாயத்தை எட்டும்படி ஒருவரை ஒருவர் தூக்கினர், பூமி குழிபட தரையில் மோதினர்; முரித்தனவாகிய மலைச்சிகரங்களாலும், சினை (கிளை) முரித்தனவாகிய மரத்துண்டுகளாலும் அடித்து ஒருவரது தோலை ஒருவர் உரித்தனர், உரம் (மார்பு) நெரியும்படி வெளித் தோன்றும் விலா எலும்புகளை ஒடித்தனர்; பிறகு உடல் வியர்க்க இளைத்தாரா யினர், என்பதாம்.

கடோற்கசன் அரக்கனை அழித்தல்

**203.** **சிலைப்படை யயிற்படை தெளியும் வாட்படை**
**திறற்பல படைக்கல வலிமை காட்டியும்**
**வலம்பட வளைத்துமல் வலிமை காட்டியும்**
**வயத்தொடு செயப்புய வலிமை காட்டியும்**
**உலைப்படு கனற்சின முதிர்க டோற்கசன்**
**உடற்றிய வரக்கரை யொருவர் போற்பொரு(து)**
**அலப்படை யரக்கன துயிரை மாய்த்தனன்**
**அடற்றொடை களிற்றொடை யடைசி வீழ்த்தியே.**

— [சிலை படை அயில் படை தெளியும் வாள் படை, திறல் பல படைக்கலம் வலிமை காட்டியும், வலம்பட வளைத்து மல் வலிமை காட்டியும்,—வயத்தொடு செயம் புயம் வலிமை காட்டியும், உலை படு கனல் சினம் முதிர் கடோற்கசன் உடற்றிய அரக்கரை ஒருவர் போல் பொருது, (பிறகு) அலம் படை அரக்கனது உயிரை மாய்த்தனன் அடல் தொடைகளின் தொடை அடைசி வீழ்த்தியே.]

**விளக்கம்:-** சிலை படை - வில்லாகிய ஆயுதம். தெளியும் வாள் படை - தேர்ந்து எடுத்த வாளாகிய ஆயுதம். வலம்பட வளைத்து - வலிமையோடு கட்டிப் பிடித்து. வயத்தொடு-வலிமையோடு. உலை படு கனல் சினம் முதிர் கடோற்கசன் - உலைக் களத்தில் மூண்டு எரிகின்ற கனல் போல் சினம் மிகுந்த கடோற்கசன். உடற்றிய அரக்கர் - தன்னோடு போர் செய்த அரக்கர். அலம் படை - கலப்பைப் படை. தொடைகளின் தொடை அடைசி - தனது தொடைகளினால், அரக்கனது தொடையை நெருக்கி. கடோற்கசன் அரக்கர்களை அழித்து, அதன்பின் அலாயுதனையும் கொன்றான், என்பதாம். சிலைப்படை... காட்டியும், என்ற அடிகளை கடோற்கசனோடோ, அல்லது, அவனோடு உடற்றிய அரக்கர்களோடோ சேர்த்துப் பொருள் கொள்ளலாம். தொடை, என்பதற்கு அம்பு, என்று பொருள் கொண்டால், ''தொடைகளின் தொடை அடைசி வீழ்த்தி,'' என்பது, அம்புகளினால் பகைவர் அம்புகளை விலக்கி வீழ்த்தி என்றோ, அல்லது வரிசையாக அம்புகளைச் செலுத்தி வீழ்த்தி, என்றோ பொருளதாகும்.

**204.** **புரத்தினை யெரித்தவர் கயிலை மாக்கிரி**
**புயத்தினி லெடுத்திசை புனைப ராக்ரமன்**
**வரத்தினில் வனத்திடை திரியு நாட்சில**
**மனித்தரொ டெதிர்க்கவும் வயிரி யாய்த்திலன்**

**உரத்துடன் மருச்சுத னுதவு ராக்கத**
**ஒருத்தனு மெனேப்பல ருடனு மேற்றெதிர்**
**துரத்தலின் மரித்தன னிவளெ னுப்பலர்**
**துதித்ததி சயித்தனர் சுரரும் வாழ்த்தியே.**

[புரத்தினை எரித்தவர் கயிலை மா கிரி புயத்தினில் எடுத்து இசை புனை பராக்ரமன் வரத்தினில் வனத்திடை திரியும் நாள் சில மனித்தரொடு எதிர்க்கவும், வயிரி ஆய்த்திலன்; உரத்துடன் மருந்சுதன் உதவு ராக்கதன் ஒருத்தனும் எனை பலருடனும் ஏற்று எதிர் துரத்தலின் மரித்தனன் இவன் என, பலர் துதித்து அதிசயித்தனர் சுரரும் வாழ்த்தியே.]

**விளக்கம்:-** புரத்தினை...பராக்ரமன் – இராவணன். வரத்தினில் - தான்பெற்ற பல வரங்களின் பலத்தோடு. வனத்திடை திரியும் மனித்தரோடு - வனத்தில் வாசம் செய்த இராம இலக்கு வரோடு. மருத்சுதன் உதவு ராக்கதன் - கடோற்கசன், ஏனைப் பலர். இவன் ஏனைப்பலருடன் எதிர் ஏற்றுத் துரத்தலின், என்று கூட்டுக. இவனை (அலாயுதனை) அவனைச் சேர்ந்தார் மிகப் பலருடன் எதிர் ஏற்றுத் தாக்கி ஓட்டலின் (மரித்தனன்). என பலரும்) சுரரும் துதித்து (புகழ்ந்து) வாழ்த்தி (கடோற்கசனை) அதிசயித்தனர், என்று கூட்டிப் பொருள் கொள்க.

இரு மானிடரை வெல்லும் திறமையில்லாத அரக்கனை இராவணனினும், பல அரக்கர்களை வென்று வீழ்த்திய அரக்கனை கடோற்கசன் உயர்ந்தவன், என்று தேவர் கொண் டாடினர் என்றது **வேற்றுமை அணியின்** பாற்படும்.

வயிரி ஆய்த்திலன் - (ஆய்-து-இலன்) வலிமை அல்லது வீரம் பெற்றவனுன் இலன் (து. சாரியை).

### கடோற்கசனது மாயப்போர்

### எழுசீர் ஆசிரியவிருத்தம்

**205.** **அன்று கங்குலிற் பலபதி னுயிரம்**
**அரக்கரோ டலாயுதன் றன்னேக்**
**கொன்று வெம்பணிக் கொடியவன் சேனேயைக்**
**குரங்குகொள் கோதைபோற் கலக்கி**
**ஒன்று பத்துநா ருயிரங் கோடியாம்**
**உருவுகொண் டிவுளிதேர் களிருள்**
**சென்றி மைப்பொழு தளவையில் யாவரும்**
**தென்புலம் படருமா செற்றுன்.**

[அன்று கங்குலில் பல பதினாயிரம் அரக்கரோடு அலாயுதன் தன்னை கொன்று வெம்பணி கொடியவன் சேனையை குரங்கு கொள் மாலைபோல் கலக்கி, ஒன்று பத்து நூறு ஆயிரம் கோடி ஆம் உருவுகொண்டு, இவுளி களிறு ஆள், சென்று இமைப்பொழுது அளவையில் யாவரும் தென் புலம் படருமா செற்றான்.]

**விளக்கம் :-** அன்றை இரவில் பல பதினாயிரம் அரக்கரோடு அலாயுதனைக் கொன்று, பாம்புக் கொடியனான துரியோதனனது சேனையை, குரங்கு கையில் கொண்ட மாலை போல், உருக்குலையச் செய்து, (கடோற்கசன்) மிகப் பல உருவம் கொண்டு சென்று குதிரை யானை காலாள் முதலிய சதுரங்க சேனைகளும் அச்சேனைத் தலைவர் எல்லோரும் இமைப் பொழுதில் எமனுலகம் சேரும்படி பொருது அழித்தான்,—என்பதாம். ஒன்று பத்து நூறு ஆயிரம் கோடி - மிகப்பல. தென்புலம் - எமனுலகம். குரங்கு கொள் கோதை, என்றது உலகநவிற்சிஅணியின் பாற்படும்.

வேறு

**206.** **சண்டமா ருதமா யெழுந்திடு மொருகால்**
**சலதியா யெழுந்திடு மொருகால்**
**கொண்டலா யுதகம் பொழிந்திடு மொருகால்**
**குன்றமா யுயர்ந்திடு மொருகால்**
**மண்டுபா வகனா யெரிந்திடு மொருகால்**
**வல்லிரு ளாய்வரு மொருகால்**
**பண்டுதான் வல்ல மாயைகள் பலவும்**
**பயிற்றினன் மாருதி பயந்தோன்.**

[சண்ட மாருதம் ஆய் எழுந்திடும் ஒரு கால், சலதி ஆய் எழுந்திடும் ஒரு கால், கொண்டல் ஆய் உதகம் பொழிந்திடும் ஒரு கால், குன்றம் ஆய் உயர்ந்திடும் ஒரு கால், மண்டு பாவகனாய் எரிந்திடும் ஒரு கால், வல் இருள் ஆய் வரும் ஒரு கால்; பண்டுதான் வல்ல மாயைகள் பலவும் பயிற்றினன் மாருதி பயந்தோன்.]

**விளக்கம் :-** செய்யுள் மிக சுலபமானது சண்டமாருதம் - பெருங்காற்று. சலதி - கடல். உதகம் - நீர். பாவகன் - அக்னி. மாருதிபயந்தோன்-வாயுகுமாரனான வீமன் பெற்ற கடோற்கசன். அவன், தான் கற்றுத் தேர்ந்துள்ள பல மாயைகளைச் செய்து பகைவரை வலி ஒடுங்கச் செய்தான் என்பதாம்.

**207.** **இம்பர்வா ளரக்க னிணத்தொடு பிணங்கின்**
**றிடங்கொள்வாய் கொடுமடுத் திலனேல்**
**தும்பிமா பரிமா வீரரென் றிவர்மெய்**
**துணித்தலிற் சொரிந்தசெஞ் சோரி**

**அம்புரா சிகளி லண்டகோ ளகையில்**
**அடங்குமோ வண்டமும் பிளந்திட்(டு)**
**உம்பர்வா ரியையுங் கலக்குமே மிகவும்**
**உண்மைநா முரைசெயும் பொழுதே.**

[இம்பர் வாள் அரக்கன் நிணத்தொடு பிணம் தின்று இடம் கொள் வாய் கொடு மடுத்திலனேல் தும்பிமா பரிமா வீரர் என்றிவர் (என்ற இவர்) மெய் துணித்தலில் சொரிந்த செம்சோரி, அம்புராசிகளில் அண்ட கோளகையில் அடங்குமோ! அண்டமும் பிளந்திட்டு உம்பர் வாரியையும் கலக்குமே மிகவும், உண்மை நாம் உரை செயும் பொழுதே.]

**விளக்கம் :-** இம்பர் - இப்போர்க்களத்தில். வாள் அரக்கன்- கடோற்கசன். நிணம் - கொழுப்பு. இடங்கொள்வாய் - (அவனது) பெரிய வாய். மடுத்தல் - குடித்தல். தும்பிமா - யானை, பரிமா - குதிரை. வீரர் - போர் செய்யும் வீரர்கள். அம்புராசி - கடல். உம்பர் வாரி - அண்டத்திற்கு வெளியிலுள்ள பெரும் புறக்கடல். களத்தில் கடோற்கசன் பிணங்களைத் தின்றும், இரத்தத்தைக் குடித்தும் இரானேல், யானை குதிரை வீரர் ஆயவர் துணி யுண்டதால் பெருகிய இரத்தம், கடலிலும், அண்டகோளத்திலும் அடங்குமோ ! அடங்காமல், அண்டத்தைப் பிளந்து கொண்டு பெரும் புறக்கடலையும் நாம், உண்மையில் கூறும் காலத்திற்குள், அதில் கலந்து கலங்கச் செய்திருக்கும். யானை, குதிரை, வீரர், என்ற இவர், என்றது சிறப்பு நோக்கி வந்த திணைவழு.

அரக்கனை அழிக்குமாறு கர்ணனை ஏவல்

**208.** **கட்செவி யெழுதுங் கொடியுடைக் கொடியோன்**
**கன்னனைக் கடைக்கணித் தருளி**
**விட்சுர பதிவந் தன்றுனக் களித்த**
**வேலினுல் வீமன்மா மகனே**
**உட்செறி சினமும் வலிமையு முயிரும்**
**உடனழிந் தும்பரூர் புகுதப்**
**புட்செறி தொடையாய் கொல்கென விரைவிற்**
**புகைந்துநாப் பொறியெழப் புகன்றுன்.**

[கட்செவி எழுதும் கொடி உடை கொடியோன், கன்னனை கடைக்கணித்தருளி, விண் சுரபதி அன்று உனக்கு அளித்த வேலினுல் வீமன் மாமகனை, உள்செறி சினமும், வலிமையும், உயிரும் உடன் அழிந்து உம்பர் ஊர் புகுத, புள் (வண்டு) செறி தொடையாய் கொல்க என, விரைவில் புகைந்து நா பொறி எழ, புகன்றுன்.]

**விளக்கம் :-** கட்செவி - பாம்பு, விண் சுரபதி - இந்திரன். தன் படையை அழித்து வரும் கடோற்கசனை, 'இந்திரன் அளித்த வேலினால் கொல்க', என்று துரியோதனன் விரைந்து நா புகைந்து தீப்பொறி எழக் கர்ணனிடம் கூறினான்,- என்பதாம்.

**209.** **புகன்றபோ தருக்கன் புதல்வனு மாயப்**
**போரிது கங்குலிப் பொழுதே**
**அகன்றிடு மகன்று லிவனுயிர் பிறிதொ**
**ரம்பினா லகற்றுவித் திடலாம்**
**இகன்றபோர் முனையி னாளையிவ் வடிவே**
**லெறிந்துநா னிமையவர்க் கிறைவன்**
**மகன்றனா ருயிர்கொன் றுனதுவெண் குடைக்கீழ்**
**வைப்பனிவ் வையக மென்றான்.**

[புகன்றபோது அருக்கன் புதல்வனும் மாயம் போர் இது, கங்குல் இப்பொழுதே அகன்றிடும்; அகன்றால், இவன் உயிர் பிறிது ஓர் அம்பினால் அகற்றுவித்து விடலாம்; இகன்ற போர் முனையில் நாளை இ வடிவேல் எறிந்து நான் இமையவர்க்கு இறைவன் மகன் தன் ஆர் உயிர் கொன்று, உனது வெள் குடை கீழ் வைப்பன் இ வையகம் என்றான்.]

**விளக்கம்:-** அரக்கருக்கு வலிமை மிகும் காலமாகிய இரவு விரைவில் நீங்கும். அவனைப் பகலில் வேறோர் அம்பினால் அழித்து விடலாம். நாளைப் போரில் இவ் வேலினால் விசயனை வதைத்து இவ் வையகம் உனது ஆக்குவேன், என்று கர்ணன் தனது உடன் பாடின்மையைத் தெரிவித்தான், என்பதாம்.

**210.** **என்றலு மரசன் யாமுமெம் படையும்**
**இரவிடைப் பிழைக்கநீ யிவனைக்**
**கொன்றுபோர் பொருது சிலைவிச யனையுங்**
**கொல்லுதி யெனமனங் கொதித்துக்**
**கன்றலு மவ்வே லக்கணத் தவன்மேற்**
**காலவெஞ் சூலமொத் தெறிந்தான்**
**தென்றலு நிலவு நிகரெனத் தன்னைச்**
**சேர்ந்தவ ரினைப்பெலாந் தீர்ப்பான்.**

[என்றலும் அரசன் யாமும் எம் படையும் இரவிடை பிழைக்க நீ இவனை கொன்று, போர்பொருது சிலை விசயனையுங் கொல்லுதி என மனம் கொதித்து கன்றலும், அ வேல் அ கணத்து அவன் மேல் காலன் வெம் சூலம் ஒத்து எறிந்தான், தென்றலும் நிலவும் நிகர் என தன்னை சேர்ந்தவர் இனைப்பு எலாம் தீர்ப்பான்.]

**விளக்கம்:-** தென்றலும் நிலவும் ஒப்பு என்று சொல்லும்படி தன்னை அடைந்தாரது துன்பம், அல்லது மிடி அனைத்தையும் தீர்ப்பவனாகிய கர்ணன், என்பது ஈற்றடியின் பொருள். இப் பொழுது இவ்வேலால் இவனைக்கொன்று எம்மையும் எமது படையையும் காத்து, அதன்பின் விசயனைக் கொல்லலாம், என்று மனக் கொதிப்புடன் துரியோதனன் கூற, வள்ளலான கர்ணன், எமன் தனது கொடிய சூலத்தை எறிந்தாற்போல், வேலை (கடோற்கசன் மேல்) எறிந்தான், என்பதாம்.

கடோற்கசன் மாளல்

**211. எறிந்தவேல் பகைவன் மார்பகந் துளைத்திட்**
**டிந்திர னிடத்துமீண் டெய்த**
**மறிந்தமால் வரைபோ லரக்கனு முகம்பார்**
**மருங்குற விழுந்துயிர் மடிந்தான்**
**செறிந்தரு கணைந்த சேனையும் பயந்தோர்**
**சிந்தையுஞ் செயலறக் கலங்க**
**அறிந்தவர்க் கன்றி யறியொணு வையன்**
**அவர்துய ரகற்றுமா றுரைப்பான்.**

[எறிந்த வேல் பகைவன் மார்பகம் துளைத்திட்டு இந்திரனிடத்து மீண்டு எய்த, மறிந்த மால் வரைபோல் அரக்கனும் முகம் பார் மருங்கு உற விழுந்து உயிர் மடிந்தான்; செறிந்து அருகு அணைந்த சேனையும் பயந்தோர் சிந்தையும் செயல் அற கலங்க, அறிந்தவர்க்கு அன்றி அறிய ஒணு ஐயன் அவர் துயர் அகற்றும் ஆறு உரைப்பான்.]

**விளக்கம் :-** மறிந்த - கவிழ்ந்த. பார் மருங்கு முகம் உற, என்று இயைக்க. செறிந்து அருகு அணைந்தோர் - பாண்டவ சேனையிலுளோர். பயந்தோர் - பாண்டவர். அறிந்தவர்க்கு அன்றி அறிய ஒணு ஐயன் - மெய்ஞானம் கைவந்தவர்க்கு அன்றி, மற்றையோரால் அறிய முடியாத ஐயன், (கண்ணன்). தந்தையரான பாண்டவரது துயரம் அகற்றும் பொருட்டுக் கண்ணன் சமாதானம் கூறலானுன், என்க.

**212. இந்தவேல் கவச குண்டலங் கவர்நாள்**
**இந்திர னிரவிமைந் தனுக்குத்**
**தந்தவே லிதனை யாவர்மேல் விடினும்**
**தரிப்பறத் தெறுமவன் வரத்தால்**

உந்தவே லமரில் விசயன்மேற் றொடுக்கும்
உரகவம் பினுக்குயி ருய்ந்தால்
அந்தவே லையின்மற் றெறிவதற் கிருந்தான்
ஆற்றலாற் கூற்றினுங் கொடியோன்.

[இந்தவேல் கவச குண்டலம் கவர் நாள் இந்திரன் இரவி மைந்தனுக்கு தந்த வேல், இதனை யாவர்மேல் விடினும் தரிப்பு அற தெறும் அவன் வரத்தால்; உந்த வேல் அமரில் விசயன் மேல் தொடுக்கும் உரகம் அம்பினுக்கு உயிர் உய்ந்தால் அந்த வேலை (மற்று) எறிவதற்கு இருந்தான் ஆற்றலால் கூற்றினும் கொடியோன்.]

**விளக்கம்-:** தரிப்பு அற தெறும் - தாங்கமுடியாதபடி தைத்துக் கொல்லும். வரத்தால்-இந்திரனது வரத்தால். **உந்த வேல்** - இந்த வேல் படை, உரகம் அம்பு – நாகாத்திரம். கூற்றினும் கொடியான், என்றது, ''எமனுக்குத்தப்பினுலும் கர்ணனுக் குத்தப்ப முடியாது'' என்ற பொருளது. இவ்வேல் கர்ணன் கையில் இருந்தால், அதனல் அவன் விசயனை அழிப்பான்; ஆதலால், வருந்தற்க,'' என்று கண்ணன் கூறிப் பாண்டவரைத் தேற்றினுன் என்பதாம்.

213. அலப்படை யவனு மநேகமா யிரம்பே
ரரக்கரும் விளியுமா றடர்த்தோன்
உலப்படை யவுந்தா னுய்யவு மரசன்
உரைத்தலா லோச்சின னிவன்மேல்
வலப்பட முனையி லின்றுமக் கவனி
வழங்கினன் கன்னனே யென்ருன்
குலப்பட வரவின் முடியின்மே னடித்த
கூத்துடைக் கோவியர் கூத்தன்.

[அலம் படைமினும் சந்தேகம் ஆயிரம் பேர் அரக்கரும் விளியும் ஆறு அடர்த்தோன் உலப்பு அடையவும் தான் உய்யவும் அரசன் உரைத்தலால் ஒச்சினன் இவன் மேல், வலம்பட முனை யில் இன்று உமக்கு அவனி வழங்கினன் கன்னனே என்ருன் குலம் பட அரவின் முடியின் மேல் நடித்த கூத்து உடை கோவியர் கூத்தன்.]

**விளக்கம்:-** அலம்படையவன் - அலாயுதன் என்ற அரக்கன். விளியுமாறு அடர்த்தோன் - அழியும்படி போர் செய்த கடோற் கசன். உலப்பு - அழிவு. முனையில் வலம்பட போரில் (உங்களுக்கு) வெற்றி உண்டாக. சிறந்த படத்தையுடையு காளியுன் என்னும்

பாம்பின் தலையில் ஆடிய நடனத்தை உடைய கோவியரோடு கூத்தாடிய கண்ணன், என்பது ஈற்றடியின் பொருள் "நாகக் கணைக்கு விசயன் தப்புவானுனால், அவனை அழிக்க வைத்திருந்த வேலை, உங்கள் மைந்தன்மேல் ஏவியதால், கர்ணன், உங்க களுக்கு வெற்றியையும், இந்தப்பூமியையும் வழங்கிவிட்டான்," என்று கண்ணன் கூறி அவர்களது புத்திரசோகத்தை ஆற்றினுன், என்க.

## துரோணன் கடும்போர் புரிதல்

**215. இராவணன் படுபோர்க் களமெனக் கிடந்த**
**இந்தவெங் களத்திடை மீண்டும்**
**அராவுயர் துவச ஞணையால் வரிவில்**
**லாரிய னனீகினி யுடன்போய்**
**விராடனும் யாக சேனனு முதலாம்**
**வேந்தரோ டெதிர்த்தமர் மலைந்து**
**தராதிபர் பலரோ டவ்விரு வரையுஞ்**
**சரங்களாற் சிரங்களைத் தடித்தான்.**

[இராவணன் படு போர்க்களம் என கிடந்த இந்த வெம் களத் திடை மீண்டும் அரா உயர் துவசன் ஆணையால் வரிவில் ஆரியன் அனீகினியுடன் போய், விராடனும் யாகசேனனும் முதல்ஆம் வேந்தரோடு எதிர்த்து அமர் மலைந்து தராதிபர் பலரொடு அ இருவரையும் சரங்களால் சிரங்களை தடித்தான்.]

**விளக்கம் :-** இராவணன்....வெம்களம்—இராவணன் விழுந்து மடிந்த யுத்தக்களத்தை ஒத்திருந்த, அதாவது மிகப்பல அரக்கர் விழுந்து கிடக்கப்பெற்ற, கொடிய போர்க்களம். அரசனது தூண்டுதலால் துரோணன் சேனையுடன் களம் சென்று, பல அரசர்களோடு துருபதனையும் விராடனையும் கொன்றனன், என்ப தாம். அனீகினி— சேனை.

**216. துருபதன் மடிந்த வெல்லையிற் றிட்டத்**
**துய்மனும் வெகுண்டுளஞ் சுடப்போய்**
**இருபத மரசர் முடிகமழ் முனியை**
**ஏன்றுவஞ் சினமெடுத் துரைத்தான்**
**பொருபகை முனையி லெந்தையை யென்முன்**
**பொன்றுவித் தனையுனை நாளை**
**நிருபர்த மெதிரே நின்மகன் காண**
**நீடுயி ரகற்றுவ னென்றே.**

[துருபதன் மடிந்த எல்லேயில் திட்டத் துய்மனும், வெகுண்டு உளம் சுட போய், இரு பதம் அரசர் முடி கமழ் முனியை ஏன்று, வஞ்சினம் எடுத்து உரைத்தான், ''பொருபகை முனேயில் எந் தையை என் முன் பொன்றுவித்தனே, உனே நானே நிருபர் தம் எதிரே நின் மகன் காண நீடு உயிர் அகற்றுவன் என்றே.]

**விளக்கம் :-** இருபதம்.......முனி—இரு பாதங்களிலும் வணங் கும் அரசர்களின் முடியின் மணம் வீசப் பெற்ற முனிவஞன துரோணன். ஏன்று—எதிர்த்து. தந்தை இறந்த அளவில் மனக் கொதிப்புக் கொண்ட திட்டத்துய்மன், துரோணனேப் போரில் எதிர்த்து, (அவனேநோக்கி) பொருகின்ற பகைவர்முன்னிலேயில் என் தந்தையை என்முன்னே அழித்தாய்; நானே அரசர்கள் முன்னிலேயில் உன் மகன் காணும் படி உனது நீண்ட உயிரை அகற்றுவேன்,'' என்று வஞ்சினம் உரைத்தான்,-என்பதாம். நீடுஉயிர்—நீண்ட நாள் வாழும் தன்மையுள்ள உயிர்.

**217. மாமனே மகுடந் துணித்தன னெவரும்**
**வணங்குதாண் முனியென வயிர்த்துக்**
**காமனே யழகுங் கந்தனே விறலுங்**
**கவர்ந்தவெங் கார்முக வீரன்**
**சோமனே வகிர்செய் தனேயவெம் முனேய**
**தொடைகளாற் சுரும்புசூழ் கமலத்**
**தாமனே முதுகு கண்டனன் முன்னம்**
**தயித்தியர் முதுகிடத் தக்கோன்.**

[மாமனே மகுடம் துணித்தனன், எவரும் வணங்குதாள் முனி என வயிர்த்து, காமனே அழகும், கந்தனே விறலும் கவர்ந்த வெம் கார்முகம் வீரன், சோமனே வகிர் செய்து அனேய வெம் முனேய தொடைகளால் சுரும்பு சூழ் கமலம்தாமனே முதுகு கண்டனன், முன்னம் தைத்தியர் முதுகு இட தக்கோன்.]

**விளக்கம் :-** எவரும் வணங்கும் தாள் முனி, மாமனேக் கொன்ருன், என்று வயிரங் கொண்டு, காமனது அழகையும் முருகக்கடவுளது ஆற்றலேயும் தனதாகக் கொண்ட வில்வீரனும் முன்பு (நிவாதகவச காலகேயர்) என்ற அரசரை முதுகிடும்படி செய்த வீரனுமான விசயன். சோமனே (சந்திரனே) பிளந்தாற் போன்ற கணேகளால், அதாவது அர்த்த சந்திர பாணங்களால், தாமரைமலர் மாலேயையுடைவஞன துரோணனே முதுகிடச் செய் தான், என்பது பொருள்.

## கௌரவர் தோற்றுக் களம் அகலல்

**218.** **பூத்தகிக் குலமு மால்வரைக் குலமும்**
**புகரிபக் குலங்களும் புகழக்**
**காத்தகி லமுந்தன் குடைநிழற் படுத்தும்**
**காவலர் நீதியைக் கடந்தோன்**
**சேத்தகில் புழுகு சந்தனங் கமழும்**
**திருப்புயத் தணிதருந் திருத்தார்ச்**
**சாத்தகி முனேச்சென் றம்முனேக் காற்று**
**தரியெதிர் கரியெனத் தளர்ந்தான்.**

[பூத்து அகி குலமும் மால்வரை குலமும் புகர் இபம் குலங்களும் புகழ காத்து அகிலமும் தன் குடைநிழல் படுத்தும் காவலர் நீதியை கடந்தோன், சேத்து அகில் புழுகு சந்தனம் கமழும் திரு புயத்து அணிதரும் திரு தார் சாத்தகிமுனே சென்று, அ முனேக்கு ஆற்றுது அரிஎதிர்கரி என தளர்ந்தான்]

**விளக்கம் :-** அகிகுலமும்... இபம் குலங்களும் பூத்து புகழ அகிலமும் காத்து தன் குடைநிழல் படுத்தும் காவலர் நீதியை கடந்தோன்—மகா நாகங்களின் குலமும் குல பர்வதங்களின் குலமும், செம்புள்ளிகளேயுடைய திசை யானேகளின் குலமும் உள்ளத்தின் மலர்ச்சியோடு புகழும்படி உலகம் முழுவதையும் காத்து தன் குடை நிழலின் கீழ் வாழச் செய்யும் அரசர்களது நீதியின் எல்லையைக் கடந்த தீயனுன துரியோதனன். சேத்த—சிவந்த. சாத்தகி முனே சென்று—சாத்தகியின் முன்னே சென்று. அ முனேக்கு ஆற்றுது-(அச் சாத்தகியின்) போருக்கு ஈடு கொடுக்க முடியாமல். சிங்கத்தை எதிர்த்த யானே எனத் துரியோதனன் தளர்ந்தான். சாத்தகியின் முன் நிற்க மாட்டாமல் துரியோதனன் போர் ஒழிந்தான், என்க.

**219.** **அனேவரு மொருவர் போலுடைந் தவனி**
**யாளுடை யரசனே டமரில்**
**துனேவரு தடந்தேர் துரகதங் களிறு**
**முதலிய யாவையுந் தோற்று**
**நினேவரு விறலோர் தனித்தனி நெருக்கி**
**நின்றுழி நின்றுழித் துரக்க**
**அனேவருங் கழற்கால் கொப்புள மரும்ப**
**ஆசறைப் பாசறை யடைந்தார்.**

[அனேவரும் ஒருவர்போல் உடைந்து அவனி ஆளுடை அரசனேடு அமரில் துனே வரு தடந்தேர் துரகதம் களிறு முதலிய

யாவையும் தோற்று, நினைவு அருவிறலோர் தனி தனி நெருக்கி நின்றுழி நின்றுழி துரக்க, அனைவரும் கழல் கால் கொப்புளம் அரும்ப ஆசறை பாசறை அடைந்தார்.]

**விளக்கம் :-** நினைவு அரு விறலோர் அனைவரும், தனி தனி நெருக்கி நின்றுழி நின்றுழி துரக்க, அமரில், அவனி ஆள் உடை அரசனோடு அனைவரும் ஒருவர் போல் உடைந்து, துனை வரு தடந்தேர், துரகதம் களிறு முதலிய யாவையும் தோற்று, கழல் கால் கொப்புளம் அரும்ப ஆசறை பாசறை அடைந்தார்,-என்பது அன்வயம்.

அவனி ஆளுடை அரசன்- துரியோதனன். துனைவரு- விரைந்து செல்லும். நினைவு அரு விறலோர்-நினைத்தற்கு அரிய ஆற்றலினரான பாண்டவர். ஆசறை-முடிவில். பாண்டவர் தனித் தனி எதிர்த்து வந்து (பகைவர்) நின்ற இடங்கள் தோறும் தாக்கி விரட்டலால், துரியோதனனோடு அவனைச் சேர்ந்தார் அனைவரும் நால்வகைப் படையையும் இழந்து முடிவில் கால் கொப்பளிக்க நடந்து ஓடினர்—என்பதாம். அசறுதி-முடிவு; அது ஆசறை, என நின்றது.

220. முற்பொழு தொருபொற் றிகிரியான் மறைந்த
தாழ்வற மூளெரிமு கத்தில்
அற்பொழு தடைந்த வாயிரஞ் சுடரும்
அநேகநூ றுயிரஞ் சுடராய்
நற்பொழு திதுவென் றியாவரும் வியப்ப
நாகரா லயம்வலம் புரிந்து
பிற்பொழு தவற்றைக் கவர்ந்துசென் றுதயப்
பிறங்கலிற் பிறங்கினன் பெரியோன்.

[முன்பொழுது ஒரு பொன் திகிரியால் மறைந்த தாழ்வு அற மூள் எரி முகத்தில் அல் பொழுது அடைந்த ஆயிரம் சுடரும் அநேக நூறு ஆயிரம் சுடராய், நல் பொழுது இது என்று யாவரும் வியப்ப நாகர் ஆலயம் வலம் புரிந்து, பின் பொழுது அவற்றை கவர்ந்து சென்று உதயம் பிறங்கலில் பிறங்கினன் பெரியோன்.]

**விளக்கம் :-** பெரியோன், ஒரு பொன் திகிரியால் முன் பொழுது மறைந்த தாழ்வு அற, மூள் எரி முகத்தில் அல் பொழுது அடைந்த ஆயிரம் சுடரும், அநேக ஆயிரம் சுடராய் (விளங்கி

நின்று), நாகர் ஆலயம் வலம் புரிந்து, பின் பொழுது அவற்றைக் கவர்ந்து சென்று நல் பொழுது இது என்று யாவரும் வியப்ப உதயம் பிறங்கலில் பிறங்கினன்-என்பது அன்வயம்.

முன்பொழுது-முந்திய நாள். அல் பொழுது—இரவு. பின் பொழுது - பிறகு; அதன்பின். பெரியோன்—சூரியன். சூரியன் இரவில் தனது ஒளிக்கிரணங்களை அக்னிக்கு அளித்து, உதயத்தில் அவற்றைப் பெற்றுக் கொள்கின்ருன், என்பது நூற் கொள்கை. அக்னிக்கு உதவிய கிரணங்கள் அற்றை இரவு போர்க்களத்தில் விளக்குகளாய் விளங்கி வெளிச்சம் தந்தது. அதைப் புலவர், சூரியன் கண்ணனது சக்கரத்தால் மறைக்கப்பட்ட தனது குறை தீர,அன்று இரவு அவன் தனது கிரணங்களை விளக்குகளின் மூலம் ஒளியை வெளிப்படுத்தினன், என்று கற்பித்தார். இது தற்குறிப் பேற்றம் ஆகும்.

பதினன்காம் போர்ச் சருக்கம்

முற்றும்

# பதினைந்தாம் போர்ச் சருக்கம்

## கடவுள் வணக்கம்

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

1. **சித்த சித்தொ டீச னென்று செப்பு கின்ற மூவகைத்
தத்து வத்தின் முடிவு கண்ட சதுர்ம றைப்பு ரோகிதன்
கொத்த விழ்ந்த சோலை மன்னு குருகை யாதி நெஞ்சிலே
வைத்த முத்தி நாத னன்றி வான நாடர் முதல்வர்யார்.**

[சித்து அசித்தொடு ஈசன் என்று செப்புகின்ற மூவகை தத்துவத்தின் முடிவு கண்ட சதுர்மறை புரோகிதன், கொத்து அவிழ்ந்த சோலை மன்னு குருகை ஆதி நெஞ்சிலே வைத்த முத்தி நாதன் அன்றி வானநாடர் முதல்வர் யார்?]

**விளக்கம் :-** சித்து-ஆன்மா. சித், அசித், ஈசன் என்ற மூவகை தத்துவங்களை உட்கொண்ட சித்தாந்தத்தின் முடிவு கண்ட, அதாவது நன்கு அறிந்த வேதவித்தகனானவனும், விசிஷ்டாத்வைத மதத்திற்கு ஆசார்யனும் ஆன நம்மாழ்வார்,- என்பது முதல் இரண்டடிகளின் பொருள், கொத்துக் கொத்தாய் மலர்கள் மலரப்பெற்ற சோலைகள் பொருந்திய திருக்குருகூரில் தோன்றிய வைணவ மார்க்கத்தின் ஆதி புருஷனுமான நம்மாழ்வார், தம்நெஞ்சிலே பதியவைத்த, பரமபதநாதன் அன்றித் தேவரின் தலைவராக உள்ளவர் வேறு யார்? ,- எவருமில்லை, என்றபடி.

**ஸ்ரீ** வைணவ சித்தாந்தத்திற்கு உரிய சித்து அசித்து ஈசன் என்ற தத்துவங்களின் தன்மையை **தத்வத்ரயம்** என்பர். இதைச் சங்கை அறத் தெளிந்து கொண்டவர் குருகைப்பிரான். அவரை வேதம் தமிழ்செய்த வித்தகன், என்பர். "ருக், எஜுர், சாம, அதர்வண வேதங்களின் முற்றியபொருளை, **திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய்மொழி, பெரியதிருவந்தாதி,** என்ற நான்கு பிரபந்தங்களில் முறையே திருவாய் மலர்ந்தருளியுள்ளார்;" , என்பது தோன்ற அவரைப் புல்வர், **சதுர் மறைப் புரோகிதன்,** என்றார். புரோகிதன்-ஆசார்யன்; அல்லது வைதிககர்மங்களை நடத்தி வைப்பவன்.

## இருதிறத்தவரும் களம் சேரல்

**2. எடுத்த தீப வொளியு மேனை யிருளு மேக வேழுமாத்**
**தொடுத்த தேர ருக்கர் சோதி தொழுது தங்க**
**டொழில்கழித்(து)**
**எடுத்த கோப மூள நின்றி ரண்டு சேனை யரசரும்**
**கடுத்து ளங்க றுத்து வெய்ய கண்சி வந்து கடுகினர்.**

[எடுத்த தீபம் ஒளியும் ஏனை இருளும் ஏக, ஏழு மா தொடுத்த தேர் அருக்கர் சோதி தொழுது, தங்கள் தொழில் கழித்து, எடுத்த கோபம் மூள நின்று இரண்டு சேனை அரசரும், கடுத்து உளம் கறுத்து வெய்ய கண் சிவந்து கடுகினர்.]

**விளக்கம் :-** எடுத்த தீபம்-முந்திய இரவில் ஏற்றிய விளக்குகள், ஏனை இருள்-ஒளியோடு மாறுகொண்ட இருள். ஏழு மா தொடுத்த தேர் அருக்கர் - சூரியன். எடுத்த கோபம்-மிகுதியுற்ற கோபம். உளம் கடுத்து கறுத்து - மனம் மாறுபட்டுச் சினத்தால் கறுத்து. உதயத்தில் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு இருதிறத்தவரும் போர் கருதி விரைந்து களம் சென்றனர் — என்பதாம். ஈற்றடி, கறுத்து. சிவந்து, — முரண்தொடை.

**3. நாலு சாப நிலையும் வல்ல நரனும் வீம னகுலனும்**
**நாலு பாக மான சேனை நாத னுஞ்சிரங்களா**
**நாலு கூறு செய்து தானு நரனு முந்த நடவினன்**
**நாலு வேத முடிவி னுக்கு மாதி யான நாரணன்.**

[நாலு சாபம் நிலையும் வல்ல நரனும் வீமன் நகுலனும், நாலு பாகம் ஆன சேனை நாதனும் சிரங்களா(க), நாலு கூறு செய்து, தானும் நரனும் முந்த நடவினன், நாலு வேதம் முடிவினுக்கும் ஆதி ஆன நாரணன்.]

**விளக்கம் :–** நாலுவேத.... நாரணன், சாபம் நாலு நிலையும் வல்ல நரனும்.........நாலுகூறு செய்து தானும் நரனும் முந்த நடவினன்,—என்பது அன்வயம்.

சாபம் நாலுநிலை-வில்வளைத்துத் தொழில் செய்வதற்கான நான்கு வகை நிலைகள். நாலு பாகமான - தேர், குதிரை, யானை, காலாள் என்ற நான்கு பகுப்பாகிய. சேனைநாதன் - திட்டத் துய்மன். சிரங்கள் ஆக - படைக்குத் தலைமையாக நாலு கூறு செய்து - நான்கு பகுதியாகப் பிரித்து. நான்கு வேதங்களின் முடிவினுக்கும் முதல்வனான கண்ணன், என்பது ஈற்றடியின் பொருள். விசயன், வீமன், நகுலன், நால்வகைப் படைகளுக்கும் தலைவனான திட்டத்துய்மன் ஆகியவர்களைத் தலைமை

யாகக் கொண்டு படையை நான்காகப் பிரித்து, அவற்றை விசய ேனாடு கண்ணன் நடத்திக் கொண்டு போர்க்களம் சென்றான், என்பதாம்.

விசயனது போர்த்திறம்

4. வால வீம னென்று பார்ம தித்த வாண்மை மன்னனும்
சூல பாச பாணி தன்னெ டொத்த சோம தத்தனும்
ஆல கால மெனவு ருத்த டர்த்த போரின் முந்துறக்
கால னூரி லேகி னார்கி ரீடி யேவு கணைகளால்.

[வாலவீமன் என்று பார் மதித்த ஆண்மை மன்னனும், சூல பாசபாணி தன்னொடு ஒத்த சோமதத்தனும், ஆலகாலம் என உருத்து அடர்த்த போரின் முந்துற காலன் ஊரில் ஏகினார் கிரீடி ஏவு கணைகளால்.]

விளக்கம் :- சூலபாசபாணி - எமன் வாலவீமன் என்பானும் சோமதத்தன் என்பானும், விஷம்போல் சினந்து நெருங்கிச் செய்த போரில், விசயனது கணைகளால், எமபுரம் சேர்ந்தனர், என்பதாம்.

5. என்மு னென்மு னென்று மன்னர் யாரும் யாரும் மிகலவே
முன்மு னின்றி யாவ ரோடு மூரி வில்வ ணக்கினான்
வின்மு னெண்ண வில்லு மில்லை வெஞ்ச மத்து மற்றிவன்
தன்மு னெண்ண வீர ரில்லை யெனவ ருந்த னஞ்சயன்.

[என்முன் என்முன் என்று மன்னர் யாரும் யாரும் இகலவே, முன் முன் நின்று யாவரோடும் மூரிவில் வணக்கினான், வில்முன் எண்ண வில்லும் இல்லை, வெம் சமத்து மற்று இவன் தன்முன் எண்ண வீரர் இல்லை, என வரும் தனஞ்சயன்.]

விளக்கம் :- "(தனது) வில்லின் முன் ஒரு பொருளாக மதித்தற்கு உரிய வேறு வில் எதுவும் இல்லை," என்றும், "தன் முன் நேர் நிற்க வல்ல வீரரும் இல்லை" என்றும், எல்லோராலும் சொல் பெற்று வரும் தனஞ்சயன், - என் முன்னே போர் செய்ய வேண்டும், வேண்டும் என்று சொல்லிக் கொண்டு மன்னர்கள் இகலி நின்ற அளவில், ஒவ்வொருவர் எதிரிலும் நின்று எல்லாப் பகைவர்களோடும், தனது வலிய வில்லை வளைத்துப் போர் செய் தான், என்பது பொருள்.

## துரோணனது போராற்றல்

6. **ஈரி ரண்டு முகமும் வந்தெ திர்ந்த வீரர் சேனைகள்**
**ஈரி ரண்டும் வேறு வேறு பட்டு வென்னிடப் புடைத்(து)**
**ஈரி ரண்டொர் தொடையில் வாளி யேவி**
**யேவி யிகல்செய்தார்**
**ஈரி ரண்டு மையி ரண்டு மான விஞ்சை எய்தினன்.**

[ஈரிரண்டு முகமும் வந்து எதிர்ந்த வீரர் சேனைகள் ஈரிரண்டும் வேறு வேறுபட்டு வென் இட புடைத்து, ஈரிரண்டு ஓர் தொடையில் வாளி ஏவி ஏவி, இகல் செய்தான் ஈர் இரண்டும் ஐ இரண்டும் ஆன விஞ்சை எய்தினன்.]

**விளக்கம் :-** ஈற்றடியை முன்னே வைத்துப் படிக்கவும். ஈர் இரண்டும் ஐ இரண்டும் - பதினன்கு $(4+10)$ விஞ்சை எய்தினேன் - பதினன்கு வகைப்பட்ட வித்தைகளை அடைந்தவனன துரோணன். அவன், – நான்கு பக்கங்களிலும் வந்து எதிர்ப்பட்ட வீரர்களான பாண்டவர் சேனைகள் நான்கும் வேறு வேறுபட்டு நிலை குலைந்து பின்னிடும் படி தாக்கி, அம்பு தொடுக்கும் தரம் ஒவ்வொன்றிலும் நான்கு நான்கு கணைகளை ஏவிப் போர் செய்தான், என்பது.

வேதம் நான்கு, சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருத்தம், சோதிடம், கல்பம், என்ற வேதாங்கம் ஆறு; மீமாம்சை, தர்க்கம், புராணம், தர்மசாஸ்திரம், என்ற உப அங்கம் நான்கு. ஆகவே, விஞ்சை பதினன்கு வகையின தாகின்றது, (விஞ்சை - வித்தை)

7. **புந்தி கூர்து ரோண னுக்கி யாவ ரும்பு றந்தரக்**
**குந்தி போச னெண்ணி லாயி ரங்கு றித்த தேர்களோ(டு)**
**உந்தி மீள முடுகி யந்த முனிவ னேடு டன்றபோ(து)**
**அந்தி வான மொத்த தம்ம வமர்புரிந்த வாகவம்.**

[புந்தி கூர் துரோணனுக்கு யாவரும் புறம் தர, குந்தி போசன், எண்இல் ஆயிரம் குறித்த தேர்களோடு உந்தி மீள முடுகி அந்த முனிவனேடு உடன்ற போது அந்தி வானம் ஒத்தது அம்ம, அமர் புரிந்த ஆகவம்.]

**விளக்கம் :-** புந்தி கூர் துரோணன் - அறிவு மிக்கானன துரோணன். அவனுக்கும் பாண்டவர் பக்கத்தார் எல்லோரும் பின்

னிட, குந்தி போசன், கணக்கில் அடங்காத ஆயிரங்களாகக் குறிக்கப்பட்ட தேர்களுடன், மறுபடியும் விரைந்து தேரைச் செலுத்திச் சென்று, அந்தத் துரோணனோடு எதிர்த்த போது, போர்க்களம் அந்திவானம் போல் சிவந்தது — என்பது பொருள். ஆகவம் – போர்க்களம்.

**8. குருவொ டுற்ற டர்ந்த குந்தி போசன் விற்கு னிக்கவே**
**வருச மத்து மத்தி ரன்றன் மருகனோடு முடுகினான்**
**முரண்மி குத்த கோப வங்கி மூள வந்த மாளவன்**
**கருநி றத்த னந்த சாயி யிளவலோடு கடுகினான்.**

[குருவொடு உற்று அடர்ந்த குந்தி போசன் வில் குனிக்கவே, வருசமத்து மத்திரன் தன் மருகனோடு முடுகினான், முரண் மிகுத்த கோபம் அங்கி மூள வந்த மாளவன் கருநிறத்து அனந்தசாயி இளவலோடு கடுகினான்.]

**விளக்கம்:-** கருநிறத்து.......... இளவல் - கரிய நிறமுடைய வனாய், சேஷ சயனம் கொள்பவனாகிய திருமாலின் அவதாரமான கண்ணனது தம்பியான சாத்தகி. குருவோடு குந்திபோசன் பொர மத்திர நாட்டரசனான சல்லியன், நகுலனுடனும், மாளவன் சாத்தகியுடனும் போர் செய்தனர், என்பதாம். பகையை மிகுவிக்கும் கோபத் தீ பற்றியெழ எதிர்த்து வந்த மாளவன், என்பது மூன்றாவது அடியின் பொருள். சல்லியனது சகோதரியின் மகன் நகுலன். அதனால் மருகன் என்றார்.

**9. முனிவன் மைந்த னிந்தி ரன்றன் மைந்த னோடு முடுகினான்**
**தினக ரன்றன் மதலை காலின் மைந்த னோடு சீறினான்**
**தனுவின் விஞ்சு தென்ன னோடு சகுனி போர்தொ**
**டங்கினான்**
**இனிய கண்ட முஞ்சி தைக்கு மிறுதி கால மென்னவே.**

[முனிவன் மைந்தன் இந்திரன் தன் மைந்தனோடு முடுகினான், தினகரன் தன் மதலை காலின் மைந்தனோடு சீறினான், தனுவின் விஞ்சு தென்னனோடு சகுனி போர் தொடங்கினான், இனி அகண்டமும் சிதைக்கும் இறுதி காலம், என்னவே.]

**விளக்கம் :-** முனிவன் மைந்தன் - அசுவத்தாமன். தினகரன் மதலை - கர்ணன். காலின் மைந்தன் - வீமன். தனுவின் விஞ்சு தென்னன் - வில் தொழிலில் சிறந்தவனான சித்திரவாகன

பாண்டியன். இப்பொழுது, உலகம் முழுவதையும் அழிக்கும் கற்பாந்தகாலம் என்று சொல்லும்படி, - என்பது ஈற்றடியின் பொருள். 'இறுதிக் காலம் வந்ததே !, என்று எண்ணும்படி இருதிறத்து வீரர்களும் கடும்போர் செய்தனர், என்க.

**10. எந்த வெந்த மன்னர் தம்மி லிருவ ராகி யமர் செய்தார்**
**அந்த வந்த வீரர் செய்த வாண்மை சொல்லு மளவதோ**
**முந்த முந்த வென்று வென்று மோக ரித்த தெவ்வர்தாம்**
**வந்த வந்த வழிம டங்கநின்ற தவ்வ ரூதினி.**

[எந்த எந்த மன்னர் தம்மில் இருவர் ஆகி அமர் செய்தார், அந்த அந்த வீரர் செய்த ஆண்மை சொல்லும் அளவதோ! முந்த முந்த வென்று வென்று மோகரித்த தெவ்வர், தாம் வந்த வந்த வழி மடங்க நின்றது அ வரூதினி.]

**விளக்கம் :-** எந்தெந்த அரசர்கள் தங்களுக்குள் இரண்டு இரண்டு பேராகப் பிரிந்து போர் செய்தார்களோ, அந்தந்த அரசர்களின் ஆண்மைச் செயல் சொல்லும் அளவினதாமோ! (அதாவது முடியாது, என்றபடி) இதற்குமுன் பல நாட்களில் வென்று மோகரித்த பாண்டவர் சேனை வீரர், தாம் வந்த வழியே தோற்றுத் திரும்புமாறு, அந்த வரூதினி (கௌரவ சேனை) வெற்றியுடன் களத்தில் நிலை நின்றது, —என்பது பொருள்.

**11. தேயு வாளி வருணன் வாளி தேவர் வாளி திண்மைகூர்**
**வாயு வாளி முதல னைத்து வாளி யாலு மலைதலால்**
**ஆயு நூன்மு னிக்கு டைந்த தன்பு மிக்க தந்தையும்**
**தாயு மாகி மண்பு ரந்த தருமன் விட்ட சேனையே.**

தேயு வாளி வருணன் வாளி தேவர் வாளி, திண்மை கூர் வாயு வாளி முதல் அனைத்து வாளியாலும் மலைதலால், ஆயும் நூல் முனிக்கு உடைந்தது, அன்பு கூர் தந்தையும் தாயும் ஆகி மண் புரந்த தருமன் விட்ட தானை, ஏ.]

**விளக்கம்:-** தேயு வாளி - ஆக்நேயாஸ்திரம். ஆயும் நூல் முனி - துரோணன். தாயும் தந்தையுமாய் அமைந்து மண் புரக்கும் தருமனது சேனை, துரோணனுக்கு முன் நிற்கமாட்டாமல் உடைந்தது, என்பதாம்.

## தேவரிஷிகள் துரோணனிடம் வரல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**12. குருவுமக் குருகு லேசன் கொற்றவெஞ் சேனை தானும்**
**பொருகளங் கொண்டு வாகை புனைந்தவ ணின்ற போதில்**
**ஒருவரை யொருவ ரொவ்வா வும்பர்மா முனிவர் யாரும்**
**துருவனு முவமை சாலாத் துரோணனை வந்து சூழ்ந்தார்.**

[குருவும் அ குருகுல ஈசன் கொற்றம் வெம் சேனை தானும் பொரு களம் (வெற்றி) கொண்டு, வாகை புனைந்து அவண் நின்ற போதில், ஒருவரை ஒருவர் ஒவ்வா உம்பர் மா முனிவர் யாரும், துருவனும் உவமை சாலா துரோணனை வந்து சூழ்ந்தார்.]

**விளக்கம்:-** குரு-துரோணன். குருகுலேசன்-துரியோதனன். ஒருவரை ஒருவர் ஒவ்வா உம்பர் மா முனிவர் - ஒருவரை மற்றவர் ஒவ்வாத, அதாவது தனிச் சிறப்புடைய தேவலோகத்து முனிவர்கள். கௌரவ சேனை வெற்றி பெற்று நின்ற சமயம் தேவ ரிஷிகள் மறைந்து வந்து துரோணனைச் சூழ்ந்து கொண்டார்கள், என்பதாம்.

சுவாயம்பு மனுவின் புதல்வனான உத்தான பாதன், என்ற அரசனுக்கு, அவனது மூத்த மனைவியிடம் பிறந்தவன் துருவன். மாற்றாந்தாயாலும் தந்தையாலும் உபேக்ஷிக்கப் பெற்ற துருவன் இளம் பருவத்திலேயே கானகம் சென்று கடுந்தவம் புரிந்து திருமாலின் அருள் பெற்றவன். அவனினும் மிக்கோன் என்று துரோணனைச் சிறப்பிக்குங் கருத்தில், **துருவனும் உவமை சாலாத் துரோணன்,** என்றார்.

**13. மகத்தியன் மரீசி யாதி யெழுவரு மலயச் சாரல்**
**அகத்தியன் முதலா வுள்ள வனைவரும் வருதல் கண்டு**
**செகத்தினி னிறைந்த கேள்விச் சிலைமுனி யெதிர்சென் றேத்தி**
**முகத்தினு லிறைஞ்சி நிற்ப மொழிந்தனர் மொழிகள் வல்லார்.**

[மகத் இயல் மரீசி ஆதி எழுவரும், மலயம் சாரல் அகத்தியன் முதல் ஆ(க) உள்ள அனைவரும் வருதல் கண்டு, செகத்தினில் நிறைந்த கேள்வி சிலை முனி எதிர் சென்று ஏத்தி, முகத்தினால் இறைஞ்சி நிற்ப, மொழிந்தனர், மொழிகள் வல்லார்.]

**விளக்கம்:-** செய்யுள் சுலபமானதே. மகத் இயல் - பெருமை யாகிய இயல்பு. மரீசி - சப்த ரிஷிகளில் ஒருவர். முகத்தினால் இறைஞ்சி - தலை வணங்கி. தன்னிடம் வந்த சப்த ரிஷிகளையும்,

பொதிய மலைச் சாரலில் வாழும் அகத்தியனையும், துரோணன் தலை வணங்கிப் போற்ற, அவர்களும் சில கூறலானார், என்பதாம்.

தேவ முனிவர் கூற்று

**14. மறைகெழு நூலுந்தேசு மாசிலாத் தவமு ஞானம்**
**முறைவரு முணர்வு மல்லான் முனிவரர்க்**
**குறுதி யுண்டோ**
**துறைகெழு கலைகள் வல்லாய் துன்னலர்ச்**
**செகுக்கும் போரும்**
**நிறைதரு வலியும் வாழ்வு நிருபர்தம் மியற்கை யன்றோ!**

[மறை கெழு நூலும், தேசும், மாசு இலா தவமும், ஞானம் முறை வரும் உணர்வும் அல்லால் முனிவரர்க்கு உறுதி உண்டோ! துறை கெழு கலைகள் வல்லாய், துன்னலர் செகுக்கும் போரும், நிறை தரு வலியும் வாழ்வும் நிருபர் தம் இயற்கை அன்றோ!]

**விளக்கம்:-** மறை கெழுநூல் - வேதமும், வேதப் பொருளை விளக்க வந்த சாத்திரங்களும். ஞான முறை வரும் உணர்வு - ஞானத்தால் முறையே வருகின்ற மெய்யான அறிவு. துறை கெழு கலைகள் - பல வகைப்பட்ட சாத்திரத் துறைகள். துன்னலர் - பகைவர். வாழ்வு - செல்வச் சிறப்புடைய வாழ்வு. கலை வல்லாய், போரும் வாழ்வும் வேதியருக்கு உறுதி பயக்காது, என்று முனிவர் கூறினர், என்பதாம். இவ்வாறு கூறிய முனிவர் மேலுங் கூறுவர்.

**15. தொடுகணை வில்லும் வாளுந் துரகமுங் களிறுந் தேரும்**
**விடுகவெஞ் சினமும் வேண்டா விண்ணுல**
**கெய்தல் வேண்டும்**
**கடுகநின் னிதயந் தன்னிற் கலக்கமற் றுணர்வி னொன்று**
**படுகவென் றுரிமை தோன்றப் பகர்ந்தனர் பவமி லாதார்.**

["தொடு கணை வில்லும் வாளும் துரகமும் களிறும் தேரும் விடுக, வெம் சினம் வேண்டா; விண் உலகு எய்தல் வேண்டும். கடுக நின் இதயம் தன்னில் கலக்கம் அற்று, உணர்வின் ஒன்று படுக," என்று உரிமை தோன்ற பகர்ந்தனர் பவம் (பிறப்பு) இலாதார்.]

**விளக்கம்:-** இப்போரும், போர்ப்படைகளும், சினமும் வேண்டா; அவற்றை விட்டு விட்டுத் தத்துவ ஞானத்தில் உள்ளம் பொருந்தி நிற்பாயாக, என்று முனிவர் உபதேசித்தனர்,

உளப் படுத்தியதாகும். தெவ் மாற - பகை இலதாக. குருபதி- தருமன்.

''நீங்கள் செய்த உதவிக்கு ஈடாக ஒன்று செய்வதற்கில்லை யாயினும், என் நன்றி மறவாமையைத் தெரிவிக்கும் பொருட்டுக் குருபதிக்குச் சிற்பம் வல்லோரும், 'அம்மா' என்று வியக்கும் வண்ணம் அரிய மணிமண்டபம் ஒன்று அமைத்துத்தர, என்னை அனுமதிக்க வேண்டும்,'' என்று மயன் வேண்டினான், என்பதாம்.

தருமனுக்கு **அஜாதசத்ரு,** என்ற ஒரு பெயர் உளது. பகை உண்டாகப் பெறாதவன், என்பது பொருள். ''தெம்மாற உலகு ஆளும் குருபதி,'' என்றது, இதன் தமிழ் மொழி பெயர்ப்பாகும். தெவ் - மாற - தெம்மாற.

4. மேனாளிவ் வுலகாண்ட விடபருவ
னசுரகுல வேந்தர் வேந்தன்
தானாண்மை யுடன்பொருது தரியலரைத்
திறைகொணர்ந்த தாரா பந்தி
போனாளு மொளிவீசும் பலமணிகள்
விந்துவெனும் பொய்கை தன்னில்
ஆனாமற் கிடப்பனவுண் டவையிதற்கே
யுபகரண மாகு மென்றான்.

[மேல் நாள் இ உலகு ஆண்ட விடபருவன், அரசு குலம் வேந்தர் வேந்தன் தான் ஆண்மையுட பொருது தரியலரை திறை கொணர்ந்த தாராபந்திபோல், நாளும் ஒளி வீசும் பல மணிகள் விந்து என்னும் பொய்கை தன்னில் ஆனாமல் கிடப்பன உண்டு; அவை இதற்கே உபகரணம் ஆகும் என்றான்.]

**விளக்கம் :—**''விடபருவன், (விருஷபருவா) என்ற பெயருடைய அசுரர் குலச் சிரேஷ்டன், முன்னொரு காலத்தில் போரில் பகைவென்று, அவர்களிடமிருந்து இறைப் பொருளாகக் கொணர்ந்த நட்சத்திர வரிசைபோன்று எப்பொழுதும் ஒளிவிடும் மணிகள், விந்து என்னும் பொய்கையில், (பிந்துசரஸில்) நீக்கப் படாமல் கிடக்கின்றன; அவை, தான் கட்ட நினைத்த மண்டபத்திற்கு உபகரணமாகும்,'' என்று மயன் கூறினான் என்றபடி.

தரியலரைத்திறை கொணர்ந்து - பகைவர்களிடமிருந்து திறை கொணர்ந்து, (உருபு மயக்கம்). பிந்துசரஸ், என்பது வடக்கே மைநாக பர்வதத்தைச் சேர்ந்த இரணியசிங்கம் என்ற குன்றில் உளது, என்பர். பொய்கை - மனிதர் கை படாது இயற்கையாய் அமைந்த நீர்நிலை.

5. என்பதன்முன் முப்பதின்மே லிரட்டிகொணூ
றாயிரவ ரெடுத்த பாரம்
வன்புடனே தரித்துவரை யசைந்தாலு
மசையாத வயிரத் தோளார்
அன்புமிகும் விழிக்கருணை யறன்புதல்வ
னேவலினா லசுரத் தச்சன்
தன்பணியீ தெனப்பணிப்ப வொருநொடியிற்
கொடுவந்தார் தளர்வி லாதார்.

[என்பதன் முன் முப்பதின் மேல் இரட்டிகொள் நூறு ஆயிரவர், எடுத்த பாரம் வன்புடனே தரித்து, வரை அசைந்தாலும் அசையாத வயிரம் தோளார், அன்பு மிகும் விழி கருணை அறன் புதல்வன் ஏவலினால், அசுரத்தச்சன் தன் பாணி ஈது என பணிப்ப, ஒரு நொடியில் கொடு வந்தார், தளர்வு இலாதார்.]

**விளக்கம் :—**என்பதன்முன், அன்பு மிகும் விழிக்கருணை அறன் புதல்வன் (தருமன்) ஏவலினால், அசுரத் தச்சன், தன் பணி ஈது எனப்பணிப்ப, வரை அசைந்தாலும் அசையாத வயிரத் தோளோர், தளர்வு இலாதார், முப்பதின்மேல் இரட்டி நூறாயிரவர் (60 லட்சம் பேர்) எடுத்த பாரம் வன்புடனே தரித்து ஒரு நொடியில் கொடு வந்தார்,—என்பது அன்வயம்.

தருமன் ஏவலினால், மயன் தான் செய்யப்போகும் காரியம் இதுவென, ஆட்களை ஏவ, அறுபது லட்சம்பேர் சென்று பிந்து சரஸிலிருந்து நவரத்தினச் சுமைகளை ஒரு நொடியில் கொண்டு வந்தார்,—என்பதாம்.

எடுத்த பாரம் - எடுத்த நவரத்தினங்களாகிய பாரமுடைய சுமைகள். வன்புடன் தரித்து - வலிமையுடன் தாங்கி. தளர் விலாதார் - தொழில் செய்வதில் தளராதவர். வயிரத் தோளார்- வயிரம் பாய்ந்த, அதாவது உறுதியுடைய தோளார், 'என்பதன் முன்...கொடுவந்தார்' என்று காரியத்தை முன்னும் காரணத்தை பின்னுமாகக் கூறுமிது மிகை உயர்வு நவிற்சியின் பாற்படும்.

6. மீதடுக்கிப் பசும்பொன்னாற் சுவர்செய்து
மரகதத்தூண் வீதி போக்கி
ஓதிடத்திற் சுருங்காமற் செழுந்துருகித்
திரம்பரப்பி யுலகோ ரேழும்
மாதிடத்தான் வைகுதற்கு வாய்க்குமதோ
விதுவென்ன வரம்பில் கேள்விச்
சோதிடத்தோர் நாளுரைப்பச் சுதன்மையினு
முதன்மைபெறத் தொடங்கி னானே.

[மீது அடுக்கி பசும் பொன்னால் சுவர் செய்து, மரகதம் தூண் வீதிபோக்கி, ஓது இடத்தில் சுருங்காமல் செழும் துகிர் உத்திரம் பரப்பி, ''உலகு ஓர் ஏழும் மாது இடத்தான் வைகு தற்கு வாய்க்குமதோ இது,'' என்ன, வரம்பில் கேள்வி சோதிடத் தோர் நாள் உரைப்ப சுதன்மையிலும் முதன்மை பெற தொடங் கினான், ஏ.]

**விளக்கம் :**—பசும் பொன்னால் ஆக்கிய கற்களை ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டிய பொன்சுவர். தூண்கள் - மர கதம் (பச்சைமணி). வீதி போக்கி - ஒழுங்காக நிறுத்தி. ஓது இடத்தில் - சிற்ப நூல் கூறும் இட அளவில் (குன்றாது). உத்தி ரம், பவளத்தாலானது. மாது இடத்தான் - பார்வதியை இடப் பாகத்திலே கொண்ட சிவ பெருமான். அவன் வைகுதற்கு வாய்க் குமதோ - அவன் உறைவதற்கு கிட்டக்கூடியது. ஆமோ (இம் மண்டபம்) என்று (ஏழுலகத்தாரும்) வியக்கும்படி. சுதன்மை - (சுதர்மை) இந்திரனது சபா மண்டபம். முதன்மை பெற - சிறப் படையுமாறு, (வரம்பில் கேள்வி சோதிடர் நிச்சயித்த முகூர்த் தத்திலே, மயன் மண்டப வேலையை ஆரம்பித்தான்).

மாதிடத்தான், என்பதை, மா - திடத்தான் எனப்பிரித்து ''மிக்க உறுதியை உடைய நமது அரசன் வைகுதற்கு வாய்க் குமோ!'' என்று உலகோர் வியந்ததாகவும் கொள்ளலாம்.

7. மனத்தாலுந் திருத்தகுநூல் வரம்பாலு
முரம்பயிறோள் வலியி னாலும்
இனத்தாலுந் தெரிந்துதன தெண்ணியவெண்
ணினுக்கேற்ப வெண்ணில் கோடித்
தினத்தாலுஞ் செயற்கரிய செழுமணிமண்
டபமீரேழ் திங்கட் செய்தான்

தனத்தான்மிஞ் சியதருமன் றம்பியர்க்குத்
தண்டுடன்வெண் சங்கு மீந்தான்.

[மனத்தாலும் திரு தகு நூல் வரம்பாலும் உரம் பயில்தோள் வலியினாலும், இனத்தாலும் தெரிந்து தனது எண்ணினுக்கு ஏற்ப எண் இல் கோடி தினத்தாலும் செயற்கு அரிய செழுமணி மண்டபம் ஈர் ஏழ் திங்கள் செய்தான்; தனத்தால் மிஞ்சிய தருமன் தம்பியர்க்கு தண்டுடன் வெண் சங்கும் ஈந்தான்.]

**விளக்கம்** ;—திருதகு நூல் வரம்பாலும் - மேன்மை வாய்ந்த சிற்பநூல் பிரமாணத்தாலும். உரம் பயில் தோள்வலி - பயிற்சி வலிமை கொண்ட கைத்திறமை. இனம் - சிற்பநூல் வல்ல தனது பரிவாரங்கள். எண்ணினுக்கு ஏற்ப - தன் கருத்திற்கு ஏற்றபடி. எண்ணில் கோடி தினம் - அளவு இறந்த நாள்கள்; எண்ணில் அடங்கா நாட்கள். ஈரேழ் திங்கள் - பதினான்கு மாதம். தம்பியர் - பீமனும், அருச்சுனனும். அவர்களுக்குக் கதையையும் சங்கையும் முறையே கொடுத்தான்.

பல வருஷ காலத்திலும், கற்பனையினாலும், நூல் பிரமாணத்தாலும், கைத்திறமையினாலும் கட்டி முடிக்க முடியாத அரிய மண்டபத்தை மயன் பதினான்கு மாதங்களில் கட்டி முடித்தான், என்றபடி.

8. அத்தபதி தன்குறிப்பா லமைத்தபெரு
மண்டபத்தி னளவு நீளம்
வித்தரமோ டுயர்ச்சியெனும் வனப்பனைத்துங்
கண்டோர்கள் வியந்து கூற
கொத்தலர்தார் மணிமுரசக் கொடியுயர்த்தோன்
கனற்பிறந்த கொடியுந் தானும்
எத்தமரு மனமகிழக் குடிபுகுந்தா
னிறைஞ்சலருக் கிடியே றன்னான்.

[அ தபதி குறிப்பால் அமைத்த பெரு மண்டபத்தின் அளவு நீளம் வித்தரமொடு உயர்ச்சி எனும் வனப்பு அனைத்தும் கண்டோர்கள் வியந்து கூற, கொத்து அலர் தார் மணி முரசம் கொடி உயர்த்தோன் கனல் பிறந்த கொடியும் தானும், எ தமரும் மனம் மகிழ குடி புகுந்தான், இறைஞ்சலருக்கு இடி ஏறு அன்னான்.]

என்பதாம். உரிமை தோன்ற, என்றது வேதியனுக்குரிய தர்மம் தோன்ற, அதாவது சுவதர்மம் தோன்ற என்ற பொருளது.

**16. ஆனபோ தாசா னெஞ்சி லருமறை யந்தத் துள்ள**
**ஞானமும் பிறந்து போரி லாசையு நடத்த லின்றி**
**தூநலந் திகழுஞ் சோதிச் சோமிய மடைந்து நின்றான்**
**யானமும் விமான மல்லா லிரதமேல் விருப்பி லாதான்.**

[ஆனபோது ஆசான் நெஞ்சில் அரு மறை அந்தத்து உள்ள ஞானமும் பிறந்து, போரில் ஆசையும் நடத்தல் இன்றி, தூ நலம் திகழும் சோதி சோமியம் அடைந்து நின்றான், யானமும் விமானம் அல்லால் இரதம் மேல் விருப்பு இலாதான்.]

**விளக்கம்:-** ஆனபோது - முனிவர் உபதேசித்த அளவில் அருமறை அந்தத்து உள்ள ஞானம் - வேதாந்தத்தில் பொருந்தியுள்ள தத்துவ ஞானம்: தூநலம் திகழும் சோதி – பரிசுத்தமான நன்மையின் விளக்கமுடைய கடவுள். சோமியம் - (கடவுளைக் கிட்டுவதற்கான) சாந்தம், (ஸௌம்யம்). யானம் - விமானம் (இப்போது துரோணன் விழையும்) வாகனமும் தேவ விமானம். துரோணன், தத்துவ ஞானம் பிறக்க, போர் செய்தலில் விருப்பம் செல்லாதவனாய் தேரின்மேல் விருப்பம் இல்லாமல், விரும்பும் வாகனமும் தேவ விமானமாக, இறைவனை அடைவதற்குரிய சாந்தத்தை அடைந்து நின்றான், என்பதாம்.

### துரோணனை யழிக்கக் கண்ணன் கருதல்

**17. கோடையால் வற்றி மீண்டுங் கொண்டலா**
**னிறைந்த தெண்ணீர்**
**ஓடையா மென்ன நின்றான் முன்னரே யுரைத்த வார்த்தை**
**மாடையா லிந்த்ர நீல மணிவரை வளைத்தா லன்ன**
**ஆடையா னறிந்து சொற்ற வவதியீ தென்று கொண்டான்.**

[கோடையால் வற்றி மீண்டும் கொண்டலால் நிறைந்த தெள் நீர் ஓடையாம் என்ன நின்றான், முன்னரே உரைத்த வார்த்தை, மாடையால் இந்த்ர நீல மணிவரை வளைத்தால் அன்ன ஆடையான் அறிந்து சொற்ற அவதி ஈது என்று கொண்டான்.]

**விளக்கம்:-** மாடை–பொன். கோடையால் வற்றி மறுபடியும் மழையால் தெளிந்த நீரையுடைய ஓடை என்று சொல்லும்படி, களத்தில் சாந்தம் மேவிட நின்ற துரோணன், முதல் நாள் போரின் தொடக்கத்தில் தனது இறுதி பற்றிச் சொன்ன வார்த்தையை, இந்திர நீலமணி போன்ற அழகிய மலையொன்று,

பொன்னால் வளைக்கப் பெற்றது போன்ற பொன்னுடை தரித்த கண்ணன், மனத்திற் கொண்டு, அவன் சொன்ன காலை எல்லை இதுவே என்று எண்ணினான், என்பது பொருள்.

வேத வித்தகனாயிருந்தும், க்ஷத்திரிய தர்மத்தை மேற் கொண்டிருந்த துரோணனது நிலைக்குக் கோடையால் வற்றிய தன்மையும், முனிவர்களது உபதேசத்தால் தத்துவ உணர்வு கைவரப் பெற்றுச் சாந்தி யெய்திய நிலைக்கு, கொண்டலால் தெண்ணீர் நிறைந்த தன்மையும் உவமை ஆயின. முதுவேனில் பருவமான ஆனியும் ஆடியும் கோடை.

கண்ணன் தருமனோடு பேசல்

18. **கடல்வடிம் பலம்ப நின்ற கைதவன் றன்னோ டோதிச்**
**சுடுகன லளித்த திட்டத் துய்மனை யவன்மே லேவி**
**வடுவுரை மறந்துஞ் சொல்லா மன்னறன் மைந்த னோடும்**
**அடியவ ரிடுக்கண் டீர்ப்பா னாமுறை யருளிச் செய்வான்.**

[கடல் வடிம்பு அலம்ப நின்ற கைதவன் தன்னோடு ஓதி, சுடு கனல் அளித்த திட்டத்துய்மனை அவன் மேல் ஏவி, வடு உரை மறந்தும் சொல்லா மன் அறன் மைந்தனோடும், அடியவர் இடுக்கண் தீர்ப்பான் ஆம் முறை அருளிச் செய்வான்.]

**விளக்கம்:-** கடலானது நன் காலின் விளிம்பை அலம்பும்படி நின்ற பாண்டியனோடு, (துரோணனைக் கொல்லும் சமயம் இது என்று) சொல்லி, யாகத்தீயானது (திரௌபதிக்கு முன்) தந்த திட்டத்துய்மனை (அப்பாண்டியன் மூலம்) துரோணன் மேல் ஏவி, (பின்னர்) குற்றமுடைய சொல்லை மறந்தும் சொல்லா மன்னனாகிய தரும புத்திரனுடன், அடியவரின் துன்பங்களைத் தீர்ப்பவனாகிய கண்ணன் சில கூறியருள்வானாயினான், – என்பது பொருள்.

வடிம்பு-காலின் விளிம்பு. மதுரையை அழித்தற்கு முன்னொரு காலத்தில் பொங்கி வந்த கடலை, உக்ர குமார பாண்டியன் என்பான், சிவபெருமான் தந்த வேலால் அடக்கித் தன் காலின் வடிம்பை அக்கடல் அலம்பும்படி நின்றமை, பற்றி, அவன் **கடல் வடிம்பலம்ப நின்ற பாண்டியன்**, என்று அழைக்கப் படலானான். அத்தன்மையை, விசயனுக்குப் பெண் கொடுத்த சித்திர வாகனன் மேல் ஏற்றி, "**கடல் வடிம்பு அலம்ப நின்ற கைதவன்,**" என்றார். ஒரு குலத்தவர் தன்மையை, அக்குலம் வந்த வேறொருவர்மேல் ஏற்றிக் கூறுவது ஒரு வகை கவி சமயம்,

19. மந்த்ர மணைய பொற்றேண் மாருதி மாள வக்கோன்
இந்திர வன்மா மேற்சென் றெரிகணை தொடுத்த போரில்
அந்தர மடைந்த தைய வச்சுவத் தாமா வென்னும்
சிந்துர மதனை வேறோர் திசைக்களி றொப்ப தன்றே

[மந்தரம் அணைய பொன் தோள் மாருதி மாளவம் கோன் இந்திர வன்மாமேல் சென்று எரிகணை தொடுத்த போரில் அந்தரம் அடைந்தது, ஐய, அச்சுவத்தாமா என்னும் சிந்துரம்; அதனை வேறு ஓர் திசை களிறு ஒப்பது அன்று, ஏ.]

**விளக்கம்:-** ஐய, மந்தர மலையை ஒத்த அழகிய தோள்களை உடைய வீமன், மாளவத்து அரசனாகிய இந்திரவன்மா என்பவன் மேல் எரிகணை செலுத்திச் செய்த போரில், அசுவத்தாமா என்னும் யானை மடிந்து வானுலகம் அடைந்தது; வேறு எந்த ஒரு திசை யானையும் அதற்கு ஒப்பாக மாட்டாது,—என்று கண்ணன் தருமனுக்குக் கூறினான், என்பது பொருள். சிந்துரம் – யானை.

20. மதலைபே ரெடுத்துப் போரின் மடிந்தவா றுரைத்த போதே
விதலைய னாகிப் பின்னை வில்லெடான் வீத றிண்ணம்
முதலமர் தன்னி லந்த முனிவரன் மொழிந்த மாற்றம்
நுதலுதி நீயே சென்று நுவலுதி விரைவி னென்றான்.

[மதலை பேர் எடுத்து போரின் மடிந்த ஆறு உரைத்த போதே, விதலையன் ஆகி பின்னை வில் எடான், வீதல் திண்ணம்; முதல் அமர் தன்னில் அந்த முனிவரன் மொழிந்த மாற்றம், நுதலுதி; நீயே சென்று நுவலுதி விரைவின் என்றான்.]

**விளக்கம்:-** விதலையன் - மனச் சஞ்சலம் உடையவன். வீதல் – மடிதல். நுதலுதி - எண்ணுக. நுவலுதி - சொல்லுக. மகன் இறந்ததாகச் சொன்ன பொழுது துரோணன் மனச் சஞ்சலங் கொண்டு, போர் செய்யாமல் இறத்தல் நிச்சயம்; இது, அவன் முதல் நாள் போரில் கூறிய வார்த்தை; அதை மனத்திற் கொண்டு, நீயே சென்று 'அசுவத்தாமா இறந்தான்' என்று கூறுக, என்று கண்ணன் தருமனுக்குச் சொன்னான், என்பதாம். நுதலல்- கருதல், நினைத்தல், நுதலுதல்.

தருமன் பதில்

21. வையினால் விளங்கு நேமி வலம்புரி வயங்கு செம்பொன்
கையினா னந்த னாளன் கையறல் புகன்ற காலை
மெய்யினால் வகுத்த தன்ன மெய்யுடை வேந்தன் மாட்டுப்
பொய்யினா லாள்வ திந்தப் புவிகொலோ வென்று நக்கான்.

[வையினால் விளங்கும் நேமி வலம்புரி வயங்கு செம் பொன் கையினான், அந்தணாளன் கையறல் புகன்ற காலை, மெய்யினால் வகுத்தது அன்ன மெய் உடை வேந்தன் கேட்டு, பொய்யினால் ஆள்வது இந்த புவி கொலோ! என்று நக்கான்.]

**விளக்கம்:-** வை - கூர்மை. வையினால் விளங்கும் சக்கரமும் வலம்புரி சங்கமும் விளங்கப் பெற்ற சிவந்த அழகிய கைகளை உடைய கண்ணன், துரோணன் செயலற்று நிற்கும் வழியைச் சொன்ன பொழுது,—சந்தியத்தினால் செய்யப்பட்டது போன்ற தேகத்தை உடைய தருமன், கேட்டு, ''இந்த பூமியைப் பொய்யினால் பெற்று ஆள்வது தகுதியாகுமோ,'' என்று கூறி நகைத்தான், என்பதாம். மெய்யினால் வகுத்தது அன்ன மெய், என்றது தற்குறிப்பேற்றம்.

**22. அண்ணிய கிளையு மில்லு மரும்பெரு மகவு மன்பும்**
**திண்ணிய சீரு மிக்க செல்வமுந் திறலுந் தேசும்**
**எண்ணிய பொருள்கள் யாவு மியற்றிய தவமு மேனைப்**
**புண்ணிய மனைத்துஞ் சேரப் பொய்ம்மையாற் பொன்று**
**மன்றே.**

[அண்ணிய கிளையும், இல்லும், அரும் பெருமகவும், அன்பும், திண்ணிய சீரும், மிக்க செல்வமும், திறலும், தேசும், எண்ணிய பொருள்கள் யாவும், இயற்றிய தவமும், ஏனை புண்ணியம் அனைத்தும் சேர பொய்ம்மையால் பொன்றும், அன்றே.]

**விளக்கம் :-** அண்ணிய கிளை - நெருங்கிய சுற்றம். இல் - மனைவி. திண்ணிய சீர் - அழியாத கீர்த்தி. தேசு - பிரகாசம். பொய்யால் வாழ்க்கையோடு அமைத்த எல்லா நலமும் அழியுமே, என்று தருமன் கூறினான், என்பதாம். அன்றே: தேற்றம்; அல்லது அப்பொழுதே (அழியும்), என்றும் பொருள் கொள்ளலாம்.

கண்ணனது எதிருரை

**23. என்றுகொண் டினங்கொள் கோவி னிடர்கெட வெழிலி**
**யேழும்**
**குன்றுகொண் டடர்த்த மாயன் கூறவு மறுத்துக் கூறக்**
**கன்றுகொண் டெறிந்து வெள்ளிற் கனிநனி யதிர்த்து**
**வஞ்சம்**
**வென்றுகொண் டவனு மீள விளம்புவ னென்ப மாதோ.**

[என்று (கொண்டு) இனம் கொள் கோவின் இடர் கெட எழிலி ஏழும் குன்று கொண்டு அடர்த்த மாயன் கூறவும் மறுத்

துக் கூற, கன்று கொண்டு எறிந்து வெள்ளில் கனி நனி உதிர்த்து வஞ்சம் வென்று கொண்டவனும் மீள விளம்புவன், என்ப மாதோ.]

**விளக்கம் :-** (தருமன் நலமெல்லாம் கெடுமே) என்று கூற, மந்தையாகத் திரளும் பசுக்களின் இடர் விலகும்படி, (இந்திரன் ஏவிய) சப்தமேகங்களையும் ஒரு குன்றைக் கையில் கொண்டு தடுத்த மாயவனுன கண்ணன் கூறவும், தருமன் அதை மறுத்துக் கூறவே, கன்றைக் கொண்டு விளவின் கனி நனி உதிர்த்து, (அசுரனது) மாயம் கடந்தவனுன கண்ணனும் மறுபடியும் கூற லானுன், என்பது பொருள். என்ப, மாது, ஓ அசைகள். முதலடி யில் கொண்டு, அசை.

**24. உம்மையின் மறுமை தன்னி லுறுபய னிரண்டும் பார்க்கின்**
**இம்மையில் விளங்கும் யார்க்கு மவரவ ரியற்கை யாலே**
**மெய்மையே யொருவர்க் குற்ற விபத்தினை மீட்கு மாகில்**
**பொய்மையு மெய்ம்மை போலப் புண்ணியம் பயக்கு மாதோ.**

[உம்மையில் மறுமை தன்னில் உறு பயன் இரண்டும் பார்க்கின், இம்மையில் விளங்கும் யார்க்கும், அவர் அவர் இயற்கை யாலே; மெய்மையே ஒருவர்க்கு உற்ற விபத்தினை மீட்கும் ஆகில், பொய்ம்மையும் மெய்ம்மை போல புண்ணியம் பயக்கும், மாதோ.]

**விளக்கம் :-** உம்மை - முந்திய பிறவி. மறுமை - இனிவரும் பிறவி. மூன்ருவது அடியிலுள்ள மெய்ம்மையே, என்பது, ''உண்மையாகவே, அல்லது நிச்சயமாகவே'', என்ற பொருளது. இம்மையில் ஒருவர் அனுபவிக்கின்ற இன்ப துன்பங்களைக் கொண்டு, அவரது முன்பிறப்பினை ஒருவாறு ஊகித்து அறிய லாம். இம்மையில் ஒருவர் புரி செயல்களிலிருந்து, அவரது மறுமையை ஊகித்து அறியலாம், என்பது முதலிரண்டடிகளின் பொருள். ஒருவருக்கு நேர்ந்த பெரிய விபத்தை உண்மை யாகவே, பொய்ம்மை நீக்குமாயின், அப்பொய்மையும் மெய்மை யேயாகும், என்று கண்ணன் கூறினுன், என்பது ஈற்றடிகளின் பொருள்.

''பொய்மையும் வாய்ம்மையிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்'' என்ற குறளடி நோக்கத்தக்கது.

**25. வல்லவ ரனந்த கோடி மறைகளின் படியே யாய்ந்து**
**சொல்லிய வறங்கள் யாவு நின்னிடைத் தொக்க வாற்றல்**

**புல்லிய பொய்யொன் றென்னும் பொருபெரு நெருப்புக்கீரம்**
**இல்லைநீ யொன்று மெண்ணா தியம்புதி யிதனை என்றான்.**

[வல்லவர் அனந்தகோடி மறைகளின் படியே ஆய்ந்து சொல்லிய அறங்கள் யாவும் நின்னிடை தொக்க ஆற்றல், புல்லிய பொய் என்று என் ஆம்?. பொரு பெரு நெருப்புக்கு ஈரம் இல்லை; நீ ஒன்றும் எண்ணாது இயம்புதி, இதனை, என்றான்.]

**விளக்கம் :-** வல்லவர் - வேதாதி நூல்களில் வித்தகம் உடைய பெரியோர். நின்னிடை தொக்க ஆற்றல் - உன்னிடம் பொருந்தியிருப்பதால், ஒன்று பட்டுக் கூடியிருப்பதால். புல்லிய பொய் ஒன்று என் ஆம் - சிறு பொய்யொன்று உனக்கு என்ன தீங்கு செய்யக்கூடியது ஆகும்; (உனக்கு எத்தீங்கையும் தராது என்றபடி) பொரு நெருப்பு - அழிக்கும் நெருப்பு, ஈரம் இல்லை - ஈரத்தால் (பெரு நெருப்புக்குக்) கேடு இல்லை, அசுவத்தாமா இறந்தது கூறல், நிகழ்ந்த ஒன்றை மாறுபடக் கூறலே யாதலால், பெரிய பொய்யும் ஆதற்கில்லை, என்பது தோன்ற இறைவன், **புல்லிய பொய்**, என்றான்.

பெரிய நெருப்பை ஈரம் பாதிக்காதது போல், எல்லாத் தருமங்களும் பொருந்திய வாழ்க்கையனான **உன்னை**, இச்சிறு பொய் பாதிக்காது, என்று கண்ணன் எடுத்துக்காட்டியபடி. **இது எடுத்துக் காட்டுவமை**யின் பாற்படும்.

### தருமன் சம்மதித்துச் செய்தல்

**26. போரற மலைந்து வென்று போதத்தாற் பவங்க ளேழும்**
**வேரற வெல்ல நிற்பான் வீடுற நின்ற வெல்லை**
**வாரற வயமா வோட்டி வயங்குதேர் கடவிச் சென்று**
**பேரறன் மைந்த னாவிற் பிழையறப் பேசு வானே.**

[போர் அற மலைந்து வென்று போதத்தால் பவங்கள் ஏழும் வேர் அற வெல்ல நிற்பான் வீடு உற நின்ற எல்லை, வார் அற வயமா ஓட்டி வயங்கு தேர் கடவி, சென்று பேர் அறன் மைந்தன் நாவின் பிழை அற பேசுவான், ஏ]

**விளக்கம் :-** போரைக் கடுமையாகச் செய்து, தத்துவ உணர்வினால் எழுவகைப்பட்ட பிறப்பையும் அடியோடு அகலும் படி வெல்ல நிற்பவனான துரோணன், முத்தியிலே மனம் பொருந்தச் செயலற்று நின்ற இடத்திலே, வேகமாய்த் தேரைச் செலுத்திச் சென்று, தனது நாவினால் குற்றம் நேராதபடி சொல்லவில்லை, என்பதாம்.

வார் அறத்தூண்டி - வார்கள் அறும்படி தேர்க் குதிரைகளை வேகமாக நடத்தி (விளங்குகின்ற தேரில் துரோணன் இருக்குமிடம் சென்றான்.) அசுவத்தாமா என்ற யானை இறந்தது மெய்யாதலின், **பிழையறப் பேசுவான்**, என்றார்.

**27. அத்தனே! யடுவல் லாண்மை யச்சுவத் தாமா வென்னும்
மத்தவா ரணத்துக் கையோ மாருதி சிங்க மானான்
எத்தனை கோடிச் சேனை யிக்களத் திறந்த திந்த
வித்தகன் மலைந்து செற்ற விரகையென் சொல்வ
தென்றான்.**

[''அத்தனே, அடுவல் ஆண்மை அச்சுவத்தாமா என்னும் மத்த வாரணத்துக்கு **மாருதி** சிங்கம் ஆனான். ஐயோ எத்தனை கோடி சேனை இ களத்து இறந்தது, இந்த வித்தகன் மலைந்து செற்ற விரகை என் சொல்வது?'' என்றான்.]

**விளக்கம் :-** அத்தன் - தலைவன் (துரோணன்) வித்தகன் - வீரனான வீமன், விரகு - உபாயம், தந்திரம். ''அசுவத்தாமா என்ற யானையை வீமன் சிங்கம் போல் அமைந்து கொன்றான்; இந்த யானையால் எத்தனை கோடி சேனை களத்தில் இறந்தது! அதை வீமன் மலைந்து அழித்த சாமர்த்தியத்தை என்ன சொல்லி வியப்பது?,'' என்று துரோணனது செவி சேரும்படி தருமன் கூறினான், என்பதாம்.

துரோணன் ஆயுதம் நீங்கி நிற்கத் திட்டத்துய்மன் தலை துணித்தல்

**28. தீதிலா னுரைத்த மாற்றஞ் செவிப்படு மளவி னெஞ்சில்
கோதிலா னெடுத்த வில்லுங் கொடியவெங் கணையும்
வீழ்த்திப்
போதிலா னிறந்தான் போலும் புதல்வனென் றினைத லின்றி
ஏதிலான் போல நின்றான் யார்கணும் பந்த மில்லான்.**

[தீது இலான் உரைத்த மாற்றம் செவி படும் அளவில், நெஞ்சில் கோது இலான் எடுத்த வில்லும் கொடிய வெம் கணையும் வீழ்த்தி, போது இலான் இறந்தான் போலும் புதல்வன், என்று இனைதல் இன்றி. ஏதிலான் போல நின்றான், யார்கணும் பந்தம் இல்லான்.]

**விளக்கம் :-** தீது இலான் - தருமன். நெஞ்சில் கோது (குற்றம்) இலான் - துரோணன். போது இலான் - ஆயுள் நாள் இல்லாத

வனான அசுவத்தாமன். ஏதிலான் - அயலான். முனிவர்களின் உபதேசத்தால் பக்குவம் எய்திய வில்லாசிரியன், தருமன் கூறியது செவி சேர்ந்த அளவில் வில்லையும் கணைகளையும் கீழே போட்டுவிட்டு, ''ஆயுள் காலம் இல்லாமையின் மகன் இறந்தான் போலும்!'' என்று எண்ணி, வருந்துதல் இல்லாமல், யார்பாலும் பாச பந்தம் இல்லாமல், ஏதிலான் போல் களத்தே நின்றான், என்பதாம்.

**29. முள்ளிய ளுளக் கோயின் முனிநடுத் தலையை முன்னம்**
**கிள்ளிய பினாக பாணி கிரீசனோ டொத்த வீரன்**
**துள்ளிய பரித்தேர்த் திட்டத் துய்மன தம்பு சென்று**
**தள்ளிய தப்போ தந்தத் தவமுனி தலையை யந்தோ!**

[முள் இயல் நாளம் கோயில் முனி நடு தலையை, முன்னம் கிள்ளிய பினாகபாணி கிரீசனோடு ஒத்த வீரன், துள்ளிய பரி தேர் திட்டத்துய்மனது அம்பு சென்று, தள்ளியது, அப்போது அந்த தவம் முனி தலையை, அந்தோ!

**விளக்கம் :-** முள் இயல் நாளம் கோயில் முனி—முட்களைக் கொண்டு தண்டோடு கூடிய தாமரையை வாழுமிடமாகக் கொண்ட பிரும்மா. பினாகபாணி கிரீசன் - பிநாகம் என்னும் வில்லையுடைய சிவபெருமான். முன்னொரு காலத்தில் பிரும்மாவினுடைய நடுத் தலையைக் கிள்ளிய சிவபிரானை ஒத்த வீரனான திட்டத்துய்மனது அம்பு போய், அந்தத் தவமுனிவனான துரோணனது தலையை, அப்போது துணித்துத் தரை வீழ்த்தியது, என்ன பரிதாபம்,—என்பதாம். அந்தோ (ஐயோ பாவம்) என்று கவி இரங்கினார், என்க.

மகன் வருந்தல்

கலித்துறை

**30. பட்டனன் வாச பதிநிகர் சேனா பதியென்னக்**
**கெட்டது நாக கேதனன் வீரங் கிளர்சேனை**
**தொட்டவில் லாண்மைத் துரகத தாமா வெதிரோடிக்**
**கட்டழல் வேள்வித் தாதையி றந்த களங்கண்டான்.**

[பட்டனன் வாசபதி நிகர் சேனாபதி என்ன, கெட்டது நாக கேதனன் வீரம் கிளர் சேனை, தொட்ட வில் ஆண்மை துரகத தாமா எதிர் ஓடி, கட்டு அழல் வேள்வி தாதை இறந்த களம் கண்டான்.]

**விளக்கம் :-**வாசபதி - (தேவகுருவான) பிரகஸ்பதி. கட்டு அழல் வேள்வி தாதை - தவருமல் வைதீகாக்னியில் அக்னி காரியம் செய்யும் தந்தையாகிய துரோணன். பிரகஸ்பதியை ஒத்த சேனைத்தலைவனான துரோணன் இறந்தான், துரியோதனனது வீரம் மிகுந்த சேனை நிலை கெட்டது, பற்றிய வில் தொழில் வலிமையுடைய அசுமத்தாமா எதிரே ஓடிச்சென்று, வைதிக கர்மாக்களைத் தவருது செய்யும் தனது தந்தை இறந்ததைக் கண்டான், என்பதாம்.

**31. கண்டான் வீழ்ந்தா னம்முனி பாதம் கமழ்சென்னி**
**கொண்டான் மோதிக் கண்பொழி நீரிற் குளித்திட்டான்**
**வண்டார் சோர மண்ணுடல் கூர வன்னஞ்சம்**
**உண்டார் போல வெண்ண மழிந்தா னுள நொந்தான்.**

[கண்டான், வீழ்ந்தான், அ முனிபாதம் கமழ்சென்னி கொண்டான்; மோதி கண் பொழி நீரில் குளித்திட்டான், வள்தார் சோர மண் உடல் கூர, வல் நஞ்சம் உண்டார் போல எண்ணம் அழிந்தான், உளம் நொந்தான்.]

**விளக்கம் :-** கண்டான், வள்தார் சோர, உடல் மண் கூர விழுந்தான், என்று இயைக்க. எண்ணம் அழிந்தான் - உணர்வு அற்றான். பித்ரு சோகத்தால், மகன் மிகவும் வருந்தினான், என்க.

**32. வன்பின் மிக்க வீடும னுன்னை மன்னுகென்(று)**
**அன்பி னிப்பா ராளவு மன்றே யருள்செய்தான்**
**முன்பி னெண்ண வுவமையி லாதாய் முடிவாயோ**
**உன்பின் வந்தே னுன்னையொ ழிந்து முய்வேனே!**

[வன்பின் மிக்க வீடுமன் உன்னை மன் ஆகு என்று அன்பின் இ பார் ஆளவும் அன்றே அருள் செய்தான்; முன்பின் எண்ண உவமை இலாதாய் முடிவாயோ, உன் பின் வந்தேன் உன்னை ஒழிந்தும் உய்வேனே!]

**விளக்கம் :-**செய்யுள் மிக சுலபமானது. இதுவும் தொடரும் இரண்டு செய்யுள்களும் அசுவத்தாமனது புலம்பலைக் கூறும்.

**33. வில்லாய் நீவெம் போர்முனை வெல்லும் விறலாய்நீ**
**சொல்லாய் நீதொல் வேதிய ருட்குந் தொழிலாய்நீ**
**வல்லார் வல்ல கலைகள னைத்தும் வல்லானே**
**எல்லா மின்றே பொன்றின உன்னோ டெந்தாயே!**

[வில்லாய் நீ, வெம் போர் முனை வெல்லும் விறலாய் நீ, சொல்லாய் நீ, தொல் வேதியர் உட்கும் தொழிலாய் நீ, வல்லார்

வல்ல கலைகள் அனைத்தும் வல்லானே, எல்லாம் இன்றே பொன்றின உன்னோடு எந்தாய், ஏ.]

**விளக்கம்:**-சொல்லாய் - சொல்திறமை உடையாய். தொல் வேதியர் உட்கும் தொழிலாய் - பழமையான அந்தணர்களும் அஞ்சும் படி வைதிக கர்மாக்களைச் செய்பவனே. பொன்றல் - அழிதல். எந்தாய், என்பதற்கு - என்தாய் போன்றவனே, என்றும் பொருள் கொள்ளலாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**34. கற்கொண்டு கன்மழைமுன் றடுத்த கண்ணன்**
**கற்கறித்துப் பன்முறித்துக் கழறத் தானும்**
**முற்கொண்ட விரதமறந் தியாருங் கேட்க**
**முரசுயர்த்தோன் பொய்சொன்னான் முடிவி லந்தச்**
**சொற்கொண்டு வெறுங்கையனா மளவிற் றிட்டத்**
**துய்மனென நின்றகுருத் துரோகி கொன்றான்**
**விற்கொண்டு பொரநினைந்தா லிவனே யல்ல**
**விண்ணவர்க்கு மெந்தைதனை வெல்ல லாமோ?**

[கல் கொண்டு கல் மழை முன் தடுத்த கண்ணன்,—கல் கறித்து பல் முறித்து கழற, தானும் முன் கொண்ட விரதம் மறந்து யாரும் கேட்ப முரசு உயர்த்தோன் பொய் சொன்னான் முடிவில், அந்த சொல் கொண்டு வெறுங்கையன் ஆம் அளவில், திட்டத் துய்மன் என நின்ற குருத்துரோகி கொன்றான்; வில் கொண்டு பொர நினைத்தால், இவனே அல்ல, விண்ணவர்க்கும் எந்தை தனை வெல்லல் ஆமோ!]

**விளக்கம்** :-கல் கறித்து பல் முறித்து - கல்லைக்கடிப்பதுபோல் பல்லைக் கடித்துக் கொண்டு (கண்ணன் தருமனை வற்புறுத்திடப் பொய் சொல்லச் சொன்னான், என்பதாம்). குருவைக் கொன்றதால் திட்டத்துய்மன் குருத்துரோகி, எனப்பட்டான். தன் தந்தை வஞ்சிக்கப்பட்டார், என்று மகன் புலம்பினான்; என்று கூறியபடி.

**35. இப்புதல்வன் றிருத்தாதை பாடு நோக்கி**
**இவ்வகையே யிரங்குதலு மிராச ராசன்**
**அப்புதல்வன் றன்னையெடுத் தாற்றித் தேற்றி**
**அம்புயக்க ணருவிதுடைத் தளிசெய் காலை**

**எப்புதல்வ ருடனுவிறற் குந்தி மைந்த**
**ரியாவரையுஞ் சென்னிதுணித் தியாக சேனன்**
**மெய்ப்புதல்வன் றனையுமற மலைவ னென்று**
**வில்வளைத்தான் சொல்வளையா வேத நாவான்.**

[இ புதல்வன் திரு தாதை பாடு நோக்கி இ வகையேஇரங்குதலும் இராச ராசன் அ புதல்வன் தனை எடுத்து ஆற்றி தேற்றி அம்புயம் கண் அருவி துடைத்து அளி செய்காலை, எ புதல்வருடனும் விறல் குந்தி மைந்தர் யாவரையும் சென்னி துணித்து, யாகசேனன் மெய் புதல்வன்தனையும் மலைவன் என்று, வில் வளைத்தான், சொல்வளையா வேதம் நாவான்.]

**விளக்கம் :-** பாடு - அழிவு. ஆற்றி - ஆறுதல்கூறி. தேற்றி - சமாதானப்படுத்தி. அளி - அன்பு. தந்தையின் அழிவுக்கு இரங்கிய அசுவத்தாமன், துரியோதனனால் தேற்றப்படலும், "எல்லா மக்களுடன் பாண்டவரை அழிப்பேன்; திட்டத் துய்மனையும் தொலைப்பேன்", என்று வில்லை வளைத்தான், என்பதாம். சொல் வளையாத வேத நாவான் - தவறாத சொல்லையுடைய வேதம் பயின்ற நாவினனான அசுவத்தாமன்.

## வேதியன் ஏவிய நாராயணாத்திரம்

**36. பாகசாத னன் மதலை தெய்வப் பாகன்**
**பாகடரு நெடும்பனைக்கை பகட்டின் மேலான்**
**மேகமேனி யன்விரைவிற் றங்கள் சேனை**
**வேந்தையெலாஞ் சென்றெய்தி வில்வாள் வேலும்**
**வாகனமா தியுமகற்றி நின்மி னென்ன**
**மாருதிமைந் தனையொழிந் தோர் மண்ணின் மீது**
**யோகஞா னியராகி யனைத்து ளோரும்**
**ஒருவரைப்போ னிராயுதரா யொடுங்கி நின்றார்.**

[பாகசாதனன் மதலை தெய்வம் பாகன் பாகு அடரும் நெடும் பனைக்கை பகட்டின் மேலான், மேகம் மேனியன் விரைவில் தங்கள் சேனை வேந்தை எலாம் சென்று எய்தி வில் வாள் வேலும், வாகனம் ஆதியும் அகற்றி நில்மின் என்ன, மாருதி மைந்தன் ஒழிந்தோர் மண்ணின் மீது, யோகம் ஞானியர் ஆகி அனைத்துளோரும் ஒருவரைப்போல் நிராயுதர் ஆய் ஒடுங்கி நின்றார்.]

**விளக்கம் :-** பாக சாதனன் - இந்திரன்; தெய்வப்பாகன் - கண்ணன். பகடு - ஆண் யானை. மேக மேனியனும், இந்திரன் புதல்வனான விசயனது பாகனுமான கண்ணன், பாகனை அழிக்கும்

மதங்கொண்ட நீண்ட பனைமரம்போன்ற துதிக்கையுடைய யானை மேல் ஏறிக்கொண்டவனாய், விரைவில் சேனை அரசர்களை அடைந்து, "வில் வாள் முதலிய ஆயுதங்களையும் வாகனங்களை யும் நீக்கினராய் நில்லுங்கள்", என்று சொல்ல, வீமனை ஒழிந்த மற்றவர் அனைவரும் யோக ஞானியரைப்போல், நிராயுதராய்ப் பூமியில் செயலற்று ஒடுங்கி நின்றனர் என்பதாம். யோக ஞானி யர் – யோகப் பயிற்சியால் தத்துவ உணர்வு கைவந்தவர்.

**37.** மாற்றரிய மறையொடுநா ராய ணன்றன்
வாளிதொடுத் தலுமந்த வாளி யூழிக்
காற்றெரியோ டெழுந்ததெனக் கார்கோள் மொண்டு
காரேழு மதிர்ந்ததெனக் கனன்று பொங்கி
ஏற்றரிபோற் குழாங்கொண்ட வயவர் தம்மை
யெய்தியபோ தனைவருந்தம் மிதய மொன்றிச்
சாற்றரிய வுணர்வினரா யேத்தி யேத்தித்
தாடோய்செங் கரமுகுளந் தலைவைத் தாரே.

[மாற்று அரிய மறையோடு நாராயணன் தன் வாளி தொடுத் தலும், அந்த வாளி ஊழிக்காற்று எரியோடு எழுந்தது என, கார் கோள் மொண்டு தார் ஏழும் அதிர்ந்தது என கனன்று பொங்கி, ஏறு அரிபோல் குழாம் கொண்ட வயவர் தம்மை எய்தியபோது அனைவரும் தம் இதயம் ஒன்றி, சாற்று அரிய உணர்வினராய் ஏத்தி ஏத்தி தாள் தோய் செம்கரம் முகுளம் தலைவைத்தார், ஏ.]

**விளக்கம்:-** மாற்று அரிய மறை - தடுப்பதற்கு அரிய மந்திரம். கார்கோள் - கடல். ஏறு அரி - ஆண் சிங்கம். முகுளம் - தாமரை அரும்பு. முனிமைந்தன் நாராயணாஸ்திரத்தை மறையோடு ஏவிய அளவில், அந்த அத்திரம், ஊழிக் காற்று நெருப்புடன் சேர்ந்து எழுந்து வீசியது எனவும், கடல் நீரைப் பருகி சப்த மேகமும் இடித்தது எனவும் கனன்றுபொங்கி ஆண் சிங்கம்போல் திரண்டுள பாண்டவ சேனை வீரர்களை நெருங்கியபொழுது, வீரர்கள் எல்லோ ரும் மனம் ஒன்றுபட்டுத் தத்துவ உணர்வு எய்தினராய், அந்த அத்திரத்தைத் துதித்து, தங்களது முழந்தாள்வரை நீண்ட கை களாகிய தாமரை அரும்புகளைத் தலைமேல் வைத்து வணங்கி னார்கள், என்பதாம்.

விலக்கரிய அக்கணை ஆயுதங்கள் நீங்கி வணங்கி நின்றாரை நலியாத் தன்மையது, என்க.

வீமனை அத்திரம் நெருங்கல்

38. பாருருவித் திசையுருவி யண்ட கூடம்
பாதலத்தி னுடனுருவிப் பரந்து சீறி
ஓரொருவ ருடலின்மிசை மயிர்க்கா றோறும்
ஓரொருவெங் கணையாய்வந் துற்ற காலை
நேரொருவர் மலையாமற் றருமன் சேனை
நிருபரெலா நிராயுதராய் நிற்றல் கண்டு
போருருவ முனிமைந்தன் றொடுத்த வாளி
பொருபடைகொண் மாருதிமேற் போன தாலோ.

[பார் உருவி, திசை உருவி அண்டகூடம் பாதலத்தினுடன் உருவி பரந்து சீறி, ஓர் ஒருவர் உடலின் மிசை மயிர்க்கால் தோறும் ஓர் ஒரு கணையாய் வந்து உற்ற காலை நேர் ஒருவர் மலையாமல் தருமன் சேனை நிருபர் எலாம் நிராயுதராய் நிற்றல் கண்டு, போர் உருவ முனிமைந்தன் தொடுத்த வாளி, பொருபடைகொள் மாருதிமேல் போனது, ஆல், ஓ.]

**விளக்கம் :-** போர் உருவம் முனி மைந்தன் தொடுத்த வாளி, பார் உருவி....உற்றகாலை, தருமன் சேனை நிருபர் எலாம் நேர் ஒருவர் மலையாமல் நிராயுதராய் நிற்றல் கண்டு பொருபடைகொள் மாருதிமேல் போனது; ஆல், ஓ : அசைகள்; ஓ, வியப்பிடைச் சொல்லுமாம். போர் உருவம் முனிமைந்தன் – போரின் உருவம் போன்ற அசுவத்தாமன், அல்லது போரில் பயங்கரமான தோற்ற முடைய அசுவத்தாமன். படை எடாதவரைத் தாக்கும் இயல் பிலாத அந்த அத்திரம், பொருபடையை நீக்காத வீமன்மேல் சென்றது, என்பதாம்.

வீமன் அதை எதிர்த்தல்

39. காற்றின்ம தலையுந்த டந்தே ருந்திக்
கண்சிவந்து மனங்கருகிக் கால்வில் வாங்கிக்
கூற்றமென வெதிர்சென்று முனிவன் மைந்தன்
கொடுங்கணையை மதியாமற் கடுங்க ணுளன்
வேற்றுருவங் கொடுகனலி முதலா வுள்ள
விண்ணவர்தம் பகழிகளாய் மேன்மேல் வந்த
மாற்றரிய பகழிகளை யொன்றுக் கொன்று
மாருன பகழிகளான் மாற்றி னுனே.

[காற்றின் மதலையும் தடந்தேர் உந்தி, கண்சிவந்து, மனம் கருகி, கால்வில் (வில்கால்) வாங்கி, கூற்றம் என எதிர்சென்று

முனிவன் மைந்தன் கொடுங்கணையை மதியாமல், கடுங்கண் ஆளன், வேறு உருவம் கொடு கனலிமுதல் ஆ(க) உள்ள விண்ணவர்தம் பகழிகளாய் மேல்மேல் வந்த மாற்று அரிய பகழிகளை ஒன்றுக்கு ஒன்று மாறுன பகழிகளால் மாற்றினன், ஏ.]

**விளக்கம் :-** கடுங்கணுளன் - அஞ்சாத ஆற்றலுடைய வீமன். வேறு உருவம் கொண்டு - வேறு வேருன உருவம் கொண்டு. முனிமைந்தன் ஏவிய அத்திரத்தை மதியாமல் வீமன், வேறு வேறு உருவங்கொண்டு அக்னி முதலாகவுள்ள தெய்வப் படைகளாய்த் தன்னை நெருங்கி வரும் விலக்குதற்கு அரிய அவ்வத்திரங்களை, அவற்றிற்குப் பகையான அத்திரங்களால் தடுக்க முயன்ருன், என்பதாம்.

**40. மூச்சினு லடியுண்டுங் கடுங்கட் கோப**
**முதுகனலா லெரியுண்டு முனைகொள் வாளி**
**ஓச்சினு லொடியுண்டுங் குனிந்த விற்கால்**
**உதையினு லுதையுண்டு நெடுநா ணோசை**
**வீச்சினுல றையுண்டுங் கடக வாகு**
**வெற்பினு லிடியுண்டும் வெகுளி கூரும்**
**பேச்சினல் வெருவுண்டும் படாத துண்டோ**
**பேரனிலன் மகனுலப் பெருமன் வாளி.**

[மூச்சினுல் அடி உண்டும், கடும் கண் கோபம் முதுகனலால் எரியுண்டும், முனை கொள்வாளி ஓச்சினுல் ஒடியுண்டும், குனித்த வில் கால் உதையினுல் உதையுண்டும், நெடு நாண் ஓசை வீச்சினுல் அறையுண்டும், கடகம் வாகு வெற்பினுல் அடியுண்டும், வெகுளி கூரும் பேச்சினுல் வெருவுண்டும் படாதது உண்டோ, பேர் அனிலன் மகனுல் அ பெருமன் வாளி.]

**விளக்கம் :-** பேர் அனிலன் மகன் - வாயுபுத்திரனை வீமன். அப் பெருமன் வாளி - அந்த நாராயணுத்திரம். வீமனது மூச்சுக் காற்ருல் தாக்கப்பட்டும், அவன் கண்களிலிருந்து வெளிப்பட்ட முதிர்ந்த கோபக் கனலால் எரிக்கப்பட்டும், கூரிய அம்புகளின் பிரயோகத்தால் ஒடிபட்டும், வளைத்த வில்லின் கழுந்தின் உதையால் தாக்கப்பட்டும், நாண் ஒலியின் மிகுதியினுல் அடிக்கப் பட்டும், அவனது கடகம் அணிந்த தோள்களாகிய மலைகளினுல் இடிக்கப்பட்டும், வெகுளி மிகுந்த வீர வசனங்களால் அச்சங் கொண்டும், அவனுல், அத்தெய்வ வாளி படாதபாடு உண்டோ; அதாவது, மிகவும் சிரமப்பட்டது, என்பதாம். அத்திரம் வீமனைச் சிரமப்பட்டது கண்ணனது அருளினுல், என்க,

கண்ணன் வீமனைத் தப்புவித்தல்

**41. தாள்வலியா லெனைப்பலபல் வினைசெய் தாலும்
தப்பவொண்ணு விதிபோலத் தடந்தோள் வீமன்
தோள்வலியால் விலக்கவுமத் தொடைபோய் வாசத்
தொடைமிடைமார் பகமணுகச் சுராரி தோள்கள்
வாள்வலியா லரிந்தபிரான் கையில் வில்லும்
வாளியுவா கனமுமுடன் மாற்று வித்தான்
நாள்வலியார் தமைச்சிலராற் கொல்ல லாமோ
நாரணன்சா யகமிகவு நாணிற் றன்றே.**

[தாள் வலியால் எனை பல பல் வினை செய்தாலும் தப்ப ஒண்ணு விதிபோல தடந்தோள் வீமன் தோள் வலியால் விலக்கவும் அ தொடை போய் வாசம் தொடைமிடை மார்பகம் அணுக, சுராரி தோள்கள் வாள் வலியால் அரிந்தபிரான் கையில் வில்லும் வாளியும் வாகனமும் உடன் மாற்றுவித்தான்; நாள்வலியார் தமை சிலரால் கொல்லல் ஆமோ, நாரணன் சாயகம் மிகவும் நாணிற்று, அன்றே.]

**விளக்கம் :-** முயற்சியின் வலியால் எத்தனை வகையான பல தொழில்களை எதிராகச் செய்தாலும், தப்ப முடியாத வலிய விதியைப் போல், வீமன் தோள் வலியால் தடுக்கவும், அந்த அத்திரம், அவனது மார்பைச் சேர, தேவர் பகைவனை வாணனது தோள்களைப் படை வலியால் அழித்திட்ட கண்ணன் (வீமனது) கையிலிருந்த வில், வாளி, தேர் ஆயவற்றை உடனே நீக்குவித்தான்; அதனால், அந்த அத்திரம் நாணி அகன்று போயிற்று, நாள் வலி - (ஆயுள் பலம்) உடையோரை எவராலும் கொல்லுதல் முடியுமோ!—என்பதாம்.

கண்ணன் வீமனை நிராயுதனுய்ச் செய்தமையால், அந்த அத்திரம் அவனைக் கொல்லாமல் நாணிச் சென்றது, என்ற சிறப்புப் பொருளை, "நாள்வலியார் தமைச் சிலரால் கொல்ல லாமோ," என்ற பொதுப் பொருளால் சாதிக்கும் இது, **வேற்றுப் பொருள் வைப்பு** ஆகும்.

வியாசமுனிவன் வரல்

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**42. விட்ட வெம்பகழி நாணி மீளுதலும்
வில்லின் வேதமுணர் முனிமகன்
வட்ட வெஞ்சிலையின் மீது பாசுபத
வாளி வைப்பதும னஞ்செயா**

முட்ட வன்பினெடு நின்ற காலையில்வி
யாத னென்றுரைகொள் முனிவரன்
தொட்ட தண்டுமிதி யடியு மாகியுயர்
சுருதி வாய்மையொடு தோன்றினன்.

[விட்ட வெம் பகழி நாணி மீளுதலும் வில்லின் வேதம் உணர் முனிமகன், வட்டம் வெம் சிலையின் மீது பாசுபதம் வாளி வைப்பது மனம் செயா, முட்ட வன்பினெடு நின்ற காலையில் வியாதன் என்று உரை கொள் முனிவரன், தொட்ட தண்டும், மிதியடியும் ஆகி, உயர் சுருதி வாய்மையொடு தோன்றினன்.]

**விளக்கம்:-** முனிமகன் விட்ட அத்திரம் நாணி மீளலும், வளைந்த வெம் சிலையில் பாசுபதாத்திரம் தொடுக்க எண்ணி மிகுதி யான கோபத்தோடு நின்ற பொழுது, வியாசன் என்ற முனிவரன் பற்றிய யோக தண்டத்தோடும், பாதுகையோடும், வேத வாக்கி யங்களை உச்சரித்துக் கொண்டு அங்கே வந்து தோன்றினன், என்பதாம். முட்டவன்பு - மிகுந்த மனக் கொதிப்பு.

43. நின்ற சாபமுனி மைந்தன் வந்தமுனி
நிருப னைப்பரம னிகரெனச்
சென்று கைதொழுது பரசி டப்பரிவு
தீர்க ருத்தினெடு செப்பினன்
அன்று போரிலழி யாக சேனன் மகன்
அழலி னூடுவரு சாபமும்
வென்றி வாகைபுனை விசய னேடுகரு
மேக வண்ணன்வரு விதியுமே.

[நின்ற சாபமுனி மைந்தன் வந்த முனி நிருபனை பரமன் நிகர் என, சென்று கை தொழுது பரசிட, பரிவுதீர் கருத்தினெடு செப்பினன், அன்று போரில் அழியாக சேனன் மகன் அழலினூடு வரு சாபமும் வென்றி வாகை புனை விசயனேடு கருமேகவண்ணன் வரு விதியும், ஏ]

**விளக்கம்:-** பொர நின்ற அசுவத்தாமன் தன்னிடம் வந்த முனிவர் தலைவனை வியாசனைக் கடவுளோடு ஒப்பாக எண்ணித் தொழுது துதித்திட, அவனது பரிவு (துயரம்) தீரும்படி, யாக சேனனது யாகத் தீயினின்று திட்டத்துய்மன் தோன்றிய வரத் தையும், விசயனேடு கண்ணன் அவதரித்த முறைமையையும் முனிவன் எடுத்துக் கூறினன், என்பதாம்.

தவருமை பற்றியது சாபம். எனவே, துரோணனுக்கு எமனய்த் திட்டத்துய்மன் யாகத் தீயிலிருந்து தோன்றியது,

சாபம், எனப்பட்டது. ஈற்றடி, பூபாரம் தீர்க்கும் பொருட்டுக் கண்ணன் விசயனோடு தோன்றியுள்ள செய்தியைக் குறிக்கும்.

**44.** **வரத்தி னுனது தந்தை போரினின்**
**மடிந்த தன்றியொரு வயவர்தம்**
**சரத்தி னலவனை வெல்ல வல்லவர்**
**தராத லத்தின்மிசை யில்லையால்**
**உரத்தினல் விறன்ம யூர வாகனனை**
**யொத்த வீரவினி யுள்ளுறச்**
**சிரத்தி னலரனை யடிவ ணங்கியிடர்**
**தீரு மாறுநனி சிந்தியாய்.**

[வரத்தினல் உனது தந்தை போரினில் மடிந்தது அன்றி ஒரு வயவர், தம் சரத்தினல் அவனை வெல்ல வல்லவர் தராதலத்தின் மிசை இல்லை, (ஆல்), உரத்தினல் விறல் மயூர வாகனனை ஒத்த வீர, இனி உள்உற சிரத்தினல் அரனை அடி வணங்கி இடர் தீரும் ஆறு நனி சிந்தியாய்,—தொடரும்.]

**விளக்கம்:-** வரம் - யாக சேனன் பெற்ற வரம். மயூர வாகனன் - முருகப் பெருமான். ''உன் தந்தை இறந்தது, யாக சேனன் பெற்ற 'வரத்தினல். சரத்தினல் அவனை வெல்ல வல்ல வர் இவ்வுலகில் எவரும் இல்லை. உனது இடர் (பிறவித்துயர்) நீங்கச் சிவபிரானை வணங்கி மனப்பூர்வமாய் அவனைத் தியானிப் பாயாக'' என்று முனிவன், அசுவத்தாமனுக்கு உபதேசித்தான், என்பதாம்.

சூரியாத்தமனம்

**45.** **ஒன்ற வைம்புலனை வென்று நீடுதவ**
**முரிமை யிற்புரிதி யுற்பவம்**
**பொன்ற வென்றுறுதி கூறி யன்பொடு**
**புகுந்த தெய்வமுனி போதலும்**
**மன்ற வென்றுமிவர் செற்றதிற்சத**
**மடங்கு செற்றனர்க ளின்றெனு**
**நின்ற வென்றும்வெளி நிற்ற லஞ்சிநெடு**
**நீல வேலையின் மறைந்ததே.**

[ஒன்ற ஐம்புலனை வென்று நீடு தவம் உரிமையின் புரிதி உற்பவம் பொன்ற, என்று உறுதி கூறி, அன்பொடு புகுந்த தெய்வ முனி போதலும், மன்ற என்றும் இவர் செற்றதின் சதமடங்கு

செற்றனர்கள் இன்று எனு, நின்ற என்றும் (சூரியனும்) வெளி நிற்றல் அஞ்சி நெடு நீலம் வேலேயில் மறைந்தது, ஏ.]

**விளக்கம்:-** உற்பவம்-பிறப்பு. மன்ற-நிச்சயமாக. என்று (நாலாவது அடி) சூரியன். ''பிறவி அகலும்படி இந்திரிய இச்சைகளே வென்று, தவத்தை அதற்குரிய ஒழுக்கத்தோடு செய்க'' என்று உபதேசித்து வியாச முனிவன் போதலும், எந்த நாளிலும் இவர் அழித்த அளவில் இன்று நூறு மடங்கு அதிகமாக அழித்துள்ளார், என்று, வானிடை நின்ற என்று (சூரியன்), வெளியே நிற்பதற்கு அஞ்சி, நீலக் கடலில் மறைந்தது, என்பதாம். இந்த அத்தமன வருணனே, தற்குறிப்பேற்றம்.

**46.** **இருள்ப ரந்ததினி யமையு மிற்றையம**
**ரென்று துன்றுகழ லிட்டதாள்**
**அருள்ப ரந்தவிழி யறனின் மைந்தனெடு**
**சேனே பாசறைய டைந்தபின்**
**உருள்ப ரந்ரத துரக குஞ்சரப**
**தாதி யோடுகடி தோடினுன்**
**மருள்ப ரந்ததனி நெஞ்ச னுகியடன்**
**மன்னர் மன்னனெனும் மன்னனே.**

[இருள் பரந்தது இனி அமையும் இற்றை அமர் என்று, துன்று கழல் இட்ட தாள் அருள் பரந்த விழி அறனின் மைந்தனெடு சேனே பாசறை அடைந்த பின், உருள் பரந்த ரத துரக குஞ்சர பதாதியோடு கடிது ஓடினுன், மருள் பரந்த தனி நெஞ்சன் ஆகி அடல் மன்னர் மன்னன் எனும் மன்னனே.]

**விளக்கம்:-** அடல் மன்னர் மன்னன் எனும் மன்னன், மருள் பரந்த தனி நெஞ்சன் ஆகி உருள் பரந்த ரததுரக குஞ்சர பதாதி யோடு கடிது ஓடினுன், — என்பது ஈற்றடிகளின் அன்வயம். இருள் பரவியது, இன்றைய நாள் போர் இனிப் போதும், என்று, துன்று கழல் அணிந்த கால்களேயும், அருள்பெருகும் கண்களேயும் உடைய தருமன் தன் சேனேயோடு பாசறை சேர்ந்தபின், துரியோதனன் மயக்கம் மிகுந்த தனித்த நெஞ்சினனுய் நால் வகைச் சேனேகளோடு விரைந்து பாடி வீடு சென்ருன், என்பதாம். உருள் பரந்த ரதம்-சக்கரங்களால் விரைந்து செல்லும் தேர்.

**47.** **தனது பாசறையி லான வக்குரிசில்**
**சஞ்ச யன்றனேய ழைத்துநீ**
**நினது காதலுயி ரனேய வெந்தைதனே**
**நிசித னிற்கடிதி னெய்தியே**

**புனைது ழாய்மவுலி விரகி ஞன்முர**
**சுயர்த்த பூபனுரை பொய்த்ததும்**
**எனது வாழ்வுவலி வென்றி தேசுறுதி**
**யாவு மாமுனியி றந்ததும்.**

[தனது பாசறையில் ஆன அ குரிசில், சஞ்சயன்தனை அழைத்து, நீ நினது காதல் உயிர் அனைய எந்தை தனை நிசி தனில் கடிதின் எய்தியே, புனைதுழாய் மவுலி விரகினல் முரசு உயர்த்த பூபன் உரை பொய்த்ததும், எனது வாழ்வு, வலி, வென்றி, தேசு, உறுதி யாவும் மாமுனி இறந்ததும்,—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்:-** தனது பாசறை அடைந்ததும், துரியோதனன், சஞ்சய முனிவனை அழைத்து, ''நீ, உனது அன்பிற்கு உரிய உயிரை ஒத்த நண்பனுன என் தந்தையிடம் இவ்விரவில் விரைந்து சென்று, கண்ணனது தந்திரத்தால் தருமன் பொய் சொன்னதையும், எனதுவாழ்வும் வலியும் வெற்றியும் பிரகாசமும் தைரியமும் ஆகிய எல்லாமாய் எனக்கு இருந்த துரோணன் மாண்டதையும்—(தொடரும்) என்பதாம். புனைதுழாய் மவுலி - கண்ணன்.

**48. தனஞ்ச யன்றலைது ணிக்க நின்றவரி**
**சாப கோபமுதிர் சாயகம்**
**தினஞ்செய் நாதனருள் செல்வ மாமதலை**
**சேனை நாதனினி யாவதும்**
**இனஞ்செய் வண்டுமுர ரும மார்பனெடி**
**யம்பி மேனிகழ்வ யாவையும்**
**மனஞ்செய் திவ்விரவு புலரு முன்கடிதின்**
**வருக வென்றனன்வ ணங்கியே.**

[தனஞ்சயன் தலை துணிக்க நின்ற வரி சாபம் கோபம் முதிர் சாயகம் தினம் செய் நாதன் அருள் செல்வம் மாமதலை சேனை நாதன் இனி ஆவதும், இனம் செய்வண்டு முரல் தாமம் மார்ப னெடு இயம்பி, மேல் நிகழ்வ யாவையும் மனம் செய்து இ இரவு புலருமுன் கடிதின் வருக'', என்றனன், வணங்கியே.]

**விளக்கம்:-** சாபம்-வில்லை. கோபம் முதிர் சாயகம்-(விசயன் மேல்) கறு மிக உடைய நாகக்கணை. தினம் செய் நாதன்-சூரியன். இனம்செய்... மார்பன்-தந்தையான திருதராட்டிரன், (இனம்செய்-கூட்டமாய்த் திரள்கின்ற). மனம் செய்து-நன்கு ஆலோசித்து. இன்று விசயனேடு பகை உடைய கர்ணன் சேனைநாதன்

ஆதலைத் தந்தைக்குச் சொல்லி, இனி நிகழ வேண்டியவற்றைப் பற்றி ஆலோசித்துக் கொண்டு, பொழுது புலருமுன் வருக, என்று துரியோதனன், சஞ்சயனுக்குச் சொன்னான், என்பதாம்.

**49.** **அந்த வந்தணனு மந்த னேடிவைய**
**னைத்து மோதியபி னந்தனும்**
**சிந்தை நொந்தழுதி ரங்கி யாவும்வினை**
**செய்தி ரங்குவது தீதென**
**மந்த ணம்பெருக வெண்ணி மீளவிட**
**வந்து நள்ளிருளின் மைந்தனுக்(கு)**
**உந்தை தந்தவுரை யிதுவெ னப்புரையி**
**லுரைபு ரோகிதனு முரைசெய்தான்.**

[அந்த அந்தணனும் அந்தனோடு இவை அனைத்தும் ஓதியபின், அந்தனும் சிந்தை நொந்து அழுது இரங்கி, யாவும் வினை செய்து இரங்குவது தீது, என, மந்தணம் பெருக எண்ணி, மீள விட, வந்து நள் இருளில் மைந்தனுக்கு, 'உந்தை தந்த உரை இது', என, புரை இல் உரை புரோகிதனும் உரை செய்தான்.]

**விளக்கம்:-** அந்தன்-பிறவிக் குருடனான திருதராட்டிரன். மந்தணம்-மந்திராலோசனை. பெருக-மிகுதியாக. புரோகிதன்-சஞ்சய முனிவன். ஒரு காரியத்தைச் செய்யுமுன் நன்கு ஆலோசிக்க வேண்டுமே அன்றி, செய்தபின், அதுபற்றி நினைத்து இரங்குவது தீது,—என்பது இரண்டாவது அடியின் கருத்து. துரியோதனன் கூறியபடி சஞ்சயன் தந்தையான திருதராட்டிரனிடம் சென்று எல்லாவற்றையும் சொல்லி, அவன் நன்கு ஆலோசித்துக் கூறியதைத் துரியோதனனிடம் இரவிலேயே திரும்பி வந்து கூறினான், என்பதாம்.

சூரியோதயம்

**50.** **புதல்வ னனதிற லங்கர் பூபனிருள்**
**புலரு முன்பொருப டைக்குமா**
**முதல்வ னமென மகிழ்ந்து வாளிரவி**
**முந்து தேர்கடவி யுந்தினான்**
**அதல மாதியுல கேழு மாளுடைய**
**அரவின் மாமணிய னைத்துவந்(து)**
**உதய மால்வரையி னுச்சி யுற்றதுகொ**
**லென்ன மேதினியு ரைக்கவே.**

[புதல்வன் ஆன திறல் அங்கர் பூபன் இருள் புலருமுன் பொரு படைக்கு மா முதல்வன் ஆம் என, மகிழ்ந்து, வான் இரவி முந்து தேர் கடவி உந்தினன்; ''அதலம் ஆதி உலகு ஏழும் ஆள் உடைய அரவின் மாமணி அனைத்தும் வந்து உதயம் மால்வரையின் உச்சி உற்றது கொல்'', என்ன மேதினி உரைக்க, ஏ.]

**விளக்கம்:-** புதல்வன்...வாள்இரவி,—அதலம் ஆதி.... மேதினி உரைக்க, முந்து தேர் கடவி உந்தினன்,—என்பது அன்வயம். தன் மைந்தனான கர்ணன் சேனாநாதன் ஆவான் என மகிழ்ந்து சூரியன், - ''அதலம் முதலிய ஏழுகீழ் உலகங்களையும் ஆற்றலையுமுடைய ஆதிசேஷனின் சிறந்த முடிமணிகள் எல்லாம் உதயகிரி வந்து சேர்ந்ததோ!'' என்று உலகத்தார் சொல்லும்படி, தனது சிறந்த தேரை நடத்திக்கொண்டு வந்து தோன்றினன், என்பதாம்.

ஈற்றடிகள், **தற்குறிப்பேற்றம்:** மேதினி (ஆகுபெயர்) உலகில் உள்ளோர். ஆதிசேஷனது முடிமணியாகிய நாக ரத்தினங்கள் உதய சூரியனது ஒளிக்கு உவமை.

**பதினைந்தாம் போர்ச்சருக்கம் முற்றும்**

**துரோண பருவம் முற்றும்.**

# 8. கன்ன பருவம்

## 16. பதினாறாம் போர்ச் சருக்கம்

### கடவுள் வணக்கம்

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**1. மாதுல னாகியு மேதில னாகிய வஞ்சன் கஞ்சன் வரவிட்ட**
**பூதனை தன்னுயிர் முலைபொழி பாலொடு போதர வுண்ட**
**புயல்வண்ணா**
**மாதவ யாதவ வாசவ கேசவ மாயா வாயா மதுசூதா**
**ஆதியு மந்தமு மாகிய நின்புக ழல்லா துரையே னடியேனே.**

[மாதுலன் ஆகியும் ஏதிலன் ஆகிய வஞ்சன் கஞ்சன் வர விட்ட பூதனை தன் உயிர் முலை பொழி பாலொடு போதர உண்ட புயல் வண்ணா, மாதவ, யாதவ, வாசவ, கேசவ, மாயா, ஆயா, மதுசூதா, ஆதியும் அந்தமும் ஆகிய நின் புகழ் அல்லாது உரையேன் அடியேன், ஏ.

**விளக்கம்:-** மாதுலன் - மாமன். ஏதிலன் - பகைவன். போதர உண்ட - (உயிர்) போகும்படி (முலைப்பால்) உண்ட. யாதவன் - யதுகுலத்தவன். வாசவன் - இந்திரனின் தம்பியான உபேந்திரன். மாயாவாயா, என்பது மாயா, ஆயா, என்று பிரியும். ஆயன் - இடையன். மதுசூதன் - மது என்னும் அசுரனை அழித்தவன். ''பொருள்கள் எல்லாவற்றிற்கும் ஆதியும் அந்தமுமான, உனது திருப்புகழ் அல்லால் வேறெதையும் அடியன் நான் கூறேன்,'' என்று புலவர் கூறிக் கண்ணனை வணங்கியபடி.]

**2. கங்கைம கன்சிலை யின்குரு வென்பவர் காதி மலைந்தே**
**கையற்றார்**
**இங்கினி யென்னுயிர் நண்பனை யல்லது வெல்ல வல்லோ**
**ரிலரென்றே**
**அங்கர் பிரானை வருதினி யின்பதி யாகென் றருள்செய்**
**தவனோடும்**
**வெங்கள முற்றன னஞ்சுமி ழுங் கொடி வேக நாக**
**விறலோனே.**

[கங்கை மகன், சிலையின் குரு என்பவர் காதி மலைந்தே கையற்றார்; இங்கு இனி என் உயிர் நண்பனை அல்லது வெல்ல வல்லோர் இலர், என்றே, அங்கர் பிரானை வருதினியின் பதி

ஆகென்று (ஆகு என்று) அருள்செய்து, அவனோடும் வெம் களம் உற்றனன், நஞ்சு உமிழும் கொடி வேகம் நாகம் விறலோன்.]

**விளக்கம்:-** நஞ்சு உமிழும் சினத்தை மிகுதியாக உடைய நாகத்தைக் கொடியிலே கொண்ட ஆற்றலுடையவனான துரியோதனன், தனது உயிர் நண்பனான கர்ணனைச் சேனைத் தலைவனாக்கி, அவனோடு வெங்களம் சென்றான், என்பதாம். காதி மலைதல் - (பகை) அழியும்படி போர் செய்தல்.

**3. சொற்றவ றாதது ரோணனை மௌலிது ணித்த திட்டத்**
**துய்மன்னும்**
**கொற்றவ ரைவரு மற்றுள பூபரும் வைன தேயக்**
**கொடியோனும்**
**உற்றெழு கசரத துரகப தாதிக ளான சேனை**
**யுடனேசென்(று)**
**இற்றைய ருஞ்சமம் வெல்லுத லெங்கட னென்று துன்றி**
**யெதிர்கொண்டார்.**

[சொல் தவறாத துரோணனை மௌலி துணித்த திட்டத் துய்மனும், கொற்றவர் ஐவரும், மற்று உள பூபரும் வைனதேயன் கொடியோனும், உற்று எழு கசரத துரகபதாதிகள் ஆன சேனை யுடனே சென்று, இற்றை அரும் சமம் வெல்லுதல் எம்கடன் என்று துன்றி எதிர் கொண்டார்.]

**விளக்கம் :-** வைனதேயன் – கருடன். வைனதேயக் கொடியோன் - கருடக் கொடியை உடைய கண்ணன். சேனை நாதனான திட்டத்துய்மனும், பாண்டவரும், கண்ணனும், மற்றுள அரசர்களும், இன்றைய போரில் பகை வெல்லல் தம் கடன், என்று எண்ணிக் கொண்டு நெருங்கிச் சென்று, பகைவரை எதிர் கொண்டார்கள், என்பதாம்.

## இருதிறத்தாரும் அணி வகுத்தல்

**4. கற்கியும் வண்டின மொய்க்கம தம்பொழி கரியுந் தேருங்**
**காலாளும்**
**பொற்கொடி யுங்குடை வர்க்கமு மாலையு முன்னு**
**ளரென்னும் பூபாலர்**
**நிற்குநி லந்தொறு நிற்குநி லந்தொறு நின்றுநின்று வினை**
**செய்ய**
**மற்கெழு திண்புய வர்க்கன்ம கன்பெரு மகர வியூகம்**
**வகுத்தானே.**

[கற்கியும், வண்டு இனம் மொய்க்க மதம் பொழி கரியும், தேரும், காலாளும், பொன் கொடியும், குடைவர்க்கமும், மாலையும் முன் உளர் என்னும் பூ பாலர் நிற்கும் நிலம் தொறும், நிற்கும் நிலம் தொறும் நின்று நின்று வினை செய்ய, மல் கெழு திண் புயம் அர்க்கன் மகன் பெரு மகர வியூகம் வகுத்தான், ஏ.]

**விளக்கம்:-** கற்கி - குதிரை. கரி - யானை. குடைவர்க்கம் - கொற்றக் குடைகளின் கூட்டம். மாலை - போருக்கு உரிய மாலை. முன் உளர் - முன்னமேயே உரிமையாகப் கொண்டவர். மல் - மற்போர். அருக்கன் மகனான கர்ணன், கௌரவ சேனையை பெரிய மகர வியூமாக அணி செய்தனன், என்பதாம்.

**5. பானுவின் மைந்தன்மு னைந்தும கீபதி மைந்தன் சேனு**
**பதியானுன்**
**போனவ ருஞ்சமர் போகத னித்தனி பொருது வேறும்**
**பாரென்றே**
**சேனையின் மன்னவர் யாவரும் வெம்பரி மாவின் மேலுந்**
**தேர்மேலும்**
**யானையின் மேலுமி ருந்தவ ரவ்வவர் தம்மொர் டம்ம**
**விகலுற்ருர்.**

[பானுவின் மைந்தன் முனைந்து மகீபதி மைந்தன் சேனுபதி ஆனுன்; போன அருஞ்சமர் போக, தனி தனி பொருது வேறும் போர் என்றே, சேனையின் மன்னர் யாவரும் வெம் பரிமாவின் மேலும் தேர் மேலும், யானையின் மேலும் இருந்தவர் அ அவர் தம்மொடு (அம்ம) இகல் உற்ருர்.]

**விளக்கம்:-** பானுவின் மைந்தன் - கர்ணன். மகீபதி மைந்தன் - துரியோதனன். போன அருஞ்சமர் போக-இத்தனை நாள் நடந்து கழித்த அரிய போர் போகட்டும். வெம்பரி மா........ இருந்தவர் (ஆகிய) சேனையின் மன்னர் யாவரும், பானுவின் மைந்தன்...வேறும் (வெல்வோம்) என்றே, அவ்வவர் தம்மொடும் இகல் உற்ருர், - என்பது அன்வயம். அவ்வவர்........இகல் உற்ருர் - தம்மைப்போல் குதிரை, யானை, தேர் ஆகியவற்றில் இருந்த அந்த அந்த எதிரிகளுடனே போர் செய்யத் தொடங்கினர். அம்ம, வியப்பு இடைச் சொல். வேறும், தன்மைப் பன்மை வினைமுற்று.

**6. நாமமி ரண்டொடு பத்துடை நாயக னவில வெஞ்சே**
**னயினுதன்**
**மாமரு கொற்றவ ருதினி வேலையை மருவா ரஞ்சி**
**வெருவெய்த**

**நேமிவி யூகம தாகவ குத்திடை நின்று போர்செய்**
**நிலயத்தில்**
**வீமன்வ யம்புனை தேரினை விட்டொரு வெம்போர் வேழ**
**மேற்கொண்டான்.**

[நாமம் இரண்டொடு பத்து உடை நாயகன் நவில, வெம் சேனையின் நாதன், மா மரு கொற்ற வரூதினி வேலையை மருவார் அஞ்சி வெருவு எய்த, நேமி வியூகமது ஆக வகுத்து, இடை நின்று போர் செய் நிலயத்தில், வீமன் வயம்புனை தேரினை விட்டு, ஒரு வெம் போர் வேழம் மேல் கொண்டான்.]

**விளக்கம்:-** (அடியார் ஜபித்தற்குரிய) பன்னிரண்டு திரு நாமங்களை உடைய லோக நாயகனுன கண்ணன் சொல்ல, சேனை நாயகனுன திட்டத்துய்மன், தனது சேனு சமுத்திரத்தைப் பகைவர் அஞ்சி கலங்கும்படி சக்ர வியூகமாக வகுத்து, நடுவிலே நின்று போர் செய்யும் இடத்தில், வீமன் தேரினின்று இறங்கி ஒரு யானையின்மேல், ஏறிக் கொண்டான், என்பதாம். மா மரு கொற்ற வரூதினி—பெருமை பொருந்திய வெற்றியுடைய (பாண்டவ) சேனை. வேலை - கடல்.

வீமன் ஏறிய யானை வருணனை

7. **அடிக்கைக னத்தும தம்பொழி யாழியி னளவும் புகரா**
**லழகெய்தி**
**மடிக்கினு மண்ணுறு கையது செந்நிற வாயதுதேயா**
**மதிதன்னை**
**ஒடித்திரு பக்கமும் வைத்தென மகரிகை யொன்றி**
**யொன்றி யொன்னார்மெய்**
**இடிக்கும ருப்பது புன்னையி னுண்மல ரென்னுஞ் சீர**
**திருக்கண்ணும்.**

[அடிக்கை கனத்து மதம் பொழி ஆழியின் அளவும், புகரால் அழகு எய்தி, மடிக்கினும் மண் உறுகையது, செம் நிறம் வாயது, தேயா மதி தன்னை ஒடித்து இரு பக்கமும் வைத்து என மகரிகை ஒன்றி ஒன்றி, ஒன்னார் மெய் இடிக்கும் மருப்பது; புன்னையின் நாள் மலர் என்னும் சீர திருக்கண்ணும்.]

**விளக்கம்:-** துதிக்கையின் அடிப்பாகம் பருத்தும், மதம் சொரிகின்ற நுனிக்கை வரையில் செம்புள்ளிகளினுல் அழகு பெற்று, (கையை) மடித்தாலும் நிலத்தில் பொருந்தும்படி தாழ்ந்து தொங்கும் துதிக்கையை உடையது; சிவந்த நிறமுடைய வாயை உடையது; தேயாத சந்திரனை ஒடித்து இரு புறத்திலும்

வைத்தாற் போன்றதும், மகரிகை என்னும் பூண் பொருந்தியதும் பகைவர் உடலைத் தாக்கி இடிப்பதுமான தந்தங்களை உடையது; இரு கண்களும், புன்னையின் புது மலர் என்று கூறப்படும் தன்மையது, (தொடரும்), என்பது பொருள்.

8. திலகமு மோடையு மிலகுறு நெற்றிய தால வட்டச்
செவியாலே
பலதிசை மாருத முய்ப்பது செம்புகர் பட்டின் றொழிலிற்
பயில்கிற்ப(து)
உலகினை மேல்கொளு மவனதெ னக்களி யூறிய தாலங்
குலமொத்துக்
குலவிய மத்தக மொத்தக ழுத்திலு யர்ந்த தம்பொற்
குவடென்ன.

[திலகமும் ஓடையும் இலகு உறு நெற்றியது, ஆல வட்டம் செவியாலே பல திசை மாருதம் உய்ப்பது, செம் புகர் பட்டின் தொழிலின் பயில்கிற்பது, உலகினைமேல் கொளுமவனது என களி ஊறியது, ஆல், அங்குலம் ஒத்து குலவிய மத்தகம் ஒத்த கழுத்தில் உயர்ந்தது, அம் பொன் குவடு என்ன.]

**விளக்கம்:-** திலகம் - நெற்றிப்பொட்டு. ஓடை - நெற்றிப் பட்டம். ஆலவட்டம் - பெரிய விசிறி. உலகினை மேல் கொள்ளு மவனது - மூன்று உலகினையும் ஆளுகின்ற தேவேந்திரனது யானையாகிய ஐராவதம். களி - மதக் களிப்பு. அங்குலம் ஒத்து - இலக்கணப்படி அளவு அமைந்து. இலக்கணம் பொருந்த அளவு அமைந்து விளங்கும் மத்தகம் (தலை) பொருத்த முடைய கழுத்தில் அழகிய மேருமலையின் சிகரம் போல் உயர்ந்திருக்கப் பெற்றது, என்பது ஈற்றடியின பொருள். ஆல் - அசை: திலகமும் ஓடையும் விளங்கும் நெற்றியது, காதுகளினால் காற்றைப் பல திசைகளிலும் வீசுவது, முகத்தில், செம்புள்ளிகள், பட்டினால் செய்த சித்திரம்போலப் பொருந்தப் பெற்றது, இந்திரனது ஐராவதம் போல் மதக் களிப்பைக் கொண்டது, இலக்கணத்தோடு பொருந்திய அளவு அமைந்து விளங்கும் தலையானது, அதன் கழுத்தில் பொன்சிகரம் போல் உயர்ந்திருக்கப் பெற்றது, வீமன் ஏறிய யானை, என்பதாம்.

9. உரத்தினின் முச்சுழி யுடையது தாள்வலி
கற்றா ணெப்பென் றுரைசெய்யும்
தரத்தது வெண்ணெய் நிறத்தந கத்தது தண்ணந்
துளவ னிலையொத்த

**திரத்தின தாமைகி டந்தவெ னும்புற வடிய**
**தங்கந் திண்ணென்றே**
**உரத்தது நல்லுத ரத்ததிள ங்கமு**
**கொத்த தம்ம வாலதி.**

[உரத்தினின் முச்சுழி உடையது, தாள் வலி கல்தூண் ஒப்பு என்று உரை செய்யும் தரத்தது, வெண்ணெய் நிறத்த நகத்தது. தண் அம் துளவன் நிலை ஒத்த திரத்தினது, ஆமை கிடந்த எனும் புற அடியது, அங்கம் திண்ணென்று (ஏ) உரத்தது, நல் உதரத்தது இளங்கமுகு ஒத்தது (அம்ம) வாலதி.]

**விளக்கம்:-** உரத்தினில் (மார்பில்) உத்தம லக்ஷணத்தோடு பொருந்திய மூன்று சுழிகளை (அந்தயானை) உடையது, கால்களின் வலிமை கல் தூண் ஒப்பு என்று சொல்லத்தக்க தன்மையது, வெண்ணெய் போன்ற வெள்ளிய நிறத்தையுடைய நகங்களை உடையது, குளிர்ந்த அழகிய துளசிமாலை அணிந்த திருமாலினது தோற்றத்தின் தன்மையது, (அதாவது) கருநிறத்தால் திருமாலை ஒத்த தன்மையது, 'ஆமை கிடந்தது போன்ற தோற்றமுடைய புற அடிகளை உடையது, அங்கம் (திண்ணென்று வலிமை உடையது, நல்ல அழகிய உதரத்தை (வயிற்றை) உடையது, வால், இளங் கமுகை ஒத்திருக்கப் பெற்றது (வாலதி-வால்)

உரம், என்பது, மார்பு, வலிமை, வயிறு, என்ற பொருள் களில் வந்துள்ளது. அம்ம; அசை, அல்லது வியப்பிடைச் சொல்.

**10. தூணும் விலங்குமு றிப்பது பாகுப ரிக்கோல்**
**யாவுந் தூரத்தே**
**காணினும் நின்றுகொ திப்பது தன்னிழல்**
**கண்டு சீறுங் கருத்தது**
**நீணட முதலிய தொழிலொரு நாலுநி ரந்தது**
**மேரு நிகரென்னச்**
**சேணுயர் போதர வெழுமுழ முடையது.**
**தெவ்வ ரஞ்சு மவ்வேழம்.**

[தூணும் விலங்கும் முறிப்பது, பாகு பரிக்கோல் யாவும் தூரத்தே காணினும் (அஞ்சாமல்) நின்று கொதிப்பது, தன் நிழல் கண்டு சீறும் கருத்தது, நீள் நடம் முதலிய தொழில் ஒரு நாலும் நிரந்தது, மேரு நிகர் என்ன சேண் உயர் போதர எழு முழம் உடையது, தெவ்வர் அஞ்சும் அ வேழம்]

**விளக்கம் :—** தூண் - கட்டுத்தறி. பாகு...பாகன், பரிக்கோல் அங்குசம், நீள் நடம் - சிறந்த நடை, நிரந்தது – நிரம்பியது.

சேண் உயர் போதர - வானை எட்டும்படி உயர்ந்த, அதாவது உயரம் மிக உடைய. இதுவும் யானை வருணனை. நடனம், துரிதகதி, மந்தகதி, ஓட்டம், என்ற நால்வகையினது, யானையின் நடை; அதைத்தான், நீள் நடம் முதலிய ஒரு நாலு, என்றார்.

வீமன் செய்த யானைப்போர்

11. ஆசில ருந்திற லாசுகன் மைந்தனு மாண்மைக்
கெண்ணு மடல்வீரன்
காசிந ரேசனு மேழுயர் வெம்மத மாரி சிந்துங் கரிமேலோர்
தூசியின் முந்தமு னைந்துமு னைந்திரு தோலும் தோலும்
போர் செய்ய
வாசவ ரோரிரு வோரிரு கார்மிசை மலைவ தென்ன
மலைவுற்றார்.

[ஆசு இல் அருந்திறல் ஆசுகன் மைந்தனும், ஆண்மைக்கு எண்ணும் அடல் வீரன் காசி நரேசனும் ஏழ் உயர் வெம் மதம் மாரி சிந்தும் கரிமேலோர், தூசியின் முந்த முனைந்து முனைந்து இரு தோலும் தோலும் போர் செய்ய, வாசவர் ஓர் இருவோர் இருகார் மிசை மலைவது என்ன மலைவு உற்றார்]

**விளக்கம் :** ஆசு-குற்றம். ஆசுகன்-வாயு. ஆண்மைக்கு எண்ணும்-ஆண்மைக்கு ஒருவன் என்று மதிக்கப்படும். காசி நரேசன்-காசிராசன். ஏழ் உயர் வெம் மதம் மாரி சிந்தும் கரி மேலோர்-ஏழு முழ உயரமுடையதாய் வெவ்விய மதநீரை மழை போல் சொரியும் யானைமேல் ஏறியவர்களாய், முன்னணிப் படையில் முந்திச் சென்று முனைப்போடு இரு யானைகளும் போர் செய்ய,—என்பது மூன்றாவது அடியின் பொருள்; (தோல்-யானை). இந்திரர் இருவர் ஓர் இரு மேகத்தின் மேல் ஏறிக் கொண்டு போர் செய்வது போல் (வீமனும் காசிராசனும்) போர் செய்யத் தொடங்கினார்,—என்பது ஈற்றடியின் பொருள். வாசவர் இருவர் தம்மில் மலைவது என்ன, என்றது இல்பொருள் உவமை.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

12. அங்குசம் வார்த்தை வன்ரு ளடைவினிற் பயிற்றி யேனை
வெங்கதி நடையோ டோட்டம் விதமுற விரைவிற் காட்டி
அங்கசா ரியினு னன்னூ லறிஞர்கொண் டாட வூர்ந்து
செங்கையிற் சிலையுங் கோலித் தீவிழித் துடன்று
சேர்ந்தார்.

[அங்குசம் வார்த்தை வல்தாள் அடைவினில் பயிற்றி, ஏனை வெம் கதி நடையோடு ஓட்டம் விதம்உற விரைவின் காட்டி, அங்க சாரியினால், நல் நூல் அறிஞர் கொண்டாட ஊர்ந்து, செம் கையில் சிலையும் கோலி, தீவிழித்து, உடன்று சேர்ந்தார்.]

**விளக்கம் :** அங்குசத்தாலும், வாய்ச் சொல்லாலும், காலை வைத்து உதையும் முறையாலும், முறைப்படி பழக்கி, பின்னும் துரித கதியும், மந்தகதியோடு ஓட்டமும் பலவகைப் பட விரைவின் நடந்து காட்டி, உடலினது வலம் இடமாகச் சாரிதிரியும் தன்மை கண்டு நல்ல யானை சாத்திரம் அறிந்தோர் பாராட்டும்படி (யானைகளை இரு வீரரும்) செலுத்திக் கொண்டு, கையில் வில்லை வளைத்து, தீப்பொறி தோன்ற விழித்துக் கோபாவேசத்தோடு (இருவரும்) நெருங்கிப் போர் செய்தார்கள்,—என்பது பொருள்.

**13. கோடுகைம் முதலா வொன்ப துறுப்பினுங் கோறல் வல்ல**
**நீடுயர் மாவு மாவு நெருப்பெழ முனைந்து சீற**
**ஆடவர் தாமு மெண்ணி லம்புமா மழைக ளேவிச்**
**சேடனு மமரர் கோவும் வெருக்கொளச் செருச்செய் தாரே.**

[கோடு கை முதலா ஒன்பது உறுப்பினும் கோறல் வல்ல நீடு உயர் மாவும் மாவும் நெருப்பு எழ முனைந்து சீற, ஆடவர் தாமும் எண் இல் அம்பு மாமழைகள் ஏவி, சேடனும் அமரர் கோவும் வெரு கொள செரு செய்தார், ஏ.]

**விளக்கம் :** கோடு - தந்தம். கோறல் - கொல்லல். மா - யானை. ஆடவர் - வீமனும் காசிராசனும். தந்தம் கை முதலிய ஒன்பது உறுப்புக்களாலும் (பகைவரை) அழிக்க வல்ல மிக உயர்ந்த யானைகள் இரண்டும் தீப்பொறி பறக்கும்படி உக்கிரமாகச் சீறி நிற்க, அவற்றின் மேலுள்ள வீமனும் காசி மன்னனும், எண்ணிக்கையற்ற அம்புகளை மழைபோல் பொழிந்து, ஆதி சேஷனும், இந்திரனும் அஞ்சும்படி போர் செய்தார்கள், என்பதாம்.

நான்கு கால்கள், துதிக்கை, இரண்டு தந்தம், மத்தகம், வால் என்பன ஒன்பது உறுப்புக்கள்.

**14. ஆசுகன் குமரன் வல்வி லாசுகம் பொருமு லஞ்சிக்**
**காசிபன் கேம தூர்த்தி காயயி லொன்று வாங்கி**
**வீசியக் காலை மார்பி னெறிதலும் வீமனே வொன்(று)**
**ஏசிலவ் வேலுந் தெவ்வன் யானையுந் துணிய வெய்தான்.**

[ஆசுகன் குமரன் வல் வில் ஆசுகம் பொருமல் அஞ்சி, காசிபன் கேமதூர்த்தி காய் அயில் ஒன்று வாங்கி வீசி, அ காளை மார்பின் எறிதலும், வீமன் ஏ ஒன்று ஏசு இல் அ வேலும் தெவ்வன் யானையும் துணிய எய்தான்.]

**விளக்கம்:** ஆசுகன் குமரன்-வீமன். ஆசுகம்-அம்பு. காசிபன் கேமதூர்த்தி-கேமதூர்த்தி என்ற பெயருடைய காசிமன்னன். அயில்-வேல். ஏ- அம்பு. வீமன் செலுத்திய அம்புகளைப் பொருமல், காசிமன்னன் அஞ்சி, கொல்லும் தன்மையுள்ள வேல் ஒன்றை எடுத்து, காளையின் (வீமனின்) மார்பில் வீசி எறிதலும், குற்றமற்ற அந்த வேலையும், பகைவனுன அம்மன்னனது யானையும் துண்டு படும்படி ஒரு கணையைச் செலுத்தினுன், என்பதாம். க்ஷேம தூர்த்தி என்ற பெயர் கேமதூர்த்தி என்று திரிந்து நின்றது.

**15.** **கேமனக் கரியி னின்றுங் கிரியினின் றிழியு மாளி**
**யாமெனத் தரணி யெய்தி யடல்வயிர்த் தண்டொன் றேந்தி**
**வீமனன் றூர்ந்த வெங்கை வெற்பினைப் புடைத்து வீழ்த்தான்**
**பூமரு தாரினுனும் பூவின் மேற் சுரும்பிற் பாய்ந்தான்.**

[கேமன் அ கரியினின்றும் கிரியினின்று இழியும் ஆளி ஆம் என தரணி எய்தி, அடல் வயிர் தண்டு ஒன்று ஏந்தி, வீமன் ஊர்ந்த வெம் கை வெற்பினை புடைத்து வீழ்த்தான்; பூமரு தாரினுனும், பூவின்மேல் சுரும்பின் பாய்ந்தான்.]

**விளக்கம்:-** கேமனும் (கேமதூர்த்தியும்) (வீமனுல் துணிக்கப் பெற்ற) அந்த யானையினின்று, குன்றிலிருந்து கீழே இறங்கும் சிங்கம் போல் தரையை அடைந்து, மிகுந்த வலிமையுடைய கதை ஒன்றைக் கையில் கொண்டு வீமன் ஏறியிருந்த வெவ்விய துதிக்கையை உடைய மலை போன்ற யானையை, கதையால் அடித்து வீழ்த்தினுன்; பூக்களால் தொடுக்கப் பெற்ற போர் மாலை யணிந்த வீமனும், பூவின்மேல் வண்டுகள் பாய்வதுபோல் தரை யில் பாய்ந்து இறங்கினுன், என்பதாம்.

வீமன் கேமனைக் கதையால் கொல்லுதல்

**16.** **கரியமர்க் கொருவ ரான விருவருங் காலி னின்று**
**பரியவக் கதைப் போர் வல்ல பார்த்திவர் பலருங் காணக்**
**கிரியொடு கிரிசெய் பூச லிதுவெனக் கிளக்கு மாறு**
**புரிவிலார் பொருத போர்மற் றியாவரே புகல வல்லார்.**

[கரி அமர்க்கு ஒருவர் ஆன இருவரும் காலின் நின்று, பரிய அ கதை போர் வல்ல பார்த்திவர் பலரும் காண, கிரியொடு கிரி செய் பூசல் இது என கிளக்கும் ஆறு புரிவு இலார் பொருத போர் (மற்று) யாவரே புகல வல்லார்?]

**விளக்கம்:-** யானைப் போரில் நேரற்றவரான (வீமனும், கேமனும் ஆகிய) இருவரும் காலின் நின்று கொண்டு (அதாவது வாகனம் இல்லாமல்), பருத்த கதை கொண்டு செய்கின்ற அந்தப் போரில் வல்லவரான அரசர்கள் காணும்படி, ''மலையொடு மலை செய்கின்ற போர் இது'', என்று (கண்டோர்) சொல்லுமாறு, போரன்றி வேறு எந்த விருப்பமும் இல்லாமல் செய்த போரை, இத்தன்மையது, என்று யாரே சொல்லவல்லவர் ஆவர்?—என்பதாம். புரிவு-விருப்பம். மற்று: அசை.

**17. தண்டொடு தண்டமேந்திச் சாரிகை பலவுங் காட்டி**
**கொண்டலின் முழக்கீ தென்னக் குரைகட லொலியீதென்னக்**
**கண்டவர்க் கன்றிக் கேட்டார்க் குரைப்பருங் கணக்கிற்**
**ருக்கிக்**
**கொண்டுவன் காய மொன்றுற் கேமனை வீமன் கொன்றன்.**

[தண்டொடு தண்டம் ஏந்தி, சாரிகை பலவும் காட்டி, கொண்டலின் முழக்கு ஈது என்ன, குரை கடல் ஒலி ஈது என்ன, கண்டவர்க்கு அன்றி, கேட்டார்க்கு உரைப்பு அருங் கணக்கின் தாக்கி கொண்டு, வல் காயம் ஒன்றால் கேமனை வீமன் கொன்றன்.]

**விளக்கம்:-** இருவரும் கதைகளை ஏந்திக் கொண்டு, பலவித கதிவிகற்பங்களைச் செய்து காட்டி, மேகத்தின் முழக்கு இது என்றும், கடலின் ஒலியென்றும் சொல்லும்படி வீர முழக்கம் செய்து கொண்டு,) கண்டவர்க்கு அல்லாமல், கேட்டவர்க்கு இத்தன்மையது என்று சொல்ல முடியாத தன்மையில் ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டிருந்து, முடிவில், வீமன், (கதையின்) வலிய வீச்சு ஒன்றால் கேமதூர்த்தனைக் கொன்றன்,—என்பது பொருள். காய்தல்-வெட்டுதல், வீசுதல், தாக்குதல்.

நிலை குலைந்த சேனையைக் கர்ணன் ஒழுங்கு படுத்தல்

**18. எறிந்ததண் டமரிற் கேம னிறந்தன னென்ற போழ்தின்**
**முறிந்தது வேலை ஞால முழுதுடை நிருபன் சேனை**
**அறிந்தெதி ரூன்றி வென்றி யாண்டகைக் கன்னன் மீளப்**
**பிறிந்தபல் லணியு மொன்றப் பேரணி யாக்கி நின்றன்.**

[எறிந்த தண்டு அமரில் கேமன் இறந்தனன் என்ற போழ்தில், முறிந்தது வேலை ஞாலம் முழுதுடைய நிருபன் சேனை; அறிந்து எதிர் ஊன்றி வென்றி ஆண்டகைக் கன்னன் மீள, பிறிந்த பல் அணியும் ஒன்ற பேர் அணி ஆக்கி நின்றான்.]

**விளக்கம்:**-எறிந்த தண்டு அமர்-தாக்கிச் செய்யும் கதைப் போர். வேலை ஞாலம் முழுது உடை நிருபன்-துரியோதனன். கேனன் இறந்ததும் துரியோதனனது சேனை நிலை கெட, அதைக் கன்னன், மறுபடியும் ஒன்றுபடுத்திப் பெரிய அணி வகுப்பாகச் செய்து, உறுதியோடு நின்றான், என்பதாம்.

**19. பேரணி கலஞ்சேர் மார்பன் பேரணி யாக்கி நின்ற**
**போரணி மிக்க சேனைப் பொலிவுகண் டொலிகொள் வண்டார்**
**தாரணி யலங்கன் மௌலித் தருமன்மா மதலை சேனை**
**ஓரணி யாகக் கூடி யுடன்றெதிர் நடந்ததன்றே.**

[பேர் அணிகலம் சேர் மார்பன், பேர் அணி ஆக்கி நின்ற, போர் அணி மிக்க சேனை பொலிவு கண்டு, ஒலிகொள் வண்டு ஆர் தார் அணி அலங்கல் மௌலி தருமன் மாமதலை சேனை, ஓர் அணி ஆக கூடி உடன்று எதிர் நடந்தது, அன்றே.]

**விளக்கம்:**- பேர் அணிகலம் சேர்மார்பன்-சிறந்த ஆபரணங்கள் சேர்ந்த மார்பையுடைய கர்ணன். போர் அணிமிக்க சேனை-போரை பூஷணமாகக் கொண்ட கௌரவ சேனை. பொலிவு—போரின்பால் கொண்ட உற்சாகப் பொலிவு. கர்ணனால், பேரணியாக அமைக்கப் பெற்று நின்ற சேனையின் பொலிவு கண்டு, தருமனது சேனை ஒரு அணியாகத் திரண்டு கோபத்தோடு எதிர்த்துச் சென்றது,—என்பதாம். அன்றே:அசை. விழுப்புண்கள் உடைமை வீரர்க்குப் பூஷணமாதலின், கர்ணன், "பேர் அணிகலம் மார்பன்" எனப்பட்டான், என்றுங் கொள்ளலாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

சதுரங்கசேனை வருணனை

**20. மகரி கையுமிரு பணைகளும் விரிநுதன்**
**மருவு கலனெடு மினலென வொளிவிட**
**இகலி யளிமுரல் விருகவு ளினுமுட**
**னிழியு மதமழை குமிழிக ளெனவெழ**
**அகல முடையன முதுகிரு புடையினு**
**மணியு மணிகண கணவென வதிர்தரு**
**ககன முகிலென வுயர்வடி வுடையன**
**கதியின் வித்தியின் முடுகின கதிகளே.**

[மகரிகையும் இரு பணைகளும் விரி நுதல் மருவு கலனொடு மினல் என ஒளி விட, இகலி அளிமுரல் இரு கவுளினும் உடன் இழியும் மதம் மழை குமிழிகள் எழ எழ, அகலம் உடையன முதுகு இரு புடையினும் அணியும் மணி கண கண என அதிர் தரு ககனமுகில் என, உயர் வடிவு உடையன, கதியின் விததியின் முடுகின கரிகளே.]

**விளக்கம்:-** இது யானை வருணனை. மகரிகை என்னும் ஆபரணங்களும், அவற்றை அணிந்த இரு தந்தங்களும், விரிந்த நெற்றியில் அணிந்த நெற்றிப்பட்டம் முதலிய ஆபரணங்களோடு, மின்னல் போல் ஒளி விடவும், வண்டுகள் நெருங்கி மொய்த்து ரீங்கரிப்பதற்கு இடமான இரு கன்னங்களினின்றும் ஒருங்கே பெருகி வழியும் மதநீர் வெள்ளம் குமிழிகள் இடவும், அகலமான முதுகின் இரு புறத்திலும் கட்டப்பட்டுள்ள மணிகள் கண கண என்று ஒலிக்கவும், இடி முழங்கும் வானத்தே செல்லுகின்ற மேகம் போல், உயர்ந்த உருவத்தை உடைய யானைகள், பலவிதமான தடை விகற்பங்களோடு கூட்டமாக விரைந்து சென்றன— என்பது பொருள். விததி (வடசொல்) கூட்டம், வரிசை. யானை மேகத்துக்கும், அணிகள் மின்னலுக்கும், மதம் நீர் மழைக்கும், மணியொலி இடிக்கும் உவமை.

**21.** **நிறனின் மிகுவன நவமணி களினியல்**
**நெடிய கொடுமுடி நிகர்வன மகுடமும்**
**அறையு மருவியை யுவமைகொள் சவரமும்**
**அடவி நிகரென வசைவுறு துவசமும்**
**முறையி னறைகமழ் தொடைபடு மலர்களும்**
**முடுகு மிடனுடை முழைகளு முடையன**
**இறகர் கொடுபல மலைதிரி வனவென**
**இகலி விசைபெற நடவின விரதமே.**

[நிறனில் மிகுவன, நவமணிகளின் இயல் நெடிய கொடுமுடி நிகர்வன மகுடமும், அறையும் அருவியை உவமை கொள் சவரமும், அடவி நிகர் என அசைவுறு துவசமும், முறையின் நறை கமழ் தொடைபடு மலர்களும், முடுகும் இடன் உடை முழை களும் உடையன, இறகர் கொடு பல மலை திரிவன என இகலி விசை பெற நடவின இரதம், ஏ.]

**விளக்கம்:-** இது தேர் வருணனை. நிறம்—ஒளி. நவ—ஒன்பது. தமக்குரிய ஒளியினால் சிறந்தனவாகிய நவரத்தினங்களைக் கொண்டு செய்யப்பட்ட நெடிய மலைச் சிகரத்தை ஒத்த முடியை யும், ஒலிக்கும் அருவியை உவமை கொண்ட சாமரையையும்,

காடு நிகர் என்று சொல்லும்படி அசைந்து ஆடும் கொடியையும். முறையே மணம் வீசும் மாலையாகத் தொடுக்கப்பெற்ற மலர்களை யும், நெருங்கிய இடம் உடைய குகை போன்ற மறைவிடங்களை யும் உடையனவாகிய தேர்கள், சிறகுகள் கொண்டு சஞ்சரிக்கும் பல மலைகள் போல் நெருங்கி வேகமாய் சென்றன,—என்பது பொருள். சவரம்-சாமரை. நறை-வாசனை. முடுகு-நெருக்கம். முடுகு இடம்-நெருக்கமுடைய இடம். இகலி-நெருங்கி. நடவின-விரைந்து சென்றன.

தேரின் மேலிடம் மலைச் சிகரத்தையும், சாமரை மலை அருவி யையும், கொடிகள் காட்டையும், அலங்காரமாய் அமைந்த மாலை கள் மலையிடத்தே உள்ள மலர்களையும், தேரில் உள்ள மறைவான உள்ளிடங்கள் குகைகளையும், ஒத்திருத்தலால், விரைந்து செல்லும் தேர்கள், சிறகுடைய மலைகளைப் போன்றன, என்க.

**22.** **அடலில் வலிமையில் விரைவினி லுயர்வன**
**அகில புவனமு நொடியினில் வருவன**
**பொடியின் மிசைவெளி துகடர விடுவன**
**புணரி யிடையலை யலையொடு பொருவன**
**விடவி படுபடை மடிதர நிமிர்வன**
**விரியு நறுமலர் கமழ்முக வுயிரன**
**படியி லொருபடி நிலையறு கதியன**
**பவன மெனநனி பரவின பரிகளே.**

[அடலில் வலிமையில் விரைவினில் உயர்வன, அகில புவன மும் நொடியினில் வருவன, பொடியின் மிசைவெளி துகள்தர விடுவன, புணரியிடை அலைஅலையொடு பொருவன, விடவி படு படை மடிதர நிமிர்வன, விரியும் நறுமலர் கமழ் முகம் உயிரன, படியில் ஒரு படி நிலை அறு கதியன, பவனம் என நனி பரவின பரிகளே.]

**விளக்கம்:-** இது குதிரை வருணனை அடல்-பொருதல். பொடி-புழுதி. அலை அலையொடு பொருவன—அலைகின்ற அலைக் கூட்டங்களோடு ஒத்து இருப்பன, அல்லது பொருந்துவன. விடவி - மரம். நிமிர்வன - கம்பீரமாகத் தலை நிமிர்ந்து செல்வன. விரியும் நறுமலர் கமழ் முகம் உயிரன—விரிந்த மணம் வீசும் மலர் போல் மணம் வீசும் முகத்திலிருந்து வெளிப்படும் மூச்சை (உயிர்ப்பை) உடையன. படி-பூமி. பவனம்-காற்று. அடல் வலி விரைவு ஆகியவற்றால் சிறந்தவையும், உலகம் முழுதையும் ஒரு நொடியில் வலம் வரத் தக்கனவும், புழுதியினால் மேலே உள்ள வான வெளி எல்லாம் நன்றாக மூடப்படும்படி புழுதி கிளப்பி

விடுவனவும், அலை வரிசையோடு ஒத்தனவும், மரம்போல் அடர்ந்த சேனை அழியும்படி நிமிர்வனவும், மலரின் மணம் கமழும் மூச்சுக் காற்றினை உடையனவும், ஒருபடியான நிலையில்லாத கதி விசேஷத்தை உடையனவும், ஆன குதிரைகள் காற்றைப்போல் விரைந்து சென்றன—என்பதாம்.

**23. அரிய விலையன வணிகல மடையவும்**
**அறலின் முழுகின வருநவ மணியன**
**வரிவின் முதலிய பலபடை களுமுடல்**
**வலிய செலவுறு பவனச குலமென**
**நெரிய வருவன வகைபடு மிடலணி**
**நிமிர வெழுவன நிரைகெழு திரையென**
**விரிவி னளவறு சலநிதி நிகரென**
**வெகுளி மிகுகதி கடுகினர் விருதரே:**

[அரிய விலையன அணிகலம் அடையவும் அறலின் முழுகின (ஆகிய) அரு நவமணியன, வரிவில் முதலிய பல படைகளும் உடல் வலிய செலவுஉறு பவனசகுலம் என, நெரிய வருவன வகை படு மிடல் அணி நிமிர எழுவன, நிரை கெழு திரை என, விரிவின் அளவு அறு சலநிதி நிகர்என, வெகுளி மிகு கதி கடுகினர் விருதர், ஏ.]

**விளக்கம் :-** இது காலாள் வருணனை. அரிய விலையினவான ஆபரணங்கள் எல்லாம் நீரினிடத்தே பொருந்திய அரிய நவரத்தினங்களைப் போன்றவும், வரிவில் முதலிய ஆயுதங்களும் உடல் வலியினால் செல்லுதலை உடைய நீர்ப்பாம்பின் கூட்டம் போன்றனவும், - நெருங்கி வருவனவாகிய பலவகைப்பட்ட வலிமையுடைய பகுப்பின் வரிசைகள், நிமிர்ந்து எழுவனவாகிய வரிசை பொருந்திய அலைகள் போன்றனவும், - ஆன விருதர் (காலாள் வீரர்கள்) விரிவினில் அளவு இல்லாத சலநிதி (கடல்) நிகர் என்று சொல்லும் படி, கோபத்தால் வரும் நடைவேகத்துடனே, விரைந்து (களம்) சென்றனர் - என்பது பொருள். பவனசம் - (பவநசம்) காற்றை உணவாக உடைய பாம்பு.

**24. முரசு கரடிகை கிணைதுடி பெருமரம்**
**முருகு படுபறை முதலிய கருவிகள்**
**அரச வரிவளை கொடுவயி ரெழுகுழ**
**லரவ விருதுகண் முதலிய கருவிகள்**
**உரைசெய் கருவிகண் முழுவது மெழுவகை**
**யுலக முடிவுற வுகவிறு தியிலெழு**
**கரைசெய் கடலென வெறிவளி யெனமிசை**
**கஞலி யுருமெறி கனமென வதிரவே.**

[முரசு, கரடிகை, கிணை, துடி, பெருமரம், முருடு, படுபறை, முதலிய கருவிகள், - அரச(ர்) வரிவளை, கொடுவயிர், எழுகுழல், அரவம் விருதுகள் முதலிய கருவிகள், - உரைசெய் கருவிகள் முழுவதும், - எழுவகை உலகம் முடிவுஉற, உக இறுதியில் எழுகரை செய் கடல்என, எறிவளி என, மிசை கஞலி உரும் எறி கனம் என அதிரவே, - தொடரும்.]

**விளக்கம் :-** இது வாத்தியங்களின் ஒலி வருணனை. முரசு முதல் படுபறை ஈருகவுள்ளவை அடிக்கும் வாத்திய பேதங்கள். அரசர் வரிவளை - அரசர்க்குரிய சங்கம். கொடுவயிர் - வளைந்த கொம்பு, (ஊது கருவி), குழல் - புல்லாங்குழல். அரவ விருதுகள் - ஒலிக்கும் அரச சின்னங்கள், (அரவம் - ஒலி). உரைசெய் கருவிகள் - மற்றும் சொல்லப்படுகின்ற வாத்திய விசேஷங்கள். அடிக்கும் வாத்தியங்கள், ஊது கருவிகள் ஆகிய எல்லாம், ஏழு வகைப்பட்ட உலகங்களும் அழியும்படி யுக இறுதியில் பொங்கி வரும் கரை செய்தலை (ஒலித்தலை)யுடைய சமுத்திரம் போலவும், வீசும் பெருங்காற்றுப் போலவும், விண்ணிடம் பரந்து இடிக்கும் மேகம் போலவும், பேரொலி செய்ய, - (தொடரும்,) என்பதாம். வளி-காற்று. மிசை - வான்மிசை. கஞலி - பரவி. கனம் - மேகம்.

## இருதிறத்தாரும் பொரல்

**25.** **எறிய முரசம் மெரிவிழி யுரகமும்**
**எழுது கொடியுடை யவரிரு படையினும்**
**வெறிகொண் மதமலை களுமத மலைகளும்**
**விசய மிகுவன விரதமு மிரதமும்**
**நெறிகொ ணவகதி யிவுளியு மிவுளியும்**
**நிருதர் குலநிகர் விருதரும் விருதரும்**
**நறிய தொடைமுடி நிருபரு நிருபரும்**
**நடலை யமரிடை யடலுட னடவவே.**

[எறியும் முரசமும், எரிவிழி உரகமும் எழுது கொடி உடையவர் இரு படையினும், - வெறிகொள் மதமலைகளும் மதமலைகளும், விசயம் மிகுவன இரதமும் இரதமும், நெறிகொள் நவகதி இவுளியும் இவுளியும், நிருதர் குலம் நிகர் விருதரும் விருதரும், நறிய தொடைமுடி நிருபரும் நிருபரும், நடலை அமரிடை அடலுடன் நடவ, - தொடரும்.]

**விளக்கம் :-** அடிக்கப்படும் முரசும், நெருப்பை ஒத்த கண்களையுடைய பாம்பும் எழுதப்பெற்ற கொடிகளை உடைய தருமன், துரியோதனன், என்பாரது சேனை இரண்டிலும், என்பது முதலடி

யின் பொருள். மதமலை - யானை. நெறிகொள் நவகதி இவுளி - முறைப்பாடு உடைய ஒன்பது வகை நடைகளை உடைய குதிரை. நிருதர் குலம் நிகர் விருதர் - அரக்கர் கூட்டத்தை யொத்த சிறந்த வீரர்கள். நறிய தொடைமுடி நிருபர் - வாசனையுடைய மாலை தரித்த கிரீடாதிபதிகளான அரசர். நடலை அமர் - நடுக்கத்தைத் தரவல்ல போர். நடவ - செல்ல. இருதிறத்தாரது நால்வகைச் சேனையும் ஒன்றையொன்று எதிர்த்தன, என்பதாம். செய்யுள் சலபமானதே.

கன்னனும் நகுலனும் பொரல்

**26. இரவி மதலையு மிரவிதன் மதலைய**
**ரிருவர் மதலையு மிருவரு மெதிரெதிர்**
**புரவி மிசைவிசை படவல மிடநிகழ்**
**புரவி னுடனமர் பொருபல கதிகளின்**
**அரவி னதிபதி முடிகெழு சுடிகையி**
**னருண மணிவெயி லவனியி லெழநனி**
**பரவி யிருள்வர நிரைநிரை யெழுதுகள்**
**பகல்செ யொளிவெயில் பருகின செருகியே.**

[இரவி மதலையும், இரவிதன் மதலையர் இருவர் மதலையும், இருவரும் எதிர் எதிர் புரவிமிசை விசைபட வலம் இடம் நிகழ் புரவினுடன், அமர் பொரு பல கதிகளின், அரவின் அதிபதி முடிகெழு சுடிகையின் அருணம் மணி வெயில் அவனியில் எழ நனிபரவி, இருள்வர நிரைநிரை எழுதுகள் பகல்செய் ஒளி வெயில் பருகின செருகியே.]

**விளக்கம்:-** இரவி மதலை - கர்ணன். இரவி மதலை இருவர் மதலை - சூரிய புத்திரர்களான அசுவினி தேவர் இருவரின் புதல்வனான நகுலன். வலம் இடம் நிகழ் புரிவு - வலமும் இடமுமாக நிகழும் சாரி திரிதல். அமர் பொருபல கதிகளின்-போர்செய்கின்ற பல வித கதிவிகற்பங்களால் (புழுதி மிகுதியாக மேல்எழலின்) பாம்புகளின் அரசனான ஆதி சேஷனது தலையில் பொருந்திய உச்சிக் கொண்டையின் சிவந்த இரத்தினங்களால், பூமியில் ஒளி எழுந்து விளங்க, - கதிகளினால் இருள் வரும்படி வரிசை வரிசையாக எழுகின்ற புழுதிகள், பகல் செய்யும் ஒளியை உடைய சூரியனது கிரணங்களை மறைத்து மூடின,—என்பதாம். சூரிய ஒளியைப் புழுதி மறைத்தாலும், நாகமணிகள் ஒளிதந்தன, என்றபடி. இது உயர்வு நவிற்சி அணி.

27. அசைவி ரொடையடி கசைகுசை யுரநினை
வறியு முணர்வின வளமையு முடையன
வசையில் சுழியன பழுதறு வடிவின
வருண மொழிகுரன் மனவலி மிகுவன
விசைகொள் பலகதி யினும்விரை வுறுவன
விபுதர் குலபதி விடுபரி நிகர்வன
இசைக ளொருபது திசைகளு மெழுதிய
இறைவ ரிருவரு மிசைகொளு மிவுளியே.

[அசைவு இல் தொடை, அடி, கசை, குசை உரம், நினைவு அறியும் உணர்வின, வளமையும் உடையன, வசை இல் சுழியன, பழுது அறு வடிவின, வருணம் மொழி குரல் மனம்வலி மிகுவன, விசை கொள் பல கதியினும் விரைவு உறுவன, விபுதர் குலபதி விடு பரி நிகர்வன, இசைகள் ஒரு பது திசைகளும் எழுதிய இறைவர் இருவரும் மிசை கொள்ளும் இவுளியே.]

**விளக்கம்:-** கர்ணனும் நகுலனும் ஏறியுள்ள குதிரைகளின் வருணனை இது. அசைதல் இல்லாத, அதாவது சோர்தல் இல்லாத குதிரைகள், (தம் மேலுள்ளாரது) தொடை, அடி களாலும், சவுக்கு அடிகளாலும், குசையின் (கடிவாளத்தின்) கையாளும் வலியாலும், அவர்களது மனத்தைத் தெரிந்து கொள்ளும் அறிவை உடையன, வளர்ச்சியின் செழிப்பை உடையன, குற்றமில்லாத சுழிகளை உடையன, குற்றமில்லாத தோற்றத்தை உடையன, வருணமும் (நிறமும்) கனைக்கும் ஒலியும், மன வலியும், மிகச் சிறந்துள்ளன, வேகம் கொண்ட பலவகை கதிகளிலும் விரைவு பொருந்தியன, தேவர் குலத்தின் தலைவனான இந்திரன் ஊர்கின்ற உச்சை சிரவம் என்ற குதிரையை ஒத்திருப்பன, என்பது பொருள்.

28. முடியு மொருகவி கையுமிரு கவரியும்
முதிரு மெரிவிட முரணர வெழுதிய
கொடியு முடையவ னெலுவலு முரசுயர்
கொடியி னெழுதிய குருபதி யிளவலும்
கடிய வரிசிலை நிலைபெற வளையவும்
நிமிர விடுகணை நிரைநிரை முடுகவும்
இடியி லெழுமடி யதிர்குரல் விளையவும்
இவுளி யமர்கடி திகலொடு புரியவே.

[முடியும், ஒரு கவிகையும், இரு கவரியும் முதிரும் எரி விடம் முரண் அரவு எழுதிய கொடியும் உடையவன் எலுவலும், முரசு உயர் கொடியில் எழுதிய குருபதி இளவலும், நெடிய வரிசிலை நிலை

பெற வளையவும், நிமிர விடுகணை நிரை நிரை முடுகவும், இடியில் எழு மடி அதிர் குரல் விளையவும், இவுளி அமர் கடிது இகலொடு புரியவே, - இதுவும் இதைத் தொடரும் நான்கு செய்யுள்களும் குளகம்.]

**விளக்கம்:-** முடி - கிரீடம். முதிரும் எரிவிடம் முரண் அரவு - கடுமையின் முதிர்ந்த நெருப்பை ஒத்துக் கோபிக்கின்ற பாம்பு. எலுவல் - தோழன். குருபதி இளவல் - நகுலன். நிலை பெற - நிலையாக. நிமிர விடுகணை - உக்கிரத்தோடு விடுகின்ற கணைகள். இடியில் எழு மடி அதிர் குரல் விளைய - இடியைக் காட்டிலும் ஏழு மடங்கு அதிகமான ஒலி உண்டாக. இவுளிஅமர்- குதிரை மேலிருந்து செய்யும் போர். இகல் - வலிமை. துரியோதனன் நண்பனான கர்ணனும், தருமன் தம்பியான நகுலனும் இவுளிப் போர் மிகக் கடுமையாகச் செய்தனர்,—என்பதாம்.

எலுவல், திசைச் சொல்; அதன் பெண்பால் இகுளை. முடி, கவிகை, சாமரை, கொடி முதலியவை அரசர்க்குரிய அங்கங்கள்.

**29. நகுலன் விடுகணை விதரண குணபதி**
**நடவு குரகத நடைபயில் குரமற**
**இகலும் வரிசிலை நடுவற வடமற**
**இடுக வசமற வெழுதரு மிருபுய**
**சிகரி புதையவு முரமுழு கவுநுதல்**
**திலக மெனவொளி திகழவு மலைதலின்**
**மகிழ்வு சினமெனு மிருகுண முடன்மனம்**
**மறுக நிலனிடை வலனுற விழியவே.**

[நகுலன் விடுகணை விதரண குண பதி, நடவு குரகதம் நடை பயில் குரம் அற, இகலும் வரிசிலை நடு அற, வடம் அற, இடு கவசம் அற, எழுதரும் இரு புய சிகிரி புதையவும், உரம் முழுகவும், நுதல் திலகம் என ஒளி திகழவும், மலைதலின், மகிழ்வு சினம் எனும் இரு குணமுடன் மனம் மறுக நிலனிடை வலன்உற இழிய, - தொடரும்.]

**விளக்கம்:-** விதரண குண பதி - ஈகைக் குணத்தின் தலைவனான கர்ணன். குரம் - குளம்பு, கால். வடம் - மார்பில் அணிந்த மாலை. எழுதரு புயகிரி - இரும்புத் தூணைப் போன்ற புஜங்களாகிய மலைகள், (எழு - இருப்புத் தூண்). உரம் - மார்பு. கர்ணனது குதிரை, வில், கவசம் முதலியன அழியும்படி நகுலன் போர் செய்தலின், கர்ணன் மகிழ்ச்சி கோபம் என்ற இரண்டு குணங்களோடும், மனக் கலக்கம் கொண்டவனாய், ஆனால் வலிமை குறையாமல் பூமியில் இறங்கினான்,—என்பதாம்,

தம்பியாகிய நகுலனது போர்த்திறன் கண்டு மகிழ்ந்தும், போர் வெல்ல வேண்டும் என்ற ஊக்கத்தின் சினந்தும், குதிரையிலிருந்து கீழே இறங்கினான், என்க.

30. இழியு மளவையின் வினையுடை வலவனோ
ரிரதம் விரைவொடு கொடுவர விரிகதிர்
பொழியு மிளவெயி லிரவிமு னுதவிய
புதல்வன் விறலொடு புகுதலு முயர்பரி
ஒழிய நகுலனு மொருதனி ரதமிசை
யுபரி சரரென வுரனொடு புகுதர
விழியின் மணிநிகர் வலவனும் வலவனும்
விசய குரகதம் விசையொடு கடவவே.

[இழியும் அளவையின் வினை உடை வலவன் ஓர் இரதம் விரைவொடு கொடுவர, விரிகதிர் பொழியும் இளவெயில் இரவி முன் உதவிய புதல்வன் விறலொடு புகுதலும், உயர் பரி ஒழிய நகுலனும் ஒரு தன் இரதம் மிசை உபரிசரர் என உரனொடு புகுதர, விழியின் மணி நிகர் வலவனும் வலவனும் விசய குரகதம் விசையொடு கடவ, ஏ.]

**விளக்கம்:-** கர்ணன் தன் சாரதி கொணர்ந்த தேரில் வலிமையோடு ஏறிக் கொள்ளலும், நகுலனும் தேவர் போல தனது ஒப்பற்ற தேரில் ஏறிக் கொள்ள, அவரவர்க்குக் கண்ணின் மணி போன்ற சாரதிகள் தேர்க் குதிரைகளை வேகமாக நடத்த (தொடரும்), - என்பதாம். உபரிசரர் - விண்ணில் சஞ்சரிக்கும் தேவர்கள். உபரிசரர், என்று பன்மையில் கூறியதால், கர்ணனுக்கும் உவமை என்று கொள்க.

31. கடவு மிரதமு மிரதமு முருள்கதி
கடுக வருதலு மிருவரு மிருசிலை
அடர வளைவுற நொடியினி லெயிறுடை
யயில்கொள் பகழிக ளளவில சிதறினர்
புடவி யுறவகல் வெளிமுழு வதுமிவர்
பொழிய மழையெழு புயன்மழை யெனவிழ
உடல முகுகுரு தியினனை யினரரு
குதவி செயவரு தரணிப ருருளவே.

[கடவும் இரதமும் இரதமும் உருள் கதி கடுக வருதலும், இருவரும் இரு சிலை அடர வளைவு உற நொடியினில் எயிறு உடை அயில் கொள் பகழிகள் அளவு இல சிதறினர்; புடவி உற அகல் வெளி முழுவதும் இவர் பொழிய, மழை எழு புயல் மழை என

விழ, உடலம் உகு குருதியின் நனையினர், அருகு உதவி செய வருதரணிபர் உருள, ஏ.

**விளக்கம்:-** பொழியும் மழை - பொழிகின்ற அம்புமழை. எழு புயல் மழை என - சப்த மேகங்களின் (பொழியும்) நீர் மழை என (இவ்விரு வீரருக்கும்) உதவி செய வருதரணிபர், உடலம் உகு குருதியின் நனையினர், உருள, என்று ஈற்றடியை அன்வயிக்க. சாரதிகள் கடவும் இரு தேர்களும் கடுக வருதலும், இரண்டு சிலைகளும் நன்றாக வளையச் செய்து (இருவரும்) பற்களைக் கொண்ட கூரிய அளவற்ற அம்புகளைச் செலுத்தினார்கள்; இவர் பரந்த ஆகாயமெங்கும் பொழியும் அம்பு மழை பூமியில் நிறையும் படி சப்தமேகங்களின் மழை போல விழுதலின், இவர்க்கு உதவ வந்த அரசர்கள் 'புண்ணுண்ட உடலிலிருந்து பெருகும் குருதி யினால் நனைந்து விழுந்து உருள—(தொடரும்), என்பதாம்.

**32.** **இருவர் பரிகளு முரனுற முழுகின**
**இருவர் வலவரும் விழவெரி கதுவின**
**இருவ ரிரதமு மழியமுன் முடுகின**
**இருவர் துவசமு மறவிசை கடுகின**
**இருவர் சிலைகளு நடுவற மருவின**
**இருவர் கவசமு மிடையிடை கெழுமின**
**இருவர் கவிகையு மறிதர வருடின**
**இருவ ருடலமு மெழுதின கணைகளே.**

[இருவர் பரிகளும் உரன்உற முழுகின, இருவர் வலவரும் விழ எரி கதுவின, இருவர் இரதமும் அழிய முன்முடுகின, இருவர் துவசமும் அற விசை கடுகின, இருவர் சிலைகளும் நடு அற மருவின, இருவர் கவசமும் இடையிடை கெழுமின, இருவர் கவிகையும் மறிதர வருடின, இருவர் உடலமும் எழுதின கணைகள், ஏ.]

**விளக்கம்:-** உரன் - மார்பு. விழ கதுவின - இறந்துவிழும் படி நெருப்பைப் போல் (கணைகள்) தைத்தன. முன் முடுகின— (இரதம் அழியும்படி கணைகள்) விரைந்து ஊடுருவிச் சென்றன. இடையிடை கெழுமின—(இருவர் கவசங்களிலும்) இடையிடையே தைத்துத் துளைத்தன. மறிதர வருடின - (குடைகள்) சாயும்படி தடவின, அதாவது தாக்கின. எழுதின - புதைந்தன. போர் வீரர் இருவரது தேர் முதலியவை இருவரும் ஏவிய கணைகளால் அழிந்தன, என்பதாம்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

**33. கன்ன னும்பரி நகுல னுந்தம காலின் நின்றிடவே**
**பின்ன ரும்பொரு பாகர் தந்தபி றங்கு தேர்மிசையார்**
**முன்ன ரம்புதொ டுத்த போரினு மும்ம டங்குபொர**
**மன்னர் யாருமதிக்கு மாறுதொ டங்கி னூரமரே.**

[கன்னனும் பரி நகுலனும் தமகாலின் நின்றிடவே, பின்னரும் பொரு பாகர் தந்த பிறங்கு தேர்மிசையார், முன்னர் அம்பு தொடுத்த போரினும் மும்மடங்கு பொர மன்னர் யாரும் மதிக்கும் ஆறு தொடங்கினூர் அமர், ஏ.]

**விளக்கம்:-** கர்ணனும் பரிநூல் வல்லவனுன நகுலனும், தேர்கள் அழியத் தரையில் நிற்கவும், போர்த் தொழில் வல்ல பாகர் தந்த தேரில் ஏறினவர்களாய், முன் செய்த போரினும் மூன்று மடங்கு உக்ரமாய்ப் பொர எண்ணி, கண்ட அரசர்கள் எல்லோரும் நன்கு மதிக்கும்படி மறுபடியும் போர் செய்ய லானூர்ககள்,—என்பதாம்.

**34. அல்லி நாண்முகை யம்பு யங்கள லர்த்து நாதன்மகன்**
**சொல்லி னூலுய ராயுள் வேதியர் சுதனை யின்றமரில்**
**கொல்லி னுதவ றுங்கொ லென்றொரு கோலி னூலழியா**
**வில்லி னுணழி யாந டக்கென மீள விட்டனனே.**

[அல்லி நாள் முகை அம்புயங்கள் அலர்த்தும் நாதன் மகன், சொல்லினுல் உயர் ஆயுள் வேதியர் சுதனை இன்று அமரில் கொல்லின் நா தவறும் (கொல்) என்று ஒரு கோலினுல் அழியா வில்லின் நாண் அழியா நடக்க, என, மீள விட்டனன், ஏ.]

**விளக்கம்:-** அல்லி - அகஇதழ். முகை அம்புயங்கள்-(அம்புயம் முகைகள்) தாமரை அரும்புகள். அவற்றை அலர்த்தும் நாதன் - சூரியன். அவன் மகன், கர்ணன். சொல்லினுல்....மகன் - புகழால் உயர்ந்த வைத்திய சாத்திர வித்தகர்களான அசுவினி தேவர்களின் குமாரர்களில் ஒருவனுன நகுலன். நா தவறும் - (விசயன் ஒழிந்த மற்றத் தம்பியரைக் கொல்லேன்) என்று குந்திக்குக் கூறிய சொல் தவறும் (என்று எண்ணி.) கோல் - சரம். அழியா வில் நாண் அழியா - அழியாத வில்லின் நாண் அழித்து. நடக்க - உயிருடன் அகன்று செல்க. கர்ணன் நகுலனைக் கொல்லாமல், அவனை வலியழியச் செய்து திரும்பச் செய்தான்,— என்பதாம்.

**35. நின்ற மாநகு லற்கு வன்றுணை யாகி நின்றிடலான்**
**மன்றன் மாலைவி சால மார்பினன் மகத பூபனையும்**
**வென்றி வேன்முரு கற்கு நேர்புகல் விடத ரன்றனையும்**
**கொன்று வாசவன் மைந்தன் மாமுனை குறுக வேகினனே.**

[நின்ற மா நகுலற்கு வல் துணை ஆகி நின்றிடலால், மன்றல் மாலை விசாலம் மார்பினன் மகதபூபனையும், வென்றி வேல் முருகற்கு நேர் புகல் விடதரன் தனையும் கொன்று, வாசவன் மைந்தன் மாமுனை குறுக ஏகினன். ஏ,]

**விளக்கம்**:—நகுலனுக்குப் போரில் துணையாக நின்றதனால், கர்ணன், மகதநாட்டு அரசனையும், முருகக் கடவுளுக்கு ஆற்றலில் நேரானவன் என்று சொல்லப்படும் விடதரன் என்ற வீரனையும் கொன்று அதன்பின், விசயன் போர் செய்யுமிடம் சென்றான் என்பதாம்.

கர்ணவிசயர் போர்

**36. மடங்கன் மேலெழு மதமு மேலிட வருப ணைக்கரிபோல்**
**விடங்கொள் சாயக வில்லி சென்றுதன்**
**விற்கு னித்தடுபோர்**
**தொடங்கு முன்பலர் வில்லெ டுத்தவர் சொல்லும்**
**வில்லியவன்**
**திடங்கொண் மார்பினி லம்பி ரண்டுதெ ரிந்து விட்டனனே.**

[மடங்கல் மேல் எழு மதமும் மேலிட வருபணை கரிபோல், விடம் கொள் சாயகம் வில்லி சென்று தன் வில் குனித்து அடு போர் தொடங்குமுன், பலர் வில் எடுத்தவர் சொல்லும் வில்லி, அவன் (கர்ணன்) திடம் கொள் மார்பினில் அம்பு இரண்டு தெரிந்து விட்டனன், ஏ.]

**விளக்கம்** :—சிங்கத்தின் மேல் ஏழுவகை மதமும் மேலிட்ட யானை போர் செய்ய வருதல் போல், விசயன் முன் சென்று தன் வில்லை வளைத்துப் போர் தொடங்கு முன்னே, வில்பிடித்தோர் எல்லோரும் புகழ்ந்து கூறும் வில் வீரனான விசயன், கர்ணனது வலிய மார்பில் இரண்டு அம்புகளைத் தேர்ந்தெடுத்து ஏவினான், என்பது பொருள். முதலடி, இல்பொருள் உவமை. இவ்வுவமை, விசயனது உயர்வையும், கர்ணனது தாழ்வையும் காட்டும். விடங்கொள் சாயகம் - விஷம் போல் கொடிய அம்பு, அல்லது விஷம் பூசப்பெற்ற அம்பு.

37. **அருண வெங்கதி ராயி ரத்தவ னன்பி ருலுதவும்**
**கருண னுஞ்சில பகழி யோரிரு கண்ணர் மார்பில்விடா**
**வருண மும்பெய ரும்பி ரிந்திலர் மனனு மொன்றெனவே**
**தருண வாணில வெழந கைத்துரை தந்து போயினனே.**

[அருணம் வெம் கதிர் ஆயிரத்தவன் அன்பினுல் உதவும் கருணனும், சில பகழி ஓர் இரு கண்ணர் மார்பில் விடா வருணமும் பெயரும் பிரிந்திலர்,, மனனும் ஒன்று எனவே, தருணம் வாள் நிலவு எழ நகைத்து, உரைதந்து போயினன், ஏ.]

**விளக்கம் :-**செந்நிறமான வெவ்விய கிரணங்கள் ஆயிரத்தை உடையவனுன சூரியன் அன்போடு அளித்த கர்ணனும், சில கணைகளை ஒப்பற்ற இரண்டு கிருஷ்ணர்களான கிருஷ்ணுர்ச் சுனர்களின் மார்பில் செலுத்தி, ''(இவ்விருவரும்) நிறம் பெயர் களால் வேறுபட்டிலர். மனமும் ஒன்றே'' என்று சொல்லிக் கொண்டு, வெள்ளிய பற்கள் தோன்ற நகைத்து அப்பால் சென் ருன் என்பதாம். வாள் தருணம் நிலவு எழ—பிரகாசமுடைய இளமை பொருந்திய நிலவு போன்ற பற்கள் தோன்ற (கர்ணன் நகைத்துச் சென்ருன்).

கண்ணனைப் போல் அருச்சுனனும் கருநிறமுடையவனு தலால், அவனும் கிருஷ்ணன் என்ற பெயரினன் ஆகின்ருன். எனவே ஓரிரண்டு கண்ணர், என்று கிருஷ்ணுர்ச்சுனர் குறிக்கப் பட்டார். கிருஷ்ணன், என்ற சொல். கரியவன், என்ற பொருளது இருவரும் நிறத்தாலும், பெயராலும் ஒன்றுபட்டவர் ஆதலால், ''வருணமும். பெயரும் பிரிந்திலர் என்று கர்ணன் கூறினுன், ஆயிற்று.

38. **அன்று போர்புரி சேனை யின்பதி யான வீரனைநீ**
**இன்று போயினி நாளை வாவென வினிதி யம்பினனுல்**
**வென்றி கூர்வரி வின்மை யாலடல் வெவ்வ ரக்கரைமுன்**
**கொன்ற காளையை யொத்த பேரிசை கொண்ட**
**வாண்மையினுன்.**

[அன்று போர் புரி சேனையின் பதி ஆன வீரனை, ''நீ இன்று போய், இனி நாளை வா'' என இனிது இயம்பினன், (ஆல்). வென்ற கூர் வரி வின்மையால் அடல் வெம் அரக்கரை முன் கொன்ற காளையை ஒத்த பேர் இசை கொண்ட ஆண்மையினுன்.]

**விளக்கம்:—**வெற்றி மிகுந்த வில் தொழிலால் வலிய இராவணுதி அரக்கர்களை அழித்த வீரனுன இராமபிரானைப் புகழால் ஒத்த ஆண்மையினனுன விசயன், அன்று போர்

செய்யும் கௌரவ சேனையின் நாயகனான கர்ணனை நோக்கி ''இன்று போய் நாளை போருக்கு வா,'' என்று இனிது கூறினான், என்பது பொருள்.

### சல்லியனோடு சாத்தகி பொரல்

**39. அல்லி யம்புய மனைய கண்ணின னனுச னுங்குனிவில்**
**சல்லி யன்பெய ரெனவி ளங்கிய தானை மன்னவனும்**
**பல்லி யங்கடு வைப்ப நீடுப ணைப்ப கட்டுடனே**
**வல்லி யம்பொரு மாறெ னப்பொர மாறி லாரொருபால்.**

[அல்லி அம்புயம் அனைய கண்ணினன் அனுசனும், குனிவில் சல்லியன் என விளங்கிய தானை மன்னவனும் பல் இயங்கள் துவைப்ப, நீடு பணை பகட்டுடனே, வல்லியம் பொரும் ஆறு என, பொர மாறு இலார் ஒரு பால்—தொடரும்.]

**விளக்கம்:**-மாறு இலார் (ஒப்பு இல்லாதவர்). ஆகிய, தாமரைக் கண்ணினனான கண்ணனது தம்பியான சாத்தகியும், குனிவில் சல்லியன் என்று புகழ் பெற்ற சேனைகளை உடைய மன்னனும், பலவித வாத்தியங்கள் ஒலி செய நீண்ட பருத்த அல்லது தந்தங்களையுடைய ஆண் யானையுடன் புலியானது போர் செய்யும் விதமாக, ஒரு புறம் போர் புரிய—அடுத்த செய்யுளோடு தொடரும்,—என்பது பொருள். பகடு—ஆண் யானை.

### சேரனோடு சாலுவன் பொரல்

**40. மார னுக்கிளை யாம லம்பையை மாத வத்துவிடும்**
**தீர னுக்குமொ ராழி கொண்டுசெ லுத்து தேருடைவெம்**
**சூர னுக்கெதி ராகி மேனிது லங்கு சேரனெனும்**
**வீர னுக்குமி குத்த பேரமர் விளைய வேறொருபால்.**

[மாரனுக்கு இளையாமல் அம்பையை மாதவத்து விடும் தீரனுக்கும், ஓர் ஆழி கொண்டு செலுத்து தேர் உடை வெம் சூரனுக்கு எதிர் ஆகி மேனி துலங்கு சேரன் எனும் வீரனுக்கும் மிகுத்த பேர் அமர் விளைய வேறு ஒரு பால்.]

**விளக்கம்:**-மாரன் - மன்மதன். அம்பை - காசி மன்னன் புத்திரிகளில் ஒருத்தி. தீரன் - சாலுவன், என்ற அரசன். ஓராழி... சூரன்—சூரியன். எதிராகி — ஒப்பாகி. வேறோர் புறத்தில் சாலுவனும், சூரியனை ஒத்த மேனி விளக்கமுடைய சேரனும் பெரும் போர் விளைக்க,—(தொடரும்)—என்பதாம்.

அம்பையைத்தவம் செய்ய விடுத்த வரலாறு ஆதிபருவத்தில் கூறப்பட்டுளது. அவள்தான் பீஷ்மனைக் கொல்லச் சிகண்டி யாகப் பிறந்தவள்.

## பாண்டியனும் சகுனியும் பொரல்

**41. முழுது ணர்ந்தருண் முனிவ ரன்புகன் மும்மை வண்டமிழும்**
**பழுத றும்படி தெளிஞ் ரேறிய பலகை யொன்றுடையான்**
**வழுதி யுந்தனி மதிநெ டுங்குடை மன்னன் மாதுலனும்**
**பொழுது சென்றிடு மளவும் வெஞ்சமர் புரிய வேறொருபால்.**

[முழுது உணர்ந்தருள் முனிவரன் புகல் மும்மை வள் தமிழும் பழுது அறும்படி தெளிஞர் ஏறிய பலகை ஒன்று உடையான், வழுதியும் தனி மதி நெடுங்குடை மன்னன் மாதுலனும் பொழுது சென்றிடும் அளவும் வெம்சமர் புரிய வேறொருபால்.]

**விளக்கம்:**-முழுது உணர்ந்தருள் முனிவரன் - அகத்தியன் மும்மை வள் தமிழ் - இயல் இசை நாடகம் என்ற மூவகைத் தமிழ் தெளிஞர் - தெரிந்து கொண்டவர்களான பெரும் புலவர்கள். ஏறிய பலகை-அவர்கள் ஏறியிருப்பதற்கு இடமான சங்கப்பலகை. (அப்பலகை) ஒன்று உடையான் வழுதி - ஒன்றை உடையவ னாகிய பாண்டியன். தனி மதி நெடுங்குடை மன்னவன் மாதுலன் - துரியோதனனது மாமனை சகுனி. வேறோர் புறம் சகுனியும் பாண்டியனும் போர் புரிய, (தொடரும்) என்பதாம்.

## சகாதேவனும் துச்சாதனனும் பொரல்

**42. குரவர் சொற்கண் மறுத்து வன்பொடு கொண்ட**
**பாருடையான்**
**அரவு யர்த்தவ னுக்க னந்தர மான தம்பியுடன்**
**கரவு சற்றுமி லாத சிந்தையன் வாயு வேககதிப்**
**புரவி வித்தக னிளவல் சென்றமர் புரிய வேறொருபால்**

[குரவர் சொற்கள் மறுத்து வன்போடு கொண்ட பார் உடை யான், அரவு உயர்த்தவனுக்கு அனந்தரம் ஆன தம்பியுடன், கரவு சற்றும் இலாத சிந்தையன், வாயு வேக கதி புரவி வித்தகன் இளவல் சென்று அமர் புரிய வேறு ஒரு பால்.]

**விளக்கம்:**- குரவர் - பெரியோர். அனந்தரம் ஆன -பின்னே பிறந்த. தம்பி - துச்சாதனன். வாயு வேக புரவி வித்தகன்

நகுலன். (அவன்) இளவல் - சகாதேவன். வேறோர் புறம் துச்சாதனனும், சகாதேவனும் போர் புரிய, - (தொடரும்), என்பதாம்.

அசுவத்தாமன் வீமனிடம் தோற்றல்

**43. வேரி யம்புயன் வேதம் யாவையும் வில்லின் வேதமும்வல்**
**ஆரி யன்றரு கடவுண் மைந்தனு மனிலன் மைந்தனுமே**
**தூரி யம்பல கோடி கோடிது வைப்ப வெஞ்சமரே**
**காரி யம்பிறி தில்லே யென்றுக லந்து மோதினரே.**

[வேரி அம்புயன் வேதம் யாவையும் வில்லின் வேதமும், வல் ஆரியன் தரு கடவுள் மைந்தனும் அனிலன் மைந்தனும் (ஏ), தூரியம் பல கோடி கோடி துவைப்ப வெம்சமர் (ஏ), காரியம் பிறிது இல்லை என்று கலந்து மோதினர், ஏ]

**விளக்கம்:-** வேரி அம்புயன் - வாசனை உடைய தாமரையில் தோன்றியவனான பிரும்மா. சூரியன் - துரோணன். கடவுள் மைந்தன் - தெய்வத்தன்மை பொருந்திய மகனான அசுவத்தாமன். அனிலன் மைந்தன் - வீமன். தூரியம் துவைப்ப—வாத்தியங்கள் (கோடிக் கணக்கில்) ஒலிக்க. வெம்சமர் காரியம், பிறிது இல்லை என்று - போர் செய்தலே செய்தற்குரிய காரியம், அதைத்தவிர செய்தொழில் வேறு இல்லை, என்று நினைத்து. இருவரும் கடும் போர் செய்தார்கள், என்பதாம்.

**44. சுரரு லோகம கிழ்ந்த ணைந்தது ரோணன் மாமகன்மேல்**
**வருச தாகதி மகனை நாலிரு வாளி யேவிவெகுண்(டு)**
**இரத நேமிகு லைந்து சூதனெ டிவுளி நாலும்விழப்**
**பொருது சீறினன் முற்ப யந்தபு ராரி யேயனையான்.**

[சுரர் உலோகம் மகிழ்ந்து அணைந்த துரோணன் மாமகன், மேல் வரு சதாகதி மகனை நால் இரு வாளி ஏவி வெகுண்டு இரதம் நேமி குலைந்து சூதனோடு இவுளி நாலும் விழ, பொருது சீறினன், முன் பயந்த புராரியே அனையான்].

**விளக்கம் :-** தேவர் உலகம் மகிழ்ச்சியோடு அடைந்த துரோணனது மாமகனான அசுவத்தாமன், தன்மேல் (எதிர்த்து) வரும் சதாகதிமகனை (வீமன்) நோக்கி எட்டுக் கணைகளை வெகுண்டு ஏவி. தேர்ச்சக்கரம் அழிந்து பாகனும், நான்கு குதிரைகளும் கீழேவிழும் படி போர் செய்து சீறினன், அதாவது வீரகர்ச்சனை செய்தான், என்பது பொருள். முன் பயந்த புராரியே அனையான் - முன்னே தன்னைப் பெற்ற சிவபெருமானையே ஆற்றலில் ஒத்தவனான

அசுவத்தாமன். சிவபெருமானிடம் உண்டாகி, துரோணனால் வளர்க்கப்பட்டவன், அசுவத்தாமன், என்பது வரலாறு.

**45. மீள மற்றெரு தேரி லேறிய வீமன் வெஞ்சினமேல்**
**மூள மற்புய கிரித டித்திட மூரி வில்வளையா**
**வாள மொப்பென மற்ற வன்கொடி வாசி பாகொடுதேர்**
**தூள முற்றிட முதுகி டும்படி தொட்டனன் கணையே.**

[மீள மற்றெரு தேரில் ஏறிய வீமன் வெம் சினம் மேல்மூள, மல்புய கிரி தடித்திட மூரிவில் வளையா, வாளம் ஒப்பு என (மற்று), அவன் கொடி வாசி பாகொடு தேர் தூளம் உற்றிட முதுகு இடும்படி தொட்டனன் கணை, ஏ]

**விளக்கம் :-** வாளம் -சக்கரவாளகிரி, எழுகடல்களுக்கு அப்பாலானதும், வட்ட வடிவமானதும், இப்பூமண்டலத்தைச் சுற்றியிருப்பது மாகிய ஒரு மலை. வீமன், அதன் பிறகு வேறெரு தேரில் ஏறி, தனது வில்லைச் சக்கரவாளகிரி ஒப்பு என்னும்படி நன்ருக வளைத்து, முனிமகனது கொடி, குதிரைகள், பாகன், . தேர் ஆயவை தூள்படும்படியும், அவன் முதுகிடும்படியும், ஒரு கணையைத் தொடுத்தான், என்பதாம்.

## இருதிறத்து வீரர்களும் பொரல்

**46. கருதி வாய்த்தது போரெ னுமெய் களித்த கைகயனும்**
**சுருத கீர்த்தியு முடன்ம லைந்து தொடங்கி னுரொருபால்**
**கிருத பார்த்திவ னுடன்ம லைந்துசி கண்டி கெட்டனன்மா**
**இரத மேற்கொடி யாடை வீழ்தர வேகி னுனெருபால்.**

[கருதி வாய்த்தது போர் என மெய்களித்த கைகயனும், சுருத கீர்த்தியும் உடன் மலைந்து தொடங்கினுர் ஒருபால்; கிருத பார்த்தி வனுடன் மலைந்து சிகண்டி கெட்டனன், மா இரதம், மேல்கொடி ஆடை வீழ்தர ஏகினுன் ஒருபால்.]

**விளக்கம் :-** போர் நேர்ந்தது என்று எண்ணி மெய்யொடு மனமுங்களிக்கப் பெற்ற கேகய நாட்டு அரசனும், திரௌபதியின் மகனை சுருதகீர்த்தியும், ஒருபுறம் எதிர்த்துப் போர் செய்ய ஆரம்பித்தார்கள்; சிகண்டி, என்பான் மற்ருேர்புறத்தில் கிருத வர்மன் என்ற அரசனேடு போர் செய்து, தேரின்மேல் கட்டப் பெற்ற கொடிச்சீலை அறுபட்டுவிழக் கெட்டனனுய், (தோற்றவனுய்) அப்பால் சென்ருன், என்பதாம். விசயனுக்குத் திரௌபதியிடம் உண்டானவன் சுருதகீர்த்தி என்பவன்.

**47. தரும பூபதி சேனை யின்பதி சாப வாசிரியன்
கிருப னோடும லைந்து வெஞ்சமர் கெட்டு நீடிரதம்
புரவி பாகுத ரித்த திண்சிலை பொன்ற வன்றுயிரோ(டு)
அரிது போயினன் வேள்வி யாகுதி யங்கி வாய்வருவோன்.**

[தரும பூபதி சேனையின் பதி சாப ஆசிரியன் கிருபனோடு மலைந்து வெம்சமர் கெட்டு, நீடு இரதம், புரவி, பாகு, தரித்த திண் சிலை பொன்ற, அன்று உயிரோடு அரிது போயினன், வேள்வி ஆகுதி அங்கிவாய் வருவோன்.]

**விளக்கம் :-** வேள்வி ஆகுதி அங்கிவாய் வருவோன் (ஆகிய) தரும பூபதி சேனையின்பதி - வேள்வியில் ஆகுதியாக விடப்படும் தீயினிடத்தே தோன்றியவன் ஆகிய, தருமனது சேனையின் தலைவன் (திட்டத்துய்மன்). அவன், வில் ஆசிரியனான கிருபனோடு போர் செய்து, உயர்ந்த தேர், தேரின் குதிரைகளும், சாரதியோடு கையிலே பிடித்த வில்லையும் இழந்து, உயிரோடு அருமையாகத் தப்பிச் சென்றான், என்பதாம். பொன்ற - அழிய.

**48. திங்க ளாத்தலை யாக மன்னவர் செப்பு மாமரபோர்
தங்க ளிற்பகை யாகி வானவர் தான வர்க்கெதிராய்
எங்க ளுக்கெழு பார டங்கலு மென்று போர்புரியும்
வெங்க ளத்தினி யற்கை யெங்ஙன்வி யந்து கூறுவதே.**

[திங்களை தலை ஆக மன்னவர் செப்பு மா மரபோர், தங்களில் பகை ஆகி வானவர் தானவர்க்கு எதிராய், எங்களுக்கு எழு பார் அடங்கலும் என்று போர் புரியும், வெம்களத்தின் இயற்கை எங்ஙன் வியந்து கூறுவது, ஏ.]

**விளக்கம் :-** சந்திரனை ஆதி புருஷனாகக் கொண்ட மன்னவர்கள் எல்லோரும், சொல்லும் சிறந்த வம்சத்தில் தோன்றிய பாண்டவரும் கௌரவரும் தேவர் அசுரர்களுக்குச் சமானமாய், "ஏழு தீவுகளாகவுள்ள பூமி முழுவதும் எங்களுக்கே உரியது," என்று சொல்லிக்கொண்டு போர் செய்யும் வெம்களத்தின் இயல் பினை எவ்வாறு வியந்து கூறுவது, என்று கவி கூறினார், என்பது பொருள்.

வேறு

படுகளச்சிறப்பு

**49. இற்றகை கால்செறி களமுழு துங்கழு கிட்டன காவணமே
உற்றது கொள்ளலை கைக்குலம் வெங்கள முரைபெரு
காவணமே,**

**வெற்றுடன் மன்னர்ச ரிந்தகு டைக்கண் விரித்தன சாமரமே**
**கொற்றமி கும்பறை யோசைய ழிந்துகு லைந்தன சாமரமே.**

[இற்ற கை கால் செறி களம் முழுதும் கழுகு இட்டன காவணமே, உற்று அதுகொள் அலகை குலம் வெம்களம் உரை பெரு ஆவணமே; வெறு உடல் மன்னர் சரிந்த குடைக்கண் விரிந்தன சாமரமே, கொற்றம் மிகும் பறை ஓசை அழிந்து குலைந்தன சாமரமே (சமரமே).]

**விளக்கம் :-** அறுக்கப்பெற்ற கைகளும் கால்களும் நிறைந்த போர்க்களம் முழுதும், பிணம் தின்னிக் கழுகுகள் காவணம் (பந்தல்) இட்டன, - என்பது முதலடியின் பொருள். அலகை (பேய்) குலம் உற்று (வந்து) அதை (பிணத்தின் உறுப்பை) கையில் கொள்ளும் வெம்களம் ஆரவாரம் மிக்க ஆவணமே (கடைத் தெருவே) ஆகும், என்பது இரண்டாவது அடியின் பொருள். உயிர் நீங்கிய வெறு உடல் மன்னர்களின் முறிந்து விழுந்த குடைகளினிடத்தே, சாமரைகள் பரவி விழுந்து கிடந்தன, - என்பது மூன்ருவது அடியின் பொருள். வெற்றியின் மிகுதிக்கு அடையாளமான முரசுகள் சாமரத்தில் (சமரத்தில் அதாவது போர்க்களத்தில்) ஒலிகெட்டு உருக்குலைந்து கிடந்தன,- என்பது நான்காவது அடியின் பொருள். சமரம் என்பதின் விகாரம் சாமரம்.

**50.** **மின்புயல் வாய்விரி கின்றன வொத்தன விரிநுத லோடைகளே**
**என்புற வீறிவி ழுங்கட தாரையி னேயின வோடைகளே**
**முன்புடை வாலதி செற்றது வெம்புகர் முகமுழு குஞ்சரமே**
**வன்புடை மால்வரை மறிவன போலம றிந்தன குஞ்சரமே.**

[மின் புயல் வாய் விரிகின்றன ஒத்தன விரி நுதல் ஓடைகளே; என்புஉற வீறி விழும் கடதாரையின் ஏயின ஓடைகள்: முன்புடை வாலதி செற்றது வெம்புகர் முகம் முழுகும் சரமே, வன்பு உடை மால்வரை மறிவனபோல மறிந்தன குஞ்சரமே.]

**விளக்கம் :-** (விரி நுதலில் கட்டப்பட்டுள்ள) நெற்றிப் பட்டங்கள், மேகங்களினிடத்தே வெளிப்படுவனவாகிய மின்னல் களை ஒத்தன, எலும்புகளினின்றும் மிகுதியாகப் பெருகும் (யானை களின்) மதநீர்ப் பெருக்கினுல், நீர் ஓடைகள் உண்டாயின, என்பது முதலிரண்டடிகளின் பொருள். வெவ்விய செம்புள்ளிகளை

உடைய (யானைகளின்) முகத்தில் புதைகின்ற சரமானது (ஊடுருவிச் சென்று) முன்புடை வாலைத் துணித்தது, வலிமையுடைய பெரிய மலைகள் சாய்வனபோல், குஞ்சரங்கள் (யானைகள்) மடிந்து விழுந்தன, - என்பது ஈற்றடிகளின் பொருள். முன்பு - வலிமை, புயல், யானை; மின்னல், ஓடை (நெற்றிப் பட்டம்).

**51. பட்டம ணிந்தநு தற்கிடை யேவிழு தும்பிகள் பட்டனவே**
**தொட்டியு டன்பொரு சமர்முனை சீறிய தும்பிகள் பட்டனவே**
**வெட்டிய றன்புதல் வன்றன்வ ரூதினி வென்றுக ளித்தனவே**
**இட்டகு மண்டைய பேய்பிண மிக்கன வென்றுக ளித்தனவே.**

[பட்டம் அணிந்த நுதற்கு இடையே விழு தும்பிகள் பட்டனவே, தொட்டியுடன் பொரு சமர்முனை சீறிய தும்பிகள் பட்டனவே; வெட்டி அறன் புதல்வன் வரூதினி வென்று களித்தனவே, இட்ட குமண்டைய பேய் பிணம் மிக்கன என்று உகளித்தனவே.]

**விளக்கம் :-** நெற்றிப் பட்டம் அணிந்த (யானைகளின்) நெற்றியின் இடையிலே வந்து மொய்க்கும் வண்டுகள் அதிமாயின அல்லது, ஒலித்தன. போர் செய்யும் களத்திலே சீறி எதிர்த்த யானைகள் தொட்டியுடன் (அம்பாரிகளுடன்) இறந்து விழுந்தன; தருமபுத்திரனது சேனை (பகைவர்களை) வெட்டி (அழித்து) உள்ளங் களித்தன, பேய்கள் தெவிட்டுதல் பொருந்தினவாகி, பிணங்கள் மிக்கன, என்று மகிழ்ந்து உகளித்தன (குதித்தன) - என்பது பொருள். குமண்டையிடல் - குமட்டல், உணவின் மிகுதியால் தெவிட்டல்.

**52. பழுதற வீழ்படை மன்னவர் பேருடல் பற்பல வம்பினவே**
**பொழிகுரு திப்புனன் மூழ்கினர் மேனிபு லாலின வம்பினவே**
**தழல்விழி வாரண வீரர்மு டித்தலை தடிவன சக்கரமே**
**அழலுமிழ் வாள்கள் சுழற்றின மீளவு மாவன சக்கரமே.**

[பழுது அற வீழ் படை மன்னவர் பேர் உடல் பல்பல அம்பினவே, பொழிகுருதி புனல் மூழ்கினர் மேனி புலாலின வம்பினவே; தழல் விழி வாரணம் வீரர் முடிதலை தடிவன சக்கரமே சுழல்உமிழ் வாள்கள் சுழற்றின மீளவும் ஆ வுனசம் கரமே ]

**விளக்கம் :-** பழிப்பிற்கு இடமில்லாதபடி பொருது வீழ்ந்த படைமன்னர்களின் சிறந்த உடல்கள் பல அம்புகளை உடையன அதாவது அம்புகளால் துளைக்கப்பட்டன. பெருகும் குருதி வெள்ளத்தில் மூழ்கிக் கிடக்கும் வீரர்களது உடல் புலால் வம்பை (நாற்றத்தை) உடையன; நெருப்பை வெளிப்படுத்தும் கண்களை உடைய யானைவீரர்களின் கிரீடம் அணிந்த தலைகளைத் துணிப்பன சக்கரம் என்ற ஆயுதம், (அறுபட்ட தலைகளை உடைய அவ்வீரர்களது) வனசம் (தாமரை) போன்ற கைகள், தலைஅறுபட்ட பின்பும், தீப்பொறி சிந்தும் வாள்களைச் சுழற்றின என்பது பொருள்.

**53.** **முழுகிய வாளிகள் குழுமிய வீரர்மு கத்தன வெண்ணிலவே**
**விழிவழி தீயெழ முறுவல்ப ரப்பவி ரித்தன வெண்ணிலவே**
**உழைமழை வீழ்வன பலபடை யெங்குமு மிழ்ந்தன**
**வெவ்வெயிலே**
**அழிவில்வ ரூதினி சூழ்வெயி லுக்கெதி ராவன**
**வெவ்வெயிலே.**

[முழுகிய வாளிகள் குழுமிய வீரர் முகத்தன எண் இலவே, வீழிவழி தீ எழ முறுவல் பரப்ப விரித்தன வெள் நிலவே; உழை மழை வீழ்வன பலபடை எங்கும் உமிழ்ந்தன வெம் வெயிலே, அழிவு இல் வரூதினி சூழ்வுஎயிலுக்கு எதிர் ஆவன எ எயிலே.]

**விளக்கம் :-** கூட்டங் கொண்ட வீரர்களின் முகத்தில் பொருந்தித் தைத்த அம்புகள், எண்ணிக்கை இல்லாதன, கண்களினின்றும் தீ எழ, அவர்கள் போக்கிய இளமுறுவல் வெள்ளிய நிலவைப் போன்ற ஒளியை அதிகமாய் விரித்தன. உழை (பக்கங்களில்) மழைபோல் விழுவனவான பல ஆயுதங்கள் வெவ்விய வெயில் போன்ற ஒளியை வெளிப்படுத்தின, அழிவு இல்லாத சேனையில் சூழ்தலாகிய மதிலுக்கு எந்த மதில்கள் தாம் ஒப்பாகும், அதாவது சேனைகள் மதிலினும் உறுதியோடு நெருங்கி நின்றன, என்பது பொருள்.

**54.** **சரமழை காவலர் தங்கண்ம னோவன சம்புக மேயினவே**
**இரைகவர் புள்ளினெ டுள்ளுற வாவன சம்புக மேயினவே**
**வரைசிற கற்றுவி ழுந்தன வென்னம றிந்தன வாரணமே**
**அருகுந டிப்பன வலகைகள் பாடுவ யாமள வாரணமே.**

[சரம்மழை காவலர் தங்கள் மனோ வனசம்புக மேயினவே; இரைகவர் புள்ளினெடு உள்உறவு ஆவன சம்புகம் ஏயினவே; வரைசிறகு அற்று விழுந்தன என்ன மறிந்தன வாரணமே, அருகு நடிப்பன அலகைகள் பாடுவ யாமள ஆரணமே.]

**விளக்கம்:-** மனோவனசம் – இதயத்தாமரை, சம்புகம் - நரி. யாமள ஆரணம் - யாமள வேதம். அரசர்களின் இதயமாகிய தாமரையில் புகும்படி அம்புமழைகள் பொருந்தின, ஏயின (வந்தனவாகிய) நரிகள், பிணத்தை உணவாகக் கொள்ளும் கழுகு முதலிய பறவைகளுடன் மனங்கலந்த உறவினவாயின; சிறகு அறுக்கப்பட்டு விழுந்தனவாகிய மலைகள் போல் யானைகள் மடிந்து கிடந்தன, பக்கங்களில் கூத்தாடுவனவாகிய அலகைகள் யாமள வேதம் பாடுவனவாயின, என்பது பொருள்.

**55. செயிருடை யாடவர் சோரிப ரந்துசி வந்தது பாரிடமே**
**வயிறுபெருங் குருதிச் சுனையாக வளர்ந்தன பாரிடமே**
**பயிலம றைத்தன பாறுப ருந்தொடு பலகழு கந்தரமே**
**எயிறுடை வாளிது ணிப்பவி ழுந்தன வெத்தனை கந்தரமே.**

[செயிர் உடை ஆடவர் சோரி பரந்து சிவந்தது பார்இடமே, வயிறு பெருங்குருதி சுனை ஆக வளர்ந்தன பாரிடமே; பயில மறைத்தன பாறு பருந்தொடு பல கழுகு அந்தரமே, எயிறு உடை வாளி துணிப்ப விழுந்தன எத்தனை கந்தரமே.]

**விளக்கம் :-** வலிய ஆடவர்தம் குருதி எங்கும் பரவி, பாரிடம் (பூமி) செந்நிறம் உற்றது, பாரிடம் (பூதங்கள்) தமது வயிறு பெரிய இரத்தச் சுனையாகும்படி (குருதியைக் குடித்து) வளர்ந்தன; பாறு என்ற ஒரு வகைப் பறவைகளும், பருந்துகளோடு பலகழுகுகளும் பயிலுதலால் (சஞ்சாரம் செய்வதால்) அந்தரத்தை (வான்வெளியை) மறைத்தன, பற்களை உடைய அம்புகள் துணிப்ப (கீழே) விழுந்தனவாகிய கந்தரம் (கழுத்துக்கள்) எத்தனையோ பல,— என்பது பொருள்.

**56. உம்பல னேகமி ளம்பிடி யென்னவொ டிந்தன கோடுகளே**
**செம்புனல் யாறிரு பக்கமும் வீழ்குறை செய்தன**
**கோடுகளே**
**தும்பிக ளாலறை யுண்டன கொற்றவர் சூழ்மன வம்புயமே**
**வெம்புகர் வாளில ழிந்தன மால்வரை விதமன வம்புயமே.**

[உம்பல் அனேகம் இளம்பிடி என்ன ஒடிந்தன கோடுகளே, செம்புனல் யாறு இரு பக்கமும் வீழ் குறை செய்தன கோடுகளே; தும்பிகளால் அறையுண்டன கொற்றவர் சூழ் மனம் அம்புயமே, வெம்புகர் வாளில் அழிந்தன மால்வரை விதம் அன அம்புயமே.]

**விளக்கம் :-** உம்பல் - யானை. பிடி - பெண்யானை. கோடு— கரை. மனம் அம்புயம் – இதயமாகிய தாமரை. புகர்வாள் – பள

பளப்புள்ள வாள். (தந்தங்கள் இல்லாத) பெண்யானைகளைப் போல், ஆண்யானைகள் பல தந்தங்கள் ஒடியப் பெற்றன. செம்புனல் நதிக்கு (களத்தில்) இருபுறத்திலும் விழுந்து கிடக்கின்ற உடல் குறைகள் கரைகள் செய்தன; வெற்றியுடைய வேந்தர்களின் சூழ்கின்ற(எண்ணுதலைச் செய்கின்ற) இதயத்தாமரைகள் தும்பிகளால் (யானைகளால்) அழிக்கப்பட்டன, பெரிய மலைகளின்வகையைப் போன்ற அழகிய தோள்கள், புகர்வாளால் அழிந்தன,—என்பது பொருள். தாமரையைக் கலக்கி அழித்தல் யானையின் இயல்பு.

**57. தாள்வலி யாடவர் சிரமுரு ளும்படி தைத்தன சாயகமே**
**ஆழ்குரு தித்தட மொத்தன வவரவ ரவ்வுடல் சாயகமே**
**ஏழ்புயல் வானமி ருண்டிட வெங்குமெ ழுந்தவி ருந்துகளே**
**வீழ்பசி யாலுழல் பேயொடு பாரிட மிக்கவி ருந்துகளே.**

[தாள்வலி ஆடவர்சிரம்—உருளும்படி தைத்தன சாயகமே ஆழ் குருதி தடம் ஓத்தன அவர் அவர் அ உடல் சாய் அகமே, ஏழ் புயல் வானம் இருண்டிட எங்கும் எழுந்த இருந்துகள், வீழ் பசியால் உழல் பேயோடு பாரிடம் மிக்க விருந்துகளே.]

**விளக்கம்:-** தாள்வலி ஆடவர் - காலாள் வீரர். சாய் அகம் - சாய்ந்து விழுந்து கிடக்கும் இடம். இருந் துகள் - பெரிய புழுதிக் கூட்டம். விருந்துகள் மிக்க - விருந்துகளாகி மிகுந்தனவாயின அதாவது வந்து கூடின. காலாள் வீரர்களின் தலைகள் மண்ணில் உருளும்படி அம்புகள் பாய்ந்து தைத்தன, அவர் அவரின் அந்த உடல்கள் சாய்ந்து கிடந்த இடங்கள் ஆழமான குருதி மிகுதியாகத் தங்கிய நீர் நிலையை ஒத்தன; சப்தமேகங்களை உடைய வானம் இருளும்படி எங்கும் பெரிய புழுதிக் கூட்டங்கள் கிளம்பின, மிகுந்த பசியால், அல்லது தின்ன விரும்பும் பசியால் உழல்கின்ற பேய்களோடு பாரிடங்களும் (பூதங்களும்) விருந்துகளாகி மிகுந்தனவாயின, அதாவது பேய்களும் பூதங்களும் கூட்டமாக வந்து திரண்டன.

**58. செய்கட லாமென வந்துசி வந்தக வந்தம லைந்தனவே**
**கைகொடு கால்கொடு தம்மின் வெகுண்டுக வந்தம லைந்தனவே**
**ஐவகை யானக திக்குர நாலுமழிந்தன வாசிகளே**
**மெய்வகை யாலிவை கூரெறி கோலெறி வீரர்கை வாசிகளே**

[செய்கடல் ஆம் என வந்து சிவந்த கவந்தம் அலைந்தனவே; கைகொடு கால்கொடு தம்மின் வெகுண்டு கவந்தம் மலைந்தனவே; ஐவகை ஆன கதி குரம் நாலும் அழிந்தனவாசிகளே, மெய்வகையால் இவை கூர் எறி கோல்எறி வீரர் கைவாசிகளே.]

**விளக்கம்** :- கவந்தம் - (முதலடி) குருதிநீர். கவந்தம் - (இரண்டாமடி) உடல்குறை. குரம் - குளம்பு. வாசி - குதிரை. வாசி - (ஈற்றடி) சித்தி, திறமை. சிவந்த குருதி, செந்நிறக்கடல் போல் பெருகிவந்து அலை எறிந்தன; உடல்குறைகள் கைகொண்டும் தம்முள் போர்செய்தன; ஐந்து விதமான நடைகளையுடைய நான்கு குளம்புகளும் குதிரைகள் அழியப் பெற்றன, (உடல்குறை போர் செய்தலாகிய) இவை எல்லாம், மெய்வகையால் (உண்மையாக) கூரிய எறி கோல்களை (அம்புகளை) எறிகின்ற (செலுத்துகின்ற) வீரர்களின் கைகளின் சித்தியாகும்; அதாவது பயின்று பெற்ற திறமையின் காரியம் ஆகும்.

**59. தாரைக ளொற்றைகள் வங்கிய நீள்வயிர் சங்கமு ழக்கினவே**
**ஓரிமை யிற்சில யானைது ரங்கம சங்கமு ழக்கினவே**
**சேரவ ளைத்தவி லொன்றொரு கோடிசி லீமுக மேவினவே**
**வீரரு யிர்ப்புடல் விட்டர மங்கையர் மெய்ம்முக மேவினவே.**

[தாரைகள் ஒற்றைகள் வங்கியம் நீள்வயிர் சங்கம் முழக்கின, ஓர் இமையில் சில யானை துரங்கம சங்கம் உழக்கினவே; சேரவளைத்த வில் ஒன்று ஒரு கோடி சிலீமுகம் ஏவினவே, வீரர் உயிர்ப்பு உடல் விட்டு அரமங்கையர் மெய்முகம் மேவினவே.]

**விளக்கம்** :- தாரை, ஒற்றை, வங்கியம், நீள் வயிர் சங்கம் ஆயவை ஊதும் வாத்தியங்கள். துரங்கமசங்கம்-குதிரைக்கூட்டம். மெய்முகம்—உடலாகிய இடம். தாரை முதலிய ஊது கருவிகள் எல்லாம் ஒலித்தன, இமைப்பொழுதில் சில யானைகள் குதிரைக் கூட்டங்களைத் தாக்கிக் கலக்கின; வளைத்த வில் ஒவ்வொன்றும் கோடிக் கணக்கில் பாணங்களை ஏவின, வீரர்களின் உயிர்ப்பு (உயிர்) உடலைவிட்டுத் தெய்வப் பெண்களின் உடம்பினிடத்தை அடைந்தன, என்பதாம். போரில் இறந்த வீரர் வீர சுவர்க்கம் அடைந்து, அரமடந்தையரது உறவு பெற்று மகிழ்தல் பற்றி "அரமங்கையர் மெய்ம்முகம் மேவின," எனப்பட்டது.

**60. பொருகட லெரத்தபெ ருங்குரு திக்கடல் போதவி ரைந்தனவே**
**விரைவுறு தேவர்வி மானம்வி சும்பிடை போதவி ரைந்தனவே**
**கருமுகின் முட்டின பட்டவர் கட்கனல் காலும ரும்புகையே**
**சுரிகையொ டற்றுவி ழுந்தன மங்கையர் துனியில ரும்பகையே.**

[பொருகடல் ஒத்த பெருங் குருதி கடல் போத இரைந்தனவே, விரைவுஉறு தேவர் விமானம் விசும்பிடை போத விரைந்தனவே; கருமுகில் முட்டின பட்டவர் கண் கனல் காலும் அரும்புகையே, சுரிகையொடு அற்று விழுந்தன மங்கையர் துனியில் அரும்பு கையே.]

**விளக்கம் :-** அலை மோதுகின்ற கடலை ஒத்த பெரிய குருதி வெள்ளம் அதிகமாக ஒலித்தன; (போர் காணற்கு) விரைதல்உற்ற தேவர்களின் விமானங்கள் வானிடை மிகவும் விரைந்து சென்றன; இறந்தவர்களின் கண்களிலிருந்து வெளிப்படும் கோபக் கனல் வெளிவிடும் அளவிடுதற்கு அரிய புகைகள் கருமேகத்தைத் தாக்கின, மங்கையரின் ஊடலில் (அதை அகற்ற) ஆடவர் கூப்பும் கைகள் உடைவாளுடன் அற்று விழுந்தன,—என்பது பொருள். அரும்பு என்றதால் கைகள் தாமரை ஆகின்றன.

**61. கடகரி யேனமொ டொத்தன வம்பொடு போனக
ரத்தனவே
புடவியின் மீதுறை நிறைமதி யம்பல போனக ரத்தனவே
படுதிறல் வேலவர் கண்மணி சென்றுப றித்தன வாயசமே
அடுபணே யானையின் வெங்குடர் சென்றுபி டுங்கின
வாயசமே.**

[கடகரி ஏனமொடு ஒத்தன அம்பொடு போன கரத்தனவே. புடவியின் மீது உறை நிறை மதியம் பல போல் நகரத்தனவே; படுதிறல் வேலவர் கண்மணி சென்று பறித்தன வாயசமே, அடு பணே யானையின் வெம்குடர் சென்று பிடுங்கின ஆயசமே.]

**விளக்கம்:-** பூமியினிடத்தே வந்து தங்கிய கலைகள் நிறைந்த சந்திரனைப் போன்ற நகரத்தனவாகிய (நகத்தினவாகிய) மத யானைகள் எய்யப்பெற்ற அம்புகளால் அற்ற துதிக்கையினவாகி பன்றியை ஒத்தன; இறந்துபட்ட வலிய வேல் வீரர்களின் கரு விழிகளை வாயசங்கள் (காக்கைகள்) சென்று குத்திப் பறித்தன, கொல்லுகின்ற பணைத்த யானையின் கொடிய குடலை ஆயசம் (ஆயுதம்) சென்று பிடுங்கின, - என்பது பொருள். நகரம் - (வடசொல்) நகம், உகிர்.

**62. அணிதொடை தேன்மது கரநிரை சாலவ ருந்தவி
ஊத்தனவே
மணிமுடி பாரமு றப்பல நாகம்வ ருந்தவி ஊத்தனவே
கணைபல வீரர்மு கத்தன தோளன கண்ணன மார்வனவே
நிணமொடு மூளைநெ டுங்குடர் பூதநி ரைக்கண
மார்வனவே**

[அணிதொடை தேன் மதுகரம் நிரை சால அருந்த விளைத் தனவே, மணிமுடி பாரம் உற பல நாகம் வருந்த இளைத்தனவே; கணை பல வீரர் முகத்தன, தோளன, கண்ணன, மார்வனவே; நிணமொடு மூளை நெடுங்குடர் பூத நிரை கணம் ஆர்வனவே.]

**விளக்கம் :-** தேனை, வண்டுகளின் கூட்டம் நன்ருக அருந்த, வீரர்கள் அணிந்த மாலை விளைத்தன, பூமியைத் தாங்கும் நாகங்கள் எல்லாம், தம் மணி முடியில் சுமை அதிகமாக (அதைத் தாங்கமாட்டாமல்) வருந்தும்படி இளைத்தன; பல அம்புகள் வீரர் களின் முகத்தில் தைத்தனவும், தோளில் புதைந்தனவும், கண் களில் பாய்ந்தனவும், மார்பைத் துளைத்தனவுமாயின; பூதகணங் களின் கூட்டம் கொழுப்போடு மூளையையும், குடல்களையும் உண் பன ஆயின. ஆர்தல் – உண்ணல்.

**63. ஆவமொ டொத்தன வாடவர் நெஞ்சுக ளாகிய போதகமே**
**பூவல யத்துட லாருயிர் வானிடை புக்கன போதகமே**
**மேவுந ரிக்குவி ழைந்தன வெங்கரி வீழ்தலை யோதனமே**
**நாவல ருக்குமு ரைப்பரி தந்தந னந்தலை யோதனமே.**

[ஆவமொடு ஒத்தன ஆடவர்நெஞ்சுகள் ஆகியபோது அகமே, பூவலயத்து உடல் ஆர் உயிர் வானிடை புக்கன போதகமே; மேவும் நரிக்கு விழைந்தன வெம் கரி வீழ்தலை ஓதனமே, நாவ லருக்கும் உரைப்பு அரிது அந்த நனந்தலை யோதனமே ]

**விளக்கம் :-** வீரர்களின் நெஞ்சங்களாகிய இதய கமலங் களாகிய இடம் (பகைவர்களின் அம்புகள் தைக்கப் பெற்றமையின்) அம்பருத் தூணிகளை ஒத்தன; யானைகள், பூமியில் உடலும், வானிடை அரிய உயிரும் போகப் பெற்றன. வெம் கரிகளின் அறுபட்டு விழுந்த தலைகளாகிய உணவு விரும்பி வருகின்ற நரி களுக்கு விருப்பமான ஆகாரமாயின; அந்த விரிந்த இடத்தை யுடைய யோதனம் (படுகளம்) நாவல்ல புலவர்களுக்கு வர்ணித் துக் கூறல் அரியது, - என்பது பொருள். ஓதனம் - உணவு. யோதனம் - போர்; அது ஆகுபெயராய் யுத்தகளத்தையும், பின்னும் களச் சிறப்பையும் உணர்த்தி நின்றது.

நாராயணகோபாலர் படல்

கலிவிருத்தம்

**64. பேராண்மைசெய் சேனுபதி பின்னிட்டிடு முன்னே**
**தேராண்மையும் வில்லாண்மையு முடையானெதிர்**
**செல்லத்**

**தாராரகல் வரைமார்பினர் சஞ்சத்தகர் தாமும்**
**நாராயண கோபாலரு மணியாகந டந்தார்.**

[பேர் ஆண்மைசெய் சேனுபதி பின்னிட்டிடு முன்னே, - தேரா ஆண்மையும் வில் ஆண்மையும் உடையான் எதிர் செல்ல, தார் ஆர் அகல் வரை மார்பினர் சஞ்சத்தகர் தாமும், நாராயண கோபாலரும் அணியாக நடந்தார்.]

**விளக்கம் :-** சிறந்த ஆண்மைத் தொழிலைச்செய்யும் பாண்டவ சேனை நாயகனுன திட்டத்துய்மன் கிருபனுக்கு முன் நிற்க மாட்டாமல் பின்னிடுதற்கு முன்னே, தேராண்மையும், வில்லாண்மையும் உடைய விசயனுக்கு எதிரே செல்ல, மாலை பொருந்திய அகன்ற மலைபோன்ற மார்பர்களான சஞ்சத்தகரும், கண்ணனுக்கும் கோபியற்கும் பிறந்த நாராயண கோபாலர்களும், அணி கொண்டு சென்றனர், - என்பது பொருள்.

இதுவரை இறந்தவர்போக எஞ்சியவர்களான சஞ்சத்தகரும், நாராயண கோபாலர்களும் விசயனை எதிர்த்துச் சென்றனர், என்க. போர்த் துணையாகக் கண்ணனுல் துரியோதனனுக்குக் கொடுக்கப்பட்டவர், இந் நாராயண கோபாலர்.

**65 சட்கோணநெ டுந்தேர்மிசை வருசத்திய சேனன்**
**புட்கோவெழு தியசீர்பெறு பொன்னங்கொடி வலவன்**
**துட்கோடுள மழுகும்படி சுடுதோமர மொன்ருல்**
**முட்கோலுடன் வடமுஞ்சிதை வுறமோதினன் முரணுல்.**

[சட் கோணம் நெடுந் தேர்மிசை வருசத்திய சேனன், புள் கோ எழுதிய சீர் பெறு பொன் அம் கொடி வலவன் துட்கோடு உளம் மறுகும்படி சுடு தோமரம் ஒன்ருல், முள் கோலுடன் வடமும் சிதைவுஉற மோதினன் முரணுல்.]

**விளக்கம் :-** சட் கோணம் - அறுகோணம். கருடக் கொடியை உடையவனுன கண்ணன், - என்பது இரண்டாவது அடியின் பொருள். துட்கோடு - அச்சத்துடன். மறுகல் – மனங் கலங்கல் தோமரம் - உலக்கை, அல்லது கதை. முள் கோல் - இருப்பு முள்களை உடைய குதிரை ஓட்டும் கோல். வடம் - கடிவாளம்; ஆறு மூலைகளை உடைய தேரில் ஏறிவந்த சத்திய சேனன் என்பான், தோமரம் ஒன்ருல், கண்ணன் அஞ்சிக் கலங்கும்படியும், முட்கோலும், வடமும் சிதையும்படியும் வலிமையோடு தாக்கினுன் என்பதாம். சத்யசேனன் என்பவன், கர்ணனது புதல்வன், என்பர்.

66. புடையுண்டுள முருகிப்புயல் போல்வண்ணன் நகைத்துத்
தொடையுண்டம லர்த்தும்பைசு மக்குந்திர டோளர்
உடையுண்டதோர் கடலாமென வோடும்படி யவர்மேல்
தடையுண்டத டந்தேரினை விட்டான்முனை தரவே.

[புடையுண்டு உளம் உருகி புயல்போல் வண்ணன் நகைத்து, தொடை உண்ட மலர் தும்பை சுமக்கும் திரள் தோளார் உடையுண்டது ஓர் கடல் ஆம் என ஓடும்படி அவர்மேல் தடையுண்ட தடந்தேரினை விட்டான் முனைதரவே.]

**விளக்கம் :-** தோமரத்தால் அடியுண்ட கண்ணன் மனந் தளர்ந்து, சினத்தால் நகைத்து போர்மாலை அணிந்த பகைவீரர் மேல், தனது தடையுண்ட தேரைப் பகைவர் ஓடும்படி வேகமாகச் செலுத்தினான், என்பதாம். முனைதர - விரைவாக.

67. சென்றாடமர் புரிசேனையு டன்சித்திர சேனன்
வன்றாள்வலி மிகுமந்திர பாலன்றனை வானோர்
தன்றாதைய ளிக்கும்பல சரத்தால்விழ மோதிக்
கொன்றான்மிடல் வழுவாதகு ரக்குக்கொடி யுடையோன்.

[சென்று ஆடு அமர் புரி சேனையுடன் சித்திரசேனன் வல்தாள் வலி மிகு மந்திர பாலன்தனை வானோர், தன்தாதை அளிக்கும் பல சரத்தால் விழ மோதி கொன்றான் மிடல் வழுவாத குரக்குக் கொடியோன்.]

**விளக்கம் :-** மிடல் (வீரம்) வழுவாத குரக்குக் கொடியோன் - அருச்சுனன். (அவன்) பவகவர் எதிர் சென்று, மோதுகின்ற போரைச் செய்கின்ற சேனையுடன், சித்திரசேனன் என்பானையும், வலிய முயற்சியும், வலிமையும் உடைய மந்திரபாலன் என்பானை யும், தேவர்களுள். தனது தந்தையான இந்திரன் கொடுத்த பல திறப்பட்ட பாணங்களால், தோற்று விழும்படி தாக்கிக் கொன்றான். என்பதாம்.

68. முன்னாண்முத னாலினு முனைதோறுமு ருக்கித்
தன்னாலுயிர் கவராதவர் சஞ்சத்தகர் யாரும்
நன்னாரண கோபாலரு நாகங்குடி யேறப்
பொன்னாண்வரி சிலைகோலினன் மாலோனுயிர்
போல்வான்.

[முன் நாள்முதல் நால் நாலினும் முனைதோறும் முருக்கி தன்னால் உயிர் கவராதவர் சஞ்சத்தகர் யாரும், நல் நாரண கோபாலரும் நாகம் குடி ஏற, பொன் நாண் வரி சிலை கோலினன் மாலோன் உயிர் போல்வான்.]

**விளக்கம் :-** முன்நாள் - போரின் ஆரம்பநாள். நால் நாலினும் - பதினறு நாட்களிலும். திருமாலான கண்ணனது உயிர் போன்றவனுன விசயன், முதல்நாள் முதல் இன்றுவரை தன்னுல் உயிர் கவரப்படாதவராய் மிஞ்சிய சஞ்சத்தகர்களையும், கண்ணனுல் துரியோதனனுக்கு அளிக்கப் பெற்ற நல்ல நாராயண கோபாலர்களையும் வீரசுவர்க்கத்தில் குடி ஏறும்படி, தனது வில்லை வளைத்தான், என்பதாம். முனைதோறும் முருக்கி—எல்லாநாள் போரிலும் அழித்து.

**69. சஞ்சத்தகர் கண்ணன்றரு தனயோர்பல ரடைவே**
**எஞ்சப்பொரு தனன்வெஞ்சிலை யிமையோர்பதி**
**மகனென்(று)**
**அஞ்சிக்கள முழுதுங்கழு தாடக்குறை யாடக்**
**குஞ்சத்தொடு குடைவீழ்தர முதுகிட்டனர் கூடார்.**

[சஞ்சத்தகர் கண்ணன்தரு தனயோர் பலர் அடைவே எஞ்ச, பொருதனன் வெம் சிலை இமையோர் பதிமகன் என்று அஞ்சி, களம் முழுவதும் கழுது ஆட, குறை ஆட, குஞ்சத்தொடு குடை வீழ்தர முதுகு இட்டனர், கூடார்.]

**விளக்கம் :-** கூடார் - பகைவர். விசயன், சஞ்சத்தகரும் நாராயணகோபாலரும் ஆகிய பலரையும் ஒருங்கே அழியும்படி போர் செய்தனன் என்று கூடார் அஞ்சி, களம் முழுதும் பேய்களும் உடற்குறைகளும் கூத்தாட, தங்களது குடைகளையும் தரையில் விழுந்து கிடக்கும்படி விட்டுவிட்டு முதுகு கொடுத்து, ஓடினர் என்பதாம். குடையில் அலங்காரமாகக் கட்டப்படும் சின்னம், குஞ்சம்.

**70. முதுகிட்டவர் துரியோதனன் முன்வீழ்தலு நூறைம்**
**பதுகற்கியு நாலாயிரம் விகடப்பொரு பகடும்**
**மதுகைப்படு தேராயிர முங்கொண்டெதிர் வந்தான்**
**எதிர்கைப்பட வொருமன்னரு மில்லாவமர் வல்லான்.**

[முதுகு இட்டவர் துரியோதனன் முன் வீழ்தலும், நூறு ஐம்பது கற்கியும், நால் ஆயிரம் விகடம் பொரு பகடும், மதுகை படு தேர் ஆயிரமும் கொண்டு எதிர்வந்தான், எதிர்கை பட, ஒரு மன்னரும் இல்லா அமர் வல்லான்.]

**விளக்கம்:-** கற்கி - குதிரை. விகடம் - பெருமை. மதுகை - வலிமை. எதிர்கை பட - ஒப்பாக. முதுகுஇட்டவர் துரியோதனன் முன்னேவந்து விழலும், தனக்கு ஒப்பாக ஒருமன்னரையும் இது

வரை பெற்றிராதவனும், போரில் வல்லவனும் ஆன அந்தத் துரியோதனன், ஐயாயிரம் குதிரைகளையும், பெருமையோடு போர் செய்யவல்ல நாலாயிரம் யானைகளையும் ஆயிரம் வலிய தேர்களையும் உடன்கொண்டு, பகைவர் எதிர்வந்தான், என்பதாம்.

துரியோதனனோடு தருமன் பொரல்

**71. குருமித்துந டக்கின்றன னிவனோடுகொ டுங்கார்
உருமிற்பொரு குவமென்றுள முகளித்தெழ முனைமேல்
நிருமித்துந டந்தான்மனு நீதிக்கொரு நிலையான்
தருமத்தின துயிரென்றுரை தக்கோர்சொல மிக்கோன்.**

[குருமித்து நடக்கின்றனன், இவனோடு கொடுங்கார் உருமின் பொருகுவம் என்று, உளம் களித்து எழ, முனைமேல் நிருமித்து நடந்தான் மனுநீதிக்கு ஒரு நிலையான் தருமத்தினது உயிர் என்று உரை தக்கோர் சொல மிக்கோன்.]

**விளக்கம்**:- குருமித்தல் - ஆரவாரித்தல். கார் கொடு உருமின் பொருகுவம் - மேகத்தின் இடத்ததான கொடிய இடியைப் போல் பொருவோம். உகளித்து எழ - உற்சாகத்தோடு கிளர்ந்துஎழ. நிருமித்து - ஏவிக்கொண்டு. நீதிக்கு ஒருநிலையான் - நீதிக்கு இருப்பிடம் ஆனவன். தருமத்தினது உயிர் போன்றவன் என்று மேலோர் புகழ்ந்து பேசும்படி சிறந்தவன்,—என்பது, ஈற்றடியின் பொருள். நீதியின் இருப்பிடமும், தருமத்தின் உயிரும் ஆன தருமன், ''ஆரவாரத்தோடு துரியோதனன் போருக்கு வருகின்றான்; இடிபோல் இவனோடு போர் செய்வோம்,'' என்று உள்ளம் கிளர்ந்து எழச் சேனையின் முன்னணியில், எல்லோரையும் அவர்க்குரிய பணியில் ஏவிக்கொண்டு, முன்னே செல்லலானான், என்பதாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**72. துனைவெங்க போல விகட கடகரி
துரகம்ப தாதி யிரத மளவில
எனநின்ற சேனை முடுகி யயில்சிலை
யெறிதுங்க வாளொ டிகலி யெழவெதிர்
குனிசங்கு தாரை வயிர்கண் முதலிய
குணில்கொண்டு சாடு பறைகண் முதலிய
தனிதங்கொண் மேக மெனவு மலைபொரு
தமரங்கொள் வேலை யெனவு மதிரவே.**

[துணை வெம் கபோலம் விகடம் கடகரி துரகம் பதாதி இரதம் அளவு இல, என நின்ற சேனை முடுகி அயில் சிலை எறிதுங்கம் வாளொடு இகலி எழ, வெதிர் குனி சங்கு தாரை வயிர்கள் முதலிய, குணில் கொண்டு சாடு பறைகள் முதலிய, தனிதம் கொள் மேகம் எனவும், அலைபொரு தமரங்கொள் வேலை எனவும், அதிர, ஏ,—இதுவும் தொடரும் நான்கு செய்யுள்களும் குளகம்.]

**விளக்கம்:-** வேகமாகச் செல்லுகின்றனவும், வெவ்விய கன்னங்களை உடையனவும், விகடம் (மதக்களிப்பு) கொண்டனவு மான மதயானைகளும், குதிரைகளும், காலாள் இரதங்களும் அள வற்றன என்று சொல்லும்படி நின்ற,—இருதிறத்துச்சேனைகளும் விரைந்து, வேல் வில் எறிவாள் ஆகியவற்றோடு இகலி முன் எழுந்து வரவும்,—வெதிர் (வேய்ங்குழல்) குனிசங்கு, தாரை, வயிர் (ஊதுகொம்பு) முதலிய வாத்தியங்களும், குணில் (குறுந் தடி) கொண்டு அடிக்கும் பறைகள் முதலிய வாத்தியங்களும், இடியைக் கொண்ட மேகம் போலவும், அலைகள் மோதுகின்ற ஒலியைக்கொண்ட கடல் போலவும் அதிர,—(தொடரும்), என்பதுபொருள்.

73. கதிகொண்ட சேனை நடவ வெழுதுகள்
ககனஞ்சு லாவி யனில கதியுற
முதிரண்ட சூர கிரண மிருளெழ
முகில்பஞ்ச பூத வடிவு பெறவியந்
நதிவண்ட லாக வமர ருறைதரு
நகரம்பொன் வீதி புழுதி யெழமுழு
மதியங்க மாசு கழிய நிரைநிரை
வளரண்ட கூட முகடு மதிரவே.

[கதி கொண்ட சேனை நடவ எழுதுகள் ககனம் சுலாவி அனில கதி உற, முதிர் அண்ட சூர கிரணம் இருள் எழ, முகில் பஞ்ச பூதம் வடிவு பெற, வியத்நதி வண்டல் ஆக, அமரர் உறை தரு நகரம் பொன்வீதி புழுதிஎழ, முழுமதி அங்கம் மாசு கழிய, நிரைநிரை வளர் அண்ட கூடம் முகடும் அதிரவே, தொடரும்.]

**விளக்கம்:-** நடைவேறுபாடுகளைக்கொண்ட இருதிறத்தாரது சேனைகளும் நடப்பதால் எழுந்த புழுதிகள் வானத்தில் சுழன்று காற்றின் வேகத்தை அடைய, (அதனுல்ஒலி) மிகுந்த வானவெளி யிலுள்ள சூரியனது கிரணங்கள் இருள் உண்டாகவும்,—மேகம் ஐந்துபூதங்களின் வடிவத்தை அடையவும், வியந்நதி (வியத் நதி), அதாவது ஆகாசகங்கை சேருகவும், தேவர்களது நகரத் தின் பொன்மயமான வீதிகளில் புழுதி எழுந்து பரவவும், பூர்ண

சந்திர அங்கம் களங்கத்தை மிகுதியாகப் பெறவும், அடுக்குஅடுக்காக வளர்ந்துள்ள அண்டத்தின் மேல்முகடும் அதிர்ச்சி பெறவும், —(தொடரும்) என்பது பொருள்.

நீர், நெருப்பு, காற்று, ஆகாசம் என்ற நான்கு பூதங்களின் சம்பந்தங்கொண்ட மேகம், புழுதி படிதலால், ஐந்தாவது பூதமாகிய பூமியின் சம்பந்தத்தையும் பெற்றதால், "முகில் பஞ்ச பூத வடிவுபெற" என்றார். வியத்நதி என்ற வடமொழித்தொடர் **வியந்நதி** என்று திரிந்து நின்றது. கழிய, என்பது மிகுதிபெற, என்ற பொருளது; கழி, மிகுதிப் பொருளதான உரிச்சொல்.

**74 குதிகொண்ட வாசி வயவர் பலரொடு**
**குதிகொண்ட வாசி வயவர் குறுகினர்**
**துதிவெங்கை வேழ மறவர் பலரொடு**
**துதிவெங்கை வேழ மறவர் துதையினர்**
**அதிர்சண்ட வேக விரதர் பலரொடும்**
**அதிர்சண்ட வேக விரத ரணுகினர்**
**பொதிவெம்ப தாதி விருதர் பலரொடும்**
**பொதிவெம்ப தாதி விருதர் பொதுளவே.**

[குதி கொண்ட வாசி வயவர் பலரொடு குதி கொண்ட வாசி வயவர் குறுகினர், துதி வெம் கை வேழம் மறவர் பலரொடு துதி வெம் கை வேழம் மறவர் துதையினர், அதிர் சண்ட வேக இரதர் பலரொடும் அதிர் சண்ட வேக இரதர் அணுகினர், பொதி வெம் பதாதி விருதர் பலரொடு பொதி வெம் பதாதி விருதர் பொதுள, (தொடரும்)]

**விளக்கம் :-** குதிகொண்ட வாசி - குதித்தலையுடைய கதியைக் கொண்ட குதிரை. வெம் துதி கை - கொடிய துதிக்கை. அதிர் சண்ட வேக இரதர்- ஒலிக்கின்ற வேகம் மிக்க தேரில் ஏறியுள்ள வீரர். துதைதல் – நெருங்கல். பொதி-வலிய. பொதுள- நெருங்க. சதுரங்க சேனையின் வீரர்கள் ஒருவரோடு ஒருவர் போர் செய்ய நெருங்கினர் என்பதாம்.

வெற்றி வீரர், என்ற பொருளுடைய வயவர், மறவர், விருதர் என்ற சொற்கள் வந்திருத்தலால், இது பொருட் பின்வருநிலை அணி.

**75. புரிசெம்பொ னேமி விசையொ டிருகிரி**
**பொருவன்பு போல நவம ணியினொளி**
**விரிதந்த சோதி படல மிகுவன**
**மிசைகொண்ட தேர்கள் கடவ வலவர்கள்**

எரிசெங்க ணுக வரசு முரசமும்
எழுதும்ப தாகை நிருப ரிருவரும்
முரிதந்த சாப முடுகு பகழியின்
முகிறங்கு வான முழுது மறையவே.

[புரிசெம் பொன் நேமி விசையொடு இருகிரி பொரு வன்பு போல, நவமணியின் ஒளி விரிதந்த சோதி படலம் மிகுவன, மிசை கொண்ட தேர்கள் கடவ வலவர்கள் எரி செம் கண் நாகம் அரசும், முரசமும் எழுதும் பதாகை நிருபர் இருவரும் முரிதந்த சாபம் முடுகு பகழியின், முகில் தங்கு வானம் முழுதும் மறையவே, தொடரும்.]

**விளக்கம் :-** செம் பொன்னுல் ஆன சக்கரங்களின் விசை யோடு, (இழைக்கப்பெற்ற) நவமணிகளின் ஒளி விரித்த ஒளிக் கூட்டம் மிகுவனவாகிய, (தாங்கள்) ஏறியுள்ள தேர்களைப் பாகர் நடத்தவும்,—எரிகின்ற சிவந்த கண்களையுடைய சிறந்த நாகத் தையும் முரசத்தையும் கொடிகளில் கொண்ட துரியோதனன் தருமன் என்ற இரு அரசர்களும் வளைந்த விற்களினுல் முடுகும் அம்புகளால் மேகம் தங்கியுள்ள வானம் மறையவும், (தொடரும்), என்பது பொருள்.

76. அறன்மைந்தன் வாளி யடைய நயனமி
லவன்மைந்தன் வாளி விலக விரகுடை
விறன்மைந்தன் வாளி யடைய விரகிலி
விடுபுங்க வாளி விலக முறைமுறை
மறமும்பொ ருத சினமு மிருபுய
வலியுந்த வாம லரிது பொருதபின்
நிறமொன்று மேழு பகழி முழுகின
நிருபன்றன் மார்பு குருதி பொழியவே.

[அறன்மைந்தன் வாளி அடைய நயனம் இலவன்மைந்தன் வாளி விலக, - விரகு உடைவிறல் மைந்தன் வாளி அடைய விரகு இலி விடு புங்க வாளி விலக,- முறைமுறை மறமும், பொருத சினமும், இருபுயம் வலியும் தவாமல் அரிது பொருதபின், நிறம் ஒன்றும் ஏழு பகழி முழுகின நிருபன் தன் மார்பு, குருதி பொழியவே.]

**விளக்கம் :-** தருமன் அம்புகள் எதிரே வரலும் கண் இலாத வன் மகன் (துரியோதனன்) விடும் அம்புகள் அவற்றை விலக்க வும், வஞ்சனையுடைய வீரனுன துரியோதனனது அம்புகள் எதிர் வரவும், வஞ்சனையிலாத தருமன் விடும் சிறந்த அம்புகள் அவற்றை விலக்கவும்,—(இருவரும்) மாறிமாறி ஆற்றலும், அடங்

காத கோபமும், இருதோள்களின் வலியும் தவாமல் (அழியாமல்), அரிதே பொருதபின், (தருமன்ஏவிய) ஒளி பொருந்திய ஏழுஅம்பு நிருபன் (துரியோதனன்) தன் மார்பில் குருதி பெருகத் தைத்து உள்ளே சென்றன,—என்பது பொருள். விலக, என்பது விலக்க என்ற பொருளது.

**77.** **விரிகின்ற நீல கிரியி லிளவெயில்**
**விழுகின்ற தாரை யணைய வழகொடு**
**சொரிகின்ற சோரி யுடைய மகிபதி**
**சுளிவின்றி மீள வொருகைந் நொடியினின்**
**முரிகின்ற நீடு புருவ நிகரென**
**முனைகின்ற சாப முரிய விரைவொடு**
**தெரிகின்ற கோல்கண் முழுகி யறனருள்**
**திருமைந்தன் மார்பு குருதி பொழியவே.**

[விரிகின்ற நீலகிரியின் இளவெயில் விழுகின்ற, தாரை அணைய அழகொடு சொரிகின்ற சோரி உடைய மகிபதி, சுளிவு இன்றி மீள ஒரு கை நொடியினின், முரிகின்ற நீடு புருவம் நிகர் என முனை கின்ற சாபம் முரிய, விரைவொடு தெரிகின்ற கோல்கள் முழுகி அறன் அருள் திருமைந்தன் மார்பு குருதி பொழியவே,—இதுவும், தொடரும் இரண்டு செய்யுள்களும் குளகம்.]

**விளக்கம்:-** பரந்த நீலமலையில் (செந்நிறமுடைய) இள வெயில் விழுகின்ற ஒழுங்கை ஒத்த அழகோடு வழிகின்ற குருதியை உடைய துரியோதனன், தளர்தல் இல்லாமல் மீள ஒரு நொடிப் பொழுதில், வளைகின்ற நீண்ட புருவம் நிகர் என்னும்படி முனைகின்ற (பொருகின்ற) வில் வளைவுற வேகமாய் ஆய்ந் தெடுத்து விடுகின்ற அம்புகள், (தருமனது உடலில்) முழுகி அதன் பயனாய் அறன்மைந்தனான தருமனது மார்பில் குருதி பெருக,— (தொடரும்) என்பது பொருள்.

**78.** **மருமங்கள் சோரி வடிய விருவரும்**
**மலைகின்ற போதின் மதுகை நிலையொடு**
**தருமன்கு மார னகைகொ டவனிபர்**
**தலைவன்கு மார னுரக துவசமும்**
**அருமந்த தேரும் விசய வலவனும்**
**மடல்கொண்டு பாய்பு ரவியு மழிவுற**
**உருமஞ்ச நாணி யெறியு மொலியெழ**
**ஒளிவிஞ்சு நாலு பகழி யுதையவே.**

[மருமங்கள் சோரி வடிய இருவரும் மலைகின்ற போதில், மதுகை நிலையொடு தருமன் குமாரன் நகைகொடு, அவனிபர்

தலைவன் குமாரன் உரக துவசமும் அருமந்த தேரும், விசய வலவனும், அடல் கொண்டு பாய் புரவியும் அழிவுஉற, உரும் அஞ்ச நாணி எறியும் ஒலிஎழ, ஒளிவிஞ்சு நாலு பகழி உதையவே]

**விளக்கம்:-** மருமம் - மார்பு. மதுகைநிலை - உறுதியான நிலை. நகை - சினத்தின் எழுந்த சிரிப்பு. இருவரும் மார்பு வழி குருதி பெருகப் பொருகின்ற போது, தருமன், துரியோதனனது உரகக் கொடி, தேர், குதிரை, சாரதி அழியும்படி, இடியும் அஞ்சும்படி நாணின் ஒலி எழும்படி செய்து நான்கு பாணங்களைச் செலுத்த,— (தொடரும்) என்பதாம்.

அவனிபர் தலைவன் - அரசர்க்கு அரசனான திருதராட்டிரன். அருமந்த - அருமருந்து அன்ன, அதாவது மிகச் சிறந்த. நிலை- யில் தொழில் செய்வோர் நிற்க வேண்டிய உறுதியுடைய நிலை.

**79. இழிதந்து மீள விமய மனையதொ**
**ரிரதங்க டாவி யெதிரி யுரனிடை**
**அழிதந்து மீள வயில்கொண் முனையதோர்**
**அயில்கொண்டு வீசி யெறியு மளவையின்**
**மொழிதந்த வேலின் முனையு மொடிவுற**
**முரிவுண்டு கீறி வழியில் விழவெதிர்**
**பொழிதந்த தாலொர் பகழி யறனருள்**
**புதல்வன்கை வாகை புனையும் வரிவிலே.**

[இழிதந்து மீள இமயம் அனையது ஓர் இரதம் கடாவி, எதிரி உரன் இடை அழிதந்து மீள அயில் கொள் முனையது ஓர் அயில் கொண்டு வீசி எறியும் அளவையின், மொழி தந்த வேலின் முனை யும் ஒடி உற, முரிவு உண்டு கீறி வழியில் விழ, எதிர் பொழி தந்தது (ஆல்), ஓர் பகழி அறன் அருள் புதல்வன்கை வாகை புனையும் வரிவிலே.]

**விளக்கம்:-** இழி தந்து - தேரினின்று (துரியோதனன்) இழிந்து. உரன் இடை - மார்பிலே. அழிதந்து - அழியும்படி பாய்ந்து. மீள - திரும்பும்படி, அயில் கொள் முனையது ஓர் அயில்- கூரிய முனையுடைய ஒரு வேல். மொழிந்த வேல் - முன்னே கூறப்பட்ட அந்த வேல். முரிவு உண்டு - பிளப்புண்டு. கீறி - இரண்டுதுண்டாகி. வழியில் - இடைவழியில், பொழிந்தது - பிரயோகித்தது. ஆல்: அசை. துரியோதனன் வேறோர் தேரில் ஏறி வந்து, தருமன் மார்பே முறிய ஒரு வேலை எறிய உடனே தருமன் கைவில், அது ஒடிந்து விழுமாறு ஒருபாணத்தை ஏவியது, என்பதாம்.

## துரியோதனன் தோற்றல்

80. பிளவுண்டு வேல்வி ழுதலின் மகிபதி
பிழைகொண்ட வேழ மணைய மெலிவினன்
உளநொந்து நாணி யுருளு மிரதமும்
உடைதந்து போரு மொழியும் வகைசிலர்
கிளரம்பு வீசி யொருப வளமுது
கிரிநின்ற தாகு மெனமு னிலைபெறு
வளமைந்தன் வாய்மை யுரைசெய் தனன்மிசை
வருமும்பர் யாரு மிதய மகிழவே.

[பிளவுண்டு வேல் விழுதலின் மகிபதி பிழைகொண்ட வேழம் அணைய மெலிவினன், உளம் நொந்து நாணி உருளும் இரதமும் உடைதந்து போரும் ஒழியும் வகை சிலர் கிளர் அம்பு வீசி, ஒரு பவள முதுகிரி நின்றது ஆகும் என முன் நிலைபெறு, வளமைந்தன் வாய்மை உரை செய்தனன், மிசை வரும் உம்பர் யாரும் இதயம் மகிழவே.]

**விளக்கம்:-** வேல், பிளக்கப்பட்டுக் கீழே விழலும், (வேடர் வெட்டியபடுகுழியில்) தவறிப் போய் அகப்பட்டுக் கொண்ட யானை போல் தளர்ந்தவனாகிய துரியோதனன், மேலும் மனம் நொந்து, நாணி, சக்கரங்களோடு தேரும் உடையப்பெற்று, அவர் போர்க் களம் விட்டு அகலும்படியாக, கிளர் அம்பு சில பிரயோகித்து பழையதான பவளமலை ஒன்று நின்றதை ஒக்கும் என்னும்படி நிலை நின்ற, வெற்றி வீரனாகிய தருமன், வான்மிசை போர் காணவந்த தேவர்கள் மகிழும்படி வாய்மை சில கூறலானான், - என்பது பொருள்.

81. அளிதங்கு மாலை யரசு ரவையிலுன்
அதிவஞ்ச மாம னவனி கவர்வுற
எளிவந்த சூது பொருத விரகரி
தெளிதின்று பூச லெனமுன் விரவினை
ஒளிவிஞ்சு தேரு முடைய படைகளும்
உடையுண்டு நீயு முறுதி தவறினை
தெளிவென்ப தாசு மிலதுன் மனமுறு
செருவென்ற வீர மமையு மமையுமே.

[அளிதங்கு மாலை அரசர் அவையில், உன் அதிவஞ்சம் மாமன் அவனி கவர்வுற, எளிவந்த சூது பொருத விரகு அரிது, எளிது இன்று பூசல் என முன் விரவினை; ஒளி விஞ்சு தேரும் உடைய, படைகளும் உடையுண்டு நீயும் உறுதி தவறினை,

தெளிவு என்பது ஆசும் இலது. உன்மனம், உறுசெரு வென்ற வீரம் அமையும் அமையுமே!]

**விளக்கம்:-** அரச சபையில் உனது வஞ்சனைமிக்க மாமன் சகுனி, எம் ராஜ்யத்தை அபகரித்துக் கொள்ள, எளிமை பொருந்திய சூதை ஆடின விரகு (சூழ்ச்சி) செய்தற்கு அரியதே! இப்பொழுது போர் செய்தல் எளியது என்று எண்ணி என் முன் வந்து நிற்பவன் ஆனாய்; ஒளிமிக்க தேரும் படைக்கலன்களும் அழிபட்டு, நீயும் வலிமை ஒடுங்கினவனானாய்; உன் மனம் தெளிவு என்பதை ஒரு சிறிதும் உடையதன்று; மிக்க போரில் நீ பகை வென்ற வீரம், அமைவதொன்றே! என்று தருமன் கூறினான், என்பதாம். அமையும், அமையும், என்ற அடுக்கு இகழ்ச்சியின் பாற்படும்.

''சூது போர் அரியதே அன்றி, மோதுபோர் அரியதன்று என்று எண்ணி என்னை எதிர்க்க வந்தாய்; மோது போர் அரியது என்று எண்ணினையாயின், சூது போர்க்கே அயலினை ஏவிய நீ, மோது போருக்கு ஏன் முன் வந்தாய்?'' என்று தருமன் இகழ்ந்தான், என்க.

**82. அனிலன்கு மார னரச ரசனியென்**
**அனுசன்சொல் வாய்மை பழுது படுமென**
**உனையின்று கோற லொழிவ தலதுநின்**
**னுரமென்கொ லாகு மெனது கணையெதிர்**
**புனைதும்பை மாலை சருகு படவெழு**
**பொடிமண்ட வோடி மறைக விரைவுடன்**
**இனியெங்க ளாண்மை யுரைசெய் தெதுபயன்**
**எதிர்வந்து நாளை யணிக விகலியே.**

[அனிலன் குமாரன் அரசர் அசனி என் அனுசன் சொல் வாய்மை பழுது படும் என, உனை இன்று கோறல் ஒழிவது அலது, நின் உரம் என் கொல் ஆகும் எனது கணை எதிர்? புனை தும்பை மாலை சருகுபட எழுபொடிமண்ட ஓடி மறைக விரைவுடன்; இனி எங்கள் ஆண்மை உரைசெய்து ஏது பயன்? எதிர் வந்து நாளை அணிக இகலியே.]

**விளக்கம்:-** ''வாயுகுமாரனும், அரசர்க்கு இடிபோன்றவனும், எனது தம்பியுமான வீமன், துகிலுரிந்த காலத்துச் சொன்ன சபதமொழி தவறுமே, என்று, உன்னைக் கொல்லாமல் விடுகின்றேன்; உனது வலிமை என் அம்புகளுக்கு எதிர் என்ன செய்ய முடியும்? புழுதியை மிகுதியாகக் கிளப்பிக் கொண்டு ஓடிச் செல்க. எங்கள் ஆண்மையைச் சொல்லி ஏது பயன்? அதாவது, எல்

லோரும் அறிந்த ஒன்றே அது. அணிகொண்டு நாளை உபபலத்தோடு களம் வருக,''—என்று தருமன் கூறினான், என்பதாம்.

தருமன் வேல் எறிந்து வீழ்த்தல்

83. முதிர்குந்தி போசன் மகடன் மகனிவை
மொழிதந்த போழ்து பெருக முறுவல்செய்(து)
அதிருஞ்சு யோத னனுமொ ருயர்கதை
யவன்மன் றன் மார்பி னுரனெ டெறிதர
எதிர்சென்று நீதி நிருப னுறுமவன்
எறிதண்டு கூறு படவு மெறிபவன்
விதிருண்டு பாரில் விழவு மொருதனி
விறலுந்து வேல்கொ டுருவ வெறியவே.

[முதிர் குந்திபோசன் மகள்தன் மகன் இவை மொழிதந்த போது, பெருக முறுவல் செய்து, அதிரும் சுயோதனனும் ஒரு உயர் கதை அவன் மன்றல் மார்பின் உரனொடு எறிதர, எதிர் சென்று நீதி நிருபன், உறும் அவன் எறிதண்டு கூறுபடவும், எறிபவன் விதிருண்டு பாரில் விழவும் ஒரு தனி விறல் உந்து வேல் கொடு உருவ எறியவே'—குளகமாய்த்தொடரும்.]

**விளக்கம் :-** குந்திபோசன் மகள்தன் முதிர் (மூத்த) மகன். அவன் இகழ்ந்து கூறியபொழுது, வீரமுழக்கம் செய்யும் துரியோதனனும் சிரித்து, தருமன் மார்பில் ஒரு கதையை வலிமையோடு வீசினான்; தருமனும் எதிர் சென்று, தன்னைநோக்கி வருதலுறும், கதை கூறுபடவும் எறிந்தவன் நடுக்கத்தோடு தரைசாயவும் ஒப்பற்ற ஒரு வேலை, உடலில் தைத்து ஊடுருவும்படி எறிந்தான்; என்பதாம்.

குந்தி வசுதேவரின் சகோதரி; சூரன் என்பவன் குந்தியின் தந்தை. அவன் தனது நண்பனான குந்திபோசனுக்கு அவளைத் தத்துக்கொடுத்தான். குந்திபோசனால் பெண் போல் வளர்க்கப் பட்டவள் குந்தி என்ற பெயரால் அழைக்கப்படலானாள். பிருதை, என்பது அவளது இயற்பெயர்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

கர்ணன்முதலியோர் அவனை அடுத்தல்

84. சூழ்ந்தது விதிகொல் பாகும் துரகமுந் தேரும் வீழ
வீழ்ந்தனன் வேந்தர் வேந்தன் மெய்தவா வேந்தன் வேலால்
தாழ்ந்தது நமது கொற்ற மெனநடுத் தரிப்பொன் றின்றி
ஆழ்ந்தபைங் கடலோ டொப்பா னடுத்தன னங்கர் கோமான்.

[சூழ்ந்தது விதிகொல்? பாகும் துரகமும் தேரும் வீழ வீழ்ந்த னன் வேந்தர் வேந்தன் மெய்தவா வேந்தன்வேலால்; தாழ்ந்தது நமது கொற்றம் என நடு தரிப்பு ஒன்று இன்றி, ஆழ்ந்த பைங்கடலோடு ஒப்பான் அடுத்தனன் அங்கர் கோமான்.]

**விளக்கம்:-** வேந்தர் வேந்தன்-துரியோதனன். மெய்தவா வேந்தன் - சத்தியம் தவருத தருமன். நடு தரிப்பு ஒன்று இன்றி - (மனம்) நிலைநிற்றல் இல்லாமல், அதாவது மனக்கலக்கத் துடன். ஆழ்ந்த பைங்கடலை ஒப்பான் - துரியோதனனிடம் ஆழ மான நட்பை உடையவனுன கர்ணன். ''துரியோதனன் தரை வீழ்ந்தது விதியின் காரியமோ!'' என்று எண்ணிக்கொண்டு, அவனைக் கர்ணன் நெருங்கினுன், என்பதாம்.

**85. முற்படு தினத்திற் றந்தை முடிந்தமெய் வருத்தத் தோடு**
**கற்படு புண்ணின் மீளத் தடிபடு கணக்கிற்றுக**
**வெற்படு தடந்தோள் வேந்தன் வீழ்ந்தன னென்று வெய்தின்**
**எற்படு பரிதி யென்னத் தோன்றின னிவுளித் தாமா.**

[முன்படு தினத்தில் தந்தை முடிந்த மெய் வருத்தத்தோடு, கல்படு புண்ணின் மீள தடிபடு கணக்கிற்று ஆக, வெற்பு அடு தடந்தோள் வேந்தன் வீழ்ந்தனன், என்று வெய்தின் எல்படு பரிதிஎன்ன தோன்றினன் இவுளித்தாமா.]

**விளக்கம்:-** மெய் - (ஆகுபெயர்) மனம். முந்திய நாள் தந்தையை இழந்த வருத்தத்தோடு அசுவத்தாமன், கல்லால் உண்டான புண்ணில் தடியடி பட்டதன்மையதாகும்படி வெற்பு அடுதடந்தோள் வேந்தன் (துரியோதனன்) விழுந்தான், என்று வருந்தினவனுய், உக்கிரமாகப் பகலில் தோன்றும் சூரியன் போல், (துரியோதனனிடம்) வந்தான்,—என்பதாம்.

**86. வேட்டவெங் களிறூே டொப்பான் மேதினிக் கரசன் விற்போர்ப்**
**பூட்டரும் புரவித் தேரும் பொன்றிய புலனு மாகி**
**ஒட்டமி ருனே யான்கை வேலினு லுடைந்த மாற்றம்**
**கேட்டன னவர்க்கு முன்னே கிருபவா சிரியன் வந்தான்.**

[வேட்டம் வெம் களிறூடு ஒப்பான் மேதினிக்கு அரசன் வில் போர் பூட்டு அரும்புரவி தேரும் பொன்றிய புலனும் ஆகி, ஒட்டம் இல் தானையான் கை வேலினுல் உடைந்த மாற்றம் கேட்டனன், அவர்க்கு முன்னே கிருப ஆசிரியன் வந்தான்.]

**விளக்கம்:-** வேட்டம் வெம் களிறு - வேட்டையில் கைப் பற்றப்பட்ட யானை. பொன்றிய புலன் - அழிந்த உணர்வு. ஓட்டம் இல்தானையான் - பின்வாங்குதல் இல்லாத சேனையை உடைய தருமன். துரியோதனன் விழுந்தது கேட்டு, கிருபன் என்ற வில்லாசிரியன் கர்ணன், அசுவத்தாமன் ஆயவர் எதிர் ஓடி வந்தான், என்பதாம்.

**87.** **காப்புடை யொற்றை நேமிக் காவலன் றும மார்பில்**
**நாப்புகல் வாய்மை யான்ற ணுண்மலர்ச் செங்கை வைவேல்**
**கோப்புற வீழு முன்னர்க் கொதித்தெழு மனத்த ணுகித்**
**தாப்புலி பாய்ந்த தென்னச் சல்லியன் றுனும் வந்தான்.**

[காப்பு உடை ஒற்றை நேமி காவலன் தாமம் மார்பில், நா புகல் வாய்மையான் தன் நாள் மலர் செம்கை வைவேல், கோப்பு உற வீழும் முன்னர், கொதித்து எழும் மனத்தன் ஆகி, தா புலி பாய்ந்தது என்ன சல்லியன்தானும் வந்தான்].

**விளக்கம் :-** காத்தலைச் செய்கின்ற ஒற்றை நேமி அதாவது ஆக்ஞாசக்கரத்தையுடைய துரியோதனன் மாலை அணிந்த மார்பில், என்பது முதலடியின் பொருள். நாவால் சொல்லும் சத்திய மொழியை உடையவனை தருமனது புதிய மலர் போன்ற கையின் வேல்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். தருமனது வேல் கோத்தல் பொருந்த துரியோதனன் விழுமுன்னே, (விழுந்தவுடன்) கொதித்த மனத்தினனாய், தாவும் புலிபோல் பாய்ந்து சல்லியன் வந்து சேர்ந்தான்,—என்று ஈற்றடிகளின் பொருள்.

விசயன் முதலியோர் தருமனை அடுத்தல்

**88.** **எப்பெருஞ் சேனை யோடு மெக்குல வேந்தும் வந்து**
**தப்பருங் கொற்ற வேற்கைத் தருமனை வளைந்த காலை**
**அப்பெருந் தானை தன்னி லருச்சுன னாதி யான**
**ஒப்பருந் தரணி பால ரிவற்கும்வந் துதவி னாரே.**

[எ பெருஞ்சேனையோடும் எ குலவேந்தும் வந்து, தப்பு அருங் கொற்றம் வேல்கை தருமனை வளைந்த காலை, அ பெருந்தானை தன்னில் அருச்சனன் ஆதி ஆன ஒப்பு அருந்தரணி பாலர் இவற்கும் வந்து உதவினாரே.]

**விளக்கம் :-** உயர்குலம் தோன்றிய எல்லா அரசரும் தவறாத வெற்றியுடைய தருமனை வளைத்துக்கொண்ட பொழுது, அந்தப் பெரிய பாண்டவ சேனையில் உள்ள விசயன் முதலான ஒப்பு அற்றவரான அரசர்கள் தருமனுக்கும் வந்து உதவி செய்தார்கள், —என்பதாம்.

பாண்டவர் வெற்றி

**89. இருபடை யரசுந் தம்மி லீரிரண் டங்க மாகி**
**வருபடை கொண்டு நின்று வல்லவா பூச ருக்கிப்**
**பொருமர வுடைப்ப தாகைப் பூபதி தனையுங்**
**கொண்டாங்(கு)**
**ஒருபடை கைக்கொ ளாம லொன்னல ருடைந்து போனர்.**

[இருபடை அரசும் தம்மில் ஈர் இரண்டு அங்கம் ஆகி வருபடை கொண்டு நின்று, வல்ல ஆ பூசல் தாக்கி, பொரும் அரவு உடை பதாகை பூபதிதனையும் கொண்டு ஆங்கு ஒருபடை கை கொளாமல் ஒன்னலர் உடைந்து போனர்.]

**விளக்கம் :-** சிறந்த ஆயுதங்களில் வல்லவர்களான இரு திறத்து அரசர்களும். நான்கு அங்கமாக வரும் சதுரங்கசேனையைத் துணையாகக் கொண்டு எதிர்த்து தங்களால் இயன்றவழி போரைத் தாக்கிச் செய்து, ஆங்கு (அப்போரில்) பகைவர் (கௌரவர்) தோற்று, உணர்வற்றுக்கிடந்த துரியோதனனையும் எடுத்து கொண்டு, ஆயுதங்களை எல்லாம் இழந்தவர்களாய், பின்னிட்டு ஓடினர், என்பதாம்.

பொரும் அரவு......பூபதி — துரியோதனன். ஒரு படை கை கொள்ளாமல், அதாவது ஆயுதங்களைக் கையில் கொள்ளாமல், அதாவது ஆயுதங்களை எல்லாம் இழந்து, என்பது பொருள்.

**90. நாகையாப் புகழான் பெண்ணை நதிவ ளஞ்சுரக்கு நாடன்**
**வாகையாற் பொலிதிண் டோளான் மாகதக் கொங்கர்**
**கோமான்**
**பாகையாட் கொண்டான் செங்கைப் பரிசுபெற் றவர்நெஞ்**
**சென்ன**
**ஓகையாற் செருக்கி மீண்டா ருதிட்டிரன் சேனை யுள்ளார்.**

[நா கையா புகழான் பெண்ணை நதி வளம் சுரக்கும் நாடன் வாகையால் பொலிதிண் தோளான், மாகதம் கொங்கர் கொமான், பாகை ஆட்கொண்டான் செம்கை பரிசு பெற்றவர் நெஞ்சு என்ன, ஓகையால் செருக்கி மீண்டார் உதிட்டிரன் சேனை உள்ளார்.]

**விளக்கம்:-** நாவிற்குக் கைக்காத அதாவது இனிய புகழை யுடையவனும் பெண்ணையாற்றின் நீரால் வளம் மிக்கதான திருமுனைப்பாடி நாட்டையுடையவனும், வெற்றியால் விளங்குகின்ற திண்ணிய தோள்களை உடையவனும், மாகத கொங்கு நாட்டின் தலைவனும், வக்க பாகை என்ற நகரத்தில் அரசு புரிபவனுமான வரபதி ஆட்கொண்டான் என்னும் வேந்தன

சிவந்த இருகைகளினாலும் கொடுக்கப்படும் பரிசில் பெற்றவரின் மகிழ்ச்சியின் கிளர்த்த நெஞ்சு போல, தருமன் சேனையில் உள்ளார் வெற்றியினால் மனம் செருக்கிப் பாசறை சென்றார்,— என்பது பொருள்.

அத்தமனமும் மறுநாள் உதயமும்

**91. அருக்கனுந் தருமன் மைந்த னாண்மையு நிலையுங் கண்டு
வெருக்கொளு நிருப ரென்ன மேற்றிசை வேலை மூழ்கிச்
சுருக்கமில் கங்குல் காலஞ் சென்றபின் சுதன்மே லன்பு
பெருக்கவுண் டாக மீண்டுங் குணகடல் பிறந்திட் டானே.**

[அருக்கனும் தருமன் மைந்தன் ஆண்மையும் நிலையும் கண்டு வெரு கொளும் நிருபர் என்ன மேல் திசை வேலை மூழ்கி, சுருக்கம் இல் கங்குல் காலம் சென்ற பின் சுதன் மேல்அன்பு பெருக்க உண்டாக, மீண்டும் குணகடல் பிறந்திட்டான், ஏ.]

**விளக்கம்:-** தருமனது ஆண்மையும், வெற்றி நிலையுங்கண்டு அஞ்சி ஓடிய அரசர் போல் (சூரியன்) மேலைக்கடலில் மூழ்கி மறைந்து நீண்ட இரவு கழிந்தபின், மகனான கர்ணன் மேல் அன்பு மிக உண்டாக, அவனைக் காணவருவான்போல, மறுபடியும் கீழைக்கடலில் தோன்றினான், என்பது பொருள்.

முதலிரண்டடி, உவமை அணி. ஈற்றடிகள், ஏதுத்தற் குறிப்பேற்றம்.

**பதினாறும் போர்ச் சருக்கம் முற்றும்.**

# 17. பதினேழாம் போர்ச் சருக்கம்

## எழுசீர் ஆசிரிய விருத்தம்

### கடவுள் வணக்கம்

1. **ஈரொரு பிறப்பி னொருசிறு குறளா
யாவருந் தேவரும் வியப்பக்
காரொரு வடிவு கொண்டெனச் சென்று
காவல்கூர் மாவலி யளந்த
நீரொரு கரத்தில் வீழுமுன் றரங்க
நீனிற மகரநீ ருடுத்த
பாரொரு கணத்தி லளவிடுங் கமலப்
பாதனூர் நாதனு நமக்கே.**

[ஈர் ஒரு பிறப்பின் ஒரு சிறு குறளாய் யாவரும் தேவரும் வியப்ப, கார் ஒரு வடிவு கொண்டு என சென்று, காவல் கூர் மாவலி அளித்த நீர் ஒரு கரத்தில் வீழும் முன் தரங்கம் நீல் நிறம் மகரம் நீர் உடுத்த பார் ஒரு கணத்தில் அளவு இடும் கமல பாதனூர், நாதனும் நமக்கு, ஏ.]

**விளக்கம்:**- தேவரும் யாவரும் வியப்ப கார் ஒரு வடிவு கொண்டென, ஈர் ஒரு பிறப்பின் ஒரு சிறு குறளாய்ச் சென்று, காவல் கூர் மாவலி......கமல பாதனூர் நாதனூர், —என்று அன்வயிக்க. ஈர் ஒரு பிறப்பு — இருவகைப்பட்ட பிறப்பு, அதாவது உற்பத்தியும், உபநயன ஸம்ஸ்காரத்தால் ஆகும் பிறப்பும், ஆக இருபிறப்பு பிராமண குலப்பிறப்பு. காவல்கூர் மாவலி - மூவுலகத்தையும் காத்தலைச் சிறக்கச் செய்த மகாபலிச் சக்கரவர்த்தி, மகர நீர்—சுறுமீன்களைத் தன்னிடம் கொண்ட சமுத்திரம். மாவலியினிடம் தானம் ஏற்றுக் கடலால் சூழப் பெற்ற மண்ணுலகை ஒரு நொடியில் அளந்துகொண்ட தாமரை போன்ற திருவடிகளையுடைய பெருமான், எமக்குத் தலைவர் ஆவர், — என்று புலவர் வணங்கினர், என்பதாம்.

### கௌரவர் களம் குறுகல்

2. **அற்றை சமரி லமர்முனைந் தாற்ரு
தழிந்துபோ மவனிபர் பலரும்
மற்றைநா ளலகில் புவனமு மின்றே
மடியுமென் றனைவரு மயங்க**

**ஒற்றைவெண் சங்கும் பல்வகைப் பறையும்**
**ஓதவான் கடலென வொலிப்பக்**
**கற்றைவெண் கவரி கால்பொரத் தனிப்பொற்**
**கவிகைநீ ழலிற்களங் கலந்தார்.**

[அற்றை வெம் சமரில் அமர் முனைந்து ஆற்றுது அழிந்து போம் அவனிபர் பலரும் மற்றை நாள் அலகில் புவனமும் இன்றே மடியும் என்று அனைவரும் மயங்க, ஒற்றை வெண் சங்கும் பல்வகை பறையும் ஓதம் வான் கடல் என ஒலிப்ப, கற்றை வெண் கவரி கால் பொர தனி பொன் கவிகை நீழலில் களம் கலந்தார்.]

**விளக்கம்:**— அன்றைய, அதாவது பதினாறும் நாள் போரில் போர் செய்து, முன் நிற்க மாட்டாமல் தோற்றுப் பின் வாங்கின அரசர் எல்லோரும் மற்றைநாள், அதாவது பதினேழாம் நாள் அளவு இந்த பூமி முழுவதும் இன்றே அழியும், என்று எல்லோரும் மனங்கலங்கி நிற்கும்படி, ஒப்பற்ற வெள்ளிய சங்குகளும், பலவகைப்பட்ட பறைகளும் கடல்போல் ஒலிக்க, வெண்சாமரங்கள் காற்றை வீச, ஒப்பற்ற பொன்காம்புகளைக் கொண்ட குடைகளின் நிழலில் யுத்தக்களம் போய்ச் சேர்ந்தார்,—என்பது பொருள். ஓதம்—அலை.

**3. எண்ணிரு தினத்திற் பட்டபல் படையும்**
**ஈண்டுமீண் டெழுந்தன வென்னும்**
**வண்ணமோ ரளவில் வாசியுந் தேரும்**
**மதசயி லமும்பதா திகளும்**
**விண்ணுமண் ணகமுந் தெரிவுரு வழக்கின்**
**வெங்கள முழுவதுங் கஞல**
**அண்ணலந் தடக்கைக் கெதிரிலா வண்மை**
**ஆண்டகை யரசுட னடந்தான்.**

[எண் இரு தினத்தில் பட்ட பல் படையும் ஈண்டு மீண்டு எழுந்தன என்னும் வண்ணம் ஓர் அளவு இல் வாசியும் தேரும் மதசயிலமும் பதாதிகளும், விண்ணும் மண் அகமும் தெரிவுரு வழக்கின் வெம்களம் முழுவதும் கஞல, அண்ணல் அம் தடக் கைக்கு எதிர் இலா வண்மை ஆண் தகை அரசுடன் நடந்தான்.]

**விளக்கம் :-** எண்இருதினம் - பதினாறுநாள். மதசயிலம்- யானை. தெரிவுரு வழக்கின் - தெரியமுடியாத தன்மையில். கஞல்-

நெருங்க. பெருமையுடைய அழகிய விசாலமான கைகளுக்கு ஒப்பு இலாத ஈகைத் தன்மையையுடைய ஆண்மைக் குணமுடைய கர்ணன் துரியோதனனுடன் போர்க்களம் அடைந்தான், என்பது ஈற்றடியின் பொருள்.

**4. சென்னியின் மகுட மணிவெயி லெறிப்பத்**
**திருக்குழை மணிவெயி லெறிப்ப**
**மன்னிய பொலம்பூண் மணிவெயி லெறிப்ப**
**வனைகழல் மணிவெயி லெறிப்பத்**
**தன்னைமுன் பயந்தோன் றன்னினும் வடிவம்**
**தயங்குசெஞ் சுடர்வெயி லெறிப்பக்**
**கன்னனன் றிருந்த வழகினை யாரே**
**கண்டுகண் களிப்புரு தொழிந்தார்.**

[சென்னியில் மகுடம் மணி வெயில் எறிப்ப, திரு குழை மணி வெயில் எறிப்ப, மன்னிய பொலம் பூண் மணி வெயில் எறிப்ப, வனைகழல் மணி வெயில் எறிப்ப, தன்னை முன் பயந்தோன் தன்னினும் வடிவம் தயங்கு செம் சுடர் வெயில் எறிப்ப, கன்னன் அன்று இருந்த அழகினை யாரே கண்டு களிப்பு உருது ஒழிந்தார்.]

**விளக்கம் :-** கர்ணன் அன்று தன்னை அளித்த சூரியனினும் அதிகமான பொலிவுடன் விளங்க, அந்த அழகினை எல்லோரும் கண்டு களித்தனர், என்பதாம். எறிப்ப, என்ற சொல் ஒரே பொருளில் பலவிடங்களில் வந்திருப்பதால், இது **சொற்பொருள் பின்வரு நிலை அணி** ஆகும்.

பாண்டவர் களம் சேரல்

**5. ஒருங்களப் பரிய பதாகினிக் குழாமும்**
**உயிர்க்குயி ரானதம் பியரும்**
**அருங்களக் கனிகொள் வண்ணனுந் தானும்**
**அறனரு ளறனுடை யரசன்**
**பெருங்களப் பரப்பி னணிபெற வணிந்து**
**பேருல குய்யுமா றிருண்ட**
**கருங்களத் தவனைக் காசினித் தேர்மேற்**
**கண்டெனக் காணுமா நின்றான்.**

[ஒருங்கு அளப்பு அரிய பதாகினி குழாமும், உயிர்க்கு உயிரான தம்பியரும், அரு கள கனிகொள் வண்ணனும் தானும், அறன் அருள் அறன் உடை அரசன், பெருங் களம் பரப்பின்

அணிபெற அணிந்து பேர் உலகு உய்யும் ஆறு, இருண்ட கருங் களத்தவனை, காசினி தேர் மேல் கண்டு என காணும் ஆ(று), (ஒரு தேரின் மேல்) நின்றுன்.]

**விளக்கம் :-** ஒருங்கு அளப்பு அரிய பதாகினி குழாம் - ஒரு சேர அளவிட்டுச் சொல்லுதற்கு அரிய தொகை கொண்ட சேனையின் கூட்டம். அருங் கள கனி கொள் வண்ணன் – நன்கு பழுத்த சிறந்த களாப்பழத்தின் நிறத்தைக் கொண்ட கண்ணன். அறன் அருள் அறன் உடை அரசன் - யமதர்மராசன் அளித்த அறத்தைப் பற்றுக் கோடாக உடைய அரசனுன தருமன். உலகு உய்யுமாறு..... காசினி தேர் மேல் கண்டென – உலகம் உய்யுமாறு (கரிய விஷத்தை உண்டு) கறுத்த கண்டத்தையுடைய சிவபெருமான் பூமியாகிய தேரில் இருக்கக் கண்டாற் போல. தருமன், சேனைக்கூட்டமும், தம்பியரும், கண்ணனும், தானும், பெரிய யுத்தபூமியில் பரந்த இடத்திலே அழகாக அணிவகுத்துச் சென்று நீலகண்டத்தையுடைய சிவபிரானைப் பூமியாகியதேரில் கண்டாற் போல், ஒரு தேரின்மேல் (தருமன் எல்லோரும் தன்னைக் காணும்படி) நின்றுன், என்பதாம்.

### தருமன் வினவும் கண்ணன் பதிலும்

**6. நின்றவக் குரிசி லருச்சுனன் றேர்மேல்**
**நின்றரு ணீலமே னியனை**
**மன்றலந் துளப மாலைமா தவனை**
**வழிபடு மவர்க்குவான் றுணையைத்**
**தன்றடங் கண்ணே டிதயமுத் தரும்பத்**
**தாளிணை முடியுற வணங்கி**
**இன்றைவெஞ் சமரி லிரவிதன் சேய்வான்**
**எய்துமோ வியம்புதி யென்றுன்.**

[நின்ற அ குரிசில், அருச்சுனன் தேர் மேல் நின்றருள் நீலம் மேனியனை, மன்றல் அம் துளப மாலை மாதவனை, வழிபடுமவர்க்கு வான் துணையை, தன் தடங்கண்ணேடு இதயம் மனம்) முத்து அரும்ப, தாள் இணை முடி உற வணங்கி, ''இன்றை வெம் சமரில் இரவி தன் சேய் வான் எய்துமோ? இயம்புதி,'' என்றுன்.]

**விளக்கம் :-** தன் அடியார்க்குச் சிறந்த துணைவனுன கண்ணனைத் தருமன், தன் கண்ணும் மனமும் கரைந்து புளகிக்கும்படி வணங்கி ''இன்றைப் போரில், கர்ணன், வான் அடைவானே, சொல்லுதி!'', என்று கேட்டான் என்பதாம்.

7. இத்தின மிரவி சிறுவனும் விசயன்
ஏவிஞ லிறந்திடு நாளை
தத்தின புரவித் தேர்ச்சுயோ தனனுஞ்
சமீரணன் றனயஞன் மடியும்
அத்தின புரியு மீரிரு கடல்சூ
ழவனியு நின்னவா மென்ருன்
சித்தின துருவா யகண்டமுந் தானுஞ்
செய்யகட் கருணையந் திருமால்.

[இதினம் இரவி சிறுவனும் விசயன் ஏவிஞல் இறந்திடும்; நாளை தத்தின புரவி தேர் சுயோதனனும் சமீரணன் தனயஞல் மடியும்; அத்தின புரியும் ஈர் இரு கடல் சூழ் அவனியும் நின்ன ஆம் என்ருன், சித்தினது உரு ஆய் அகண்டமும் தான் ஆம் செய்ய கண் கருணை அம் திருமால்.]

**விளக்கம்:-** ஞானவடிவினஞய், எல்லாப் பொருள்களும் தாஞகி, செய்ய கண்களையும், நிறைந்த கருணையையும் உடைய அழகிய திருமாலான கண்ணன், "இன்று கர்ணன் விசயன் அம்பிஞல் இறப்பான், நாளைத் துரியோதனன் வாயுகுமாரஞன வீமஞல் இறப்பான்; அத்தினபுரியும் நான்கு கடல்களால் சூழப் பட்ட பூமியும் உன்னது ஆம்", என்று பதில் அளித்தான்,—என்பதாம்.

கண்ணனைத் தருமன் பாராட்டல்

8. செங்கண்மா லுரைத்த வின்சொலா ரமுதஞ்
செவிப்படச் சிந்தனை தெளிவுற்(று)
எங்கண்மா னமுந்தொல் லாண்மையும் புகழும்
நீயலால் யார்நிலை யிடுவார்
வெங்கண்மா சுணத்தோன் வஞ்சனைக் கடலின்
வீழ்ந்தழுந் தாவகை யெடுத்தின்(று)
அங்கண்மா நிலமுந் தந்தனை யெனப்பே
ரறத்தின்மா மகனிவை யுரைப்பான்.

[செங்கண் மால் உரைத்த இன் சொல் ஆர் அமுதம் செவி பட, சிந்தனை தெளிவுற்று எங்கள் மானமும், தொல் ஆண்மையும் புகழும் நீ அலால் யார் நிலையிடுவார்? வெம்கண் மாசுணத்தோன் வஞ்சனை கடலின் வீழ்ந்து அழுந்தா வகை எடுத்து, இன்று அம் கண்மா நிலமும் தந்தனை, என பேர் அறத்தின் மாமகன் இவை உரைப்பான்.]

**விளக்கம் :-** செய்யுள் சுலபமானதே. கண்ணனது அமுதம் போன்ற மொழி கேட்டுத் தெளிவு கொண்ட தருமன், "எங்கள் மானம் ஆண்மை புகழ் ஆயவற்றைக் காத்து, துரியோதனனது வஞ்சனையில் பட்டு அழியாமல் எங்களையும் காப்பாற்றியருளினாய்", என்று கூறி மேலும் கூறுபவனானான் என்பதாம். விழா வகை எடுத்து - விழாவகை காத்து.

**9. பொங்கழற் சிந்தைச் சுயோதனன் கங்கைப்**
**புனல்விளை யாட்டிடைப் புதைத்த**
**வெங்கழு முனையில் விழாமலோ ரளியாய்**
**வீமனுக் காருயி ரளித்தாய்**
**பைங்கழ லரச ரவையினில் யாமும்**
**பார்த்திருந் தலமரப் பயந்த**
**நுங்கழ லனையா ளாணமுந் துகிலும்**
**நோக்கினை காக்குநா யகனே.**

[பொங்கு அழல் சிந்தை சுயோதனன் கங்கை புனல் விளையாட்டிடை புதைத்த வெம் கழு முனையில் விழாமல் ஓர் அளியாய் வீமனுக்கு ஆர் உயிர் அளித்தாய்; பைங்கழல் அரசர் அவையில் யாமும் பார்த்திருந்து அலமர, பயந்த நுங்கு அழல் அனையாள் நாணமும் துகிலும் நோக்கினை காக்கும் நாயகனே.]

**விளக்கம் :-** "எங்களைக் காத்தருளும் தலைவனே, அழலும் மனத்தையுடைய துரியோதனன் கங்கையில் விளையாடுகையில் நீரில் நாட்டிவைத்த கழுவில் பட்டு வீமன் அழியாமல், வண்டாய் அமர்ந்து அவனைக் காப்பாற்றினாய்; மன்னவையில் நாங்கள் பார்த்துக் கொண்டு மனங்குழம்பியிருக்கையில், அழிக்கும் அனல் போன்ற திரௌபதியின் நாணமும், துகிலும் போகாதபடி கடாட்சித்தருளினை" என்று தருமன் கூறினான் என்பதாம். நும் கழல் அனையாள் என்று, "உமது திருவடி போன்றவள்," என்றும் உரை கொள்ளலாம்.

**10. கானக மருங்கின் மேலவன் பணியாற்**
**கடும்பசி யுடன்வருங் கடவுள்**
**மானவ முனிவன் ருபமுஞ் சாப**
**வருத்தமு முருவகை யொழித்தாய்**

யானொரு பொருளா தூதுசென் றருளி
யெதிரிலா விதுரன்வெஞ் சிலையும்
பானுவின் மதலை கவசமு மகற்றிப்
பரிந்துபல் வினைகளும் புரிந்தாய்.

[கானகம் மருங்கில் மேலவன் பணியால் கடும் பசியுடன் வரும் கடவுள் மானவ முனிவன் தாபமும் சாபம் வருத்தமும் உருவகை ஒழித்தாய்; யான் ஒரு பொருளா தூது சென்றருளி எதிர் இலா விதுரன் வெஞ்சிலையும், பானுவின் மதலைகவசமும் அகற்றி பரிந்து பலவினைகளும் புரிந்தாய் ]

**விளக்கம் :-** மேலவன் - துரியோதனன். கடவுள் மானவ முனி - தெய்வத்தன்மை பொருந்திய மனித அல்லது பெருமையுடைய முனிவனான துருவாசமுனிவன். பரிந்து - எங்கள்பால் இரக்கங்கொண்டு, அல்லது அன்புகொண்டு. செய்யுள் சுலபமானதே.

11. களப்பலி நாக கன்னிகை புதல்வன்
கருதலின் தனக்குநேர்ந் திடவும்
கிளப்பருந் திதியை மயக்கிவான் மதியங்
கிளரொளி யருக்கனைக் கேட்ப
வளப்படுந் திதியை முந்துற வெமக்கே
வழங்கிடும் படிமதி கொளுத்தி
உளப்பொலி வுடனே விசயனுக் கருளால்
உருளுடைக் கொடிகொடே ரூர்ந்தாய்.

[களம் பலி நாககன்னிகை புதல்வன் கருதலான் தனக்கு நேர்ந்திடவும், கிளப்பு அரு திதியை, மயக்கி வான் மதியம் கிளர் ஒளி அருக்கனை கேட்ப, வளம் படு திதியை முந்துற எமக்கே வழங்கிடும்படி மதிகொளுத்தி, உளம் பொலிவுடனே விசயனுக்கு அருளால் உருள் உடை கொடிகொள் தேர் ஊர்ந்தாய் ]

**விளக்கம் :-** நாககன்னிகை புதல்வன் - இராவான். கருதலன்-பகைவனான துரியோதனன். நேர்ந்திட - (பலியாதற்கு) சம்மதிக்க. கிளப்பு அரும்திதியை மயக்கி - மாற்றுவதற்கு அரிய திதியை மாற்றி. வளம்படும் திதி - அமாவாசை. மதிகொளுத்தி - (சூரியனுக்கு) அறிவைத் தந்து. "திதியை மாற்றி இராவானைக் கள பலிக்குச் சம்மதிக்கச் செய்து, விசயனுக்குத் தேர்த் தொழிலும் அருளினல் புரிந்தாய்," என்று தர்மன் கூறினன், என்பதாம். கேட்ப - நண்பாகச் சேர்தல்; கேண்மை கொள்ளல்.

**12.** அஞ்சியோ வன்றி யருள்கொலோ வறியேன்
ஆகவத் தடுதொழின் மறந்த
வெஞ்சிலே விசயற் குள்ளவா றுணர்த்தி
மீளவும்பொ ரும்படி விதித்தாய்
வஞ்சின மறந்து நேமியுந் தரித்து
வலம்புரி குறித்துமு தாதை
துஞ்சிட வமரிற் சிகண்டிசெய் தவத்தின்
றொடர்பயன் வழாவகை துரந்தாய்.

[அஞ்சியோ அன்றி அருள் கொலோ அறியேன், ஆகவத்து அடு தொழில் மறந்த வெம்சிலே விசயற்கு உள்ள ஆறு உணர்த்தி, மீளவும் பொரும்படி விதித்தாய்; வஞ்சினம் மறந்து நேமியும் தரித்து வலம்புரி குறித்து மூதாதை துஞ்சிட அமரில் சிகண்டி செய் தவத்தின், தொடர் பயன் வழாவகை துரந்தாய்.]

**விளக்கம் :-** பயந்தோ, அல்லது அருளினுலோ போர்க்களத்தில் பொருதல் ஒழிந்த விசயனுக்குக் கீதையை உபதேசித்துப் போர் செய்யும்படி செய்தாய்; எங்கள் பொருட்டுப் போரில் படை எடேன், என்று சொன்ன சொல் பிழைக்கச் சக்கரத்தை மூன்ருவதுநாள் போரில் எடுத்தாய், சங்கநாதம் செய்து பகைப்படையைக் கலக்கினுய்; எம் பெரிய பாட்டனுன வீடுமன் இறக்கும்படி, சிகண்டி முன்பிறப்பில் செய்தவம் இப்பிறப்பில் தொடர்ந்து பயன் தரல் பிழையாதபடி புரிந்துவைத்தாய்,—என்பதாம்.

துரந்தாய், என்பது நடத்திவைத்தாய் என்ற பொருளது. தன் வாழ்க்கையைக் கெடுத்த வீடுமனைக் கொல்லத்தவம் செய்து சிகண்டியாகத் தோன்றிய காசிராசன் மகளாகிய அம்பிகையின் செய்தவம் பிழையாதபடி செய்தாய், என்பது ஈற்றடியின் பொருள்.

**13.** ஒருபகல் விசயன் மார்வமூ டுருவ
ஒழுகுவெங் கடத்தொருத் தலின்மேல்
வருபக தத்த னெறிந்தவே லுன்றன்
வண்டுழாய் மார்பகத் தேற்ருய்
பொருபகை யரசர் பலர்பட வபிமன்
பொன்றிய பொழுதுசெந் தழலில்
நிருபனை முனியால் விழாவகை விலக்கி
நிசியில்வெங் கயிலேயுங் கண்டாய்.

[ஒரு பகல் விசயன் மார்வம் ஊடுருவ ஒழுகு வெம் கடத்து ஒருத்தலின் மேல் வரு பகதத்தன் எறிந்த வேல் உன்தன்

வள்துழாய் மார்பு அகத்து ஏற்ருய்; பொருபகை அரசர் பலர்பட, போர்செய்து அபிமன் பொன்றியபொழுது செம்தழலில் நிருபனே முனியால் விழாவகை விலக்கி, நிசியில் வெம் கயிலேயும் கண்டாய்.]

**விளக்கம்:-** ஒருத்தல்-யானே. நிருபன் - விசயன். ஒழுகுகின்ற மத நீரையுடைய யானேயின் மேல் வந்த பகதத்தன் என்பவன் விசயன் மார்பு குறியாக எறிந்த கொடிய வேலே, உனதுமார்பில் ஏற்று அவனேக் காத்தாய்; அரசர் பலர் அழியும்படி போர்செய்து இறுதியில் அபிமன் இறந்தபொழுது, தீயில் விழுந்து இறவாமல் விசயனே ஒரு முனிவனேக் கொண்டு காத்து அன்று இரவே அவனுடன் சென்று கயிலேயும் கண்டு திரும்பினுய், - என்று தருமன் கூறினுன், - என்பதாம்.

**14. வருணன்மா மதலே வாசவன் மதலே**
**மார்பினி லெறிந்தவெங் கதையைக்**
**கருணேயான் மருமம் புதையவேற் றந்தக்**
**காளே கையறும்படி கண்டாய்**
**தருணவா ணிருபர் மயங்கிவீழ் தரவெண்**
**சங்கமு ழக்கிநே மியினுல்**
**அருணனு தபத்தை மறைத்திர வழைத்தாங்**
**கபிமனுக் கரும்பழி கொண்டாய்.**

[வருணன் மாமதலே வாசவன் மதலே மார்பினில் எறிந்த வெம் கதையை கருணேயால் மருமம் புதைய ஏற்று, அந்த காளே கையறும்படி கண்டாய்; தருணம் வாள் நிருபர் மயங்கி வீழ்தர வெண்சங்கம் முழக்கி நேமியினுல் அருணன் ஆதபத்தை மறைத்து இரவு அழைத்து ஆங்கு அபிமனுக்கு அரும்பழி கொண்டாய்.]

**விளக்கம்:-** **வருணன் மாமதலே**-வருண குமாரனுன சுதாயு. வாசவன் மதலே-விசயன். கையறல்-இறத்தல். தருணம் வாள் நிருபர் - இளமை பொருந்திய ஆயுதங்களே ஏந்திய அரசர். அருணன் ஆதபம்-சூரியனது வெயில். அபிமனுக்கு அரும்பழி கொண்டாய் - அபிமனேக் கொன்ற பழிக்குப் பழி கொண்டாய். சுதாயு ஏவின கதையை உன் திருமார்பில் ஏற்று விசயனேக் காத்து, அவனேயும் இறக்கச்செய்தாய், சங்கநாதம் செய்து பகைப் படை அரசர்களே மதிமயங்கச் செய்தாய், உனது சக்கரத்தால் சூரியனே மறைத்து விசயனது சபதம் நிறைவேறச் செய்தாய், என்று தருமன் கூறினுன், என்பதாம்.

**15. ஏவருஞ் சாப பண்டிதன் புதல்வன்**
**ஏவிய வேலினுல் யாங்கள்**

வீவருந் தன்மை யறிந்துவா கனமும்
விறற்படை களுமொழித் திட்டாய்.
மூவரு மொருவ ராகிநின் றருளு
மூர்த்தியே! பார்த்திவர் பலரும்
தேவரு முணரார் நின்செய லெனமால்
சேவடி களின்முடி சேர்த்தான்.

[ஏவரும் சாபம் பண்டிதன் புதல்வன் ஏவிய ஏவினால் யாங்கள் வீவரும் தன்மை அறிந்து வாகனமும் விறல் படைகளும் ஒழித்திட்டாய்; மூவரும் ஒருவர் ஆகி நின்றருள் மூர்த்தியே பார்த்திவர் பலரும் தேவரும் உணரார் நின் செயல் என மால் சேவடிகளின் முடி சேர்த்தான்.]

**விளக்கம்:-** சாபம் பண்டிதன் புதல்வன் ஏவிய ஏவினால் யாங்கள் ஏவரும் (எல்லோரும்) என்று கூட்டுக. சாப பண்டிதன் புதல்வன்-துரோணனது புதல்வனான அசுவத்தாமன். ஏவினால்-நாராயணாத்திரத்தால். வீவரும் தன்மை - இறக்கும் படியான தன்மை. ''முனிவன் மகன் ஏவிய நாராயணாத்திரத்திலிருந்து எங்களைக் காத்தருளினாய், மூவரும் ஒருவராய் நின்று எமக்கு அருள் புரிகின்ற மூர்த்தியே, உனது திருவிளையாடலை அரசரோடு தேவரும் அறிவாரோ!'' என்று கூறித் தருமன் கண்ணனை வணங்கினான், - என்பதாம்.

16. கண்ணனுங் கருணைக் கண்ணனை யிறைஞ்சிக்
கைகளாற் றழுவியை விருநீர்
எண்ணரு மமரி லிறக்கிலீ ரஞ்சல்
என்றுப சாரமு மியம்பிப்
பண்ணுறுந் தடந்தேர் சேனையின் பதியைப்
பார்த்தணி வகுக்கெனப் பணித்தான்
அண்ணலந் திட்டத் துய்மனுந் தெவ்வர்
அஞ்சிடும் படியணி வகுத்தான்.

[கண்ணனும் கருணை கண்ணனை இறைஞ்சி, கைகளால் தழுவி, ''ஐவிரும் நீர், எண் அரும் அமரில் இறக்கலீர், அஞ்சல்'' என்று உபசாரம் இயம்பி, பண்உறும் தடந்தேர் சேனையின் பதியை பார்த்து, 'அணி வகுக்க', என பணித்தான்; அண்ணல் அம் திட்டத்துய்மனும் தெவ்வர் அஞ்சிடும்படி அணி வகுத்தான்.]

**விளக்கம்:-** கண்ணன், தன்னை வணங்கிய தருமனை நோக்கி ''நீங்கள் ஐவரும் இறக்க மாட்டீர், அஞ்ச வேண்டா,'' என்று கூறித் திட்டத்துய்மனைப் பார்த்து, 'அணிவகுக்கென', அவனும் அவ்வாறே செய்தான், என்பதாம்.

கண்ணன் தருமனை வணங்கியது, எடுத்த வேடத்தோடு ஒத்த நடிப்பு, என்க.

கர்ணன் கூற்று
எண்சீர் ஆசிரிய விருத்தம்

17. ஐவர்பதா கினிவெள்ள மணிந்த வாகண்
டடுவிறற்கோ னெடுவிற்கை யங்கர் கோமான்
பைவருமா சுணக்கொடியோன் றன்னை நோக்கிப்
பரித்தடந்தேர் நரபாலர் பலருங் கேட்கக்
கைவருபல் படைக்குமொரு வீர ரொவ்வாக்
கட்டாண்மை யரசேயிக் களத்திலின்றே
கொய்வருதார்ப் புயப்பகைவர் சிரங்க ளெல்லாம்
குறையுடலங் கூத்தாடக் கொய்வே னென்றான்.

[ஐவர் பதாகினி வெள்ளம் அணிந்த ஆ கண்டு, அடு விறல் கோல் நெடுவில் கை அங்கர் கோமான், பைவரும் மாசுணம் கொடியோன் தன்னை நோக்கி, பரி தடந்தேர் நரபாலர் பலரும் கேட்க, கைவரு பல் படைக்கும் ஒரு வீரர் ஒவ்வா கட்டு ஆண்மை அரசே இ களத்தில் இன்றே கொய்வருதார் புயம் பகைவர் சிரங்கள் எல்லாம் குறை உடலம் கூத்தாட கொய்வேன்,'' என்றான்.]

**விளக்கம்:-** பதாகினி-சேனை. அணிந்த ஆறு கண்டு-அணி வகுக்கப்பட்ட முறை கண்டு .கர்ணன் துரியோதனனை நோக்கி, அயலிருந்த அரசர் எல்லாரும் கேட்கும்படி, ''கைதேர்ந்தபல ஆயுதங்களுக்கும் ஒரு வீரரும் ஒப்பாகமாட்டாத கட்டு (மிகுந்த) ஆண்மையுடைய அரசனே, இன்று, போரில் கவந்தம் ஆடப் பகைவர் சிரங்களைக் கொய்வேன்,'' என்று கூறினான், என்பதாம்.

18. கார்ப்பாக சாதனன்றன் மகனுக் கெல்லாக்
கலகமுஞ்செய் வஞ்சனையே கற்ற கள்வன்
தேர்ப்பாக னாய்நின்றா னவனுக் கொப்பார்
தேவருல கினுமில்லை திசைக ளெல்லாம்
ஆர்ப்பாக மோதிவருங் கவன மாநெஞ்
சறிவானும் போரில்விர கறிவிப் பானும்
போர்ப்பா காய்த்தேர்கடவு செயல்வல் லானும்
புனைதாமச் சல்லியனே புவியி லென்றான்.

[கார் பாகசாதனன் தன் மகனுக்கு எல்லா கலகமும் செய் வஞ்சனையே கற்ற கள்வன், தேர் பாகனாய் நின்றான், அவனுக்கு

ஒப்பார் தேவர் உலகினும் இல்லை; திசைகள் எல்லாம் ஆர்ப்பு ஆக மோதிவரும் கவனம் மா நெஞ்சு அறிவானும், போரில் விரகு அறிவிப்பானும் போர் பாகு ஆய் தேர் கடவு செயல் வல்லானும் புனைதாமம் சல்லியனே, புவியில் என்றான்.]

**விளக்கம்:-** கார்பாகசாதனன் - மேகத்தை வாகனமாக உடைய இந்திரன். எல்லா கலகமும் செய் வஞ்சனையே கற்ற கள்வன் - எல்லாவிதமான கலகங்களையும் செய்யும் வஞ்சனைச் செயல்களையே பயின்ற கள்வனான கண்ணன். திசைகள் எல்லாம்.........புவியில் என்றான்-திசைகள் எங்கும் ஆரவாரம் உண்டாகும்படி எதிர்த்து வரும் கதிகளையுடைய குதிரைகளின் உள்ளம் அறிபவனும், போரில் தக்க சமயத்தில் உபாயங்களைக் கூறுபவனும், போருக்கு உரிய பாகனாய்த் தேர் நடத்தும் தொழிலில் வல்லவனும் ஆகிய போர்மாலை அணிந்த சல்லியனே, இந்த உலகில் (அக்கண்ணனுக்கு) ஒப்பு ஆவான், என்றான் ''விசயனுக்குப் பாகனான கண்ணனை ஒப்பார் தேவர் உலகத்திலும் இல்லை; சல்லியனே, அவனை ஒப்பான்,'' என்று கர்ணன் துரியோதனனிடம் கூறினான், என்பதாம்.

19. அவனின்றென் மணிநெடுந்தேர் கடாவு மாகில்
அருச்சுனனுக் கடலாழி யவனே யன்றிச்
சிவன்வந்து தேர்விடினுங் கொல்வே னந்தத்
தேர்நின்றா ரிருவரையுஞ் செங்கோல் வேந்தே
பவனன்சேய் முதலான துணைவ ரோரோர்
பகழிமுனை தனக்காற்றார் பரவை யாடைப்
புவனங்க ளனைத்தையுநின் குடைக்கீ ழாக்கிப்
புரிதிறல்வா கையுநினக்கே புனைவிப் பேனே.

[அவன் இன்று என் மணி நெடுந் தேர் கடவும் ஆகில், அருச்சுனனுக்கு அடல் ஆழி அவனே அன்றி, சிவன் வந்து தேர் விடினும் கொல்வேன், அந்த தேர் நின்றார் இருவரையும்; செங் கோல் வேந்தே, பவனன் சேய் முதல் ஆன துணைவர் ஓர் ஓர் பகழி முனை தனக்கு ஆற்றார், பரவை ஆடை புவனங்கள் அனைத்தையும் நின் குடைக் கீழ் ஆக்கி புரிதிறல் வாகையும் நினக்கே புனைவிப்பேன்,—தொடரும்.]

**விளக்கம்:-** சல்லியன் என் தேரை இன்று செலுத்தினால், திருமால் அன்றி சிவனே வந்து தேர் விடினும், விசயனையும் அவன் பாகனான கண்ணனையும் கொல்வேன்; செங்கோல் வேந்தனாகிய துரியோதனனே, வாயு புத்திரனான வீமனும், அவன் தம்பியரும் ஒவ்வோர் அம்பின் முனைக்கும் ஆற்றாது

ஓடுவர், கடலை ஆடையாக உடைய இப்பூமியை உன் ஆட்சிய தாக்கி, வெற்றிமாலை உனக்குப் புனைவிப்பேன்,—என்று கர்ணன் கூறினன், என்பதாம்.

**20. நஞ்சோற்றம் பெறநுகர்வுற் றிருண்ட கண்டர்**
**நற்றெண்டர் வடிவமென நண்ணும் வெண்ணீற்(று)**
**அஞ்சோற்று மடற்கைதை கமழுங் கானல்**
**அகன்குருநாட் டரியேறே யானின் தீம்பால்**
**வெஞ்சோற்றே டினிதருந்தி யமுத ருந்தும்**
**விண்ணவர்போ லிந்நெடுநாள் விழைந்து வாழ்ந்தேன்**
**செஞ்சோற்றுக் கடனின்றே கழியே னாகில்**
**திண்டோள்கள் வளர்ந்ததனாற் செயல்வே றுண்டோ.**

[நஞ்சு சோற்றம் பெற நுகர்வுற்று இருண்ட கண்டர் வடிவம் என நண்ணும் வெள்நீறு, அம்சோறு மடல் கைதை கமழும் கானல் அகல் குரு நாடு அரிஏறே, ஆனின் தீம் பால் வெம் சோற்றோடு இனிது அருந்தி அமுது அருந்தும் விண்ணவர்போல், இ நெடு நாள் விழைந்து வாழ்ந்தேன்; செம் சோறு கடன் இன்றே கழியேன் ஆகில், திண் தோள்கள் வளர்ந்ததனால் செயல் வேறு உண்டோ.]

**விளக்கம்:-** நஞ்சு சோற்றம்பெற நுகர்வுற்று இருண்ட கண்டர் - விஷத்தை உணவாக உண்டு (அதனால்) கறுத்த கண்டத்தை உடைய சிவபெருமான். வெள் நீறு அம் சோறு மடல் கைதை - வெள்ளிய நீறு போன்ற நிறமுடைய சொற்றி யையும் மடல்களையும் உடைய தாழை. சிவபெருமானது தொண்டர்களின் திருநீறு பூசிய உடம்புபோலப் பொருந்திய வெண்மையான சொற்றியையுடைய அதாவது உறுதியில்லாத (சொத்தையான) மடல்களை உடைய தாழை மணக்கும் கடல் சோலையையுடைய பரந்த குரு நாட்டில் வாழும் ஆண் சிங்கம் போன்றவனே, பசுவின் இனிய பாலை வெவ்விய சோற்றோடு அமுதினை அருந்தும் தேவர் போல் இவ்வளவு காலமும், (அதாவது நீண்ட காலமாய்) விரும்பி இனிதே உண்டு வாழ்ந்தேன்;—அதற்கு எதிராகச் செய்ய வேண்டிய கடனை இன்று நான் கழியேனாகில், திண்ணிய தோள்களை வளர்த்த தனால், வேறான பயன் ஒன்று உளதாமோ!—என்று கர்ணன் கூறினன் என்பதாம்.

நஞ்சு சோற்றம், என்பது நஞ்சோற்றம், எனத் திரிந்து நின்றது. அம், சாரியை. உறுதியற்றது சொற்றை (சொத்தை);

தாழை உறுதியற்ற செடி. செயல், என்பது பயன், என்ற பொருளது. உனக்கு இப்பொழுது சோற்றுக் கடன் கழியேனேல், உன் சோற்றால் வளர்ந்த தோள்கள் பயனற்ற தோள்களாகும், என்று கர்ணன் கூறியபடி.

**21.** **ஒரூரு மொருகுலமு மில்லா வென்னை**
**உங்கள்குலத் துள்ளோரி லொருவ னாக்கித்**
**தேரூரு மவர்மனைக்கே வளர்ந்த வென்னைச்**
**செம்பொன்மணி முடிசூட்டி யம்பு ராசி**
**நீரூரும் புவிபாலர் பலரும் போற்ற**
**நின்னினுஞ்சீர் பெறவைத்தாய் நினக்கே யன்றி**
**ஏரூருங் கதிர்முடியா யுற்ற போரில்**
**யார்க்கினியென் னுயிரளிப்ப தியம்பு வாயே.**

[ஓர் ஊரும் ஒரு குலமும் இல்லா என்னை உங்கள் குலத்து உள்ளோரில் ஒருவன் ஆக்கி, தேர் ஊரும் அவர் மனைக்கே வளர்ந்த என்னை செம் பொன் மணி முடிசூடடி அம்புராசி நீர் ஊரும் புவிபாலர் பலரும் போற்ற நின்னினும் சீர்பெற வைத்தாய்; நினக்கே அன்றி ஏர் ஊரும் கதிர் முடியாய் உற்ற போரில் யார்க்கு இனி என் உயிர் அளிப்பது, இயம்புவாய், ஏ.]

**விளக்கம்:-** அம்பு (அப்பு) ராசி நீர் ஊரும் புவி - கடலால் சூழப்பட்ட பூமி. ஏர் - அழகு. ஏர் ஊரும் கதிர் முடியாய், என்று கர்ணன் துரியோதனனை விளித்து, "ஊர், குலம் இல்லா என்னை உங்கள் குலத்தவரில் ஒருவன் ஆக்கி, தேர்ப்பாகன் மனை வளர்ந்த என்னை, அரசர்கள் போற்றும்படி மணி முடி அணிவித்து என்னைச் சிறப்பித்தாய்; நேர்ந்த போரில் உனக்கு அன்றி வேறு யாருக்கு நான் உயிரை விடுவது, கூறுவாய்," என்றான், என்பதாம்.

## சல்லியனிடம் துரியோதனன் வரம் வேண்டல்

**22.** **கன்னனிவை யெடுத்துரைப்ப மகிழ்ந்து கேட்டுக்**
**காந்தாரன் றிருக்குலத்துக் கன்னி யீன்ற**
**மன்னர்பிரா னிமைப்பொழுதிற் பழுதி லாத**
**மத்திரரா சனையெய்தி மதுப சாலம்**
**தென்னதென வெனமுரலுஞ் செவ்வி மாலைத்**
**திருத்தோளா யானென்று செப்பி னுலவ்**
**வின்னுரைகேட் டொருவர நீ நல்க வேண்டும்**
**என்னுணை யெனக்கரங்கொண் டிறைஞ்சி னானே.**

[கன்னன் இவை எடுத்து உரைப்ப மகிழ்ந்து கேட்டு, காந்தாரன் திரு குலத்து கன்னி ஈன்ற மன்னர் பிரான், இமைப்

பொழுதில் பழுது இலாத மத்திரராசனை எய்தி, ''மதுபசாலம் தென்ன தென என முரலும் செவ்வி மாலை திரு தோளாய், யான் ஒன்று செப்பினுல், அ இன் உரை கேட்டு ஒரு வரம் நீ நல்க வேண்டும், என் ஆணை,'' என கரம் கொண்டு இறைஞ்சினுன், ஏ.]

**விளக்கம்:-** காந்தாரன்....மன்னர் பிரான் - காந்தாரியின் மகனுன துரியோதனன். மத்திரராசன் - சல்லியன். மதுபசாலம்- வண்டுகளின் கூட்டம். துரியோதனன், ''வண்டுகள் மொய்த்து 'தென்ன தென' இசையெடுக்கும் மாலை தரித்த திருத்தோளாய்,'' என்று சல்லியனை விளித்து, ''நான் ஒன்று சொன்னுல், அந்த இன்னுரை கேட்டு எனக்கு ஒரு வரம் தரல் வேண்டும்; என்மேல் ஆணை,'' என்று கூறித் தனது கைகளால் அவனை வணங்கினுன், —என்பதாம்.

**23. செறுத்தவர்தம் பெருவாழ்வு முயிரு மாற்றிச்**
**சேர்ந்தவர்கள் புரிந்தபெருந் தீமை யெல்லாம்**
**பொறுத்துலகு முழுதாளுந் திகிரி யோய்!யான்**
**பொருளாக வொருவரநீ புகலு வாயேல்**
**மறுத்துரையே னுரைத்தருளென் றுரைத்தா னந்த**
**மத்திரபூ பனுமிவனு மருவ லாரைக்**
**கறுத்தமழை முகில்வெளுக்கக் கருகு மேனிக்**
**கண்ணனைப்போ லெங்களைநீ காத்தி யென்ருன்.**

[''செறுத்தவர்தம் பெரு வாழ்வும் உயிரும் மாற்றி, சேர்ந்த வர்கள் புரிந்த பெரு தீமை எல்லாம் பொறுத்து உலகம் முழுது ஆளும் திகிரியோய், யான் பொருள் ஆக ஒரு வரம் நீ புகலுவா யேல் மறுத்து உரையேன், உரைத்தருள்,'' என்று உரைத்தான், அந்த மத்திர பூபனும்; இவனும், ''மருவலாரை கறுத்த மழை முகில் வெளுக்க கருகும் மேனி கண்ணனைப் போல் எங்களை நீ காத்தி,'' என்ருன்.

**விளக்கம்:-**செறுத்தவர்-பகைவர். மத்திரபூபன்-சல்லியன். மருவலர்-துரியோதனனுக்குப் பகைவரான பாண்டவர். ''பகைவரை அழித்தும், சேர்ந்தாரின் பெரிய குற்றங்களைப் பொறுத்தும் உலகம் முழுதும் ஆட்சி செலுத்தும் சக்கரத்தையுடையவனே!'' என்று சல்லியன் துரியோதனனை விளித்து, ''என்னை ஒரு பொருளாக மதித்து ஒரு வரம் வேண்டுவாயேல், அதை மறுத்து உரையேன்; சொல்வாயாக,'' என்று கூறலும், துரியோதனனும், ''பாண்டவர் களை, கரிய மேகமும் வெளுக்கும்படி கருமை கொண்ட திரு மேனியனுன கண்ணன் காப்பது போல், நீ எங்களைக் காத்தருள வேண்டும்,'' என்ருன், என்பதாம்.

**24.** வாவுமா மணிநெடுந்தே ரரசர்க் கெல்லாம்
வாய்ப்பான நீயெனையும் புரப்ப தன்றி
ஏவுமா தொழில்புரிந்துன் குடைக்கீழ் வைகும்
என்போல்வா ருனைப்புரத்த லிசைவ தொன்றோ
தேவுமாய் மானுடமாய் மற்று முற்றுஞ்
செப்புகின்ற பலகோடி சராச ரங்கள்
யாவுமாய் விளையாடு மாதி மூர்த்தி
யாதவனுக் கியானெதிரோ வெதிரி லாதாய்.

[வாவும் மா மணி நெடுந்தேர் அரசர்க்கு எல்லாம் வாய்ப்பு ஆன நீ எனையும் புரப்பதன்றி, ஏவும் ஆ(று) தொழில் புரிந்து உன் குடைக் கீழ் வைகும் என்போல்வார் உனை புரத்தல் இசைவது ஒன்றோ! தேவும் ஆய் மானுடம் ஆய் மற்றும் முற்றும் செப்புகின்ற பலகோடி சர அசரங்கள் யாவும் ஆய் விளையாடும் ஆதி மூர்த்தி யாதவனுக்கு யான் எதிரோ, எதிரிலாதாய்,—தொடரும்.]

**விளக்கம்:-** எதிர் (ஒப்பு) இல்லாதவனே, அரசர்களுக்கு எல்லாம் பொருந்திய காவல் செய்பவனாகிய நீ, என்னைக் காப்ப தன்றி, நீ ஏவும் தொழில் செய்து உன் குடையின் கீழ் தங்கி வாழும் என்னைப் போன்றோர், தேவனாய் மனிதனால் மற்றும் சொல்லப்படும் கோடிக்கணக்கான சராசரங்களுமாய்த் திருவிளை யாடல் செய்யும் ஆதி மூர்த்தியாகிய கண்ணனுக்கு, நான் ஒப்பா வேனோ! என்று சல்லியன் கூறினான், என்பதாம்.

சாரதியாய் அமைந்து கண்ணன் பாண்டவரைக் காப்பது போல், நீ சாரத்தியம் செய்து எம்மைக் காக்க வேண்டும், என்று துரியோதனன் குறிப்பின் உணர்த்தியதை, அறிந்து கொள்ளாத சல்லியன், கண்ணனுக்கு நேர் அல்லனாதலின், அது தனக்கு இயலாது, என்று கூறியபடி.

துரியோதனன் மீண்டுங் கூறல்

**25.** நேர்செலுத்துந் தனிச்செங்கோ லுடையாய் யாது
நினைவுனக்கென் றவன்வினவி நிருபன் றானும்
தார்செலுத்தும் பெருஞ்சேனை சூழ நின்ற
சல்லியனை முகநோக்கித் தனஞ்ச யற்குத
தேர்செலுத்து முகுந்தனைப்போ னீயு மின்று
தேரிரவி மகன்றிண்டேர் செலுத்தி னல்லால்
போர்செலுத்தி யைவரையும் வென்று வாகை
புனைதனமக் கரிதென்று போற்றி னானே.

[''நேர் செலுத்தும் தனி செங்கோல் உடையாய், யாது நினைவு உனக்கு'' என்று அவன் வினவ, நிருபன் தானும், தார் செலுத்தும் பெருஞ்சேனை சூழ நின்ற சல்லியனை முகம் நோக்கி, ''தனஞ்சயற்கு தேர் செலுத்தும் முகுந்தனைப் போல் நீயும் இன்று, தேர் இரவி மகன் திண் தேர் செலுத்தின் அல்லால் போர் செலுத்தி ஐவரையும் வென்று வாகை புனைதல் நமக்கு அரிது'' என்று போற்றினான், ஏ.]

**விளக்கம்:-** நேர் செலுத்தும்-கோணுதல் இன்றி நேராக நடத்தும். அவன் வினவ-சல்லியன் கேட்க. நிருபன் துரியோதனன். தார் செலுத்தும் பெருஞ்சேனை-ஒழுங்காக நடத்தப்படும் பெரிய சேனை. ''உனது எண்ணம் யாது?'' என்று சல்லியன் கேட்க, நிருபனும், ''தனஞ்சயனுக்குத் தேர் செலுத்தும் கண்ணனைப்போல், நீ இன்று கர்ணனுக்குத் தேர் நடத்தினாலன்றி, தாம் போரை நடத்தி வெற்றி பெறல் இயலாது'' என்று கூறிச் சல்லியனைப் போற்றினான்—என்பதாம்.

### சல்லியன் சினந்து கூறல்

**26** **புல்லியசொல் மதியாம லென்னை நோக்கிப்**
**புகன்றனையாற் புனமேயும் புல்வாய்க் கென்றும்**
**வல்லியமாப் பணித்ததொழில் புரியி னன்றோ**
**மத்தரத்தான் கன்னனுக்கு வலவ னாவான்**
**சொல்லியநா வென்படுமற் றொருவன் சொன்னால்**
**சுயோதனனா தலிற்பொறுத்தேன் சொன்னதென்று**
**சல்லியன்மா மனங்கொதித்துப் புருவங் கோட்டித்**
**தடங்கண்ணு மிகச் சிவந்தான் றறுகணனே.**

[புல்லிய சொல் மதியாமல் என்னை நோக்கி புகன்றனை (ஆல்) புனம் மேயும் புல்வாய்க்கு என்றும் வல்லியமா பணித்த தொழில் புரியின் அன்றோ, மத்தரத்தான் கர்ணனுக்கு வலவன் ஆவான்; சொல்லியநா என்படும் யற்று ஒருவன் சொன்னால்? சுயோதனன் ஆதலின் பொறுத்தேன் சொன்னது'' என்று சல்லியன் மா மனம் கொதித்து புருவம் கோட்டி தடங்கண்ணும் மிக சிவந்தான், தறுகணன், ஏ ]

**விளக்கம்:-** புல்லிய சொல்-குறைவுடைய சொல், அல்லது அற்பத் தன்மையதான சொல். புல்வாய்-மான். வல்லியமா-புலியாகிய விலங்கு. தறுகணன்—அஞ்சாமையுடைய சல்லியன்.

''என்னை மதியாமல், அல்லது ஆலோசனையின்றி எனக்குக் குறைவு தரும் சொல்லைக் சொன்னாய்; மானின் ஏவலில் புலி

தொழில் செய்தல் உண்டாயின் மத்திர நாட்டரசன் கர்ணனுக்கு வலவனுவான். நீ சொன்னது நான் பொறுத்தேன்; வேறு ஒருவன் இது சொல்லியிருப்பின் அவன் நாக்குத் தரையுருண்டிருக்கும்,'' என்று சல்லியன் துரியோதனனிடம் சினந்து கூறினுன், என்பதாம்.

27. சதுர்விதத்தேர் வீரருக்குந் தடந்தே ரூருஞ்
சாரதிதன் தனயனுக்குந் தடந்தே ரூர்தல்
மதுமலர்த்தார் வலம்புரியா யிழிவன் றேநீ
மதித்தவிறற் கன்னனுக்கு மெனக்கு மிப்போது
எதிர்மலைக்குஞ் சேனைதன்னை யிருகூ ருக்கி
யிகல்புரிந்தா லென்கூற்றை யிரிய வென்றக்
கதிரளித்தோன் கூற்றினையு யழித்தி லேனேற்
கடவுவன் றேரவற்கென்று கனன்று சொன்னுன்.

[சதுர் விதம் தேர் வீரருக்கும் தடந்தேர் ஊரும் சாரதி தன் தனயனுக்கும் ஊர்தல் மது மலர் தார் வலம் புரியாய் இழிவு அன்றே! நீ மதித்த விறல் கன்னனுக்கும் எனக்கும் இப்போது எதிர்மலைக்கும் சேனை தன்னை இரு கூறு ஆக்கி, இகல் புரிந்தால், என்கூற்றை இரிய வென்று, அ கதிர் அளித்தோன் கூற்றினையும் அழித்திலனேல், கடவுவன் தேர் அவற்கு என்று கனன்று சொன்னுன்.]

**விளக்கம்**:- ''அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் என்ற நால்வகைப்பட்ட வீரர்களுக்கும் தேர் செலுத்தும் சாரதியின் மகனுக்கு தேர் ஊர்தல் எனக்கு இழிவு அன்றே? நீ மதித்த கர்ணனுக்கும் எனக்கும், இப்பொழுது நீ எதிர்த்துப் போர் செய்கின்ற பாண்டவ சேனையே இரண்டு கூறு செய்து கொண்டு போர் செய்தால், எனக்கான பகுதியை ஒழியும்படி வென்று, அந்தச் சூரிய குமாரனது பகுதியையும் அழித்திலேனுயின், அவனுக்கு நான் தேர் ஓட்டுவேன்'' என்று சல்லியன் கனன்று கூறினுன், என்பதாம். நீ மதித்த விறல் கன்னன் என்றது, தானும் பிறரும் கர்ணனை மதிக்காமையைக் குறிக்கும் கருத்தினது.

சல்லியன் இசைதல்

28. செங்கோல மலரிருந்த னைத்து மீன்ற
திசைமுகன்ரு னறம்வளர்க்குஞ் செல்வப் பாவை
பங்கோனுக் காதிமறைப் புரவி பூண்ட
படிக்கொடித்தேர் கடவுதனிப் பாக னுனுன்

பொங்கோதப் பாற்கடலா னிவனென் றியாரும்
புகல்கின்ற வசுதேவன் புதல்வன் வந்து
வெங்கோப விசயனுக்குச் சூத ஞனன்
விசயனுமன் றுத்தரன் றேர் விசையி னூர்ந்தான்.

[செம்கோலம் மலர் இருந்து அனைத்தும் ஈன்ற திசைமுகன் தான் அறம் வளர்க்கும் செல்வம் பாவை பங்கோனுக்கு ஆதி மறை புரவி பூண்டபடி கொடி தேர் கடவு தனி பாகன் ஆனான்; பொங்கு ஓதம் பாற் கடலான் இவன் என்று யாரும் புகல்கின்ற வசுதேவன் புதல்வன் வந்து வெங்கோபம் விசயனுக்கு சூதன் ஆனான்; விசயனும் அன்று உத்தரன்தேர் விசையின் ஊர்ந்தான்.

**விளக்கம்:-** சிவந்த அழகிய திருமாலின் நாபியில் தோன்றிய தாமரை மலரில் இருந்து எல்லாவற்றையும் படைத்த பிரமன் அறம் வளர்த்த செல்வியான உமாதேவியைத் தனது வாமபாகத்தில் கொண்ட சிவபிரானுக்கு ஆதியான வேதங்களாகிய குதிரைகள் பூட்டப்பெற்ற பூமியாகிய கொடியையுடைய தேரை ஓட்டும் ஒப்பற்ற பாகன் ஆனான்; பொங்குகின்ற நீரையுடைய பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் திருமால் இவன் என்று யாவரும் சொல்லும் வசுதேவனது மகனான கண்ணன் விசயனுக்குப் பாகன் ஆனான்; ஆனிரை கவர அன்று விராட நகரம் சென்ற பொழுது, உத்தரனுக்கு விசயன் தேர் நடத்தினான் என்று துரியோதனன் கூறினான்—என்பதாம்.

29. பூந்தரா தலமுழுது மதித்த வாண்மைப்
போர்வேந்தே யுனைப்போலப் புகழே பூண்டு
வேந்தரா யமர்க்களத்தி லதிச யித்த
வீரரா னவர்க்கிதுதான் மேம்பா டன்றோ
மாந்தரா யெக்கலையும் வல்லார்க் கன்றி
வாசிநெடுந் தேரூர வருமோ வென்றன்று
ஏந்தரா வெழுதியபொற் கொடியோன் சொல்லி
இறைஞ்சுதலு முடன்பட்டா னென்செய் வானே.

[பூ தராதலம் முழுதும் மதித்த ஆண்மை போர் வேந்தே உனை போல புகழே பூண்டு வேந்தர் ஆய் அமர்க்களத்தில் அதிசயித்த வீரர் ஆனவர்க்கு இதுதான் மேம்பாடு அன்றோ? மாந்தர் ஆய் எ கலையும் வல்லார்க்கு அன்றி, வாசி நெடுந்தேர் ஊர வருமோ? என்று (அன்று) ஏந்து அரா எழுதிய பொன்கொடியோன் சொல்லி இறைஞ்சுதலும் உடன்பட்டான்; என் செய்வான், ஏ.]

**விளக்கம்:-** பூந்தராதலம்-அழகிய பூமி. அதிசயித்த-அதிசயிக்கத்தக்க, அல்லது மிகச் சிறந்த. 'மாந்தராய் எக்கலையும் வல்

லார்க்கு' என்பதை எக்கலையும் வல்லாராகிய மாந்தருக்கு என்று மாற்றிக் கொள்க. மூன்றுவது அடி, அன்று, அசை. "சிறந்த வீரர்களுக்குத் தேர் ஊர்தல் பெருமைதானே! எல்லாக் கலைகளிலும் வல்லார்க்கு அல்லால் தேர் ஊர் இயல்வதாமோ!" என்று பாம்புக் கொடியோனுன துரியோதனன் கூறி, வணங்கலும், சல்லியன் இசைந்தான்" என்பதாம்.

"ராஜாதிராஜனுகிய துரியோதனன் வேண்டிக் கொள்ளுங்கால், சம்மதியாமல் வேறு என்ன செய்ய 'முடியும்" என்ற கருத்தில் "என் செய்வானே" என்ருர்.

30 மகபதிதன் மகனுக்கு வசுதே வன்றன்
மகன்பாக னுனதுபோல் வயங்கு சோதிப்
பகலவன்றன் மகனுக்கு நிகரி லாண்மைப்
பல்விதப்போர்ச் சல்லியன்றேர்ப் பாக னுனன்
புகலரிய தும்பையுடன் வெற்றி வாகை
புனைந்திடுமிக் கணத்தில்வலம் புரித்தார் வேந்தன்
அகலுததி யுடையாடை யவனி முற்றும்
அவனதினி யெனவார்த்த தரசன் சேனை.

[மகபதி தன் மகனுக்கு வசுதேவன் தன் மகன் பாகன் ஆனது போல், வயங்கு சோதி பகலவன் தன் மகனுக்கு நிகர் இல் ஆண்மை பல்விதம் போர் சல்லியன் தேர் பாகன் ஆனுன்; புகல் அரிய தும்பையுடன் வெற்றி வாகை புனைந்திடும் இ கணத்தில் வலம்புரி தார் வேந்தன்; அகல் உததி உடை ஆடை அவனி முற்றும் அவனது இனி என ஆர்த்தது அரசன் சேனை]

**விளக்கம்:-** பல்விதம் போர் சல்லியன் - பலவகைப்பட்ட போர்க்கலைகளிலும் வல்லவனுன சல்லியன். வலம்புரி தார் வேந்தன் - துரியோதனன். உததி - கடல். உடை ஆடை அவனி - உடுக்கும் ஆடையாகக் கொண்ட பூமி. விசயனுக்குக் கண்ணன் பாகனுனது போல் சல்லியன் கர்ணனுக்குப் பாகனுனன்; இனி வெற்றி நமதே, என்று துரியோதனனது சேனை ஆரவாரித்து மகிழ்ந்தது,—என்பதாம்.

31. பெற்றிழந்த கவசமுங்குண் டலமு மீளப்
பெற்றனன்போ லடலருக்கன் பெற்ற பிள்ளை
மற்றையணி விரன்முடக்க வினையி லாத
மத்திரபூ பனைத்தழுவி மணித்தே ரேற்றப்
பற்றலர்நெஞ் சலமருமா றவனும் பாகர்
படிவங்கொண் டமர்க்கமைந்த புரிகள் பூட்டி

**உற்றவடிக் கயிறுடனே யுளவு கோல்கொண்**
**டூர்ந்தனனு லருணனுக்கே யுவமை சால்வான்.**

[பெற்று இழந்த கவசமும் குண்டலமும் மீள பெற்றனன்போல் அடல் அருக்கன் பெற்ற பிள்ளை, மற்றை அணி விரல் முடக்க இணை இலாத மத்திரபூபனை தழுவி, மணிதேர் ஏற்ற, பற்றலர் நெஞ்சு அலமரும் ஆறு பாகர் வடிவம் கொண்டு, அமர்க்கு அமைந்த பரிகள் பூட்டி, உற்ற வடிக்கயிறுடனே உளவு கோல் கொண்டு. ஊர்ந்தனன் (ஆல்) அருணனுக்கே உவமை சால்வான்.]

**விளக்கம் :-** அடல் அருக்கன் பெற்ற பிள்ளை - கர்ணன். மற்றை அணிவிரல் முடக்க இணை இலாத மத்திரபூபன் - சிறந்த வீரர்களை எண்ண நினைத்து, அவர்களில் சல்லியன் ஒருவன் என்று விரல் ஒன்றை மடக்கியபின், மறுவிரலை மடக்க இணையான வீரர் இலாத சல்லியன். அருணன் - சூரிய சாரதி. சல்லியன் தேர் செலுத்த இசைந்தது அறிந்த கர்ணன், 'இழந்த கவச குண்டலங் களைப் பெற்றவன் போல் மகிழ்ந்து, சல்லியனைத் தழுவிக்கொண்டு அழகிய தேரில் அவனை ஏறச் செய்ய, அவனும் பாகனது வேடங் கொண்டு, தக்கவான குதிரைகளைத் தேரில் பூட்டி, கடிவாளத்தை யும், உளவுகோலையும் கைக்கொண்டு, தேர் செலுத்தினன், என்பதாம். குதிரை ஓட்டுங் கருவி, உளவுகோல். அணிவிரல், என்பதற்கு இரண்டாவது விரலாகிய **பவித்திரவிரல்,** என்றும் பொருள் கொள்ளலாம்.

**32.** **பணிநிறுத்தி யெழிலுறுபொற் பதாகை யானைப்**
**படாதொழிதம் பியரோடும் பார்க்க வன்போல்**
**அணிநிறுத்திக் கிருபனையு மடுபோர் செய்யும்**
**அரசரையு மிருமருங்கும் அணிக ளாக்கி**
**நுனிநிறுத்திச் சகுனிமுத லானோர் தம்மை**
**நுவலருநா ளுடுக்கோளின டுவண் வான**
**மணிநிறுத்தி வைத்ததெனப் பவள மேரு**
**வரைநின்ற தெனநின்றான் வண்மை வல்லான்.**

[பணி நிறுத்தி எழில் உறு பொன் பதாகையானை, படாது ஒழி தம்பியரொடும் பார்க்கவன் போல் அணி நிறுத்தி, கிருபனை யும் அடுபோர் செய்யும் அரசரையும் இரு மருங்கும் அணிகள் ஆக்கி, நுனி நிறுத்தி சகுனி முதலானோர் தம்மை, நுவல் அரு நாள், உடு, கோளின் நடுவண் வானமணி நிறுத்தி வைத்தது என, பவளம் மேரு வரை நின்றது என நின்றான் வண்மை வல்லான்.]

**விளக்கம் :-** பணி - பாம்பு. பதாகையான் - கொடியை யுடைய துரியோதனன். படாது ஒழிதம்பியர் - போரில் மடியாது எஞ்சி நின்ற துச்சாதனன் முதலிய தம்பியர். பார்க்கவன் - அசுர குருவான சுக்கிரன். வண்மையில் வல்லானுன கர்ணன், சுக்கிர னைப்போல் துரியோதனனையும் அவன் தம்பியரையும் அணியில் முறையே நிற்கச் செய்து, கிருபனையும் மற்ற அரசர்களையும் இரு பக்கங்களிலும் நிறுத்தி, சகுனி முதலானவர்களை அணியின் முன்னிடத்தே இருக்கச் செய்து, இருபத்தேழு நட்சத்திரங்களும், கணக்கிட்டுச் சொல்லுதற்கு அரிய மற்றை நட்சத்திரங்களும், கிரகங்களும் ஆகிய இவற்றின் நடுவில், வான மணியை(சூரியனை) நிறுத்தி வைத்தது போலவும், பவளமயமான மேருமலை போலவும் அணி முகத்தில் கம்பீரமாக நின்றான்,—என்பதாம். நாள் - நட்சத் திரம். உடு நட்சத்திரங்கள் அல்லாத பிற நட்சத்திரங்கள். கோள் - கிரஹம்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**33 கோவல்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாகை வேந்தன்**
**பாவலர் மானங் காத்தான் பங்கயச் செங்கை யென்ன**
**மேவல ரெமரென் ணுமல் வெங்களந் தன்னி னின்ற**
**காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனக மாரி.**

[கோவல் சூழ் பெண்ணை நாடன், கொங்கர் கோன், பாகை வேந்தன் பாவலர் மானம் காத்தான் பங்கயம் செம் கை என்ன மேவலர் எமர் என்னுமல் வெம் களம் தன்னில் நின்ற காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனகம் மாரி.]

**விளக்கம்:-** திருக்கோவலூரைச் சூழ்ந்துள்ள பெண்ணை நதி பாய்கின்ற திருமுனைப்பாடி என்ற நாட்டை உடையவனும், கொங்கர் கோனும், வக்கபாகை என்ற நகரத்தின் தலைவனும் புலவர்களுக்கு வேண்டியதைக் கொடுத்து அவர் மானங்காத்தவனு மான வரபதி ஆட்கொண்டானது தாமரை மலர் போன்ற சிவந்த கைபோல், களம் நின்ற கர்ணனது கையும், பகைவர் இவர், எம்மவர் இவர் என்று எண்ணுமல் யாவர்க்கும் மழை போல் பொன்னைத் தானமாக வழங்கியது,—என்பது பொருள்.

கர்ணன் சல்லியனுக்குக் கூறல்

**34 அந்தணர் பரிசின் மாக்க ளவனிபர் முதலோர் யார்க்கும்**
**சிந்தைகள் களிக்கத் தான தியாகமுஞ் சிறப்பு நல்கிக்**
**கந்தனேர் வதன மாகி யவதரித் தன்ன கன்னன்**
**சந்தணி குவவுத் தோளான் சல்லியன் றனக்குச் சொல்வான்.**

[அந்தணர், பரிசில் மாக்கள் அவனிபர் முதலோர் யார்க்கும் சிந்தைகள் களிக்க தான தியாகமும் சிறப்பும் நல்கி, கந்தன் ஓர் வதனம் ஆகி அவதரித்து அன்ன, கன்னன் சந்து அணி குவவு தோளான் சல்லியன் தனக்கு சொல்வான்.]

**விளக்கம்:-** முருகக் கடவுள் ஒரு முகத்துடன் அவதரித்தாற் போன்ற கர்ணன், அந்தணர்க்கும் பரிசில் மாக்களுக்கும், அரசர் களுக்கும் முறையாகத் தானமும் தியாகமும், வரிசைகளும் அவர்கள் சிந்தை களிக்கும் வண்ணம் வழங்கி, சந்தணி குவவுத்தோளனுன சல்லியனுக்குக் கூறுவானுயினுன்,—என்பது பொருள். உயர்ந்தோர்க்கு ஈதல், தானம். கேட்டவர்க்கெல்லாம் ஈதல், தியாகம். சிறப்பு, அரசர்களுக்கு உவந்து அளிக்கும் பொருள் அல்லது வரிசை.

**35 மேகவா கனன்பாற் பெற்ற வெயிலவன் இயம தங்கி**
**ஆகிய முனிவற் கீந்த வரும்பெருஞ் சாபம் பெற்றேன்**
**நாகவெம் பகழி பெற்றே னுரணற் கொத்த வுன்னைப்**
**பாகனு மாகப் பெற்றேன் பாக்கியம் பலித்த வாறே**

[மேக வாகனன்பால் பெற்ற வெயிலவன், இயமதங்கி ஆகிய முனிவற்கு ஈந்த அருபெருஞ் சாபம் பெற்றேன், நாகம் வெம்பகழி பெற்றேன், நாரணற்கு ஒத்த உன்னை பாகனும் ஆகப் பெற்றேன்; பாக்கியம் பலித்த ஆறே ]

**விளக்கம்:-** மேகவாகனன் - இந்திரன், வெயிலவன் - சூரியன். இயமதங்கி ஆகிய முனிவன் - ஜமதக்னி முனிவன் (பரசுராமன் தந்தை), சாபம் வில். இந்திரனிடமிருந்து சூரியன் பெற்றதும், பிறகு அவன் ஜமதக்னி முனிவனுக்குக் கொடுத்ததும், ஆகிய சிறந்த வில்லை பரசுராமனிடமிருந்து பெற்றேன். கண்ணனுக்கு ஒப்பான உன்னையும் பாகனுய்ப் பெற்றேன்; எனது நல்வினை பயன் தந்த விதம் வியக்கத்தக்கதே, என்று கர்ணன் கூறினுன், —என்பதாம்

**36 எனக்கெதிர் விசய னல்ல தில்லையவ் விசய னென்பான்**
**தனக்கெதி ரென்னை யன்றித் தரணிபர் யாரு மில்லை**
**மனக்குநேரான தோழன் மகிதல முழுது மெய்தக்**
**கனக்குரற் களிற்றூே யின்று காண்டியென் னுண்மை**
**யென்றுன்.**

[எனக்கு எதிர் விசயன் அல்லது இல்லை, அ விசயன் என்பான் தனக்கு எதிர் என்னை அன்றி தரணிபர் யாரும் இல்லை; மனக்கு

நேரான தோழன் மகிதலம் முழுதும் எய்த, கனம் குரல் களிற்ருேய், இன்று காண்டி என் ஆண்மை, என்ருன்.]

**விளக்கம்:-** கனம் குரல் களிற்ருேய் - ஒலியின் கனம் மிகுந்த குரலையுடைய யானைப் படை உடையவனே. இவ்வாறு கர்ணன் சல்லியனை அழைத்து, எனக்குச் சமானம் விசயன் அன்றி வேறு எவரும் இல்லை; அந்த விசயன் என்பானுக்கு சமானம் என்னை யன்றி அரசர் எவரும் இல்லை; என் மனம் ஒத்த நண்பனுன துரியோதனன் இப்பூமி முழுதையும் அடையும்படி, இன்று போரில் எனது ஆண்மையைக் காண்பாயாக, என்ருன், என்பது பொருள்.

**37. என்றலு மத்தி ரேச னிளநகை செய்து நீநின்
வென்றியும் வலியுங் கற்ற வின்மையும் விளம்ப வேண்டா
ஒன்ருெடொன் றிரண்டு தேரு முருளுட னுருள்கள் கோத்துச்
சென்றெதிர் முனைந்த போதுன் சேவகந் தெரியு மாதோ.**

[என்றலும் மத்திர ஈசன் இள நகை செய்து, நீ நின் வென்றியும் வலியும் கற்ற வின்மையும் விளம்ப வேண்டா; ஒன்ருெடு ஒன்று இரண்டு தேரும் உருளுடன் உருள்கள் கோத்து சென்று எதிர் முனைந்தபோது உன் சேவகம் தெரியும், மாதோ,— தொடரும்.]

**விளக்கம்:-** இரண்டு தேர்களும் ஒன்ருேடொன்று நெருங்கிப் போர் செய்யுங்கால் உன் வீரம் வெளிப்படும்,—என்பது ஈற்றடி களின் பொருள். மாதோ, ஈற்றசை. செய்யுள் சுலபமானதே. மத்திரேசன் - சல்லியன். இளநகை, இகழ்ச்சியின் பாலது.

சல்லியன் பதில்

**38 ஒருவரை யொருவ ரொவ்வா வுரனுடை வீரர் நீங்கள்
இருவரும் பொரும்போர் தோறும் யாங்களும் பாங்காய்
நின்ருேம்
வெருவரன் மறந்து மில்லா விசயனை யொருபோ தத்தும்
திருவரும் வண்மை யோய்நீ செயித்திடக் கண்டி லேமால்.**

[ஒருவரை ஒருவர் ஒவ்வா உரன் உடை வீரர் நீங்கள், இருவரும் பொரும் போர் தோறும் யாங்களும் பாங்காய் நின்ருேம்; வெருவரல் மறந்தும் இல்லா விசயனை ஒரு போதத்தும், திருவரும் வண்மையோய், நீ செயித்திட கண்டிலேம், ஆல்·]

**விளக்கம்:-** இருவரும் சிறந்த வீரர்கள் என்பதோடு, விசயன் மேம்பாடுடையவன், என்று கூறும் கருத்தது முதலடி. ஆல்: ஈற்றசை.

39. வயிர்த்திரு வோருஞ் சொன்ன வஞ்சின முடிக்கு மாறு
செயிர்த்திடு மிற்றைப் பூச றெரியுமோ தெரிந்த தில்லை
அயிர்த்தன மென்று தேரு டாண்டகை யுரைப்ப நீட
உயிர்த்தன னாகி மீள வுத்தர முரைக்க லுற்றான்.

[வயிர்த்து இருவோரும் சொன்ன வஞ்சினம் முடிக்கும் ஆறு செயிர்த்திடும் இற்றை பூசல் தெரியுமோ, தெரிந்தது இல்லை; அயிர்த்தனம் என்று தேர் ஊர் ஆண்டகை உரைப்ப, நீட உயிர்த்தனன் ஆகி மீள உத்தரம் உரைக்கல் உற்றான்.]

**விளக்கம்:-** ''இருவரும் பகை கொண்டு ஒருவரையொருவர் கொல்வதாகக் கூறிய வஞ்சினம் முடிவுறும்படி, கோபித்துச், செய்யப் போகின்ற இன்றைய போரின் முடிவு இப்பொழுதே நமக்குத் தெரியுமோ! தெரிந்ததில்லை, எனவே அயிர்க்கின்றோம்,'' என்று சாரதியான சல்லியன் கூறலும், (கர்ணன்) மிக நீண்ட பெருமூச்சு விட்டவனாய், மறுபடியும் பதில் கூறலானான், என்பதாம். பாண்டவரும் கௌரவரும் வித்தையை அரங்கேற்றிய பொழுது விசயன் தன்னைத் தேரோட்டி மகன் என்று இகழ, அப்பொழுது கர்ணன், உன் தலை கொய்வேன் என்று வஞ்சினம் கூறினான். திரௌபதியைத் துகிலுரித்த பொழுது விசயன் கர்ணனைக் கொல்வேன், என்று வஞ்சினம் கூறினான்.

சல்லியனைக் கர்ணன் கடிதல்

40. இந்திரன் மகனுக் கென்னை யெதிரிலை யென்று நின்ற
தந்திர பாலர் முன்னர்ச் சல்லிய விகழ்தல் வேண்டா
மந்திர வாசித் திண்டேர் வல்லையே லூர்வ தன்றி
வெந்திறல் விளைக்கும் வெம்போர் வினைக்குநீ யார்கொ
லென்றான்.

[இந்திரன் மகனுக்கு என்னை எதிர் இலை என்று, நின்ற தந்திர பாலர் முன்னர் சல்லிய, இகழ்தல் வேண்டா; மந்திரம் வாசி திண் தேர் வல்லையேல் ஊர்வது அன்றி, வெம் திறல் விளைக்கும் வெம் போர் வினைக்கு நீயார் கொல் என்றான்.]

**விளக்கம்:-** நின்ற தந்திர பாலர் - சுற்றி நின்ற சேனைவீரர். சல்லிய, விளி. மந்திரம் வாசி - குதிரைச் சாலையில் கட்டப்படும்

குதிரை. வல்லையேல்.... நீ யார் - தேர்த் தொழிலில் வல்லவனுல் தேர் செலுத்துவது அல்லாமல், ஆற்றலினுற் செய்யப்படும் வெவ்விய போர்த் தொழிலைப் பற்றிப் பேச நீ யார். ''சல்லியனே, நீ வீரர் முன் என்னை இகழவேண்டா. வல்லவனுனல் தேர்த் தொழிலைச் செய்; போர்த் தொழிலைப் பற்றிப் பேசும் தகுதி உனக்கு இலது'', என்று கர்ணன் கடிந்து கூறினுன். என்பதாம்.

### துரியோதனன் சமாதானப் படுத்தல்

**41. வலியுடைத் தேரோன் சொன்ன வாசகம் வலவன் கேட்டுக்
கலியுடைத் தடந்தேர் விட்டுக் காலினின் றுடைவாள் வாங்கி
ஒலியுடைப் புரவித் திண்டே ருனக்குநா னூரு வேனே
எலியுடைப் பூசல் பூனைக் கெதிர்ப்படி னென்ப டாதோ.**

[வலிஉடை தேரோன் சொன்ன வாசகம் வலவன் கேட்டு, கலிஉடை தடந்தேர் விட்டு காலின் நின்று, உடைவாள் வாங்கி, ஒலி உடை புரவி திண் தேர் உனக்கு நான் ஊருவேனே! எலி உடை பூசல் பூனைக்கு எதிர்ப்படின், என் படாதோ!]

**விளக்கம் :-** கலி - ஒலி. காலின் நின்று - தரையில் இறங்கி நின்று. எலியினது முழக்கம் எல்லாம் பூனையைக் கண்டதும் அடங்கி இருந்தவிடம் தெரியாமல் போவது போல், உன் செருக்கு என் வலியின் முன் அழியும், என்று சல்லியன் கர்ணனுக்குக் கூறும் கருத்தது, ஈற்றடி.

**42. உருவுரு மென்னச் சீறி யுடன்றபி னுதயன் காதல்
மருவுறு மைந்தன் றானும் வாளொடு மண்ணிற் றாவி
இருவரு மிரண்டு காய மிகலுமு னுரக கேது
வெருவருஞ் சிந்தை யோடு வெய்திற்போய் விலக்கி னனே.**

[உரு உரும் என்ன சீறி உடன்றபின் உதயன் காதல் மருவுறும் மைந்தன் தானும் வாளொடு மண்ணில்தாவி, இருவரும் இரண்டு காயம் இகலுமுன் உரகசேது, வெருவரும் சிந்தையோடு வெய்தின் போய் விலக்கினுன், ஏ.]

**விளக்கம் :-** உரு உரும் - அச்சந்தரும் இடி. உதயன் மருவுறும் காதல் மைந்தன் - கர்ணன். காயம்-புண். இடிபோல் சீறிக் கொண்டு பகைத்த பின் கர்ணன் வாளொடு மண்ணில் குதித்து இருவீரரும் இரண்டு காயம் உண்டாகும் படி போர்செய்யு முன்,

உரககேது (துரியோதனன்) வெருவிய மனத்தோடு விரைவின் போய், அவர்களை விலக்கினுன், என்பதாம்.

**43. மூளும்வெஞ் சினத்தை மாற்றி முரணுறுத் தவர்க டம்மை**
**மீளவுந் தேரி லேற்றி வெஞ்சமர் விளைமி னென்ருன்**
**மாளவும் பாண்டு மைந்தர் வையக முழுதுந் தானே**
**ஆளவுங் கருதி யெல்லா வரசையு மழிக்கு நீரான்.**

[மூளும் வெம் சினத்தை மாற்றி முரண் உறுத்தவர்கள் தம்மை மீளவும் தேரில் ஏற்றி, வெம்சமர் விளைமின் என்ருன், மாளவும் பாண்டு மைந்தர் வையகம் முழுதும் தானே ஆளவும் கருதி எல்லா அரசையும் அழிக்கும் நீரான்.]

**விளக்கம் :–** முரண் உறுத்தவர்கள் - மாறுபாடு கொண்ட கர்ண சல்லியர். பாண்டவர் மாளவும், வையம் முழுதையும் தான் ஆளவும் எண்ணி, எல்லா அரசர்களையும் அழியச் செய்கின்ற துரியோதனன், அவர்களது பொங்குங் கொடிய கோபத்தை மாற்றிப் போரைச் செய்யுமாறு கூறினுன்,—என்பதாம்.

**44. வனைகழற் கிருத வன்மன் வரிசிலைக் கிருபன் தானே**
**தனைநிகர் சகுனி தாமாச் சாலுவன் றிகத்த ராசன்**
**இனையபொற் றடந்தேர் வேந்தர் யாவரு மெண்ணில்**
**சேனைக்**
**கனைகட லோடு சூழ்ந்து கன்னனைக் காத்து நின்ருர்.**

[வனைகழல் கிருதவன்மன், வரிசிலை கிருபன், தானே தனை நிகர் சகுனி, தாமா, சாலுவன், திகத்தராசன் இனைய பொன் தடந்தேர் வேந்தர் யாவரும், எண் இல் சேனை கனை கடலோடு சூழ்ந்து கன்னனைக் காத்து நின்ருர்.]

**விளக்கம் :–**தனை தானே நிகர் சகுனி – வஞ்சித்தலில் தனக்குத்தானே நிகரான சகுனி. தாமா - அசுவத்தாமா. திகத்தன் - திரிகர்த்தன். சேனை கனை கடல் - சேனையாகிய ஒலிக்கின்ற கடல். சிறந்த வீரர்கள் சேஞசமுத்திரத்துடன் கர்ணனைக் காத்து நின்ருர், -என்பதாம்.

**45. நின்றவக் கன்னன் றன்னை நெஞ்சுற மகிழ்ந்து நோக்கி**
**வென்றனம் பூச லின்றே விசயனுந் தாதை தன்பால்**
**சென்றிடு மென்று தேறிச் செப்பினன் சிற்சின் மாற்றம்**
**மன்றலஞ் சுரும்பு மாரு வலம்புரி மாலை யானே.**

[நின்ற அ கன்னன் தன்னை நெஞ்சுஉற மகிழ்ந்து நோக்கி, ''வென்றனம் பூசல் இன்றே, விசயனும் தாதை தன் பால் சென்றிடும்,'' என்று தேறி, செப்பினன் சில் சில் மாற்றம், மன்றல் அம் சுரும்பு மாறு வலம்புரி மாலையானே.]

**விளக்கம் :-** மணம் கமழும் அழகிய வண்டுகள் நீங்காமல் மொய்க்கின்ற நஞ்சாவட்டைமாலைதரித்த துரியோதனன், என்பது ஈற்றடியின் பொருள். துரியோதனன் கன்னனை மகிழ்ந்து நோக்கி, இன்று போர்வென்றோம், என்ற நிச்சயத்துடன் சில வார்த்தைகள் கூறுவானாயினன், என்பதாம்.

கர்ண சல்லியார்க்கு முகமன்கூறல்

**46. சதமகன் மகன்றேர்ப் பாகன் றன்வயிற் கேண்மை விஞ்சி**
**விதுரனு மமர்செய் யாமல் வெஞ்சிலை யிறுத்துப் பின்னும்**
**யதுகுலத் தலைவ னான விராமனுந் தானும் பாரின்**
**நதிமுதற் றீர்த்தம் யாவு மாடுவா னயந்து போனான்.**

[சதமகன் மகன் தேர் பாகன் தன்வயின் கேண்மை விஞ்சி விதுரனும் அமர் செய்யாமல் வெம்சிலை இறுத்து, பின்னும், யது குலத் தலைவனான இராமனும் தானும் பாரின் நதி முதல் தீர்த்தம் யாவும் ஆடுவான் நயந்து போனான்.]

**விளக்கம்:-** சதமகன் - இந்திரன். விசயனது பாகனான கண்ணனிடத்து நேசம் மிகுந்து விதுரன் வில்லை ஒடித்து, அதன்பின் யதுகுலத் தலைவனான பலராமனுடன் தீர்த்த யாத்திரை விரும்பிச் சென்று விட்டான்,—என்பதாம். சந்திரகுலத்தலைவனான யயாதியின் மக்களில் ஒருவன் யது, என்பவன். அவன் குலம் வந்தவர் யாதவர்,

**47. கங்கைதன் வயிற்றிற் றோன்றித் தாதைதன் காதறீர்ப்பான்**
**எங்களுக் கரசும் வாழ்வு மிருநில முழுதுந் தந்து**
**வெங்களத் துதயன் போல வீடுமன் களத்தை யெல்லாம்**
**செங்களப் படுத்தி மீண்டுந் தேவரி லொருவ னானான்.**

[கங்கை தன் வயிற்றில் தோன்றி தந்தை தன் காதல் தீர்ப்பான், எங்களுக்கு அரசும் வாழ்வும் இரு நிலம் முழுதும் தந்து வெம் களத்து உதயன் போல வீடுமன் களத்தை எல்லாம் செங்களம் படுத்தி, மீண்டும் தேவரில் ஒருவன் ஆனான்.]

**விளக்கம்:-** எங்களுக்கு என்றது, பாட்டனாகிய விசித்ரவீரியனைக் கருதி, என்க. வெம்களம் - விரும்பப்படுகின்ற பூமி. உதய

சூரியன் தனது சிவந்த கிரணங்களால் பூமியைச் செந்நிறமடையச் செய்வது போல வீடுமன், யுத்த பூமி முழுதையும் குருதியால் செங்களமாக்கி, மறுபடியும் தேவரில் ஒருவன் ஆனுன்,—என்ற படி.

**48. கரிமுகக் கடவு ளன்ன கடும்பரித் தாமா வென்னும்**
**குரைகழற் றுணைத்தாட் சிங்கக் குருளையைப் பயந்த தாதை**
**அருமறைக் கயனை யொப்பா னடற்சிலை யரனை யொப்பான்**
**திருவருட் கரியை யொப்பான் றிருத்தகு வீடு சேர்ந்தான்.**

[கரிமுகம் கடவுள் அன்ன கடு பரித்தாமா என்னும், குரை கழல் துணை தாள் சிங்கம் குருளையை பயந்த தாதை, அரு மறைக்கு அயனை ஒப்பான், அடல் சிலைக்கு அரனை ஒப்பான், திரு அருட்கு அரியை ஒப்பான் திருதகு வீடு சேர்ந்தான்.]

**விளக்கம்:-** கரிமுகம் கடவுள் - விநாயகக் கடவுள். சிங்கக் குருளை - சிங்கக்குட்டி. விநாயகக் கடவுளை ஒத்த வலிய அசுவத்தாமன் என்னும் சிங்கக் குட்டியைப் பெற்ற தந்தையும் அரிய வேதங்களுக்குப் பிரும்மதேவனை ஒப்பவனும், சிலைக்கலைக்கு சிவனை ஒப்பவனும், அருளுக்குத் திருமாலை ஒப்பவனும் ஆகிய துரோணன் மேன்மை தங்கிய மோக்ஷ உலகை அடைந்தான்,— என்பதாம்.

**49. சாயலாற் சிறந்த தோகைச் சாமளத் தடம்புள் ளூர்திச்**
**சேயலாற் றேவர் வாழ்வு தேவருக் கியாவ ரீந்தார்**
**நீயலாற் சமரி லென்னை நிலையிடற் குரியா ருண்டோ**
**தோயலாற் பயந்த காதற் சூரனை யனைய சூரா.**

[சாயலால் சிறந்த தோகை சாமளம் தடம்புள் ஊர்தி சேயலால் தேவர் வாழ்வு தேவருக்கு யாவர் ஈந்தார் ? நீ அலால் சமரில் என்னை நிலையிடற்கு உரியார் உண்டோ ! தோயலால் பயந்த காதல் சூரனை அனைய சூரா.]

**விளக்கம்:-** சாயல் - மென்மை. புள் - மயில். சேய்-முருகக் கடவுள். மென்மையால் சிறந்த தோகையுடைய கருநிறம் கொண்ட மயிலை வாகனமாக உடைய முருகப் பெருமான் அல்லாமல் தேவர்களின் வாழ்வைத் தேவர்களுக்கு வேறு யார் கொடுத்தார் ? என்பது முதலிரண்டிகளின் பொருள். தோய்தல் - தழுவல், புணர்தல். "அன்போடு தழுவியதனுல் பெற்ற அன்புடைய சூரனை (சூரியனை) ஒத்த வீரா," என்று துரியோதனன் கர்ணனை அழைத்து, "நீ அல்லாமல் போரில் என்னை நிலை நிற்கச் செய்வதற்கு உரியார் வேறு யார் உளர் ? என்பது

ஈற்றடிகளின் பொருள். ''நீயே எனக்கு வெற்றியளிக்க வல்லாய்,'' என்று துரியோதனன் கூறினுன், என்க.

50. மித்திர ரென்று நோக்கா தென்னுடன் விளைந்த நண்பால்
மத்திர நிருபன் மைந்தன் வந்தெனக் குதவி யானுன்
குத்திர னல்லன் செம்மைக் கொள்கையன் மறையின் மிக்க
அத்திர சாபம் வல்லா னிவனெடா ரமர்செய் கிற்பார்?

[மித்திரர் என்று நோக்காது என்னுடன் விளைந்த நண்பால் மத்திர நிருபன் மைந்தன் வந்து எனக்கு உதவி ஆனுன்; குத்திரன் அல்லன், செம்மைக் கொள்கையன், மறையின் மிக்க அத்திரம் சாபம் வல்லான், இவனெடு ஆர் அமர் செய்கிற்பார்?]

**விளக்கம்:-** மித்திரர்-உறவினர். மத்திர நிருபன் மைந்தன்-மத்திர நாட்டு ராஜ குமாரனுகிய சல்லியன். குத்திரன் - வஞ்சகன். மறையின் மிக்க அத்திர சாபம் - மந்திரங்களோடு கூடிய அஸ்திரங்களை உடைய வில் தொழில். துரியோதனன் சல்லியனது சிறப்புக் கூறினுன், என்பதாம்.

51. என்மொழி மரும லின்றுன் னிரதசா ரதியு மானுன்
நன்மொழி யன்றி வேறு நவைமொழி நவிற றேற்ருன்
தன்மொழி யுறுதி யாவுந் தருமெனக் கைக்கொ ளாமல்
புன்மொழி யாடி நும்மிற் புலப்பது புன்மை யன்றே?

[என் மொழி மருமல் இன்று உன் இரத சாரதியும் ஆனுன், நல் மொழி அன்றி வேறு நவை மொழி நவிறல் தேற்ருன்; தன் மொழி உறுதி யாவும் தரும் என கைக் கொளாமல் புல்மொழி ஆடி நும்மில் புலப்பது புன்மை அன்றே?]

**விளக்கம்:-** நவை மொழி - குற்றமுடைய சொல். நவிறல் தேற்ருன் - பேசல் அறியான். தன் மொழி - அவன் (சல்லியன்) வார்த்தை. உறுதி - நன்மை. கைக் கொளல் - ஏற்றல். புலப்பது-மாறுபடுவது. ''சல்லியன் பாகனுதற்கு இசைந்திருக்க, புல்லிய மொழிகளைப் பேசிக் கொண்டு நீங்கள் மாறுபடுவது அமையாது'', என்று துரியோதனன் கர்ணனுக்குச் சொன்னுன், என்பதாம். தேற்ருன், என்பது தேருன், என்ற தன் வினைப் பொருளது.

52. இதயமும் வலியுந் தேயத் தியற்கையும் வினையும் பற்பல்
கதிகளு முணர்ந்து பூணுங் கவனமாத் தெரிந்து பூட்டி
எதிரிதன் விசயங் கூற லிடிக்குநண் பாதல் வெம்போர்
முதிரிடங் கால மெண்ணல் சூதர்க்கு முறைமை கண்டாய்.

[இதயமும், வலியும், தேயத்து இயற்கையும், வினையும், பல்பல் கதிகளும் உணர்ந்து பூணும் கவனம் மா தெரிந்து பூட்டி,— எதிரி தன் விசயம் கூறல், இடிக்கும் நண்பாதல், வெம் போர் முதிர் இடம், காலம் எண்ணல், சூதர்க்கு முறைமை கண்டாய்.]

**விளக்கம்:-** (குதிரைகளின்) இதயத்தையும், வலிமையையும், பிறந்த மண்ணின் இயற்கையையும், செய் தொழிலையும், பல வகைப்பட்ட கதி விசேஷங்களையும் அறிந்து, பூட்டுதற்குரிய வேக மான கதியுடைய குதிரைகளைத் தேரில் பூட்டி, எதிரியின் வெற்றி யைப் பற்றிக் கூறலும், (நன்மைகளை) இடித்துரைக்கின்ற நண்ப ருதலும், போருக்குரிய சிறந்த இடத்தையும், காலத்தையும் ஆலோசித்துக் கூறலும் சாரதிகளுக்குரிய கடமையாகும், என்பது அறிவாய்'', என்று துரியோதனன், கர்ணனுக்குக் கூறினான், என்பதாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**53.** **என்ன மன்னர்மன் னவன்மு கம்புகுந்**
**திருவ ருக்குநல் லுரையெ டுத்துரைத்(து)**
**அந்நி லத்திலே நிற்க வல்விரைந்**
**தறன்ம கன்படைக் கதிப னென்றுமுன்**
**சொன்ன திண்டிறற் றுருப தேயனுஞ்**
**சோம கேசரா யுள்ள சூரரும்**
**கன்ன நின்றவம் முனையி னெஞ்சினுங்**
**கடுகு தங்கடேர் கடவி னூர்களே.**

[என்ன மன்னர் மன்னவன் முகம் புகுந்து இருவருக்கும் நல் உரை எடுத்து உரைத்து, அ நிலத்திலே நிற்க,—வல்விரைந்து அறன் மகன் படைக்கு அதிபன் என்று முன் சொன்ன திண் திறல் துருபதேயனும் சோமக ஈசராய் உள்ள சூரரும் கன்னன் நின்ற அ முனையில் நெஞ்சினும் கடுகு தங்கள் தேர் கடவினூர்கள், ஏ.]

**விளக்கம்:-** முகம் புகுந்து - எதிரே சென்று. வல்விரைந்து- மிக விரைந்து. துருபதேயன் - திட்டத்துய்மன். சோம கேசர் - சோம குலத்து அரசர். துரியோதனன், கர்ண சல்லியர்களுக்கு நல்ல வார்த்தை சொல்லிக் கொண்டிருக்கையில், தருமனது படைத் தலைவனுன திட்டத்துய்மனும் சோம குலத்து வீரர்களும், கர்ணன் நின்ற இடத்தில், மனோவேகத்தினும் விரைந்து செல்லும் தங்கள் தேர்களை விரைந்து செலுத்தினர்,—என்பதாம்.

## இரு திறத்தாரும் பொரல்

**54.** **சென்ற வீரருஞ் சிலைகள் கால்பொரத்**
**திண்சி லீமுகஞ் சேர வேவினர்**
**நின்ற வீரருந் தனுவ ளைத்துமேல்**
**நெடிய சாயக நிமிர வீசினர்**
**ஒன்ற மாநிலம் பொன்ற மீதெழுந்**
**தோத மூர்வதொத் தும்ப ரஞ்சினர்**
**அன்றை யாகவந் தனினி கழ்ந்தபோர்**
**ஆரை யாரையென் றதிச யிப்பதே.**

[சென்ற வீரரும் சிலைகள் கால் பொர திண் சிலீமுகம் சேர ஏவினர்; நின்ற வீரரும் தனுவளைத்துமேல் நெடிய சாயகம் நிமிர வீசினர்; ஒன்ற மாநிலம் பொன்ற மீது எழுந்து ஓதம் ஊர்வது ஒத்து உம்பர் அஞ்சினர்; அன்றை ஆகவம் தனில் நிகழ்ந்த போர் ஆரை ஆரை என்று அதிசயிப்பது, ஏ.]

**விளக்கம்:-** சிலைகள் கால் பொர - வில்களின் அடி வளைய. சிலீமுகம் - அம்புகள். சேர - ஒரு சேர. நின்ற வீரர் - கர்ணன் பக்கம் நின்ற வீரர். மேல் நெடிய சாயகம் நிமிரவீசினர் – சென்ற வீரர் மேல், அதாவது பாண்டவ வீரர் மேல் பெரிய அம்புகளை மிகுதியாக ஏவினர். பூமி முழுதும் அழியும்படி ஓதம் (கடல் வெள்ளம்) மேலே பொங்கி வரும் யுகாந்த காலத்திற்போல தேவர்கள் அஞ்சினர்கள், — என்பது மூன்ருவது அடியின் பொருள். அன்றைய தினம் ஆகவந்தனில் நிகழ்ந்த போரில் யாரை யாரை என்று அதிசயிப்பது, அதாவது அதிசயிக்கும்படி இரு திறத்தாரும் சமப் போர் புரிந்தனர், என்பது ஈற்றடியின் பொருள்.

யுக முடிவில் பொங்கி வரும் வெள்ளத்திற்கு அஞ்சுவது போல், இரு திறத்தாரும் பொழிந்த சர மழை கண்டு தேவர்கள் அஞ்சினர்கள், என்பதாம்.

**55.** **ஏறு தேரழிந் திவுளி மாவழிந்**
**தேவு பாகொழிந் தெண்ணி லெண்ணிலார்**
**நூறு நூறுகோ னுழைய மெய்யெலாம்**
**நொந்து துஞ்சினர் முந்து போர்செய்தார்**
**வேறு வேறுபல் கோடி வீரர்கள்**
**மேரு வொப்பதோர் வில்வ ளைத்திடச்**
**சூறை மாருதம் போல்வி பாகரன்**
**சுதன டாவுதேர் சூழ வந்ததே.**

[ஏறுதேர் அழிந்து இவுளிமா அழிந்து, ஏவு பாகு ஒழிந்து எண்ணில் எண்ணிலார், நூறு நூறு கோல் நுழைய, மெய் எலாம் நொந்து துஞ்சினர் முந்து போர் செய்தார்; வேறு பல் கோடி வீரர்கள் மேரு ஒப்பது ஓர் வில் வளைத்திட, சூறை மாருதம் போல் விபாகரன் சுதன் நடாவு தேர் சூழ வந்தது.]

**விளக்கம்:-** முன்னணியில் நின்று போர் செய்தவர்களாகிய எண்ணிக் கணக்கிட முடியாத வீரர் நூறு நூறாக கோல் (அம்புகள்) தைப்பதால், ஏறு தேர் அழியப் பெற்று, இவுளிமா (குதிரைகள்) அழியப் பெற்று, தேர் நடத்து பாகர் அழியப் பெற்று தேகம் முழுவதும் வருந்தப் பெற்று இறந்தார்கள்; வெவ்வேறு பல கோடி வீரர்கள், மேருமலை போன்ற ஒப்பற்ற வில்களை வளைத்திட, விபாகரன் (சூரியன்) மகனான கர்ணன் ஏறி நடத்திய தேர் சுழல் காற்றுப்போல் (களத்தைச்) சுற்றி வந்தது,—என்பது பொருள்.

**56. முட்ட வந்துதம் பின்கொ டாமன்மேல்**
**முன்கொ டுத்துமா முனைகொள் வாளியின்**
**பட்டொ ழிந்தவவ் விருவர் சேனையின்**
**பதிக ளுஞ்சயம் படவு டற்றினர்**
**விட்ட பாணம்வந் திருவ ராகமும்**
**வெளிய டைக்கவே வில்வ ளைத்தபின்**
**திட்டத்துய் மனுங் கன்ன னுக்கழிந்**
**தேறு தேருடன் றேறி யோடினான்**

[முட்ட வந்து தம் பின் கொடாமல் மேல் முன் கொடுத்து மா முனை கொள் வாளியின் பட்டு ஒழிந்த அ இருவர் சேனையின் பதிகளம் சயம்பட உடற்றினர்; விட்ட பாணம் வந்து இருவர் ஆகமும் வெளி அடைக்கவே வில் வளைத்த பின், திட்டத் துய்மனும் கன்னனுக்கு அழிந்து ஏறு தேருடன் தேறி ஓடினான்.]

**விளக்கம்:-** போரில் பட்டவர் போக மிஞ்சிய இரு பக்கத்தினரின் சேனைகளுக்கும் தலைவர்களான கர்ணனும் திட்டத்துய்மனும் முட்ட (பெருங்க) வந்து தமது முதுகு கொடாமல், மார்பை அம்புகளுக்கு இலக்காகக் கொடுத்து, சிறந்த முனையை உடைய அம்புகளால் வெற்றி உண்டாகும்படி மேலும் மேலும் போர் செய்தார்கள்; (இருவரும்) பிரயோகித்த பாணங்கள் இருவர் தேகத்தையும் மேலே மறைக்கும்படி வில் வளைத்துப் பொருதபின், திட்டத்துய்மனும் ஏறுதேருடன் கர்ணனுக்கு உடைந்து உயிர் தப்பி ஓடினான்,—என்பது பொருள். முதலடியிலுள்ள மேல், என்பதை மேல் (மேலும் மேலும்) உடற்றினர், என்று கூட்டுக.

வீமன் போர் ஏற்றல்

57. **சோம கேசரிற் பட்டொ ழிந்தவெஞ்**
**சூரர் தம்முடன் றுரோண சூதனன்**
**காம பாணமே யெனவி லக்கருங்**
**கணைகண் மெய்யுறக் கைக ழன்றபின்**
**தாம மார்முடித் தம்மு னேவலின்**
**தன்னை யொத்ததோள் வீரர் தம்மொடும்**
**வீம சேனன்மற் றவரை வென்றபோர்**
**விசய கன்னன்மேல் வெய்தி னெய்தினன்.**

[சோமக ஈசரில் பட்டு ஒழிந்த வெம் சூரர் தம்முடன் துரோண சூதனன், காமபாணமே என விலக்க அரு கணைகள் மெய் உற கை கழன்ற பின், தாமம் ஆர் முடி தம் முன் ஏவலின் தன்னை ஒத்த தோள் வீரர் தம்மொடும், வீமசேனன் (மற்று) அவரை வென்ற போர் விசய கன்னன் மேல் வெய்தின் எய்தினன்.[

**விளக்கம்:-** துரோண சூதனன் - துரோணனை அழித்த திட்டத்துய்மன். மன்மத பாணம் போன்ற விலக்குதற்கு அரிய கர்ணன் செலுத்திய பாணங்கள், உடம்பில் பாய்தலினால் திட்டத் துய்மன், சோமகுலத் தலைவர்களுள் பட்டு அழிந்தவர் போக விஞ்சிய கொடிய வீரர்களுடன் கை கழன்ற பின் (ஓடியபின்), மாலை பொருந்திய முடியை உடைய தன் முன்னவனான தருமனது ஏவலினால், தன்னை ஒத்த தோள் வலியுடைய வீரர்களுடன் வீமன், திட்டத்துய்மன் முதலியவரை வென்ற வெற்றியை யுடைய கர்ணன் மேல், உக்கிரமாகச் சென்றான்,—என்பது பொருள்.

58. **காலி னால்வருங் காளை மைந்தனும்**
**கதிரி னால்வருங் காளை மைந்தனும்**
**மாலி னால்வருங் களிறு வாசிமா**
**மன்னு தேரெனும் வாக னத்தினர்**
**வேலி னாலெறிந் தமரு டற்றியும்**
**வெய்ய வாளினால் வெட்டி முட்டியும்**
**கோலி னாலெறிந் துருவ வெற்றிவிற்**
**கோலி யுங்களங் குறுகி னார்களே.**

[காலினால் வரும் காளை மைந்தனும், கதிரினால் வரும் காளை மைந்தனும், மாலினால் வரும் களிறு வாசி மா மன்னு தேர் எனும் வாகனத்தினர், வேலினால் எறிந்து அமர் உடற்றியும், வெய்ய

வாளினுல் வெட்டி முட்டியும், கோலினுல் எறிந்து உருவ எற்றி வில் கோலியும், களம் குறுகினுர்கள், ஏ.

**விளக்கம்:-** காலினுல் வரும் காளே மைந்தன் - வீமன். கதிரினுல் வரும் காளே மைந்தன் - கர்ணன். மாலினுல் வரும் களிறு - மத மயக்கத்தோடு வரும் யானே. மா மன்னு தேர் - பெருமை பொருந்திய தேர். முட்டல் - தாக்கல். கோல் - அம்பு. வில் கோலி - வில்லே வளேத்து. வீமனும் கர்ணனும், யானே குதிரை தேர் ஆய வாகனத்தையுடைய சேனே வீரர்களும் வேல் எறிந்தும், வாளினுல் வெட்டியும் மோதியும், வில்லே வளேத்தும், அம்புகளால் எய்து உருவிச் செல்லும்படி தாக்கியும் போர்க்களம் வந்து சேர்ந்தனர், - என்பதாம்.

**59. மைந்தர் போர்விதங் கண்டு கண்டுதார்**
**மருவு மம்புயத் திருவ ருங்களித்(து)**
**உந்து மாநெடுந் தேரி ரண்டுவந்**
**துள்ள மானதே ரொத்து லாவவே**
**அந்த ரம்புதைத் தும்ப ராரெலாம்**
**அஞ்சி யோடுமா றப்பு மாரியும்**
**சிந்த வெண்டிசா முகமு மண்டமும்**
**செவிடு பட்டிடச் சிலேவ ணக்கினுர்.**

[மைந்தர் போர் விதம் கண்டு கண்டு தார் மருவும் அம் புயத்து இருவரும் களித்து, உந்தும் மா நெடுந் தேர் இரண்டும் வந்து, உள்ளம் ஆன தேர் ஒத்து உலாவவே, அந்தரம் புதைத்து உம்பரார் எலாம் அஞ்சி ஓடும் ஆறு அப்பு மாரியும் சிந்த, எண் திசாமுகமும் அண்டமும் செவிடு பட்டிட சிலே வணக்கினுர்.]

**விளக்கம்:-** மாலே பொருந்திய அழகிய தோள்களே உடைய கர்ணன் வீமன் ஆகிய இருவரும் மைந்தர் (வீரர்) போர் விதம் கண்டு மகிழ்ந்து, செலுத்தப்படும் பெரிய நெடுந் தேர் இரண்டும், மனம் ஆகிய தேரை ஒத்து, அதாவது மனேரதத்தைப் போல் (விரைவாகக் களம்) வந்து உலாவி நிற்க, உம்பரானவர் எல்லாம் பயந்து ஓடும்படி, ஆகாயத்தை மறைத்து சரமழை சிந்தவும், எட்டுத்திக்கில் உள்ளவர்களும், அண்ட கோளத்தில் உள்ளவர் களும் செவிடுபடும்படி, வில்லே வளேத்துப் போர் செய்தார்கள், — என்பதாம். மனேரதம் - விருப்பம்.

60. செல்வ ணக்கிமேல் கீழெ னும்பெருந்
திசையி ரண்டினுந் திகழும் விற்கள்போல்
வில்வ ணக்கியவ் விருவ ரும்பொரும்
வெஞ்ச மத்தில்வீ மனையுரத் தினும்
மல்வணக்குதோ ளினுமி லக்கிலா
வாளி யேவினு னேளி யாகவே
கல்வ ணக்கிமுப் புரமெ ரித்தமுக்
கண்ணி னுன்வலக் கண்ண ளித்துளான்.

[செல்வணக்கி மேல் கீழ் எனும், பெரும்திசை இரண்டினும் திகழும் வில்கள் போல், வில் வணக்கி அ இருவரும் பொரும் வெம் சமத்தில் வீமனை உரத்தினும், மல் வணக்கு தோளினும் இலக்கு இலா வாளி ஏவினுன் ஒளி ஆகவே, கல் வணக்கி முப்புரம் எரித்த முக் கண்ணினுன் வலம் கண் அளித்துளான்].

**விளக்கம்:-** செல் – மேகம். மேகத்தில் வளைந்து தோன்றி மேற்கு கிழக்கு என்ற இரு பெருந்திசைகளிலும் விளங்கும் வானவில்லைப்போல,—என்பது முதலடியின் பொருள். வில்லை வளைத்து இருவீரரும் போர் செய்யும் கொடிய போரில், மேரு மலையை வளைத்து முப்புரம் எரித்த முக்கண்ணனுகிய சிவபிரானது வலக்கண்ணுகிய சூரியன் அளித்துள்ள கர்ணன், வீமனது மார்பிலும், விராடநகரத்தில் மல்லர் தலைவனை அழித்த தோள்களிலும் ஒழுங்காக எதிரில்லாத கொடிய அம்புகளை ஏவினுன், என்பது மற்ற அடிகளின் பொருள். ஒளி - ஒழுங்கு. இலக்கு இலா - எதிரில்லாத. கல் - மேருமலை.

61. வலக்க ணுனசெஞ் சுடரி டக்கணும்
வாகு வுந்துடித் தாகு லத்துடன்
கலக்க ணீர்பொழிந் திணையும் வேலையில்
கனற்ப டும்புணிற் றடிப டுங்கணக்(கு)
இலக்க ணந்தவா வீமன் வாளியீர்
இரண்டு நாலிரண் டெண்ணி ரண்டினுல்
அலக்க ணெய்தவெய் தனனு தாரிதன்
அணிக ணீடுதோ ளாக மெங்குமே.

[வலக்கண் ஆன செம்சுடர், இடக்கண்ணும் வாகுவும் துடித்து, ஆகுலத்துடன் கலம் க(ண்) ணீர் பொழிந்து இணையும் வேலையில், கனல்படும் புணில் தடிபடும் கணக்கு இலக்கணம் தவா வீமன், வாளி ஈர் இரண்டு, நால் இரண்டு, எண் இரண்டினுல் அலக்கண் எய்த எய்தனன் உதாரிதன் அணிகள் தீடு தோள் ஆகம் எங்கும், ஏ].

**விளக்கம் :—** வலக்கண் ஆன செம் சுடர் – சிவபெருமானது வலக்கண் ஆன சூரியன். சூரியன், கண்ணும் தோளும் இடம் துடிக்கப் பெற்று, (அதனால் தன்மகன் இன்று இறந்து விடுவானே என்ற) கவலையுடனே, மிகுதியாகக் கண்ணீர் சொரிந்து வருந்தும் வேளையில், தீயினால் உண்டான புண்ணில் தடியால் அடிக்கப்பட்ட தன்மையாக, வீர இலக்கணத்தில் சிறிதும் குறையாத வீமன், உதாரகுணமுடைய கர்ணனது ஆபரணங்கள் அணிந்த தோள்களிலும் துன்பம் அடையும்படி, நான்கும், எட்டும், பதினாறுமாகிய கணைகளால் (கர்ணன் வருந்தும்படி) செலுத்திப் போர் செய்தான் - என்பதாம்.

தோளும் கண்ணும் இடந் துடித்தால் அபசகுனமாகும். எனவே, சூரியன் தன்மகன் அழிவுறுவானே, என்று கண்ணீர் விட்டு வருந்தினன், —என்க.

**62. வேத மாகிநின் றவனை யெய்தபோர்**
**வில்லி முன்னவன் சல்லி யன்றனோ(டு)**
**ஓதி னானிவற் கெம்பி வஞ்சினம்**
**ஒழியும் என்று கொண்டு டுயிர்வ ழங்கினேன்**
**சூத னாகிநீ வந்து தேர்விடுந்**
**தொலைவி லாதபோர் வலியை யன்றியே**
**யாது கூறலாம் வன்மை வின்மைதான்**
**யாதெ னாவிமைப் போதி லேகினான்.**

[வேதம் ஆகி நின்றவனை எய்த போர் வில்லி முன்னவன், சல்லியன் தனோடு ஓதினான், இவற்கு எம்பி வஞ்சினம் ஒழியும், என்று கொண்டு உயிர் வழங்கினேன், சூத நீ வந்து தேர் விடும் தொலைவு இலாத போர் வலியை அன்றியே யாது கூறலாம் வன்மை, வின்மைதான் யாது எனா இமைப் போதில் ஏகினான்.]

**விளக்கம் :-** வேதம் ஆகி நின்றவனை... முன்னவன், "இவற்கு, எம்பி மொழிந்த வஞ்சினம் ஒழியும் என்று கொண்டு உயிர் வழங்கினேன், சூதன் ஆகி நீ வந்து தேர் விடும் தொலைவு இலாத போர் வலியை அன்றியே, வன்மை யாது கூறலாம்? வின்மைதான் யாது? என சல்லியன் தனோடு ஓதினான், இமைப் போதில் ஏகினான்.— என்பது அன்வயம்.

வேதம் ஆகி நின்றவன் - பரமசிவன். எய்த போர் வில்லி முன்னவன் - அம்பு எய்து போர் செய்த வில்லியான விசயனது தமையனான வீமன். இவற்கு – இந்தக் கர்ணனுக்கு.

(தவநிலைச்சருக்கத்தில்) சிவபெருமானோடு போர் செய்த விசயனது முன்னவனான வீமன், "என் தம்பியின் வஞ்சினம் தவறுமே என்று இவற்கு உயிரைக் கொடுத்தேன்; சாரதியாக நீ வந்து தேர்விடும் அழிவு இல்லாத வலியன்றி, இவனது வலிமையைக் குறித்து யாது கூறலாம்? வின்மைதான் யாது? எனச் சல்லியனிடம் கூறினவனாய், இமைப் பொழுதில் அவ்விடம் பெயர்ந்து அகன்றான்,—என்பதாம்.

வேறு

**63. அங்கர் குலநர பாலனும் வாழ்வுடை**
**யங்கர் களுமுனை சாய்தர வூழியின்**
**மங்கு னிகர்பல கோல்விடு வீமனும்**
**மைந்த ரனைவரு மாறடு காலையில்**
**வெங்கை வரிசிலை கால்பொர யாரினும்**
**விஞ்சு திறல்விட சேனனெ னுவரு**
**செங்க ணவன்வசு தேவன்மு னாளருள்**
**சிங்க வரசிளை யானொடு சீறியே.**

[அங்கர் குல நரபாலனும் வாழ்வு உடை அங்கர்களும் முனை சாய்தர, ஊழியின் மங்குல் நிகர் பல கோல் விடு வீமனும், மைந்தர் அனைவரும் மாறு அடு காலையில், வெம்கை வரிசிலை கால் பொர, யாரினும் விஞ்சு திறல் விடசேனன் எனு வரு செங்கணவன். வசுதேவன் முன் நாள் அருள் சிங்க அரசு இளையானொடு சீறியே.]

**விளக்கம் :-** அங்கர் குலநாரபாலன் – கர்ணன். வாழ்வுடை அங்கர் - வாழ்தலை உடைய அங்க நாட்டு வீரர். முனை சாய்தர - களத்தில் வலி ஒடுங்கும்படி. ஊழின் மங்குல் – ஊழிக் காலத்து விடாது பொழியும் மேகம். கோல் - அம்பு. மைந்தர் - வீமனைச் சேர்ந்த வீரர். மாறு அடுகாலை - பகைவர்களை அழிக்கின்ற பொழுது. யாரினும் விஞ்சுதிறல் விடசேனன் எனவரு செங்க(ண்)ணவன், வசுதேவன் முன்நாள் அருள் சிங்க அரசு இளையானோடு, வெம் கை வரிசிலை கால் பொர சீறியே,— தொடரும். வீமன், கர்ணனையும் அவனைச் சேர்ந்தவரையும் வலியழியச் செய்கின்ற வேளையில், யாரினும் சிறந்த பராக்கிரமத்தை உடைய விடசேனன் என்னும் செங்கண் வீரன், வசுதேவன் பெற்ற ராஜசிங்கம் போன்ற கண்ணனின் தம்பியான சாத்தகியோடு வில்லை வளைத்துக்கொண்டு சீறி (வந்தான்), என்பதாம்.

இரண்டாவது அடியிலுள்ள, மைந்தர், என்பதற்குப் **பாண்டவ குமாரர்**, என்றும் பொருள் கொள்ளலாம்.

**64.** **திண்சி லையினெடு நாணொலி யோடணி**
**சிஞ்சி தமுமெழ மாலிளை யோனிணை**
**வண்பு யமும்வியன் மார்பமு மூடுற**
**வன்பு பெறுபல வாளிக ளேவலும்**
**நண்பொ டவனிவ னேறிய தேர்கொடி**
**நன்பு ரவிகுடை பாகிவை வீழ்தர**
**வொண்பி றையின்முக மானசி லீமுகம்**
**ஒன்ப துதையினன் வாகுவு மார்புமே.**

[திண் சிலையின் நெடு நாண் ஒலியோடு அணி சிஞ்சிதமும் எழ, மால் இளையோன் இணை வண்புயமும் வியன் மார்பமும் ஊடுற, வன்பு பெறு பல வாளிகள் ஏவலும், நண்பொடு அவன் இவன் ஏறிய தேர் கொடி நல் புரவி குடை பாகு இவை வீழ்தர, ஒண் பிறையின் முகம் ஆன சிலீமுகம் ஒன்பது உதையினன் வாகுவும் மார்பும், ஏ.]

**விளக்கம் :-** சிஞ்சிதம் - (அசைவால் உண்டாகும்) ஆபரணங்களின் ஒலி. மால் இளையோன் - சாத்தகி. வன்பு பெறு - வலிமை பெற்ற. நண்பொடு - விடசேனனோடு ஒப்ப. அவன் - சாத்தகி. ஒண் பிறையின் முகமான சிலீமுகம் - ஒள்ளிய பிறைச்சந்திரனை போல் முனை உடைய அம்புகள். விடசேனன் வலிய அம்புகளை சாத்தகியின் இணையான தோள்களிலும் மார்பிலும் வலிய கணைகளை ஏவலும், சாத்தகியும், விடசேனன் ஏறிய தேர், கொடி, புரவி, குடை, சாரதி ஆகிய இவை எல்லாம் விழும்படி (செய்து) அவனது தோள்களிலும், மார்பிலும் அர்த்த சந்திரபாணங்கள் என்பதைப் பிரயோகித்தான், என்பதாம்.

சோழனும் மாகதனும் பொரல்

**65.** **குன்றி னருவிகள் போன்மத தாரைகள்**
**கொண்ட கடதட வாரண மாமிசை**
**சென்று சிலகணை யேவின ரோரிரு**
**சிந்து கிரணதி வாகர ராமென**
**இன்று வயலுழு வீர்புது நீர்வரும்**
**என்று வரிமண லேகுறி கூறிட**
**அன்று வருகுட காவிரி நாடனும்**
**அம்பொன் வரிகழன் மாகதர் கோவுமே.**

[குன்றின் அருவிகள் போல் மத தாரைகள் கொண்ட கட தடம் வாரணம் மாமிசை சென்று சில கணை ஏவினர், சிந்து கிரணதிவாகரர் ஆம் என, "இன்று வயல் உழுவீர், புது நீர் வரும்," என்று வரிமணல்களே குறி கூறிட, அன்று வரு குட காவிரி நாடனும், அம்பொன் வரி கழல் மாகதர் கோவும்,ஏ]

**விளக்கம்:-** 'வயல் உழுவீர், இன்று புது நீர் வரும்' என்று வரிமணல் குறி கூறிட, அன்று வரு குட காவிரி நாடனும், அம் பொன் வரிகழல் மாகதக் கோவும், குன்றின் அருவிகள் போல் மத தாரைகள் கொண்ட கடதடம் வாரணம் மாமிசை சென்று, சிந்து கிரண திவாகரர் ஆம் என, சில கணைகள் ஏவினர்,— என்பது அன்வயம்.

கட தட வாரணம் மா - கபோலங்களின் இடத்தை உடைய யானையாகிய விலங்கு. சிந்து கிரணம் திவாகரர் - சிந்துகின்ற கிரணங்களை உடைய சூரியர்கள். குட காவிரி - மேற்கில் உற்பத்தியாகும் காவிரி. நாடன் - சோழன். மாகதர்கோ - மகத நாட்டரசனான சாதேவன். "உழவர்களே, இன்று புதுப்புனல் வரும்," என்று அடர்ந்த மணல் அறிவிக்க, அன்றே புது வெள்ளம் தவறாமல் வரும் குடகாவிரி நாடனும், மாகதனும், குன்றின் அருவிகள் போல் பெருகுகின்ற மதநீர்ப் பெருக்கை உடைய கபோலங்களோடு கூடிய யானைமேல் ஏறிச்சென்று இரு சூரியர்கள்போல் சில கணைகளை ஏவினர், - என்பதாம்; குன்று, யானை. அருவி, மதப்பெருக்கு, திவாகரர், சோழனும் மாகதனும். கிரணம், அம்பு. இருதிவாகரர், **இல் பொருள் உவமை.**

**66. கங்கை நதியிடை வேயொடு பாகடர்**
**கம்ப நிகளமத தாசல நீருண**
**வங்க மறிகடல் சூழெழு பார்வலம்**
**வந்த மனுகுல சோழனை மாகதன்**
**அங்க னையரிள மாமுலை தோய்புயம்**
**அந்தி வெயினிகர் சோரியின் மூழ்குற**
**வெங்க ணழலுதி ராவதி ராவெதிர்**
**மின்கொ லெனவிணை வாளிக ளேவவே.**

[கங்கை நதியிடை வேயொடு பாகு அடர் கம்பம் நிகளம் மத அசலம் நீர் உ(ண்)ண, வங்கம் மறி கடல் சூழ் எழு பார் வலம் வந்த மனுகுல சோழனை மாகதன், அங்கனையர் இள மாமுலை தோய் புயம் அந்தி வெயில் நிகர் சோரியின் மூழ்குற, வெம் கண்

அழல் உதிரா, அதிரா எதிர் மின் கொல் என இணை வாளிகள் ஏவவே;—தொடரும்.]

**விளக்கம்:-** வேய் - மூங்கில் அங்குசம். அடர் - அழிக்கவல்ல, கம்பம் - கட்டுத்தறி, நிகளம் - சங்கிலி, மத அசலம் - மதத்தை யுடைய மலை போன்ற யானை. வங்கம் - அலை, அங்கனையர் - பெண்கள். சோரி - இரத்தம். வெம் கண் அழல் உதிரா அதிரா - கொடிய கண்கள் நெருப்பைச் சிந்தும்படி ஆரவாரித்து. எதிர் என்பதை **சோழனை எதிர்** (எதிர்ந்து) என்று கூட்டுக.

அங்குசத்தையும் பாகனையும் கட்டுத்தறியையும், சங்கிலியை யும் கோபித்து அழிக்கவல்ல யானை கங்கையில் நீர் உண்ணற்கு அலைகளை எறிகின்ற கடல் சூழ்ந்த ஏழு தீவுகளையும் வலம் வந்த சோழனை மாகதன் எதிர்ந்து பெண்களது இளைய பருத்த முலைகள் பொருந்தப் பெற்ற (சோழனது) தோள்கள் சோரியில் முழுகும்படி சீறிக் கொண்டும் கர்ச்சித்துக் கொண்டும் மின்னலைத் ஒத்த இரு கணைகளை ஏவி, (அடுத்த செய்யுளோடு தொடரும்) என்பதாம்.

**67. வஞ்சி மதுரைபு காருடை யான்வட**
**மண்ட லிகர்திறை வாரிய நேரியன்**
**வஞ்சி முனைதொறும் வாளசு ரேசரை**
**வென்ற பொழுதடல் வானவர் கோனருள்**
**நஞ்சு பொழியெரி காலொரு கோல்கொடு**
**நம்பர் சிலைமலை போலவ னேறிய**
**குஞ்ச ரமும்விழ மாகதர் கோனுயிர்**
**கொண்டு திருகினன் வார்சிலை கோலியே.**

[வஞ்சி, மதுரை, புகார் உடையான், வட மண்டலிகர் திறை வாரிய நேரியன், விஞ்சி முனை தொறும் வாள் அசுர ஈசரை வென்ற பொழுது அடல் வானவர் கோன் அருள் நஞ்சு பொழி, எரிகால், ஒரு கோல் கொடு நம்பர் சிலைமலை போல் அவன் ஏறிய குஞ்சரமும் விழ, மாகதர் கோன் உயிர் கொண்டு திருகினன், வார்சிலை கோலியே.]

**விளக்கம் :-** வஞ்சி, மதுரை, புகார் என்ற மூன்று தலைநகர் களை உடையவனாகிய, வட நாட்டு அரசர்கள் கொடுக்கும் வரிப் பொருளை வாரிக் கொள்கின்ற சோழன், நீண்ட வில்லை வளைத்துப் பல போர்முனைகளில் வாளேந்திய அசுரத் தலைவர்களை விஞ்சி (மிகுதியாக) இந்திரன் சார்பில் வென்றபோது இந்திரன் தந்த நஞ்சைக் கக்குகின்றதும், நெருப்பை வீசுகின்றதுமான ஒரு அம்பினால், சிவ பெருமான் வில்லாக வளைத்த மேருமலை போன்ற

(மாகதன்) ஏறிய யானை விழும்படி (செய்து) மாகதனுடைய உயிரைக் கவர்ந்து திரும்பினன், - என்பது பொருள்.

வஞ்சி: சேரன் தலைநகர். சேரனும் பாண்டியனும் சோழனுக்கு உட்பட்டிருந்தனர் போலும். நேரியன் - நேரி என்ற மலையை உடையவனான் சோழன்.

68. அண்டர் குலபதி யாம்விடை வாகனன்
அம்பொ னடிமலர் நாறிடு சேகரன்
எண்டி சையுமனு நீதிசெய் கோலினன்
எங்கு மொருகுடை யாலிடு நீழலன்
மண்டு கிரணசி காமணி மோலியன்
வண்டு மதுநுகர் தாதகி மாலையன்
மிண்டு முதுபுலி யேறுப தாகையன்
வென்றி வளவனை யார்நிகர் வீரரே.

[அண்டர் குலபதி ஆம் விடை வாகனன் அம் பொன் அடி மலர் நாறிடு சேகரன், எண் திசையும் மனுநீதி செய் கோலினன், எங்கும் ஒரு குடையால் இடும் நீழலன், மண்டு கிரணம் சிகாமணி மோலியன், வண்டு மது நுகர் தாதகி மாலையன், மிண்டு முது புலி ஏறு பதாகையன், வென்றிவளவனை யார் நிகர் வீரர், ஏ.[

**விளக்கம்:**- அண்டர் குலபதி ஆம் விடை வாகனன் - சிவபெருமான். மலர் நாறிடு - மலர் மணக்கப் பெற்ற. சேகரன் - திருமுடியை உடையவனான சோழன். மண்டு கிரணம் - மிகுந்த ஒளி. சிகாமணி மோலியன் - முடிமணி அணிந்த தலையை உடையவன். தாதகி மாலை - ஆத்திப் பூ மாலை. மிண்டு வலி - மிகுந்த வலிமை. சிவபெருமானது அடி மலர் மணக்கும் சென்னியை உடையவனும், திசை எட்டிலும் மனுநீதி நடக்கச் செய்யும் செங்கோலையுடையவனும், எங்கும் ஒரு தனிக் குடையால் செய்யும் நிழலை உடையவனும், சிறந்த சிகை மணி அணிந்த சென்னியனும், ஆத்திப்பூமாலை அணிந்தவனும், புலியைக்கொடியிலே கொண்டவனும் ஆன, வெற்றியுடைய வளவனுக்கு நிகர் ஆவார் யார்?—என்பதாம். வளவன் - சோழன். இது, சோழனது சிறப்புக் கூறும் செய்யுள்.

கொச்சகக் கலிப்பா

69. யாதேவ னென்று பலமன்னரு மீண்ட விப்பார்
மீதேவல் கொள்ளும் விறற்சென்னிகை வில்லின் வன்பால்
மோதேவு பட்டு முகமா றிமகதர் கோமான்
சாதேவன் வீழ முதுகிட் டதுதானை வெள்ளம்.

[யாது ஏவல் என்று பல மன்னரும் ஈண்ட இ பார்மீது ஏவல் கொள்ளும் விறல் சென்னி கை வில்லின் வன்பால் மோது ஏவு பட்டு, முகம் மாறி மகதர் கோமான் சாதேவன் வீழ, முதுகிட்டது தானை வெள்ளம்.]

**விளக்கம்:-** பலநாட்டு மன்னர்களும் 'யாது உனது கட்டளை ?' என்று கேட்டுக் கொண்டு திரண்டு வரும்படி இப்பாரில் (எல்லோரையும்) ஏவல் கொள்ளும் வெற்றியுடைய சோழனின் வில்லின் வலியால் தாக்கிய அம்பு பட்டதினுல் மகதர் கோமாகுகிய சாதேவன், தலை அறுக்கப்பட்டு விழவும், சேனு சமுத்திரம் பின்னிட்டு ஓடியது, என்பது பொருள். மோது ஏவு - தாக்கிய அம்பு. முகம் மாறி - தலை அறுபட்டு.

சென்னி - தலை. எல்லோர்க்கும் தலைவனுதல் பற்றிச் சென்னி, எனப்பட்டான். ஜராசந்தன் மகன் சாதேவன், கௌரவர் படையைச் சேர்ந்தவன். இச் செய்யுளும் இதைத் தொடரும் பதினைந்து செய்யுள்களும், வெண்டளை பெற்று நடக்கும் ஐந்து சீர்களைக் கொண்ட **கொச்சகக் கலிப்பா.**

விசயன் அசுவத்தாமனை வெல்லல்

**70. புறமிட்ட தானை நிலைகண்டு பொருது சோதி**
**நிறமிட்ட விற்கைத் துரோணன்மக னெஞ்சு கன்றி**
**மறமிட்ட வாளி பலதூவி வருத னேக்கி**
**அறமிட்ட சிந்தை யரசன் றனனுசர் தம்மில்.**

[புறம் இட்ட தானை நிலை கண்டு பொருது சோதி நிறம் இட்ட வில் கை துரோணன் மகன் நெஞ்சு கன்றி, மறம் இட்ட வாளி பல தூவி வருதல் நோக்கி, அறம் இட்ட சிந்தை அரசன் தன் அனுசர் தம்மில்,—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்:-** சோதி நிறம் இட்ட வில் கை துரோணன் - ஒளியின் தன்மை பொருந்திய வில்லைக் கையில் கொண்ட துரோணன். மறம் இட்ட வாளி - வலிமை பொருந்திய அம்புகள். அறம் இட்ட சிந்தை அரசன் - தருமம் பொருந்திய மனத்தை யுடைய தருமன். அனுசர் - தம்பியர். கௌரவசேனை பின்னிட்டது கண்டு பொறுக்காமல் அசுவத்தாமன், வலிய கணைகளை எய்து கொண்டு வருதல் நோக்கித் தருமனது தம்பியர் தம்முள்,— (தொடரும்), என்பதாம்.

**71. இன்றே முடிப்பன் வினையென் றிரண்டிங் கிரநீலக்**
**குன்றே நிகர்ப்பத் திருமா லொடுங்கூடி நிற்பான்**
**சென்றே யதிரப்பரித் தாமனைச் செங்கை யம்பால்**
**வென்றே யிமைப்பின் வெறுங்கா லினின் மீள விட்டான்.**

[இன்றே முடிப்பன் வினை என்று இரண்டு இந்திர நீலம் குன்றே நிகர்ப்ப திருமா லொடும் நிற்பான், சென்றே அதிர பரித்தாமனை செங்கை அம்பால் வென்றே, இமைப்பின் வெறு காலினின் மீள விட்டான்.]

**விளக்கம்:-** இன்றே போரை முடிப்பேன், எனறு எண்ணிக் கொண்டு, இரண்டு இந்திர நீலக்குன்றை ஒக்கும்படி கண்ணனேடு சேர்ந்து நிற்பவனுகிய விசயன், அதிர்ச்சியுண்டாகும்படி முழங்கிக் கொண்டு சென்று, அசுவத்தாமனைத் தனது அம்புகளால் இமைப் பொழுதில் வென்று வாகனம் இன்றி வெறுங் காலோடு திரும்பிச் செல்லச் செய்தான்,—என்பதாம்.

**72. துரியோ தனன்ற னிளையோ ரிற்சுதக் கணப்பேர்ப்**
**பெரியோன் முறிந்தபெ ருஞ்சேனை யின்பின்பு நின்ருேன்**
**பரியோடு மான்றேர்ப் பரப்போடும் பதாதி யோடும்**
**கரியோடு மூழிக்கன லென்னக் கனன்று வந்தான்.**

[துரியோதனன் தன் இளையோரில் சுதக்கணன் பேர் பெரியோன் முறிந்த பெருசேனையின் பின்பு நின்ருேன், பரியோடு மான் தேர் பரப்போடும் பதாதியோடும், கரியோடும் ஊழி கனல் என்ன கனன்று வந்தான்.]

**விளக்கம்:-** துரியோதனன் தம்பியரில் சுதக்கண்ணன் என்ற பேரையுடைய பெரிய வீரன், போருடைந்த பெரிய சேனையின் பின் நின்ருேன், குதிரைகளோடும், குதிரை பூட்டிய தேர்க் கூட்டங்களோடும், காலாட் படையொடும், யானைகளோடும் யுகாந்த காலத்துத் தீயைப்போல் கனன்று களம் வந்தான், என்பது பொருள்.

நகுலன் அவனை ஓடச் செய்தல்

**73. முகிலின் சிலையிற் சிலைகோ லிமுனைகொ ளம்பு**
**பெகுலந் தொடுத்து வருகா ளையைப்பெட்பி னேக்கி**
**நகுலன் சிறிது நகைசெய்து நகைசெய் வாளி**
**அகிலந் தொடுத்தாங் கவன்றன் னையுமஞ்சு வித்தான்.**

[முகிலின் சிலையின் சிலைகோலி முனைகொள் அம்பு பெகுலம் தொடுத்து வருகாளையை பெட்பின் நோக்கி, நகுலன் சிறிது நகை செய்து நகை செய் வாளி அகிலம் தொடுத்து, ஆங்கு அவன் தன்னையும் அஞ்சுவித்தான்.]

**விளக்கம்:-** முகிலின் சிலை – வானவில். முனை கொள் அம்பு-கூரிய அம்பு. பெகுலம் தொடுத்து - பலவாகச் செலுத்தி. நகை செய்வாளி - ஒளி செய் அம்பு. அகிலம் - அநேகம். அம்புகளைச் சொரிந்து கொண்டு வரும் சுதக்கணனை நகுலன் கண்டு நகைத்து, பல அம்புகளைப் பிரயோகம் செய்து அவனை அஞ்சி ஓடச் செய்தான், என்பதாம். பெகுலம்-பகுளம்-வடசொல்.

கர்ணனும் தருமனும் பொரல்

**74.** **மட்டுப் படாமல் வருதெவ்வர் மலையி னின்றே**
**தட்டுப் படாதுநின் றெமரானவர் தானை யென்னுப்**
**பட்டுப் படாத வடிவே னரபா லர்சூழ**
**முட்டுப் படாத முரட்கன்னன் முனைந்து சென்றான்.**

[மட்டு படாமல் வரு தெவ்வர் மலையின் இன்றே தட்டுப்படாது நின்று எமரானவர் தானை என்னு, பட்டு படாத வடிவேல் நரபாலர் சூழ, முட்டு படாத முரண் கன்னன் முனைந்து சென்றான்.]

**விளக்கம்:-** மட்டு படாமல் - அளவு படாமல், அதாவது மிகுதியாக. மலையின் - (தெவ்வர்) போர் செய்தால். எமர் ஆனவர் சேனை நின்று தட்டு படாது - எம்மவர் சேனை நிலை நின்று காணப்படாது. பட்டு படாது - (ஆயுதம்) பட்டு இறவாத. முட்டு படாத - தடைப் படுதல் இல்லாத. பகைவர் மிகுதியாக வந்து இவ்வாறு போர் செய்தால், எமது சேனை இன்றே அழிந்து ஒழியும், என்று கொண்டு இறந்து படாத வடிவேல் அரசர்கள் சூழ, தடையில்லாத வலிமையுடைய கர்ணன், போர் முனை விரைந்து சென்றான், என்பதாம்.

தருமன் கர்ணனை எதிர்த்தல்

**75.** **பாஞ்சா லரிற்கே கயரிற் பலபாடை மாக்கள்**
**ஆஞ்சார் பினில்வந் தடைந்தோர் களினன்று போரில்**
**மாஞ்சா ரொழிந்த பலமன் னருஞ்சூழ வண்டு**
**பூஞ்சா றருந்து நறுந்தா மம்புனைந்த தோளான்.**

[பாஞ்சாலரின் கேகயரின் பல படை மாக்கள் ஆம் சார்பினில் வந்து அடைந்தோர்களின் அன்று போரில் மாஞ்சார் ஒழிந்த பல மன்னரும் சூழ, வண்டு பூ சாறு அருந்தும் நறு தாமம் புனைந்த தோளான்,—ஆகிய தருமன், என்று அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம்:-** அடைந்தார்களின் என்பதிலுள்ள, **இன்**, என்பதை **மாக்கள்**, என்பதோடு கூட்டுக. பாஞ்சால நாட்டாருள்ளும், கேகய நாட்டாருள்ளும் தகுந்த துணையாக வந்தவர்களாகிய பல பாஷை பேசும் மக்களுள்போரில் மாய்ந்தவர்கள் போக மிஞ்சியபல மன்னரும், சூழ்ந்துவரும்படி அன்று, வண்டுகள் பூக்களின் தேனை அருந்துகின்ற நல்ல வாசனை உடைய மாலை அணிந்த தோள் களையுடைய,—(தருமன், என்று அடுத்த செய்யுளோடு தொடரும்), என்பது பொருள். மாஞ்சார் - மாய்ந்தார், (இடைப் போலி).

**76. மன்னன் றருமன் றிருமைந்தன் மலைய வந்த**
**கன்னன் கருத்துங் கடுஞ்சே னையுங்கண்டு மேற்போய்ப்**
**பொன்னம் பொருப்போ ரிரண்டென்ன வெம்பூசல்**
**செய்தார்**
**இன்னந் தமக்குத் தமையன்றி யெதிரி லாதார்.**

[மன்னன் தருமன் திரு மைந்தன் மலைய வந்த கன்னன் கருத்தும் கடுஞ் சேனையும் கண்டு மேல் போய், பொன் அம் பொருப்பு ஓர் இரண்டு என்ன வெம் பூசல் செய்தார், இன்னம் தமக்கு தமை அன்றி எதிர் இலாதார்.]

**விளக்கம்:-** யமதர்ம ராஜனது சிறந்த மைந்தனுகிய தருமன், போர் செய்வதற்கு வந்த கர்ணனது கருத்தையும் அவன் சேனையின் மிகுதியையும் கண்டு, அவன்மேல் எதிர்த்துப் போக, தமக்குத் தம்மையன்றி வேறு உவமை இலாதாராகிய இருவரும், அழகிய பொன்மலை இரண்டு போல் கொடிய போரைச் செய்தார்கள், என்பது பொருள்.

**77. உதையன் புதல்வன் பெருஞ்சேனை யுதிட்டி ரன்கைக்**
**குதையம் பில்வீழ்ந் தாரினையோ ரெனக்கூற றேற்றார்**
**இதயம் பழுதி லிவன்சேனை யவன்கை யம்பால்**
**உதையுண்டு வீழ்ந்தா ருரைத்தாலு முரைக்க லாற்ரு.**

[உதையன் புதல்வன் பெருஞ் சேனை உதிட்டிரன் கை குதை அம்பில் வீழ்ந்தார் இனையோர் என கூறல் தேற்றார்; இதயம் பழுது இல் இவன் சேனை அவன் கை அம்பால் உதையுண்டு வீழ்ந்தார் உரைத்தாலும் உரைக்கல் ஆற்ரு.]

**விளக்கம்:-** உதையன் - சூரியன். குதை - முனை. கூறல் தேற்றார் - கூறுவதற்கு அறியப்படார்.

தருமன் கை அம்பால் கர்ணன் சேனையில் பலரும், கர்ணன் கை அம்பால் தருமன் சேனையில் பலரும் மடிந்தனர்,—என்பதாம்.

**78. பொற்பூச லென்ன விருசேனையும் போயு மீண்டு**
**மற்பூசல் செய்ய வொளிசெய்யு மம்மன்னர் தம்மின்**
**முற்பூச லம்பிற் பிளந்தண்ட முகடு விள்ள**
**விற்பூச லெய்திப் புரிந்தார் வில்லின் வேதம் வல்லோர்.**

[பொற்பு ஊசல் என்ன இரு சேனையும் போயும் மீண்டு, மல் பூசல் செய்ய ஒளி செய்யும் அ மன்னர் தம்மில் முன் பூசல் அம்பில் பிளந்து அண்ட முகடு விள்ள வில் பூசல் எய்தி புரிந்தார், வில்லின் வேதம் வல்லோர்.]

**விளக்கம்:-** அழகிய ஊஞ்சலைப்போல இரு திறத்துச் சேனைகளும் பின் போயும், (மறுபடியும்) திரும்பி வந்தும் வலிய போரைச் செய்ய,—தநுர்வேதத்தில் வல்லவர்களான, தமது சேனைக்கு விளக்கத்தைத் தருகின்ற கர்ணன் தருமன் ஆகிய மன்னர்களும் விரைந்து ஆரவாரத்தையுடைய கணைகளால், அண்ட கோளத்தின் முகடு பிளவு படும்படி தங்களுக்குள் வில் போரைப் பொருந்திச் செய்தார்,—என்பது பொருள். முன் பூசல் அம்பின் - விரைந்து (செலுத்தம்படும்) ஆரவாரத்தை உடைய அம்புகளினுல். பொற்பு அழகு.

**79. கொலையம்பு மாளா மணியாவமுங் கொண்ட செங்கைச்**
**சிலையுங் கிரிகளி ரண்டென்னத் திரண்ட தோளும்**
**நிலையுங் குறிப்புஞ் சிறுநாணொலி நின்ற வாறு**
**மலையுந் திறலும்புகழ்ந் தண்டரும் வாழ்த்தி னுரே.**

[கொலை அம்பு மாளா மணி ஆவமும் கொண்ட செங்கை சிலையும் கிரிகள் இரண்டு என்ன, திரண்ட தோளும், நிலையும், குறிப்பும் சிறு நாண் ஒலி நின்ற ஆறு மலையும் திறலும் புகழ்ந்து அண்டரும் வாழ்த்தினுர், ஏ.]

**விளக்கம்:-** மாளா-குறைதல் இல்லாமல். ஆவம் - அம்பருத் தூணி. நிலை - விற்போருக்குரிய நிலை. குறிப்பு - (எய்தற்குரிய) இலக்கை நோக்குதல். சிறு நாண் ஒலி-சிறிய நாண்ஓசை. நின்ற ஆறு-பொருந்திய விதம். கர்ணனும் தருமனும் செய்த விற்போரைத் தேவர்களும் புகழ்ந்து வாழ்த்தினுர்கள், என்பதாம்.

**80. தாழங் குறித்துக் கரைசெய்யுந் தரங்க வேலை**
**ஆழம் புராசி யெழுபார் தனியாள நிற்போன்**
**சூழம் பொன்மாலைத் துணைத்தோள் களினெட்டும் மார்பின்**
**ஏழம் புமெய்தா னிருள்காயு மிரவி மைந்தன்.**

[தாழம் குறித்து கரை செய்யும் தரங்கம் வேலை, ஆழ் அம்பு ராசி எழு பார் தனி ஆள நிற்போன் சூழ் அம் பொன் மாலை துணை தோள்களின் எட்டும், மார்பின் ஏழ் அம்பும் எய்தான், இருள் காயும் இரவி மைந்தன்.]

**விளக்கம்:-** தாழம் - தாழை. குறித்து - கண்ணில் படும் படி. ஆழ் அம்பு ராசி தரங்கம் வேலை - ஆழமான நீரின் மிகுதியைக் கொண்ட அலைகளை உடைய கடல். எழு பார் தனி ஆள நிற்போன் - தருமன். இருள் காயும் - இருளை அழிக்கும். கர்ணன் தர்மனது தோள்களில் எட்டு அம்புகளையும், மார்பில் ஏழு அம்புகளையும் பிரயோகித்தான்,—என்பதாம்.

**81. தன்ருேளு மார்புஞ் சரமூழ்க வெஞ்சாபம் வாங்கி**
**நின்ருேனை வாய்மை நிலைநின்ற நிருப ரேறும்**
**வன்ருேளுற நாண்வலித் தோரிரு வாளி யேவிச்**
**சென்ருேரி மைப்பிற் புயங்கீறிச் சிலையும் வீழ்த்தான்.**

[தன் தோளும் மார்பும் சரம் மூழ்க வெம் சாபம் வாங்கி நின்ருேனை, வாய்மை நிலை நின்ற நிருபர் ஏறும், வல்தோள் உற நாண் வலித்து ஓர் இரு வாளி ஏவி, சென்று ஓர் இமைப்பின் புயம் கீறி சிலையும் வீழ்த்தான்.]

**விளக்கம்:-** வாய்மை நிலை நின்ற நிருபர் ஏறு - **தருமன்.** நாலாவது அடியிலுள்ள **சென்று,** என்பதை **நிருபர் ஏறும்,** என்ப தோடு கூட்டுக. புயம் கீறி - தோள்களைப் பிளந்து. தருமன் கர்ணனது தோள்களைப் பிளந்து, அவனது வில்லையும் அழித்தான்,—என்பதாம்.

**82. வேருேர் வரிவில் வெயிலோன்மகன் வெய்தின் வாங்கி**
**நூருேடு நூறு தொடுத்தேவு நுதிகொ ளம்பால்**
**கூருேரி ரண்டுபட யாரையுங் கொன்ற போழ்தின்**
**ஆருேடி விட்ட தடையா ருடலற்ற சோரி.**

[வேறு ஓர் வரிவில் வெயிலோன் மகன் வெய்தின் வாங்கி, நூருேடு நூறு தொடுத்து ஏவு நுதிகொள் அம்பால், கூறு ஓர் இரண்டு பட யாரையும் கொன்ற போழ்தின், ஆறு ஓடி விட்டது அடையார் உடல் அற்ற சோரி.]

**விளக்கம்:-** வெயிலோன் - சூரியன். நுதி கொள் அம்பு - கூரிய முனை கொண்ட அம்பு. கூறு ஓர் இரண்டு பட - உடல் வேறு உயிர் வேருக இரண்டு கூறுபடும்படி. அடையலார் - பகைவர். உடல் அற்ற - உடலிலிருந்து வெளிப்பட்ட. கர்ணன்

வேறு வில்லைக் கொண்டு அம்புகளைப் பொழிந்து பகைவர் உடலிலிருந்து குருதி ஆருகப் பெருகும்படி செய்து விட்டான்,—என்பதாம்.

83. சாதேவன் றண்டதரன் றண்டகன் சித்ர தேவன்
தீதேது மில்லாத் திறற்சாத்தகி சித்ர கீர்த்தி
தாதேறு தார்த்தம் பியரோடிகற் றண்ட நாதன்
மீதேறு தேருந் தகர்ந்தொண் சுடர்வில்லு மற்ருன்.

[சாதேவன், தண்டதரன், தண்டகன், சித்ரதேவன், தீது ஏதும் இல்லா திறல் சாத்தகி, சித்ரகீர்த்தி (ஆகிய) தாது ஏறுதார் தம்பியரோடு இகல் தண்டம்நாதன், மீது ஏறு தேரும் தகர்ந்து ஒண் சுடர் வில்லும் அற்ருன்.]

**விளக்கம்:-** தாது ஏறு - மகரந்தப் பொடி பொருந்திய இகல் தண்டம் நாதன் – வலிய சேனையின் தலைவஞன திட்டத் துய்மன். சாதேவன் முதல் சித்ர கீர்த்தி ஈருகவுள்ள தன் தம்பியரோடு போர் செய்த திட்டத் துய்மன், கர்ணனது கணைகளால் தேரையும் வில்லையும் இழந்து தோல்வியுற்ருன், என்பதாம். ஒண் சுடர் - ஒரு பொருட்பன் மொழி. திறலுக்குத் தீது, தோல்வி.

84. முன்சேனை யோடும் வலியுற்று முனைந்து கொற்றம்
மன்சேனை நாதன் பொழிவாளி மழையின் மூழ்கித்
தன்சேனை நாதன் முதலியாவருந் தளர்தல் கண்டு
நன்சேனை நாலு முடன்சூழ நடக்க லுற்ருன்.

[முன் சேனையோடும் வலி உற்று முனைந்து கொற்றம் மன் சேனை நாதன் பொழி வாளி மழையின் மூழ்கி, தன் சேனை நாதன் முதல் யாவரும் தளர்தல் கண்டு, நன் சேனை நாலும் உடன் சூழ நடக்கல் உற்ருன்.]

**விளக்கம்:-** மன் சேனை-மன்னனுன துரியோதனனது சேனை. தன் சேனை நாதன் - தனது (தருமனது) சேனை நாதனுன திட்டத் துய்மன். நன்சேனை நாலுடன் - நால்வகைப் பட்ட நல்ல சேனையோடு. முன்னே வலிமையோடு போர் செய்து பின்பு கர்ணனது அம்பு மழைக்கு ஆற்ருது தன் சேனை நாதனும் மற்றவரும் தளர்தல் கண்டு தருமன் நால்வகைப் படையுடன் மீண்டும் களம் சேர்ந்தான்,—என்பதாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**85. கிருபனென் றெண்டிசையும் வரிசிலைக் குரைசெய்முனி**
**கிருதவன் மன்சிந்தை விரகுடைச் சகுனியெனும்**
**நிருபரங் கங்கடொறு நிரையினிற் றுளையுருவ**
**நெடியவம் பைம்பதறு பதுபடப் படமுடுகி**
**முரண்மிகுந் திண்கடவுண் முரசுடைக் கொடிகொளணி**
**முகிலின்வந் தண்டர்குல முதல்வனத் தனுவினெடு**
**தரணியின் கண்சமர மலைவதொத் திரதமிசை**
**தருமன்மைந் தன்பரிதி புதல்வனைக் குறுகினனே.**

[கிருபன் என்று எண் திசையும் வரி சிலைக்கு உரை செய் முனி, கிருதவன்மன், சிந்தை விரகு உடை சகுனி எனும் நிருபர் அங்கங்கள் தொறும் நிரையினில் துளை உருவ நெடிய அம்பு ஐம்பது அறுபது பட பட, முடுகி முரண்மிகும் திண் கடவுள் முரசு உடை கொடி கொள், அணி முகிலின் வந்து அண்டர் குலம் முதல்வன் அ தனுவினெடு தரணியின் கண் சமரம் மலைவது ஒத்து இரதம் மிசை தருமன் மைந்தன் பரிதி புதல்வனை குறுகினன், ஏ.]

**விளக்கம் :-** கிருபனென்று எண்டிசையும்.... பட பட, முடுகி, அணி முகிலின் அண்டர் குலம் முதல்வன் அ தனுவினெடு தரணியின் கண் வந்து, சமரம் மலைவது ஒத்து, முரண் மிகும் திண் கடவுள் முரசு உடை கொடி கொள் தருமன் மைந்தன், இரதம் மிசை பரிதி புதல்வனை குறுகினனே, என்பது அன்வயம்.

எட்டுத் திக்கிலும் வில் கலைக்குச் சிறப்பித்துப் பேசப்படும் கிருபன் என்ற முனிவனும், கிருதவர்மனும், வஞ்சனை உடைய சகுனியும் என்ற அரசர்களின் அங்கங்கள் எங்கும் வரிசையாகத் துளைக்கும்படி விரைவாக அம்புகளை எய்து கொண்டு, மேக வாகனத்தில் ஏறிக் கொண்டு இந்திரன் (தனது) அந்த இந்திர வில்லுடன் பூமியில் வந்து போர் செய்வதை ஒத்து, வலி மிகுந்த முரசைக் கொண்ட கொடியை உடைய தருமன், தேர்மேல் (களம் வந்த) கர்ணனைக் குறுகினன்,—என்பதாம்.

**86. தருமன்மைந் தன்பரிதி புதல்வனைக் குறுகியிரு**
**சரமவன் செங்கைவரி சிலைதுணித் திரவுமெதிர்**
**இருசரந் துன்றியுயர் கொடியறுத் திடவுமுட**
**னிருசரஞ் சென்றுதனி யிரதமொட் டிடறிடவும்**
**ஒருசரம் பொங்குதிறல் வலவன் மெய்புதைதரவு**
**மொருசரந் திண்கவன துரகதத் துரனுறவும்**
**வரமிகுந் துங்கத்னு வினைவளைத் தெரிகொள்சில**
**வடிசரங் கொண்டவன திருபுயத் தெழுதினனே.**

[தருமன் மைந்தன் பரிதி புதல்வனை குறுகி இருசரம் அவன் செம்கை வரிசிலை துணித்திடவும், எதிர் இருசரம் துன்றி உயர் கொடி அறுத்திடவும், உடன் இருசரம் சென்று தனி இரதம் மொட்டு இடறிடவும், ஒருசரம் பொங்கு திறல் வலவன் மெய் புதைதரவும், ஒருசரம் திண் கவனம் துரகதத்து உரன் உறவும், வரம் மிகும் துங்க தனுவினை வளைத்து எரிகொள் சில வடிசரம் கொண்டு அவனது இரு புயத்து எழுதினன், ஏ.]

**விளக்கம் :-** எதிர் துன்றி - எதிரில் நெருங்கிச் சென்று. மொட்டு - தேரின் கொடிஞ்சி என்ற உறுப்பு. கவனம் துரகதம் - அதிவேகமுடைய குதிரை. வரம் - சிறப்பு. துங்க தனு - உயர்ந்த வில். எரிகொள் வடிசரம் - நெருப்பைப்போல் கொடிய கூரிய அம்பு. எழுதினுன் - தைத்து வருத்தச் செய்தான். தருமன், கர்ணனது தேர் குதிரை முதலியவற்றை அழித்து, அவனது தோள்களிலும் சில அம்புகளைத் தைத்து வருத்தும்படி பிரயோகித்தான், - என்பதாம்.

**87. வடிசரங் கொண்டவன திருபுயத் தெழுதியபின்**
**வடகலிங் கங்குகுர மகதமொட் டியமுதல**
**படிதொறுந் தங்கள்குடை நிழல்பரப் பியவரசர்**
**பலருடன் பைம்பொன்முடி மகுடவர்த் தனர்பலரும்**
**இடிமுழங் குங்குரலி னதிபயத் தொடுபிலனில்**
**இழிபுயங் கங்களென வொருவருக் கொருவர்நடை**
**அடிதளர்ந் தஞ்சலியு முதுகுமிட் டவரொழிய**
**அடையவன் றும்பர்பதி குடிபுகப் பொருதனனே.**

[வடிசரம் கொண்டு அவனது இரு புயத்து எழுதியபின், வட கலிங்கம், குகுரம், மகதம், ஒட்டியம் முதல படிதொறும் தங்கள் குடை நிழல் பரப்பிய அரசர் பலருடன், பைம்பொன் மகுடவர்த்தனர் பலரும், இடி முழங்கும் குரலின் அதிபயத்தொடு பிலனில் இழி புயங்கங்கள் என, ஒருவருக்கு ஒருவர் நடை அடி தளர்ந்து அஞ்சலியும் முதுகும் இட்டவர் ஒழிய, அடைய அன்று உம்பர்பதி குடிபுக பொருதனன், ஏ.]

**விளக்கம் :-** படி - நாடு, பூமி. குரலின் - ஒலியினுல். பிலம்- வளை. நடைஅடி தளர்ந்து - கால் நடை தளர்ந்து. அடைய - எல்லோரும். உம்பர்பதி - வீர சுவர்க்கம். கர்ணனது தோள்களை அம்புகளால் வருத்தியபின், தருமன், கலிங்கம் முதலான அரசர் கள் பலரோடு மகுடவர்த்தனர் பலரும், இடியின் ஒலியினுல் மிகப் பயந்து வளையில் நுழையும் பாம்புகள்போல், ஒருவர் முன் ஒருவர் முற்பட்டு நடை மெலிந்து அஞ்சலி செய்தும் முதுகிட்டும் போனவர்

தவிர மற்றவர் எல்லாம் வீரசுவர்க்கம் அடையும்படி, போர் செய்தான், - என்பதாம்.

தருமன் தோற்றுப் பின்னிடல்

**88.** **அடையவன் றும்பர்பதி குடிபுகப் பொருதுதன**
**தணிகொள்சங் கம்பவள விதழின்வைத் தருளுதலும்**
**உடையுமண் டந்திசைகள் செவிடுபட் டிடுமமர**
**ருலகுபொன் றும்பணிகள் பிலமுமுற் றுறவிடியும்**
**இடைவழங் குந்தரணி வளர்சனத் தொடுமடியு**
**மெனமுழங் கும்பெரிய வரவமெக் கடலுமெழு**
**கடையுகங் கண்டவட வையின்முகத் தெரிகனலி**
**கதுவமண் டும்பவன ஞெலியினிற் கடுகியதே.**

[அடைய அன்று உம்பர்பதி குடிபுக பொருது தனது அணிகொள் சங்கம் பவளம் இதழின் வைத்தருளுதலும், உடையும் அண்டம், திசைகள் செவிடுபட்டிடும்; அமரர் உலகு பொன்றும், பணிகள் பிலமும் முற்றுற இடியும்; இடைவழங்கும் தரணி வளர் சனத்தொடு மடியும், என முழங்கும் பெரிய அரவம் எகடலும் எழு கடையுகம் கண்ட வடவையின் முகத்து எரி கனலி கதுவ மண்டும் பவனன் ஒலியினில் கடுகியது, ஏ.]

**விளக்கம் :-** அன்று பகைவர் அனைவரையும் உம்பர்பதி புகப் பொருதபின், தருமன், தனது அழகிய சங்கைத் தனது செம்பவள வாயில் வைத்து ஒலி எழுப்பின அளவில், "அண்டம் உடையும், திசைகள் செவிடுபடும், தேவர் உலகம் அழியும், பாம்புகளின் வாழிடமான நாகலோகமும் இடிந்துவிடும், தேவலோகத்திற்கும் நாகலோகத்திற்கும் இடையிலுள்ள மண்ணுலகம் பொருந்தி வாழ்கின்ற ஜனங்களுடன் மடியும்", என்று சொல்லும்படி, ஒலிக்கும் சங்கின் பேரொலி, ஏழு கடல்களும் பொங்கி எழும் யுகாந்த காலத்தில் வெளியில் காணப்படும் வடவை என்னும் பெண்குதிரையின் முகத்தில் எரிகின்ற நெருப்பு நன்ருகப் பற்றும்படி மிகுதியாக வீசுகின்ற காற்றின் ஒலியைக் காட்டிலும் மிகுந்ததாயிற்று, - என்பது பொருள். இது தருமனது சங்கொலியின் வருணனை.

**89.** **கதுவமண் டும்பவன ஞெலியினிற் கடுகியணி**
**கவசமுங் குண்டலமு மகபதிக் கருள்குரிசில்**
**சதுர்முகங் கொண்டதொரு கனகமொட் டிரதமொடு**
**சதுர்விதந் தங்குகதி யிவுளியொப் பறவடைசி**

மதுபமொன் றும்புதிய தெரியன்மத் திரநிருப
வலவனுந் தும்பொழுதி லதனின்மிக் கெழுமடியும்
அதிரவெங் குந்தனது வளைமுழக் கினினயர
அறனின்மைந் தன்சமர முனைமுகத் தணுகினனே.

[கதுவ மண்டும் பவனன் ஒலியினில் கடுகி அணி கவசமும் குண்டலமும் மகபதிக்கு அருள் குரிசில், சதுர்முகம் கொண்டது ஒரு கனகம் மொட்டு இரதமொடு, சதுர்விதம் தங்கு கதி இவுளி ஒப்பு அற அடைசி, மதுபம் ஒன்றும் புதிய தெரியல் மத்திர நிருபன் வலவன் உந்தும் பொழுதில், அதனின் மிக்கு எழுமடியும் அதிர, எங்கும் தனது வளை முழக்கினின் அயர, அறனின் மைந்தன் சமரம் முனைமுகத்து அணுகினன், ஏ.]

**விளக்கம்:-** அழகிய கவசமும் குண்டலமும் இந்திரனுக்கு ஈந்த கர்ணன், நான்கு பக்கங்களை உடைய பொன்னுலான மொட்டு என்ற உறுப்பையுடைய ஒப்பற்ற தேரோடு நான்குவிதம் அமைந்த நடை விசேஷத்தையுடைய குதிரைகளை ஒப்பில்லாத படி பூட்டி, வண்டுகள் ஒன்றிய புதிய மாலை அணிந்த சல்லியனாகிய பாகன் செலுத்தும்பொழுது, தனது சங்கின் முழக்கத்தால் (தருமனது) அந்தச் சங்கநாதத்தினும் ஏழுமடங்கு அதிகமாய் அதிரவும், மூன்று உலகமும் திகைக்கவும் (ஊழித்தீ) பற்றும்படி மிகுந்து வீசும் காற்றின் ஒலியினும் கடுமையாக, தருமனது போர் முனையினிடத்தே அணுகினான், - என்பது பொருள்.

மதுபம் - வண்டு. மத்திர நிருபன் - சல்லியன். எங்கும் - மூன்று உலகத்திலும் உள்ள எல்லா இடங்களும். அறனின் மைந்தன் - தருமன்.

**90.** அறனின்மைந் தன்சமர முனைமுகத் தணுகியவ
னகலமுந் திண்புயமும் வடிசுடர்ப் பகழிபல
உறவுமஞ் சங்கண்முடி யுருளையற் றிரதநடு
வுடையவுந் துங்கவரி சிலைகுணத் துடனறவும்
மறம்விளங் கும்பரிக டுணிகள்பட் டிடவும்விறல்
வலவனங் கஞ்சிதறி யுரனிலுற் றனமுதுகு
பறியவுந் தண்டுமுர செழுதுபொற் றுகிலினெடு
பறியவுஞ் சண்டதனு வுறவளைத் தனனிவனே.

[அறனின் மைந்தன் சமர முனைமுகத்து அணுகி அவன் அகலமும் திண்புயமும் வடி சுடர் பகழி பல உறவும், அஞ்சங்கள், முடி, உருளை அற்று இரதம் நடு உடையவும், துங்கம் வரிசிலை குணத்துடன் அறவும், மறம் விளங்கும் பரிகள் துணிகள் பட்டிட

வும், விறல் வலவன் அங்கம் சிதறி உரனில் உற்றன முதுகு பறியவும், தண்டு முரசு எழுது பொன் துகிலின் நெடு பறியவும், சண்ட தனு உற வளைத்தனன், இவன், ஏ.]

**விளக்கம் :-** தருமனது போர்முனை அணுகி, அவன் மார்பிலும் திண் புயங்களிலும் கூரிய சுடர்க்கணைகள் பல பொருந்தவும், அஞ்சங்கள் (தேரின் அச்சுக்கள்), மேல் முகடு, சக்கரங்கள் ஆகியவை நடுவிடம் உடையவும், சிறந்த வரிவில் நாணியோடு அறுபடவும், வலிமை விளங்குகின்ற குதிரைகள் துணிபடவும், விறல் வலவனது உடலைத் துளைத்து, மார்பில் புதைந்த கணைகள் முதுகு வழியாய் அகலவும், கொடித் தண்டுடன் முரசு எழுதப் பெற்ற அழகிய சீலை அழியவும், இவன் (கர்ணன்) உக்கிரமான தனது வில்லை நன்ருக வளைத்தான், - என்பது பொருள். அஞ்சு - அச்சு, (வடமொழித் திரிபு). குணம் - நாண்.

## வேறு

91 இவனுமவ னைப்புயமு முரமுமுழு கத்துவச
மிடியமணி மொட்டிரத மொடியவரி விற்றுணிய
நவநடை வ யப்புரவி விறல்வலவன் மெய்ப்புதைய
நகுசரநி ரைத்தொருவி னடுவுறவ ணக்கினபின்
அவனுமிவ னைப்பிறகு பொருதுமுன் மலைத்தபடி
அடையவும ழித்தனனிவ் வடன்மிகுக ளத்திலென
உபநிடத வித்துமுத லவனிபரெ னைப்பலரும்
உரமுமவர் கற்றகலை யுறுதியுமு ரைத்தனரே.

[இவனும் அவனை புயமும் உரமும் முழுக, துவசம் இடிய, மணி மொட்டு இரதம் ஒடிய, வரிவில் துணிய, நவ நடை வய புரவி, விறல் வலவன் மெய்புதைய, நகுசரம் நிரைத்து, ஒருவில் நடுஉற வணக்கின பின், - அவனும் இவனை பிறகு பொருது முன் மலைத்தபடி அடையவும் அழித்தனன் இ அடல் மிகு களத்தில் என உபநிடதம் வித்து முதல் அவனிபர் எனைப் பலரும், உரமும் அவர் கற்ற கலை உறுதியும் உரைத்தனர், ஏ.]

**விளக்கம் :-** இவனும் (கர்ணனும்) அவனை (தருமனை) தோள்களிலும் மார்பிலும் தைக்கவும், கொடி ஒடிந்து விழவும், தேர் சிதையவும், வரிவில் அறுபடவும், ஒன்பதுவகை நடை நலமுடைய குதிரைகளும் வலவனும் உடலில் புதையப்பெறவும், விளங்குகின்ற சரங்களை வரிசையாகப் பிரயோகித்து, ஒப்பற்ற வில்லை நன்கு நடு வளையும்படி வளைத்தவுடன்,-அவனும் (தருமனும்) இவனைப் பிறகு போர் செய்து, இதன், முன்னே கர்ணன் போருடையும்படி போர்

செய்து அவனை வலி ஒடுங்கச் செய்தபடி, அவனது தேர் முதலிய எல்லாம் இந்த அடல்மிகு களத்தில் அழித்தனன், என்று, உப நிடத வித்தகனுன அசுவத்தாமன் முதல் எல்லா அரசர்களும், இரு வீரர்களின் வலிமையையும், அவர்கள் பயின்ற விற்கலையின் திறமையையும், சிறப்பித்துப் பேசினுர்கள், என்பது பொருள். உபநிடத வித்து - அசுவத்தாமன்; கண்ணனுகவும் கொள்ளலாம்.

தருமன் பின்னிடல்

**92. உறுதியுடன் மற்றொரத மிசைகொளுமு திட்டிரனும்**
**ஒருகையில் வயச்சிலையு மொருகையில் வடிக் கணையும்**
**விறலினெடெ டுத்தெதிர்செல் பொழுத நண்மி குந்தமொழி**
**வெயிலவன ளித்தருளும் விதரணகு ணக்குரிசில்**
**மறமுறவி டுத்தகணை பொடியுறவி யற்றியவன்**
**மதுமலரு ரத்தைவழி வழிதுளைப டுத்துதலின்**
**எறிபடைவி டுத்திரத மிசையுறவி ளைத்துமுது**
**கிடவறன்ம கற்கிரவி மகனிவையு ரைத்தனனே.**

[உறுதியுடன் மற்று ஒருரதம் மிசை கொளும் உதிட்டிரனும் ஒரு கையில் வயம் சிலையும் ஒரு கையில் வடிகணையும் விறலினெடு எடுத்து, எதிர் செல்பொழுது, அருள்மிகுந்த மொழி வெயிலவன் அளித்தருளும் விதரணம் குணம் குரிசில் மறம் உற விடுத்த கணை பொடி உற இயற்றி அவன் மதுமலர் உரத்தை வழி வழி துளை படுத்துதலின், எறிபடை விடுத்து இரதமிசை உற இளைத்து முதுகு இட, அறன் மகற்கு இரவிமகன் இவை உரைத்தனன், ஏ.]

**விளக்கம் :-** வலியோடு மற்றோர் தேரின்மேல் ஏறிக்கொண்ட தருமனும், ஒரு கையில் வில்லும், ஒருகையில் அம்புகளும் எடுத்துக் கொண்டு (கர்ணனுக்கு) எதிரே சென்றபொழுது, அருள் மிகுந்து இனிய சொல்லையுடையவனும், சூரியன் அளித்தவனுமான ஈகைக் குணமுடைய கர்ணன், (தருமன்) வலிமையோடு பிரயோகித்த அம்புகளைப் பொடிசெய்து, அவனது மதுமலர் தரித்த மார்பைப் பலவிடங்களிலும் துளைத்தலின், அவன் சோர் வுற்று ஆயுதங்களைப் போட்டுவிட்டு முதுகிட, தருமனுக்குக் கர்ணன் இவ்வார்த்தைகளைச் சொல்வானுயினுன், - என்பது பொருள்.

**93. உரையுடையை கற்றகலை யுணர்வுடையை தக்கமதி**
**யுளமுடையை மிக்ககிளை யுறவுடையை சத்யகுணம்**
**வரையுடையை யெத்திசையும் வழுவறவ ளர்ந்தபுகழ்**
**வரிசைகொள றத்திளைஞர் வழிபடும திப்புடையை**

**தரைமுழுது முத்தநில வுமிழ்குடைநி ழற்றவொரு**
**தனிநனிபு ரக்குமுயர் தலைமைபெறு கிற்றிபகை**
**கரையழிய வுற்றபொழு துயிர்கொடுபு றக்கிடுதல்**
**கடனலவு னக்குநிலை கருதியணி நிற்றியெனு.**

[உரை, உடையை, கற்ற கலை உணர்வு உடையை, தக்க மதி உளம் உடையை, மிக்க கிளை உறவு உடையை, சத்ய குணம் வரை உடையை, எ திசையும் வழு அற வளர்ந்த புகழ் வரிசை கொள் அறத்து இளைஞர் வழி படும் மதிப்பு உடையை, தரை முழுதும் முத்தம் நிலவு உமிழ் குடை நிழற்ற ஒரு தனி நனி புரக்கும் உயர் தலைமை பெறுகிற்றி; பகை கரை அழிய உற்ற பொழுது உயிர் கொடு புறக்கிடுதல் கடன் அல உனக்கு, நிலை கருதி அணி நிற்றி, எனு,—தொடரும்.]

**விளக்கம்:-** புகழ் உடையாய், கற்றதினுல் உண்டாகிய நல்லறிவு உடையாய், தகுந்த இயற்கை அறிவு உடையாய், மிகுந்த நண்பர்களையும் சுற்றத்தாரையும் உடையாய், திசை எங்கும் பழிப்பு இல்லாமல் வளர்ந்த புகழின் சிறப்புடைய தர்மம் தவருத தம்பியர் வழிபடும் மதிப்பை உடையாய், முத்துப் போன்ற நிலவு வீசும் கொற்றக் குடைநிழல் செய்ய, பூமி முழுதையும் தான் ஒருவனே நன்கு அரசாளும் உயர்ந்த தலைமையைப் பெற இருக்கின்ருய்; (அவ்வாருக) பகைவர் எல்லையில்லாது வந்து நெருங்கிய பொழுது, முதுகிட்டுச் செல்லல் நன்று அன்று; (ஆகவே) புறங்கொடாமையாகிய நல்ல நிலைகருதி அணி வகுப்பில் நிற்பாயாக, என்று (கர்ணன்) கூறலும், (அடுத்த கவியோடு தொடரும்), என்பது பொருள். வரிசை - சிறப்பு மேன்மை.

### வீமன் போர் ஏற்றல்

**94.** **கருதியணி நிற்றியென வுறுதிசம ரத்துரைசெய்**
**கருணனைம தித்துமிகு கருணையவ னிற்பளவில்**
**விருதர்தலை யற்றுருள விருதர்மத வத்திகளின்**
**விரிதலைக ளற்றுருள விறலிவுளி மெய்த்துணிய**
**இரதம்வயி ரச்சுருளை முடிகொடலை யற்றுருள**
**விருபுறமு மிட்டவிற லொருகதைகொ டெற்றியெதிர்**
**பொருசமர்மு ருக்கிவரு புரையில்பவ னக்கடவுள்**
**புதல்வனெரி மைப்பொழுதின் முதல்வனைய**
**டுத்தனனே.**

[கருதி அணி நிற்றி என, உறுதி சமரத்து உரை செய் கருணனை மதித்து மிகு கருணையவன் நிற்பு அளவில், விருதர் தலை

அற்று உருள, விருதர் மதம் அத்திகளின் விரி தலைகள் அற்று உருள, விறல் இவுளி மெய் துணிய, இரதம் வயிர் அச்சு உருளை இட்ட முடிகொள் தலை அற்று உருள, இருபுறமும் விறல் ஒரு கதை கொடு எற்றி எதிர் பொரு சமர்முருக்கி வரு புரை இல் பவனக் கடவுள் புதல்வன் ஓர் இமைப்பொழுதின் முதல்வனை அடுத்தனன், ஏ]

**விளக்கம்:-** (புறங்கொடாமை) கருதி அணி நிற்றி என, உறுதியான சொல்லைப் போரில் சொன்ன கர்ணனை மதித்து, கருணை உடையவனான தருமன் நின்ற அளவில்,—வீரர்களின் தலை அறுபட்டு உருளவும், வீரர்களின் மதயானைகளின் விரிந்த தலைகள் அறுபட்டு உருளவும், வலிய குதிரைகளின் உடல் அறுபடவும், தேர்களின் வயிரம் பாய்ந்த அச்சும், சக்கரங்களும், கலசங்களைக் கொண்ட தேரின் மேல் பாகமும் அறுபட்டு உருளவும், இரு புறமும் தாக்கி, எதிர்த்துப் போர் செய்கின்ற போரில் (பகைப்படையை) அழித்து வருகின்ற குற்றமில்லாத வாயுபகவானின் புதல்வனான வீமன், இமைப்பொழுதில், தருமனை நெருங்கினான், என்பது பொருள். வயிரம், என்பது வயிர், என்று நின்றது. 85 முதல் 94 ஈருகவுள்ள செய்யுள்களில் **அந்தாதித் தொடை** அமைந்திருத்தல் காண்க.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**95. முதல்வன்வென் னிடுதல் கண்டு முடியுடை வேந்த ரோடும்**
**விதலையில் வயிர நெஞ்சின் வீமன்வந் துறலுங் காலின்**
**புதல்வனைப் பொருது வேற லரிதெனப் பொலம்பொற்**
**றேரோன்**
**மதலையை நோக்கிப் பாகன் வன்பகை தோன்றச்**
**சொன்னான்.**

[முதல்வன் வென் இடுதல் கண்டு முடி உடை வேந்தரோடும் விதலை இல் வயிரம் நெஞ்சின் வீமன் வந்து உறலும், காலின் புதல்வனை பொருது வேறல் அரிது என, பொலம் பொன் தேரோன் மதலையை நோக்கி பாகன் வன்பகை தோன்ற சொன்னான்.]

**விளக்கம் :-** தருமன் வென்னிடுதலை, (எந்த நிலையிலும் பயத்தால்) நடுங்குதல் இல்லாத நெஞ்சின் உறுதியையுடைய வீமன் கண்டு, முடியுடைவேந்தரோடும் களம் வந்து சேர்ந்தவுடன், அழகிய பொன்தேரையுடைய சூரிய புத்திரனான கர்ணனை நோக்கி, சாரதியான சல்லியன், "வாயுவின் மகனான

வீமனைப் பொருது வெல்லுதல் அரியது" என்று, பகைவனது வன்மை தோன்றச் சொன்னான்,— என்பது பொருள்.

**96. காமனே யென்ன நின்ற கன்னன்விற் கையில் வாங்கி**
**வீமனே யாக வென்றி விசயனே யாக வெற்றித்**
**தாமனே காண்டி யிற்றைச் சமரிலென் றழல்வா யொற்றைத்**
**தூமநேர் பகழிக் காற்றார் தூண்டுதி யிரத மென்றான்.**

**விளக்கம்:-** வெற்றித் தாமனே - வெற்றி மாலையை உடைய சல்லியனே, தழல் வாய் தூமம் நேர் ஒற்றை பகழி - நெருப்பை ஒத்த முனையை உடையதும் புகையை வெளிப்படுத்துவதுமான ஒரு கணை. மன்மதனைப் போல் நின்ற கர்ணன் சல்லியனை நோக்கி," வீமனாகட்டும், விசயனாகட்டும். இன்றைய போரில் அவர்கள் எனது ஒரு கணைக்கு ஆற்றார்; தேரை விடுக," என்று கூறினான், என்பதாம்.

கர்ணன் தளர்தல்

**97. என்னுமுன் மருத்தின் மைந்த னிரதமேல் வரிவில் வாங்கிக்**
**கன்னன துரையும் வில்லுங் களத்திடை சிதைந்து வீழ**
**முன்னொரு வாளி தொட்டா னெதிரியு முரண்வி லொன்றால்**
**பன்னிரு வாளி மீளி மார்பிடைப் பரப்பி னானே.**

**விளக்கம் :-** என்று கர்ணன் சொல்வதற்கு முன் வீமன் தேரின் மேலிருந்து வில்லை வளைத்து, கர்ணனது சொல்லும், அவனது வில்லும் கணப் பொழுதில் சிதைந்து விழும்படி ஒரு கணையை விட்டான்; எதிரியான கர்ணனும் வேறொரு வில்லினால் பன்னிரண்டு பாணங்களை வீரனான வீமன் மார்பில் பரவச் செய்தான்,—என்பது பொருள்.

**98. பாய்ந்தவப் பாணந் தன்னைப் பாணியாற் றிமிர்ந்து வீமன்**
**காய்ந்தவா ளனைய தாரைக் கடுங்கொடும் பகழி யொன்றால்**
**ஏய்ந்ததே ரருக்கன் மைந்த னிதயத்து மூழ்கு வித்தான்**
**வேய்ந்ததா ரவனுந் தேரின் மிசையயர் வுற்று வீழ்ந்தான்.**

**விளக்கம் :-** (தன்மேல்) பாய்ந்து வந்த அந்தப் பன்னிரண்டு பாணங்களையும் வீமன் கையினால் பொடி செய்து, கொல்லும் வாளைப் போன்ற நுனியை உடையக் கடிய கொடிய அம்பு ஒன்றால், தேரில் பொருந்திய சூரியகுமாரனது நெஞ்சில் புதையச் செய்தான்; அணிந்த மாலையை உடைய கர்ணனும் தேரின்மேல் மூர்ச்சித் து வீழ்ந்தான்,—என்பது பொருள்.

## வீமன் பின்னிடல்

**99. வீழ்தலு மன்னர் மன்னன் வெம்படை வென்னிட் டோட**
**வாழ்வற வீழ்ந்தோன் றன்னை மத்திரத் தலைவன் தேற்ற**
**ஏழ்பரித் தேரோன் மைந்த னெழுந்துபின் சாபம் வாங்கி**
**சூழ்படை வீரர் யாருந் துஞ்சிடத் துணித்திட் டானே.**

**விளக்கம்:-** (கர்ணன் மூர்ச்சித்து) வீழ்தலும், துரியோதனனது சேனை பின்னிட்டு ஓட, உயிர் அறும்படி உணர்வு அற்று வீழ்ந்த கர்ணனைச் சல்லியன் தெளியச் செய்ய, கர்ணன் எழுந்து பின்பு, வில்லை வளைத்து, (பகைவர் படையில்) சூழ்ந்துள்ள வீரர்கள் எல்லோரும் சாகும்படி அம்புகளால் பிளந்தான்,—என்பது பொருள். எழுபரி தேரோன் - சூரியன்.

**100. கைத்தல வண்மை வேந்தன் கார்முகம் பொழிந்த வம்பால்**
**எத்தனை நிருபர் மாய்ந்தா ரெண்ணுதற் கியாவர் வல்லார்**
**பத்திகொள் சாது ரங்கப் படைஞர்பாஞ் சாலர் தம்மில்**
**செத்தன ரெழுவர் சிங்க சேனனை யுள்ளிட் டாரே.**

**விளக்கம்:-** கை தலம் வண்மை வேந்தன் - கர்ணன். அவனது வில் பொழிந்த கணைகளால் எத்தனை அரசர்கள் இறந்தார்கள்? (இறந்தவர்களை) கணக்கிட்டுச் சொல்வதற்கு வல்லவர் யாவர்? வரிசை கொண்ட சதுரங்க சேனையை உடையவர்களாகிய பாஞ்சாலரில் சிங்கசேனனை உள்ளிட்டவர்களாகிய எழுவர் மாண்டனர்,—என்பது பொருள்.

**101. சேனையு முரிந்து வீம சேனனு முதுகிட் டோடக்**
**கானமர் துளவோன் கண்டு கடும்பரி நெடுந்தேர் தூண்ட**
**யானைமேற் சிங்கஞ் செல்வ தென்னவந் தெய்தி யிட்டான்**
**வானவர்க் கரசன் மைந்தன் மைந்துடை வரிவில் லோனே.**

**விளக்கம்:-** சேனையும் அழிந்து வீமன் முதுகிட்டு ஓட, (அதை) கண்ணன் கண்டு, தேரைச் செலுத்த, இந்திரகுமாரனும், வலிமை உடைய வரிவில்லை உடையவனும் ஆகிய விசயன், யானைமேல் சிங்கம் போர் செய்யச் செல்வதுபோல், கர்ணனோடு போர் செய்யக் களம் வந்து சேர்ந்தான்,—என்பதாம். கான் அமர் துளவோன் - காட்டில் பொருந்திய துளசிமாலையை உடைய கண்ணன்.

## விசயன் போர் ஏற்றல்

**102. சென்றவன் சேனை தன்னி னிருபருஞ் செருச்செய் கிற்பான்**
**நின்றவன் சேனை தன்னி னிருபரு நேர்ந்த காலை**
**என்றவன் மதலை யேவு மிமையவர் தெவ்வை யோட**
**வென்றவ னேவுந் தம்மில் விசும்பினை வேய்ந்த வாலோ.**

[சென்றவன் சேனை தன்னில் நிருபரும், செரு செய்கிற்பான் நின்றவன் சேனை தன்னில் நிருபரும் நேர்ந்தகாலை, என்றவன் மதலை ஏவும், இமையவர் தெவ்வை ஓட வென்றவன் ஏவும், தம்மில் (நெருங்கி) விசும்பினை வேய்ந்த, ஆல் ஓ ]

**விளக்கம்:-** சென்றவன் - விசயன். நின்றவன் - கர்ணன். என்றவன் - (என்று அவன்) சூரியன். ஏவு - அம்பு. இமையவர் தெவ்வை ஓட வென்றவன் - தேவர்களின் பகைவர்களான அசுரர்களை ஓடும்படி வென்றவனான விசயன். விசயனும் கர்ணனும் தங்களைச் சேர்ந்தவரோடு போர் செய்தபொழுது, இருவீரர்களின் பாணங்களும் தம்மில் நெருங்கி வானை மறைத்தன, — என்பதாம், ஆல், ஓ; அசைகள்.

## அசுவத்தாமன் துணைவரல்

**103. இரவிதன் மதலைக் காக விமைத்தகண் விழிக்கு முன்னர்ப்**
**புரவியந் தாமா வென்னும் பூசுரன் றேரிற் றோன்றி**
**அரவணைச் செல்வன் மெய்யு மருச்சுனன்மெய்யுஞ் செக்கர்**
**விரவிய வான மென்ன வெஞ்சரம் புதைவித் தானே.**

[இரவி தன் மதலைக்கு ஆக இமைத்த கண் விழிக்கும் முன்னர், புரவி அம் தாமா என்னும் பூசுரன் தேரில் தோன்றி, அரவு அணை செல்வன் மெய்யும் அருச்சுனன் மெய்யும் செக்கர் விரவிய வானம் என்ன வெம் சரம் புதைவித்தான், ஏ.]

**விளக்கம்:-** அம் புரவித்தாமா - அசுவத்தாமன், பூசுரன் - அந்தணன். அரவு அணை செல்வன் - கண்ணன். கர்ணனுக்கு உதவியாக அசுவத்தாமன் வந்து கிருஷ்ணார்ச்சுனர்களின் உடலைச் செவ்வானம் போலாகும்படி, தன் கொடிய அம்புகளை ஏவித் தைக்கச் செய்தான், — என்பதாம்.

**104. விசையனும் வெகுளூற் றந்த வேதியன் வில்லுந் தேரும்**
**அசைவுற முடுகி யெய்தா னவனுமற் றிவனை வேறோர்**
**குசையுடைப் புரவித் தேருங் குனிவருஞ் சிலையுங் கொண்டு**
**நிசையினை யருக்கன் போல நிலைதளர்ந் திடுவித் தானே.**

[விசையனும் வெகுள் உற்று, அந்த வேதியன் வில்லும் தேரும் அசைவுற முடுகி எய்தான்; அவனும் (மற்று) இவனை வேறு ஓர் குசை உடை புரவி தேரும் குனிவரும் சிலையும் கொண்டு, நிசையினை அருக்கன் போல, நிலைதளர்ந்திடுவித்தான், ஏ.]

**விளக்கம்:-** அசைவுற - அழிய. குசை - கடிவாளம். நிசையினை அருக்கன் போல - இரவைச் சூரியன் அழிப்பது போல. விசயன் வெகுண்டு அசுவத்தாமனது வில்லும் தேரும் அழியும்படி உக்கிரமாகப் பாணப் பிரயோகம் செய்தான்; அசுவத்தாமனும் வேறோர் தேரில் ஏறிவந்து. விசயனை உறுதிநிலை கெடச் செய்தான், — என்பதாம்.

**105.** **தளர்ந்தவத் தளர்ச்சி கண்டு தனஞ்சயன் றன்னைத் தேற்றிக்**
**கிளர்ந்தடர் புரவித் தாமா கேவல னல்ல னையா**
**பிளந்திடுங் கிவனை யென்னப் பிறை முகப் பகழி யொன்றால்**
**உளம்புகத் தொடுத்தான் பாக னுரைமுடிவ தன்முன் அம்மா.**

[தளர்ந்த அ தளர்ச்சி கண்டு தனஞ்சயன் தன்னை தேற்றி, "கிளர்ந்து அடர் புரவித்தாமா கேவலன் அல்லன் ஐயா, பிளந்திடு இங்கு இவனை," என்ன, பிறை முகம் பகழி ஒன்றால் உளம் புக தொடுத்தான் பாகன் உரை முடிவதன் முன், அம்மா.]

**விளக்கம்:-** விசயன் தளர்ந்தது கண்டு, அவனைத் தேற்றி, "மிக முனைந்து போர் செய்யும் அசுவத்தாமன், எளியவன் அல்லன், ஐயா, அவனது மார்பில் சரம் செலுத்திப் பிளப்பாயாக," என்று பாகன் (கண்ணன்) சொன்ன உரை முடிவதன் முன், விசயன், அவனது நெஞ்சில் புகும்படி ஓர் அர்த்த சந்திர பாணத்தைப் பிரயோகித்தான், — என்பதாம். அம்மா: ஈற்றசை.

**106.** **எய்தவப் பகழி யொன்றா லீசன்மா மதலை மாழ்கி**
**வெய்துயிர்த் திரதமீது வீழ்ந்தனன் வீழ்ந்தோன் றன்னைக்**
**கைதவச் செயலி னுன்றுச் சாதனன் கண்டு முன்னைச்**
**செய்தவப் பயன்போல் வந்து தேரொடுங் கொண்டு**
**போனான்.**

[எய்த அ பகழி ஒன்றால் ஈசன் மாமதலை மாழ்கி, வெய்து உயிர்த்து, இரதம் மீது வீழ்ந்தனன்; வீழ்ந்தோன் தன்னை கைதவம் செயலினன் துச்சாதனன் கண்டு, முன் செய்தவம் பயன்போல் வந்து தேரொடும் கொண்டுபோனான். ]

**விளக்கம்:-** ஈசன் மாமதலை - அசுவத்தாமன். விசயன் அம்பால் மயங்கி பெருமூச்சு விட்டுக்கொண்டு தேரில் அசுவத்தா மன் விழலும், வஞ்சனைச் செய்கையானுன துச்சாதனன், அதைக் கண்டு, முன் ஜன்மத்தில் செய்த நல்வினை இந்த ஜன்மத்தில் வந்து பயன் தருவது போல் வந்து, அவனைத் தேரொடும் அழைத்துச் சென்றான், — என்பதாம்.

## பாண்டியன் போர் ஏற்றல்

**107. போனவப் புரவித் தாமா புரிந்துபோர் தொடங்கு மெல்லைச்**
**சேனைக ணன்கி னேடுஞ் சித்திர வாக னென்னும்**
**மீனவன் வழுதி மாறன் வெண்மதி மரபில் வந்தோன்**
**வானவர் முதல்வன் சென்னி வரிவளை யுடைத்து**
**மீண்டோன்.**

[போன அ புரவித்தாமா புரிந்து போர் தொடங்கும் எல்லை, சேனைகள் நான்கினேடும் சித்திர வாகன் என்னும் மீனவன் வழுதிமாறன், வெண்மதி மரபில் வந்தோன், வானவர் புதல்வன் சென்னி வரிவளை உடைத்து மீண்டோன்.]

**விளக்கம்:-** புரிந்து - விரும்பி. மீனவன் - மீனக்கொடியை உடையவன். வழுதி - பாண்டியன். மாறன் - பகைவர்களோடு மாறுகொண்டவன், பாண்டியன். வெண் மதி மரபில் வந்தோன்- சந்திர குலத்தவன். இந்திரனது தலையை வளையினுல் உடைத்து வெற்றி கொண்ட பாண்டியன். அசுவத்தாமன் தெளிந்து மீண்டும் போர் தொடங்கியபொழுது சித்ரவாகன பாண்டியன், என்பான், நால்வகைச் சேனையோடு, (அசுவத்தாமனை எதிர்த் தான்) என்பதாம், அடுத்த கவியோடு தொடரும்.

சித்ரவாகனன் மகளை விசயன் தீர்த்த யாத்திரை செய்த காலத்தில் மணம் புரிந்து கொண்டான். மலையத்துவசன் மகளாகிய தடாதகைப் பிராட்டியைச் சிவபெருமான் சுந்தர பாண்டிய பெயரில் வந்து மணந்து கொண்டான். அப்பிரா னுக்கு, மகவாய்ப் பிறந்த உக்ரபாண்டியனுக்கு, அளித்த வளை யைக் கொண்டு, இந்திரனை வென்றான், — என்பது கதை, உக்ர கிரவாகனன் செய்ததைச் சித்திரவாகன்மேல் ஏற்றிக் கூறியது, உபசார வழக்கு.

**108. சென்றெதி ரூன்றி வெவ்வேற் சேயனுன் றேரின் மேலும்**
**வன்றிறல் வலவன் மேலும் வாம்பரி மாவின் மேலும்**
**துன்றிய கணைக ளேவித் தொடுசிலை துணித்து வீழ்த்தான்**
**அன்றவன் செய்த வீர மரசரி லார்செய் தாரே.**

[சென்று எதிர் ஊன்றி வெம்வேல் சேய் அனுன் தேரின் மேலும், வன்திறல் வலவன் மேலும், வாம் பரி மாவின் மேலும், துன்றிய கணைகள் ஏவி தொடு நிலை துணித்து வீழ்த்தான்; அன்று அவன் செய்த வீரம் அரசரில் யார் செய்தார், ஏ.]

**விளக்கம்:-** வெம் வேல் சேய் அனுன் - வெவ்விய வேலை உடைய முருகக் கடவுளை ஒத்த அசுவத்தாமன். பாண்டியன், எதிரே சென்று, அசுவத்தாமன் தேரின் மேலும், வலவன் மேலும், குதிரைகளின்மேலும் நெருங்கிய அம்புகளைச் செலுத்தி அவன் கையில் பற்றிய வில்லையும் அறுத்து வீழ்த்தினுன்; அன்று. அப்பாண்டியன் காட்டிய வீரத்தன்மையை அரசர்களில் வேறு யார் செய்தார்? — என்பதாம்.

**109. வேறொரு தேர்மேற் கொண்டு விதித்ரு மரபி னேனும்**
**சீறிவெங் கணைக ணூறு தெரிந்தொரு சிலையும் வாங்கிக்**
**கூறிய செஞ்சொ லேடு குறித்தெதிர் கொண்ட வைகை**
**ஆறுடை யவனை யஞ்ச வருஞ்சம ருடற்றி னுனே.**

[வேறு ஒரு தேர் மேற்கொண்டு விதி தரு மரபினேனும், சீறி வெம் கணைகள் நூறு தெரிந்து, ஒரு சிலையும் வாங்கி, கூறிய செம் சொல் ஏடு குறித்து எதிர் கொண்ட வைகை ஆறு உடையவனை அஞ்சஅரும் சமர் உடற்றினுன்,ஏ.]

**விளக்கம்:-** விதிதரு மரபினேன் - பிரும்ம குலம் வந்த அசுவத்தாமன். கூறிய செஞ்சொல் ஏடு - திருஞானசம்பந்தர் சொன்ன சிறந்த சொற்களைக் கொண்ட ஏடு. குறித்து எதிர் கொண்ட-(வைகையில்) எதிர்நோக்கிச் சென்ற. வைகை ஆறு உடையவன் - பாண்டியன், அசுவத்தாமன் வேறோர் தேரில் ஏறிக் கொண்டு வந்து கொடிய நூறு அம்புகளை ஆய்ந்து எடுத்துக் கொண்டு, வில்லை வளைத்துப் பாண்டியன் அஞ்சும்படி போர் செய்தான், — என்பதாம்.

**110. அந்தண னேவை யெல்லா மவனிப னவ்வவ் வம்பால்**
**முந்துற விலக்கித் தங்கண் மூவகைத் தமிழும் போலச்**
**சிந்தையிற் குளிக்கு மாறு சிலீமுக மூன்று விட்டான்**
**தந்தையை முதுகு கண்டோன் றனையனுக் கிளைக்கு**
**மோதரன்.**

[அந்தணன் ஏவை எல்லாம் அவனிபன் அ அ அம்பால் முந்துற விலக்கி, தங்கள் மூவகை தமிழும் போல சிந்தையில் குளிக்கும் ஆறு சிலீமுகம் மூன்று விட்டான்; தந்தையை முதுகு கண்டோன், தனையனுக்கு இளைக்குமோ, தான்.]

**விளக்கம்:-** அசுவத்தாமனது கணைகளை எல்லாம் பாண்டியன் அந்த அந்தக் கணைகளால் முன்னே தடுத்து, தங்கள் மூவகைப் பட்ட தமிழேபோல் மனத்தில் நன்கு பதியுமாறு மூன்றுகணை களைச் செலுத்தினன்; அசுவத்தாமனது தந்தையாகிய சிவ பெருமானைப் பிரம்பால் அடித்து முதுகிடச் செய்த பாண்டியன், அவன் மகனுக்கு இளைப்பானே, என்பதாம். தான் ஈற்றசை.

பிட்டுக்கு மண் சுமந்த சோமசுந்தரக் கடவுளை அரிமர்த்தன பாண்டியன் பிரம்பால் அடித்த வரலாற்றை. அவன வம்சத்த வனுன சித்திரவாகன பாண்டியன்மேல், ஏற்றிக் கூறியபடி.

**111. காலினற் றுகைத்த வேலைக் கணைகட லேழு முன்னுள்**
**வேலினற் சுவற்றுங் கொற்ற வெங்கயல் விலோத வீரன்**
**மாலினுழ் பொருகை வேழம் வாசிதேர் பதாதி மாயக்**
**கோலினற் சுவற்றி னனக் குறுகலர் சேனை வெள்ளம்.**

[காலினல் துகைத்த வேலை கணை கடல் ஏழும் முன் நாள் வேலினல் சுவற்றும் கொற்றம் வெம் கயல் விலோதம் வீரன், மரபினல் பொரு கைவேழம், வாசி, தேர், பதாதி மாய, கோலி னல் சுவற்றினன் குறுகலர் சேனை வெள்ளம்.]

**விளக்கம்:-** காற்றினல் எற்றப் பட்டுப் பொங்கி வந்த அலை கலை உடைய ஒலிக்கும் ஏழுகடல்களையும் வேலினல் வற்றச் செய்த வெற்றிக்கு அடையாளமாகக் கொடியக் கயல்மீனைகொடியில் கொண்ட வீரனன பாண்டியனது வம்சத்தினனன சித்திரவாக னன், மதமயக்கத்தால் போர் செய்கின்ற துதிக்கையையுடைய யானை, குதிரை, தேர், காலாள் படை ஆகியவை மாயும்படி, அம்புகளால் பகைவர் சேனை வெள்ளத்தை வற்றச் செய்தான், என்பதாம். விலோதம் - கொடி, முன்னெரு காலத்தில் பாண்டி யன் வேலால் கடல் நீரை வற்றச் செய்ததுபோல், இப்பொழுது சித்திரவாகனன் பகைவரது சேனைக் கடலை வற்றச் செய்தான், என்றபடி.

பாண்டியன் மடிதல்

**112. சங்கர னருளால் வந்த சதுர்மறைக் குமரன் மீளப்**
**பொங்கழற் கடவு ளென்னப் பொருசிலை வெய்தின் வாங்கி**
**மங்குல்போற் பொழியும் வாளி மழையின லழிந்த தந்தோ**
**செங்கயனெடும்ப தாகைத் தென்னவன் செம்பொற் றேரே.**

[சங்கரன் அருளால் வந்த சதுர்மறை குமரன் மீள, பொங்கு அழல் கடவுள் என்ன, பொருசிலை வெய்தின் வாங்கி, மங்குல்

போல் பொழியும் வாளி மழையினுல் அழிந்தது, அந்தோ! செம் கயல் நெடும் பதாகை தென்னவன் பொன் தேர், ஏ.]

**விளக்கம்:-** சங்கரன்...குமரன் - அசுவத்தாமன். பொங்கு அழல் கடவுள் - அக்னிதேவன். வெய்தின் - விரைவாக, உக்ர மாக. மங்குல் - மேகம். அசுவத்தாமனது அம்பு மழையினுல் பாண்டியன் தேர் அழிந்தது, - என்பதாம். அந்தோ, இரக்கப் பொருளது.

**113. சிங்கவே றனையா னந்தத் தேரினின் றிழிந்து முன்னம்
தங்கள்மால் வரையில் வைகுந் தமிழ்முனி தன்னைப்
போலப்
பொங்குவெண் டரங்க முந்நீர்ப் புணரிக ளேழுஞ் சேர
வெங்கையால் வாருங் கொற்ற வேழமா மேற்கொண்
டானே.**

[சிங்கம் ஏறு அனையான் அந்த தேரினின்று இழிந்து, முன்னம் தங்கள் மால்வரையில் வைகும் தமிழ் முனி தன்னை போல, பொங்கு வெண் தரங்கம் முந்நீர் புணரிகள் ஏழும் சேர, வெம் கையால் வாரும் கொற்றம் வேழம் மா மேற் கொண்டான்; ஏ.]

**விளக்கம்:-** ஆண் சிங்கத்தை ஒத்தவனுன பாண்டியன், அந்தத் தேரிலிருந்து இறங்கி, முன்னொரு காலத்தில் தங்கள் நாட்டிலுள்ள பொதிய மலையில் வாழும் அகத்தியன் கடல் நீரைக் குடித்ததுபோல, பொங்குகின்ற வெள்ளிய அலைகளை உடைய ஏழு கடல்நீரையும் ஒரு சேர கொடிய தனது துதிக்கையால் வாரிக்கொள்ளவல்ல வெற்றியை உடைய யானையாகிய விலங்கின் மேல் ஏறிக்கொண்டான், - என்பது பொருள். முந்நீர் புணரி - மூன்று தன்மைகளை உடைய நீரையுடைய கடல்.

**114. மலையினிற் பிறந்த வார மணங்கமழ் வடிவிற் றங்கள்
அலையினிற் பிறந்த வார மழகுற வணிந்த கோமான்
கொலையினிற் சிறந்த கோட்டுக் குஞ்சரங் கொண்டு
மீண்டும்
சிலையினிற் குருவின் மைந்தன் றேரொடுஞ் செருச்செய்
தானே.**

[மலையினில் பிறந்த ஆரம் மணம் கமழ் வடிவில், தங்கள் அலையினில் பிறந்த ஆரம் அழகு உற அணிந்த கோமான், கொலையினில் சிறந்த கோட்டு குஞ்சரம் கொண்டு மீண்டும், சிலையினில் குருவின் மைந்தன் தேரொடு செரு செய்தான், ஏ.]

**விளக்கம்:-** ஆரம் - சந்தனம், முத்து, சிலையினில் குருவின் மைந்தன் - துரோண குமாரனான அசுவத்தாமன். ஆரம் மணக்கும் தேகத்தில் முத்துமாலை அணிந்த பாண்டியன், யானைமேல் ஏறிக் கொண்டு மறுபடியும் அசுவத்தாமனுடைய தேருடன் போர் செய்தான், அதாவது தேரின்மேல் ஏறியுள்ள அசுவத்தாமனுடன் போர் செய்தான், — என்பதாம்.

**115.** **மோர்திமத் தாரை மாருக் கைமுக முகுத்த செக்கர்ச்**
**சோதிமத் தகவெங் குன்றின் றழைசெவித் துளங்கு காற்ருல்**
**சாதிமைத் துரோணன் மைந்தன் றனித்தடந் தேரிற் கொற்றம்**
**ஓதிமப் பதாகை யாடை யப்புறத் தொடுங்கிற் றம்மா.**

[மோதி மத் தாரை மாரு கை முகம் உகுத்த செக்கர் சோதி மத்தகம் வெம் குன்றின் தழைசெவி துளங்கு காற்ருல், சாதிமை துரோணன் மைந்தன் தனி தடந்தேரில் கொற்றம் ஓதிமம் பதாகை ஆடை அப்புறத்இ ஒடுங்கிற்று, அம்மா.]

**விளக்கம்:-** மோதிக் கொண்டு பெருகும் மதநீர்ப்பெருக்கு இடையருத, துதிக்கையை உடைய முகத்தினின்று வெளிப்படும் செந்நிற ஒளியையும், மஸ்தகத்தையும் உடைய மலைபோன்ற யானையின் தழைந்த காதுகள் அசைவதால் உண்டாகும் காற்றினுல், உயர்குடிப் பிறப்புடைய துரோணனது மைந்தனது பெரிய ஒப்பற்ற தேரிலுள்ள வெற்றி உடைய அன்னத்தின் வடிவம் கொண்ட கொடிச் சீலை பின்னிட்டு ஒதுங்கியது, என்பது பொருள். பாண்டியனின் யானையின் சிறப்புக் கூறியபடி. மத தாரை, என்பது மத்தாரை, என்று விகாரப் பட்டது.

**116.** **கூற்றெனக் கொண்ட லென்னக் குரைகட லென்னச் சூறைக்**
**காற்றெனக் கொடிய கோபக் கடும்பெருங் கரட மாவின்**
**ஊற்றெழு மதங்க ளேழு மொழுகிமண் ணுடைந்து தாழும்**
**சேற்றிடைப் புதைந்த தந்தச் சேயனுன் றேரின் காலே.**

[கூற்று என, கொண்டல் என்ன, குரை கடல் என்ன சூறை காற்று என, கொடிய கோபம் கடும் பெரு கரட மாவின், ஊற்று எழும் மதங்கள் ஏழும் ஒழுகி மண் உடைந்து தாழும் சேற்றிடை புதைந்து, அந்த சேய் அனுன் தேரின் காலே.]

**விளக்கம் :-** எமனையும், நீர் கொண்ட மேகத்தையும், கடலினையும் சுழல் காற்றையும் போன்ற கொடிய கோபம் உடைய நடை

வேகங் கொண்ட பெரிய கன்னங்களை உடைய (பாண்டியனது) யானையினின்றும் ஊற்றெடுத்துப் பெருகும் எழுவகை மதங்களும் ஒழுகுவதால், மண் கரைந்து ஆழமுடையதாகிய சேற்றில், முருகக் கடவுளைப் போன்ற அசுவத்தாமனின் தேர் புதைந்தது, என்பது பொருள்.

**117.** **மறையவன் செம்பொற் றேரை வளைந்துமண்**
**டலங்க ளோட்டிப்**
**பிறைமுகக் கணையா லந்தண் பிறைக்குல வழுதி யெய்ய**
**நிறைவறப் புரவித் தாமா தேருற விலக்கித் தன்கை**
**அறைசிறை பகழி யொன்றா லானையை வீழ்வித் தானே.**

[மறையவன் செம்பொன் தேரை வளைந்து மண்டலங்கள் ஓட்டி, பிறை முகம் கணையால் அம் தண் பிறை குலம் வழுதி எய்ய, நிறைவு அற புரவித்தாமா தேர் உற விலக்கி, தன் கை அறை சிறை பகழி ஒன்றால் ஆனையை வீழ்வித்தான், ஏ.]

**விளக்கம்:-** சந்திரகுலம் வந்த பாண்டியன், மறையவன் தேரைச் சுற்றி மண்டல கதியில் யானையைச் செலுத்தி, அர்த்த சந்திரக் கணைகளால் தாக்க, அவனும், அக்கணைகள் (தாக்குதலாகிய தொழிலில்) நிறைவுறாதபடி, எதிரில் பொருந்த விலக்கி, தனது கை அம்பு ஒன்றால், யானையைக்கொன்றான்,—என்பதாம். அறை சிறை பகழி - வலிமையோடு விடப்பட்ட சிறகுகளையுடைய அம்பு.

**118.** **பாண்டியன் கைவில் லோடும் பதாதியாய்ப் பகழி சிந்தி**
**ஈண்டிய விவுளித் தாம னிருதடந் தோளு மார்பும்**
**வேண்டிய வாறு சோரி வீழ்தரப் பொருத பின்னர்த்**
**தூண்டிய துரோணன் மைந்தன் றொடையொன்றாற்**
**றானும் வீழ்ந்தான்.**

**விளக்கம்:-** பாண்டியன் கை வில்லோடும், வாகனம் இல்லாமல் காலாளாய் அம்புகளைப் பெய்து, தன்னை நெருங்கிய அசுவத்தாமனின் இரண்டு பெரியதோள்களும் மார்பும் குருதி பெருகும்படி வேண்டியபடி எல்லாம் போர் செய்த பின்னர், அசுவத்தாமன் தூண்டிய (செலுத்திய) அம்பு ஒன்றால் தானும் இறந்தான்,-என்பதாம்.

**119.** **பட்டனன் முனிவன் கையிற் பஞ்சவ னென்று வேந்தர்**
**கெட்டனர் முரசந் தீட்டுங் கேதனன் சேனை யுள்ளார்**
**தொட்டனர் வரிவில் வாளி தொடுத்தன ரடுத்துமேன்**
**மேல்**
**விட்டனர் வேந்தர் வேந்தன் சேனையில் வேந்த ருள்ளார்.**

**விளக்கம்:-** பஞ்சவன் - பாண்டியன். முரசம் தீட்டும் கேதனன் - முரசம் எழுதப் பெற்ற கொடியை உடைய தருமன். வேந்தர் வேந்தன் - துரியோதனன். அசுவத்தாமனால் பாண்டியன் கொல்லப்பட்டான் என்று தருமனது சேனையில் உள்ளார் நிலை கெட்டு ஓடினார்; துரியோதனன் சேனையில் உள்ளார் வில்லை எடுத்து, அம்புகளைத் தொடுத்து மேலும் மேலும் தொடர்ந்துப் பிரயோகித்தார்கள், -என்பதாம்.

### கலி விருத்தம்

### சோழன் போர் ஏற்றல்

**120.** **விற்கையா ரியன்மகன் விசும்பின் வீழ்தரும்**
**உற்கையா மெனவிடு மொளிகொள் வாளியால்**
**கொற்கையா னிறந்தபின் கோழி யானெனும்**
**சொற்கையா மனுகுலத் தோன்ற ரேன்றினன்.**

[வில் கை ஆரியன் மகன் விசும்பின் வீழ்தரும் உற்கை ஆம் என விடும் ஒளி கொள் வாளியால் கொற்கையான் இறந்த பின், கோழியான் எனும் சொல் கையா மனு குலம் தோன்றல் தோன்றினன்]

**விளக்கம்:-** உற்கை - எரிகொள்ளி. கொற்கையான் - பாண்டியன். கோழியான் - சோழன். சொல் கையா மனுகுல தோன்றல் - கைப்பில்லாத புகழையுடைய சோழன். பாண்டியன் அசுவத்தாமனது எரி கொள்ளி போன்ற அம்புகளால் இறந்தபின் சோழன், களம் தோன்றினன், என்பதாம்.

**121.** **தேரின்மே னின்றுநீ சிறுகட் செம்புகர்க்**
**காரின்மேல் வீரனைக் கணையிற் காய்வதே**
**பாரின்மே லார்கொலிப் பாதகஞ் செய்தார்**
**நீரின்மே லெழுத்தென நிலையி லாண்மையாய்.**

[தேரின்மேல் நின்று நீ, சிறுகண் செம்புகர் காரின்மேல் வீரனை கணையில் காய்வதே! பாரின்மேல் ஆர்கொல் இ பாதகம் செய்தார், நீரின்மேல் எழுத்துஎன நிலை இல் ஆண்மையாய்!]

**விளக்கம் :-** நீர்மேல் எழுத்துப் போல் நிலையில்லா ஆண்மை உடையவனே, தேரின்மேல் நின்று, யானையின்மேல் உள்ளவனைக் கொல்லுதல் தக்கதாகுமோ? பூமியில் உன்னைத் தவிர இப் பாதகத் தொழிலைச் செய்தவர் வேறு யார் உளர்? - என்று சோழன் அசுவத்தாமனை இகழ்ந்தான், - என்பதாம். இதுவும், தொடரும் மூன்று செய்யுள்களும், ஒரு தொடர்.

**122. ஆர்ப்பன மறைமொழிந் தனைவர் பாவமும்**
**தீர்ப்பன வேள்விகள் செய்வ தன்றியே**
**கூர்ப்பன பலபடை கொண்டு போர்செய்யப்**
**பார்ப்பன மாக்களும் பாரின் வல்லரோ.**

[ஆர்ப்பன (ஆகிய) மறைமொழிந்து, அனைவர் பாவமும் தீர்ப்பன (ஆகிய) வேள்விகள் செய்வது அன்றியே, கூர்ப்பன (ஆகிய) பலபடை கொண்டு போர்செய்ய, பார்ப்பன மாக்களும் பாரின் வல்லரோ!]

**விளக்கம் :-** ஆர்ப்பன மறை - சுவரத்தோடு சொல்லப் படுவனவாகிய வேத மந்திரங்கள். கூர்ப்பன பலபடை - கூரியன வாகிய பல ஆயுதங்கள். "பார்ப்பனருக்கு உரிய கருமத்தைச் செய்தாய் அல்லை நீ!" என்று சோழன் அசுவத்தாமனை இகழ்ந்த படி.

**123. தாதையைக் கொன்றவெஞ் சாப வீரனைக்**
**கோதைவிற் கணைகளாற் கொன்றி லாதநீ**
**ஊதைமுற் சருகுபோ லோட லல்லதை**
**மோதயிற் படைகொடு முனைய வல்லையோ.**

[தாதையை கொன்ற வெம் சாபம் வீரனை கோதை வில் கணைகளால் கொன்றிலாத நீ, ஊதை முன் சருகுபோல் ஓடல் அல்லதை, மோது அயில் படை கொடு முனைய வல்லையோ!]

**விளக்கம் :-** கோதை - வில்லின் நாணி. ஊதை - பெருங் காற்று. அல்லதை - அல்லது ஐ - ஐ, சாரியை. முனையவல்லையோ- போர் செய்ய வல்லன் ஆவையோ.

இருவரும் கடும்போர் செய்தல்

**124. என்றுசின் மொழிமொழிந் திவுளித் தாமன்மேல்**
**துன்றுவில் வளைத்தனன் சோழ பூபதி**
**குன்றுடன் குன்றமர் குறிக்கு மாறுபோல்**
**சென்றுசென் றடுத்தன தேருந் தேருமே.**

[என்று சில் மொழி மொழிந்து இவுளித்தாமன்மேல், துன்று வில் வளைத்தனன் சோழ பூபதி; குன்றுடன் குன்று அமர் குறிக்கும் ஆறுபோல் சென்று சென்று அடுத்தன தேரும் தேரும், ஏ.]

**விளக்கம் :-** சோழன், அந்தணனை இகழ்ந்து சில வார்த்தைகள் சொல்லி, தனது வலிய வில்லை வளைத்தான் : குன்றொடு குன்று பொருவதுபோல், இருவர் தேரும் ஒன்றை யொன்று விரைந்து சென்று நெருங்கின, - என்பதாம்.

125. இருவர்செங் கரங்களு மிரண்டு கால்களும்
உரனுறப் பிணித்தநா ணோசை வீசவும்
மருவுபொற் றோளுற வலியின் வாங்கவும்
விரைவுடன் வளைந்தன வில்லும் வில்லுமே.

[இருவர் செம் கரங்களும் இரண்டு கால்களும் உரன் உற பிணித்த நாண் ஓசை வீசவும், மருவும் பொன் தோள் உற வலியின் வாங்கவும், விரைவுடன் வளைந்தன வில்லும் வில்லும்,ஏ ]

**விளக்கம்:-** இருவரது சிவந்த கைகளால், வில்லின் இரு கோடியிலும் வலிமை பொருந்தப் பூட்டப் பெற்ற நாணியின் ஒலி மிகுதியாக வெளிப்படவும், பொருந்திய அழகிய தோளின் வலிமை பொருந்த வலிமையோடு (வில்லை) வளைக்கவும், இரண்டு வில்லும் விரைவுடன் வளைந்தன, என்பது பொருள்.

126. புகலரு மறையவன் புராரி யாதியாம்
திகழொளி யிமையவர் சிறப்பி னீந்தன
இகல்முனை முனையுற வெதிர்ந்து தள்ளவே
அகல்வெளி புதைத்தன வம்பு வம்புமே.

[புகல் அருமறையவன் புராரி ஆதி ஆம் திகழ் ஒளி இமையவர் சிறப்பின் ஈந்தன (ஆகிய அத்திரங்களை) இகல் முனை, முனை உற எதிர்ந்து தள்ளவே, அகல் வெளி புதைத்தன அம்பும் அம்பும், ஏ]

**விளக்கம்:-** புகல் அரு மறையவன் - அசுவத்தாமன். புராரி- சிவபெருமான். இகல் முனை - போர்க்களம். மு(ன்)னை எதிர்த்து உற - முன்னே எதிர்ப்பட்டுச் செல்லும்படி. தள்ள - பிரயோகிக்க. சிவபெருமான் முதலான தேவர்கள் கொடுத்த அத்திரங்களை இருவரும் பிரயோகிக்க, அவ்வத்திரங்கள், வானவெளியை மறைத்தன, - என்பதாம்.

127. சுரருல கெய்திய துரோணன் மைந்தனை
இருகணை புயத்தினு மிரண்டு மார்பினும்
ஒருகணை நுதலினு முருவ வேவினான்
பருவிரி தாதகி வாச மாலையான்.

[சுரர் உலகு எய்திய துரோணன் மைந்தனை இருகணை புயத்தினும், இரண்டு மார்பினும், ஒரு கணை நுதலினும் உருவ ஏவினான், மருவிரி தாதகி வாசம் மாலையான்.]

**விளக்கம்:-** தாதகி - ஆத்திப்பூ. பரிமளத்தின் செழிப்பு மிகுந்த வாசனையுடைய ஆத்திப்பூமாலை அணிந்த சோழன்,

அசுவத்தாமனைத் தோள்களிலும் மார்பிலும், நெற்றியிலும் உருவிச் செல்லும்படி அம்புகளைப் பிரயோகித்தான்,-என்பதாம்.

**128. பிறைமுடிச் சடையவன் பிள்ளை வள்ளுகிர்**
**விறலுடைப் புலிக்கொடி வீரன் மெய்யெலாம்**
**புறவினுக் கரிந்தநாட் போல மேல்விடும்**
**திறலுடை வாளியாற் சிவப்பித் தானரோ.**

[பிறை முடிசடையவன் பிள்ளை, வள் உகிர் விறல் உடை புலிகொடி வீரன் மெய் எலாம், புறவினுக்கு அரிந்த நாள் போல, மேல்விடும் திறல் உடை வாளியால் சிவப்பித்தான், அரோ.]

**விளக்கம்:-** பிறை முடி சடையவன் - சிவபெருமான். பிள்ளை - அவன் மகனான அசுவத்தாமன். புறவினுக்கு அரிந்த நாள் போல-ஒரு புருவின் பொருட்டுத் தனது தசையை அறுத்துக் கொடுத்த நாள்போல. அசுவத்தாமன், தனது கணைகளால் சோழனது உடல் முழுவதும் சிவக்கச் செய்தான், என்பதாம். சிபிச் சக்கரவர்த்தி செய்ததை, அவன் குலத்தினனான சோழன் மேல் ஏற்றிக் கூறினார், என்க. அரோ: அசை.

**129. துளவணி முடியவன் றுள்ளு கன்றினால்**
**விளவினை யெறிந்தென வீர வேலினால்**
**வளவனும் வெகுண்டுபின் மயூர வாகனன்**
**இளவலை யெறிந்தன னெவரு மஞ்சவே.**

**விளக்கம்:-** துளவு அணி முடியவன் - கண்ணன். வளவன்- சோழன். மயூரவாகனன் - முருகக்கடவுள். இளவல் - அவனது தம்பியான அசுவத்தாமன். துள்ளுகின்ற கன்றினால் கண்ணன் விளாமரத்தை எறிந்ததுபோல், சோழனும் தனது வீரவேலினால் அசுவத்தாமனை எறிந்து தாக்கினான், என்பதாம்.

**130. உருத்திரன் றுதுவி னுற்ப வித்தவக்**
**கருத்துடை முனிவன்மெய் கலங்கி வீழ்தலும்**
**திருத்தகு சகுனியுஞ் சிற்சில் வேந்தரும்**
**வருத்தமோ டெடுத்தவன் வருத்த மாற்றினர்.**

**விளக்கம்:-** சிவபெருமானது தாதுவினால் உண்டான, உள்ளம் உடைந்த அசுவத்தாமன் உடல் நிலைகெட்டு வீழ்தலும், சகுனியும் வேந்தர் சிலரும் மனவருத்தத்தோடு அவனை எடுத்துச் சென்று, அவனது வருத்தம் அகற்றினர்,-என்பதாம், திரு தகு சகுனி-செல்வவளம் பொருந்திய சகுனி. வருத்தம் ஆற்றினர், என்றும் பிரித்துக் கொள்ளலாம்.

131. அவனெடு மீளவந் தபயன் றன்னெடு
கவனமான் றேருடைக் காவன் மன்னவர்
சிவனெடு மமர்பொருந் தெவ்வ ரென்னவே
துவனிசெய் முரசெழத் துன்று போர்செய்தார்.

**விளக்கம்:-** கவனம் மான் தேருடை காவல் மன்னவர் அவனெடும் மீள வந்து, சிவனெடும் அமர்பொரும் தெவ்வர் என்ன (ஏ), துவனி செய் முரசு எழ, அபயன் தன்னெடு துன்று போர் செய்தார், - என்பது அன்வயம்.

தேருடை அரசர்கள் அசுவத்தாமனுடன் மறுபடியும் வந்து, சிவபெருமானுடன் போர் செய்யும் பகைவர்போல, ஒலிக்கின்ற முரசம் முழங்க, சோழனேடு நெருங்கிய போரைச் செய்தனர்,- என்பதாம். அபயன் - அடைந்தாரை அபயமளித்துக் காக்கும் சோழன்.

132. துன்மரு டணன்மகன் சுவாகு துன்முகன்
வின்மகன் சுவாதுவாள் வெயில் விபாகரன்
தன்மகன் றிருமகன் சங்க னென்பவர்
மன்மகார் பலரொடு மடிந்து வீழவே.

[துன்மருடணன் மகன் சுவாகு, துன்முகன் வில் மகன் சுவாது, வாள் வெயில் விபாகரன் தன் மகன் திருமகன் சங்கன் என்பவர் மன்மகார் பலரொடும் மடிந்து வீழவே - தொடரும்.]

**விளக்கம்:-** வில் மகன் - புகழின் பிரகாசம் உடைய மகன். வாள் வெயில் விபாகரன் தன் மகன் - ஒள்ளிய கிரணங்களை யுடைய சூரியனது மகனுன கர்ணன் (அவனது) திருமகன் சங்கன். சுவாகு, சுவாது, சங்கன், என்று சிறப்பித்துப் பேசப் படும் மன் மகார் (அரசகுமாரர்கள்), வேறு வீரர் பலரொடும் (போரில்) மடிந்து வீழ்தற்கு, (ஒன்றுபட்டு வந்து போர் செய்தனர்), என்பதாம். இதுவும், இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும், ஒரு தொடர்.

133. பண்ணக விசையளி பாடு தண்டலைக்
கண்ணகன் காவிரி நாடன் கைக்கணை
மண்ணக நெருக்குற மலைந்த மன்னரை
விண்ணக மிடனற விரைவி னேற்றவே.

[பண் நக, இசை அளிபாடு தண்டலை (தண் தலை) கண் அகல் காவிரி நாடன் கை கணை மண்ணகம் நெருக்கு உற மலைந்த மன்னரை விண்ணகம் இடன் அற விரைவின் ஏற்றவே.]

**விளக்கம்:-** சுரங்கள் விளங்கும்படி வண்டுகள் இசைபாடும் சோலைகளை உடைய இடமகன்ற காவிரி நாடனான சோழனது கைக்கணைகளால், பூமியில் நெருக்கம் உண்டாகும்படி மலைந்த மன்னர்களை, விண்ணில் இடம் இல்லை என்று சொல்லும்படி விரைவின், ஏற்றவே, அதாவது, கொல்லவே,-(தொடரும்) என்பதாம்.

**134. முன்னிய சிலைமறை முனிவன் மைந்தனும்**
**தன்னிக ரிலாவிறற் சகுனி யாதியாய்த்**
**துன்னிய நிருபருந் தொல்ல மர்க்குநீ**
**சென்னியென் றவன்புகழ் செப்பி மீளவே.**

**விளக்கம்:-** சிலை மறை முன்னிய (அறிந்த) முனிவன் மைந்தன் - அசுவத்தாமன். அவனும், தனக்கு (வஞ்சனையில்) நேரில்லாத விறல் சகுனி முதலாகவுள்ள நெருங்கி வந்த அரசர்களும், பழைமையான போருக்கு நீ தலையாவாய், என்று சோழனைப் புகழ்ந்து சொல்லித் திரும்பிச் செல்ல - (அடுத்த கவியோடு முடியும்) என்பதாம்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**135. சோண மேகம் பொழிவதுபோற்**
**துச்சா தனனுந் தம்பியரும்**
**வானு டேற வழிதேடி**
**வருவார் போல வெருவாமல்**
**மேனாண் மொழிந்த வஞ்சினங்கள்**
**முடிப்பா னின்ற வீமனெதிர்**
**ஆனு வாளி மழைதூவி**
**யடல்வெஞ் சிலையோ டடுத்தாரே.**

**விளக்கம்:-** துச்சாதனனும் தம்பியரும் வெருவாமல் அடல் வெம் சிலையோடு, சோண மேகம் பொழிவதுபோல், ஆன வாளி மழை தூவி, மேல் நாள் மொழிந்த வஞ்சினங்கள் முடிப்பான் நின்ற வீமன் எதிர், வான் நாடு ஏற வழி தேடி வருவார் போல் அடுத்தார்,—என்பது அன்வயம்.

துச்சாதனனும் தம்பியரும் அஞ்சாமல் வில்லோடு விடாது பெரு மழையை மேகம் பொழிவது போல், நீங்காத கணை மழை சொரிந்து கொண்டு, முன்னாள், அதாவது துகிலுரிந்த காலத்தில் கூறிய சபதங்களை நிறைவேற்ற நின்ற, வீமன் எதிரில், வானுலகம் செல்ல வழி தேடுவார் போல், வந்தார்கள்,—என்பது பொருள்.

## வீமன் துச்சர்தனனுக்குச் சில கூறல்

**136. உருத்தின் றரச ரைவரையும்**
**உடனே கொல்வ னெனவெண்ணிக்**
**கருத்தின் படியே விரைந்தோடு**
**கவனப் புரவிக் காற்றேரில்**
**செருத்திண் பணைகண் முழங்கவரு**
**செங்கோன் மன்னற் கிளையோனை**
**மருத்தின் புதல்வன் கண்டுமழை**
**முகில்போ லெதிர்வாய் மலர்ந்தானே.**

[உருத்து இன்று அரசர் ஐவரையும் உடனே கொல்வன் என எண்ணி, கருத்தின்படியே விரைந்து ஓடும் கவனம் புரவி கால் தேரில், செரு திண் பணைகள் முழங்க வரு செங்கோல் மன்னற்கு இளையோனை மருத்தின் புதல்வன் கண்டு மழை முகில்போல் எதிர் வாய் மலர்ந்தான்.]

**விளக்கம்:-** கோபித்து இன்று பாண்டவர் ஐவரையும் கொல்வேன், என்று எண்ணி, அக்கருத்தின்படியே, விரைந்து செல்லும் கவனப் புரவி பூட்டிய சக்கரங்களை உடைய தேரின்மேல், போருக்குரிய வலிய பணைகள் (வாத்தியங்கள்) முழங்க, துரியோதனனது இளையவனான துச்சாதனனை வீமன் கண்டு, மேகம் இடிப்பது போல் அவன் எதிரில் சில சொல்வானாயினான், — என்பதாம். துரியோதனனை, செங்கோல் மன்னன், என்றது இகழ்ச்சி. மருத்தின் புதல்வன் - வாயு குமாரனான வீமன்.

**137. துச்சா தனனே யுனைப்போலுஞ்**
**சூரருளரோ சூரரெலாம்**
**மெச்சா நின்றார் வேத்தவையின்**
**மேனா ணீசெய் விறலாண்மை**
**அச்சா ரிரதப் போர்க்குமுனக்**
**கார்வே றெதிருண் டம்மவிரைந்(து)**
**இச்சா போக மாகவிருந்**
**தின்றே மறலிக் கிடுநாளே.**

[துச்சாதனனே, உனை போலும் சூரர் உளரோ ? சூரர் எலாம் மெச்சா நின்றார் வேத்து அவையின் மேல் நாள் நீ செய் விறல் ஆண்மை; அச்சு ஆர் இரதம் போருக்கும் உனக்கு ஆர்வேறு எதிர் உண்டு, அம்ம, விரைந்து இச்சா போகம் ஆக விருந்து இன்றே மறலிக்கு இடு நாள், ஏ.]

**விளக்கம்:-** முதல் இரண்டடிகள், வீமன் துச்சாதனனை இகழ்ந்ததைக் குறிக்கும். அச்சுப் பொருந்திய தேரின்மேல் இருந்து செய்யும் போரிலும், உனக்கு ஒப்பு வேறு யார் இருக்கின்றார்கள் ? இஷ்டப்படி உண்ண எமனுக்கு உன்னை விருந்திடும் நாள் இன்றைய தினம் தானே, என்று வீமன் கூறும் பொருளது, ஈற்றடிகள். அம்ம : அசை.

**138.** **இன்றே வுன்றன் சென்னிதுணித்**
**திழிசெம் புனலிற் குளித்திடுநாள்**
**இன்றே வழலி னுற்பவித்தாள்**
**இருளா ரளக முடித்திடுநாள்**
**இன்றே தாகங் கெடநாவுக்**
**கிசைந்த தண்ணீர் பருகிடுநாள்**
**இன்றே வுரைத்த வஞ்சினங்கள்**
**எல்லாம் பயன்பெற் றிடுநாளே.**

[இன்றே உன்தன் சென்னி துணித்து இழிசெம் புனலில் குளித்திடும் நாள் ! இன்றே அழலின் உற்பவித்தாள் இருள் ஆர் அளகம் முடித்திடும் நாள் ! இன்றே தாகம் கெட நாவுக்கு இசைந்த தண்ணீர் (தண் — நீர்) பருகிடும் நாள் ! இன்றே உரைத்த வஞ்சினங்கள் எல்லாம் பயன் பெற்றிடும் நாள் !]

**விளக்கம்:-** செய்யுள் சுலபமானது. இன்றே எங்கள் சபதங்கள் முற்றுப் பெறும் நாள், என்று வீமன், கூறினான், என்க.

**139.** **வென்றே யவனி முழுதாளும்**
**வீரோ தயனின் றம்முனையும்**
**கொன்றே நாளை யமரரெதிர்**
**கொள்ளக் கடிதின் வரவிடுவன்**
**இன்றே நீபோ யிடம்பிடிப்பாய்**
**எண்ணு வெண்ண மெண்ணிமன்றில்**
**அன்றே கலகம் விளைத்தென்றும்**
**அழியா வரசை யழித்தோனே.**

**விளக்கம்:-** எண்ணு எண்ணம் எண்ணி மன்றில் அன்று (ஏ) கலகம் விளைத்து என்றும் அழியா அரசை அழித்தோனே, வென்றே அவனி முழுதும் ஆளும் வீர உதயன் நின் முனையும் நாளையே கொன்று அமரர் எதிர் கொள்ள, கடிதின் வர விடுவன்; (எனவே) நீ இன்றே போய் (உன் தமையனுக்கு) இடம் பிடிப்பாய், —என்பது அன்வயம்,

கலகம் - திரௌபதியைத் துகில் உரிதலாகிய கலகம். அதனுல், உங்களது அழியாத அரசாட்சியை அழித்துக் கொண்டவனே, என்று வீமன் கூறினுன். கலகம் என்பதற்குச் **சூது போர்,** என்று பொருள் கொண்டால், ''எங்களது அழியாத அரசாட்சியை மோசத்தால் அழித்தவனே,'' என்பது பொருளாகும். வீரோதயன், என்று துரியோதனனைக் குறித்தது இகழ்ச்சி.

**140.** **வீமன் கருத்தோ டிவை மொழிய**
**வேறுத் தரமற் றென்றின்றி**
**ஊமன் றனைப்போ லவனிற்க**
**உடனே யிளையோ ரொன்பதின்மர்**
**நாமம் பெறுகோ லோரொருவர்**
**நாலு லாக நடந்தவழி**
**தூமங் கிளர வொருகணத்தில்**
**தொடுத்தா ரெதிர்வந் தடுத்தாரே.**

[வீமன் கருத்தோடு இவை மொழிய வேறு உத்தரம் மற்று ஒன்று இன்றி, ஊமன் தனைபோல் அவன்நிற்க, உடனே இளையோர் ஒன்பதின்மர், நாமம் பெறு கோல் ஓர் ஒருவர் நால் நால் ஆக, நடந்த வழி தூமம் கிளர ஒரு கணத்தில் தொடுத்தார், எதிர் வந்து அடுத்தார், ஏ.]

**விளக்கம்:-** வீமன், பகை பொருந்திய எண்ணத்தோடு இவ் வார்த்தைகளைச் சொல்ல, எதிர்மொழி வேறு ஒன்றும் இல்லாமல் ஊமனைப் போல் அவன் இருக்க, உடனே தம்பியர் ஒன்பதின்மர் பேர் பொறித்த அம்புகளை ஒவ்வொருவரும் நான்கு நான்கு வீதம், அவர் நடந்த வழியெல்லாம் புகை எழ, ஒரு கணத்தில் அம்புகளைச் செலுத்திக் கொண்டு, (வீமன்) எதிரே வந்து சேர்ந்தார்கள்,—என்பது பொருள். நாமம் பெறுகோல், என்பதற்கு அச்சம் தருதலையுடைய அம்புகள், என்றும் பொருள் கொள்ளலாம்.

**141.** **தொடுத்தார் தொடுத்த கணையனைத்தும்**
**சூரன் றனுந் தன்கணையால்**
**தடுத்தான் மீள வோரொருவர்க்**
**கோரோர் பகழி தனுவாங்கி**
**விடுத்தா னவரு மிரதமிசை**
**வீழ்ந்தார் வீழ்ந்த வீரரைவந்(து)**
**அடுத்தார் விரைவி னகல்வானத்**
**தழகார் காத லரம்பையரே.**

**விளக்கம்:-** சூரன் - வீமன். பகைவர் தொடுத்த அம்புகளை வீமன் தன் அம்புகளால் தடுத்து, ஆளுக்கு ஓர் அம்பாக வில்லை வளைத்துக் கணைகளை விடுத்தான்; அவர்களும் தேரின்மேல் விழுந்து மடிந்தார்கள்; வானுலகத் தெய்வப் பெண்கள் அவர்களை விரைவில் வந்து சேர்ந்தனர்,—என்பதாம்.

துச்சாதனனும் வீமனும் பொரல்

**142.** **உயிர்க்கா ருயிராந் தம்பியர்கள்**
**ஒரொன் பதின்மர் வீமன்கைச்**
**செயிர்க்காய் கணையாற் சிரந்துணிந்து**
**தேர்மேல் வீழச் சினங்கதுவிப்**
**பயிர்க்கா மாரி பொழிந்துவரு**
**பருவப் புயல்போற் பாவனனை**
**மயிர்க்கா றொறுமம் பினஞ்சொருக**
**மன்னற் கிளையோன் மலைந்தானே.**

[உயிர்க்கு ஆர் உயிர் ஆம் தம்பியர்கள் ஒன்பதின்மர் வீமன் கை செயிர் காய் கணையால் சிரம் துணிந்து தேர்மேல் வீழ, சினம் கதுவ, பயிர்க்கு ஆ(க) மாரி பொழிந்து வரு பருவம் புயல்போல், பாவனனை மயிர்க்கால் தொறும் அம்பு இனம் சொருக மன்னற்கு இளையோன் மலைந்தான், ஏ.]

**விளக்கம்:-** செயிர் காய் கணை - வலிமையோடு கொல்லும் அம்பு. பயிர்க்கு ஆ மாரி பொழிந்து வரு பருவம் புயல் - பயிர்கள் செழிக்க மழை பொழிந்து வரும் பருவ மேகம். பாவனன் - பவன குமாரன், (வாயு புத்திரனுன வீமன்). அம்பு இனம் - அம்புகளின் கூட்டம்.

தன் தம்பியர் வீமன் கணைகளால் அழிந்தது கண்டு, கோபங் கொண்டு மன்னற்கு (துரியோதனனுக்கு) தம்பியான துச்சாதனன், வீமனது மயிர்க்கால் எங்கும் அம்புகள் தைக்குமாறு செய்தான், என்பதாம்.

**143.** **தன்மே லுரக கேதனனுக்**
**கிளையோன் தொடுத்த சரங்களெல்லாம்**
**கன்மேன் மேகத் துளியென்னக்**
**காய்ந்தா னவற்றைக் கடிதுதறி**
**மன்மேற் கொண்ட புயமுறவில்**
**வாங்கிக் கொடுபோர் வாளிபல**
**மென்மே லெய்தா னெதிர்ப்பட்டால்**
**விடுமோ பின்னை விறல்வீமன்.**

[தன் மேல் உரக கேதனனுக்கு இளையோன் தொடுத்த சரங்கள் எல்லாம், கல்மேல் மேகம் துளி என்ன காய்ந்தான் அவற்றை கடிது உதறி, மல்மேல் கொண்ட புயம் உற வில் வாங்கி கொடு போர் வாளி பல மேல் மேல் எய்தான்; எதிர்ப் பட்டால் விடுமோ பின்னை விறல் வீமன் ?]

**விளக்கம்:-** காய்ந்தான் (கோபித்தவன்) ஆகிய வீமன் துச்சாதனன் தொடுத்த சரங்கள் எல்லாம், கல்லின் மேல் விழுந்த மழைத் துளி போல், அவற்றை விரைவாக உதறித் தள்ளி, மற்போரைச் சிறப்பாகக் கொண்ட தனது புஜங்களின் வலிமை சேர வில்லை வளைத்து, கொடிய போருக்குரிய அம்புகள் பலவற்றை மேலும் மேலும் இடையருது பிரயோகித்தான்; பகைவன் எதிரே வந்தால், பிறகு அவனை (வீமன்) விடுவானோ ! - என்பதாம் உரக கேதனன் - துரியோதனன்.

**144.** **தூவா நின்ற வேவனைத்தும்**
**துச்சா தனன்றன் றொடைபிழையா**
**ஏவால் விலக்கி யேழுகணை**
**எய்தா னெய்த கணையேழும்**
**மாவா னவற்றின் றலைநான்கும்**
**மடங்கற் கொடியு மணித்தேரும்**
**மேவா நிருபன் மலர்த்தடக்கை**
**வில்லுந் துணித்து வீழ்த்தினனே.**

[தூவா நின்ற ஏ அனைத்தும் துச்சாதனன் தன் தொடை பிழையா ஏவால் விலக்கி, ஏழு கணை எய்தான்; எய்த கணை ஏழும், மா ஆனவற்றின் தலை நான்கும், மடங்கல் கொடியும், மணி தேரும், மேவா நிருபன் மலர் தட கை வில்லும் துணித்து வீழ்த்தினன், ஏ.]

**விளக்கம் :-** (வீமன்) சொரிந்த அம்புகள் எல்லாவற்றையும் துச்சாதனன் தனது கணைகளால் விலக்கி, ஏழுகணைகளைப் பிர யோகித்தான்; எய்த கணைகள், கௌரவரோடு மனம் பொருந் தாத (அதாவது பகையுடைய) நிருபனுகிய வீமனது குதிரை களின் நான்கு தலைகளையும், சிங்கக் கொடியையும், அழகிய தேரையும், அவனது மலர்க்கை வில்லையும் அறுத்து வீழ்த்தின, - என்பது பொருள். ஏ - அம்பு.

**145.** **இத்தே ரழிய வேறொருதேர்**
**ஏறிப் பரவையிடைச் சுழன்ற**
**மத்தே யனைய சிலைவாங்கி**
**மன்னற் கிளைய வயமீளி**

அத்தே ரழியக் கொடிவல்லவன்
வயமா வனைத்து மற்றுவிழப்
பத்தே யெய்தாங் கிணைவாளி
பகைவன் புயத்திற் படவெய்தான்.

[இ தேர் அழிய வேறு ஒரு தேர் ஏறி, பரவை இடை சுழன்ற மத்தே அனைய சிலை வாங்கி, மன்னற்கு இளையோன் வயம் மீளி, அ தேர் அழிய, கொடி வலவன் வயம் மா அனைத்தும் அற்று வீழ, பத்தே எய்து, ஆங்கு இணை வாளி பகைவன் புயத்தில் பட எய்தான்.]

**விளக்கம்:-** மன்னற்கு (தருமனுக்கு] இளையோனாகிய வலிய வீரன் (வீமன்) இந்தத் தேர் அழிய, வேறு ஒரு தேரில் ஏறி, பாற் கடலில் (அமுதம் கடைகையில்) சுழன்ற மத்தாகிய மந்தர மலையைப் போன்ற வில்லை வளைத்து, அந்த (துச்சாதனன் இருந்த) தேர் அழியவும்,கொடி, சாரதி, குதிரைகளும் ஆகிய எல்லாம் அறு பட்டு விழவும் பத்துப் பாணங்களைத் தொடுத்து, அப்பொழுதே இரண்டு பாணங்களைத் துச்சாதனன் தோள்களில் பட்டு வருத்தும் படி பிரயோகம் செய்தான், என்பது பொருள்.

## கதைப் போர்

**146.** காரிற் கரிய குழறீண்டிக்
கலையன் றுரித்த கழற்காளை
பாரிற் குதித்தோ ரதிபாரப்
பைம்பொற் கதையாற் பாவனன்றன்
தேரிற் புடைக்கத் தேர்சிதைந்து
சிந்திற் றவனுஞ் சிலைமாற்றிப்
போரிற் சிறந்த தண்டமுடன்
புவிமேற் பாய்ந்தான் புலிபோல்வான்.

[காரின் கரிய குழல் தீண்டி கலை அன்று உரித்த கழல் காளை பாரில் குதித்து, ஓர் அதி பாரம் பைம் பொன் கதையால் பாவனன் தன் தேரில் புடைக்க, தேர் சிதைந்து சிந்திற்று; அவனும் சிலை மாற்றி, போரில் சிறந்த தண்டமுடன் புவி மேல் பாய்ந்தான் புலி போல்வான்.]

**விளக்கம்;-** செய்யுள் சுலபமானது. துச்சாதனன் கதையால் வீமனது தேரைச் சிதைக்க, புலி போன்றவனான வீமனும் சிறந்த தனது கதையுடன் பூமியில் குதித்தான்,—என்பதாம்.

## எண்சீர் ஆசிரிய விருத்தம்

**147.** **இருவ ரும்புயங் களினப்பி யொத்தினர்**
**இரிகல்பு ரிந்துதண் டிறுகப்பி டித்தனர்**
**மருவி யொன்றெடொன் றனல்கக்க மொத்தினர்**
**வலமி டங்கொண்மண் டலமுற்ப யிற்றினர்**
**அருகு சென்றுசென் றடிவைத்த டுத்தனர்**
**அகல நின்றுநின் றொரிமைப்பின் முட்டினர்**
**திருகு வெஞ்சினத் திடியொத்து ரப்பினர்**
**திசையின் மண்டிபக் கிரிசத்த மிட்டவே.**

[இருவரும் புயங்களின் அப்பி ஒத்தினர், இகல் புரிந்து தண்டு இறுக பிடித்தனர்; மருவி ஒன்றெடு ஒன்று அனல் கக்க மொத்தினர், வலம் இடம் கொண்டு மண்டலம் முன் பயிற்றினர்; அருகு சென்று சென்று அடி வைத்து அடுத்தனர், அகல நின்று நின்று ஓர் இமைப்பின் முட்டினர்; திருகு வெம் சினத்து இடி ஒத்து உரப்பினர், திசையில் மண்டு இபம் கிரி சத்தம் இட்ட, ஏ.]

**விளக்கம்:-** இருவரும் தோள்களில் அழுந்தும்படி தட்டிக் கொண்டார்கள், வலிமையை மேற்கொண்டு கதையை இறுகப் பிடித்தார்கள்; ஒன்றேடொன்று சேர்த்து அனல்கக்கும்படி தாக்கினர்கள், வலம் இடமாக மண்டல கதியை முன்னே பற்றினர்கள்; அடி வைத்து அருகு சென்று நெருங்கினர், அகல நின்று ஓர் இமைப் பொழுதில் நெருங்கித் தாக்கினர்கள்; (அந்த அதிர்ச்சியால்) திசையில் பொருந்திய மலைபோன்ற திசை யானைகள் சத்தமிட்டன, என்பது பொருள்.

**148.** **வெகுளி கொண்டுகொண் டெதிர்கொக்க ரித்தனர்**
**விசையு டன்கிளர்ந் துயரக்கு தித்தனர்**
**உகவை விஞ்சவெங் கதையைச்சு ழற்றினர்**
**உயர்வி சும்பெறிந் தொருகைப்பி டித்தனர்**
**முகம லர்ந்துநின் றதிரச்சி ரித்தனர்**
**முதிர வஞ்சினம் பலகட்டு ரைத்தனர்**
**மகிபர் கண்டகண் டவர்சித்த முட்கிட**
**வரையி ரண்டுவெஞ் சமர்கற்ப தொக்கவே.**

[வெகுளி கொண்டு கொண்டு எதிர் கொக்கரித்தனர், விசையுடன் கிளர்ந்து உயர குதித்தனர்; உகவை விஞ்ச வெம் கதையை சுழற்றினர், உயர் விசும்பு எறிந்து ஒரு கை பிடித்தனர்; முகம் மலர்ந்து நின்று அதிர சிரித்தனர், முதிர வஞ்சினம்

பல கட்டுரைத்தனர்; மகிபர் கண்ட கண்டவர் சித்தம் உட்கிட வரை இரண்டு வெம்சமர் கற்பது ஒக்க, ஏ.]

**விளக்கம்:-** (போரைக் கண்ட அரசர்கள் மனம் திடுக்கிடும்படி இரண்டுமலைகள் போர் பயில்வதை ஒக்கும்படி, இருவரும் வெகுளி கொண்டு ஒருவர் முன் ஒருவர் வீரமுழக்கம் செய்தனர்; விசையுடன் உயரக் கிளர்ந்து (எழும்பி) குதித்தனர்; மகிழ்ச்சி மிக வெம் கதையைச் சுழற்றினர், அதை உயர்ந்த வானில் வீசி எறிந்து ஒரு கையால் பிடித்தனர்; முகமலர்ச்சியோடு நின்று அதிர்ச்சியுண்டாகும்படி சிரித்தனர்; மிகுதியாக வஞ்சினங்கள் பல கூறினர்,-என்பது பொருள், ஒருவர் செய்வதை மற்றவரும் செய்தல் பற்றி, ''சமர் கற்பது ஒக்க'' என்றார்.

**149.** **இகலி வெங்கொடுங் கதையொத்து மொத்தொலின்**
**இடியின் வெங்கொடுங் குரலொத்தொ லித்தன**
**மகித லம்பிளந் ததுசர்ப்ப வர்க்கமும்**
**வயிற ழன்றுநஞ் சுகள்கக்கி யிட்டன**
**திகிரி யந்தடங் கிரிபக்கு நெக்கது**
**செவிடு கொண்டயர்ந் ததுதிக்க யக்குலம்**
**முகடு விண்டதண் டமும்மப்பு றத்துற**
**முகில்க ளும்பெருங் குகைபுக்கொ ளித்தவே.**

[இகலி வெம் கொடும் கதை ஒத்து மொத்து ஒலி இடியின் வெம் கொடு குரல் ஒத்து ஒலித்தன; மகிதலம் பிளந்தது சர்ப்ப வர்க்கமும் வயிறு அழன்று நஞ்சுகள் கக்கிஇட்டன; திகிரி அம் தடகிரி பக்கு நெக்கது, செவிடு கொண்டு அயர்ந்தது திக் கயம் குலம்; முகடு விண்டது அண்டமும் அப்புறத்து உற, முகில்களும் பெருங்குகை புக்கு ஒளித்த, ஏ.]

**விளக்கம்:-** இருவரும் பகைத்துக் கதையினல் நெருங்கி மோதுவதால் உண்டாகின்ற ஒலி இடியின் வெங் கொடுங் குரலின் (முழக்கத்தினை) ஒத்து ஒலித்தன; பூமி பிளந்தது; நாகவர்க்கம் (பயத்தால்) வயிறு அழன்று விஷங்களைக் கக்கின; சக்கர வாள கிரியும் பிளவுண்டு அழிந்தது, திசை யானைகளின் கூட்டமும் செவிடு அயர்ந்தது; இந்த அண்டத்திற்கு அப்பாலுள்ள பகிரண்டம் உள்பட மேல் முகடு பிளந்தது, மேகங்களும் மலைக் குகையில் சென்று மறைந்தன, - என்பது பொருள். திகிரி அம் தடங்கிரி - சக்கரவாள பர்வதம். அப்புறத்து அண்டமும் உற - இவ் வண்டத்திற்கு அப்பாலுள்ள பகிரண்டம் எல்லாம் சேர்ந்து.

**150.** விழிக ளுஞ்சிவந் தனநெற்றி யிற்பொறி
வெயர்வு வந்தரும் பினவிப்பி முத்தென
மொழிக ளுங்கிளம் பினநெட்டி டிப்பென
முரிமு ரிந்தவண் புருவச்சி லைத்துணை
எழிலு டன்பரந் திறுகத்த டித்தன
இமய மந்தரங் களொடொத்த பொற்புயம்
அழியு மங்கமென் றொருசற்றி ளைத்திலர்
அமரி லன்றருங் கதையிட்ட டிக்கவே.

[விழிகளும் சிவந்தன, நெற்றியில் பொறி வெயர்வு வந்து அரும்பின இப்பி முத்து என; மொழிகளும் கிளம்பின நெடு இடிப்பு என, முரி முரிந்த வண் புருவம் சிலை துணை; எழிலுடன் பரந்து இறுக தடித்தன இமய மந்தரங்களோடு ஒத்த பொன் புயம்; அழியும் அங்கம் என்று ஒரு சற்று இளைத்திலர் அமரில் அன்று அருங்கதை இட்டு அடிக்க, ஏ.]

**விளக்கம்:-** இருவர் கண்களும் கோபத்தால் சிவந்தன, இப்பி (சிப்பி) முத்து என நெற்றியில் வியர்வு பொறி (துளிகள்) அரும்பின; பெரிய இடிப்பு என சொற்கள் வெளிப்பட்டன; எழில் மிக்க இரண்டு புருவங்களும் மிக நெறிப்புற்றன; இமயமலை யோடும் மந்தரமலையோடும் ஒத்த அழகிய தோள்கள் எழிலுடன் பரந்து உறுதியோடு பருத்தன; அரிய கதையைக் கொண்டு மோதப்படவே, அங்கம் சிதையும் என்று சிறிதும் இளைத்திலர், என்பது பொருள்.

## துச்சாதனன் அழிதல்

**151.** எதிர்ம லைந்தவெஞ் சமரிப்ப டிக்கிவர்
இரித லின்றிமொய்ம் புறவுத்த ரிக்கவும்
உதர நெஞ்சுரம் புயமெய்க்க ழுத்தென
வுரைசெ யங்கமொன் றினுமுற்று றைத்தில
கதைக ளும்பிளந் தொடிபட் டெடுத்தன
கரத லங்களுங் கருகிச்சி வந்தன
முதிர்சி னங்கொளுந் தலின்முற்றும் விட்டிவர்
முரணு டன்றொடங் கினர்முட்டி யுத்தமே.

[எதிர் மலைந்த வெசமர் இப்படிக்கு இவர் இரிதல் இன்றி மொய்ம்பு உற உத்தரிக்கவும்; உதரம் நெஞ்சு உரம் புயம் மெய் கழுத்து என உரை செய் அங்கம் ஒன்றினும் உற்று உறைத்தில; கதைகளும் பிளந்து ஒடிபட்டு, எடுத்தன (ஆகிய) கரதலங்களும் கருகி சிவந்தன; முதிர் சினம் கொளுந்தலின் முற்றும் விட்டு இவர் முரணுடன் தொடங்கினர் முட்டி யுத்தம், ஏ.]

**விளக்கம்:-** மொய்ம்பு உற உத்தரிக்க - வலிமை பொருந்தத் தாக்கவும். இரிதல் இன்றி - உறுதி கெடல் இல்லாமல். உற்று உறைத்தில - கதைகள் உடலில் பட்டு வருத்தவில்லை; சினம் கொளுந்தலின் - கோபம் மூண்டெழுந்ததினால். கதைகள் பயன் தராமையால், ஆயுதங்களை ஒழித்து இருவரும் முஷ்டி யுத்தம் செய்ய ஆரம்பித்தனர் என்பதாம்.

**152.** **விரல்க ளைந்தையுஞ் செறியக்கு வித்தொளி**
**மிகுந கம்புதைந் திடவுட்பு தைத்திரு**
**கரத லங்களுஞ் சிகரப்பொ ருப்பிடை**
**கரிய கொண்டன்மண் டுருமொத்தி டித்திட**
**அருளு டன்சிறந் தறனுற்ற கொற்றவன்**
**அனுச னுந்தயங் குரகத்த னிக்கொடி**
**நிருபர் தம்பெருந் தகைமுற்க னிட்டனும்**
**நினைவு டன்கலந் தெதிர்குத்தி யிட்டபின்.**

[விரல்கள் ஐந்தையும் செறிய குவித்து ஒளி மிகு நகம் புதைந் திட உள் புதைத்து, இரு கரதலங்களும் சிகரம் பொருப்-பிடை கரிய கொண்டல் மண்டு உரும் ஒத்து இடித்திட, அருளுடன் சிறந்த அறன் உற்ற கொற்றவன் அனுசனும், தயங்கு உரகம் தனி கொடி நிருபர்தம் பெருந்தகை முன் கனிட்டனும் நினைவுடன் கலந்து எதிர் குத்தியிட்டபின், - தொடரும்]

**விளக்கம்:-** அருளுடன் சிறந்தறன்... ....முன்கனிட்டனும், நினைவுடன், விரல்கள் ஐந்தையும்..... ....உரும் ஒத்திட எதிர் குத்தியிட்டபின் - என்பது அன்வயம்.

கருணையோடு சிறந்த தர்மமும் பொருந்திய தருமனது தம்பியாகிய வீமனும், விளங்குகின்ற ஒப்பற்ற பாம்புக் கொடியை உடைய அரசர் பெருந்தகையான துரியோதனனது முதல் தம்பியான துச்சாதனனும், வெல்லுகின்ற எண்ணத்துடன் கைகலந்து, விரல்கள் ஐந்தையும் நெருங்கச் சேர்த்து மடக்கி, ஒளி மிகுந்த நகங்கள் கையில் மறையும்படி மூடிக்கொண்டு, இரண்டு கைகளாலும், சிகரங்களை உடைய மலையில் கரிய மேகம் முழங்கும் இடியை ஒத்து இடிக்கும்படி ஒருவரை ஒருவர் குத்திய பின், - தொடரும். இதுவும், அடுத்த மூன்று செய்யுள்களும் ஒரு தொடர்.

**153,** **அனிலன் மைந்தனென் றுரைபெற்ற கொற்றவன்**
**அரசன் முந்துதம் பியைமத்த கத்திடை**
**கனல்கொ ளுந்தமுந் ததிரத்த கர்த்திரு**
**கவுணெ ரிந்துவண் செவியுட்க ரக்கவும்**

முனைசி தைந்துரம் பெறுபற்றெ ரிக்கவும்
மொழிக ளுந்தளர்ந் தனமுற்றொ ளிக்கவும்
மினலி னுஞ்சிவந் தொளிபெற்ற வற்புத
விழிபி துங்கவும் பெருகக்க லக்கியே.

[அனிலன் மைந்தன் என்று உரைபெற்ற கொற்றவன், அரசன் முந்து தம்பியை மத்தகத்து கடைகனல் கொளுத்த முந்து அதிர தகர்த்து இரு கவுள் நெரிந்து வண் செவி உள் கரக்கவும், முன் சிதைந்து உரம் பெறுபல் நெரிக்கவும், மொழிகளும் தளர்ந்தன (ஆகி) முற்று ஒளிக்கவும், மினலினும் சிவந்து ஒளி பெற்ற அற்புதம் விழி பிதுங்கவும் பெருக கலக்கியே - தொடரும்.]

**விளக்கம்:-** அனிலன் - வாயு. அரசன் - துரியோதனன். மத்தகம் - தலை. வீமன் துச்சாதனனை தலையில் தீப்பொறி வெளிப்படவும், அதிர்ச்சியடையவும் முன்னே குத்தி வருத்தி, இரு கன்னங்களும் நெரிந்து காதுகள் உள்ளே புதையவும், வலிய பற்கள் முனை ஒடிந்து சிந்தவும், சொற்கள் தளர்ந்தனவாய் முற்றிலும் அற்றுப்போகவும், மின்னலினும் செம்மை பெற்ற ஒளி பொருந்திய அற்புதமான கண்கள் பிதுங்கவும் மிகுதியாகக் கலக்கி வருத்தி - (தொடரும்) என்பது பொருள்.

**154.** பதயு கங்களங் குலிதொட்டு றுப்புள
பலவு மென்புடன் தசைபற்று விட்டற
விதவி தம்படும் புடைபட்டி டிப்புற
விசிந ரம்புசந் துகளிற்றெ றித்திட
மதுகை யந்தடம் புயவெற்ப றப்பல
வரையு டன்பொருந் தியநற்க ழுத்திற
முதுகி லுங்கவின் பெறவுற்ப வித்தென
முகனை யும்புறந் திருகத்தி ருப்பியே.

[பதயுகங்கள் அங்குலி தொட்டு உறுப்பு உள பலவும் என்புடன் தசை பற்றுவிட்டு அற, விதவிதம் படும் புடை பட்டு இடிப்பு உற விசி நரம்பு சந்துகளில் தெறித்திட, மதுகை அம் தடம்புயம் வெற்பு அற, பலவரையுடன் பொருந்திய நல் கழுத்து அற, முதுகிலும் கவின் பெற உற்பவித்து என முகனையும் புறம் திருக திருப்பியே – தொடரும்]

**விளக்கம்:-** பதயுகங்கள் - இரண்டு கால்கள். அங்குலி-விரல். என்பு எலும்பு. புடைபட்டு - குத்துப்பட்டு. விசிநரம்பு - பிணிப்புடைய நரம்புகள். மதுகை - வலிமை. வரை – இரேகை, வரி. உற்பவித்தது என - தோன்றியது எனும்படி. முகன் - முகம்,

இரண்டு கால்களும் விரல்களும் தொடங்கி உள்ளனவான பல அவயபங்களும், எலும்போடு சதைக்குரிய தொடர்பு அழியவும், பலவிதப்பட்ட குத்துக்களால் இடிபட, பிணிப்புடைய நரம்புகள் சந்துகளில் பற்று விடவும், வலிய அழகிய மலை போன்ற தோள்கள் அறுபடவும், பல அழகிய கோடுகளை (இரேகைகளை) உடைய கழுத்து அறுபடவும், முதுகுப் புறத்திலும் அழகு பொருந்தத் தோன்றினாற் போல் முகத்தை பின்புறம் திரும்பும்படி திருப்பியும், - தொடரும்) என்பதாம்.

**155** **மயிரை வன்கரங் கொடுறப்பி டித்தெதிர்**
**வரவி ழுந்திடும் படிபற்றி யிட்டுடல்**
**அயிர்ப டுங்கடுந் தரையிற்று கட்பட**
**வடியி ரண்டினுஞ் சரியத்து கைத்தெழு**
**செயிரு டன்பெருந் தொடைதொட்டி ழுத்தணி**
**திகழு ரம்பகுந் தவுணக்கு லத்திறை**
**உயிர்க வர்ந்தசிங் கமொடொப்பு றத்தன**
**தொளிசி றந்தனன் கடிதுக்கி ரத்தோடே.**

[மயிரை வல் கரம் கொடு உற பிடித்து எதிர் வர விழுந்திடும் படி பற்றி இட்டு, உடல் அயிர் படும் கடுந்தரையில் துகள்பட, அடி இரண்டினும் சரியத் துகைத்து, எழு செயிருடன் பெருந்தொடை தொட்டு இழுத்து, அணி திகழ் உரம் பகுந்து, அவுணர் குலத்து இறை உயிர் கவர்ந்த சிங்கமொடு ஒப்பு உற தனது ஒளி சிறந்தனன் கடிது உக்கிரத்தொடு, ஏ.]

**விளக்கம்:-** மிகுந்த கோபத்தோடு (வீமன்) வலிய கைகளால் உறுதியாகப் பிடித்து எதிரில் வந்து விழும்படி பற்றித் தள்ளி, உடலை மணல் பொருந்திய கடினமான பூமியில், புழுதி படும்படி இரண்டு கால்களாலும் மிதித்து எழுகின்ற பகை உணர்ச்சியுடன் பெரிய தொடைகளைப் பற்றி இழுத்து, அழகு விளங்கும் மார்பைப் பிளந்து, அசுரர் குலத்தலைவனை இரணியனின் உயிர்கவர்ந்த சிங்கப் பிரானை ஒக்கும்படி (பகை அழித்து) தனது வீரப்பிரகாசம் மிகுந்தவனானான், - என்பது பொருள்.

**156.** **உகிரெ னும்பெரும் பெயர்பெற்ற சொட்டைக**
**ளுருவி யெங்கணும் புதைபட்டு ரத்தலம்**
**வகிர வுங்கொடுங் குடர்வட்ட மற்றுகு**
**வயிறு தொங்கவுங் கிழிவித்த பிற்செறி**
**துகிர்பர னடந்தசெம் பவரொத்த நெட்டுடல்**
**சொரித ருஞ்செழுங் குருதிப்பெ ருக்கிடை**
**பகிர தன்றருங் கடவுட்டு றைப்புனல்**
**படியு மும்பர்தம் பரிசிற்கு ளிக்கவே.**

[உகிர் எனும் பெரு பெயர் பெற்ற சொட்டைகள் உருவி எங்கணும் புதைபட்டு உரம்தலம் வகிரவும், கொடு குடர் வட்டம் அற்று உகுவயிறு தொங்கவும் கிழிவித்த பின், செறி துகிர் உடைந்த செம்பவர் ஒத்த நெடு உடல் சொரி தரும் செழு குருதி பெருக்கிடை, பகிரதன் தரும் கடவுள் துறை புனல் படியும் உம்பர்தம் பரிசின் குளிக்க, - தொடரும்.]

**விளக்கம்:-** உகிர் (நகம்) என்னும் பெரிய பெயர் பெற்ற ஆயுதங்கள் தைத்து உடல் முழுதும் புதைபடலால் மார்பு பிளவு படவும், வட்ட வடிவமான குடல் அறுபட்டுச் சரிந்த வயிறு தொங்கவும் கிழியச் செய்த பின், செறிவுடைய பவளம் பிளவுற்ற இடத்திலே உள்ள சிவந்த நிறத்தை ஒத்த, நெடிய உடல் சொரிகின்ற செழிப்புடைய குருதி வெள்ளத்தில், - (வீமன்) பகீரதன் (தவத்தால்) பூலோகம் கொண்டு வரப்பட்ட தெய்வத்தன்மையுடைய ஆகாச கங்கையில் நீராடும் தேவர்களின் தன்மைபோல், (மகிழ்ச்சியோடு) குளிக்கும்படி,-அடுத்த செய்யுளோடு தொடரும்.

கொச்சகக் கலிப்பா

**157.** **மன்னற் கிளையோனை வாட்டருமனுக்கிளையோன்**
**துன்னிப் பிளந்து சுரருலக மேற்றுதலும்**
**கன்னற்கு மற்றுள்ள காவலர்க்கு நில்லாமல்**
**வென்னிட்ட தம்மன்னன் வீரப் பெருஞ்சேனை.**

[மன்னற்கு இளையோனை வாள் தருமனுக்கு இளையோன் துன்னி பிளந்து சுரர் உலகம் ஏற்றுதலும், கன்னற்கும் மற்று உள்ள காவலர்க்கும் (முதுகிடலை விட்டு) நில்லாமல் வென் இட்டது அ மன்னன் வீரம் பெரு சேனை.]

**விளக்கம்:-** மன்னன் – துரியோதனன். வீமன் துச்சாதனனை விண்ணேற்றலும், துரியோதனன் வீரப் பெருஞ்சேனை, கர்ணனும் மற்று மன்னர்களும் தடுக்கவும் நில்லாமல் பின்னிட்டு ஓடியது, - என்பதாம்.

இதுவும், தொடரும் இருபது செய்யுள்களும், பெரும்பாலும் வெண்டளை பெற்று நடக்கும் கொச்சகக் கலி ஆகும்.

கண்ணன் அங்கு வரல்

**158.** **வண்டார வார மருதநறும் பூந்துளபத்**
**தண்டார் முடியோனும் விற்கைத் தனஞ்சயனும்**
**கண்டா ரவர்முதலாங் காவலருங் கைகலந்தார்**
**வெண்டா ரகைபரந்த விண்ணெனுத்த தாகவமே.**

[வண்டு ஆரவாரம் அருத நறு பூந்துளபம் தண் தார் முடியோனும், வில்கை தனஞ்சயனும், கண்டார் அவர் முதல் ஆம் காவலரும் கை கலந்தார்; வெண் தாரகை பரந்த விண் ஒத்தது ஆகவம், ஏ.]

**விளக்கம்:-** துச்சாதனனை வீமன் கொன்றதைக் கண்டு, கண்ணனும் விசயனும், அவர்கள் முதலிய மற்ற அரசர்களும், அங்கே வந்து சேர்ந்தனர்; (அப்பொழுது பாண்டவர் நின்ற) போர்க்களம் வெள்ளிய நட்சத்திரங்கள் பரவிய வானை ஒத்தது, - என்பதாம். கைகலந்தார் என்பது, வந்து கூடினர் என்ற பொருளது.

**159. வேகமிகுஞ் செந்தீயின் மேனு ளவதரித்த**
**தோகைகுழ லுந்துகிலு முடன்றொட் டனவென்(று)**
**ஆகமுறப் பிளந்தவாண் டகைமீண் டவ்வீரன்**
**பாகமுறு கைவிரல்கள் பத்துந் துணித்தானே.**

[வேகம் மிகும் செம் தீயில் மேல் நாள், அவதரித்த தோகை குழலும் துகிலும் உடன் தொட்டன என்று, ஆகம் உற பிளந்த ஆண் தகை, மீண்டு அ வீரன், பாகம் உறு கை விரல்கள் பத்தும் துணித்தான், ஏ.]

**விளக்கம்:-** வேகம் மிகும் - உக்கிரம் மிகுந்த. உடன் தொட்டான்-ஒருங்கே தொட்டான். ஆகம் - உடல். பாகம் உறு விரல்கள் - தேகத்தின் ஒரு அவயவமாகப் பொருந்திய கைவிரல்கள். திரௌபதியின் கூந்தலையும், துகிலையும் பற்றிய துச்சாதனனுடைய கைவிரல்கள் பத்தையும் வீமன் மறுபடியும் சென்று துண்டித்தான் என்பதாம்.

வீமன் மகிழ்தல்

**160. தண்ணீர் நிகரெனத்துச் சாதனன்றன் மெய்யிலிழி**
**புண்ணீர் பருகப் புகுவோனை யாவருக்கும்**
**கண்ணீர் வரத்தடுத்தான் காணுங்கா லெத்திறத்தும்**
**வெண்ணீர்மை யில்லாத மேகந் தனைப்போல்வான்.**

[தண்ணீர் நிகர் என துச்சாதனன் தன் மெய்யில் இழி புண்ணீர் பருகப் புகுவானை யாவருக்கும் கண்ணீர் வர தடுத்தான், காணுங்கால் எத்திறத்தும் வெண் நீர்மை இல்லாத மேகம் தனை போல்வான்.

**விளக்கம்:-** தண்ணீரைப் போல் துச்சாதனன் உடலிலிருந்து பெருகும் குருதியைக் குடிக்கப் புகுந்த வீமனை, யாவருக்கும்

இரக்கத்தால் கண்ணீர் வரவே, நோக்குங்கால் எல்லாத் தன்மை யாலும் வெண்மைத்தன்மை இல்லாத கரியமேகம் போன்றவனுன கண்ணன், தருமன், என்பது பொருள். நிறத்தால், குளிர்ந்த தன்மையால், கைமாறு கருதாது (மழை) பொழிதலால், உலகைக் காத்தலால், கண்ணன் கருமேகத்தை ஒத்தவனுதலால் எத்திறத்தும் மேகம் போல்வான், எனப்பட்டான்.

**161. குடியாம லக்குருதி கொப்பளித்து வாகை**
**முடியாநின் றென்னெண்ண முற்றினனென் ருங்கண்**
**படியாளுஞ் செங்கோன்மைப் பார்த்திவருக் கெல்லாம்**
**கொடியார் மடங்கலெனக் கூத்தாடி நின்ருர்த்தான்.**

[குடியாமல் அ குருதி கொப்பளித்து வாகை முடியா நின்று, என் எண்ணம் முற்றினன் என்று, ஆங்கண் படி ஆளும் செங் கோன்மை பார்த்திவருக்கு எல்லாம். (தன்) கொடி ஆர் மடங்கல் என கூத்தாடி நின்று ஆர்த்தான்.]

**விளக்கம் :-** (கண்ணன் தடுக்கவே) குருதியைக் குடிக்காமல் கொப்பளித்து (உமிழ்ந்து) வெற்றிமாலே சூட்டிக்கொண்டு நின்று, அங்கே உள்ள அரசர்களுக்கு எல்லாம், ''எனது எண்ணம் நிறை வேறிற்று,'' என்று சொல்லி, தனதுகொடியில் பொருந்திய சிங்கம் போல் கூத்தாடி ஆரவாரித்தான், - என்பதாம்.

**162. துன்பமுறுந் துன்னீதிச் துச்சாத னன்போர்செய்(து)**
**ஒன்பதின்மர் தம்பியரோ டும்பரூர் புக்கானென்(று)**
**அன்புடைய தம்மு னடிவீழ்ந் தகங்களித்தான்**
**வன்புடைய தாதையினு மிக்க வலியோனே.**

[துன்பம் உறும் துன்னீதி துச்சாதனன் போர் செய்து, ஒன்ப தின்மர் தம்பியரோடும் உம்பர் ஊர் புக்கான், என்று, அன்புடைய தம்முன் அடிவீழ்ந்து அகம் களித்தான், வன்பு உடைய தாதை யினும் மிக்க வலியோன்; ஏ.]

**விளக்கம் :-** துன்பம் உறும் துன்னீதி - பிறரை துன்பம் அடையச் செய்யும் துர்நீதி (அநியாயச் செய்கை) உடைய. வன்பு உடைய தாதை - வலிமையுடைய தந்தையான வாயுபகவான். துர்நீதி துச்சாதனன் தம்பியர் ஒன்பதின்மரோடு போர் செய்து மாண்டான், என்று சொல்லி, வீமன், தருமனது பாதங்களில் விழுந்து உள்ளம் களித்தவனுனுன், - என்பதாம்.

## கர்ணனது நிலை

163. பாண்டவர்கள் சேனை மதிகண்ட பௌவமெனக்
காண்டவமன் றுண்ட கனல்போ னனிதருக்கி
மூண்டநிலை கண்டு முதுகிடுதன் சேனையுடன்
மீண்டுமெதி ரூன்றுமல் வெய்யோன் மகனின்றான்.

[பாண்டவர்கள் சேனை மதிகண்ட பௌவம் என, காண்டவம் அன்று உண்ட கனல் போல் நனி தருக்கி மூண்ட நிலை கண்டும், முதுகு இடு தன் சேனையுடன் மீண்டும் எதிர் ஊன்றாமல் வெய் யோன் மகன் நின்றான்.]

**விளக்கம் :-** பாண்டவர் சேனை மதிகண்ட கடல் போலவும், முன்னாள் காண்டவம் உண்ட அக்னிபகவான் போலவும் மிகவும் செருக்கிக் கிளர்ந்துள்ள நிலைகண்டும், கர்ணன், பின்னிடும் தனது சேனையுடன் மீண்டும் எதிர் நின்று போர் செய்யாமல் திகைப் புடன் நின்றான்,—என்பதாம்.

164. மேல்கொண்டு பாண்டவர்தம் வெஞ்சேனை சூழ்ந்திடவும்
மால்கொண்ட வர்போல மாண்டா யெனக்கழறிக்
கால்கொண்ட திண்டேர் கடாவினன் கையுளவு
கோல்கொண்டான் கன்னனுமக் கூற்றுக் கெதிர்கூறும்.

[மேல் கொண்டு பாண்டவர் தம் வெம் சேனை சூழ்ந்திடவும், மால் கொண்டவர் போல(வலி) மாண்டாய், என கழறி, கால் கொண்டதிண்; தேர் கடாவினன் கைஉளவு கோல் கொண்டான் கன்னனும் அ கூற்றுக்கு எதிர் கூறும்]

**விளக்கம் :-** ''பாண்டவர் சேனை மேலெழுந்து வந்து சுற்றிக் கொள்ளவும், மயக்கங் கொண்டவனைப் போல வலி அழிந்தாயே'' என்று கையில் உளவு கோலைக் கொண்ட சல்லியன் கூறி, தேரை நடத்தினான்; கர்ணனும் அதற்குப் பதில் கூறுவானாயினான்,— என்பதாம்.

165. வேந்த னனைய விறற்றம்பி வீமன்கை
மாய்ந்த நிலைகண்டு மனந்தளர்ந்த தல்லாது
கூர்ந்த திறன் மத்திரத்தார்கோவே வெருவுமோ
பாந்த ளெதிர்செல்லப் பறவைக்கர சென்றான்.

[வேந்தன் அனைய விறல் தம்பி வீமன் கை மாய்ந்த நிலை கண்டு மனம் தளர்ந்தது அல்லாது, கூர்ந்த திறல் மத்திரத்தார் கோவே, வெருவுமோ, பாந்தள் எதிர் செல்ல பறவைக்கு அரசு, என்றான்.]

**விளக்கம் :-** கூர்ந்ததிறல்–மிகுந்த வலிமை. பாந்தள்-பாம்பு. பறவைக்கு அரசு- கருடன், "துச்சாதனன் மாண்டதால் எய்திய நிலை இது, அச்சத்தால் அன்று," என்று கர்ணன் சல்லியனுக்குச் சொன்னான்,— என்பதாம்.

அணி அமைத்துக் கர்ணன் போரெழல்

**166. முன்ன மமரின் முதுகிட்ட மன்னரையும்**
**மன்னவர்கண் மன்னனையும் வன்பே ரணியாக்கிப்**
**பொன்னசலம் போலும் புனைபொற்கொடி நெடுந்தேர்க்**
**கன்னனெதி ரூன்றினான் காயுங் கனல்போல்வான்.**

[முன்னம் அமரில் முதுகு இட்ட மன்னரையும், மன்னவர்கள் மன்னனையும் வல் பேர் அணி ஆக்கி, பொன் அசலம் போலும் புனை பொன் கொடி நெடு தேர் கன்னன் எதிர் ஊன்றினான், காயும் கனல் போல்வான்.]

**விளக்கம் :-** காயும் கனல் போல்வானும், பொன்மலை போன்ற, அலங்கரிக்கப்பெற்ற பெரிய தேரையுடையவனும் ஆகிய கர்ணன், முன்னே போரில் முதுகிட்ட மன்னர்களையும், மன்னர் மன்னனாகிய துரியோதனனையும் பெரியபடையாக அணிசெய்து, (பகைவரை) எதிர்த்துச் சென்றான்,—என்பது பொருள்.

**167. சேனா பதியான தேர்த்துருப தேயனும்வான்**
**மீனா மெனப்பரந்த வேந்தருட னேதனக்குத்**
**தானாண்மைக் கொப்பாந் தருமனையுஞ் சேனையையும்**
**மாநாக முட்க வகுத்தாங் கெதிர்நடந்தான்.**

[சேனாபதி ஆன தேர் துருபதேயனும் வான் மீன் ஆம் என பரந்த வேந்தருடனே. தனக்கு தான் ஆண்மைக்கு ஒப்பு ஆம் தருமனையும் சேனையையும் மா நாகம் உட்க வகுத்து ஆங்கு எதிர் நடந்தான்.]

**விளக்கம் :-** பாண்டவ சேனாதிபதியான திட்டத்துய்மன் நட்சத்திரங்கள் போல் பரந்துள்ள அரசர்களோடு, ஆண்மையில் தனக்குத்தானே ஒப்பான தருமனையும் அவனது சேனைகளையும் அணிவகுத்துப் பகைவர்மேல் எதிர்த்துச் சென்றான், என்பதாம்.

**168. பொன்னார் முரசமுதற் போர்வெம் பணையாலும்**
**வின்னா ணொலியாலும் விண்ணோர் செவிடுபடப்**
**பன்னாம பேதப் படையொளியா லும்பலபூண்**
**மின்னாலுங் கண்கள் வெறியோடி விட்டனவே.**

[பொன் ஆர் முரசம் முதல் போர் வெம் பணையாலும், வில் நாண் ஒலியாலும், விண்ணோர் செவிடுபட, பல் நாமம் பேதம் படை ஒளியாலும், பல் பூண் மின்னலும் கண்கள் வெறியோடி விட்டான்.]

**விளக்கம் :-** பணை - போருக்குரிய பறை. வெறியோடல் - ஒளிமிகுதியால் கண்கள் ஒளி இழத்தல். போர்ப்பணையின் ஒலியாலும், வில்லின் நாணொலியாலும் வானவர் செவிடுபட, பலவகைப் பெயர்களைக் கொண்ட ஆயுதங்களின் ஒளியாலும், ஆபரணங்களின் ஒளியாலும், அவர்களின் கண்கள் வெறியோடி விட்டன, - என்பதாம்.

கர்ணன்மகனும் நகுலனும் பொரல்

**169. யாமினியி லெவ்வுயிர்க்கு மேற்றதுயின் மாற்றுவோன்**
**மாமதலை கோமதலை மான்றேர் விடசேனன்**
**நாமமணித் தேர்மே னகுலன்மேற் சென்றுசில**
**தாமமுனை வாளி தழற்பொறிபோற் சிந்தினனே.**

[யாமினியில் எ உயிர்க்கும் ஏற்ற துயில் மாற்றுவோன் மா மதலை கோமதலை மான்தேர் விடசேனன், நாம மணி தேர்மேல் தகுலன் மேல் சென்று, சில தாமம் முனை வாளி தழல் பொறி போல் சிந்தினன், ஏ.]

**விளக்கம் :-** யாமினி - இரவு. இரவில் எல்லா உயிர்களுக்கும் பொருந்திய தூக்கத்தை நீக்குவோனாகிய சூரியனது சிறந்த மகனாகிய கர்ணனது தலைமைப் புதல்வனான குதிரைகள் பூட்டிய தேரையுடைய விடசேனன், தனது அச்சத்தைத் தருகின்ற அழகிய தேரின் மேல் சென்று நகுலன் மேல் ஒளியோடு கூடிய கூர்மையான சில கணைகளைத் தீப் பொறிகளைப் போல் சிந்தினான், என்பது பொருள்.

**170. வெம்புரவித் திண்டேர் விசயற் கிளையோனும்**
**செம்பதுமக் கையிற் சிலைநா ணொலியெழுப்பிக்**
**கம்பமத மால்யானைக் கன்னன்மக னேவியகூர்**
**அம்படைய வம்பா லறுத்தறுத்து வீழ்த்தினனே.**

[வெம்புரவி திண் தேர் விசயற்கு இளையோனும், செம்பதுமம் கையில் சிலை நாண் ஒலி எழுப்பி, கம்பம் மதம் மால் யானை கன்னன் மகன் ஏவிய கூர் அம்பு அடைய அம்பால் அறுத்து அறுத்து வீழ்த்தினன், ஏ.]

**விளக்கம் :-** நகுலன், விடசேனன் ஏவிய அம்புகள் எல்லா வற்றையும் தனது அம்புகளால் அறுத்துத் தள்ளினுன்,-என்பதாம்.

**171. அண்டர் பெருமானுக் கம்பொற் கவசமுடன்**
**குண்டலமு மீந்தோன் குமரன் கொடுங்கணையால்**
**மண்டு கனலருந்த வன்காண் டவமெரித்த**
**திண்டிறலோன் றம்பிதடந் தேர்க்கால் கனையழித்தான்.**

[அண்டர் பெருமானுக்கு அம் பொன் கவசமுடன் குண்டலமும் ஈந்தோன் குமரன் கொடுங்கணையால், மண்டு கனல் அருந்த வல் காண்டவம் எரித்த திண் திறலோன் தம்பி தடம்தேர் கால்களை அழித்தான்.]

**விளக்கம் :-** கர்ணன் மகன், எரிகின்ற அக்னி உண்ணும்படி வலிய காண்டவ வனத்தை எரித்த விசயன் தம்பியான நகுல னது தேர்ச் சக்கரங்களைத் தனது கொடிய கணைகளால் அழித் தான்,-என்பதாம்.

**172. மற்றெருதே ரேறி மருத்துவர்தம் மைந்தனுமக்**
**கொற்றநெடுங் கச்சை கொடியோன் திருமைந்தன்**
**வெற்றிவிலோ தனமும் வெஞ்சா பமுமுடனே**
**அற்றுவிழ வெய்தா னவனுண்மைக் காரெதிரே.**

[மற்று ஒரு தேர் ஏறி மருத்துவர் தம் மைந்தனும் அ கொற்றம் நெடு கச்சை கொடியோன் திருமைந்தன் வெற்றி விலோதனமும் வெம் சாபமும் உடனே அற்று விழ எய்தான் அவன் ஆண்மைக்கு ஆர் எதிர் ஏ.]

**விளக்கம் :-** மருத்துவர் மைந்தன் - அசுவினீ தேவர்களின் மகனுன நகுலன். கச்சை - யானையின் வயிற்றில் கட்டும் கயிறு, அந்தக் கச்சையைக் கொடியிலே கொண்டவன் கர்ணன் விலோ தனம் - கொடி. நகுலன் வேறு ஓர் தேரில் ஏறி வந்து கர்ணன் மைந்தனது கொடியும் வில்லும் அற்று விழும்படி பாணப்பிர யோகம் செய்தான்; அவனது ஆற்றலுக்கு யார் எதிராவார்? - என்பதாம்.

**173. மீண்டவனும் வேறெருவின் மேரு வெனவாங்கிப்**
**பாண்டவனை வீழும் படியெய்தான் வீழ்ந்தோனை**
**மூண்டவனற் செங்கண் முரண்வீமன் கொண்டேகக்**
**காண்டவநீ ருக்கினுன் கண்டா னவன்போரே.**

[மீண்டு அவனும் வேறு ஒரு வில் மேரு என வாங்கி பாண்ட வனை வீழும்படி எய்தான், வீழ்ந்தோனை மூண்ட அனல் செம்

கண் முரண் வீமன் கொண்டு ஏக, காண்டவம் நீறு ஆக்கினன் கண்டான், அவன் போர், ஏ.]

**விளக்கம்:-** மீண்டும் விடசேனன் மேருமலை என்று சொல்லும் படியான வேறோர் வில்லை வளைத்து நகுலன் உணர்வு அற்று விழும்படி அம்பு எய்தான்; விழுந்தவனை அனல் மூண்ட சிவந்த கண்களை உடைய வீமன் எடுத்துச் செல்ல, காண்டவ வனத்தை நீருக்கிய விசயன், விடசேனனது போராற்றலைக் கண்டான், - என்பது பொருள்.

விசயன் அவனை அழித்தல்

**174.** **நற்றூண் டிகழ்மதியா நாகம் பருமத்தா**
**அன்றூண் டிரைமதியா வண்டர்க் கமுதளித்தோன்**
**முன்றூண் டியதேரிற் சென்றான் முனைவாளி**
**மின்றூண் டில்வீசி விடசேன மீன்படுப்பான்.**

[நல் தூண் திகழ் மதி ஆ, நாகம் பரு மத்து ஆ, அன்று ஊண் திரை மதியா அண்டர்க்கு அமுது அளித்தோன் முன் தூண்டிய தேரில் சென்றான், முனைவாளி மின் தூண்டில் வீசி விடசேனன் மீன் படுப்பான்.]

**விளக்கம் :-** திகழ் மதி நல் தூண் ஆ (க), நாகம் பரு மத்து ஆ (க), திரை மதியா அன்று அண்டர்க்கு அமுது ஊண் அளித்தோன், முன் தூண்டிய தேரில், முனைவாளி மின் தூண்டில் வீசி விடசேனன் மீன் படுப்பான், சென்றான், - என்பது அன்வயம்.

விளங்குகின்ற சந்திரன் நல்ல தூணாகவும், மந்தரம் என்னும் மலை பருத்த மத்தாகவும், அலைகளை உடைய பாற்கடலைக் கடைந்து அன்று தேவர்களுக்கு அமுதை உணவாக அளித்தோனாகிய கண்ணன், முன்னே இருந்து செலுத்திய தேரில், (விசயன்) கூரிய அம்பாகிய மின்னலைப்போல் ஒளி விடும் தூண்டிலை வீசி, விடசேனனாகிய மீனை அகப்படுத்தி அழிக்கும் பொருட்டுச் சென்றான், - என்பது பொருள்.

தூண்டில் - மீன் பிடிக்கும் கோல். விசயன் வலைஞன், விடசேனன் மீன். அந்த மீனைப்படுக்கும் தூண்டில், அம்பு.

**175.** **தம்பிபடுந் துன்பந் தமையனையுங் காண்பனென**
**வெம்பி யெதிர்சென்று விடசேனன் வில்வாங்கிப்**
**பம்பிவரு கொடித்தேர்ப் பார்த்தனையும் பாகனையும்**
**அம்பின் மறைத்தா னடலே றரியனையான்.**

**விளக்கம் :-** அடல் அரிஏறு அனையான் (ஆகிய) விடசேனன் தம்பிபடும்....... . எதிர்சென்று, வில் வாங்கி..........அம்பின் மறைத்தான், - என்பது அன்வயம். நகுலன் படும் பாடு பார்த்தனும் படக் காண்பேன், என்று எண்ணி, அவன்முன் சென்று அவனையும், அவனது பாகனுன கண்ணனையும் அம்புகளால் மூடினுன், - என்பதாம்.

**176. வின்னுணும் விற்பிடித்த வெவ்விரலும் வின்னடுவும்
முன்னுன தும்பை முடித்தோன் முடித்தலையும்
பின்னுக வாங்கும் பிறையம்பும் பேரமரில்
ஒன்னுர் முனைதடிந்தோ னோரம்பி னுலறுத்தான்.**

[வில் நாணும், வில் பிடித்த வெம் விரலும், வில் நடுவும், முன் ஆன தும்பை முடித்தோன் முடிதலையும், பின் ஆக வாங்கும் பிறை அம்பும், பேர் அமரில் ஒன்னுர் முனை தடிந்தோன் ஓர் அம்பினுல் அறுத்தான்.]

**விளக்கம் -:** பெரிய போரில் ஒன்னுரது (பகைவரது) முனையை (போரை) அழித்தவனுகிய பார்த்தன், தன் முன்னே வந்த தும்பை மாலை சூடிய விடசேனனது (தான்) பின்னுகும் படி எடுத்து விட்ட அர்த்த சந்திர பாணங்களையும், வில்லின் நாணியும், வில் பிடித்த விரலும், வில்லின் நடுவிடமும், முடி அணிந்த தலையும் ஆகிய வற்றை ஓர் கணையால் அறுத்தான், - என்பது பொருள்.

**177. வீழ்ந்தான் விடசேனன் வீரரெல்லாம் வெஞ்சமரில்
தாழ்ந்தார் புறங்கொடுத்தார் தந்தைதடந் தேர்க்காலைச்
சூழ்ந்தார் சிலவீரர் தோலா தெதிர்நடந்து
வாழ்ந்தார் சுரராகி வான்மாதர் மெய்கலந்தே.**

**விளக்கம் :-** விடசேனன் வீழ்ந்தான்; (அதனுல் அஞ்சி) வீரர் எல்லோரும் கொடிய போரில் தோற்றுப் புறங்கொடுத்தவராய் (விடசேனனது) தந்தையாகிய கர்ணனது தேர்க்காலைச் சுற்றிக் கொண்டனர்; சில வீரர் தோற்று ஓடாது எதிரே சென்று பொருது, வீரசுவர்க்கத்தில் தேவர்களாய் யாறி, தேவ மாதரின் மெய் கலந்து வாழ்ந்தார், - என்பது பொருள்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

## கர்ணனது சோகமும் அசுவத்தாமனது சமாதான முயற்சியும்

**178.** **சாய்ந்த னன்களத் தருச்சுனன் சரத்தினுற்**
**தனயனென் றவற்றந்த**
**வேந்த னுங்கருத் தழிந்துதன் தேர்மிசை**
**வீழ்ந்தன னவன்பொற்றேர்**
**ஊர்ந்த சல்லியன் றேற்றினன் பற்பல**
**உரைகளா லவ்வெல்லைப்**
**பாந்த ளங்கொடிப் பார்த்திவ னின்றுழிச்**
**சென்றனன் பரித்தாமன்.**

[சாய்ந்தனன் களத்து அருச்சுனன் சரத்தினுல் தனயன் என்று அவன் தந்த வேந்தனும் கருத்து அழிந்து தன் தேர்மிசை வீழ்ந் தனன்; அவன் பொன் தேர் ஊர்ந்த சல்லியன் தேற்றினன் பல்பல உரைகளால்; அ எல்லை பாந்தள் அம் கொடி பார்த்திவன் நின்றுழி சென்றனன் பரித்தாமன்.]

**விளக்கம்:-** அருச்சுனன் சரத்தினுல் தன் மகன் பட்டான் என்று கர்ணன் உணர்வற்றுத் தேரில்விழ, அவனது பாகனுன சல்லியன் அவனைத் தேற்றலும், அசுவத்தாமன் பாம்புக் கொடிய னுன துரியோதனனிடம் சென்ருன், என்பதாம்.

**179.** **தப்ப ருஞ்சமர் விளைத்தனிர் நீயுமத்**
**தருமன்மைந் தனுமென்றே**
**மெய்ப்பெ ரும்புகழ் புனைகுரு குலத்திடை**
**வீடுமன் முதலான**
**எப்பெ ருந்திறற் குரவருங் கிளைஞரும்**
**ஏனைமன் னரும்யாரும்**
**ஒப்ப ரும்பெருஞ் சாதுரங் கத்துடன்**
**உடன்றுயிர் மாய்ந்தாரே.**

[தப்பு அரு சமர் விளைத்தனிர் நீயும் அ தருமன் மைந்தனும் என்றே, மெய் பெரும் புகழ் புனை குருகுலத்திடை வீடுமன் முதல் ஆன எ பெரு திறல் குரவரும், கிளைஞரும், ஏனை மன்னரும், யாரும், ஒப்பு அரு பெரு சாதுரங்கத்துடன் உடன்று உயிர் மாய்ந்தார், ஏ.]

**விளக்கம்:-** நீயும் தருமனும் ஒழிதற்கு அரிய போரை விளைத்துச் செய்கின்றதால், மெய்யான பெரும் புகழுடைய குரு

குலத்தில் தோன்றிய வீடுமன் முதலான, எல்லாப் பெருந் திறல் உடைய பெரியோர்களும், பந்துக்களும் மற்றை மன்னர்களும் (ஆகிய) எல்லோரும் ஒப்பு இல்லாத பெரிய சதுரங்க சேனையுடன் போர் செய்து மடிந்தார்கள்,—(என்று அசுவத்தாமன் கூறினன்) என்பது பொருள்.

**180. வளையி லாதன மங்கல விழவுநல்**
**வரம்பிலா மரபுந்தொல்**
**விளைவி லாவரும் புலமுமுத் தீயிலா**
**வேதியர் மனைவாழ்வும்**
**துளையி லாமணி முத்துமந் தண்புனல்**
**துறையிலா வளநாடும்**
**கிளையி லாவர சியற்கையு நன்றெனக்**
**கேட்டறி குவதுண்டோ.**

[வளை இலாதன மங்கல விழவும், நல்வரம்பு இலா மரபும், தொல் விளைவு இலா அரும் புலமும், முத்தீ இலா வேதியர் மனை வாழ்வும், துளை இலா மணி முத்தும், அம் தண் புனல் துறை இலா வள நாடும், கிளைஇலா அரசு இயற்கையும் நன்றுஎன கேட்டு அறிகுவது உண்டோ].

**விளக்கம்:-** சங்கு முதலிய வாத்தியங்களின் ஒலி இல்லாத சுப காரியங்களும், நல்ல விதிகடவா ஒழுக்கம் இல்லாத குலமும், பழமையாக விளைந்து வரும் விளைவு இல்லாத அரிய கழனியும், மூன்று தீ இல்லாத அந்தணர்களின் இல் வாழ்க்கையும், துவாரம் இல்லாத அழகிய முத்தும், அழகிய குளிர்ச்சியுடைய நீர்த் துறைகள் இல்லாத வளநாடும், பந்துக்கள் இல்லாத அரசாட்சி யின் தன்மையும், நல்லதென்று சொல்லக் கேட்டு அறிதல் உண்டோ !—(இல்லை என்றபடி) என்பது பொருள்.

**181. தும்பி மாபரி மாவுள தேருள**
**சுருங்கின சுருங்காமல்**
**உம்பி மார்களி லிருந்தவர் தம்மொடு**
**நுவலரும் பலகேள்வித்**
**தம்பி மாரொடு நும்முனு கியவிறல்**
**தருமன்மா மகனேடும்**
**பம்பி மாநிலம் புரப்பதே கடனெனப்**
**பார்த்திவற் குரைசெய்தான்.**

[தும்பிமா பரிமா உள, தேர் உள சுருங்கின, சுருங்காமல் உம்பிமார்கள் இருந்தவர் தம்மொடும், நுவல் அரும் பல கேள்வி

தம்பிமாரொடும் நும் முன் ஆகிய விறல் தருமன் மா மகனோடும் பம்பி மாநிலம் புரப்பதே கடன், என பார்த்திவற்கு உரை செய்தான்.]

**விளக்கம்:-** சுருங்கின தும்பிமா பரிமா உள, தேர்உள; சுருங்காமல் உம்பிமார்கள் இருந்தவர் தம்மொடும்......என, பார்த்திவற்கு (அசுவத்தாமன்) உரை செய்தான்,—என்பது அன்வயம். சுருங்கின - குறைந்த, அதாவது அழிந்தவை போக மிஞ்சிய. தும்பிமா - யானை, பரிமா - குதிரை. பம்பி - நெருங்கி. புவி புரப்பதே, கடமை, என்று அந்தணன், கூறினுன்,—என்பதாம்.

துரியோதனன் பதில்

**182.** **ஆரி யன்றிரு மகனிவை யுரைசெய**
**வரசனு மவைகேட்டுக்**
**காரி யம்புகல் வதுபுவி யாட்சியிற்**
**கருத்துடை யவர்க்கன்றோ**
**தூரி யங்கறங் கமரிடை யுடல்விழச்**
**சுரருல குயிரெய்த**
**வீரி யம்பெற லெனக்கினி பயனென**
**விளம்பினன் விறல்வேலோன்.**

[ஆரியன் திருமகன் இவை உரை செய அரசனும் அவை கேட்டு, காரியம் புகல்வது புவி ஆட்சியில் கருத்து உடையவர்க்கு அன்றோ! தூரியம் கறங்கு அமரிடை உடல்விழ, சுரர் உலகு உயிர் எய்த வீரியம் பெறல் எனக்கு இனி பயன் என, விளம்பினன் விறல் வேலோன்.]

**விளக்கம்:-** விறல் வேலோன் - துரியோதனன். நீ சொல்வதான காரியம் (சமாதானம்) புவி ஆளுதலில் எண்ணமுள்ளவர்க்கு அன்றோ! தூரியம் (வாத்தியங்கள்) முழங்கும் போரில் உடல் விழுந்து அழியவும், உயிர் தேவர் உலகு செல்லவும், வீரியம் பெறலே, இனி நான் அடையும் பயன், என்று, துரியோதனன் அசுவத்தாமனுக்குக் கூறினுன், என்பதாம்.

**183.** **முனிம கன்புகல் கட்டுரை மறுத்தபின்**
**முனிவுரு வகைபோருக்(கு)**
**இனிமை கொண்டசொற் பலமொழிந் தவனொடு**
**மிரப்பவ ருள்ளங்கைக்**

**கனியெ னுங்கொடைக் கன்னனைத் தழீஇயவன்**
**கண்ணுகு புனன்மாற்றிப்**
**பனிநெ டுங்குடைப் பார்த்திவ னுவன்றனன்**
**பார்த்தன துயிர்கொள்வான்.**

[முனி மகன் புகல் கட்டுரை மறுத்தபின், முனிவு உருவகை போருக்கு இனிமை கொண்ட சொல் பல மொழிந்து, இரப்பவர் உள்ளங்கை கனி எனும் கொடை கன்னனை தழீஇ, அவன் கண் உகு புனல் மாற்றி, பனிநெடு குடை பார்த்திவன் நுவன்றனன் பார்த்தனது உயிர் கொள்வான்.]

**விளக்கம்:-** பனி நெடுங்குடை பார்த்திவன் - துரியோதனன். முனிமகன் கூறிய உறுதியுடைய வார்த்தையை மறுத்த பின். அவன் கோபங் கொள்ளாதபடி தன் சார்பில் போர் செய்யும் பொருட்டு, இனிய வார்த்தைகள் பல கூறி, இரப்பவர் கைக்குச் சுரங்கம்போல் நிதி வழங்குகின்ற கர்ணனைத் தழுவிக் கொண்டு, புத்திர சோகத்தால் கண் வழிந்த நீரைத் துடைத்து, பார்த்தனது உயிரைக் கவரும்படி துரியோதனன் கேட்டுக் கொண்டான்,— என்பதாம்.

### கர்ணன் தேறிப் போருக்கெழல்

**184. மலைக லங்கினு மாதிரங் கலங்கினும்**
**மாதிரங் களில்விண்ணோர்**
**நிலைக லங்கினு நெடுங்கடல் கலங்கினும்**
**நிலங்கலங் கினுஞ்சேடன்**
**தலைக லங்கினும் பேரவை மூன்றினும்**
**தளர்விலா தவர்கற்ற**
**கலைக லங்கினும் போர்முகத் தென்மனம்**
**கலங்குமோ கலங்காதே.**

[மலை கலங்கினும், மாதிரம் கலங்கினும், மாதிரங்களில் விண்ணோர் நிலை கலங்கினும், நெடுங்கடல் கலங்கினும், நிலம் கலங்கினும், சேடன் தலை கலங்கினும், பேர் அவை மூன்றினும் தளர்வு இலாதவர் கற்ற கலை கலங்கினும், போர் முகத்து என் மனம் கலங்குமோ ! கலங்காதே.]

**விளக்கம்:-** மாதிரம் - திசை. மாதிரங்களில் விண்ணோர் - திக்குக்களிலுள்ள தேவர்கள், அதாவது, அஷ்டதிக் பாலகர். சேடன் - பூமியைத் தாங்கும் ஆதிசேஷன். பேர் அவை மூன்று - உயர்ந்தார், ஒத்தார், தாழ்ந்தார் என்ற புலவர்களைக் கொண்ட

பெரிய சபை. "இப் பெரிய சபையிலுள்ள, யாருக்கும் இளைத்தல் இல்லாத புலவர்களின் கல்வி கலங்கினும், நான் கலங்க மாட்டேன்", என்று, கர்ணன் கூறினன், என்க. கலங்குமோ, கலங்காதே - என் மனம் கலங்குமோ, ஒரு நாளும், எந்த நிலையிலும் கலங்காது. ஏகாரம், தேற்றம். கலங்காதே, என்பதற்கு, "நான் கலங்குவேனோ, என்று நீ கலங்க வேண்டா", என்று துரியோதனனுக்குக் கூறியதாகவும், பொருள் கொள்ளலாம்.

**185.** **என்மகன்றலை யென்னெதிர் துணியவம்**
**பேவிய புருகூதன்**
**தன்மகன்றலை துணிப்பனிக் கணத்திலோர்**
**சாயகந் தனிலென்று**
**மன்மகன்றனக் கிரதமூர் மத்திரன்**
**மகன்றனக் குயர்வேள்வி**
**வின்மகன்றனக் குளமகிழ்ந் துரைத்தனன்**
**வெயிலவன் மகனம்மா.**

[என் மகன் தலை என் எதிர் துணிய அம்பு ஏவிய புருகூதன் தன் மகன் தலை துணிப்பன் இ கணத்தில் ஓர் சாயகந்தனில் என்று, மன்மகன் தனக்கு, இரதம் ஊர் மத்திரன் மகன் தனக்கு, உயர் வேள்வி வில் மகன் தனக்கு உளம் மகிழ்ந்து உரைத்தனன், வெயிலவன் மகன், அம்மா.]

**விளக்கம்:-** புருகூதன் மகன்-இந்திர குமாரனுன விசயன். மன்மகன்-திருதாரட்டிரன் மகனுன துரியோதனன். மத்திரன் மகன்-மத்திர நாட்டு அரச குமாரனுன சல்லியன். உயர் வேள்வி வில் மகன்-உயர்ந்த வேள்வி செய்வதற்குரியவனும் வில்வித்தையில் வல்லவனுமான அசுவத்தாமன். வெயிலோன் மகன்-கர்ணன். என் மகன் தலை துணித்த விசயனைக் கொல்வேன், என்று கர்ணன் துரியோதனன், சல்லியன், அசுவத்தாமன் ஆயவர்க்கு மனமகிழ்ச்சியோடு கூறினன், என்பதாம்.

**186.** **சுரிமுகங்களிற் பேரியங் களிலெழு**
**துவனியாற் பகிரண்டம்**
**நெரியுமென்றய னஞ்சினன் சேனையின்**
**நெருக்கினு லெனைத்துள்ள**
**கிரிகளுஞ்சரிந் திடுமென வஞ்சினன்**
**கிரீசனுங் கிளராழி**
**அரியுமஞ்சினன் றூளியா லலைகடல்**
**அடையவற் றிடுமென்றே.**

[சுரி முகங்களில், பேர் இயங்களில் எழு துவனியால் பகிரண்டம் நெரியும் என்று அயன் அஞ்சினன்; சேனையின் நெருக்கினுல் எனைத்து உள்ள கிரிகளும் சரிந்திடும் என்று அஞ்சினன் கிரீசனும்; கிளர் ஆழி அரியும் அஞ்சினன் தூளியால் அலை கடல் அடைய வற்றிடும் என்றே.]

**விளக்கம்:-** சுரிமுகம்-சுழிந்த முகங்களையுடைய சங்கு. பேர் இயம்-பெரிய பல வகை வாத்தியங்கள். அயன்-பிரும்மா. கிரீசன்-சிவபிரான். அரி-திருமால். சங்குகளிலிருந்தும், முரசு முதலிய வாத்தியங்களிலிருந்தும் எழுந்த ஒலியால் இவ்வண்டத்திற்கு அப்பாலுள்ள அண்டங்கள் எல்லாம் நெருங்கிவிடும் என்று அயன் அஞ்சினுன்; சேனையின் நெருக்கத்தால், எங்கும் உள்ள மலைகள் எல்லாம் சரிந்துவிடும் என்று சிவபிரான் அஞ்சினுன்; விளக்கமுடைய பாற்கடலில் பள்ளி கொள்ளும் திருமால், கிளம்பி எழும் புழுதியால் கடல்கள் எல்லாம் தூர்ந்து போய்விடும், என்று அஞ்சினுன்,—என்பதாம்.

இரு திறத்தார் சேனைகளும் நெருங்கல்

**187. பரியு டன்பரி நெருங்கின நெருங்கின**
**படையுடன் படைமத்தக்**
**கரியு டன்கரி நெருங்கின நெருங்கின**
**கடவுதே ருடன்றேரும்**
**விரிநெ டுங்குடை குடையொடு நெருங்கின**
**விலோதமும் விலோதத்தோ(டு)**
**அரியெ றிந்திட நெருங்கின வாடையும்**
**ஆடையு மலமந்தே.**

[பரியுடன் பரி நெருங்கின, நெருங்கின படையுடன் படை, மத்தம் கரியுடன் கரி நெருங்கின, நெருங்கின கடவு தேருடன் தேரும், விரி நெடு குடை குடையொடு நெருங்கின; விலோதமும் விலோதத்தோடு, அரி எறிந்திட நெருங்கின ஆடையும் ஆடையும் அலமந்து, ஏ.]

**விளக்கம்:-** விலோதம்-கொடி. ஆடை-கொடிச்சீலை. அரி (காற்று) எற்றிட ஆடையும் ஆடையும் அலமந்து (அசைந்து) விலோதமும் விலோதத்தொடு நெருங்கின. நால்வகைச் சேனைகளும், குடை கொடிகளும் நெருங்கின,—என்பதாம்.

**188.** **பரியில் வீரரும் பரியில்வீ ரரும்வயப்**
**படையெறிந் தனர்கொற்றக்**
**கரியில் வீரருங் கரியில்வீ ரருமமர்**
**கடுகினர் காற்றேராம்**
**கிரியில் வீரருங் கிரியில்வீ ரருமெதிர்**
**கிடைத்தனர் பதசாரித்**
**தெரியல் வீரருந் தெரியல்வீ ரருமுடன்**
**செருப்புரிந் தனரன்றே.**

[பரியில் வீரரும் பரியில் வீரரும் வயம் படை எறிந்தனர்; கொற்றம் கரியில் வீரரும் கரியில் வீரரும் அமர்கடுகினர்; கால் தேர் ஆம் கிரியில் வீரரும் கிரியில் வீரரும் எதிர் கிடைத்தனர்; பதசாரி தெரியல் வீரரும் தெரியல் வீரரும் உடன் செரு புரிந்தனர், அன்றே.]

**விளக்கம் :-** பரியில் வீரர்-குதிரை மேல் ஏறிய வீரர். கரியில் வீரர்-யானை மேல் ஏறியுள்ள வீரர். அமர் கடுகினர்-போரில் விரைந்தார்கள். கால் தேர் ஆம் கிரியில் வீரர்-சக்கரங்களை உடைய தேராகிய மலையில் ஏறியுள்ள வீரர். பதசாரி தெரியல் வீரர்-வாகனம் இல்லாத போர் மாலை அணிந்த வீரர். கிடைத்தல்-கிட்டுதல், எதிர்த்தல். அன்றே:ஈற்றசை.

**189.** **எடுத்த வேல்களும் வேல்களு முனைந்தன**
**விலக்குறக் கொடும்பாணம்**
**தொடுத்த சாபமுஞ் சாபமும் வளைந்தன**
**தொடியுடைக் கரசாலத்(து)**
**அடுத்த வாளமும் வாளமும் பொருதன**
**அங்குலி களிற்சுற்றி**
**விடுத்த நேமியு நேமியுந் துணித்தன**
**வீரர்சென் னிகள்வீழ.**

[எடுத்த வேல்களும் வேல்களும் முனைந்தன, இலக்கு உற கொடுபாணம் தொடுத்த சாபமும் சாபமும் வளைந்தன; தொடி உடை கரசாலத்து அடுத்த வாளமும் வாளமும் பொருதன, அங்குலிகளின் சுற்றி விடுத்த நேமியும் நேமியும் துணித்தன வீரர் சென்னிகள் வீழ.]

**விளக்கம் :-** முனைதல்–போர் செய்தல். இலக்கு உற-இலட்சியத்தில் பொருந்தும்படி. தொடி-கையில் அணியும் ஆபரணம். கரசாலம்-கைகளின் கூட்டம், வாளம்-வாள், அங்குலி-விரல், நேமி-சக்கரம்,

190. அறன்ம கன்பெருஞ் சேனையி னிருபரும்
அரவவெங் கொடியாடை
மறன்ம கன்கொடுஞ் சேனையி னிருபரும்
வஞ்சினம் பலகூறித்
திறன்மி குந்ததஞ் சேனையொ டெதிரெதிர்
சென்றுசென் றிடந்தோறும்
உறம லைந்தன ரொருவருக் கொருவர்தோள்
உரமும்வீ ரமுமொத்தார்.

[அறன் மகன் பெரு சேனையில் நிருபரும், அரவம்வெம் கொடி ஆடை மறன் மகன் கொடு சேனையில் நிருபரும் வஞ்சினம் பல கூறி, திறல் மிகுந்த தம் சேனையொடு எதிர் எதிர் சென்று சென்று இடம் தோறும் உற மலைந்தனர் ஒருவருக்கொருவர் தோள் உரமும் வீரமும் ஒத்தார்.]

**விளக்கம் :-** அறன் மகன்-தருமன். மறன் மகன்-துரியோதனன். ஒருவரோடு ஒருவர் புஜபலத்திலும் ஒத்தவர்களாகிய தருமனது சேனை நிருபர்களும், பாம்புக் கொடியனுன துரியோதனனது சேனை நிருபர்களும் வஞ்சினங்கள் பல கூறிக் கொண்டு, வலிமை மிகுந்த தம் சேனையுடன் எதிரில் சென்று போர்க்களம் எங்கும் நன்ருகப் போர் செய்தார்கள்,—என்பதாம்.

கலித்துறை

191. இளைஞ ரும்பெருஞ் சேனையு மிருபுடை நடக்கக்
கிளைஞர் யாவரு நேமியங் கிரியெனச் சூழ
விளையும் வெஞ்சின வீமன்முன் போதர விசயன்
வளைநெ டுஞ்சிலை கணைமழை பொழிந்திட வந்தான்.

**விளக்கம் :-** இளைஞர்-நகுல சகாதேவர். கிளைஞர்-பந்துக்கள். நேமிஅம்கிரி-சக்கரவாளகிரி. இளைஞரும் சேனையும் இருபுறங்களில் வரவும், உறவினர் யாவரும் சக்கரவாளகிரி போல் சுற்றிக் கொண்டு வரவும், வீமன் முன்னே செல்லவும், கணை மழை பொழிந்திட விசயன் களம் வந்தான்,—என்பதாம்.

192. கிரிசன் மைந்தனுங் கிருபனுங் கிருதவன் மாவும்
வரிபொ லங்கழற் சகுனியு முதலிய மறவோர்
எரியும் வெங்கனற் கண்ணின ரெயிலெனச் சூழத்
தெரியும் வாளிவுன் சிலையுடைக் கன்னனுஞ் சென்ருன்.

**விளக்கம்:-** கிரிசன் மைந்தன்-சிவபுத்திரனுன அசுவத் தாமன். கிருபன், கிருதவன்மன், சகுனி முதலிய வீரர்கள், எரி கின்ற கனல் போன்ற கண்ணினராய் மதிலைப்போல் சூழ்ந்துவரக் கன்னன் (விசயன்) எதிரில் சென்ருன்,—என்பதாம்.

விசயனும் கர்ணனும் பொரல்

**193.** **மல்வ ளைத்ததோள் வலியர்கள் வலனுறத் தத்தம்**
**வில்வ ளைத்தனர் விசையுடன் சிலீமுகந் திகிரிக்**
**கல்வ ளைத்தபார் தனக்கிடு காவணம் போலச்**
**சொல்வ ளைத்திலர் தொடுத்தனர் தும்பையந் தொடையார்.**

[மல் வளைத்த தோள் வலியர்கள் வலன் உற தம்தம் வில் வளைத்தனர் விசையுடன் சிலீமுகம், திகிரி கல் வளைத்த பார் தனக்கு இடு காவணம் போல, சொல் வளைத்திலர், தொடுத்தனர் தும்பை அம் தொடையார்.]

**விளக்கம்:-** தும்பை அம் தொடையார் மல் வளைத்த தோள் வலியர்கள், வலன் உற தம்தம் வில் வளைத்தனர், சொல் வளைத் திலர், திகிரி கல் வளைத்த பார் தனக்கு இடு காவணம் போல சிலீமுகம் விசையுடன் தொடுத்தனர்,—என்பது அன்வயம்.

அழகிய தும்பை மாலை அணிந்தவர்களான, மற்போர்ப் பயிற்சி யால் வலிமை கொண்ட தோள்களை உடையவர்களான கர்ணனும் விசயனும், வலிமை பொருந்தத் தம் வில்லை வளைத்து, சொல் ஒன்றும் பேசாமல், சக்ரவாளகிரியினுல் சூழப்பட்ட பூமிக்கு மேலே போடப்பட்ட பந்தலைப்போல் அம்புகளை விசையுடன் பிரயோகித் தனர்,—என்பதாம். திகிரிக் கல்—சக்கரவாளகிரி.

வேறு

**194.** **மருவ ருஞ்சுருதி கூறுநிலை நாலும் வழுவா**
**திருவ ருஞ்சிலைவ ணக்கியது மெய்த விரகும்**
**ஒருவ ருஞ்சிறிது ணர்ந்திலரு காந்த மெனவே**
**வெருவ ருஞ்செயலில் விஞ்சினர்கள் விஞ்சை யருமே.**

[மருவு அரு சுருதி கூறும் நிலை நாலும் வழுவாது இருவரும் சிலை வணக்கியதும், எய்த விரகும், ஒருவரும் சிறிது உணர்த்திலர்; உகாந்தம் எனவே வெருவரும் செயலில் விஞ்சினர்கள் விஞ்சை யரும், ஏ.]

**விள்க்கம்:-** கர்ணார்ச்சுனர் ஆகிய இருவரும், பொருந்துவதற்கு அல்லது கற்றற்கு அரிய தனுர் வேதம் கூறும் நால் வகை நிலைகளும் தவருமல் நின்று, வில்லை வளைத்ததும், அம்பு செலுத்திய சாமர்த்தியமும் எவரும் சிறிதும் அறிந்தாரில்லை; வானுலகிலுள்ள வித்யாதரர்கள் யுக முடியும் காலமோ என்று எண்ணி அஞ்சும் செயலில் மிகுந்தவர்கள் ஆனார்கள்,—என்பது பொருள்.

**195. ஒன்ருே டொன்றுமுனை யோடுமுனை யுற்றுற விழும்
ஒன்ருே டொன்றுபிள வோடவிசை யோடு புதையும்
ஒன்ருே டொன்றுதுணி பட்டிடவொ டிக்கு முடனே
ஒன்ருே டொன்றிறகு கவ்வுமெதி ரோடு கணையே.**

[ஒன்ருேடு ஒன்று முனையோடு முனை உற்று உற விழும், ஒன்ருேடு ஒன்று பிளவு ஓட விசையொடு புதையும், ஒன்ருே டொன்று துணிபட்டிட ஒடிக்கும், உடனே ஒன்ருேடு ஒன்று இறகு கவ்வும், எதிர்ஒடு கணையே.]

**விளக்கம் :-** எதிரே செல்லுகின்ற அம்புகள், ஒன்ருே டொன்று முனையோடு முனை பொருந்தி மிகுதியாகக் கீழே விழும்; ஒன்ருேடொன்று பிளவுபடும்படி வேகமாகத் தாக்கும்; ஒன்ருே டொன்று துண்டாகும்படி ஒடிக்கும்; ஒன்ருேடொன்று இறகுகளைக் கவ்வும், அதாவது சிதைக்கும், - என்பது பொருள்.

**196. இடம்பு ரிந்திடில்வ லம்புரியு மெண்ணின் முறையால்
வலம்பு ரிந்திடிலி டம்புரியு மண்ட லமுமாய்
நடம்பு ரிந்துபவு ரிக்கதிந டத்து மெதிரே
சலம்பு ரிந்ததிர முட்டுமிரு சந்த னமுமே.**

[இடம் புரிந்திடில் வலம்புரியும், எண்ணின் முறையால் வலம் புரிந்திடில் இடம்புரியும், மண்டலமும் ஆய், நடம்புரிந்து பவுரி கதி நடத்தும் எதிரே, சலமபுரிந்து அதிரமுட்டும் இரு சந்தனமும், ஏ.]

**விளக்கம் :-** அசைதலைச் செய்துகொண்டு அதிர்ச்சியுண்டாகும்படி (ஒன்றையொன்று) தாக்குகின்ற இரண்டு தேர்களும், எண்ணுங்கால் முறையே (ஒன்று) இடம்வரின் (மற்று) வலம் வரும்; வலம்வரில், இடம்வரும். (இவ்வாறன்றி) அவை வட்டமாகவும் சுற்றிவருதலாய், கூத்தாடிக்கொண்டு, சுழலுதலாகிய பவுரி என்ற கதியை நடத்தும். பவுரி நடத்தல் - சுழல்தல், சுற்றிவரல். சந்தனம் - தேர். சலம்புரிதல் - அசைதலைச் செய்தல்,

வி.பா. 3—47

197. ஆசு போமிவுளி மாகடவி யாழி யிரதம்
மூசு போரிலொரு வர்க்கொருவர் முந்த விடலால்
வாசு தேவனையு மத்திரம கீபதி யையும்
தேசு வேறுதெரி கிற்றிலர்க டேவர் களுமே.

[ஆசுபோம் இவுளிமா கடவி ஆழி இரதம் மூசு போரில் ஒரு வர்க்கு ஒருவர் முந்தவிடலால், வாசுதேவனையும் மத்திர மகீ பதியையும், தேசு வேறு தெரிகிற்றிலர்கள் தேவர்களும், ஏ.]

**விளக்கம்:-** ஆசுபோம் இவுளிமா - குற்றம் நீங்கிய அதாவது சிறந்த குதிரை. மூசுபோர் - கடுமை மிகுந்த போர். தேசு - விளக்கமுடைய தோற்றம். போரில் ஒருவரை ஒருவர் முந்தும்படி செலுத்தலால், தேவர்களாலும் கண்ணனையும் சல்லியனையும் தோற்றத்தால் வேறு பிரித்துக் காணமுடியவில்லை, என்பதாம்.

198. மறமு மொத்தவழு வற்றசுழி யொத்த வலிகூர்
புறமு மொத்தகதி பற்பலவு மொத்த புகல்வான்
நிறமு மொத்தவுய ரம்பருமை நீள மெனுமெய்த்
திறமு மொத்தவிரு தேரில்வரு திண்ப ரியுமே.

[மறமும் ஒத்த, வழுஅற்ற ஒத்த, வலிகூர் புறமும் ஒத்த, கதி பல் பலவும் ஒத்த, புகல்வான் நிறமும் ஒத்த, உயரம்பருமை நீளம் எனும் மெய் திறமும் ஒத்த இரு தேரில் வரு திண் பரியும், ஏ.]

**விளக்கம் :-** (இரு வீரர்களின்) இரு தேர்களிலும் பூட்டப் பெற்ற குதிரைகள் வலிமை, குற்றமற்ற சுழி, வலிய முதுகு, பல வகைப் பட்டகதி, சிறப்பித்துக் கூறப்படுகின்ற சிறந்த அல்லது பிரகாசமுடைய நிறம், உயரம், பருமன், நீளம் என்ற உடலின் நலம் ஆயவற்றுல் ஒத்தன, - என்பதாம்.

199. நிலையி ரண்டிலுற நின்றநிம லர்க்கு நிகர்வோர்
மலையி ரண்டினைவ ளைத்தெதிர்ம லைந்த தெனவே
அலையி ரண்டெனவ திர்ந்துபொரு மவ்வி ருவர்கைச்
சிலையி ரண்டுநிமி ராதுகணை சிந்தி னர்களே.

[நிலை இரண்டில் உற நின்ற நிமலர்க்கு நிகர்வோர், மலை இரண்டினை வளைத்து எதிர் மலைந்தது எனவே, அலை இரண்டு என அதிர்ந்து பொரும் அ இருவர் கை, சிலை இரண்டும் நிமிராது கணை சிந்தினர்கள், ஏ.]

**விளக்கம் :-** நிமலர் - திருமால், சிவபிரான். தங்களுக்குரிய இரு நிலைகளில் (வடிவங்களில்) பொருந்த நின்ற நிமலர்க்கு நிக ரானவர்களான, இரண்டு கடல்கள்போல் ஒலி செய்து போர் செய்

கின்ற கர்ணார்ச்சுனர்களாகிய இருவீரரும், இரண்டு மலைகளை வில்லாக வளைத்துக்கொண்டு போர்செய்வதுபோல, கையில் பற்றிய வில்கள் இரண்டும் நிமிராமல் கணைகளைச் சிந்தினர், - என்பதாம்.

தேவர்களின் தூண்டுதலின் மேல் இவ்விரு மூர்த்திகளும் பலப்பரிட்சை செய்யப் பொருதனர், என்ற வரலாற்றை இராமாயணத்தில் காண்க.

**200.** **தேவ தத்தமுமு ழக்கியுயர் தேவர் பலரால்**
**ஆவ மெத்தும்வகை பெற்றபல வம்பு தெரியா**
**மூவர் தத்தம்வடி வாமுதல்வன் மெய்ப்பு தல்வன்மேல்**
**பூவின் மொய்த்தவறு காலினிரை போல விடவே.**

[தேவதத்தமும் முழக்கி உயர்தேவர் பலரால் ஆவம் மெத்தும் வகை பெற்ற பல அம்பு தெரியா, மூவர் தம்தம் வடிவு ஆம் முதல்வன் மெய் புதல்வன்மேல், பூவின் மொய்த்த அறுகாலின் நிரைபோலவிட, ஏ.]

**விளக்கம் :-** தேவதத்தம் - அருச்சுனனது சங்கம். மெத்துதல் - நிரப்புதல். ஆவம் மெத்தும் வகை அம்பருத்தூணி நிரம்பும்படி. மூவர்தத்தம் வடிவு ஆம் முதல்வன்-முச்சுடர்களின் சொரூபியாகிய சூரியன்; (அவன்) மெய்ப்புதல்வன் - கர்ணன். அறுகாலின் நிரை - வண்டுகளின் கூட்டம். விசயன் சங்கநாதம் செய்து கொண்டு தேவர் பலரால் தூணிரம் நிரம்பும்படி கொடுக்கப்பெற்ற அநேக பாணங்களை, ஆய்ந்து எடுத்துக் கர்ணன்மேல், பூவில் மொய்க்கின்ற வண்டுகளைப் போல், மொய்க்கும்படி ஏவ, (தொடரும்) என்பதாம்.

**201.** **பரிதி யன்பொடுவ ழங்கியப ராப ரமெனும்**
**பெருவ லம்புரிகு றித்துவிற லங்கர் பெருமான்**
**வரிநெ டுஞ்சிலைவ லாரிதிரு மைந்தன் விடுதிண்**
**சரம டங்கவவர் தந்தசர மெய்து தறியா.**

[பரிதி அன்பொடு வழங்கிய பராபரம் எனும் பெரு வலம்புரி குறித்து விறல் அங்கர் பெருமான், வரி நெடுசிலை வலாரி திருமைந்தன் விடு திண் சரம் அடங்க, அவர் தந்த சரம் எய்து தறியா, - தொடரும்.]

**விளக்கம் :-** பராபரம் எனும் வலம்புரி - பராபரம் என்ற பெயரையுடைய சங்கு; இது, கர்ணனுக்குச் சூரியனால் கொடுக்கப்பட்டது. குறித்து - ஊதி. வலாரி - இந்திரன். விசயன் ஏவிய வலிய கணைகளைக் கர்ணன் சூரியபகவான் கொடுத்தருளிய அம்பு

களால் துணித்து, - (அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும்.) என்பதாம்.

## கர்ணன் சரக்கூடம் அமைக்கக் கண்ணனும் மாயையால் அமைத்தல்

202. வயக்க திர்க்கணைவி தங்கள்கொடு மாயன் விடுதேர்
இயக்க மற்றிடவி யற்றினனோர் கூட மிவனும்
தியக்க முற்றிடம யக்கிநெடு மால்செய் விரகால்
உயக்க மிக்கசர கூடமுள தாய தவனும்.

[வய கதிர் கணை விதங்கள் கொடு மாயன் விடு தேர் இயக்கம் அற்றிட இயற்றினன் ஓர் கூடம் இவனும்; தியக்கம் உற்றிட மயக்கி நெடுமால் செய் விரகால் உயக்கம் மிக்க சரகூடம் உளது ஆயது அவனும்.]

**விளக்கம் :-** இவனும் (கர்ணனும்) தனது வலிய சரங்களால் கண்ணன் விடும் தேர் இயக்கம் அறும்படி சரங்களால் ஒருகூடம் (மறைவு) கட்டினன்; கண்ணனும் கர்ணனை மயங்கும்படி செய்து, மேலும் அவன் செய்த மாயத்தால் துன்பம் மிகுதியாகச் செய்ய வல்ல சர கூடமும் உளதாயது - என்பதாம். உயக்கம் - துன்பம், வருத்தம், இடையூறு.

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

203. மாயா சரகூ டமறைத் திடலால்
வலையுட் படுவீ ரமடங் கலெனச்
சாயா பதிமைந் தனுநின் றனன்மெய்
தளர்வுற் றனனின் றதனஞ் சயனும்
ஏயா விதுவென் கொன்முனைந் துபொரா
தெழுதோ வியமா யினையென் றுவிறல்
காயா மலர்வண் ணன்விளம் புதலும்
கவிவெங் கொடியோ னிருகை குவியா.

[மாயா சரகூடம் மறைத்திடலால் வலை உள்படு வீரம் மடங்கல் என, சாயாபதி மைந்தனும் நின்றனன்; மெய்தளர்வுற்றனன் நின்ற தனஞ்சயனும்; "ஏயா இது என் கொல்? முனைந்து பொராது எழுது ஓவியம் ஆயினை," என்று விறல் காயா மலர்வண்ணன் விளம்புதலும், கவி வெம் கொடியோன் இரு கை குவியா, - தொடரும்.]

**விளக்கம் :-** கண்ணனது மாயையால் உண்டான சரகூடம் மறைத்துவிடவே, சாயாபதி (சூரியன்) மைந்தனை கர்ணனும் வலையினுட்பட்ட சிங்கம் எனச் செயலற்று நின்றனன்; அவனுக்கு எதிரே நின்ற தனஞ்சயனும் தளர்ந்து செயலற்றவனானன்; (அது நோக்கி) கண்ணன், ''ஆண்மையோடு பொருந்தாத இது என்ன காரணம்? விரைந்து பொராமல் எழுது ஓவியம்போல் நின்றுவிட்டாய்,'' என்னலும், குரங்கைக் கொடியிலே கொண்ட விசயன், கண்ணனைக் கைகுவித்து வணங்கி, - (அடுத்த செய்யுளோடு தொடரும்) என்பதாம்.

**204.** **வன்போர் புரிவெங் கணையங் கர்பிரான்**
**மறனு லுயர்பே ரறனூர் குமரன்**
**தன்போ லவிளங் கினனு தலினென்**
**தனுவுங் குனியா துசரங் கள்செலா**
**அன்போ டியதுள் ளமெனக் கினிமேல்**
**அவனே டமர்செய் தலுமிங் கரிதால்**
**வென்போ குவனென் றலுமே யிறைவன்**
**விசையோ டிரதத் தினைமீ ளவிடா.**

[''வல்போர் புரி வெம்கணை அங்கர் பிரான் மறனல் உயர் பேர் அறனூர் குமரன் தன்போல் விளங்கினன்; ஆதலின் என் தனுவும் குனியாது, சரங்கள் செலா, அன்பு ஓடியது உள்ளம். எனக்கு இனிமேல் அவனேடு அமர் செய்தலும் அரிது (ஆல்), வென் போகுவன்,'' என்றலுமே, இறைவன் விசையோடு இரதத்தினை மீளவிடா, - தொடரும்.]

**விளக்கம் :-** ''அங்கர் பிரான் தருமனைப்போல் தோன்றுவதால், இனி அவனேடு போர் செய்ய முடியாது; திரும்பிச் செல்வேன்,'' என்று விசயன் கூறலும், கண்ணன் தேரைத் திருப்பிச் செலுத்தினன், - என்பதாம்.

தருமன் விசயனது வில்லைப் பழித்தல்

**205.** **முகில்வண் ணனும்வா சவன்மா மகனும்**
**முரசக் கொடிமன் னவன்முன் புசெலப்**
**பகலின் பதிமைந் தனையின் னமுமிப்**
**பகல்சாய் வதன்முன் புபடுத் திலையால்**
**இகலெங் ஙன்முடித் திடுநின் கையில்வில்**
**இதுவென் னவிலென் றுதிருத் தமையன்**
**புகலுஞ் சொலவன் செவியிற் புகவே**
**புண்மே லயிலுற் றதுபோன் றதுவே.**

[முகில் வண்ணனும் வாசவன் மாமகனும் முரசம் கொடி மன்னவன் முன்பு செல, பகலின்பதி மைந்தனை இன்னமும் இ பகல் சாய்வதன் முன் படுத்திலை (ஆல்) இகல் எங்ஙன் முடித்திடும் நின் கையில் வில்? இது என்னவில்? என்று திருதமையன் புகலும் சொல், அவன் செவியில் புகவே, புண்மேல் அயில் உற்றது போன்றது. ஏ.]

**விளக்கம் :-** கண்ணனும் விசயனும் தருமன் முன்னே செல்ல (அவன்) "கர்ணனை இன்னமும் இப்பகல் சாயுமுன் அழித்தாயில்லை, உன் கை வில் பகையை எவ்வாறு முடிக்கும்? இது என்ன வில்" என்று தமையன் சொன்ன சொல், அவன் (விசயன்) செவியில் படலும், புண்ணில் வேல் பொருந்தியது போன்றது, - என்பதாம்.

**206. கூரார் முனைவா ளிகொளிச் சிலையைக்**
**குறையென் னெதிர் கூறினரம் புவிமேல்**
**யாரா யினுமா விசெகுத் திடுமால்**
**இதுவஞ் சினமா தலினிப் பொழுதே**
**தாரார் புயவென் றியுதிட் டிரனைத்**
**தலைகொள் வனெனத் தனுவுங் குனியா**
**வாரா முன்விலக் கியருச் சுனனை**
**வருகென் றுதழீஇ மதுசூ தனனே.**

[கூர் ஆர் முனை வாளி கொள் இ சிலையை குறை என் எதிர் கூறினர் அம் புவியில் யார் ஆயினும் ஆவி செகுத்திடும் (ஆல்); இது வஞ்சினம் ஆதலின் இப்பொழுதே, தார் ஆர் புயம் வென்றி உதிட்டிரனை தலை கொள்வன், என, தனுவும் குனியா வாராமுன், விலக்கி அருச்சுனனை வருக என்று, தழுவி, மதுசூதனன், ஏ.]

**விளக்கம்:-** "கூரிய அம்புகளைத் தன்னிடத்தே கொண்ட இந்த வில்லை அம்புவியில் என் எதிரே குறை கூறினவர், அவர் யாவரேயாயினும், அவர் உயிரை, அது அழித்துவிடும்; இது என் சபதம்; ஆதலின் இப்பொழுதே தருமனது உயிரைக் கொள்வேன்" என்று கூறி வில்லையும் வளைத்துக் கொண்டு (விசயன்) வருமுன், கண்ணன் அவனைத் தடுத்து, 'வருக' என்று அழைத்து அவனைத் தழுவிக் கொண்டு—(தொடரும்), என்பதாம்.

பெரியோரைப் பழித்தலே போதும்
என்று கண்ணன் கூறல்

207. குரவோர் களைநீ யெனினுங் கொலையிற்
கொடிதென் றுயர்கேள் வியர்கூ றுவரால்
உரவோ னையுமம் முறைகொன் றதனே
டொக்குஞ் சிலபுன் சொலுரைத் திடுவாய்
இரவோர் தமதின் முகம்வண் மையினல்
இதயத் தொடுகண் டுமகிழ்ந் துபெரும்
பரவோ தநெடுங் கடல்சூழ் புவியிற்
பரிதா பமொழித் துபனிக் குடையோய்!

[குரவோர்களை நீ எனினும் கொலையின் கொடிது என்று உயர் கேள்வியர் கூறுவர், ஆல்; உரவோனையும் அ முறை கொன்றதனேடு ஒக்கும் சில புன்சொல் உரைத்திடுவாய், இரவோர் தமது இன்முகம் வண்மையினல் இதயத்தொடு கண்டு மகிழ்ந்து பெரு பரவு ஓதம் நெடுங்கடல் சூழ் புவியில் பரிதாபம் ஒழித்த பனி குடையோய்.]

**விளக்கம்:-** யாசகர்களது இல்லாமை தோன்றுகின்ற முகத்தை வண்மைக் குணத்தால் நல்ல உள்ளத்தோடு கண்டு மகிழ்ந்து, பெரிய பரவியுள்ள அலைகளை உடைய பெரிய கடல் சூழ்ந்த உலகில் (எளியவர்களின் இல்லாமையின் பயனுகும்) வருத்தமாகிய வெப்பத்தைப் போக்கும் பனிக்குடையாய், என்று கண்ணன் விசயனை விளித்து, "பெரியோர்களை நீ என்று கூறினலும், அது கொல்லுதலைக் காட்டிலும் கொடியது, என்று, கேள்வியால் உயர்ந்த பெரியோர் கூறுவர்; அம்முறைப்படி நீயும் உரவோனுகிய தருமனைக் கொன்றதனேடு ஒக்கும் சில இகழ்ச்சியுடைய சொற்களைக் கூறுவாயாக"—என்று (கண்ணன்) கூறினன், என்பது பொருள்.

அரசன், குரு, தாய், தந்தை, தமையன், ஆயவர் ஐம்பெருங் குரவர். உரவோன்-மனோபலம், தேகபலம், ஆயுதபலம், தெய்வ பலம், ஆகிய நலங்கள் வாய்ந்த தருமன்.

விசயன் இகழத் தருமன் கான் செல்வேனெனல்

**208.** **என்று வுரைசெய் தலுமஞ் சியிளைத்**
**திருகை கொடிறைஞ் சிநரா திபனைத்**
**தன்று விசையா தனசிற் சிலசொல்**
**தளர்வோ டெதிர்நின் றுதனஞ் சயனும்**
**சொன்று னறன்மா மகனோ ருரையும்**
**சொல்லா மலினித் துறவெய் துவனென்(று)**
**உன்று விரைவோ டிரதத் தினிழிந்**
**துயர்கா னடைவா னுணர்வுற் றனனே.**

[என்று உரை செய்தலும், அஞ்சி இளைத்து இருகை கொடு இறைஞ்சி, தராதிபனை, தன் நா இசையாதன சிற்சில் சொல் தளர்வோடு எதிர் நின்று தனஞ்சயனும் சொன்னான்; அறன் மா மகன் ஓர் உரையும் சொல்லாமல், இனி துறவு எய்துவன் என்று உன்று, விரைவோடு இரதத்தின் இழிந்து, உயர் கான் அடைவான் உணர்வு உற்றனன்.]

**விளக்கம்:-** என்று கண்ணன் கூறலும் விசயன், அஞ்சி, சோர்வுற்று, தருமனைத் தனது இரு கைகளாலும் தொழுது, அவன் எதிர் நின்று தளர்ச்சியுடனே, நாவினால் சொல்லத்தகாதன வாகிய சிற்சில பழிப்புடைய வார்த்தைகளைச் சொன்னான்; தருமன் ஒரு வார்த்தையும் சொல்லாமல், 'துறவை மேற் கொள் வேன்' என்று எண்ணி தேரினின்று விரைவாக இறங்கிக் கானகம் செல்லுதலை எண்ணுபவனான்,—என்பதாம்.

கிருஷ்ணார்ச்சுனர் சமாதானப் படுத்துதல்

**209.** **நரநா ரணர்சென் றுதரா பதிதாள்**
**நளினத் தில்விழுந் தொருநா யகமா**
**வரனு மவனைப் புனைதேர் மிசையே**
**வைத்துத் துனிமா றிடுமா றுரைசெய்(து)**
**அரனு மெனநீ யணிநின் றிடயாம்**
**அனலம் பெனவோ டியிமைப் பிடைமுப்**
**புரமே யகமா யதயித் தியரிற்**
**பொருவோ னுயிர்கைக் கொடுபோ துவமே.**

நரநாரணர் சென்று தராபதி தாள் நளினத்தில் விழுந்து, ஒரு நாயகமா வரன் ஆம் அவனை புனை தேர்மிசையே வைத்து, துனி மாறிடும் ஆறு உரை செய்து, அரன் ஆம் என நீ அணி நின்றிட, யாம் அனல் அம்பு என ஓடி இமைப்பு இடை, முப்புரமே அகம் ஆய தயித்தியரின் பொருவோன் உயிர் கைக்கொடு போதுவம், ஏ.]

**விளக்கம்:-** நரநாரணர்களாகிய கிருஷ்ணார்ச்சுனர்கள் தரு மனது அடியில் விழுந்து வணங்கி, யாவர்க்கும் ஒப்பற்ற நாய கனுய் வர இருக்கின்ற அத் தருமனைத் தேரின் மேல் இருக்கச் செய்து, அவனது கோபம் மாறும்படி சில சொல்லி, ''நீ சிவ பிரான் போல அணியில் நின்று கொண்டிருக்க, நாங்கள் அனல் அம்பு போல் இமைப் பொழுதில் ஓடிச் சென்று, முப்புரத்தை இட மாகக் கொண்ட அசுரர்கள் போல் போர் செய்யும் கர்ணனது உயிரைக் கவர்ந்து கொண்டு வருவோம்'' என்று கூறினர்கள்,— என்பதாம்.

**210.** **விடைகொண் டனமென் றுவணங் கிநிலா**
**மதியம் பகலே யொளிவிட் டதெனக்**
**குடைகொண் டுநிழற் றவிரண் டருகும்**
**குளிர்சா மரமா ருதமா றுபொரப்**
**புடைகொண் டுமகீ பர்திரண் டுவரப்**
**புனைதேர் மதமா புரவித் திரள்கைப்**
**படைகொண் டபதா கினிமுன் பின்வரும்**
**படியே கினர்மா தவபற் குனரே.**

[விடை கொண்டனம், என்று வணங்கி, நிலா மதியம் பகலே ஒளிவிட்டது என, குடை கொண்டு நிழற்ற, இரண்டு அருகும் குளிர் சாமரம் மாருதம் மாறு பொர, புடை கொண்டு மகீபர் திரண்டுவர, புனைதேர் மதமா புரவி திரள்கை படை கொண்ட பதாகினி முன் பின் வரும்படி ஏகினர் மாதவ பற்குனர், ஏ.]

**விளக்கம்:-** விடை கொண்டோம் என்று (தருமனை) வணங்கி, பூர்ண சந்திரன் பகலிலே நிலவொளி வீசியதுபோலக் கொற்ற வெண்குடை நிழல் செய்ய, இருமருங்கும் சாமரைகள் குளிர்ந்த காற்றை மாறி மாறி வீச, அரசர்கள் புடை சூழ்ந்து கொண்டு வரவும், தேர்களும் யானைகளும் குதிரைகளும், திரண்ட கையில் ஆயுதங்களைக் கொண்ட காலாள் படையும் ஆகிய அங்கங்களைக் கொண்ட பதாகினி (சேனை) முன்னும் பின்னும் வரவும் கிருஷ்ணார்ச்சுனர் சென்றனர்,—என்பது பொருள். குடை கொண்டு, என்பதிலுள்ள, **கொண்டு,** அசை.

**211 வெங்கோ தைநெடுங் சிலையின் சிறுநாண்**
**விசையோ தையும்வெவ் விருதோ தையும்வெண்**
**சங்கோ தையும்வண் பணையோ தையுநால்**
**வகையா கியதா னைநெடுங் கடலின்**
**பொங்கோ தையுமண் டமுடைந் திடவப்**
**புறமுற் றகலா துசெவிப் படமற்(று)**
**இங்கோ தையெழுந் ததறிந் திலரால்**
**இமையா விழியோர் முதல்யா வருமே.**

[வெம் கோதை நெடு சிலையின் சிறு நாண் விசை ஓதையும், வெம் விருது ஓதையும் வெண் சங்கு ஓதையும், வண் பணை ஓதையும், நால்வகை ஆகிய தானை நெடு கடலின் பொங்கு ஓதையும் அண்டம் உடைந்திட, அப்புறம் உற்று அகலாது செவி பட, (மற்று) இங்கு ஓதை எழுந்தது, என்று அறிந்திலர் (ஆல்), இமையா விழியோர் முதல் யாவரும், ஏ.]

**விளக்கம்:-** கோதை – பூமாலை. ஓதை - ஒலி. பணை பறை. பொங்கு ஓதை - மிகுகின்ற ஒலி. இமையா விழியோர் - தேவர். போர்க்களத்தில் எழுந்த பேரொலியை தேவர் முதலிய எல்லோரும், இப் போர்க் களத்தே எழுந்த ஒலி என்று அறிந்திலர்; அதாவது, வேறு என்ன ஒலியோ, என்று அயிர்த்து, அஞ்சினர், என்றபடி. விருது - வெற்றிக்கு அடையாளமான சின்னங்கள். விருது ஓதை, என்பதற்கு, மாகதர் விருது கூறுகின்ற ஒலி, என்றும் பொருள் கொள்ளலாம்.

## கர்ணார்ச்சுனர் கடும் போர்

**212. தாமங் களின்வைப் பருள்கா ளையுமச்**
**சரகூ டமறுத் தணிதா னையொடும்**
**வீமன் றனெடும் பொருகின் றமைதன்**
**விழிகண் டுகளித் திடவில் விசயன்**
**காமன் றனைநீ றெழவென் றநுதற்**
**கண்போ லெரிகின் றகருத் துடனே**
**மாமந் தரவெற் பனதேர் கடவும்**
**வலவன் றனெடா கவமன் னினனே.**

[தாமங்களின் வைப்பு அருள் காளையும் அ சரகூடம் அறுத்து, அணி தானையொடும் வீமன் தனெடும் பொருகின்றமை தன் விழி கண்டு களித்திட, வில் விசயன் காமன்தனை நீறு எழ வென்ற நுதல் கண்போல் எரிகின்ற கருத்துடனே, மா மந்தர வெற்பு அன தேர் கடவும் வலவன் தனெடு ஆகவம் மன்னினன், ஏ.]

**விளக்கம்:-** தாமங்களின் வைப்பு - ஒளிகளின் இருப்பிடமான சூரியன். விசயன், கர்ணன் மாயா சர கூடத்தை அறுத்துச் சேனையொடும் வீமனோடும் போர் செய்கின்றதைக் கண்டு, களித்து, மன்மதனை நீருக்கிய சிவபெருமானது நெற்றிக்கண் போல் எரிகின்ற மனத்தோடு, மந்தர மலை போன்ற தேரைக் கண்ணன் செலுத்தப் போர்க் களம் சேர்ந்தான், என்பதாம்.

**213.** **அங்கிக் கதிர்தந்த கொடுஞ் சிலைநாண்**
**அரவக் கணையஞ் சவெறிந் துமிகச்**
**சங்கித் தடலங் கியளித் ததனிச்**
**சரமே வினன்வந் துதனஞ் சயனும்**
**பொங்கிக் கனல்சா லமெழுந் ததெனப்**
**புகையும் படிபோ யகல்வா னதியின்**
**கங்கிற் பொறிவிட் டதுதா ரகையின்**
**கணமென் னவெழுந் ததுகாய் கனலே.**

[அங்கி கதிர் தந்த கொடு சிலை நாண், அரவம் கணை அஞ்ச எறிந்து மிக சங்கித்து, அடல் அங்கி அளித்த தனி சரம் ஏவினன் வந்து தனஞ்சயனும்; பொங்கி கனல் சாலம் எழுந்தது என, புகையும்படி போய் அகல் வான் நதியின் கங்கில் பொறி விட்டது தாரகையின் கணம் என்ன எழுந்தது காய் கனல், ஏ.]

**விளக்கம்:-** தனஞ்சயனும் வந்து, அங்கி கதிர் தந்த கொடுஞ் சிலை நாண், (கர்ணனது) அரவம் கணை (இடியோசையோ என்று) மிக சங்கித்து அஞ்ச எறிந்து, அடல் அங்கி அளித்த தனி சரம் ஏவினன்; (அதனின்றும்) எழுந்தது (ஆகிய) காய்கனல், கனல் சாலம் பொங்கி எழுந்தது என, புகையும்படி போய் அகல் வான் நதியின் கங்கில் தாரகை கணம் என்ன பொறி விட்டது,—என்பது அன்வயம்.

அங்கிக் கதிர் - அக்னி என்ற சுடர். எறிந்து - தெறித்து. கனல் சாலம் - நெருப்பின் கூட்டம். வான் நதி-ஆகாச கங்கை. கங்கு - கரை. காய் கனல் - எரிகின்ற நெருப்பு. விசயன், அக்னி பகவான் தந்த அக்னிக் கணையை ஏவினான்; அதிலிருந்து உண்டான காய் கனல், பிரளய காலத்து நெருப்பின் கூட்டம் பொங்கி எழுந்ததுபோல, புகையுண்டாகும்படி மேல் எழுந்தது போல், ஆகாச கங்கையின் கரையில் நட்சத்திரக் கூட்டங்களைப் போல், தீப்பொறிகளைச் சிந்தியது,—என்பதாம்.

214. இணையின் றியெழுந் துசுடுங் கனலால்
இரதங் களும்வேன் முதலெப் படையும்
கணையுஞ் சிலையுங் கவனப் பரியும்
கரியுங் கரியா னமைகண் டியமன்
துணைவன் றுணைவா குவளர்ந் திடவும்
துணைவார் புருவங் கடுடித் திடவும்
பணைவெங் குரல்கன் றிமுழங் கிடவும்
பவ்வத் தரசன் றருபா ணமெடா.

[இணை இன்றி எழுந்து சுடும் கனலால் இரதங்களும் வேல் முதல் எ படையும், கணையும் சிலையும், கவனம் பரியும் கரியும் கரி ஆனமை கண்டு, இயமன் துணைவன் துணைவாகு வளர்ந்திட வும், துணைவார் புருவங்கள் துடித்திடவும், பணைவெம் குரல் கன்றி முழங்கிடவும், பவ்வத்து அரசன் தருபாணம் எடா,— தொடரும்.]

**விளக்கம் :-** பணை - வாத்தியங்கள். பவ்வத்து அரசன் - சமுத்திர ராசனுன வருணன். எமன், சூர்யபுத்திரனுதலால், கர்ணன், இயமன் துணைவன், எனப்பட்டான். இணை இல்லாமல் மேலும் மேலும் வளர்ந்து எரிகின்ற (கணையின்) கனலால், தேர் களும், வேல் முதலிய ஆயுதங்களும், அம்புகளும் வில்களும், குதிரை யானைகளும் கரியாய்ப் போனமை கண்டு, எமனது தம்பியான கர்ணன், தனது இணையான தோள்கள் ஓங்கி வளர்ந் திடவும், புருவங்கள் துடிக்கவும், வாத்தியங்கள் பயங்கரமான ஒலியை மிக எழச்செய்யவும், வருணன் தந்த வருணுத்திரத்தை எடுத்து,— (அடுத்த செய்யுளோடு தொடரும்) என்பதாம்.

215. பவ்வம் புனல்வற் றமுகந் துவலம்
படவம் பரமூ டுருவப் பரவா
வெவ்வம் புதமே ழுமுடன் பொழியும்
புரைவெள் ளமிகச் சொரியச்
செவ்வம் பரமொத் தகளத் தினிடைச்
செய்யோன் மகன்வன் பொடுசீ றிவிடும்
அவ்வம் புநொடிப் பொழுதத் தறவோன்
அனுசன் றழலம் பையவித் ததுவே.

[பவ்வம் புனல்வற்ற முகந்து வலம்பட அம்பரம் ஊடு உருவ பரவா, வெம் அம்புதம் ஏழும் உடன் பொழியும் வெள்ளம் புரை வெள்ளம் மிக சொரிய செம் அம்பரம் ஒத்த களத்தினிடை செய் யோன் மகன் வன்பொடு சீறி விடும் அ அம்பு நொடிப் பொழுதத்து அறவோன் அனுசன் தழல் அம்பை அவித்தது, ஏ.]

**விளக்கம் :-** கடல் நீர் வற்றும்படி முகந்து கொண்டு, வலமாக ஆகாயத்தில் முறையாகப் பரவி, கொடிய சப்த மேகங்களும் ஒன்று பட்டுப் பொழியும் நீர் வெள்ளம் போன்ற நீர் வெள்ளத்தை மிகுதியாகப் பொழிய, சிவந்த வானத்தை ஒத்த போர்க்களத்தில் சூரியன் மகனுன கர்ணன் வலிமையோடு சீறிவிட்ட அந்த வருணுத்திரம் நொடிப்பொழுதில் விசயனது அக்னிக்கணையை அவித்தது,— என்பது பொருள்.

**216.** **வாயுக் கணையே வினன்வா னவர்கோன்**
**மைந்தன் றிகழ்பே ரொளிவான் மணியின்**
**சேயுற் றுரகே சன்வழங் கியதிண்**
**டிறல்வெங் கணையொன் றுதெரிந் தனனுல்**
**ஆயுப் புறமிட் டுவிடப் பொருவோன்**
**அரிவெங் கணையங் குமலைந் திடுவோன்**
**வீயுற் பலமா முனைவெங் கணைமேல்**
**வீசிப் பொருமுன் புவிழுங் கியதே.**

[வாயுகணை ஏவினன் வானவர்கோன் மைந்தன்; திகழ்பேர் ஒளி வான் மணியின் சேய் உற்று உரக ஈசன் வழங்கிய திண் திரல் வெம்கணை, ஒன்று தெரிந்தனன், (ஆல்); ஆயு புறம் இட்டு விட பொருவோன் அரிவெம் கணை அங்கு மலைந்திடுவோன் வீ உற்பலம் மா முனை வெம்கணை, மேல்வீசி பொரு முன்பு விழுங்கியது, ஏ.]

**விளக்கம்:-** விசயன் வாயுவாத்திரம் தொடுத்தான்; விளங்குகின்ற சிறந்த ஒளியுடைய வானின் மணி போன்ற சூரியனின் குமாரனுன கர்ணன், போரில் மனம் பொருந்தி ஆதிசேடன் அளித்த, வலிமை மிகுந்த கொடிய பாம்புக்கணை ஒன்றைத் தெரிந்து ஏவினுன்; பகைவனது ஆயுள் அழியும்படி போர் செய்பவனுன கர்ணனது அரிவெம்கணை (பாம்புக்கணை), அங்கே போர் செய்கின்ற விசயனது கருங்குவளை மலர் போன்ற கூரிய முனையையுடைய கொடிய வாயுவின் கணை, மேலெழுந்து பொருவதற்கு முன்னே, (அதை) விழுங்கிவிட்டது,— என்பதாம்.

ஆகாயத்திற்கு விளக்கம் தருதல் பற்றிச் சூரியனை 'வான் மணி', என்றுர். காற்று பாம்பின் உணவாதலால், வாயுக்கணைக்கு அரிக்கணை (பாம்புக்கணை) பகையாகின்றது.

**217.** என்னம் புதனக் கெதிரில் லையெனு
இருளம் பிணையே வினன்வில் விசயன்
கன்னன் கலையெட் டுடனெட் டுடைவெண்
கதிரம் புதொடுத் தெதிர்கன் றினனுல்
முன்னம் புசிதைந் துசிதைந் தழியா
முகமா றியிமைத் துவிழிக் குமுனே
பின்னம் புதொடர்ந் துசெலச் செலவே
பிலமூழ் கியதென் னபெரும் பிழையோ.

[என் அம்பு தனக்கு எதிர் இல்லை என இருள் அம்பிணை ஏவினன் வில் விசயன்; கன்னன் கலை எட்டுடன் எட்டு உடை வெண்கதிர் அம்பு தொடுத்து எதிர் கன்றினன், ஆல்; முன் அம்பு சிதைந்து சிதைந்து, அழியா முகம் மாறி இமைத்து விழிக்கும் மு(ன்)னே பின் அம்பு தொடர்ந்து செல செல (ஏ) பிலம் மூழ்கியது என்ன (மறைந்தது); (இவ்வாறு, இருட்கணை மறைந்தது) பெரு பிழையோ!]

**விளக்கம்:-** இருள் அம்பு-அந்தகாராஸ்திரம். கலை எட்டுடன் எட்டு உடை வெண்கதிர் அம்பு,- பதினுறு கலைகளையுடைய முழுமதிக்கணை. கன்றினுன் - சினந்து நின்ருன். முன் அம்பு - விசயன் விடுத்த கணை, பின் அம்பு - கர்ணன் விடுத்த கணை. அழியா முகம் மாறி - அழிதல் இல்லாத முனை கெட்டு. பிலம் - பாதாளம்.

கர்ணனது மதிக்கணையால் விசயனது இருட்கணை, சிதைந்து முகம் மாறி, மறையலாயிற்று; இது பெரிய பிழையாமோ!— என்பதாம்.

**218.** மகவா னருள்வா ளிதொடுத் தனனம்
மகவான் மகன்வா சிகளே ழுடைவெம்
பகவா னருள்வா ளிதொடுத் தனனப்
பகவா னருடியா கபரா யணனும்
தகவா ளியிரண் டுமுடன் கதுவித்
தாழா துயரா துசமம் பெறவே
முகவாய் கள்பிளந் தனமற் றுளபோர்
முனை வா ளியுமிப் படிமுட் டினவே.

[மகவான் அருள்வாளி தொடுத்தனன், அ மகவான் மகன்; வாசிகள் ஏழ் உடை வெம்பகவான் அருள்வாளி தொடுத்தனன் அ பகவான் அருள் தியாக பராயணனும்; தக வாளி இரண்டும் உடன் கதுவி தாழாது, உயராது சமம் பெற (ஏ) முகம் வாய்கள் பிளந்தன; மற்று உள போம் முனை வாளியும் இப்படி முட்டின; ஏ]

**விளக்கம்:-** மகவான் அருள்வாளி - இந்திரன் கொடுத்த ஐந்திராஸ்திரம். பகவான் - சூரியன், (அவன்) அருள்வாளி - சூர்யாஸ்திரம். தியாக பராயணன் - தான குணத்திற்குச் சிறந்த இடமான கர்ணன். தகவாளி இரண்டும் - தகுதியுடைய அத்திரங்கள் இரண்டும். முகம்வாய்-கூரிய முனைகள். விசயன் தொடுத்த ஐந்திராத்திரமும், கர்ணன் தொடுத்த சூர்யாத்திரமும் ஒன்றோடொன்று பொருந்தி உயர்வு தாழ்வு இல்லாமல் சமம்பெற்று முனைகள் பிளந்து பயனற்றுப் போயின; போருக்குரிய மற்றை அம்புகளும் ஒன்றொடொன்று மோதிக்கொண்டு விழுந்தன,— என்பதாம்.

**219.** **உரமந் தரவெற் பினுமிக் கபுயத்**
**துரவோ னுளம்வெஞ் சினமூ றியெழப்**
**பிரமன் கணையே வுதலுஞ் சமனுர்**
**பின்னேன் முடுகிப் பிறைமா மவுலிப்**
**பரமன் கணையே வினனக் கணையப்**
**பகவன் கணைநீ றுபடுத் துதலின்**
**சரமங் கவைவே றுதொடுத் திலர்கைத்**
**தனுவுங் குனிவித் திலர்தார் முடியோர்.**

[உரம் மந்தரம் வெற்பினும் மிக்க புயத்து உரவோன் (ஆன விசயன்), உளம் வெம்சினம் ஊறிஎழ, பிரமன் கணையை ஏவுதலும், சமனுர் (எமனுர்) பின்னேன் ஆகிய கர்ணன், முடுகி பிறைமா மவுலி பரமன் கணை ஏவினன்; அ கணை பகவன் கணை நீறு படுத்துதலின், சரம் அங்கு அவை வேறு தொடுத்திலர், கை தனுவும் குனிவித்திலர், தார் முடியோர், ஏ.]

**விளக்கம்:-** மந்தரமலையினும் மிகுந்த வலியுடைய புயங்களை உடைய விசயன், சினம்மிக பிரும்மாஸ்திரத்தைத் தொடுத்தலும், எமனுக்குப் பின்னவனுன கர்ணன் உருத்திராஸ்திரத்தைத் தொடுத்தான்; அக்கணை, பகவன் (பிரும்மன்) கணையை நீருக்கிவிட்டதனுல், தார்முடியோராகிய இருவரும் அப்பொழுது வேறு கணைகளைத் தொடுத்தாரில்லை, வில்லையும் வளையச் செய்தாரில்லை,— என்பதாம்.

சமன்,— யாரிடத்தும் பக்ஷபாதமில்லாதவன்; அத்தன்மையுடையனுதல் பற்றி எமன், சமன் எனப்பட்டான், என்க.

**220.** இவ்வா றிமையோர் கள்வரங் களினுல்
இருவோர் களுமெய் தியமா மறைகூர்
வெவ்வா ளிகளோ டியுடற் றுதலால்
வெஞ்சே னையடங் கமடங் கியபின்
மைவா னளகத் திசைவாண் முகமாம்
மலையா முலைவா ரிதிவண் டுகிலம்
செவ்வா றுபடுத் தலின்மே தினியாள்
திருமே னியணிந் ததுசெவ் வணியே.

[இ ஆறு இமையோர்கள் வரங்களினுல் இருவோர்களும் எய்திய மா மறை கூர் வெம் வாளிகள் ஓடி உடற்றுதலால், வெம் சேனை, அடங்க மடங்கியபின், மை வான் அளகம், திசைவாள் முகம் ஆம், மலை ஆம் முலை வாரிதி வண் துகிலம், செம் ஆறு படுத்தலின் மேதினியாள் திருமேனி அணிந்தது செம் அணியே.]

**விளக்கம்:-** மறைகூர் வாளி-மத்திரங்களைக் கொண்ட அம்பு. ஓடி உடற்றுதல்-பாய்ந்து சென்று அழித்தல். மடங்கியபின் – அழிந்தபின். மைவான் அளகம், திசை ஆம் வாள் முகம், மலை ஆம் முலை, வாரிதிவண் துகிலம் செம் ஆறு படுத்தபின் மேதினி யாள் திருமேனி செம் அணி அணிந்து,— என்பது ஈற்றடிகளின் அன்வயம். தெய்வப்படைகள் சென்று அழித்தலால், சேனைகள் முழுதும் அழிந்தபின், கரிய ஆகாயமாகிய கூந்தலையும், திசை களாகிய ஒள்ளிய முகத்தையும், மலையாகிய முலைகளையும், கட லாகிய வஸ்திரத்தையும், குருதிப் பெருக்காகிய ஆறு செம்மை யுறச் செய்ததனுல், பூமிதேவியின் திருமேனி செந்நிறமான அலங்காரத்தை அணிந்தது போன்றது என்பதாம். இது படுகளச் சிறப்பின் வருணனை. துகிலம் என்பதிலுள்ள, அம், சாரியை.

வேறு

**221.** மகபதி மைந்தனை மீளவுந் தினகரன்
மகனுயிர் கொண்டிட வேணுமென் றுறுசினம்
மிகமிக வன்சிலை கோலியொண் கிரிபல
மிடைவனம் வெந்திட வோடியந் தரமிசை
புகைகது வும்படி சீறிவெம் பொறிவிடு
புரிதழன் மண்டிய நாளிலம் பெனவரும்
இகலுடை வெம்பகு வாய்களைந் துடையதோர்
எழில்கொள்பு யங்கனை யேவவென் றுசவியே.

[மகபதி மைந்தனை மீளவும் தினகரன் மகன் உயிர் கொண்டிட வேணும் என்று, உறுசினம் மிக மிக, வல்சிலை கோலி ஒள்கிரி பல மிடைவனம் வெந்திட, ஓடி அந்தரமிசை புகைகதுவும்படி சீறி வெம் பொறிவிடு புரிதழல் மண்டிய நாளில், அம்பு என வரும் இகல் படை வெம் பகுவாய்கள் ஐந்து உடையது ஓர் எழில் கொள் புயங்கனை ஏவ என்று உசவி, ஏ,—தொடரும்].

**விளக்கம்:-** தினகரன் மகன் மீளவும் மகபதி மைந்தனை உயிர் கொண்டிட வேணும் என்று உறுசினம் மிக மிக,-வல்சிலை கோலி வெம் பொறிவிடு புரிதழல், ஒள் கிரிபல மிடை வனம் வெந்திட அந்தரமிசை ஓடி புகை கதுவும்படி சீறி மண்டியநாளில் அம்பு எனவரும் இகல்உடை....ஏவ என்று, உசவி,—என்பது அன்வயம்.

கர்ணன் விசயனைக் கொல்லவேண்டும் என்று பெருங்கோபம் மிகுதியுற,—வில்லை வளைத்து வெவ்விய பொறிகளைச் சிந்தும் புரி தழல், (அக்னி) ஒள்ளிய பலமலைகள் நெருங்கிய காண்டவனம் எரிந்து அழியும்படி, வானில் விரைவாகப் புகை மிகுதியாக நெருங்கும்படி சீறிப் பற்றி எரிந்தகாலத்தில், (விசயனைக் கொல் லுங் கருத்தில்) அம்பு என வந்த வலிய பிளந்த வாய்கள் ஐந்து உடையதான ஓர் எழில் கொள்புயங்கனை (நாகக் கணையை) ஏவ வேண்டுமென்று, சொல்லி, — (அடுத்த செய்யுளோடு தொடரும்) என்பது பொருள்.

**222.** **பரிமள சந்தன தீபமுங் கமழ்புகை**
**பனிமல ருங்கொடு பூசையும் பரிவுடன்**
**அருளிவ ணங்கியெ டாவிடும் பொழுதினில்**
**அடல்வல வன்சில கூறினன் பரிவொடு**
**விரிதுள வம்புனை மாயன்வஞ் சனையுளன்**
**விசயன கன்றட மார்பகம் புதைதர**
**உரகநெ டுங்கணை யேவுகென் றிடவவன்**
**உறுதிநி னைந்தில னாதபன் குமரனே.**

[பரிமள சந்தனம் தீபமும், கமழ் புகை, பனிமலரும் கொடு பூசையும் பரிவுடன் அருளி, வணங்கி, எடா விடும்பொழுதினில்,- அடல்வலவன் சில கூறினன் பரிவொடு, ''விரி துளவம் புனை மாயன் வஞ்சனை உளன்; விசயன் அகல் தட மார்பு அகம் புதை தர உரகம் நெடுகணை ஏவுக,', என்றிட, அவன் உறுதி நினைந் திலன் ஆதபன் குமரன், ஏ.]

**விளக்கம் :-** சந்தனம், தீபம், மணங்கமழும் தூபம், பனிமலர் கொண்டு பூஜை அன்புடன் செய்து, வணங்கி (நாகக்கணையை) எடுத்து விடும் பொழுது, சல்லியன் அன்போடு சில சொல்பவனாகி,

'விரிதுளவம் புனைந்த மாயன் வஞ்சனைக் குணம் உடையவன்; 'ஆகவே, விசயனது மார்பில் தைக்கும்படி கணையை விடுக,'' என்று கூற, ஆதபன் (சூரியன்) மகனான கர்ணன், சல்லியன் கூறிய நன்மையைக் கருதினானில்லை,—என்பதாம்.

**223.** **மழுவுறு செங்கையி ராமனெ ன் பவனருள்**
**வரிசிலை கொண்டணி நாணிதன் செவியொடு**
**தழுவுற மண்டல மாய்வளைந் திடமுது**
**தறுககெண டுஞ்சின மூளும்வெங் கணையினை**
**எழிலிம தங்கய வாகனன் றனயன**
**தெழில்பெறு கந்தர மேதுணிந் திடும்வகை**
**அழலெழு நெஞ்சொடு நாடிநின் றுதையினன்**
**அளிமுரல் பங்கய நாயகன் குமரனே.**

[மழுஉறு செங்கை இராமன் என்பவன் அருள் கொண்டு, அணி நாணி செவியொடு தழுவுற மண்டலம் ஆய் வளைந்திட, முது தறுகண் நெடுசினம் மூளும் வெம் கணையினை எழிலி மதங் கயம் வாகனன் தனயனது எழில் பெறு கந்தரமே துணிந்திடும் வகை அழல் எழும் நெஞ்சொடு நாடிநின்று உதையினன், அளி முரல் பங்கயம் நாயகன் குமரன், ஏ.]

**விளக்கம் :-** மழுஉறு செங்கை இராமன் - பரசுராமன். தறு கண் முது நெடுஞ்சினம் மூளும் வெங்கணை - அஞ்சாமையோடு பழமையான முதிர்ந்த பெரிய சினம் மிகுந்த கொடிய நாகக்கணை, எழிலிமதங்கய வாகனன் - மேகமாகிய மதயானையை வாகனமாக வுடைய இந்திரன். கந்தரம் - கழுத்து. நாடிநின்று - இலக்காகக் கொண்டு. கர்ணன் பரசுராமன் தந்தருளிய சிலையைக் கையில் கொண்டு, அணி நாணி செவிதழுவுமாறு மண்டலமாய் வளைந்திடச் செய்து, தறுகண் முதுநெடுஞ் சினமுடைய நாகக்கணையை, விசயனது கழுத்து அறுபடும்படி, சினம் கனற்றும் நெஞ்சொடு, (கழுத்தை) இலக்காகக் கொண்டு தொடுத்தான்,—என்பதாம். அளிமுரல் பங்கயநாயகன் - வண்டுகள் சப்திக்கின்ற தாமரையின் நாயகனான சூரியன்.

**224.** **வலவனெ னுந்திரு மாலதன் றனைகெழு**
**வரவைய றிந்தணி தேரின்வன் றிகிரிகள்**
**இலகிய வங்குலி யாறிரண் டவனியின்**
**இடைபுதை யும்படி தாழநின் றிடுதலின்**
**அலர்கதிர் தந்தருள் காளையம் பெனவிடும்**
**அரவுத னஞ்சயன் மார்பையுங் களனையும்**
**விலகிய வன்றன தாதையன் றுதவிய**
**வெயின்மகு டந்தனை மோதிவந் திடறவே.**

[வலவன் எனும் திருமால் அதன் துணை கெழுவரவை அறிந்து அணி தேரின் வல்திகிரிகள் இலகிய அங்குலி ஆறு இரண்டு அவனியிடை புதையும்படி தாழ நின்றிடுதலின், அலர்கதிர் தந் தருள் காளை அம்பு என விடும் அரவு தனஞ்சயன் மார்பையும் களணையும் விலகி, அவன் தன தாதை அன்று உதவிய வெயில் மகுடம்தனை மோதி வந்து இடற, ஏ,—தொடரும்]

**விளக்கம்:-** சாரதி என்று சொல்லப்படுகின்ற கண்ணன் நாகக்கணையின் உக்ரம் மிகுந்த வரவை அறிந்து, அணிதேரின் வலிய சக்கரங்கள், விளங்கிய பன்னிரண்டு அங்குலம் பூமியில் புதையும்படி தாழ்த்து நின்றதனால், சூர்யபுத்திரனான கர்ணன், அம்பு எனவிடுத்த நாகம், விசயனது மார்பையும் கழுத்தையும் நீங்கி, இந்திரன் அந்த நாளில் கொடுத்த பிரகாசத்தையுடைய கிரீடத்தைத் தாக்கித் தள்ள, - (அடுத்த செய்யுளோடு தொடரும்) என்பது பொருள். அங்குலி - விரற்கிடை.

**225. இடறிய திண்பணி வாளிபின் பறிதலும்**
**எதிர்பொர வெஞ்சிலை கோலிநின் றவனணி**
**பிடரினு முண்டுகொல் பார்வையென் றிடவலி**
**பெறநிலை நின்றிரு தோள்களும் பரிவுற**
**அடவியின் வெந்துதன் வால்குறைந் திடவிடும்**
**அயின்முக வெங்கணை யாலதன் பருமைகொள்**
**உடலமி ரண்டுட லாய்விழுந் தலமர**
**உதையின னும்பர்பி ரானருள் குரிசிலே.**

[இடறிய திண் பணிவாளி பின் பறிதலும் எதிர் பொர வெம் சிலை கோலி நின்றவன் அணிபிடரினும் உண்டு கொல் பார்வை என்றிட வலிபெற நிலை நின்று, இருதோள்களும் பரிவுஉற அடவியின் வெந்து தன்வால் குறைந்திட விடும் அயில் முகம் வெம் கணையால் அதன் பருமை கொள் உடலம் இரண்டு உடலாய் விழுந்து அலமர உதையினன், உம்பர்பிரான் அருள் குரிசில், ஏ-]

**விளக்கம்:-** இந்திரன் அருளிய பெருமையில் சிறந்த விசயன், எதிரிலே போர் செய்ய வெம்சிலை வளைத்து நின்றவன், வலிய, தன் கிரீடத்தை இடறித் தள்ளியதாகக் கணை பின்னால் ஓடலும், அழகிய பின்புறத்திலும் பார்வை (அவனுக்கு) உளதோ, என்று சொல்லும்படி, வலிமை பொருந்த நிலைநின்று இரு தோள் களும் பூரிக்க, காண்டவ வனத்தில் வெந்து தன்வால் குறைந் திடச் செலுத்திய கூரிய முனையையுடைய கொடிய கணையால், அந்த நாகத்தின் பருத்த உடல் இரண்டு உடலாய் விழுந்து வருந்தும்படி எய்தான், — என்பது பொருள்.

226. பிறகுபு ரிந்தெழில் கூர்தனஞ் சயன்விடு
பிறைமுக வெங்கணை யாலழிந் திடுபணி
திறலுடன் முன்றுணி சேருமைந் தலையொடு
திரியவும் வந்தெனை யேவுகென் றலறவும்
உறவொடு குந்திவ ழாவரம் பெறுதலின்
உரைவழு வும்பெரி தாகுலம் புரியினும்
மறுகணை யொன்றுதொ டேன்முனிந் தினியென
வரிகழ லங்கர்கு லாதிபன் புகலவே.

[பிறகு புரிந்து எழில் கூர் தனஞ்சயன் விடு பிறை முகம் வெம் கணையால் அழிந்திடு பணி, திறலுடன் முன் துணி சேரும் ஐந்தலையோடு திரியவும் வந்து எனை ஏவுக என்று அலறவும், உறவொடு குந்தி வழாவரம் பெறுதலின், உரை வழுவும், பெரிது ஆகுலம் புரியினும் மறுகணை ஒன்று தொடேன் முனிந்து இனி என, வரி கழல் அங்கர் குல அதிபன் புகல, ஏ.]

**விளக்கம்:-** (நாகம் கிரீடத்தை) இடறித் தள்ளிய பிறகு, எழில் கூர் தனஞ்சயன் விரும்பிவிட்ட பிறைமுகக் கணையால் அழிகின்ற நாகம், முன்னே துணிபட்ட ஐந்து தலைகளோடு திரும்பி வந்து, ''என்னை மறுமுறை விடுக'' என்று கதறவும், வரி கழல் கர்ணன் (தாய்) உறவோடு தவறமுடியாத வரம் பெற்றதனால், (உன்னை ஏவினால்) என் சொல் பிழையுறும்; என்ன துன்பத்தைப் பகைவன் செய்தாலும் இனி மறுகணை முனிந்து தொடேன்'' என்று சொல்ல,—(தொடரும்) என்பது பொருள்.

227. எரியிடை வெந்துடல் வாலுமுன் றறிதலின்
இடரற வுய்ந்திட நீபெரும் புகலென
விரைவொடு வந்தெனை வாளிகொண் டிடுகென
விசயனை வென்றிடு மாறுளங் கருதவும்
ஒருதனி வெஞ்சிலை கால்வளைந் திலதுகொல்
ஒருபடி யும்பிழை போனதுன் றொடையென
வரிகழ லங்கர்பி ரானைநொந் துரைசெய்து
மறலியி டந்தனி லானதன் றுரகமே.

[எரியிடை வெந்து வாலும் முன் தறிதலின் இடர் அற உய்ந்திட நீ பெரும் புகல் என விரைவொடு வந்து, எனை வாளி கொண்டு இடுக என, விசயனை வென்றிடும் ஆறு உளம் கருதவும், ஒரு தனி வெம்சிலை கால் வளைந்திலது கொல்? ஒரு படியும் பிழை போனது உன் தொடை என, வரிகழல் அங்கர் பிரானை நொந்து உரை செய்து, மறலி இடத்தனில் ஆனது அன்று உரகம், ஏ.]

**விளக்கம்:-** காண்ட வனத்தின் நெருப்பிலே உடல் வெந்து, வாலும் முன்னே விசயன் கணையால் அறுபட்டதனால், மேலும்

இடர் இல்லாமல் பிழைத்து வாழும் பொருட்டு, "நீயே சரியான புகலிடம்", என்று எண்ணிக் கொண்டு, உன்னிடம் வந்து, "என்னை அத்திரமாகக் கொள்க", என்று சொல்ல, நீயும் மனத்தில் விசயனைக் கொல்ல நினைத்திருக்கவும், "உனது ஒப்பற்ற வில் நன்றாகக் கால் வளைந்திலதோ! ஒரு தொடுப்பிலும் தவறி விட்டாய்; மறுபடியும் தொடுக்கவும் மறுக்கின்றாய்", என்று கர்ணனை நோக்கி மன வருத்தத்தோடு கூறிவிட்டு அந்த நாகம் இறந்தது, என்பது பொருள்.

கலித்துறை

**228. நாகாயு தந்தப்பி நரனுய்ந்த பொழுதத்து நாகக்கொடிச்**
**சேகான நெஞ்சத்த வன்சேனை யிற்றன்செ ருச்சேனையில்**
**பாகார்க டாயானை நரபாலர் மகிழ்வோடு பரிவெய்தினர்**
**ஏகாத சந்தன்னி லெக்கோளு நிகரென்ன விகலின்றியே.**

[நாகாயுதம் தப்பி நரன் உய்ந்த பொழுதத்து நாகம் கொடி சேகு ஆன நெஞ்சத்தவன் சேனையில், தன் செரு சேனையில் பாகு ஆர் கடாம் யானை நரபாலர் மகிழ்வோடு பரிவு எய்தினர், ஏகாதசந்தன்னில் எ கோளும் நிகர் என்ன இகல் இன்றியே.]

**விளக்கம்:-** நரன் - விசயன். சேகு ஆன நெஞ்சம் - ஈர மில்லாத கடின சித்தம். செரு சேனை - போர் செய்ய வல்ல சேனை. பாகுஆர் கடாம் யானை - பாகனைக் கொண்ட மதயானை, பரிவு - வருத்தம். ஏகாதசம் - ஒன்றோடு கூடிய பத்து, அதாவது பதினொன்று. இகல் - மாறுபாடு. நாகக் கணைக்கு விசயன் தப்பிய பொழுது இரு திறத்துச் சேனையிலுள்ள அரசர்களும், பதினோராம் வீட்டில் எல்லாக்கிரகங்களும், ஒத்து இருப்பதுபோல், மாறுபாடின்றி மகிழ்ந்ததோடு, (போரினால் ஏற்பட்ட அழிவுக்காக) வருத்தமும் கொண்டார்கள்,— என்பதாம். எல்லாக் கிரகங் களுக்கும் பதினோராமிடம் நன்மை பயக்கவல்ல இடம், என்பர்.

சல்லியன் கூற்று

**229. அருமார் பிலக்காக வெய்யென்ன வெய்யாவ கங்காரமும்**
**வருமாசு ணந்தன்னை மறுகாலு மேவாமன் மறை செய்ததும்**
**பொருமாறு நினைவற்ற துங்கண்டு நரனொத்த போர் மீளியைத்**
**திருமாலொ டொப்பானு முளநொந்து நொந்தம்ம சில கூறுவான்.**

[அருமார்பு இலக்காக எய் என்ன, எய்யா அகங்காரமும், வருமாசுணம் தன்னை மறுகாலும் ஏவாமல் மறை செய்ததும்,

பொரும் ஆறு நினைவு அற்றதும், கண்டு, நரன் ஒத்த போர் மீளியை, திருமாலொடு ஒப்பானும் உளம் நொந்து நொந்து (அம்ம) சில கூறுவான்.

**விளக்கம்:-** கண்ணனேடு ஒத்தவனை சல்லியனும், (விசயனது) அழித்தற்கு அரிய மார்பே இலக்காகக் கணை எய்வாய், என்று தான் சொல்ல, அவ்வாறு செய்யாத அகங்கார மும், திரும்பி வந்த பாம்பை மறுபடியும் தொடுக்காமல் மறுத்ததும், போர் செய்யும்படி நினைவு அற்றதும் ஆகியவற்றைக் கண்டு, உளம்மிக நொந்து, விசயனை ஒத்த வீரனுகிய கர்ணனை நோக்கிச் சில கூறுவானுயினன்—என்பதாம். அம்ம: அசை.

**230.** என்னுலு மரிதித்த டந்தேர்வி ரைந்தூர்த
லினியென்றுமற்(று)
உன்னுலு மரிதந்த விசயன்ற னுயிர்கொள்ள
லுன்னித்தபோர்
பன்னுக துவசற்கு மரிதாலு னைக்கொண்டு பாராளுமா(று)
என்னுவி ழிந்தான வன்தேரின் மிசைநின்று
மிசைநின்றுளான்.

[என்னுலும் அரிது இ தடந்தேர் விரைந்து ஊர்தல், இனி என்றும் மற்று உன்னுலும் அரிது அந்த விசயன் தன் உயிர் கொள்ளல் உன்னித்த போர், பன்னுக துவசற்கும் அரிது (ஆல்) உனை கொண்டு பார் ஆளும் ஆறு, என்ன இழிந்தான் அவன் தேரின் மிசை நின்றும் இசை நின்றுளான்.]

**விளக்கம்:-** கீர்த்தி நிலை நின்றவனுகிய சல்லியன், இத்தடந் தேரை விரைந்து செலுத்தல் என்னுலும் செய்தற்கு அரியதாகும்; மற்று (மேலும்) இனி என்றும் முயன்று செய்கின்ற போரில் அந்த விசயனது உயிர் கவர்தல் உன்னுலும் செய்தற்கு அரியது; உன்னைத் துணையாகக் கொண்டு, பாம்புக் கொடியை உடைய வனுன துரியோதனனுக்கும் பாராளும் விதம் அரியதாகும், என்று சொல்லி, அந்தக் கர்ணனது தேரினின்று இறங்கினுன்,—என்ப தாம். உன்னித்த போர் - முயன்று செய்யும் போர். பந்நகம், என்பதின் விகாரம் பன்னுகம்.

**231.** என்றேயெ ழிற்குந்தி வயின்நல்கு தனியாளி யிகலேறனன்
வன்றேர்செ லுத்திப்பெ ரும்போர்மு டிப்பிக்க வருசல்லியன்
தென்றேரி சைச்செவ்வி நறைநாறு மலர்விட்ட சிறைவண்
டெனத்
தன்றேரு மேல்கொண்டு தனிவில்லு மீளத் தரித்தானரோ.

[என்றே எழில் குந்தி வயின் நல்கு தனியாளி இகல் ஏறு அனுன், வன் தேர் செலுத்தி பெரும் போர் முடிப்பிக்க வரு சல்லியன், தென் தேர் இசை செவ்வி நறை நாறும் மலர் விட்ட சிறை வண்டு என, தன் தேரு மேல் கொண்டு தனி வில்லும் மீள தரித்தான், அரோ.]

**விளக்கம்:-** தனி இகல் யாளி ஏறு அனுன் - ஒப்பற்ற வலிமை யுடைய ஆண் சிங்கம் போன்ற கர்ணன். செவ்வி நறை நாறும் மலர்விட்ட தென் தேர் இசை சிறை வண்டு - அழகிய மணம் வீசுகின்ற மலரை விட்டு அப்பாற் சென்ற தேனை ஆராய்ந்து உண்ணும் இசை பாடுகின்ற சிறை வண்டு, கர்ணனது தேரை நடத்திப் போரை முடியச் செய்ய வந்த சல்லியன், (முன்னே சொல்லியபடி) கூறி, மலரை விட்டு அப்பால் செல்கின்ற வண்டைப் போல், கர்ணனது தேரை விட்டு இறங்கித் தன் தேர் மேல் ஏறிக் கொண்டு வில்லைக் கையில் கொண்டான்,—என்பதாம். தென் - தேன். அரோ: ஈற்றசை. தேரு, உகரம் சாரியை.

**232.** **கதவாசி நடையற்று வசியற்று வரிவிற்கொள்**
**கணையாவையும்**
**விதவாழி நிலனுற்று விரைதேரு மெய்வன்பு**
**மெலிவுற்றபின்(பு)**
**உதவாமன் மழுவாளி யுரைசெய்த சாபத்தை**
**யுறவுன்னினுன்**
**அதவாமு ரட்போர்த னக்கஞ்சு மோர்வென்று மடலங்கர்**
**கோன்.**

[கதம் வாசி நடை அற்று வலி அற்று வரிவில் கொள்கணை யாவையும், விதம் ஆழி நிலன் உற்று, விரை தேரும் மெய் வன்பு மெலிவுஉற்ற பின்பு, உதவாமல் மழுவாளி உரை செய்த சாபத்தை உற உன்னினுன்; அதவா, முரண் போர் தனக்கு அஞ்சுமோ என்றும், அடல் அங்கர் கோன்.]

**விளக்கம் :-** அடல் அங்கர்கோன் (கர்ணன்), வலிய அல்லது கோப முடைய குதிரைகள் நடைவேகம் அற்று, வரிவில் லில் தொடுக்கப்படும் அம்புகள் எல்லாம் வலிமை அற்று, பலவித மான அலங்காரங்களையுடைய தேர்ச் சக்கரங்கள் பூமியில் புதைய லுற்று, யாக்கை தளர்வுற்ற பின்பு, பரசுராமன் சமயத்தில் அத்தி ரங்கள் பயன்படாமற் போகும்படி உரைத்த சாபத்தை நன்ருக நினைத்தான்; அதவா (சாபம் இல்லாவிட்டால்) முரனுடைய

போருக்குக் (கர்ணன்) எப்பொழுதும் அஞ்சுவானே! (அஞ்சான் என்றபடி),—என்பது பொருள். அதவா—அப்படி இல்லாவிட்டால். மழுவாளி—(மழு ஆளி—மழுப்படையை ஆளுபவன்) பரசு ராமன்.

வேறு தேரேறிக் கர்ணன் பொரல்

**233.** **இயற்கைப்பெ ருங்கொற்ற வலியன்றி யார்யாரி டத்தும் பெறும்**
**செயற்கைப்ப டைத்திண்மை கைவந்தி லாவெய்ய செய் யோன்மகன்**
**வெயர்க்கத்த னுதல்கண்சி வப்பேற மனம்வெம்ப மண் மீதிழிந்(து)**
**அயர்க்கச்ச பித்தோனை வந்தித்து வேறோர டற்றேரின் மேல்.**

[இயற்கை பெரு கொற்றம் வலி அன்றி, யார் யாரிடத்தும் பெறும் செயற்கை படை திண்மை கைவந்திலா வெய்ய செய்யோன் மகன், வெயர்க்க தன்நுதல், கண் சிவப்பு ஏற, மனம் வெதும்ப மண்மீது இழிந்து, அயர்க்க சபித்தோனை வந்தித்து, வேறு ஓர் அடல் தேரின்மேல், (ஏறி), தொடரும்.]

**விளக்கம்:-** இயற்கையாய் அமைந்த பெரிய வெற்றிக்கு ஆதாரமான வலிமையுமே அல்லாமல், பலபேர்களிடமிருந்து பெற்ற செயற்கை ஆயுதங்களின் வலிமை சித்தியாகப் பெருத செய்யோன் மகன் (கர்ணன்), தன் நெற்றி வியர்க்க, கண் செம்மையுற, மனம் வெதும்ப, தேரினின்று பூமியில் இறங்கி, சமயத்தில் மறக்கும் படிசபித்த பரசுராமனைத் திக்குநோக்கி வணங்கி, வேறொரு வலிய தேர்மேல் (ஏறிக் கொண்டு),—என்பது பொருள். செய்யோன்-செந்நிறமுடைய சூரியன்.

**234.** **ஏறித்தன் வலவன்செ லுத்தத்த டக்கையி லிகல்வில்லுடன்**
**சீறிக்கொ டுஞ்சாய கங்கோடி முகிலூர்தி சேய்மேல்விடக்**
**காறிக்க னன்றக்க டுந்தேர்செ லுத்துங்க ரும்பாகனுர்**
**கூறிக்கொ டுத்தார ருக்கன்கு மரன்வன்மை குறை கின்றதே.**

**விளக்கம் :-** (தேரில்) ஏறிக் கொண்டு தன் வலவன் (தேரைச்) செலுத்த, தனது பெரிய கையில் பிடித்த வில்லுடன், சீறி, கொடிய கோடிக்கணக்கான அம்புகளை மேக வாகனனுன இந்திரன் மகன் (விசயன்) மேல் பிரயோகிக்க, காறிக் கனன்று

(மிகவும் கனன்று), அந்த விரைவுடைய தேரைச் செலுத்தும் கரிய பாகனுர் (கண்ணன்) அருக்கன் மைந்தனது வலிமை குறைகின்றதை, விசயனுக்குத் தெரிவித்தார்,—என்பது பொருள். அருக்கன் மகன்-கர்ணன். காறிக் கனன்று, ஒரு பொருட்பன் மொழி.

**235.** **குறையற்ற தன்வில்லே மகவற்கு மாரன்கு னித்தாசுகம்**
**சிறையற்ற கிரிபோல நிற்கின்ற தினகாரி சிறுவனின்மெய்**
**மறையத்தொ டுத்தானு யிர்க்கால விப்பான்ம யிர்க்கா**
**றொறும்**
**கறையற்ற மதிபோல நிலவீனு முத்துக்க ழற்காலினுன்.**

**விளக்கம்:-** களங்கம் இல்லாத சந்திரன் போல ஒளி வீசுகின்ற முத்துக்களாலான வீரக்கழல் அணிந்த மகவற்குமாரன் (இந்திரகுமாரனுன விசயன்),—சிறகு அறுபட்டமலே போல் நிற்கின்ற தினகாரி (சூரியன்) சிறுவனுன கர்ணனது உடல் மறையும்படி, குறை அற்ற தனது காண்டீபம் என்னும் வில்லே வளேத்து, மயிர்க்கால் தோறும், உயிர்க்காலே (பிராண வாயுவை) அவிக்கும் பொருட்டு ஆசுகங்களே (பாணங்களேத்) தொடுத்தான், என்பது பொருள்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**236.** **எத்தலங் களினு மீகையா லோகை**
**வாகையா லெதிரிலா வீரன்**
**மெய்த்தல முழுதுந் திறந்துகு குருதி**
**வெயிலவன் கரங்கள்போ லுகுப்பக்**
**கொத்தல ரலங்கன் மகுடமுங் கவச**
**குண்டலங் களுமுருக் குலேந்தும்**
**கைத்தல மறந்த தில்லேவிற் குனிப்புங்**
**கடுங்கணே தொடுத்திடுங் கணக்கும்.**

[எ தலங்களினும் ஈகையால் ஓகைவாகையால் எதிர் இலா வீரன், மெய்தலம் முழுதும் திறந்து உகு குருதி வெயிலவன் கரங்கள் போல் உகுப்ப, கொத்து அலர் அலங்கல் மகுடமும், (இதற்கு முன், அதாவது இந்திரனுக்கு அளித்தபொழுது) கவச குண்டலங்களும் உருகுலேந்தும், (அவனது) கை தலம், மறந்தது இல்லே. வில் குனிப்பும் கடுங்கணே தொடுத்திடும் கணக்கும்]

**விளக்கம்:-** ஓகை வாகை-மகிழ்ச்சிக்குரிய வெற்றி. திறந்து-துளேயுண்டு, பிளப்புண்டு. (கணே தொடுத்திடும்) கணக்கு-தன்மை.

உடல் முழுதும் துளைக்கப் பெற்று இரத்தம் பெருகுகிற நிலையிலும், கர்ணன் கணைகளை ஓயாது பொழிந்தான், என்பதாம். செந்நிறத்தால், சூரியன் கரங்கள் (கிரணங்கள்) இரத்தத்திற்கு உவமை. கர்ணன் வலி அழிவதற்குக் கவச குண்டலங்கள் முக்கியமான காரணமாதலின், இப்பொழுது உருக்குலைந்த கிரீடத்தோடு, முன்னர் இந்திரனுக்கு அளித்த கவச குண்டலங்களும் கூறப்பட்டன, என்க.

கண்ணன் வேதியனாய்க் கர்ணனை அடைதல்

**237.** **அத்தவெற் பிரண்டு விற்கிடை யெனப்போய்**
**ஆதபன் சாய்தல்கண் டருளி**
**முத்தருக் கெல்லா மூலமாய் வேத**
**முதற்கொழுந் தாகிய முதல்வன்**
**சித்திரச் சிலைக்கை விசயனைச் செருநீ**
**ஒழிகெனத் தேர்மிசை நிறுத்தி**
**மெய்த்தவப் படிவ வேதிய னாகி**
**வெயிலவன் புதல்வனை யடைந்தான்.**

[அத்த வெற்பு இரண்டு விற்கிடை என போய் ஆதபன் சாய்தல் கண்டருளி, முத்தருக்கு எல்லாம் மூலமாய், வேதம் முதல் கொழுந்து ஆகிய முதல்வன், சித்திரம் சிலை கை விசயனை ''செரு நீ ஒழிக'', என, தேர் மிசை (அவனை) நிறுத்தி, மெய் தவம் படிவம் வேதியன் ஆகி வெயிலவன் புதல்வனை அடைந்தான்.]

**விளக்கம்:-** அத்த வெற்பு - அஸ்தமனகிரி. விற்கிடை - வில் கிடக்கக் கூடிய தூரம். ஆதபன் - சூரியன். முக்தர்கள் யாவர்க்கும் முதல் கடவுளாகிய வேதங்களின் கொழுந்தாகிய பரம் பொருள் (கண்ணன்), என்பது இரண்டாவது அடியின் பொருள். சித்திரம் - அழகிய. அஸ்தமிப்பதற்கு இரண்டு விற்கிடை இருக்கும் சமயத்தில், கண்ணன் போரை நிறுத்தச் செய்து வேதிய வடிவங் கொண்டு கர்ணனை அடைந்தான்,—என்பதாம்.

**238.** **தாண்டிய தரங்கக் கருங்கட லுடுத்த**
**தரணியிற் றளர்ந்தவர் தமக்கு**
**வேண்டிய தருதி நீயெனக் கேட்டேன்**
**மேருவி னிடைத்தவம் பூண்டேன்**
**ஈண்டிய வறுமைப் பெருந்துய ருழந்தேன்**
**இயைந்ததொன் றிக்கணத் தளிப்பாய்**
**தூண்டிய கவனத் துரகதத் தடந்தேர்ச்**
**சுடர்தரத் தோன்றிய தோன்றல்!**

**விளக்கம்:-** தாண்டிய தரங்கம் - கரையில் மோதுகின்ற அலை. ஈண்டிய வறுமை - மிகுந்த வறுமை. இயைந்தது ஒன்று - எனக்கு இப் பொழுது கொடுக்கக் கூடிய தொன்று. அருணன் செலுத்தும் நடை வேகமுடைய குதிரை பூட்டிய தேரையுடைய சூரியன் தரத் தோன்றிய வீரனே, (கர்ணனே), என்பது ஈற்றடியின் பொருள்.

தோன்றலே, ''மேரு மலையில் தவம் செய்து கொண்டிருந்தேன்; மிகுந்த வறுமையால் வருந்திய நான், கடலால் சூழப் பெற்ற பூமியில், இல்லாமையால் தளர்ந்தவர்க்கு வேண்டிய பொருள்களை நீ கொடுக்கின்றாய், என்று கேள்வியுற்று வந்தேன்; கொடுக்கக் கூடிய தொன்றை இப்போதே கொடுப்பாயாக'',— என்று கண்ணன் கேட்டான், என்பதாம்.

**239.** **என்றுகொண் டந்த வந்தண னுரைப்ப**
**இருசெவிக் கமுதெனக் கேட்டு**
**வென்றிகொள் விசயன் விசயவெங் கணையான்**
**மெய்தளர்ந் திரதமேல் விழுவோன்**
**நன்றென நகைத்துத் தரத்தகு பொருணீ**
**நவில்கெனத் தான்மறை யவனும்**
**ஒன்றிய படிநின் புண்ணிய மனைத்தும்**
**உதவுகென் றலுமுள மகிழ்ந்தான்.**

[என்று கொண்டு அந்த அந்தணன் உரைப்ப, இரு செவிக்கு அமுது என கேட்டு, வென்றி கொள் விசயன் விசயம் வெம் கணையால் மெய் தளர்ந்து இரதம் மேல் விழுவோன், 'நன்று' என நகைத்து, 'தர தகு பொருள் நீ நவில்க', என, நால் மறையவனும், ''ஒன்றியபடி நின் புண்ணியம் அனைத்தும் உதவுக'', என்றலும் உள மகிழ்ந்தான்.]

**விளக்கம்:-** (கொடுக்கக் கூடியதைக் கொடுப்பாயாக) என்று வேதியன் கூற, விசயனது கணைகளால் தளர்ந்து இரதத்தின் மேல் விழக் கூடிய நிலையினனான கர்ணன், இரு செவிகளுக்கும் அமுது என, அதைக் கேட்டு, 'நன்று' என்று முறுவலித்து, ''இப்போது நான் கொடுக்கத்தக்க பொருளைக் கேள்'' என்னலும், அவ்வேதியன், ''உள்ளபடியே உனது புண்ணியம் அனைத்தையும் தருக'', என்று கூறலும் (கர்ணன்) உளம் மகிழ்ந்தான்,— என்பதாம். நன்று, என்றது, நீ சொன்னபடியே தருவேன், என்ற பொருளது.

240. ஆவியோ நிலையிற் கலங்கிய தியாக்கை
யகத்ததோ புறத்ததோ வறியேன்
பாவியேன் வேண்டும் பொருளெலா நயக்கும்
பக்குவந் தன்னில்வந் திலையால்
ஓவிலா தியான்செய் புண்ணிய மனைத்தும்
உதவினேன் கொள்கநீ யுனக்குப்
பூவில்வா ழயனு நிகரல னென்றாற்
புண்ணிய மிதனினும் பெரிதோ!

[ஆவியோ நிலையின் கலங்கியது, யாக்கை அகத்ததோ, புறத்ததோ (அது) அறியேன்; பாவியேன் வேண்டும் பொருள் எலாம் நயக்கும் பக்குவம்தன்னில் வந்திலை, (ஆல்); ஓவு இலாது யான் செய் புண்ணியம் அனைத்தும் உதவினேன், கொள்க நீ; உனக்கு பூவில் வாழ் அயனும் நிகர் அலன், என்றால், புண்ணியம் (உனக்குக் கொடுப்பதாகிய) இதனினும் பெரிதோ!]

**விளக்கம்:-** என் உயிரோ நிலை கலங்கியுளது, அது, யாக்கையின் உள்ளே இருக்கின்றதோ, அல்லது, யாக்கைக்குப் புறத்ததோ, அறியேன்; பாவியேன், வேண்டும் பொருள்களை எல்லாம் விரும்பிக் கொடுக்கும் சமயத்தில் நீ வரவில்லை, (எனினும் கேட்டதை) ஓவிலாது, அதாவது மிச்சம் இல்லாதபடி (முழுமையாக) நான் செய்த புண்ணியம் அனைத்தையும் தந்தேன், கொள்க; பூவில் வாழ் பிரும்மனும் உனக்கு நிகர் அல்லன் என்றால், உனக்குக் கொடுப்பதாகிய இச்செயலினும் பெரிதோ புண்ணியம்—என்று கர்ணன், கூறினான், என்பதாம்.

கொடுக்கும் நிலையில் இல்லாமையின், கர்ணன் தன்னைப் பாவியேன், என்று அழைத்துக் கொண்டான், என்க.

241. என்னமுன் மொழிந்து கரங்குவித் திறைஞ்ச
இறைஞ்சலர்க் கெழிலியே றனையான்
கன்னனை யுவகைக் கருத்தினா னோக்கிக்
கைப்புன லுடன்றரு கென்ன
அன்னவ னிதயத் தம்பின்வா யம்பால்
அளித்தலு மங்கையா லேற்றான்
முன்னமோ ரவுணன் செங்கைநீ ரேற்று
மூவுல கமுமுடன் கவர்ந்தோன்.

[என்ன முன் மொழிந்து கரம் குவித்து இறைஞ்ச, இறைஞ்சலர்க்கு எழிலி ஏறு அனையான், கன்னனை உவகை கருத்தினால் நோக்கி, கை புனலுடன் தருக” என்ன, அன்னவன் இதயத்து

அம்பின் வாய் அம்பால் அளித்தலும், ''அம்கையால் ஏற்றுன், முன்னம் ஓர் அவுணன் செம்கை நீர் ஏற்று மூ உலகமும் உடன் கவர்ந்தோன்.]

**விளக்கம்:-** என்று முன்னே மொழிந்து (கர்ணன்) கரம் குவித்து வணங்க, வணங்காதவர்களுக்கு மேகத்தில் உண்டான பேரிடியை ஒத்தவனுன கண்ணன் கருத்தின் உவகையால் (மன மகிழ்ச்சியோடு) (கர்ணனை) நோக்கி, ''கையினுல் நீரோடு தருக,'' என்று சொல்ல, அக்கர்ணன், இதயத்தில் புதைந்த அம்பின் வழியே பெருகுகின்ற அம்பினுல் (அப்பினுல்—செந்நீரால்) தாரை வார்த்துக் கொடுத்தலும், முன்னே அதாவது வாமனனுய் அவதரித்த காலத்தில், மகா பலிச் சக்ரவர்த்தியாகிய ஓர் அவுண னது செங்கையினுல் தத்தம் செய்த தான நீரைக் கையில் ஏற்று மூன்று உலகங்களையும் ஒரு சேர அளந்து கவர்ந்து கொண்டவ னுகிய கண்ணன், தனது அங்கையினுல் ஏற்றுன்,—என்பது.

### கர்ணன் வரம் பெறல்

**242.** **மல்லலங் தொடைய னிருபனை முனிவன்**
**மகிழ்ந்துநீ வேண்டிய வரங்கள்**
**சொல்லுக வுனக்குத் தருதுமென் றுரைப்பச்**
**சூரன்மா மதலையுஞ் சொல்வான்**
**அல்லல்வெவ் வினையா லின்னமுற் பவமுண்**
**டாயினு மேலெழு பிறப்பும்**
**இல்லையென் றிரப்போர்க் கில்லையென் றுரையா**
**இதயநீ யளித்தரு ளென்றுன்.**

[மல்லல் அம் தொடையல் நிருபனை முனிவன் மகிழ்ந்து, ''நீ வேண்டிய வரங்கள் சொல்லுக, உனக்கு தருதும்,'' என்று உரைப்ப, சூரன் மா மதலையும் சொல்வான்,—''அல்லல் வெம் வினையால் இன்னம் உற்பவம் உண்டாயினும், ஏழ் ஏழு பிறப்பும் இல்லை என்று இரப்போர்க்கு இல்லை என்று உரையா இதயம் நீ அளித்தருள்,'' என்றுன்.]

**விளக்கம்:-** வேதிய வேடங் கொண்ட கண்ணன், ''உனக்கு வேண்டிய வரங்களைக் கேள், தருவோம்,'' என்னலும், சூரன் (சூரியன்) மாமதலையாகிய கர்ணன், ''துன்பங்களுக்குக் காரண மான கொடிய வினையால் பிறப்பு உண்டெனில், ஏழேழ் பிறவி களிலும், இரப்போர்க்கு இல்லை என்று சொல்லாத இதயத்தை அருள்க,'' என்று கேட்டான்,—என்பதாம். மல்லல் - **வளமை,**

**243.** மைத்துன னுரைத்த வாய்மைகேட் டையன்
மனமல ருகந்துகந் தவனைக்
கைத்தல மலரான் மார்புறத் தழுவிக்
கண்மலர்க் கருணைநீ ராட்டி
எத்தனை பிறவி யெடுக்கினு மவற்றுள்
ஈகையுஞ் செல்வமு மெய்தி
முத்தியும் பெறுதி முடிவிலென் றுரைத்தான்
மூவரு மொருவனு மூர்த்தி.

**விளக்கம்:-** மூவரும் ஒருவனுமான வடிவமுடைய ஐயன், அத்தை மகனான கர்ணன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, இதய கமலம் மிக மகிழ்ந்து, மலர் போன்ற கைகளால் அவனைத் தன் மார்புறத் தழுவி, கண்ணிலிருந்து பெருகும் கருணை வெள்ளத்தால் அவனை நீராட்டி, "நீ எத்தனை ஜன்மம் எடுத்தாலும், அவற்றில் ஈதலையும், அதற்கு வேண்டிய செல்வத்தையும் எய்தி, முடிவில் முத்தியும், பெறுவாய்" என்றான்,—என்பதாம்.

கர்ணனுக்குக் காட்சி அளித்தல்

**244.** போற்றிய கன்னன் கண்டுகண் களிப்பப்
புணரிமொண் டெழுந்தகார் முகிலை
மாற்றிய வடிவும் பஞ்சவா யுதமும்
வயங்குகைத் தலங்களு மாகிக்
கூற்றுறழ் கராவின் வாயினின் றழைத்த
குஞ்சர ராசன்மு னன்று
தோற்றிய படியே தோற்றினன் முடிவுந்
தோற்றமு மிலாதபைந் துளவோன்

**விளக்கம்:-** இறத்தலும் பிறத்தலும் இல்லாத பைந்துளவோன் (கண்ணன்), தன்னைத் துதித்த கர்ணன் கண்டு களிக்கும்படி, கடல்நீரை முகந்து கொண்டு வான் எழுந்த கார் மேகத்தை, தனக்கு நிகராகாதென்று அகற்றிய, அதாவது மிகக் கரிய திருமேனியும், பஞ்ச ஆயுதங்களும், விளங்குகின்ற கைத்தலங்களும் ஆகி,—யமனை ஒத்த கொடிய முதலையின் வாயினின்று அழைத்த கஜேந்திரன் என்ற யானை முன், அந்த நாளில் தோற்றமளித்த படியே, (கர்ணனுக்கு) காட்சி கொடுத்தான்,—என்பது பொருள்.

சங்கம், சக்கரம், கதை, வாள், வில், என்பவை பஞ்சாயுதங்கள். பாஞ்சசன்னியம், சுதரிசனம், கௌமோதகீ, நந்தகம், சார்ங்கம், என்பவை முறையே இவற்றின் பெயர்.

காட்சி கொண்ட கர்ணன் மகிழ்தல்

**245.** **அமரரா னவரு மமரயோ னிகளும்**
**அமரருக் கதிபனு னவனும்**
**கமலநான் முகனு முனிவருங் கண்டு**
**கனகநாண் மலர்கொடு பணிந்தார்**
**சமரமா முனையிற் றனஞ்சயன் கணையாற்**
**சாய்ந்துயிர் வீடவுஞ் செங்கண்**
**அமலநா ரணனைக் காணவும் பெற்றேன்**
**என்றுதன் னகமிக மகிழ்ந்தான்.**

**விளக்கம்:-** தேவர்களும், சித்தர், கருடர், கின்னரர், கிம்புருடர், கந்தர்வர், இயக்கர், வித்யாதரர் என்ற தேவசாதியர்களும், இந்திரனும் பிரும்மனும் முனிவர்களும் அக்காட்சியைக் கண்டு, பொன்மயமான புதிய தேவலோக மலர்களைக் கொண்டு பூஜித்து வணங்கினர்; பெரிய போர்க்களத்தில் சுத்த வீரனுகிய விசயன் கணையால் உயிர்போகவும், குற்றமற்ற நாராயணனைத் தரிசிக்கவும் பெற்றேன், என்று கர்ணன் அகம் மகிழ்ந்தவனுனன், என்பது பொருள். தன்னளவில் குற்றம் இல்லாமையோடு, தனது சரீரமாகிய சராசரங்களின் குற்றமும் தன்னைச் சேரப் பெருதவன், என்ற கருத்தில், அமல நாரணன், என்ருர்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**246.** **அருந்தழன்மா மகம்புரிந்துங் கடவுட் கங்கை**
**யாதியாம் புனல்படிந்து மனல யோகத்(து)**
**இருந்துமணி மலர்தூவிப் பூசை நேர்ந்தும்**
**எங்குமா கியவுன்னை யிதயத் துள்ளே**
**திருந்தநிலை பெறக்கண்டும் போக மெல்லாஞ்**
**சிறுகியனைத் துயிருக்குஞ் செய்ய வொண்ணுப்**
**பெருந்தவங்கண் மிகப்பயின்றும் பெறுதற் கெட்டாப்**
**பெரும்பயனின் றிருவருளாற் பெறப்பெற் றேனே**

[அரு தழல் மாமகம் புரிந்தும், கடவுள் கங்கை ஆதி ஆம் புனல் படிந்தும், அனல யோகத்து இருந்தும், அணி மலர் தூவி பூசை நேர்ந்து, எங்கும் ஆகிய உன்னை இதயத்துள்ளேயே திருந்த நிலை பெற கண்டும், போகம் எலாம் குறுகி அனைத்து உயிருக்கும் செய்ய ஒண்ணு பெருந் தவங்கள் மிக பயின்றும் பெறுதற்கு எட்டா பெரும்பயன் நின் திருவருளால் பெற பெற்றேன், ஏ.]

**விளக்கம்:-** அருந்தழல் மாமகம்-வேள்வி. அனல யோகம்-பஞ்சாக்னி மத்தியில் நின்று செய்யும் அஷ்டாங்க யோகம்,

வேள்விகள் செய்தும், கங்கை முதலிய புண்ணிய நதிகளில் நீராடியும், அஷ்டாங்க யோகம் செய்தும், மலர் கொண்டு பூஜித்தும், எங்குமாய் வியாபித்துள்ள உன்னைத் தியானத்தால் உள்ளத்தில் நிலைபெறக் கண்டும், போகம் நசிக்க அனைத்து உயிர்களுக்கும் செய்யமுடியாத பெரிய தவங்களை மிகுதியாகச் செய்தும் அடைவதற்கு முடியாத பெரிய பயனை உனது திருவருளால் அடையப் பெற்றேன்,—என்பதாம். பெரிய பயன்-காட்சி கொள்ளுதலாகிய பெரிய பயன், அல்லது மோட்சம்.

**247.** **நீலநெடுங் கிரியுமழை முகிலும் பவ்வ**
**நெடுநீருங் காயாவு நிகர்க்கு மிந்தக்**
**கோலமும்வெங் கதைவாளஞ் சங்கு நேமி**
**கோதண்ட மெனும்படையுங் குழைத்த வாச**
**மாலைநறுந் துழாய்மார்புந் திரண்ட தோளும்**
**மணிக்கழுத்துஞ் செவ்விதழும் வாரி சாதக்**
**காலைமல ரெனமலர்ந்த முகமுஞ் சோதிக்**
**கதிர்முடியு மிம்மையிலே கண்ணுற் றேனே.**

[நீலம் நெடுகிரியும், மழை முகிலும், பவ்வம் நெடு நீரும், காயாவும் நிகர்க்கும் இந்த கோலமும், வெம் கதை வாளம் சங்கு நேமி கோதண்டம் எனும் படையும், குழைத்த வாசம் மாலை நறு துழாய் மார்பும், திரண்ட தோளும், மணி கழுத்தும், செம் இதழும் வாரிசாதம் காலை மலர் என மலர்ந்த முகமும், சோதி கதிர் முடியும் இம்மையிலே கண்ணுற்றேன், ஏ.]

**விளக்கம்:-** நீல மலை, கார்மேகம், கடல்நீர், காயாமலர் ஆயவற்றை ஒக்கும் திருமேனியும், பஞ்சாயுதங்களும், தளிர்த்த வாசனையுடைய நல்ல துளசி மாலை அணிந்த மார்பும், திரண்ட தோள்களும், அழகிய கழுத்தும்; சிவந்த இதழும், காலை நேரத்தில் மலர்ந்த தாமரை போன்ற மலர்ச்சி கொண்ட திருமுகமும், ஒளி மிகுந்த திருமுடியும், இப்பிறப்பிலேயே, எனது இக்கண்களால் காணப் பெற்றேன், என்று கர்ணன் கூறி மகிழ்ந்தான், என்பதாம்.

வாரி சாதம்-நீரில் உண்டாவதான தாமரை. சோதிக் கதிர், ஒரு பொருட் பன்மொழி.

**248.** **தருமன்மகன் முதலான வரிய காதற்**
**றம்பியரோ டமர்மலைந்து தறுக ணண்மைச்**
**செருவிலென துயிரனைய தோழற் காகச்**
**செஞ்சோற்றுக் கடன்கழித்தேன் றேவர் கோவுக்(கு)**

**உரைபெறுநற் கவசமுங்குண் டலமு மீந்தேன்**
**உற்றபெரு நல்வினைப்பே றுனக்கே தந்தேன்**
**மருதிடைமுன் தவழ்ந்தருளுஞ் செங்கண் மாலே**
**மாதவத்தா லொருதமியன் வாழ்ந்த வாறே.**

[தருமன் மகன் முதலான அரிய காதல் தம்பியரோடு அமர் மலைந்து, தறுகண் ஆண்மை செருவில் எனது உயிர் அனைய தோழற்காக செம் சோறு கடன் கழித்தேன்; தேவர் கோவுக்கு உரை பெறு நல் கவசமும் குண்டலமும் ஈந்தேன்; உற்ற பெரு நல் வினை பேறு உனக்கே தந்தேன், மருது இடை முன் தவழ்ந்தரு ளும் செம் கண் மாலே, மாதவத்தால் ஒரு தமியன் வாழ்ந்த ஆறே.]

**விளக்கம்:-** இளமையில் மருதிடை தவழ்ந்தருளிய செங்கண் மாலே, என் உயிரனைய தோழனான துரியோதனனுக்காக, அஞ் சாமைக்கும் ஆண்மைக்கும் இடமான போர்க்களத்தில் தருமன் முதலான என் காதல் தம்பியரோடு போர் செய்து செஞ்சோற்றுக் கடன் கழித்தேன், தேவர் கோவுக்குப் புகழ்பெற்ற நல்ல கவச குண்டலங்களைத் தானமாகக் கொடுத்தேன், பொருந்திய பெரிய நல்வினையின் பயனான புண்ணியத்தை உனக்கே தந்தேன் உன்னையன்றித் துணையும் கதியுமில்லாத யான், முன் பிறப்பில் செய்த மாதவத்தின் பயனால், இத்தகை பெருவாழ்வு பெற்ற விதம் வியத்தற்குரியதே,—என்று கர்ணன் கூறினான், என்ப தாம்.

**249. வான்பெற்ற நதிகமழ்தாள் வணங்கப் பெற்றேன்**
**மதிபெற்ற திருவுளத்தான் மதிக்கப் பெற்றேன்**
**தேன்பெற்ற துழாயலங்கற் களப மார்பும்**
**திருப்புயமுந் தைவந்து தீண்டப் பெற்றேன்**
**ஊன்பெற்ற பகழியினா லழிந்து வீழ்ந்தும்**
**உணர்வுடனின் றிருநாம முரைக்கப் பெற்றேன்**
**யான்பெற்ற பெருந்தவப்பே றென்னை யன்றி**
**இருநிலத்திற் பிறந்தோரில் யார் பெற்றாரே ?**

[வான் பெற்ற நதிகமழ் தாள் வணங்கப் பெற்றேன், மதி பெற்ற திரு உளத்தால் மதிக்கப் பெற்றேன், தேன் பெற்ற துழாய் அலங்கல் களபம் மார்பும் திருப்புயமும் தைவந்து தீண்டப் பெற்றேன், ஊன் பெற்ற பகழியினால் அழிந்து வீழ்ந்தும் உணர் வுடன் நின் திருநாமம் உரைக்கப் பெற்றேன், யான் பெற்ற பெருந் தவம் பேறு என்னை அன்றி இரு நிலத்தோரில் யார் பெற்றார், ஏ.]

**விளக்கம்:-** தைவரல் - தடவல், பதியப் பொருந்தல். திருமாலின் திருவடியினின்று ஆகாச கங்கை உண்டானது பற்றி, வான் பெற்ற நதி கமழ்தாள், என்றார். திருமாலின் உள்ளத்தினின்று சந்திரன் தோன்றினன், என்று வேதம் கூறலால், 'மதி பெற்ற திருவுளம்', என்றார்.

கண்ணன் கூற்று

**250.** என்றுமகிழ் வுறவணங்கு மெல்லி மைந்தன்
இன்புறவண் புறவினிலா னிரையின் பின்போய்க்
கன்றுகொடு விளவெறிந்த கண்ணன் றானும்
கன்னனுக்குக் கட்டுரைப்பான் கடவு ணாதன்
அன்றுனது கவசமுங்குண் டலமும் வாங்க
அழைத்தேனுங் குந்தியைக்கொண் டரவ வாளி
ஒன்றொழியத் தொடாதவரங் கொள்வித் தேனும்
உற்பவத்தி னுண்மையுனக் குணர்வித் தேனும்,

[என்று மகிழ்வுஉற வணங்கும் எல்லி மைந்தன் இன்புற, வண் புறவினில் ஆன் நிரை பின்போய், கன்றுகொடு விளவு எறிந்த கண்ணன் தானும் கன்னனுக்கு கட்டுரைப்பான், கடவுள் நாதன் அன்று உனது கவசமும் குண்டலமும் வாங்க அழைத்தேனும், குந்தியைக் கொண்டு அரவ வாளி ஒன்று ஒழிய தொடாத வரம் கொள்வித்தேனும், உற்பவத்தின் உண்மையை உனக்கு உணர்வித்தேனும் - தொடரும்.]

**விளக்கம்:-** எல்லி - ஒளியை உடையவன், சூரியன் கடவுள் நாதன் - இந்திரன். உற்பவம் - பிறப்பு. கர்ணனுக்குக் கண்ணன், தான் நேராகவும் குந்தியைக் கொண்டும் பிறப்பு உணர்த்திய செய்தியைத் தூதுச் சருக்கத்தில் காண்க.

**351.** தக்ககன்றன் மகவான வுரக வாளி
தனஞ்சயனைச் சதியாமற் சாய்வித் தேனும்
மெய்க்கருணை நின்பொருட்டால் யானே யென்று
மீண்டும்போய்த் தேர்வலவன் விசயற் கானன்
எக்கடலு மெக்கிரியு மெல்லா மண்ணும்
இமையோரு மானுடரு மெல்லா மாகி
மைக்கணிளங் கோவியர்நுண் டுகிலுநாணும்
வரிவளையு மடநெஞ்சும் வாங்கு மாலே.

[தக்ககன் தன் மகவு ஆன உரக வாளி தனஞ்சயனை சதியாமல் சாய்வித்தேனும், மெய் கருணை நின்பொருட்டு (ஆல்)

யானே என்று (சொல்லி) மீண்டும் போய் தேர் வலவன் விசயற்கு ஆனன், எ கடலும், எ கிரியும், எல்லா மண்ணும் இமை யோரும் மானுடரும் எல்லாம் ஆகி, மை கண் இளங்கோவியர் நுண் துகிலும் நாணும் வரிவளையும், மட நெஞ்சும் வாங்கும் மாலே.]

**விளக்கம்:-** உரகவாளி - நாகக் கணை. சதியாமல் - அழிக்காமல். சாய்வித்தல் - (தேரைப் பூமியில்) அழுந்தச் செய்தல்; அல்லது (அக்கணையை) அழியச் செய்தல். கண்ணனது ஜகத் சரீரகத்வத்தை மூன்றுமடியும், அவனது சௌலப்பியத்தை நான்காம் அடியும் கூறும்.

கர்ணன் விசயன் கணையால் வீழ்தல்

**252:** **பகலவன்தன் மதலையைநீ பகலோன் மேல்பாற்**
**பவ்வத்திற் படுவதன்முன் படுத்தி யென்ன**
**இகல்விசய னுறுதியுற வஞ்ச ரீகம்**
**எனுமம்பா லவனிதய மிலக்க மாக**
**அகலுலகில் வீரரெலா மதிக்க வெய்தான்**
**அந்தவாசு கமுருவி யப்பா லோடித்**
**தகலுடையார் மொழிபோலத் தரணி யூடு**
**தப்பாமற் குளித்ததவன் றானும் வீழ்ந்தான்.**

[பகலவன் தன் மதலையை நீ பகலோன் மேல்பால் பவ்வத்தின் முன் படுத்தி என்ன, இகல் விசயன் உறுதி உற அஞ்சரீகம் எனும் அம்பால் அவன் இதயம் இலக்கம் ஆக, அகல் உலகில் வீரர் எலாம் மதிக்க எய்தான், அந்த ஆசுகம் உருவி அப்பால் ஓடி, தகல் உடையார் மொழி போல தரணியூடு தப்பாமல் குளித்தது, அவன் தானும் வீழ்ந்தான்.]

**விளக்கம்:-** பகலவன் தன் மதலையை....எய்தான்; அந்த ஆசுகம் தகல் உடையார் மொழிபோல, தப்பாமல் உருவி அப்பால் ஓடி தரணியூடு குளித்தது; அவன் தானும் வீழ்ந்தான்,—என்பது அன்வயம். சூரியன் கடலில் விழுந்து அஸ்தமிக்கு முன், கர்ணனைக் கொல்வாய், என்று (கண்ணன்) சொல்ல, விசயன் அஞ்சரீகம் என்ற கணையை, கர்ணனது இதயமே இலக்காக, உலகத்திலுள்ள வீரர்கள் மதிக்கும்படி தொடுத்தான்; அந்தக் கணை ஞான ஒழுக்கங்களினல் தகுதியுடைய மேன்மக்களின் சொல்லே போல், தவருமல் கர்ணனது மார்பைத் துளைத்துக் கொண்டு அப்பால் சென்று பூமியில் புதைந்தது, கர்ணனும் கீழே விழுந்தான்,—என்பதாம்.

**253.** **கருடனது திருத்தோளிற் கண்ட கோலங்**
**கண்ணினுநெஞ் சினுநிற்கக் கருணை யாதி**
**புருடனது திருநாமந் தனது நாவிற்**
**போகாம னனிவிளங்கப் புதைந்து வாளி**
**வருடமுடல் குளிர்விக்கச் செம்பொற் தேர்மேன்**
**மன்னரெலாம் புடைசூழ வையங் காக்கும்**
**குருடன்மக னருகிருந்து சோகங் கூரக்**
**குற்றுயிரி னுடன்கிடந்தான் கொடையான் மிக்கோன்.**

[கருடனது திரு தோளில் கண்ட கோலம் கண்ணினும் நெஞ்சினும் நிற்க, கருணை ஆதி புருடனது திரு நாமம் தனது நாவில் போகாமல் நனி விளங்க, புதைந்து வாளி வருடம் உடல் குளிர்விக்க, செம் பொன் தேர்மேல் மன்னர் எலாம் புடைசூழ, வையம் காக்கும் குருடன் மகன் அருகு இருந்து சோகம் கூர, குறு உயிருடன் கிடந்தான் கொடையான் மிக்கோன்.]

**விளக்கம் :-** கருடனது திருத்தோளில் கண்ட கருணை ஆதி புருடனது கோலம் கண்ணினும் நெஞ்சினும் நிற்க, திருநாமம் தனது நாவில் போகாமல் நனி விளங்க, வாளி வருடம் (வருஷம்) புதைந்து உடல் குளிர்விக்க, மன்னர்....சோகம் கூர, கொடையான் மிக்க கோன் செம்பொன் தேர்மேல் குறு உயிருடன் கிடந்தான்,—என்பது அன்வயம்.

எம்பெருமானது திவ்ய வடிவம் கண்ணிலும் மனத்திலும் நிலைத்திருக்கவும், அவனது திருநாமம் நாவில் விளங்கவும் (அதாவது நா உச்சரிக்கவும்) (விசயனது) கணை மழை புதைந்து உடலைக் குளிர்விக்கவும், மன்னர் சூழ்ந்து நிற்கத் துரியோதனன் வருந்தவும், ஈகையால் மிகுந்தவனான கர்ணன், தேர்மேல் குற்றுயிருடன் கிடந்தான்,—என்பதாம்.

குந்தி களம் வந்து புலம்பல்

**254.** **முந்தியெதிர் பொரும்விசயன் தொடுத்த கோலான்**
**முடிசாய்ந்தின் றைவருக்கு முன்னோன் வீழ்ந்தான்**
**அந்திபடி வதன்முன்னே யாவி போமென்(று)**
**அசரீரி யெடுத்துரைப்ப வன்னை யான**
**குந்திதன துளமுருகக் கண்ணீர் சோரக்**
**குழல்சரியப் போர்க்களத்துக் கோகோவென்று**
**வந்திருகை தலைபுடைத்துத் தலைநா ளீன்ற**
**மகவின்மேல் வீழ்ந்தழுதாண் மன்னோ மன்னோ.**

["முந்தி எதிர்பொரும் விசயன் தொடுத்த கோலால் முடி சாய்ந்து, இன்று ஐவருக்கும் முன்னேன் வீழ்ந்தான், அந்தி படுவதன் முன்னே ஆவி போம்'', என்று அசரீரி எடுத்து உரைப்ப, அன்னை ஆன குந்தி, தனது உளம் உருக, கண்ணீர் சோர, குழல் சரிய போர்க்களத்து கோகோ என்று வந்து இருகை தலை புடைத்து, தலைநாள் ஈன்ற மகவின் மேல் வீழ்ந்து அழுதாள், மன்னே, மன்னே.]

**விளக்கம் :-** விசயன் அம்பால் இன்று கர்ணன் வீழ்ந்து குற்றுயிருடன் கிடப்பதை அசரீரி சொல்ல, குந்தி களம் வந்து மகன்மேல் விழுந்து அழுதாள் - என்பதாம். கோகோ, சோகக் குறிப்பு, மன்னே மன்னே, அசை; இரக்கப்பொருளுமாம்.

**255.** **என்றேயென் தாதையுழைக் கன்னி மாடத்(து)**
**எழிலிரவி திருவருளா லீன்றே னீன்ற**
**அன்றேபொற் பெட்டகத்திற் கங்கை யாற்றில்**
**ஆமுறையா லுனைவிடுத்தே னருளி லாதேன்**
**வென்றேமண் கவர்தருமன் மதலைக் காவி**
**மித்திரனானது கேட்டுன் வீரங் கேட்டு**
**நன்றேயென் றவப்பயனென் றுன்னி வாழ்ந்தேன்**
**நாகமுநீ யரசாள நடக்கின் றாயோ !**

[என்றே என் தாதை உழை கன்னிமாடத்து எழில் இரவி திரு அருளால் ஈன்றேன், ஈன்ற அன்றே பொன் பெட்டகத்தில் கங்கை ஆற்றில் ஆம் முறையால் உனை விடுத்தேன் அருள்இலாதேன்; (சூதினால்) வென்றே மண் கவர்தரு மன் மதலைக்கு ஆவி மித்திரன் ஆனது கேட்டு, உன் வீரங்கேட்டு, நன்றே என்தவம் பயன், என்று உன்னி வாழ்ந்தேன்; நாகமும் நீ அரசு ஆள நடக்கின்றாயோ;]

**விளக்கம் :-** என்றே - என்றோ ஒருநாள். ஆம் முறையால்- (கங்கையில்) செல்லும்படி. மண்கவர்தரு மன் மதலை - (பாண்டவரது) பூமியை வஞ்சனையால் கவர்ந்து கொண்ட துரியோதனன். நாகம் - சுவர்க்கலோகம், செய்யுள் சுலபமானதே.

**256.** **ஓரஞ்சு பேருளரா லறந்த வாத**
**உதிட்டிரனா தியருரகக் கொடியே னாதி**
**ஈரஞ்சு பதின்மருளர் தம்பி மார்கள்**
**இங்கிதங்க ளறிந்தடைவே யேவல் செய்யப்**
**பாரஞ்சு மொருகுடைக்கீழ் நீயே யாளும்**
**பதமடைந்தும் விதிவலியாற் பயன்பெ றாமல்**
**காரஞ்சு கரதலத்தா யந்தோ வந்தோ**
**கடவுளர்தம் மாயையினாற் கழிவுற் றாயே !**

[ஓர் அஞ்சு பேர் உளர் (ஆல்), அறம் தவாத உதிட்டிரன் ஆதியர்; உரகம் கொடியோன் ஆதி ஈர்அஞ்சு பதின்மர் உளர் தம்பிமார்கள்; இங்கிதங்கள் அறிந்து அடைவே ஏவல் செய்ய பார்அஞ்சும் (படி) ஒரு குடைக்கீழ் நீயே ஆளும் பதம் அடைந்ததும், விதி வலியால் பயன் பெறுமல், கார் அஞ்சு கரதலத்தாய், அந்தோ, அந்தோ, கடவுளர் தம் மாயையினுல் கழிவுற்ருயே.]

**விளக்கம் :-** அறம் தவாத - தர்மங்கடவாத. ஈர் அஞ்சு பதின்மர்-நூறுபேர். இங்கிதம் அறிதல் - முகக்குறிப்பால் அறிதல். அடைவே - முறையாக, கார் அஞ்சு காதலத்தாய் - (பயன்கருதாமல் ஈதலில்) மேகமும் அஞ்சிப் பின்னிடும்படியான கைத்தலங்களே உடைய பெரியோனே. பாண்டவரும் துரியோதனுதியரும் ஆன தம்பியர் ஏவல் செய்யப் பார்முழுவதும் நீயே ஆளும் பதம் இருந்தும், ஊழின் வலியாலும், தேவர்களின் வஞ்சனேயாலும், உயிரழிந்து போனுயே,—என்று குந்தி புலம்பினுள், என்பதாம். அந்தோ அந்தோ - ஐயோ, ஐயோ.

**257. என்றென்றே யமர்க்களத்தி னின்று வேந்தர்**
**யாவருங்கேட் டதிசயிப்ப வேங்கி யேங்கி**
**அன்றன்போ டெடுத்தணேத்து முலேக்க ணூற**
**லமுதூட்டி நேயமுட னணித்தா வீன்ற**
**கன்றெஞ்ச வினேந்திணேந்து மறுகா நின்ற**
**கபிலேயைப்போ லென்பட்டாள் கலாபம் வீசிக்**
**குன்றெங்கு மிளஞ்சாயன் மயில்க ளாடும்**
**குருநாடன் திருத்தேவி குந்தி தேவி.**

**விளக்கம்:-** குன்று எங்கும் இளஞ்சாயல் மயில்கள் கலாபம் வீசி ஆடும் குரு நாடன் திரு தேவி (ஆன) குந்திதேவி, என்று என்றே அமர் களத்தில் நின்ற வேந்தர் யாவரும் கேட்டு அதிசயிப்ப, ஏங்கி ஏங்கி, அன்று அன்போடு எடுத்து அணைத்து முலேக்கண் ஊறல் அமுது ஊட்டி, நேயமுடன் அணித்தா ஈன்ற கன்று எஞ்ச இணேந்து இணேந்து மறுகா நின்ற கபிலேயைப்போல் என் பட்டாள்,—என்பது அன்வயம். ஏங்கி ஏங்கி - மிகப் புலம்பி. அணித்தா - சமீப காலத்தில். இணேந்து - வருந்தி. மறுகா நின்ற - கலங்கி நின்ற. கபிலே - பசு. செய்யுள் சுலபமானதே.

குந்தியின் மகன் கர்ணன் என்பதை எவரும் இதுவரை அறியாராதலின், அதிசயித்தார். மிகுந்த அன்பின் பயன் முலேயில் பால் சுரத்தல்.

## கர்ணன் ஆவி விண் அடைதல்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**258.** **அன்னைமடி யினுங்கரத்து முடல்கிடப்ப**
**வங்கர்பிரா னுவி தாதை**
**தன்னைமரு வுறத்தழுவித் தானமுறக் கிளர்ந்ததவண்**
**டடுமா ருமல்**
**மின்னைவலி யுறநீட்டி யண்டமுக டசையாமல்**
**விண்ணோர் தச்சன்**
**பொன்னையழ கெழப்பூசி யொளிபிறங்க நாட்டியதோர்**
**பொற்றூ ணொத்தே.**

**விளக்கம்:-** அன்னை மடியினும் கரத்தும் உடல் கிடப்ப, அங்கர் பிரான் ஆவி, அவண் தடுமாருமல், விண்ணோர் தச்சன், அண்டம் முகடு அசையாமல் மின்னை வலி உற நீட்டி, பொன்னை அழகு எழ பூசி ஒளி பிறங்க, நாட்டியது ஓர் பொன் தூண் ஒத்து, (ஏ), தாதை தன்னை மருவுற தழுவி தானம் (ஸ்தானம்) உற கிளர்ந்தது, — என்பது அன்வயம். கர்ணனது உடல் குந்தியின் மடியில் கிடக்க, அவனது ஆவியானது அங்கே அலைந்து தடுமாறுதல் உருதபடி, — அண்ட முகடு அசையாதபடி விசுவ கர்மன், மின்னலை நீட்டி, அதன் மேல் அழகாகப் பொன்னைப் பூசிய தொரு தூண் போன்று, ஒளி வடிவமாகி, தன் தாதையாகிய சூரியனைத் தழுவிப் பின், மேல் உலகத்தில் தனக்குரிய உயர்ந்த இடத்திலே போய்ச் சேர, விளக்கத்தோடு மேலெழுந்து சென்றது, — என்பதாம்.

சூரிய மண்டலத்தைக் கடந்து சுவர்க்கம் சேர வேண்டு மாதலால், தாதையைத் தழுவித் தானம் உறக் கிளர்ந்தது, என்ருர். விச்வகர்மன் செய்த மின்னல் தூணைப்போல் ஒளி வடிவங் கொண்டு கர்ணனது ஆவி தனக்குரிய பதம் சென்றது, என்றது தற்குறிப் பேற்றம்.

**259.** **மருத்துதவ வருசண்ட மருத்தாலு மருத்துவான்**
**வழங்கு சோதி**
**உருத்திகழுங் கரியசுட ருருத்தெழுவெங் கனலாலும்**
**உகாந்தந் தன்னில்**
**நிருத்தமிடும் பெரும்பவ்வ நெடுநீத்தம் வறப்பதுபோல்**
**நிருபன் சேனைப்**
**பெருத்தகடல் சுவறியவப் பெருமைதனை யெப்படிநாம்**
**பேசு மாறே.**

[மருத்து உதவ வரு சண்ட மருத்தாலும், மருத்துவான் வழங்கும் சோதி உரு திகழும் கரிய சுடர் உருத்து எழு வெம் கனலாலும், உகாந்தம் தன்னில் நிருத்தம் இடும் பெரு பவ்வம் நெடு நீத்தம் வறப்பதுபோல், நிருபன் சேனை பெருத்த கடல் சுவறிய அ பெருமை தன்னை எப்படி நாம் பேசும் ஆறு, ஏ.]

**விளக்கம்:-** மருத்து - வாயு. (அவன்) உதவ வருசண்ட மருத்து - (வாயு) தந்த பெருங் காற்றைப் போன்ற வீமன். மருத்துவான் - இந்திரன். (அவன்) வழங்கும்...வெம் கனல் - (இந்திரன்) தந்த ஒளியோடு கூடிய உருவம் விளங்கப் பெற்ற, கரிய நிறத்தையுடைய, (தீயைப்போல்) கிளர்ந்து எழும் கொடிய கனல் போல் விசயன். உகாந்தம் - யுக முடிவு. யுக முடிவில் பொங்கி எழும் பெரிய கடலின் மிகுந்த நீர் வெள்ளம் வற்றிப் போவது போல், நிருபன் (துரியோதனன்) சேனைக்கடல் வீமனாலும், விசயனாலும் வற்றிப்போன பெரிய செயலை, நாம் பேசும் விதம் எவ்வாறோ? அதாவது, பேச முடியாது,—என்று கவி கூறியபடி.

துரியோதனன் புலம்பல்

**260. அணையார்தம் படைக்கடலி னருநிலைக்குக் கரையேற**
**லான கோலப்**
**புணையாயெத் திறங்களினும் பகிராம லுற்ற தெலாம்**
**புகழத் தக்க**
**துணையாயென் னுயிர்க்குயிராந் தோழனுமா கியவுன்னைத்**
**தோற்றே னாகில்**
**இணையாரு மிலாவரசே யாரைக்கொண் டரசாள**
**இருக்கின் றேனே.**

[அணையார் தம் படை கடலின் அரு நிலைக்கு கரை ஏறல் ஆன கோலம் புணை ஆய், எ திறங்களினும் பகிராமல் உற்றது எலாம் புகழ தக்க துணை ஆய், என் உயிர்க்கு உயிர் ஆம் தோழனும் ஆகிய உன்னை தோற்றேன் ஆகில், இணை யாரும் இலாத அரசே, யாரை கொண்டு அரசு ஆள இருக்கின்றேன், ஏ.]

**விளக்கம்:-** அணையார் - பகைவர். அருநிலை - கடத்தற்கு அரிய நிலை (பரப்பு). புணை - தெப்பம். எத்திறங்களிலும் - எல்லா வகைகளிலும். பகிராமல் - பேதம் இல்லாமல். பகைவர் படைக் கடலின் அரிய பரப்பைக் கடந்து கரை ஏறுதற்கான தெப்பமாய், எத்திறங்களிலும் பேதம் இல்லாமல் உற்ற இன்ப துன்பங்களை எல்லாம் சொல்லத் தகுந்த துணையாய், என் உயிருக்கு

உயிரான நண்பனுமான உன்னை இழந்தேனாகில், பிறகு யாரைத் துணை கொண்டு அரசாள நான் உயிரோடு இருக்கின்றேன், — என்று துரியோதனன் புலம்பினான், என்பதாம்.

**261.** **சூழ்வேலை யுலகாளுஞ் சூழ்ச்சியுமிப் பெருஞ்செல்வத்**
**துவக்கு நெஞ்சால்**
**வீழ்வேனோ வமராட வீமனொடு தலைநாளில்**
**விளைந்த செற்றம்**
**தாழ்வேனோ வுனையொழிந்துந் தம்பியரை யொழிந்து மினித்**
**தனித்து நானே**
**வாழ்வேனோ வாழ்வேயென் மனவலியே வருகின்றேன்**
**வருகின் றேனே.**

**விளக்கம் :-** (எனது) வாழ்வே, மனவலியே, உன்னை ஒழிந்தும், தம்பியரை ஒழிந்தும், இனி, வேலைசூழ் உலகு ஆளும் சூழ்ச்சியும், இ பெருஞ்செல்வம் துவக்கும் நெஞ்சால் வீழ் வேனோ! அமர் ஆட வீமனொடு தலைநாளில் விளைந்த செற்றம் தாழ்வேனோ! நானே தனித்து வாழ்வேனோ! (ஆதலினால்) வரு கின்றேன், வருகின்றேன், ஏ—என்பது அன்வயம்

வாழ்வே - என் வாழ்விற்குக் காரணமானவனே, சூழ்ச்சி - எண்ணம். துவக்கு - பிணிப்பு. வீழ்வேனோ - விரும்புவேனோ. அமர் ஆட வீமனொடு விளைந்த செற்றம் தாழ்வேனோ - போர் புரியும்படி இளமையில் உண்டான பெரும்பகை தாழப்பெறு வேனோ, அதாவது நீங்கப் பெற்றவன் ஆவேனோ (ஆகமாட்டேன் என்ற படி). ''உன்னையும் தம்பியரை இழந்த பின் அரசாளு கையை நான் விரும்பமாட்டேன். வீமனோடு இளமையில் உண் டான பகையும் நீங்கப்பெறேன். வீமனொடு போர் செய்து உயிர் மாய்ந்து வீரசுவர்க்கம் சேர்வதே தக்கதாகும். ஆகவே, உன் னோடு வந்து விடுகின்றேன்,'' என்று புலம்பினான், என்பதாம்.

**262.** **எனக்கொண்டு சுயோதனன்பே ரிரக்கமுட னழுதரற்ற**
**இருந்த வேந்தர்**
**மனக்கொண்ட வருத்தமுடன் வலியிழந்தோ மெனக்கலுழ**
**வானி னெங்கும்**
**இனக்கொண்டன் முழங்குவபோ லந்தரதுந் துபிமுழங்க**
**இமையோ ரார்ப்பக்**
**கனற்கொண்ட கதிர் புதல்வன் பாடறிந்து மூழ்கியதாற்**
**கடலி னூடே.**

[எனக் கொண்டு சுயோதனன் பேர் இரக்கமுடன் அழுது அரற்ற, இருந்த வேந்தர் மனம் கொண்ட வருத்தமுடன் வலி

இழந்தோம் என கலுழ, வானின் எங்கும் இனம் கொண்டல் முழங்குவபோல் அந்தர துந்துபி முழங்க, இமையோர் ஆர்ப்ப, கனல்கொண்ட கதிர் புதல்வன் பாடு அறிந்து மூழ்கியது (ஆல்) கடலினூடே.]

**விளக்கம் :-** கர்ணன் சுவர்க்கம் வருவது பற்றி, அந்தர துந்துபி முழங்க, வானவர் ஆர்த்தனர், கனல்கொண்ட கதிர் - வெம்மைத்தன்மை கொண்ட சூரியன். பாடு - இறப்பு. சூரியன் அஸ்தமித்ததை, தன்புதல்வன் இறந்தான் என்று கடலில் மூழ்கி னான், என்றது, ஏதுத் தற்குறிப்பேற்றம். இனக்கொண்டல்- மேகங்களின் கூட்டம். ஆல்: அசை. தேவர்களை இருதிணையாலும் கூறலாமாதலால், கதிர் கடலினூடு மூழ்கியது, என்றார்.

விஷயம் அறிந்த பாண்டவர் புலம்பல்

**263.** **பேரறத்தின் மகன்முதலாம் பிள்ளைகளை வருந்தம்மைப்**
**பெற்ற பாவை**
**ஆர்கயற்கண் புனல்சொரிய வழுகின்ற குரலினைக்கேட்**
**டாழி யானை**
**ஓரிமைப்பில் வினவியிட வுள்ளபடி யுரைத்ததற்பின்**
**உருமே றுண்ட**
**கூரெயிற்று நாகம்போற் குலைகுலைந்து தம்முனைப்போய்க்**
**குறுகி னாரே.**

[பேர் அறத்தின் மகன் முதல் ஆம் பிள்ளைகள் ஐவரும் தம்மை பெற்ற பாவை, ஆர் கயல் கண் புனல் சொரிய, அழுகின்ற குரலினை கேட்டு ஆழியானை, ஓர் இமைப்பில், வினவியிட, உள்ள படி உரைத்ததன் பின் உரும் ஏறு உண்ட கூர் எயிற்று நாகம் போல் குலை குலைந்து தம் முனை போய் குறுகினார், ஏ.]

**விளக்கம் ;-** தருமன்முதலான பிள்ளைகள் ஐவரும் தாயின் அழுகுரல் கேட்டு, 'இதுஏன்?' என்று கண்ணனை வினவ, அவனும் இமைப்பொழுதில் உள்ளபடியே கூறியபின், பேரிடியைச் செவியேற்ற நாகம் போல் நடுநடுங்கி, தம் முன்னவனான கர்ண னிடம் போய்ச் சேர்ந்தார், என்பதாம்.

**236.** **கன்னியிளம் பருவத்தி லரியமா வெனுங்கடவுள்**
**காதல் கூர**
**மன்னியமந் திரமெமக்கு மின்றளவு முரைத்திலையான்**
**மறந்தாய் கொல்லோ**

**பின்னியசெஞ் சடைக்குழலா யீதென்ன பேரறிவு**
**பெற்ற தாயின்**
**அன்னியநன் றுயிருந்த திப்படியே பிழைப்பிப்ப**
**தறிந்தி லேமே.**

கன்னி இளம் பருவத்தில் அரியமா எனும் கடவுள் காதல் கூர, மன்னிய மந்திரம் எமக்கு இன்று அளவும் உரைத்திலை, (ஆல்); மறந்தாய் கொல்லோ? பின்னிய செஞ்சடை குழலாய், ஈது என்ன பேர் அறிவு? பெற்றதாயின் அன்னியம் நன்று ஆய் இருந்தது; இப்படியே பிழைப்பிப்பது அறிந்திலேம், ஏ.

**விளக்கம்:-** சடையாய் திரித்த கூந்தலை உடையவளே, உனது கன்னிப் பருவத்தில் சூரியன் காதல் கொள்ளும்படி உன்னிடம் பொருந்திய மந்திரம் பற்றி இதுவரையில் எங்களுக்கு நீ சொல்லவில்லையே; அதை மறந்தனையோ? இது என்ன அறிவு? பெற்ற தாயினும் அன்னியமான சுற்றமே நன்றாகின்றது. இப்படி எங்களைப் பிழைப்பிப்பதை-அதாவது முன்னவனைக் கொல்லுமாறு செய்வதை நாங்கள் எங்கும் கண்டிலமே, என்று தருமன், புலம்பினான், என்பதாம்.

பெற்ற தாயாயிராமல் அன்னியமாயிருந்தால், தங்களைப் பிழை செய்யுமாறு செய்தல் நேராதாகையால், ''பெற்ற தாயினும் அன்னியம் நன்று,'' என்றான், என்க. அரியமா—சூரியன்.

**265.** **ஊற்றிருந்த விழியினளா யுனைப்பயந்தாண் மனம்மறுக**
**உயிராய் நின்ற**
**காற்றிருந்த விடந்தேடிக் கணைபலவு முடல்குளிப்பக்**
**கன்னு வின்று**
**கூற்றிருந்தபதி தேடிக் குடியிருக்க நடந்தனையோ**
**கொற்ற வேந்தாய்**
**வீற்றிருந்திங் கைவேமு மடிவருடப் புவியாள**
**விதியி லாதாய்.**

[ஊற்று இருந்த விழியினள் ஆய் உனை பயந்தாள் மனம் மறுக, உயிர்ஆய் நின்ற காற்று இருந்த இடம் தேடி கணை பலவும் உடல் குளிப்ப, கன்னு இன்று கூற்று இருந்த பதி தேடி குடி இருக்க நடந்தனையோ! கொற்றம் வேந்து ஆய் வீற்றிருந்து இங்கு ஐவேமும் அடி வருட புவி ஆள விதி இலாதாய்.]

**விளக்கம் :-** இது வீமனது புலம்பல். ஐவரினும் கர்ணன் மூத்தவனாதலால், ஐவரும் பணி செய்யப் புவியாளும் முறை

யிருத்தல் பற்றி, 'புவியாள விதியிலாதாய்', என்றுன், என்க. ஊற்றிருந்த விழியினள் - ஊற்றைப் போல் நீர் சுரக்கும் கண்ணை உடையவள்.

**266.** **ஊன்றெடுத்த வயவ்ாளி யெத்தனையா யிரந்தொடுத்தே**
**உரகத் தானீ**
**தான்தொடுத்த கடுங்கணைக்குத் தப்பினே னெனமகிழ்ந்**
**தேன்**
**சஞ்ச ரீகத்**
**தேன்றெடுத்த மலரலங்கற் றினநாதன் சேயேநின்**
**திருமார் பத்தில்**
**யான்றெடுத்த நெடும்பகழி யெனைக்கெடுப்ப த றிந்திலேன்**
**என்செய் தேனே.**

**விளக்கம்:-** சஞ்சரீகம் (வண்டுகள்) சேர்க்கும் தேன் நிறைந்த மலர் மாலை அணிந்த தின நாதன் (சூரியன்) புதல்வனே, ஊன் பொருந்திய வயவாளிகளை ஆயிரக் கணக்கில் (உன் மேல்) தொடுத்தேன், நீ தொடுத்த நாகக் கணைக்குத் தப்பினேன், என்று மகிழ்ந்தேன்; உன் திருமார்பில் நான் தொடுத்த நெடுங்கணைகள் என்னைக் கெடுப்பதை அறியாமற் போனேன்; என்ன காரியம் செய்து விட்டேன்,—என்று அருச்சுனன் புலம்பினுன், என்பதாம். தன் சரம் தமையனையே அழித்ததனுல், என்னைக் கெடுப்பது அறிந்திலேன், என்றுன்.

**267.** **யாயுரைத்த தல்லாது வேறுரைத்த தசரீரி**
**யென்னுந் தேவின்**
**வாயுரைத்த தின்றளவுங் கேட்டிலேன் கேட்டனமேல்**
**வாட்ட முண்டோ**
**பேயுரைத்துத் தாலாட்ட முலைப்பாலோ டுயிருண்ட**
**பித்தா வீண்டை**
**நீயுரைத்த பிறகறிந்தோ மெம்முனையின் றெமைக்**
**கொண்டே**
**நேர் செய்தாயே.**

**விளக்கம்:-** பூதனை என்ற பேய்ச்சி (தாய் என்று) சொல்லிக் கொண்டு தாலாட்ட, (அவள் தந்த) முலைப்பாலோடு (அவள்) உயிர் குடித்த பித்தனே! (கண்ணனே), எம் தாய் இப்போது உரைத்தது அல்லாமல், வேறொருத்தர் சொன்னதையாவது, அல்லது அசரீரி என்னும் தேவின் வாய் உரைத்ததையாவது இன்றுவரையில் கேட்டிலோம்; கேட்டனமேல் எங்களுக்குத் துன்பத்தினுல் ஏற்படும் தளர்ச்சி உளதாமோ! இப்பொழுது, நீ

சொன்ன பிறகே (கர்ணன் தமையன் என்பதை) அறிந்தோம்; எம்மைக் கொண்டே (அவன்) உயிர் ஒழியச் செய்தாயே!—என்று நகுலன் புலம்பினான், என்பதாம். "செய்யத்தக்கது இது, தகாதது இது", என்று அறியாமல் செயற்படுபவன், பித்தன். "பேய்ச்சியின் முலையுண்டதனால், பித்தன் ஆயினை போலும்" என்று கூறினான், என்க.

**268.** **ஆடகனைப் புதல்வனைக்கொண் டழிப்பித்தா யிலங்கை நகர்க்**
**கரசை யன்று**
**வீடணனைப் பகையாக்கிக் கிளையுடனே வீழ்வித்தாய்**
**வேலை சூழ்ந்த**
**நாடறியப் புகுந்தெமக்கு நாயகமாங் கன்னனையு**
**தரன்கை யம்பால்**
**ஈடழியப் பொருவித்தா யிமையோர்கள் வல்விரகு**
**யார் வல்லாரே.**

**விளக்கம்:-** ஆடகன்-இரண்யன். ஈடு–வலிமை. வல் விரகு யார் வல்லார்—(தேவர்களின்) வலிய வஞ்சனையுடைய மாயச் செயலை அறிய வல்லார் யார். "மகனைக் கொண்டு இரண்யனை அழிக்கச் செய்தாய், தம்பியைப் பகையாக்கி இராவணனைக் கிளையோடு அழித்தாய், எங்களுக்குத் தமையனான கர்ணனை விசயனைக் கொண்டு வலி அழித்து மாயச் செய்தாய்; இமையோரின் வல் விரகை யாரே அறியவல்லார்" என்று சகாதேவன் புலம்பினான், என்பதாம்.

தந்தையையும் தமையனையும் மகனையும் தம்பியையுங் கொண்டு திருமால் அழிப்பித்தான், என்ற சிறப்புப் பொருளை, இமையோர்கள் வல் விரகு யார் வல்லாரே, என்ற பொதுப் பொருளால் விளக்கிய இது, வேற்றுப் பொருள் வைப்பு ஆகும்.

**269.** **இவ்வகையே திருத்தமைய னிணையடிக்கீழ் வீழ்ந்தலறித்**
**தாயுந் தாங்கள்**
**ஐவரும்போய்த் தம்பாடி வீடடைந் ராகுலத்தால்**
**அழிந்த நெஞ்சார்**
**பைவருமா சுணத்துவசப் பார்த்திவனைக் கொண்டேதம்**
**பாடி புக்கார்**
**தைவருதிண் சிலைத்தடக்கைச் சகுனிதனை முதலான**
**தரணி பாலர்.**

**விளக்கம்:-** ஆகுலம்-துயரம். பைவரு மாசுணம்-படம் எடுத்தாடும் பாம்பு. தைவரு திண்சிலை-தடவி, அல்லது தீண்டித் தொழில் செய்வதற்குரிய வலிய வில். பாண்டவரும் துரியோதனனும் அவனைச் சேர்ந்தாரும் பாசறை அடைந்தனர்—என்பதாம்.

பதினேழாம் போர்ச்சருக்கம் முற்றும்

கன்னபருவம் முற்றும்

# 9. சல்லிய பருவம்

## பதினெட்டாம் போர்ச் சருக்கம்

### கடவுள் வணக்கம்

எழுசீர் ஆசிரிய விருத்தம்

1. மீனமை கோலநெடு நரசிங்க மாகிநிலம்
விரகால ளந்த குறளாய்
ஆனது சீறுமழு வல்வில்லு வெல்லுமுனை
யலமுற்ற செங்கை யவராய்
வானடர் வந்துதொழ மண்ணடர் யாவரையும்
மடிவிக்க வந்த வடிவாய்
நானவி தங்கொள்பரி யாளாகி நின்றருளும்
நாராய ணய நமவே.

[மீன் ஆமை கோலம் நெடுநரசிங்கம் ஆகி, மாநிலம் விரகால் அளந்த குறளாய், ஆனது சீறும் மழு, வல்வில்லும், வெல்லும் முனை அலம் உற்ற செம் கையவர் ஆய், வான் நாடர் வந்து தொழ மண் நாடர் யாவரையும் மடிவிக்க வந்த வடிவாய், நான விதம் கொள் பரி ஆள் ஆகி நின்று அருளும் நாராயணய நம, ஏ.]

**விளக்கம்:-** மொழி மாற்று முதலியன இல்லாமல் ஆற்றெழுக்காய் நடக்கும் செய்யுள் இது. மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பரசுராம, தசரதராம, பலராம, கிருஷ்ண, கல்கி என்ற பத்து அவதாரங்களை உரிய காலங்களில் எடுத்துத் துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலனம் செய்தருளும் ஆதி தேவனகிய ஸ்ரீமந் நாராயணனைப் புலவர் வணங்கும் செய்யுள் இது. கோலம்-வராகம். ஆனது சீறு மழு-தணியாது பகையைச் சீறும் மழு (கோடரி) இதை ஆயுதமாக உடையவன் பரசுராமன். வல்வில்லு-(உகரம் சாரியை) தசரத ராமனது ஆயுதமான வலிய கோதண்டம். வெல்லும் முனை அலம் - பகைவெல்லும் கூரிய முனையை உடைய கலப்பை; இது, பலராமனது ஆயுதம். வானுலகத்தார் தொழப் பூபாரம் தீர்க்க வந்த வடிவம் கண்ணன். நானவிதம் கொள் பரி ஆள்-பலவித நடை விசேஷத்தையுடைய குதிரையின் வடிவங் கலந்த மனித வடிவம், அதாவது கல்கி. கலியுக முடிவில் அழிந்து வரும் தர்மத்தைக் காக்கக் குதிரை முகத்தோடு கூடிய மனி

தனுய்த் தோன்றித் தருமத்தை நிலை நாட்டும் அவதாரம் கல்கி, என்பது நூற் கொள்கை.

சூரியோதயம்

**2. சிதையத்தன் மைந்தனைய டுந்தன்மை கண்டுமொரு**
**செயலின்றி நீடு துயர்கூர்**
**இதயத்த ளுகியகல் பகலோன்ம றித்தவுண**
**ரெதிரஞ்சு மாறு பொருதான்**
**உதயத்த டங்கிரியு மொளிர்பற்ப ராககிரி**
**யொப்பாக வீசு கதிரின்**
**புதையப்ப ரந்தவக லிருளுந் துரந்துரகர்**
**புவனத்தி னூடு புகவே.**

[சிதைய தன் மைந்தனை அடும் தன்மை கண்டும் ஒரு செயல் இன்றி நீடு துயர்கூர் இதயத்தன் ஆகி அகல் பகலோன், மறித்து அவுணர் எதிர் அஞ்சும் ஆறு பொருதான்,—உதயம் தடகிரியும் ஒளிர் பற்பராக கிரி ஒப்பு ஆக வீசு கதிரின் புதைய பரந்த அகல் இருளும் துரந்து உரகர் புவனத்தினூடு புக, ஏ.]

**விளக்கம்:-** தன் மைந்தனை சிதைய ... அகல் பகலோன், வீசு கதிரன் தட உதயம் கிரியும் ஒளிர் பற்பராக கிரி ஒப்பு ஆக, புதைய பரந்த அகல் இருளும் துரந்து, உரகர் புவனத்தினூடுபுக, மறித்து அவுணர் எதிர் அஞ்சும் ஆறு பொருதான்,—என்பது அன்வயம்.

தன் மகன் அழியும்படி (விசயன்) கொன்ற தன்மை கண்டும் (அதற்கு எதிர் செய்யத்தக்க) செயல் ஒன்றும் இல்லாமல் அகன்ற சூரியன், தனது வெளி விடுகின்ற கிரணங்களால் உதய கிரியும் விளங்குகின்ற பதுமராக ரத்ன மயமான மலைபோல் ஆகவும், உலகம் மறையும்படி வியாபித்துள்ள மிகுந்த இருளும் துரத்தப் பட்டு நாகர் உலகத்தினுள்ளே செல்லவும், மீண்டு வந்து, தனது பகைவர்களான மந்தேகர் என்னும் அசுரர்களை எதிர்த்து அஞ்சு மாறு போர் செய்து வலி அழித்து, உதயமானுன்,—என்பது பொருள். துரந்து, என்பது, செயப்பாட்டு வினைப் பொருளது. பற்பராகம் (பதுமராகம்), நவரத்னங்களில் ஒன்று.

**3. கண்டுஞ்ச லின்றியிர விருகண்ணி லான்மதலை**
**கண்ணீரின் மூழ்கி யெவரைக்**
**கொண்டிங்கெ டுத்தவினை முடிவிப்ப தென்றுயர்ச**
**ஞ்னியோடு மெண்ணி யிருள்போய்**

**உண்டுஞ்சு கித்துமலர் மதுவொன்று சாதிமுத**
**லொண்போது விட்டு ஞிமிறும்**
**வண்டுஞ்சு ரும்புமர விந்தத்த டத்துவர**
**வருவோனை வந்தனை செய்தான்.**

[கண் துஞ்சல் இன்றி இரு கண் இலான் மதலை கண் நீரில் மூழ்கி, எவரைக் கொண்டு இங்கு எடுத்த வினை முடிவிப்பது என்று உயர் சகுனியோடும் எண்ணி, இருள் போய், உண்டும் சுகித்தும் மலர் மது ஒன்று சாதி முதல் ஒள்போது விட்டு ஞிமிறும் வண்டும் சுரும்பும் அரவிந்தம் தடத்துவர வருவோனை வந்தனை செய்தான்.]

**விளக்கம்:-** ஞிமிறும் வண்டும் சுரும்பும் உண்டும் சுகித்தும் மலர், மது ஒன்று சாதி முதல் ஒள்போது விட்டு, அரவிந்தம் தடத்துவர, வருவோனை வந்தனை செய்தான், என்பது ஈற்றடி களின் அன்வயம். கர்ணன் இறந்ததால் உண்டான சோகத்தால் துரியோதனன்,—கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கி, இரவு முழுதும் தூங்குதல் இல்லாமல், சதியில் சிறந்த சகுனியோடு, இப்பொழுது மேற் கொண்ட பகை அழித்தலாகிய காரியத்தை யாரைக் கொண்டு நிறைவெய்தச் செய்வது என்று ஆலோசனை செய்து, (பிறகு) இருள் போக, ஞிமிறு, வண்டு, சுரும்பு என்ற பல சாதி வண்டுகளும், உண்டும் சுகித்தும் (அகம்) மலர்ந்திருப்பதற்கு (மகிழ்தற்கு) இடமான தேன் பொருந்திய சாதிப்பூ முதலிய சிறந்த மலர்களை விட்டு விட்டு, தாமரைத் தடாகம் வந்து சேரும்படி உதித்தவனான சூரியனை வணங்கினான்,—என்பது பொருள். மிஞிறு, என்பது ஞிமிறு, என நின்றது. ஞிமிறு, வண்டு, சுரும்பு, வண்டுகளின் இனபேதம்.

சல்லியனைச் சேனைத்தலைவன் ஆக்கல்

**4. தொல்லாண்மை யெந்தைமுது தந்தைக்கு மைந்துறுது**
**ரோணற்கு மண்ணி னிகர் வே(று)**
**இல்லாத வண்மைபுனை வெயிலோன்ம கற்குமுடன்**
**எண்ணத்த குந்தி றலினான்**
**வில்லாண்மை யாலும்வ டிவாளாண்மை யாலுமயில்**
**வேலாண்மை யாலு மவனே**
**அல்லாது வேறுசில ரிலரென்று சல்லியனை**
**அதியாத ரத்தொ டழையா.**

[தொல் ஆண்மை எந்தை முது தந்தைக்கும், மைந்து உறு துரோணற்கும், மண்ணில் நிகர் வேறு இல்லாத வண்மை புனை

வெயிலோன் மகற்கும் உடன் எண்ண தகும் திறலினுன் வில் ஆண்மையாலும் வாள் ஆண்மையாலும் அயில் வேல் ஆண்மை யாலும் அவனே அல்லாது வேறு சிலர் இலர் என்று, சல்லியனை அதி ஆதரத்தோடு அழையா,—தொடரும்.]

**விளக்கம்:-** வீடுமன் துரோணன் கர்ணன் ஆயவர்க்கும், சம மாகத்தகும் திறலோன் அவனே அன்றி வேறு சிலர் இலர் என்று எண்ணி, அன்போடு சல்லியனை (துரியோதனன்) அழைத்து— (இதுவும் தொடரும் இரு செய்யுள்களும் குளகம்), என்பதாம்.

**5. நீயேயெ னக்குயிரு நீயேயெ னக்குளமு**
**நீயேயெ னக்கு நிதியும்**
**நீயேது ணைப்புயமு நீயேவி ழித்துணையு**
**நீயேய னைத்து நிலையும்**
**நீயேமு னைச்செருவி லதிரதரின் மாரதரில்**
**நிகரற்ற கோவு மதனுல்**
**நீயேமு டித்தியென தெண்ணத்தை யென்றுவகை**
**நிகழாவி யந்து புகழா.**

[நீயே எனக்கு உயிரும், நீயே எனக்கு வளமும், நீயே எனக்கு நிதியும் நீயே துணை புயமும், நீயே விழி துணையும், நீயே அனைத்து நிலையும்; நீயே முனை செருவில் அதிரதரில் மாரதரில் நிகர் அற்ற கோவும்; அதனுல் நீயே முடித்தி எனது எண்ணத்தை என்று உவகை நிகழா, வியந்து புகழா,— தொடரும்.

**விளக்கம்:-** "எனக்கு உயிரும், மனமும், செல்வமும், துணைத் தோள்களும், இருவிழிகளும், எனது எல்லாவித நன்மை வலிமை களுக்குக் காரணமானவனும் நீயே. அதிரதரிலும், மாரதரிலும் ஆற்றலால் நிகரற்ற அரசனும் நீயே. ஆதலால், நீயே எனது (பகை அழித்தலாகிய)எண்ணத்தை நிறைவேற்றி வைப்பாயாக" என்று உவகை தோன்ற, வியந்து புகழ்ந்து, (அடுத்த செய்யுளில் முடியும்), என்பதாம்.

**6. மன்பட்ட வர்த்தனரு மணிமகுட வர்த்தனரு முறையால்வ**
**ணங்க வொளிசால்**
**நன்பட்ட முந்தனது கையால ணிந்துபடை**
**நாலுக்கு நாயக மெனு**
**மின்பட்ட வோடைநுத லிபராசன் வன்பிடரின்**
**மிசைவைத்து கந்த னனரோ**
**என்பட்ட தப்பொழுது குருசேனை மெய்ப்புளகம்**
**எழவொண்கண் முத்த மெழவே.**

[மன் பட்டவர்த்தனரும் மணி மகுடவர்த்தனரும் முறையால் வணங்க, நல் பட்டமும் தனது கையால் அணிந்து படை நாலுக்கும் நாயகம் எனு, மின் பட்ட ஓடை நுதல் இபராசன் வல்பிடரின் மிசை வைத்து உகந்தனன், (அரோ); என் பட்டது அப்பொழுது குரு சேனை, மெய்புளகம் எழ, ஒண் கண் முத்தம் எழ, ஏ.]

**விளக்கம் :-** மன் - பெரிய, பட்டம் - சேனைத்தலைவனுக்குரிய பொன் பட்டம். மின் பட்ட ஓடை — மின்னல் போன்ற நெற்றிப் பட்டம். இபராசன் - பட்டத்துயானை. என் பட்டது - என்ன சந்தோஷப்பட்டது. கண் முத்தம் - ஆனந்தக்கண்ணீர். சல்லியனைத் துரியோதனன் சேனைத்தலைவனாக நியமித்து உவக்க, அவனது சேனையிலுள்ளோர், மகிழ்ந்தனர்,- என்பதாம்.

**7. சேனுப திக்குவரி சைகள்யாவு நல்கியுயர்**
**தெய்வீக மான புனலில்**
**தூனுன மாடிமறை வாணர்க்க நேகவித**
**தானம்சொ ரிந்து துகிலும்**
**தேனுர லங்கல்பல கலனேடெ ணிந்துபொரு**
**தேரிற்பு குந்த னன்வழா**
**வானுளு நாதனதிர் முகிலிற்பு குந்ததென**
**வன்போடு மன்னர் தொழவே.**

[சேனுபதிக்கு வரிசைகள் யாவும் நல்கி, உயர் தெய்வீகம் ஆன புனலில் தூ(ஸ்) நானம் ஆடி, மறைவாணர்க்கு அநேக வித தானம் சொரிந்து,- துகிலும் தேன் ஆர் அலங்கல் பல கலனேடு அணிந்து,பொரு தேரில் புகுந்தனன், வழா வான் ஆளும் நாதன் அதிர்முகிலில் புகுந்தது என, வன்போடு, மன்னர் தொழ, ஏ.]

**விளக்கம்:-** வரிசை-சிறப்பு. தெய்வீகம் ஆன தூய புனலில் நானம் ஆடி-தெய்வத்தன்மையுடைய பரிசுத்தமான நீரில் ஸ்நானம் செய்து. வழா வான் ஆளுநாதன்-தவருமல் தேவ லோகத்தை ஆளும் இந்திரன். சேனைநாதனுக்கு உரிய சிறப்புக்களை அளித்து, ஸ்நானம் செய்து, வேதியருக்குத் தானங்கள் கொடுத்து, பல ஆபரணங்களோடு மாலை அணிந்து, இந்திரன் அதிரும் மேகமாகிய வாகனத்தில் ஏறுவதுபோல் துரியோதனன், மன்னர்கள் வணங்க, போர் செய்வதற்குரிய தேரில் வலிமையோடு ஏறினுன்,—என்பதாம்.

**8. கிருபாரி யன்கடவுண் மருகன்தி கத்தபதி**
**சாலுவன் கிருதன் முதலோர்**
**இருபாலு மன்னர்வர முனிவார் பெருஞ்சேனை**
**யெங்ஙனும் சூழ வரவே**

நிருபாதி பன்றனது சேனுதி பன்றனெடு
நீள்களம் புக்க னனரும்
பொருபார தச்சமர மின்றேமு டிப்பலெனும்
எண்ணத்தி னேடு பொரவே.

[கிருபாரியன் கடவுள் மருகன் திகத்தபதி சாலுவன் கிருதன் முதலோர் இருபாலும் மன்னர் வர, முனிவு ஆர் பெருஞ்சேனே எங்கணுஞ் சூழ வரவே, நிருப அதிபன் தனது சேனுதிபன் தனெடு நீள் களம் புக்கனன், அரும் பொரு பாரதம் சமரம் இன்றே முடிப்பல் எனும் எண்ணத்திேைடு பொர, ஏ.]

**விளக்கம்:-** கிருபாரியன்-கிருபாசாரியன். கடவுள் மருகன்-அவனது தெய்வத்தன்மை பொருந்திய மருமகனுன அசுவத்தாமன். திகத்த பதி-திரிகர்த்த நாட்டு அரசன். கிருதன்-கிருத வர்மா. முனிவு ஆர் பெருஞ்சேனே-கோபம் பொருந்திய பெரிய சேனே. நிருபாதிபன்-அரசர்க்கு அரசனுன துரியோதனன். துரியோதனன், சல்லியனுடனும் மற்ற அரசர்களுடனும் பாரதப் போர் இன்று முடிய வேண்டும் என்ற எண்ணத்துடன் களம் அடைந்தான், என்பதாம்.

9. தாமன்ற ராதிபர்கள் பலரோடும் வலப்புடை
சலிப்பின்றி யணிய விறல்கூர்
மாமன்ற ராதிபர்கள் பலரோடு மிடப்புடை
வகுப்பொடணி யத்தி னகரன்
கோமைந்தன் மைந்தனிரு வோரொடுஞ் சேனேயைக்
கொண்டுறவ ணிந்த னனிகல்
சாமந்தர் மண்டலிகர் முடிமன்னர் சூழ்வரத்
தரணிபதி பின்ன ணியவே.

[தாமன் தராதிபர்கள் பலரோடும் வலம் புடை சலிப்பு இன்றி அணிய விறல் கூர் மாமன் தராதிபர்கள் பலரோடும் இடம் புடை வகுப்பொடு அணிய, தினகரன் கோமைந்தன் மைந்தன் (தம்பியர்) இருவோரொடும் சேனேயை கொண்டு உற, அணிந்தனன் இகல் சாமந்தர் மண்டலிகர் முடிமன்னர் சூழ்வர தரணிபதி பின் அணிய, ஏ.]

**விளக்கம்:-** தாமன்-அசுவத்தாமன். (அவன்) அரசர் பலரோடு வலப்புறம் அணிந்து நிற்கவும், வலிமைமிக்க சகுனி பல அரசர்களோடு இடப்புறம் ஒழுங்காக அணிந்து நிற்கவும், சூர்யனது சிறந்த குமாரனுன கர்ணனது மைந்தன் தன் தம்பியர் இருவரோடும் சேனேயை நடத்திக் கொண்டு முன்னே பொருந்தி நிற்கவும், வலிய சாமந்தர், மண்டலீகர் என்னும் அரசர்

களும், முடிமன்னர்களும் சூழ்ந்து வரவும், தரணிபதி (துரியோதனன்) அணியின் பின்புறத்தில் நிற்கவும் (சல்லியன் சேனையை) அணி வகுத்தான், என்பதாம். சாமந்தர்-ஒரு பேரரசனின் கீழ் சிறுபகுதியை ஆளும் சிற்றரசர்.

பாசறையில் பாண்டவர்

10. ஒருவருமெ னக்குநிக ரில்லையெனு மத்திரன்
புத்திரனை யுரக துவசன்
பொருபடைமு னைக்குரிய சேனைப திப்பெயர்
புனைந்தமை புகன்ற னமினிக்
குருகுலம்வி ளங்கவரு குந்திமைந் தர்களிரவி
குமரனைக் கொன்ற விரவில்
பருவரன்மி குந்துளமி னைந்ததும் பாசறைமு
னைந்ததும் வியந்து பகர்வாம்.

[ஒருவரும் எனக்கு நிகர் இலை எனும் மத்திரன் புத்திரனை உரக துவசன் பொரு படை முனைக்கு உரிய சேனபதி பெயர் புனைந்தமை புகன்றனம், இனி குருகுலம் விளங்க வரு குந்திமைந்தர்கள் இரவி குமரனை கொன்ற இரவில் பருவரல் மிகுந்து உளம் இனைந்ததும், பாசறை முனைந்ததும் வியந்து பகர்வாம்.]

**விளக்கம்:-** மத்திர புத்திரன்-சல்லியன். தனக்கு ஒருவரும் நேரில்லை என்ற எண்ணங்களைக் கொண்ட சல்லியன் துரியோதனன் பொரு படைக்குச் சேனைத் தலைவன் என்ற பெயர் புனைந்ததைக் கூறினோம்; (இனி) குந்திமைந்தர், கர்ணனைக் கொன்ற இரவில் துன்பம் மிகுந்தவர்களாய் வருந்தியதையும், போர் பற்றி ஆலோசனை செய்ததையும், வியந்து கூறுவோம்,—என்பதாம். இது கவிக் கூற்று.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

11. செவ்விரவி திருமகனைச் செகம்புரக்குங் காவலனை
இரவ லோருக்(கு)
எவ்விரவும் விடிவிக்கு மிருகரத்து வள்ளலையின்
றிழந்தோ மென்று
விவ்விரவு நறுமலர்த்தார்த் தருமன்முத லவருந்தம்
விழிநீர் சோர
அவ்விரவி லிமைப்பொழுதுந் தரியாம லழுதரற்றி
யலமந் தாரே.

[செவ் இரவி திருமகனை செகம் புரக்கும் காவலனை இரவலோர்க்கு எ இரவும் விடிவிக்கும் இரு கரத்து வள்ளலை இன்று இழந்தோம் என்று, வி விரவு நறு மலர் தார் தருமன் முதல் ஐவரும் தம் விழி நீர் சோர, அ இரவில் இமைப்பொழுதும் தரியாமல் அழுது அரற்றி அலமந்தார், ஏ ]

**விளக்கம்:-** செவ் இரவி-சிவந்த கிரணங்களை உடைய சூரியன். இரவலோர்-யாசகர். வி விரவு நறுமலர்-வண்டுகள் கூடி மொய்க்கும் மணமுடைய மலர். தரியாமல்-பொறுக்காமல். அலமந்தார்-மிக வருந்தினர்கள்.

சகம், என்பது மோனை நோக்கி **செகம்,** என நின்றது. பாண்டவரில் மூத்தவனுதலால், உலகத்தைக் காக்கும் உரியவன், என்ற கருத்தில் செகம் புரக்கும் காவலன், என்ருர். வீ, என்பது வி, எனக் குறுகியது. சூரியன் தனது ஆயிரங்கரங்களால் இரவை விடிவிப்பதுபோல், கர்ணன் இருகரங்களால் இரவை (யாசித்தலை) விடிவிப்பதால், தந்தையினும் மகன் உயர்ந்தவனுகின்ருன், – என்று கர்ணன் சிறப்பிக்கப்படுகின்ருன். இது **வேற்றுமை** அணியின் பாற்படும்.

**12. சாயைவெறுத் தனளவளிற் றலத்தேவி மிகவெறுத்தாள் தபன னீன்ற**
**சேயைவெறுத் துயிர்கவர்ந்தா னுறவறியான் செயித்தா னென்று [றெயித்தியர்போர்**
**மாயைவெறுத் திடவிளைத்த மாயோனை வெறுத்தனன்மன் மனத்தி யான**
**யாயைவெறுத் தனன்பின்னை விதியைவெறுத் தனன்வீமற் கிளைய கோவே.**

**விளக்கம்:-**தெயித்தியர் போர் செயித்தான், உறவு அறியான் தபனன் ஈன்ற சேயை வெறுத்து உயிர் கவர்ந்தான் என்று, சாயை வெறுத்தனள்; அவளின் தலம் தேவி மிக வெறுத்தாள்; வீமற்கு இளைய கோ வெறுத்திட மாயை விளைத்த மாயோனை வெறுத்தனன், வல் மனத்தி யான யாயை வெறுத்தனன்; பின்னை விதியை வெறுத்தனன், – என்பது அன்வயம்.

தெயித்தியர்-(தைத்தியர்) நிவாதகவசர் காலகேயர் என்ற அசுரர். தபனன்-சூரியன். சூரியன் மனைவியான சாயை விசயனை வெறுத்தது, புத்திரவாத்சல்யத்தினுல். பூதேவி, விசயனை வெறுத்தது, அரசாளுதற்குரியனுன கர்ணனை அவன் கொன்ற தனுல். வெறுத்து, என்பது, பகைத்து, என்ற பொருளது. வெறுத்திட மாயை விளைத்த கண்ணனையும், குந்தியையும்

விசயன் வெறுத்தது, விஷயத்தைத் தெரிவிக்காமல் இருந்தமையால், இறுதியில், எல்லாவற்றிற்கும் காரணமான தன் விதியை விசயன் வெறுத்துக் கொண்டான்.

**13. அற்றையிரா விடிவளவுந் தனித்தனியே யாகுலமுற்
றனிலன் மைந்தன்
மற்றைநால் வருமாலு மன்னவரும் வரூதினியும்
மருங்கு சூழ
இற்றைநாள் வஞ்சினத்தின் குறைமுடிக்க வேண்டுமெனு
மிதயத் தோடும்
பிற்றைநாண் முரசதிர வளைமுழங்கக் களம்புகுந்தான்
பிதாவைப் போல்வான்.**

[அற்றை இரா விடிவு அளவும் தனிதனியே ஆகுலம் உற்று, அனிலன் மைந்தன், மற்றை நால்வரும் மாலும் மன்னவரும் வருதினியும் மருங்கு சூழ, இற்றைநாள் வஞ்சினத்தின் குறை முடிக்க வேண்டும், எனும் இதயத்தோடும், பிற்றை நாள் முரசு அதிர வளை முழங்க களம் புகுந்தான் பிதாவை போல்வான் ]

**விளக்கம் :-** ஆகுலம் – வருத்தம், துயரம். அனிலன்-வாயு. பிற்றைநாள் - அடுத்த நாள் (பதினெட்டாம் நாள்.) பிதாவைப் போல்வான் · தந்தையான வாயுவைப் போன்ற வீமன். (பாண்டவர்) இரவு விடியும் அளவும் வருந்தி, (பிறகு) மறுநாள், தந்தையை ஒத்தவனான வாயு குமாரன் (வீமன்) சபதத்தின் குறையை இன்று முடிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன். மற்றைத் தருமன் முதலிய நால்வரும், கண்ணனும், மன்னவர்களும் சேனையும் சுற்றிவரப் பேரிகைகளும் சங்கங்களும் முழங்கக் களம் அடைந்தான், என்பதாம். பின், என்ற இடைச் சொல், து, ஐ, என்ற சாரியைகள் பெற்றுப் பிற்றை, என நின்றது.

**14. விம்முபெரும் பணையொலியால் விண்டதுகொ லண்டமென
விண்ணோ ரஞ்சக்
கைம்முகமா முதலான கடுஞ்சேனைப் பாஞ்சாலன்
காதன் மைந்தன்
எம்முகமுந் தானாகி யிரதமூர்ந் தணிவகுக்க
வினையோர் யாரும்
தம்முனைவந் தடிவணங்கிப் புடைசூழ்ந்தார் சிறிதுமனஞ்
சலிப்பி லாதார்.**

[விம்மு பெருபணை ஒலியால் விண்டது கொல் அண்டம் என விண்ணோர் அஞ்ச, கை முகம் மா முதல் ஆன கடுஞ்சேனை

பாஞ்சாலன் காதன் மைந்தன், எ முகமும் தான் ஆகி இரதம் ஊர்ந்து அணிவகுக்க, இளையோர் யாரும் தம் முன் வந்து அடி வணங்கிபுடை சூழ்ந்தார், சிறிதும் மனம் சலியாதார்.]

**விளக்கம்:-** கை முகம் மா - யானை. எம்முகமும் தான் ஆகி (ஆக, என்று திரிக்க) - எங்கும் தான் ஆகும்படி நாற்புறமும் (தேரில்) விரைந்து சென்று. சிறிதும் சலிப்பிலாதார் (ஆகிய) இளையோர் - கொஞ்சமும் தளர்ச்சியில்லாதாராகிய வீமன் முதலிய தம்பியர். வாத்தியங்கள் முழங்க திட்டத் துய்மன் படையை அணிவகுக்கப் பாண்டவர் நால்வரும் தருமனை வணங்கி அவன் அயல் நின்றனர்,—என்பதாம். அண்டம் விண்டதோ. என்று தேவர் அஞ்சப் பணை முழங்கியது. என்றது, உயர்வு நவிற்சி.

தருமன் வினவக் கண்ணன் விடை கூறல்

**15. அத்திரயூ கமதாக வரும்பெருஞ் சேனையை வகுத்தாங்**
**கதிப னாகி**
**மத்திரபூ பதிநின்ற வலியனைக்கண் டதிசயித்து**
**மாலை நோக்கி**
**இத்திறமா கியபடையோ டெப்படிநாஞ் சிறுபடைகொண்**
**டெதிர்ப்ப தென்றான்**
**குத்திரமா கியவினைக ளொருகாலுந் திருவுளத்திற்**
**குடிபு காதான்.**

**விளக்கம்:-** ஆங்கு, மத்திர பூபதி வரும் பெரு சேனையை அத்திர யூகம் ஆக வகுத்து, அதிபன் ஆகிநின்ற வலியினை கண்டு, அதிசயித்து, மாலை நோக்கி, குத்திரம் ஆகிய வினைகள் ஒருகாலும் திருஉளத்தில் குடிபுகாதான் (ஆகிய தருமன்), இதிறம் ஆகிய படையோடு நாம் சில படைகொண்டு எப்படி எதிர்ப்பது என்றான்,—என்பது அன்வயம்.

**விளக்கம் :-** அத்திர யூகம் - அஸ்திரம் என்ற ஒருவகை வியூகம் (அணிவகுப்பு), குத்திரம் ஆகிய வினை - வஞ்சனையாகிய செயல்கள், 'சல்லியனால் அணிவகுக்கப்பட்ட பெரிய வலிய சேனையைக் கண்டு, இத்தன்மையதான சேனையை சிறு அளவினதான படையைக் கொண்டு, எப்படி எதிர்ப்பது,?'' என்று தருமன் கண்ணனைக் கேட்டான், என்பதாம்.

**16. வீடுமனைச் சிலைக்குருவாம் வேதியனை நும்முனைமுன்**
**வீடு சேர்த்த**
**நீடுமணிப் பொலங்கழலோர் நின்னருகே நிற்**
**கின்றார் நிகரி லாய்கேள்**

ஆடுதிரைக் கடனீந்தி யேறினர்க்குக் கழிகடத்த
லரிய தொன்றே
தோடவிழ்தார்ச் சல்லியனுக் கிளைப்பரோ வென
துளப மாலே. [மொழிந்தான்

**விளக்கம்:-** நேர் ஒருவர் இல்லாதவனே. கேள்: ''வீடுமனையும், துரோணனையும், கர்ணனையும் அழிவித்த வீரர்கள் உன் அயல் நிற்கின்றார்; ஆடு திரைக் கடல் கடந்த வீரருக்குச் சிறு கழியை (நீர் நிலையைக்) கடத்தல் அரிய காரியம் ஆகுமோ! (அத்தகைய தம்பியர்) சல்லியனுக்கு இளைப்பரோ!'' என்று துளபமால் (கண்ணன்) கூறினான்.—என்பதாம்.

17. வில்லியரில் வேலாளில் வாளெடுத்தோர் தம்மிலொரு
வேந்த ரொவ்வார்
செல்லியல்வெம் பரியாளிற் கரியாளிற் றேராளிற்
சிலர்வே றெவ்வார்
மல்லியல்பொற் றோள்வலிக்குந் தண்டுக்கு மெதிர்ந்துபொர
வல்லார் யாரே
சல்லியனுக் கொப்பார்நின் றம்பியரி லிலரென்றுஞ்
சாற்றி னானே.

[வில்லியரில் வேலாளில் வாள் எடுத்தோர் தம்மில் ஒரு வேந்தர் ஒவ்வார்; செல் இயல் வெம்பரி ஆளில், கரிஆளில், தேர் ஆளில் சிலர் வேறு ஒவ்வார்; மல்இயல் பொன் தோள் வலிக்கும் தண்டுக்கும் எதிர்த்து பொரவல்லார் யாரே? சல்லியனுக்கு ஒப்பார் நின் தம்பியரில் இலர் என்றும் சாற்றினான், ஏ,]

**விளக்கம்:-** செல் இயல் வெம்பரி - பலவிதமான கதியுடன் செல்லுந் தன்மையுடைய கொடிய குதிரை. மல் இயல் - வலிமை பொருந்திய, அல்லது மற்போர்ப் பயிற்சியுடைய. வலிக்கும் தண்டுக்கும் - வலிமையிலும் கதைப் போரிலும். வில்வேல் வாள் வீரர்களிலும், குதிரை யானை தேர் வீரர்களிலும், தொள் வலியிலும், கதைப் பயிற்சியிலும், அவனுக்குச் சமானமானவர் வேறு சிலர் இலர். உன் தம்பியரிலும் அவனுக்கு ஒப்பாவார் இலர், என்று கண்ணன் கூறினான், என்பதாம். வேறு, என்பது, உன்னை அன்றி வேறு எவரும் சல்லியனுக்கு ஒப்பாகார், என்ற பொருளது என்று அடுத்த செய்யுளிலிருந்து தெரிகின்றது.

18. அருவரையோ ரிரண் டிருபா லமைந்தனைய தடம்புயங்கண்
டவனி வேந்தர்
வெருவருபோர் மத்திரத்தான் வேறொருவர்
நின்மே லன்றி [மேற்செல்லான்

**இருவருமே முனைந்துமுனைந் திரவிகடல் விழுமளவும்
இகல் செய்தாலும்
ஒருவரொரு வரைவேற லொண்ணுதின் றுமக்கென்றும்
உரை செய்தானே.**

[அருவரை ஓர் இரண்டு இருபால் அமைந்தனைய தடபுயம் கண்டு அவனி வேந்தர் வெரு வருபோர் மத்திரத்தான் வேறு ஒருவர்மேல் செல்லான் நின்மேல் அன்றி; இருவரும் (ஏ) முனைந்து முனைந்து இரவி கடல் விழும் அளவும் இகல் செய்தாலும் ஒருவர் ஒருவரை வேறல் ஒண்ணுது இன்று உமக்கு, என்றும் உரை செய்தான், ஏ]

**விளக்கம்:-** அரசர்கள் அஞ்சும்படியான மலை போன்ற தோள்களை உடைய சல்லியன், உன்மேலன்றி வேறொருவர் மேல் போர் செய்யச் செல்லான்; சூரியன்அஸ்தமிக்கும் வரையிலும் நீங்கள் போர் செய்தாலும் உங்களுக்கு ஒருவரை ஒருவர் வெல்லுதல் இயலாது என்றும் கண்ணன் கூறினுன், என்பதாம். உன்னுலும் தனியே நின்று சல்லியனை வெல்ல முடியாது, என்று கண்ணன் தெரிவிக்கும் கருத்தது, செய்யுள்.

**19. பார்த்தனெரு வனுஞ்சென்று பரித்தாமா வுடன்மலைய
படைஞ ரோடு
மாத்திரிமைந் தரிலிளையோன் சௌபலனை வெல்லவிகல்
மாவ லோனும்
மூத்தவன்மைந் தரைவெல்ல முனைப்பவனன் மைந்தனெடு
மூண்டு வெம்போர்
கோத்தரும மத்திரத்தார் கோவையுயிர் கவர்தியெனக்
கூறி யிட்டான்.**

[பார்த்தன் ஒருவனும் சென்று பரித்தாமாவுடன் மலைய, படைஞரோடும் மாத்திரிமைந்தரில் இளையோன் சௌபலனை வெல்ல, இகல்மாவலோனும் மூத்தவன் மைந்தரை வெல்ல முனை பவனன் மைந்தனேடு மூண்டு ,வெம்போர் கோதரும, மத்திரத் தார் கோவை உயிர் கவர்தி, என கூறியிட்டான்.]

**விளக்கம் :-** பரிதாமா - அசுவத்தாமா. மாத்திரி மைந்தரில் இளையோன் - சகாதேவன். சௌபலன் - சகுனி. மாவலோன் - குதிரைத் தொழிலில் வல்லவனுன நகுலன். மூத்தவன் மைந்தர் - கன்னனது மைந்தர். பார்த்தன் அசுவத்தாமனெடு போர் செய்ய, சகாதேவன் சகுனியை வெல்ல, நகுலன் கர்ணன் மைந்தரை வெல்ல, வீமனேடு சென்று, நீயே சல்லியனைக் கொல்க, என்று கோத்தருமனுக்குக் கண்ணன் கூறினுன்,—என்பதாம்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**20. கிருபை யாலுயர் கேசவ னிங்கிதக்**
**கேள்விக ளுணர்வுறக் கேட்டுக்**
**துருப தேயனுந் தன்பெருஞ் சேனையைத்**
**துன்றிய வியூகமாத் தொடுத்து**
**நிருபர் யாவருஞ் சூழ்வரத் தாழ்சல**
**நிதியென விதியென நின்றான்**
**பொருப தாகினி யிரண்டினு முனையுறப்**
**போர்வலோர் தூசிகள் பொரவே.**

[கிருபையால் உயர் கேசவன் இங்கிதம் கேள்விகள் உணர்வுற கேட்டு, துருபதேயனும் தன் பெரு சேனையை துன்றிய வியூகமா தொடுத்து, நிருபர் யாவரும் சூழ்வர, தாழ் சலதி என, விதி என நின்றான்; பொருபதாகினி இரண்டினும் முனை உற போர் வல்லோர் தூசிகள் பொர, ஏ,—இதுவும் தொடரும் செய்யுளும் குளகம்.]

**விளக்கம்:-** கிருபை - அருள். கேசவன் - கண்ணன். கேள்விகள் - உபதேச மொழிகள். தாழ் சலதி - ஆழ்ந்த கடல். பதாகினி- சேனை. போர் வல்லோர் தூசிகள் முனை உற பொர - போரில் வல்ல வீரர்களின் தூசிப்படை முற்பட்டுப் போர் செய்ய. கண்ணனது உபதேச மொழிகளைக் கேட்டுத் திட்டத்துய்மன், சேனையை அணி வகுத்துக் கடல் போல் கம்பீரமாகவும், விதிபோலவும் நிற்க, வீரர்களின் முன்னணிப் படை போர் செய்ய, (அடுத்த செய்யுளில் முடியும்) என்பதாம்.

சல்லியன் தருமனோடு பொரல்

**21. ஆய போதினிற் குருபதி பதாகினிக்**
**கதிபதி யாயபூ பதியம்**
**மாய வன்புகன் மொழிப்படி தருமன்மா**
**மதலைமேல் விரைவுடன் வந்தான்**
**காயும் வெங்கனற் கண்ணினன் செவியுறக்**
**கார்முகங் குனித்தசெங் கரத்தான்**
**தீய வாகிய சிலீமுக முரனுறச்**
**சொரிதரு சிங்கவே றனையான்.**

**விளக்கம்:-** ஆய போதினில்...பூபதி, காயும் வெம் கனல் கண்ணினன், செவி உற கார்முகம் குனித்த செம் கரத்தான், தீய ஆகிய சிலீமுகம் உரன் உற சொரி தரு சிங்கம் ஏறு அனையான், அ மாயவன் மொழிப்படி, தருமன் - மா மதலை மேல் விரைவுடன்

வந்தான்,— என்பது, அன்வயம். சல்லியன், கோபத்தோடு அம்புகளைப் பொழிந்து கொண்டு கண்ணன் கூறியபடி தருமன் மேல் போரெழுந்து வந்தான், என்பதாம். குரு நாட்டை இப்பொழுது துரியோதனன் ஆளுதல் பற்றிக் குருபதி, எனப்பட்டான்.

22. எதிரி தேர்வரு வன்மைகண் டிமிழ்முர
செழுதிய கொடிதரா திபனும்
கதிரி னேழ்பரி தேரினுங் கடியதன்
கவன மான் றேரெதிர் கடவி
முதிர மேல்வருங் கணைகளைக் கணைகளான்
முனைகொடு முனைகொள்கார் விசும்பில்
பிதிர்ப டும்படி தொடுத்தனன் றொடித்தடக்
கையினிற் பிடித்தவிற் குனித்தே.

**விளக்கம்:-** எதிரி தேர் வரு வன்மை கண்டு, இமிழ் முரசு எழுதிய கொடி தர அதிபனும், கதிரின் ஏழ்பரி தேரினும் கூடிய தன் கவனம் மான் தேர் எதிர் கடவி, தொடி தட கையினில் பிடித்த வில் குனித்து,-முதிரமேல் வரும் கணைகளைக் கணைகளால், முனைகொடு முனை, கொள் கார் விசும்பில் பிதிர்படும்படி தொடுத்தான்,—என்பது அன்வயம்.

இமிழ் முரசு— ஒலிக்கின்ற முரசம். கதிர்-சூரியன். பிதிர்படும்படி—தூளாகும்படி. சல்லியன் வன்மையோடு வரல் கண்டு தருமன் தன் தேரை அவன் எதிரில் செலுத்தி, மிகுதியாகத் தன் மீது வருகின்ற அம்புகளைத் தனது அம்புகளால் கார்வானில் முனையொடு முனைபட்டுத்தூள் ஆகும்படி (கணைகளைத்) தொடுத்தான், என்பதாம்.

23. கொடிஞ்சி மானெடுந் தேர்களிற் பூட்டிய
கு ரகதக் குரம்படப் படமண்
இடிஞ்சு மேலெழு தூளிமுற் பகல்வரும்
இரவினை நிகர்த்ததவ் விரவு
விடிஞ்ச தாமெனப் பரந்ததத் தேர்களின்
மின்னிய மணிகளின் வெயில்போய்ப்
படிஞ்ச தூளியோர் நடம்பயி லரங்கினிற்
பரப்பிய யெழினிபோன் றதுவே.

[கொடிஞ்சி மால் நெடு தேர்களில் பூட்டிய குரகதம் குரம் பட, மண் இடிஞ்சு மேல் எழு தூளி முன் பகல் வரும் இரவினை நிகர்த்தது; அ இரவு விடிஞ்சது ஆம் என பரந்தது. அ தேர்களின் மின்னிய மணிகளின் வெயில்; போய்

படிஞ்ச தூளி ஓர் நடம் பயில் அரங்கினில் பரப்பிய எழினி போன்றது, ஏ.]

**விளக்கம்:-** கொடிஞ்சி — தேர் உறுப்பு. மால் — பெரிய. குரகதம் — குதிரை. குரம் — குளம்பு. தேர்களில் பூட்டிய குதிரைகளின் குளம்புகள் பட, அதனால் இடிந்து தூள்பட்டு மேலே எழுந்த புழுதி, பகலுக்கு முன்வருகின்ற இரவை ஒத்தது; அவ்விரவு விடிந்தது போல் அத் தேர்களில் மின்னிய இரத்தினங்களின் ஒளி பரவிற்று; (அவ்விரத்தினங்களில்) போய்ப் படிந்த புழுதி நடன மேடையில் இடப்பெற்ற திரைச் சீலையை ஒத்தது,— என்பதாம்.

**24.** **தன்பெருந்தனிச் சங்கினை முழக்கினன்**
**தருமன்மா மதலைவெம் போரில்**
**வன்பெரும்பணைச் சங்கினை முழக்கினன்**
**மத்திரா'திபன்திரு மகனும்**
**நன்பெருந்துளைச் சங்குக ளெழுப்பிய**
**நாதன்வான் முகடுற நண்ணி**
**மின்பெரும்புய லேழுமொத் ததிர்தலின்**
**மிகுகுரற் றனிதமொத் துளதே.**

[தன் பெரு சங்கினை முழக்கினன் தருமன் மாமதலை வெம் போரில், வல்பெரு பணை சங்கினை முழக்கினன் மத்திர அதிபன் திருமகனும்; நல்பெரு துளை சங்குகள் எழுப்பிய நாதம் வான்முகடு உற நண்ணி, மின்பெரு புயல் ஏழும் ஒத்து அதிர்தலின், மிகு குரல் தனிதம் ஒத்து உளது, ஏ.]

**விளக்கம்:-** தருமனும் சல்லியனும் சங்கநாதம் செய்தார்கள். (அவர்களது இரு) சங்குகளின் ஒலியும், வானின் மேலிடத்தை நெருங்கி, மின்னலோடு கூடிய பெரிய ஏழுவகை மேகங்களும் ஒன்று பட்டு அதிர்தலின், அதிகமான ஒலியையுடைய தனிதத்தை (இடியை) ஒத்து இருந்தது, என்பதாம்

**25.** **வில்லெடுத்தனர் வலியுடை நிலையினர்**
**வீக்குநாண் விரல்களிற் றெறித்து**
**மல்லெடுத்ததோள் வலனுற வளைத்தனர்**
**வடிக்கணை முனையுற வடைசிச்**
**செல்லெடுத்தபே ரிடியென முறைமுறை**
**தொடுத்தனர் தேர்களுஞ் செலுத்திக்**
**கல்லெடுத்தெதிர் மலைத்தவா லியுமணிக்**
**கழுத்துடை யவனுமே யனையார்.**

**விளக்கம்:-** கல்(மலை) எடுத்து எதிர் மலைத்த வாலியும், மணி கழுத்து உடையவனுமே அனையார் (ஆகிய தருமனும் சல்லியனும்) தேர்களும் செலுத்தி, வில் எடுத்தனர் (ஆய்) வலி உடை நிலையினர் (ஆய்) மல் எடுத்த தோள் வலன் உற வளைத்தனர் (ஆய்) வீக்கும் நாண்விரல்களின் தெறித்து, வடிகணை முனை உறஅடைசி செல் எடுத்த பேர் இடி என முறை முறை தொடுத்தனர்'— என்பது அன்வயம். நிலை — வில் தொழில் செய்கையில் நிற்க வேண்டிய நிலை. மல் எடுத்த — வலிமை மிகுந்த. வடிகணை முனை உற அடைசி — கூரிய அம்புகளைப் (பேரர்த் தொழிலுக்குப் பொருந்தும் படி) வில்லின் முனையில் வைத்து. செல் — மேகம். முறை முறை - மாறி மாறி, மணி கழுத்து உடையவன் — அழகிய கழுத்தை உடைய சுக்ரீவன். தருமனும் சல்லியனும், வாலி சுக்கிரீவர்களைப் போல் உக்ரமாக விற்போர் புரிந்தனர்,— என்பதாம்.

**26.** **எய்த வம்புக ளிருவர்மெய் யினும்படா**
**திடையிடை யெஃகுடைத் தலைகள்**
**கொய்த வம்புக ளாகியே முழுவதும்**
**விழுந்தன கூறுவ தென்கொல்**
**கைத வம்புக லுறற்கிலா வெண்ணுடைக்**
**கருத்தினர் திருத்தகு வரத்தால்**
**செய்த வம்புரை யறப்பலித் தனையவர்**
**திருக்கணுங் கைகளுஞ் சிவந்தார்.**

[எய்த அம்புகள் இருவர் மெய்யினும் படாது இடை இடை எஃகு உடைதலைகள் கொய்த அம்புகளாகியே முழுவதும் விழுந்தன. கூறுவது என் கொல்? கைதவம் புகலுதற்கு இலா எண் உடை கருத்தினர் திரு தகுவரத்தால், செய்தவம் புரை அற பலித்து அனையவர் திரு கணும் கைகளும் சிவந்தார்.]

**விளக்கம்:-** எஃகு உடைதலைகள் கொய்த அம்புகளாய் — கூர்மை உடைய முனைகள் ஒடிபட்ட அம்புகளாய் (மண்ணில் விழுந்தன). வஞ்சனை உடையது என்று சொல்லுவதற்கு இல்லாத எண்ணத்தையுடைய மனத்தவர்களும், சிறந்த வரங்களைப் பெறும்படி செய்த தவம் பழுதுபடாமல் பலித்தாற் போன்றவர்களுமான இரு வீரர்களும் (போர்வேகத்தால்) கண்ணும் கைகளும் சிவக்கப் பெற்றனர்,— என்பது ஈற்றடிகளின் பொருள்.

வஞ்சனை அற்ற நெஞ்சத்தவர்களும், செய்தவம் பயன் தந்தாற் போன்ற திறல் உடையவர்களுமான இருவீரர்களும், யுத்தஆவேசத்தால் கண்கள் சிவந்தும், இடையருது அம்பு தொடுத்தலால் கைகள் சிவந்தும் போர் செய்கையில், அவர்கள் எய்த அம்புகள்

ஒன்ருேடொன்று மோதி முனை ஒடிபட்டுக் கீழே விழுந்தன; இவ்வாறு அவர்கள் சமப்போர் செய்த சிறப்பை எவ்வாறு பாராட்டிக் கூறுவது;— என்பதாம். கண்ணும் கைகளும் சிவந்தார்; என்றது திணைவழு.

**27. கிரித்த டங்குவ டணையகே சரிநிகர்**
**சல்லியன் முரசகே தனன்றன்**
**பரித்த டந்தனித் தேர்விடும் பாகனைப்**
**பாணமொன் ருற்றலை துணித்து**
**வரித்த டஞ்சிலை நாணறுத் தொருமுனை**
**வாளியால் வடிக்கணை யொன்ருல்**
**விரித்த வெண்குடை மகுடமு மொடித்தனன்**
**வில்வலோ ரெவரினு மிக்கோன்.**

**விளக்கம்:-** வில்வலோர் எவரினும் மிக்கோன், தடகிரி குவடு அனைய, கேசரி நிகர் சல்லியன், முரசகேதனன் தன் பரி தட தனி தேர் விடும் பாகனை பாணம் ஒன்ருல் தலை துணித்து, ஒரு முனை வாளியால் வரிசிலை நாண் அறுத்து, வடிகணை ஒன்ருல் விரித்த வெண்குடை மகுடமும் ஒடித்தனன்,— என்பது அன்வயம். தட கிரிகுவடு அனையவனும், கேசரி (சிங்கம்) நிகர்த்தவனும் ஆன சல்லியன். முரசகேதன் — முரசக் கொடியை உடையவனுன தருமன். குடைமகுடம் — குடையில் மேல் பாகத்திலுள்ள கலசம். சல்லியன், தருமனது பாகனையும், வில்லின் நாணியையும்,குடையின் கலசத்தையும் துணித்தான்,— என்பதாம்.

வீமன் வந்து போர் ஏற்றல்

**28. வலவன் வீழ்ந்ததுந் தனுவினு ணற்றதும்**
**மனத்திலோ ரழுக்கிலா வாய்மைப்**
**புலவன் வெண்குடை யொடிந்தது மேல்வரு**
**போற்றல னேற்றமும் பொருமல்**
**குலவு திண்சிலைக் குரிசிலைத் தம்முனைக்**
**கொண்டவீ ரியமெலாங் கொண்டான்**
**கலவ மாமயி லொழித்துப்பஞ் சானனம்**
**எழுதிய தனிக்கொடிக் கந்தன்.**

**விளக்கம்:-** மனத்தில் ஓர் அழுக்கு இலாவாய்மை புலவன் (தருமன்) வலவன் வீழ்ந்ததும், தனுவின் நாண் அற்றதும்,வெண் குடை ஒடிந்ததும்,மேல்வரு போற்றலன் ஏற்றமும் பொருமல், கலவம் மமாயில் ஒழித்து பஞ்சானனம் எழுதிய தனி கொடி கந்தன்

(போன்ற வீமன்) குலவு திண் சிலை குரிசிலை, தம் முனைக்கொண்ட வீரியம் எலாம் கொண்டான், என்பது அன்வயம்.

புலவன் — அறிஞன் (தருமன்). போற்றலன் — பகைவன் (சல்லியன்). கலவம் மாமயில் — தோகையுடைய சிறந்த மயில். பஞ்சானனம் — (பஞ்சாநநம்) சிங்கம். வீரியம் — பெருமை. தன் தமையன் வலியழிந்ததைப் பொருமல், மயிலை ஒழித்துச் சிங்கத்தைக் கொடியிலே கொண்ட முருகக் கடவுளை (வீரத்தில்) ஒத்தவனான வீமன், (போர்ஏற்று) சல்லியனது பாகன், வில், குடை, ஆகியவற்றை அழித்து, தருமனிடமிருந்து அவன் கவர்ந்து கொண்ட வீரப்பெருமகலை, அவனிடமிருந்து கவர்ந்து கொண்டான், — என்பதாம். அதாவது, தருமனுக்குச் சல்லியன் செய்த அழிவைத் தருமனது தம்பியும், அவனுக்குச் செய்தான், என்பது கருத்து.

**29. தனது திண்கையிற் சரத்தினுந் தம்பிகைச்**
**சரம்விரைந் துடற்றலிற் றடக்கைக்**
**கனத னுத்தனை யூன்றிநின் றிருவருங்**
**கணக்கற மலையுமா கண்டான்**
**எனது தோள்களி லிளையவன் தனக்குவே**
**றியாதெனு மெண்ணுடை மனத்தான்**
**விநதை காளையோ டுவமைகூர் வலியினன்**
**வேந்தர்யா ரினும்புகழ் மிக்கோன்**

**விளக்கம்:-** விநதை காளையோடு வலிமை கூர்வலியனன், வேந்தர் யாரினும் புகழ் மிக்கோன், தனது திண் கையின் சரத்தினும் தம்பி கை சரம் விரைந்து உடற்றலின், எனது தோள்களில் இளையவன் தனக்கு வேறு யாது எனும் எண் உடை மனத்தான் தடக்கை, கன தனுதனை ஊன்றி நின்று, இருவரும் கணக்கு அற மலையும் ஆ(று) கண்டான்,— என்பது அன்வயம்.

விநதை காளை—விநதையின் மகனான கருடன். கருடனோடு ஒப்புமை மிகும்படியான வலியுடையவனும், வேந்தர் யாரினும் கீர்த்தியால் மிகுந்தவனுமான தருமன், தனது சரத்தினும் தம்பி கைச்சரம் விரைந்து சென்று தாக்கலின், "எனது தோள்களிலும் தம்பிக்கு வேறுபாடு யாது?" என்ற எண்ணத்தினனாய், தனதுகை வில்லை ஊன்று கோலாகக் கொண்டு நின்று, தம்பியும் சல்லியனும் அளவு இல்லாமல் போர் செய்யும் விதத்தைக் கண்டான்,— என்பதாம். எனது தோள்களில் இளையவன் தனக்கு யாது, என்றது, எனது தோள்களே இளையவன், என்ற பொருளது.

விந்தை என்பவனிடம் காச்யபமுனிவனுக்குப் பிறந்தவன் கருடன்- திருமாலின் வாகன மாதலால், வலிமையிற் சிறந்தவன்.

**30.** **எந்த வெந்தவெஞ் சாயக மறையுடன்**
**இமையவர் முனிவரர் கொடுத்தார்**
**அந்த வந்தவெஞ் சாயக மடங்கலும்**
**அவரவர் முறைமையிற் றெடுத்தார்**
**முந்த முந்தமற் றுள்ளவா யுதங்களும்**
**முடிமுத லடியள வாக**
**உந்த உந்தவெங் குருதியு மூளையும்**
**உகவுக வுடற்றினு ருரவோர்.**

[எந்த எந்த வெம் சாயகம் மறையுடன் இமையவர் முனிவரர் கொடுத்தார், அந்த அந்த வெம் சாயகம் அடங்கலும் அவர் அவர் முறைமையின் தொடுத்தார்; முந்த முந்த மற்று உள்ள ஆயுதங் களும் முடி முதல் அடி அளவு ஆக உந்த உந்த (அதனல்) வெம் குருதியும் மூளையும் உக உக உடற்றினுர் உரவோர்.]

**விளக்கம்:-** எந்தெந்த அஸ்திரங்களைத் தேவர்களும் முனிவர் களும் மந்திரத்துடன் கொடுத்தார்களோ அந்தந்தக் கொடிய அத் திரங்களை எல்லாம் அவ்விருவரும் முறையே தொடுத்தார்கள்; ஒரு வருக்கு முன் ஒருவர் (அவ்வத்திரங்கள் தவிர வேருகவுள்ள ஆயு தங்களையும், தலை முதல் கால் வரையிலும் தாக்கும் படியும் (அத னல் வீரர்களின்) இரத்தமும் மூளையும் மிகுதியாகச் சிந்தும்படியும் வலியுடைய வீரர் இருவரும் உபயோகித்துப் போர் செய்தார்கள், என்பதாம்.

வீமன் இளைத்தல்

**31.** **மத்தி ரப்பெயர்ச் சிங்கவே றனையவன்**
**வன்கைவான் படைகளின் மயங்கிப்**
**பத்தி ரப்பெயர் பருத்தகைச் சிறுத்தகட்**
**பாய்மதப் பருஉப்பக டனையான்**
**சித்தி ரக்கதிர் மணிமுடிப் பீடிகைத்**
**திண்டிறற் திகிரியத் தேர்நின்(று)**
**அத்தி ரத்தைவிட் டொருதனிக் கதையுடன்**
**அதிர்ந்துபோ யவனியி லானுன்.**

**விளக்கம்:-** பத்திரம் பெயர் பருத்த கை சிறுத்த கண் பாய் மதம் பருஉ பகடு அணையான் (ஆன வீமன்) மத்திரன் பெயர் சிங்கம் ஏறு அணையவன் (ஆன சல்லியன்), வல் கை வான் படை களின் மயங்கி, அத்திரத்தை விட்டு ஒரு தனி கதையுடன்,

சித்திரம் கதிர் மணி முடி பீடிகை திண்திறல் திகிரி அம் தேர் நின்று அதிர்ந்து போய் அவனியில் ஆனுன்,—என்பது அன்வயம்.

பத்திரம்–சிறந்த வகையைச் சேர்ந்த யானை. பருஉ பகடு-பருத்த ஆண் யானை. மத்திரன் பெயர்-மத்திரராசன் என்ற பெயர். சித்திரம் கதிர்மணி முடி பீடிகை திண்திறல் திகிரி அம் தேர்-வியத்தற்குரிய ஒளியையுடைய அழகிய சிகரத்தையும், பீடத்தையும், வலிய சக்கரங்களையுமுடைய தேர். பத்திரம் என்ற ஆண்யானை போன்றவனுன வீமன், ஆண் சிங்கம் போன்ற சல்லியனது வலிய ஆயுதங்களால் மயங்கி, அத்திரங்களை விட்டுவிட்டுத் தன் ஒப்பற்ற கதையுடன் தேரிலிருந்து கீழே இறங்கி வீர முழக்கம் செய்து கோண்டு நிலத்தில் நின்ருன்,—என்பதாம்.

**32. பகைவ னேறிய தேர்விடும் வலவனுந்**
**திகிரியும் பாய்பரி மாவும்**
**புகையெ ழும்படி யிமைத்தகண் விழிக்குமுன்**
**பொடியெழ விடியெனப் புடைப்ப**
**வகைகொ டார்முடி மத்திரத் தலைவனும்**
**மாமறத் தோமரப் படையால்**
**மிகைகொள் வன்றிறல் வீமனை நெற்றியில்**
**எற்றினன் வெற்றிகூர்ந் திடவே.**

**விளக்கம் :-** பகைவன் ஏறிய தேர் விடும் வலவனும் திகிரியும் பாய் பரிமாவும் பொடி எழ, இமைத்த கண் விழிக்கு முன் இடி என புகை எழும்படி புடைப்ப, வகைகொள் தார் முடி மத்திரனும் தலைவனும், மா மறம் தோமரம் படையால் மிகை கொள் வல் திறல் வீமனை வெற்றி கூர்ந்திட தாக்கினுன்,—என்பது அன்வயம். சல்லியனது தேர் குதிரை பாகன் பொடிபடும்படி ஒரு நொடியில் இடியெனப் புகை உண்டாகும்படி (வீமன்) தாக்க, சல்லியனும், வலிமையை மிகுதியாகக் கொண்ட வீமனைத் தோமரத்தால் வெற்றியுண்டாகும்படி தாக்கினுன்,—என்பதாம். தோமரம்-இருப்புலக்கை. மாமறத் தோமரம்-மிகுந்த வலிமையுடைய தோமரம். வகை கொள்தார்-அழகைக் கொண்ட தும்பை மாலை.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**33. தோமரந் தன்னுல் வாயு சுதனமு ரழிந்த போதில்**
**ஏமரு வரிவிற் ருனை யிருபெருஞ் சேனை யோரும்**
**மாமரு தடந்தேர் வாசி மத்தவா ரணங்க ளூர்ந்து**
**தீமரு கான மென்னத் தனித்தனி செருச்செய் தாரே.**

[தோமரம் தன்னுல் வாயு சுதன் அமர் அழிந்த போதில், ஏ மரு வரி வில் தாஊ இரு பெரு சேஊயோரும், மாமரு தட தேர் வாசி மத்த வாரணங்கள் ஊர்ந்து தீ மரு கானம் என்ன தனிதனி செரு செய்தார், ஏ.]

**விளக்கம்:-** ஏ மரு - அம்புகள் பொருந்திய. மாமருதடந்தேர் - குதிரைகள் பூட்டிய தடந்தேர். மத்தவாரணம் - மதயாஊ. தீ மருகானம் என்ன - தீப்பிடித்த காடு என்று சொல்லும்படி. சல்லிய னது தோமரத்தால் வீமன் வலி அழிய, இருதிறத்துச் சேஊ வீரர் களும் உக்கிரமாகப் போர் செய்தார்கள்,—என்பதாம்.

### கர்ண புத்திரர் நகுலனுல் அழிதல்

**34. தேரவன் மைந்தன் மைந்தர் சித்திர சேன னேஊச்**
**சூரிய வன்மன் சித்ர கீர்த்திமுச் சுடரோ டொப்பர்**
**வீரரில் வீர னுன வெம்பரி நகுல னேடும்**
**போரில்வந் தெதிர்த்துத் தாதை போயுழிப் போயினுரே.**

**விளக்கம் :-** முச்சுடரோடு ஒப்பார் (ஆன) தேரவன் மைந்தன் மைந்தர், சித்திரசேனன், ஏஊ சூரிய வன்மன் சித்ர கீர்த்தி (ஆகிய மூவரும்), வீரரில் வீரனுன வெம்பரி நகுலனேடும் போரில் வந்து எதிர்த்து, தாதை போயுழி போயினுர், ஏ,— என்பது அன்வயம்.

முச்சுடர் - சூரியன், சந்திரன், அக்னி. தேரவன் - சூரியன். சித்திரசேனன், சூரியவன்மன், சித்ரகீர்த்தி ஆயவர் கர்ணனது புதல்வர்கள். தாதை போயுழி போயினர் - தந்தையாகிய கர்ணன் போனவிடம் சென்ருர்கள் (இறந்தார்கள்).

### சகுனியும் புதல்வர்களும் தோற்றல்

**35. தசையுற வளர்ந்த பொற்றேட் சகுனியும் தனய ராகி**
**இசையுடன் வளர்ந்த வீர ரிருவரு மிரத மேலோர்**
**நிசையுற மதமா வந்து நெருப்பெதிர் பட்ட தென்ன**
**விசையன திளவ லோடு செருச்சய்து வெந்திட் டாரே.**

**விளக்கம் :-** தசை உற வளர்ந்த - சதை மிகுதியாக வளர்ந்த (சகுனி). தனயர் - (சகுனியின்) புதவர்; இரதமேலேர் - தேரில் ஏறினவர்களாய். நிசை - முகபடாம். சகுனியும் அவனது புத்திரர்களும் தேர் ஏறி வந்து, நெருப்பினிடம் வந்து வலி

ஓடுங்கின மதயானைபோல், நகுலனோடு போர் செய்து பின்னிட்டார்கள்—என்பதாம்.

### கேது தரன் துரியோதனனால் அழிதல்

**36. புயங்கவெம் பதாகை நச்சுப் பொங்கழற் புயங்கம் போல்வான்**
**தயங்குவெங் கழற்காற் கேது தரனெனுந் தனுவ லோனை**
**வயங்குவெஞ் சிறகர்ப் புங்க வயங்கொள்கூர் வாளி யொன்றால்**
**இயங்குக வானி னூடென் றிமையவ னாக்கி னானே.**

**விளக்கம் :–** புயங்கம் - பாம்பு. பதாகை - கொடி. பொங்கு அழல் புயங்கம் - விஷம் பொங்குகின்ற சினத்தையுடைய பாம்பு. விளங்குகின்ற வெவ்விய கழல் அணிந்த கால்களை உடைய (பாண்டவரைச் சேர்ந்த) கேதுதரன் என்ற வில் வீரன், என்பது இரண்டாவது அடியின் பொருள். விளங்குகின்ற கொடிய சிறகுகளை உடைய சிறந்த வயம் கொள் கூர் அம்பு ஒன்றால், துரியோதனன், 'சுவர்க்கம் செல்க', என்று சொல்லி, (கேதுதரனை) தேவனாக்கினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். கேதுதரன் என்ற வில் வீரனைப் பாம்புக் கொடியனான துரியோதனன் அழித்தான், என்பதாம். கொன்றான் என்ற பொருளை, இமையவன் ஆக்கினான், என்று வேறு வகையாகக் கூறிய இது, **பிறிதின் நவிற்சி** அணி ஆகும்.

### சல்லியனும் தருமனும் மீண்டும் பொரல்

**37. இருபெருஞ் சேனை யோரு மிப்படிச் செருச்செய் காலை**
**தருமன்மா மதலை தன்மேற் சல்லியன் றானு மீளப்**
**பொருபரித் தடந்தே ருந்திப் புகைகெழு முனைகொள் வாளி**
**ஒருதொடை தன்னி லோரே ழுரத்துடன் றுரத்தி னானே.**

**விளக்கம் :–** இரு பெருஞ்சேனையும் இப்படிப் போர் செய்கையில், தருமன் மேல், சல்லியன் மறுபடியும், பொரு பரி தடந்தேர் செலுத்தி, ஒரு தொடுப்பில் புகை எழும் முனையைக் கொண்ட ஏழு கணைகளைப் பிரயோகித்தான்,—என்பதாம்.

**38. பின்னரும் விரைவி னோடும் பெய்கணை மாரி சிந்தி**
**முன்னரு முனையி னின்றோர் முதுகிட முரண்டு சீறித்**
**துன்னருந் தடந்தே ராண்மைச் சுமித்திரன் முதலா வுள்ள**
**மன்னரை யிமைத்த கண்கண் மலருமுன் மடிவித் தானே,**

**விளக்கம் :-** பின்னரும் சல்லியன் விரைந்து கணை மழை பொழிந்து கொண்டு போர் முனையின் முன்னிடத்தே தன்னை எதிர்த்து நின்ற வீரர்கள் பின்னிட்டு ஓடும்படி மாறுபாடு கொண்டு சினந்து, நெருங்குதற்கு அரிய தடந்தேரையும் ஆண்மையையு முடைய சுமித்திரன் முதலாகவுள்ள அரசர்களை நொடிப் பொழுதில் அழித்தான், என்பதாம். முன்அரு, என்பதற்கு எண்ணுதற்கு அரிய என்னும் பொருள் கொள்ளலாம். துன்அரு . நெருங்குதற்கு அரிய.

## சல்லியன் வீமனை எதிர்த்தல்

**39.** **தனக்கெதிர் தானே யான சல்லியன் ருனு மீளச்**
**சினக்கனன் மூள வாளச் சிலம்பெனச் சிலையும் வாங்கிக்**
**கனக்குல மேழுஞ் சேரக் கன்மழை பொழிந்த தென்ன**
**முனைக்கடுங் கணையால் வீமன் வடிவெலா மூழ்க**
**வெய்தான்.**

**விளக்கம் :-** வாளம் சிலம்பு - சக்கரவாள கிரி. கனம் - மேகம். தனக்கு நேர் தானேயான சல்லியன், கோபக் கனல் (மனத்தில்) எழ, சக்கரவாள மலைபோல் வில்லை வட்டமாக வளைத்து, சப்த மேகங்களும் ஒன்றுபட்டுக் கல் மழை பொழிந்தது போல், கணைகளால் வீமனது உடல் மறையும்படி பாணப் பிரயோகம் செய்தான், என்பதாம். சிலையும், என்பதிலுள்ள **உம்மை** இசை நிறை.

## சாத்தகியும் நகுல சகதேவரும் வரல்

**40.** **அறைகழல் வீமன் ருனு மங்கர்கோன் பாகன் ருனும்**
**முறைமுறை புரிந்த வெம்போர் மொழிவதற் கியாவர்**
**வல்லார்**
**நறைகெழு தும்பை மாலை நகுலசா தேவ ரென்னும்**
**இறைவருஞ் செங்கண் மாய னிளவலு மிவன்மேற்**
**சென்ருர்.**

**விளக்கம் :-** ஒலிக்கின்ற கழல் அணிந்த வீமனும், கர்ணனது பாகனான சல்லியனும், ஒருவரோடு ஒருவர் முறையே செய்த வெம்போரைப் பற்றிப் பேசுதற்கு எவர் வல்லவர்? **மணம்** வீசுகின்ற தும்பை மாலை சூடிய நகுல சகாதேவர் என்ற **அரசர்** களும், கண்ணனது இளவலான சாத்தகியும் சல்லியன் **மேல்** சென்றனர், என்பதாம்.

**41. சென்றுவெஞ் சிலைகள் கோலிச் சிலைமுக முறுப்புத் தோறும்**
**ஒன்றென வநேக மேவி யொருமுக மாகப் போர்செய்(து)**
**இன்றிவ னுவி கோறு மென்றுசல் லியன்மேற் றங்கள்**
**வன்றிறல் யாவுங் காட்டி மாறில்போர் மலைத்திட்டாரே.**

[சென்று வெம் சிலைகள் கோலி, சிலீமுகம் உறுப்பு தோறும் ஒன்று என அநேகம் ஏவி. ''ஒரு முகம் ஆக போர் செய்து இன்று இவன் ஆவி கோறும்'' என்று சல்லியன் மேல் தங்கள் வல்திறல் யாவும் காட்டி, மாறு இல்போர் மலைந்திட்டார், ஏ]

**விளக்கம்:-** (நகுல சகதேவர், சாத்தகி ஆகிய மூவரும்) சென்று, வெம் சிலை வளைத்து, சல்லியனது அவயவங்கள் எங்கும் ஒன்று போல, அதாவது தொடர்ச்சியாக அநேக அம்புகளை ஏவி, ''(நாம்எல்லோரும்) ஒன்றுபட்டு நின்று போர்செய்து இன்று இவன் உயிரை ஒழிப்போம்'' என்று சொல்லிக்கொண்டு, தங்கள் திறமை முழுதையும் உபயோகித்துச் சல்லியன்மேல் ஒப்பு வேறு இல்லாத போரைச் செய்தார்கள் — என்பதாம்.

**42. மதம்படு வேழ மன்ன மத்திர ராசன் றனும்**
**விதம்படத் திரண்டு போர்செய் வீரர்தம் மெய்களெல்லாம்**
**சதம்படு பகழி யோரோர் தனுக்களி லுருவி யோட**
**இதம்பட வெய்து நக்கா னேவினுக் கிராமன் போல்வான்.**

**விளக்கம்:-** சரத்தொழிலில் இராமன் போன்றவனுன, மதங் கொண்ட யானைபோன்ற சல்லியன், ஒன்றுபட்டுப் பலவிதமாகப் போர் செய்யும் (நகுலனுதி மூன்று) வீரர்களுடைய உடல் எல்லாம், நூற்றுக் கணக்கான அம்புகளை, ஒவ்வோர் உடலிலும் துளைத்துச் செல்லும்படி இதம்பட, அதாவது சிரமமின்றிச் சுலபமாக, எய்து சிரித்தான் — என்பது பொருள். தனு - உடல். எதிரிகள் இளைத்தது கண்டு சல்லியன் நக்கான் என்பது கருத்து.

வீமன் வெகுண்டு தாக்குதல்

**43. தம்பிமார் தளர்ச்சி கண்டு சமீரணன் புதல்வன் சீறித்**
**தும்பைமா மாலை வேய்ந்து தொடுகணை வலிதின் வாங்கி**
**வெம்புபோர் மத்தி ரேசன் வியன்கொடி பாகு வாசி**
**செம்புனீர் சொரிக ளத்திற் சிதறிட வறுத்து வீழ்த்தான்.**

**விளக்கம்:-** தம்பியரும் சாத்தகியும் ஆயவரது தளர்ச்சி கண்டு வீமன் சீறி, சிறந்த தும்பை மாலை அணிந்து தொடு கணை வலிமையோடு தொடுத்து, சல்லியனது பெரிய கொடி, பாகன், குதிரை, ஆயவை குருதி பெருகுகின்ற களத்தில் சிதறும்படி

அறுத்து வீழ்த்தினுன், என்பதாம். சமீரணன் — வாயு. வெம்பு போர் மத்திர ஈசன் – உக்கிரமான போரைச் செய்கின்ற சல்லியன்,

**44. உற்றிரு புறத்துந் திண்டேர்க் குரனுற வுதவி யாய**
**கொற்றவர் பலரும் வீழக் கொடிகுடை கவரி வீழச்**
**சுற்றிய நேமி வாசி துளைக்கரக் கோட்டு நால்வாய்**
**பொற்றைக டுணித்து வீழப் புங்கவா ளிகளுந் தொட்டான்.**

**விளக்கம்:-** (சல்லியனது) இரு புறத்திலும் பொருந்தி (அவனது) திண் தேருக்கு உறுதி பொருந்த உதவியாய் நின்ற வேந்தர் பலரும் விழவும், கொடி குடை கவரி விழவும், அவனைச் சுற்றியிருந்த தேர், குதிரை, துதிக்கையையும் தந்தங்களையும் தொங்குகின்ற வாயையும் உடைய பொற்றைகள் (மலைபோன்ற யானைகள்) அறுபட்டு விழவும் (வீமன்) சிறந்த கணைகளை ஏவினுன், என்பதாம். நேமி - (ஆகுபெயர்) சக்கரங்களை உடைய தேர். துளை கரம் — உள்துளையுள்ள துதிக்கை. நால்வாய் — தொங்குகின்ற வாய். பொற்றை — மலை; இங்கே, மலை போன்ற யானை. புங்கம் வாளி — சிறந்த அம்புகள்.

**45. துருபதன் முதலா வுள்ளோர் சோமகர் முதலா வுள்ளோர்**
**நிருபர்தங் குலத்து ளேனை நிருபர்க ளாகி யுள்ளோர்**
**தருமன்மா மதலை யோடுந் தம்பிய ரோடுங் கூடி**
**ஒருமுக மாகி மேற்சென் றுறுசெருப் புரியும் வேலை.**

**விளக்கம்:-** துருபதன் முதலாகவுள்ள அரசர்களும், சோம குலம் வந்தார் முதலாகவுள்ள அரசர்களும், மற்றும் பல அரசகுலங் களில் தோன்றிய அரசர்களும் ஆகியோர், தருமனேடும் அவனது தம்பியரோடும் ஒன்றுபட்டு (பகைவர்) மேல் சென்று, கடுமைமிக்க போரைச் செய்யுங் காலத்தில், (அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும்), என்பது பொருள்.

வேறு

விசயன் அசுவத்தாமனை நெருங்கல்

**46. அறுதி யாகவின் றருஞ்சமர் முடித்துமென்**
**றறத்தின்மைந் தனுக்கன்பால்**
**உறுதி கூறிய பாகன்வெவ் விரைவுடன் ஊர்ந்தவெம்**
**பரித்தேரோன்**

பெறுதி யாகமா தவம்புரி சிலைமுனி
பெற்றவீ ரனுக்கின்றே
இறுதி நாளென வாங்கவ னணிந்தபே
ரிகலணி யிடைச் சென்றான்.

[அறுதி ஆக இன்று அரு சமர் முடித்தும் என்று அறத்தின் மைந்தனுக்கு அன்பால் உறுதி கூறிய பாகன், வெம் விரைவுடன் ஊர்ந்த வெம் பரி தேரோன், பெறு தியாகம் மாதவம் புரி சிலைமுனி பெற்ற வீரனுக்கு இன்றே இறுதி நாள் என, ஆங்கு அவன் அணிந்த பேர் இகல் அணியிடை சென்றான்.]

**விளக்கம்:-** பாகன் – கண்ணன். தேரோன் — விசயன். தியாகம் பெறு மாதவம் புரி சிலை முனி-தானம் பெறுவதற்குரியவனும் பெரிய தவம் செய்தவனுமான துரோணன். இன்று போரை முற்ற முடித்து விடுவோம், என்று தருமனுக்கு உறுதி கூறிய கண்ணன், விரைந்து செலுத்திய தேரையுடைய விசயன், இன்றே அசுவத்தாமனுக்கு இறுதி நாள் என்று சொல்லும்படி, பகைவர் பக்கத்தில் அணிந்து அசுவத்தாமன் நின்ற பெரிய வலிய அணிவகுப்பினிடத்தே சென்றான்,—என்பதாம்.

47. சென்று போர்புரி யளவையி னருச்சுனன்
செழுமணி முழுநீலக்
குன்று போனிறம் பவளவான் குன்றெனக்
குருதியிற் சிவப்பேற
ஒன்று போல்வன பிறைமுகக் கடுங்கணை
யொருபது தொடுத்திட்டான்
வென்று போர்புரி யவுணரூர் நீறுசெய்
வீரன்மைந் தனையொப்பான்.

[சென்று போர் புரி அளவையின் அருச்சுனன் செழு மணிமுழு நீலம் குன்று போல் நிறம், பவளம் வான் குன்று என குருதியின் சிவப்பு ஏற, ஒன்று போல்வன (ஆன) பிறை முகம் கடு கணை ஒருபது தொடுத்திட்டான், வென்று போர் புரி அவுணர் ஊர் நீறு செய் வீரன் மைந்தனை ஒப்பான்].

**விளக்கம்:-** செழு முழு நீலம் மணி குன்று போல் நிறம் - செழுமையுடைய பெரிய நீலமணிக் குன்று போன்ற (விசயனது) மார்பு. வெற்றியோடு போர் செய்யும் அசுரர்களின் ஊராகிய திரிபுரத்தை நீறாக்கின வீரனான சிவ பெருமானது மைந்தனான முருகக் கடவுளை ஒத்த அசுவத்தாமன், என்பது ஈற்றடியின் பொருள். (விசயன்) சென்று போர் தொடங்கிய அளவில் அவனது நீல மணிக் குன்று போன்ற மார்பு, பவள மயமான

குன்று போல் குருதிப் பெருக்கால் சிவக்கும்படி, அசுவத்தாமன், ஒன்று போல் பத்து அர்த்த சந்திர வாளிகளைப் பிரயோகித்தான், என்பதாம்.

**48. தொடுத்த வம்பினை யம்பினுல் வானிடைத்**
**துணித்திடை நணித்தாக**
**விடுத்த வம்பினுன் மருவலன் பாகனும்**
**வெம்பரி களும்வில்லும்**
**நடுத்த றிந்திட மார்பினுந் தோளினும்**
**நாலிரு கணையெய்தான்**
**எடுத்த வெஞ்சிலை தறிதலு மவனுமா**
**விரதம்விட் டிழிந்தானே.**

[தொடுத்த அம்பினை அம்பினுல் வானிடை துணித்து, இடை நணித்து ஆக விடுத்த அம்பினுல் மருவலன் பாகனும், வெம் பரிகளும், வில்லும் நடு தறிந்திட, (அசுவத்தாமனது) மார்பிலும் தோளிலும் நால் இரு கணை எய்தான்; எடுத்த வெம்சிலை தறிதலும் அவனும் மா இரதம் விட்டு இழிந்தான், ஏ.]

**விளக்கம்-:** இடை நணித்து ஆக - அசுவத்தாமனிடத்தே சமீபித்தது ஆகும்படி. மருவலன்-பகைவனை அசுவத்தாமன். நால்இரு கணை-எட்டு அம்புகள். (மருவலன்) தொடுத்த அம்புகளை (விசயன்) தனது அம்புகளால் தன்மேல் படாமல் வானிலே துணித்து, பகைவனை நெருங்கும்படி எய்த பாணங்களால் பாகன் குதிரை வில் ஆயவற்றை நடுவில் அறுத்து, (அதன்பின்) அவனது மார்பிலும் தோள்களிலும் எட்டு அம்புகளை விடுத்தான் வில் அறுபடவே அசுவத்தாமன் தேரினின்று கீழே இறங்கினுன்,—என்பதாம்.

**49. இழிந்து மீளவும் வேறெரு வில்லெடுத்**
**தெரிமுனை புகைகாலப்**
**பொழிந்த வாளியோ ரளவில வவற்றையும்**
**பொடிபடுத் தினன்பார்த்தன்**
**கழிந்த நீர்க்கணை கோலிவந் தெரிந்துதன்**
**கார்முகக் கட்டாண்மை**
**அழிந்து போயினன் முனிமக னெனவெழுந்**
**தார்த்தது பெருஞ்சேனே.**

**விளக்கம் :-** தேரினின்று இறங்கிய (அசுவத்தாமன்) மீண்டும் வேறெரு வில் எடுத்து, நெருப்பையும் கொடிய புகையையும் வெளிவிடும்படி, பொழிந்த அம்புகள் கணக்கிலாதவையாகும்

அவற்றையும் விசயன் பொடியச் செய்தான். அதனால் "அசுவத்தாமன், கரை கடந்த நீர்ப் பெருக்கைத் தடுக்க அணை கோல முயல்பவன் போல், எதிர்த்து வந்து தன் வில் தொழில் திறம் அழிந்தவனானான்" என்று பாண்டவசேனை உள்ளக் கிளர்ச்சியோடு ஆரவாரம் செய்தன - என்பது பொருள்.

கரை கடந்த வெள்ளத்திற்கு அணையிடல் பயன்படாத தாயிற்று, என்ற கருத்தில், 'கழிந்த நீர்க்கு அணை கோலி' என்றார்.

50. செருப்பு லக்கையா முரலிடை விருதராந்
திணைக்குரல் களைச்சேர
மருப்பு லக்கைகொண் டிடிக்குவெஞ் சினமன
மத்தவா ரணமன்னான்
பொருப்பு லக்கையுற் றலமர வரிந்தவன்
புதல்வன்மே லொருபாரம்
இருப்பு லக்கைகொண் டெறிந்தன னவனும:
தெண்முறி படவெய்தான்

[செரு புலம் கை ஆம் உரலிடை விருதர் ஆம் தினை குரல் களை சேர, மருப்பு உலக்கை கொண்டு இடிக்கும் வெம் சினம் மனம் மத்த வாரணம் அன்னான், பொருப்பு உலக்கை உற்று அலமர அரிந்தவன் புதல்வன் மேல் ஒரு பாரம் இருப்பு உலக்கை கொண்டு எறிந்தனன், அவனும் அஃது எண் முறி பட எய்தான்.]

**விளக்கம்:-** செரு புலம் - போர்க்களம். கை - அணிவகுப்பு திணை குரல் - திணைக்கதிர். பொருப்பு உலக்கை உற்று - மலைகள் அழிதல் எய்தி. அலமர அரிந்தவன்-வருந்தும்படி சிறகு அறுத்த இந்திரன். போர்க்களத்தின் அணி வகுப்பாகிய உரலில்; விருதர் (வீரர்)களாகிய திணைக் கதிர்களை, தனது தந்தங்களால் இடிக்கும் கடிய கோபமுள்ள மனத்தையுடைய மதயானையை ஒத்தவனான அசுவத்தாமன், மலைகள் அழிதல் உற்று வருந்தும்படி சிறகு அரிந்த இந்திரன் மகனாகிய விசயன்மேல் ஒரு கனமுடைய இரும்பு உலக்கையை எடுத்து எறிந்தான்; விசயனும் அது எட்டுத் துண்டாகும்படி சரம் தொடுத்தான், —என்பது பொருள்.

51. உலக்கை யெட்டுறுப் பானபின் னொருதனித்
தண்டுகொண் டுயர்கேள்வி
அலக்கை வித்தக னிளவறேர் விடவரும்
அருச்சுனன் றடந்தோளாம்

**இலக்கை யுற்றிட வெறிந்தன னெறிதலும்**
**இவனவ னெறிதண்டை**
**வலக்கை யிற்றொடு கணைகளாற் பலதுணி**
**யாகவில் வளைத்தானே.**

[உலக்கை எட்டு உறுப்பு ஆன பின், ஒரு தனி தண்டு கொண்டு உயர் கேள்வி அலம் கை வித்தகன் இளவல் தேர் விட வரும் அருச்சுனன்; தடந்தோள் ஆம் இலக்கை உற்றிட எறிந் தனன்; எறிதலும் இவன் எறி தண்டை வலக்கையின் தொடு கணைகளால் பல துணி ஆக வில் வளைத்தான். ஏ.]

**விளக்கம் :-** தண்டு - கதை. உயர் கேள்வி அலம் கை வித்தகன் இளவல்-உயர்ந்த நூல் கேள்வியுடைய, கலப்பையைப் படையாகக் கொண்ட வித்தகனுன (வலிமைகொண்ட) பலரா மனின் தம்பியான கண்ணன். எறிந்த உலக்கை துண்டுபட்ட பின் (அசுவத்தாமன்) ஒரு சிறந்த கதையைக் கையில் கொண்டு, கண்ணன் தேர் செலுத்த வருகின்ற விசயனது தடந்தோளாகிய இலக்கை அடையும்படி எறிந்தான்; எறிதலும், இவன் எறிந்த கதையை (விசயன்) வலக்கையால் தொடுக்கும் கணைகளால், பல துண்டுகள் ஆகும்படி வில் வளைத்தான், என்பதாம்.

**52. பூத்த பைங்கொடி யனையமெய்ப் பூணணி**
**பொதுவியர் தனந்தோயும்**
**தூர்த்தன் வெம்பரித் தேர்விடு மளவுமிச்**
**சுரபதி மகனோடும்**
**கோத்த வம்பினிற் பலபடை களிலமர்**
**கொளுத்துத லரிதென்று**
**பார்த்தன் முன்புநின் றமர்புரிந் திலன்கடற்**
**பார்புகழ் பரித்தாமா.**

[பூத்த பைங்கொடி அனைய மெய் பூண் அணி பொதுவியர் தனம் தோயும் தூர்த்தன் வெம் பரி தேர் விடும் அளவும், இ சுரபதி மகனோடும் கோத்த அம்பினில், பல படைகளில், அமர் கொளுத்து தல் அரிது என்று, பார்த்தன் முன்பு நின்று அமர் புரிந்திலன், கடல் பார் புகழ் பரித்தாமா.]

**விளக்கம் :-** மலர்கள் பூத்த பசிய பூங்கொடி போன்ற, ஆபரணங்கள் அணிந்த மெய்யையுடைய ஆயர்குடிப் பெண்களின் முலைகளில் தோயும் விடனுன கண்ணன் தேர் செலுத்தும் வரை, சுரபதி மகனான விசயனோடு, தொடுக்கும் அம்புகளாலும் வேறு பல ஆயுதங்களாலும் போர் செய்தல் அரிது, என்று எண்ணி உலகம் புகழும் அசுவத்தாமன் பார்த்தன் முன் நின்று போரைச் செய்

திலன், – என்பது பொருள். நேரில்லாப் பராக்ரமசாலியான அசுவத்தாமன் விசயன் முன் நிற்கமாட்டாமல் பின் வாங்கியது, விசயனுக்குக் கண்ணனது துணை இருத்தலால் நேர்ந்ததாகும்.

53. மற்ற வன்தனை முதுகுகண் டவன்றிரு
மாதுலன் கிருபப்பேர்க்
கொற்ற வன்புறந் தரமலைத் தேனைவெங்
கொடுஞ்சிலைக் குலவேந்தர்
முற்றும் வெந்திடப் பொருதுசல் லியனொடு
முனைபட வெதிர்மோதிச்
செற்ற வன்புடை யன்புடைத் தம்முனைத்
தெம்முனை கெடச்சேர்ந்தான்.

[மற்று அவன்தனை முதுகுகண்டு, அவன் திருமாதுலன் கிருபன்பேர் கொற்றவன் புறம்தர மலைத்து, ஏனை வெம் கொடு சிலை குலம் வேந்தர் முற்றும் வெந்திட பொருது, சல்லியனொடு முனைபட எதிர்மோதி செற்ற வன்புடை அன்புடை தம்முனை தெவ்முனை கெட சேர்ந்தான்.]

விளக்கம் :- பிறகு, அசுவத்தாமனை முதுகிடக் கண்டு (வென்று) அவனது சிறந்த மாமனாகிய கிருபன் என்ற பெயருடைய வீரனைப் புறமிடும்படி மலைந்து, மற்றைய கொடிய கொடுசிலை (வளைத்த சிலை) யையுடைய உயர் குலம் வந்த அரசர்கள் அனை வரையும் முதுகிடும்படி போர் செய்து, (அதன்பின்) சல்லியனோடு உக்கிரமாக எதிர் நின்று தாக்கி வென்ற வலிமையுடையவனும், (தன்பால்) அன்புடையவனுமான தமையனை (வீமனை), பகைவர் போர் ஒழியும்படி, அடைந்தான், என்பது பொருள். கொடுமை – வளைவு. முனைபட – உக்ரமாக. தெவ் - முனை - தெம்முனை.

54. தயங்கு வெண்குடைச் சல்லியன் றண்டுடைச்
சமீரணன் மகன்றன்னால்
உயங்கு வெம்பரி பாகுதேர் வரிசிலை யுயர்ந்தவன்
கொடியற்றுத்
தியங்கு கின்றபே ரிறுதிகண் டுயங்குதல்
சிந்தையிற் சிறிதற்ற
புயங்க கேதனன் கண்ணினுக் கிமையெனப்
பொருபடை யுடன்சேர்ந்தான்.

[தயங்கு வெள்குடை சல்லியன் தண்டு உடை சமீரணன் மகன் தன்னால் உயங்கு வெம்பரி, பாகு, தேர், வரிசிலை, உயர்ந்தவள் கொடி அற்று, தியங்குகின்ற பேர் இறுதி கண்டு உயங்குதல்

சிந்தையில் சிறிது அற்ற புயங்க கேதனன், கண்ணினுக்கு இமை என பொருபடையுடன் சேர்ந்தான்.]

**விளக்கம் :-** தயங்கு - விளங்குகின்ற. சமீரணன் - வாயு. உயங்கு -.வருத்தமுற்ற. தியங்குகின்ற பேர் இறுதி - இளைக்கின்ற பெரிய தோல்வியாகிய முடிவு. உயங்குதல் - தளர்தல். பொரு படை - பொருதற்குரிய சேனை. சல்லியனது தோல்வி கண்டு துரியோதனன், கண்ணிற்கு இமைபோல் படையுடன் உதவிக்கு வந்தான், - என்பதாம்.

சல்லியன் மீண்டும் பொரவரல்

**55. சாத்த கிப்பெய ரவன்சமீ ரணன்மகன்**
**நகுலன்வெஞ் சாதேவன்**
**பார்த்த னென்றிவ ரனைவரு மிவர்பெரும்**
**படைத்தலை வனுஞ்சேர**
**ஆர்த்தெ ழுந்துமேல் வருதல்கண் டணிகழ**
**லாளியே றனையானும்**
**பேர்த்து முந்துறத் திருகின னரசொடும்**
**பெரும்படை யொடுமம்மா.**

[சாத்தகி பெயரவன், சமீரணன் மகன், நகுலன், வெம் சாதேவன், பார்த்தன் என்று இவர் அனைவரும், இவர் பெரும் படை தலைவனும் சேர ஆர்த்து எழுந்து மேல் வருதல் கண்டு அணிகழல் ஆளி ஏறு அனையானும், பேர்த்தும் முந்து உற திருகினன், அரசொடும் பெரும்படை யொடும், அம்மா.]

**விளக்கம் -:** சாத்தகியோடு பாண்டவர் நால்வரும், அவர் தம் படைத்தலைவனான திட்டத் துய்மனும், ஆர்த்து எழுந்து தன் மேல் வருதல் கண்டு, ஆண் சிங்கம் போன்ற சல்லியன், அரசனாகிய துரியோதனனோடும் பெரும் படையோடும் மீண்டும் முற்பட்டுத் திரும்பி வந்தான், — என்பதாம்.

**56. தண்டு ழாய்முடி மாயவன் றம்பியைச் சாயகம் பலகோடி**
**கொண்டு தேர்முத லியாவையு மழித்துமெய்**
**குலைந்திடும் படிமோதி**
**மண்டு பாய்பரி நகுலனை யன்புடை**
**மருகனென் றெண்ணுமல்**
**கொண்டல் வாயிடி நெருப்பெனச் சிற்சில**
**கூரவா ளிகளெய்தான்.**

**விளக்கம்:** தண்துழாய் முடி மாயவன் தம்பி-கண்ணனது தம்பியான சாத்தகி. மண்டு பாய் பரி நகுலன்-வேகமாகப் பாய்கின்ற குதிரையையுடைய நகுலன். கொண்டல்-மேகம். சாத்தகியின் வலி அழித்தபின், சல்லியன், தன் மருமகனை (சகோதரி மகனை) நகுலனை, கூரிய அம்புகளைச் செலுத்தித் தாக்கினன்,— என்பதாம்.

**57.** **ஒருகொ டுங்கணை தொடுத்தலும் வென்கொடுத்**
**தோடினன் சாதேவன்**
**இருகொ டுங்கணைக் கிலக்கமா யினன்கருத்**
**தீன்றவ னிருதோளும்**
**பொருகொ டுங்கணை மூன்றினு லருச்சுனன்**
**புயமுமார் பமும்புண்செய்(து)**
**அருகொ டுங்குற நுதலின்மே லம்புநான்**
**கறத்தின்மைந்தனை யெய்தான்.**

**விளக்கம் :-** (சல்லியன்) ஒரு கொடுகணை தொடுத்தலும் சாதேவன் வென் கொடுத்து ஓடினன்; இரு கொடுங்கணைக்கு சமீரணன் ஈன்றவன் (வீமன்), இரு தோள்களும் இலக்கம் ஆயினன்; பொரு கொடுங்கணை மூன்றினுல் அருச்சுனன் புயமும் மார்பும் புண்செய்து, அருகு (நின்ற) அறத்தின் மைந்தனை, (அவன்) ஒடுங்குற (தளரும்படி) நெற்றியில் அம்புகள் நான்கு எய்தான். செய்யுள் சுலபமானதே.

**58.** **அறத்தின் மைந்தன தானனங் குருதியால்**
**அருக்கன்மண் டலம்போல**
**நிறத்த வாறுகண் டருகுறக் கதைகொடு**
**நின்றவா யுவின்மைந்தன்**
**மறத்த டம்புய வரிசிலைச் சல்லியன் மணிமுடி கழன்றோடிப்**
**புறத்து வீழ்தர வெறிந்தன னெறிந்தமை**
**புயங்ககே தனன்கண்டான்.**

[அறத்தின் மைந்தனது ஆனனம் குருதியால் அருக்கன் மண்டலம்போல நிறத்த ஆறு கண்டு, அருகு உற கதை கொடு நின்ற வாயுவின் மைந்தன், மறம் தட புயம், வரி சிலை சல்லியன் மணிமுடி கழன்று ஓடி புறத்து வீழ்தர (கதையால் எறிந்தனன் (தாக்கினன்), எறிந்தமை புயங்க கேதனன் (துரியோதனன்) கண்டான்.]

**விளக்கம் :-** ஆனனம் - முகம். அருக்கன் - சூரியன். நிறத்த ஆறு - செந்நிறம் உற்றவிதம். மறம் - வலிமை. தருமன் முகம்

குருதியால் செந்நிறம் அடைந்தது கண்டு வீமன், சல்லியனை அவனது மணிமுடி பின்னே விழும்படி (கதையால்) தாக்கினான், - என்பதாம்.

## கலி விருத்தம்

### வீமனோடு துரியோதனன் பொரல்

**59. தன்படைத் தலைவனைத் தண்டி னாலெறி**
**வன்புடைத் தடம்புய மருத்தின் மைந்தன்மேல்**
**மின்படைத் தொளிர்கணை விசையி னேவினான்**
**புன்படைப் பினிலயன் படைத்த பூபனே.**

**விளக்கம் :-** மருத்து - வாயு. மின் படைத்து ஒளிர்கணை - மின்னல் போன்ற ஒளிகொண்டு விளங்கும் அம்பு. இழிவான படைப்பு வர்க்கத்தில் அயன் (பிரும்மன்) படைத்த அரசனான துரியோதனன், - என்பது ஈற்றடியின் பொருள். தன் படைத் தலைவனான சல்லியனை மகுடபங்கம் செய்த வீமன்மேல் துரியோதனன் ஓர் அம்பை விசையொடு ஏவினான், - என்பதாம்.

**60. காமனைச் சம்பரன் கனன்ற போரென**
**வீமனைப் போர்செய்து வெல்ல முன்னிய**
**தீமனத் தரசனைச் சிலீமு கங்களின்**
**மாமுனைப் படுத்தினன் மறித்து வீமனே.**

**விளக்கம் :-** மன்மதனைச் சம்பரன் என்ற அசுரன் சினந்து எதிர்த்துச் செய்த போரேபோல், வீமனைப் பொருது வெல்ல எண்ணிய தீய மனத்தையுடைய துரியோதனனை (வீமன்) கணைகளால் தடுத்து பெரிய போருக்கு உள்ளாக்கினான், - என்பது பொருள்.

சம்பரன் என்பவன் மன்மதனைப் பகைத்துப் பலமுறை தோற்றதுமன்றி, அவனது மகனான பிரத்யும்நனால் அழிந்தான், என்பது கதை. சம்பரனைத் துரியோதனனுக்கு உவமையாக்கியது அவனைப்போல் இவனும் அழியப் போகின்றான், என்று குறிக்கும் கருத்தது.

**61. யாளிக ளிரண்டெதிர்ந் திகலு மாறுபோல்**
**மீளிக ளிருவருங் குனித்த வில்லுமிழ்**
**வாளிக ளிருவர்தம் வடிவிற் பாயுமுன்**
**தூளிக பட்டன துணிந்து வானிலே.**

**விளக்கம்:** யாளி-சிங்கம். மீளி-வீரன். இரண்டு சிங்கங்கள் எதிர்த்துப் போர் செய்யும் விதம் போல், வீரர் இருவரும் வளைத்த வில் வெளிப்படுத்தும் அம்புகள், அவர்கள் உடலில் படுமுன்னரே வானில் துணிபட்டுத் தூள்கள் ஆயின,—என்பது பொருள்.

**62.** **தாண்முதன் முடியுறச் சரங்க ளேவியும்**
**வாண்முதற் படைகளான் மலைத்து மற்றவர்**
**தோண்முத லுறுப்பெலாஞ் சோரி காலவே**
**நீண்முதற் றீபமே நிகரு மாயினர்.**

**விளக்கம்:** தாள்-கால். வாள்-வாளாயுதம். தோள் முதல் உறுப்பு-தோள்கள் முதலிய உறுப்புக்கள். சோரி கால-குருதி வழிய. நீண்ட அடிப்பாகத்தையுடைய தீப விருக்ஷம் போன்றவரா யினர்,--என்பது ஈற்றடியின் பொருள்.

வீமனும் துரியோதனனும் உடலெல்லாம் குருதி வழிய நின்ரு ராதலின் தீப விருட்சத்தை ஒத்தாராயினர். இரவில் தீபம் போல் பிரகாசிப்பதால், இது, சோதிமரம், அல்லது இரவு எரி மரம், என்று அழைக்கப்படும். மற்று, அசை.

**63.** **வன்பரி பாகுதேர் மதிநெ டுங்குடை**
**மின்பொழி கணையுமிழ் வில்வி லோதனம்**
**என்பன யாவையு மிற்று வீழுமா(று)**
**ஒன்பது படவம ருடற்றி னனரோ.**

**விளக்கம்--** துரியோதனனது வலிய குதிரை, பாகன், தேர், மதிபோன்ற பெரிய குடை, மின்னலைப்போல் ஒளிவிடும் அம்புகளை வெளிப்படுத்தும் வில், கொடி என்ற எல்லாம் ஒன்பது துண்டு களாக அறுபட்டு வீழும்படி (வீமன்) போர் செய்தான், என்பது பொருள். விலோதனம் - கொடி. ஒன்பதுபட - பலதுண்டுகளாக இதற்கு எழுவாய், வீமன், என்பதை அடுத்த செய்யுளால் அறிக.

சல்லியன் பொர வரல்

**64.** **இரணவித் தகனிவ னெறிந்த வேலினல்**
**முரணுடைச் சுயோதனன் முதுகு தந்தபின்**
**அரணுடைப் படைக்கர சான மத்திரன்**
**மரணமிப் பொழுதென வந்து மேவினன்.**

**விளக்கம்:-** இரணவித்தகன் - போர்வித்தகன். படைக்கு அரசு - சேனைத்தலைவன். இரணவித்தகனை வீமன் எறிந்த வேலி னல் துரியோதனன் பின்னிட்டதுகண்டு, சல்லியன், மரணம் இப் பொழுதே என்னும்படி (போர் செய்ய) வந்து நெருங்கினன்,— என்பதாம்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

65. நேரி லாதகிரு பப்பெயர்வி றற்குருவும்
நீடு சாலுவனு மற்புயம ணிச்சிகர
வீர ஞனசகு னிப்பெயர்ப டைத்தவனும்
வீறு சால்கிருத பற்பனுமெ னப்புகலும்
ஆர மார்பினர்மு தற்படைஞ ரிற்றலைவ
ரான வீரதுர கத்தினர்க ளிற்றினர்கள்
ஊரு மூருமிர தத்தினரெ னைப்பலரும்
ஓத வாரியென மத்திரனெ டொத்தனரே.

[நேர் இலாத கிருபன் பெயர் விறல் குருவும், நீடு சாலுவனும், மல் புயம் மணி சிகரம் வீரன் ஆன சகுனி பெயர் படைத்தவனும், வீறு சால் கிருத பற்பனும், என புகலும் ஆரம் மார்பினர் முதல் படைஞரில் தலைவர் ஆன வீரதுரகத்தினர் களிற்றினர்கள், ஊரும் இரதத்தினர் எனை பலரும், ஓதம் வாரி என மத்திரனெடு ஒத்தனர்.]

**விளக்கம் :-** நேரிலாத கிருபன் என்ற பெயருடைய விறல் குருவும், பெரிய சாலுவ நாட்டு அரசனும், மணிச்சிகரம் போன்ற வலிய புயங்களை உடைய வீரஞன சகுனி என்ற பெயர் படைத்தவனும், சிறப்பினல் மிக்க கிருதபற்பனும், என்று சொல்லப்படும் மாலை அணிந்த மார்பினர், முதலாகவுள்ள, வீரத் தன்மையுடைய குதிரைகளை உடையவர்களும், விரைந்து செல்லும் தேரை உடையவர்களுமாகிய மற்றும் பலரும் அலைகளை உடைய சமுத்திரம் போல் சல்லியனேடு வந்து திரண்டனர், என்பது பொருள்.

66. வீம சேனனும வற்கிளைய பச்சைமயில்
வேளின் வானவர்கு லப்பகைதொ லைத்தவனும்
ஏம கூடநிக ருத்தமவ யப்புரவி
யேறு வீரனும வற்கிளைய வித்தகனும்
நாம மாயிரமு டைக்கடவு ளுக்கிளைய
ஞாயி ரேடுவமை பெற்றெளிர்தி றத்தவனும்
நேமி சூழ்தரணி பெற்றிடநி னைத்தமர்செய்
நீதி மானருகு சுற்றினர்து ணைசெயவே.

**விளக்கம்:-** வீமசேனனும், அவனுக்கு இளையவனன பச்சை மயிலை வாகனமாக உடைய முருகக் கடவுளைப்போல் தேவர்குலப் பகைவரான அசுரர்களை அழித்த விசயனும், ஏம கூட மலையை ஒத்த உத்தம இலட்சணங்கள் வாய்ந்த குதிரை ஏறுகின்ற வீரனன நகுலனும், அவனுக்கு இளையவனன ஞானமுதிர்ச்சி

யுடைய சகாதேவனும், ஆயிரம் திருநாமங்களையுடைய கண்ணனுக்குத் தம்பியான, சூரியனோடு உவமை பெற்று விளங்குகின்ற நிறத்தையுடைய சாத்தகியும், கடல் சூழ்ந்த பூமியைப் பெற நினைத்துப் போர் புரியும் நீதிமானான தருமன் அருகே, அவனுக்குத் துணையாகச் சுற்றி நின்றனர், என்பது பொருள்.

ஏமகூடம் - பொன்மயமான சிகரத்தையுடைய மலை. ஏமம் - (ஹேமம்) பொன். இது குலபர்வதங்களில் ஒன்று, சூரபத்மன் முதலியோரை முருகக் கடவுள் அழித்ததுபோல், நிவாதகவசர் காலகேயரை விசயன் அழித்ததனால், அப்பிராணை இவனுக்கு உவமை கூறினர்.

**67. ஆடன் மாவுமலை யொப்பனம தக்கரியும்**
**ஆழி சேர்பவன மொத்தவிர தத்திரளும்**
**நாடு போரிலரி யொத்தவனி கத்திரளும்**
**நாலு பாலுமெழ லுற்றமரு டற்றினர்கள்**
**ஓடி யோடியெதி ருற்றவர்மு டித்தலைகள்**
**ஊறு சோரியுத திக்கிடைவி ழுத்தினர்கள்**
**கோடி கோடிதம ரப்பறைமு ழக்கினொடு**
**கோடு கோடுகள்கு றித்தவிரு பக்கமுமே.**

[ஆடல் மாவும், மலைஒப்பன, மதம் கரியும், ஆழிசேர் பவனம் ஒத்த இரதம் திரளும், நாடு போரில் அரி ஒத்த அனிகம் திரளும், நாலு பாலும் எழல் உற்று அமர் உடற்றினர்கள்; ஓடிஓடி எதிர் உற்றவர் முடி தலைகள் ஊறுசோரி உததிக்கு இடை விழுத்தினர்கள் (அப்பொழுது) கோடி கோடி தமரம் பறை முழக்கினொடு கோடு கோடுகள் குறித்த இருபக்கமும், ஏ.]

**விளக்கம்:-** பொருதற்குரிய குதிரைகளும், மலையை ஒப்பனவான மத யானைகளும், காற்றை ஒத்த சக்கரங்களைக் கொண்ட தேர்களின் திரளும், (பகைவரைத்) தேடிச் சென்று செய்யும் போரில் சிங்கத்தை ஒத்த காலாள் படைவீரர்களும், நான்குபுறங்களிலும் எழுந்து போர் செய்தார்கள்; (போரில்) ஓடிஓடி வந்து எதிர்த்த வீரர்களின் முடித்தலைகளைப் பெருகும் குருதிக் கடலில் அறுத்து வீழ்த்தினர்கள், (அவ்வேளை) கோடிக்கணக்கான ஒலியுடைய பறைகளின் முழக்கத்தோடு வளைந்த சங்குகளும் இரு பக்கங்களிலும் ஊதப்பட்டன, என்பது பொருள். பவனம்-காற்று. ஓடிஓடி - விரைந்து சென்று. உததி - கடல். கோடிகோடி - மிகப் பல. கோடுகோடுகள் - வளைந்த சங்குகள்.

68. ஆன போதிருக ளத்தினுமி ருந்தவிறல்
ஆண்மை வீரரொரு வர்க்கொருவர் மெய்க்கவசம்
மான மேயெனநி னைத்துவரி பொற்சிலையும்
வாளு வேலுமுத லெத்திறவி தப்படையும்
மேனி யூடுருவ வெட்டியநி லைக்குவமை
வேறு கூறவில தெப்படிம லைந்தனர்கள்
தான வானவர்கள் யுத்தமும ரக்கரொடு
சாகை மாமிருக யுத்தமுநி கர்த்தனவே.

[ஆனபோது இரு தளத்தினும் இருந்த விறல் ஆண்மை வீரர் ஒருவர்க்கு ஒருவர், மெய் கவசம் மானமே என நினைத்து, வரி பொன் (அழகிய) சிலையும், வாளும் வேலும் முதல் எதிறம் விதம் படையும், மேனியூடு உருவ வெட்டிய நிலைக்கு உவமை வேறு கூற இலது; எப்படி மலைந்தனர்கள் தானவானவர்கள் (அப்படி மலைந்தார்கள்); யுத்தமும் அரக்கரோடு சாகைமா மிருகம் யுத்தமும் நிகர்த்தன, ஏ.]

**விளக்கம்:-** ஆனபோது வாளும் வேலும் முதல் திறம் விதம் படையும்.... வெட்டிய நிலைக்கு வேறு உவமை கூற இலது; தான் வானவர்கள் எப்படி மலைந்தனர்கள், (அப்படியே மலைந்தார்கள்); (தானவானவர்களுக்கு இடையே நடந்து அரக்கரோடு சாகைமாமிருகம் (செய்த) யுத்தமும் (இப்போருக்கு) ஒப்பாயின,- என்பது அன்வயம்.

இவ்வாறானபோது இருபக்கத்துச் சேனைகளும் மானமே கவசம் என்று எண்ணி வில் வேல் வாள் முதலிய எல்லாவித ஆயுதங்களுங்கொண்டு தாக்கிச் செய்த போர்நிலைமைக்கு ஒப்பு வேறு கூறல் இயலாது; தானவர்களும் வானவர்களும் எப்படிப் போர் செய்தார்களோ அப்படிப் படைவீரர் போர் செய்தனர்; தானவ வானவர் யுத்தமும், சுக்ரீவ சேனை இராவணாதி அரக்கர்களோடு செய்த யுத்தமும், இதற்கு ஒப்பு என்னலாம், - என்பதாம். தானவ வானவர், என்பது தானவானவர், என நின்றது. சாகைமாமிருகம் - மரக்கிளைகளில் வசிக்கும் சிறந்த குரங்கு.

சல்லியனைத் தருமன் எதிர்த்தல்

69. வீம சேனனொடு ருச்சுனன்வ யப்புரவி
வீர மாநகுல னட்பினவ னுக்கிளைய
தாம மீளியளி மொய்த்ததுள வப்புதிய
தாரி னானுசவி ற்குருவை முற்பொருத

**சோம கேசபதி மெய்ப்புதல்வன் மற்றுமுள**
**சூர ரானவரை முற்றுறவி லக்கியெதிர்**
**மாம ஞகியுமி கைத்துவரு மத்திரனை**
**வாவெ ஞவமர்தொ டங்கினனு திட்டிரனே.**

[வீமசேனனெடு, அருச்சுனன், வய புரவி வீரம் நகுலன், அவனுக்கு நட்பின் இளைய தாமம் மீளி, அளி மொய்த்த துளவம் புதிய தாரினுன் அநுசன் வில்குருவை முன் பொருத சோமகேச பதி மெய் புதல்வன், மற்றும் உள சூரர் ஆனவரை முற்றும் விலக்கி, எதிர் மாமன் ஆகியும் மிகைத்து வரு மத்திரனை, 'வா,' என, அமர் தொடங்கினுன் உதிட்டிரன், ஏ.]

**விளக்கம்:-** தருமன் தம்பியர் முதலிய எல்லோரையும் விலக்கி, மாமனுயிருந்தும் (சோற்றுக்கடன் கழிக்கும் பொருட்டு) செருக்கி வருகின்ற சல்லியனை, 'வா' என அழைத்து, அமர் தொடங்கினுன், என்பதாம். நட்பின் அவனுக்கு இளைய மீளி - உடன் பிறந்த தொடர்புடைய நகுலனுக்குத் தம்பியான சகாதேவன். துளபப் புதிய தாரினுன் அநுசன் - கண்ணனுக்குத் தம்பியான சாத்தகி. சோமகேசபதி மெய்ப்புதல்வன் - சோம குலத்தினனுன துருபதனின் புதல்வனுன திட்டத்துய்மன்.

**70. வீர சாபமொரி மைப்பினில் வளைத்தெதிர்கொள்**
**வேக சாயகவி தத்திறமெ னைப்பலவும்**
**மார சாயகமெ னச்சிகர மற்புயமும்**
**மார்பு மூழ்கவுடன் முற்றுமுனை யிற்புதைய**
**ஈர மானகுரு திப்பிரளய மெப்புறமும்**
**யாறு போல்பெருக வெற்றுதலும் வெற்றிபுனை**
**சூரர் யாரினுமி குத்திருண்மு டிக்கவரு**
**சூர ஞமெனவி யப்புடைய மத்திரனே.**

[வீர சாபம் ஓர் இமைப்பினில் வளைத்து எதிர் கொள் வேகம் சாயகம் விதம் திறம் எனை பலவும், மார(ன்) சாயகம் என, சிகரம் மல்புயமும் மார்பும் மூழ்க உடல் முற்றும் முனையின் புதைய, ஈரம் ஆன குருதி பிரளயம் எ புறமும் யாறு போல் பெருக எற்றுத லும், வெற்றி புனை சூரர் யாரினும் மிகுத்து, இருள் முடிக்க வரு சூரன் ஆம் என வியப்பு உடைய மத்திரன், ஏ, - அடுத்த செய் யுளோடு தொடர்ந்து முடியும்.]

**விளக்கம்:-** வலிய வில்லை நொடிப் பொழுதில் (தருமன்) வளைத்துப் (பகையைத்) தாக்கவல்ல வேகமுடைய விதம் விதமான உறுதியுடைய பாணவர்க்கங்கள் எல்லாம், மன்மத பாணம் போல், மலைச் சிகரம் போன்ற (சல்லியனது) வலிய தோள்

களிலும் மார்பிலும் தோயும்படியும், உடல் முழுதும் அம்புகளின் முனைகளால் மறையும் படியும், ஈரமான குருதி வெள்ளம் எல்லாப் பக்கங்களிலும் ஆறுபோல் பெருகவும் தாக்கின அளவில், — வெற்றி புனை சூரர் யாரினும் மேம்பட்டு, இருள் ஒழிக்க வரும் சூர்யன் போன்றவன் என்று சொல்லும்படி, மத்திரநாட்டு அரசனான சல்லியன், (குளகமாய் அடுத்த செய்யுளில் முடியும்), என்பது பொருள்.

71. ஆர வாரமுர சக்கொடியு யர்த்தவன
தாக மீதணிம ணிக்கவச மற்றுவிழ
ஊரு நேமியிர தத்துவயி ரச்சுடைய
வோடு வாசிதலை யற்றிருநி லத்துருள
நேரி லாவலவ னெற்றிதுளை பட்டுருவ
நீடு நாணொடுபி டித்தகுனி விற்றுணிய
ஈர வாய்முனைநெ ருப்புமிழ்வ டிக்கணைகள்
ஏவி னானொருநொ டிக்குளெதி ரற்றிடவே.

[ஆரவாரம் முரசம் கொடி உயர்த்தவனது ஆகம் மீது அணி மணி கவசம் அற்று விழ, ஊரும் நேமி இரதத்து வயிர் அச்சு உடைய, ஓடு வாசி தலை அற்று இரு நிலத்து உருள, நேர் இலா வலவன் நெற்றி துளைபட்டு உருவ, நீடு நாணொடு பிடித்த குனி வில் துணிய, ஈர வாய் முனை நெருப்பு உமிழ் வடி கணைகள் ஏவினான் ஒரு நொடிக்குள், எதிர் அற்றிட, ஏ.]

**விளக்கம்:-** ஈர முனை வாய்-பிளவு பட்ட கூரிய வாய் (நுனி) தருமனது கவசம் அற்று விழவும், தேரின் உறுதியுடை அச்சு உடையவும், குதிரைகள் அழியவும், வலவன் நெற்றி துளைபட்டு உருவவும், (அவனது) நெடுவில் நாணியோடு அறுபடவும், பிளந்த கூரிய வாயுடைய கணைகளை, ஒரு நொடியில் தனக்கு நேராவார் இல்லையெனும்படி ஏவினான், — என்பதாம்.

சல்லியன் வீழ்தல்

72. வீறு சாலருள றத்தின்மக னப்பொழுது
வேறொர் தேர்மிசைகு தித்திமய வெற்பினிடை
ஏறு கேசரியொ டொத்துளநெ ருப்புமிழ
ஈறி லார்புரமெ ரித்தவனி கர்க்குமென
மாறி லாததொரு சத்தியையெ டுத்துநெடு
வாயு வாகுமென விட்டனனி மைப்பொழுதில்
ஆறு பாயருவி முக்குவடி றுத்தசெய
லான தான்முனைகொண் மத்திரன்மு டித்தலையே.

[வீறு சால் அருள் அறத்தின் மகன் அப்பொழுது வேறு ஓர் தேர்மிசை குதித்து, இமயம் வெற்பினிடை ஏறு கேசரியொடு ஒத்து, உளம் நெருப்பு உமிழ, ஈறு இலார் புரம் எரித்தவன் நிகர்க்கும் என, மாறு இலாதது ஒரு சத்தியை எடுத்து நெடு வாயு ஆகும் என விட்டனன்; இமைப்பொழுதில் ஆறு பாய் அருவி முக்குவடு அறுத்த் செயல் ஆனது (ஆல்), முனைகொள் மத்திரன் முடி தலை, ஏ.]

**விளக்கம்:-** சிறப்பு மிகுந்த தருமன், இமயமலையினிடத்தே ஏறுகின்ற சிங்கம்போல் வேறொரு தேரின் மேல் பாய்ந்து ஏறி, அழிவில்லாதவர்களான அசுரர்களின் முப்புரம் எரித்த சிவபிரானை ஒக்கும் என்று சொல்லும்படி, உள்ளம் கோபக்கனலை வெளிவிட, எதிரிலாத ஒரு சத்தியை (வேலை) எடுத்து, பெரிய காற்று ஆகும் என வேகமாக எறிந்தான்; (எறியவும்) இமைப் பொழுதில் முனை கொண்ட (முதன்மை கொண்ட) சல்லியனது முடித்தலை, நதிகளாகப் பெருகும் அருவிகளை உடைய மேருமலையின் மூன்று சிகரங்கள் (வாயுவினால்) முறிக்கப்பட்ட செயல் போன்று ஒடிக்கப் பட்டதானது, (ஆல் : ஈற்றசை),—என்பது பொருள்.

வேறு

**73. தொட்டவரி சிலைத்தடக்கை யிராம னென்னத்**
**தொடுத்தகணை தப்பாமற் றொழாத வேந்தர்**
**இட்டகவ சமுமார்பும் பிளந்த பின்னர்**
**எடுத்ததொரு வடிவேலா லிளையோ னென்ன**
**மட்டவிழுந் தும்பையந்தார்த் தருமன் மைந்தன்**
**வாகுவலி யுடனெறிய மத்தி ரேசன்**
**பட்டனனென் றணிகுலைந்து முதுகிட் டோடிப்**
**படாதுபட்ட துயர்த்தபணிப் பதாகன் சேனை.**

[தொட்ட வரி சிலை தடகை இராமன் என்ன தொடுத்த கணை தப்பாமல் தொழாத வேந்தர் இட்ட கவசமும் மார்பும் பிளந்த பின்னர், எடுத்தது ஒரு வடிவேலால் இளையோன் என்ன, மட்டு அவிழும் தும்பை அம்தார் தருமன் மைந்தன் வாகு வலியுடன் எறிய, மத்திர ஈசன் பட்டனன் என்று அணி குலைந்து முதுகு இட்டு ஓடி படாது பட்டது உயர்த்த பணி பதாகன் சேனை.]

**விளக்கம்:-** தொழாத வேந்தர் - பணியாத பகை அரசர். இளையோன் - சிவபிரானது இளையகுமாரன். உயர்த்த பணி பதாகன் - துரியோதனன். வில் ஏந்திய இராமபிரான் என்று சொல்லும்படி தருமன், கணைகளால் பகை அரசர்களை அழித்த

பின்பு, முருகக் கடவுளைப் போல் வேல் எறியச் சல்லியன் பட்டான் என்று, துரியோதனன் சேனை அணி கெட்டு முதுகிட்டு, ஓடி, படாதபாடு பட்டது, என்பதாம்.

**74.** **மதிகண்ட பெருங்கடல்போற் குந்தி மைந்தர்**
**வன்சேனை யார்ப்பதுவு மன்னன் சேனை**
**நுதிகொண்ட கனல்கொளுத்து மிராம பாண**
**நுழைகடல்போ னொந்ததுவு நோக்கி நோக்கிக்**
**கதிகொண்ட பரித்தடந்தேர்ச் சல்லி யன்றன்**
**கண்போல்வா ரெழுநூறு கடுந்தே ராட்கள்**
**விதிகொண்ட படைபோல்வெம் படைக ளேவி**
**வெம்முரசக் கொடிவேந்தன் மேற்சென் ருரே.**

[மதி கண்ட பெரு கடல் போல் குந்தி மைந்தர் வன்சேனை ஆர்ப்பதுவும், மன்னன் சேனை நுதி கொண்ட கனல் கொளுத்தும் இராமபாணம் நுழை கடல் போல் நொந்ததுவும் நோக்கி நோக்கி, கதி கொண்ட பரி தட தேர் சல்லியன் தன் கண் போல் வார் எழு நூறு கடு தேர் ஆட்கள், விதி கொண்ட படை போல் வெம் படைகள் ஏவி, வெம் முரசம் கொடி வேந்தன் மேல் சென்ருர், ஏ.]

**விளக்கம்:-** நுதி கொண்ட கனல் கொளுத்தும் இராமபாணம். நுனி கொண்டதும், நெருப்பை மூட்டுவதுமான இராமபாணம்) (அது) நுழை கடல் - (இராமன் பிரயோகித்த அக்னிக் கணை போய்ச் சேர்ந்த தென் கடல். கதி கொண்ட பரி - நடைவேக முடைய குதிரை. விதி கொண்ட படை - பிரும்மாஸ்திரம். பாண்டவசேனை ஆரவாரிப்பதையும், துரியோதன சேனை வருந்து வதையும் நோக்கிச் சல்லியனுக்குக் கண் போன்ற எழு நூறு தேர் வீரர்கள் பிரும்மாஸ்திரம் போன்ற கொடிய ஆயுதங்களைப் பிரயோகம் செய்து கொண்டு தருமன்மேல் சென்றனர்,—என்ப தாம்.

**75.** **அவரளவோ வரவுயர்த்த வரசன் ருனும்**
**ஆகுலத்தோ டருஞ்சமரி லரிபே றென்னக்**
**கவரிபுடை பணிமாறத் தவளக் கொற்றக்**
**கவிகையொடு தனிநிழற்றக் கரைகா ணுத**
**உவரிநிகர் பெருஞ்சேனை வெள்ளஞ் சூழ**
**உயிரனைய துணைவருடன் மாமன் சூழத்**
**தவர்முதலாம் படைகளொடு தன்னை வென்று**
**தரணிகொள வருநிருபன் றன்னைச் சார்ந்தான்.**

[அவர் அளவோ ! அரவு உயர்த்த அரசன் தானும் ஆகுலத்தோடு, அரு சமரில் அரி ஏறு என்ன, கவரி புடை பணிமாற, தவளம் கொற்றம் கவிகை ஒரு தனி நிழற்ற, கரை காணாத உவரி நிகர் பெரு சேனை வெள்ளம் சூழ, உயிர் அனைய துணைவருடன் மாமன் சூழ, தவர் முதல் ஆம் படைகளோடு தன்னை வென்று தரணி வரு நிருபன் தன்னை சார்ந்தான் ]

**விளக்கம்:-** அவர் அளவோ - சல்லியனுக்குக் கண் போன்ற வீரர்கள் மாத்திரமோ. ஆகுலம் - வருத்தம். ஒரு தனி தவளம் கொற்றம் கவிகை - ஒரு ஒப்பற்ற வெண் கொற்றக் குடை. சல்லியனைச் சேர்ந்தாரோடு துரியோதனனும், தம்பியரோடும் சகுனியோடும் சேனா சமுத்திரம் தொடர்ந்து வரத் தருமனை எதிர்த்தான்,—என்பதாம். தவர் - வில்.

துரியோதனன் தம்பியர் மடிதல்

**76. வீமன்முதற் றம்பியரும் பொருவி லாத**
**வெஞ்சேனைத் தலைவரும்போர் வென்றி கூரும்**
**சோமகரு முதலாய தறுகண் வீரர்**
**தும்பிகளை யரியினங்க டொடரு மாபோல்**
**தாமமணித் தடஞ்சிகரத் தோளு மார்புஞ்**
**சரமுழுகத் தனுவணக்கிச் சாய்ந்த சோரி**
**பூமுழுதும் பரந்துவரப் பொருத வீரம்**
**புலவோர்க்கு மதிசயித்துப் புகல லாமோ.**

[வீமன் முதல் தம்பியரும் பொருவு இலாத வெம் சேனை தலைவரும், போர் வென்றி கூரும் சோமகரும் முதல் ஆயதறுகண் வீரர், தும்பிகளை அரி இனங்கள் தொடரும் ஆ போல், தாமம் மணி தட சிகரம் தோளும் மார்பும் சரம் முழுக தனு வணக்கி, சாய்ந்த சோரி பூ முழுதும் பரந்துவர பொருத வீரம் புலவோர்க்கும் அதிசயித்து புகலல் ஆமோ!]

**விளக்கம்:-** பொருவு இலாத - ஒப்பில்லாத. சோமகர் - துருபதன் குலத்தவர். தறுகண் வீரர் - அஞ்சாமை உடைய வீரர். தும்பி - யானை. அரி - சிங்கம். தாமம் · ஒளி, புலவோர்-தேவர், வித்தகருமாம். வீமன் முதலியோர் சிங்கங்கள் யானைகளைத் தொடர்வதுபோல், பகைவரை எதிர்த்துப் பூமியெங்கும் குருதி பரவும்படி செய்த போர் வீரத்தைத் தேவர்களாலும் பாராட்டிப் பேச முடியாது, என்பதாம்.

**77. தன்றமையன் றனைப்பொருது வெல்ல வந்த**
**தானையெலா நீருக்கித் தரணி யாளும்**
**புன்றமைய னெதிரவனுக் கிளைய வீரர்**
**பொரவந்தோ ரெழுவரையும் புவிமேல் வீழ்த்தி**

**இன்றமையுஞ் சமரமினிக் காண்டல் பாவம்**
**என்றிமையோ ரதிசயிப்ப விமயம் போல**
**நின்றமைகண் டானிலனை மகிழ்ந்து நோக்கி**
**நெஞ்சுறவன் றென்செய்தா னெடிய மாலே.**

[தன் தமையன் தனை பொருது வெல்ல வந்தானை எலாம் நீறு ஆக்கி தரணி ஆளும் புன்தமையன்எதிர், அவனுக்கு இளைய வீரர் பொர வந்தார் எழுவரையும் புவிமேல் வீழ்த்தி, ''இன்று அமையும் சமரம், இனி காண்டல் பாவம்'', என்று இமையோர் அதிசயிப்ப இமயம்போல் நின்றமை கண்டு ஆனிலனை மகிழ்ந்து நோக்கி நெஞ்சு உற அன்று என் செய்தான், நெடியமால், ஏ].

**விளக்கம்:-** புன்தமையன் -'அற்பபுத்தியுள்ள துரியோதனன். இன்று சமரம் அமையும் - இன்றோடு போர் போதும். ஆனிலன்- வாயு புத்திரனான வீமன். அன்று என் செய்தான் - அப்பொழுது. என்ன சந்தோஷப்பட்டான், அதாவது மிக மகிழ்ந்தான். நெடிய மால்-கண்ணன். தன் தமையனான தருமனது சேனையைப் பொருது வெல்ல வந்த துரியோதனனுக்கு எதிரில், பொர வந்த அவன் தம்பியர் எழுவரையும் கொன்று ''போர் இன்றோடு போதும், இனிமேலும் இத்தகைய போரைக் காணல் பாவம்'', என்று தேவர் வியந்து கூற, இமையம்போல் சலியாது நின்ற வீமனைக் கண்டு கண்ணன் மனம் பொருந்த அவனை மகிழ்ந்து நோக்கி (எடுத்த அவதார காரியம் வீமனால் நிறைவேறுவதால்) மிகவும் ஆனந்தங் கொண்டவனானான், என்பதாம்.

78. **செயகந்தன் செயவன்மன் செயசே னன்சே**
**னுவிந்து செயத்திரதன் றிறலார் விந்து**
**வயமொன்று விக்கிரம னென்போ ராவி**
**வானுடு புகுந்ததற்பின் மதங்க ளேழும்**
**கயமொன்று சொரியவெதிர் நின்ற தென்னக்**
**களித்துவலம் புரிவீமன் முழக்கக் கண்டங்(கு)**
**அயனின்ற வலம்புரித்தா ரண்ணல் சோர்ந்தான்**
**அனுசர்மே லன்பெவர்க்கு மாற்ற லாமோ.**

[செயகந்தன், செயவன்மன், செயசேனன், சேனுவிந்து, செயத்திரதன், திறல் ஆர் (செய) விந்து, வயம் ஒன்று விக்கிரமன் என் போர் ஆவி வான் நாடு புகுந்ததன்பின், மதங்கள் ஏழும் கயம் ஒன்று சொரிய எதிர் நின்றது என்ன, களித்து வலம்புரி வீமன் முழக்க, கண்டு, ஆங்கு அயல்நின்ற வலம் புரிதார் அண்ணல் சோர்ந்தான்; அனுசர் மேல் அன்பு எவர்க்கும் ஆற்றல் ஆமோ!]

**விளக்கம்:** ஜெயகந்தன் முதலிய தம்பிமார் வானுடு புகுந்தபின். யானை ஒன்று ஏழுவித மதங்களும் சொரிய எதிர் நின்றது போல் வீமன் களித்து வலம்புரிச் சங்கை ஊதலும், அங்கே அயல் நின்ற நஞ்சாவட்டை மாலை தரித்த துரியோதனன் சோர்வுற்றான்; தம்பி மேல் உள்ள அன்பு யாருக்கும் ஆற்றக் கூடியதாமோ! (முடியாது என்றபடி) தம்பியர் மாண்டதால் துரியோதனன் சோகமுற்றான்' என்ற சிறப்புப் பொருளை, தம்பியர்மேல் அன்பு யார்க்கும் ஆற்றல் ஆமோ!'' என்ற பொதுப் பொருளால் தோற்றுவித்தலால், இது **வேற்றுப் பொருள் வைப்பு** ஆகும்.

**79.** **தனக்குநிகர் தானான கிருத வன்மன்**
**தம்பியர்க ளெழுவர்படத் தம்முன் பட்ட**
**மனக்கவலை யறிந்துபெருஞ் சேனை யோடு**
**மற்றவன்றம் பியரைவ ரோடும் வந்து**
**சினக்கதிர்வேல் வீமனுயிர் செகுப்பா னெண்ணிச்**
**செருச்செய்தா னிமைப்பளவிற் றிருகி யோட**
**எனக்கிவரே யமையுமெனப் புறக்கி டாத**
**இளையவர்மேற் கடுங்கணையைந் தேவி னானே.**

[தனக்குநிகர் தான்ஆன கிருதவன்மன் தம்பியர்கள் எழுவர் பட, தம் முன் பட்ட மனம் கவலை அறிந்து பெருசேனையோடு, மற்று அவன் தம்பியர் ஐவரோடும் வந்து, சினம் கதிர் வேல் வீமன் உயிர் செகுப்பான், எண்ணி, செரு செய்தான் (ஆக), இமைப்பு அளவில் திருகி ஓட, எனக்கு இவரே அமையும் என, புறக்கு இடாத இளையவர்மேல் (வீமன்) கடுங்கணை ஐந்து, ஏவினான், ஏ.]

**விளக்கம்:** தம்பியர் எழுவர் மடியத் தமையனை துரியோதனன் எய்திய மனக்கவலையை உணர்ந்து தன்னேரிலாத கிருதவன்மன் என்பான், பெருஞ்சேனையோடும் துரியோதனன் தம்பியர் ஐவரோடும் வந்து, சினக்கதிர்வேல் வீமனது உயிர் அழிக்க எண்ணிப் போர் செய்தானாக, (வீமனது முன் நிற்க மாட்டாமல்) இமைப்பளவில் புறந்தந்து ஓட, புறங்கொடாது (களம்) நின்ற தம்பியர்மேல், எனக்கு இவர்களே போதும் என்று, ஐந்து கடிய கணைகளை (வீமன்) ஏவினான், என்பதாம்.

ஐவரும் மடிதல்

**80.** **சித்திரவா குவினோடு பெலசே னன்போர்ச்**
**செயசூரன் சித்திரனுத் தமவிந் தென்றே**
**அத்திரவில் லாண்மையினிற் றிகழா நின்ற**
**ஐவரிவர் யாவரையு மடர்ப்பான் வந்தோர்**

சத்திரம்யா வையுமேவிச் சங்கமூதிச்
சமர்விளைத்தார் நெடும்பொழுது சமீர ணன்றன்
புத்திரனுன் முன்சென்ற வெழுவ ரோடும்
பொன்னுலகங் குடிபுகுந்தார் புலன்கள் போல்வார்.

[சித்திரவாகுவினேடு பலசேனன், போர் செய சூரன், சித்திரன், உத்தமவிந்து என்று (ஏ) அத்திரம் வில் ஆண்மையினில் திகழா நின்ற ஐவர் இவர் யாவரையும் அடர்ப்பான் வந்தோர், சத்திரம் யாவையும் ஏவி சங்கம் ஊதி சமர் விளைத்தார் நெடும் பொழுது; (முடிவில்) சமீரணன் தன் புத்திரனுல் முன் சென்ற எழுவரோடும் பொன் உலகம் குடி புகுந்தார், புலன்கள் போல்வார்.]

**விளக்கம்:** சித்திரவாகு என்று பெயர் கொண்ட அத்திரப் பிரயோகத்திற்குரிய வில் தொழில் திறமையில் சிறந்து விளங்குகின்ற, (துரியோதனனுக்கு) ஐந்து இந்திரியங்களைப் போன்றவரான ஐவரும், எதிரிகள் எல்லோரையும் அழிக்க வந்தவர்களாய், சத்திரம் (சஸ்திரம்) யாவையும் ஏவி, சங்கம் ஊதி நெடுநேரம் போர் செய்தார்; (முடிவில்) வாயுபுத்திரனன வீமனுல், முன்னே மடிந்து வான் சென்ற எழுவரோடும் வீர சுவர்க்கம் சென்ருர்கள் என்பதாம்.

மந்திரத்தோடு செலுத்துவது அத்திரம்; மந்திரமில்லாமல் செலுத்துவது சத்திரம். பிராணிகளுக்கு ஐம்புலன்கள் இன்றியமையமையா உறுப்புக்கள்; அவை போன்றவர் தம்பியர் துரியோதனனுக்கு, என்ற கருத்தில், "புலன்கள் போல்வார்" என்ருர், என்க.

81. ஏற்றிடைவெங் கனனுழைந்த தென்ன முன்னம்
எழுவருடன் றனக்கிளையோ ரைவர் சேரக்
கூற்றிடையே குதலுமிகக் கொதித்து நாகக்
கொடிவேந்தன் முடிவேந்தர் பலருஞ் சூழ
நாற்றிசையு மெழுந்துபெருங் கடலை மோதி
நடுவடவைக் கனலவித்து நடவா நின்ற
காற்றெனவே பாண்டவர்தம் முடலங் தோறுங்
கணைமுழுக வில்விசயங் காட்டி னனே.

[ஏற்றிடைவெம் கனல் நுழைந்தது என்ன, முன்னம் எழுவருடன் தனக்கு இளையோர் ஐவர் சேர கூற்றிடை ஆகுதலும், மிக கொதித்து, நாகம் கொடிவேந்தன் முடிவேந்தர் பலரும் சூழ, நால்திசையும் எழுந்து பெரு கடலை மோதி நடு வடவை கனல்

அவித்து நடவாநின்ற காற்று என, (ஏ) பாண்டவர்தம் உடலம் தோறும் கணை முழுக வில் விசயம் காட்டினான், ஏ.]

**விளக்கம் :-** ஏறு-ஆயுதத்தால் உண்டான புண். ஏற்றிடை கனல் நுழைந்ததுபோல, முன்னே இறந்த ஏழுதம்பியருடன், தன் தம்பியர் வேறு ஐவரும் ஒருசேர எமனிடம் செல்லலும், மிகவும் சினங்கொண்டு துரியோதனன் முடிவேந்தர் சுற்றிவர, நான்கு திசைகளிலும் ஒரே காலத்தில் எழுந்து, பெருங்கடலைத் தாக்கி, அதன் நடுவேயுள்ள வடவைக் கனலை அவித்து நடப்ப தாகிய ஒரு காற்றைப்போல, பாண்டவர்தம் உடல் முழுதும் கணைகள் புதையத் தனது வில் தொழில் திறமையைக் காட்டினான், என்பது பொருள்.

**82** **தன்கரத்தில் விற்றுணிய வேறோர் வில்லால்**
**சாதேவன் வலம்புரிப்பூந் தாம வேந்தன்**
**வன்கரத்து மார்பகத்து முகத்துஞ் சேர**
**வைவாளி குளிப்பித்தான் மற்று மற்றும்**
**முன்களத்து ளெதிர்ந்துள்ளோ ரிருசே னைக்கு**
**முன்னெண்ணுந் திறலுடையோர் மூண்டு மூண்டு**
**பின்களத்தைச் சோரியினாற் பரவை யாக்கிப்**
**பிறங்கலுமாக் கினர்மடிந்த பிணங்க ளாலே**

[தன் கரத்தில் வில் துணிய, வேறு ஓர் வில்லால் சாதேவன் வலம்புரி பூந்தாம வேந்தன் வல் கரத்தும் மார்பு அகத்தும், முகத்தும் சேர வைவாளி குளிப்பித்தான்; மற்றும் மற்றும் முன் களத்துள் எதிர்த்துள்ளோர் இரு சேனைக்கும் முன் என்னும் திறல் உடையோர், மூண்டு மூண்டு பின் களத்தை சோரியினால் பரவை ஆக்கி, பிறங்கலும் ஆக்கினர் மடிந்த பிணங்களால், ஏ.]

**விளக்கம்:-** (துரியோதனன்) கணையினால் தன் கையில் வில் அறுபட, சாதேவன் வேறு ஓர் வில்லால் துரியோதனனது கைகளிலும் மார்பிலும் முகத்திலும் கூரிய வாளிகளை அழுந்தச் செய்தான். மேலும் மேலும் களத்தில் முன்னிடத்தே எதிர்த்து வந்தோராகிய வீரர்களைக் கொண்ட இரு சேனைகளுக்கும் முன் வைத்து எண்ணக் கூடிய திறலுடையரான (பாண்டவ) வீரர்கள், பொங்கியெழுந்து, பின்னிடுகின்ற கௌரவசேனை இருந்த இடத்தைக் குருதியால் கடல் ஆக்கி, மடிந்த பிணங்களால் மலையும் உண்டாக்கினர், என்பது பொருள். வலம்புரி பூந்தாமவேந்தன்- நஞ்சாவட்டைப் பூமாலை அணிந்த துரியோதனன். பிறங்கல்-மலை.

83. காந்துகன லுமிழ்சினவேற் கைக்காந் தாரர்
காவலனுஞ் சகுனியுந்தன் கனிட்ட னுன
வேந்தனுமன் னவனுடன்பல் வேந்த ரோடும்
வெம்பணைக்கைப் பலகோடி வேழத் தோடும்
ஏந்துதடம் புயச்சிகரி வீமன் றன்னே
டிகன்மலைந்து தொலைந்திரிந்தா ரிவரை யல்லால்
ஊர்ந்தபணி யணிக்கொடியோ னிளைஞர் மீள
ஒன்பதின்ம ரவனுடன்வந் துடற்றி னுரே.

[காந்து கனல் உமிழ் சினம் வேல் கை காந்தாரர் காவலன் ஆம் சகுனியும் தன் கனிட்டன் ஆன வேந்தனும், மன்னவனுடன் பல்வேந்தரோடும், வெம்பணை கை பலகோடி வேழத்தோடும், ஏந்து தட புயம் சிகிரி வீமன் தன்னுேடு இகல் மலைந்து தொலைந்து இரிந்தார்; இவரை அல்லால் ஊர்ந்த பணிஅணி கொடியோன் இளைஞர்கள் மீள ஒன்பதின்மர் அவனுடன் வந்து உடற்றினர், ஏ.]

**விளக்கம்:-** காந்தாரத் தலைவனுன சகுனியும் அவன் தம்பியும், துரியோதனனுேடும் பல அரசர்களோடும், பல கோடி யானைகளோடும், போர் செய்து தோற்று ஓடினர்; இவர்கள் அல்லாமல் துரியோதனன் தம்பியர் ஒன்பது பேர் மறுபடியும் வந்து வீமனுடன் போர் செய்தார்கள்,—என்பதாம். கனிட்டன்- (கனிஷ்டன்) தம்பி. ஏந்து தட புயம் கிரி வீமன்-உயர்ந்த விசால மான மலை போன்ற தோள்களை உடைய வீமன். பணை மரம் நீண்ட துதிக்கைக்கு உவமை.

எஞ்சிய தம்பியர் வீமனுல் மாளல்

84. பிறங்கியவுத் தமனுதய பானு கீர்த்தி
பெலவன்மன் பெலவீமன் பிரபல தானன்
மறங்கிளர்விக் கிரமவாகு சுசீலன் சீலன்
வருபெயர்கொ ளொன்பதின்மர் வானி லேறத்
திறங்கொள்கச ரததுரக பதாதி கோடி
சேரவொரு கணத்தவியச் சிலைகால் வாங்கிக்
கறங்கெனவே சூழ்வந்து பொருதான் வீமன்
கட்டாண்மைக் கிதுபொருளோ கருதுங்காலே.

[பிறங்கிய உத்தமன், உதயபானு, கீர்த்தி, பெலவன்மன், பெலவீமன், பிரபலதானன், மறம் கிளர் விக்கிரமவாகு, சுசீலன், சீலன் வரு பெயர் கொள் ஒன்பதின்மர் வானில் ஏற, திறம் கொள் கசரததுரக பதாதி கோடி சேர, ஒரு கணத்து அவிய, சிலை கால்

வாங்கி கறங்கு எனவே சூழ்வந்து பொருதான் வீமன்; கட்டு ஆண்மைக்கு இது பொருளோ கருதுங்கால், ஏ.]

**விளக்கம் :-** வரு பெயர் கொள் உத்தமன்...சீலன் என்று அழைக்கப்பட்டு வரும் பெயர்களைக் கொண்ட (ஒன்பது பேர்) துரியோதனன் தம்பியர் ஒன்பது பேர் வான் செல்லவும், திறமை கொண்ட யானை தேர் குதிரை காலாள் என்ற கோடிக்கணக்கான சேனைகள் ஒரு கணத்தில் அழியவும் வீமன் வில்லை வளைத்துக் கறங்கெனச் சுழன்று போர் செய்தான்; உறுதிமிக்க ஆண்மைக்கு இது ஒரு பொருளாமோ!—என்பதாம். பிறங்கிய-விளங்குகின்ற. சுழல்வது, கறங்கு.

**85. பாண்டவரில் வீமன்கைப் படையான் முன்னம்**
**பட்டொழிந்தோ ரொழிந்தோர்கள் பலருங் கூடிக்**
**காண்டகைய கேசரிவெஞ் சாப மன்னுர்**
**கண்ணிலான் மதலையரக் களத்தி லன்று**
**மூண்டபெரும் பணித்துவச முன்னேன் காண**
**முனைந்தமர்செய் தவனியின்மேன் முடிகள்வீழத்**
**தீண்டரிய திருமேனி தேரில் வீழச்**
**சேணடைந்தா ரரம்பையர்கள் சிந்தை வீழ.**

[பாண்டவரில் வீமன் கை படையால் முன்னம் பட்டு ஒழிந் தோர் ஒழிந்தோர்கள் பலரும் கூடி, காண் தகைய கேசரி வெம் சாபம் அன்னுர், கண் இலான் மதலையர் அ களத்தில் அன்று மூண்ட பெரு பணி துவசம் முன்னேன் காண, முனைந்து அமர் செய்து அவனியின்மேல் முடிகள் வீழ, சேண் அடைந்தார், அரம்பையர்கள் சிந்தை வீழ.]

**விளக்கம்:-** பட்டு ஒழிந்தோர்கள் ஒழிந்தோர்கள்-இறந்து ஒழிந்தவர் போக எஞ்சியவர். கேசரிசாபம்-சிங்கக்குட்டி. இளமைப் பெயரதான ஓர் இடைச்சொல், சாபம். மூண்ட-சினம் மூண்ட. வீமன்கைப் படையால் இறந்தவர் போக எஞ்சியவர்கள் பலரும் கூடி வீமனோடு அன்று கடும்போர்செய்து, தமையனை துரியோதனன் காண, தலைகள் தரையில் விழவும் உடல் தேரில் விழவும், தேவமாதர் மனம் தங்களை விரும்பவும் வானுலகம் அடைந்தார்கள்,—என்பதாம். வீழ்தல்-விரும்புதல்.

## துரியோதனனைச் சகுனி தேற்றல்

**86. தனக்கிளையோர் தொண்ணூற்ருென் பதின்மர் தாமுஞ்**
**சயவீமன் சரத்தாலுந் தண்டி னுலும்**
**கனக்குடியிற் குடியேறக் கண்டு கண்டு**
**கைசோர மெய்சோரக் கண்ணீர் சோர**

**எனக்குறுதி யுரைத்தவர்தம் உரைகே ளாமல்**
**எஞ்செய்தே னெப்பொருளு மிழந்தே னென்று**
**மனக்கவலை யுறுமன்னன் றன்னை நோக்கி**
**மாமனுமற் றொருகோடி மாற்றஞ் சொன்னான்.**

[தனக்கு இளையோர் தொண்ணூற்றொன்பதின்மர் தாமும் சய வீமன் சரத்தாலும் தண்டினாலும் கனம் குடியில் குடி ஏற கண்டு கண்டு, கைசோர, "எனக்கு உறுதி உரைத்தவர் தம் உரை கேளாமல் என் செய்தேன்? எ பொருளும் இழந்தேன்" என்று, மனக்கவலை உறு மன்னன் தன்னை நோக்கி (மற்று) ஒரு கோடி மாற்றம் சொன்னான்.]

**விளக்கம் :-** கனக்குடில்-வானுலகில் தங்குமிடம். உறுதி (நன்மை) உரைத்தவர், வீடுமன், விதுரன், துரோணன் முதலியோர். தம்பியர் அனைவரையும் பொருளையும் இழந்து தளரும் துரியோதனுக்குச் சகுனி ஒரு கோடி தேறுதல் மொழி கூறினான், என்பதாம்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

87. **அருகு சாயை போல்வாழு மனுசர் யாரும்வா னேற**
**உருகி மாழ்கி நீசோக முறினு மீளவா ரார்கள்**
**மருக வாழி கேள்போரின் மடிவு றாத பூபாலர்**
**முருக வேளை யேபோல்வர் முறண றாத கூர்வேலோய்.**

[அருகு சாயை போல் வாழும் அனுசர் யாரும் வான் ஏற, உருகி மாழ்கி நீ சோகம் உறினும் மீள வாரார்கள், மருக, வாழி, கேள், போரில் மடிவுறாத பூ பாலர் முருக வேளையே போல்வர். முரண் அறாத கூர் வேலோய்.]

**விளக்கம்:-** அருகில் நிழல் போல் வாழ்ந்த தம்பியர் வான் செல்ல, நீ உருகியும், மயங்கியும் வருந்தினாலும், (அவர்கள்) மறுபடியும் திரும்பி வாரார்; மருகனே, நான் சொல்வதைக் கேள்; வலிமை மாறாத கூரிய வேலை உடையவனே, போரில் மடியாமல் எஞ்சிய அரசர்கள் (ஆற்றலில்) முருகக் கடவுளைப் போன்றோர் ஆவர்,—என்று சகுனி கூறினான், என்பதாம். வாழி, வாழ்த்து.

அழுது புரண்டாலும் மாண்டார் வாரார். என்றும், இன்னும் சாகாதிருக்கும் அரசர் பகை அழிக்கும் ஆற்றலுடையவர் என்றும் கூறிச் சகுனி மருகனைத் தேற்றினான், என்க,

**88. கிருத நாம ஞல்வேத கிருப ஞதி யோரான**
**நிருபர் சேனை சூழ்போத நிமிர வோடி மாருது**
**பொருது சீறி மேன்மோது புலியி னேறு போல்வாரை**
**முரச கேது வோடோட முரணு போரின் மூள்வோமே.**

[கிருத நாமன் நால்வேத கிருபன் ஆகியோர் ஆன, நிருபர் சேனை சூழ்போத நிமிர ஓடி மாருது பொருது, சீறி மேல் மோது புலியின் ஏறுபோல்வாரை, முரச கேதுவோடு ஓட, முரணு போரின் மூள்வோம், ஏ.]

**விளக்கம்:-** கிருதவர்மா என்ற பெயருடையவன், வேத வித்தகனுன கிருபன் முதலியோர் ஆகிய நிருபர்களும் சேனை களும் வர (பகைவரை) நெருங்கிச் சென்று, இடைவிடாது தொடர்ந்து போர்செய்து, சீறி மேல் வந்து தாக்கும் புலி போன்ற பகைவரைத் தருமனேடு ஓடிச் செல்லும்படி முரணுடன் செய்யும் போரில் முயல்வோம்,—என்று சகுனி கூறினுன், என்பது பொருள். மூள்வோமே, என்பதிலுள்ள ஏகாரம். வெற்றி கிட்டும், என்று கூறும் கருத்தது.

சகுனி வீமனை எதிர்த்து வலி அழிதல்

**89. எனம கீபன் வாடாம லினிய வாய்மை யேகூறி**
**அனிக ராசி யோடேகி யமரில் வீமன் மேன்மோத**
**முனைகொள் வீம னுமாறு முறுவல் வாணி லாவீச**
**மனனி லோடு தேர்மாறி வலிகொள் பாரி லானுனே.**

[என மகீபன் வாடாமல் இனிய வாய்மையே கூறி, அனிகம் ராசியோடு ஏகி, அமரில் வீமன்மேல் மோத, முனைகொள் வீமன் ஆம் ஆறு, முறுவல் வாள் நிலா வீச, மனனில் ஓடு தேர் மாறி வலிகொள் பாரில் ஆனுன், ஏ.]

**விளக்கம்:-** அனிகம் ராசி-சேனைத்திரள். அமரில்-போர்க் களத்தில். முனை-உக்கிரம். ஆம் ஆறு (தேர் மாறி) என்று கூட்டுக; படைக்கலங்கள் இல்லாமல் தேகவலி கொண்டு பொரு தற்கு வசதி ஆகும்படி. மனனில் ஓடு தேர்-மனத்தைப்போல் விரைகின்ற தேர். தேர்மாறி-தேரை விட்டுவிட்டு. வலிகொள் பாரில் ஆனுன்-வலிமை கொண்ட பூமியில் இறங்கினுன். வீமன் கோழையான சகுனியைக் கண்டு சிரித்தது இகழ்ச்சி. சோகித்த மருமகனுக்கு இனிய வார்த்தைகள் கூறிச் சகுனி அமர்க்களம் சென்று வீமனைத் தாக்க அவன் நகைத்துத் தேரைவிட்டுக் கீழே இறங்கினுன்,—என்பதாம். வாய்மை-வார்த்தை.

**90. தரணி தாழு மாபோது சகுனி சேனை வானேற**
**முரணு வாகு வான்மோதி முடுகு நீள்க தாபாணி**
**அரணி யாக வேயேன லடவி யான தானீடும்**
**இரண பூமி மால்யானை யிரதம் வாசி காலாளே.**

[தரணி தாழும் ஆ(று) போது சகுனி சேனை வான் ஏற முரணு வாகுவால் மோதி முடுகும் நீள் கதாபாணி, அரணி ஆகவே, ஏனல் அடவி ஆனது (ஆல்), நீடும் இரண பூமி மால் யானை இரதம் வாசி காலாள், ஏ.]

**விளக்கம்:-** பூமி குழியிடும்படி, (தொகை மிகுதியால்) நீண்டு சகுனியின் சேனை இறந்தழியும்படி, முரண் உடைய தோள்களால் தாக்கிக் கொண்டு நெருங்குகின்ற நீண்ட கதையைக் கையில் கொண்ட வீமன் அரணிக் கட்டையாக, நீண்ட இரண பூமியில் உள்ள பெரிய யானை இரதம் குதிரை காலாள்களைக் கொண்ட சகுனியின் சேனை, ஏனல் (தினை) காடு போல் ஆயிற்று, அதாவது அழிந்தது—என்பதாம். ஆல்:அசை.

போதுதல்-நீளல். போது சேனை - தொகையினால் நீண்ட சேனை. அரணி-தீயை உண்டாக்கும் கட்டை, தீக்கடைகோல். காடுகளில் சில மரங்கள் ஒன்றோடொன்று உராய்தலால் உண்டாகும் தீயினால், தினைக் கொல்லை அழிதல் போல், வீமனால், சகுனி சேனை அழிந்தது, என்பது கருத்து. கதாபாணி—(அன்மொழித்தொகை) வீமன்.

**91. அலகில் வேலை போல்சேனை யதிப னாவி போமாறு**
**பலரு மாகி மேன்மோது படைஞர் சாய வேநாமும்**
**இலகு வாளம் வேனேமி யெவரு மேவு வேமாக**
**தலைவ கேளெ னாவீர சகுனி கூறி னான்மீள.**

[அலகு இல் வேலை போல் சேனை அதிபன் ஆவி போம் ஆறு, பலரும் ஆகி மேல் மோது படைஞர் சாயவே நாமும், இலகு வாளம் வேல் நேமி, எவரும் ஏவுவேம் ஆக; தலைவ, கேள், என, வீர சகுனி கூறினான் மீள.]

**விளக்கம்:-** "அளவு இல்லாத சமுத்திரம் போன்ற நமது சேனாதிபதியான சல்லியன் உயிர் அழியுமாறு, பலரும் ஒன்றுபட்டு (நம்மவர்) மேல் தாக்கின பகைப்படை வீரர்கள் அழியும்படி, நாமும் எவரும் (எல்லோரும் ஒன்று சேர்ந்து) விளங்குகின்ற வாள் வேல் சக்கரம் முதலிய ஆயுதங்களை ஏவுவோமாக; தலைவனே, கேள்," என்று வீரனாகிய சகுனி மீண்டும் (மருமகனுக்குக்) கூறினான்,—என்பது பொருள்.

தொகையில் குறைந்த பாண்டவ சேனை ஒன்றுபட்ட ஒற்றுமை வலியால் சல்லியனையும் சேனையையும் வென்றது போல், இப்போது தொகையில் குறைந்த நாமும் ஒன்றுபட்டு எதிர்த்தால் பகை வெல்லுதல் இயல்வதாகும், என்று சகுனி கூறினன், என்பதாம். வீர சகுனி, இகழ்ச்சி.

## துரியோதனன் சாதேவன் மேல் வேல் எறிதல்

**92. விரக ருத சூதாடு விடலை மீது சாதேவன்**
**இரத மேவி யோர்வாளி யெழில்கொள் மார்பி லேவாமுன்**
**மருக னன பூபாலன் மதிகொண் ஞானி பூண்மார்பில்**
**உருவ வீசி னன்மாம னுதவி யாவோர் கூர்வேலே.**

[விரகு அருத சூது ஆடு விடலை மீது சாதேவன் இரதம் ஏவி ஓர் வாளி எழில் கொள் மார்பில் ஏவாமுன், மருகன் ஆன பூபாலன், மதிகொள் ஞானி பூண் மார்பில் உருவ வீசினன் மாமன் உதவி ஆ (க) ஓர் கூர் வேல், ஏ.]

**விளக்கம்;-** விரகு-வஞ்சனை. விடலை-ஆண் மகன், வீரன். மதிகொள் ஞானி - சகாதேவன். மாமன் உதவி ஆ-மாமனை சகுனிக்கு உதவியாக (வந்து). சகாதேவன் ஓர் அம்பைச் சகுனியின் மார்பில் ஏவு முன், துரியோதனன் சகாதேவன்மேல் ஒரு வேலைச் செலுத்தினன், என்பதாம். எழில் கொள் மார்பு-வளர்ச்சியுடைய மார்பு.

## வீமன் துரியோதனனை எதிர்த்தல்

**93. எதிரி லாத தோளாண்மை யிளவ றேரின் மேல்வீழ**
**உதவி யாக வேலேவு முலகு காவ லான்மார்பில்**
**முதுகி லோட வேநூறு முழுக வேவி னன்வாளி**
**அதல பூமி யூடாழி யமுத மாரும் வாயானே.**

[எதிர் இலாத தோள் ஆண்மை இளவல் தேரின் மேல் வீழ, உதவி ஆக வேல் ஏவும் உலகு காவலான் மார்பில், முதுகில் ஓடவே, நூறு முழுக ஏவினன் வாளி, அதல பூமியூடு ஆழி அமுதம் ஆரும் வாயான், ஏ.]

**விளக்கம்:-** எதிர் இலாத தோளாண்மை இளவல்-சகாதேவன் உலகு காவலான் - துரியோதனன். அதலம்-பாதாளம். ஆழிஅமுதம்-திருப்பாற்கடலிலிருந்து எழுந்த அமுதம். சகாதேவன் மூர்ச்சித்து விழும்படி வேல் ஏவிய துரியோதனன் மார்பில் (கணைகள்) முதுகு வழியாக வெளிப்படும்படியும்,

தைத்துப் பதியும்படியும், பாதாளம் (சென்று) அமுதம் பருகிய வாயையுடைய வீமன், நூறு கணைகளை ஏவினன்,—என்பதாம். ஆர்தல்-குடித்தல்.

## அந்தணனைச் சோழன் எதிர்த்தல்

**94. சமரில் வீம னேவோடு தலைவன் வீழ வேபூமி**
**அமர ஞன தாமாவோ ரயிலை வீமன் மேலேவ**
**எமர்க ளாவி போல்வானெ டிகல்செ யாம லீசான**
**குமர ஞவி போமாறு குடைது நாமெ னுவீரன்.**

[சமரில் வீமன் ஏவோடு தலைவன் வீழவே பூமி அமரன் ஆன தாமா ஓர் அயிலை வீமன் மேல் ஏவ, எமர்கள் ஆவி போல் வானெடு இகல் செயாமல் ஈசான குமரன் ஆவி போம் ஆறு குடைதும் நாம் என வீரன்,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** ஏ-அம்பு. தலைவன்-துரியோதனன். பூமி அமரனன தாமா-பூதேவனன அசுவத்தாமா. எமர்கள் ஆவி போல்வான்-அரசகுலம்வந்த எமக்கெல்லாம் உயிர் போன்ற வனன துரியோதனன். ஈசானகுமரன்-சிவகுமாரனன அசுவத் தாமா. வீமன் அம்பால் விழுந்து கிடக்கின்ற துரியோதனன் அரச குலத்தவன் என்ற பரிவால் அவனேடு போர் செய்யாமல், ''வீமன்மேல் வேல் ஏவியவனும், போர் செய்யும் உரிமையில்லாத அந்தணனும், அயலானுமான அசுவத்தாமனை எதிர்த்துத் துளைப் போம்,'' என்று எண்ணி, வீரனன (மனுகுல ஈசன்),—(தொடரும்) என்பதாம். தாமா-பரித்தாமா, (முதற்குறை).

**95. தனுவின் வேத நூல்வாசி தனய ஞன தாமாவை**
**முனைகொண் மார்பின் வாய்மூழ்கி முதுகி லோட வேயேழு**
**வினைகொள் வாளி மேலேவி விதம தாக வேபோர்செய்**
**மனுகு லேச னீள்சாப வலிமை கூற வாராதே.**

[தனுவின் வேதம் நூல், வாசிதனயன் ஆன தாமாவை, முனைகொள் மார்பின்வாய் மூழ்கி முதுகில் ஓடவே, ஏழு வினை கொள் வாளி மேல் ஏவி, விதமது ஆகவே போர்செய் மனுகுல ஈசன் நீள் சாபம் வலிமை கூற வாராது, ஏ ]

**விளக்கம் :-** தனுர் வேத நூலை அறிந்த, குதிரையினிடம் பிறந்த அசுவத்தாமனை, (அவனது) முனை கொள் (வலிமை கொண்ட) மார்பில் புதைந்து முதுகு வழி ஓடும்படி, வினை கொள் ஏழு அம்புகளை அவன்மேல் ஏவிப் பலவிதமாகப் போர் செய்த சோழனது வில் வலிமை கூறும்தன்மையது ஆமோ,—

என்பது பொருள். வினை கொள் வாளி - போர்த் தொழிலைக் கொண்ட அம்பு. சோழன் சூர்ய குலத்தவனாதலால், மனு குலேசன், எனப்பட்டான்.

**96. மருகன் வீழ வேசாப மறைவ லானு மார்மாலை**
**விருத னோடு போராடி வெரிநி டாவி டாதோட**
**அருகு சூழு மாசூர ரடைய வோட வோடாது**
**திருகி னன ராவேறு திகழ்ப தாகை யான்மாமன்.**

[மருகன் வீழவே, சாபம் மறை வலானும் ஆர் மாலை விருதனோடு போர் ஆடி வெரிந் இடா, விடாது ஓட, ஓடாது திருகினன் அரா ஏறு திகழ் பதாகையான் மாமன் ]

**விளக்கம்:-** மருகன்-துரியோதனன். சாபம் மறைவலான்-கிருபன். ஆர் மாலை விருதன்-ஆத்திமாலை அணிந்த வீரனான சோழன். வெரிந் இடா-முதுகிட்டு. சூரர் அடைய-வீரர்கள் எல்லோரும். திருகினன்-திரும்பி வந்தான். அரா ஏறுதிகழ் பதாகையான் மாமன்-பாம்பு விளங்குகின்ற கொடியை உடைய துரியோதனின் மாமனான சகுனி. மருகன் உணர்வற்று விழவும், கிருபன் போர் செய்து பின்னிட, அதனால் அருகிருந்த வீரர் எல்லோரும் ஓட, (அப்பொழுது) சகுனி ஓடாது போர் செய்ய வந்தான்,— என்பதாம்.

### சகுனி மாளல்

**97. சகுனி யாவி போமாறு சபத வாய்மை கோடாமல்**
**மகிப னேவு வேல்போல வழுவு ருமல் மேலோட**
**உகவை யோடு மாமாய னுதவுகூர நீள்வேலை**
**இகலொ டேவி னன்வீம னிளவ லான போர்மீளி.**

[சகுனி ஆவி போம் ஆறு சபதம் வாய்மை கோடாமல், மகிபன் ஏவு வேல் போல வழுவுருமல் மேல் ஓட உகவையோடு மாயன் உதவிய கூர நீள் வேலை, இகலொடு ஏவினன், வீமன் இளவல் ஆன போர்மீளி ]

**விளக்கம்:-** மகிபன்-துரியோதனன். வீமனது தம்பியான போரில் வலிய சகாதேவன், சகுனியின் உயிர் போகும்படி, (துகிலுரிந்த காலத்தில் தான் கூறிய) சபதமொழி பிழையாமல் (தன் மேல்) மகிபன் எறிந்த வேல் (தவறியது) போல் தவருமல் (சகுனியின்) மேல் விரைந்து பதியும்படி, கண்ணன் மகிழ்ச்சியோடு தனக்குக் கொடுத்த கூரிய வேலை வலிமையோடு ஏவினன்,—என்பது பொருள்.

கலித்துறை

98. தாவிய வெம்பரி மாவிர தத்திடை சாதேவன்
ஏவிய வேலொடு சௌபல ராசனி றந்தானென்(று)
ஓவிய தெங்கணும் வெஞ்சமர் பார்முழு துடையானும்
ஆவிய ழிந்தவு டம்பென வன்மை யழிந்தானே.

[தாவிய வெம்பரிமா இரதத்திடை சாதேவன் ஏவிய வேலொடு சௌபலராசன் இறந்தான் என்று, ஓவியது எங்கணும் வெம்சமர்; பார் முழுது உடையானும் ஆவி அழிந்த உடம்பு என வன்மை அழித்தான், ஏ.]

**விளக்கம் :-** சௌபலராசன்-சகுனி. ஓவியது-ஒழிந்தது. பார் முழுது உடையான்-துரியோதனன். சகாதேவன் ஏவிய வேலால் சகுனி இறந்தான் என்று, எங்கும் போர் செய்தல் நின்றது; துரியோதனனும் உயிர் நீங்கிய உடல் என வலிமை அழிந்தாஞயினுன்,— என்பதாம்.

துரியோதனன் நிலை கலங்கல்

99. தும்பியில் வாசியி னீடிர தத்திலொர் துணையின்றிப்
பம்பிய சேனைய ழிந்துவ ரும்படி பாராதான்
தம்பியர் யாவரு மாதுல னும்பல தமரும்போய்
அம்பியி ழந்தபெ ருங்கடல் வாணரி னலமந்தான்.

[தும்பியில் வாசியில் நீடு இரதத்தில் ஓர் துணை இன்றி, பம்பிய சேனை அழிந்து வரும்படி பாராதான், தம்பியர் யாவரும் மாதுலனும், பலதமரும் போய், அம்பி இழந்த பெரு கடல் வாணரின் அலமந்தான்.]

**விளக்கம் :-** யானை, குதிரை உயர்ந்த இரதம் ஆயவற்றில் (தனக்குத்) துணை ஒன்றும் இன்றி பரந்த சேனை அழிந்து மீளும் படி (இதுவரை) பார்த்திராதவனுன துரியோதனன், தம்பியர், மாமன், சுற்றத்தார் பலரும் அழித்ததனுல், மரக்கலத்தை இழந்த பெரிய கடல் பிரயாணிகள்போல் தவித்தான்,—என்பதாம். அம்பி-மரக்கலம். கடல்வாணர்-கடல் பிரயாணிகள். போய், என்பதைப் போக, என்று திரிக்க.

100. ஒருமதி வெண்குடை யிருகவ ரிக்குல மூருஞ்சீர்
இரதம தங்கய மிவுளிப ணிக்கொடி முதலான
அரசர்பெ ருந்தகை யரசடை யாளம னைத்தும்போய்த்
திருநய னங்களி னும்புத மலர்கள்சி வப்பேற.

[ஒரு மதி வெண் குடை, இரு கவரி குலம் ஊரும் சீர், இரதம் மதம் கயம், இவுளி, பணி கொடி முதல் ஆன அரசர், பெருந் தகை, அரசு அடையாளம் அனைத்தும் போய், திரு நயனங் களினும் பதம் மலர்கள் சிவப்பு ஏற]

**விளக்கம் :-** சந்திரன் போன்ற ஒற்றை வெண் குடை, இரு கவரிக்கற்றை, ஏறி நடத்தும் தேர், மதயானை, குதிரை, பாம்புக் கொடி முதலான அரச சின்னங்கள் எல்லாம் நீங்க,—அழகிய கண்களைக் காட்டிலும், மலர் போன்ற பாதங்கள் சிவப்பு மிக உற, அரசர் பெருந்தகை (துரியோதனன்),—(தொடரும்) என்பது பொருள். போய்-போக, நீங்க.

**101.** **அயனிடை யசுரர்கு ருப்பெற லுற்றத வன்பான்முன்**
**கயமுனி பெறவிமை யோர்குரு விரகொடு கைக்கொண்டு**
**பயமுற மாமுனி வர்க்குரை செய்தது பார்மீதே**
**உயர்மறை யொன்றுள தம்மறை யொருமுனி**
**யுரைசெய்தான்.**

[அயனிடை அசுரர் குரு பெறல் உற்றது, அவன்பால் முன் கயமுனி பெற இமையோர் குரு விரகொடு கைக்கொண்டு பயம் உற மா முனிவர்க்கு உரை செய்தது (ஆகிய), பார்மீதே உயர் மறை ஒன்று உளது; அ மறை ஒரு முனி உரை செய்தான்.]

**விளக்கம்:-** (செத்தவரைப் பிழைப்பிக்கும் சஞ்சீவி மந்தி ரத்தைப்) பிரும்மனிடமிருந்து அசுர குருவான சுக்கிரன் பெற்ற தும், அவனிடமிருந்து (தேவகுருவான பிரகஸ்பதியின் மூத்த மகனான) கயமுனிவன் (கசன்) தந்திரமாகப் பெற, அதைப் பிரகஸ்பதி பெற்று, எல்லோரும் பயன் அடையும் பொருட்டுச் சிறந்த முனிவர்களுக்கு அளித்ததும் ஆகிய உயர்ந்த மந்திரம், உலகில் உளது; அதை ஒரு முனிவன் எனக்குக் கூறியுள்ளான்,— (என்று துரியோதனன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்), என்பது பொருள். இது அடுத்த செய்யுளோடு தொடரும்.

**102.** **அங்நெடு மாமறை யாலம ரத்திடை யழிசேனை**
**இன்னுயிர் பெற்றிடும் வகைகொடு மீளவு மிகல்வே**
**னென்(று)**
**உன்னியு ளந்தெளி வுற்றொரு வர்க்குமி: துரையாதே**
**தன்னொரு வெங்கதை யோடுத ராபதி தனிசென்றான்.**

["அ நெடு மா மறையால் அமரத்திடை அழிசேனை இன் உயிர் பெற்றிடும் வகைகொடு மீளவும் இகல்வேன்", என்று

உன்னி, உளம் தெளிவுற்று, ஒருவர்க்கும் இது உரையாதே, தன் ஒரு வெம் கதையோடு தராபதி தனி சென்ருன்.]

**விளக்கம்:-** ''அந்தச் சிறந்த மந்திரத்தால் மாண்டாரை உயிர்ப்பித்து மீண்டும் போர் செய்வேன்'', என்று எண்ணித் தனியே கதையோடு துரியோதனன் சென்ருன், என்பதாம்.

துரியோதனன் ஒரு குளத்தில் முழுகுதல்

**103.** **தூயந லந்தரு கங்கையெ னப்பல சுரருந்தோய்**
**பாயத டந்தனின் மூழ்கின னம்மறை பயில்வே னென்(று)**
**ஆயும னங்கொடு சேவடி முன்பின தாவேகிச்**
**சேயவன் வெண்டிரை வாரியின் மூழ்கிய செய**
**லொத்தான்.**

[''தூய நலம் தரு கங்கை என பல சுரரும் தோய் பாய தடந் தனில் மூழ்கினன் அ மறை பயில்வேன்'', என்று, ஆயும் மனம் கொடு, சே அடி முன் பினது ஆ(க) ஏகி, சேயவன் வெள் திரை வாரியில் மூழ்கிய செயல் ஒத்தான்.]

**விளக்கம்:-**தூயதும், நன்மை தருவதுமான கங்கையைப் போல், தேவர் பலரும் நீராடுகின்ற பரவியுள்ள ஒரு குளத்தினில் மூழ்கினனுய் அம்மந்திரத்தை ஜபிப்பேனென்று எண்ணும் மனத் தோடு, தனது சிவந்த கால்களை முன்பின்னுக மாற்றி வைத்துச் சென்று, சிவந்த கிரணங்களை உடைய சூரியன் வெண்திரை வாரியில் (கடலில்) மூழ்கிய செய்கையை ஒத்தான், அதாவது குளத்தினுள் மூழ்கி மறைந்தான்,—என்பதாம்.

பாய-பரவிய, விசாலித்த. சேயவன்-சூரியன். வாரி-நீர்; கடலுக்கு இலக்கணை. காலடியின் அடையாளத்தால் பகைவர் தானிருக்குமிடத்தை அறியாதபடி செய்ய, காலை முன்பின்னுக மாற்றிவைத்து, அதாவது குளக்கரையினின்று அப்பால் சென்றுள்ளதாகத் தோன்றும்படி ஏறுமுகமாகக் காலை வைத்து நடந்து குளத்தினுள் சென்ருன், என்ற கருத்தது; சேவடி முன் பினதாக ஏகி, என்றது.

வேறு

**104.** **தம்பித்து வந்த புலனைந்துங் கலக்க மாற**
**வெம்பித் தடங்கி மனஞ்சித்தொடு மேவல் கூரத்**
**தம்பித்த தோயத் திடைவாயுவுந் தம்ப மாகக்**
**கும்பித்து ஞானப் பெருந்தீபங் கொளுத்தி ஞனே.**

[கம்பித்து வந்த புலன் ஐந்தும் கலக்கம் மாற, வெம்பித்து அடங்கி, மனம் சித்தொடு மேவல் கூர, தம்பித்த தோயத்திடை வாயுவும் தம்பம் ஆக, கும்பித்து ஞானம் பெருந்தீபம் கொளுத்தினன், ஏ.]

**விளக்கம்:-** (விஷயாதிகளில் சென்று) சலனம் அடைந்து வந்த ஐம்புலன்களும் (பொறிகள்) கலக்கம் நீங்கவும், கண்ட விஷயங்களை இச்சிக்கும் மனப்போக்கு அடங்கியும், சித்தோடு (நல்லறிவோடு) பொருந்தி நிலைக்கவும், தம்பித்த (ஸ்தம்பித்த, அதாவது சலனம் அற்ற) தோயத்தில் (குளத்தில்) பிராணவாயுவும் அசையாமல் அடக்கிக் கொண்டும், ஞானம் என்னும் தீபத்தை ஏற்றினன், — என்பது பொருள்.

கம்பித்தல்-அசைதல். புலன் பொறிகளை வேறுபாடின்றிக் கூறுவது, உபசார வழக்கு. வெம்புதல்-விரும்புதல். வெம்பித்து அடங்கல்-இச்சைவழி செல்லும் மனநிலையை அடங்கச் செய்தல். உள்ளே இழுக்கும் மூச்சு பூரகம், எனப்படும். வெளிவிடும் மூச்சு, இரேசகம். மூச்சுக் காற்றை வெளிவிடாமலும், உள்ளிழுக்காமலும், ஓட்டம் அற்று இருக்குமாறு செய்தல் கும்பகம், எனப்படும். பிராணவாயுவின் ஓட்டத்தை நிறுத்திக்கொண்டு துரியோதனன் நீரினுள் இருந்தான், என்பதாம்.

**105.** **பன்னாளும் யோகம் பயில்வோரிற் பதின்ம டங்காத்**
**தன்னாக முற்று மெலிவின்றித் தயங்கு மாறு**
**நன்னாள மூல நளினத்தை மலர்த்தி நாவால்**
**உன்னும லுன்னு முறைமந்திர மோதி னானே.**

[பல்நாளும் யோகம் பயில்வோரின் பதின்மடங்கு ஆ, தன் ஆகம் முற்றும் மெலிவு இன்றி தயங்கும் ஆறு, நல் நாளம் மூலம் நளினத்தை மலர்த்தி நாவால் உன்னாமல் உன்னும் முறை மந்திரம் ஓதினன், ஏ.]

**விளக்கம்:-** பல நாள்கள் யோகம் செய்து பழகியவர்களைக் காட்டிலும் பத்து மடங்கு சிறப்பாகத் தன் உடல் மெலிவுறாமல் விளங்கும்படி, நல்ல தண்டோடு கூடிய, எல்லாவற்றிற்கும் மூலமான தனது (இதயமாகிய) தாமரையை மலர்த்தி, வாய்விட்டு ஜபிக்காமல், மனத்தாலேயே ஜபித்தலை செய்யும் முறையுடைய சஞ்சீவி மந்திரத்தை ஜெபித்தான், என்பது பொருள்.

**106.** **இதயஞ் சிறிதுங் கலங்காத விறைவனிவ் வாறு**
**உதகந் தன்னிற் புக்குயர்மந்திர மோதும் வேலை**
**மதவெங் கயப்போர் வளவற்கு முதுகு தந்த**
**விதமண் டலீகர் புலிகண்ட மிருக மொத்தார்.**

[இதயம் சிறிதும் கலங்காத இறைவன் இ ஆறு உதகம் தன்னில் புக்கு உயர் மந்திரம் ஓதும் வேலே, மதம் வெம் கயம் போர் வளவற்கு முதுகு தந்த விதம் மண்டலீகர் புலி கண்ட மிருகம் ஒத்தார்.]

**விளக்கம்:-** இறைவன்-துரியோதனன். உதகம்-நீர். கயம்-யானை. விதம் மண்டலீகர்-பலவகைப்பட்ட அரசர்கள். வளவன்-சோழன். மிருகம்-மான். துரியோதனன் நீரில் ஜபம் செய்து கொண்டிருக்கும் சமயம், சோழனுக்கு முதுகு தந்த அரசர்கள், புலியைக் கண்ட மானை ஒத்தனர்,—என்பதாம்

அனைவரும் இறந்த சகுனியைக் காணல்

**107. பரபா வகமாம் பரித்தாமனும் பாய்ப ரித்தேர்க்**
**கிருபா ரியனுங் கிருதப்பெயர்க் கேடி லோனும்**
**ஒருபா லிறைகொண் டொழிசேனையுந் தாமு மீண்டு**
**பொருபா ரதப்போர் புரிசௌபலன் பொன்றல் கண்டார்.**

[பர பாவகம் ஆம் பரித்தாமனும் பாய் பரி தேர் கிருப ஆரியனும், கிருதன்பெயர் கேடு இல்லோனும் ஒருபால் இறைகொண்டு ஒழிசேனையும் தாமும் மீண்டு பொரு பாரதம்போர் புரி சௌபலன் பொன்றல் கண்டார்.]

**விளக்கம் :-** பரர்-பிறர். பாவகம்-அழிப்பது அல்லது பரிசுத்தப்படுத்துவது; அக்னி. பரபாவகம் பரித்தாமன்-பகைவர்களாகிய பிறருக்கு அக்னிபோன்ற அசுவத்தாமன். கிருதப்பெயர் கேடிலோன்-கிருதவர்மன் என்ற பெயருடைய அழிவிலாத வீரன். இறை-இறுத்தல், தங்குதல். ஒருபால் இறைகொண்டு-ஒரு புறம் தங்கி. ஒழிசேனை-அழியாது எஞ்சிய சேனை. புரிசௌபலன்-புரிவித்த (விளைத்த) சகுனி (புரி, பிற வினைப் பொருளது.) பொன்றல்-இறத்தல். அசுவத்தாமன் முதலியோர், களம் வந்து சகுனி இறந்து கிடத்தலைக் கண்டார், என்பதாம்.

**108. கண்டார் மிகவும் பரிவோடு கலக்க முற்றார்**
**தண்டா ரகைதோய் விசும்பொத்த சமரபூமி**
**கொண்டான் முரசக் கொடியோனெனக் கோப மிஞ்சி**
**விண்டார் மிகவும் வியந்தா ரவர்வீர மம்மா.**

[கண்டார் மிகவும் பரிவோடு கலக்கம் உற்றார், தண் தாரகை தோய் விசும்பு ஒத்த சமர பூமி கொண்டான் முரசம் கொடியோன் என கோபம் மிஞ்சி விண்டார்; மிகவும் வியந்தார் அவர் வீரம், அம்மா.]

**விளக்கம்:-** பரிவு-துன்பம். சமரபூமி கொண்டான்-வென்று போர்க்களத்தைக் கைப்பற்றினன் (தருமன்). கோபம் மிஞ்சி விண்டார்-மிகுந்த கோபத்தோடு (அசுவத்தாமன் முதலியோர்) பேசிக் கொண்டார். அவர் வீரம் வியந்தார்-பாண்டவரது வீரத்தைப் பாராட்டினர்கள். அம்மா: வியப்பிடைச் சொல். வீரர் பலர் கூடியிருக்கும் போர்க்களத்திற்கு நட்சத்திரம் நிறைந்த வானம் உவமையாயிற்று.

**109.** **பூணு ரமார்பின் வலத்தேபுரி பூந்தண் மாலைக்**
**கோணர் சிலைக்கைந் நெடுநாகக் கொடிகொள் வேந்தைக்**
**காணர் களத்தி லொருபாலுங் கருகி யுள்ளம்**
**வாணு டருக்கன் குடிபோமகல் வானெ டொத்தார்.**

[பூண் ஆரம் மார்பின் வலத்தே புரி பூ தண் மாலை, கோண் ஆர் சிலை கை, நெடு நாகம் கொடி கொள் வேந்தை காணர் களத்தில் ஒரு பாலும், கருகி உள்ளம், வாள் நாடு அருக்கன் குடி போம் அகல் வானெடு ஒத்தார்.]

**விளக்கம்:-** வாள் நாடு அருக்கன்-ஒளி பொருந்திய சூரியன். குடிபோம் அகல் வான்-விட்டு நீங்கிய பெரிய வானம். இரத்தின ஆரம் அணிந்த மார்பில் நஞ்சாவட்டை மாலையுடைய, வளைவுற்ற வில்லைக் கொண்ட கையையுடைய, பாம்புக் கொடியனை துரியோதனனைக் களத்தில் எப்பக்கத்திலும் காணுதவர்களாய், மனத்தவிப்புக் கொண்டு, சூரியன் நீங்கிய வானம்போல் (அசுவத்தாமன் முதலியோர்) பொலிவு இழந்தனர், என்பதாம்.

சஞ்சயனை வினவல்

**110.** **தனிவந்து தோன்று தலுஞ்சஞ்சய னென்னும் வேத**
**முனிவன் றனைக்கண் டிருதாளின் முடிகள் சேர்த்தி**
**அனிகங் கெழும்போ ரரசன்றனை யங்கை நெல்லிக்**
**கனிகண் டனையா யெவட்காண்குதுங் காட்டு கென்றுர்.**

[தனி வந்து தோன்றுதலும் சஞ்சயன் என்னும் வேதம் முனிவன் தனை கண்டு இருதாளில் முடிகள் சேர்த்தி, அனிகம் கெழும் போர் அரசன் தனை அம் கை நெல்லி கனி கண்டனையாய் எவண் காண்குதும், காட்டுக, என்றுர்.]

**விளக்கம் :-** சஞ்சயன் என்னும் வேதம் வல்ல முனிவன், தனியே வந்து எதிரே தோன்றலும், அவன்தனைக் கண்டு வணங்கி, ''உள்ளங் கை நெல்லிக் கனியைக் காணுதல்போல் எல்லாவற்றையும் கண்டு அறிந்தவனே, சேனைகளோடு மிகுதி

யாகச் செய்யும் போரையுடைய துரியோதனனை எங்கே காணப் பெறுவோம், காட்டுக'', என்று கேட்டனர், — என்பதாம்.

முனிவன் பதில்

111. இவ்வோர் விரைவி னிவன் றன்னை வினவ வின்னோன்
அவ்வோ னுயிருக் கழிவில்லை யமரின் மோதி
வெவ்வோ டையானை விறல்மன்னவர் வீய யாரும்
ஒவ்வோன் மறித்து மமர்மோத வுணர்த லுற்றான்.

[இவ்வோர் விரைவின் இவன் தன்னை வினவ இன்னோன், அவ்வோன் உயிருக்கு அழிவு இல்லை; அமரில் மோதி, வெம் ஓடை யானை விறல் மன்னவர் வீய, யாரும் ஒவ்வோன் மறித்தும் அமர் மோத உணர்தல் உற்றான்.]

**விளக்கம்:-** இவ்வோர்-அசுவத்தாமன் முதலியோர். இன்னோன்-சஞ்சய முனிவன். அவ்வோன்-துரியோதனன். ஓடை-நெற்றிப்பட்டம். வீய-இறக்க. யாரும் ஒவ்வோன் எவரும் தனக்கு ஒப்பாகாத துரியோதனன். இவ்வோர் வினவ முனிவன், ''துரியோதனன் உயிருக்கு அழிவில்லை; விறல் மன்னர், போரில் மாள, யாரும் ஒவ்வோன் மறுபடியும் போர் செய்தலைச் சிந்திப்பவனானான்,'' என்று முனிவன் கூறினான், என்பதாம்.

112. ஈண்டுச் சமரி னிறந்தோர்க ளெவரு மின்றே
மீண்டுற் பவிக்க விடுவித்து விரகி னோடும்
பாண்டுப் பயந்தோர் படையாவு மடிய மோதப்
பூண்டுத் தமமா மறை கொண்டகன் பொய்கை புக்கான்.

[ஈண்டு சமரின் இறந்தோர்கள் எவரும் இன்றே மீண்டு உற்பவிக்க விடுவித்து விரகினோடும், பாண்டு பயந்தோர் படை யாவும் மடிய மோத பூண்டு, உத்தமம் ஆம் மறை கொண்டு அகல் பொய்கை புக்கான்.]

**விளக்கம்:-** (யுத்த பூமியாகிய) இங்கே, போரில் (தனக்காக) இறந்தவர்கள் எல்லோரும் இன்றே மறுபடி பிழைத்தெழும்படி தனது சாமர்த்தியத்தினால் (சாவினின்று) விடுவித்து, (வெற்றி கொண்ட) பாண்டு மக்களின் சேனைகள் முழுமையாக அழியும்படி தாக்குதற்காகத் தீர்மானம் செய்து கொண்டு, மேலானதொரு மந்திரத்தைத் துணையாகக் கொண்டு ஒரு பெரிய தடாகத்தில் புகுந்துள்ளான், — என்று முனிவன் கூறினான், என்பது பொருள்.

113. **என்னைத் துருபன் மகனாதியர் கோற லெண்ணப்**
**பின்னைக்கு வாய்த்தோன் பிழைப்பித்தனன் யானும் வந்தேன்**
**தன்னைக் குழுழ்கத் தடம்வாய்த்தமை தந்தை யோடும்**
**அன்னைக் குரைப்பே னெனப்போயின னந்த ணாளன்.**

[என்னை துருபன் மகன் ஆதியர் கோறல் எண்ண, பின்னைக்கு வாய்த்தோன் பிழைப்பித்தனன், யானும் வந்தேன்; தன் ஐக்கு மூழ்க தடம் வாய்த்தமை தந்தையோடும் அன்னைக்கு உரைப்பேன் என, போயினன் அந்தணாளன்.]

**விளக்கம்:-** திட்டத்துய்மன் முதலியோர் என்னைக் கொல்லுதற்கு எண்ண, நப்பின்னைக்குக் கணவனாய் வாய்த்த கண்ணன், (தூதர், முனிவர் ஆயவரைக் கொல்லலாகாது என்று தடுத்து) சாவினின்று (என்னை) விடுவித்தான், நானும் வந்தேன்; எனது அரசனான துரியோதனனுக்கு முழுகும்படி தடாகம் ஒன்று கிடைத்ததைத் தந்தையான திருதராட்டிரனுக்கும், அவன் அன்னைக்கும் சொல்வேன், என்று கூறி முனிவன் அகன்றான்,—என்பது பொருள்.

தன் ஐ—தனது அரசனான துரியோதனன்.

அறுசீர் விருத்தம்

114. **வேதியன் வாய்மை கேட்ட வேதியன் மகனும் மற்றை**
**ஓதிய கிருப னாதி யுள்ளவர் தாமு மெய்தி**
**மாதுய ரகற்று மற்ற வாய்மைகேட் டங்கு ஞானம்**
**ஊதியம் பெற்ற லென்ன வொடுங்கிய வோடை கண்டார்.**

**விளக்கம்:-** வேதியனான சஞ்சயன் வாய்மொழிகேட்டு, துரோணன் மகனான அசுவத்தாமனும், முன்னே கூறப்பட்ட கிருபன் முதலிய மற்றும் உள்ளவர்களும், சென்றடைந்து, அங்கே, பெரியதுயரத்தை அகற்றவல்ல உபதேச மொழிகளைக் கேட்டு, அதன் பயனாய நலத்தை (லாபத்தை) பெற்றதுபோல் சலனம் அற்று அடங்கியிருந்த குளத்தைக் கண்டார்,—என்பது பொருள். மற்றை, (மற்று—ஐ) அசை.

துரியோதனன் சென்று மூழ்கிய தடாகத்தின் தன்மையை ஈற்றடிகள் கூறும். நல்ல உபதேச வார்த்தையைப் பெரியோரிடங் கேட்டு மனமும் பொறியும் அடங்கப் பெற்றவரது நிலையை ஒத்து, அத்தடாகம் அசைவு அற்று ஒடுங்கியிருந்தது,—என்பதாம்.

**115.** **புள்ளிய லரவங் காணூர் பொருதெறி தரங்கங் காணூர்**
**துள்ளிய மீனங் காணூர் சூழ்வரு மனிலங் காணூர்**
**ஒள்ளிய மலர்க ளெல்லா முறங்குத லன்றி மன்றல்**
**வள்ளிய தோடு தோறு மதுநுகர் வண்டுங் காணூர்.**

**விளக்கம்:-** (தடாகத்தை அடைந்தவர்கள்) பறவைகளால் உண்டாகும் ஒலியைக் கேட்டாரிலர், மோதிவீசுகின்ற அலைகளைக் காணூர், துள்ளும் மீன்களைக் காணூர், விளக்கமுடைய நீர் மலர்கள் எல்லாம் குவிந்து கிடத்தல் அல்லாமல், வாசனையோடு கூடிய வளப்பமுடைய பூவிதழ்களில் தேன் குடிக்கும் வண்டுகளைக் காணூர்; இந்நிலையினதாயிருந்தது, துரியோதனன் மூழ்கிய தடாகம்,—என்பதாம்.

துரியோதனனை அவர் அழைத்தல்

**116.** **ஏறிய பாதம் போல விறங்கிய பாத நோக்கிச்**
**சாறிய லிரத மிஞ்சுந் தடம்புன லடங்க நோக்கி**
**மாறியல் வேந்தர் தம்மில் வாண்முக நோக்கி நோக்கிக்**
**கூறிய வரசன் றன்னைக் கூவின ரழைக்க லுற்றுர்.**

**விளக்கம்:-** சாறு இயல் இரதம்-கருப்பஞ்சாற்றை ஒத்த இனிய நீர். அடங்க-சலனம் இல்லாமல் அடங்கியிருக்க. மாறு இயல்வேந்தர்-மாறுபட்ட அபிப்பிராயங்களையுடைய அரசர், அல்லது பலவகையான கவலை கொண்ட அரசர். நீரிலிருந்து கரை ஏறிய அடிச்சுவடுகளைப் போன்று கால்களை முன் பின்னாக அவன் அடி வைத்து நீரில் இறங்கிய சுவடுகளை நோக்கியும், கருப்பஞ்சாற்றைப் போன்ற இனிய நீரை மிகுதியாகக் கொண்ட நீர் அசைவு அற்று அடங்கியிருக்க, பலவிதமான அபிப்பிராயங் களைக் கொண்ட வேந்தர் தங்களுக்குள் ஒருவர் முகத்தை ஒருவர் கவலையோடு நோக்கி, நீரில் இறங்கியுள்ளதாகக் கூறப்பட்ட அரசனைக் கூவி அழைக்கலானூர்கள்,—என்பது பொருள்.

**117.** **நின்கிளை யாகி வந்த நிருபருந் துணைவர் யாரும்**
**வன்களி றிவுளி பொற்றேர் வாண்முதற் படைகள் யாவும்**
**புன்கள மதனிற் சேரப் பொன்றின ரிம்ப ரன்றே**
**என்கரு தினைகொ லையா வென்பெறற் கென்செய் தாயே.**

[நின் கிளை ஆகி வந்த நிருபரும் துணைவர் யாரும் வல் களிறு இவுளி பொன்தேர், வாள் முதல் படைகள் யாவும் புன் களம் அதனில் சேர, பொன்றினர் இம்பர் அன்றே! என் கருதினை கொல், ஐயா? என் பெறற்கு என் செய்தாய்? (ஏ)]

**விளக்கம்:-** இம்பரில் - (இவ்வுலகத்தில்) உன் சுற்றமாய் அமைந்த அரசர்களோடும் நண்பர்கள் யாவரோடும், வலிய யானை குதிரை தேர் ஆகிய வாகனங்களும், வாள் முதலிய எல்லா ஆயுதங்களும், புல்லிய யுத்த பூமியில் அழிந்தனவன்றே! ஐயனே, என்ன நினைத்தனை? எது பெறுவதற்கு என்ன செய்தாய்? ஏகாரம், இரக்கப் பொருளது.

"உற்றாரும் உறவினரும் உனக்காகப் போரில் இறக்க, நீ போர்க்களத்திலிருந்து ஓடிவந்து தடாகத்தில் புகுந்தது மானமுடைய செயல் ஆகாதாதலால், எது பெற நினைத்து நீ, இந்தக் காரியம் செய்தாய்?" என்று கூறும் கருத்தது, ஈற்றடி.

அசுவத்தாமன் கூறல்

**118.** **வீரியம் விளம்பல் போதா தாயினும் விளம்பு கின்றேன்**
**போரிய லமரி லென்னேர் பொருசிலை எடுத்து நின்றால்**
**தேரியல் விசய னேடு நால்வருஞ் சேர வென்கை**
**மூரிவெங் கணைக ளாலே முடித்தலை துணிவர் கண்டாய்.**

**விளக்கம்:-** தனது வீரத்தைத் தானே கூறல் அமையாது எனினும், கூறுகின்றேன்; போர் செய்தல் பொருந்திய யுத்தக் களத்தில், பொருசிலை ஏந்தி, என்முன் நின்றால் தேரில் அமர்ந்த விசயனேடு பாண்டவர் நால்வரும் ஒன்றாக, என்கை வலிய கணைகளால் கிரீடம் அணிந்த தலை அறுபடுவர்,—அது நிச்சயம், அறிவாய்,—என்பது பொருள்.

தன் ஆற்றலை உணராரிடத்து, தனது வீரத்தை எடுத்துக் கூறல் அமையும், என்ற விதி உளதாதலால், அசுவத்தாமன், தன் வீரியம் கூறினான், என்க.

**119.** **எல்லவன் வீழு முன்னம் யாரையுந் தொலைத்து வேலைத்**
**தொல்லைமண் ணளித்தி லேனேற் றுரோணன்மா மதலை யல்லேன்**
**வில்லெனும் படையுந் தீண்டேன் விடையவன் முதலோர் தந்த**
**வல்லிய கணையும் பொய்த்தென் மறைகளும் பொய்க்கு மாதோ.**

**விளக்கம்:-** எல்லவன்-சூரியன். சூரியன் அத்தமிக்குமுன் பகைவர் அனைவரையும் அழித்துக் கடல் சூழ்ந்த பழமையான பூமியை உனக்கு அளிக்காவிட்டால், (நான்) துரோணன் மகன் ஆகேன், வில்லையும் தொடேன், விடையவன் (சிவபெருமான்) முதலியோர் தந்த வலிய கணைகளும் பொய்த்து (வீணாக) எனக்கு

உரியதான வேதங்களும் வீணானவையாகும், - என்று அந்தணன் கூறினான், என்பது பொருள்.

**120.** **மோதுமோ கரப்போர் வென்று முடித்துமோ ஒன்றி லொன்றில்**
**சாதுமோ விரண்டு மல்லாற் றரணியர்க் குறுதி யுண்டோ**
**யாதுமோ தெளிதி நின்போ லேற்றமுள் ளவர்க்கிவ் வாறு**
**போதுமோ பூண்ட பூண்ட புகழெலாம் போய்வி டாதோ.**

**விளக்கம்:-** செய்தற்குரிய ஒன்றில், உக்கிரமான போர் செய்து பகைவென்று முடிப்போமோ, அல்லது, ஒன்றில் போர் செய்து மடிவோமோ,—இந்த இரண்டு வழி அல்லாமல், அரசர்களுக்கு நன்மை வாய்ந்த செயல் உளதோ? இவ்விரண்டில் எதையாயினும் ஒன்றைச் செய்யத் தெளிவு கொள்வாய், அதாவது துணிவாய்; உன்னைப் போன்ற ஏற்றம் உள்ளவர்க்குத் (தடாகத்தில் ஒளிதலாகிய) இது தகுமோ? நீ எய்திய புகழ் முழுதும், (நீ இப்படிச் செய்தால்) அழிந்துவிடாதோ!—என்று அந்தணன் கூறினான், என்பது பொருள். மோகரம்-உக்கிரம்.

**121.** **பாண்டவர் முடிய வென்றிப் பாரெலா முனக்கே தந்தால்**
**மாண்டவர் தம்மை நின்வாய் மறைமொழி தன்னைக் கொண்டு**
**மீண்டவ ராக்கிப் பின்னை வேறொரு பகையு மின்றி**
**ஆண்டவ ரிவரே யென்னத் துணைவரோ டாள லாமே!**

**விளக்கம்:-** பாண்டவர் மடியும்படி போர் வென்று, இந்தப் பூமி முழுவதையும் உனக்கே (நான்) கொடுத்தால், (அதன்பின்) உன்னிடத்தேயுள்ள சஞ்சீவி மந்திரத்தைக் கருவியாகக் கொண்டு, இறந்தவர்களைப் பிழைத்தவர்களாக்கிப் பிறகு எவ்விதப் பகையும் இல்லாமல் (உலகம்) ஆண்டவர் இவர்களே என்று எல்லோரும் சொல்லும்படி, தம்பிமாரொடும், நண்பர்களோடும் நீ ஆட்சி புரியலாமே!—என்று அந்தணன் முடிவாகக் கூறினான், என்பது பொருள். உன்வாய் மறைமொழி—உன்னிடத்தே உனக்கே சொந்தமாய் இருக்கும் இரகசியமான சஞ்சீவி மந்திரம்.

## அழைத்தவர் பயனின்றி மீளல்

**122.** **என்றிவை போல்வ பன்னூ றியம்பவு மிராச ராசன்**
**ஒன்றினுங் கவலை செல்லா வுணர்வுடை யுளத்த னாகி**
**அன்றிகல் வருணன் கூறு மாகுமென் றறிஞர் சொல்லத்**
**துன்றிய வடிவத் தோடு மடங்கினான் றோயத் தூடே,**

**விளக்கம்:-** என்று இவை போன்றன வான பல வார்த்தைகளை (அசுவத்தாமன் முதலியோர்) கூறவும், இராசராசன் (துரியோதனன்) எந்த விஷயத்திலும் பொறிகள் செல்லாத உணர்வுடைய மனத்தையுடையவனாய், அப்பொழுது இவன் வலிய வருணனது அமிசத்தினன் போலும் என்று அறிஞர் சொல்லும்படி, பொருந்திய வடிவத்துடன் நீரினுள் அடங்கியிருந்தான், என்பது பொருள்.

**123. உரைத்தன வுரைகட் கெல்லா முத்தர முரைசெய் யாத**
**வரைத்தடந் தோளா னெஞ்சின் வலிமையை வலிதி னெண்ணி**
**நிரைத்தவெங் கதிர்கொள் வாளி நெடுஞ்சிலைத் துரோணன் மைந்தன்**
**விரைத்தொடைக் கிருத னோடு மாதுல னோடு மீண்டான்.**

**விளக்கம்:-** (இவ்வாறு) கூறிய உரைகளுக்கெல்லாம் பதில் மொழியாத, மலை போன்ற பெரிய தோள்களை உடைய துரியோதனனது மன உறுதியை, நன்றாகக் கண்டு, வரிசைப்பட்ட சுொடிய கூரிய அம்புகளையும், பெரிய வில்லையுங் கொண்ட துரோணனது குமரனான அசுவத்தாமன், மணக்கும் மாலையையுடைய கிருதவர்மாவோடும், மாமனான கிருபனோடும் திரும்பினான்,—என்பது பொருள்.

பாண்டவர் துரியோதனனைத் தேடல்

**124. மற்றவர் மீண்ட பின்னர் மாதவக் குந்தி யீன்ற**
**கொற்றவர் தாமுஞ் சேனைக் குழாத்தொடுந் தங்க ளோடும்**
**செற்றவர் தம்மை யெல்லாஞ் சேணுல கேற வேற்றிப்**
**பொற்றவ ரிராச ராசன் புக்குழி யறிவு ருமல்.**

**விளக்கம்:-** அசுவத்தாமன் முதலியோர் திரும்பிச் சென்ற பிறகு, மாதவக் குந்தி பெற்ற கொற்றவர் (பாண்டவர் தாமும்,—தங்களுடைய சேனைகளோடும், தங்களோடும் பகைத்துப் போர் செய்த கௌரவர் பக்கத்தாரை எல்லாம் வானுலகம் ஏறும்படி செலுத்தி, பொன் தவர் (அழகிய வில்) உடைய துரியோதனன் போய் மறைந்திருக்கும் இடம் தெரியாமல்,—(அடுத்த செய்யுளோடு தொடரும்), என்பது பொருள். சிறந்த புதல்வர்களைப் பெற்றதால், 'மாதவக் குந்தி', எனப்பட்டாள்,

**125.** **பாடியுங் களமுஞ் சூழ்ந்த பாங்கரு மங்கு மிங்கும்**
**தேடியுங் காண்கி லாத சிந்தையா குலத்த ராகி**
**நீடுயிர்த் துயிர்த்து நின்ற பொழுதினி னிகழும் வேட்டை**
**ஆடிய வலைஞர் மீண்டோ ரானிலற் குரைசெய் வாரே.**

**விளக்கம்:-** பாடி-படைவீடு. களம்-போர்க்களம். சூழ்ந்த பாங்கர்-சுற்றுப்புறம். ஆகுலம்-கவலை. நிகழும் வேட்டை ஆடிய வலைஞர்-தொழிலாகப் பொருந்திய வேட்டை ஆடிய வேடர். மீண்டோர்-துரியோதனன் சென்ற வனத்தில் வேட்டையை முடித்துத் திரும்பியவர். ஆனிலன்-வாயுகுமாரனான வீமன். துரியோதனனைக் காணாது பாண்டவர் கலங்குகையில், வேட்டை யாடித் திரும்பிய வேடர்களில் சிலர் வீமனுக்கு, துரியோதனன் இருக்கும் இடத்தைச் சொல்வாராயினர். பகை எச்சம் தீயின் எச்சம் போல் தெறும் ஆதலால் பாண்டவர் ஆகுலத்தவரா யினர்,—என்க.

**126.** **துவம்மிகு முனிவ ரோடு சுரர்களுந் தோய்யு நன்னீர்த்**
**தவமுயல் பொய்கை தன்னிற் றண்டுடைக் கைய னாகிப்**
**புவிமுழு தாண்ட வேந்தன் புக்கனன் கண்டோ மென்றார்**
**கவலையின் மனத்த னான காற்றருள் கூற்ற னற்கே.**

**விளக்கம்:-** கவலையின் மனத்தன் ஆன காற்று அருள் கூற்று அனற்கு (வேடர்) சத்துவ குணம் மிகு முனிவரோடு சுரர்களும் தோயும் நல்நீர் தவம் முயல் பொய்கை தன்னில், புவி முழுது ஆண்ட வேந்தன் தண்டு உடைய கையன் ஆகி, புக்கனன், கண்டோம்,—என்றார்,—என்பது அன்வயம். சத்துவம், என்ற சொல் முதல் குறைந்து **துவம்**, என நின்றது. சுரர்-தேவர். தோயும்-நீராடும். தவம் முயல் பொய்கை-தவம் செய்வதற்குரிய நீர்நிலை. கூற்று-எமன். தனது சபதம் நிறைவேறுதற்குத் துரியோதனனைக் கொல்லல் அவசியமாதலால், வீமன், கவலை யுடைய மனத்தினன் ஆனான்.

வீமன் கண்ணனுக்குக் கூறல்

**127.** **கருமுகி லனைய மேனிக் கண்ணனும் பவள மேனித்**
**தருமனு மெவருங் கேட்பத் தாமவேல் வீமன் சொன்னான்**
**பொருமர வுயர்த்தோ னின்றோர் பொய்கையுட் புகுந்தா னென்று**
**தெருமரு மிருக மாக்கள் செப்பின ரென்று கொண்டே.**

**விளக்கம்:--** எவரும்-மற்றவர்கள் எல்லோரும். தாமவேல்-பிரகாசம் பொருந்திய வேல். பொரும் அரவு உயர்த்தோன்—

பொரும் பாம்பைக் கொடியிலே கொண்ட துரியோதனன். தெரு மரு மிருகமாக்கள்-அலையுந்தன்மையுள்ள விலங்குகளை வேட்டை யாடும் வேடர். கொண்டே, என்பது அசை. வேடர் கூறியதை வீமன் கண்ணனுக்கும் மற்றவர்க்கும் கூறினான், என்பதாம்.

கண்ணன் கூறல்

**128,** **என்றலுந் தன்னைச் சேர்ந்தோ ரிடுக்கணு மிளைப்பு மாற்ற**
**நின்றவெம் பெருமா னேமி நெடியவ னருளிச் செய்வான்**
**அன்றயன் முகத்தி னுற்பெற் றநேகமா முனிவர் தம்பால்**
**நின்றமந் திரமொன் றுண்டு நிகரதற் கில்லை வேறே.**

**விளக்கம்:-** என்று வீமன் கூறலும், தன்னைச் சரணாக அடைந்தார் துன்பத்தையும் தளர்ச்சியையும் நீங்கச் செய்ய நின்ற, எமது தலைவனான நேமியை உடைய கண்ணன் கூறு வான்; முன்னாள் பிரும்மன் மூலமாகப் பெற்றதும், சிறந்த முனிவர் பலரிடத்தில் நிலைத்திருந்ததுமான மந்திரம் ஒன்று உளது; அதற்கு நிகரான வேறு மந்திரம் ஒன்று இலது,—என்று கண்ணன் கூறினான், என்பது பொருள்.

**129.** **வெஞ்சம ரிறந்தோ ரெல்லா மீண்டுயிர் பெறுவ ரந்த**
**வஞ்சக மறைமுன் பெற்றான் வலம்புரித் தாரி னானும்**
**நெஞ்சமர் வலிமை யோடு நீரிடை மூழ்கி நீங்கள்**
**துஞ்சிடப் பொருவா னின்னஞ் சூழ்ந்தனன் போலு**
**மென்றான்.**

**விளக்கம்:-** போரில் இறந்தோர் அனைவரும் (அந்த மந்திரத் தால்) உயிர் பெறுவர். அந்த வஞ்சக மந்திரத்தை (ஒரு முனிவ னிடமிருந்து) முன்பு பெற்றவனான துரியோதனனும், மன உறுதி யுடனே நீரில் மூழ்கி (இரகசியமாய் அதை ஜபித்து இறந்தவர் களை உயிர்பெறச் செய்து) நீங்கள் அழியும்படி இன்னமும் போர் செய்யச் சூழ்ந்தனன் போலும் என்று கண்ணன் கூறினான் என்பதாம்.

வஞ்சகம்-மறைவு. வஞ்சகமறை-இரகசியமான மந்திரம். நெஞ்சு அமர் வலி-மனவுறுதி, மனோதைரியம். துஞ்சுதல்-கலையாத பெருந்தூக்கம் கொள்ளல், இறத்தல். போலும், என்ற ஒப்பில் போலி, ஊகித்தற் பொருளது.

**130.** **மாயவ னுரைத்த மாற்ற மாருதி கேட்டுத் தந்தை**
**ஆயவன் றன்னைப் போல வப்பெரும் பொய்கை யெய்தித்**
**தூயதண் டுளவி னானுந் துணைவருஞ் சூழ்ந்து நிற்பத்**
**தீயெனத் தீய நெஞ்சன் செவிசுடச் சிலசொற் சொல்வான்,**

**விளக்கம்:-** மாயவன் சொன்ன வார்த்தை மாருதி 'வீமன்' கேட்டு, தனது தந்தையான வாயுவைப்போல் விரைந்து பெரிய தடாகத்தை எய்தி, தூய தண் துளவோனும், உடன் பிறந்தவர் களும் சூழ்ந்து நிற்க, தீயைப் போன்ற கொடிய நெஞ்சையுடைய துரியோதனனது செவிசுடும்படி சில வார்த்தை சொல்ல லானுன்,—என்பது பொருள்.

வேறு

வீமன் கூறல்

**131. கங்கைமகன் முதலாகக் காந்தாரன்**
**முடிவாகக் களத்தில் வீழ்ந்த**
**துங்கமணி முடிவேந்தர் சொல்லிமுடிப்**
**பதற்கடங்கார் துரக மாவும்**
**செங்கனக மணிக் கொடிஞ்சித் திண்டேரும்**
**பெரும்பனேக்கை சிறுத்த செங்கண்**
**வெங்கயமு மேருமல் வீழ்கயத்தி**
**லேறினேயோ வேந்தர் வேந்தே.**

**விளக்கம்:-** வேந்தர் வேந்தனே, வீடுமன் முதலாக, சகுனி ஈருகப் போர்க் களத்தில் மடிந்த சிறந்த மணிமுடி வேந்தர், கணக்கிட்டுச் சொல்லி முடித்தற்கு அடங்கார், அதாவது எண் கடந்தவர்; (அவ்வாருக) நீ குதிரை, கனக மணிக் கொடிஞ்சித் திண் தேர், பனேக்கை சிறுத்த செங்கண் வெவ்விய யானே ஆய வற்றின் மேல் ஏருது, வீழ்தற்குரிய பொய்கையில் ஏறினேயோ,— என்பது பொருள்.

கயம் - யானே, குளம். ஏறுதல் - தேர் ஏறுதல், உள்ளே செல்லுதல். பெரும் பனேக்கை, சிறுத்த செங்கண், முரண் தொடை, ''வெம் கயம் ஏருமல் வீழ்கயம் ஏறினேயோ!'' என்றது, நயமுடையது.

**132. நெஞ்சறிய நீயெமக்கு நிலேநின்ற**
**பழியாக நெடுநாட் செய்த**
**வஞ்சகமும் பொய்மொழியு மனுநீதி**
**தவறியது மறந்தாய் கொல்லோ**
**துஞ்சியநின் சேனேயெல்லா மீண்டுவர**
**நீயறையுஞ் சுருதி யிற்றை**
**வெஞ்சமர முடித்தன்றே வறைவதிவை**
**வீரருக்கு வீர மாமோ.**

**விளக்கம்:-** என்றும் அழியாத பழிப்பு எமக்கு உண்டாகும்படி, நெஞ்சு அறிய நெடு நாள்களாகச் செய்த வஞ்சகமும் பொய் மொழியும், மனுநீதி வழுவியதுமான உனது செயல்களை மறந்தனையோ? இறந்து பட்ட உன் சேனை எல்லாம் உயிர் பெற்று வர நீ ஜபிக்கும் மந்திரம், இன்றைய தினத்தின் வெம் சமரை முடித்த பின் அன்றோ செய்ய வேண்டிய காரியமாகும்? இவை, அதாவது தீய செயல்களைச் செய்ததும், பின்னர் போரில் நிற்க மாட்டாமல் நீரில் மறைவதுமாகிய இவை, வீரருக்குரிய வீர முடைய செயல் ஆமோ!—என்பதாம்,

வீமனுக்கு விஷம் ஊட்டியது, அரக்கு மாளிகையில் இருக்கச் செய்தது, பொய்ச் சூதாடியது, வஞ்சகம். வனவாசம் செய்து திரும்பியதும் நாடு தருவதாகக் கூறிய வாக்குத் தவறியது, பொய். மூத்தவனான தருமன் இருக்க, இளையவனான துரியோதனன் அரசு கொண்டது, மனுநீதி தவறியது ஆகும்.

**133. அடிமாறி நீரிடைப்புக் கருமறைநீ**
**புகன்றுலு மரவப் பைம்பொன்**
**கொடிமாறிக் குருகுலத்தோர் கோவேநின்**
**பேர்மாறிக் குலாவு மாலை**
**முடிமாறி யொருதனிமா முத்தநெடுங்**
**குடைநிழற்கீ ழாளு முந்நீர்ப்**
**படிமாறி யொழியவிடேன் புறப்படாய்**
**மறைபடவிப் பகல்போம் முன்னே.**

**விளக்கம்:-** குலாவு மாலை முடி - விளங்குகின்ற மாலை அணிந்த தலை. முந்நீர் - கடல். படி - பூமி, ராஜ்யம். இ பகல் மறை படப்போம் முன்னே - சூரியன் அஸ்தமிக்குமுன். புறப்படாய் - (நீரிலிருந்து) வெளிப்பட்டு வருவாய். காலடியை முன் பின்னாக வைத்து நீ நீரில் புகுந்து அரு மறை ஜபித்தாலும், பசும் பொன்னு லான காம்பையுடைய உனது பாம்புக் கொடி ஒழிந்து, உனது நெடுங் குடை நிழலில் நீ அரசு செலுத்தும் கடல் சூழ்ந்த பூமி ஒழிந்து போனாலல்லாமல் உன்னை (நான்) விட மாட்டேன்; ஆகையால் சூரியன் மறையுமுன் வெளிப் படுவாய்,—என்பது பொருள்.

**134. ஓதப்பைங் கடல்புடைசூ ழுலகாளு**
**முடிவேந்த ருறுபோ ரஞ்சிப்**
**பாதத்தில் வீழ்வரோ பாரரசர்**
**கேட்டாலும் பழியே யன்றோ**

**மேதக்க வரமகளிர் கைபிடிக்க**
**இந்திரனும் விண்ணோர் தாமும்**
**காதத்தி லெதிர்கொள்ளக் கற்பகநீ**
**ழலில்வைப்பன் கலங்க லம்மா.**

[ஓதம் பைங்கடல் புடைசூழ் உலகு ஆளும் முடிவேந்தர் உறு போர் அஞ்சி பாதத்தில் வீழ்வரோ? பார் அரசர் கேட்டாலும் பழியே அன்றோ? மேதக்க அர மகளிர் கை பிடிக்க, இந்திரனும் விண்ணோர் தாமும், காதத்தில் எதிர் கொள்ள, கற்பக நீழலில், வைப்பன், கலங்கல், அம்மா.]

**விளக்கம்:-** பாதம் - கால், நீர். மேதக்க - மேன்மை பொருத்திய. அர மகளிர் - தேவ மாதர். கை பிடிக்க (நீ அம் மாதர்) கையைப் பற்ற. காதத்தில் எதிர் கொள்ள - ஒரு காத தூரத்தில் எதிர் கொண்டு அழைத்துச் செல்ல அம்மா: ஈற்றசை. அரசர் போர் அஞ்சிப் பாதத்தில் (காலில்) விழுதல் அவருக்குப் பழியாவது போல் பாதத்தில் (நீரில்) ஒளிந்து மறைவதும் பழியுடையதே! கலங்காது வெளிப் படுவாய்; தேவர் எதிர் கொள்ளத் தேவமாதருடன் வீர சுவர்க்கத்தில் இனிதே வாழலாம்,— என்று வீமன் கூறியபடி.

**135. களந்தனிலெத் தனைகவந்தங் கண்களிக்கக்**
**கண்டனைநீ கைத்தண் டோடிக்**
**குளந்தனிலிக் கவந்தமுங்கண் டேகுதற்குப்**
**புகுந்தனையோ கொற்ற வேந்தே**
**வளந்தனிலிக் கோபமுமென் வஞ்சினமும்**
**போகாது வந்துன் பாவி**
**உளந்தனிலிக் கவலையைவிட் டுடற்றுதல்லல்**
**லதுமற்றோ ருறுதி யுண்டோ.**

[களந்தன்னில் எத்தனை கவந்தம் கண்களிக்க கண்டனை நீ; கை தண்டோடு இ குளந்தனில் கவந்தமும் கண்டு ஏகுதற்கு புகுந்தனையோ கொற்றம் வேந்தே? வளந்தனில் (எனது) இ கோபமும் வஞ்சினமும் போகாது வந்து உன்பாவி உளம்தனில் இ கவலையை விட்டு உடற்றுதல் அல்லது மற்று ஓர் உறுதி உண்டோ!]

**விளக்கம்:-** கவந்தம் என்பதற்கு, உடற் குறை என்ற பொருளோடு நீர் என்ற பொருளும் உளது. வெற்றியுடைய வேந்தனே, போர்க் களத்தில் எத்தனை கவந்தங்களை நீ கண்டாய்; அது போல், இப்பொய்கையின் கவந்தமும் (நீரின் தன்மையையும்) கண்டு செல்ல; கைத் தண்டோடு இதனுள் சென்றனையோ,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள்

கொற்ற வேந்தே, இகழ்ச்சி. வளந்தனில், அதாவது மிகுதியுற்ற எனது கோபமும் வஞ்சினமும் வீணுகாமல், உனது தீமை நிறைந்த மனத்தின் கவலையை விட்டு விட்டு வெளிப்பட்டு வந்து போர் செய்தலே அல்லாமல் செய்தற்குரிய வேருெரு நல்ல காரியம் இலது,—என்பது ஈற்றடிகளின் பொருள். பாவி உள்ளம் - தீய எண்ணங்களுக்கு இடமான மனம். போகாது என்பதற்குப் போகாமல் என்று வினையெச்சப் பொருள் கொள்க.

**136.** **இனத்திடைநின் ஞெருபதின்மே லெழுநாளு**
**மொருவருட னிகல்செய் யாமல்**
**தனத்திடைநின் றுளமகிழும் புல்லரைப்போன்**
**மதத்துடனே தருக்கி வாழ்ந்தாய்**
**சினத்திடைவெம் பொறிபறக்கச் செயிர்த்திருகண்**
**சிவப்பேறச் செருச்செய் யாமல்**
**வனத்திடைசென் ஞெளிப்பரோ மண்முழுதுந்**
**தனியாளு மன்ன ரானோர்.**

[இனத்திடை நின்று ஒருபதின் மேல் எழு நாளும் ஒருவருடன் இகல் செய்யாமல், தனத்திடை நின்று உளம் மகிழும் புல்லரை போல் மதத்துடனே தருக்கி வாழ்ந்தாய்; சினத்திடை வெம் பொறி பறக்க செயிர்த்து இரு கண் சிவப்பு ஏற செரு செய்யாமல், வனத்திடை சென்று ஒளிப்பரோ மண் முழுதும் தனி ஆளும் மன்னர் ஆனோர்.]

**விளக்கம்:-** செல்வத்தினிடையே இருந்து கொண்டு, அதன் வளத்தால் (தீங்கின்றி மகிழ்ந்து வாழும்) அற்பரைப் போல், இந்தப் பதினேழு நாள்களிலும் ஒருவரோடு தனியே போர் செய்யாமல், வீரர் கூட்டத்தில் கலந்து நின்று (தீங்கின்றி) மதத்துடன் செருக்கி வாழ்ந்தாய்; பூமி முழுவதையும் தனியே ஆளும் அரசர் ஆனோர், கோபத்தினல் தீப்பொறி பறக்க உக்கிரங் கொண்டு இரு கண்களும் சிவக்கப் போர் புரியாமல் வனத்திடை (நீரினிடை) ஒளிந்து கொள்வார்களோ,—என்பது பொருள். வனம்-காடு, நீர்.

**137,** **திரிபுவனங் களுஞ்சேரச் செங்கோன்மை**
**செலுத்தியநின் சீர்த்தி யிந்த**
**விரிபுவனந் தனிலொளித்தான் மிகுவசையாய்ப்**
**போகாதோ வெருவ லாமோ**
**புரிபுவன முண்டுமிழ்ந்தோன் போரிலங்கை**
**வழிகாணப் பொருத வாளி**
**எரிபுவன நுகர்ந்ததுபோ லித்தடமும்**
**புகையாமு னெழுந்தி ராயே.**

[திரிபுவனங்களும் சேர செங்கோன்மை செலுத்திய நின் சீர்த்தி இந்த விரி புவனந்தனில் ஒளித்தால் மிகு வசையாய் போகாதோ! வெருவலாமோ! புரி புவனம் உண்டு உமிழ்ந்தோன் போர் இலங்கை வழிகாண பொருத வாளி எரி, புவனம் நுகர்ந்ததுபோல் இ தடமும் புகையாமுன் எழுந்திராய், ஏ.]

**விளக்கம்:-** மூன்று உலகங்களையும் ஒரு சேர செங்கோன்மை செலுத்திய உனது புகழ், இந்த விரிந்த நீர்நிலையில் ஒளித்துக் கொண்டதால் பழிப்பு மிக உடையது ஆகாதோ! நீ போருக்கு அஞ்சலாமோ! படைத்த உலகங்களை உண்டு உமிழ்ந்தவனுகிய திருமால் (இராமபிரான்) போர் செய்தற்குரிய இலங்கை செல்லும் வழிகாணுதற்காக (சமுத்திர ராசன்மேல்) ஏவிய எரிவாளி புவனத்தை (சமுத்திர ஜலத்தை) உறிஞ்சியதுபோல், இந்தக் குளமும் (என்கை வாளியால்) புகைந்து எரியுமுன் எழுந்து வருவாய்,—என்று வீமன் கூறினுன், என்பது பொருள்.

### துரியோதனன் வெளிப்படல்

**138.** **பாவனனிப் படியுரைத்த ப்ழிமொழியும்**
**தனதுசெவிப் பட்ட காலை**
**சீவனமுற் றையும்விடுவோ னிருக்குமோ**
**மறையுடனே சேர விட்டான்**
**ஆவனமற் றறியாம லழிவனமற்**
**றறியாம லடுத்தோ ராவி**
**வீவனமற் றறியாம னினையுநினை**
**வினுக்குவமை வேறி லாதான்.**

**விளக்கம்:-** பாவனன் இப்படி உரைத்த பழி மொழியும் தனது செவி பட்ட காலை, ஆவன (மற்று) அறியாமல், அழிவன (மற்று) அறியாமல் அடுத்தோர் ஆவி வீவன அறியாமல் நினையும் நினைவினுக்கு உவமை வேறு இலாதான் (ஆன துரியோதனன்), மறையுடனே (நீரையும்) சேர விட்டான்; சீவனம் முற்றையும் விடுவோன் (சீவனத்தினுள்) இருக்குமோ!—என்பது அன்வயம்.

பாவனன்-வாயுகுமாரனுன வீமன். சீவனம்-(ஜீவநம்) உயிர் வாழ்க்கை, நீர். வீமன் கூறிய நிந்தனை மொழிகள் செவி சேர்ந்த பொழுது, தனக்கு நலமானவை இன்னவை என்று அறியாமலும், நலம் அழியச் செய்பவை இன்னவை என்று அறியாமலும், தன்னைச் சேர்ந்தோர் ஆவி அழிவன என்பதை அறியாமலும் நினைக்கும் தீய நினைவுகளுக்கு உவமை வேறு இல்லாதவனுன துரியோதனன், மந்திரத்தோடு (மறைந்திருந்த நீரையும்) ஒரு

சேர விட்டு வெளிவந்தான்; சீவனம் (உயிர் வாழ்க்கை) முழுதையும் விட இருப்பவன் (சீவனத்துள்ளே, அதாவது நீரினுள்ளே) இருப்பானே,—என்பது பொருள்.

**139.** நீளமுறப் பரவையுற வாளமுறக்
கரைபரந்து நிமிர்ந்த நீத்தம்
நாளமலர்ப் பொய்கையினின் றெழுவான்மெய்ச்
சுருதிமறை நவிலு நாவான்
காளநிறக் கொண்டல்பெருங் கடன்முழுகி
வெள்ளமெலாங் கவர்வுற் றண்ட
கோளமுறக் கிளர்ந்ததுபோற் றோன்றினன்
மணியுரகக் கொடியி னனே.

**விளக்கம்:-** மெய் சுருதி மறை நவிலும் நாவான், மணி உரகம் கொடியினன்,—நீளம் உற, பரவை உற வாளம் உற, கரை பரந்து நிமிர்ந்த நீத்தம், நாளம் மலர் பொய்கையினின்று எழுவான்,—பெருங்கடல் முழுகி வெள்ளம் எலாம் கவர்வுற்று அண்டகோளம் உற கிளர்ந்தது (ஆன) காளம் நிறம் கொண்டல் போல் தோன்றினன்,—என்பது அன்வயம்.

தவருது பயன்தரவல்ல வேத மந்திரத்தை ஜபிக்கும் நாவினனுயிருந்த பாம்புக்கொடி உடைய துரியோதனன்,—நீளம் மிகவும், பரப்பு மிகவும், வட்ட வடிவம் கொண்டதும் கரை பரவி வழியும் வெள்ளத்தையுடையதுமான தண்டையுடைய தாமரைக் குளத்தினின்று எழுபவனுன, அவன், பெரிய கடலில் முழுகி நீரை எல்லாம் கவர்ந்து கொண்டு அண்ட கோளம் அளாவ எழுந்த காள மேகம் போல் தோன்றினன்,—என்பது பொருள். நீண்டதும் பெரியதும் நீர் மிகுதி கொண்டதுமான பொய்கையிலிருந்து எழுந்த கருநிறமுடைய துரியோதனனது தோற்றம், கடல் நீரைப் பருகி வான் எழுந்த காளமேகத்தை ஒத்திருந்தது என்பதாம்.

எழுந்தவன் போர் செய்யும் விதம் வினவல்

**140.** தோன்றிநெடுங் கரையேறிக் கரைமுழுதும்
நெருக்கமுறச் சூழ்ந்து நின்ற
தேன்றிகழ்தா ரைவரையுஞ் செழுந்திருமா
லையுநோக்கிச் சேனை யோடு
மான்றிகழ்தேர் முதலான வாகனங்க
ளோடுநின்றீர் வலிகூ றென்கை
ஊன்றியதண் டுடநின்றே னொருதமியே
னெப்படியே யுடற்று மாறே.

**விளக்கம்:-** (பொய்கையினின்று) வெளிப்பட்டுக் கரை ஏறி, கரை முழுவதும் நெருங்கிநின்ற தேன் திகழ்தார் ஐவரையும், செழுந்திரு மாலையும் (கண்ணனையும்) நோக்கி, "நீங்கள் சேனையோடும் மான் (குதிரை) திகழ் தேர் முதலான வாகனங்களோடும் நிற்கின்றீர்; நானே துணையின்றித் தனிப்பட்டவனாய், வலிமை மிகுந்த என் கையில் கொண்ட கதையோடு நிற்கின்றேன்; இந் நிலையில் போர் செய்வது எப்படி?—என்று துரியோதனன் கேட்டான், என்பது பொருள்.

கண்ணன் பதில் மொழிதல்

**141. ஐவரினு மிப்பொழுதிங் காரென்னோ**
**டமர்மலைவா ரறுகான் மொய்க்கும்**
**கொய்வருதார் புயவீரர் கூறுமெனத்**
**திருநெடுமால் கூற லுற்றான்**
**செய்வருசே லிளம்பூக மடலொடிக்குந்**
**திருநாடா செருச்செய் வானிம்**
**மெய்வருசொற் றவறாத வீமசேன**
**னையொழிந்தால் வேறு முண்டோ.**

[ஐவரினும் இப்பொழுது இங்கு ஆர் என்னோடு அமர் மலைவார்? அறுகால் மொய்க்கும் கொய் வருதார் புயம் வீரர் கூறும் என, திரு நெடுமால் கூறல் உற்றான் செய் வரு சேல், இளம் பூகம் மடல் ஒடிக்கும் திருநாடா செரு செய்வான் இ மெய் வரு சொல் தவறாத வீமசேனனை ஒழித்தால் வேறும் உண்டோ!]

**விளக்கம்:-** பாண்டவருள் இப்பொழுது, இங்கே என்னோடு போர் செய்பவர் யார், என்று, அறுகால் (வண்டு) மொய்க்கும் கொய்வருதார் தரித்த தோள்களை உடைய வீரர்களே கூறுங்கள்! என்று துரியோதனன் கேட்க, (அதற்குப் பதில்) கண்ணன் கூறலானான்; வயல்களில் பொருந்திய சேல்மீன்கள் இளங் கமுகின் பாளைகளை (துள்ளிப் பாய்ந்து) ஒடிக்கும் அழகிய குரு நாட்டை உடையவனே, உன்னோடு போர் செய்வதற்கு ஏற்றவன், உண்மை மொழிதல் கடவாத இந்த வீமன் அல்லாமல் வேறு யார் உளர்?—என்று கண்ணன் கூறினான், என்பது பொருள். கொய் வருதார்—மலரைப் பறித்துக் கட்டிய புதிய மாலை. செய்-வயல். சேல் பாளை முறித்தல், நீர் வளமிகுதியைக் குறிக்கும்.

**142. இளம்பருவ முதலுனக்கு மிவனுக்கும்**
**வயிர்ப்பெண்ணி லெண்ணொ ணாதால்**
**உளம்புகல வரசவையில் வஞ்சினமும்**
**பற்பலவன் றுரைத்தே நின்றான்**

களம்புகுது நின்ஞெழிந்த துணைவரையுந்
தனதுதடக் கையாற் கொன்ருன்
விளம்புவதோ வேஞெருவர் நின்னுடன்போர்
மலைவரோ வேந்தர் வேந்தே.

[இளம் பருவம் முதல் உனக்கும் இவனுக்கும் வயிர்ப்பு எண்ணில் எண் ஒணுது (ஆல்); உளம் புகல் அரசு அவையில் வஞ்சினமும் பற்பல அன்று உரைத்து (ஏ) நின்ருன்; களம் புகுதும் நின் ஒழிந்த துணைவரையும் தனது தடக்கையால் கொன்ருன்; (ஆதலால் விளம்புவதோ, வேறு ஒருவர் நின்னுடன் போர் மலைவரோ, வேந்தர் வேந்தே.]

**விளக்கம்:-** வயிர்ப்பு-வயிரம் பாய்ந்த பகை, செற்றம். இளம் பருவம் முதல் உனக்கும் அவனுக்கும் உள்ள நீங்காத பகை, எண்ணுங்கால், அளவிட முடியாததாகும்; அன்று, அதாவது பாஞ்சாலியை அரச சபையில் நீங்கள் மான பங்கம் செய்த காலத்தில், (சினங்சொண்ட) உள்ளந்தூண்ட பல சபத மொழிகளைக் கூறி நின்ருன்; போர்க்களம் புகுந்த உன்னைத் தவிர மற்ற உன் தம்பியரை எல்லாம் தனது தடக்கையால் கொன்ருன்; எனவே, வேஞெருவர் உன்னேடு போர் செய்வதற்கு உரியர் ஆவரோ? இதைப் பற்றி நாம் பேச வேண்டுமோ!—என்று கண்ணன் கூறினுன், என்பது பொருள். ஒன்ருது, என்பதின் மரூஉ ஒணுது. புகுதும், என்பதில், து, சாரியை. வேந்தர் வேந்தே, என்றது, இகழ்ச்சி.

143\. வில்லாலும் வாளாலும் வேலாலும்
பரிநெடுந்தேர் வேழத் தாலும்
தொல்லாண்மை தவருமற் செருமலைந்தோர்
சான்ருகச் சூழ்ந்து நிற்பப்
புல்லாரைப் புறங்காணும் போர்வேலோய்
இருவருநீர் பொருது நும்மில்
வல்லார்கள் வென்றிபுனைந் தவனிதலம்
பெறுமிதுவே வழக்கு மென்ருன்.

**விளக்கம்:-** வில் முதலிய ஆயுதங்களைக் கொண்டும், குதிரை தேர் யானைகளாகிய வாகனங்களைக் கொண்டும் பழமையான ஆண்மை பழிப்புருமல் போர் செய்த வீரர்கள் சாட்சியாகச் சூழ்ந்து நிற்க, நீங்கள் இருவரும் போர் செய்து, உங்களில் வல்லவர் வெற்றி பெற்றுப் பூமியை பெறுவதாகிய இதுவே நீதியுடையதாகும்,—என்று கண்ணன் கூறினுன்,—என்பதாம்.

துரியோதனனுக்குப் போரில் ஊக்கம் உண்டாக்குதற்கு அவனைக் கண்ணன் ''புல்லாரைப் புறங்காணும் போர் வேலோய்'', என்றான், என்க. ஈற்றடியும், அவனது நாடு பெறும் ஆசையைத் தூண்டுங் கருத்ததே. பொய்ச் சூதால் நாட்டைக் கவர்ந்து கொண்டு இதுவரையில் நாடு ஆண்டது, அநீதியானது, என்ற பொருளின் தொனியையுங் கொண்டது ஈற்றடி.

கலி விருத்தம்

எப்படையால் பொருவது என்று கேட்டல்

**144. கொண்டனிகர் திருமேனிக் கோபால னிவையுரைப்ப**
**வண்டுபடி வலம்புரித்தார் வயவேந்தன் மனங்களித்துத்**
**திண்டிறல்வீ மனைநோக்கிச் சிலைமுதலாம்**
**படைகொண்டோ**
**தண்டெனுநின் படைகொண்டோ சமர்வி ளைப்பாய்**
**சாற்றென்றான்.**

**விளக்கம்:-** கொண்டல் (மேகம்) நிகர்த்த திருமேனியை உடைய கண்ணன் இவை கூற, துரியோதனன் மகிழ்ச்சி கொண்டு வீமனை நோக்கி, ''சிலை முதலிய ஆயுதங்களைக் கொண்டா, அல்லது உனக்குரிய ஆயுதமான கதை கொண்டா போர் செய்வாய், கூறுக'', என்றான், என்பதாம், ''தனிப் போரில் வென்றவர் நாடு பெறலாம்,'' என்றதால், எழுந்த மகிழ்ச்சி, என்க. வலம்புரித்தார்—நஞ்சாவட்டமாலை. வயவேந்தன்—வலிய துரியோதனன்.

கதையுத்தம் என்று வீமன் பதில் மொழிதல்

**145. நின்கரத்தின் மிசையேந்தி நின்றதுநீள் கதையாகில்**
**என்கரத்திற் றண்டுகொண்டே யானுமுடற் றுவனென்றான்**
**தனகரற்குங் குமரற்குந் தண்டுழாய் முடியவற்கும்**
**தினகரற்கு மேலான சிந்தையுடன் செருச்செய்வோன்.**

**விளக்கம்:-** தனகரன் - குபேரன், குமரன் - முருகக்கடவுள், தினகரன் - சூரியன் ஆயவர்க்கும் மேலாக மதிக்கத்தக்க சிந்தையுடன் (மனவுறுதியுடன்) போர் செய்ய வல்லவனான வீமன், ''உனது கையேந்தி நின்றது கதையாதலால், என்கையிலுள்ள கதையால் போர் செய்வேன்'', என்று கூறினான், என்பதாம்.

### கண்ணன் களம் குறித்தல்

**146. எவ்விடைவீ மனும்யானு மிகல்புரிதற் கிடமென்று
பொய்விடையே ழடர்த்தோனைப் புயங்ககேத னன்கேட்ப
மெய்விடையா னிரைப்பின்போய் வேயூதுந் திருநெடுமால்
அவ்விடையாங் கிருவருக்கு மாம்பரிசா லருள்புரிந்தான்.**

[எ இடை வீமனும் யானும் இகல் புரிவதற்கு இடம் என்று, பொய் விடை ஏழு அடர்த்தோனை புயங்ககேதன்ன் கேட்ப, மெய்விடை ஆன் நிரை பின்போய் வேய் ஊதும் திரு நெடுமால் அ இடை ஆங்கு இருவருக்கும் ஆம் பரிசால் அருள் புரிந்தான்.]

**விளக்கம்:-** பொய் விடை ஏழுஅடர்த்தோன் - அசுரர் ஆவேசிக்கப்பெற்ற எருதுகள் ஏழை நப்பின்னைப் பிராட்டியை மணக்கும் பொருட்டு அழித்தவனான கண்ணன். முன்னே, பொய் விடை, என்றதால், அசுர ஆவேசம் இல்லாத எருதைமெய் விடை, என்று கூறினர். மெய்யான எருதுகளோடு கூடிய பசுக் கூட்டங்களுக்குப் பின்னே சென்று, குழல் ஊதின கண்ணன், என்பது மூன்றுமடியின் பொருள். தானும் வீமனும் போர் புரிவதற்கு உரியதான இடம் எது என்று துரியோதனன் கேட்க, எம்பிரான், இருவருக்கும் சம்மதமாகக் கூடிய இடத்தை ஆங்கு (அப்பொழுது) கூறியருளினன்,—என்பதாம்.

### பலராமனும் விதுரனும் அங்கு வரல்

**147. அரும்பெறலா யோதனமற் றவனுரைக்கும் வேலையினில்
இரும்புனலா டுதற்ககன்றே ரிருவரும்வந் தவணெய்தக்
கரும்புயலே யனையானுங் காவலருங் கண்களித்து
விரும்பிமனங் களிகூர மேதகவே யெதிர்கொண்டார்.**

[அரும்பொர்ரல் (பெறல் அரு) ஆயோதனம் (மற்றும்) அவன் உரைக்கும் வேலையினில், இரும் புனல் ஆடுதற்கு அகன்றோர் இருவரும் வந்து அவண் எய்த, கரும்புயல் அனையானும் காவலரும் கண்களித்து, விரும்பி மனம் களிகூர, மேதக (ஏ) எதிர் கொண்டார்]

**விளக்கம்:-** ஆயோதனம் - போருக்கு உரிய இடம். இரும் புனல் – சிறந்த புண்ணிய தீர்த்தம். மேதக எதிர் கொண்டார் - மேன்மை பொருந்த எதிர் சென்று உபசரித்தார்கள். கண்ணன் போருக்கு உரிய இடத்தைச் சொல்லும் சமயம், புனலாடச் சென்ற பலராமனும் விதுரனும் அங்கே வந்து சேர, கண்ணனும் மற்ற அரசர்களும் கண் களித்து, விருப்பத்தோடு மனதில் மகிழ்ச்சிமிக, தகுந்த விதமாக எதிர் கொண்டு உபசரித்தார்கள்,—என்பதாம்.

**148.** **மதுரைநகர்க் கரசான மாயனுந்தம் முனேவணங்கி**
**விதுரனேயு மெய்தழுவ வேல்வேந்த ரனேவோரும்**
**கதிரவரோ ரிருவரையுங் கண்டுகளிப் பவர்போல**
**எதிரெதிர்போய்க் கைதொழுதோ ரிகலாண்மைக்**
**கெதிரிலாதார்.**

**விளக்கம்:-** கதிரவர் ஓர் இருவர் - ஒளி விளக்கம் உள்ளவர்களான சூரிய சந்திரர்கள். கண்ணனும் தன் தமையனே வணங்கி, விதுரனேத் தழுவிக் கொள்ள, இகல் ஆண்மைக்கு ஒப்பு இல்லாதவரான அரசர்கள் எல்லோரும் சூரிய சந்திரர்களாகிய இருவரையும் கண்டவர் போல் மகிழ்ந்து (விதுர பலராமர்கள்) எதிரே சென்று, கைகூப்பி வணங்கினுர்கள்,—என்பதாம்.

**149.** **அன்றுமுத லேகியநா ளளவாக விருவோரும்**
**குன்றிடமுங் கடலிடமுங் குறித்தநதி களினிடமும்**
**சென்றுசுர ரும்படியுந் தீர்த்தங்க டிசைதோறும்**
**ஒன்றுபட மகிழ்ந்தாடி மீண்டவா றுரைசெய்தார்.**

**விளக்கம்:-** (தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்ட) அன்று முதல், ஏகித் திரும்பிய) நாள் அளவாக (வரையில்) திசை தோறும், குன்று இடமும், கடல் இடமும், (சிறந்தவை என்று பெரியோர்) குறித்த நதிகளின் இடமும், சென்று, சுரரும் படியும் தீர்த்தங்கள் ஒன்றுபட மகிழ்ந்து (நீர்) ஆடி, மீண்ட ஆறு, இருவோரும் உரை செய்தார்,—என்பது அன்வயம்.

புண்ணிய தீர்த்தங்களில் நீராடிய செய்தியை இருவரும் கண்ணனுக்கும் மற்றவர்க்கும் கூறினர்,—என்பதாம்.

## போர் வரலாற்றைக் கண்ணன் கூறல்

**150.** **அறந்தருகா ளேயுமுகுரா னனன்காளே யும்புரிந்த**
**மறந்தருபோர் வெங்களத்து மன்னவர்க ளனேவோரும்**
**இறந்தநிலே யுந்தினங்க ளீரொன்பா னிலுந்தோன்ற**
**மறந்திகழ்தோ ளிருவருக்கு மாமாயன் கட்டுரைத்தான்.**

**விளக்கம் :-** முகுர ஆனனன் - கண்ணுடி போன்ற முகத்தையுடைய திருதராட்டிரன். மறம்தருபோர் - கொல்லுதல் நிகழ்தற்குரிய போர். ஈர் ஒன்பானிலும்-பதினெட்டு நாட்களிலும். தோன்ற-விவரமாக. மறம் திகழ்தோள்-வலிமை விளங்கும் தோள். தருமனும் துரியோதனனும் செய்த பதினெட்டு நாள்களிலும் மன்னவர் அனேவரும் அழிந்த தன்மையை கண்ணன் பலராமனுக்கு விரிவாகக் கூறினுன், என்பதாம்,

### இனி செய்யப்போவது என்ன, என்றலும் கண்ணன் கூறல்

**151. கேட்டருளி நெடுந்தால கேதனன்மா மனந்தளர்வுற் (று)**
**ஆட்டரவ முடையவற்கோ வழிவுவரு வதுபோரில்**
**நாட்டமினி யேதென்று நராந்தகனை வினவுதலும்**
**மீட்டுமவற் குரைசெய்தான் விரிதிரைநீர் மறந்தானே.**

**விளக்கம்:-** தாலகேதனன் - பனைமரத்தைக் கொடியிலே கொண்ட பலராமன். ஆடுகின்ற பாம்பைக் கொடியிலே கொண்ட துரியோதனனுக்கோ போரில் அழிவு வருவது என்று இரங்கி, என்பது இரண்டாவது அடியின் பொருள். நாட்டம் - உத்தேசம். இனி - இப்பொழுது. நராந்தகன் (நரகாந்தகன்) நரகாசுரனைக் கொன்ற கண்ணன். விரிதிரை நீர் - பரவுகின்ற அலைகளை உடைய பாற்கடல்.

பலராமன் துரியோதனனுக்காக இரங்கி, ''இனி என்ன செய்யும் எண்ணம்?'' என்று கண்ணனைக் கேட்க, பூபாரம் நீக்கும் பொருட்டுப் பாற்கடலை மறந்து மண்ணிலே தோன்றிய கண்ணன் பதில் உரைத்தான், என்பதாம்.

**152 வீமனுக்கும் வீமனுடன் வெகுண்டமர்செய் வலம்புரிப்பூந்**
**தாமனுக்கு மமர்புரியுந் தலமேதென் றுயாவுகின்றேம்**
**நீமனத்தி னிகழ்ந்தபடி நிகழ்த்துகென நிலவொளியால்**
**சோமனுக்கு நிகரானே னிளவலைநீ சொல்லென்றான்.**

**விளக்கம்:-** வலம்புரித்தார் பூந்தாமன் - துரியோதனன் தலம்- (போர் செய்வதற்குரிய) இடம்) எது என்று உயாவுகின்றேம் - (உசாவுகின்றேம்) எது என்று (ஆராய்கின்றேம்). நிலவு ஒளியால் சோமனுக்கு நிகர் ஆனேன் - வெண்ணிறத்தால் சந்திரனுக்கு ஒப்பான திருமேனியுடைய பலராமன். ''போருக்கு உரிய இடத்தை ஆராய்கின்றேம்; உன் மனத்தில் நிகழும் கருத்தைக் கூறுக,'' என்று கண்ணன் பலராமனைக் கேட்க, அவன் இளவலான கண்ணனை நோக்கி, ''நீயே சொல்,'' என்றான், என்பதாம்.

### கண்ணன் களம் குறித்தல்

**153. தாவெழுமா மணிநெடுந்தேர்த் தபனனிகர் மழுப்படை**
**யோன்**
**மூவெழுகான் முடிவேந்த ரனைவரையு முடிப்பித்து**
**நாவெழுபான் மையினுடையோன் களிக்கநர மேதஞ்செய்**
**பூ வெழுதீ வினுஞ்சிறந்து பொன்னுலகோ டொத்துளதால்.**

[தா எழுமா மணி நெடு தேர் தபனன் நிகர் மழு படையோன், மூ எழுகால் முடிவேந்தர் அனைவரையும் மடிப்பித்து, நா எழு பான்மையின் உடையோன் களிக்க நர மேதம் செய்(த பூ(இடம்) எழுதீவினும் சிறந்து பொன் உலகோடு ஒத்து உளது (ஆல்),—அடுத்த செய்யுளோடு குளகமாய்த் தொடரும்]

**விளக்கம்:-** தாவுகின்ற ஏழு குதிரைகள் பூட்டப்பெற்ற அழகிய பெரிய தேரையுடைய சூரியனை ஒத்த ஒளிவிளக்கமுள்ள மழுவை ஆயுதமாகவுடைய பரசுராமன் இருபத்தொரு தலைமுறை அரசர்கள் அனைவரையும் அழியச்செய்து, ஏழுபிளவாகவுள்ள நாக்கையுடையவனான அக்னி தேவன் மகிழும்படி நரமேதம் செய்த பூ(மி), ஜம்பு முதலிய ஏழுதீவுகளுள்ளும் சிறந்து தேவர் உலகோடு ஒத்து உளது; (ஆல்; அசை),—என்பது பொருள், நரமேதம்-மனிதனைக் கொன்று செய்யும் வேள்வி. அக்னியின் ஏழு ஜுவாலைகளை ஏழுநாக்கு, என்றார்.

**154.** **அந்நிலமே யிருவருக்கு மமர்புரிய லானவிடம்**
**மன்னவர்தம் முடற்சோரி வழிந்துசமந் தபஞ்சகமாம்**
**என்னநிலை பெற்றதடங் களுமங்கே யங்கேயுண் (டு)**
**உன்னிலெதி ரில்லதனுக் கொலிகடல்சூழ் நிலத்தென்றான்.**

[அ நிலமே இருவருக்கும் அமர் புரியல் ஆன இடம், மன்னவர் தம் உடல் சோரி வழிந்து (வழிய), சமந்த பஞ்சகம் ஆம் என்ன நிலை பெற்ற தடங்களும் அங்கே அங்கே உண்டு; உன்னில் எதிர் இல் இதனுக்கு ஒலிகடல் சூழ் நிலத்து, என்றான்.]

**விளக்கம்:-** அமர்புரியல் ஆன இடம்-போர் செய்வதற்கு ஏற்றதான இடம். சமந்த பஞ்சகம் ஆம் நிலை பெற்ற தடங்கள்-சியமந்த பஞ்சகம் என்ற பெயரால் நிலை பெற்ற ஐந்து தடாகங்கள். அங்கே அங்கே-அங்கங்கே, அதாவது அடுத்து அடுத்து (ஐந்து தடாகங்கள் உள). உன்னில் (எண்ணுங்கால்) அதற்கு ஒப்பான இடம், கடல் சூழ்ந்த உலகில் வேறு இலது, என்பது ஈற்றடியின் பொருள். சியமந்த பஞ்சகம் என்ற இடமே தகுதியான இடம் என்று கண்ணன் களம் குறித்தான், என்பதாம்.

## எல்லோரும் அவ்விடம் செல்லுதல்

**155.** **அத்தலத்தின் றிசைநோக்கி யனீகினியு மனைவோரும்**
**முத்தநெடுங் குடைநிழற்ற மூவகைவா கனமேறிக்**
**கொத்துடனே நெறிபடரக் கொற்றவர்கொற் றவன்றானும்**
**கைத்தலமுந் தண்டமுமாக் கால்வேக முறச்சென்றான்.**

[அ தலத்தின் திசை நோக்கி அனீகினியும் அனைவோரும் முத்தம் நெடு குடை நிழற்ற, மூவகை வாகனம் ஏறி கொத்துடன்

நெறி, படர, கொற்றவர் கொற்றவன் தானும், கைத்தலமும் தண்டமும் ஆ, கால் வேகம் உற சென்றுன்.]

**விளக்கம்:**- அனீகினி-சேனை. கொத்துடன்-கூட்டத்தோடு. கொற்றவர் கொற்றவன்-துரியோதனன். கையும் கதையுமாக (வாகனம் இன்றி) கால்களால் வேகமாய் நடந்து சென்றுன்,— என்பது, ஈற்றடியின் பொருள். பாண்டவர் தம்மைச் சேர்ந்தாருடன் சேனை உடன்வர வாகனங்களில் செல்லத் துரியோதனன் காலால் நடந்து சென்றுன், என்பதாம்.

**156. தம்பியர்கள் புடைசூழத் தருமன் மகன் பல்லியமும்**
**பம்பியெழ நடக்கின்ற பரிசுதனை முகநோக்கி**
**எம்பியரு மெங்கிளையு மிறக்கவிருந் தனமென்றே**
**வெம்பிமன மிகத்தளர்ந்தான் விதிதனக்கு விதிபோல்வான்.**

[தம்பியர்கள் புடை சூழ, தருமன் மகன் பல் இயமும் பம்பி எழ நடக்கின்ற பரிசு தனை முகம் நோக்கி, எம்பியரும் எம் கிளையும் இறக்க, இருந்தனம் என்றே வெம்பி மனம் மிக தளர்ந்தான் விதி தனக்கு விதி போல்வான்.]

**விளக்கம் :**- செய்யுள் மிக மிக சுலபமானதே. பல் இயம்-பல வித வாத்தியங்கள். நடக்க-செல்ல. பரிசு-விதம். முகம் நோக்கி-கண்ணுல் கண்டு. விதிக்கு விதி போல்வான்-துரியோதனன். தருமன் போர்க்களம் செல்லும் விதங் கண்டு, துணைவரையும் சுற்றத்தாரையும் இழந்து தமியனுன துரியோதனன் வேகின்ற மனத்தோடு தளர்ந்தான்,—என்பதாம்.

முகம், என்பது இடவாகு பெயராய்க் கண்ணைக் குறித்து நின்றது. இதுவரையில் தனது செயல் வழி விதி நடக்குமாறு செய்து வந்தவனுதலால், விதிக்கு விதி போல்பவன், எனப்பட்டான்.

துரியோதனன்பால் இரக்கங்கொண்ட தருமன் கூறல்

**157. முடிக்குலமன் னவர்தந்த முடிகளினுற் சிவக்கின்ற**
**அடிக்கமல நடந்துசிவப் பாவதே யெனவிரங்கிக்**
**கொடிக்கண்முர செழுதியவக் கோவேந்தன் கொடித்தேர் விட்(டு)**
**இடிக்குமுர செனப்புகல்வா னிராசரா சனுக்கம்மா.**

[முடி குலம் மன்னவர் தத்தம் முடிகளினுல் அடி கமலம் நடந்து சிவப்பு ஆவதே! என இரங்கி, கொடிக்கண் முரசு எழுதிய அ கோவேந்தன் கொடி தேர் விட்டு, இடிக்கும் முரசு என புகல்வான் இராசராசனுக்கு, அம்மா.]

**விளக்கம்:-** கொடியினிடம் முரசு எழுதப் பெற்ற தருமன், "முடியுடைய குல மன்னவர்களின் கிரீடத்தால் சிவக்கின்ற துரியோதனனது பாதங்கள், நடந்து, அதனல் சிவப்பதா!" என்று நினைத்து இரங்கி, தன் தேர் விட்டு இறங்கி, (அவனிடம் சென்று) ஒலிக்கும் முரசு போன்ற கம்பீரமான குரலில் கூறுவான்,—என்பது பொருள். ஆவதே, என்பதிலுள்ள ஏகாரம், இரக்கப் பொருளது. அம்மா, வியப்பிடைச் சொல்.

**158.** **என்றுணைவ ருடன்யானு மேவியநின் றொழில்புரிந்து**
**வன்றுணையாய்ச் சேவிப்ப மடங்கலா சனமேறி**
**இன்றுணைவர் குருகுலத்தா ரெனுமிசை போய்த் திசையேற**
**நன்றுணைவா வாளுதியோ ஞாலமெலா நின்குடைக்கீழ்.**

[என் துணைவருடன் யானும் ஏவிய நின் தொழில் புரிந்து, வல் துணையாய் சேவிப்ப மடங்கல் ஆசனம் ஏறி, இன் துணைவர் குருகுலத்தார் எனும் இசைபோய் திசை ஏற, நல் துணைவா, ஆளுதியோ ஞாலம் எலாம் நின் குடைக்கீழ்.]

**விளக்கம்:-** நல்ல என் தம்பியே, நானும் என் தம்பியரும் நீ ஏவிய தொழில் செய்து, வலிய துணையாய் உனக்குச் சேவகம் செய்யச் சிங்காதனம் ஏறி, குருகுலத்தவர் ஒருவருக்கொருவர் இனிய துணைவரராயினர் என்ற புகழ் திசை எங்கும் பரவ, உன் குடையின் கீழ் பூமி எலாம் ஆள மனங் கொள்வாயோ? என்று தருமன் கேட்டான், என்பது பொருள்.

**159.** **தப்பாதென் மொழியென்று தருமன்மா மதலைமுகில்**
**ஒப்பான திருமேனி யும்பர்பிரான் சான்ருகச்**
**செப்பாத வாய்மையெலாஞ் செப்பினுன் செப்பவுமக்**
**கைப்பான வன்னெஞ்சக் கடுங்கண்ணுன் கண்மறுத்தான்.**

[தப்பாது என் மொழி என்று தருமன் மா மதலை, முகில் ஒப்பான திருமேனி உம்பர்பிரான் சான்று ஆக, செப்பாத வாய்மை எலாம் செப்பினுன்; செப்பவும், அ கைப்பான வல் நெஞ்சம் கடுங் கண்ணுன் கண் மறுத்தான்.]

**விளக்கம்:-** உம்பர்பிரான்-கண்ணன். கைப்பான வல் நெஞ்சம் கடுங் கண்ணுன் —கைப்புடைய (வெறுக்கத்தக்க) வலிய மனத்தை யுடைய கொடிய தன்மையனுன துரியோதனன். 'என் சொல் தப்பாது' என்று கண்ணன் சாட்சியாகத் தருமன், யாரும் இது வரை சொல்லியிராத உறுதிமொழிகளைக் கூறினுன்; அவனே கண்ணேட்டமில்லாமல் உடன்பட மறுத்தான், என்பதாம்.

துரியோதனன் பதில்

**160. என்கிளைஞ ரென்றுணைவ ரென்பொருட்டா லிறந்தேக**
**உங்களருள் பெற்றிருக்கு முயிர்வாழ்வி னினிதன்றே**
**அங்கமெலாம் வேறுபட வாறுபடு குருதியின்வாய்**
**கங்கமுங்கா கமுங்கொத்தக் களத்தவிந்தா னெனும்**
**பெயரே.**

[என் கிளைஞர் என் துணைவர் என் பொருட்டால் இறந்து ஏக, உங்கள் அருள் பெற்று இருக்கும் உயிர் வாழ்வின் இனிது அன்றே, அங்கம் எலாம் வேறுபட ஆறுபடு குருதியின் வாய் கங்கமும் (கழுகும்) காகமும் கொத்த களத்து அவிந்தான், எனும் பெயர், ஏ.]

**விளக்கம்:-** "சுற்றமும் துணையும் என் பொருட்டு இறக்க உங்கள் அருளால் அரசனாய் உயிர் வாழ்வதனினும், அங்கங்கள் துண்டுபடக் குருதி வெள்ளத்தில் கழுகும் காகமும் கொத்தப் போர்க் களத்தில் மடிந்தான், என்ற பெயர், இனிது அன்றே", என்று துரியோதனன் உடன்பட மறுத்தான், என்பதாம்.

**161. எனத்தருமன் வார்த்தைதனக் கிசையாம லிவனேக**
**அனைத்துவரூ தினிகளொடு மைவருமாங் குடனேகக்**
**கனத்தின்வடி வுடையோனுங் கைலைவடி வுடையோனும்**
**வினைத்தடந்தேர் விதுரனெடும் விரைவுடனே கினரம்மா.**

[என தருமன் வார்த்தை தனக்கு இசையாமல் இவன் ஏக, அனைத்து வரூதினிகளொடு ஐவரும் ஆங்கு உடன் ஏக, கனத்தின் வடிவு உடையோனும், கைலை வடிவு உடையோனும், வினை தட தேர் விதுரனெடும் விரைவுடனே ஏகினர், அம்மா.]

**விளக்கம்:-** கனத்தின் வடிவு உடையோன்-மேகத்தின் நிறமுடைய கண்ணன். கைலை வடிவு உடையோன்-வெள்ளிமலை போன்ற திருமேனி நிறமுடைய பலராமன். வினை தடந்தேர் விதுரன்-தொழில் செய்வதில் சிறந்த தேர்வீரனான விதுரன், அதாவது அதிரதனான விதுரன். தருமன் வார்த்தைக்கு இசையாமல் துரியோதனன் செல்ல, ஐவரும், சேனைகள் உடன்வர, கண்ணன், பலராமன், விதுரன் ஆயவர்களோடு விரைந்து சென்றனர்,—என்பதாம். அம்மா: ஈற்றசை.

எல்லோரும் களம் சேர்தல்

**162. கலங்கள்பல வினமேறிக் காளிந்திக் கரையேறித்**
**தலங்களினற் றலமான சமந்தபஞ் சகமெய்தி**
**வலங்கொள்படைத் தலைவரெலாம் வளைத்தகட லெனவாள**
**விலங்கலெனச் சூழநிற்பச் சமரந்தொ டங்கினரரே.**

[கலங்கள் பல இனம் ஏறி காளிந்தி கரை ஏறி, தலங்களில் நல் தலமான சமந்த பஞ்சகம் எய்தி, வலம் கொள் படை தலைவர் எல்லாம் வளைத்த கடல் என, வாளவிலங்கல் என, சூழ்நிற்ப சமரம் தொடங்கினர், ஏ.]

**விளக்கம்:-** பல இனம் கலங்கள்-சிறியதும் பெரியதுமான பல வகை மரக்கலங்கள். காளிந்தி-யமுனை. வலம்-வெற்றி. வாளம் விலங்கல்-சக்கரவாள கிரி. மரக்கலங்கள் மூலம் யமுனையைக் கடந்து சமந்த பஞ்சகம் என்ற இடத்தை அடைந்து, படைத் தலைவர்கள் எல்லோரும் கடல் போலவும், அக்கடலைச் சூழ்ந்துள்ள சக்கரவாள கிரி போலவும் சுற்றி நிற்க, (வீமனும் துரியோதனனும் வெம்போர் தொடங்கினர், — என்பதாம். சூழ நிற்ப, என்பதில். சூழ என்பதைச் சூழ்ந்து என்ற வினையெச்சப் பொருளாகக் கொள்க.

**163.** **பூங்கவனத் துட்புகுந்து பூணனைத்துந் திருத்திமணி[1]**
**ஓங்கலிவை யிரண்டுயிர்பெற் றுடற்றுகின்ற தெனவுரைப்ப**
**வாங்கிபதண் டமுந்தோளு மலர்க்கரமும் வலிகூர**
**ஆங்குலகு செவிடுபட வடலரிநா தமுஞ் செய்தார்.**

[பூங்கவனத்துள் புகுந்து பூண் அனைத்தும் திருத்தி, மணி ஓங்கல் இவை இரண்டு உயிர் பெற்று உடற்றுகின்ற எனது உரைப்ப, வாங்கிய தண்டமும் தோளும் மலர் கரமும் வலி கூர ஆங்கு உலகு செவிடுபட அடல் அரி நாதமும் செய்தார்.]

**விளக்கம்:-** பூங்கவனம்-பூங்காவனம். பூண் - ஆபரணம். ஓங்கல்-மலை. வாங்கிய-(கையில்) பற்றிய. அரி நாதம்-சிங்க நாதம். (ஆங்கு உள்ள ஒரு) பூஞ்சோலை சேர்ந்து, ஆபரணங்களை ஒழுங்காகத் திருத்தி அமைத்துக் கொண்டு. அழகிய இரண்டு மலைகள் உயிர் பெற்றுப் போர் செய்கின்றது என்று சொல்லும்படி, பற்றிய கதையும், தோள்களும், கரமும் வலிமை மிக, அங்கே உலகம் ஒலி மிகுதியால் செவிடுபடும்படி வலிமையின் அடையாளமாகச் சிங்க நாதம் செய்தார்கள், — என்பதாம்.

**164.** **கந்தநறு மலர்க்கூந்தற் காந்தாரி புதல்வனையக்**
**குந்திமகன் முகநோக்கிக் கொடுஞ்சொற்கள் சிலசொல்வான்**
**கந்தருவ ரன்றுன்னைக் கட்டியதோள் வலிகொண்டோ**
**சிந்தைதனின் வலிகொண்டோ செருச்செயநீ புகுந்தாயே.**

[கந்தம் நறு மலர் கூந்தல் காந்தாரி புதல்வனை குந்தி மகன் முகம் நோக்கி கொடுஞ் சொற்கள் சில சொல்வான்; கந்தருவர்

அன்று உன்னை கட்டிய தோள் வலி கொண்டோ, (அல்லது) சிந்தை தனின் வலி கொண்டோ செரு செய்ய நீ புகுந்தாய், ஏ.]

**விளக்கம்:-** வீமன், துரியோதனனை நோக்கி, அன்று கந்தர்வர் கட்டிய தோளின் வலிமை கொண்டா, அல்லது அசட்டுத் துணிச்சலினுலா போர் செய்ய வந்துள்ளாய்,—என்று இகழ்ந்தான், என்பதாம். கந்தர்வர் துரியோதனனைக் கட்டியது, ஆரண்ய பருவத்துச் செய்தி.

**165.** **இடிப்பதுமின் றிருகதையு மென்கதையா லிடியுண்டு**
**துடிப்பதுமின் றுன்னுடல முயிர்துறக்கங் குடியேற**
**முடிப்பதுமின் றழற்பிறந்தாண் முகிலோதி முகில் பொழிநீர்**
**குடிப்பதுமின் றொருவேனின் குருதி நீர் குடித்தாலே.**

[இடிப்பதும் இன்று இரு கதையும், என் கதையால் இடியுண்டு துடிப்பதும் இன்று உன் உடலம் உயிர் துறக்கம் குடி ஏற, முடிப்பதும் இன்று அழல் பிறந்தாள் முகில் ஓதி, முகில் பொழிநீர் குடிப்பதும் இன்று ஒருவேன் நின் குருதி நீர் குடித்து, ஆலே]

**விளக்கம்:-** நமது இரு கதைகளும் (ஒன்றையொன்று) மோதுவதும் இன்றே; என் கதையால் இடிக்கப் பெற்று உன் உயிர் வானுலகம் செல்ல, உடலம் துடிப்பதும் இன்றே; அழல் பிறந்தாள் (திரௌபதை) மேகம் போன்ற கூந்தலை முடிந்து கொள்வதும் இன்றே; ஒருவனுகிய நான் உனது இரத்தமாகிய நீரைக் குடித்து, (அதன்பின்) மேகம் பொழியும் நல்ல நீரைக் கையால் எடுத்துப் பருகுவதும் இன்றே,—என்றான், என்பது பொருள். ஆல், ஏ, அசைகள்.

எண் சீர் ஆசிரிய விருத்தம்

இருவரும் பொரல்

**166.** **இனிவிடு மேன்மே லுரைக்கும் வாசகம்**
**எனதுயிர் நீகோ றலிற்றை நாளிடை**
**உனதுயர் வானே றவிட்டு நானுல**
**கொருகுடை மாநிழல் வைத்த லேதுணி(வு)**
**அனிகமு மாயோ னடத்து தேருடை**
**யனுசனும் வாளாண் மையற்ற மூவரும்**
**நினைவுட னேகா ணவச்ர வாயுத**
**நிகர்கதை வீமா வெடுத்தி நீயென.**

[இனி விடு மேல் மேல் உரைக்கும் வாசகம்; எனது உயிர் நீ கோறல், இற்றை நாளிடை (அல்லது) உனது உயிர் வான் ஏற

விட்டு நான் உலகு ஒரு குடை மாநிழல் வைத்தலே துணிவு; அனிகமும், மாயோன் நடத்து தேர் உடை அனுசனும், வாள் ஆண்மை அற்ற மூவரும் நினைவுடனே காண வச்ர ஆயுதம் நிகர் கதை, வீமா, எடுத்தி நீ என —குளகமாய்த் தொடரும்.]

**விளக்கம்:-** வீமா, மேலும் மேலும் (மிகுதியாக) வழங்கும் வீர வாசகங்களை விட்டுவிடு; இன்று என் உயிரை நீ அழித்தல், அல்லது, உன்னை வான் ஏறச் செய்து உலகம் முழுதையும், எனது ஒற்றை வெண் குடையின் பெரிய நிழலில் வைத்தல் (ஆகிய இரண்டில் ஒன்று) நிகழ்தல் நிச்சயம்; உனது சேனையும், கண்ணன் நடத்தும் தேரையுடைய தம்பியான விசயனும், வாளாண்மை இல்லாத (தருமன் நகுலன், சகாதேவன் ஆகிய மூவரும் (வெல்வார் யாவர் என்ற) எண்ணத்துடனே காண, வச்ராயுதத்தை ஒத்த கதையை எடுப்பாயாக என, (தொடரும்) துரியோதனன் கூறினன், என்பது பொருள்.

வீமன் ஒழிந்த மற்றவரைத் துரியோதனன் ஒரு பொருளாக மதியாமையையும், விசயனது ஆற்றல் மாயமுடைய கண்ணனது சகாயத்தால், என்ற அவனது எண்ணத்தையும் மூன்ருவது அடி புலப்படுத்தும் கருத்தது.

**167.** **நடையொழி யாதோன் விறற்கு மாரனும்**
**நயனமி லாதோன் முதற்கு மாரனும்**
**அடலொடு கார்வா னிடக்கு மாறென**
**அதிர்வுற வேயோ டிமத்த வாரணம்**
**விடையரி மாவே றெனப்பிர தாபமும்**
**விசயமும் மேன்மேன் மிகுந்து மேலிடு**
**கடையுக நாள்வா யுவொத்து நீடிய**
**கதைகெழு போரா தரித்து மூளவே.**

[நடை ஒழியாதோன் விறல் குமாரனும் நயனம் இலாதோன் முதல் குமாரனும் அடலொடு கார் வான் இடிக்கும் ஆறு என, அதிர்வு உற (ஏ) ஓடி, மத்தவாரணம், விடை, அரி ஏறு என, பிரதாபமும் விசயமும் மேல் மேல் மிகுத்து, மேல் இடு கடையுகம் நாள் வாயு ஒத்து நீடிய கதை கெழுபோர்ஆதரித்து மூள, ஏ,— தொடரும்.]

**விளக்கம்:-** நடை ஒழியாதோன்-வாயு. வீமனும் துரியோ தனனும், வலிமையோடு இடித்தலை ஒத்த அதிர்ச்சியோடு இரு மத யானைகளும், இரு காளைகளும், இரு ஆண் சிங்கங்களும் போல, மேலும் மேலும் (மிகுதியாக) பராக்கிரமும் வெற்றி எண்ணமும்

மிக, யுக முடிவின் காலத்தில் மேல் எழுந்து வீசும் பெருங் காற்றைப் போல் கதை கொண்டு செய்யும் போரை விருப்பத் துடன் உக்கிரமாகச் செய்ய,—(தொடரும்) என்பதாம். மிகுந்து, என்பதை, மிக, என்று திரிக்க.

**168.** **ஒருதம னீயா சலத்தி னேடெதி**
**ரொருமுழு மாநீ லவெற்பு நீடமர்**
**புரிவது போன்மேல் விசைத்து மீமிசை**
**பொறியெழ மாரு மலொத்த வீரர்கள்**
**இருவரு மாகா யமுட்ட நாகர்கள்**
**இறைகொள நாஞ லுதிக்கு நாகரும்**
**வெருவர நீஞ கருட்க வீசினர்**
**விசையுட னேபோர் விறற்க தாயுதம்.**

**விளக்கம்:-** ஒரு தமனீய அசலத்தினேடு எதிர் ஒரு முழு மா நீல வெற்பு நீடு அமர் புரிவது போல், மாருமல் ஒத்த வீரர்கள் இருவரும், போர் விறல் கதா ஆயுதம் மீ மிசை பொறி எழ விசைத்து, ஆகாயம் முட்ட, நாகர்கள் இறை கொள, நால் நாலு திக்கு நாகரும் வெருவர, நீள் நாகர் உட்க, விசையுடனே வீசினர்,—என்பது அன்வயம்.

தமனீய அசலம் - பொன்மலே. நாகர் என்பது தேவர், திக்பாலகர், நாகலோக வாசிகளான சர்ப்பம், என்ற பொருள் களில் வந்துளது. இறை கொள - சிதறி ஓட. பொன் மலேயும் நீல மலேயும் மிக்க போர் செய்வதுபோல, வேறுபாடு இல்லாமல் வலிமையால் ஒத்த இரண்டு வீரர்களும் போருக்குரிய வலிய கதைகளே வான் நோக்கி மேலே நெருப்புப் பொறி எழும்படி வீசி வானுலகத்தை மோதும்படியும், தேவர்கள் சிதறி ஓடும்படியும், அஷ்டதிக் பாலர்கள் அஞ்சும்படியும், நீண்ட நாகலோகத்திலுள்ள சர்ப்பசாதிகள் பயந்து நடுங்கும்படியும், வேகமாகச் சுழற்றி ஞர்கள்,—என்பது பொருள்.

**169.** **உவகையி ஞலே சிரிப்பர் நீள்சினம்**
**உறுதலி ஞலே மடிப்பர் வாய்மலர்**
**புகையெழ வேதீ விழிப்பர் மார்பொடு**
**புனேகிரி போலே தடிப்பர் தோளிணே**
**இகல்புரி நூலோ டுகற்ற சாரிகை**
**இடவல மேபோ வர்வட்ட மாடுவர்**
**முகடுற மீதே குதிப்பர் பார்மகள்**
**முதுகுற நேரே குதிப்பர் மீளவே.**

[உவகையினாலே சிரிப்பர், நீள் சினம் உறுதலினாலே மடிப்பர் வாய் மலர், புகை எழவே தீ விழிப்பர், மார்பொடு புனை கிரி போல தடிப்பர் தோள் இணை, இகல் புரி நூலொடு கற்ற சாரிகை இடம் வலமே போவர், வட்டம் ஆடுவர், முகடு உற மீதே குதிப்பர், பார்மகள் முதுகு உற நேரே குதிப்பர் மீள, ஏ.]

**விளக்கம்:-** உவகை - போர் ஊக்கம். மார்போடு தோள் இணை அலங்கரிக்கப் பெற்ற மலைகள்போல் வீங்குவர். வட்டம் ஆடல் - சுழலல். முகடு உற மீது குதிப்பர் - வான் முகட்டை எட்டும்படி மேலே கிளம்புவர். பார் மகளின் முதுகு மிக வருந்தும் படி நேரே குதிப்பர். செம்மை மென்மையால், தாமரை வாய்க்கு உவமை. தோளிணை தடிப்பர், என்ற உயர் திணை முடிபு, திணை வழு.

**170.** **ஒருகையி னாலே சுழற்றி வான்முக**
**டுடைபட மேலே கிளப்பி நீள்கதை**
**இருநில மீதே மறித்து வீழுமுன்**
**இருகையி னாலே தரிப்பர் சார்பொடு**
**விரைவுட னேதா ளமொத்தி யோடுவர்**
**விசையுட னேகா லொதுக்கி மீளுவர்**
**பரிதிகள் போலே விருத்த மாமுறை**
**பவுரிகொ ளாவீ சிநிற்பர் வீரரே.**

**விளக்கம்:-** வீரர் ஒரு கையினாலே நீள் கதை சுழற்றி வான் முகடு உடை பட மேலே கிளப்பி, இரு நிலம் மீதே மறித்து வீழு முன் இரு கையினால் சார்பொடு தரிப்பர்; விரைவுடன் (ஏ) தாளம் ஒத்தி ஓடுவர்; விசையுடனே கால் ஒதுக்கி மீளுவர்; பரிதிகள் போலே விருத்தம் ஆம் முறை பவுரி கொளா வீசி நிற்பர், —என்பது அன்வயம்.

சார்பொடு தரிப்பர் - ஆதாரமாக ஏந்திக் கைக் கொள்வர். தாளம் ஒத்தி ஓடுவர் - தாள அடைவோடு விரைந்து அகல்வர். கால் ஒதுக்கி மீளுவர் - கால்களை அகல வைத்துக் கொண்டு திரும்புவர். பரிதி - சூரிய மண்டலம். பவுரி கொளல் - சுழல்தல். சூரிய மண்டலங்கள் போல வட்டம் ஆகும்படி தாம் சுழன்று, (கதைகளையும்) சுழற்றிக் கொண்டு நிற்பர், என்பது ஈற்றடியின் பொருள். விருத்தம் - வட்டம்.

**171.** **மலரடி தாளூ ருவட்ட மார்தனம்**
**வயிறும னேக ரபற்ப மார்பொடு**
**குலகிரி தேர்தோள் கழுத்து நீடனல்**
**குறுநகை கூர்வாய் கதுப்பு வார்குழை**

இலகுபு ரூரபா கநெற்றி யானனம்
எனவடை வேகூ றுறுப்பி யாவையும்
உலேவுற மேன்மேன் மிகுத்த மூளேயும்
உதிரமு மாரு துகுக்க மோதியே.

[மலர் அடி, தாள், ஊரு, வட்டம் ஆர் தனம், வயிறு, மனோகர பற்பம், மார்பொடு குலம் கிரி நேர் தோள், கழுத்து, நீடு அணல், குறுநகை கூர் வாய், கதுப்பு, வார்குழை, இலகு புரூர பாகம் நெற்றி, ஆனனம் என, அடைவே கூறு உறுப்பு யாவையும் உலேவு உற மேல் மேல் மிகுத்த மூளேயும் உதிமும் மாருது உகுக்க மோதியே,—தொடரும்.]

**விளக்கம்:-** ஊரு - துடை. வட்டம் ஆர் தனம் - வட்ட வடிவுடைய ஸ்தன்யப் பிரதேசம். பற்பம் - தாமரை. மனோகர பற்பம் - அழகிய நாபி. அணல் - கீழ்வாய். குறு நகை கூர்வாய் - இளநகை புரியும் வாய். கதுப்பு - கன்னம். வார் குழை - நீண்ட குண்டலத்தை உடைய காதுகள். புரூரம் - புருவம். இலகு புரூர பாகம் - விளங்குகின்ற புருவப் பகுதி. ஆனனம் - முகம். அடைவே கூறு உறுப்பு யாவையும்-முறையே சொல்லப்படுகின்ற உறுப்புக்கள் எல்லாம். உலேவு உற - சிதைய. மேல்மேல் மிகுத்த மூளே – மேலும் மேலும் மிகுதியுற்ற மூளே நிணம். உதிரம் - குருதி. தாள் முதல் முகம் ஈருகவுள்ள உறுப்புகள் எல்லாம் சிதையவும், மூளே நிணமும் குருதியும் இடையருது சிந்தவும், (கதைகளால்) மோதி, (இருவரும் போர் செய்தார்கள்), என்று முடிக்க. குழை - (தானியாகு பெயர்) காது.

**172.** கதைகதை யோடே யடிக்கு மோதைகொல்
கதையுடை யோர்தா நகைக்கு மோதைகொல்
எதிர்மொழி யோவா திசைக்கு மோதைகொல்
இணேவுட லூடே யிடிக்கு மோதைகொல்
பதயுக மாருடி வைக்கு மோதை கொல்
பணேபல சூழ்போ தவெற்று மோதைகொல்
திதியொடு வானூ டுசெற்றும் வானவர்
செவிசெவி டாமா றதிர்க்கு மோதையே.

[கதை கதையோடே அடிக்கும் ஓதை கொல்? கதை உடையோர் தாம் நகைக்கும் ஓதை கொல்? எதிர் மொழி ஓவாது இசைக்கும் ஓதை கொல்? இணே உடலூடே இடிக்கும் ஓதைகொல்? பதயுகம் மாருடி வைக்கும் ஓதை கொல்? பல பணே சூழ்போத எற்றும் ஓதை கொல்? திதியொடு வானூடு செற்றும் வானவர் செவி செவிடு ஆம் ஆறு அதிர்க்கும் ஓதை, ஏ.]

**விளக்கம்:-** ஓதை - ஒலி. எதிர் மொழி ஓவாது இசைக்கும் ஓதை - ஒருவர் எதிரே ஒருவர் வீரவாதமான சொற்களை இடையருது கூறும் ஓசை. இணை உடல் - இரண்டு உடல்கள். பதயுகம் மாருடி வைக்கும் ஓதை - இரண்டு கால்களையும் மாறி மாறி ஒழுங்காக வைக்கும் ஓசை. பணை - பேரிகை. சூழ்போத - சுற்றிலும். திதியோடு - நிலையாக. வானூடு செற்றும் - வானுலகில் நிறைந்துள்ள. அதிர்க்கும் - ஒலிக்கும். வானுலகத்தில் நிலையாக நிறைந்துள்ள வானவர் காதுகள் செவிடு படும்படி அதிர்க்கும் ஓசை, கதையொடு கதை இடிக்கும் ஓசையோ...என்று அயிர்க்கும்படி பேரொலி எழுந்தது, — என்பதாம். நகை, சினத்தின் எழுந்த சிரிப்பு.

துரியோதனன் வீமனை உயிர் நிலை வினவல்

**173.** **அரிவய மாவே றுயர்த்த சூரனும்**
**அழல்விட நாகே றுயர்த்த வீரனும்**
**இருவரு மேவா லிசுக்கி ரீவர்கள்**
**எனவமர் மோதா விளைத்த காலையில்**
**வரைமுடி மேனு ளொடித்த காளைதன்**
**மதலையை யேழ்பா ரடர்த்த கோமகன்**
**உரைதடு மாரு வுயிர்த்து நீயுன**
**துயிர்நிலை கூரு யெனக்கெ ணுமுனம்.**

[அரி வய மா ஏறு உயர்த்த சூரனும், அழல் விடம் நாக ஏறு உயர்த்த வீரனும் இருவரும் (ஏ) வாலி சுக்கிரீவர்கள் என அமர் மோதா இளைத்த காலையில், வரைமுடி மேல் நாள் ஒடித்த காளை தன் மதலையை ஏழ் பார் அடர்த்த கோமகன், உரை தடுமாரு உயிர்த்து, நீ உனது உயிர் நிலை கூருய், எனக்கு என முனம்,— குளகமாய் அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம்:-** வய அரிமா ஏறு. அழல்விடம் நாக ஏறு. வீமன் துரியோதனன் ஆகிய இருவரும் வாலி சுக்கிரீவர்களைப் போல் சீறி ஒருவரை ஒருவர் தாக்கி, இளைத்த பொழுது, ஏழு தீவுகளாக உள்ளபூமி முழுதையும் வென்ற அரசனான துரியோதனன், உரை தடுமாறிப் பெருமூச்சு விட்டுக் கொண்டு, முன்னொரு காலத்தில் மேருவின் சிகரங்களை ஒடித்த வாயுவின் புதல்வனான வீமனை நோக்கி, ''உனது உயிர் நிலை எனக்குக் கூறுக'', என்று கேட்கு முன்,—(தொடரும்), என்பதாம்.

174. இருவினை கூறு வறத்தின் மாமகன்
இளவல் விதாதா வொடொத்த கேள்வியன்
உரைதவ ருதான் மறைக்கு மோவென
துயிர்துணை வாகேள் சிரத்தி லேயென
அரிமக வானே னுரைத்த போதிவன்
அவன்முடி மேலே புடைக்க வீமனும்
உருமுறு மாமே ருவெற்ப தாமென
உரைதடு மாறு வுழற்றி னனரோ.

[இரு வினை கூறு அறத்தின் மாமகன் இளவல், விதாதாவொடு ஒத்த கேள்வியன், உரை தவருதான் மறைக்குமோ! ''எனது உயிர், துணைவா கேள், சிரத்திலே,'' என, அரி மகவு ஆனேன் உரைத்த போதில், இவன் அவன் முடி மேலே புடைக்க, வீமனும், உரும் உறும் மா மேரு வெற்பு, அது ஆம் என உரை தடுமாறு உழற்றினன், அரோ.]

**விளக்கம்:-** விதாதா-பிரும்ம தேவன். அரி - வாயு. தர்மத்தோடு மாறுபட்ட வினைகளை வாயாலும் சொல்லுதல் இல்லாத தருமனது இளவல் (வீமன்), பிரும்மாவைப் போல் நூல் கேள்விகளை உடையவனும், சொன்ன சொல் தவருத வாய்மையனும் ஆகிய வாயுபுத்திரன் (வீமன்) உண்மையை மறைப்பானே! (ஆதலால்), ''துணைவா கேள்; (எனது) உயிர் நிலை தலையிலே'', என்று சொன்ன போது, இவன் (துரியோதனன்) அவன் முடிமேல் மோத வீமனும் இடி தாக்கிய மகாமேருமலை போல உரை தடுமாறி, மயங்கி விழுந்தான்,—என்பது பொருள்.

வீமன் உயிர் நிலை வினவ அவன் மாற்றிக் கூறல்

175. மகிதல மேல்வீழ் தலுற்று மீளவும்
வலியுட னேபோர் குறித்து மேல்வரு
பகைவனை நீயா விநிற்ப தோர்நிலை
பகரென மாறு டுசர்ப்ப கேதுவும்
இகனுத லூடே யெனக்கு மாருயிர்
எனமதி யாதே யுருத்து வீமனும்
உகுதரு செந்நீர் பரக்க மோதினன்
உயர்கதை யாலே சிரத்தின் மேலுமே.

[மகிதலம் மேல் வீழ்தல் உற்றும், மீளவும் வலியுடனே போர் குறித்து, (வீமன்) மேல்வரு பகைவனை, ''நீ ஆவி நிற்பது ஓர் நிலை பகர்,'' என, மாருடு சர்ப்பகேதுவும், ''இகல் நுதலூடே எனக்கும் ஆர் உயிர்,'' என, மதியாதே, உருத்து வீமனும்

உகுதரு செந்நீர் பரக்க மோதினன் உயர் கதையாலே சிரத்தின் மேலும், ஏ.]

**விளக்கம்:-** மாருடு சர்ப்பகேது - வாய்மை தவறும் இயல் பினனான துரியோதனன். இகல் நுதல் - வலிய நெற்றி. மதியாது - (பொய்யா மெய்யா என்று) கருதாமல். பூமியில் மயங்கி விழுந்தும் (தளர்ச்சி தீர) மீண்டும் வலிமையுடனே போர் செய்யக் கருதி வீமனும், தன் மேல் வரும் பகைவனான துரியோதனனை, (நோக்கி), "உனது உயிர் நிலையான இடத்தை நீயும் சொல்வாய்," என்று வினவ, பொய்யனான துரியோதனன், "எனக்கும் உயிர் நிலை நெற்றியே," என்று கூற, (அதை நம்பி) வீமனும் உருத்துச் சிந்துகின்ற குருதி எங்கும் பரவும்படி, தனது சிறந்த கதையால் (மற்ற உறுப்புக்களோடு) தலையின் மேலும் தாக்கினான், —என்பது பொருள்.

**176.** **உரியக தாபா ணியர்க்கு ளோதவொ**
**ருவமையி லாதா னடித்த போதுயர்**
**சிரமுடி யூடே பிளக்க நாலிரு**
**திசையினும் வார்சோ ரிகக்கி வீழ்தர**
**இருநில மீதே பதைத்து வீழ்தலும்**
**இரிதர மோதா மல்விட்டு நீயினி**
**விரைவுட னாறு றெனத்த னாண்மையை**
**விருதர்முன் மேன்மேல் விளக்க வீமனே.**

[உரிய கதாபாணியர்க்குள் ஓத ஒரு உவமை இலாதான் அடித்த போது, உயர் சிரம் முடியூடே பிளக்க, நால் இரு திசையினும் வார்சோரி கக்கி வீழ்தர, இரு நிலம் மீதே பதைத்து வீழ்தலும், இரிதர மோதாமல் விட்டு, "நீ இனி ஆறு ஆறு," என தன் ஆண்மையை விருதர் முன் மேல் மேல் விளக்க வீமன், ஏ,—தொடரும்.]

**விளக்கம்:-** கதை வீரர்களுள் ஒப்பில்லாதவனான வீமன், (துரியோதனனது) சிரத்தின் உச்சி பிளந்து குருதி எங்கும் சிந்தும் படி தாக்க, அவன் தரையில் துடித்து விழலும், வீமன் அவனைத் தாக்கிக் கொல்லாமல், "இப்பொழுது இளைப்பு ஆறுக", என்று சொல்லித் தன் ஆண்மையை விருதர் (வீரர்) முன் விளங்கச் செய்ய - (அடுத்த செய்யுளோடு தொடரும்)—என்பதாம். சாய்ந்தவன் மேல் செல்லாமையாகிய இது **வஞ்சி** என்னும் புறப்பொருள் திணைக்குரிய **தழிஞ்சி** என்ற துறையின் பாற்படும். கக்கி வீழ்தர- வெளிப்பட்டு வழிய. இரிதர-அழியும்படி.

177. வருகளை யாரு வுயிர்ப்பு ருவிழி
மலர்திற வாநா வறட்சி போயுகு
குருதியு காமே துடைத்து வீழ்தரு
குருகுல பூபா லனுக்ர வேகமொ(டு)
உருமெறி மாமே கமொத்த காயமும்
உதறிம ேனவீ ரமுற்று மீளவும்
அருகொரு பான்மே விநிற்கும் வீமனை
அடுகதை யாலோ டிமுட்டி மோதவே.

[வருகளை ஆரு, உயிர்ப்பு உரு, விழிமலர் திறவா, நா வறட்சி போய், உகுகுருதி உகாமே துடைத்து, வீழ்தரு குரு குல பூபாலன் உக்ர வேகமொடு உரும் எறி மா மேகம் ஒத்த காயமும் உதறி, மனே வீரம் உற்று மீளவும் அருகு ஒரு பால் மேவி நிற்கும் வீமனை, அடு கதையால் ஓடி முட்டி மோத, ஏ,—தொடரும்].

**விளக்கம் :-** (அடிபட்டு) விழுந்த குருகுல பூபாலன் (துரியோதனன்), உண்டாகிய களைப்பு அகலப்பெற்று, உயிர்ப்பு உற்று, விழிமலர் திறந்து, நாவில் வறட்சி நீங்கப் பெற்று, உகுகின்ற குருதி உகாமே துடைத்துக் கொண்டு, உக்ரமான வேகத்தோடு இடி இடிக்கின்ற கரிய மேகத்தைப் போன்ற தனது காயத்தை (உடம்பை) உதறிக் கொண்டு, மனே வீரத்தை எய்தி, மீண்டும், அருகே ஒரு புறம் பொருந்தி நிற்கும் வீமனை அடு கதையால் ஓடிச் சென்று நெருங்கித் தாக்க,—(அடுத்த செய்யுளில் முடியும்) என்பது பொருள்.

வேறு

178. ஓம வுண்டிகொள் பேரழ லோடடல்
ஊதை வெஞ்சம ராடிய வாறென
ஆம ரங்களி னுன்மதி யாதம
ராடு கின்றநி சாசர ராமென
வீம னுந்துரி யோதன நாமனும்
வேக மொன்றிய வீரிய ராயடு
சேம வன்கதை யாலம ராடினர்
தேறி நின்றவர் வாள்விழி மூடவே.

[ஓமம் உண்டி கொள் பேர் அழலோடு அடல் ஊதை வெம் சமரம் ஆடிய ஆறு என, ஆமரங்களினுல் மதியாது அமர் ஆடுகின்ற நிசாசரர் ஆம் என, வீமனும் துரியோதன நாமனும் வேகம் ஒன்றிய வீரியராய் அடு சேமம் வல் கதையால் அமர் ஆடினர், தேறி நின்றவர் வாள் விழி மூட, ஏ.]

**விளக்கம்:-** ஓமம் உண்டி கொள் பேர் அழல்-ஓமம் செய்யப் படும் அவிசு ஆகிய உணவை ஏற்று வளரும் பெரிய நெருப்பு. அடல் ஊதை - வலிய பெருங்காற்று. ஆமரம்-ஆச்சாமரம். மதியாது - அலட்சியமாய். நிசாசரர்-அரக்கர். சேமம்-காவல், பாதுகாப்பு. தேறி நின்றவர்-பார்த்துக் கொண்டு நின்றவர். தீயோடு காற்று போர் செய்தாற்போலவும், ஆச்சாமரங்களைக் கொண்டு மதியாது போர் செய்யும் அரக்கர்களைப் போலவும், வீமனும் துரியோதனனும், கண்டவர் அச்சத்தால் கண்மூடும்படி, தங்களுக்குப் பாதுகாப்பாய் அமைந்த கதைகளைக் கொண்டு போர் செய்தனர்,—என்பதாம்.

**179.** **மேவு சிங்கவி யாளவி லோதனர்**
**வீசு கின்றக தாரவ மேலிட**
**வாவு வெம்பரி யாதவ னுந்தடு**
**மாறி நின்றனன் வானவர் தானவர்**
**நாவ டங்கினர் மாமுனி வோரொடு**
**நாக ரஞ்சினர் நான்முக னாதிய**
**மூவ ருஞ்செய லேதென நாடினர்**
**மோழை கொண்டது மூடிய கோளமே.**

[மேவு சிங்க வியாள விலோதனர் வீசுகின்ற கதாரவம் மேல் இட, வாவு வெம்பரி ஆதவனும் தடுமாறி நின்றனன்; வானவர், தானவர் நா அடங்கினர்; மாமுனிவரோடு நாகர் அஞ்சினர்; நான்முகன் ஆதிய மூவரும் செயல் ஏது என நாடினர்; மோழை கொண்டது மூடிய கோளம், ஏ.]

**விளக்கம்:-** மேவு சிங்க வியாள விலோதனர்-பொருந்திய சிங்கத்தையும், பாம்பையும் கொடியிலே கொண்ட வீமனும் துரியோதனனும். கதாரவம்—கதையின் ஓசை. மேலிட—மிக. ஆதவன்-சூரியன். நா அடங்கினர்-பேசுதல் ஒழிந்தனர். நாகர்-நாகலோக வாசிகள். நான்முகன் ஆதிய மூவர்-பிரும்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய மூவர். செயல் ஏது என நாடினர்-குழப்பத்தைத் தரும் இச்செயல் நேரக் காரணம் யாதென்று எண்ணுவாராயினர். மூடிய அண்டகோளம் மோழை கொண்டது-உலகத்தை மூடிக் கொண்டுள்ள அண்டகோளம் உடைந்தது. இருவரும் செய்த உக்ரமான போர் வருணனையாதம் இச்செய்யுள், **உயர்வு நவிற்சியின்** பாற்படும்,

விசயன் பகைவனை அழிக்கும் வழி வினவல்

180. தார்வ லம்புரி யானொடு போரழி
தாழ்வு கண்டனன் வீமனை வாசிகொள்
தேர்வி டுந்திரு மாலடி நீண்முடி
சேர நின்றுரை யாடினன் மாருதி
நேர்த ளர்ந்தனன் யாதுகொ லோசெயல்
நீமொ ழிந்தருள் வாயென லானவர்
ஊர்பு ரந்தவ னோதமு ராரியும்
ஓதி னன்பரி வோடவ னோடிவை.

**விளக்கம்:-** தார் வலம் புரியானொடு (செய்யும் போர் (இல்) வீமன் அழி தாழ்வு கண்டனன் வானவர் ஊர் புரந்தவன், வாசி கொள் தேர்விடும் திருமால் அடி நீள் முடி சேர நின்று, உரை ஆடினன், ''மாருதி நேர் தளர்ந்தனன், செயல் யாது கொலோ? நீ மொழிந்தருள்வாய்'' என ஓத, முராரியும் பரிவொடு, அவனொடு ஓதினன்,-என்பது அன்வயம்.

**விளக்கம்:-** துரியோதனனோடு செய்கின்ற போரில் வீமன் வலி அழிகின்ற தாழ்வைக் கண்டு, தேவர் உலகைப் பாதுகாத்தவனை விசயன், கண்ணன் திருவடிகளில் முடிபடும்படி வணங்கி உரை ஆடினன், அதாவது கேட்பவனாய், ''மாருதி (வீமன்) பகைவனுக்கு எதிரே தளர்ந்தான், செய்வதற்குரியது யாது? உரைத்தருள்வாய்,'' என்று சொல்ல, முராரியும் (கண்ணனும்) அன்போடு அவனுக்கு இவை கூறினன்,—என்பதாம். முர-அரி-முராரி-முரன் என்னும் அசுரனைக் கொன்ற கண்ணன்.

பகைவனை அழிக்கக் கண்ணன் வழி கூறல்

181. நீந யந்தனை கேளுறு போரிடை
நேர்ம லைந்திடு வோரிரு வோரினும்
ஆநி லன்பல வானதி லேமுகு
ரான னன்றரு சேய்வினை யாதிகன்
நானி யம்பற காதிவ ராயிர
நாண்ம லைந்தன ராயினும் வீவொடு
வான கம்புகு தாரிரு வோர்களும்
வாச வன்றகு பூணணி மார்பனே.

[நீ நயந்தனை கேள், உறு போரிடை நேர் மலைந்திடுவோர் இருவோரினும் ஆநிலன் பலவான், அதிலே முகுர ஆனன் தரு சேய்வினை ஆதிகன்; நான் இயம்பல் தகாது, இவர் ஆயிரம் நாள்

மலைந்தனர் ஆயினும் வீவொடு வானகம் புகுதார் இருவோர்களும், வாசவன் தரு பூண் அணி மார்பனே.]

**விளக்கம்:-** வாசவன் (இந்திரன்) தருபூண் அணி மார்பனே (விசயனே), நீ விருப்பத்தோடு கேள்: உறுபோரில் நேர் நின்று போர் செய்பவர்களான இருவரிலும் ஆநிலன் (வீமன்) பலவான்; முகுர ஆனனன்(கண்ணுடி முகத்தையுடைய திருதராட்டிரன்)தரு சேய் (துரியோதனன், போர்த் தொழிலில்) (வீமனினும்) திறமையில் மேம்பட்டவன்; நான் ஒன்றும் சொல்லுதல் தக்கதாகாது; இருவரும் ஆயிரம் நாள் மலைந்தாராயினும், வீவொடு (சாவோடு) வானம் புகார்,—என்று கண்ணன் கூறினன், என்பது பொருள்.

**182.** **மாறு கொண்டவ ராவிகொ ணீள்கதை**
**மாரு தன்சுத னேடிவ ணோருரை**
**கூற லிங்கித மேயல வோருரை**
**கூறில் வஞ்சக மாமிவ னுண்மையின்**
**நூறு மைந்தரி னாதிப னாகிய**
**நூன லந்திகழ் மார்பனை யாருயிர்**
**ஈறு கண்டிட லாமவ னூருவை**
**யேறு புண்பட வேயெதிர் மோதிலே.**

[மாறுகொண்டவர் ஆவி கொள் நீள் கதை மாருதன் சுதனேடு இவண் ஓர் உரை கூறல் இங்கிதமே அல, ஓர் உரை கூறில் வஞ்சகம் ஆம்; இவன் ஆண்மையின் நூறுமைந்தரின் ஆதிபன் ஆகிய நூல் நலம் திகழ் மார்பனை ஆர் உயிர் ஈறு கண்டிடலாம் அவன் ஊருவை ஏறு புண்படவே எதிர் மோதில், ஏ.]

**விளக்கம் :-** பகைவர் உயிர் அழிக்கும் நீண்ட கதையையுடைய வாயுகுமரனேடு ஒரு வார்த்தை கூறல் இங்கிதத்தினல் (குறிப்பினல்) செய்யலாமே அல்லாமல், (வெளிப்படையாக) ஒருவார்த்தை கூறல் வஞ்சனையாகும்; அவன் துடையை, ஆண்மையோடு கொடிய புண் உண்டாகும்படி எதிர்த்துத் தாக்கினல், (திருதராட்டிரன்)குமாரர் நூற்றுவருள் தலைவனை (மூத்தவனை), சாமுத்திரக நூல் நலம் விளங்கும் மார்பையுடைய துரியோதனனை ஆர் உயிர் அழிதல் கண்டிடலாம், அதாவது அழியச் செய்யலாம், என்று கண்ணன் விசயனுக்குக் கூறினன், என்பது பொருள்.

விசயன் குறிப்பால் உபாயம் உணர்த்தல்

**183. ஏழ்பெ ருங்கடல் சூழ்புவி பாரமும்**
**ஏத முங்கெட வேதமி லைவரும்**
**வாழ வன்றுயர் நாரண னூர்திரு**
**வாய்ம லர்ந்தசொ லான்மகி ழாமிக**
**ஊழி னும்புரி தாள்வலி தேயென**
**ஊரு வின்புடை சேர்கர நாண்மலர்**
**காழ்நெ டுங்கிரி யேயனை யான்விழி**
**காண நின்றனன் வானரி காளையே.**

[ஏழ் பெருங்கடல் சூழ் புவி பாரமும் ஏதமும் கெட, ஏதம் இல் ஐவரும் வாழ, அன்று உயர் நாரணனூர் திருவாய் மலர்ந்த சொலால் மகிழாமிக, ஊழினும் புரிதாள் வலிதே என, ஊரு வின் புடை சேர்கரம் நாள் மலர், காழ் நெடு கிரியே அனையான் விழிகாண நின்றனன், வான் அரிகாளை. ஏ.]

**விளக்கம்:-** ஏழு பெரிய கடல்களால் சூழப்பெற்ற பூமியின் பாரமும் துன்பமும் அழியவும், குற்றமில்லாத ஐவரும் (பாண்டவரும்) வாழவும், அப்பொழுது யாவரினும் உயர்ந்த கண்ணன், திருவாய் மலர்ந்து கூறிய சொல்லால் மிக மகிழ்ந்து, வான் ஆளும் இந்திரகுமாரனான விசயன், செய்யும் விடா முயற்சி ஊழினும் வலிதாம், என்று எண்ணித் தனது தொடையினிடம் சேரும்படி வைத்த மலர்க்கரத்தை, வலிய பெரிய மலையை ஒத்த வீமனின் கண்கள் காணும்படி நின்றான்,—என்பது பொருள். முயற்சியுடையார் இகழ்ச்சி அடையார் ஆதலால், "ஊழினும் புரிதாள் வலி பெரிது," எனப்பட்டது.

தளர்ச்சியுற்ற வீமனை ஊக்குங் கருத்தில் விசயன், 'ஊழி புரிதாள் வலி பெரிதே' என்று சொல்லித் தன் தொடையைத் தட்டினான், என்று பொருள் கொள்ளலும் அமையும்.

குறிப்பறிந்த வீமன் தொடையில் மோதல்

**183. ஞான பண்டிதன் வாயுகு மாரனும்**
**நார ணன்பணி யாலிளை யோன்மொழி**
**மோன வண்குறி தானுண ராவெதிர்**
**மோதி னன்கதை பூபதி யூருவின்**
**மான கஞ்சுக னறடி யேழடி**
**மாறி நின்றிட வேபிழை போதலின்**
**மேன்மு ழங்கின வானவர் தூரியம்**
**மேல்வி ழுந்தது பூமழை சாலவே.**

[ஞான பண்டிதன் (ஆன) வாயு குமாரனும் நாரணன் பணி யால் இளையோன் மொழி மோனம் வண்குறி தான் உணரா, எதிர் மோதினன் கதை பூபதி ஊருவின்; மானகஞ்சுகன் ஆறு அடி ஏழு அடி மாறி நின்றிடவே, பிழை போதலின் மேல் முழங்கின வானவர் தூரியம், மேல் விழுந்தது பூமழை சாலவே,]

**விளக்கம்:-** ஞான பண்டிதன்-அறிவின் மிக்கான். மொழி மோனம் வண்குறி-மொழியாமல் தெரிவித்த நல்ல குறிப்பு. பூபதி துரியோதனன். ஊரு-தொடை. மானகஞ்சுகன்- மானத்தைக் கவசமாகவுடைய துரியோதனன். மாறி நின்றிட-பின்னேக்கி இடம் பெயர்ந்து நிற்க. பிழை போதலின் - உறுதி குலைந்து போனதால். தூரியம்-தேவதுந்துபி.

கண்ணனது வார்த்தையால் விசயன் குறிப்பின் உணர்த்தி யதை ஞான பண்டிதனை வீமன் உணர்ந்து கொண்டு, துரியோ தனனது தொடையில் கதையால் தாக்கினன். துரியோ தனன் ஆறு அல்லது ஏழடி தூரம் பின்னேக்கி இடம் பெயர்ந்து நிற்க, அவன் உறுதி குலைந்தானதலால், (வீமன் வெல்லலும், துரியோதனன் அழிதலும் தவருது என்ற தேவர் தம் களிப்பினல்) தேவதுந்துபிகள் வானில் முழங்கின, (தேவர் சொரிந்த பூமழை மிகுதியாக வீமன்மேல் விழுந்தது,—என்பதாம். மௌநம், என்ற வட மொழிச் சொல்லின் விகாரம் மோனம்.

**185.** **மாறி நின்றசு யோதனன் மீளவும்**
**வாயு மைந்தனை வாகுவு மார்பமும்**
**நீறெ ழும்படி சாடிய போதவன்**
**நீணி லந்தனி லோடிவி ழாதுதன்**
**ஊறின் மிஞ்சிய பேருட லோடெதி**
**ரோடி வன்றெடை கீறிட மாறடும்**
**வீறு கொண்டக தாயுதம் வீசினன்**
**வீர னம்புவி மீதுற வீழவே.**

[மாறி நின்ற சுயோதனன் மீளவும் வாயு மைந்தனை வாகு வும் மார்பமும் நீறு எழும்படி சாடியபோது, அவன் நீள் நிலந் தனில் ஓடி விழாது, தன் ஊறின் மிஞ்சிய பேர் உடலோடு எதிர் ஓடி, வல் தொடை கீறிட, மாறு அடும் வீறு கொண்ட கதாயுதம் வீசினன், வீரன் அம்புவி மீது உற விழ, ஏ.]

**விளக்கம்:-** வாகு-தோள். இடம் மாறி நின்ற துரியோதனன் மீளவும் வீமனைத் தோள்களிலும் மார்பிலும் தூள்படும்படி தாக்கிய பொழுது, வீமன் நிலத்தில் விழாதபடி நிலைநின்று, தனது ஊறின்

(வலிமையில்) மிகுந்த உடலோடு எதிர் ஓடி, துரியோதனனது வலிய தொடை பிளக்கும்படியும், அவன் தலையில் விழும்படியும், மாறு அடும் (பகை அழிக்கும்) வலிமை கொண்ட கதையால், தாக்கினுன்,—என்பதாம்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

186. அரிப்ப தாகனுர கப்ப தாகனைய
திர்த்து மேலுறவ டர்த்துநீ(டு)
உருப்பி னேடதிச யிக்க யூருவையொ
டிக்க வேயவனு டற்றலும்
நெருப்பு ருவிழிசி வந்து வார்கடைநி
மிர்ப்பு ருதபுரு வத்தனுய்
மருப்பு நாலுறும தத்த மாவெனம
தத்து மார்பின்மிசை குத்தினுன்.

[அரி பதாகன் உரகம் பதாகனை அதிர்த்து, மேல் உற அடர்த்து நீடு உருப்பினேடு அதிசயிக்க ஊருவை ஒடிக்கவே, அவன் (துரியோதனன்) உடற்றலும், (வீமன்) நெருப்பு உரு விழி சிவந்து, வார் கடை நிமிர்ப்பு உருத புருவத்தனுய், மருப்பு நால் உறு மதத்தமா என, மதத்து மார்பின் மிசை குத்தினுன்.]

**விளக்கம்:-** அரி பதாகன்-வீமன். உரகப்பதாகன் - துரியோதனன். மேல் உற அடர்த்து-மேலும் நெருங்கி. உருப்பினேடு-கோபத்தோடு. விழி சிவந்து நெருப்பு உரு-கண்கள் சிவந்து நெருப்பின் தன்மையை அடைந்து. வார் கடை நிமிர்ப்பு உருத-நீண்ட புருவக் கடை வளைவு நிமிராத. மருப்பு நால் உறுமதத் மா-ஐராவதம் என்ற யானை. மதத்து-வலிமையோடு, அல்லது மிகுந்த கோபத்தோடு. வீமன் துரியோதனனை நெருங்கி (கண்டவர்) வியக்கும்படி மிகுந்த கோபத்தோடு அவனது தொடையை ஒடிக்க,—(அவனும் எதிர்த்துப்) போர் செய்த அளவில், (வீமன்) விழி சிவந்து, வளைவு நிமிராத புருவத்தனுய், ஐராவதம்போல் சினங்கொண்டு, (துரியோதனன்) மார்பின் மேல் குத்தினுன்,—என்பதாம்.

187. கதுப்பும் வாயுநெரி யக்க தாயுதக
ரத்தி னுனனிக லக்கினுன்
எதிர்த்த யானையைய டர்த்த கேசரியெ
னப்பொன் மௌலியையி ருத்தினுன்
உதைத்து மேலிருப தத்தி னுலவனு
ரத்தை வாகுவையொ டித்துநீள்
விதத்தி னுலிருநி லத்தின் மீதுடல்வி
திர்த்து வீழ்தரவி ழுத்தினுன்.

[கதுப்பும் வாயும் நெரிய கதாயுத கரத்தினால் நனி கலக்கினான்,—எதிர்த்த யானையை அடர்த்த கேசரி என, பொன் மௌலியை இருத்தினான்,—உதைத்து மேல் இரு பதத்தினால் அவன் உரத்தை வாகுவை ஒடித்து, நீள் விதத்தினால் இரு நிலத்தின் மீது உடல் விதிர்த்து வீழ்தர விழுத்தினான்.]

**விளக்கம்:-** கதுப்பு-கன்னம். உரம்-மார்பு. நீள் விதத்தினால் உடல் அதிர்த்து-பல வகைப்பட்ட செயலால் (அவன்) உடல் நலியும்படி அசைத்து. கதை ஏந்திய கையால் துரியோதனனைக் கலங்கச் செய்து, எதிர்த்த யானையைப் பொருது அழிக்கும் சிங்கத்தைப் போல், துரியோதனனது கிரீடத்தைப் பூமியில் புதையச் செய்து, தன் கால்களால் மார்பையும் தோள்களையும் உதைத்துப் பலவிதமாக அவனை வருத்திப் பெரிய பூமியில் அவன் விழும்படி செய்தான்,—என்பதாம்.

### கண்ணனைத் துரியோதனன் நிந்தித்தல்

**188.** நிறத்த நீலகிரி யொக்க வேயிருநி
லத்தின் வீழ்குருகு லத்தினோன்
உறைத்து மீளவுமு யிர்த்து மாயனெடு
ருத்து வாசகமு றச்சொல்வான்
குறிப்பி னால்விசய னைக்கொ டாருயிர்கு
றிக்கு மாமதிகொ ளுத்தினாய்
அறத்தி னாலடன்ம றத்தி னீர்மையைய
வித்தை யாயருமளப்பரோ.

[நிறத்த நீலகிரி ஒக்க (ஏ) இரு நிலத்தின் வீழ் குரு குலத்தினோன் உறைத்து, மீளவும் உயிர்த்து, மாயனொடு உருத்து, வாசகம் உற சொல்வான்; (நீ) குறிப்பினால் விசயனை கொடு ஆர் உயிர் (நிலை) குறிக்கும் ஆ(று) மதிகொளுத்தினாய்; அறத்தினால் அடல் மறத்தின் நீர்மையை அவித்தை ஆயரும் அளப்பரோ.]

**விளக்கம்:-** உறைத்து - உறுதிகொண்டு, வலிமைபெற்று உருத்து-வெகுண்டு. விளக்கத்தையுடைய நீலமலை போல், மண்ணில் விழுந்திட்ட துரியோதனன் மீண்டும் உறுதிபெற்று, பெருமூச்சு விட்டு வெகுண்டு, கண்ணனோடு கடுமை மிகக் கூறுவான்; குறிப்பினால் விசயனைக் கொண்டு என் உயிர் நிலையை அறியும் நீ வீமனுக்கு அறிவு தந்தாய்; தர்மம் கடவாத மறத்தை (பராக்ரமத்தை) அறிவில்லாத ஆயர் அறிவரோ!—என்று கூறினான், என்பதாம். ஆயர்-இடையர்.

189. மலைத்த போர்தொறுமெ னக்கு நீசெய்பிழை
மற்று ளோர்செய நினைப்பரோ
குலத்தி லேயிழிகு லத்த ரானவர்கு
றிப்பி லாதிவைபி றக்குமோ
சலத்தி னால்வினையி யற்று வார்முடித
ரித்த காவலரொ டொப்பரோ
நிலத்தில் வாழ்வவர்பெ றக்கொ டாயினி
நினைத்த காரியமு டித்தியே.

[மலைத்த போர் தொறும் எனக்கு நீ செய்பிழை மற்று உளோர் செய நினைப்பரோ! குலத்திலே இழி குலத்தர் ஆனவர் குறிப்பு இலாது இவை பிறக்குமோ! சலத்தினால் வினை இயற்றுவார் முடி தரித்த காவலரொடு ஒப்பரோ! நிலத்தில் வாழ்வு அவர் பெற கொடாய் இனி, நினைத்த காரியம் முடித்தி, ஏ.]

**விளக்கம் :-** செய்த போர்கள் எல்லாவற்றிலும் எனக்கு நீ செய்த துரோகச் செயல்களை வேறான பிறர் செய்ய நினைப்பரோ! குலங்களில் இழிந்த குலத்தில் பிறந்தவர்களது கபடமான கருத்து இல்லாமல் இத்தகைய அக்கிரமச் செயல்கள் உண்டாகுமோ! சலத்தினால் (வஞ்சனையால்) தொழில் செய்பவர்கள், முடிதரித்த அரசர்களுக்கு ஒப்பாவாரோ! இனி, அதாவது, இப்படித் துரோகமான செயல்களைச் செய்து எங்களை அழித்த பிறகு, அரச வாழ்வு பாண்டவருக்கு அளித்திடு; எங்களை அழிக்க நினைத்த காரியத்தை முடித்துக் கொள்,—என்று நிந்தித்தான், என்பது பொருள்.

துரியோதனனை வீமன் உதைக்கப் பலராமன் வெகுளல்

190. எனச்சில் வாசகமி ழற்றி மீளவுமெ
திர்ப்ப தாகிபெழ லுற்றபோ(து)
அனற்ச காயன்முன ளித்த காளைதன
டற்ச ரோருகப தத்தினால்
உனக்கு வாழ்வினியெ னக்கொ லாமெனவு
தைத்து மௌலியையு டைக்கவே
சினத்த லாயுதனி றத்த வாள்விழிசி
வக்க வாய்மைசில செப்புவான்.

[என சில் வாசகம் மிழற்றி மீளவும் எதிர்ப்பது ஆகி எழல் உற்றபோது, அனல் சகாயன் முன் அளித்த காளை தன் அடல் சரோருக பதத்தினால், உனக்கு வாழ்வு இனி எ(ன்)ன கொல் ஆம் என உதைத்து மௌலியை உடைக்க, (ஏ), சினத்து அலாயுதன் நிறத்த வாள்விழி சிவக்க, வாய்மை சில செப்புவான்.]

என்று (துரியோதனன்) நிந்தனை மொழிகள் சில வாய்குழறக் கூறி மறுபடியும் (வீமனை) எதிர்க்க எண்ணி எழலுற்றபோது, அனல் சகாயன் (வாயு) முன்பு பெற்ற வீமன், "இனியும் உனக்கு வாழ்க்கை என்னே?" என்று கூறி, தனது வலிய தாமரை போன்ற கால்களால் உதைத்து, அவன் தலையை உடைக்க, (அப்பொழுது) கோபகுணமுடைய பலராமன் ஒளிவிளக்கமுடைய கண்கள் சிவக்கச் சில வார்த்தை கூறுவானாயினான், என்பதாம். என்ன கொலாம், என்பது என கொலாம், என்று நின்றது. சரோருகம்-தாமரை. நெருப்புக்குத் துணைவன், வாயு ஆதலால், அனல் சகாயன், என்றார்.

எண் சீர் ஆசிரிய விருத்தம்

191. எம்பி ரானைமு ராரியை மாயனை
இம்ப ரேழ்கடல் சூழ்புவி மேலொரு
தம்பி யாவுடை யானவ னோடெதிர்
சந்தி யாவெகு ளாவிழி தீயெழ
நம்பி கேளரி யோடுடன் மேவிய
நஞ்சு போலுந ரேசர்முன் னேயுடல்
கம்பி யாவிழ வூருவின் மோதுதல்
கண்ட போதென தாருயிர் போனதே.

[எம்பிரானை, முராரியை, மாயனை, இம்பர் ஏழ் கடல் சூழ் புவிமேல் ஒரு தம்பியா உடையான், அவனொடு எதிர் சந்தியா, வெகுளா, விழி தீ எழ, "நம்பி, கேள்; "அரியோடு உடன் பொருந்திய நஞ்சு போலும் நரேசர் முன்னே, உடல் கம்பியாவிழ ஊருவின் மோதுதல் கண்டபோது எனது ஆர் உயிர் போனது, ஏ,"—தொடரும்.]

**விளக்கம்:-** எம்மனோர் பிரானும், முராரியும் மாயனுமான கண்ணனை, ஏழுகடல்களால் சூழப்பெற்ற புவியில், இந்த அவ தாரத்தில் தம்பியாகவுடையவனான பலராமன், அவனிடம் நெருங்கிச் சென்று, விழிகளில் தீ எழும்படி சினந்து, "தம்பியே, கேள்; (பகைவர்க்கு) பாம்போடு கூடிய கொடிய விஷம் போன்ற அரசர்கள் முன்னே உடல் துடிதுடித்து விழும்படி தொடையில் (வீமன்) தாக்குதல் கண்டபோது, எனது அரிய உயிர் உடலைவிட்டு அகலும் நிலையை அடைந்தது,"—(தொடரும்) என்று பலராமன் கூறினான், என்பது பொருள். சந்தியா-சமீபித்து, நெருங்கி. அரி-பாம்பு. நரேசர் - (நர-ஈசர்) அரசர். கம்பியா - கம்பித்து, துடித்து, நடுங்கி.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**192. கதையெடுத் துடற்று மாடவர்கள்**
**கடிதடத் தினுக்கு மேலொழிய**
**அதிர்வுறப் புடைப்ப ரோதொடையி**
**லடிபடத் துகைப்ப ரோமுடியில்**
**எதிரியைச் சலத்தி ஞலென்விழி**
**யெதிர்வழக் கழித்த பாவனனை**
**முதுகிடப் புடைப்பல் யானுமென**
**முசலகைத் தலத்தொ டோடினனே.**

[''கதை எடுத்து உடற்றும் ஆடவர்கள் கடி தடத்தினுக்கு மேல் ஒழிய, அதிர்வு உற புடைப்பரோ தொடையில், அடிபட துகைப்பரோ முடியில்! எதிரியை சலத்தினல் என் விழி எதிர் வழக்கு அழித்த பாவனனை முதுகு இட புடைப்பல் யானும்,'' என, முசல கைத்தலத்தொடு ஓடினன், ஏ.]

**விளக்கம்:-** சலம்-தீராப்பகை. முசலம்-உலக்கை. கலப்பை யோடு உலக்கையும் பலராமனது ஆயுதங்கள். ''கதைப் போரில் இடுப்புக்குமேல் அல்லாமல் தொடையில் அடித்தல் முறையோ? அடிபட்டு விழுந்தவனைக் கால் தலையில் படும்படி உதைக்கலாமோ? வயிரம் பாய்ந்த பகை காரணமாக, என் கண் முன் வழக்கு அழித்த (நீதி கடந்த) பாவனனை (வாயு குமாரனை) புறம் இட்டு ஓடும்படி தாக்குவேன்'' என்று சொல்லிப் பலராமன் வீமனிடம் விரைந்தான்,—என்பதாம்.

### எண் சீர் ஆசிரிய விருத்தம்

### கண்ணன் சமாதானங் கூறல்

**193. மதியிரவி யோடு போர்செயு மாறென**
**வலியதிறல் வீமன் மேலிவ னேடலும்**
**இதயமலர் தோறு மேவரு நாயகன்**
**இவனைவிரை வோடு போய்வில காவிரு**
**பதுமநிக ரான தாள்பணி யாமிகு**
**பரிவினெடு சீறு மாண்மைத காதென**
**அதிமதுர வாய்மை யால்வெகு ளாவகை**
**அடிகளிவை கேண்மி னேவென வோதினன்.**

[மதி இரவியோடு போர் செயும் ஆறு என, வலிய திறல் வீமன் மேல் இவன் ஓடலும், இதயம் மலர் தோறும் மேவரு நாயகன், இவனை விரைவோடு போய் விலகா, இரு பதுமம் நிகர்

ஆன தாள் பணியா, மிகு பரிவினெடு சீறும் ஆண்மை தகாது என, அதிமதுரம் வாய்மையால் வெகுளாவகை, "அடிகள் இவை கேண்மினே!" என ஓதினன்.]

**விளக்கம்:-** பலராமன், வெண்ணிறத்தினன் ஆதலால், மதி எனப்பட்டான். வீமனை, இரவி என்றது, பலராமனிலும் அவன் வலியன் என்ற கருத்தது ஆகலாம். இதய மலர் தொறும் மேவரு நாயகன் - எல்லோர் உள்ளத்திலும் இடங் கொண்ட நாயகனை கண்ணன். விலகா - (பிறவினைப் பொருளது) விலக்கி. பரிவினெடு சீறும் ஆண்மை - துரியோதனனிடம் பரிவு கொண்டு சீறுகின்ற ஆண் தன்மை. அடிகள் - (விளி) பெரியீர். வீமன்மேல் போர் செய்ய எழுந்த தமையனைக் கண்ணன் தடுத்துச் சமர்தானம் கூறலானன்,--என்பதாம்.

வேறு

194. முகுரா னனன்மைந் தனும்வீ மனுமே
முடியா தபெரும் பகையா ளர்கள்காண்
மகிபா லர்திருந் தவையூ டுரையா
வழுவா தனவஞ் சினமோ திநனி
இகல்வார் சிலையின் குருவா னவர்தா
மிடுசா பமுமுண் டுதிரௌ பதியார்
பகர்சா பமுமுண் டதனு லெதிரே
படுமே யிவன்வெங் கதையா லவனே.

[முகுர ஆனன் மைந்தனும் வீமனும்(ஏ) முடியாத பெரு பகையாளர்கள், காண்; (மேலும்) மகிபாலர் திருந்து அவையூடு உரையா வழுவாதன (ஆன)வஞ்சினம் ஓதி, நனி இகல்வார்; சிலையின் குரு ஆனவர் தாம் இடு சாபமும் உண்டு; திரௌபதியார் பகர் சாபமும் உண்டு; அதனுல், எதிரே படுமே இவன் வெம் கதையால் அவன், ஏ.]

**விளக்கம்:-** முடியாத - முடிவில்லாத. காண், என்ற முற்றை தேற்றப் பொருளதான இடைச் சொல்லாகக் கொள்க. மகிபாலர் திருந்து அவை-அரசர்கள் கூடியிருந்த அழகிய சபை. உரையா-உரைத்த. நனி ஓதி - மிகுதியாக (வீமன்) ஓதியுள்ளதால். இகல்வார் - (இருவரும்) பகையோடு பொருவார். சிலையின் குரு - வில் தொழில் தேர்ச்சியுடையவனும், பராசர முனிவனது மாணுக்கனும் ஆன மைத்திரேய முனிவன். படுமே - மடிதல் நிச்சயமானதே. "இளமை தொட்டே துரியோதனனும் வீமனும் தீராப் பகைவராயினர். திரௌபதியை ராஜ சபையில் மான பங்கம்

செய்த பொழுது, வீமன் உரைத்த தவருத வஞ்சினம் உளது. மைத்திரேய முனிவனது சாபம் உளது. திரௌபதி கூறிய சாபமும் உளது. ஆதலால், இவன் வீமன் கதையால் அடிபட்டு மாளல் நிகழ்ந்தே தீரும்,'' என்று கண்ணன் கூறினுன், என்பதாம்.

பாண்டவர் காமிய வனத்தில் வாசம் செய்த பொழுது, மைத்திரேயர் துரியோதனனிடம் சென்று, பாண்டவரோடு சந்து படக் கூடி வாழும்படி கூறிய பொழுது, அவன் இவர் வார்த்தை மதியாததோடு தொடை தட்டி இகழவும் செய்ய, முனிவர் வெகுண்டு, ''வீமனது கதையின் அடியால் தொடை முறிந்து சாவாய்,'' என்று சபித்தார், என்பது வரலாறு.

வேறு

**195.** **வெஞ்சிலை விதுர னவனு நீவிரு**
**மிஞ்சிய புனல்கள் படிய வேகினிர்**
**பஞ்சவர் களோடு வயிரி யாயொரு**
**பண்பற வினைசெய் சமர பூமியில்**
**வஞ்சனை வழியி லொழிய நேர்பட**
**வன்பொடு மறமு மறம தாம்வகை**
**எஞ்சிய பதினெண் வகைகொ ளுளினு**
**மின்றமர் பொருத துரக கேதுவே.**

[வெம் சிலை விதுரனவனும் நீவிரும் மிஞ்சிய புனல்கள் படிய ஏகினிர்; பஞ்சவர்களோடு வயிரி ஆய், ஒரு பண்பு அற வினை செய் சமர பூமியில், வஞ்சனை வழியில் ஒழிய தேர்பட வன்பொடு, மறமும் அறமது ஆம் வகை, எஞ்சிய பதினெண்வகை கொள் நாளினும் இன்று அமர் பொருதது உரக கேது, ஏ.]

**விளக்கம்:-** மிஞ்சிய புனல் - சிறந்த புண்ணிய தீர்த்தம். வயிரி - தீராப் பகைவன். பண்புஅற - பெருமை அல்லது தகுதி இல்லாமல். மறம் அறமது ஆம்படி - பராக்கிரமம் அறவழி அமையும்படி. எஞ்சிய பதினெண் வகை கொள் நாள் - கழிந்த பதினெட்டு நாள். ''விதுரனும் நீங்களும் தீர்த்த யாத்திரை செய்யச் சென்றீர்கள். பாண்டவரோடு பகை கொண்டவனுய்ப் பண்பு சிறிதும் இல்லாமல் உரககேது (துரியோதனன்) போர்க் களத்தில் வஞ்சனை வழியைத் தொடர்தல் அல்லாமல், நேர்மை பொருந்த மறமும் அறம் ஆகும்படி கழிந்த பதினெட்டு நாள்களிலும் போர் செய்தது இல்லை,-என்று கண்ணன் கூறினுன், என்பதாம்.

உரக.கேதுவே, என்பதிலுள்ள ஏகாரத்தை, இன்றே, என்று கூட்டி, அவன் நேர்மையாகப் போர் செய்தது, இப்போதுதான், என்றும் பொருள் கொள்ளலாம். இன்றும், வீமன் தனது உயிர் நிலையை உண்மையாய் உரைக்க, இவன் மாற்றிக் கூறினனாதலால், இன்று, என்பதை எதிர்மறை ஒன்றன்பால் குறிப்பு வினையாகக் கொள்ளலே சிறக்கும்.

வேறு

196. வெற்றி புனைபல பத்ர ராமனும்
மெய்த்து ணைவனிவை சொற்ற காலையின்
மற்றை யநுசனொ டுற்ற நீள்களம்
வட்ட மிடவொரி மைப்பி னேகினன்
அற்றை யயலம ரிற்சு யோதனு
னற்ப வுயிர்நிலை நிற்ப நீடுடல்
முற்று முகுகுரு திக்கண் மூழ்குற
மொய்த்த கழுகினி ழற்கண் மேவினன்.

[வெற்றி புனை பலபத்ர ராமனும் மெய் துணைவன் இவை சொற்ற காலையில், மற்றை அநுசனொடு உற்ற நீள்களம் வட்டம் இட ஓர் இமைப்பின் ஏகினன்; அற்றை அடல் அமரில் சுயோதனன் அற்பம் உயிர் நிலை நிற்ப, நீடு உடல் முற்றும் உகு குருதிக் கண் மூழ்குற, மொய்த்த கழுகின் நிழற்கண் மேவினன்.]

**விளக்கம்:-** மெய்த் துணைவன் - உண்மை அன்புடைய கண்ணன். மற்றை அநுசன் - சாத்தகி. உற்ற நீள்களம் - பொருந்திய நீண்ட போர்க் களமாகிய சமந்த பஞ்சகம். வட்டம் இட—(அந்தப் புண்ணிய பூமியை) வலம்வர, அதாவது பிரதக்ஷிணம் செய்ய. அற்பம் உயிர் நிலை நிற்ப - உயிர் (உடலில்) சிறிதே தங்கியிருக்க, அதாவது குற்றுயிராய்க் கிடக்க. கண்ணன் கூறியன கேட்டுப் பலராமன் சாத்தகியோடு சமந்த பஞ்சகத்தைப் பிரதக்ஷிணம் செய்ய விரைந்து செல்ல, துரியோதனன், உடல் குருதிப் பெருக்கில் முழுகும்படி, அங்கே வந்து சூழ்ந்த கழுகுக் கூட்டத்தின் நிழலில் குற்றுயிராய்க் கிடந்தான்,—என்பதாம்.

வேறு

பாண்டவர் பாசறை சேரல்

197. மைந்தி னூற்பெரி யோனெனும் வாயுவின்
மைந்த னூற்றுரி யோதனன் மாமுடி
சிந்த வார்த்தனர் நீடிசை காவலர்
சிந்தி வாழ்த்தினர் பூமழை தேவர்கள்.

முந்த வோட்டிய தேரொடு காய்கதிர்
மொய்ம்பன் மேல்கடன் மூழ்கினன் மாலைகொள்
அந்தி வாய்த்தம பாசறை மேவின
ரைந்து பார்த்திவ ரானவர் தாமுமே.

[மைந்தினால் பெரியோன் எனும் வாயுவின் மைந்தனால் துரியோதனன் மாமுடி சிந்த ஆர்த்தனர் நீள் திசை காவலர்; சிந்தி வாழ்த்தினர் பூ மழை தேவர்கள்; முந்த ஓட்டிய தேரொடு காய் கதிர் மொய்ம்பன் மேல் கடல் மூழ்கினன்; மாலை கொள் அந்திவாய் தம பாசறை மேவினர் ஐந்து பார்த்திவர் ஆனவர் தாமும், ஏ.]

**விளக்கம்:-** மைந்து - வலிமை. சிந்த – சிதைய. நீள் திசை காவலர் - திக் பாலகர். (பூமழை) சிந்தி - சொரிந்து. முந்து ஓட்டிய தேர் - முந்தும்படி (விரைவாக) ஓட்டப்படும் தேர். காய் கதிர் மொய்ம்பன் - சூரியன். மாலை கொள் அந்தி - இருள் கொண்ட அந்திப் பொழுது, (மாலை—இருள்). வீமனால், துரியோதனன் முடி சிதைந்தது கண்டு திக்பாலகர்கள், மகிழ்ந்து ஆரவாரம் செய்தனர்; தேவர்கள் மலர் மழை சொரிந்து வாழ்த்தினர். சூரியன் அஸ்தமிக்க, இருள் கொண்ட அந்தியில் பாண்டவரும் பாசறை அடைந்தனர், என்பதாம்.

வேறு

கண்ணன் பாண்டவர்களை வேறிடம்
அழைத்துச் செல்லல்

198. மிடன்மிஞ்சு மேலவர் வானிடை போதர
வினைவென்ற காவலர் பாசறை சேருதல்
கடனன்றெ ஞமுனி மாமகன் வாள்வலி
கருதுந்த னீர்மையை வேறறி யாவகை
அடல்கொண்ட சேனையெ லாமவண் வாழ்வுற
வவரைந்து வீரரு மேவர வேயொரு
புடைதங்கு கானிடை போயின ஞனனி
பொழில்கொண்டல் போறிரு மேனிமு ராரியே.

[மிடல் மிஞ்சு மேவலர் வானிடை போதர, வினை வென்ற காவலர் பாசறை சேருதல் கடன் அன்று எனு, முனி மாமகன் வாள் வலி கருதும் தன் நீர்மையை வேறு அறியா வகை, அடல் கொண்ட சேனை எலாம் அவண் வாழ்வு உற, அவர் ஐந்து வீரருமே வர, புடை தங்கு கானிடை போயினன், (ஆல்) நனி பொழில் கொண்டல் போல் திருமேனி முராரி, ஏ ]

**விளக்கம்:-** மிகுதியாகப் பொழிகின்ற நீர் கொண்ட மேகம் போன்ற திருமேனியை உடைய கண்ணபிரான், வலிமிகுந்த பகைவரை வானுலகம் செல்லும்படி வென்ற அரசர்கள், (அன்றைய தினம்) பாசறையில் தங்குதல் முறையன்று, என்று சொல்லி, துரோண குமாரனது வாளின் வலிமையைக் கருதி, (இனி நிகழப் போவதைத் தான் அறிந்த) தன்மையைப் பிறர் அறியாதபடி காத்து, வெற்றி கொண்ட சேனை பாசறை தங்கி யிருக்க, அந்தப் பாண்டவர் ஐவர் மாத்திரம் தன்னைத் தொடரப் பக்கத்திலே உள்ள ஒரு கானிடை சென்றான், — என்பது பொருள். ஆல்; அசை. அசுவத்தாமனது வாள், சிவபெருமான் அளித்த வாளாதலால், அது விலக்கரிய வலியது ஆகும்

வேறு

**199.** **ஆன கமலமலர் வாவியிடை யேமுழுகி**
**யாவி யுதவுமறை யோகபர னாகிமொழி**
**மான கவசவர ராசதுரி யோதனனை**
**வாயு குமரன்முதிர் போரிலெதிர் வீழும்வகை**
**தான கரடகரி மாவையரி மாபொருத**
**தாய மெனவுழறி னானெனுமுன் வேதமுனி**
**ஞான சரிதகுரு வாகியது ரோணன்மக**
**னாடு களமணுகி னானொருவி நாழிகையில்.**

[ஆன கமலம் மலர் வாவியிடை முழுகி ஆவி உதவு மறை யோக பரன் ஆகி மொழி, மான கவச வரராச துரியோதனனை வாயு குமரன் முதிர் போரில் எதிர் வீழும் வகை, தான கரடகரிமாவை அரிமா பொருத தாயம் என உழறினான் எனும் முன், வேதம் முனி ஞான சரித குரு ஆகிய துரோணன் மகன் நாடு களம் அணுகினான், ஒரு விநாழிகையில்.]

**விளக்கம்:-** ஆன - அழகியதான. வாவி - தடாகம். யோகபரன் - யோகத்தில் ஆழ்ந்தவன். மான கவச வர ராசன் - மானத்தைக் கவசமாகக் கொண்ட சிறந்த அரசன். தான கரடகரிமா - மத நீரைக் கொண்ட கன்னங்களை உடைய யானை. வேதமுனி ஞான சரித குரு - வேதவித்தகனும், தத்துவ ஞானத்தோடு ஒழுக்கமுடைய வாழ்க்கையை உடைய வில் குரு (துரோணன்).

அழகிய தாமரைகள் மலரப்பெற்ற குளத்தில் முழுகி யோக பரனாய், அழிந்த உயிரைத் தரும் சஞ்சீவி மந்திரத்தை ஜபித்த துரியோதனனை, கடுமை முதிர்ந்த போரில் தன் எதிரே விழும்படி,

யானையைச் சிங்கம் எதிர்த்த விதம் போல, வீமன் கலக்கினான், என்று சொல்லக் கேட்டு, அசுவத்தாமன், ஒரு விநாழியில் களம் வந்தான்,—என்பதாம். உழறினான்—(உழற்றினான்) பிறவினைப் பொருளதான தன் வினை. நாடு களம் - கண்ணனால் ஆராய்ந்து சொல்லப்பட்ட சிறந்த இடமாகிய சியமந்த பஞ்சகம்.

வேறு

**200.** உரகது வசனயர் கின்ற வாவியின்
உணர்வொடு துயில்வது கண்டு பேருடல்
கரதல மலர்மிசை கொண்டு வார்புனல்
கலுழ்தரு விழியின னண்பி னாலமர்
பொருகள னிடைதன தந்தை வீடிய
பொழுதினு மனமிக நொந்து ளானுயிர்
சுரர்களு முருகவி ரங்கி னான்வரி
நெடுஞ்சிலை விசயது ரங்க தாமனே.

[உரகதுவசன் அயர்கின்ற ஆவியின் உணர்வொடு துயில்வது கண்டு, பேர் உடல் கரதலம் மலர்மிசை கொண்டு வார்புனல் கலுழ்தரு விழியினன் நண்பினால், அமர் பொருகளனிடை தன தந்தை வீடிய பொழுதினும் மனம் மிக நொந்துளான், உயிர் சுரர் களும் உருக இரங்கினான், வரி நெடுஞ்சிலை விசய துரங்கதாமன், ஏ.]

**விளக்கம்:-** கட்டமைந்த நெடிய வில்லின் தொழிலில் வெற்றியுடை துரங்கதாமன் (அசுவத்தாமன்) பாம்புக் கொடியை உடையவனான துரியோதனன் அழிகின்ற ஆவியுடனே, மூர்ச்சித்துக் கிடப்பதைக் கண்டு, அவனது பெரிய உடலைத் தனது மலர்க் கரத்தால் தாங்கிக் கொண்டு, மிகுதியான நீரைப் பெருக்குகின்ற கண்களை உடையவனாய், அவன்பாலுள்ள நட்பினால், போர்க் களத்தில் தன் தந்தை இறந்த பொழுது எய்திய துயரத்தினும் இப்பொழுது அதிகமான துயரத்துடன் வருந்தியவனாய், வானவரும் (தன்துயரங்கண்டு) உயிர் உருகும்படி, மிக இரங்கினான்,—என்பது பொருள்.

வேறு

**201.** முனைத்தலைய ழிந்துடல் சோரவும் யான்வினை
முடிப்பனெனு நெஞ்சுடை யான்வய வீரனை
அணைத்துல கினுங்குரு வானச ராசனன்
அளித்தமுனி யன்புற மார்பு தழீஇ னன்

நினைத்தநினை வின்படி யேமிகு போர்செய்து
நினக்கவனி தந்திட நீதலை நாளினில்
எனைத்தனிதெ ளிந்திலை யாதவன் மாயையின்
எனப்பரிவு கொண்டுசில் வாய்மைகள் கூறியே.

[முனைத்தலை அழிந்து உடல் சோரவும், யான் வினை முடிப்பன் எனும் நெஞ்சு உடை வாள்வய வீரனை, அனைத்து உலகினும் குரு ஆன சராசனன் அளித்த முனி அன்பு உற மார்பு தழீஇனன், நினைத்த நினைவின்படியே மிகு போர் செய்து நினக்கு அவனி தந்திட நீ தலைநாளினில் எனை தனி தெளிந்திலை யாதவன் மாயையின் என, பரிவு கொண்டு சில் வாய்மைகள் கூறி, ஏ.]

**விளக்கம்:–** "போர்க்களத்தில் உடல் சிதைந்து (பாண்டவர்) சோரவும், நான் (அவர்களை வெல்வதாகிய) வினைமுடிப்பேன்" என்று எண்ணுகின்ற மனத்தையுடைய வாள் வலிமையுடைய வீரனான துரியோதனனை, எல்லா உலகங்களிலும் வில் குரு என்ற புகழ்பெற்ற வில் தொழிலில் வல்லவனான துரோணன் அளித்த முனி (அசுவத்தாமன்), அன்போடு (துரியோதனனை) அணைத்துக் கொண்டவனாய், நீ நினைத்தபடியே, பெரும் போர் செய்து உனக்குப் பூமிமுழுவதையும் கொடுக்க நீ தலைநாளில் (அதாவது போர் ஆரம்ப காலத்தில்) கண்ணன் செய்த மாயையினால் என்னை நன்றாக அறிந்து கொண்டாய் இல்லை, (அதாவது நம்பினாய் இல்லை), என்று சில வார்த்தைகள் கூறி, –(தொடரும்) என்பது பொருள். சராசனம்-(சர ஆசனம்) அம்பு தொடுத்தற்கு இடம்; சராசனன்-அத்தொழிலில் வல்லமை உடையவன்.

என்னைச் சேனாதிபதியாக்கியிருந்தால், பாண்டவரை அழித்து இந்தப் பூமியை உனக்கு அளித்திருப்பேன்; கண்ணன் செய்த மாயையினால், அப்பதவியைத் தனியே எனக்கு அளிக்க மனங் கொண்டாயில்லை, என்ற கருத்தில், "என்னைத்தனி தெளிந்திலை", என்றான், என்க.

வேறு

202. அருளுற வழக்கழி வுறுதோர் மாற்றமும்
அறனுட னழுக்கற வணுகுரு வேற்றமும்
இருநில மதித்திட வினிதுகோ லோச்சுதல்
இயல்புநி ருபர்க்கெனு முறைமையோ பார்த்திலை
நரைகெழு முடித்தலை யென்பிதா மீப்படு
நதிமகன் முறித்தவில் விதுரனே போற்பல
குரவரு முரைத்தசொ லுறுதிநீ கேட்டிலை
குருமர பினுக்கொரு திலகமா மூர்த்தியே,

[அருள் உற வழக்கு அழிவு உருதது ஓர் மாற்றமும் அறனுடன் அழுக்கு அற அணுகுரு ஏற்றமும் இரு நிலம் மதித்திட இனிது கோல் ஓச்சுதல் இயல்பு நிருபர்க்கு எனும் முறைமை பார்த்திலே; நரை கெழு முடி தலே என் பிதா, மீப்படு நதிமகன், முறித்த வில் விதுரனே போல் பல குரவரும் உரைத்த சொல் உறுதி நீ கேட்டிலே குரு மரபினுக்கு ஒரு திலகம் ஆம் மூர்த்தியே.]

**விளக்கம்:-** குருகுலத்திற்குச் சிறந்த திலகம் போன்ற தலேவனே, அருள் பொருந்த அரச நீதி கெடாத, சிறந்த (தவருத) சொல்லேயும், பொருமை அறவே (ஒரு சிறிதும்) அணுகாத மேன்மையையும் இரு நிலத்து அரசர்கள் பாராட்டும்படி, இனிதே செங்கோல் செலுத்தல் அரசர்க்குரிய இயல்பு என்ற ஒழுங்கையோ நோக்கினுய் இல்லே; நரை பொருந்திய முடியை உடைய என் தந்தையும், கங்கை மகனும், வில்லொடித்த விதுரனும் போன்ற பல பெரியோர்களும் சொன்ன நன்மை பயக்கும் வார்த்தைகளேக் கேட்டு ஒழுகினுயில்லே,—என்று அசுவத்தாமன், கூறினுன், என்பது பொருள்.

எல்லா உயிர்களினிடத்தும் வேறுபாடின்றி நடக்கும் கருணே. அருர். வழங்குவது, வழக்கு, எனவே அரச நீதி.

வேறு

203. இடியி டித்திடு சிகரிக ளாமென
எறிம ருச்சுதன் முதலிக லோர்தலே
துடிது டித்திட வவரவர் சேனேகள்
துணிப டப்பொரு தெழுபுவி நீபெற
விடிவ தற்குமுன் வருகுவன் யானென
விடைகொ டுத்தன னரவவி லோதனன்
முடியு டைத்தன துடையசி காமணி
முனிம கற்கினி தருள்செய்து மீளவே.

[இடி இடித்திடு சிகரிகள் ஆம் என, எறி மருச்சுதன் முதல் இகலோர் தலே துடிதுடித்திட, அவர் அவர் சேனேகள் துணி பட பொருது, எழு புவி நீ பெற விடிவதற்கு முன் வருகுவன், யான் என, விடை கொடுத்தனன் அரவம் விலோதனன், முடி உடைதனது உடைய சிகாமணி முனிமகற்கு இனிது அருள் செய்து மீள, ஏ.]

**விளக்கம்:-** "இடி இடிக்கப் பெற்ற மலேகள் போல, (கதையால்) மோதுகின்ற மருத்சுதன் [வாயு குமாரனுன] வீமன் முதலிய பகைவர் தலேகளேத் துடித்து விழும்படியும், அவரவர்

களது சேனைகள் துண்டுபடும் படியாகவும், ஏழு தீவுகளைக் கொண்ட இந்த பூமி முழுவதையும் நீ ஆளும்படியாகவும் செய்து பொழுது விடிவதற்குமுன் நான் வருவேன்'', என்று அசுவத்தாமன் கூற, அரவ விலோதனன் (பாம்பைக் கொண்ட கொடியை உடைய துரியோதனன்), தனது ஆன, கிரீடத்தில் உள்ள சிகாமணியை முனிமகற்கு (அசுவத்தாமனுக்கு) மகிழ்ச்சியோடு கொடுத்து, மறுபடியும் வரும்படி விடை கொடுத்தான்,—என்பது பொருள்.

வேறு

**204.** **பூசுரர்பெ ருந்தகைப ரித்தா மாவிரியல்**
**போனகிரு பன்கிருத வன்மன் மூவருமுன்**
**வாசவன்வி ரிஞ்சனுமை பாக னிவர்முதல**
**வானவர்வ ழங்கியவி தப்போர் வாளிகளின்**
**ஆசுகன்ம கன்றனையு மப்போ தேதுணைவ**
**ரானவரை யுந்தலைது ணிப்பா னுடியவர்**
**பாசறைபு குந்தனர்ப ரித்தே ரியானையொடு**
**பாரதமு டிந்தபதி னெட்டா நாளிரவே.**

[பூசுரர் பெருந்தகை பரித்தாமா, இரியல் போன கிருபன், கிருதவன்மன் மூவரும், முன் வாசவன், விரிஞ்சன், உமைபாகன் (என்ற) இவர் முதல் வானவர் வழங்கிய விதம் போர் வாளிகளின், ஆசுகன் மகன்தனையும், அப்போதே துணைவரானவரையும் தலை துணிப்பான் நாடியவர், பாசறை புகுத்தனர், பரி தேர் யானை யொடு பாரதம் முடிந்த பதினெட்டாம் நாள் இரவு, ஏ.]

**விளக்கம்:-** அசுவத்தாமன், முன்னே போரில் தோற்றுப் புறங் கொடுத்து ஓடிய கிருபன், கிருதவர்மன், ஆகிய மூவரும், முன்பு, இந்திரன், பிரும்மா, சிவன் என்ற இவர் முதலிய தேவர்களும் அளித்த பலவகைப்பட்ட ஆயுதங்களால், ஆசுகன் (வாயு) மகனான வீமனையும், அவனது சகோதரர் நால்வரையும் அப் போதே தலை துணித்து அழிக்க எண்ணி, குதிரை தேர் யானை களின் அழிவோடு பாரதப் போர் முடிந்த பதினெட்டாம் நாள் இரவு, பாண்டவரின் பாசறை புகுந்தனர், என்பது பொருள்.

பாண்டவர் பக்கத்திலும் சதுரங்க சேனைகளும் அழிய வீரர் சிலர் மாத்திரமே மிஞ்சியிருந்தனர், என்பது தோன்ற, ''பரித்தேர் யானையொடு பாரதம் முடிந்த பதினெட்டாம் நாள்,'' என்றார், என்க.

சல்லிய பருவம் முற்றும்.

# 10. சௌப்திக பருவம்

சுப்தி (ஸுப்தி), என்றால் தூக்கம். தூங்குகையில் நேர்ந்த நிகழ்ச்சி சௌப்திகம். பாண்டவரைச் சேர்ந்தார் படைவீட்டில் தூங்கிக் கொண்டிருக்கையில் அசுவத்தாமன் முதலியோர், அவர்களைக் கொன்றழித்ததை விஷயமாகக் கொண்டது இப்பருவம், இது நிகழ்ந்தபின், கண்ணன் தருமனுக்கு ராஜ்யத்தை அளித்து வீட்டுத் துவாரகை திரும்புதலோடு இப்பருவம் முற்றுகின்றது.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

அசுவத்தாமன் முதலியோர் பாண்டவர்
பாசறை அடைதல்

1. **வேலமர் தடக்கை வீரரிப் பாடி**
**வீடுசென் றணைதலும் புறத்தோர்**
**ஆலமர் சினையிற் பல்பெருங் காகம்**
**அரும்பக லழிந்தகூ கையினல்**
**சாலவு மிடருற் றலமரக் கண்டு**
**தம்மிலே முகமுக நோக்கிக்**
**காலமு மிடனு மறிந்தமர் செகுத்தல்**
**கடனெனக் கருதின ரன்றே.**

[வேல் அமர் தட கை வீரர் இ பாடி வீடு சென்று அணைதலும், புறத்து ஓர் ஆல் அமர் சினையில் பல் பெரு காகம், அரு பகல் அழித்த கூகையினல் சாலவும் இடர் உற்று அலமரக் கண்டு, தம்மிலே முகம் முகம் நோக்கி, காலமும் இடனும் அறிந்து அமர் செகுத்தல் கடன், என கருதினர், அன்றே.]

**விளக்கம் :-** அசுவத்தாமன் முதலிய வீரர்கள் (இரவில்) பாண்டவர் படைவீடு சேர்ந்ததும், அங்கே வெளிப்புறத்தில் இருந்த ஆலமரக் கிளையில் காகங்கள், (பகலில் தங்களால்) துன்புறுத்தப்பட்ட கோட்டானல் துன்புறுவது கண்டு, அவர்கள் தம்மில் ஒருவர் முகம் ஒருவர் நோக்கிக் காலமும் இடமும் நோக்கி அமரில் பகைவரை அழித்தல் முறைமை ஆகும், என்று அறிந்து கொண்டார்கள் என்பது பொருள். கூகை-கோட்டான். கடன்-முறைமை. காக்கையினும் வலியது கூகை. பகலில் அதற்குக் கண் தெரியாமையின், காக்கையால் வலி அழிதல் அதற்கு நேர்

கின்றது. இரவில், காக்கைக்குக் கண் தெரியாததலால் கூகை யால் அது துன்புறுத்தப்படுகின்றது, எனவே, பகை அழிப்பதற்கு, எல்லோரும் தூங்கும் இவ்விரவே, சரியான காலம், என்று அசுவத்தாமன் முதலியோர் துணிந்தனர், என்பதாம்.

## பூதம் ஒன்று இடையிடல்

**2. உரத்துவா ரணங்கண் மதமிகுத் தென்ன**
**ஊக்கமோ டொன்றையு மதியார்**
**புரத்துவா ரத்துப் புகுதலும் வெகுண்டு**
**பொங்கழல் போல்வதோர் பூதம்**
**பரத்துவா சனையு மாதுலன் கிருத**
**வன்மனென் றிவரையு முனைந்து**
**கரத்துவார் சிலையுங் கணைகளு முறித்துக்**
**கடவுதிண் டேர்களுங் கலக்கி.**

[உரத்து வாரணங்கள் மதம் மிகுந்து என்ன ஊக்கமொடு ஒன்றையும் மதியார், புரம் துவாரத்து புகுதலும், வெகுண்டு பொங்கு அழல் போல்வது ஓர் பூதம், பரத்துவாசனையும், மாதுலன், கிருதவன்மன் என்ற இவரையும் முனைந்து, கரத்து வார்சிலையும் கணைகளும் முறித்து, கடவு திண் தேர்களும் கலக்கி,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** புரம்-சேனை தங்கும் இடம். புரத்துவாரம்-படை வீட்டின் வாயில். வலிய யானைகள் மதம் மிகப் பெற்றுற்போல், ஊக்கமோடு, எதையும் லக்ஷியம் செய்யாமல் படை வீட்டின் வாயி லில் நுழைகையில், பொங்கி எரியும் நெருப்பைப்போல்வதான ஒரு பூதம் வெகுண்டு வந்து, அசுவத்தாமன், அவன் மாமனை கிருபன், கிருதவர்மா என்ற மூவரையும் எதிர்த்து, அவர் கைகளில் உள்ள வில்களையும் அம்புகளையும் ஒடித்து, அவர்கள் ஏறி வந்த தேர்களையும் கலக்கி (சிதைத்து), (குளகமாய்த் தொடரும்), —என்பது பொருள்.

**3. முன்புகு விசய முனிமகன் றன்னை**
**முரணெடுந் தோள்களு முரனும்**
**என்புட னிணமுந் தசைகளுஞ் சிந்த**
**இணைக்கருஞ் சிறுகுறுங் கரத்தால்**
**வன்புகை யெழுமா றுள்ளுற மலைந்து**
**மற்றுளோர் கொற்றமு மழித்துப்**
**பின்புக லறுமா துரந்ததப் பூதம்**
**பெருமையாம் பேசுறுந் தகைத்தோ.**

[முன் புகு விசயம் முனி மகன் தன்னை முரண் நெடு தோள்களும் உரனும் என்புடன் நிணமும் தசைகளும் சிந்த, இணை கரு சிறு குறு கரத்தால், வல் புகை எழும் ஆறு உள்உற மலைத்து, மற்று உளோர் கொற்றமும் அழித்து, பின் புகல் அறும் ஆ துரந்தது; அ பூதம் பெருமை யாம் பேசுறும் தகைத்தோ !]

**விளக்கம்:-** (படை வீட்டில்) முதலில் புகலுற்ற அசுவத்தாமனை, (அவனது) வலிய நீண்ட தோள்களும் மார்பும் எலும்போடு கொழுப்பையும் சதையையும் சிந்தும்படி, கரிய சிறிய குட்டையான (தனது) இரு கரங்களாலும், பகைமிக எழும்படி ஊக்கத்தோடு எதிர்த்து, மற்ற இருவர்களின் வலியை அழித்து, அதன்பின், உள்ளே செல்லுதல் ஒழியும்படி, அவர்களைத் துரத்தியது; அந்தப் பூதத்தின் பெருமை நாம் பேசக்கூடிய தன்மையது ஆமோ!—என்பது பொருள்.

அசுவத்தாமன் சிந்தித்தல்

**4. மாதவன் விதியா லகன்பெரும் பாடி**
**மாநகர் காவல்கொண் டுற்ற**
**பூதமே பொருது துரத்தலின் மீண்டு**
**போய்வட தருநிழற் புகுந்து**
**பேதுற வெருவோ டிருந்தனர் கரிய**
**பெரியவக் கங்குலிற் றுரோண**
**சாதனன் மதலை யென்செய்து மென்னத்**
**தன்மனத் தெத்தனை நினைந்தான்.**

[மாதவன் பணியால் அகல் பெரு பாடி மாநகர் காவல் கொண்டு உற்ற பூதமே பொருது துரத்தலின், மீண்டு போய் வட தரு நிழல் புகுந்து, பேதுஉற வெருவோடு இருந்தனர், கரிய பெரிய அ கங்குலில், துரோணசாதனன் மதலை, என்செய்தும், என்ன தன் மனத்து எத்தனை நினைந்தான்!]

**விளக்கம் :-** வடதரு-ஆலமரம். பேதுறல்-கலங்கல். சாதநம்-பயிற்சி. வித்தைப் பயிற்சி செய்விப்பவன் ஆதலால், ஆசிரியன், சாதனன் ஆகின்றான். துரோண சாதனன்-துரோணாசாரியன். கண்ணனது ஏவலால் பாடி வீடு காக்கும் பூதம், உள்ளே புகவிடாமல் துரத்த, வீரர் மூவரும் ஆலமரத்தடி சேர்ந்து மனக்கலக்கத்தோடும் அச்சத்தோடும் இருந்தனர்; (அந்நிலையில்) அசுவத்தாமன் 'என்ன செய்வது?' என்று சிந்திக்கலானான்,—என்பதாம்.

5. எஞ்சின நிருப னுயிரினை நிறுத்தி
யிவ்விர வகல்வதன் முன்னர்
வெஞ்சின முறச்சென் றுன்பகை முடித்து
மீளுது மெனப்பல படியும்
வஞ்சின முரைத்து வந்தன மின்னம்
வன்குறட் பாரிடந் தன்னால்
துஞ்சின மெனினு மமையுமென் றெண்ணந்
துணிந்தனன் றுயிலறு கண்ணன்.

[எஞ்சின நிருபன் உயிரினை நிறுத்தி இ இரவு அகல்வதன் முன்னர், வெம் சினம் உற சென்று உன் பகை முடித்து மீளுதும் என பல படியும் வஞ்சினம் உரைத்து வந்தனம்; இன்னம் வல் குறள் பாரிடம் தன்னால் துஞ்சினம் எனினும் அமையும், என்று எண்ணம் துணிந்தனன் துயில் அறு கண்ணன்.]

**விளக்கம்:–** இவ்விரவு அகலுமுன் பாசறைசென்று உன் பகை வரை அழித்து மீள்வோம், என்று பல சபத மொழிகளைக் கூறி, வலிஒடுங்கிய (துரியோதனனது) உயிரை அழியாது நிற்கச் செய்து வந்தோம்; (இந்த நிலையில்) மறுப்படியும் பாசறையுள்ளே புக முயன்று, வலிய குறுகிய வடிவங் கொண்ட பூதத்தால், இறத்தல் நேரினும், அதுவே தக்கதாகும், என்று, தூக்கம் ஒழிந்த கண்ணனை அசுவத்தாமன், எண்ணினான், என்பதாம். கூறிய வஞ்சினத்தை நிறைவேற்றுமல் வாழ்தலினும், இறத்தலே அமையும், என்று அசுவத்தாமன், எண்ணினான், என்க. பாரிடம்-பூதம்.

சிவபெருமான் ஆயுதம் அளித்தல்

6. எண்ணிய கரும முடியினு முடியா
தொழியினு மீசனைத் தொழுதல்
புண்ணிய மெனுமா றுன்னியாங் கொருதண்
பொய்கையிற் புனல்படிந் தேறிப்
பண்ணிய லிசையின் படிவமாந் தெரிவை
பங்கனைப் பற்பல மலர்கொண்(டு)
அண்ணிய கருத்தி லிருத்தியஞ் செழுத்தால்
ஆகமப் படியடி பணிந்தான்.

[எண்ணிய கருமம் முடியினும் முடியாது ஒழியினும், ஈசனை தொழுதல் புண்ணியம் எனும் ஆறு உன்னி ஆங்கு ஒரு தண் பொய்கையில் புனல் படிந்து ஏறி, பண் இயல் இசையின் படிவம் ஆம் தெரிவை பங்கனை பல்பல மலர் கொண்டு, அண்ணிய கருத்தில் இருத்தி அஞ்சு எழுத்தால் ஆகமப்படி அடி பணிந்தான்.]

**விளக்கம்:-** பண் இயல் இசையின் படிவம் ஆம் தெரிவை பங்கன்-சுவரங்களால் உருவம் கொண்ட இசையின் வடிவமாகிய உமையை இடப்புறம் கொண்டவனுன சிவபெருமான். எண்ணிய கருமம் முடியினும் முடியாது ஒழியினும், ஈசனைத் தொழுதல் புண்ணியம் என்று எண்ணி, அங்கே இருந்த ஒரு குளத்தில் நீராடிக் கரை ஏறிச் சிவபிரானை மனத்தில் இருத்தி (தியானித்து) பற்பல மலர் கொண்டு அர்ச்சித்து, பஞ்சாக்ஷரத்தை ஜபித்துச் சைவாகமப்படி, அப்பிரானின் திருவடி தொழுதான்,—என்பது பொருள்.

**7. அன்றவன் மறையின் முறையினுற் புரிந்த**
**வருச்சனை தனையுவந் தருளி**
**நின்றனன் விழியு மிதயமுங் களிப்ப**
**நீறுடை யேறுடைக் கடவுள்**
**வன்றிறன் முனிவன் மதலையும் விதலை**
**மாறிமா றடர்ப்பதோர் படைநல்(கு)**
**என்றன னென்ற வுரைமுடி வதன்முன்**
**ஏதியொன் றீசனு மீந்தான்.**

[அன்று அவன் மறையின் முறையினுல் புரிந்த அருச்சனை தனை உவந்து அருளி, நின்றனன் விழியும் இதயமும் களிப்ப, நீறு உடை ஏறு உடை கடவுள்; வல்திறல் முனிவன் மதலையும் விதலை மாறி, மாறு அடர்ப்பது ஓர் படைநல்கு, என்றனன்; என்ற உரை முடிவதன் முன் ஏதி ஒன்று ஈசனும் ஈந்தனன்.]

**விளக்கம்:-** அப்பொழுது அசுவத்தாமன் வேத முறைப்படி செய்த பூஜையை, திருநீற்றைத் திருமேனியில் உடையவனும், ரிஷபத்தை வாகனமாக உடையவனுமான ஈசன், உகப்போடு ஏற்றருளி, (அவன்) கண்களும் மனமும் களிக்கும்படி முன் தோன்றி நின்ருன்; வல்திறல் முனிவன் (துரோணன்) மதலையும் (அசுவத்தாமனும்) மனக்கலக்கம் ஒழியப்பெற்று, "மாறு (பகைவர்களை) அழிப்பதற்கு ஓர் ஆயுதம் கொடுத்தருள்வாய்", என்று பிரார்த்தித்தான்; இவ்வாறு அவன் கூறி முடிக்குமுன், (அதாவது கூறினவுடனே) ஈசனும் ஓர் ஆயுதத்தைக் கொடுத்தருளினன்,— என்பது பொருள். விதலை-மனக்கலக்கம். ஏதி-ஆயுதம். மாறு, பண்பாகு பெயராய்ப் பகைவரை உணர்த்திற்று.

## பூதம் தோற்று அகலல்

**8. பாதிமெய் நீல மாகிய பவளப்**
**பருப்பதம் விருப்புட னளித்த**
**ஏதிபெற் றுவகை யுடனிம்மை பளவின்**
**இருந்தவவ் வீரருந் தானும்**

வீதிகொள் பாடி வீடுறப் பூதம்
மீளவந் தடர்த்திவன் கரத்தில்
ஆதிநல் கியவெம் படையினு லஞ்சி
யாவிகொண் டோடிய தன்றே.

[பாதி மெய் நீலம் ஆகிய பவளம் பொருப்பதும் விருப்புடன் அளித்த ஏதி பெற்று, உவகையுடன் இமைப்பு அளவின், இருந்த அ வீரரும் தானும் வீதிகொள் பாடிவீடு உற, பூதம் மீள வந்து அடர்த்து, இவன் கரத்தில் ஆதி நல்கிய வெம் படையினுல் அஞ்சி ஆவிகொண்டு ஓடியது, அன்றே ]

**விளக்கம்:-** வடிவத்தில் பாதி நீலநிறம் அடைந்துள்ள பவள மலை போன்ற சிவபிரான் விருப்பத்தோடு அளித்த ஆயுதத்தைப் பெற்று, மகிழ்ச்சியோடு, தனக்காகக் காத்திருக்கும் கிருபன், கிருத வர்மன் என்ற வீரரும் தானும் இமைப்பொழுதில், வீதிகளோடு கூடிய படைவீட்டை மீண்டும் அடைய, அந்தப் பூதம் மீண்டும் வந்து எதிர்த்து, (அசுவத்தாமன்) கையில் (பூத) நாயகனுன சிவ பிரான் அளித்த ஆயுதத்தைக் கண்டு, அஞ்சி, உயிர்பிழைத்து ஓடியது,—என்பது பொருள்.

சிவபிரான் பூதங்களின் தலைவன் ஆதலால், அவனது ஆயுதத்தை அசுவத்தாமன் கையில் கண்டு அஞ்சி அகன்றது, என்க.

அசுவத்தாமன் திட்டத்துய்மனை அழித்தல்

9. பருவர லகற்றி யிருவர்வீ ரரையும்
பாசறை வாயிலி னிறுத்தி
மருவருங் கமல மாலையான் கடப்ப
மாலையா னெனமனங் களித்துப்
பொருவரு முனைக்குக் குரிசிலா யெல்லாப்
போரினும் புறமிடா தடர்த்த
துருபதன் மதலை வரிசிலைத் திட்டத்
துய்மனை மணித்தலை துணித்தான்.

[பருவரல் அகற்றி இருவர் வீரரையும் பாசறை வாயிலில் நிறுத்தி, மருவரும் கமல மாலையான், கடப்பம் மாலையான் என மனம் களித்து, பொருவரு முனைக்கு குரிசில் ஆய், எல்லாப் போரினும் புறம் இடாது அடர்த்த துருபதன் மதலை, வரிசிலை திட்டத்துய்மனை மணி தலை துணித்தான்.]

**விளக்கம்:-** (பூதத்தால் உண்டான) துன்பம் நீக்கி, கிருபன் கிருதவர்மன் என்ற வீரரைப் பாசறையின் வாயிலில் இருக்கச் செய்து, மணம் பொருந்திய தாமரை மாலைக்கு உரியவனான அசுவத்தாமன், கடப்ப மலர் மாலையையுடைய முருகக் கடவுளைப் போல், மனக்களிப்புக் கொண்டு, போர் செய்துவந்த (பாண்டவர்) படைக்குத் தலைவனாய், எல்லாப் போரிலும் பின்னிடாது போர் செய்த துருபதன் புதல்வனான வரிசிலை திட்டத்துய்மனின் அழகிய தலையை, (அவன் தூங்குகையில்) அறுத்தான்,—என்பது பொருள்.

தன் தந்தையைக் கொன்ற திட்டத்துய்மனிடம் பகை கொண்ட அந்தணன், அவன் உறங்குகையில் கொன்று பழி தீர்த்துக் கொண்டான்,—என்பதாம். தாமரை, அந்தணர்க்கு உரிய மாலை. முருகனுக்கு கடப்ப மலர்மாலை அடையாள மாலை யாதலால், அவனைக் கடம்பன், என்றும் அழைப்பர்.

எதிர்த்தாரை அந்தணன் அழித்தல்

**10. கயில்புரி கழற்காற் றந்தையைச் செற்ற**
**காளையைப் பாளயத் திடையே**
**துயில்புரி யமையத் திமைக்குமுன் சென்னி**
**துணித்தனன் சுதனெனக் கலங்கி**
**வெயில்புரி வதன்முன் வல்லிரு ளிடையே**
**வுணர்ந்தவர் வெருவுட னரற்றப்**
**பயில்புரி சிலைக்கைச் சிகண்டியை முதலோர்**
**பலரும்வந் தனர்கள்பாஞ் சாலர்.**

[கயில் புரி கழல் கால் தந்தையை செற்ற காளையை பாளயத்து இடையே, துயில் புரி அமையத்து, இமைக்குமுன் சென்னி துணித்தனன் சுதன், என கலங்கி, வெயில் புரிவதன்முன் வல் இருளிடையே உணர்ந்தவர் வெருவுடன் அரற்ற, பயில் புரி சிலை கை சிகண்டியை முதலோர் பலரும் வந்தனர்கள் பாஞ்சாலர்.]

**விளக்கம்:-** கயில் புரி கழல் - கயில் என்ற உறுப்பையுடைய வீரக்கழல். பாளயம் - படைவீடு. சுதன் - துரோண குமாரனான அசுவத்தாமன். வெயில் புரிவதன் முன் - சூரியன் உதிக்குமுன். உணர்ந்தவர் - துயில் நீங்கிக் கண் விழித்தவர். பயில் புரி சிலைக்கை சிகண்டி - பழகுதல் செய்கின்ற சிலையையுடைய சிகண்டி. நள்ளிரவில், தூக்கம் நீங்கிக் கண் விழித்தவர்கள், அசுவத்தாமன் திட்டத்துய்மனைக் கொன்றது கண்டு, நிலை குலைந்தவராய் அரற்ற, திட்டத்துய்மனது சகோதரனான சிகண்டி முதலிய பாஞ்சாலர் பலரும் அந்தணனை எதிர்த்தார்கள்,—என்பதாம்.

## அசுவத்தாமன் உபபாண்டவரை அழித்தல்

11. உத்தமோ சாவு முதாமனு முதலிட்
டுள்ளவர் யாவரும் பிறரும்
தத்தமோ கையினல் வந்தெதிர் மலைந்தோர்
தலைகளாற் பலமலை யாக்கி
மெத்தமோ கரித்துப் பாரத முடித்த
வீரரைத் தேடிமேல் வெகுளும்
சித்தமோ டெங்குந் திரிந்துளா னவர்தஞ்
சிறுவரை வரையுமுன் சேர்ந்தான்.

[உத்தமோசாவும், உதாமனு முதல் இட்டு உள்ளவர் யாவரும் பிறரும், தத்தம் ஓகையினல் வந்து எதிர் மலைந்தோர் தலைகளால் பல மலை ஆக்கி, மெத்த மோகரித்து, பாரதம் முடித்த வீரரை தேடி, மேல் வெகுளும் சித்தமோடு எங்கும் திரிந்துளான், அவர் தம் சிறுவர் ஐவரையும் முன் சேர்ந்தான்.]

**விளக்கம்:-** உத்தமோசா, உதாமன் முதலாகவுள்ள பாஞ்சாலர் எல்லோரும், மற்ற வீரர்களும் வந்து, தமது ஊக்கத்தோடு போர் செய்தோர் தம் தலைகளால் பல மலைகளை உண்டாக்கி, (அதாவது எதிர்த்தவர்களைக் கொன்று) மிகவும் உக்கிரங்கொண்டு பாரதம் முடித்த பாண்டவர்களைத் தேடிக் கொண்டு மேலும் மேலும் சினம் மிகவும் மனத்தோடு பாசறை எங்கும் சுற்றி வருபவனை அசுவத்தாமன், ஒருபுறம் தூங்கிக் கொண்டிருக்கும் உப பாண்டவர் ஐவரையுங் கண்டு அவர்களை நெருங்கினன், என்பது பொருள்.

பிரதிவிந்தன், சுதசோமன், சுருதகீர்த்தி, சதாநீகன், சுயசேனன் என்பவர், திரௌபதியிடம் பஞ்ச பாண்டவருக்குப் பிறந்தவர். இவரை, உப பாண்டவர், என்பர். இவர்கள் தோற்றத்தில் தந்தையரை ஒத்திருப்பர்.

12. பூதல முழுதுங் கவர்ந்ததந் தையர்கள்
புறத்திடைப் போயதுந் துயின்ற
மாதுலன் முனிவன் மதலைகைப் படையான்
மடிந்திடத் தடிந்தது முணரார்
தாதல ரலங்கற் சமரவாண் முனியைத்
தழலிடை வருபெருந் தையல்
காதலம் புதல்வர் கண்டுயில் புரிவோர்
கனவு கண்டனரெனக் கண்டார்,

[பூதலம் முழுதும் கவர்ந்த தந்தையர்கள் புறத்திடை போயதும், துயின்ற மாதுலன் முனிவன் மதலை கை படையால் மடிந்திட தடிந்ததும் உணரார், தாது அலர் அலங்கல் சமரம் வாள் முனியை, தழலிடை வரு பெருந்தையல் காதல் அம் புதல்வர், கண் துயில் புரிவோர் கனவு கண்டனர் என கண்டார்.]

**விளக்கம்:-** பூதலம் முழுதும்......தடிந்ததும் உணரார் (ஆய்) கண் துயில் புரிவோர் (ஆகிய) தழலிடை வரு பெருந்தையல் (பெற்ற) காதல் அம் புதல்வர் தாது அலர் அலங்கல் சமரம் வாள் முனியை, கனவு கண்டனர் என கண்டார்,—என்பது அன்வயம்.

போரில் பூமி முழுதையும் கைப்பற்றிய தந்தையர் கண்ணனோடு வெளியே சென்றதையும், துயின்ற மாமனை திட்டத்துய்மன் முனிவன் மதலை (அசுவத்தாமன்), கை ஏந்திய ஆயுதத்தால் மடியும்படி தலை துணித்ததையும் அறியாதவர்களாய், துயின்றவர்களான, வேள்வித்தீயினின்று தோன்றிய திரௌபதியின் அன்பிற்குரிய புதல்வர்களான உப பாண்டவர்கள், தாது அலர் மாலை தரித்த போருக்குரிய வாள் ஏந்திய அத்தணனை அசுவத்தாமனைக் கனக்கண்டவர் போல் தூக்கத்தில் கண்டனர், என்பது பொருள்.

**13. கண்டவர் தத்தம் படையெடுப் பதன்முன்**
**காசினி முழுவதும் வென்று**
**கொண்டவ ரிவரென் றெண்ணியே சுடரிற்**
**கொளுத்திய சுடரனை யாரைத்**
**திண்டவர் தமக்குச் சிகாமணி யனையான்**
**சினத்துடன் கலங்கிவண் டேறல்**
**உண்டவர் தமைப்போன் மதத்தினல் வாளா**
**ஒருநொடி யினிற்றலை துணித்தான்.**

**விளக்கம்:-** (கனவில் கண்டது போல்) கண்டவர் தம்தம் படை எடுப்பதன்முன், சுடரில் கொளுத்திய சுடர் அனையாரை, திண் தவர் தமக்கு சிகாமணி அனையான் காசினி முழுவதும் வென்று கொண்டவர் இவர் என்று எண்ணியே, சினத்துடன் கலங்கி வள்தேறல் உண்டவர்தமைப்போல் மதத்தினல் வாளா ஒரு நொடியினில் தலை துணித்தான்,— என்பது அன்வயம்.

தூக்க மயக்கத்தில் அசுவத்தாமனைக் கண்ட உப பாண்டவர் தம் ஆயுதங்களை எடுக்கு முன், வலிய தவத்தினர் தம் சிகாமணி போன்ற அசுவத்தாமன், அவர்களைப் பாண்டவர் என்று மயங்கி, வீணே அழித்திட்டான் என்பதாம். சுடரில் கொளுத்திய சுடர் அனையார்—ஒரு விளக்கில் கொளுத்திய, மற்றொரு விளக்கை

ஒத்தவர், அதாவது உருவத்தில் சிறிதும் வேறுபாடின்றித் தந்தையரைப் போன்ற தோற்றத்தினர். உப பாண்டவர்களைக் கொன்றதால், சபதம் நிறைவேறுததோடு பழியும் அவனைச் சார்ந்ததால், 'வாளா தலை துணித்தான்', என்றார். உபபாண்டவரைப் பாண்டவர் என்று மயங்கியதன் காரணம் சினம். சினமிகுதியால் மதி மயங்கி, முதிர்ந்த கள்ளைக் குடித்தவனைப் போல் மதங்கொண்டு வீணே, அவர்களைக் கொன்று பழிதேடிக் கொண்டான் ஆயினன்.

### சோழன் எதிர்க்க எழுதல்

**14.** **துருபதன் மைந்த ரனைவரும் பஞ்சத்**
**திரௌபதே யருந்துயில் பொழுதில்**
**புரவியந் தாமா நினைவறப் புகுந்து**
**பொன்றுவித் தனனெனப் புலம்ப**
**இரவிடை யமர்மற் றென்னைகொ லென்னு**
**விரவிதன் றிருக்குலத் திறைவன்**
**பெருமையோ டெழுந்தான் பகைவன்மே லவன்முன்**
**பின்னிடப் பொருதிடும் பெரியோன்.**

[துருபதன் மைந்தர் அனைவரும், பஞ்சதிரௌபதேயரும் துயில் பொழுதில் புரவியந்தாமா நினைவு அற புகுந்து பொன்றுவித்தனன் என புலம்ப, இரவிடை அமர் (மற்று) என்னை கொல்? என்னு, இரவி தன் திரு குலத்து இறைவன், பெருமையொடு எழுந்தான் பகைவன்மேல், அவன் முன் பின்னிட பொருதிடும் பெரியோன்.

**விளக்கம்:-** துருபதன் மைந்தரையும் உப பாண்டவர்களையும் அவர்கள் தூங்குகையில், அசுவத்தாமா, நல்ல நினைவு இல்லாமல் படைவீடு புகுத்து அவர்களைக்கொன்றுவிட்டான், என்று, (அங்கே உள்ளோர்) புலம்ப, 'இரவில் என்ன போர்?' என்று சொல்லிக் கொண்டு, அசுவத்தாமன்முன்னே தோல்வி அடையும்படி போர் செய்த பெருமையினனான, சூர்ய குலத்து மன்னனான சோழன், அவன்மேல் போர் செய்ய எழுந்தான், — என்பது பொருள்.

**15.** **பொன்னிநன் னதியு நேரியம் பொருப்பும்**
**புகாரெனு நகரியும் படைத்த**
**சென்னியு மவன்றன் சேனையின் விதமுஞ்**
**சேனைமண் டலீகருஞ் சேர**
**முன்னிய சிலைக்கை முனிமக னுடன்போய்**
**மோதிய வேதியான் மடிந்தார்**
**பின்னிய சடையோன் வழங்கிய படைமுன்**
**பிழைத்தவர் யாவரே பிழைத்தார்.**

[பொன்னி நல் நதியும், நேரியம் அம் பொருப்பும், புகார் எனும் நகரியும் படைத்த சென்னியும், அவன்தன் சேனையின் விதமும், சேனை மண்டலிகரும், முன்னிய சிலைக்கை முனிமகனுடன் போய், மோதிய ஏதியான் மடிந்தார்; பின்னிய சடையோன் வழங்கிய படைமுன், பிழைத்தவர் யாவரே பிழைத்தார்']

**விளக்கம்:-** பொன்னி—காவேரி என்ற நதி, நேரி—சோழ நாட்டிலுள்ள ஒரு மலை, புகார்—காவிரிப்பூம் பட்டினம், சென்னி—சோழன். சேனை மண்டலீகர்—சேனையிலுள்ள மண்டலாதிபதிகள். முன்னிய சிலைக்கை முனி—மேலோன் என்று கருதப்பட்ட துரோணன், ஏதி-ஆயுதம், பின்னிய சடையோன்-சிவபெருமான். பிழைத்தவர்-பதினெட்டுநாள் போரிலும் சாகாது பிழைத்திருந்தவர். அசுவத்தாமனுல் சோழன் அவனது சேனைகளோடு அழிக்கப் பட்டான் என்பதாம்.

**16.** **புகலரும் பதினெண் பூமிமுற் றுடைய**
**பூபதி களுமவர் படைத்த**
**இகலருந் தந்தி தேர்பரி காலா**
**ளென்பன யாவையுஞ் சேரப்**
**பகலருஞ் சமரிற் பதின்மடங் காகப்**
**பாதிநா ளிரவினிற் படுத்தான்**
**தகலருங் கேள்வித் தாமனே தாமச்**
**சடையவன் றனயனு தலினுல்.**

[புகல் அரு பதினெண் பூமிமுற்று உடைய பூபதிகளும், அவர் படைத்த இகல் அரு தந்தி (யானை) தேர், பரி, காலாள் என்பன யாவையும் சேர, பகல் அரு சமரில் பதின் மடங்கு ஆக, பாதி நாள் இரவினில் படுத்தான், தகல் அரு கேள்வி தாமனே, தாமம் சடையவன் தனயன் ஆதலினுல்.]

**விளக்கம்:-** தகுதி வாய்ந்த அரிய நூல் கேள்விகளை உடைய அசுவத்தாமன் ஒருவனே,(அவன்) கொன்றை மாலை அணிந்த சிவ பெருமானின் மகன் ஆதலினுல்,-புகழ்ந்து பேசுதற்கு அரிய பதினெட்டு வகைப்பட்ட நாடுகள் முழுதையும் தமதாகப் பெற்ற அரசர்களையும், அவரது எதிர்த்தற்கு அரியதான நால்வகைச் சேனைகளையும் ஒருசேர பகலில் நடந்த அரிய போரினும் பத்துமடங்கு அதிகமாக, ஒருபாதி இரவில் அழித்து விட்டான்,என்பது பொருள். தாமச் சடையவன்-கொன்றை மாலை அணிந்த சிவபெருமான்.

## அந்தணன் உபபாண்டவர் தலைகளுடன் துரியோதனனை அடைதல்

17. உள்ளிய படியே கடுஞ்சினங் கன்றி
யுள்ளவர் யாரையு முருக்கித்
துள்ளிய விடைபோற் செருக்கியப் புரத்தின்
றுவாரநின் றவரையுங் கூட்டித்
தெள்ளிய குமரர் சென்னியைந் திணையுந்
தேவருந் திகைத்திடத் தூக்கி
வெள்ளியங் குருவந் தெழுமுனே குருவின்
மிகுகுல வேந்தைவந் தடைந்தான்.

[உள்ளிய படியே கடு சினம் கன்றி உள்ளவர் யாரையும் முருக்கி, துள்ளிய விடைபோல் செருக்கி, அப்புரத்தின் துவாரம் நின்றவரையும் கூட்டி, தெள்ளிய குமரர் சென்னி ஐந்திணையும், தேவரும் திகைத்திட தூக்கி, வெள்ளி அம் குரு வந்து எழுமுனே, குருவின் மிகு குலம் வேந்தை வந்து அடைந்தான்.]

**விளக்கம்:-** அசுவத்தாமன், தான் நினைத்தபடியே கடிய கோபம் மிகப் பெற்று, படைவீட்டில் உள்ளார் அனைவரையும் அழித்துத் துள்ளுந்தன்மையுள்ள ரிஷபம் போல் களித்து, அந்தப் படைவீட்டின் வாயிலில் இருந்த கிருபன், கிருதவர்மன், என்ப வரையும் அழைத்துக் கொண்டு தெளிந்த அறிவுடைய பாண்டவ குமாரரின் தலைகள் ஐந்தையும், தேவர்களும் கண்டு திகைக்கும் படி எடுத்துக் கொண்டு, சுக்ரோதயம் ஆவதற்குமுன் குரு என்னும் பிறந்த அரசனுடைய பெருமை மிகுந்த குலம் வந்த அரசனாகிய துரியோதனனை அடைந்தான், என்பது பொருள். புரம்-படைவீடு. இரவின் நான்காவது ஜாமத்தின் ஆரம்பத்தில் வெள்ளி உதய மாகும். சுக்கிரன், வெண்ணிறத்தினன் ஆதலால், அவனை வெள்ளி என்று அழைக்கின்றனர்.

### கலி விருத்தம்

18. வந்த னேனைய மாதவ னேவலான்
முந்து பூதமு முதுகிட மாமுடி
சிந்த யாரையுஞ் செற்றகன் பாசறை
ஐந்து வீரர்த மாவியுங் கொண்டரோ.

**விளக்கம்:-** ஐயனே, கண்ணனது ஏவலால் முன்னே வந்து பொருத பூதம் முதுகிடச் செய்து, இடமகன்ற பாசறையில் பெரிய தலைகள் சிதறும்படி எல்லோரையும் கொன்று, ஐந்து வீரர்களின்

(பாண்டவர்களின்) ஆவி கவர்ந்து கொண்டு, வந்து விட்டேன்,— என்று அசுவத்தாமன் துரியோதனனுக்குச் சொன்னான், என்பது பொருள்.

**19. சொன்ன சிங்கத் துவசனை யாதியா**
**மன்ன ரைவரு மாண்டனர் மற்றவர்**
**சென்னி யென்று சிறுவர்தம் சென்னியை**
**முன்னர் வைத்தன னுன்முனி மைந்தனே.**

**விளக்கம்:-** வைத்தனன் (ஆல்) முனி மைந்தன், என்று பிரியும். சிறப்பித்துப் பேசப்படுகின்ற சிங்கக் கொடியை யுடைய வீமன் முதலாக உள்ள ஐந்து அரசர்களும் மாண்டனர்; அவர்கள் தலை இவை என்று, இளம் பாண்டவர் தலைகளைத் துரியோதனன் முன் வைத்தான், என்பது பொருள் : மற்று, ஆல், அசைகள்.

**20. வைத்த சென்னியை நோக்கி வயாவுறு**
**சித்த மன்னவன் றேறிச் சிரார்முகம்**
**தத்த மன்புடைத் தந்தையர் வாண்முகம்**
**ஒத்த வாகுமி: துண்மையென் றேதினன்.**

**விளக்கம் :-** வயா - ஆசை. பேராசை கொண்ட மனத்தினனான துரியோதனன், தேறுதல் கொண்டு, (தன்முன் அந்தணன்) வைத்த முகங்களைப் பார்த்து, (மனத்தளர்ச்சி கொண்டவனாய் அந்தணன் முகம் நோக்கி, இவை) "பாண்டவர்களின் புதல்வர் முகங்கள்; தந்தம் அன்புடைய தந்தையரின் ஒளி விளக்கமுடைய முகங்களைப் போன்றனவாகும் இவை; இது, உண்மை," என்று கூறினான்,—என்பது பொருள். பாண்டவர் அழிவில் தீராத பேராசை கொண்டவன், என்ற கருத்தில் "வயாவுறு சித்த மன்னவன்," என்றார்.

துரியோதனன் இரங்கல்

**21. ஓதும் வேந்துக் கொருமொழி யுஞ்சொலான்**
**வேத பண்டித னிற்கவவ் வீரனைப்**
**பாதகஞ் செய்கை பரர்ப்பன மாக்களுக்(கு)**
**ஏத மேதமி தென்செய்த வாறெனு.**

**விளக்கம்:-** ஏதம் ஏதம் இது என் செய்த ஆறு, எனு - என்று ஈற்றடி பிரியும்.

(பாண்டவர் தலைகள் அல்ல என்று) உண்மையை எடுத்துச் சொன்ன துரியோதனனுக்கு, எதிர் மொழி ஒன்றும் சொல்லாத

வனைய் வேத பண்டிதன் (அசுவத்தாமன் நிற்க, அந்த வீரனை நோக்கி, ''பாதகச் செயல் புரிதல் பார்ப்பனருக்குக் குற்றம் மிகவுடையதாகும்; இதனை நீ செய்தவாறு என்னே!'' (அதாவது, என்ன காரியம் செய்து விட்டாய், என்ற படி), என்று துரியோதனன் இரக்கத்தோடு கூறினான், என்பது பொருள். தூங்கிக் கொண்டிருக்கையில் இளம்பிள்ளைகளைக் கொன்ற அந்தணனை, வீரன், என்றது இகழ்ச்சியாகும்.

**22. துன்னு பாரதந் தோன்றி நாண்முதல்**
**மன்ன ரோட மலைந்தனை வாளியால்**
**சொன்ன பாலர்ம குடந்துணித் ததின்று**
**என்ன வீரிய மென்னினைத் தென்செய்தாய்.**

**விளக்கம்:-** ''(வீரர்கள்) நெருங்கிய பாரதப் போர் ஆரம்பமான நாள் முதல் பகை மன்னர் ஓடும்படி அம்புகளால் போர் செய்தாய்; இன்று, (நீ கொன்றதாகச்) சொன்ன இளம் பாண்டவர்களின் தலை துணித்தது, என்ன வீரியம்? என்ன நினைத்து, என்ன காரியம் செய்து விட்டாய்,'' என்று துரியோதனன், கூறினான் என்பது பொருள்.

பாரதப் போரில் அரிய செயல்களைச் செய்த நீ இன்று, பாண்டவரைக் கொல்வதாக எண்ணி, ஒரு குற்றமுமில்லாத இளம் பிள்ளைகளை உறங்குகையில் கொன்று, பழிதேடிக் கொண்டாயே,—என்று மனந்தளர்ந்து துரியோதனன் கூறினான், என்பதாம். மகுடம்—(ஆகுபெயர்) தலை.

**23. இருகு லத்திலெ மக்கும வர்க்குமிங்(கு)**
**ஒருகு லத்தினு முண்டென வில்லையால்**
**குருகு லத்தின்கொ ழுந்தினைக் கிள்ளினை**
**வருகு லத்தொரு மாசறு மைந்தனே.**

**விளக்கம் -** இரு குலம் - திருதராட்டிர குலம், பாண்டு குலம், என்ற இரு குலம். இங்கு ஒரு குலத்தினும் உண்டு என இல்லை - இவ்வுலகில் எந்த ஒரு குலத்திலும் சந்ததி உண்டு என்று சொல்லும்படி இல்லாமை உண்டாயிற்று. வரு குலம் - பிறந்து வளர்ந்த பரத்துவாச குலம். எங்கள் இரு குலத்திலும் அடையாளமாக சந்ததி படி. குற்றமிலாத பாரத்துவாசகுலம் வந்த அசுவத்தாமனே, குரு குலத்தின் முளையை (சந்ததியை) அழித்து விட்டாய்,—என்று துரியோதனன் மனம் வருந்திக் கூறினான், என்பதாம். மாசறு மைந்தனே, என்றது, குற்றமில்லாத பெருங் குலத்தில் வந்த நீ மாசுறும் காரியத்தைச் செய்து விட்டாயே, என்று இடிக்கும் கருத்தது.

24. ஆற்றில் நீர்விளை யாடிய நாண்முதல்
காற்றின் மைந்தனொ டெத்தனை கன்றினேன்
சாற்றி னென்வினை தானெனை யேசுடக்
கூற்றின் வாய்ப்புகுந் தேற்கென்ன கூற்றையா.

**விளக்கம்:-** கங்கையில் நீர் விளையாடிய நாள் முதல் வாயு குமாரனோடு எவ்வளவு பகைமை கொண்டேன்! கூறுமிடத்து, என் வினையே என்னைச் சுட, எமனது வாய் புகுந்த எனக்கு என்ன கூறுவதற்கு உளது,—என்று துரியோதனன் வருந்திக் கூறினான், என்பது பொருள்.

25. பணைநெ டுங்கைப் பகட்டுவெஞ் சேனைசூழ்
இணைத ருஞ்சொற் கிளைஞர்கள் யாரையும்
துணைவர் யாரையுந் தோற்றுநின் றேனெனக்(கு)
இணையர் பார்மிசை யாருள ரெண்ணிலே.

**விளக்கம்:-** பணைநெடுங்கை பகடு - பருத்த நீண்ட துதிக்கையுடைய ஆண் யானை. இணை தரும் சொல் கிளைஞர் - பொருந்திய புகழுடைய சுற்றத்தார். துணைவர் - நண்பர். சிறந்த பெரிய சேனைகள் சூழப் பெற்ற சுற்றத்தாரையும் நண்பர்களையும் இழந்து நிற்கின்ற எனக்குச் சமானமானவர் யாரே இருக்கின்றார், என்று கழிவிரக்கங் கொண்டு துரியோதனன் கூறினான், என்பதாம். இணை தரும் சொல், என்பதற்கு, "என் கருத்துக்கு மாறுபடாத சொல்லையுடைய," என்றும் பொருள் கொள்ளலாம்.

26. என்று பன்மொழி கூறியிம் மைந்தரைக்
கொன்று வந்தகு மரனைப் போர்தொறும்
நின்ற தீவினை நீங்கிட நீதவம்
ஒன்றி வாழ்கென் றுயர்விடை நல்கினான்.

**விளக்கம்:-** என்று இன்னபடி பல வார்த்தைகளைச் சொல்லி, இளம் பிள்ளைகளாகிய உப பாண்டவர்களைக் கொன்று வந்த துரோண குமாரனை நோக்கி, "போர் தொறும் நின்று (உன் சாதிக்கு ஒவ்வாத போர் செய்த பாவம் நீங்க, நீ தவத்தில் ஒன்றி உன் வாழ்க்கையை நடந்துவர்யாக," என்று கூறிச் சிறந்த விடைகொடுத்து அனுப்பினான், என்பது பொருள்.

சஞ்சயனோடு துரியோதனன் பேசல்

27. வெஞ்ச ராசன வீரனு மாமனும்
நெஞ்ச மாழ்குற நின்றவர் போனபின்
கஞ்ச நாண்மலர்க் கண்புனல் சோர்தரும்
சஞ்ச யாரியன் றன்னொடு கூறுவான்.

**விளக்கம்:-** வெம் சராசன வீரன் - துரோண குமாரனுன அசுவத்தாமன். மாமன் - கிருபன். சஞ்சய ஆரியன் - சஞ்சயன் என்ற சிறந்த முனிவன். அசுவத்தாமனும், கிருபனும் (கிருத வர்மனும்), ஆகிய நெஞ்சம் கலங்கி நின்ற வீரர் அகன்ற பின், தாமரை போன்ற கண்களிலிருந்து பெரும் நீரையுடைய சஞ்சய முனிவனிடம், துரியோதனன், சில கூறுவானுனன். உப லக்ஷணத்தால், கிருதவர்மனேயும் அடக்குக.

**28.** **யாயொ டெந்தை யிரக்க முருவகை**
**ஆய வின்சொலி ஞற்றுய ராற்றிட**
**நீயெ ழுந்தரு ணின்மொழி வல்லபம்**
**தூய சிந்தைச் சுரர்களும் வல்லரோ.**

**விளக்கம்:-** தாயான காந்தாரியோடு தந்தையும் துயரம் உருதபடி, பொருந்திய (உனது) இனிய சொற்களால் தணிப் பதற்கு, நீ செல்வாயாக; உனது சொல் வல்லமை தூய மனத்தை யுடைய தேவர்களும் பெற்றவர் ஆவரோ! (அதாவது பேசுவதில் தேவர்கள் உன்னிலும் வல்லர் அல்லர்), என்பதாம்.

**29.** **யானு மெம்பிய ருமிறந் தோமெனும்**
**மான பங்கம றந்துதன் னெஞ்சினுக்(கு)**
**ஆன தம்பிய ளித்தவர் தம்மொடும்**
**கோனி லம்புரக் கும்படி கூறுவாய்.**

**விளக்கம்:-** நானும் தம்பியரும் இறந்தோம் என்றதால் உண்டான அவமான உணர்ச்சியை மறந்து, தனது மனத்திற்கு இனியனுன தம்பியாகிய பாண்டு பெற்ற பாண்டவர்களோடும், செங்கோல் கொண்டு பூமியைக் காக்கும்படி (என் தந்தைக்குக்) கூறுக,—என்று துரியோதனன், கூறினுன், என்பது பொருள். கோல் நிலம், என்பது கோனிலம், என்று புணர்ந்துளது.

துரியோதனன் வான் அடைதல்

**30.** **என்ன வம்முனி தன்னிணைத் தாண்மலர்**
**சென்னி மீதும் விழியினுஞ் சேர்த்திடா**
**உன்னி லாண்மைக் குவமையில் லாதவன்**
**பொன்னி லத்தி னுணர்வொடும் போயினுன்.**

**விளக்கம்:-** எண்ணுங்கால், ஆண்மைக்கு உவமை இல்லாத வனுன துரியோதனன். (பாண்டவரோடுகோல் நிலம் புரக்கும்படி கூறுவாய்) என்று சொல்லி, அம்முனிவனது இணையான தாமரை மலர்போன்ற பாதங்களில் தலேயும் கண்களும் சேரும்படி வணங்கி,

நல்லறிவோடு பொன் நிலத்தினுக்கு (வீர சுவர்க்கத்திற்கு) போய்ச் சேர்ந்தான்,-என்பது பொருள்.

எண்சீர் ஆசிரிய விருத்தம்

31. வயிரஞ் செறிதரு மனனும் வாய்மையும்
வலியும் பொருபடை வினையு மேல்வரு
செயிருந் திகழ்தரு குலம கீபதி
திறல்வெஞ் செருமுனை யதனின் மேதகும்
அயிர்நுண் குழலர மடநல் லார்பலர்
அளிகொண் டெதிர்கொள வமர ஞனபின்
உயிர்கொண் டதுசுர ருறையும் வானுல(கு)
உடல்கொண் டதுதன துடைய பூமியே.

[வயிரம் செறிதரு மனனும் வாய்மையும் வலியும், பொருபடை வினையும், மேல்வருசெயிரும் திகழ்தரு குலமகீபதி, திறல் வெம செரு முனை அதனின் மேதகும் அயிர் நுண்குழல் அரமடநல்லார் பலர் அளிகொண்டு எதிர்கொள அமரன் ஆனபின், உயிர் கொண் டது சுரர் உறையும் வான் உலகு; உடல் கொண்டது தனது உடைய பூமி, ஏ,]

**விளக்கம்:-** பகைமை செறிந்த மனமும் (அம்மனத்திற்கு ஏற்ற) சொற்களும், தேகபலம், மனோபலம், படைபலம் முதலிய பல மும், பொருதற்கான ஆயுதங்களின் தொழிலும் மேலும் மேலும் மிகுகின்ற கோபமும் பொருந்தி விளங்கப் பெற்ற, சிறந்த குரு குலத் தில் தோன்றிய துரியோதனன், செயல் திறமை காட்டுதற்குரிய போர்க்களத்திலே, மேன்மையுடைய நுண்ணிய கருமணல் போன்ற மென்மையான கூந்தலையுடைய இளமைபொருந்திய தேவமாதர், அன்போடு உபசரிக்க அமரன் ஆனபின், அவன் உயிரைத் தேவலோகம் தனதாகக் கொண்டது; உடலை, அதற்குரிய தான பூமி கொண்டது,-என்று பொருள். உடல் மண்ணில்கிடக்க, நித்யமான உயிர் வானுலகம் சென்றது, என்பதாம். அயிர்-மணல். அளி-அன்பு.

அறுசீர் ஆசிரிய வித்தரும்

32. கிடந்தவுடல் வானவர்தங் கிளைசொரிந்த
பூமழையாற் கெழுமுற் றேங்க
நடந்தவுயிர் புத்தேளி ரரமகளிர்
விழிமலரா னலனுற் றேங்க

அடர்ந்தளிகண் மொகுமொகெனு மாமோத
வலம்புரித்தா ரண்ணல் யாரும்
மிடைந்துமிடைந் தெதிர்கொள்ள வீரருறை
பேருலக மேவி னனே.

[இந்த உடல் வானவர்தம் கிளை சொரிந்த பூ மழையால் கெழுமுற்று ஓங்க, நடந்த உயிர் புத்தேளிர் அரமகளிர் விழிமலரால் நலன் உற்று ஓங்க, அடர்ந்து அளிகள் மொகுமொகு எனும் ஆமோதம் வலம்புரிதார் அண்ணல், யாரும் மிடைந்து மிடைந்து எதிர் கொள்ள வீரர் உறை பேர் உலகம் மேவினன், ஏ.]

**விளக்கம்:-** பூமியில் கிடந்த உடல் தேவர்கள் பொழிந்த மலர் மழையால் நிறைந்து உயரவும், தேவ வகுப்பினரான தேவமாதர்களின் கண்களாகிய மலரால் இன்பம் எய்திச் சிறக்கவும், வண்டுகள் நெருங்கிச் செய்யும் மொகு மொகு என்ற ஒலியுடன், மணம் மிகுந்த நஞ்சாவட்டை மாலை அணிந்த துரியோதனன், தேவசாதியர் எல்லோரும் நெருங்கி வந்து எதிர்கொள்ளவும் வீரர்கள் வசிக்கும் பெரிய வீர சுவர்க்கம் சேர்ந்தான், என்பது பொருள். கெழுமுற்று-நிறைந்து. புத்தேளிர்-தேவசாதியர். அரமகளிர்-தேவமாதர். ஆமோதம்-மிகுந்த மணம். மிடைந்து-நெருங்கி.

அசுவத்தாமனுதியர் வியாசருக்குக் கூறல்

33. கேள்வியுடை வரிசிலைக்கை முனிமகனும்
மாதுலனுங் கிருத னென்னும்
வாள்விறல்கூர் நரபதியுங் குருபதிதன்
வாய்மையினுன் மாழ்கி ஏகி
வேள்வியருங் கனன்மூன்று மொருவடிவாய்ப்
பிறந்தனைய வியாதற் கைவர்
தோள்வலியுந் தஞ்செயலுந் தொழாமுடியோன்
றுஞ்சியதுந் தொழுது சொன்னர்.

[கேள்வி உடை வரி சிலை கை முனி மகனும் மாதுலனும், கிருதன் என்னும் வாள் வலிகூர் நரபதியும், குருபதி தன் வாய்மையினுல் மாழ்கி ஏகி, வேள்வி அரு கனல் மூன்றும் ஒரு வடிவாய் பிறந்து அனைய வியாதற்கு ஐவர் தோள்வலியும் தம் செயலும், தொழா முடியோன் துஞ்சியதும் தொழுது சொன்னர்.]

**விளக்கம்:-** செய்யுள் சுலபமானதே. அசுவத்தாமன் முதலியோர், குரு குலத்தலைவனுன துரியோதனன் கூறிய உரையால் மனவருத்தத்தோடு சென்று மூவகை அக்னிகளும் ஒரு வடிவங் கொண்டு பிறந்தது போன்றவனுன வியாச முனிவனைக் கண்டு,

வி.பா.—58

அவனிடம், பாண்டவரது தோள்வலியும், தாங்கள் செய்த செயலும், வணங்காமுடியன்ன துரியோதனன் இறத்தலும் ஆன செய்தியை (வியாசரை) வணங்கிக் கூறினர்கள், என்பதாம்.

34. புரிதவத்திற் கானவனங் கிருபனுக்கும்
துரோணமுனி புதல்வ ஞன
துரகதத்தா மனுக்குமமைத் திவ்வுழிநீர்
இருத்திரெனச் சொன்ன பின்னர்
கிருதனுக்கு விடைகொடுத்தா னிவருமவன்
மொழிப்படியே கிரிசூழ் கானில்
தருநிலத்தோ ரதிசயிப்பச் சிவபெருமான்
றனைநினைந்து தவம்செய் தாரே.

[புரிதவத்திற்கு ஆன வனம் கிருபனுக்கும் துரோண முனி புதல்வன் ஆன துரகத்தாமனுக்கும் அமைத்து, "இ உழி நீர்இருத்திர்" என சொன்ன பின்னர், கிருதனுக்கு விடை கொடுத்தான்; இவரும் அவன் மொழிப் படியே கிரி சூழ் கானில், தரு நிலத்தோர் அதிசயிப்ப சிவபெருமான் தனை நினைந்து தவம் செய்தார், ஏ ].

**விளக்கம்:**- செய்யுள் சுலபமானதே. வியாச முனிவரிடம் விடை கொண்டு கிருதவர்மன் தன் ஊர் சென்றான்; அசுவத்தாமனும், கிருபனும் முனிவர் கூறியபடி அவர் குறித்த இடத்தில், தரு நிலத்தோர் (தேவர்) வியக்கும்படி கடுந்தவம் புரிந்தனர், என்பதாம்.

பெற்றோர் விஷயம் அறிந்து வருந்தல்

35. நாடியசொற் சுருதிநிகழ் நாவினுன்
சஞ்சயனு நள்ளென் கங்குல்
ஓடியொளித் திடுகதிரோ னுதிப்பதன்முன்
விலோசனநீ ருகுப்ப வெய்தி
ஆடிமுகத் தரசனுக்கு மையிருப
தரசரையு மளித்து வாழ்ந்து
வாடியமெய்ச் சவுபலைக்கு முற்றதெலாம்
வாய்மலர்ந்தான் வாய்மை வல்லான்.

[நாடிய சொல் சுருதி நிகழ் நாவினன், சஞ்சயனும் நள்ளென் கங்குல் ஓடி, ஒளித்திடு கதிரோன் உதிப்பதன்முன், விலோசனம் நீர் உகுப்ப எய்தி, ஆடி முகத்து அரசனுக்கும் ஐயிருபது அரசரையும் அளித்து வாழ்ந்து, வாடிய மெய் சவுபலைக்கும், உற்றது ஏலாம் வாய் மலர்ந்தான் வாய்மை வல்லான்.]

**விளக்கம்:-** திருதராட்டிரனுக்கும் காந்தாரிக்கும் சஞ்சயன் பொழுது விடியுமுன் விரைந்து சென்று நிகழ்ந்தவற்றைக் கூறினன், என்பதாம். நாடிய சொல் சுருதி நிகழ் நாவினன் வாய்மை வல்லான், (ஆகிய) சஞ்சயன், என்று இயைக்க. ஆய்ந்த சொற்களை உடைய வேதம் பயின்ற நாக்கை உடையவனும், உண்மையே பேசுபவனும் ஆன சஞ்சயன், என்பது பொருள். ஒளிந்திடு கதிரோன் உதிப்பதன் முன் - அஸ்தமித்த சூரியன் உதிப்பதன்முன். விலோசனம் - கண்கள். ஆடி முகம் - கண்ணாடி போன்ற முகம். ஐயிருபது அரசரையும் அளித்து வாழ்ந்து வாடிய மெய் சவுபலை - துரியோதனன் முதலிய நூறு அரசர்களைப் பெற்று வாழ்ந்து (இப்பொழுது) மெலிந்த உடலையுடைய சௌபலராசன் மகளான காந்தாரி. நள்ளென் (நள்-என்) கங்குல் - நடு இரவு, அதாவது, பொழுது புலருமுன்.

**36.** **சேனுவிந் துவைமுதலாந் திருமைந்த**
**ரைவரும்வான் சென்ற நாட்டொட்(டு)**
**ஆனுமற் சொரிகண்ணீ ராறுபெருங்**
**கடலாக வழுது சோர்வாள்**
**பானுள்வந் தருண்முனிவன் பகருமொழி**
**விடஞ்செவியிற் பட்ட தாகத்**
**தூநாக முருமொலிகேட் டயர்வதுபோல்**
**விழுந்தழுதாள் சுபலன் பாவை.**

[சேனுவிந்துவை முதல் ஆம் திருமைந்தர் ஐவரும் வான் சென்ற நாள் தொட்டு, ஆனுமல் சொரி கண்ணீர் ஆறு பெருங்கடல் ஆக அழுது சோர்வாள், பானுள் (பால்—நாள்) வந்து அருள் முனிவன் பகரும் மொழி விடம் செவியில் பட்டது ஆக, தூநாகம் உரும் ஒலி கேட்டு அயர்வது போல் வீழ்ந்து அழுதாள் சுபலன் பாவை.]

**விளக்கம்,-** சேனுவிந்து, சுதக்கணன், பிங்கலசன், சலாசந்தன், வீமவாகு என்ற ஐவரும் நாலாம் நாள் போரில் வீமனால் கொல்லப்பட்டது முதல், (புத்திர சோகத்தால்) அடங்காமல் பெருகுகின்ற கண்ணீர் ஆறு கடலாகும்படி அழுது தளர்பவளான சுபலன் பாவை, பானுள்(நடுஇரவில்) வந்து (துரியோதனன் மாண்டான் என்று கூறிய சொல்லாகிய விஷம் செவி சேர்ந்தவுடன், நல்ல பாம்பு இடியோசை கேட்டுத் தளர்வது போல் மண்ணில் விழுந்து அழுதாள்,-என்பது பொருள்.

**37.** **மருத்தின்மக னெனுஞ்சண்ட மருத்தனைய**
**புயவலியோன் வன்கைத் தண்டால்**
**உருத்தமரி னுடன்றும்ப ரூர்புகுந்தான்**
**வாளரவ முயர்த்தோ னென்று**

வருத்தமுட னுயங்கிமிக மயங்கிநில
மிசைவீழ்ந்து வயிர மான
கருத்தினுட னலமந்தா னழுதுபெரும்
புனல்சொரியக் கண்ணி லாதான்.

[மருத்தின் மகன் எனும் சண்ட மருத்து அனைய புயவலி யோன், வல் கை தண்டால் உருத்து அமரின் உடன்று உம்பர் ஊர் புகுந்தான் வாள் அரவம் உயர்த்தோன் என்று வருத்தமுடன் உயங்கி மிக மயங்கி நிலமிசை வீழ்ந்து, வயிரம் ஆன கருத்தினுடன் அலமந்தான் அழுது பெரும் புனல் சொரிய கண் இலாதான்.]

**விளக்கம்:-** மருத்து – வாயு, சண்டமருத்து - பெருங்காற்று உயங்கி - சோர்வுற்று, மயங்கி - உணர்வு இழந்து, வயிரம் ஆன கருத்துடன்-பகைமை நீங்காத மனத்துடன். வீமனால், தன்மகன் அழிந்தான், என்று திருதராட்டிரன் தரையில் விழுந்து அழுது புலம்பினன் என்பதாம்.

## சூர்யோதயம்

38. இப்பான்மற் றிவரிரங்க வெப்பாலும்
இருளொளிப்ப விரவி பானு
துப்பார்செங் கொடிகளென வுதயகிரி
மிசைப்படர்ந்து தோற்றஞ் செய்யத்
தப்பாம னிலமடந்தை தன்பாரம்
அகற்றுவித்த சார்ங்க பாணி
அப்பாலப் பாண்டவர்க ளைவரொடும்
புரிந்தசெய லறைது மம்மா.

[இப்பால் (மற்று) இவர் இரங்க, எ பாலும் இருள் ஒளிப்ப இரவி பானு, துப்பு ஆர்செம் கொடிகள் என உதயகிரி மிசை படர்ந்து தோற்றம் செய்ய, தப்பாமல் நிலமடந்தை தன் பாரம் அகற்றுவித்த சார்ங்கபாணி, அப்பால் அ பாண்டவர்கள் ஐவரொடும் புரிந்த செயல் அறைதும், அம்மா.]

**விளக்கம்:-** இரவிபானு - சூரிய கிரணம், துப்பு - பவளம். இந்தப் பக்கத்தில் திருதராட்டிரனும் காந்தாரியும் வருந்த, எங்கு முள்ள இருள் மறைந்தகலும்படி, சூரியகிரணங்கள் சிவந்த பவளக் கொடிகள் போல உதயகிரிமேல் பரவித்தோன்ற, அந்தப்பக்கத் தில், பூமிதேவியின் பாரத்தைத் தவருமல் அகற்றிவைத்த சார்ங்க பாணி (கண்ணன்) அப்பாண்டவர் ஐவரோடும் செய்த செயலை இனிக் கூறுவோம், என்றுகவி கூறினர், என்பதாம். மற்று, அம்மா; அசைகள்.

பாண்டவர் படைவீடு அடைதல்

39. ஐந்துபெரும் பார்த்திவரோ டாரணியம்
புகுந்தபிரா னரிய கங்குல்
சிந்துதின கரனுதயஞ் சேருமுனம்
பாசறையிற் சென்று நோக்க
இந்திரனே நிகர்நிருபர் முடித்தலேகள்
வெவ்வேரு யிடையே சிந்த
மைந்தருடற் குறைதழுவி யாகுலித்து
மெலிந்தரற்று மானேக் கண்டார்.

[ஐந்து பெரும் பார்த்திவரோடு ஆரணியம் புகுந்த பிரான் அரிய கங்குல், சிந்து தினகரன் உதயம் சேருமுனம், பாசறையில் சென்று நோக்க, இந்திரனே நிகர்நிருபர் முடிதலேகள் வெவ்வேறு ஆய் இடையே சிந்த, மைந்தர் உடல் குறைதழுவி வியாகுலித்து மெலிந்து அரற்றும் மானே கண்டார்]

**விளக்கம்:-** அரிய கங்குல் - (பாசறையில் இருந்தோர் தப்புவதற்கு) அரிய இரவு, சிந்து - கடல். இரவில் பாண்டவரோடு கான் அடைந்த கண்ணபிரான், சூர்யோதயத்தில் பாசறைசென்று பார்க்க, இந்திரனே ஒத்த அரசர்களின் தலே வெவ்வேருய் அறு பட்டுக் கிடக்க, மக்கள் ஐவரது உடல் குறையைத் தழுவிக் கொண்டு வருந்தி உடல் மெலிவுற்றுக் கதறுகின்ற திரௌபதியைக் கண்டார்கள், என்பதாம். ஆகுலித்தல் - அழல்.

வெகுண்ட வீமார்ச்சுனரைக் கண்ணன் தடுத்தல்

40. கண்டவுடன் மனமெலிவுற் றிவ்வண்ணம்
எவன்கொலெனக் கரிய மேனிக்
கொண்டலுரைத் தனன்றுரக தாமாவின்
வினேகளெலாங் கூற்று முட்க
அண்டமுக டதிரவுருத் தருச்சுனனும்
மாருதியு மவன்ற ஞவி
உண்டலது தவிரோமென் றுரைத்தோட
மாறடுத்தே யுரைக்கு மன்றே.

[கண்டவுடன் மனம் மெலிவுற்று இ வண்ணம் எவன் கொல் என, கரியமேனி கொண்டல் உரைத்தனன் துரகதாமாவின் வினே கள் எலாம்; கூற்றும் உட்க, அண்டம் முகடு அதிர உருத்து அருச்சுனனும் மாருதியும் அவன் தன் ஆவி உண்டு அலது தவிரோம் என்று உரைத்து ஓட, மால் தடுத்தே உரைக்கும், அன்றே.]

**விளக்கம்:-** புலம்புகின்ற திரௌபதியைக் கண்டதும் (பாண்டவர்) மனந்தளரப் பெற்று, இவ்வாறு நிகழ்ந்தது எதனல் என்று வினவ, கண்ணன், எமனும் அஞ்சும்படியான அசுவத்தாமாவின் செயல்களை எல்லாம் கூறினன்; (அதுகேட்டு) விசயனும் வீமனும் அண்டமுகடும் அதிரும்படியாக வெகுண்டு, "அவனது உயிரை அழிக்காமல் விடோம்," என்று கூறி விரைந்து ஓட, கண்ணன் அவர்களைத் தடுத்துக் கூறுவான், என்பது பொருள். அன்றே· ஈற்றசை.

கண்ணன் கூற்று

41. பாரிடமொன் றினைப்புரத்தி பாசறையை
யெனப்புகன்று பரிவிற் சென்றேம்
வீரருக்கு முனைத்தாமன் சுயோதனற்குச்
சூளுரைத்து மீண்டா னைவர்
ஆரமணி முடிகொய்து தரணியெலாம்
உன்குடைக்கீ ழமைப்ப னின்றே
காரிருக்கு மலரளகக் காந்தாரி
சுதவுள்ளங் களித்தி யென்றே.

**விளக்கம்:-** பாரிடம் ஒன்றினை, பாசறையைப் புரத்தி எனப் புகன்று பரிவின் சென்றேம்; வீரருக்கு முனை தாமன் (துரியோதனனை நோக்கி) கார் இருக்கும் மலர் அளகம் காந்தாரி சுத, "இன்றே, ஐவர் ஆரம் மணி முடி கொய்து, தரணி எலாம் உன் குடைக்கீழ் அமைப்பன், உளம் களித்தி" என்று சுயோதனற்கு சூள் உரைத்து மீண்டான்,-என்பது அன்வயம். பாரிடம் - பூதம், பரிவு - விருப்பம். வீரருக்குமுனை தாமன் - வீரர்களுக்கு முன் நிற்பவனை அசுவத்தாமன். சுத-விளி; மகனே. இதுவும், இதைத் தொடரும் நான்கு செய்யுள்களும், குளகம்.

42. திருகுசினத் தொடும்கடுகிப் பாசறையிற்
புகுதலுமே செங்கட் பூதம்
பெருகுவிழி நீர்சொரிய வடர்த்தலும்பின்
னிட்டரனைப் பெட்பிற் போற்றி
முருகிதழிச் சுடரருளும் படைக்கலம்பெற்
றிவ்வண்ண முடித்தா னம்மா
குருகுகிரி யெறிந்தோனை நிகர்த்தவன்தன்
விறலெவர்க்குங் கூற லாமோ.

[திருகு சினத்தோடும் கடுகி பாசறையில் புகுதலுமே, செம் கண் பூதம், பெருகு விழி நீர் சொரிய அடர்த்தலும், பின், இட்டு அரனை பெட்பின் போற்றி, முருகு இதழி சுடர் அருளும் படைக்

கலம் பெற்று இவண்ணம் முடித்தான், அம்மா; குருகு கிரி எறிந்தோனை நிகர்த்தவன் தன் விறல் எவர்க்கும் கூறல் ஆமோ.]

**விளக்கம்:-** திருகுசினம் - மிகுந்த சினம், விழி பெருகு நீர் சொரிய - கண்களிலிருந்து பெருகும் நீர் வழிய, அதாவது மிகவருந்தும் படி, பெட்பு - அன்பு, முருகு இதழி சுடர் - தேன் நிறைந்த கொன்றைப் பூமாலை தரித்த சுடர்வடிவமான சிவபெருமான், குருகு எறிந்தோன் - கிரௌஞ்ச கிரியை வேலால் பிளந்த முருகன். அசுவத்தாமன் முதலியோர் பாசறை புகுந்த அளவில், பூதம் அவர்களைத் தடுத்து விரட்டலும், அசுவத்தாமன் சிவபெருமானைத் துதித்து அப்பெருமான் அருளிய ஆயுதங் கொண்டு, இவ்வாறு படுகொலை புரிந்திட்டான். முருகக் கடவுளை நிகர்த்த அசுவத்தாமனது ஆற்றல் எவர்க்கும் எடுத்துச் சொல்லும் அளவினதாமோ!-என்பதாம், அம்மா; அசை.

**43. என்றுபினு மபாண்டவிய மெனும்படையுந்**
**துரந்தான்மற் றெவரே காப்பார்**
**அன்றுநும துயிரைந்து மளிப்பனெனும்**
**வாய்மையினு லகன்றே னின்னும்**
**வென்றியும துழியடையிற் சொல்வன்யான்**
**விடுமினென மின்ன ளுனைத்**
**துன்றிவிதி யினையெவரே வெல்பவரென்**
**றெடுத்தருளிச் சூழ்ச்சி வல்லான்.**

[என்று பினும் அபாண்டவியம் எனும் படையும் துரந்தால் எவரே காப்பர்? அன்று உமது உயிர் ஐந்தும் அளிப்பன் எனும் வாய்மையினால் அகன்றேன்; இன்னும் வென்றி, உமது உழி அடையின், சொல்வன்யான், விடுமின், என, மின் அனை துன்றி "விதியினை எவரே வெல்பவர்?" என்று, எடுத்து அருளி, சூழ்ச்சி வல்லான் - தொடரும்.]

**விளக்கம்:-** சூழ்ச்சியில் வல்லவனான கண்ணன், (அசுவத்தாமனை வெல்லல் அரிது) என்று கூறி, பின்னும், அபாண்டவியம் என்னும் அத்திரத்தை அவன் தொடுத்தால் அதனின்று உங்களைக் காப்பவர் எவர்? அன்று "ஐவரையும் காப்பேன்," என்று சொல்லிய வார்த்தையின்படி, (உங்களைக் காக்கும் பொருட்டு) வனம் அழைத்துச் சென்றேன்; "இன்னும் எய்திய வெற்றி உங்களிடம் நிலை கொள்ளுமாயின், அப்பொழுதுதான் நீங்கள் பிழைத்தீர் என்று) உறுதி கூறுவேன்; போர்கருதி அவனைத் தொடர்தலை விட்டுவிடுங்கள்," என்று கூறி, (அதன்பின் அழுது புலம்பும்) திரௌபதியை நெருங்கி, "விதியினை வெல்வார்யார்?" என்று

கூறி, அவனை அருளோடு எடுத்து,- (தொடரும்) என்பதாம். அபாண்டவியம் - அபாண்டவம், அதாவது பாண்டவரை அழிக்கும் விலக்கரிய அத்திரம்; இதைப் பிரும்மசிரோஸ்திரம், என்றும் கூறுவர்.

இறந்தார்க்குத் தருமன் கிரியை செய்தல்

44. மைந்தருயிர்க் கிரங்குவதென் மலர்க்குழலாய்
உன்கொழுநர் வாழ்தற் கியான்செய்
தந்திரமற் றொருகோடி யுரைக்கடங்கா
எனத்துயரந் தவிர்த்துத் தன்மன்
கொந்தலரு முகநோக்கிக் கன்னன்முதல்
யாவருக்குங் குலவு மீமத்(து)
அந்தமுறு கடன்கழித்தி யெனவுலுகன்
சொற்படிநின் றளித்த பின்னர்.

[''மைந்தருக்கு இரங்குவது என் மலர்குழலாய்? உன் கொழுநர் வாழ்வதற்கு யான் செய் தந்திரம் (மற்று) ஒரு கோடி உரைக்கு அடங்கா'' என, துயரம் தவிர்த்து, தன்மன் (தருமன்) கொந்து அலரும் முகம் நோக்கி, ''கண்ணன் முதல் யாவருக்கும் குலவும் ஈமத்து அந்தம் உறு கடன் கழித்தி,'' என, உலுகன் சொல்படி நின்று, (தருமன்) அளித்த பின்னர்,- தொடரும்.]

விளக்கம்:- குலவும் ஈமத்து அந்தம் உறு கடன் - சாத்திரத்தோடு பொருந்திய மயானத்தில் செய்யவேண்டி இறுதிக் கிரியைகள். உலுகன் - பாண்டவர் புரோகிதனை உலூகமாமுனிவன். புத்திரசோகத்தால் வருந்தும் திரௌபதியைக் கண்ணன் சமாதானப் படுத்தி, அதன் பின், தருமனை நோக்கி, ''கர்ணன் முதல் யாவருக்கும் உரிய அந்திமக் கிரியைகளைச் செய்க,'' என்னலும், (அவன்) உலூகன் சொன்னபடி முறையே ஈமக்கடன்களைச் செய்து முடித்த பின்,- (அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும்) என்பதாம்.

திருதராட்டிரனது கோபம்

45. அத்தினா புரியதனி லவருடன்
சென்றரியு மந்தன் முன்னர்ப்
பத்தியினா லிறைஞ்சிடமற் றெவர்கொலெனத்
தருமன்முதற் பால ரென்ன

**வித்தகனு மாசிசொற்றுச் சதாகதிசே**
**யினைத்தழுவ வேண்டு மென்ன**
**அத்தனத்தூ ணளித்தருளத் தழுவிநெரித்**
**தனன்துகள்க ளாய தம்மா.**

[அத்தினபுரியதனில் ஐவருடன் சென்று அரியும் அந்தன் முன்னர் பத்தியினுல் இறைஞ்சிட (மற்று) "எவர் கொல்" என, தருமன் முதல் பாலர் என்ன, வித்தகனும் ஆசி சொற்று, "சதாகதி சேயினை தழுவ வேண்டும்," என்ன, அத்தன் அ தூண் அளித்தருள, தழுவி நெரித்தனன், துகள்கள் ஆயது, அம்மா.]

**விளக்கம்:-** அரி - கண்ணன், அந்தன் - குருடனுன திருதராட்டிரன், சதாகதி சேய் - வாயுகுமாரனுன வீமன், அத்தூண் - வீமனை அவமதிக்கத் துரியோதனன் மாளிகை வாசலில் நிறுத்தி வைத்த வீமன் வடிவங் கொண்ட இருப்புத்தூண். கண்ணன் பாண்டவரோடு அத்தினபுரி சென்று திருதராட்டிரனை வணங்கலும் அவன் "யாவர்?" என்று வினவ, "தருமன் முதலிய புத்திரர்" என்று கண்ணன் சொல்ல, வித்தகனுன (வஞ்சகனுன) திருதராட்டிரன் ஆசீர்வாதம் சொல்லி, "வீமனைத்தழுவிக் கொள்ள வேண்டும்," என்று சொல்ல அத்தன் (எல்லோருக்கும் தலைவனுன கண்ணன்) அந்தப் பெரிய தூணைக் கொணர்ந்து கொடுக்க, அதைத் தழுவித் தூள்படச் செய்தான், என்பதாம். அம்மா; வியப்பிடைச் சொல்.

### தருமனுக்கு அரசு அளித்துக் கண்ணன் தன்பதி சேரல்

**46.** **இனியூழி வாழ்திரென விளைஞரொடு**
**நால்வருட னறத்தின் மைந்தன்**
**தனையிருத்தி மீள்வலெனச் சாத்தகியும்**
**அலாயுதனுந் தன்னைச் சூழ**
**வினையகற்றும் பசுந்துளவோன் றுவரைநகர்த்**
**திசைநோக்கி மீண்டான் சீர்த்திக்**
**கனைகடற்பா ரளித்தவரு மங்ஙகரின்**
**அறநெறியே கருதி வாழ்ந்தார்.**

**விளக்கம்:-** வினை அகற்றும் பசுந்துளவோன், "இனி ஊழி வாழ்திர்! என, இளைஞர் ஒரு நால்வரோடு அறத்தின்மைந்தன் தனை இருத்தி, மீள்வல் என, சாத்தகியும் அலாயுதனும் தன்னைச் சூழ, துவரை நகர் திசை நோக்கி மீண்டான்; அவரும் சீர்த்தி,

கனைகடல் பார் அளித்து, அறம் நெறியே கருதி வாழ்ந்தார்,-என்பது அன்வயம், தன்னை அடைந்தாரின் வினை அறுக்கும் கண்ணன், நெடுங்காலம் இனிதே அரசு புரிந்து வாழ்வீர்களாக," என்று வாழ்த்த, தருமனைத் தம்பியர் நால்வரோடு அத்தினபுரியில் இருக்கச் செய்து, சாத்தகியும் பலராமனும் தன்னைச் சூழத் துவாரகை திரும்பினன்; பாண்டவரும் சீர்த்தியுடன் (புகழுடன்) பூமியைப் பாதுகாத்து, அறநெறியே கருதியவர்களாய் அத்தினபுரியில் வாழ்ந்தார்,-என்பதாம்.

சௌப்திகபருவம் முற்றும்

வில்லி பாரதம் முற்றும்